





உ

சிவனுமயிலுந் துணை.

# ஸ்ரீ மஹா
# ஸ்காந்த புராண வசனம்.

---

## சிறப்புப்பாயிரம்.

### விநாயகக் கடவுள்.

வித்தையும் செல்வமும் வேண்டும் தொண்டரைச்
சித்த நிறையுறச் சிறப்புட னீந்தருள்
உத்தமி பாலனை ஒற்றைக் கொம்பனைப்
பத்திசெய் மேலவர் பதங்கள் ஏத்துவாம்.

### சிவபெருமான்.

திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர் போற்றிப்
பெருவந் தனைசெய் தறிதற்கரும் பெற்றி யெய்தி
யருவந் தனையு முருவத் தையுமன்றி நின்றா
னொருவன் தனது பதந்தன்னை யுளத்துள் வைப்பாம்.

ஊனாகி யூனு ளுயிரா யுயிர்தோ றுமாகி
வானாதி யான பொருளாய் மதியாகி வெய்யோன்
றானாகி யாண்பெண் ணுருவாகிச் சராசரங்க
ளானான் சிவன்மற் றவனீள் கழற்கன்பு செய்வாம்.

### வேறு.

பிறப்பது மிறப்பதும் பெயருஞ் செய்கையு
மறப்பது நினைப்பதும் வடிவம் யாவையுந்
துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யரனடி சென்னி சேர்த்துவாம்

பூமலர் மிசைவரு புனித னாதியோர்
தாமுணர் வரியதோர் தலைமை யெய்தியே
மாமுறை முதற்கொரு வடிவ மாகியோன்
காமரு செய்யபூங் கழல்கள் போற்றுவாம்.

பங்கயன் முகுந்தனும் பரமென் றுன்னியே
தங்களி லிருவருஞ் சமர்செய் துற்றுழி
யங்கவர் வெருவர வங்கி யாயெழு
புங்கவன் மலரடி போற்றி செய்குவாம்.

காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான்
மாண்புடை யோனுமாய் வலிகொள் வான் ெறுடர்
பூண்பதின் ருய்நயம் புணர்க்கும் புங்கவன்
சேண்பொலி திருநடச் செயலை யேத்துவாம்.

சிவசத்தி.

செறிதரு முயிர்தோறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறு மரனிட மரபின் மேவியே
யறுவகை நெறிகளும் பிறவு மாக்கிய
இறைவிதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.

விநாயகக் கடவுள்.

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
வெண்ணிய பொருளெலா மெளிதின் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.

வைரவக் கடவுள்.

பரமனை மதித்திடா பங்க யாசன
ெனருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றி செய்குவாம்.

வெஞ்சினப் பரியழ்ன் மீது போர்த்திடு
மஞ்சனப் புகையெனவால மாமெனச்
செஞ்சுடர்ப் படிவமேற் செறித்த மாமணிக்
கஞ்சுகக் கடவுள்பொற் கழல்க ளேத்துவாம்.

வீரபத்திரக் கடவுள்.

அடைந்தவி யுண்டிடு மமரர் யாவரு
முடிந்திட வெருவியே முனிவர் வேதிய
ருளடந்திட மாமக மொடியத் தக்கனைத்
தடிந்திடு சேவகன் சரணம் போற்றுவாம்.

சுப்பிரமணியக் கடவுள்.

இருப்பரங் குறைத்திடு மெஃக வேலுடைப்
பொருப்பரங் குணர்வுறப் புதல்வி தன்மிசை
விருப்பரங் கமரிடை விளங்கக் காட்டிய
திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம்.

சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்
டீரலை வாயிடு மெஃக மேந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம்.

காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்டு மாலுற
வாவினன் குடிவரு மமலற் போற்றுவாம்.

நீரகத் தேதனை நினையு மன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடுந்
தாரகத் துருவமாந் தலைமை யெய்தியே
வேரகத் தறுமுகனடிக ளேத்துவாம்.

ஒன்று தொருடலை யொருவி யாவிமெய்
துன்று தொருடலைத் தொடங்கி யையவகை
மன்று தொருடிய வள்ளல் காமுறக்
குன்று தொருடிய குமரற் போற்றுவாம்.

எழுமுதி ரைப்புனத் திறைவி முன்புதன்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்.

ஈறுசேர் பொழுதினு மிறுதி யின்றியே
மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சியிற்
கூறுசீர் புனைதரு குமர கோட்டம்வா
ழாறுமா முகப்பிரா னடிகள் போற்றுவாம்.

திருநந்தி தேவர்.

ஐயிரு புராணநூ லமலற் கோதியுஞ்
செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்
மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்.

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள்.

பண்டை வல் வினையி னாற் பாயு டுத்துழல்
குண்டரை வென்றுமுன் கூடல் வைகியே
வெண்டிரு நீற்றொளி விளங்கச் செய்திடு
தண்டமிழ் விரகன்மெய்த் தாள்கள் போற்றுவாம்.

திருநாவுக்கரசு சுவாமிகள்.

பொய்யுரை நூல்சில புகலுந் தீயமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகற் றோணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தா டொழுது போற்றுவாம்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

வறந்திடு பொய்கைமுன் னிரம்ப மற்றவ
னுறைந்திடு முதலைவந் துதிப்ப வன்னதா
விறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடலொன்
றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம்.

### மாணிக்கவாசக சுவாமிகள்.

கந்தமொ டுயிர்படுங் கணபங் கம்மெனச்
சிந்தைகொள் சாக்கியர் தியங்க மூகராய்
முந்தொரு மூகையை மொழிவித் தெந்தைபால்
வந்திடு மடிகளை வணக்கஞ் செய்குவாம்.

### திருத்தொண்டர்கள்.

அண்டரு நான்முகத் தயனும் யாவருங்
கண்டிட வரியதோர் கோட்சிக் கண்ணவா
யெண்டரு சிவனடி யெய்தி வாழ்திருத்
தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம்.

### சரஸ்வதி.

தாவறு முலகெலாந் தந்த நான்முகத்
தேவுதன் றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதொ றிருந்திடு நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசை புனைந்து போற்றுவாம்.

அருள் நிறைந்த யானைமுகன், ஆறுமுகன், அம்பிகை, அம்பலவன் என்னும் இவர்கள் என்றும் நமக்கு மங்களத்தைக் கொடுப்பாராக!

### விநாயகர்.

ஓங்காரத்துள் குடியிருப்பரும், யானைமுகமும் நான்கு திருப்புயங்களும், பெரிய வயிறுமுடையவருமாகிய கணநாதரை, சர்வவிக்னங் (இடையூறு) களும் நிவிர்த்தியாய் (எடுத்த நற்காரியங்கள் இனிது) முடியும் பொருட்டு வந்திக்கிறேன்.

வித்யாரம்பகாலத்திலும், விவாககாலத்திலும், ஒன்றைத் தொடங்கும் போதும், ஒன்றை முடிக்கும்போதும், யுத்தநேரத்திலும், இடையூறு காலத்திலும் 1. சுமுகன், 2. ஏகதந்தன், 3. கபிலன், 4. கஜகர்ணன், 5. லம்போதரன், 6. விகடன், 7. விக்னராஜன், 8. விநாயகன், 9. தூமகேது, 10. கணாத்யக்ஷன், 11. பாலசந்திரன், 12. கஜானனன், 13. வக்ரதுண்டன், 14. சூர்ப்பகர்னன், 15. ஹேரம்பன், 16. ஸ்கந்தபூர்வஜன் என்னும் இப்பதினாறு திருநாமங்களையும், படிப்போரும், படிக்கக்கேட்பவரும் இடையூறு எய்தார்.

### ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுள்.

எண்ணிய பொருள்களை எண்ணியபடி அடைய, எல்லாம் உணர்ந்தோரும் எங்கும் தடையின்றிச் செல்வோருமாகிய ஸ்ரீ சுப்பிரமணியப் பெருமானது பதினாறு திவ்ய திருநாமங்களைச் சொல்கிறேன்:—

---

1. இனியமுகத்தை உடையவர், 2. ஒற்றைக்கொம்புடையவர், 3. கபில நிறமுடையவர், 4. யானைக்காதுடையவர், 5. பெரியவயிறுடையவர், 6. விகடக்கூத்துச் செய்பவர், குட்டையானவர், 7. இடையூறுகளைத் துவம்ஸம் செய்வோர், 8. விக்னங்களை நிவிர்த்திப்போர், 9. துஷ்டர்களை சிக்ஷிப்போர், 10. அக்னியைப்போன்றவர்; கணங்களுக்குத் தலைவர், 11. பாலசந்திரனை நெற்றியில் தரித்தவர், 12. யானைமுகர், 13, வளைவுபட்டவாயையுடையவர். 14. முறம்போன்றகாதுடையவர். 15. அடியவர்க்கருள் செய்வோர், ருத்திரிகிடத்து நிற்பவர், 16. கந்தருக்கு முன்னுதித்தவர்.

1. ஞானசத்தியாத்மன், 2. கந்தன், 3. அக்னிபூ, 4. பாகுளேயன், 5. காங்கேயன், 6. சரவணபவன், 7. கார்த்திகேயன், 8, குமரன், 9. ஷண்முகன், 10. குக்குடத்வஜன், 11. சத்திதரன், 12. குஹன், 13. பிரம்மசாரி, 14. ஷாண்மாதுரன், 15. கிரௌஞ்சபித், 16. சிகிவாஹனன், என்னும் இப் பதினறு திவ்ய திருநாமங்களையும் எக்காலத்தும் ஒருவன் அன்புடன் நன்ருய் ஜபிப்பதால், விவாகத்திலும், செல்வதற்கு அபாயமாகிய வழிகளிலும், தோல்வியடையும் காலத்திலும், கவன வித்தை, பெரிய அஸ்திர சஸ்திர பயிற்சி முதலாய காலத்திலும், நல்லபயனை அடைவன். அன்றியும், பெண் மீது நாட்டம் உள்ளவன் தான் கோரிய பெண்ணையும், வெற்றியை வேண்டுவோன் வெற்றியையும், புத்திரசம்பத்தை விரும்புவோன் சற்புத்திரனையும், பொருளைவேண்டுவோன் பொருளையும் அடைவதுடன், தீர்க்காயுள், தேக சௌக்யம், ஜனவசியம், தனதான்ய சுகம் முதலிய பயனையும் அடைவன்.

---

# I. சம்பவ காண்டம்.

---

## 1. சூதமுனி ஸம்வாதம் புராண வரலாறு.

ஆதியில், நான்முகதேவன் ஸ்ரீ பரமேஸ்வரனுடைய அருளினல் சர்வ ஜீவர்களையும் சிருஷ்டிக்கு நிமித்தம் காஞ்சிபுரத்தில் முற்றும் கொடுமையான ஒரு தவத்தைச் செய்தனர். அவர் தம்முடைய மனத்தை ஒருமுகப் பட்ட சமாதியில் வைத்திருக்கும்போது, குற்றமற்றதும் மேலானதுமான இல்லற தருமத்தில் ஒழுகும் சில முனிவர்கள் தவத்திலேயே நாட்டம் வைத்த மனத்தினராய், விகநஸ முனிவர் ஏற்படுத்திய வானப்பிரஸ்த நெறியில் நின்று தவத்தை முடிக்கக்கருதி, தாம் தவம் செய்வதற்கு எந்த இடம் தகுதியுள்ளதாகும் என்பது கேட்டுத் தெளிய அவ்விடம் வந்தனர். வந்ததும், அவர்கள் பிரம்ம தேவரைப்பணிந்தெழுந்து, கைகட்டி எதிராக நின்று, "சிருஷ்டி கர்த்தரே, நாங்கள் வானப்பிரஸ்த நெறியில் நின்று தவத்தைச் செய்வதற்குத்

---

1. ஞானசத்தி வடிவர் 2. சத்துருக்களை ஹதம்செய்பவர், 3. அக்னியிற் பிறந்தோர், 4. கார்த்திகை மாதரின் புதல்வர், 5. கங்கையில் பிறந்தோர், 6. நாணற்புதரில் உற்பவித்தவர், 7. கார்த்திகைச் செல்வர், 8. என்றும் குமாரப் பருவத்துடனிருப்போர்; துஷ்ட நிக்ரஹம் செய்வோர்; அழகுடையவர், சம்பத்தைக் கொடுப்பவர், 9. ஆறுமுகமுடையவர், 10. கோழிக்கொடியை ஏந்தியவர், 11. இச்சை, ஞானம் கிரியை என்னும் முச்சக்திகளும் மூன்றுகிளைகளாக எழுந்து விளங்கும் சத்திவேலைக் கரத்தில் உடையவர், 12. பகைவரின் படைகளினின்றும் தமது படைகளைக் காப்பவர்; ஆன்மாக்களது ஹிருதய குஹையில் வசிப்பவர், 13 என்றும் பிரம்மசாரி விரதத்தை அனுஷ்டித்திருப்போர், பிரம்மாவின் சிருஷ்டித் தொழிலைச் செய்பவர், 14. ஆறு தாய்மாரை உடையவர், 15. கிரௌஞ்சம் என்னும் மலையைப் பிளந்தவர், 16. மயிலை வாகனமாக உடையவர்.

தகுதியுள்ள இடத்தைத் தாங்கள் தெரிவித்தருளல் வேண்டும். முப்பாட்டனாரே, நாங்கள் வந்தனம் செய்கிறோம்.'' என்றனர். தாமரை மலரை ஆசனமாகக்கொண்டு விளங்கும் பிரம்மதேவர், அவர்கள் வார்த்தையினைக்கேட்டு, ஒரு முகூர்த்தநேரம் தியானத்தில் இருந்தனர். பிறகு அவர், குச கூர்ச்சத்தை (குசமென்னும் புல்லின் முடிச்சை) எடுத்து, அதை ஓர் வண்டிபோற் செய்து, "முனிவர்களே, இந்தவண்டி எந்த நிர்மானுஷ்யமான இடத்தில் போய்ச் சிதறி விழ்கிறதோ அந்த இடமே நீங்கள் தவம் செய்வதற்கு ஏற்ற இடமாகும்.'' என்று கூறி, ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரரை மனதில் தியானித்துக்கொண்டே, அந்தவண்டியை ஏவினர். வண்டியானது முனிவர்களுடன் சென்றது. அப்படி அது செல்லும்போது, வழியில் மிகவும் அழகுடையதும் வழவழப்புள்ளதுமாகிய ஒரு கற்பாறை நிலத்தில், அதன் நேமி (விளிம்பு) சிதறியதால், அது கீழேவீழ்ந்தது. நேமி அந்த இடத்திற் சிதறிய காரணத்தால், அந்த இடம் அன்றுமுதல் நைமிசாரணியம் என்று வழங்கலாயது. அந்த நைமிசாரணியம், பகீரதனைப் பின்தொடர்ந்து சென்ற ஸ்ரீ பரமேஸ்வரருடைய சடாமகுடத்தில் விளங்கும் கொன்றைமலரின் வாசனையைப் பொருந்திய கங்கையைக்கொண்டு, எல்லா உலகங்களையும் பரிசுத்தப்படுத்தும் தகுதி உடையதாய்ப் புண்ணியக்ஷேத்திரமாக விளங்குகிறது. அதில் அநேகரிஷிகள் நிறைந்திருந்தனர். பலவிதமான மிருகங்கள் கூட்டம் கூட்டமாக சஞ்சரித்து நின்றன. பறவைக்கூட்டங்கள் பல இன்பமாகப் பாடும்பாட்டின் ஓசையைக்கொண்ட விருக்ஷஜாதிகள் அடர்த்தியாய் நிழல் தருவனவாய் அமைந்திருந்தன. அம்மரங்களின் அடிவாரம் தெரியாதபடிப் பலவிதமான கொடிகள் அவற்றைச் சுற்றிக்கொண்டு மிருந்தன. அவ்விடத்தில் மிகவும் தெளிவுள்ளதும் குடிப்பதற்கு மிக்க மதுரமுள்ளதுமான நீர்க்கால்கள் பல விளங்கின. அத்தகைய பெருமையும் குளிர்ந்த நிழலைத்தரும் மரங்களின் அடர்த்தியால் அழகு விளங்குவதுமான அந்த நைமிசாரணியம் அந்த முனிவர்களுக்குத்தக்க இடமாக விளங்கியது. அதில் முனிவர்கள் தங்கி, ஸ்ரீ மங்கள மணவாளனது மனதைக்குளிரச்செய்து, அவனது தண்ணருள் பெறும்பொருட்டு, அநேககாலம் தவம் செய்தனர். பிறகு அவர்கள் எல்லோரும் ஸ்ரீ பரமேஸ்வரனுடைய திருவருளை நாடியவர்களாய், ஆயிரம் வருஷமளவு செய்யத்தக்க தான சத்திரயாகத்தை அவ்விடத்தில் செய்யத்தொடங்கினர்.

முனிவர்கள் யாகத்தைச்செய்யத் தொடங்கிய விஷயத்தை ஸ்ரீ ஸூத முனிவர் கேள்வியுற்றனர். ஸூதமுனிவர், சத்தியவதியின் அருமைத் திருக்குமாரராய் விளங்கிய ஸ்ரீ வேதவியாச முனிவருடைய சீடர்; தவத்தையே பொருளென மதித்தவர்; திரிபுரமெரித்த அவிர்சடைக் கடவுளாம் பார்வதி பங்காளனது பாதாரவிந்தத்தில் நீங்காத அன்புடையவர்; புராணங்களை வியவகரிப்பதில் சிறந்தவல்லமையையும் நாவன்மையையும் உடையவர். இத்தகைய பெருமைவாய்ந்தவரும் ஸ்ரீ லக்ஷ்மீவிலாசம் பொருந்தப்பெற்றவருமான முனிவர்பெருமான் உடனே நைமிசாரணிய வாசிகளாகிய முனிவர்களின் பாக்யத்துக்குப் பெருமையுண்டாக, விரைவில் அவ்விடம் வந்துசேர்ந்தனர். அவ்ரை

முனிவர்கள் கண்டவுடன், அவர்மீது தாங்கள் வைத்துள்ள ஆரா அன்பின் பெருக்கால் மெய்ம்மயிர்பொடிப்ப, அவரை அர்க்யபாத்யாதிஉபசாரங்களினல் உபசரித்துப் பூஜைசெய்தனர். புராணம் உரைப்பதில் வல்லவரான சூதமுனிவர், முனிவர்கள் பூஜையை அன்புடன் ஏற்றுப் புன்சிரிப்புடன் கூடியவராய், முனிவர்கள் அன்புடன் இட்ட ஆசனத்தில் அமர்ந்து, அவர்கள்மேலும் செய்த பூஜை முதலிய உபசாரங்களை அங்கீகாரம் செய்துகொண்டு, சந்தோஷமாயினர். முனிவர்கள், வாக்விலாஸம் பொருந்திய சூதபுங்கவரை, நேச மொழிகளால் திருப்திசெய்து, "ஓ மஹானுபாவா, நாங்கள் நான்முகன் குறித்தபடி நைமிசாரணியமடைந்து கிருதார்த்தரானேம். தேவரீர் இப்பொழுது எங்கள் மீது அருள்கூர்ந்து ஸ்ரீ சுப்பிரமண்யப் பெருமானரது மேன்மை பொருந்திய திவ்ய சரித்திரங்களைச் சொல்லி அருளல் வேண்டும். ஸ்ரீ பரமேஸ்வரருடைய வீர்யம், அக்னிதேவனல் வாங்கப்பட்ட பின்னர், அந்தத் தேஜோரூபியாக விளங்கும் பரமாத்மா எவ்வாறு நாணற்புதரில் ஜனனமாயினர் என்பதை விளக்க வேண்டும். அந்த முருகப்பெருமானரது சௌர்யம் எத்தகையது? அந்தப் பார்வதி நந்தனர் போரில் யாதுசெய்தனர்? அந்த வீரசிகாமணியால் அடிபட்டு மாண்ட அசுரர்கள் யாவர்? அப்பெருமானர், மேன்மையான ரதங்கள், யானைகள், குதிரைகள் முதலியனவற்றை வாகனமாகக்கொள்ளாது மயிலை ஏன் வாகனமாகக் கொண்டனர்? அவருக்கு சக்தி, வச்சிரம் முதலிய ஆயுதங்கள் இருக்கவும், அவர் கோழியைத் தமது திருக்கரத்தில் அழகு பெறக்கொண்டது எதுபற்றி? அவர் பால் விளங்கும் பெருமை பொருந்திய மங்கையர் இருவர்யாவர்? முருகப்பெருமானரது அரிய திருவிளையாடல்களைக் கேட்கும் உலகினர், யாது மேன்மையினை அடைவர்? புராணம் சொல்வதில் வல்லவரே, தயைகூர்ந்து அவருடைய பராக்ரமங்கள் அனைத்தையும் விவரமாகவும் விரிவாகவும் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்.'' என்று வேண்டிக் கொண்டனர்.

அப்போது ஸ்ரீ சூதமுனிவர்:— "மஹானுபாவர்களாம் முனிவர்களே, சொல்கிறேன்; உறுதியுடனும் நியமத்துடனும் கேளுங்கள். நீங்கள் இதைக்கேட்டது உலகில் உள்ள மேன்மைகள் அனைத்திற்கும் மிகமிக மேன்மையாம் ஒன்றைப் பெறுதற்கு இன்றியமையாத ஆதாரமாயுள்ளது. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் சதுர்வித புருஷார்த்தங்களையும் அடைய இஃதே முக்யகாரணமாகும். இந்தப் புண்ணிய மஹா சரித்திரத்தைக் கேட்பதால் மலடியும் அப்பெயர் நீங்கிப் புத்திரப்பேற்றை அடைகிருள். பெண் வேண்டினேர் பெண்ணையும், பொன் வேண்டினேர் பொன்னையும், கல்வி வேண்டினேர் கல்வியையும், ராஜ்யத்தை வேண்டினேர் ராஜ்யத்தையும் அடைகின்றனர். சதி புருஷர் இருவரும் இந்த உபாக்யானத்தை முற்றும் நியமமாகவும் சிரத்தையுடனும், மனதை மற்றைய விஷயங்களிற் செல்லவிடாது, சோர்வும் சோம்பலும் அற்றவராய், ஒருவாறு கேட்கின், அவர்கள் சகலஇஷ்டகாம்யார்த்தங்களையும் தடையின்றி அடைகின்றனர் என்பதில் ஒரு சிறிதும் சந்தேகம் இல்லை. கேளீர், பூதேவர்களே, மேலும் அந்தத் தம்பதிகள் அவ

சிய புத்தியுடன் சிரத்தையோடு இந்த மஹா புராணத்தைப் பூஜை செய்து, ஸ்ரீ முருகப்பெருமானரது பொன்னடிகளில் மனதை நாட்டி, ஆதியோடந்தமாக இந்தக் கதையை ஒருவாறு கேட்டால், புத்திரப்பேறில்லாத பாவிகளாயினும், அவர்கள் அனேகம் சற்புத்திரர்களை அடைவதில் எள்ளளவும் சங்கையில்லை என்று நான் பன்முறையும் சத்தியம் செய்கிறேன். ஆதலால் முனிவர்களே, நீங்கள் எல்லோரும் முதலில் இந்தப் புராணத்தைப் பூஜை செய்து, பிறகு ஆதரவுடன் கேளுங்கள். பல கிளைக்கதைகளுடன் கூடியதும், இஷ்ட சித்தியைத் தரவல்லதுமான இந்தச் சரித்திரத்தை உங்களுக்கு நான் சொல்கிறேன். ரிஷீஸ்வரர்களே, பக்தியுடன் கேளுங்கள்.'' என்று கூற, முனிவர்கள் அதை ஆதரவுடன்கேட்டு, செவி வழியால் அமிருதம் உண்டதுபோல் சுகானந்தப்பெருக்கில் மூழ்கியவராய், ஸ்ரீ பரமேஸ்வரனது செல்வக்குமரராய் விளங்கும் முருகப்பெருமானரது திவ்ய சரித்திரத்தைக் கேட்க அளவற்ற ஆவல்கொண்டவராய், அதைப்பற்றிப் பலவாறு புகழ்ந்து கொண்டாடினர்.

## 2. புராண அநுக்ரமணிகை.

ஸ்ரீ சூதபுங்கவர், முனிவர்கள் முறைப்படி புராணத்தைப் பூஜித்த பின்னர், ஸ்ரீ மஹாதேவரையும், லோகமாதாவாகிய உமையம்மையையும், கந்தப்பெருமானரையும், ஸத்யவதியின் புதல்வராகிய ஸ்ரீ வேத வியாசரையும் மனதில் தியானித்து, சுப வசனங்களைச் சொல்கிறார்.

"பாவங்கள் அனைத்தையும் தவத்தால் ஹதம்செய்து விளங்கும் மஹனீயர்களாகிய சௌனகாதி முனிவர்களே! கேளுங்கள். யான் சொல்லப்புகும் சுப கதையாகிய கந்தப்பெருமானருடைய புகழ் நிரம்பிய சரித்திரம், கலியுகத்திற்கியல்பாய் உள்ள பாவகோடிகளைத்துவம்சம் செய்யவல்லது. கேளுங்கள், பிராமணோத்தமர்களே! ஆதிகற்பத்தின் முறை வரிசையிலான துவாபரயுகம் வந்தபோது, எல்லா உயிர்கட்கும் புத்தி மயக்கம் ஏற்பட்டது. அந்தப் புத்தி மயக்கினால், வேத முதலிய எல்லா வித்தைகளும், அவற்றின் அர்த்தங்களும் பிரஜைகளுக்குச்சரியாக விளங்கவில்லை. மனமயக்கத்தாற் சிலர், அன்னமே ஜகத்துக்குக்காரணம் என்றனர். சிலர் பிராணனனே பொருள் என மயங்கினர். சிலர் மனதையே காரணமென எண்ணினர்; சிலர் விஞ்ஞானம், ஆனந்தம், சூர்யன், வாயு, அக்னி, பிரம்மா, லக்ஷ்மீபதியாகிய விஷ்ணு, மாயை, விராட்புருஷன் முதலியவர்களுள் ஒவ்வொருவரைத் தனியாக உலகிற்குக் காரணகர்த்தா என மதித்து மயங்கினர். சிலர் ஆன்மாவின் கர்மங்களே பொருள் எனத்துணிந்தனர். பௌத்தர், சாருவாகர், லாகுளர் முதலான பலமதஸ்தர்களும் ஒவ்வொருவரை அல்லது ஒவ்வொருபொருளைக் காரணம் எனக்கற்பித்தனர். முனிவர்களே! சுருங்கச்சொல்லில் இப்படியே ஒவ்வொருவரும் உண்மைப் பொருளாக விளங்கும் மஹேஸ்வரரை மறந்து, அவர் நீங்கலாகிய மற்றைய பொருள்களில் ஒவ்வொன்றை ஒவ்வொருவரும் ஜகத்திற்குக் காரணம் எனக்கொண்டாடினர். அந்தக்காலத்தில், காலவசத்தால் அவரவர்களுடைய எல்லா அதிகாரங்களும் தலைகீழாகமாறின.

பிராமணர்களே! கேளுங்கள். அப்போது விஷ்ணுமூர்த்தி முதலான தேவர்கள் காலவேறுபாட்டால் உலகம் புத்திமயங்கி இருப்பதுகண்டு, ஸ்ரீகைலேயங்கிரியில் வீற்றிருப்பவரும், தேவதேவோத்தமரும் எல்லாம் அறிந்தவரும், சகலைஸ்வர்ய சம்பன்னரும், சாக்ஷாத் பரப்பிரஹ்ம ஸ்வரூபியும், சம்சாரமென்னும் கொடிய தூர்வியாதியைப்போக்க வல்ல வைத்தியநாதரும், சிவை என்னும் மஹாசக்தியுடன் அரியாசனத்தில் அமர்ந்து விளங்குவோருமாகிய ஸ்ரீ மஹாதேவரை அடைந்து, சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்தனர். பின்னர் அவர்கள் ஸ்ரீ மஹாதேவர் சன்னிதிமுன்நின்று, "சகலகல்யாண குணங்களும் நிறையப்பெற்ற சர்வேசா! உலகில் வேதங்கள் எண்ணிறந்தனவாய் இருப்பதால், அவற்றைப்பிரம்ம, க்ஷத்ரிய, வைசிய, சூத்ரர்கள் என்னும் நான்குவருணத்தினரும் மற்றவரும் அத்தியாயனம் செய்வதில்லை. அதனல் அவர்கள் புத்திமயக்கம் கொண்டவராய், தேவரீரைத்தவிர மற்றைய ஒவ்வொருவரையும் ஜகத் கர்த்தா என்று சொல்லித் திரிகின்றனர். சிலர் பிரமனையும், சிலர் விஷ்ணுவையும், சிலர் இந்திரனையும், சிலர் சூர்யன் வாயு முதலானவர்களையும் ஜகத்கர்த்தா என்று சொல்கிறார்கள். அவர்கள் எல்லோரும் மோகத்தின் வசப்பட்டுவிட்டதால் பரப்பிரஹ்மப் பொருளாய் விளங்கும் தாமே முதல்வர் என்பதை அறியவில்லை. உலகில் சகல அதிகாரங்களும் தடுமாறிவிட்டன. தருமம் தவறியது. உலோபமோகங்கள் குடிகொண்டன. குரு சீடக்கிரமங்கள் முறைபிறழ்ந்தன. வேதாத்தியயனம் கிடையாது. யாகம் செய்தலும் இல்லை. இங்ஙனமாய்த்தடுமாறி நிற்கும் ஸ்தாவர ஜங்கம வடிவான வுலகத்தில், யாகங்களில் கொடுக்கப்படும் ஆஹுதிபாகங்களை உண்டு ஜீவித்துவரும் எங்களுக்குத் தேவரீரை அன்றி வேறுகதியானவர் எவர்?" என்று இரக்கத்துடன் விண்ணப்பித்துக்கொண்டு, உலகை க்ஷேமப்படுத்துமாறு தாழ்மையுடன் பிரார்த்தித்தனர்.

அங்ஙனம் விஷ்ணு முதலான தேவர்கள் பிரார்த்தித்தபோது, மஹாபிரபுவாய் விளங்கும் ஸ்ரீ பரமேஸ்வரர், அதி கெம்பீரத்துடன், "வாருங்கள், விஷ்ணு, பிரம்மாக்களே! நீங்கள் இருவரும் துவாபர யுகந்தோறும் உலகில் வியாசராகவும் மனு ஆகவும் அவதரித்து, விரிந்துகிடக்கும் வேத சாஸ்திரங்கள் இரண்டையும், அறிவு சுருங்கி மயங்கிக்கிடக்கும் கலியுகத்து மாந்தர்கள் எளிதில் கற்றறியுமாறு, சுருக்கமாகச் செய்து விடுங்கள். கருமங்களையும் பிரஹ்மத்தையும் நிர்த்தாரணம் செய்யும் சூத்திர வடிவமான சாஸ்திரங்களை, மற்றைய ரிஷிகளை உடன் வைத்துக்கொண்டு உடனேசெய்து விரைவில் முடித்து விடுங்கள். மற்றைய தேவர்களும் முனிவர்களும் எமது கட்டளையின்படி புத்தியற்ற மாந்தரின் பொருட்டு சாஸ்திரங்களையும் புராணங்களையும் சுருக்கம் செய்யக்கடவர்." என்று திருவாய் மலர்ந்தருளினர். இங்ஙனம் ஸ்ரீ மஹாதேவர் கட்டளையிடவே, அந்தக் கட்டளையை விஷ்ணு முதலான தேவர்கள் சிரமேற்கொண்டு, உலகில் வியாசர் முதலானபெயர்களுடன் தோன்றி, வேதங்கள், புராணங்கள், தரும சாஸ்திரங்கள் முதலான எல்லாவற்றையும் ஆதியோடந்தமாக ஆண்டவன் கட்டளையைப் பெரி

தென மதித்துச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தனர். முனிவர்களே, இந்த யுகத்தின் முறைப்படி விஷ்ணு மூர்த்தியானவர், ஸத்தியவதியின் புதல்வராகிய ஸ்ரீ வேத வியாசராய் அவதரித்து, பலவாறாய்க் கிடந்த வேதங்களை பைலர் முதலாக உள்ள முனிவர்களிடத்து, ஒன்றோடொன்று சேராதபடி வெவ்வேறாய் வகுத்துவிட்டுப் பின் பதினெண் புராணங்களையும் செய்தருளி, அவற்றை எமது குருவான அவ்வியாச புங்கவர் என்னிடம் தந்தருளினர்.''

"முனிவர்களே ! அந்தப் பதினெண் புராணங்களின் வரிசையைக் கூறுகிறேன்; கேளுங்கள். அவை பிரம்மம், பதுமம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், பவிஷிபத், நாரதீபம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரம்மகைவர்த்தம், லிங்கம், வாராசம், ஸ்காந்தம், வாமனம், மச்சம், கூர்மம், காருடம், பிரம்மாண்டம் என்பனவாம். முனிவர்களே, பதினெண் புராணங்களுள், சைவம், பவிஷிபத், மார்க்கண்டேயம், லிங்கம், வராகம், ஸ்காந்தம், மச்சம், கூர்மம், வாமனம், பிரம்மாண்டம் என்னும் பத்தும் சிவபுராணங்களாகும். அவை மொத்தத்தில் பத்துலக்ஷம் கிரந்தங்கள் உள்ளனவாய் ஸ்ரீ மஹேஸனுடைய குணாதிசயங்களையே சொல்கின்றன. அன்றியும், மற்றவர்களுக்கு அசாத்தியமும் துர்லபமுமாகும் உருவங்களையும் பெயரையும் மஹேசன் கொண்டுவிளங்குவதாகவும் எல்லாப்பெருமைகளும் ஈசனுக்கே இருப்பதாகவும் பலபட அவரது பெருமையினையே அவை விளக்கிச் செல்கின்றன. வைஷ்ணவம், பாகவதம், நாரதீயம், காருடம் என்னும் இந்த நான்குபுராணங்களும் விஷ்ணுவைப்பற்றிக்கூறும் புராணங்களாகும். பிரம்மம், பதுமம் எனும் இரண்டும் பிரம்மாவைப்பற்றியும், ஆக்கினேயம் அக்னியைப்பற்றியும், பிரம்மகைவர்த்தம் சூர்யனைப்பற்றியும் கூறும் புராணங்களாகும். விஷ்ணு புராணங்கள் நான்கும், ஸ்ரீ பரமேஸ்வரரையும், விஷ்ணு மூர்த்தியையும் சமத்துவ முள்ளவரென்றும், லோகாதிபதியாகிய நாராயணர் மற்றைய பிரம்மா முதலிய தேவர்களுக்கு மேலானவர் என்றும் சொல்லும். பிரம்மாவைப்பற்றிக்கூறும் புராணங்கள், பிரம்மா, விஷ்ணு, மஹேஸ்வரர் என்னும் மூவரும் சமத்துவமுடையவர் என்றும் மற்றைய எல்லோரினும் மேம்பட்ட ஜகத்பதி பிரம்மாவே என்றும் சொல்லாநிற்கும். சூர்யன் காலை, பகல், மாலை என்னும் மூன்று காலங்களிலும் முறையே பிரம்மா, விஷ்ணு, ருத்திர வடிவமாக விளங்குவதாகவும், விசுவானர முனிவரின் புதல்வராகிய அக்னி, மும்மூர்த்திகளின் வடிவுபொருந்தியவரென்றும் சொல்லப்படுகின்றனர். ஆக்கினேயம், பிரம்மகைவர்த்தம் என்னும் இரண்டுபுராணங்களும் அக்னிதேவன், ஆதித்யன் என்னும் இருவரும் ஸ்ரீபரமேஸ்வரரது அஷ்டமூர்த்தங்களில் இரண்டு மூர்த்தங்களை வஹிப்பதால், அவர்களை விசேஷமாக சிவஸ்வரூபிகளாகிய ஜகத்பதிகள் என்று சொல்கின்றன. அவைமொத்தத்தில் நான்கு லக்ஷம் கிரந்தங்கள் உடையவை. எங்ஙனம் வேதங்களும் சாஸ்திரங்களும் ஸ்ரீ மஹேஸனை எல்லா உலகங்களையும் அதிகரித்து நின்றவரென்றும், உமாபதி என்றும், சாக்ஷாத் பரமபுருஷரென்றும், மாயாபாசங்களினின்றும் ஜீவர்களை விடுவிக்கும் பசுபதி என்றும், பரப்பிரஹ்மம் என்றும்,எல்லா ஜகங்களும்

தன்னுள்ளடங்கப்பெற்றவர் என்னும் பொருளமைந்த பரந்தாமர் என்றும், பரஞ்சோதிப்பொருளென்றும், எக்காலத்தும் கவலையில்லாதவர் என்றும், மங்களப்பொருள்களாய் விளங்கும் எல்லாவற்றிலும் சிறந்த மங்கள மூர்த்தி என்றும், பாவன (பரிசுத்த)மாய் இருப்பவை எல்லாவற்றிலும் மேலான பரமபாவன மூர்த்தி என்றும், சர்வமங்களை என்னும் ஜகதம்பிகையுடன் சேர்ந்து விளங்குவபரென்றும், உதபப்புருஸ்ஸு மங்கள (திவ்யமங்கள மூர்த்தியாக விளங்குபவ)ரென்றும், வேதத்தால் பிரதி பாதிக்கப்பட்டவரென்றும், வேதாந்த வாக்கியங்களால் நித்தியரென்றும் அமிருதப் (அழிவில்லாப்) பொருளென்றும் முறையிடப் படுகின்றவரென்றும் விளங்கக் கூறுகின்றனவோ, அங்ஙனமே புராணங்களும் பார்வதி பங்காளராகிய முக்கண்மூர்த்தியைச் சர்வ சுதந்தர முள்ளவரென்றும், ஏகரென்றும், அத்வைதப் பொருளென்றும் தாராளமாக முறையிடுகின்றன. அவற்றுள் பதின்மூன்றுவது புராணமாகிய ஸ்காந்த புராணத்தை விளக்குகிறேன்; கேளுங்கள். ஸ்காந்த புராணம் ஓரிலக்ஷம் கிரந்தங்களுடன் அமைந்த ஆறு சம்ஹிதைகளை உடையது. பரமேஸ்வரனுக்குரிய பத்துப் புராணங்களும் சாத்வீக புராணங்கள் என்னப்படும், அவை சத்பிராமணர்களால் நம்பத்தக்கவை என்று தேவர்கள் சொல்கின்றனர். அந்தச் சாத்வீக புராணங்கள், சத்துவகுணமுள்ளதும், வெள்ளை நிறமுடையதும், சமாதியில் விளங்குவதும், ஞானத்துக்கு அதீனமானதுமான பொருளை விளக்கும் தன்மை உடையன. அந்தப் பரமப் பொருளாகிய சிவபெருமானே, யோகிகளுக்குச் சிறந்த வித்தைகளை உபதேசித்தருள்பவரும், சுத்தமான படிககக்கல்லைப் போன்றவரும், எக்காலத்தும் துக்கமற்றவரும், பிராமணர்களுக் கெல்லாம் தலைவரென்றும் பிரசித்தி பெற்றிருக்கிறார். இந்தப் புராணங்களில் எல்லாம் பிராமணர்களுடைய சுபகதைகளே சொல்லப்பட்டுள்ளன. சிவபுராணங்கள் பத்தினிடத்தும் தீமையும் பாவமும் நாட அஞ்சும். முனிவர்களே, விஷ்ணு புராணங்கள் நான்கும் தாமத புராணங்கள் என்று சொல்லப்படும். அவற்றிற்கு முக்கியதேவதையோ விஷ்ணு. அந்தத் தாமத புராணங்கள், கருப்பு நிறமுடையதும், உபகார மில்லாததும், வஞ்சகத்திறமை அமைந்ததும் நித்திரை, சோம்பல், மதம்முதலியவற்றை உடைமையாகக் கொண்ட பொருளை விளக்கும் தன்மையை உடைத்தா யுள்ளனவுமாம். அவை பிரதிபாதிக்கும் பொருளாகிய விஷ்ணுவும், கறுப்பு நிறமுடையவரும், ஆதிசேஷன்மீது சயனிப்பவரும், அடியார்களை மோஹிக்கச் செய்பவருமாய் இருக்கிறார் என்று நூல்கள் சொல்கின்றன. அவ்விஷ்ணு புராணங்கள், ரிஷிகளால் க்ஷத்திரியர்களுக்கென ஓதப் பெற்ற தர்மங்களை யகத்துக்கொண்டுள்ளன. பிரம்மருக்குரிய இரண்டு புராணங்களும் இராஜச புராணங்கள் எனப்படும். அவை வைசியர்களால் சேவிக்கப்படத் தக்கவை என்பது சர்வநூல் சம்மதமாகும். ரஜோகுணமென்பது துக்கத்துக்கு ஆசிரியமானதும் செந்நிறமுள்ளதும் சபலபுத்தியைத் தரத்தக்கதுமாம். ஆக்கினேயபுராணம், சூர்ய புராணம் என்னும் இரண்டும் மேற்கூறப்பட்ட மூன்று குணங்களும் பொருந்தப்பெற்றவை. ஆதலால் அவை பிராமணர்கள் பாராட்டத்தக்க சிவ புரா

ணங்களேயாம். முனிசிரேஷ்டர்களே, கேளுங்கள். அந்தச் சிவபுராணங்கள் பத்துள்ளும், ஸ்காந்தபுராணமானது சுகத்தையளிப்பதும், மேன்மை பொருந்தியதுமாக இருக்கிறது. அதுவே வேதாந்த சாரங்களை விளங்க உரைப்பது. அது ஸனத்குமார சம்ஹிதை, ஸூத சம்ஹிதை, பிரம்ம சம்ஹிதை, விஷ்ணு சம்ஹிதை, சங்கர சம்ஹிதை, ஸௌர சம்ஹிதை என்னும் ஆறு சம்ஹிதைகளை யுடைய ஐம்பது கண்டங்களாக வகுக்கப்பட்டுள்ளது. அவற்றுள் முதலாவதான ஸனத்குமார சம்ஹிதை ஐம்பத்தையாயிரம் சுலோகங்களை உடையது. பிராமண சிரெஷ்டர்களே, இரண்டாவது சம்ஹிதை ஆறுயிரம் சுலோகங்களை உடையது. மூன்றுவதாகிய பிரம்ம சம்ஹிதை மூவாயிரம் சுலோகங்களையும், நான்காவதாகிய விஷ்ணு சம்ஹிதை ஐயாயிரம் சுலோகங்களையும் உடையனவாய் உள்ளன. ஐந்தாவதாகக் கூறப்படும் சங்கர சம்ஹிதையோ, முப்பதினுயிரம் சுலோகங்கள் அடங்கிய பன்னிரண்டு கண்டங்களை உடையதாய் விளங்குகிறது. ஆறுவதாகிய ஸௌரசம்ஹிதை ஆயிரம் சுலோகங்களுடன் கூடியுள்ளதா யிருக்கிறது. ஓ ரிஷி சிரேஷ்டர்களே! ஸ்காந்தமஹா புராணமானது மொத்தத்தில் ஓரிலக்ஷம் கிரந்தங்கள் உடையதாய் ஐம்பது கண்டங்களாக வகுக்கப்பட்டுள்ளது. ஆகவே, அந்தப் பெரிய மஹா புராணத்தையே உங்களுக்கு நான் சொல்லப் போகிறேன். மேற் கூறப்பட்ட ஆறு சம்ஹிதைகள் உள்ளும் சங்கர சம்ஹிதையே முற்றும் வேதத்தால் ஆதரிக்கப்பட்டதாய் இருக்கிறது. அது முப்பதினுயிரம் கிரந்தமாக விஸ்தரிக்கப்பட் டுள்ளது. அதன் கண் சிவரகசிய கண்டம் என்னும் பாகத்தை நான் இப்போது உங்களுக்கு விளங்க எடுத்துச் சொல்கிறேன். அந்தச் சிவரகசிய கண்டம் பதின் மூவாயிரம் கிரந்தங்களைக் கொண்டது.

முனி சிரேஷ்டர்களே, அது, சம்பவகாண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தக்ஷகாண்டம், உபதேசகாண்டம், என்னும் ஏழு காண்டங்களாக வகுக்கப்பட்டுள்ளது. பிராமண சிரேஷ்டர்களே! அந்தக் கண்டத்திற்றுன், ஸ்ரீ சுப்பிரமணியப் பெருமானுருடைய பராக்ரமங்களும், சரித்திரங்களும் ஸ்ரீ வேதவியாசரால் விசேஷமாக வர்ணிக்கப்பட்டுள்ளன. ஆகவே, தேவர்களின் துயரையும் மோகத்தையும் ஒழிப்பதும், வீரத் தன்மையை விளங்க உரைப்பதும், செவிகளுக்குத் தேவாமிர்தத்தைப் போன்றதுமாகிய இந்தத் திவ்ய சரித்திரத்தை எவர் தினந்தோறும் பக்தியுடன் பாராயணம் செய்து, சிரத்தையுடன் ஆதரிக்கின்றனரோ, அவர் பூமியில் புத்திர களத்திர மித்ருபந்து வர்க்கங்களுடன் தன தானிய போக பாக்கியங்களை வெகுகாலம் அனுபவித்து நல்வாழ்வு வாழ்வர் என்பதில் ஒரு சிறிதும் ஐயமே இல்லை.

## 3. பார்வதி தேவியார் உற்பத்தி.

ஆதியில், வெள்ளியங்கிரியின் சிகரத்தில், உலகங்களுக் கெல்லாம் சுகத்தை யளிப்பவராய், தேவர்களுக் கெல்லாம் தேவருமாய்விளங்கிய ஸ்ரீ சங்

கரர் சந்நிதியில் தக்ஷப் பிரஜாபதியின் அருமைப் புதல்வியாகிய உமையம்மையார் நின்று, "தேவாதிதேவரே, யான் தேவரீரது வார்த்தைக்கு மாறாக எனது தந்தை வீட்டுக்குச் சென்றதில், சிறிதும் சகித்தற் கொண்ணாத பேரவமானத்தை அடைந்தேன். என் தந்தையும், தான் செய்த யாகத்துடன் வீரபத்திரக் கடவுளால் தண்டிக்கப்பட்டு இறந்தனன். அங்ஙன மிருந்தும் எல்லா ஜனங்களும் என்னை எப்போதும்,எவரும் அருவருக்கும் தாக்ஷாயணி (தக்ஷன் மகள்) என்னும் பெயரால் வியவகரிக்கின்றனர். மூன்றுலகங்களுக்கும் தலைவராய் விளங்கும் பரமேஸ்வரா! அந்த அருவருப்புடைய பெயரை அடியாள் சிறிதும் சகிக்க மனம்வரவில்லை. ஆதலால் அடியாள் அப்பெயரொழிய, வேறு எவ்விடத்தேனும் உற்பத்தி யாகும்படி திருவரம் பாலித்தருளல் வேண்டும்." என்று பிரார்த்தனை செய்தனர். அதனை மஹேஸ்வரர் புன் சிரிப்புடன் கேட்டு, "எவரும் பூஜிக்கும் தன்மைவாய்ந்த, தக்ஷன்மகளே! உன் மனதில் அத்தகைய உறுதியான விருப்பம் இருக்குமாயின், நான் சொல்வதுபோற் செய்யக்கடவாய். ஹிமவான் உன்னைப் பெண்ணாக அடைய ஆசையுற்றுக் கொடிய தவத்தைச் செய்கிறான். ஆதலால், நீ அந்த ஹிமராஜனைத் தந்தையாகக்கொள். அவனுடைய மனைவியாகிய மேனகையும், பிதுர்க்களின் ருணத்தைத் தீர்ப்பான் வேண்டி உனது இரண்டு பாதங்களையும் சதா சிந்தித்துத் தவம் செய்கிறாள். ஆகவே, நீ அந்தத் தம்பதிகளுக்கு மகளாகி அவர்கள் இருவரையுக் கிருதார்த்தர்களாகச் செய்வாய்." என்று திருவாய் மலர்ந்தருளினர்.

கைலையில் லோகமாதாவாகிய உமையம்மையார், வேற்றிடத்தில் உற்பவிக்க எண்ணங்கொண்டிருக்கையில், இமராஜன், தவவேடங்கொண்டு, மலையின் சிகரத்தில் கொடிகள் சுற்றியிருப்பதுபோல் தலையில் சடை வளரப்பெற்றவனாய், மெல்லிய முஞ்சிப்புற் கயிற்றை அரைஞாணெனக் கொண்டு, மான் தோலை உடையாகப் பூண்டு, தவத்திற்குரிய ஆசிரமத்திற் பிறழாதவனாய் விபூதி ருத்திராக்கம் மேனி முழுவதும் விளங்க, மன அடக்கம், இந்திரிய நிக்ரஹம், கோபத்தை ஜயித்தலாகிய விரதத்தை மேற்கொண்டு, எல்லா வுலகங்களுக்கும் ஈஸ்வரியாக விளங்கும் பரதேவதையையே மனதில் தியானித்தவனாக இருந்தான். அவன் பழம், சருகு, ஜலம், காற்று ஆகியவற்றையே உணவெனக் கொண்டு, கிரீஷ்ம காலத்தில் பஞ்சாக்னி மத்தியில் சூர்யனை நோக்கி நின்றும், மழைக்காலத்தில் ஆடையற்றவனாகவும்,பனிக்காலத்தில் இமவானாகையால், பனி மூட்டத்தின் மத்தியிலிருந்தும், சிசிர (குளிர்) காலத்தில் தண்ணீரின் மத்தியில் நின்றும், வஸந்த காலத்தில் சூர்யனுக்கு எதிர் முகமாக இருந்தும், மற்றெவற்றையும் கவனியாதவனாய், வேதபாகமாக விளங்கும் தேவி ஸூக்தத்தை அனவரதம் பாராயணம் செய்து கொண்டிருத்தலுமாகிய கொடிய தவத்தினைச் செய்து வந்தனன். அவன் மனைவியாகிய மேனகையும், தன் புருஷன் அருகில் நாள்தோறும் நிழல்போல் நின்று, அவனுக்கு வேண்டிய பணிவிடைகளை அவ்வப்போது தவறாமற் செய்து கொண்டு, வெகு காலம் வரையில் மனக்களிப்புடன் தானும் தவம் செய்திருந்தாள். இங்ஙனம் இவர்கள் இருவரும் வெகு

காலம் தவத்தை அனுஷ்டித்து வந்த பின்னர், பிராமணர்களே, உமையம்மையார், அவர்களுக்கு அனுக்ரஹம் செய்த விதத்தைச் சொல்கிறேன்; கேளுங்கள்.

பிராமணோத்தமர்களே! கிரிராஜனாகிய இமவான் ஒருநாள் ஸ்நானம்செய்யு நிமித்தம் மானதசரஸ் என்னும் தெள்ளிய நீரோடைக்குச் சென்றான். அவ்விடத்தில், உமையம்மையார் ஈசன் ஆஞ்ஞையின்படியும் தமது இச்சையின்படியும் ஒரு நெய்தற் புஷ்பத்தின்மீது சிறு குழந்தையாக விளங்கி யிருந்தனர். இமவான், ஸ்ரீ பரமேஸ்வரரது இடது பாகத்துக்குரியவரும், உலக காரணப்பொருளும், சதுர்ப்புஜம், திரிநேத்ரம், சந்திர பிம்பம்போன்ற முகமுடையவரும் அர்த்த சந்திரனைச் சிரசின் கண் தரித்துள்ளவரும் சிறந்த ஜடையலங்காரமும், சீர்மைபுற்ற புன்நகையடன்கூடியுள்ளவருமானஉமாதேவியாராகிய குழந்தையைத் தரித்திரன் புதையல் கண்டதுபோல் ஆனந்த பரவசத்துடன் கண்டு, உடனே சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, அதனை அன்போடு தனது அரண்மனைக்கு எடுத்துச் சென்றனன். அரண்மனையில் அவனது மனைவியாகிய மேனகை, தவவனத்தினின்றும் திரும்பி வரும் தனது கணவருக்கு அன்புடன் அர்க்கிய பாத்திய மெடுத்துக்கொண்டு, அவனை ஆதரவுடன் எதிர் கொண்டனள். அப்போது அவள், மூன்றுலகையும் ஈன்ற ஜகன்மாதாவே குழந்தையாகத் தனது கணவன் கையில் இருப்பது கண்டு தண்டனிட்டு, அந்தக் குழந்தையை அன்புடன் தனது கரத்திற்பெற்றுக் களிப்போடு மடிமேல் வைத்துக்கொண்டனள். உடனே அவளது இரண்டு ஸ்தனங்களினின்றும் பால் அதிகமாகச் சுரப்பெடுத்தது. அக்கால் பரதேவதை, மேனகை முகத்தை உற்று நோக்கிய வண்ணமாக ஸ்தன்னிய பானம் செய்தனள். அது கண்டு ஆங்கிருந்த பெண்கள் அனைவரும் சந்தோஷ சாகரத்தில் ஆழ்ந்தனர். ககனமார்க்கமாய் உலாவி வரும் சித்த சாரணர் மலர் மழை பொழிந்தனர். வானதுந்துபி முதலிய வாத்தியங்களின் கோஷம் திக்கெட்டையும் செவிடுபடச் செய்தன. அப்போது முனிவர்கள் எல்லோரும் தத்தமது கரத்திற்பற்றியிருந்த தண்டங்களை மேலே எறிந்தும், எறிந்தவற்றைப்பிடித்தும் நடனம் செய்தனர். யோகியருடைய உள்ளம் ஆனந்தபரவசமெய்தியதும் இந்திரன், அக்னி, யமன், நிருருதி, வருணன், வாயு,குபேரன், ஈசான்யன், பிரம்மா, விஷ்ணு முதலிய திக்பாலர்கள் தத்தமது பெண்டிருடனும் கணங்களுடனும், அம்மஹோற்சவத்தைச் சிறப்பாகக்கொண்டாடினர். மேனகை, ஹிமராஜன் இருவரும் தாங்கள் கிருதார்த்தர்களாய்விட்டதாகச் சந்தோஷங் கொண்டாடிப் பிறப்பற்றவளாய் இருந்தும் பிறந்தவள் போல் தோற்றும் தங்கள் பெண்ணை வாயார வாழ்த்தி அஞ்சலியஸ்தராய் மிகுந்த பக்தி வினயத்துடன் "பிரபஞ்ச சிருஷ்டிக்கு முன்னர் ஸ்ரீ பரமேஸ்வரருடைய வியஷ்டிப் பிரஞ்ஞைக்குள் பிரவேசித்துலாவிய உனக்கு வந்தனம் செய்கிறோம். ஸ்ரீ மஹாதேவருடைய சரீரமாகவும், உலகங்களுக்கு முக்ய தேவதா வடிவமாகவும், இச்சை ஞானம், கிரியை மனம் என்னும் இவற்றின் வடிவமாகவும் விளங்கும் பராசக்தியாகிய உனக்கு வந்தனம் செய்கிறோம். உனது சர்வமங்களத் தன்மைகொண்டு, ஸ்ரீபரமேஸ்வரனை மிக்க மங்கள

மூர்த்தியாகச் செய்யும் உனக்கு வந்தனம் செய்கிறோம். பிறப்பற்றவளும், அடியவர்கட்குச் சர்வ மங்களத்தையும் அருள் செய்பவளுமான உனக்கு வந்தனம் செய்கிறோம். ஸ்ரீ லக்ஷ்மி ஔபலை, காமேஸ்வரி, அம்பிகை, விஜயை, ஜயை, ஷஷ்டி என்னும் திருநாமங்களால் வேதங்களில் துதிக்கப் படுபவளும் சர்வ ஜகத் பூஜிதையுமாகிய உனது உபய திருவடிகளில் எவர் அடைக்கலமாக அடைகின்றனரோ, அவரோ இந்த உலகில் மதிக்கத் தக்கவர்களும், தனிகர்களும் புகழுடையோருமாய் விளங்குகின்றனர். உன்னைச் சரணடைந்த பிராணிகள் பிரமனால் குறிக்கப்பட்ட அசுபமான தலையெழுத்தையும் மாற்றிக் கொள்ளும் ஆற்றல் உடயவராவர். ஆகவே, அத்தகைய அருளும் ஆற்றலும் நிறைந்த நினது உபய பாதாரவிந்தங்களில் நாங்கள் சரணமடைகிறோம். எந்தத் திருவடிகளை மனதில் தியானிப்பதால், மானிடர் எக்காலத்தும் துக்கத்தினின்றும் நீங்கியவராய் விளங்குகின்றனரோ, அந்தத் திருவடிகளில் சரணமடைகின்றோம்.'' என்று பலவிதமாகத் துதி செய்தனர்.

பெற்றோர் செய்த ஸ்தோந்திரங்களைப் பரதேவதை கேட்டு, சந்தோஷசித்தத்துடன், "நான் சொல்லும்வார்த்தையைக் கேளுங்கள். நீங்கள் இருவரும் எனக்குத் தாய்தந்தையர்களாய்விட்டீர். நானோ, ஸ்ரீபரமேஸ்வரருடைய இடதுமடியில்இருப்பவளும் ஆதியற்ற நித்தியப் பொருளாய்ப் பிரம்மாவினால் போற்றப் படுவளுமாய்,மஹேஸ்வரருடைய \ கட்டளையின்படிநடப்பவளுமாகிய பராசக்தியாய் இருக்கிறேன். அத்தகைய யான் தக்ஷனுக்கு மகளாய் ஜனித்ததால், அந்தப்பரமேஸ்வரரினின்றும் இப்போது பிரிபட்டவள்போல் இருக்கிறேன். அந்தத்தக்ஷனோ, சிவாபராதம்செய்த பாதகனாய் விளங்கியதால்,அவன் மஹேஸ்வரரால் கொல்லப்பட்டான். நானும், அவனுக்கு மகளாய் ஜனித்த உடலை உதறவிட்டு, நீங்கள், தவம், தியானம், சமாதிகளைச் செய்து என்னைப் பிரார்த்தனை செய்ததின்பேரில், அந்தப்பிரார்த்தனைக் கிரங்கி, உங்களைப் பெற்றோராகக்கொண்டேன்.'' என்று திருவாய் மலர்ந்தனள். பிறகு அந்தப் பரதேவதை, தன் பெற்றோர்களுக்குத் தன்மீதுள்ள நிஜ உணர்வை உடனே மாற்றி இரண்டு புயமும், இரண்டு கால்களும், நெய்தல் மலரின் காந்திபோன்ற காந்தியும், கருநெய்தலை நிகர்த்த கேசங்களும் உடைய சாதாரண பெண்ணாக உருமாறினள். அக்கால், மேனையும், ஹிமவானும் அந்தக் குழந்தையை உண்மையில் தங்கள் பெண் என்றே எண்ணினர். உமையம்மையாரின் மாயையின் வயப்பட்ட அவர்கள் நிஜ உணர்வற்றவராய், அந்தக் குழந்தையின்மீது காதல் கொண்டவராகி, மந்திரி பிரதானிகளுடனும், வேதியர்களுடனும் அதற்கு ஜாத கருமம் செய்து முடித்தனர். அந்த உற்சவத்தை அந்தப் பட்டணத்தின் எல்லாப் பக்கங்களில் உள்ளவர்களும் வெகு சந்தோஷத்துடனும் ஆரவாரத்துடனும் மேன்மையாகச் செய்தனர். இமவான், அந்தத் தெய்வக் குழந்தைக்குப் பன்னிரண்டாவது நாளில் நாமகரணம் செய்து, ஆறுவதுமாதத்தில் அன்னபிராசன மஹோற்சவம் கொண்டாடி, ஏழாவது மாதத்தில் குழந்தையை ஆலய தரிசனத்துக்குக் கொண்டுபோதலாகிய நிஷ்கிரமோற்சவத்தைச் சிறப்புடன் செய்தனன். இவ்வாறாக ஸ்ரீ

உமையம்மையின் திருமேனியோ, சாணை பிடிக்கப்பெற்ற ரத்னக் கற்கள் போல் மிக்க சௌந்தர்ய முடையதாய் விளங்கி, நாளுக்கு நாள் சந்திரகலை போல் அந்தச்சௌந்தர்யம் விர்த்தியாய்க்கொண்டே வந்தது. அதனைக்கண்ட பெற்றோர்களுக்குச் சந்தோஷத்தினால் உள்ளம் பூரித்ததுபோல், அவர்கள் உடலும் பூரித்தது.

உமையம்மையார் பர்வத ராஜனுக்கு மகளாய்ப் பிறந்ததால் பார்வதி என்னும் திவ்ய திருநாமத்தைப் பெற்றனர். பார்வதி அம்மையார் ஐந்து வயதானதும் தவத்தில் விருப்பங்கொண்டவராய்த் தமது இச்சையைப் பெற்றோர்க்கு அறிவித்தனர். அப்போது, அம்மையாரின் தாயாகிய மேனகை," "வாராய் அம்மா! நீ இந்தச் சிறுவயதில் தவம் செய்தல் கூடாது." என்று தடைசெய்தனள். அங்ஙனம் தாயால் தடை செய்யப்பட்ட காரணத்தால், அம்மையாருக்குப் பிரணவ வடிவமான "உமை" என்னும் திவ்ய திருநாமம் வழங்கலாயது. பர்வதராஜனோ, குழந்தையின் எண்ணத்தை ஊகத்தால் உணர்ந்து, அதற்குத் தவத்திற்கான பொருள்களைக் கொடுத்து, பல தோழிமாருடன் குழந்தையைத் தவம் செய்யுமாறு சந்தோஷமாய் அனுப்பினன். கௌரியம்மையார், இமயகிரியின் சிகரத்திற் சென்று தோழிமாருடன் மிக்க சந்தோஷத்துடன் தாம் குழவிப் பருவத்தராய் இருந்தும் மிகவும் மேலான கொடிய தவத்தைச் செய்தனர்.

உமையம்மையார் இமயகிரியில் தவம் செய்திருந்த காலையில், கைலையில் பரமேஸ்வரர் சனகர் முதலான நால்வருக்கும் பதிபசுபாசம் என்னும் திரிபதார்த்தங்களின் தத்துவங்களை விளக்குவதாகிய வேதாந்த சாஸ்திரங்களின் சித்தாந்தங்களை உபதேசவாயிலாக நிரூபணம் செய்துகொண் டிருந்தனர். சனகாதிகளாகிய முனிவர்கள் ஸ்ரீ பிரம்மதேவனுடைய மானச புத்திரர்களாவர். அவர்களைப்பிரம்மதேவன்சிருஷ்டித்தொழில் செய்யுமாறுஎச்சரித்த போது அவர்கள், " பிரம்மதேவரே! தாங்கள் ஜகத்தை சிருஷ்டிசெய்யுமாறு எங்களை எச்சரிக்கின்றீர். அதனை நாங்கள் ஒரு நல்லபுத்தி எனக் கொள்ள மாட்டோம். மோக்ஷ காமிகளாகிய எங்களுக்கு ஸ்ரீமஹேசனுடைய பத்தியன்றோ ஏற்றவழியாக விளங்குவது." என்று கூறி, அவர்கள் தவத்தை நாடிச் சென்றனர். அங்ஙனம் அவர்கள் செல்லும்போது, ஸ்ரீ பரமேஸ்வரர் எதிர்தோன்றி, ஓர் வடவால மரத்தின் அடிக்கண், தக்ஷிணாமூர்த்தி திருக்கோலத்துடன் வீற்றிருந்து, வேதார்த்தங்களை அவர்களுக்கு உபதேசித்தருளினர். அதனால் அவர்கள் வேதங்களையும் அவற்றின் பல ரகஸ்யங்களையும் பரமசிவனாரிடத்து முறைப்படி அப்பியசித்தும், அம் மஹேஸனுடைய மாயையினால், பொருட்பயிற்சி பெறாதவர்களாய்ப் பலகாலம் வருந்திக் கடைசியில் அவர்கள் ஒன்றுசேர்ந்து ஸ்ரீ பரமேஸ்வரரிடம் சென்று, தங்கள் ஐயத்தைப் போக்கிக்கொள்ள எண்ணி, சொக்கவெள்ளிப் பாறைகள் பலவற்றோடுகூடிய அடிவாரத்தை உடையதாகிய வெள்ளியங்கிரியின் சிகரத்தை எய்தினர். அவ்விடத்தில், நினைத்தமாத்திரத்தில் மோக்ஷத்தைத் தரவல்லதும்

அதி மனோரம்மியம் உள்ளதுமான போகபுரத்தின் சுபமான மாளிகையில் ஸ்ரீ நந்திகேஸ்வரருடைய அநுமதிபெற்று உட்சென்று, அளவற்ற ஆனந்தத்துடன் விளங்கும் ஸ்ரீ பரமேஸ்வரரை நமஸ்கரித்து, "சர்வேஸ்வரா, எல்லா உலகங்களையும் ஈன்று அளித்துப்பின் துடைத்து, மீட்டும் அவற்றை லீலா விநோதமாக அநுக்கிரகித்து மறைத்துவிடுகின்றீர். ஹே ! தயாநிதியே ; தங்கள் பெருமையை எவர்தான் அறிவர்? தாழ்ந்தபிராணியும், நினதுதிருவடிக்கமலங்களில் படிந்திருக்கும் தூளிகளுள் ஒன்று, அடைக்கலம் என்று அடைந்த அளவிலேயே அது, கடத்தற்கருமையான சம்சார சாகரத்தையும் கடக்கச்செய்து, எமனையும் வெற்றிகொள்கிறது. தேவர்கள் முதலானோரும் தேவரீரைச் சரணமடைந்து போற்றுவதால், அவர்கள்செய்யும் பிரமஹத்தி முதலான பாவங்கள் அனைத்தும் அவர்களைத் தொட அஞ்சி ஓடுகின்றன. ஹே உமைக்கு நாயகராகவிளங்கும் பரமேஸ்வரரே, அத்தியயனம் செய்த பிராமணர்களாகிய யாங்கள் பிராமணர்களுக்கெல்லாம் பிராமணராகியும் பதியாகியும் விளங்கும் தேவரீரைச் சரணமடைகிறோம். தாமே சம்சாரமென்னும் பந்தத்தினின்றும் விடுவிக்கும் பிரபுவாய் விளங்குகின்றீர். தாமே பிராணிகளுக்கெல்லாம் தலைவராய் இருக்கின்றீர். ஈசானர் என்னும் திவ்ய திருநாமத்துடன் பிறப்பற்றவராய் விளங்குபவர் தாங்கள் ஒருவரே. நாங்கள் தேவரீருக்குள்ளாகிய பசுக்களாக விளங்குகிறோம் என்பது எங்கள் ஆராய்ச்சியில் நன்றாய்த்தெரிகிறது." என்று பலவாறு துதிசெய்தனர். மீண்டும் அவர்கள், "தேவரீர் முன் ஒருகாலத்தில் வடவாலவிருக்ஷத்தில் அடிக்கண்ணிருந்து, வேதசிவாகமங்களை எங்களுக்கு உபதேசம்செய்தருளினீர். என்றாலும், பூரண அருளுடன் தங்களால் உபதேசிக்கப்பட்டதும்,வேதங்களின் முடிவாய், அநுபவத்தில் தாங்கள் மாத்திரம் அறிந்திருப்பதுமான வேதார்த்தங்கள் பலவாய் விரிந்துகிடப்பதால், அவை எங்களுக்கு நன்றாய் விளங்கவில்லை. ஹே! சகல ஜகங்களையும் ரக்ஷிக்கும் மஹேஸ்வரரே, தேவரீர் எங்கள் மீதுகிருபை செய்து அவ்வேதார்த்தங்களைச் சுருக்கமாய்ச் சொல்லி யருளல் வேண்டும்." என்று வேண்டிக்கொண்டனர். இங்ஙனம் சனகாதிகள் வேண்டிக்கொள்ள, சகலஜகங்களுக்கும் கர்த்தாவாகவிளங்கும் பிரபுவானவர்,மிக்ககருணைகொண்டவராய், அவர்களுக்கு வேதார்த்தங்களை நன்றாய் விளக்க திருவுளங் கொண்டு கோடிசூர்ய கிரஹணங்களின் தேஜசுடன், குருக்களுக்கெல்லாம் பரமகுருவாய் விளங்கி, நந்திகேஸ்வரரை நோக்கி ஓர் வசனம் கூறலுற்றார்:—

## 4. தக்ஷிணாமூர்த்தி கோலமும், சனகாதியர்க் குபதேசமும்.

முனிவர்களே, கேளுங்கள். எல்லாவுலகங்களையும் படைத்தவரும், எல்லா ஜனங்களுக்கும்தலைவரும், சூர்யனுடைய கண்ணைக்குத்தியவரும்,எல்லாக்குணங்களும் ஒருங்கமையப் பெற்றவருமாகிய சர்வேசன், ஸ்ரீ சிலாதமஹா ரிஷியின் புதல்வராம் நந்திகேஸ்வரரை நோக்கி," சிலாதகுமர ! யாம் இந்தச்சனகாதியர்கட்கு அதிரகசியமானதும்,கேட்ட அளவில் சுகத்தைஅளிப்பதுமாகிய மேலான ஞானத்தை உபதேசம் செய்யப்போகிறோம். அதுவரையில், நீ எமது கட்டளை

யைமேற்கொண்டு மன்மதன் தவிர மற்றையோரை உள்ளேவிடாமல் வாயிலைக் காக்கக் கடவாய்.'' என்று ஆஞ்ஞைசெய்து, முனிவரை அழைத்துக்கொண்டு, உட்சென்றனர்.

சந்திரஜடாதரரும், கருணாமூர்த்தியுமாகிய மஹேஸன், தமது மாளிகையினுட்சென்றதும், உடனே ஆங்கு விளக்கம்கொண்டு விளங்கும் அரியாசனத்தில் வீற்றிருந்தனர். கிருபாநிதியாம் ஜகதீசன் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தித்திருக்கோலத்துடன் அமர்ந்து, கிரியை, யோகம், ஞானம் என்னுமிவற்றின் முதன் மூன்று பாதங்களிலும் மிக்க தேர்ச்சி யுற்று விளங்கும் சனகாதியர்கட்குச் சின்முத்திரையால் ஞானோதய முண்டாகச்செய்தருளினர். அந்த ஞான முத்திரையை அவர்கள் தரிசித்த உடன், அவர்கள் ஐயம் முற்றும் அகன்றன. மேலும் அம் முனிவர்கள், சந்திரஜடாதரரும், புலித்தோல் விளங்கும் சிங்காதனத்தில் வீற்றிருக்கும் பிரபுவும்அஞ்ஞானமென்னும்அப்ஸமாரத்தைத்தண்டாமரையன்ன வலது திருவடியால் மிதித்துள்ளவரும், அந்த வலதுதிருக்காலின்மேல் மடக்கி வைக்கப்பட்டுவிளங்கும் இடதுதிருக்காலை உடையவரும், முதுகுடன் கால்களை வளைத்துக்கட்டுதலாகிய யோகபட்டத்தினால் மனோரம்யமாக விளங்குபவரும், பிரம்மா, இந்திரன், விஷ்ணு, யோகிகள், முதலான சகல தேவர்கட்கு எட்டாதவரும், ஸ்ரீமங்கள மூர்த்தியும், சுத்தஸ்படிகத்தின் நிறம்போன்ற நிறமுடையவரும்,மூன்று திருநேத்திரங்களைஉடையவரும், தமது தேஜசான சூர்யன், சந்திரன், அக்னி முதலான எல்லா உலகங்களையும் விளங்கச் செய்பவருமாய் விளங்கும் ஸ்ரீ பரமேஸ்வரனை அவர்கள் கண்ணால் தரிசித்த அளவில், தாங்கள் கருதிய பயன்கள் அனைத்தையும் அடையப் பெற்றவராயினர்.

அந்த இடைக்காலத்தில், இந்திரனாதியான திக்பாலர்களுடன் கூடியதேவர்கள் தமது குலகுருவாகிய ஸ்ரீ பிரகஸ்பதியுடன் சேர்ந்து, சூரபதுமன் என்னும் அசுரனுக்குப் பயந்து நடுங்கியவராய்க் கைலையங்கிரியை அடைந்தனர். உலகத்தின்கண் உள்ளவரோ, ஸ்ரீபரதேவதையாக விளங்கும் உமையம்மையார் தவம் செய்துகொண்டும், அவரது மணவாளராகிய பரமேஸ்வரர் சின் முத்திரைதாராக விளங்கியும் இருந்ததால், அந்தக்காலம் வரையில் தங்கள் மனம் சிறிதும் காமவிகாரத்தில் கட்டுப்படாத வண்ணம் விளங்கினர். அதனால் தேவர்கள் அனைவரும் பெரிதும் வியப்படைந்தனர். தேவர்கள் தலைவனாய் விளங்கும் இந்திரனுடைய மனதும் சிறிதும் இந்திராணியின் மீது இச்சைகொள்ளவில்லை. பிரம்மன் தனது மனைவியாகிய சரஸ்வதி தேவியினிடத்தும், விஷ்ணு லக்ஷ்மியினிடத்தும் மோகங் கொள்ளவதில்லை. இங்ஙனமே எல்லா உலகங்களிலுமுள்ள ஸ்தாவர ஜங்கமப் பொருள்கள் அனைத்தும், மனைவி புருஷர்கட்குரிய காமலீலையற்றனவாயின. அதனால் உலகின்கண் பிரஜாவிருத்தி தடைப்பட்டது. அரக்கர்களின் துன்பம் அதிகமாயது. அத்துன்பம் ஆற்றாதவராய அத்தேவர்கள் ஸ்ரீ பரமேஸ்வரரிடம் சென்று தமது துன்பத்தை நிவர்த்தித்துக் கொள்ளலாம் என்ற நோக்கத்துடன் கைலைக்குச் சென்றும், அங்கு ஸ்ரீ சாம்பவ மூர்த்தி ஞான நிஷ்டாபராய் இருப்பதால்,அவரது சன்னிதானம் செல்லக்கூடாதவராயினர். அப்போது, தேவேந்திரன் அரக்கர்துயரால் அவதியடைந்து கொண்டிருக்

கும் எல்லா உலகும் சுபமடைய வேண்டும் என்னும் நோக்கமுடையவனாய் அவ் விடத்தில் கொடியதான தவத்தைச் செய்தனன். மன்மதனும் தனது அதிகாரம் தன்னைவிட்டு நீங்கிய காரணத்தால், தனது மனைவியாகிய ரதியிடத்துச் சிறிதும் ஆசையற்றவனாய் நூறு வருடம் வரைசிறிதும் சலனமின்றித் தவவேடம் பூண்டு, பார்வதி பங்காளனை மனதில் தியானம் செய்து கொண்டிருந்தனன். அக்கால், அளத்தற்கரிய மகிமை வாய்ந்த பிரபுவாய் விளங்கும் ஸ்ரீ பரமேஸ் வரர், பிரஹ்ம புத்திரர்களாம் சனகாதியர்கட்கு மிக்க கிருபையுடன் ஐயம் அனைத்தையும் அகற்றியருளினர். தேவர்கள் அனைவரும் கொடிய தவத் தைச் செய்தனர். பிறகு அவர்கள் அனைவரும் தங்கள் தவத்தால் சர்வேஸ் வரரது சன்னிதானம் கிடைக்கப்பெறாதது கண்டு, சாலங்காயனர் என்னும் சிலாத முனிவரின் புதல்வராம் ஸ்ரீ நந்திதேவரைப் பணிந்து, தங்கள் வரவின் நோக்கத்தை அவருக்குத் தெரிவித்தனர். அப்போது நந்திதேவர், "தேவர்க ளே, நீங்கள் சர்வேசனைத் தரிசிக்க இது சமயம் அல்ல. நீங்கள் இங்கிருத்த லாகாது" என்று திருவாய்மலர்ந்தருளினர்.

அந்த எச்சரிக்கையைக் கேட்ட தேவர்கள், நான்முகனைக்காண விருப்ப முற்றவராய்த் தேவர்களின் ஆலயங்களுட் சிறந்து மிக்கமேன்மையுடன் விளங் கும் அவரது மாளிகை நோக்கிச் சென்றனர். பிரஹ்ம தேவனுடைய மனோ வதி என்னும் பட்டணம் மிக்க மங்களகரமுள்ளது. பலவிதமான உத்யான வனங்கள் நிறையப்பெற்றது; அழகிய கிணறுகளும் அலங்காரமான மலை அருவிகளும் அமையப்பெற்றது. அவ்விடத்து, ஆறு ருதுக்களிலும் அவ் வப்போது மலரும்மலர்கள், எப்போதும் அன்றலர்ந்தனவாய் விளங்கா நிற் கும். மரங்கள் அடர்ந்திருக்கும் சோலைகள், வெயில் பூமியில் படாதபடிக் காக்கும் காட்சி கண்டவர்கண்களைக் கவரச்செய்யும். விளா, அரசு, கூந்தற்பனை, பச்சிலை, நெல்லி, ஆசு, பிதகம், கட்டிமா, ஆல், அத்தி, புளிமா, நாவல், இரளி வெள்வேல், அழிஞ்சில், புளி, எலிமிச்சை, எருக்கு, வேம்பு, தும்பை, தாழை, இலந்தை, ஏழிலைம்பாலை, அசோகு, பெருங்குமிழ், பாக்கு, பலா, வில்வம், சந்தனம், பாதிரி, கல்லொளி, சேனை, அகில், உன்மதம் முதலான பல விருக்ஷ ங்கள், அந்த அழகிய நகரை அலங்கரித்து நின்றன. அப்பட்டணத்தில், மிக வும் அதிசயிக்கத்தக்க மாளிகைகள் பல உண்டு. அந்த மாளிகைகள் ரத் தனக் கற்களால் இழைக்கப் பெற்றவையாதலால், அவை அக்கற்களின் பிர காசத்தால் மிகவும் ஜ்வலித்து விளங்கின. அவ்விடத்து, ஜீவர்களை நற்கதியி னின்றும் கீழ்வீழ்த்தும், காமம், குரோதம், லோபம், மோகம், மதம் மாச் சர்யம் என்னும் பேய்கள் இடம் பெறுதல் இல்லை. அத்தகைய இடத்தில் எல்லா நற்குணங்களும் அமையப்பெற்ற பிரம்மதேவர், தேவகணங்கள் துதி செய்ய, வேதாக்ஷரங்களாம் ஆபரணத்துடன் மனோரம்யமாக விளங்கும் ஸ்ரீ சரஸ்வதி தேவியுடன் சிம்மாசனத்தில் வீற்றிருந்தனர். அந்தச் சகலபிதாமக ராகிய பிரம்மதேவரை, இந்திரன் முதலான தேவர்கள் மிகுந்த பக்தியுடன் வணங்கி, அஞ்சலியஸ்தராய் அவர் பக்கலில் நின்று நான்குதிக்குகளிலும் முகங்களை உடையவரும், தாமரைமலரிற் பிறந்தவருமாகிய அந்த நான்முக

ரைத் துதிசெய்தனர். பிரஹஸ்பதி முதலானோர், ஸ்ரீ சாரதாம்பாளின் கொழுநராய் விளங்கும் தேவரைப் பணிந்து "தேவாதி தேவனே! தாமே எங்கட்குத் தந்தை, தாமே தாய், குரு, பிதாமகன், சகோதரன், நண்பன், செல்வம் ஆகிய எல்லாம். தாமேஎங்களுக்குப் பிரதானமான தெய்வம். எல்லா ஜீவர்களின் சேர்க்கையும், பிரிவும் தாமாகவே விளங்குகிறீர். பிராணிகளுக் கெல்லாம் தலைவரும் தேவரீரே. ஆதலால் தத்துவப் பொருளும் தத்துவப் பொருளை அறிந்தவரும் தாமே. தாம் தத்துவங்கட்கு எட்டாதவராயும் மாயைக்கு அதீதப்பட்ட பரப்பிரஹ்ம சொரூபராகவும் விளங்குகிறீர். எல்லாப் பொருள்களையும் தரிக்கும் பிரம்மதேவரே! தேவரீரே சிருஷ்டிசெய்பவர், இரக்ஷிப்பவர், நாசம் செய்பவர். சிருஷ்டியாரம்பத்தில், அகர உகர மகரமென்னும் மூன்று அக்ஷரங்களின் வடிவானதும், ரிக், யஜுர், ஸாமம் என்னும் மூன்று வேதங்களுடன் கூடியதுமான ஓம் என்னும் பிரணவமும்; கோபம், கர்ம வியாபாரம், ஸ்வர்க்கம் என்னும் இவையும் தேவரீரது திருமுகத்தினின்று உண்டாயின வையாகும். சிருஷ்டி, ஸ்திதி, சங்காரமென்னும் முத்தொழில்களுக்கும் முதல்வராய் விளங்கும் மும்மூர்த்திகளின் ஸ்வரூபராகிய தேவரீருக்கு வந்தனம் செய்கிறோம். சர்வேஸ்வரா! சராசரமாகிய உலகைத்தாமே பிரம்மதேவராக இருந்து சிருஷ்டி செய்கிறீர்; விஷ்ணுவாக விளங்கி ரக்ஷிக்கிறீர்; ருத்திர வடிவங்கொண்டு நாசம் செய்கிறீர். ஈஸ்வரா! உலகங்களுக்குத் தலைவரும், உலககாரணரும், உலக வடிவாய் விளங்குபவரும், எல்லாவற்றிற்கும் மூலகாரணராய் இருப்பவருமாகிய தேவரீரைப் பணிகின்றோம். தம்மினும் வேறாகத்தோன்றும் இவ்வுலகம் தமக்குள்ளே இருப்பதாய் உள்ளது. தமக்கு எல்லாப் பிராணிகளும் வசப்பட்டுள்ளன." என்று பலவாறு துதித்தனர். அத்துதியைக் கிருபா சமுத்திரமாக விளங்கும் பிரம்மதேவர் கேட்டுத் தேவர்கட்கு அபயம் அளித்தனர்.

## 5. அசுரர்களின் கொடுமை உரைத்தல்.

தேவர்கட்கு அபயமளித்த நான்முகன், "எமது மக்களாகியதேவர்களே! நீங்கள் அனைவரும் வாடிய முகத்துடன் என்னை அன்போடு அடைக்கலமடைந்த காரணம் என்ன? நீங்கள் சுயேச்சை விரும்பியவராய், பரிதாபங் கொண்ட முகத்துடன் காணப்படுகின்றீரே! என்ன காரணம்? உங்கள் தலைவனும் இந்திரனோ உங்கள் எல்லோரையும்விட துக்கமுடையவனாகவும் கொம்பிழந்த எருதுபோல் சிறுமைகொண்டு, வச்சிராயுதமிழக்கப் பெற்றவனாயும் இருக்கிறான். அக்னி, மதி மயங்கினவனாய்ப்புகை நிறத்துடன், அரக்கரால் எப்போதும் உண்டாகும் துயரினை வெளியிடுகிறான். யமனோ, தனது கால் தண்டத்தைக்கொள்ள புவியைக்கீறிக்கவிழ்ந்ததலையுடன் மனவருத்தத்தை வெளியிடுகிறான். மேன்மைமிக்க கத்தியைக் கரத்திற் பிடித்துள்ள நிருருதியும் பற்கள் இழந்த பாம்புபோல், நற்குறிமாறிச் சிறுமையுடன் நிற்கிறான். இவற்றிற்குக் காரணமென்ன? எவராலும் பழுதாக்க முடியாத பாசத்தைக் கரத்திற்றாங்கிய வருணனும், கயிற்றாற் கட்டுண்ட பசுவேபோல், வீரமிழந்து வீதனத்துடன் காணப்படுகிறான். வாயுவோ, சிலையற்ற கொடித்தடியைக்

கரத்திற் பற்றியவனுய், ஐயம்புகுவான்போல் சஞ்சல நிறைந்தவனுய் இருக்கிறுன். தனுதிபதியாகிய குபேரன், தனது சங்கநிதி பதுமநிதி முதலான செல்வங்களை யிழந்து, உயிர் பிழைப்பதையே பெரிதென எண்ணியவனுக நிற்கின்றுன். ஈசானனே முனை மழுங்கப்பெற்ற சூலத்தைக் கரத்திற்கொண்டு பாம்பாட்டியின் கரத்தில் பல்பிடுங்கப்பட்டு விளங்கும் சர்ப்பராஜனைப்போல் சோர்ந்து நிற்கிறுன். ஸப்தமருத்துக்களும் ஒருவரோ டொருவர் கலங்கி, பெரிய மலையால் குறுக்கிட்டுத் தடை பட்ட நதியின் கதியைப்போல் ஸ்தம் பித்துள்ளனர். இந்த அஷ்ட வசுக்களும்கூட குன்றிய நிறத்துடன் நடுக்கம் கொண்டவர்களாய், மிகவும் ஆக்கிரம்கொண்டு வேகமாய் இறங்கும்கருடனைக் கண்டு பயந்த கரும்பாம்பைப்போல் விளங்குகிறுர்கள். ஏகாதச ருத்திரர்களோ, அவர்கள் முகக்குறியால் முற்றும் மனேதிட மற்றவர்களாக விளங்குகிறுர்கள். பன்னிரு சூர்யர்களும் மனத்துயரால் குன்றிய ஒளியுடன், பகலில் ஏற்றப்பட்ட விளக்கின் ஒளிபோல் விளங்குகிறுர்கள். தேவர்களே! நீங்கள் எல்லோரும் எக்காரணம் பற்றி இருக்குமிடத்தினின்றும் துறத்தப்பட்டவர் போன்று இவ்விடம் வந்தீர்? அதை விலக்கவல்ல மார்க்கத்தை யாம் உங்களுக்கு ஆராய்ந்து சொல்லுகிறேும்.'' என்று கூறினர். அப்போது தேவர்கள் எல்லோரும் ஒரே சப்தமாகத் தங்கள் குறைகளைக்கூறினர். அதனுல் அவர்கள் சொல்வது விளங்கவில்லை. அதுகண்ட இந்திரன், உடனே அவர்களை அடக்கி, பிரஹஸ்பதியைப்பார்த்து "தேவ குருவே, தாங்கள் இப்போது ஏற்பட்டிருக்கும் அரக்கர் பயமானது, நம்மையும், பெரிய ரிஷிகளையும் மற்றுமுள்ளார் எல்லோரையும் பெரிதும் வருத்துவதை எடுத்துத் தயைசெய்து சன்னிதானத்தில் தெரிவியுங்கள்.'' என்றனன். அதைப் பிரஹஸ்பதி பகவான் கேட்டு பிரம்மதேவரது சன்னிதானத்தில் நின்று வணங்கி "பகவானே, தாங்கள் சொல்லுமாறு ஆஞ்ஞையிட்டபடிச் சொல்கிறேன். தாமரைமலரில் உற்பவித்த பிரம்மதேவரே, கேளுங்கள். தேவர்கள், மஹாபராக்ரமம் பொருந்திய சூரபதுமன், சிம்மவக்திரன், யானை முகங்கொண்ட தாருகன் என்னும் அசுரர்களால் மிகவும் வருத்தப்படுகின்றனர். அந்தச் சூரபதுமன், ஜீவர்களுக்குத்தோன்றும் தூமகேதுவைப்போன்று, தனது இரண்டு தம்பிமார்களுடனும், மற்றைய எண்ணிறந்த அசுரர்களுடனும் ஓர் துர்க்குறித்தோற்றமாய் விளங்குகிறுன். தேவரீர், எல்லா ஆத்மாக்களிடத்தும் அந்தர்யாமியாக விளங்கியிருந்தும் இவ்விஷயத்தைத் தாங்கள் அறியாத காரணம் என்னே! தந்தையே இன்னும் கேளும். மாயை என்பவளுக்கும் காசிப முனிவருக்கும் உற்பத்தியான அந்த அரக்கன், ஸ்ரீமஹேஸன் தந்த வர விசேஷத்தால், இந்திராதியரைப் போரில் வெற்றி கொண்டனன். முறியடிக்கப்பட்ட இத்தேவர்கள் வேறு கதியற்றவராய், அந்த அசுரனுக்குப் பலவாய ஊழியங்களைப் புரிந்து வருகின்றனர். தேவர்கள் தலைவனுகிய இந்திரனே அந்த அசுரன் வீட்டில் உள்ள சபா மண்டப முதலியவற்றைப் பசுவின் சாணத்தைஅவ்வப்போது தேவையான வகையில் மேகங்கள் பொழியும் நீர் கொண்டு குழைத்துக் கரைத்து நாடோறும் மெழுகிவருகிறுன். அக்னியோ மிகவும் சந்தோஷ மனதுடன் கூடியவனுய்த் தனது பரிவாரங்களுடன் அசுரன் பக்கலில் கைத்

தீவட்டிபற்றி நிற்கிறான். யமன், தனது தூதர்களாகிய க்ஷயரோக முதலிய வியாதிகளுடன், அசுவினி தேவர் முதலான தேவ வைத்யர்களை உடன் வைத்துக்கொண்டு அசுரருக்கு வைத்தியம் செய்து வருகிறான். நிருருதியோ தோலுரைக்குட் செலுத்திய கத்தியைக் கரத்திற்றாங்கி, நாடோறும் அசுரன் அவைக்களத்து, வீரர்தலைவனாய், 'இம்மட்டும் யான் செய்தது பாக்யமே' என்ற எண்ணத்துடன் இருக்கிறான். வருண ராஜன், கவலையற்றவனாய் அந்த அசுரனுக்கு இனிய வார்த்தை எப்போதும் சொல்லிக்கொண்டு, அசுரர் கூட்டம் நிறைந்த அவையின் கண் அந்த அசுரனை விட்டு நீங்காதவனாய் விளங்குகிறான். வாயு, அசுரர்களது மாளிகைகளில் விழும் குப்பைகளைக் கூட்டிச் சுத்தம் செய்யுமாறு முதல்வனாய் அந்த அசுரனால் நியமிக்கப்பட்டுள்ளான். இந்தக்குபேரன் குரூபியாக இருப்பதால், இவனை அவ்வசுரன் தனது அந்தப்புரத்துப் பெண்களுக்குக் காவல் செய்யும்படி நியமித்திருப்பதால் இவன் அசுரப் பெண்களின் பக்கத்தில் நீங்காது நின்று காவல் புரிகிறான். ஈசானனோ, அசுரனது வாயிற் காப்பாளராகிய தனது பரிவாரங்களுடன், அவ்வசுரனுக்கு இஷ்டமில்லாத போதும்கூட இனிய உபசாரமொழிகளால் அவனை இன்பம் செய்து நாடோறும் சேவிக்கிறான். தாமரை நாயகனாகிய சூரியன், தாமரை மலர்களைக்கரத்தில் எப்போதும் பிடித்து, அவற்றை இரவும் பகலும் மலரச் செய்தற்கு வேண்டிய தனது வெயிலை வீசி மலரச்செய்து, அவற்றை யந்த அசுரனுக்குக் கொடுத்து வருகிறான். சந்திரனும், எப்போதும், சரத்காலத்துத் தன்னியல்பின் மாறாதவனாய்ப் பூரணகலைகளுடன் நிலவை வீசி, அசுரப் பெண்களுக்குப்போக சிந்தை உண்டாம்படி ரம்யமான காம தந்திர மந்திரியைப்போல் விளங்குகிறான். அஷ்ட வசுக்களும் அந்த அசுரனது ஏராளமான பொக்கிஷம் நிறைந்த சாலையைக் கண்ணுங்கருத்துமாய்க் காவல் புரிந்து வருகிறார்கள். அரசனுடைய அரண்மனைக்குள் இரவிலும் மணியடித்துக்கொண்டு விழிப்புடன் காவல்புரிந்து நிற்கும் ஏகாதச ருத்திரர்கள், அந்த அசுரனுக்கு ஜீவரக்ஷகர்களாய் விளங்குகின்றனர். துவாதசாதித்யர்களும், அசுரன் மாளிகையில் மூலை முடுக்கிலும் கூட இருளணுகாதபடி நாள் தோறும் விளக்கேற்றி வருகிறார்கள். இங்ஙனமே மற்றைய தேவர்கள் எல்லோரும் அந்தக்கொடியவனாகிய அரக்கனுக்குப் பல பல வேலைகளைச் செய்து வருகிறார்கள். அவர்களுள் சிலர், பசுக்களுக்குப் புல்லறுத்துப் போடுகின்றனர். சிலர் அந்தப் பசுக்களைக் காப்பதில் திறமுடையவராய் இருக்கின்றனர். சிலர், வைக்கோற்போரைக் கட்டித்தூக்கிக்கொண்டு வந்து சேர்க்கின்றனர். சிலர் மாம்சங்களைச் சேகரித்துக்கொடுக்கின்றனர். சிலர் கடல்முழுவதும் உலாவித் தேடி மீன்களைப் பிடித்துக்கொண்டு வருகின்றனர். தந்தையே, இங்ஙனமாகத் தேவர்கள் பலவிதமாகவும் அந்த அசுரனுக்குச் சேவைபுரிந்து வருகிறார்கள். அவன் சர்வேசனது வரத்தைப்பெற்ற மதத்தால், உலகமுழுவதையும் துன்பப்படுத்தி வருகிறான். அந்தக்கொடியன் அகங்காரத்தால் வசப்படு நிலைமையில் இருக்கிறானே அல்லாது, பலவாய உபகாரங்களைச் செய்யினும், அவற்றிற்கு அவன் வசப்படாதவனாய் இருக்கிறான். மாயாவியாகிய அந்த அரக்கனால்

இன்றும் பலதேவப் பெண்கள் சிறையில் அடைபட்டுப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கின்றனர். கந்தர்வர், உரகர், யக்ஷர், ராக்ஷஸர், பிசாசர், முத லானவர் எல்லோரும் அந்த அசுரனது அடிமைகளின் அடிமைகளின் அடிமை களாய் இருப்பாரது வீட்டு வாயிலில் நாடோறும் காவல்புரிந்து வருகிறார்கள். அநந்தன், தக்ஷகன், மஹாபலன், கார்க்கோடகன், மஹாநாகன், கம்பளன், மஹாநாதன், கம்பளன், அஸ்வதரன், திருதராஷ்டிரன், சங்கன், குளிகன், மகோரன் முதலான சர்ப்பராஜரும் சர்ப்பங்களும் உச்சியில் நாகரத்தனங் கள் மிளிர அந்த அசுரனின் சிம்மாசனத்தைத் தாங்கி நிற்கும் நிலைமை பரிதபிக்கத்தக்கதாய் இருக்கிறது. சத்தியலோகம் முதல் பாதாளம் ஈறாக வுள்ள ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் அந்த அசுரன் தலைவனாக இருந்து, அவ்வவ்வண்டங்களில் உள்ளார் அனைவரையும் அவதிப்படுத்துகின்றான் என் பது எங்கும் பிரசித்தியாயிருக்கிறது. ஆதலால், பிரம்மதேவரே! பல யுகங் களாக எல்லோருக்கும் எல்லாவிதத்தும் துன்பம் செய்துவரும் அந்தக்கொடி யவன் நாசமாவதற்றேற்ற மார்க்கத்தைத் தெரிவித்தருள வேண்டும்." என்று வருந்திக்கேட்டனர். அவற்றைப் பிரம்மதேவர் கேட்டதும், தேவேந்திரன், "பிரபுவே! இப்போது தாரகனுக்கு மூத்தவனாகிய சூரபதுமனைப்பற்றித் தேவகுரு கூறியது, அவன் செய்யுங்கொடுமைகளில் ஆயிரத்தின் ஆயிரத்தில் ஒரு பங்காகாது. அவன் அங்ஙனமாகச் செய்துவரும் துன்பத்திற்கு அளவே யில்லை. அவை அளவிடற் கரியனவாய் இருத்தலாற்றான் நாங்கள் பல பல நிவர்த்தி மார்க்கங்களைத்தேடியும் அவை, சந்நிபாதம் என்னும் கொடிய சுரத்திற்குக் கொடுக்கப்படும் மருந்துகள்போல் பயன்படாதனவாயின. அந்த அசுரன் தனது இரண்டு தம்பியர்கட்கும் இருநூறு இருநூறு அண்டங்களைப் பங்கிட்டுக்கொடுத்து மிகுதியான அறுநூறு அண்டங்களையும் தானே வைத் துக்கொண்டு ஆட்சிசெய்து வருகிறான். சிங்கமுகன் இருநூறு அண்டங் களையும் ஆள்கிறான். அவன் தம்பியாகிய தாருகனோ தனது இருநூறு அண் டங்களின் நடுவிலிருந்து ஆட்சி செய்துவருகிறான். அவன் உலகில் வசிக்கும் தேவர், மனிதர் மற்றுமுள்ளார் எல்லோரையும் இரவும் பகலும் விடாது தனது பரிவாரத்துடன் ஹிம்சைசெய்து வருகிறான். ஆதலால், அவனை யாங்கள் முன்னரே வெற்றிகொள்ளவேண்டும். சூரபதுமனையும் சிங்க முகனையும் வெல்லவேண்டுவது இப்போது அவ்வளவு ஆவசியகமெனத் தோற்ற வில்லை. தாருகனுடைய கொடுமைகளைக்கண்டு சகிக்கொணாத யானும் மற்றைய திக்குப்பாலகர்களும் முன்னர் அவனுடன் கொடிய போர்புரிந்தோம். அப்போது, தேவர்கள் அவனுக்கு எதிர் நிற்க அஞ்சி யோடியபோது, நான் எனது வச்சிராயுதத்தை அவன்மீது பிரயோகம் செய்தேன். அதனால் எனது ஆயுதத்தின் முனை முறிந்தது; நுனியும் குறுக்காக ஒடிந்து கீழே விழுந்தது. அக்னி தேவனுடைய சத்தியாயுதமும் அங்ஙனமே பயனற்றதாய் உருக்குலைந் தது. யமனுடைய தண்டமும் நிருருதியின் கத்தியும், வருணனின் பாசமும் பாழாயின. வாயுவின் துவஜாயுதம் அந்தப்போரில் மேல் கொடி சீலை நீங்கத் தடி மாத்திரம் எஞ்ச நின்றது. குபேரனுடைய கதையோ, நோயால் குன்

றின உடல் போலாய் முறிபட்டது. ஈசான்யருடைய சூலமும் அந்த அசுரனுடைய மார்பைப் பிளத்தற்குப் போதிய ஆற்றலுடையதாய் அமையவில்லை. ஸ்ரீவிஷ்ணுவின் சக்ராயுதமும், பிரயோகித்த அளவில் அந்த அசுரன் மார்பகத்தே பதக்கம்போல் விளக்கம்கொண்டது. அதனைக்கண்ட பின்னர் நாங்கள் எல்லோரும் தாரகனிடத்தில் அதிக நடுக்கம் கொண்டோம். அதனால் நாங்கள் இப்போது அவனைப் பலவித சிறந்த வெகுமதிப் பொருள்களைக் கொடுத்து ஹிதவசனத்தால் துதி செய்து மகிழச் செய்கிறோம். ஆதலால் தாம் எங்கள்மீது தயைபுரிந்து எங்கள் துன்பத்தை நீக்கவல்ல மார்க்கத்தைச் சொல்லியருளல்வேண்டும்.'' எனத் துயருடன் கூறினன். மேருகிரியில்அமைந்த பிரமதேவரது அவைக்கண் இந்திரன் இங்ஙனம் பரிதபித்தும் பெருமூச்சுடனும் சொல்லிமுடித்ததும், ஆங்கிருந்த மற்றைய தேவர் முதலானோரும், இந்திரன் கூறியதைவிட பலப்பல விதமாகச் சொல்லியவற்றையே மீட்டும் மீட்டும் துயருடன் சொல்லினர்.

## 6-வது அத்தியாயம்.

தேவர்கள் முறைபாட்டைக்கேட்ட பிரம்மதேவர், பெருமூச்சுடன் அவர்கள் துயர் நீங்குதற்கேற்ற மார்க்கத்தைச் சிறிதுநேரம் யோசிக்கலாயினர். பிறகு அவர் ஒருவாறு தெளிந்து, தேவர்களை அழைத்துக்கொண்டு ஸ்ரீமஹாவிஷ்ணுவின் வைகுண்ட லோகத்திற்குச் சென்றார். அவ்விடத்து, ஸ்ரீ பரந்தாமன் இருக்கும் மாளிகை, பல ரத்தனக் கற்கள் இழைக்கப் பெற்றதாயும், பொற் கட்டாலாய ஆயிரம் உப்பரிகைகளை யுடையதாயும் அவ்வுப்பரிகைகளின் மேல் கோபுரங்கள் விளங்கச்சிறப்புற்ற தாகியும் விளங்கின. அன்றியும் அந்த மாளிகையை, தங்கத்தால் செய்யப்பட்ட கதவுகளும், பெரிய வாயில்களும் மனோரம்ய முறச்செய்தன. அவ்விடத்து, விஷ்ணுவின் சாரூப்யமடைந்த பக்தர்கள் சேவைசெய்து கொண்டிருந்தனர். அந்த மாளிகை, பல விசித்திரங்கள் அமையப்பெற்ற பலவிதமான நவரத்னங்கள் நிறைந்த ராஜவீதியில் விளக்கமுற்று, பல ரத்னங்களால் எல்லாத் திக்குகளையும் பலவித நிறவேறு பாட்டைச்செய்து, தனது வாயிலின் முனைகளில் கட்டப்பட்ட சிறந்த பவள தோரணங்களுடன், பார்ப்பதற்கு மேலும் மேலும் ஆசையை உண்டாக்குவித்து, பார்ப்போர் கண்ணைப்பறிக்கும் தன்மையுடையதாய் விளங்கியது. பரந்தாமனையே சிந்திக்கும் நாட்டமுடைய மன அடக்கமுற்ற பக்தர்கள், எங்ஙனம் தமது நாட்டத்தை வேறிடத்துச் செலுத்தாது, ஒரு நிலையுற்றே உண்மையானந்தத்தை அனுபவிக்கின்றனரோ, அங்ஙனமே, தேவர்கள் முதலானோர் பிரம்மதேவருடன் அடைந்தவர்க்குக் கைகொடுக்கும் தகுதி பெற்ற விஷ்ணுபதத்தை விரைவாய் அடைந்தனர். அவ்விடத்தில் ஆதிசேடனது அழகிய உடற்கண் அரிதுயில் கொள்பவரும், தேவோத்தமரும், கரிய மேகம்போலும் நிறமுடையவரும் செந்தாமரை யனைய திருவடியை உடையவரும், செந்தாமரைக் கண்ணரும், மரைவாயரும், தாமரை யனைய அங்கங்களை உடையவரும், சிதேவி தனதுமெல்லிய கைகளினால் தொடுதலினால் சிவந்த

திருவடிக் கமலங்களை உடையோரும், பூதேவிக்குஉகந்தவரும், பரமாத்மாவும், சச்சிதானந்த ஸ்வரூபராகிய பரமேஸ்வரருக்கு அன்பரும், யோக நித்திரை என்னும் சமாதிக்கண் இடைவிடாது ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியைத் தமது இருதயத்தில் பாவிப்பரும், பூஜிக்கதக்கவரும், நாடிஞேரைக்கைநழுவவிடாதவரும், பிறப்பிலியும், அறியக்கூடாத மஹிமை உடையவரும், பிரம்மதேவருக்குத் தந்தையாருமாகிய அந்த ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைத் தேவர்கள் பன்முறை தண்டனிட்டு வணங்கி, "உந்தியங்கமலமுடையோனே! உன்னை வந்திக்கிறோம். ஸ்ரீதேவி பூதேவியர்க்கு நாதனே வந்தனம். சூர்ய சந்திரர்களை இரு கண்களாக உடையவனும், பரமாத்மாவும், தாமரை ஓடையிலும், அடியவர்களின் ஹிருதயத்திலும் வசிப்பவனும், ஜகநாதனும், வேதாந்தங்களால் அறியப்படுபவனுமாகிய ஸ்ரீமந்நாராயணனே வந்தனம். தியான முதலியவற்றால் அறியக்கூடிய திருமேனி உடையோனும் மோக்ஷத்தை யோகியர்க்கும், போகத்தைக் காமியர்க்கும் அருள்வோனும், ஆதிசேஷன்மீது அரிதுயில் கொள்பவனும், மேலான கலியாண குணசாகரமாய் இருப்பவனும், வசுதேவ புத்திரனும் பொறையுடையோனுமாகிய விஷ்ணுவே சரணடைகிறோம். தாம் உலகத்தில் அசுர பயமுண்டான காலத்தில், அந்தப்பயத்தை அவ்வப்போது அவதாரம்செய்து தருமத்திற் கேற்படும் தடைகளை விலக்கி யருள்கிறீர். சர்வைஸ்வர்ய முடையவனே, நாங்கள் அசுரர்கள் செய்யும் துன்பத்தால் நொந்திருக்கிறோம். ஆதலால், எங்களைத் தேவரீர்காத்தருளல் வேண்டும்." என்று துதித்து முறையிட்டு மீட்டும் பன்முறை வணங்கி நின்றனர்.

பின்னர் விஷ்ணு மூர்த்தியானவர் அத்துதிகளுக்கிரங்கிப் புன்னகையுடையவராய், "ஹே பிரம்மேந்திரரே! நீங்கள் இருவரும் இத்தேவர்களுடன் இப்போது என்னிடம் வந்த காரணம் என்ன? யான் இப்போது என்ன செய்ய வேண்டும்? யானே அருவருக்கத்தக்க ஊமைக்கோட்டானைப்போல், இப்போது தினமும் மேருமலையின் குகையைச்சேர்ந்து, பயமில்லாது நித்திரை செய்து வருகிறேன். இவ்விடத்தில் சொப்பனத்தில் சூரனைக்கண்டு பயந்து உலக முழுவதிலும் ஓடிச்சுற்றி விழிப்படைந்தபின், மேருமலையில் இருப்பதுதெரிந்து, பயமற்றவனானேன். சூரன் என்னும்சொல் என்செவியிற்பட்ட அளவில், என் மனம்நடுக்கம் கொள்கிறது. இம்மேரு மலையோ நம்மைக் காப்பதன் பொருட்டுக் கருணாநிதியாகிய காலகண்டரால் அருள் செய்யப்பட்டது." என்று திருவாய் மலர்ந்தருளும்போது, முனிவர்கள் சூத முனிவரை நோக்கி, "முனிவரேறே! மேருமலையைப்பெரிய அசுரர்களும் வருவதற்கிடமில்லாதபடி, தேவர்களுக்கு ஆதரவாகும் வண்ணம் பரமேஸ்வரர் அருள்செய்த விதம் என்ன?" என்றனர்.

அப்போது சூத முனிவர், "முனிவர்களே! முன் ஒரு பிரம்ம கற்பத்தில் ஒரு காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் காலக்கொடுமையால் ஒரு கடும்போர் நேர்ந்தது. அப்போது தேவர்கள் அசுரர்களைக் கண்டஞ்சியவராய், மேருவின் உச்சிக்கண் வீற்றிருந்தருளும் சங்கரரிடம் ஓடிச்சரணடைந்தனர்.

தம்மை மறந்தவராய்த் தமது பலத்தின் வன்மையால் கெர்வமுற்ற அசுரர்கள், அவ்விடத்தும் தேவர்களைக் கொல்லும்பொருட்டு விடாது பின்பற்றிச் சென்றனர். அதனை ஜகங்களை எல்லாம் வஹிக்கும் சர்வேஸ்வரர் கண்டு, கோபம்கொண்டு, "அசுரர்களே! தீமைக் குணமே வடிவாயுற்ற நீங்கள் சற்றும் அச்சம் இன்றி, எம்மைச் சரணடைந்த இந்தத் தேவர்களை இம்சிக்க வந்ததால் நீங்கள் அவர்களால் அடியுண்டு தோல்வியுறக் கடவீர். நீங்கள் ஒழுக்கத்தால் முற்றும் கொடியராய் இருப்பதால், இன்று முதல் உங்களுக்கு யாகங்களில் அவிர்ப்பாகம் கிடையாமற் போகக்கடவது. நீங்கள் உங்கள் செய்கையால் மேன்மக்களாகிய பிராமணர்களால் நிந்திக்கப்பட்டீர். இனி இம்மேருமலை உங்கள் கண்களுக்குப் புலனாகாமற் போகட்டும். அதை யாம் ஒருவேளை மன்னித்து அனுக்கிரஹித்த போதிலும், அந்தமலையின் மேற்பாகம் எப்போதும் உங்கள் கண்களுக்குப் படாமலிருக்கட்டும். அதையும் யாம் பொறுத்தருளினும், அதன் மீதேறிச் செல்லுவதில் உங்களுக்கு மனவெறுப்புண்டாகக்கடவது. அன்றியும், இன்றுமுதல் இந்த மலையில் திதி என்பவரின் பிள்ளைகளும், தனு என்பவளின் பிள்ளைகளுமாகிய அசுரர்கள் எல்லோரும், அரக்கர்களும் வராமலிருக்கக்கடவர். உங்களுக்கு இந்த மலையின் மேற்பாகம் தடையாத வாயிலாய் இருக்கக்கடவது. இவையே உங்கள் தீய செயற்கு ஏற்ற சாபமாகும், என யாம் அபிப்பிராயங்கொண்டு எச்சரித்தோம். உலகத்தில் நடக்கும் யாகங்களின் பாகங்களுக்குத் தேவர்களே அருகரானவர்கள். நாராயணன் முதலான தேவர்கள் எக்காலத்தும் வேத மந்திரங்களைக்கொண்டு யாகங்களைச் செய்யக்கடவர். தேவர்கள், காயத்ரி மனுவைச் சந்தஸாக உடைய மந்திரங்களைக்கொண்டு, அகங்காரம் அற்றவராய்ப்பூவுலகில் தங்கள் வன்மையைச் செலுத்தக்கடவர். அவர்கள் அந்தரிக்ஷ லோகத்தில் திருஷ்டிபு என்றதைச் சந்தஸாகவுடைய மந்திரங்களைகொண்டு வெற்றியுடன் ஆளக்கடவர். சுவர்க்கலோகத்தை, ஜகதீ என்றதை சந்தஸாகவுடைய மந்திரங்களைக்கொண்டு பகைவரை வென்று மேன்மை யுறக்கடவர். அன்றியும், இத்தேவர் நமது ஆஞ்ஞையின்படி பகைவரை வென்று எத்திக்கிலும் சஞ்சரிப்பாராக! அசுரர்களுள்ளும் எவனேனும் நம்மை யன்புடன் ஆராதித்தால், அவன் மட்டும் நமதாஞ்ஞையின்படி வெற்றிபெற்று வாழக்கடவன். மற்றவிதமாக உங்களுக்கு வேறு கதியில்லை." என்று திருவாய் மலர்ந்தருளினர்.' ஆதலாற்றான் தேவர்கள் இப்போதும் பயம்நேர்ந்த காலத்தில் மேருவின் குகையில் வந்து வாசம் செய்கின்றனர்." என்று கூற, அந் நைமிசாரணிய வாசிகளாகிய முனிவர்கள், அவற்றைச்செவியுற்று, சூத முனிவரைச் சுகிருதிகளுக்கெல்லாம் சிறந்தவரென்று அவரை மனமொழி மெய்களால் நினைத்தும் துதித்தும் வணங்கியும் புகழ்ந்தனர்.

## 7-வது அத்தியாயம்.

ஸ்ரீ லக்ஷ்மி காந்தன் தேவர்களை நோக்கி, "வாராய் பிரம்மனே! நீங்கள் அனைவரும் என்னை நோக்கி வருவதை யான் ஞான திருஷ்டியால் கண்டு, இப்

போது தான் அந்த மேருவின் குகையைவிட்டு, இந்த வைகுண்டம் வந்து சேர்ந்தேன். நாம், ஸ்ரீ பரமேஸ்வரனால் 'அருள்செய்யப்பட்ட அந்த மேரு மலையையே அசுரர்கள் வாதை நமக்குண்டாகும் காலத்தில் எல்லாம் வாஸஸ் தானமாக நாடி வருகிறோம். ஆதலால், அந்த அசுரர்கள், தேவர்களாகிய நம்மை எதிர்த்து வெல்லமுடியாது. உலகங்களுக்கெல்லாம் சுகத்தை அளிப் பவரும் கால கூட விஷத்தை அருளுடன் உட்கொண்டவருமாகிய அப் பரம் பொருளே முன்னர் திரிபுரர்களாய் இருந்த இந்த மூன்று அசுரர்களையும் நம் மீது வைத்த கருணையினால், ஒரு புன்னகைப்பு மாத்திரத்தால் எரித்து, திரிபு ராந்தகர் என்னும் பெயரைக் கொண்டனர். அந்தப் பெருமானுரையன்றி மற்றையோர்களால், சூரபன்மன், பாவியாகிய சிங்கமுகன், தீயனாகிய தாரகன் என்னும் இவர்களைக்கொல்ல இம்மூவுலகிலும் முடியாது. கேளுங்கள், தேவர் களே ! எல்லா உயிர்களுக்கும் முக்கிய சங்காரகர்த்தராய் விளங்கும், அப்பரம் பொருளை நாம் மிக்க மேன்மை பொருந்திய அருந்தவத்தால் ஆதரவோடு ஆராதிப்போமாக " என்று அருளி, அவர் மற்றைய பிரம்மாதி தேவர்களுடன் சேர்ந்து, பினாகபாணியனாகிய பரமேஸ்வரனை, மிக்க அசாத்தியமான நியமாதி களுடன் கூடிய தவவகைளால் ஆராதிக்கத் தொடங்கினர். அப்போது அத் தேவர்கள் அனைவரும், மேன்மையுற்ற மான்தோலை உத்தரியமாகக் கொண்டும், மௌஞ்சி என்ற புல்லாலான கயிற்றை இடையிற்கட்டிக் கொண்டும், உருத்திராக்ஷ மாலைகளை ஆபரணமாகப் பூண்டும், தூயமேனி, திரியம்பகம் என்ற வேத மந்திரத்தால் திருநீற்றில் ஜலம்விட்டுக் குழைத்து ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்திரத்துடன் திரியாயிஷம் என்னும் மந்திரத்தையும் பிரணவத்தையும் ஜபித்து இடப்பட்டுள்ள திரிபுண்டர வரிசைகளால் விளங்கவும், நூறு மந்திர ங்கள் அடங்கிய ஸ்ரீ ருத்திரப் பிரசினம் என்னும் சதருத்ரீயமென்னும் மஹா மந்திரத்தை ஜபிப்பதிலேயே ஆவலுள்ளவராய், சர்வபிராணிகட்கும் தலைவ ராய் விளங்கும் சர்வேஸ்வரனை சலனமற்ற மனதில் சதா தியானித்துத் தவம் செய்பலாயினர். பிரமன், இந்திரன், அக்னி முதலாய திக்பாலர்களும், தேவர் களும், ரிஷிகளும், அவ்விதமே எக்காலத்தும் அழிவற்று நித்தியப்பொருளாய் விளங்கும் நின்மலனை நாடியிருந்தனர். அவர்கள் இங்ஙனம் செய்துவந்ததில், காலம் பல கழிந்துவிட்டன. அதன் பின்னர், ஸ்ரீ பார்வதி மணாளர் தாமே யானைத்தோலைத் தமது தூயமேனியில் அணிந்தவராய் ஸ்ரீ நந்திகேஸ்வரரு டைய கையைப்பற்றி யத்தவனாடும் தேவர்முன் வந்தருளினர். அவரை விஷ்ணு முதலாகவுள்ள தேவர்கள் கண்டு கரைகாணாத சந்தோஷ சாகரத்தில் மூழ்கிய வராய், தேகாதியந்தமும் மெய்ம்மயிர் பொடிப்ப ஆனந்த பரவசராயினர்.

சிவனே (மங்கள மூர்த்தியே) போற்றி! சிவதரனே போற்றி! மாதவனே போற்றி எல்லா உயிர்கட்கும் ஈஸ்வரனே போற்றி! மேன்மை யுற்ற ஈஸ்வரா போற்றி! நித்தியபோற்றி! நிஷ்கள போற்றி! சத்திய போற்றி! சாஸ்வத போற்றி! பரம்பொருளே போற்றி! பொய்க்கெட்டாதவனே போற்றி! சத் திய அசத்தியங்களை வகுத்தவனே போற்றி! முற்றுமுணர்ந்தவனே போற்றி! மேலானவனே போற்றி! சங்கரனே போற்றி! சுகந்தருபவனே

போற்றி! விகாரத்தைச் செய்பவனே போற்றி! சூலபாணியே போற்றி! பிரமனது சிரசை மாலையாக உடையவனே போற்றி! பலவகையான ரத்னாபரணங்களை அணிந்துள்ளவனே போற்றி! மகுடதரனே போற்றி! கால காலனே போற்றி! நித்திய முதல்வனே போற்றி! தீயருக்குக் காலாக்னிருத்ரனைத் தோன்றுபவனே போற்றி! அடியார்க் கெளியனே போற்றி! அவர் தம்மைக் கைவிடாது காப்பவனே போற்றி! மண், நீர், அனல், காற்று ஆகாயம், சூரியன், சந்திரன், யாக எஜமான் வடிவாய்நின்ற அஷ்ட மூர்த்தியே போற்றி! தக்கனது யாகத்தை அழித்தவனே போற்றி! யமனை சம்ஹாரம் செய்தவனே போற்றி! அடியவர் விரும்பிய பொருளை விரும்பியபடியே அளிக்க வல்ல கருணா மூர்தியே போற்றி! மதனையெரிந்து போக விழித்தவனே போற்றி! பிரளய காலங்களில் பூதங்களை இம்சிக்கும் சர்வனே போற்றி! சர்வசாக்ஷியே போற்றி! விஸ்வாதிகனே போற்றி! விஸ்வசேவிபனே போற்றி! ருத்திரனே போற்றி! வேதாந்தப்பொருளே போற்றி! வேதாந்தரகசிய முணர்த்தும் குரு வடிவங் கொண்டவனே போற்றி! உபநிடத உண்மை கண்டவர்களுக்கும் ஆராய்ச்சியாலு மனுபவத்தாலும், எல்லாம் சிவவடிவமென்றுணரும் நிச்சயபுத்தியுள்ளவர்களுக்கும் மண், பெண், பொன் என்னு மூன்றாசைகளை யொழித்த சன்னியாசியருக்கும், காமக் குரோதாதி துர்க்குணமற நீங்கியவர்க்கும் மோக்ஷத்தை யளிப்பவனே போற்றி! எக்காலத்தும் அழிவற்று விளங்கும் மேன்மையோனே போற்றி! நினது திருவடி போற்றி! பக்திவலையிற் கட்டுப் படுபவனே போற்றி! மாயாதீதனே போற்றி! தேவதேவனே போற்றி! எங்களை அன்போடு ஆதரிக்கும் அருள் வள்ளலே போற்றி! ஜகமுழுவதையும் ஹதம் செய்துவரும் அசுரர்களை அழிப்பவனே போற்றி! எல்லா அண்டங்களையும் காத்தழிப்பவனே போற்றி! தந்தையே போற்றி! எல்லா உலகங்களையும் இயக்குபவனே போற்றி! சிவனே போற்றி! தேவர்களுக்குப் பிரபுவாய் விளங்குவோனே போற்றி! மூன்று கண்ணுடையோனே போற்றி! திரிபுரங்களை அழித்தவனே போற்றி! மஹேஸ்வரா போற்றி! எல்லா உயிர்கட்கும் இதத்தைப் புரிபவனே போற்றி!" என்று பலவாறாகத் துதிசெய்தனர். விஷ்ணு முதலானோர் அவ்வண்ணம் அன்புடன் செய்த துதியைக் கேட்டருளிய ஸ்ரீ பார்வதி நாதர், தமது புன்சிரிப்பாகிய நிலவு, நான்கு திக்குகளிலும் மூடியிருந்த இருட் கூட்டத்தை யொழிக்க, "விஷ்ணு, பிரம்மேந்திராதி தேவர்களே! வருக! யாம் உங்கள் பொருட்டுச் செய்யவேண்டுவது யாது? தேவர்களாகிய நீங்களோ இவ்விடத்தில் வெகு காலமாய் என்னைக்குறித்து மிக்க ஆதரவுடன் தவம் செய்து வந்தீர்கள். எவர்க்கும் எந்தக் காலத்தும் நம்முடைய தரிசனம் வீணாவது இல்லையன்றோ?" என்று திருவாய் மலர்ந்தருளினர்,

அப்போது விஷ்ணு முதலான தேவர்கள் எல்லோரும் அதிக சந்தோஷங் கொண்டவராய்; "ஹே ஈசனரே! ஈஸ்வரா! ஹரஹரா! விஜயிபவா!" என்று பெருங் கூச்சலிட்டனர். அவ்வமயம் ஸ்ரீ விஷ்ணுமூர்த்தி எல்லோரையும் அடக்குவித்து எல்லா அண்டங்களுக்கும் தலைவராய் விளங்கும் பிரபுவை நோக்கி "ஹே தேவர்களுக்கெல்லாம் தேவனே! நாங்கள் எல்லோரும்

அசுரர்களால் மிகவும் துயரமடைந்துள்ளோம். ஹே பிரபுவே! ஆதலால் நாங்கள் எல்லோரும் தேவரீரைத் தவிர வேறு கதியற்றவர்களானோம். சூரன் சிங்கமுகன், தாரகன் முதலான கொடிய அசுரர்கள், தங்கள் சௌர்யத்தால் எங்கள் எல்லோருடைய நாடுகளேயும் கைவசமாக்கிக் கொண்டு, எல்லோரையும் முறியடித்தோடச் செய்தனர். அந்தப் பெரும்பயத்தில் அகப்பட்ட நாங்கள் தேவரீரைச் சரணமடைந்தோம். எங்களே ஆதரவுடன் ஆதரித்தருள வேண்டும்! தங்களேத் தவிர, இத்தேவர் கூட்டத்துள் அவ்வசுரர்களே ஹதம் செய்வோர் வேறு ஒருவரும் இல்லே.'' என்று தேவர்களுக்கு அனுகூலமாகக் கூறினர். அதனே, ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி கேட்டு, தமது பல் வரிசைகளின் ஒளி, தமது உச்சியில் விளங்கும் சந்திரனது காந்தியை மிகுதிப்படுத்த தேவர்களே நோக்கி "வாருங்கள், ஹரி பிரம்மாதி தேவர்களே! இந்தக்ஷணமே நீங்கள் கொண்டுள்ள பயத்தை அறவிட்டு விடுங்கள். யாம் இப்போது அசுரர்களே சம்ஹரிக்க ஸ்ரீ சுப்ரமணியனே ஒரு நொடிக்குள் வெளிப்படுத்துகின்ளும்.'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி அந்தர்த்தானமான பின்னர், விஷ்ணு மூர்த்தியைத் தலைமையாகக்கொண்ட தேவர்களெல்லோரும் பார்வதிநாதனே வந்தித்து அவர் கூறி அருளிய ஆறுதல்மொழி தமது பாக்கியமாகுமெனக் களித்தவராய் அசுரர்களிடத்தில் தாங்கள் கொண்ட பயத்தின் மிகுதியால் மேருகிரியை விரைவில் அடைந்தனர். அவ்விடத்தில் பிரமாதி தேவர்களெல்லோரும் ஒன்று சேர்ந்து ஸ்ரீ தேவிநாதனே நோக்கி "பிரபுவே இனி நமது காரியம் எவ்வித முடிவாகுமென்பதைத் தயைகூர்ந்து தெரிவித்தருளல் வேண்டும். சிவ பரம் பொருளாய் விளங்கும் ஸ்ரீ சாம்பசிவமூர்த்தியை நாம் நேரில் கண்டும் நம்முடைய பாக்கியம் இவ்வளவாயிற்று. அதுவும் நம்முடைய அதிருஷ்ட வசமே. அசுரர்களுக்கோ காரியங்கள் அவர்கள் நினேத்தபடி யெல்லாம் சித்தியாய்க் கொண்டு வருகின்றன. ஹரியே! இனி எங்களுக்கு என்ன உபாயம் சொல்லுகின்றீர்? எந்த வகையில் ஸ்ரீ பரமேசுவரரிடத்திருந்து விரைவில் குமரக்கடவுள் உற்பத்தியாய் அசுரர்களே சம்ஹரிப்பார்'' என்று கேட்டனர். அவற்றை நாராயணர் செவியேற்றுப் பிரமதேவனுடன் கலந்து, சிறிது நேரமாலோசித்த பின்னர், சர்வ ஜகங்களுக்கும் தாயாய் விளங்கும் பார்வதி தேவியார் தக்ஷன் மகளாய் இருந்த சரீரத்தைவிட்டு இமராஜன் மகளாக அவதரித்த காலமுதல் சர்வஞ்ஞரும் ஜகதீசருமாய் விளங்கும் பரமசிவன் தமது ஐம்புலன்களே அடக்கிப்பிரயத்தனத்துடன் புத்தியை நிலேநிறுத்தி, யோகத்திற் சிறந்து விளங்கும் ஜனகாதி முனிவர்களுக்கு எவரும் எளிதில் அறிதற்கு முடியாத தமது உண்மை வடிவை உபதேசித்தருளும் வண்ணம் ஸ்ரீ கைலேயில் கல்லால விருட்சத்தினடியில், சகல ஜகத்திற்கும் காரணராயும் எல்லா ஜீவாத்மாக்களுக்கும் குருமூர்த்தமாயும் சர்வஞ்ஞராயும் விளங்கும் ஸ்ரீதக்ஷிணமூர்த்தி சொரூபராய் அருள்செய்து அந்த ஜனகாதிமுனிவர்களுடைய ஐயந்திரிபுகளே அகற்றியவராய்த் தமது திருவிரல்களால் சின் முத்திரை அளித்து வீற்றிருக்கின்ளுர். எல்லா உலகங்களிலும் பலவாய ஸ்தாவர சங்கமங்களெல்லாம் அவர்

அவயவமாதலால் அவ்வெல்லா வுலகங்களும் பலவாய போகங்களை அனுபவிப்பதினின்று ஒழிவடைந்து விஷய சுகங்களை விஷமாகக்கருதிவிட்டன. ஸ்தாவர சங்கம வடிவாயுள்ள எல்லா வுலகங்களும் சிவத்தைத் தவிர வேறு இல்லாதபடியால் ஒவ்வொரு உலகத்திலுமுள்ள எல்லா ஜீவர்களுக்கும் ஆண் பெண் என்னும் பாகுபாடே அற ஒழிந்தது'' என்று தேவர் கூட்டத்தைப் பார்த்துச் சொல்லி அருளினர்.

## எட்டாவது அத்தியாயம்.

மேலும் ஸ்ரீ விஷ்னு மூர்த்தியானவர் தேவர்களெல்லோரையும் ஆதரவுடன் நோக்கி, "தேவர்களே! இப்பொழுது உங்கள் மனம் கேவலம் காமவிகார மற்றிருக்கிறது. திக்குப்பாலகர்களும் தங்களது மனைவிமாரிடத்தில் ஆசையற்றிருப்பது பெரிய ஆச்சரியமாகும். இந்திரனே இந்திராணியினிடத்தில் சிறிதும் மோக மில்லாதவனாயிருக்கிறான். பிரம்மாவோ சரஸ்வதியினிடத்தில் மோகமில்லாது விளங்குவதைப் பாருங்கள். என்மனதினும் லட்சுமியே வேண்டாமென்னும்படி வெறுப்புண்டாகிவிட்டது. மனது என்னும் வடமொழிப் பதமானது நபும்ஸகலிங்கம் என்று பெரியோர்கள் கூறுவது இப்போது உண்மையாகவே விளங்குகிறது. எல்லா உலகிலுள்ளவருடைய மனதும் மன்மதனுடைய அம்பிற்கு லட்சியமாகாமல் அலியாய்விட்டது. தாவரஜங்கம வடிவாய இந்த சகத்தில் ஆண் பெண்களும் கூட்டுறவு இல்லாதிருக்கும்போது எவ்வாறு பிரமனது சிருஷ்டித் தொழில் நடைபெறும்? சிருஷ்டித்தொழிலே இல்லாத காலத்தில் ரட்சகத்தொழிலில் எனக்குப் பிரசக்தி ஏது? அட்டதிக்குப் பாலகரும் எவ்வாறு தத்தம் அதிகாரங்களைச் செலுத்துவர்? யாகஞ்செய்வோர் தமக்குப் புத்திரோற்சவம் ஆகுங்காலத்தில் செய்யும் வைஸ்வானரேஷ்டி யென்னும் ஓமம் நடைபெறாத இக்காலத்தில் தேவர்களுக்கு என்ன திருப்தி உண்டாகப்போகிறது? பிராணிகளுக்கு தேஜசு ஏது? ஐம்புலன்களுக்கும் விஷயமாய ஊண் முதலான பொருள்களுக்கு என்ன யோக்கியதைபுண்டு? எல்லா உலகங்களுடைய சிருஷ்டி முதலிய வாழ்க்கை யனைத்தும் ஆண் பெண்களின் சேர்க்கை உண்டான காலத்தே யல்லாது வேறுகாலத்தல்ல. ஆதலால் நாமெல்லோரும் இப்போது ஒன்றுசேர்ந்து மன்மதனை யழைப்போம். அவன் வந்ததும் அவனுக்குத் தக்க பல உபாயங்களைக் கொண்டு அவனைக் களிக்கச் செய்து, ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரரை ஒன்று சேர்க்க முயற்சிப்போம்'' என்று தீர்மானத்துடன் சொல்லி மற்றைய தேவருடன் தாமும் மன்மதனை நினைத்தார். அப்போது மன்மதன் தனது மனைவியாகிய ரதியுடன் தோழனாகிய வசந்தனைத் துணைகொண்டு அம்புதொடுக்கப்பெற்ற வில்லைக்கரத்துடையவனாய் அசுரர்களுக்குப் பகைவரான தேவர்கட்கு முன்பாக அதிவிரைவில் வந்து சேர்ந்தான். சேர்ந்து, அவன் தன் தோழனோடு தேவர்களை வணங்கி, "தேவர்களே! என்னை உலகங்களுக் கெல்லாம் ஈசுவரராக விளங்கும் நீங்கள் நினைத்த காரணமென்ன? விஷ்ணு பிரமேந்திரர்களே! என்னால் இம்மூன்றுலகங்களிலும் ஆகவேண்டிய வேலை ஏதேனுமிருந்தால் அதைத் தடை

யின்றிச் சொல்லுங்கள்; அதை இந்தக்ஷணமே நானுங்கள் தூதனுக இருந்து உங்கள் தயவினல் செய்து முடிக்கிறேன்.'' எனச்சொல்ல, ஸ்ரீ விஷ்ணு மூர்த்தி மன்மதனைப் பார்த்து, "ஏ மதிவன்மைவாய்ந்த மன்மதா! மிகவும் நல்லது. நீயே உலகங்களுக்கெல்லாம் சாம்ராச்ய பதவியை அடைந்தவனுய் இருக்கிருய். நீ இப்போது இறப்பு, எதிர்வு, நிகழ்காலங்களுக்கு யுக்தமான காரியங்களைச் செய்ய வேண்டும். இவ்வுலகில் ஆண் பெண்களின் சேர்க்கையாம் தெய்வகாரியத்தைச் செவ்வனே விரைவில் முடித்தல் வேண்டும். நீல நிறமாயும் சென்னிறமாயும் உள்ள தம்பதிகள் சேர்க்கையின்றி வேறு வேறு தனியாயிருக்குமளவும் தாவர சங்கம வடிவமான இவ்வுலகை ஒன்று சேர்க்க உன்னுல் முடியாது. இங்ஙனங் கூறிய இவ்விரண்டு நிறமுள்ள பொருள்கள் வேறு எவையோவென நீ எண்ணவேண்டாம். அவற்றுளொன்று காலகண்டரது வலதுபாகமும் மற்றொன்று அவரது இடதுபாகமுமேயாம். உலகங்களுக்கு அவ்விரண்டு பாகங்களே தாய் தந்தையர்களாக விளங்குகின்றன. அவற்றுளொன்ருகும் தாய்ப்பாகம் இப்போது இமராஜன் பெண்ணுகி இவ்விளம்பருவத்திலேயே ஸ்ரீ சாம்பசிவரது பிரீதியின்பொருட்டுத் தவக்கோலங் கொண்டு நிற்கிறது. தந்தைப் பாகமாகிய மற்றொன்ருே மலையரசாய் விளங்கும் கைலையில் கல்லால விருட்சத்தினடியில் மேலான தவசிரேஷ்டராகிய ஜனகாதிகளுக்கு ஞானேபதேசஞ் செய்துகொண்டிருக்கிறது. அந்த இரண்டு பாகங்களையும் நீ ஒன்று சேர்த்தால் இம்மூன்றுலகங்களும் முன்னிருந்த நிலைமைக்கு வந்துவிடும். உனக்கோ உலகங்களிலெல்லாம் மேன்மையான சிறந்த வல்லமை இருக்கின்றது நீ விசேஷ முயற்சியில்லாமலே இப்போது மெச்சப்படத்தக்கவனுகின்ருய். யாதெனில், உனக்கு மலர்களே ஆயுதமானதுபற்றி நீ அம்மலர்களால் அப்பிரபுவைப் பூஜித்தலானது அவருக்கும் பிரீதியுள்ளதேயாகும். ஆகையால், எல்லா உலகுக்கும் மேன்மையான புண்ணியவானுவாய்'' என்று ஸ்ரீ விஷ்ணுவானவர் சொல்லிய தன்பேரில் மன்மதன் உரைத்ததாவது:—தங்கள் சன்னிதியில் தெரிவித்துக்கொள்வதைத் தயை செய்து கேட்டருளவேண்டும். விஷ்ணு பிரமர்களே! என்னை எங்கும் வெற்றி பெறுவோனுய்த் தயவுடன் நியமித்திருப்பவனிடத்தே யான் வெற்றிபெற முயலுவேனுகில் தடையின்றி யஜமானத்துரோகியாகின்றேன். யஜமானத்துரோகஞ் செய்வோர்களுக்கு நிச்சயமாய் நரகப் பிராப்தியேயன்றி சுவர்க்கம் கிடைப்பதில்லை. நல்லது எனக்கு இப்போது காலாந்தர நற்கதியானது கிடைக்கட்டும்; அல்லது கிடைக்காமல் போகட்டும்; ஈசுவரன் என்னைக்கோபத்தினுல், குங்கிலியப்பொடியைப்போல் எரித்துவிடுவார். உங்களாலோ, மலரம்பை யெய்வதானது புஷ்பார்ச்சனத்திற்கு ஒப்பாகச்சொல்லப்படுகின்றது. நல்ல பாவனையின்றிச் சமர்ப்பிக்கப்படுகின்ற மிகவும் இன்பமுள்ள புஷ்பங்களையாயினும், பாலையாயினும், சந்திரனுடைய கலையை யுச்சியில் ஆபரணமாய்க்கொண்ட மகாதேவர் அங்கீகரிப்பதில்லை. நல்ல பாவனையோடு சமர்ப்பிக்கப்படுகிற புற்களானுலும், பூண்டுகளானுலும், கற்கள் முதலியவையானுலும் அடித்தலையானுலும் சர்வேசுவரனுகிய பரமசிவன் மிகவும் பிரியமா யங்கீகரிக்கின்ருர். முற்காலத்தில் நற்

பாவனையின்றி பசுக்களால் ஸ்ரீ பரமேசுவரர்மீது பாலானது நிறம்பச் சமர்ப்பிக்கப்பட்டதானது அப்பரமாத்துமாவுக்குப் பிரிய விரோதமுள்ளதாகி உடனே அப்பசுக்கள் எரிந்துபோனதற்கு முக்கிய காரணமாயிற்று.'' இங்ஙனமாக மன்மதனல் சொல்லப்பட்டதின் பேரில், கேளீர்கள் பிராமணோத்தமர்களே! தேவர்கள் மன்மதனை நோக்கி இவ்வரலாறு எவ்விதமென்று வினவ, மன்மதன் சொல்லுகிறான். "முற்காலத்தில் சந்திரசேகரனாகிய ஜகதீசன் தக்ஷகுமாரியாகிய ஜகதீஸ்வரியுடன் சிறந்த மந்தரபர்வதத்தில் தேவகணங்களால் ஸேவிக்கப்பட்டவரும், நந்தி, பிருங்கி, மகாகாளர், கந்தர், விநாயகர் முதலியவர்களால் சூழப்பட்டும், நாட்டியோபசாரத்தில் முற்றும் தேர்ச்சிபெற்ற ருத்திர கன்னிகளாலும், தேவதாசிகளாலும் நெருக்கமாய்க் கூடப்பட்டும், விளங்கியிருந்தனர். சித்திரை, வைகாசி மாதங்களாகிய வசந்த பருவத்திய மலர்களால் தேவாதி தேவனும் சருவலோக நாயகனுமாகிய பிரபுவானவர், தமக்குப் பிரியமுள்ளவரும், மற்ற சகல அண்ட பிண்ட சராசரங்களுக்குத் தாயுமாகிய சிவா தேவியை மிக்க மனக்களிப்புடன் துலங்க வலங்கரித்து, மேன்மை பொருந்திய சிங்காதனத்தில் வீற்றிருந்தனர். இப்படியிருக்கு மளவில் முனிவர்களுக்கெல்லாம் சிறந்தவரும், ஸாக்ஷாத் பிரம்ம தேவனுக்குப் புத்திரனுமாம், காசிபப்பிரஜாபதியானவர் திதியென்றும், சுதீதியென்றுமாகிய இரண்டு பாரியைகளால் தங்களுக்கு உருசிகரமான பசுவின்பால் வேண்டுமென்று அடிக்கடி ஆசையுடன் பிரார்த்திக்கப்பட்டபோது, அவர் வருணனிடத்திற் சென்று தனது அப்புத்திரனைத் தனக்கு நிரம்பப் பால் கறக்கின்ற பசுக்களைக் கொடுக்கும்படி கேட்க, அவனால் பாற்குறியுள்ள அனேகம் சிறந்த பசுக்கள் கொடுக்கப்பட்டன. காசியபரும் பாரியைகளோடு தடியை யெடுத்து அவைகளை யோட்டிக்கொண்டு உள்ளங்களித்து ஜன வேகத்துக்குப்போகப் புறப்படுகையில், அப்பசுக்கள் அவரது வசத்திற் செல்லாமல் மனம் போனபடி ஆகாச மார்க்கத்தில் சென்றன. அவைகள் சென்ற சென்ற விடங்களிலெல்லாம் பூமியின்மீதுள்ள நதிகள், தடாகங்கள் முதலியவையெல்லாம் அவைகளது பால்களால் நிரம்பப்பட்டன. அவைகள் இவ்வாறாக ஓடிச் செல்லுமளவில் கன்றுகள் பிரிந்துவிட்டன. முனிவரும், தமது இரண்டு பாரியைகளுடன் தடியைக்கொண்டு ஆவலுடன் துரிதமா யவைகளைப் பலவாறு தொடர்ந்தோடுகையில், மிக்கக் களிப்புடன் பெருமூச்சுவிட்டு, வாயுலர்ந்தும், வெகுகால மேலோடும் அவைகளைத் திருத்துவதற்குத் திறமை கொள்ளவில்லை.

## 9-வது அத்தியாயம்.

மன்மதன் பின்னும் விஷ்ணு முதலிய தேவர்களை நோக்கி, அப்பசுக்கள் பால் மாரியைக் கோபித்துகொண்டே சீக்கிரத்தில் மந்தர பருவதத்திற்கு மேலாக வராநின்றன. அம்மாடுகளின் பால் மாரியானது ஸ்ரீ சாம்பவ மூர்த்தியின் மேல் விழுந்தது. அவர் அவமானங்கொண்டு ஆகாயத்தைபுற்று நோக்கியவுடன் அவ்வனேகம் பசுக்களும் ஓர் க்ஷணத்திற்குள் சாம்பலாகிவிட்டன. ஆ! ஆச்சரியம். ஸ்ரீ பாமேசவரனுக்குக் கொஞ்சத்திற் கொஞ்சமாயினும் பாலை

அபிஷேகம் செய்தால் அது அவருக்குப் பிரியமாகுதென்று முனிவர்கள் சொல்லுகின்றார்கள். அப்படி யிருக்கையில் பிராணிகளை யெல்லாம் பாதுகாக்கின்றவராயினும் அழிவற்ற இப்பரமேசன் ஏன் இங்ஙனம் எரித்தனர். பசுக்களால் பக்தியின்றி வருஷிக்கப்பட்டபடியால் அது அவருக்குப்பிரியமில்லை. அந்தக் காணத்தில் பக்தி தோற்றத்துடன் அவ்வீசன்மீது சமர்ப்பிக்கப்பட்ட தடியடியும், வில்லடியும் உண்மையாகவே பூஜாமிஜத்தைக் கொண்டது. ஆகையால் தான் ஓ! தேவர்களே! யானவர்க்கு அஞ்சுகிறேன். ஆகையால் தேவோத்தமர்களே! நீங்களடியேனை ஸ்ரீ பரமேசுவரன் விடயத்தில் ஏற்படுத்தாதீர்கள். தமது கட்டளைக்கு இவன் அமையவில்லையென்று ஓ தர்ம தேவா! மன வருத்தமடையாமல் என்னை மன்னித்தருளல் வேண்டும்'' என்று மன்மதன் வேண்டிக்கொண்டனன். பிறகு இவ்வாறு தடுத்துரைக்கின்ற மன்மதன்மீது மிகக் கோபங்கொண்டவராகப் பிரமதேவன் சி! சி! நீ கெட்டாய்! உலகத்தில் யுக்தமாகிய புத்திமதிகளைக் கேளாத வொருவனை, ஜனங்கள் லச்சை கெட்டவனென்று சொல்வது சாதாரண வதந்தியல்லவோ; இச்சந்தர்ப்பத்தில் உன்னைப்பற்றிச் சொல்ல வேண்டுவது யாது? மானிடர்களுக்கு முதன்மையான சத்துருவாகின்றாய்; உதவி செய்தலையே பிரதானமான ஒழுக்கமாகக் கொண்ட பெரியோர்கள், உலகத்தில் பிரளயகாலமளவும் புகழ்ச்சியாகிய தேகத்தையுடையவர்களாக முற்காலத்தில் விளங்கி நின்றார்கள். கேளாய் மன்மதா! முற்காலத்தில் சியவன முனிவரின் தநயராகிய ததீச முனிவர், வச்சிராயுதத்திற்காக தேவர்களால் யாசிக்கப்பட்டபோது தனது தேகத்தின் எலும்புகளைக் கொடுத்திருக்கின்றார். இரக்கத்தினால் நனைந்த நெஞ்சமுடைய சிபிச்சக்ரவர்த்தி யென்றவோர் மேன்மையுள்ள அரசன் ஓர் மாடப்புறு நிமித்தமாக தனது தேக மாமிசங்களையும் எலும்புகளையும், அரிந்து கொடுத்தருளினர். சூரிய புத்திரனாக ஓர் கன்னியிடத்து சனித்த கர்ணன் என்பவனும், இந்திரனால் யாசிக்கப்பட்டபோது அவனிடத்திருந்த சக்தியென்ற ஓராயுதத்தைப் பெற்றுக்கொண்டு தன்னுடன் பிறந்த கவசத்தை முற்றும் கொடுத்திருக்கின்றனன். உன்னைப் போன்ற தயையுடைவன் மூன்று உலகத்திலும் இருந்ததில்லை. இனி இருக்கப்போவதுமில்லை. இங்ஙனமாகையில் யானெவ்வாறவரை யெனது ஐந்து மலரம்புகளுக்குக் குறியாகச்செய்யத்தகும். யானிவ்வாறிருக்கையில் அம்பென்ற அறிவோடு ஜகதீசன்மீது சமர்ப்பிப்பேனாகில் பாவிகளுக்கெல்லாம் மகாபாவியாகி விடுகிறேன். ஆகையால் 'ஹே! விஷ்ணுவே! தமது வசனத்தை யான் நிறைவேற்ற அசக்தனாகிறேன்.'' என்று மன்மதன் கூற அதைக் கேட்ட பிரமதேவன் பின்னும் சொல்லத்தொடங்கினர்:—மன்மதனை அருகிலழைத்துத் தேறுதல் செய்து தேவர்கள் என்னை மூன்று ஜனங்களுடைய க்ஷேமத்துக்கும் உரியதாகிய காரியத்தை நடப்பிக்கும்படி வேண்டுகின்றார்கள். ஜகத் சிருஷ்டியின் விருத்திக்காகவே ஈசன் கட்டளையின்படி உனதுதொழிலிங்ஙனமாக ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் எல்லாமறிந்த ஜகதீசன் உன்மீது கோபங்கொள்ள மாட்டார். ஓ! கோ! இப்போது உனது மனம் இரும்பிலும் அதிக கடினமாயிருப்பது மிகவுமாச்சரியம்!! மிகவும் கஷ்டம்! தேவர்கள் கூடி நின்று தேவகி (கொடு) யென்ற வசனத்தைக் செவியுறக் கேட்டும்

சித்தபுவனக (சித்தத்திலுண்டாகியவன்) இருந்து கூட உனதுமனம் நனைய வில்லை; இது மிகவும் ஆச்சரியம்! இவ்வாருக பிரம்மதேவன் சொன்னதற்கு மன்மதன் "வாரீர் ஜகத்தை யெல்லாம் சிருஷ்டிக்கின்ற பிரம்மதேவா! நீர் சொல்லியதெல்லாம் முற்று முண்மைதான், சந்தேகமேயில்லை. ஈசன் கட்டளையின்படியே யெனக்கெங்கும் பழக்கமே தவிர வேறில்லை. பூவுலகிலும் வெற்றி பெறுவோனுகையினுலே எனக்கு ஜய (வெற்றி பெறுவோறு) என்று பெயர் கிடைத்திருக்கின்றது. சகல அண்டங்களிலும் உள்ள அண்டஜம் (மூட்டையில் ஜனிக்கிற பக்ஷிகள் முதலியவை) ஸ்வேதஜம் (புழுக்கத்தில் ஜனிக்கிற புழுக்கள் முதலியவை) உத்பிஜம் (பூமியில் முளைக்கிற விருக்ஷங்கள் முதலியவை) ஜாராயுஜம் (ஜரயு என்ற பையினின்று ஜனிக்கின்ற மானிடர் முதலியோர்) தேவாசுரர் முதலியவர்கள் மீதும் என்னுலெய்யப்படுகிற அம்புகள் வெற்றி பெருமல் பழுதாய்த் திரும்புவதில்லை. நல்லது! அவையெல்லாம் நிற்கட்டும்; வாரீர் பிரபுவே, முந்தி நீர் உமது பெண்மீது மோகங்கொள்ளும் தாருகாவனத்தின்கண் ஸ்ரீ விட்டுணுவானவர் மாயையாகிய பெண்ணுருவங் கொண்டு வந்தவர்மீது ஆசிரமங்களிலுள்ள முனிவரெல்லோர்களும் மோகங் கொண்டவர்களாகி அம்மாயைப்பெண் காலில் விழும்படி யடித்தேனல்லவா? ஸ்ரீ விட்டுணுவானவர், ஜலந்தராசுரனது மனையாளான பிருந்தை யென்பவள் மீது அவர் சிறைச்சாலையில் அடைபட்டவராயினும் காதல் கொள்ளும்படி யென தம்பில் செய்விக்கப்பட்டார். மேலும் ஸ்ரீ ஹரியானவர் அம்பரீஷ சக்கிரவர்த்தியது பெண்ணுகிய விதியின் மதி யென்பவளை நேரில் நாரத முனிவரையும் பருவத முனிவரையும் மோசஞ்செய்து, மோகத்தின் பேரில் எடுத்துப்போயினர். ஸ்ரீகிருஷ்ணன் வஸுதேவரது குமாரனுயிருந்தும், நந்தனென்ற இடையன் வீட்டில் வசித்துக்கொண்டு என தம்பின் கூறினுல் இடைப்பெண்களோடும் மோகஞ் செய்தனரல்லவோ? இந்திரனும், கௌதம முனிவரின் தரும பத்தினியாகிய அகலியா என்றவளை எனதம்பின் வசத்தினுல் காதல் கொண்டனன். என்னுல் சந்திரனுடைய மனமும், பிரகஸ்பதி தேவனுடைய மனைவி தாரை யென்றவளுக்கு சுவாதீனப் படலாயிற்று. விசுவாமித்திரருடைய கொடிய தவத்துக்கு மேனகைபோன்ற தேவ நாட்டியப்பெண் இடையூருயினள். உலகத்திலுள்ள தேவர்கள், அசுரர்கள், மனுஷியர்களில் எவ்வளவு பெயர்களோ எனதம்பினது சம்பிரமத்தால் ஸ்தம்பித்து மோகித்திருக்கிருர்கள். தோலை யாடையாகத் தரித்த பரமேசுவரன் ஒருவரைத் தவிர மற்றெல்லோர்களையும் எனது மலரம்புகளால் அடிக்கின்றேன். அவர் சகல ஜகங்களையும் நெற்றிக்கண்ணது நெருப்பினுல் எரிக்கின்றவர். சகல ஜகங்களையும் படைத்துக் காத்து, அழிப்பவர். பிறப்பு இறப்பற்றவரும் வரம் பிலின்பாகாரமானவரும் மேன்மைதங்கிய பிரபுவுமாகிய மகேசுவரனை உலகத்தில் எந்த தீரந்தான் மன்ன நடுக்கமின்றி எதிர்க்கவல்லவன். யான் யாவரிடத்தும் அஞ்சேன். என்றுகூற பிரம்மாவானவர் தனதுகைகளைக் கொட்டிச் சிரித்தனர். எல்லா தேவர்களும் அவனை அடிக்கடி வேண்டினர்கள். ஸ்ரீ நாராயணனும் மன்மதனைப் பார்த்து "அடா இது உனக்குத் தகுதியா? எல்லோர்களுக்கும் முன்னிலையில் நிற்கின்றுய். அடா ரதிக்கு நேசனுகிய மன்மதா! நீ பெரி

யோர்களுக்குத் தோழனென்றும் கீழ் மக்களுக்குப் பகைஞனென்றும் எங்கும் பிரசித்தி யடைந்திருக்கின்றாய். ஆகையால் ஸ்ரீ பரமேசுரனைப் பார்வதியம்மையோடு சேர்ப்பித்து நீ புண்ணியவானாகிவிடு. அப்பார்வதி பரமேசுவரர்களும் உன்பால் மிகவும் அன்புகூர்ந்து உனக்கு வேண்டியதை யளிப்பார்கள்,'' என, மன்மதன் யாதுகூறினும் யான் ஸ்ரீ பரமேசுரனருகிற் செல்லேன். வேறு யாதானாலும் உலகங்களுக்கு இம்மோக்ஷ நலத்தைச்செய்வதற்கு சித்தமாயிருக்கிறேன். உங்களுக்கு எப்போதும் தீங்குசெய்கின்ற சூரபத்மாசூரனைக்கூட அவனுடைய சகோதரர்களுடன் சிற்றின்பப் புணர்ச்சியோடு பசுமரத் தாணி வைத்தாற்போல் என தம்பினால் செய்துவிடுகிறேன். அவன் வெகுகால மளவும் அழகிய விதிகளையுடைய பெண்டீர்களது வசத்தில் எப்போதும் இருந்துவிடட்டும். புவனங்களுக்கு முக்கிய ஆதாரவாயுள்ளவரும், எல்லோருக்கும் குருவும், எல்லாமறிந்தவரும் எல்லாவற்றையும் இரக்ஷிப்பவருமான ஸ்ரீ பரமேசுரனை எனதம்பிற்கு இலக்ஷியமாகச் செய்யேன்'' என்று கூறினன். பிறகு பிரம்மதேவரானவர் எழுந்து கோபத்தினா லுதடு துடிக்கலுற்று செவிப்புலனுக்கு கொடூரமாயிருக்கும் பயங்கரமான வசனத்தைக்கூறி, ''அகோ! விஷ்ணுவே, அசுரனைத் தன் வசமாக்கிக்கொண்டு தேவஸ்திரீகளை அபகரிப்போனை அசுரனை யொத்த இத்துன்மார்க்கனோடு யாது வீண்வாது? இப்போதே அவன் தேவ காரியத்தைச் செய்யாவிடின் உடனே அவனைச் சபித்துவிடுகிறேன்; துஷ்டன் தடியடியால் வசப்படுவானே ஒழிய நல்ல வார்த்தைகளால் நம்மிஷ்டத்திற்கு ஒவ்வான்'' எனச்சொன்ன பிறகு சுற்றுமுள்ள தேவர்கள் ஒருவரோ டொருவர் பேசிக்கொண்ட கோலாகல ஓசையானது ஆத்திரம், மோகம் முதலியவைகளின் ஒலியை மேற்கொண்டு காதுகளைச்செவிடாக்கித் திசையெங்கும் பரவலாயிற்று. பிரம்மாவினுடைய சாபத்திற்காக மன்மதன் பயந்து நடுங்கி மனங்கலங்கித் தனதன்புள்ள நாயகியாகிய ரதியுடன் இனி செய்யத் தகுவதியாதென யோசித்தான். அதற்கு ரதியும் மன்மதனை நோக்கி ''நாதனே! நீர் மகேசுரர் மாளிகைக்குப் போவது உசிதமல்ல; இவருடைய சாபம் உம்மை என்ன செய்யலாகும். இச்சாபத்திற்கு விமோசனமுண்டு. சிவத்துரோகத்திற்கு எப்போதும் ஓரிடத்துமில்லை. ஸ்ரீ பரமேசுவரன் ஓர் புன்னகைப்பினது வேகத்தால் மூவுலகையும் ஓர்நொடிக்குள் எரித்துவிடுவார். எனது இவ்வசனமானது அவமானத்தைக் கொடுப்பதேயல்ல; மிகவுமனுகூலமாகியது. ஸ்ரீ பரமேசுவரனை யுமதம்புக்கு லக்ஷியமாக்காமல் அச்சகதீசனைப் பூசிப்பீராக. உலகிலவரை யவமதித்தவர்கள் சீக்கிரத்தில் பாவத்தினால் மாண்டு விடுகிறார்கள். '' என ரதிதேவியின் வார்த்தையைக் கேட்ட மன்மதன் '' அழகிய புருவங்களையுடைய நாயகி! நீ சொல்வது முற்றும் உண்மைதான்; சந்தேகமேயில்லை. இயமனுக்கு இயமனாகிய பரமசிவத்தினிடமிருந்து அடையப்படுகிற மரணமும் மிகவும் மேன்மையுள்ளது. மற்றவரிடத்திருந்து ஓர் கல்பத்தின் முடிவளவும் ஆயுள்கிடைத்த போதிலும் அது அற்பாயுசுக்குச் சரியானதே! ஜனங்களுக்கெல்லாம் பிரபுக்களாகிய தேவர்கள் என்னை வேண்டிக் கொள்ளுகிறபடியால் வாராய் பெண்ணே! என் பேரிலான சபதத்தின்படி நீ தடுத்துரைக்க வேண்டாம்,'' என்று மன்மதன் ரதி

தேவியைச் சமாதானஞ் செய்துவிட்டு, பிறகு எழுந்து கைகட்டி விஷ்ணு முதலிய தேவர்களை வந்தன வழிபாடுகளியற்றிச் சொல்லலுற்றான்:—

## 10-வது அத்தியாயம்.

"நிருதரார்களுக்கு மாற்றானாகிய மகாதேவனோடு போர் தொடுப்பதற்குச் சென்று மூவுலகுக்கும் தாயாகிய மகாதேவியோடு அப்பரமசிவனை ஒன்று சேர்ப்பிக்கிறேன். தேவசிரேஷ்டர்களே! உங்களது அனுக்கிரகத்தால் அடியேனுக்குச் சீக்கிரத்தில் வெற்றி கிடைக்க வேண்டும். இப்போதே எனக்கு நீங்கள் மேன்மையான தாம்பூலத்தைக் கொடுத்தல் வேண்டும். உங்களது காரிய மிடையூறின்றி நிறைவேறும் விஷயத்தில் யான் மாளும் வரையில் முயலுகின்றேன்.'' என்று மன்மதன் உரைக்க அதை பிரம்மதேவன் மனக்களிப்புடன் கேட்டு, தன்மீதிருந்த புயத்தின் மாலையை அவனுக்கு வெகுமதியாய்க் கொடுத்து அவனைப் புகழ்ந்தனர். ஸ்ரீ விஷ்ணுவும், சிறந்த ரத்தினங்களால் விளங்கலுற்ற மேன்மையாகிய பதக்கத்தைக் கொடுத்தனர். இந்திரன் கல்பக விருக்ஷத்தினின்றுடையப் பட்டிருக்கிற சிறந்த ஆபரணங்களை மிகவாதரவுடன் தத்தனன்; மற்றைய திக்குபாலகர்களும் அற்புதங்களாகிய பலவித வெகுமதி சாமான்களை யீந்தனர்கள். முனிவர்களும், யோகீந்திரர்களும் அவனைத் துதித்துவாழ்த்தினார்கள். மன்மதனும் அவ்வெல்லோர்களாலும்கொடுக்கப்பட்ட வெகுமதி சாமான்களைக்கண்டு முற்றும் களிப்புற்றனன். ரதியோவெனில், மிகவும் துக்கித்தவளாக நடுக்கங்கொண்டு நின்றனள். பிரம்மதேவனும், மகாவிஷ்ணுவும், அவனை வாழ்த்திச் செல்லும்படி சந்தோஷமா யனுப்பினார்கள். அப்போது மன்மதனும் ரதியோடு கூட அப்பிரம்ம விஷ்ணுக்களை வந்தனித்து தேவர்களுக்கும் பிரதக்ஷிணம்செய்து ஜயவிஜயீபவா என்ற மங்களவசனங்கள் கூறப்பட்டவனாக உடனே புறப்பட்டனன். மலையமலை காற்று சுவரூபமாகிய ரதம் அப்போது தயாராக நின்றது. பச்சைக்கிளிக் கூட்டங்களாகிய அவனது தேர்க் குதிரைகளால் திசைகளெல்லாம் ஒரேபச்சையாக விளங்கிற்று. ஐந்து மலரம்புகளும் சிறந்தவாசனைகளால் மிகவும் நேர்த்தியாயின. நாமக் கரும்பாகிய அவனது வில்லின் மீது வண்டுகளாகிய நாணின் ஓசை விருத்தியடைந்தது. குசும்பாச் சாயத்தினால் மிகவும் சிவப்பாகிய கச்சையை இறுக்கிக்கட்டியும், கூந்தலின்கண் சந்தனாதி பரிமள தைலங்களைத் தடவிச் சீவிச் சிறுத்த வாசனை பொருந்திய மலர் மாலைகளைச் சூட்டியும் சிறந்த குசும்பாச் சாய வஸ்திரத்தினால், தலைப்பாகை கட்டியும், ரத்தின குண்டலங்கள், கவசம், ஹாரம், இவைகளை யணிந்தும், நன்மணம் வீசிய சந்தனத்தைப் பூசியும், கல்பக விருக்ஷத்தினின்று முண்டாகிய சிறந்த தேவாபரணங்களைப் பூண்டும் விளங்கிய சௌந்தரியக் கடலாகிய மன்மதனை அப்போது கண்ட எல்லோர்களுடைய மனமும், அவனுடைய தேகத்தை ஆலிங்கனம் செய்யக் காதல் கொண்டதனால் ரதிதேவியினுடைய சக்களத்தித் தன்மையையடைந்தது. பிறகு மன்மதனும் அவ்வாறாகிய ரதத்திலேறி ஸ்ரீ மகேசுவரனை வெல்லுவதற்கு விருப்பமுற்று வில்லைப்பற்றியவனாகி அவரருகிற் செல்லலுற்றனன். சப்த சமுத்திரங்களாகிய மேளவாத்தியங்களின் முழக்க ஓசையோடு கூட குயில்களாகிய காள வாத்தியங்களின் இன்பமான ஓசையும் விருத்தி

யாயிற்று. பாதரி மலர்களாகிய நாகஸ்வரமென்ற வாத்தியங்களில் கீதத்தோடிசைந்த, வண்டுகளால் சூழப்பட்ட மல்லிகை மலர்களாகிய சங்கவாத்தியவொலியானது அதிகரித்தது. இச்சம்பிரம மன்மதனும் தன்மனையாளோடு மேன்மை பொருந்திய வெள்ளிமலையாகிய கைலையை நோக்கி, தேரிலேறிச் சென்று வேண்டிய பயனைக்கொடுக்க வல்லதும் சித்தர்கள், சாரணர்கள், கந்தர்வர்கள், அசுரர்கள், கின்னரர்கள், இவர்களால் நிறையவுற்றதும், பலவித மரங்கள், கொடிகளிவைகளால் விளங்கி நிற்பதும், பூமிக்கலங்காரமாகியதும், ஆறு ருதுக்களாம் பருவங்கள் சேவிக்கப்பட்டதும், சிங்கங்கள், புலிகள், மான்கள் இவைகளால் நிறைந்ததுமாகிய வம்மலைக்குப்பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்தனன். பிறகு ரதிமணவாளன், முற்றும் வணக்க முள்ளவனாக, அப்படியே வணக்கமாயுள்ள ரதி தேவியுடன் கால்நடையாக அம்மலை மேவலுற்றான். அப்போதவன் வீணையை கொண்டவனாக வில்லிடத்து, தனது மலரம்புகளைத் தொடுத்து, ஆண்பெண் சேர்க்கையின்றி அவ்விடம்பிரிந்துநிற்கும் மிருகங்களை மோகமூட்ட எண்ணியவனாய், மரங்களின் மீதும், மிருகவினங்களின் மீதும் எய்தான். அப்போது அந்தப்பாணங்கள் அனைத்தும் ஸ்ரீ நந்திகேஸ்வரரது ஆஞ்ஞையால் பயனற்றவையாய், ஆகாயத்தை நாடிச்சென்றன. மரங்கள் அசைதலினின்றும் ஒழிந்தன. வண்டுகள் ரீங்காரம் செய்யாமல் இருந்தன. பறவைக் கூட்டங்களும் சித்திரம் போல்சிறிதும் அசையாமலும் கூவாமலும் நின்றன. அங்ஙனமே மற்றைய எல்லாப் பிராணிகளும் அவ்விடத்தில் நந்தியினுடைய கட்டளையினால் மனவிகாரம் இல்லாதனவாய்க் கிடந்தன. அப்போது மன்மதன், தனது அற்புத மிகுந்தனவும் பழுதுபடாதவையுமான அஸ்திரங்கள் ஸ்ரீ நந்திகேஸ்வரருடைய வல்லமையால் வீணானதைக்கண்டு, பயமும் நடுக்கமும் கொண்டு, மிகவும் விரைவுடன் ஓடோடியும் வந்து அந்நந்தி கேஸ்வரருடைய பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்துக் கொண்டான். பிறகு அவன் அவரை நோக்கி, "எல்லா நற்குணங்களும் ஒரு சேர அமைந்த நந்தியெம்பெருமானே, கேளுங்கள். விஷ்ணு முதலான தேவர்கள் எல்லோரும் சூரபதுமனுடைய கொடுமைக்கு ஆற்றாதவராய் மிகவும் நடுக்கம் கொண்டு உலகங்களுக்கெல்லாம் மேலானவராய் விளங்கும் ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியை நாடித்தவங்கிடந்தனர். அவர்கள் தவத்திற் கிரங்கிய ஸ்ரீ சிவபெருமான், தம்மை வணங்கிய தேவர்களின் துயரைத் தொலைக்க எண்ணங் கொண்டருளியவராய், அவர்களுக்குக் காட்சிதந்தருளி, "கேளுங்கள், தேவர்களே! சூரபதுமன் பல நாளாகத்தனது சிந்தையை வேறு விஷயங்களில் செலுத்தாது ஒரே நாட்டமாக எம்மைப் பயபக்தியுடன் ஆராதித்ததால், அவனெதிரில் யாம் பிரசன்னமாகி அவன் வேண்டிய மேலான வரங்களைக் கொடுத்தோம். அவ்வரமின்ன தென்று கூறுகிறேன். கேளுங்கள். யாம் அவ்வசுரனை நோக்கி, "அசுரனே, நீ எல்லா அசுரர்களுக்கும் முதன்மையானவனாய், நமது ஆஞ்ஞையின்படி ஆயிரத்தெட்டு அண்டங்களையும் எவரும் உனை எதிர்ப்பாரின்றி, உனது இரண்டு தம்பிகளுடன் சுகமாய் ஆளக்கடவாய். மேலும், நீ வேண்டும் வரங்கள் என்ன? கேள், தருவோம் என்று கேட்டோம். அப்போது அந்த அசுரன், எம்மை வந்தனத்துடனும், மனதில் நல்லபக்தியுட

னும், "ஹே ஜகதீசா! மஹாதேவா! கருணாசாகரமே! சங்கரனே! வரமளிப்பதில் மேலான நல்லதிறமை வாய்ந்தோனே! மஹாதேவா! தயாநிதியே! எப்போதும் செழித் தோங்கத்திருவருள் செய்பவனே! அடியேன், தேவர்கள் வாழ் உலகத்திலும், அசுரர்கள் வாழ் உலகங்களிலும், மற்றைய எல்லா இடங்களிலும், செலுத்தும் செல்வாக் கெல்லாம், கருணாசமுத்திரமாகிய தேவரீரது தயவால் அடைப்ப பெற்றனவேயன்றி வேறல்ல. தேவரீர், பக்தியுடன் பூஜிக்கிறவர்களுக்கும் புத்தியுடன் வணங்கு வோர்களுக்கும், அவர்கள் வேண்டி வந்ததைவிட மேலாகப் பெறும்படி அனுக்ரஹம் செய்கிறீர். பிரபுவே! அடியேன் வேண்டும் வரம் இதுவேயாகும். தேவரீரது சரீரத்தில் தோன்றியவரால் அல்லாது, மற்றைய இதற்கு முன்னாக ஜனித்தவர்களும், இப்போது ஜனித்திருப்பவரும், இனி ஜனிக்கப் போகிறவர்களுமான தேவர்களாலும் மற்றைய எவராலும் எனக்கு மரணமுண்டாதலாகாது. எல்லோரும் என்னைப் பணிதல்வேண்டும்; யானும் அவர்களை அடக்கியாள வேண்டும் என்னும் வரத்தைக்கேட்டனன்.?' அதை யாம் நன்கு யோசித்தறிந்து, அப்படியே அவ்வரத்தைக்கொடுத்தோம். வாருங்கள் தேவர்களே! ஆதலால் நாம் எல்லோருக்கும் தலைவனும், லோககுருவும், சிறந்துவிளங்கும் அழகிய திருமேனியுடன் கூடியவனுமான குமரனை வெளிப்படுத்துகிறோம். அவன் அந்த அசுரர்களைக் கொன்று உங்கள் துயரத்தினைப் போக்குவான்." என்று மஹாதேவர் திருவாய் மலர்ந்தருளிச் சென்ற பிறகு, தேவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து மேருமலையில் கூடி என்னை அழைத்தனர். யான் அவர்கள் கூட்டத்தை அப்போதே அடைய, அவர்கள் எல்லோரும், "இப்போது உலகக்ஷேமத்தின் பொருட்டு, ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியை உமையம்மையாருடன் சேரச் செய்வாயாக! அம்மையாரோ இப்போது பர்வதராஜனது மகளாய், மஹாதேவனது மடிமீது அமர்ந்திருக்க மேலான அரியதவத்தைச்செய்கிறார்கள். மஹா தேவரோ கைலையின்கண் தக்ஷிணாமூர்த்தி வடிவங்கொண்டு வேதாந்தப் பொருளாகும் ஆத்மஞானத்தை சனக, சநந்தன, சனாத சனத்குமாரர்களுக்கு விளக்கம் செய்து கொண்டிருக்கிறார். நீ எங்களைக்காக்க எண்ணம் கொண்டவனாய், அவ்விருவரையும் ஒன்று சேரச் செய்யவேண்டும் என்று கட்டளையிட்டனர். உடனே யான் அந்தக்கட்டளையின்படி, ரதியுடன் இவ்விடம் வந்தேன். நந்தியெம்பெருமானே. தாமே அடியேனுக்குத் தந்தை, தாய், பாட்டன், குருமுதலானவர் எல்லாம். கருணா மூர்த்தியே! தாமே இப்போது அடியேனுக்கு நன்மதி கூறியருள வேண்டும்." என்று கேட்டுக் கொண்டனன். என மேலும் சூத முனிவர் சொல்கிறார்.

"கேளுங்கள், முனிவர்களே! சர்வ லக்ஷணமும் அமையப்பெற்ற அழகிய திருமேனியுடன் விளங்கும் மன்மதன் கூறிய மாற்றத்தை, சகல ஜகங்களும் வந்தனிக்கும் ஸ்ரீ நந்திகேஸ்வரர் கேட்டருளியபின் தம்மை முன் சிவ சாம்பவ மூர்த்தியார் வாயிற்படியில் காவலாய் வைத்துச் செல்லுகையில், கட்டளையிட்டுச்சென்ற விஷயங்களை மனதிலெண்ணி, "வாராய், பாக்யசாலியான மன்மதா! நீயோ பரமேஸ்வரருக்கு என்னிலும் மிக்க பிரியமுடையவன். ஆதலால், நீ ஒரு தடையுமில்லாமல் உட்சென்று விரைவில் தேவகாரியத்தை

முடிக்கக்கடவாய். என்றாலும் இப்போதுனக்கு ஒரு வார்த்தை சொல்கிறேன். நீ மிகவும் அமைதியுடனும், ஜாக்கிரதையுடனும் மேலைக்கோபுர வழியாக ஸ்ரீ மஹாதேவரின் சன்னிதானத்தை அடைந்து, உன் இஷ்டத்தின்படி தேவ காரியத்தை நிறைவேற்ற கவலையற்றிருப்பாயாக!" என்று நந்திகேஸ்வரர்கூறிய கட்டளையின்படி நடக்க முற்பட்டு, ஸ்ரீ நந்திகேஸ்வரரை வணங்கி விடைபெற்றுத் தனது மனைவி ரதியுடன் தெற்கு வாயிலைக்கடந்து மேலைக்கோபுர வாயிலை அடைந்தான். தேவர்களோ அவனை விடாமல் பின் தொடர்ந்து வந்து ஆகாயத்தில் நின்றனர். மன்மதனோ தன் மனைவியாகிய ரதியுடன் ஆலயத்துட்பிரவேசித்து, ஆங்கு அலங்காரமான சிம்மாஸனத்தில் சுகமாக வீற்றிருப்பவரும் யோகீந்திரர்களான ஸனகாதியரால் துதி செய்யப்படுகின்றவரும், பரிசுத்தம் பொருந்திய ஸ்படிகம்போலும் நிறமுடையவரும், சிறந்து மிக்கொளிரும் உயர்ந்த ஆபரணங்களை அணிந்து, சிங்கத்தின் தோலை யுத்தரீயமாகவும், புலித்தோலை ஆடையாகவும் தரித்துள்ளவரும், மூன்று கண்களின் கருவிழிகளை மூக்கு நுனிகளில் ஊன்ற வைத்து விளங்குபவரும், யோகபட்டம் கொண்டு விளங்குவோரும், வேதங்களுக்கு எட்டாதவரும், அலையில்லாத கடலின் சோபை விளங்கநின்ற களத்திற் கருப்புடையவரும், ஜகங்களுக்குத் தலைமையான பிரபுவும், நித்தியப் பொருளாய் விளங்குபவரும், ஐஸ்வர்யமுள்ளவரும், சேதனப் பொருள்களுக்கெல்லாம் சேதனப்பொருளாய் இருப்பவரும், அக்னி, சந்திரன், சூரியன் என்னும் முச்சுடர்களைத் தமது காந்தியால் பிரகாசிக்கச் செய்கிறவரும், எல்லாம் அறிந்தவரும், எல்லாவற்றிற்கும் கர்த்தாவாயும் சுவாதீனமுள்ளவராயும் இருப்பவரும், எவராலும் வெல்ல முடியாதவரும், பெரியவற்றிற்கெல்லாம் பெரிய பொருளாயிருப்பவரும், அணுவுக்கணுவாய் எல்லாவற்றிற்கும் சாக்ஷிபூதராய் விளங்கும்தேவரும், மாயை முதலான தமோ குணாதீதரும், அஷ்டைஸ்வர்ய சம்பன்னரும், சுகத்தை அருள்செய்பவரும்' எல்லாவற்றிற்கும் ஆதியும், சாஸ்வதரும், முக்கண்களையுடையாரும் மேலான பெருமையுடையவரும், எதிர்க்க மனதினாலும் நினைக்கப்படாதவருமாகிய முழு முதல் இறைவராய மஹாதேவரைக் கண்டனன். உடனே அவன் கைகளினின்றும் வில்லும் அம்பும் நழுவிக் கீழே வீழ்ந்துவிட்டன. அதனைத் தேக மடியும் காலம் கிட்டியவனும், பயத்தால் சோர்வடைந்தவனுமான அந்த மன்மதன் சிறிதும் உணரவில்லை. ஜீவர்கள் கேட்டதும் நடுக்கங்கொள்ளும்படியுள்ள இத்தகைய பிரபாவங்களுடன் கூடியுள்ள ஸ்ரீ மஹாதேவரை ரதிதேவியும் கண்டு மிகவும் மனக்கலக்கங் கொண்டவளாய் வருந்தினள்.

## 11-வது அத்தியாயம்.

ரதிதேவி, பின் விளைவு நோக்கி "ஐயகோ! செய்யத்தகாத தொழிலில் பிரவேசித்த நமது நாயகர், சர்வேஸ்வரரிடம் எவ்வாறு எதிர்த்துச் சுகமாய் மீண்டு வரப்போகிறார்! என் சொல்லைக்கேளாமல் எக்காரணம்பற்றி மடத்தினமாய் இவ்விடம் அவர் வந்துசேர்ந்தார்? ஒருவேளை இவர் எடுத்த பிரயத்தனத்தில் வெற்றி கொண்டு வெளிவந்தால், அது இவர் மறுபடியும் தமது தாயுதரத்தினின்றும் வெளிப்பட்டது போலாகும். எவனுயிரையும் போக்க வல்ல எமனும், தேவதி தேவராய் விளங்கும்: ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி யிடத்து, தாஸ்த்

தன்மை வகித்துச்செல்ல மாட்டானுயின், அவனும் உயிருடன் மீண்டுவருவது அசாத்யமென்றால், மற்றையோரின் நிலைமையை யான் என்னென்று சொல்வது!'' என்று ஏங்கினள். மன்மதன் சிறிது நேரத்திற்குப்பின் மயக்கந்தெளியப் பெற்றவனுய்த் தன்மனதைத் திடஞ்செய்து கொண்டு, மீண்டும் நடுக்கத்துடன் கீழே வீழ்ந்திருந்த தனது வில்லையும் அம்புகளையும் கையிலெடுத்து, பக்கமாக அடர்ந்து வளர்ந்துள்ள சுரபுன்னை மரங்களின் வரிசையில் மெதுவாகச்சென்று மறைந்து, வில்லைப் பயத்துடன் நாணேற்றி, மேலான யோகியர்களது மனக்குறிக்கும் அப்பாற்பட்டவராய் விளங்கும் இறைவரைக் குறியாகக் கொண்டு, சம்மோகனம் என்னும் அஸ்திரத்தை நாணில்பூட்டி, இத்தகைய தீய தொழிலை, பினுகபாணியாகிய பரமசிவனுரிடத்துச் செய்ய எக்காரணங் கொண்டு, தேவர்கள் என்னை ஏவினரோ! அந்தோ! மிக்க தீமைக்கேதுவாக எனது இடது கண்ணும் புயமும் துடிக்கின்றனவே! ஆஹா! எவ்வாறு எனக்கு திரிபுராந்தகராகிய சர்வேஸ்வரரிடத்துச் செய்யும் போரில் க்ஷேமம் உண்டாகப்போகிறது! அவை யனைத்தும் போகட்டும். நான் இந்தப் போரில் எவ்வாறு பிழைக்கப்போகிறேன். நல்லது, நான் இந்த யுத்தத்தில் பிழைப்பேனே அல்லது சாவேனே அறியேன். எப்போது யான் விழிகளுக்குப் பரமானந்தத்தைத் தரும் பிரபுவாம் மஹாதேவரைக் கண்ணுற்றேனே அப்போதே யான் பாக்கியவான்களுக்கெல்லாம் சிறந்த பாக்கியவான் ஆனேன்.'' என்று பற்பல விதமாக யோசித்து, ஸம்மோகன மஹா மந்திரத்தை சபிக்கும்போது, ஆகாயத்தில் இருந்த விஷ்ணு முதலான தேவர்கள் எல்லோரும், அஞ்சலியஸ்தராய்ச் சுபத்தை நாடிய மன்மதனுக்குச் சுகமுண்டாகக்கடவதென ஜபித்தனர். மன்மதனே சுரபுன்னை மரங்களின் வரிசை மறைவில் நின்று வில்லை மண்டலமாகச் செய்து முற்றும் உணர்ந்த முழுமுதற் கடவுளாகும் மஹா தேவர்மீது அம்பைப் பிரயோகம்செய்ய நிற்கையில், கருணையங் கடவுளின் மூன்றுவது கண்ணின் கடையினின்றும் அணுவை நிகர்ந்த ஒரு தீப்பொறி யுண்டாய், குங்கிலியப் பொடிக் கூட்டத்தைப்போல் மன்மதனை விரைவில் எரித்துச் சாம்பராக்கி விட்டது. மதிமயக்கம் கொண்டிருந்த அவனது மனைவியாகிய ரதி தேவி, தனது கணவன் இறைவரது நெற்றிக்கண்ணினின்றும் வெளிப்பட்ட தீப்பொறியால் நாசமுற்றதைத் தெரிந்து கொள்ளவில்லை. பின்னர் மாடப்புறுவின் கழுத்தின் நிறத்தைப்போல் எல்லா வர்ணமுடையதும், சகிக்க ஒண்ணுத துர்நாற்றத்துடன் கூடியதுமான புகைவெளிப்பட்டதை வானத்திருந்த தேவ கூட்டங்கள் கண்டன. உடனே அந்தத்தேவர்கள் தமது வயிற்றில் தீமூண்டதுபோல் நடுக்கமுற்று, சர்வேஸனை நாவினுல் 'ஜய விஜாயீபவா.' என நாத் தமோறப் பிதற்றினர். ஸம்மோகனுஸ்திரமோ, தானுகவே வில்லினின்றும் வெளிப்பட்டு, மஹாதேவரிடம் சென்று அவர் அவர் செய்த ஹுங்காரத்தைச் சகிக்க வல்லமையில்லாது உடனே பருவத ராஜபுத்திரியை நோக்கித்திரும்பிச் சென்று, ஓர் நொடிக்குள் கைலையை விட்டு இமயமலைக்குப் போய், தான் உயிரிழந்தவன் கையால் ஏவப்பட்டதாயிருந்தும் அவ்விடத்தே தவக்கோலம் கொண்டு விளங்கும் அம்மையாரது மார்பில் வன்மையுடன் பாய்ந்தது. அந்த அஸ்திரம், பஞ்சபாணனுகிய மன்மதனுல்,

பார்வதி பரமேஸ்வர ரிருவரையும் குறித்து விடப்பட்ட தாயிருந்தும், அது அவர்களுள் ஒருவரைவிட்டு மற்றொருவரும், எவற்றிற்கும் எட்டாத ஈஸ்வரி யின் மீது மாத்திரம் பாய்ந்தது வியப்பன்றோ? ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தி இவற்றை எல்லாம் அறிந்தும், ஒன்றும் அறியாதவர்போல் ஸனகாதி முனிவர்களுடன் முன்போல், ஒன்றும் பேசாது சின் முத்திரை கொண்டு விளங்கியிருந்தனர். பின்னர், இந்திரன், விஷ்ணு முதலான தேவசிரேஷ்டர்கள், கைலையின் சிகரத்தில் இறங்கி நின்று, எங்கும் வியாபிக்கலுற்றவரும், எல்லாவற்றிற்கும் கர்த்தாவாய் விளங்குபவரும், எல்லாம் உணர்ந்தவரும், காமனை யெரித்தவரும், அடியவர்கட்கு வேண்டிய பொருள்களை யளிப்பவருமாகிய ஸ்ரீமஹேஸ்வரரை வந்தனம் செய்து உச்சியில் கையுயர அஞ்சலி செய்து, "எவரிடத்திருந்து இந்த உலகங்கள் அனைத்தும் உண்டாகின்றனவோ, எவரால் உண்டான பிராணிகள் அனைத்தும், ஜீவிக்கின்றனவோ, எவரிடத்து எல்லா உலகும் லயமாகியதோ, எவர் எல்லோருக்கும் ஞானத்தை அளிப்பவரோ, எவர் எல்லோருக்கும் அனுக்கிரஹ கர்த்தராய் விளங்குகிறாரோ அவராகும் சர்வேஸ்வரா! உமக்கு யாங்கள் வந்தனம் செய்கிறோம். எவர்மீது வேதவசனங்களும் எட்டாமல் திரும்புகின்றனவோ, எவர் மனமுதலான இந்திரியங்களுக் கெட்டாதவரோ, எவருடைய ஆனந்தம் அளவிடக் கூடாத அவ்வளவு பெரியதோ, அத்தகைய பரமேஸ்வரா! யாங்கள் வந்தனம் செய்கிறோம். மூன்றுலகையும் வெற்றி கொண்ட இந்த மன்மதனுடைய அம்புகள் எல்லாம் எவரிடத்துச் சென்று பிரயோஜன மற்றுத்திரும்பியதோ, எவரால் மன்மதன் எவருடைய விழிக்கும் விஷயமாகாதபடி மனதிற்கு மாத்திரம் விஷயமாகச் செய்யப்பட்டானோ அந்த ப்பரமேஸ்வரனை வந்திக்கிறோம். தேவரீர் அளவு கடந்த ஆனந்தத்தை உடையவராகையால், வேதங்கள் தம்முடைய குணாதிசயங்களைக் கூறும் சந்தர்ப்பங்களில் எல்லாம் தம்மை அவ்வப்போது ஆனந்தமயர் ஆனந்தமயர் என்று சொல்கின்றன. ஆதலால் அளவில்லாத ஆனந்தத்தை யுடையவரும், ஆனந்தத்தை யறிந்தவரும், பயலேசத்தைச் சிறிதும் அறியாதவருமாகிய தேவரீரை நமஸ்கரிக்கிறோம். ருக், யஜுர், ஸாமம் என்னும் மூன்று வேதங்களுக்கு ஆதி கர்த்தாவும், அந்த மூன்று வேதங்களையே முகமாக வுடையவரும், அந்த மூன்று வேதங்களின் இடையே சிவமாய் விளங்குபவரும், மூன்று வேதங்களின் முக்கியப் பொருளுமாகிய தேவரீரை வந்தனிக்கிறோம். நீலகண்டரே! வந்தனம். எவரிடத்திருந்து இந்த மூன்றுலகங்களும் உண்டாகின்றனவோ, எவரிடத்தில் லயமாகின்றனவோ, எவரால் இம்மூன்றுலகும் ஆனந்த மடைகின்றவோ, அத்தகைய ஸர்வபிரபஞ்ச ஸ்வரூபாகிய முழுமுதற் கடவுளுக்கு வந்தனம். வேதவாக்கியங்கள் எவரை 'ஸஏவஸோமியா இதமக்கிர ஆஸீத்' என்றும், 'மக ஏவேதித்த பிரம்மா' என்றும், 'ருதம்ஸத்யம் பரம்பிரம்மா' என்றும், 'புருஷஸ் ஸன்மஹோநம! என்றும், 'ஸத்தியம் ஞானமனந்தம் பிரம்மா! 'என்றும், 'ருதம் ஸத்யம்பரம் பிரம்மா' என்றும் முறையிடுகின்றனவோ அவராய் விளங்கும் தேவரீருக்கு யாங்கள் வந்தனம் புரிகிறோம். ஸ்தாவர சங்கமவடிவமாகிய பிரபஞ்சங்கள் அனைத்தும் எவருடைய சரீரமோ, அவையனைத்தும் எவருடைய நியமனத்தின் அதீனமானவையோ, எவர் பிரபஞ்சங்கள்

எல்லாவற்றிற்கும் அதிபதியோ, எவர் ஜகங்களுக் கெல்லாம் ஆதியோ அந்த கைய பிரபுவாகிய தேவரீரை வந்தனம் செய்கிறோம். மேலான சுபங்களு க்கு இருப்பிடமானவரும், பரமாத்மஸ்வரூபரும், எல்லாப்பிராணிகளின் ஹிரு தயகுகையில் குடியிருப்பவரும், மேலான மேன்மையுடையவருமாகிய உம் மை வந்தனிக்கிறோம். ஹே! சம்பு! ஹே! மஹாதேவா! எல்லாத் தேவர் களும், அசுரர்களும், தேவரீரது கடலின் திவலையாய் இருக்கிறோம். ஹே மஹா பிரபுவே! தேவரீர் எங்களைக் காத்தருளல் வேண்டும்.'' என்று துதி செய்தனர்.

தேவர்கள் இங்ஙனம் துதிசெய்து நிற்க, அந்தப்புரத்தில் தவக்கோலம் கொண்டு விளங்கும் ஸ்ரீ பரமேஸ்வரர் தமது முன்பாக வந்து நின்ற நந்திகேஸ் வரரை நோக்கி, "இது என்ன கூய்ச்சல்? எவர் இவ்விடத்தில் இவ்வாறு செய்வது? எக்காரணம்பற்றி அவர்கள் இவ்வாறு கூய்ச்சலிடுகின்றனர்?'' என்று கேட்டருளினர். அதற்கு நந்திதேவர், கைகட்டி சன்னிதானத்தின் முன் நின்று, "எல்லாக்குணமும் ஒரு சேரப்பொருந்திய இறைவரே! விஷ்ணு, பிரம்மா, இந்திரன் முதலான தேவர்கள் எல்லோரும், தமக்கு அசுரர்களால் உண்டான துன்பத்தைப் போக்கிக் கொள்ளும் பொருட்டு, தேவரீரது சன்னி தானத்தை நாடிச் சரண்புகும் பொருட்டு விரைவாக ஓடிவந்து, தமது சேவை யை நாட இச்சையுடையவராய் அனேக நாளாகக் காத்துக்கொண்டிருக்கிறார் கள்.'' என்றனர். அதனை மஹாதேவர் கேட்டு, உடனே தேவர்களை உள்ளே விடும்படி நந்திதேவருக்குக் கட்டளையிட்டார்கள். உடனே சிலாத முனி வரின் புதல்வர் விரைவாக வெளிவந்து, வருந்தி நிற்கும் தேவர்களை உள்ளே அழைத்துக் கொண்டு வந்தனர். அப்போது தேவர்கள் எல்லோரும் உண் மைப்பக்தியுடன் கூடியவர்களாய், உடனே தலைவணங்கித் தண்டனிட்டு நின் றனர். சர்வேஸன் அவர்களைப் பார்த்து, "தேவர்களே! நீங்கள் எல்லோரும் எம்மைக் குறித்துச் செய்த துதியைக்கேட்டு யாம் மிகவும் சந்தோஷம்கொண் டோம். உங்கள் கோரிக்கை என்ன? நீங்கள் எது விஷயமாக வந்தீர்கள்? வேண்டிய வரத்தைக் கேளுங்கள்; தருகிறேன். நீங்கள் செய்த ஸ்துதியானது நமக்கு முற்றும் மனக்களிப்பை உண்டு பண்ணியது. இத்துதிகளை ஒருவா றுகப் படிப்பவரும் கேட்பவருமாகிய மனிதர்கள் பாவங்களினின்றும் விடுபட் டவராய், கிடைத்தற்கரிய வரங்களை அடையப்பெற்றவராவர். புதல்வரை வேண்டுவோர் புதல்வரையும், பெண்ணை வேண்டுவோர் அழகமைந்த பெண் ணையும் அடைவர். பசுக்களை விரும்புவோர் பசுக்களையும், வித்தையை விரும் புவோர் வித்தையையும் சுவர்க்கத்தை வேண்டுவோர் சுவர்க்கத்தையும், மோக்ஷ சாம்ராஜ்யத்தை விரும்புவோர் மோக்ஷ சாம்ராஜ்யத்தையும் அவசியம் அடைவர். அருவருக்குத்தக்க பாவிகளாயினும், அவர் புண்ணியவான்களே யாவர். மேலும், இதைப்பற்றி யான் விவரமாக வளர்த்திச் சொல்ல வேண்டிய தென்ன? இத்துதியைச் சொல்வோர் அனைவரும் எமக்கு மிகவும் பிரியம் உள்ளவராவர்.'' என்று திருவாய் மலர்ந்தருள, அதனைவிஷ்ணு முதலான தே வர்கள் செவிக்கின்பமுறக் கேட்டனர். மஹாதேவனுடைய ஹித வசனங்

களாகும் புத்தமிர்தத்தைச்செவியாம் வாயினுல் குடித்த தேவர்கள் எல்லோரும் மனக்களிப்புடன் மலர்ந்த தாமரையை யொத்த முகத்துடன் கூடியவர்களாய் விஸ்வேஸனுகிய சர்வேஸனே மேலும் வணங்கிப் பணிந்தனர்.

## 12-வது அத்தியாயம்.

பின்னர், தேவர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து, சம்சார சாகரத்தினின் றும் ஜீவர்களைக் கரையேற்றவல்ல தோணியாய் விளங்கும் ஸ்ரீ சிவசங்கரப் பெருந்தகை யிடத்து, தமது துன்பத்தைத் தொலைக்கவல்ல ஸ்ரீ குமாரக்கடவு ளின் வெளிப்பாட்டைக் கருதி வந்தனத்துடன் வேண்டிக்கொண்டனர். அதற்கு மஹாதேவர் புன்னகையுடனும் வீறுடனும் தேவர்களை நோக்கி, "உங்கள் கோரிக்கை விரைவில் நிறைவேறும் இன்னும் சிலகாலம் பொறுத் துக் கொள்ளுங்கள்." என்று திருவாய் மலர்ந்தருளி, அவர்களை விடைதந்த னுப்பினர். அப்போதும், புத்தி மயக்கத்தால் கலங்கியிருந்த மன்மதன் மனைவியானவள், தனது நாயகன் ஈசன் கண்ணினின்றும் உண்டான தீப்பொறி யால் மாண்டதைச் சிறிதும் அறியவில்லை. அவள், "ஆ பிராணேசா! தாம் உயிருடனிருக்கிறீரா? என்று கூறித் திடீரென எழுந்து விழிக்க, தனது நாய கனது எரிந்த உடலில் மாறுபட்ட சாம்பர்தூளிகள் ஆகாயத்தில் அணு அணு வாய்ப் பறக்கக்கண்டனள். பின்னர் அவள் பெரிதும் மனவருத்தம் கொண் டவளாய்ப் புவியில் விழுந்து புரண்டு, தலைமயிர் அவிழ்ந்து விழ, கண்களினின் றும் நீர் தாரைதாரையாக வடிய புலன்கள் தடுமாறப்புலம்பினுள்; கதறினுள் அழுதாள். "ஆ பரந்த கண்களையுடைய என் பிராணநாதா! உலகில் ஒப்பு யர்வற்று விளங்கிய உமது சிறந்து அழகுடன் விளங்கிய திருமேனி யெவ்விடம் போய்விட்டது! ஆஹா! யான் என்செய்வேன்! ஐயோ! தெய்வமே! குற்ற மில்லாத நாதனற்ற என்னை நீ அறியாயா? என்னையேனோ இவ்விதம் கெடுத் தனை? உன்னுல் இவரெக் காரணம்பற்றிக் கொல்லப்பட்டார்? எனக்குத்தாயும் இல்லை; தந்தையும் இல்லை; உடன்பிறந்தார் இல்லை; உற்றார் இல்லை; சினேகி தர் இல்லை. என் குடும்பத்திற்குள் துணையாகத்தேவரீரையன்றி வேறு எவர் கதியாயிருப்பவர்? ஐயகோ! இனி எவ்வாறு உயிர் வாழ்வேன்! பிராணபதி! தாம் என்மீது வைத்த அன்பை யொழித்து, தம்மையே கதியென எண்ணி யிருந்த என்னையும் தனியாகவிட்டு, நீர், கரையற்றுத் தாமரையையும் விட்டுப் பிரிந்ததுபோல் ஏனோ மறைந்தோடி விட்டீர். தேவரீர் விஷயத்தில் அடியாள் என்ன பிழை செய்தேன். தாமும் அடியாளுக்கு இதுவரையில் ஒரு தவறும் செய்யவில்லையே. அழுது கதறும் அடியாள் மனங்களிக்க திடீரென எதிர் வந்து காட்சியளிக்க மாட்டீரா? தாம் என்னைப்பெயர் தடுமாற அழைத்த காரணத்தால் யான் எனது ஒட்டியாணத்தால் உம்மைக் கட்டியதைத் தாம் எண்ணியே என்னைப்பிரிந்திருக்க வேண்டும் என்பது நிச்சயம்! பிராணநாதா! நான் அதை அறியாமையால் செய்து விட்டேன். தேவரீர் அது விஷயமாக என்னை க்ஷமித்தருளல் வேண்டும். பிராணேசா! நா னும்மை யன்று எனது காதில் அணிந்துள்ள நெய்தல் மலரினுல் அடித்த குற்றத்தையும் பொறுத்தருளுங்கள். தாம் அடியாளுக்கு எப்போதும் நீ

மனதிலேயே வசிப்பவள்.'' என்று கூறிய வார்த்தை பொய்யாய் விட்டதே! அந்த வார்த்தை உண்மையானால், தாம் எரிந்து போம்போது, யான் ஏன் உம்முடன் சாகவில்லை. இப்போது தாம் இவ்வுலகை நீத்துப் பரலோகத்திற்குச் சென்ற தமது தகுதியை, விதியினால் அநியாயமாய் வஞ்சிக்கப்பட்ட யானும் அடைகிறேன். அடியாளும் இப்போதே உம்முடன் உடன் கட்டையேறுகிறேன். யான் உம்மைவிட்டு ஒருக்ஷணமேனும் இனிபிரிந்திரேன்! அப்படி பிரிந்திருப்பேனாயின், ஈ இந்தஜன்மம் பழிப்பவர்களுக்கன்றோ பாத்திரமானதாகும்! இன்னும் ஓர்முறை, உமதழகிய திருமேனியுடன் எழுந்து வந்து கலவித்தொழிற்குத் தூதாகச் செல்லவல்லதும் இனிய குரலுடன் கூவுதலில் திறமைவாய்ந்ததுமான உங்கள் குயிலை ஒருவாறு என்னிடம் அனுப்ப மாட்டீரோ! தாங்கள் அவ்வப்பருவகாலங்களில் என்னை அலங்கரிக்கச் சூட்டிய மலர்கள் எல்லாம் இன்னும் வாடாமல் இருக்கின்றனவே! தம்மை இப்போது யான் காண்பதற்கில்லையே! தெய்வம், எக்காரணம்பற்றி இவ்வாறு செய்து விட்டது! கொடியவராகிய தேவர்கள் வாழும் நிமித்தம் அவர்கள் உம்மைச் சர்வேஸ்வரனிடம் அனுப்பினரே! இது என்ன வஞ்சகம்! தேவர்கள் ஊரார்பிள்ளைகளைக் கொண்டு ஆழமறிந்து அளவிட்டுக் கொள்வதில் மிகவும் தேர்ந்தவர்கள் என்பதை இப்போது நான் நன்றாய் அறிந்து கொண்டேன். அந்தோ! அந்தோ! இனிதனித்து நான் எவ்வாறுயிர்வாழ்வேன்! பிராணேசா! யான் உம்மை அப்போதே பலவாறு தடைசெய்தேனே! பாழும் பிரமனுடைய சாபத்திற்கஞ்சி, யான் கூறியவற்றை யெல்லாம் கேளாது, இவ்விடம் வந்தீரே! எவனுக்கு எந்த இடத்திற் செல்வதால் உயிருக்கு அபாயம் உண்டாகுமோ அவனுக்கு அந்த இடத்திற்செல்ல அவனுடைய கால்களே தள்ளாட்டமடையும் என்பதுண்மையன்றோ? அங்ஙனமீறிச் செல்வோனுக்குச் சகுனங்களும் தோன்றாவே! புத்தியற்றவர்கள், பின்விளைவு நோக்கிக்கூறும் தமது மனைவிமாரின் வார்த்தையையும், விதிவன்மையால் மறுத்து விடுகின்றனர். இத்தகைய உலகவழக்கு எனக்கே இப்போது பிரத்தியக்ஷமாயிற்று. அன்றியும், ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியே எல்லா ஜீவர்களின் அந்தக்கரணத்திற் பொருந்தி அவரவரை ஆட்டுவிப்போராய் உள்ளார். எங்ஙனம் அணுத்திரள்கள் பெருங்காற்றின் வசமாகச் செல்கின்றனவோ, அங்ஙனமே எல்லாஜீவர்களும் அவர் தம்திருவுளப் பாங்கின்படியே ஓடுகின்றன. நாதனற்றுப் பரதவிக்கும் எனக்கு அந்தப் பரமசிவமே கதியாவர். அவரே தந்தைக்குத் தந்தையாய் விளங்குபவர்; அவரே தாய்களுக்குத்தாய்; பாட்டனுக்குப் பாட்டன். அவரது உபயபாதார விந்தங்களை யான் எப்பொழுதும் சரணடைகிறேன். லோகரக்ஷகரும் தலைவருமாகிய இம்மஹாதேவர் கருணாசாகர மூர்த்தியாதலால், இவர் என்பிராணநாதர் அடைந்த கதியையே யானுமடையத்தயை செய்து திருவருள் புரியவேண்டும். இல்லையேல், என்னுதனுயிரை யாவது மீட்டும் தந்தருளவேண்டும். இச்சர்வேஸ்வரர், ஒன்றைச் செய்வதற்கும் செய்யாமலிருப்பதற்கும், ஒன்றை மற்றொன்றாக மாற்றுவதற்கும் வல்லமையுள்ளவர்.'' என்று பலவாறாக ஈனகலவரத்துடன் அழுது மாரடித்துக்கதறினள். கருணையங் கடலாகிய பிரபு, அந்தரதியின் முறை பாட்டைக் கேட்டு; வழி

சானந்தராகிய நந்திதேவரையழைத்து, எவரோ முறையிட்டழுவதற்குக் காரணம் என்ன என்று விசாரித்தனர்.

நந்திதேவர் மஹாதேவரை வணங்கி, "என் ஆண்டவனே, மன்மதன் தேவர்கள் கட்டளையை மேற்கொண்டவனாய், எல்லா உலகங்களும் சரண் புகும் தேவரீர்முன் போர்செய்யத் தனது மனைவியுடன் இங்கு வந்தனன். ஹேசங்கரா! அவன் தேவரீரைக் கண்டவுடனே தனது வினையால் எரிபட்டு மாண்டான். அதனால் அவன் மனைவி ரதிதேவியானவள் துக்கமேலிட்டுத் துயரக்கடலில் ஆழ்ந்து கதறுகிறாள். கருணாசாகரமே! தேவரீர் கதியற்றுப் புலம்பும் அக்காமன் மனைவியைக் காத்தருள் புரியவேண்டும்." என்று கூறி, அந்தரதி தேவியை மஹாதேவர் முன்னர் கொண்டு வந்துவிட்டனர். ரதியும் அப்போது ஜகங்களுக் கெல்லாம் தலைவரும் தந்தையுமாய் விளங்கும் ஈசனை வணங்கி, கட்டுதலின்றி விரிந்து அலையும் கூந்தலுடனும், தேகநடுக்கத்துடனும், கண்ணீர் ஆறாகப் பெருகவும், பரிதாபப்படும் முகத்துடன், தேகத்தில்புழுதிபடிய அடிக்கடி பூமியில் விழுந்து கதறியழுதனள். மஹாதேவர், அதிகதுயருடன் கூடிய அந்தரதியின் மீது மிக்க இரக்கமுடையவராய், சனகாதி முனிவரர்கள் தம்மை நோக்க, அவளைப்பார்த்து மந்தஹாஸ முகத்துடன், "வாராய் குழந்தாய்! இனி உன்விசனத்தைவிடு. உன்கணவன் எனக்குத் துரோகம் செய்தவனாயினும், குழந்தாய், நீ நல்லொழுக்கமும் கற்பரசியாக விருப்பதால், உன்கணவனை யாம் பிழைக்கச் செய்கிறோம். நீ இன்னும் சிலகாலம் இதைச் சகித்துக் கொண்டிரு." என்று திருவாய் மலர்ந்தருளி அவளைச் சமாதானம் செய்தனர். பிறகு அவர் ஸனகாதி முனிவர்களைப் பார்த்து, "முனிவர்களே! நீங்கள் எப்போதும் எம்மை இவ்வடிவமாகவே தியானம் செய்யுங்கள். யாம் இப்போது தேவர்கள் குறையை அகற்றச் செல்கிறோம்." என்று மறைந்தருளினர்.

கைலையில் அங்ஙன நிகழ்கையில், ஜகதம்பிகை யாகிய உமையம்மையாரோ, பர்வதராஜன் புதல்வியாய் உதித்துப்பின், அதிகடூரமான தவத்தை நாடிப்பரமசிவத்தைத் தியானம் செய்துவந்தனர். பரமேஸ்வரரும் அம்மையாரது தவத்தால் வலிக்கப்பட்டவராய், அவரது பக்தியைச் சோதிக்கும் வண்ணம், மாறுவேடம் பூண்டு, அம்மையின் ஆசிரமத்திற்குச் செல்ல முயன்றனர். அப்போது சுவாமிகள் பூண்டமாறு வேடத்தின் பெருமை, சொல்லுக் கடங்காததாயினும் சொல்கிறேன். கேளுங்கள். அவர் முதுமை மிகுந்த கிழப்பிராமண கோலத்துடன், வார்த்திகப் பருவத்திற்கேற்ற வெண்மை நிறமும் பருமனு முடைய சரீரத்தையும், சிதறிப்பின்னலுற்ற நரம்புகள் தோன்றும் இரண்டு பாதங்களையும், இடறும் கால்நடையையும், மேலான கச்சத்துடன் கட்டிய வஸ்திரம்தானே அடித்தொடைமேல் நழுவிவிழலுற்ற இடையையும் ஆழ்ந்த நாபியாகும் மடுவோடு கூடிப்பருத்து விளங்கும் தொந்தியிற்றோன்றும் மூன்று மடிப்பையும், மேலான பிரகாசம் பொருந்திய மார்பினிடத்துத் தொங்குதலுற்ற தனத்தையும், மலையிற்படர்ந் தோங்கிய கொடிகளைப் போலும் விளங்கும் திருநூற் சரடுகளையும், வெண்மைநிறம் பொருந்திய மீசையை

யும் தாடியையும், தொங்கிய புருவத்தையும், நரைத்த இமைமயிரையும், சரத் காலத்து மேகங்களால் வளைத்துக் கொள்ளப்பட்ட சந்திரனை ஒத்த, அழகிய முகத்தையும், அழகிய காதுகளையும், அழகிய மூக்கையும், பற்கள் இல்லாத வாயையும் எப்போதும் அசைதலமைந்த மேலுதழையும், வெள்ளென நரைத்த மயிர்களுடன் கூடிய சிறிய குடுமியையும், திருநீற்றால் வெளுத்த திருமேனி யையும் உடையவராய் விளங்கி, திரிபுண்டர வரிசைகள் திருமேனியில் ஒளி செய்யருத்திராக்ஷ மாலைகள் ஆபரணமாகப்பூண்டு, வன்மையுள்ள மூங்கிற்றடி யைக்கரத்திற்றங்கி, நல்லெண்ணத்துடன் வேதவாக்கியங்களைச் சொல்லிக்கொ ண்டே, அகண்டு மிகவும் நீண்டசரீரத்தைச் சுமந்து செல்ல அசக்தரான வரைப்போல், அதிகவயதானதால் வாதநோய் பீடிக்கப்பட்ட பாவனையாய் கைகால்தடுமாற நின்றனர். விருத்தவேடம்பூண்ட வெள்விடையேறி அம்மை யார் ஆசிரமத்தை அவ்வாறு அடைந்ததும், ஆங்கு அசாத்யமான கொடியத வத்தைச் செய்து கொண்டிருக்கும் அம்மையாரைப் பலபல முனிவர்களும், யோகியரும் வந்துதரிசித்து வணங்கி, அம்மையாரது அதிதிபூஜையை அன்பு புடனும் ஆனந்தத்துடனும் ஏற்று மெல்லமெல்ல வெளியில் வந்துகொண்டிரு ப்பதைக் கண்டனர். பிறகு அவரும், 'ஞானத்திற் சிறந்த பெரியோன்'' என்று வேதங்கள் கோஷிப்பதன் உண்மைப் பொருளை நன்றாய் விகசிதப்படுத்திக் கொண்டே, பர்வதராஜகுமாரியைப் பார்ப்பதற்கு மிக்க காதல் கொண்டவராய் மெல்ல ஆஸ்ரமத்தினுட் சென்றனர். சென்று அங்குச் சருகுமுதலான வற் றையும் கூடப்புசியாமல் தவம்செய்யும் அவர்களை யாம் உமையம்மையாரின் தோழிகளைக்காண அத்தோழிகள் பலரும் மிகவும் வயோதிகமடைந்து விளங் கும் அந்தமுனி சிரேஷ்டரைத் தழைகளால் வேயப்பட்ட உமையம்மையின் அந்தப்புரத்திற்கு அன்போடு அழைத்துக் கொண்டுபோயினர். அப்போது தேவியானவள் முனிசிரேஷ்டரை எதிர்கொண்டு டன்போடழைத்து, அர்க்கிய பாத்ய, ஆசமனீய, ஆசன முதலியவற்றால் அன்போடு உபசாரம் செய்து, மெல்லென விசிறி, அவ்விசிறியில் எழுந்த காற்றினால், வந்தவயோதிகரது தேகத்தில் வெளிப்பட்ட வியர்வையைப் போக்கினர். விருத்தரும், சிறிது நேரத்திற்குப்பின் நடந்து வந்ததால் உண்டானகளைப்பு நீங்கியவராய், உமையை நோக்க, பூசிக்கத்தக்க பெருமையும் நற்குணமும் அமைந்த பெண்ணே! நீ அழகிய முகமமைந்த மாதர்களுள் எல்லாம் மிகவும் மேலான அழகுடைய வளாகக்காணப்படுகிறாய். ஆஹா! இதுஎன்ன ஆச்சர்யம்! பர்வதராஜன் பல காலும் செய்த தவத்தின் பயனெல்லாம் ஒருரு எடுத்து வந்ததுபோல் முற் றும் உயரழகுவாய்ந்த உத்தமி! நீ சுகமாய் இருக்கிறாயா? உன்னுடைய அருந் தவம் சரிவர நடந்துவருகிறதா? சிறந்தவதன முடையவரே! நீ உனது திற மைக்குத்தக்கது போல் தவத்தில் முயன்றுள்ளனையா? கல்யாணகுணங்கள் நிறையப் பெற்றவரே, வருக! நீ தர்மங்களுக் கெல்லாம் முக்ய ஆதாரமாக வுள்ளது சரீரமென்பதைத் தெரிந்திருக்கிறாய். ஆதலால் முதலில் அந்த ஆதாரமான சரீரத்தை முதலில் காத்துக்கொள். மங்களத்தன்மை அமைந்த மாதே, எவர்க்கும் உலகில் சரீரத்தைவிட சுகமளிக்கும் பொருள்வேறு ஒன்

றும் இல்லை. வாராய் அம்மா! உனது ஸ்நான விதிக்கேற்றவாறு ஜலசௌக்யம் செம்மையாய் இருக்கிறதா? அழியக்கூடியதும், கிடைத்தற் கருமையானது மான இச்சரீரத்தை அடைந்து, இந்தஜீவன் யாதொரு சுகத்தையும் அனுபவிக்கப்பிரயத்தனப்படாது இவ்வாறிருப்பது என்ன ஆச்சர்யம்? சொல். நீயோ பலரும் புகழ்ந்து கொண்டாடும் திருமேனியுடைய சிறந்த யௌவனமெட்டிய ராஜகுமாரியாகிய குழந்தை. அங்ஙனமிருந்தும் இப்போது நீ தவத்தால் கிழவியைப்போல் காணப்படுகிறாய். தவத்தால் இன்பம் கிடைக்கும் என்று எவர் சொல்கின்றனர்? வாராய், பருவத ராஜகுமாரியாய் வந்தஜகதம்பிகையே! கிரிராஜன் செல்வக்குழந்தாய்! நீ உண்மையாய்த் தருமத்தினால் மிகப்பெரியவளானாய். இது நிச்சயம், வாராய், பூஜிக்கத்தக்க மேன்மை பெற்ற மாதரசே! தேவரும் முனிவர்களும், யோகியரும் உன்னையே வந்தனம் புரிகின்றனர். அங்ஙனமாக நீயோ இப்போது, யாரோ ஒரு புருஷனை மனதிற் குறித்துத் தியானம் செய்கிறாய் என்று தவத்தால் சாதகம் செய்யப்பட்ட மனமுடைய எனக்கு வெளியாகிறது. பெரியோர் எப்போதும், உண்மையையே முக்கியமாகக் கொள்வராகையால். ஹே மிக்க பாக்யசாலியாகிய மாதே, நீயும் இப்போது உண்மையையே உரைத்தல் வேண்டும். உன்னைக் காணவந்த என்னையல்லாது, இவ்விடத்தில் வேறு ஒருவரும் இல்லை என்பதைத் தெரிந்துகொள். ஆதலால், இப்போது, நீ உன் வெட்கத்தைவிட்டு, எல்லாவற்றையும் என்னிடம் உள்ளபடியே விவரமாகச் சொல். அழகிய புருவங்களையுடையமாதே! மிகவும் வயோதிகமடைந்து நரைத்தும் திரைத்துமுள்ள என்னிடம் கூறத்தகுந்த ரகசியம் அது என்று உன்மனதிற்குத் தெரிந்தால் மாத்திரம், அதை இப்போது சொல்.'' என்றனர்.

உமையம்மை உலகங்களுக்குத் தலைவராய் விளங்கும் ஸ்ரீ பரமேஸ்வரர் உரைத்த மொழிகளைச் சாவதானமாகக் கேட்டு முகவணக்கத்துடன், அவரைப் பார்த்துப்பின், அன்னவருடைய திருமேனியின் தேஜஸைக்கண்டு அடிக்கடி மனநடுக்கங் கொண்டனர். வந்தவர் தமக்குரியவராயிருந்தும், அவரைச் சிறிது நேரம்வரையிலும் அம்மையார் இன்னவர் என்று தெரிந்து கொள்ளாதது, மிகவும் ஆச்சர்யமேயாகும்.

## 13-வது அத்தியாயம்.

மேலும் சூதர் சொல்லுகிறார்:—பின்னர் உமையம்மையார் வந்த வயோதிகர்மீது வைத்தவன்பும், பயமும்சேர்ந்த மனதை யொருவாறு தேறுதலடையச் செய்து கொண்டு தன்னுடைய தோழிகளுள் முக்கியமானவராகிய ஜயை, விஜயை யென்னுமிருவரையும் சந்தோஷத்தோடு கண் ஜாடையாலழைத்து; "தோழியரே! இப்பெரியவருக்கு யான் எக்காரணம்பற்றித் தவம் செய்கின்றேன் என்பதைப்பற்றித் தெரிவியுங்கள். இலக்ஷ்மி விலாசம் பொருந்தப்பெற்றவிந்த பிராமண சிரேஷ்டர் பலவிதமான கலைகளைக் கற்றுத் தேர்ந்தவராகவுள்ளனர். ஆதலாலிந்தப் பெரியவருக்கு எனது வரலாற்றினை விவரமாகவும் விளக்கமாகவுமெடுத்துச் சொல்லுங்கள் என்று எச்சரிக்கை செய்தனர். அந்தக்கண் ஜாடையின் குறிப்பை ஜயை, விஜயை என்னும் தோழியருணர்ந்து

முன்னராகவே யவருக்கு வேண்டிய வுபசாராதிகளைச் செய்து அவர் தம்மா ணவிகளைப்போல் அவரண்டையில் நின்று, கேளுங்கள் பிராமண சிரேஷ்ட ராகிய பாட்டனாரே! தாங்கள் எங்களை யெப்படித் தங்கள் பெண்கள் எனச் சொல்லத்தகும்? நாங்கள் எல்லோரும் தங்களது பௌத்திரிகளன்றோ? எங்கள் தேவியார் மங்களகரமான திருமேனி தவத்தால் வருந்தலான விதத்தைச் சொல்லுகிறோம். தேவரீர் தயவுடனதனைக் கேட்டருளல் வேண்டும். மேலான வழகு பொருந்தியவளும். நல்லொழுக்கம், ஆசாரம், குணம் முத லானவற்றிற்கு நிலைக்களனானவளுமாகிய விப்பெண்மணி பர்வத ராஜனது செல் வக்குழந்தை யென்பதைத் தாங்கள் தெரிந்திருக்கலாம். இவர் மூன்றுலகத் துள்ளோர்களும் சரணடையத் தக்க பெருமை வாய்ந்தவரும், முக்கண்ணரும் சிறந்த பரிமளமுடையவரும், செழிப்பை யதிகரிக்கச்செய்பவரும், எமனைச் செயித்தவரும், ஆதியந்த மற்றவரும், சிறந்த மங்கள மூர்த்தியும், பிறப்பிறப் பற்றவரும், சிவவடிவானவரும், எக்காலத்து மிளமை நீங்காதவரும், புருஷர் களுள் சிரேட்டரும், எல்லாமங்களத்தைத் தருபவருமாகிய பரமசிவத்தைக் குறித்துத் தனக்கும் சர்வ மங்களமுண்டாக வேண்டுமென்று பிரார்த்திக்கின் றார். அன்றியுமிவர். சகல ஜெகங்களுக்கும் அதிபதியாகிய வப்பரமசிவமே தமக்குக் கணவனாக வேண்டுமென விரும்புகிறார். வாருங்கள் பாட்டனாரே! இந்தப் பெண்மணி தனது தந்தையார் கிருஹத்தில் தம்மைப்போன்ற பெரியவ ரிடத்து ஆகம புராணங்களெல்லாம் அன்புடன் கேட்டு, எந்த ஜெகதீசனை நினைத்த மாத்திரத்தில் ஜனங்களெல்லோரும் வேண்டிய வின்பங்களை வேண் டியவாறடைகின்றனரோ வந்த ஜகதீசனுடைய வுபயபாதார விந்தங்களை யெப் போதும் தியானித்திருந்து மிதுவரை யொருபயனும் அடையாதிருக்கின்றாள். அன்றியுமிவள் அப்பரம்பொருளின் திருநாமங்களையே யனவரதமும் ஜெபிக் கின்றாள். அவரது திவ்யகதைகளைக் கேட்பதிலே மிக்க வாவல்கொண்டவளா யிருக்கிறாள். தாவரசங்கம ரூபமாகிய விவ்வுலகை சாக்ஷாத்பரசிவமாகவே தனது ஞானக்கண்ணால் நோக்கியவர்மீது மேலுமேலும் பக்தி விசேஷித் தவளாயிருக்கிறாள். இவள் அவர்மீது கொண்டவாசை மிகுதியால் மனநொந் தவளாகிப் பகற்காலத்தில் ராஜ கிருஹததில் ஸ்நானத்தின் இயந்திரங்களின் மூலமாய் நீர் தாரையாகச் சொரியும்படி யமைக்கப்படும் கட்டிடமாகிய பாராக் கிரஹத்தில் வசித்து மிராக்காலங்களில் தளிர் மெத்தைமீது உட்கார்ந்தும் விழித்த வண்ணமாகவே யிருக்கிறாள். இவள் இரவு தோறும் பிற்பொழுதில் ஒரு கணநேரம் நித்திரை செய்வதே அசாத்தியம். அப்படி நித்திரை செய் தாலந்த நேரத்தில் அவளுடைய கனவில் அவளதாசைக்குரிய நாயகனைக்கண்டு உடனே விழிப்படைந்தவளாய் ஆ! எனதாசைக்கிசைந்த நேசனே! தாம் என்னை விட்டு எங்குச் செல்லுகின்றீரென்று புலம்பிக் கைகளாலவரைப் பற் றப்போகிறாள். ஜெகதீசா சகல வேதாந்தங்களும், ஆகாயம், நீர், பூமி, முத லான வெவ்விடத்தும் வியாபித்து நிற்பவர் தேவரீர் என முறையிடுகின்றனவே விஷ்ணு முதலான புலவர்களெல்லோருந் தம்மை யெங்கு நிறைந்தவரென்று சொல்லுகின்றனரே. ஆ! ஆ! தம்மையே பாவித்து நிற்கும்படியானைத்தா மென்னமறியாது நிற்கின்றீர். ஜகங்களுக்கெல்லாம் வாழ்வை யளிப்பவரா

கிய பரமேஸ்வரர் ஏனோ உன்மீது இன்னும் இறங்கவில்லை" என்று கதறு கிறாள். அங்ஙனமாக பர்வதராஜன் புத்திரியாகிய விப்பார்வதி மகாதேவருடைய சேர்க்கையைப் பலகாலம் எதிர் பார்த்தும் பயன்படாமற் போனதால் அவள் தனது தாய் தந்தையர்களுக்கு உண்மையை யுள்ளவாறு அறிவித்து எங்க ளோடு தவம்செய்யும் நிமித்த மிவ்வாசிரமத்தை யடைந்தனள். தவஞ்செய்யு மிந்தப்பெண்ணால் பயிரிடப்பட்ட செடிகளெல்லாம் பெரிய மரங்களாய் வளர் ந்து எப்போதும் மலர்களையும், கனிகளையும் தந்துநிற்கின்றன. இவள் வளர்த்த மான் குட்டிகளோ மக்களோடு மக்களையடைந்து தன்னினங்களை முன்னிலும் பன்மடங் கதிகமாக வசீகரிக்கச் செய்து கொண்டன. அவ்வளவு காலமாகி யும் எல்லாஜகங்களிலுமதிகரித்துள்ள பிரபுவும், பரிபூரணருமாகிய ஸ்ரீசதாசிவ மூர்த்தி யெக்காரணத்தா லிவள் முன் வரவில்லையோ? இது ஆச்சரியத்திலு மாச்சரியமாக விருக்கின்றது. கேளுங்கள் பாட்டனாராகிய பிராமண சிரேஷ் டரே! நாமோ ஆயிரஞ் சந்திரனைக்கண்ட விருத்தராயிருக்கிறீர். ஸ்ரீ சதாசிவ மூர்த்தி யவளுக்கு விரைவில் அநுக்கிரஹம் செய்யத் தேவரீரிவளுக்காசீர்வா தஞ் செய்தருள வேண்டுமென்றனர். அவற்றைச் சாவதானத்துடன் கேட்ட சகல குண சம்பன்னராகிய கிழவனாராகிய வேதியர் கைகொட்டிச் சிரித்து உமையம்மையாரின் திருமுகத்தை யுற்றுநோக்கி, வாராய் பர்வதராஜன் புதல் வியே! இப்போதுனது பாங்கியர் சொல்லிய மாற்றமெல்லா முண்மைதானோ? அல்லதுன்னை யிவர்கள் ஏளனம்செய்யு நிமித்த மிவ்வண்ணஞ்சொல்லுகிறார் களோ? அதை யெனக்கிப்போது விளங்கச்சொல் என்று கேட்டனர்.

ஜகங்களுக்கெல்லாம் பராபர குருவாய் விளங்கும் கிழவனாரது வார்த்தை யைச் சகங்களுக்கெல்லாந் தாயும் பர்வதராஜனுக்குச் செல்வப்பெண்ணுமாகிய வுமையவள் கேட்டு, வாருங்கள் எல்லாமறிந்த மகா புத்திசாலியாகிய விருத்தப் பிராமணரே! தேவர்களாலும் அடைவதற்கு முற்றும் சாத்தியமானவராய் விளங்கும் ஸ்ரீபரமேஸ்வரரையே நான்நாடி யிருக்கின்றேன். பிராமண சிரேட் டரே! யான் அவரைக் கணவனாக வடையுநிமித்தமே யித்தவத்தை மார்க்க மாகக் கொண்டேன். இதுவே யெனது எண்ணம். என் மனம் முற்றுப் பெறவின்னும் வழிதான் பிறக்கவில்லை. யானோ பேதமை நிறைந்த கேவலம் சிறு வயதுடைய பெண். அந்த மகானுபாவரோ அவாங் மனோகோசரமான வர். எனக்கவரெவ்வளவு தூரம் என்றாலும் அந்தப் பரம்பொருள் தம்மை நினைக்குமடியவர்களுக்கு நேசனென தேவரனைவரும் சொல்கின்றனரே. வாருங்கள் ஐயரே! ஜெகதீசன் அடியாளிடத்து இன்னருள்புரியுமாறு தேவ ரீர் அடியாளுக்கனுக்கிரஹித்தருள வேண்டுமென்றனள்.

உமையவள் கூறிய வார்த்தையைக்கேட்ட கிழவனார் அடிக்கடி சிரக்கம் பஞ் செய்தவராய் ஓகோகோ இது என்ன கஷ்டம்! இந்த வீமராஜன் புதல்வி முற்றும் சிறந்த சுந்தர வடிவமுள்ளவளாயிருந்தும் பார்ப்பதற்கும் குறிப்பிடு வதற்கும் தகாதவனும் உலகத்தவரால் நிந்திக்கப்படலுற்றவனுமாகிய அந்தப் பரமசிவனைக் காதலித்தனளே? அடி பெண்ணே! உனக்கித்தகைய துர்ப்புத்தி யெக்காரணத்தா லுண்டாயது? யாருனக்கிந்த வுபதேசத்தைச் செய்தவர்?

யாமிது விஷயத்தில் உனக்கு அநுமதி கொடுக்க வெம்மனது சிறிதும் சகியாது. சர்வமங்களையாகியவனுமாகிய வுன்னையும் மயானத்திற் குடியிருப்பவனும் பாம்புகளை யாபரணமாகப் பூண்டவனும், ஜடாமகுடமுடையவனும், தோலெலும்புகளை யலங்காரமாகத் தரித்தவனும், பயங்கரமுள்ளவனும், எக்காலத்தும் பூதப்பிரேதங்களால் சூழப்பட்டவனுமாகிய ருத்திரனையும் நன்கு ஆராய்ந்து யூகிக்குமளவில் என்மனம் அளவில்லாத துயரத்தை யடைகிறது. அழகுடைய மாதே! முன்னதாக வுனக்கொன்று சொல்லுகின்றேன் கேள். தம்பதிகளெப்படி யிருக்கவேண்டுந் தெரியவருமோ? மாப்பிள்ளை பெண்ணென்னுமிருவரும் சுந்தரவடிவ முதலிய சிறப்பினு மொத்திருத்தல் வேண்டும். அங்ஙனமாக சிம்மாசனத்தின்கண் வீற்றிருப்பதற்குரியவளாகிய நீ யெவ்வாறு அந்தப் பேயாண்டியுடன் அபஸ்மாரத்தின்கண் உட்கார யோக்கியமுள்ளவளாவாய் ஏ கலியாண சீலமுள்ளவளே! நீயோ பட்டுக்கயிறாகிய கங்கணத்தைக் கட்டிக்கொள்வதற்குரியவள்? அங்ஙனமாக நீ எப்படி புள்ளென சீறும் பாம்பின் சீதள உடலினால் கட்டுப்பட்டுச் சகிக்க எண்ணம் கொண்டாய்? அந்தோ! பெண்கள் எல்லோரும் உலகில் தங்கத்தால் செய்த மாங்கல்ய சரட்டைக் கட்டிக்கொள்வது வழக்கமாக, ஹே! சிறந்த லக்ஷ்மி விலாஸம் பொருந்திய மாதே! நீ எப்படி சூலாயுதம்பூண்ட அந்தச் சிவனது கிருஷ்ண சர்ப்பமாகிய மங்கள சூத்திரத்தைக் கழுத்தில் அணிந்துகொள்ள விருப்பம் கொண்டாய்? மாப்பிள்ளைகள் ஆவலுடன் தரும் வெண்பட்டுடைகளைத் திருமணப் பெண்கள் அணிந்து கொள்வது வழக்கம். அங்ஙனமாக நீயோ அந்தச் சிவனை மணந்து கொள்ள எண்ணினால் ரத்தம் கசியலுற்ற சிங்கத்தோலையும் புலித்தோலையும் உடுக்க வேண்டியவளாவாய்! தம்பதிகள் உலகில் அக்னியில் நெற்பொரிகளை ஹோமம் செய்து பிரதக்ஷணம் செய்வது வழக்கமாக, நீயோ அந்தச் சிவனது கரத்தைப்பற்றிச் சுடுகாட்டுத் தீயை அன்றோ சுற்றி வலம் வரவேண்டும்!

## 14-வது அத்தியாயம்.

சாதாரணமாக உலகத்தில், தம்பதிகள் மதயானைமீது வீற்றிருந்து வேதியர் வாழ்த்தலுக்குரிய வேத மந்திரமாகிய ஸ்வஸ்தி வசனங்களைக்கூற, பலவித மங்கள வாத்தியங்கள் முழங்க, கட்டியக்காரர் விருதுகூறி வர, ஊர்க்கோலம் வருவது வழக்கம். நீயோ அந்த ருத்திரனுடன் சேர்ந்து, கிழ எருதின் மேலேறி உட்கார்ந்து, பூத வேதாளங்கள் புடைசூழ்ந்துவரச் செல்வதைக் கண்ட ஊரார் உன்னைக்கண்டு ஏளனம்செய்ய, நீ துயருறப்போகிறாய். சிறந்த அழகுடைய பெண்ணே! இன்னொரு விஷயம் சொல்கிறேன் கேள். குணங்குறியற்ற உன் மணமகன்! உலக வழக்கத்தை ஒரு சிறிதும் அறியான். அவனோ உடையற்ற நிர்வாணி. எவரும் அருவருக்கும் விகார வடிவுள்ளவன். அவன் பெரும்பாலும் சுடுகாட்டிலேயே குடியிருப்புடையவன். தோல், எலும்பு, பாம்பு முதலானவற்றை ஆபரணமாகத் தரித்து, அபஸ்மாரத்தின் மீதேறிச் சடைக்காட்டை விரித்துக் கொண்டு நெருப்பையும் டமருக வாத்தியத்தையும் கையிற்கொண்டு, பேய், பூதம், பிரேதங்கள்

கைதாளங்கொட்ட, அந்தலயத்தின்படிச் சுடுகாட்டில் கூத்தாடுபவன். சிறந்த அழகமைந்த முகத்தையுடைய பெண்ணே! இங்ஙனம்கூறிய ஆபாஸ கிருத்யங்களைச் செய்யும் புருஷன், உலகில் வேறெவனுமேயிரான். உலகில் மணமகனுக்கிருக்க வேண்டிய இன்றியமையாத சம்பத்துக்களைக் கூறுகிறேன் கேள். மணமகன், சுற்றத்தார், நல்ல லக்ஷணம், நல்லொழுக்கம், வித்தை, நிறைந்த செல்வம், நல்லமனசு, நற்குடிப்பிறப்பு, வியாதியின்மை சம்பன்னனாய் இருக்க வேண்டும். ஹே சுந்தரி! மேற்கூறிய குணங்களில் ஏதேனும் ஒன்றன் லேசமும் முக்கண்ணனிடத்தில் இல்லை என்பதை நீயே அறிந்துகொள். யான் உன்னைச் சொல்வதிற் பயனில்லை. இத்தகைய துன்மார்க்கத்திற் பிரவேசிக்க உனக்கு இடந்தந்த உன் தாய் தந்தையர்களையே பழிக்க வேண்டும். என்றாலும், அந்த ருத்திரன் எல்லா வித்தைகளிலும் மிக்க தேர்ச்சியுடையவன் என்பதை யான் அறிவேன். அவன் அவ்வகையில் இருந்து, முனிவர்களும் தன்னையே உபாசிக்கும்படி தந்திரம் செய்து வருகிறான். அப்படியே நீயும் அவனுடைய மாயா விநோதங்களில் கட்டுப்பட்டு, அவனது கையில் அகப்பட்டுக் கொண்டாய். ஹே! தோழிகளே! நீங்களேனும் உங்கள் தலைவி செய்வது தகாத காரியம் என்றெடுத்துச் சொல்லி, அவளைத் தடைசெய்யக் கூடாதா? ஏ பெண்மணி! என்றாலும் இப்போது யான் உனக்கு அநுகூலமான விஷயத்தையெடுத்துச்சொல்கிறேன். அதை ஆதரவுடன் கேள். யானோ, வாலிபப் பருவமைந்த ருத்திரனிலும் மேன்மையுள்ளவன். நான் கிழவனாயினும், நற்குணமும், நல்லொழுக்கமும், பெரியவர்கள் மெச்சும் பெருமையும் உடையவனாக இருக்கிறேன். இவ்வுலகில் என்னைப்போல் எல்லா வித்தைகளிலும் மேம்பட்ட வித்துவான் ஒருவருமில்லை. அன்றியும் என்னைப் பார்க்கிலும் அஷ்டைஸ்வர்ய சம்பன்னன் ஒருவன், இந்த ஈரேழுலகிலும் இல்லை. நீ வீணாகமயக்கம் கொண்டு, அந்த ருத்திரனை விரும்புகிறாய். நானோ உன்னை நேராக வந்து பிரார்த்திக்கிறேன். நாட்டியம் செய்யும் புருஷனாகிய அந்த ருத்திரன், குபேரனிடத்தில் அவனது செல்வத்தையடைய நேசனாயிருக்கிறான்: யானோ செல்வவான்களுக் கெல்லாம் செல்வவானாய், வேண்டுவோர் வேண்டிய பொருளைக் கொடுக்கக்கூடியவனாயிருக்கிறேன். என் வேலையாட்கள் வீட்டில் மேன்மைபெற்ற காமதேனுகவும், அவர்கள் வீட்டைச்சார்ந்த சிங்கார வனத்தில் கற்பகவிருக்ஷ வரிசையும் நிலையாய் இருக்கின்றன. ஆதலால், வாராய் அழகிய முகாரவிந்தமுடையமாதே! நீ இப்போதே இவ்விடத்தில் யான் கூறியவற்றை எல்லாம் ஆராய்ந்தறிந்து, என்னையே நாயகனாகக்கொள். யான் கிழவனாயினும், தவபலத்தால் நித்தியனும் வாலிபனுமாக இருக்கிறேன். குற்றமற்ற அழகமைந்த கூந்தலுடையவளே! நீஎன்னைவிட்டுச் சத்வரஜஸ்தமோகுணங்களுக் கெட்டாத நிர்க்குணனாகிய ருத்திரனை உன்நாவாற் புகழ்ந்துரையாதே." என்று புன்னகையுடன் தேவியின் முகத்தைப் பார்த்தருளினர்.

விருத்தவேதியர் கூறியமாற்றங்களைப் பரமேஸ்வரி செவியுற்றதும் கரையடங்காத கோபசாகரத்தில் மூழ்கியவளாய், தனது செவிகளை இருகாங்களாலும் பொத்திக்கொண்டு, விரைவாகத்தனது பின்பக்கமாகத்திரும்பி நின்று

'அடிதோழிகாள்! யாரோ ஒரு அசுரன் விருத்தவடிவம் கொண்டு இவ்விடத்தில் என்தவத்தை அழிக்கிறான். அல்லது இவன், யான் முன் ஜன்மங்களில் செய்த பாவங்களின் உருவாகவாவது இருக்கவேண்டும். ஐயோ! இதற்குக் காரணம்ஒன்றும் விளங்கவில்லையே! அதுயார் செய்த இடையூறோ தெரியவில்லை. மேலும் இந்த விருத்தன் என்னுடன் பேச ஆசைகொள்கிறான். அவனைப் பேசாதிருக்கும்படி செய்யுங்கள். கிழவா! நீ புத்திதடுமாறிப் பிதற்றுபவனாயினும், யான் சொல்வதைக்கேள். ஸ்ரீ மஹாதேவரைப் பற்றிய மட்டில் ஒன்றும்சொல்லாதே. ஜகதீசன், சத்வரஜஸ்தமோகுணங்களுக்கு எட்டப்படாதவரும், தமஸ் என்னும் அஞ்ஞானத்தினின்றும் வெகுதூரத்தில் நிற்பவரும், சூர்யனுடைய நிறத்தைக் கொண்டவரும், ஆகஇருக்க அவரை நீ குணங்குறியற்றவரென எவ்வாறு கூறுகிறாய்? நல்லது, ஒய்பித்தம் பிடித்தகிழவா! இப்போது நீ கூறியவையனைத்தும், உன்னுடைய புத்திமாறுபட்டத்தாற் கூறப்பட்டவையேயன்றி வேறல்ல. எல்லா இடத்தும் நிறைந்து விளங்கும் சர்வேஸ்வரனுடைய பாதங்களையும், சிரசையும் காணவேண்டியவர்களாக பிரம்மாவும், சர்வகுண சம்பன்னராகிய ஸ்ரீ விஷ்ணு மூர்த்தியும் தங்கள் திறமைக்கும் வன்மைக்கும் மேலான முயற்சியைச் செய்து காரணமறிய முடியாமற் போயினரென்றால், அந்த மஹானுபாவனுடைய மகிமையின் லேசாலேசத்தை எவர் தானறிந்தவர்? அங்ஙனமாக உலகங்களை விளங்கச் செய்யும் ஸ்ரீ பரமேஸ்வரர் கேவலம் கிழவனாகிய உன்னால் எப்படி அறியப்படுவார்? ஆ! அடிதோழியரே! இந்தக்கிழம் மேலும் ஏதோ பேசுவதற்காகத்தன் உதடுகளை அசைத்து முணுமுணுக்கிறது. இந்த நரைத்தலைக்கிழத்தைத் துரத்தி விடுங்கள். ஒன்றும் அறியாத இந்தக்கிழப் பிராமணன் எங்கே! எல்லா முணர்ந்த ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தி யெங்கே! இந்தக்கிழம், முன் ஸ்ரீ கௌதம முனிவரின் சாபத்திற் சிக்கிய பாஷண்டிகளில் ஒருவனாய் இருக்கவேண்டும் என நான் நிச்சயமாய்ச் சொல்வேன். இல்லாவிடின், ஸ்ரீ ததீசிமுனிவர் சாபத்தால் பிரஷ்டர்களான அவ்வினத்தைச் சேர்ந்தவனாகவாவது இருக்கவேண்டும். இதில் எள்ளளவும் ஐயமில்லை. இல்லாவிடின், யான் செய்யும் தவத்தின் இடையூறே இவ்விதமாக வடிவு கொண்டுவந்திருக்கலாம் என்பது சத்தியம்! இது என்ன ஆச்சர்யம்! இந்தப்பித்தம் பிடித்தமனிதன், இவ்வளவு வயது சென்றுவனாகியும், இது ஜீவாத்மா, இதுபரமாத்மா, இது சேதனம், இது அசேதனம் என்னும் பகுத்தறிவு அற்றவனாயிருக்கிறானே! பித்தத்தால் வாயில்வந்தபடி யெல்லாம் பிதற்றும் இந்தக்கிழவன் பிடித்துத் தள்ளியும் போகாமல் சண்டித்தனமாய் மேல் விழுகிறானே! இனியான் இவன் முன் நிற்பது கூடாது. யான் இதைவிட்டுச் செல்கிறேன்.'' என்று கூறி அவ்விடத்தை விட்டுக்கோபத்துடன் செல்ல எண்ணினள். பிறகு ஸ்ரீ பரமேஸ்வரர், மந்தஹாசம் பொருந்திய முகாரவிந்தத்தத்துடன், தமது நிஜவுருக்கொண்டு தேவியின் முன் பிரசன்னமாயினர். நீலகண்டரும், விருபாக்ஷரும் (நெற்றியில் கண்ணுடையவரும்) நித்தியரும், என்றும் அழியாத சுந்தரமூர்த்தியும், தேவகணங்கள் மலர்மாரி பொழிய நின்றவரும், உலகங்களுக்கு மூல புருடராகியவருமான ஸ்ரீ பரமேஸ்வரர். "மிக்க மேம்பாடமைந்த சுந்தரமேனியாரே! யாம், உன்தவத்தால் விலை கொள்ளப்பட்ட

உன் அடிமையாயினோம். நீ வேண்டிய வரமென்ன? அந்தவரத்தைக் கொடுக்க, இப்போது தயாராக இருக்கிறோம்." என்றுரைக்க, சுகத்தையளிப்பவரும், சம்சாரமாகிய நோய்க்குச் சிறந்த மருந்தாய் இருப்பவருமாகிய பரமேஸ்வராது திருவாக்கைக் கேட்டருளிய பார்வதியம்மையார், விரைவில் தமது தவ நியமத்தால் கொண்ட பரிசிரமம் நீங்கப் பெற்றவராய், தேகநடுக்கத்துடனும், பயத்துடனும், மயிர்க்கூச்சலிட மிக்க பேரானந்தம் பொங்குவதால் உரைதடுமாற நாக்குழற, ஸ்ரீபரமேஸ்வரரது உபய பாதாரவிந்தங்களைப் பணிந்தெழுந்து, அஞ்ஜலியஸ்தராய். "எவரைப்புலவர்கள் வேதாந்தங்களில் முக்ய புருடரெனச் சொல்கின்றனரோ, எவர் பூமி, அந்தரிக்ஷம், சுவர்க்கம் என்று இடங்களில் எல்லாம் வியாபித்து நிற்பவரோ அவராம் தேவரீருக்கு வந்தனம் செய்கிறேன் எவருடைய பாதாரவிந்தங்களை எண்ணுவதால் எல்லாப்பாவங்களுமொழிய பயமற்றவராய் மோக்ஷத்தை ஜீவர்கள் அடைகின்றனரோ, அவரையான் வந்தனம் செய்கிறேன். எவர் தம்கிருபாநோக்கத்தால், அந்நோக்கப்பட்டவர் அஞ்ஞானமும் பாவமும் தம்மைச் சேராதபடி உலகினரால் வந்தனிக்கப்படுகின்றனரோ, அத்தகைய பெருமை வாய்ந்த உம்மைச்சரணடைகிறேன். உறக்கத்தை நீத்து, சுவாசத்தையடக்கி, மன அடக்கத்துடன் பக்திசித்தமுடையவராய்ப் பெரியோர் எவரைத் தேஜோமயராகத்தியானம் செய்கின்றனரோ அவரையான் சரணடைகிறேன். ஹே! தேவேசராய் விளங்கும் பிரபுவே! அடியாளை அங்கீகரித்தருள வேண்டும். ஹே! மஹாதேவா! மூன்றுலகங்களிலும், தாம் அடியவருடைய துன்பங்களைத் தொலைப்பவர் என்னும் மஹிமைமையைப்பெற்றிருக்கிறீர். ஓ கருணையங்கடலாய் விளங்கும் பிரபுவே! தேவரீர் அடியாளை அங்கீகரித்தருளல் வேண்டும்." என்றுதுதி செய்துவேண்ட மிக்க அழகு பொருந்திய சந்திரகலையை உச்சுக்கலங்கார மாகக்கொண்ட ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி, அந்த ஸ்துதிகளைக்கேட்டு மகிழ்ந்தவராய் மிக்ககளிப்புடன், "வாராய் பார்வதி! யாம்தேவர், முனிவர், சித்தர் வித்யாதரர் புடைசூழவந்து, நாளை நடக்கப்போகும் திருமண மஹோற்சவத்தில் உனது தாய்தந்தையரின் அனுமதிபெற்று உன்னைப் பாணிக்கிஹணம் செய்து கொள்வோம்." என்று திருவாய் மலர்ந்தருளினர். பின் ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி இவ்விதமாக வரந்தந்து கைலையை அடைந்தனர். காமனை எரித்தகண்ணுதல் அவ்விடத்தில் மனதால் தம்மையே பாவனை செய்து நிற்பவரும், முனிவர் எல்லோரினும் வெகுமேன்மை வாய்ந்தவருமாகிய அத்திரி, புருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காசியபர், அங்கிரர் என்னும் சப்தருஷிகளைத்திருவுளத்தில் நினைத்தருளினர். தேவராகிய பிரபு நினைத்தமாத்திரத்தில் அந்த ஸப்தமுனிவர்கள், இன்னது செய்யத்தக்கது, இன்னது செய்யத்தகாதது என்பது கூட அறியாதவராய், உள்ளம் பரவசம் கொள்ள, பரப்பிரம்ம ஸ்வரூபராகிய 'ஸ்ரீ சிவனே ஸத்தியம் சிவனே சத்தியம்' என்று இடைவிடாது ஜபித்துக்கொண்டு, பின்வருமாறு ஸ்துதிசெய்து கொண்டு, ஸ்ரீ பரமேஸ்வரனைத்தரிசிக்க எண்ணங் கொண்டு மிகவும் விரைவுடன் நடந்துவந்து ஸ்ரீ சம்புவின் ஸன்னிதானத்தை அடைந்தனர். கேளுங்கள் சௌனகாதி முனிவர்களே! அந்த ஸப்தரிஷிகள் தாம்வரும் வழியில் செய்த ஸ்துதியைக் கூறுகிறேன்:—ஹே ஜகதீசா! இப்

போது தேவரீர் கொண்டிருக்கும் திருக்கோலமானது, ஜகங்களை சிருஷ்டிக்க ஆனதா? அன்றி இரக்ஷித்தற் பொருட்டானதோ? அல்லது சங்காரம் செய்வதற்கானதா? அன்றி அனுக்ரஹம் செய்யும் பொருட்டோ? என்பதைச் சொல்லி யருளல்வேண்டும். தேவரீர் சிருஷ்டி, ஸ்திதி, ஸங்காரம், ஆரோபம், அனுக்ரஹம் என்னும் பஞ்ச கிருத்யங்களைச் செய்வோராயிருந்தும், ஒரு செயலுமற்றவராய் இருக்கிறீர். கல்விநிறம்பியவராக விருந்தும், ஒருகல்வியுமில்லாதவராயுள்ளீர். வடிவத்தில் ஒருகுற்றமும் இல்லாதவராயிருந்தும் கழுத்தினில் கறுப்பையும் பாவபுண்ணியங்களின் பற்றற்ற தன்மையையும் உடையவராய் இருக்கிறீர். தாம் ஆதியந்தம் இல்லாதவரும் அழுக்கற்றவருமாயிருப்பதால் ஸதாசிவம் என்று பிரசித்தியடைப் பெற்றீர். தேவரீரையன்றி பரப்பிரஹ்ம வாச்சியர் வேறு பலரென்பதில்லை என்பது உண்மையன்றோ; தாமே ருத்திரர், தாமேபிரம்மா, தாமே விஷ்ணு; உலகில் உள்ள எல்லா ஜீவர்களுக்கும் அதிபதியாய் விளங்கி யுள்ளவர். தேவரீரையன்றி வேறு எவர் உளர்? சுவாஹா, வஷட் முதலான மந்திர வடிவமாக உள்ளவரும் நீரே. யாகமும் நீர், அக்னியும் நீர். எல்லாம் தம்மையன்றி வேறில்லை. ஹே பிரபுவே! தேவரீர் முக்காலத்திலும் அழியாது நிலைத்துள்ளவரென்பதை நாங்கள் நன்ருய் அறிகிருேம். உலகில் உள்ள பெரியோர்கள் எல்லா புவனங்களுக்கும் மேற்பட்டவரென்றும், அளவில்லாத ஐஸ்வர்யமுடையவரென்றும். மஹேஸ்வர்யமுடையவரென்றும், மஹேஸ்வரராகிய தேவரீரிடத்திருந்தே பிரபஞ்சங்கள் பலவிதமாக வெளிப்பட்டிருக்கின்றன வென்றும் அறிந்திருக்கின்றனர். தேவரீரிடத்து, அடியேங்களுக்கு எக்காலத்து நீங்காத பக்தியுண்டாகும்படி அனுக்ரஹம் செய்தருளல் வேண்டும். தேவரீர் அடியோமை நினைக்கும்படி நேர்ந்தது; யாங்கள் அனவரதமும் வேதமோதுதலினுலும், கடுந்தவத்தைச் செய்வதினுலுமுண்டான பலனேயன்றி வேறல்ல. "கேளீர் முனிவர்களே; இங்ஙனமாக ஸப்தமுனிவர்களும் இவ்வாருகச் சொல்லி; கொண்டே மலைகளுட் சிறந்து விளங்கும் கைலையில் உள்ள, தேவாதி தேவராய் விளங்கும் ஸ்ரீ பரமேஸ்வரரது ஆலயத்துள் ஓர் விஞடிக்குட்சென்று, அடியவர்க்கு அபயமளிப்பதே தமதுதொழில் எனக்கொண்டவரும் சகல ஆதிவியாதிகளைப்போக்குவதால் ஸ்ரீ ருத்திரரென்னும் பெயரைக் கொண்டவருமாகிய ஸ்ரீ பரமேஸ்வரரது ஆஞ்ஞையின்படி கோபுரவாயிலின்கண் வீருடனிருந்த ஸ்ரீநந்திதேவரைக் களிப்புடன் கண்டுமனப்பூரிப்புடன் பணிந்து நின்றனர்.

தவசிரேஷ்டராகிய ஸப்த முனிவர்கள் கூறியதும், ஸ்ரீ பரமசிவனுருக்கும் முற்றும் பிரீதியானதான இந்த ஸ்துதியைப் படிப்பவரும், கேட்டானந்தங்கொள்வோரும், உலகில் பிள்ளை, பெண்டிர் பசுக்கள் முதலான எல்லாப் போக பாக்யங்களையும் பெற்று அனுபவித்தலராய், முடிவில் மீட்டும் பிறத்தல் இல்லாத நிலைமையாகிய மோக்ஷ சாம்ராஜ்யத்தை அடைவர்.

## 15-வது அத்தியாயம்.

சௌனகாதிமுனிவரை நோக்கிச் சூதர் சொல்வதாவது:—கேளுங்கள், பிராமணோத்தமர்களே! ஸ்ரீபார்வதிநாதனைத்தரிசிப்பதில் ஆவல்கொண்ட அந்த

ஸப்தரிஷிகளும் நந்திதேவரை நோக்கி, "வாரீர்தேவனே! யாங்கள் ஸ்வாமியைக்காண ஏற்றசமயம் எது?" என்று கேட்க, சிலாதமுனிவரின் செல்வர், மஹாதேவருடைய ஆஞ்ஞைபின்படி அம்முனிவர்களை மஹேசர் சன்னிதானத்திற்கழைத்துச் சென்றனர். முனிவர்கள் அங்குச் சென்றதும், பினாக மென்னும் வில்லைக்கரத்தி லேந்தியவரும், மேலான அழகுடைய வாலிபரும், திவ்யரத்னாபரணாலங்கிருதரும், பலவகையான மலர்களை யணிந்துள்ளவருமாகிய மஹாதேவரை சந்தோஷத்தால் மெய்ம்மறந்தவராய் ஆனந்தக்கண்ணீர் சொரியத்தூரத்திருந்தபடியே பார்த்து நமஸ்கரித்துக் கொண்டனர். நந்திதேவர் முனிவரரை மஹாதேவர் அருகில் சேர்த்தபின்னர், அந்தசப்த முனிவரும், மற்றையோரிடத்துப் பலமற்ற விநோத ஞானத்தைக் கொண்டவரும், பிறப்பில்லாதவருமாகிய பிரபுவாகும் பரமேஸ்வரரை அருகிற் சென்று கண்டு, "இந்த அழகிய உருவுடைய புருஷரை மன்மதன் கண்டதால், உண்மையாக வெட்கமடைந்தே தனது தேகத்தை இழந்திருக்க வேண்டுமேயல்லாது, நெற்றிக்கண்ணினின்று மெழுந்த தீப்பொறியால் இறந்தான் என்பது பொய்யேயாகும். செந்தாமரைக் கண்ணனாகிய விஷ்ணுவும், இவரழகைக் கண்டுதான் பெண்ணுருவம் கொண்டார். இவரைப் பார்த்ததும் தேவபத்தினிகளும், ரிஷிபத்தினிகளும் மோகம் கொண்டு தங்கள் தவத்தை இழந்தனர் என்பதில் ஆச்சர்யமேயில்லை. இவ்வழகிய வடிவமைந்த ஜகதீசனைப் பார்த்து, புருஷர்களது மனமிவ்வாறாக மயக்கம் கொள்ளும் போது, பெண்கள் விஷயமாக யாம்வேறு என்ன சொல்ல வேண்டும்?" என்று உள்ளத்தெண்ணியவராய், தமது இரண்டு விழிகளாலும் பார்த்துப் பார்த்தானந்தித்தனர். சம்சார பயத்தினின்றும் ஜீவர்களை விடுவிப்பரான பரமேஸ்வரரை உள்ளத்தில் தியானித்துப் பன்முறைவந்தனம் செய்தனர். அப்போது மஹாதேவர் அவர்களைப்பார்த்து, "எம்மீது ஒப்புயர் வில்லாத பக்திபூண்டொழுகு வோரும், எமது மனதுக்கிசைந்தவர்களும், மஹா பெருமை பொருந்திய வர்களுமாகிய நீங்கள் அனைவரும் ஆசனத்தருமங்கள்." என்று அழகிய மொழியால் திருவாய் மலர்ந்தனர். அங்ஙனம் தேவேசன் சொல்லும்போது முனிவர்கள் அனைவரும் அஞ்சலியஸ்தராய் அவரவர் வயது முறைப்படி அவ்வவ்வாசனத்தில் உட்கார, அவர்களுள் வாக்சாதுர்ய மிகவுமமையப் பெற்றவராகிய வசிஷ்ட மஹாமுனிவரெழுந்து, அஞ்சலியஸ்தராய் ஸ்வாமியைத் தண்டனிட் டெழுந்து, ஸ்ரீமஹேஸ்வரர் எதிராக இருந்து, "ஹேஜகதீசா! எவனுடைய மனம் தேவரீரை நினைத்தலைச் செய்கிறதோ, அவன் பாக்யவான்களுட் சிறந்த பாக்யவானாகிறான். அங்ஙனமாக, தேவரீரது திருவுளத்தால் நினைக்கப்பட்ட எங்கள் பாக்யத்தின் அளவை யாங்கள் எவ்வாறு கூறவல்லோம்! ஹே சங்கரா! தேவரீரது கிங்கரர்களாகிய அடியேங்கள் செய்ய வேண்டிய தின்ன தென்பதைக் கட்டளையிட்டருளுங்கள். அல்லது, எங்களைப் பிறவிக்கடலினின்றும் கரையேற்றியருளுங்கள். என்று கூறினர்.

அங்ஙனம் கூறிய வசிஷ்ட முனிவரின் வார்த்தையைக் கேட்டருளிய ஸ்ரீ, மஹாதேவர், "முனிவர்களே! யாம் இப்போது உங்களை வரவழைத்த

காரணத்தைச் சொல்கிறோம், கேளுங்கள். யாம் நமது அஷ்டமூர்த்தங்களாலும் எல்லா உலகினரையும் அனுக்ரஹம் செய்து வருகிறோம். கேளுங்கள், முனிவர்களே! அங்ஙனமாகிய எம்மைப் பகைவர்களால் துன்பம் எய்திய விஷ்ணு முதலான தேவர்கள் எல்லோரும், அத்துன்ப நிவர்த்தியின் பொருட்டு, ஓர் மைந்தனையாம் அடையுமாறு வேண்டிக் கொண்டனர். முனிசிரேஷ்டர்களே! யாமும் அவர்கள் வேண்டு கோளுக்கிணங்கி, "நல்லது ; அப்படியே செய்கிறோம்." என்று அத்தேவர்களது பகை நிவர்த்தியின் பொருட்டு ஓர் படைத்தலைவிரனை அவர்கட்குத் தர உறுதிசெய்து விட்டோம். தேவ சிரேஷ்டர்கள் அனைவரும் இப்போதும் அந்த மூன்று அசுரர்களால் வதைக்கப்படுகின்றனர். யாம் சேனானி (படைத்தலைமை வகித்த வீரராகிய சுப்பிரமணிய சுவாமி)யை வெளிப்படுத்தி, எவராலும் எதிர்க்கவும் ஒண்ணாத சூரபதுமனை யவனது தம்பியருடன், முன்னர்யாம் திரிபுரவாசியாகிய அரக்கர்களைக் கொன்றதுபோல், கொல்லும்படிச் செய்ய, நாம் தேவாதியர்க்கு அபயமளித்ததால், அந்த விஷ்ணு முதலான தேவர்கள் நம்பிக்கையுடனும், கவலையற்ற மனதுடனும் சென்றிருக்கின்றனர். ஆதலால் யாம் இப்போது பர்வத ராஜகுமாரியைப் பாணிக்கிரஹனம் செய்ய விருப்பமாயுள்ளோம். அவளோ, நமது இச்சை, ஞானம், கிரியை என்னும் முச்சக்தி ஸ்வரூபமானவள். அவள் நம்மைவிட்டு என்றும் பிரியாதவளாயினும் சூரியனை நீங்கி அவனது காந்தி வேறுபட்டதாகக் காணுதல்போல், பிரிந்தவளாகக் காணப்படுகிறாள். அன்றியும் அவள் தம்மைக்கோரியே கடுமையான தவத்தைச் செய்தனள். ஆதலாற்றான், யாம் அவளைப் பாணிக்கிரஹணம் செய்ய விருப்பமுற்றோம். அது காரணமாக, கிருகஸ்தாஸ்ரமத்தைக் கொண்ட முனிவர்களாகிய நீங்கள் அனைவரும் உங்கள் பெண்டிருடன் மஹா மேன்மை பொருந்திய கிரிராஜனிடத்துச் சென்று பெண் கேட்டு வருதல்வேண்டும். இன்று முதல் பிராமணர்கள் உலகில் இந்தமுறையையே வழக்கமெனக் கொள்ளக்கடவர். கல்யாண குணசீலமுள்ள அருந்ததி யம்மையார், பர்வதராஜன் பட்ட ஸ்திரீயாகிய மேனகையம்மை யிது விஷயத்தில் மறுத்துப் பேசாதபடி வாக் சாதுர்யமாகப் பேசுதல் வேண்டும். எந்த முயற்சியால், காரியமானது மனமிசைய நிராபேக்ஷணையைச் சித்திக்குமோ, அந்த முயற்சியால் அதனை முடித்தலேதக்கதாகும்." என்று திருவாய்மலர்ந்தருளினர். கலியாணம்செய்து கொள்வதில், வேதாந்தப் பயிற்சியாலே நிச்சயம் செய்யப்பட்ட பரமசிவமே பிரியம் கொண்டதனால் அம்முனிவரும் அது விஷயமாகத் தாம் கொண்டிருந்த வெட்கத்தை விட்டு, ஜகங்களுக்கெல்லாம் பராபர குருவாகிய மஹாதேவரைப் பிரதக்ஷிண நமஸ்காராதிகளால் திருப்தி செய்து விடைபெற்றுத் தமது மனைவிமாருடன் இமயகிரியை நோக்கி ஆகாயமார்க்கமாய்ப் புறப்பட்டு விரைவாக மலைமீதிறங்கலாயினர். அவ்விடத்தில் மூன்றுலகமும் புகழும் ஒஷ்தி பிரஸ்தமெனப் பெயர்பெற்ற பர்வதராஜனது ராஜதானியை முனிவர்கள் கண்டனர். அங்கு யுகந்தோறுமுள்ள வித்தியாசம், கிழத்தன்மை, மனத்துயர், வியாதி, கர்வமாகிய இவை வாழ்தற்கிடமில்லாதிருந்தன. அவ்விடத்து யௌவனத்தையன்றி வேறு பர்வங்கள் இல்லை. இத்தகைய ராஜதானியில் முனிவர்கள்

சென்று, அப்பட்டணத்தின் இடையே விளங்கும் அரண்மனையை அடைந்தனர். பர்வதராஜனும் சூரியனைப்போன்ற தேஜஸுடன் உலகிலெல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் அந்த ஸப்த ரிஷிகளையும் ஆகாய மார்க்கத்திற் பார்த்து, அவர்கள் பூமியில்வந்து அடி வைப்பதற்குள்ளாக, தன் மனையாள் சகிதமாக, அர்க்கிய பாத்தியாதி உபசார வஸ்துக்களுடன் முன்னதாக எதிர்கொள்ளச் சித்தமாக இருந்தனன். முனிவர் அரண்மனை யடைந்ததும், மன்னவன் பெண்டிருடன் அவர்களை எதிர்கொண்டழைத்து வந்து ஆசனங்களில் அமரச் செய்து, அர்க்கிய பாத்தியாதிகளால் அவர்களைப் பூஜித்து, தக்கதின்னது தகாததின்ன தென்றறியும் பகுத்தறிவுடனும் சந்தோஷ புத்தியுடனும் கூடியவனாய் அவர்களைப் பக்தியுடன் துதி செய்தனன். அப்போது முனிவர்கள் அவனைப் பார்த்து, "ஹே ராஜனே! நீ சுகமா? உனது குடிகள் சுகமாய் இருக்கிறார்களா? பர்வத ராஜருக்குள்ளாக உனது செங்கோல் சரிவரச்சென்றோங்கி வருகிறதா? மந்திரிகள், சுற்றத்தார், மித்திரர் முதலானோர் உன்மீது கொண்டுள்ள நேசத்தை யுறுதியாகக்கொண்டுள்ளனரா? என்று க்ஷேம சமாசாரங்களை முதலாக விசாரித்தனர். பிறகு அவர்கள், மேலும் அரசனைப் பார்த்து, "வாராய் மன்னவ! நீ உலகில் தன்னியர்களுள் எல்லாம் சிறந்தவனாயும், பூஜிக்கத்தக்கவனாயும், தவசியாகவும் இருப்பதால், நீ எங்கள் மதிப்பிற்குரியவனாகிறாய். ஆதலால் நீயும் எங்களுடன் ஆசனத்தில் உட்கார வேண்டும்." என்றனர். அதனை அரசன் கேட்டு, அவர்கள் உரைத்த கட்டளையை மீற அஞ்சியவனாய் உட்கார்ந்து, வணக்கத்துடனும், மரியாதையுடனும் அஞ்சலியஸ்தனாய், "முனிசிரேஷ்டர்களே! தங்கள் அனுக்ரஹ விசேஷத்தால் நாங்கள் எல்லோரும் க்ஷேமமாக இருக்கிறோம். இந்த க்ஷணந்தான் யான் தங்கள் வரவால் கிருதார்த்தனாயினேன். மேலும், புண்ணியவானுமாயினேன். இப்போது மஹரிஷிகளாகிய தாங்கள் தங்கள் மனைவிமாருடன் எனக்குத் தரிசனம் தந்ததால், என் ஜன்மம் சாபல்யமாயிற்று. என்றாலும் என்மனம் பேராசை கொண்டதாய், மன அமைதியுள்ள தங்களுக்கு, என்றும் நல்வாழ்வைத்தாலுற்ற பணிவிடை செய்தலைத் காமுறுகின்றது! வாருங்கள் பிராமண சிரேஷ்டர்களே! அடியேனைத் தாங்கள் தாசனாக ஏற்றுக் கொண்டருளல் வேண்டும்! தாங்கள் அனைவரும் அடியேனை மிக்கதயவுடன் கிருதார்த்தனாகச் செய்ய வேண்டும்." என்று இரக்கத்துடன் கூறினன். தவத்தையே பொருளாகக் கொண்ட முனிவர்கள் அவன் கூறிய மாற்றத்தைக்கேட்டு, அவர்களுள் வாக்சாதுர்ய மமைந்த அங்கிர முனிவரை, பர்வதராஜனுக்குப்பதில் கூறும்படி திட்டம் செய்தனர். பின்னர் ரிஷிகளுள் மேம்பட்டவரும் லக்ஷ்மி விலாசம் பொருந்தியவருமான அங்கிரமுனிவர், தம்முடன் சேர்ந்து முனிவர்கள் முன்பாக, மலையரசாய் விளங்கும் பர்வத ராஜனைப் பார்த்து, "கேளாய் மன்னவ! நாங்கள் எல்லோரும் எக்காரணம்பற்றி இவ்விடத்து வரலானோம் என்பதைப் பெண்டிருடன் கூடியுள்ள உனக்குச் சொல்கிறேன். அந்தப்புரத்திலிருக்கும் உமது மனைவியையும், பெண்ணையும் பிள்ளையையும் பந்துவர்க்கத்துடன் இவ்விடம் வரச்செய். இமவானே! தவக்கோலங்கொண்டுள்ள உனதுபுதல்விக்கு விவாகம் நடக்கப் போகிறது," என்று கூறிய

பொழுது, கிரிராஜன் அதிக சந்தோஷத்துடன் கூடிய மனதுடன், அந்தப்புரங்காக்கும் அலிசேவகர்களுக்கு, "நீங்கள் விரைவில் சென்று, நமது செல்வக் குழந்தையை நன்றாய் அலங்கரித்து, அவளுடன் அந்தப்புரத்துப் பெண்களையும் இந்த மஹரிஷிகளின் சன்னிதானத்திற் கழைத்து வாருங்கள்." என்று கண்ஜாடையால் எச்சரிக்கை செய்தனன். உடனே அலிசேவகர் விரைவிற் சென்று பர்வதராஜன் பெண்டிரைக் கலியாணகோலத்துடன் அலங்கரிக்கப்பட்ட பார்வதியம்மையாருடன் அழைத்து வந்தனர். கிரிராஜன் பெண்டிரனைவரும் பெண்ணை முன்னிட்டு நல்ல சுபவேளையில் மிக்க மங்களகரம் பொருந்திய அப்பெண்ணுக்கு உயர்ந்த ஆபரணங்களைப் பூட்டினர். உமையம்மையாரும் அவ்வாபரணங்களை அணிந்து லோகமாதாவாய் விளங்கினர். அப்பொழுது அம்மையார் சரத்காலத்துச் சந்திரன் போல், பார்ப்பவர் மனம் பரவசமடையுமாறு விளங்கினர்.

## 16-வது அத்தியாயம்.

லோகமாதாவாய் விளங்கும் அந்தக்குழந்தை தன்பிதாவின் பக்கமாக நின்றனள். அந்தப் பார்வதியம்மாளை, சப்தமுனிவர்களும் அருந்ததியம்மையாரும் பார்த்து, மனோபாவனையாகப் பலவாறு வந்தனம் செய்தனர். அவ்விடத்தில் இமவான், வெட்கத்தால் மலர்ந்த முகாரவிந்த முடைய புதல்வியை அன்போடு மடியின்மீது வைத்துக் கொண்டு புன்னகையுடன், "உண்மைப் பொருளாகும் பரப்பிரமத்தை உணர்ந்த முனிவர்களே! இம்மகளே என் உயிர்; இவளே என்கண்ணின் பெருவிழி; இவளே எனது குலத்துக்குப் பூஷணமானவள்; இவளே எல்லாம்." என்றனன். அப்போது அங்கிரமுனிவர் இமராஜனைப் பார்த்து. "மன்னவ! இவள் எல்லாமஹிமையும் உடைய லோகமாதா நாங்கள் இவ்விடம் எக்காரணம் பற்றிவரலானோம் என்பதைச் சொல்கிறேன்; கேள். எவர் அத்வைதப் பொருளாயும், ஜகங்களைச் சிருஷ்டிப்பவராயும், பிரம்மர்களைப் படைப்பவராயும், காரணங்களுக் கெல்லாம் காரணராயும், அதிருஷ்டத்தைத் திட்டம் செய்பவராயும், சிருஷ்டிப்போர் எல்லோரையும் சிருஷ்டிப்பவராயும், ரக்ஷிப்போ ரெல்லோரையும் ரக்ஷிப்பவராயும், சம்ஹரிப்போரனைவரையும் சம்ஹரிப்பவராயும், சர்வபிரபஞ்சங்களையும் ஒரே கவளமாக உட்கொள்ளக் கூடியவராயும், பரமாத்மரூபராயும், பரஞ்சோதி மயராகியும், பரப்பிரம்மமும் பரத்துக் கெல்லாம் பரவஸ்துவுமாக உள்ளவராயும், பரிசுத்தர்களுக் கெல்லாம் பரிசுத்தராயும், மங்களங்களுக் கெல்லாம் மங்களத்தன்மை இல்லாதபடி சிரேயஸை வகித்தவராயும், 'தம்மினும்பெரியவஸ்துவும் சிறியபொருளும் இல்லையாம்படி இருப்பவராயும், ஆதியில் எல்லா உலகங்களையும் சிருஷ்டிசெய்து, பின் அவற்றை ரக்ஷித்து சம்ஹரிப்பவராயும், அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாம்யம், ஈஸத்வம், வசித்வம் என்னும் அஷ்டைஸ்வர்யங்களோடன்றி மற்றெங்கும் தங்குதலில்லாத 'ஈஸ்வரன்' என்னும் பெயருக்கு உபசாரவகையால் அல்லாது உண்மையாக அப்பொருள் பொருத்தமாம்படியான தகுதியைக் கொண்டவராயும், நித்தியப் பொருள்கட்கெல்லாம் நித்தியராகியும், சேதனப் பொருள்களுக் கெல்லாம் சேதனராகியும், நடத்துவோர் எல்லோரையும் நடத்துபவராயும், காலனுக்குக் காலராயும், சந்திரனை

ஜடாமகுடத்தில் தரித்தவராயும் உள்ளவரோ, அவராம் ஜகத்பிதாவுக்கு, வாராய்! பாவம் சிறிதும் இல்லாத பர்வதராஜனே! உனது பெண்ணை மனைவியாகக் கொடுத்தல் தகுதியானதாகும். முன் ஒருகாலத்தில் விஷ்ணு மூர்த்தி வராகவடிவம் கொண்டு, எவருடைய விநோதகரமான பாதங்களைக் காண்பதற்குத்தன் முழுபிரயத்னத்துடன் தேட முயற்சித்தும் பயன்படாமல் போயதோ, அந்தமஹானுபாவருக்கு நீ உனது மகளைக் கொடுத்தல் வேண்டும். எவருடைய பார்வைபட்ட மாத்திரத்தில் விருத்திராசுரனைக் கொன்ற பிரம்மஹத்தி தோஷம் இந்திரனை விட்டு நீங்கியதோ அவருக்கு நீ உன்கலியாணகுண சீலமுள்ள பெண்ணைக் கொடுத்துவிடும். எவருடைய புருவத்தின் அசைவால், தேவர்கள், அசுரர்கள், மானிடர் முதலானோரிடத்து ஐஸ்வர்யம் பொங்குகின்றதோ, எவரை வந்திப்பதால் ஜீவர்கள் சம்சார பயத்தினின்றும் மோக்ஷமடைகின்றனரோ, அவருக்கு, உலகங்களுக்குச் சுகத்தைக் கருதினவனாய் நீ உனது மனைவியுடன் சம்மதித்து, உனது புதல்வியை மணம் செய்து தருதல் வேண்டும். இந்தப்பெண்மணியிடத்து வெளிப்பட இருக்கும் அதிசுந்தர வடிவனும், மஹாபுஜபல பராக்ரம சாலியுமான மஹாதேவருடைய குமாரன், கொடியராகிய சூரபதுமன் முதலானோரை வதம்செய்பவனாவன். உலகங்களுக்கெல்லாம் பராபர குருவாகிய சாம்பசிவ மூர்த்தியானவர் உனக்கு மருமகனாகையில், நீயே தன்னியருள் எல்லாம் தன்னியனாவாய். நீயே கிருதார்த்தன்; நற்குலத்திலுதித்தோரில் நீயே மேன்மையானவன்; நீயே பூஜ்யன்.'' என்று கூறினர்.

இங்ஙனம் அங்கிரமுனிவர் கூறி முடித்தபோது, முனிவர்கள் எல்லோரும் மனசந்தோஷத்துடன் கூடியவராய், பர்வதராஜனை மிகவும் புகழ்ந்து கொண்டாடினர். ரிஷிபத்தினிகளும் சந்தோஷ முகத்துடன் கூடியவர்களாய் பர்வதராஜன் மனைவியரைப் புகழ்ந்து பேசினர். மேலும் அவர்கள் பட்டஸ்திரீயாகும் மேனகையை விசேஷமாகப் புகழ்ந்து கொண்டாடினர். அவர்களுக்கு இயற்கையாகிய ஸ்தாவர உருவத்தில், மேல் எங்கும் முட்கள் நிறைந்திருப்பன போல், மிக்கசந்தோஷங் கொண்டதால், அவர்களது ஜங்கம வடவடிவத்திற்குத்தக்க தேகமெங்கும் மயிர்க்கூச்சல் உண்டாயது. பர்வதராஜனும் ஆனந்தக் கண்ணீர் நிரம்பப் பெற்றவனாய், நாத்தமொற்றங் கொள்ள, தழதழப்புள்ள குரலுடன், அன்பினால் தனது புதல்வியை அணைத்துக் கொண்டு, அம்முனி சிரேஷ்டர்களை நோக்கி, ''யான் உங்களால், லோகமாதாவும், தாமரையிதழை யொத்தகண்ணையுடையவளுமான இச்செல்வப் புதல்வியின் மூலமாக, கிருதார்த்தனாயினேன். பிராமண சிரேஷ்டரே! தாங்கள் மிக்கதயவுடன் இப்போது என்னைக்காத்தருளி, தேவாதி தேவனுக் கறிவித்து என் கோரிக்கையை ஈடேற்றியருளல் வேண்டும். ஏனெனின், சுபத்தை நினைத்தவுடன் செய்து முடித்து விடல்வேண்டும்.' என்பது பெரியோர் வார்த்தையன்றோ?'' என்றுகூறி, அவன் எழுந்து முனிவர் எல்லோரையும் பன்முறைவணங்கி நின்றான். அதனால் அம்முனிவரனைவரும், 'மிகுநேர்த்தி! மிகுநேர்த்தி!' என்று மன்னனைப் புகழ்ந்து கொண்டாடினர். அங்கிர முனிவர் இமவானது மனைவிமாரை மறுபடியும் நோக்கி, ''அரசனது மனைவிமாராகிய உங்களுக்கும்

இது சம்மதிதானே? குடும்பத்துள்ளவர் தாய்மாரின் சம்மதியைத் தெரிந்து பெண்களை மணம்செய்து கொடுத்தல்வேண்டும்,'' என்று கேட்டனர். அதற்கு எல்லாப்பெண்டிரும் சம்மதம் என்று சொல்கையில், மேனகை, "ஜனங்களுள் பெரும்பாலோர் எங்களை ஸ்தாவரங்கள் என்று சொல்லும் கொள்கையுடையவராக உள்ளனர். மூன்றுலகங்களிலும், தேவர்கள், விலங்குகள், மானிடர், நாகர் முதலானோருள் யூகமுள்ளவர்கட்கு விசேஷமாக ராகதுவேஷாதி துர்க்குணங்கள் மேலிட்டிருப்பது எவரும் அறிந்த விஷயமாகும். அதிலும், ஒருவரோடொருவர் சம்பந்தம்செய்து கொள்ளும் இருபாலாரும், இரவும்பகலுமாய் ஒருவர்க்கொருவர் பேசும் விசேஷமான வார்த்தைகளின் வேற்றுமையால் உலகில் எப்போதும் நிவர்த்தி யென்பதே கிடையாது. ஆதலால் எவ்வாற்றானும் சமமான அந்தஸ்துள்ளவர்களே சம்பந்தங்கொள்வது சுகத்தைக் கொடுப்பதாகும். எக்காலத்தும் யானை மீதிருப்பவனுக்கு யானை மீதிருப்பவனே சுண்ணாம்பு கொடுத்தல் ஏற்ற தகுதியாம் என்பது சர்வ ஜனங்களும் ஒப்புக்கொள்ளத்தக்க விஷயமன்றோ? மஹாதேவரோ பிரபஞ்சங்களைச் சிருஷ்டிப்பவரும், மஹேஸ்வரரும், உலகங்களை ஒரே கவளமாக உட்கொள்பவரும், ஜகங்களுக்கு மிருத்யுவும், காலகாலரும், ஹரனுமாய் இருப்பவர். அவை போகட்டும். மேலும், நினைப்பதற்கும் அசாத்யமான அவரது அரிய சரித்திரத்தை, இவ்விடத்தைப் பிரம்மாதி தேவர்களு மறியார்கள். பலவாய தேவர்களும், அசுரர்களும் அவரால் தண்டிக்கப்பட்டவ ராகின்றனர். அவரது லீலாவினோதத்தாற்றான் பிரம்மாவின் சிரம் அவர் தம் நகத்தால் கிள்ளுண்டு போயிற்று. ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியின் நரசிங்க முதலிய அவதாரமனைத்தும் அவரால் சிக்ஷிக்கப்பட்டுள்ளன. பிரபுவினுடைய இத்தகைய கிருத்தியங்களை யாங்கள் விசாரித்தற்குக் கூடத் தகுதியற்றவரா யிருக்கிறோம். பிராம்மண சிரேஷ்டரும், யஜமானும், பரமேசனது மாமனருமான தக்ஷபிரஜாபதி வார்த்தைகளின் மாறுபாட்டிற்றானே கள்ளன்போல் சிரம் வெட்டுண்டனன். அவனது யாகத்திருந்த ருத்விக்குகள், முனிவர்கள், தேவ சிரேஷ்டர்கள் முதலிய எல்லாச் சபையோரும், யாகமும், அந்த யாகத்திற்கு முக்கிய அதி தெய்வமும், யாகம் செய்தவனும், அந்த யாகரக்ஷகரான விஷ்ணுவும் ஆகிய அனைவரும் வீரபத்திர மூர்த்தியால் தண்டனையடைந்தனர். ஆதலால் யாங்கள் எங்களது பெண்ணாகிய இந்தக் குழந்தை மூலமாக ஒருவிதமான துன்பமும் அடையாமலிருக்குமாறும், அருமந்த குழந்தைக்குத் துக்க நேரிடும் பக்ஷத்தில் அதைக்கேட்டுச் சகிக்கவொண்ணாதை நாங்கள் சுகித்திருக்கும் பொருட்டும், ஏற்றவாறு நீங்கள் அனைவரும் ஆராய்ந்தறிந்து முடிவு செய்யுமாறு வேண்டிக்கொள்கிறேன். சாம்பசிவ மூர்த்திக்கோ உடன்பிறந்தாரில்லை, நண்பரில்லை; சுற்றத்தவரில்லை; வம்ஸத்தவரில்லை. அவர் அத்விதியராய்த் தன்னந்தனியானவராய் இருக்கிறார். அத்தகைய மஹாப்பிரபுவையும் அவர்தம் அளவிடக்கூடாத மஹிமையையும் மீட்டும் மீட்டும்யோசிக்குமிடத்து, ஒரு பக்கம் சந்தோஷமும் ஒரு பக்கம் பயமும் மனமானதுகொண்டு குழம்பித் தடுமாற்றத்தை அடைகிறது.'' என்று கூறியதைக்கேட்ட வசிஷ்டரின் மனைவியாகும் அருந்ததி அம்மையார் எவரும் புகழ்ந்தோதும் அம்மேனகையைப் பார்த்து, இனிய வார்த்தைகள் சொல்லலாயினர்.

## 17-வது அத்தியாயம்.

"மங்கையருட் சிறந்த மேனகையே! யான் சொல்வதைக் கேள். மஹேஸ்வரருக்குத் தாயுமில்லை; தந்தையுமில்லை; அவரே ஜகங்களுக்குப் பிதாவாய் இருப்பவர்; அனைவர்க்கும் ராஜாதிராஜனாக விளங்குபவர். அவர் தனபதியாகிய குபேரனுடைய தோழர். எல்லா ஈஸ்வரர்களுக்கும் ஈஸ்வரன் என்னும் பிரசித்தியான பெயரையுடையவர். சர்வ புவனங்களும் அவருக்குப் பயந்தடங்கியிருக்கின்றன. பாரபக்ஷமில்லாத அரசர்கள் தண்டிக்கத்தக்க குற்றவாளிகளைத் தண்டனை செய்யாது விட்டால், பலமுள்ளோர் ஏழைகளை, மச்சங்களை சூலாயுதத்தால் குத்திக்கொல்வதுபோல் கொன்றிம்சைப்படுத்துவர். ஆதலால் நல்ல மனதுடைய மாதே, நான் சொல்வதைக்கேள். எவர் மன்னர்களிடத்தில் துரோகம்செய்கின்றனரோ அவரை அரசர்கள் புத்திரமித்திர களத்ர பசுபந்துவர்க்கங்களுடன் தண்டித்தே விடுவர். மஹாதேவரது மாமனாகிய தக்ஷபிரஜாபதியோ, கற்பிற்கரசியாகிய தனது பெண்ணைக் கண்ணெதிராகக் கண்டும், கேவலம் மடையனைப்போல் சிறிதும் நிந்தித்தற்கிடமில்லாதவரான தேவேசராகிய பரம்பொருளை ஒரு காரணமும் இல்லாமல், வாய்க்குவந்தவாறு பழிகூறி இழித்துப்பேசினன். அக்குற்றத்திற்காக அவன், தனது யாகருத்துவிக்களுடன் பலவாறாகத் தண்டனை அடைந்தான். பிரமன் முதலான தேவர்களும் தாம் தாம் செய்த குற்றத்திற்காகவே தண்டனை யடைந்தனர். ஆதலால் நீ மஹாதேவர் மீது தவறான எண்ணங்கொள்ள வேண்டாம். நற்குண மங்கையே! இன்னும் சொல்வதைக் கேள். நீ யாங்கள் கூறும் வார்த்தைகளுள் சிறிதும் சந்தேகம் கொள்ளாதே. மஹா தேவரும், உலகங்களுக்குச் சுகமளிக்கும் சங்கரரும், மிருடரும், அமங்கள மூர்த்தியும், சம்புவுமாகிய ஸ்ரீ சதாசிவ மூர்த்தியிடத்து மாறுபாடான ஐயத்தை என்றும் வையாதே. அழகிய மேனியுடையவளே! நீ என்னால் சிறந்த தவத்தை உடையவள் என மதிக்கப்பட்டவள். மஹாதேவருக்கு மகளைக் கொடுப்பதால், மிக்க பாக்யசாலியாயும், ஜன்மசாபல்யமானவளும் நல்வினையுடையவளுமானாய். இங்கு வந்திருக்கும் எழு ரிஷிகளும் பிரம்மவாதிகள் என்று பெரும்பெயரெடுத்தவர்கள். அந்தப் பரம்பொருளையே எக்காலத்துடன் பக்தியோடு பாவனை செய்பவர். அந்த மஹாதேவரையே சரணாகதியென அடைந்தவர். ஆதலால் மிக்க கருணையுடையவர்களாகிய இம்மஹரிஷிகளை நீ வந்தனை செய்து, "என் மகளைச் சூலபாணியராகிய மஹேஸ்வரருக்கு யான் கொடுத்தல்வேண்டும்.' என்று மும்முறை கூறிச் சந்தோஷ மனதுடன் வேண்டிக்கொள்." என்று அருந்ததியம்மையார் கூறியவற்றை மேனகை கேட்டு, தேவர்கள் எக்காலத்தும் மறவாது போற்றும் மஹாதேவர் தன்மையை உள்ளத்தறிந்து, சந்தேகம் தெளியப்பெற்றவளாய், அத்திரி முதலான சப்த ரிஷிகளைப்பார்த்து வந்தனத்துடன் "ஹே முனிபுங்கவரே! தங்களது தங்கையாகும் நான் அறியாமல் சற்றுமுன் சொல்லியவற்றை மன்னித்தருளி, எனது குழந்தை மஹாதேவரை பாணிக்கிரஹணம் செய்து கொள்வதற்கேற்ற மார்க்கத்தை மஹரிஷிகளாகிய தாங்களே விளங்கச் செய்தல்வேண்டும்." என்று பன்முறையும் வேண்டினள். பர்வதராஜன் மனைவி இங்ஙனம் வணக்கத்துடன் பிரார்த்திக்கலுற்றதைக்கேட்ட முனிவர்கள், மன்

னனைப்புகழ்ந்து, "வாராய் இமவானே! பார்வதி கனிகளைப்பெற்றுக் கொள்ளு மாறு, அவளை இப்போது உன் மடி மீதேற்றிக்கொள்." என்று பொறுமை யுடன் கூறினர். அஃதேபோல் அருந்ததி அம்மையாரும் மற்றைய ரிஷி பத் தினிகளும் சொல்லினர். பிறகு இமவான் தன் அருமந்த புதல்வியாகிய கலி யாணியை மடிமீதேற்றிக் கொண்டான். அருந்ததி அம்மையார் மற்றைய ரிஷி பத்னிகளுடன் தமது இரண்டு கைகளாலும் பார்வதியம்மையின் இரண்டு கைகளிலும் கனிகளைத்தந்து, அவ்வம்மையாரது பாதாரவிந்தங்களை மானச மாக நமஸ்கரித்தனர். பார்வதியம்மையோ ஜகங்களுக்கெல்லாம் தாயாய் இருப் பவள், மஹாதேவருடைய மனைவி, எல்லாச் சுபங்களையும் அளிப்பவள், மற் றவர்கள் அடைதற்கொண்ணுத சம்புவின் மடிமீது இவளே உட்கார யோக் கியமானவள். இவள் சேர்வதால் மஹேசர் இல்லறத்தராகினர். இவர்களது லீலா விநோதங்களினுற்றான் எல்லாப் பிரபஞ்சங்களும் தோற்றமாய் நாசத்தை யுமடைகின்றன. சிருஷ்டியாதி கிருத்தியங்கள் அனைத்தும் இவர்கள் எண்ண மாத்திரமே உள்ளன." என்னும் எண்ணமே அந்த ரிஷி பத்தினிகள் அம்மை யாரை மானஸமாக வணங்கியதற்குக் காரணமாகும். பின்னர், பர்வதராஜன் ரிஷிகளையும் அவர் தம் பத்தினிமாரையும் வந்தனம்செய்து, அஞ்சலியஸ்த னய், "ஓ முனீந்திரரே! சுபத்திற்குரிய நாள் எந்நாள்? முகூர்த்தத்திற்கு எந்தநேரம், சந்திரபலம் தாராபலம் முதலியவற்றால் பொருத்தமுள்ளதாயிருக் கிறது. ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி, எனது மகள் ஆகிய இருவருக்கும், ராசி நக்ஷத்திரம், யோனி முதலான தசவித பொருத்தங்களும் உண்டா என்பதை நீங்கள் தயைசெய்து நன்கு ஆராய்ந்து எங்களுக்குச் சொல்லியருளல் வேண் டும்." என்றனன்.

அங்ஙனம் பர்வதராஜன் கூற முனிவர்கள் ஆலோசனை செய்து பின், இமவானைப் பார்த்து, "இமவானே! நாளை உத்திர நக்ஷத்திரமாதலால், நன்னு ளாகும். ஏழாமிடம் சுத்தமாயிருக்கிற ராசியில் பரமேஸ்வரருக்குப் பார்வதி தேவியைத் தாராதத்தம் செய்து கொடுத்தல் வேண்டும். சகல பிரபஞ்சங்க ளுக்கும் இனத்தவராகிய மஹாதேவருக்கு எல்லாப் பொருத்தங்களும் சரிவர இருக்கின்றன. "வாராய், இமராஜனே! கல்யாண மஹோற்சவத்தைக் களிப் புடன் கண்டானந்திக்க வருவோரை நீ நன்றாய் உபசரித்தல் வேண்டும். அதற் கான போதுமான சாமான்களை அதிகமாகவே நீ சேகரித்தல் வேண்டும். உனக்கு மங்கள முண்டாகக்கடவது! நாங்கள் போய்வருகிறோம். மஹாதே வருக்கு நாளையே திருமணம் என்பதை மறவாதே." என்று விடை கூறிக் கொண்டு உடனே அவர்கள் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுச் சந்தோஷத் துடன், மஹாதேவரது சன்னிதானத்தை வந்தடைந்தனர்.

சப்தரிஷிகளும் விடைகொண்டு சென்றபின் பர்வதராஜன், தனது சுற்றத் தார், பெண்டிர், மக்கள் முதலானோருடன் கலந்து, ஸ்ரீமஹாதேவருக்கு நடக் கப்போகும்மறு நாளைய கல்யாண மஹோற்சவம் எவ்விதம் நிறை வேறுமோ? பெண்பாலாகிய மேனகை, ஸ்ரீ சாம்பசிவ மூர்த்திக்கு அவமரியாதை நேரிடாத படி எங்ஙனம் நடந்து கொள்ளப்போகிறாள்? அக்காரியத்தை யான் எவ்வாறு நிர்வகித்து, சம்புபூஜ்பத்தையுடன் திரும்பிச் செல்ல வழி யேது செய்யவல்

லேன்! தாவர ஜங்கமவடிவமாகிய எல்லாம் அவருடைய திருவருளால் வேண்டியவற்றைப் பெற்றுச் சுகமுடன் என்றும் கவலையற்றிருக்கின்றனவே. நாளை நடக்கும் கல்யாண மஹோற்சவத்தைக்கண்டு ஆனந்திக்கும் பொருட்டு வருவோர்க்குப் போதுமான இடம் எவ்விடத்தில் ஏற்பாடு செய்வது," என்று யோசிக்கலாயினன். அப்போது அவன் மைந்தனாகிய மைநாகன் தன்தந்தையை நோக்கி, "வராய் தந்தையே! சீக்கிரத்தில் தேவதச்சனாகும் துவஷ்டாவை வரவழைத்து, மஹாதேவருக்குத் தக்கதான மிகப்பெரிய கல்யாணமண்டப வேலையைத் தடையில்லாமல் முடித்தல் வேண்டும்." என்று கூறினன். அதைக் கேட்ட இமராஜனும் சந்தோஷங்கொண்டவனாய், ஸ்வர்க்க லோகத்துச் சிற்பிகளுள் முதன்மை யானவனான துவஷ்டா என்னும் தச்சனை அழைப்பிக்க, அத்துவஷ்டா என்பவன் பர்வதராஜன் முன்பாகவந்து கைகட்டிக் கொண்டு நின்றான். இமவானும் அவனை அன்புடனழைத்து, அர்க்கிய ஆசனங்களால் உபசரித்து, "தாம் சுவர்க்க லோகத்திய சிற்பிகள் அனைவர்க்கும் தலைவராகிறீர்! யான் நாளை எனது புதல்வியாகிய பார்வதியை ஜகங்களுக் கெல்லாம் நாதரும் சுபத்தை யளிப்போருமாகிய சிவபெருமானுக்குத் திருமணம் செய்து தரப் போகிறேன். அதுபற்றித்தாம், மிக்க அற்புதமானதும், அதிக விஸ்தாரமுள்ளதும், பலவகையாகிய விசித்திரங்கள் நிரம்பப் பெற்றதும், பலசித்திரப் பதுமைகள் நிரம்பியதுமான கட்டிடம் பலவற்றுடன் சேர்ந்ததும், இதற்கிணை வேறு எதையும் சொல்ல முடியாது என்று பிறர் சொல்லும்படியானது மான ஒரு கலியாணமண்டபத்தை விரைவில் தக்கமுயற்சியுடன் அமைத்துத் தருதல் வேண்டும்." என்று கூறிச்சந்தனம், புஷ்பம், ஆடை முதலியவற்றை அவனுக்கு வெகுமதியாகத் தந்தனன். அந்த வெகுமதியை ஏற்றவிஸ்வகர்மன் மனக் களிப்புடன் கூடியவனாய், மிக்கவிரைவுடன் நினைத்த மாத்திரத்தில் ரத்நக்கற்கள் இழைத்தமைக்கப்பட்ட கல்யாண மண்டபத்தை அமைத்தனன். அந்தமண்டபம், நீட்சியில் லக்ஷம் யோஜனையும் அகலத்தில் லக்ஷம் யோஜனையும் உள்ள விஸ்தீரனத்துடன் பிரகாசமாய் விளங்குவதாகவும், அகண்டமான அனேக கட்டிடங்களால் சோபிக்கவுற்றதாயும், ஆயிரம் அடுக்குமெத்தை கட்டிடங்களடங்கிய பல உப்பரிகைகள் ஆகாயத்தை அளாவிநிற்க அகத்துக் கொண்டதாயும், சில இடங்களில் தெளிந்த நீரோட்டம் போலும் பொருந்திய ரத்னங்கள் இழைக்கப் பெற்றவேலைப் பாட்டால், அலைகள் கரையில் மோதப் பெற்ற கடலை யொத்ததாயும் விளங்கியது. அன்றியும் அந்தமண்டபத்துள் ஓரிடத்தில் தரையென்று பிரமிக்கும் படியான பல நீர்க்கால்கள் நிறைந்திருந்தன. சில இடங்களில் வாயிற்படி என்றுமதிக்கும்படியாக சுவர்கள் அமைந்திருந்தன. சில இடங்களில் சுவர்கள் வைத்திருப்பன போல் காணப்படும் வாயிற்படிகள் அம்மண்டபத்தை அலங்காரம் செய்தன. சில இடங்களில் சுவர்கள், இடை வெளிபோல் தோன்றுவனவாயும். சில இடங்களில், கம்பங்கள் போல் தோன்றும் இடை வெளிவரிசைகள் பொருந்தியனவாயும் இருந்தன. ஆங்கு ரத்னக்கற்களாலேயே இழைக்கப்பெற்ற தூண்வரிசைகள் பலவற்றைக் கொண்ட மண்டபங்கள் பல விளங்கியழகு செய்தன. முத்துமணிகள் அமைத்த பல ஜன்னல்களுடனும், சிறந்த பவளத்தோரணங்களுடன், வைர

மிழைத்த படிகளுடனும், தெள்ளிய நிறமமைந்தபடிகள் திண்ணைகளுடனும், அம்மண்டபம் விளங்கியிருந்தது. அந்த மண்டபத்திற் கட்டப்பட்ட மிகவும் மேலாக உயர்ந்துள்ள கொடியின் நுனி சூர்யனுடைய வழியை மறைத்து நின்றது. பல பெரிய ரிஷபங்கள் நிறைந்த சுற்று மதில்களின்முனை, ஆகாய த்தைப் பரிசித்து நின்றது. இத்தகைய பலவாய விசித்திரங்களுடன் நிறைந்த கல்யாண மண்டபத்தை அந்த விஸ்வகர்மன் சந்தோஷ சாகரத்தில் ஆழ்ந்த வனாய் முடித்து, மிக்ககளிப்போடு கிரிராஜன் சமுகம் சென்று தான் முடித்த விதத்தைக் கூறிப்பின் தன் சாமார்த்தியத்தால் ஒப்புமை இல்லாதபடி அமை த்த அந்தமண்டபத்தை அவனுக்குக் காட்டினன்.

## 18-வது அத்தியாயம்.

மண்டபத்தைக் கண்டபர்வதராஜன் துவஷ்டாவினது திறத்தைப் புகழ் ந்து, அவனுக்கு அற்புதமிக்க சிறந்த வெகுமதிகளைத்தந்து பலவாறு உபசரித் துப்பின், "நாளை நடக்கப்போகும் விவாகத்திற்கு அவசியம் .வரவேண்டும்" என்று கேட்டு அவனைச் சந்தோஷமாய் அனுப்பிய பிறகு விரைவில் பார்வதி யம்மையாரைச்சிறந்தசந்தனம், புஷ்ப்பம் முதலியவற்றால் மங்கையர் சிங்காரம் செய்யும்படி உத்தர விட்டனன். தாமரை மலரையனைய கண்களையுடைய மாதர்கள் பலரும் அந்தக் கட்டளையின்படி, பார்வதி தேவியாருக்குச் சிறந்த மங்களாபரணங்களை விரைவில் அலங்காரம் செய்து, அம்மையாரைத் திருமனை மீதுட்கார வைத்து மங்களப்பாடல்கள் பாடினர். சங்கம், சிருங்கம், மிருத ங்கம், துந்துமி முதலான வாத்தியங்கள் முழங்கின. பெண்கள் அனைவரும் கிழக்குமுகமாக வீற்றிருந்த நீண்டகண்களை யுடையவரான உமையம்மைக்கு அப்பியங்கம் செய்தனர். பிறகு அகண்ட நேத்திரியான அந்த அம்மைக்கு வென்னீர் ஸ்நானம்செய்வித்து, சம்பா அரிசி, பச்சைப்பயறு முதலிய தான்யங் களின் பொடியால் செய்த நேர்த்தியான ரசங்களாலும், நல்ல நிர்மல முள்ள மங்கள பரிமள சீதள நீராலும், கங்கை, யமுனை, நான்கு சமுத்திரங்கள் முத லியவற்றி னின்றும் கொண்டு வரப்பட்ட புண்ணிய தீர்த்தங்களாலும் அழகு கொண்டு விளங்கும் கூந்தலையுடையவளான தேவிக்கு ஸ்நானம் செய்து வைத் தனர். அப்போது அறிவிற் சிறந்தவரும், பெரியோரும், வித்துவான்களு மான பிராமண சிரேஷ்டர்கள், தேவிசூக்த்தம் என்னும் வேத மந்திரத்தைப் பன்முறை ஓதினர். எல்லா உலகங்களிலும் அப்போது கல்யாண வைபவத் தின் முழக்கம் உண்டாயது. ரிஷிபத்தினிகள் பலர், தேவபத்தினிகள், அதிதி, திதி, ஸுபர்ணி, ஸரமை, ஸ்வாஹா, ஸ்வதா, அனுமையை, கார்கீ முதலான தேவர்கள், அருந்ததி யம்மையார் முதலான எல்லோரும், எல்லா உலகங்களு க்கும் ஈஸ்வரியும் தாயுமாய் விளங்கும் பரதேவதைக்குப் பொற்குடங்களால் மெல்ல மெல்ல ஸ்நானம் செய்வித்தனர். அதன் பின்னர், மெல்லிய வெண் ணிறமமைந்த பட்டாடையால், தாமரை மலரைப் போன்ற கண்களையுடைய உமையை மெதுவாகத் துவட்டி ஈரம் போக்கி, சிறந்ததும், மங்களத்தன்மை நிறைந்தது மான பட்டுவஸ்திர மொன்றை இடையிற்கட்டி மற்றொன்றை மே லாக அலங்கரித்தனர். அதற்குள் அலங்காரம் செய்வதில் மிகவும் திறமை வாய்ந்தவரான மாதர்கள் பலர் அம்மையாருக்குப் பாதாதிகேசாந்தம் அலங்

காரம் செய்தனர். செந்தாமரையைப் போலும் கோமளமாகிய அம்மையாரது பாதங்களில், புதிய கொம்பரக்குச்செம்பஞ்சுக்குழம்பால், திருமணக் கோலத்திற் கேற்றவாறு ஆலஸ்ய மின்றிச்சாயமிட்டு, "அம்மையே! ஸ்ரீமஹாதேவருடைய சிரமீது விளங்கும் சந்திரகிரஹணத்தின் பக்கத்தில் தாமரை மலர் போன்று மிருதுவாயுள்ள இந்தப்பாதங்களை வைப்பாயாக!" என்று பூஜித்துப் பார்வதி தேவியாரைப் பரிகாசம் செய்தனர். அப்போது இமராஜன் புதல்வி அவரெல்லோரையும் புன்னகையுடன் உற்றுநோக்கி, தனது மரைமலரா லடித்தாள். மாதர்கள் ரத்னங்கள் இழைத்த தண்டைகளையும், மங்களம்பொருந்தியபொற்பாத சரங்களையும், அம்மையாரதுகாலில் பூட்டினர். இடையாபரணமாகிய அரைநூல் மாலையைத்தரித்து அழகுமெலிந்த அம்மையாரது இடையானது, பரமேஸ்வரரது விழிகளாகிய வலியன் குருவிகளைப்பிடிக்க ஆசையுற்று வலையைப்பிடித்ததுபோல் விளங்கியது. பலவகையான நகைகளை அணிந்துள்ள அகண்ட நேத்திரியின் இரண்டு கைகளும், மச்சக்கொடியுடையவனுகிய மன்மதனுல் மஹாதேவரது கழுத்தில் கட்டுதற் கமைக்கப்பட்ட பாசம்போல் விளங்கின. பலவித ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு மெலிந்த திருமேனியுடன் கூடியுள்ள அம்மையின் சரீரம், வானவில்லின் பலவாய துண்டுகளால் நிறையப்பெற்ற ஆகாயம் போல் விளங்கியது. பல ரத்னமாலைகள் அணியப் பெற்ற தாமரை மொட்டை யொத்ததனங்கள் இரண்டும், இடையே நீலக்கல்லைக் கொண்ட பெரிய மாணிக்கக்கல்லின் நுனியில் நீலவர்ணம் கொண்டது போல் விளங்கின. அனேக மோரா மாலைகளால் மறைக்கப்பட்டதேவியாரின் மார்பு, இந்திர வில்லுடன் கூடிமாரி காலத்திலான பல மேகங்களையுடைய வானம் போல் விளங்கியது. நன்ருய் முதிர்ந்த கொவ்வைக்கனிபோல் தேவியாரது இதழ்கள் சிறந்து சென்னிறத்துடன் விளங்கின. அம்மையாரது மூக்கு நுனியில் உயர்ந்த முத்துக்களைத் தங்கத்திற்கட்டி அழகாயமைத்த புலாக்கும் நத்தென்னும் ஆபரணமும் விளக்கம் கொண்டதானது, சாயுங்காலத்திய மேகத்தின் துண்டுகளுடன் கூடிய சந்திர மண்டலம்போல் பிரகாசித்தது. காதில் வாளி, ஜம்பஸரம், கம்மல் முதலிய சிறந்த ஆபரணங்கள் இடப்பெற்று, அவற்றின் காந்தியால் மிகவும் சோபையுற்ற தேவியாரின் திருமுகமானது, அப்போது ஒப்பில்லாத விசேஷித்த பிரகாசத்துடன் கூடிவிளங்கியது. கூந்தல் முடிச்சில், பலவகையான விசேஷித்த வாசனையுடன் கூடிய மலர்வரிசைகள் பெருமை பெற்று விளங்கின. முன்னெற்றி மயிரில் கட்டப்பெற்ற நெற்றிச் சுட்டியின் பிரகாசம் நெற்றியை அலங்கரிக்கச் செய்தது. மிகவும் திறமையாய் மைதீட்டப் பெற்ற இரண்டு கண்களின் புருவங்களும் அம்புடன் கூடிய மன்மதனது இரண்டு வில்கள் போலும் வணங்கின. இப்படி அம்மையாருடைய சிரசு முதல்பாதம் வரையிலும் மதிப்பிடமுடியாப் பல நவரத்னபரணங்கள் அழகு செய்தாலும், இயற்கையிலேயே மிக்க சௌந்தர்யமுடைய அம்மையாரது திருமேனியில் அவை சம்பந்தப்பட்டதால், அந்த ஆபரணங்களுக்கு அதிக பிரகாசம் உண்டாயிற்றென்று சொல்லலாமே யொழிய அம்மையாரது திருமேனியை அந்த ஆபரணங்கள் அழகு படுத்தின என்று சொல்வதற்கில்லை, அலங்காரம் முடிந்தபிறகு எல்லோரும் அம்பிகை

யின் திருமேனியின் ஒவ்வொரு அவயவத்தின் ரூபலாவண்ணிய சௌந்தரியங்களை உற்றுநோக்கிய இடத்து, இவளால் ஜகதீசன் இல்லறத்தாராகவும், அவரால் இவள் இல்லறத்தாளாகவும் ஆனதால், மூன்றுலகிலும் இவர்களுக்கிணையான தம்பதிகளேயில்லை எனமதித்தனர். பின்னர், அலங்கார மாதரும் பிறரும் பர்வத ராஜனிடம் குழந்தைக்கு அலங்காரம் செய்து முடித்தவிஷயத்தைத்தெரிவித்தனர். இமராஜன் அதன் பிறகு, எண்வகை விவாகங்களுள் உத்தமமான பிரம்மவிவாகத்தின்படி, வரனைவலிய அழைத்து வந்து கன்னிகையைக் கொடுக்க இசைந்தான். அதனால் அவன் பரமசிவத்தினிடத்துச் செல்ல எண்ணங்கொண்டு, சூர்யன் உத்தராயண காலத்தில் கமனம்செய்யும் மார்க்கத்தில் சென்று விரைவாகக் கைலையை அடைந்து, கால கூடவிஷத்தால் கழுத்தில் கருநிறங்கொண்ட காலகாலரது மாளிகையின் முதலாவது கோபுரவாயிலை அடைந்தான். அவ்விடத்தில் வீற்றிருந்த, பிரதம கணங்களுக்குத் தலைவரும், சாலங்காயன ரென்றயோகிக்குப் பேரப் பிள்ளையுமாகிய நந்திதேவரை வந்தனை செய்து, "வாரீர் எல்லாக்குணங்களும் நிறையப்பெற்ற பிரபுவாகிய நந்திதேவரே! பிராமணப் பிரபுவாம் ஸ்ரீ சாம்பசிவ மூர்த்திக்கு என் புதல்வியை பிரம்மவிவாக முறைப்படி வலிய பிரார்த்தித்து அழைத்துச் சென்று திருமணம் செய்து கொடுக்க எண்ணி இவ்விடம் வந்தேன். ஆதலால் அந்த மஹாபிரபுவைத் தரிசிக்க வேண்டியவனாய் உம்மைச் சரணடைகிறேன்." என்று தெரிவித்து வேண்டிக் கொண்டனன். அதைக்கேட்ட நந்திதேவர், மஹாதேவரிடம் சென்று விடை பெற்றுவந்து. பர்வதராஜனை ஒரு நொடிக்குள் பரமசிவத்தின் அருகில் கொண்டு போய்ச் சேர்த்தார். அவ்விடத்தில், மஹாமேருமலையை வில்லாகக் கொண்டவரும், மூன்றுலகையும் ரக்ஷிப்பதில் விழித்திருப்பவரும், மேலான பிரபுவும், அற்புதமான ஸிம்மாசனத்தில் வீற்றிருப்பவருமான மஹாதேவரை இமராஜன் மிக்கபயபக்தியுடன் கூடியவனாய் வணங்கி, "ஹே! மஹாதேவா! பரமானந்த மூர்த்தியே! சர்வ புவனங்களுக்கும் அதிபதியே! சகல சுராசுரேந்திரர்கள் பூஜிக்கும் பாதார விந்தங்களை உடையவனே! பரவஸ்துக் கெல்லாம் பரவஸ்துவே! அண்டினோரது அருந்துயராகிய கோடைக்கு எற்றமாரி காலம் போன்றவரே! கங்கையை ஜடைக்கண் தரித்தவரே! ஜயவிஜயீபவா! இந்த உலகில் தேவர்களும் அசுர்களும் தேவரீரைப் பூசித்தே மிக்க செல்வங்களைப் பெற்றிருக்கின்றனர். உலகில் கெட்டகதியடைந்து துன்பப்படுவோர், தேவரீரது பாதார விந்தத்தைக் கனவிலும் எண்ணாத சண்டாளர்களேயாவர். சுமங்கள மூர்த்தியாய் விளங்கும் தேவரீரை அவமதிக்கும் அறிவினர் மங்களை மற்றவராய்க் காணப்படுகின்றனர். எல்லோருக்கு மீஸ்வரத்தன்மை வகித்தவரே! சர்வமங்களராகியும், ஸகல லோகங்களுக்கும் ஸகல அபீஷ்டங்களையும்தவறாது அளிப்பவருமாகிய தேவரீரை அடியேன் சரண்புகுந்தேன். மிக்கமேன்மை உடையவரும் எக்காலத்தும் பிறப்பிறப் பற்றவராயும் விளங்கும் தேவரீரிடத்து அடியேன் ஓர் யாசகனாக வந்துள்ளேன், இரப்போன் இரக்கும் பொருளைக் காட்டிலும் மிகுதியாக அளிக்கும் வள்ளலே! என் கோரிக்கையை விரைவில் பூர்த்தி செய்தருளல் வேண்டும்." என்று துதி செய்து வேண்டிக் கொண்டான். இங்ஙனம்

வேண்டிக்கொண்ட இமவானைப் பார்த்து, பிரபுக்களுக்குரிய உதாரத்தன்மை யுடன், "மன்னரே! எழுந்திரும்; எழுந்திரும். உமக்கும் மங்கள முண்டாக ட்டும். தாம்விரும்பிய வரத்தைத்தருகிறோம். விரைவில் தாம் வேண்டியதைக் கேளுங்கள்." என்று திருவாய் மலர்ந்தனர்.

## 19-வது அத்தியாயம்.

அப்போது இமராஜன் சந்தோஷங் கொண்டவனாய், "ஹேஜகதீசா! திரிபுராந்தகனே! தேவரீருக்கு அடியேனது புதல்வியை மணத்திற்கொடுக்க பிரிய முடையவனானேன். தேவரீர் விஷ்ணு, பிரம்மா முதலான தேவர்க ளுடனும், சகல ரிஷி கூட்டங்களுடனும், அடியேனது ஓஷதி பிரஸ்தமென் னும் பட்டணத்திற்கு இப்போதே எழுந்தருளி வந்து, நாளைய காலையில் அவ ளைப் பாணிக்ரஹணம் செய்துகொள்ளத் திருவுளம் பற்றவேண்டும்." என்று பணிவுடனும் பொறுமையுடனும் கேட்டனன். அதனால் பிரபுவானவர் சந்தோஷங் கொண்டவராய், அப்படியே ஆகட்டும் எனச்சம்மதித்து இன்ப நிறைந்த மனதுடன் அவனுக்கு விடையருளி யனுப்பினர். பின்னர் இம ராஜன் அவ்விடத்தை விட்டுச் சென்றதும், சுவாமி நந்தி தேவரைப்பார்த்து, "வாராய், சிவ கணங்களுக்கெல்லாம் தலைமை வகித்த நந்தியே! அண்டங்கள் தோறும் இருக்கும் அளவற்ற காந்தியுடைய மிக்க பராக்ரமசாலிகளாகிய நமதளவில்லாத கணாதிபர்களையும், தேவர்கள், ஸாத்யர்கள், விஸ்வதேவர்கள், ரிஷீஸ்வரர்கள் முதலானோரை விரைவில் நமது கட்டளையின்படி இப்போதே ஒரு நொடிக்குள் வரவழிப்பாய்." என்று கட்டளையிட்டனர். மஹாதேவனா ரது கட்டளையை அவருக்கு மிகவும் பிரீதியுள்ளவரான நந்திதேவர் சிரசாகக் கொண்டு, ஒரு முகூர்த்த நேரம் தமது மனதை ஒரு முகப்படுத்திப் பின் களிப்புடன் கூடியவராய்க் கணாதிபர் எல்லோரையும் நினைத்தார். அன்றி யும் அவர், திக்குப்பாலகர்களாகிய இந்திரன், வருணன் முதலானவரையும் மற்றய தேவர்கள், பிரஜாபதிகள், ஏகாதச ருத்திரர்கள், துவதசாதித்யர்கள், அஷ்டவசுக்கள், விஸ்வதேவர்கள், ஸாத்தியர்கள், பிதுர்க்கள், உலகங்களுக் காதியாகிய ஸ்ரீமந் நாராயணன், அவர்தம் பத்து அவதாரங்கள், சாக்ஷாத் நான் முகக் கடவுளாகிய பிரம்மா, பாதாள லோகவாஸியாகிய தனுவின் பிள்ளைக ளான அசுரர்கள், அட்டமாநாகங்கள், மஹா பராக்ரமம் பொருந்தியவர்களான கத்துருவின் மக்களாம் அசுரர்கள், அநந்தன், வாசுகி, கார்க்கோடகன், மஹோரகன், கம்பளன், அசுவதரன், நாகங்களுள்தலைமை வகித்த தக்ஷகன், சங்கபாலன், மகாபதுமன் முதலான பலரையும் நினைத்தனர். அதற்குப்பின் கணாதிபராய் விளங்கும் நந்திதேவர், விரோசனன், பலி, நமுசி, வலன், மஹா ஜம்பன், ஜம்பன், ஹயக்கிரீவன், பாதாள லோகத்தில் வாழ்பவராகிய மற் றைய திதியின் மக்கள், தனுவின் மக்களாகிய அசுரர், பாதாள லோகத்தில் இருக்கும் ஹாடகேஸ்வரருடைய ஆளுகையில் அமைந்த மற்றய கணங்கள், கூஷ்மாண்ட ருத்திரரது கணத்தலைவர்கள், பானுகம்பன், மஹாபலி, ஜகங் களுக்கு மங்களகரமாய் விளங்குபவரும், மஹா பத்திரகாளியின் நேசருமாகிய வீரபத்திரர், பூத கணங்கள், பிரமதகணங்கள் முதலிய எல்லாக் கணங்களின் அதிபர், மகாபலன், மஹாபாஹு, மதுபிங்கன், பிங்களன், சதுர்வக்த்ரன்,

பூதகணங்கள், பிரமத கணங்களின் கோடி கோடி சங்கையைக் கொண்ட தலைவர்கள், கருணன், பாஹுகன், பஞ்சாக்ஷன், சதமனியு, ஸுகேசன், காஷ்டகூடன், விருக்ஷன், மேகபிருதன், விஸ்வரூபன், விரூபாக்ஷன், தாஸ கேது, சதானனன், முதலான மற்றைய எண்ணற்ற கணங்களையும் எண்ணினர். தேவாதி தேவராகிய மஹாதேவர், தம்மைக் கலியாணத்தின் பொருட்டு அவர்களை யெல்லாம் வரவழைக்க எச்சரிக்கை செய்ததைச் சிரசாக வகித்த சிலாத முனிவரின் தனையராகிய நந்திதேவர், கோடி கோடி எண்ணிக்கையுடைய கலைகள், முகூர்த்தங்கள், காஷ்டைகள், தினங்கள், திதிகள், பக்ஷங்கள், அரை மாதங்கள். மாதங்கள் ருதுக்கள், வருஷங்கள், கங்கை முதலான புண்ணிய நதிகள், சமுத்திரங்கள், ஓடைகள், இவ்வுலகின் கண் பார்வைக்குட்பட்ட பொருள்கள், அனுமானபிரமாணத்திற்கு விஷயமான பொருள்கள், முதலிய எல்லாவற்றையும், ஸ்ரீ ஜகதீசனது விவாகத்திற்குவர மனதில் நினைத்து, ஜகத்பதியாகும் அந்த நந்தியங்கடவுள் அழைத்தனர். அதற்கு மத்தியில், மஹாதேவரைத் தரிசிப்பதற்கு இதுதான் தக்க சமயமென்று தேவர்களுக்கு அறிவிப்பதுபோல், சமயக்குறி வாத்தியத்தின் பேரொலி முழக்கம் உண்டாயது. பின்னர் விஷ்ணு முதலான தேவர்கள் எல்லோரும் அப்போதுண்டான அந்த வாத்தியத்தின் முழக்கத்தைக் கேட்டவர்களாய், திருமண மஹோற்சவத்தின் பெருங்காட்சியைக் காண பேராவல் கொண்டவர்களாய் விரைவாக வரலுற்றனர். ஸ்ரீ விஷ்ணு மூர்த்தியானவர். சமுத்திர புத்திரியாகிய லக்ஷ்மி தேவியுடன், ஸாக்ஷாத் வேத ஸ்வரூபராகிய மஹாபராக்ரமம் பொருந்திய கருடன்மீது ஆரோகணம்செய்து, தமது எல்லாக் கணங்களும் புடைசூழ்ந்துவர, பிரபஞ்சங்களுக்கு ஆதி தம்பதியாகும் ஸ்ரீபார்வதி பரமேஸ்வரரைப் பார்க்க மிக்க ஆதரவுடன் வந்தருளினர். சிருஷ்டித்தொழிற்கதிபதியானவரும், ஜகத்ஸ்வரூபியுமான நான்முகக் கடவுள், பெண்மானின் விழிகள்போன்ற விழிகளையுடைய பெருமை மிக்க ஸரஸ்வதியம்மையாருடன், பரிசுத்த மிக்க அன்னத்தமர்ந்து, மஹா பெருமைதங்கிய மற்றைய ஒன்பது சிருஷ்டி கர்த்தர்களுடனும், உருவங்கொண்ட வேதங்கள், ஆகமங்கள், வித்தைகள் முதலான தமது கணங்கள் புடைசூழ, ஸ்ரீபார்வதி பரமேஸ்வரரது ஆனந்தந்தரும் விவாகமஹோற்சவத்தைப் பார்ப்பதற்காகச் சூலபாணியராகிய மஹாதேவரது சன்னிதானத்தை அடைந்தார். இந்திரன் புலோமாவின் புதல்வியாகும் இந்திராணியோடு. நான்கு பெரிய கொம்புகளை உடையதும், நேர்த்தியானதுமான வெள்ளையானை யென்னும் ஐராவதத்தில் ஏறிக்கொண்டு, மித்திரர். துவாதசாதித்யர், அஸ்வினி தேவர்கள் மற்றைய முப்பத்து முக்கோடி தேவர்களும் தன்னைப் புடைசூழ்ந்துவர, விஸ்வதேவர்கள், சாத்யர்கள், எக்காலத்தும் பரப்பிரம்மத்தையே ஓதி நிற்கும் தவமுனிவர்கள் முதலானோருடன் ஆயிரங்கண் களையுடையவனாக, ஜகத்பதியைத் தம்பதி சகிதமாய்க்கண்டு காட்சிபெறும் பொருட்டுக் கைலாயத்தை அடைந்தான். இங்ஙனமே மற்றைய, அக்னி தேவன், யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈஸானியன் முதலிய எல்லாத் திக்குப்பாலகர்களும் ஸ்ரீ மஹாதேவரது சன்னிதானத்தை அடைந்தனர்.

## 20-வது அத்தியாயம்.

கைலையில், எல்லா ஸ்தாவர ஜங்கம ஸ்வரூபிகளாகிய ஜீவாத்மா, அந்தராத்மா, பரமாத்மாவாகிய ஜீவராசிகள் எல்லாம் வந்தன. மஹாபராக்ரமசாலிகளாகிய ஆறுயிரத்தறு நூறுகோடி அசுரர்களும், பாதாளலோகங்களிலுள்ள நாகர்களும், எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாக விளங்கி அளவில்லாத காந்தியையுடைய ஸ்ரீ காலாக்னிருத்திர பகவானும் தமக்குச் சரியொத்தவன்மையுடைய அனந்தங்கோடி கணாதிபர்களுடன், ருத்ராணியென்னும் தேவியுடன் கூடியவராய், ஸ்ரீ மஹாதேவர் சன்னிதானத்தை அடைந்தனர். மஹா பலசாலியுமாய் விளங்கும் ஹாடகேஸ்வர ருத்திரர் தமக்கொப்பான வடிவங்கொண்டவர்களாய் விளங்கும் பத்து லக்ஷங்கோடிகணாதிபர்களுடன் வந்து சேர்ந்தனர். லக்ஷ்மி விலாசம் பொருந்திய கூஷ்மாண்டரென்ற ருத்திரகணாதிபதி தமது கோடி கோடி கணங்களுடன், திருக்கல்யாண மஹோற்சவத்தைக் காண ஆவலுற்றவராய் ஸ்ரீ மஹாதேவரது சன்னிதானத்தை அடைந்தனர். ரத்தவர்ணரென்பவர் பத்துக்கோடி கோடி கணங்களுடனும், கேஸ ராக்ஷர் என்பவர் ஆயிரங்கோடி கோடி கணங்களுடனும் மகோற்சவத்தைக் காண ஆசையுற்றவராய்ச் சிவ சன்னிதானத்தை அடைந்தனர். வைத்தியுதரென்பவர் மலரகிதராகவும் மோக்ஷ சாம்பிராஜ்யத்தை அடைந்தவர்களுமாகிய எட்டுக்கோடி கோடி கணங்களுடன் திருமணத்தின் பொருட்டுச் சந்தோஷமாக வந்து சேர்ந்தனர். விசாகர் என்பவர் அவித்தை முதலிய எல்லாக் கிலேசங்களினின்றும் விடுபட்டவர்களான லக்ஷம் கோடி கோடி கணங்களுடன் சிவ சன்னிதானத்திற்கு வந்தனர். சகல நற்குணங்களும் பொருந்தியவரான பாரியாத்திரர் என்போர் தமது ஆயிரம்கோடி பிரமத கணங்களுடன் உள்ளம் குளிர்ந்தவராய் ஈஸ்வர சன்னிதானத்தை அடைந்தனர். ஸர்வஞ்ஞரும், ஸர்வமும் சிவஸ்வரூபமென்று கருதியவருமான ஸர்வாஙகர் என்போர் தமது கோடி கோடி. கணங்களுடன் சிவபெருமானருகில் வந்தனர். விக்ருதாஸியரென்போர் ராக துவேஷங்கள் இல்லாத பலவிதமான அனேக கோடிகணாதிபர்களுடன் ஸ்ரீ சூலபாணியின் சன்னிதிக்கு வந்தனர். லோக லோக பருவதத்தில் வாசம் செய்யும், மஹா பராக்ரமசாலியாகிய ஜ்வாலாகேசரென்பவர், கைகளில் சூலங்களை யேந்திய தேவர்களுடன் தேவதி தேவனுருடைய அண்டையில் வந்து சேர்ந்தனர். மஹா மஹிமைபொருந்திய ஸமதரென்போர் மதத்துடன்கூடிய தமது சைனியங்களுடன் அர்த்த சந்திரனை உச்சியிற்றரித்த பரமசிவனது சன்னிதானத்திற்கு விரைவில் வந்து சேர்ந்தனர். துந்துபி வாத்ய வரிசைகளின் ஓசையால் சமுத்ர ஓசையை வெல்லும் துந்துபி என்பவர் அளவில்லாத தமது சைன்யங்களுடன் எக்காலத்தும் அழிவில்லாத ஸ்ரீ மஹாதேவரது சன்னிதானத்தை அடைந்தனர். தலை மாலைகளை ஆபரணமாக அணிந்த மிக்க மஹிமை பொருந்திய கபாலீசர் என்போர் தமது ஆயிரம்கோடி கோடி சைன்யங்கள் சூழ, பிரம்மனுடைய மண்டை யோட்டைப்பூண்ட மஹாதேவனது முன்னர் வந்தனர். ஸமுஹ்லாதர் என்னும் உத்தமர், பாவங்களினின்றும் விடுபட்ட தமத் லக்ஷம் கோடி கோடி கணாதிபர்களுடன், சந்திரனை

ஆபரணமாகக் கொண்ட சங்கரரது சன்னிதியை அடைந்தனர். ஸ்ரீருத்திர மூர்த்திக்கு இணையானவரான அகண்டரென்பவர் நூறு கோடி கோடி ருத்திரர்களுடன், சர்வ ஜகத்பதியாகும் ஸ்ரீ ருத்திரருடைய ஸன்னதி யடைந்தனர். கும்பகரென்பவர் இந்திரன் துதிக்கும் தமது கோடி கோடி கணங்களுடன் மன்மதனைத் தண்டித்த மஹா தேவனது சன்னிதானத்தை அடைந்தனர். மிக்க மேன்மை பொருந்திய மதகரென்னும் பிரமத கணத்தலைவராகிய பிரபு, தமது நூறு கோடி கணங்கள் தம்மைப் புடைசூழ காமனை எரித்தோன் எதிரில் வந்து சேர்ந்தனர். ஸங்காதரென்னும் கணத்தலைவர் தமது ஆயிரம் கோடி கோடி கணங்களுடன் கௌரி கல்யாண வைபவத்தைத் தரிசிப்பதற்காக மேம்பாடுடன் ஈசனருகில் வந்தனர். சர்வ குணங்களும் பொருந்திய ஆவேசனி என்பவர் தமது பத்துக்கோடி கோடி கணங்களுடன் மிகவும் அன்புடன் தோன்றினர். அபவக்திரர், மஹாகேசர், வீரபருவதகர் என்போர் தமது ஆயிரம்கோடி கணாதிபர்களுடன், ஸ்ரீ கங்காதரனுடைய அருகில் வந்தனர். சந்தானமென்னும் கணங்களுக்கு அதிபர்களாகிய, பிப்பவர், காகபாதர் என்போர் தமது கணக்கில்லாத கணத்தலைவர்களுடன் ஸ்ரீமஹாதேவனைப் பணிந்தனர். மதுபிங்கன், நீலன், மஹாபல கணாக்ராணி முதலானோர் மஹோற்சவத்தைக்காண விரும்பியவர்களாய் மன்மதனைக் கொன்ற மஹேஸ்வரனிடத்துச் சென்றனர். புவனாதிபதிகளாகும் பூரண பத்திரன், சதுர்வக்திரன் என்போர் தங்கள் தங்கள் பட்டணத்துச் சேனை வெள்ளத்துடன், சதுர்வித புருஷார்த்தங்களையும் தம்மை அடைந்த அடியவர்க்கன்புடனருளும் ஸ்ரீ திரிபுராந்தகரது சன்னிதியை அடைந்தனர். இங்ஙனம் பூதகணங்களும் மிகமேன்மை பொருந்திய சகல பிரமத கணங்களின் தளகர்த்தனாகிய கரணன் என்போன் தன்னை யொத்த பல சைன்யங்களுடன் கருணையங்கடலாகிய நீலகண்டரைச் சரணடைந்தனன். மிக்க கீர்த்திவாய்ந்த பாஹுக னென்றவன் பிரமத கணங்கள் சூழ மதனையெரித்த மகாதேவர் அருகில் வந்து சேர்ந்தான். பஞ்சாக்ஷரன் என்போன் ஐந்நூற்றைம்பது கோடி பிரமத கணங்களுடன், மன்மதனைக்கொன்ற மஹேசரருகில் வந்தான் இந்திரன் பூஜிக்கும் சிறப்பு வாய்ந்தவனும், எக்காலத்தும் அகங்கார சிந்தையுடையவனுமான சதமன்யு என்போன், நூறுகோடி கணங்களுடன், ஸ்ரீசூலபாணியின் சமீபத்தில் வந்தான். மேகபிருத், காஷ்டடைன், ஸுகேசன், விருஷபன், பலி முதலாயினோர், ஒவ்வொருவரும் கோடி கோடி பிரமத் கணங்களுடன், வந்து சேர்ந்தனர். சதானன், விஸ்வரூபன், தாலகேது, ஸுத்தகன், லோகாந்தகன், சைத்திரன், தீப்தாத்மா, லகுலீஸ்வரன் என்போர் அளவற்ற பிரதம கணங்களுடன், மஹாதேவனை அடைந்தனர். லோகரக்ஷகர்களான, தைத்தியாந்தகன், மிருத்யுஜித்து, காலஜித்து, விஷாதனன், கலிஜித்து விஷஜித்து, லக்ஷ்மி விலாசம் பொருந்தியவரும் சிறப்புடையவருமான பிருங்கிரிஷி, ஸூர்யா வாலியன், சனிஷ்டன் முதலான கணாதிபர்கள் தத்தமது கோடி கோடி பிரமத கணங்களுடன் ஸ்ரீபார்வதி பரமேஸ்வரரது திருமணத்தை யாவலுடன் கண்டு சந்தோஷிக்க எண்ணம் கொண்டு, மஹாதேவர் சன்னிதி யடைந்தனர்.

## 21-வது அத்தியாயம்.

"கேளுங்கள், நைமிசாரண்ய வாசிகளே," என சூதமுனிவர் கூறுகிறார்:—ஆயிரம் யோசனைக்கப்பால் உள்ள குறியையும், அம்பினால் தவறாது அடிக்கவல்ல ।சாமார்த்தியமுடையவர்களும், தேவர்களுக்கெல்லாம் மேம்பட்ட பெருமையை வகித்தவருமாகிய புவிக்கண்உள்ள பத்துலக்ஷம் ருத்திரர்களும் ஸ்ரீசாம்பசிவ மூர்த்தியை வணங்கி நின்றனர். கண்ணிந்திரியத்திற்கு விஷயமான மஹா சமுத்திரங்களிலும், ஆகாயத்திலும், ஸ்வர்க்கத்திலும் வாசம் செய்பவரும், கழுத்திற் கருநிறம் கொண்டவரும், மூன்று கண்களையுடையவருமான எண்ணற்ற ருத்திரர்கள் ஸ்ரீஜகதீசன் அண்டையில் வந்தனர். பூமியின் கீழுள்ள பாதாளலோகத்தில் சஞ்சரிப்பவரும் கழுத்தில் கருநிறமமைந்தவருமாகிய மற்றைய ருத்திரர் அனைவரும், பார்வதி பரமேஸ்வரரின் கல்யாண வைபவத்தைக் காண காதலுற்றவராய் வந்தடைந்தனர். விருக்ஷங்களில் வசிக்கின்றவரும், பசும்புல்போலும் பசுமை நிறமுள்ளவர்களும், நீலகண்டமுடையவரும், மிக்க சிவந்த நிறமுடையவர்களுமான ருத்திரர்களும், கேசமற்றும், சடைகளைத்தரித்தும் இருந்து மானிடருக்குத் தீங்கையுண்டுபண்ணும் பலவகையாய பூதங்களின் தலைவர்களான ருத்திரர்களும், ஆயுதபாணிகளாய், ஆயிரக்கணக்கி லெண்ணமுடியாத அவ்வளவு எண்ணிக்கை கொண்டவர்களாய் அங்கு வந்தனர். மனிதர் உண்ணும் உணவிலும், குடிக்கும் நீர் முதலியவற்றிலும் மறைந்திருந்து, அவர்கள் தாது முதலியவற்றை மாறுபடுத்தி மிக்க துயரை உண்டுபண்ணுவோராகிய ருத்திரரும், வைதீகம், லௌகிகம் முதலான எல்லா மார்க்கங்களையும் சரிவர அனுசரிப்பவரை ரக்ஷிக்கும் ருத்திரரும், காசி, பிரயாசை முதலிய க்ஷேத்ரங்களை ரக்ஷிக்கும் ருத்திரரும், திசைதோறும் எப்பொழுதும் சஞ்சாரம் செய்வதையே தமது தொழிலாகக் கொண்ட ருத்திரரும், மற்றும் பலவகையான ருத்திரரும், ஸ்ரீபார்வதி தேவியாரது கலியாண வைபவத்தைக் காண்பதற்காக, மஹாதேவரது சன்னிதானத்தை அடைந்தனர். மேலும், அதிதி, திதி, விசுவை, தனு கர்த்துரு, காளி, புலோமை, ஸரமை, ஸிம்ஹிகை, விந்தை, ஸித்தி, மாயை, கிரியை, துர்க்காதேவி, ஸ்வாஹா, ஸ்வதா, ।ஸாவித்ரி, வேதமாதா, பஜனீ, தக்ஷிணை, துயுதி, ரதி, புத்தி, மதி, மேதை, புஷ்டி, துஷ்டி, ஸரவதி, ராகா, குஹூ, ஸினீவாலி, அனுமதி தேவி, தரணீ, தாரணி, வேலை, பாலை, நாராயணி முதலாக மற்றுமுள்ள தேவர்களின் தாய்மாரும் பெண்டிரும், ஸ்ரீசிவ சங்கரப் பெருமானின் கலியாண விஷயத்தைக்கேட்டதும் கோலாகலமாய் வரலாயினர். பிரம்மாண்டத்தின் கண்ணுள்ள சமுத்ரங்களில் வந்து பாயும் நதிகள் எல்லாம் பெண் வடிவம்கொண்டு பலவகையான ரத்னாபரணங்கள் மேனியில் விளங்க, நதியுருவத்தில் உள்ள தாமரை மலரை அன்னபக்ஷிகள் நாடிச் செல்வதுபோல், பெண் வடிவத்தும் தங்களுடைய கைகளாகிய தாமரை மலர்களில், சாமரங்களாகிய அன்னபக்ஷிகள் உற்றிருப்பதுபோல், சாமரத்தைக் கரத்தேந்தி வந்தன. பாம்புகள், கருடர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், கிந்நரர்கள், மனிதர்கள், சமுத்திரங்கள், மலைகள், மேகங்கள், மாதங்கள் வருக்ஷங்கள், கலைகள், வேதங்கள், மந்திரங்கள், யாகங்கள், ஸ்தோமங்கள்,

தருமங்கள், ஸமியங்கள், ஹுங்காரங்கள், பிரணவங்கள், பட்காரங்கள், ஹும் காரங்கள், தேவலோகத்துள்ள கோடி அப்ஸரப்பெண்கள், அவருடைய ஊழியப்பெண்கள் முதலிய எல்லோரும் ஸ்ரீசுமங்கலமூர்த்திக்கும் ஸ்ரீசர்வ மங்கள தேவிக்கும் நடக்கப்போகும் விவாக மஹோற்சவத்தைக் கண்டானந் தங்கொள்ள லக்ஷியமுடையவராய் விரைவில் வந்து சேர்ந்தனர்.

பின்னர், வந்தவர் அனைவரும் அவ்விடத்தில் ஒன்றுசேர்ந்து, ஸ்ரீமஹா தேவரது அந்தப்புரத்திற்கு அதிபரும், சிலாத மஹாமுனிவரின் செல்வப்புதல் வருமாகிய ஸ்ரீநந்திதேவரை பக்தியுடன் வந்தனம்செய்து, "சர்வகுண பூஷ ணரும், ஞானசாகரரும், அனைவர்க்கும் குருமூர்த்தியுமாக விளங்கும் நந்தி தேவரே! இவ்விடத்தில் சேர்ந்த அடியேங்கள் எல்லோரும் ஸ்ரீமஹாதேவ ரைத் தரிசிக்க விருப்பமுற்றுள்ளதைத் தேவரீர் தயைபுரிந்து, பரமசிவத்திற் கறிவித்து, ஒன்று சேர்ந்திருக்கும் அடியேங்கள் தரிசன பாக்யத்தை அடை யத் திருவுளம் புரியவேண்டும்." என்று வேண்டிக்கொண்டனர். அவர்கள் வேண்டுதலை ஏற்ற நந்திதேவர், ஸ்ரீசந்திர ஜடாதரமூர்த்தி யருகடைந்து, உலகத்துள்ள சகல ஆத்மாக்களும் வந்திருப்பதைப்பற்றி மிக்க வணக்கத்து டன் தெரிவித்துக் கொண்டனர். ஒன்று, இரண்டு, மூன்று முகங்களையுடை யவர்களையும், மற்றும் முக்தியடைந்தவர்களான கண சிரேஷ்டர்களையும், அதிகார ஸ்தானங்களில் உள்ள அளவில்லாத தேஜஸுடன் கூடியவர்களான தேவர்களையும் மற்றும் அவ்விடத்து வரலுற்ற அனைவரையும், திரிபுரங்களை சிரிப்பால் எரித்தவராகிய ஸ்ரீமஹா தேவர், உள்ளே யழைத்து வரும்படி நந்தி தேவருக்குக் கட்டளையிட அவரும் அவர் கட்டளையின்படி, எல்லோ ரையும் ஒருவர் பின் ஒருவராகச் செல்லவிட்டனர். பின்னர், ஸர்வேஸனும் திவ்ய மிக்க ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்தவராக, கல்யாண வைபவத்தைக் காணவந்த எல்லோரையும் திருமுகக்குறிப்பால் அழைத்தனர். சர்வ கணங் களுக்கும் தலைவரான நந்திதேவர், அவர்கள் எல்லோரையும் மாளிகையின் ஓர் பக்கத்தில் ஒருவரோடொருவர் நெருங்கியிராதபடி விலக்கி, "நமது பிர ம்பு நுனியை அசைப்பதால் எவர் அழைக்கப்படுகின்றனரோ, அவர் வரலா குமேயல்லாது, மற்றையோர் எழுதலும்கூடாது. இவ்விடத்தில் ஒருவரோ டொருவர் பேசாமலிருக்க வேண்டும்," என எச்சரித்து, பிரபுவின் முன்னர் ஒவ்வொருவராய்க் குறித்துக் காட்டினர். உலகங்களை நடத்துவோரான ஸ்ரீகாலாக்னிருத்ரர், நந்திதேவரது பிரம்பு நுனி அசைதலால் முன்னதாகக் குறிக்கப்பட்டதால், அவர் விரைவுடனெழுந்து தேவாதி தேவரை வந்திக்துக் கைகட்டிக்கொண்டு தூரத்தில் நின்றனர். அப்போது நந்திதேவர் அவரைப் பிரம்பு நுனியாற் காட்டி, "ஹே தயாபர மூர்த்தியாகிய மஹாதேவா! இவர் தான் தேவரீருடைய வடிவத்தைக்கொண்டு, யுகமுடிவில் சர்வ ஜகங்களையும் சங்கரிப்பவரும், சர்வ பிரபஞ்சங்களுக்கும் ஆதாரமானவரும் தேவர் எல்லோ ருக்கும் முதன்மையானவருமான காலாக்னிருத்திரர். இவர் தேவரீருடைய அரிய கட்டளையை யேற்றுத் தமக்குச் சமமான கணங்களுடன் இப்போது இவ்விடத்தில் வரலுற்றார். ஆதலால் இவரைக் குளிர்ந்த பார்வையால் தேவ

ரீர் வெகுமானித்து அனுக்ரஹம் செய்தருளல் வேண்டும்.'' என்றனர். அப்போது சந்திர ஜடாதரமூர்த்தியுடனும் சகல தேவர்களுக்கும் ஈஸ்வரருமான ஸ்ரீமஹாதேவர் பிரசன்னமான பார்வையுடன் அந்தக் காலாக்னிருத்திரனை அனுக்ரஹம் செய்தருளினர். அந்தக் காலாக்னி ருத்திரனும் ஸ்ரீ மஹாதேவருடைய அரிய கிருபாகடாக்ஷம் பெற்றதால், தனது ஆத்மா கிருதார்த்தமடைந்ததெனச் சந்தோஷ மெய்தினர். பின்னர்கணதிபராகிய சிலாதமுனிவர் வம்ஸத்தை விளக்கவந்த நந்திதேவர், கூஷ்மாண்டருத்திரர், வீரேஸருத்திரன் ஹாடகேசுவரருத்திரன் முதலானோரையும் மற்றையகணதிபர்களையும், ஸ்ரீ பரமேஸ்வரனுக்கு அறிமுகம் செய்தனர். பிறகு நந்திதேவருடைய கட்டளையின்படி ஸ்ரீ நாராயண மூர்த்தி தமது எல்லா அவதாரங்களுடனும், பிரத்யும்ன, அநிருத்த, ஸங்கர்ஷண, வாசுதேவ மென்னும் நான்கு மூர்த்திகளுடனும் எழுந்தனர். அப்போது நந்திதேவர், அந்த விஷ்ணுவையும் அவருடைய சரித்திரங்களைக்கூறி, பரமேஸ்வரனுக்கு அறிமுகம் செய்து ''ஹே! அஷ்டைஸ்வர்ய சம்பன்னரே! இவர்தான் தேவரீரது இடது பக்கத்துண்டான விஷ்ணு என்பவர். ஹே மஹாதேவா! இவரே தேவரீரது தயவால் உலகரக்ஷகர் என்னும் பெயரை வகித்தவர். இவர் மிகநேர்த்தியானதும், அதிவிசித்திரமானதும், மோக்ஷத்தை அளிப்பதுமான இந்திர நீலரத்தினத் தாலமைந்துள்ள லிங்கத்தைப் பக்தியுடன் பூசைபுரிந்ததால் இத்தகைய பெரிய பெருமை பொருந்திய பதவியை அடைந்தனர். ஹேகருணாசாகர மூர்த்தியே! தேவரீரது திருக்கல்யாண காட்சி அமிருதத்தைத் தமது விழிகளால் பானம் செய்து, பயனடைய எண்ணங்கொண்ட இவரைத் தேவரீரது கடைக்கண் பார்வையால் அங்கீகாரம் செய்தருளல் வேண்டும்.'' என்று கூறினர். அவ்வசனங்களை மஹாதேவராகிய பரமசிவம் கேட்டு, தமது கடைக்கண் பார்வை மாத்திரத்தால் அந்தவிஷ்ணு மூர்த்தியைக் கிருதார்த்த ராக்கினர். அதன் பின்னர், ஸ்ரீ நந்திதேவருடைய குறிப்பால் ஸ்ரீ சரஸ்வதி தேவியின் நாதராகிய பிரம்மதேவர் பிரஜாபதிகளுடனெழுந்து, மஹாதேவரை அஞ்சலியஸ்தராய் தரிசனம் செய்து வந்தனித்து மிக்கவினயத்துடன் தூரத்தில் நின்றார். அப்போது நந்திதேவர் தமது கைப்பிரம்பினது நுனியால் அவரைச் சுட்டிக்காட்டி ஸ்ரீ சங்கரமூர்த்தியிடம், ''ஒ சர்வேஸ்வரராய் விளங்கும் சாம்பசிவமூர்த்தியே! இவர்தான் தேவரீரது இடதுபக்கத்தில் உண்டான பிரம்மன் என்பவர். இவர் தேவரீரது தயவால் மூன்றுலகையும் சிருஷ்டிசெய்யும் கர்த்தாவாக நியமிக்கப்பட்டிருக்கிறார். ஹே! எக்காலத்தும் அழிவற்றவரான பகவானே! இவர் சிறிதும் சரியாக உறுதியுள்ள பக்தியினால் சிவாலிங்கத்தைப் பூஜித்த மஹிமையால் உமது கட்டளையின்படி பிரம்மபதத்தை அடைந்து விளங்குகிறார். தேவரீரது உபயபாதார விந்தங்களில் உள்ளதேனைப்பருகு நிமித்தம் தேனீ எனவந்துள்ள இவரைத் தேவரீரது கிருபாதிருஷ்டிசிறிது அனுக்ரஹம் செய்தருள வேண்டும்.'' என்று கூறினர். ஜகதீசன் பிரம்மாவையும் நோக்கி அனுக்ரஹித்தனர். இங்ஙனம் சர்வபிரபஞ்ச நாயகராகிய ஸ்ரீஜகதீசன், ருத்திரன், விஷ்ணு. பிரம்மா என்னும் மூவர்க்கும் அனுக்ரஹம்செய்தபிறகு கணதிபராகிய நந்திதேவர், மற்றையோரையும்வரிசைப்படி அவர்க்கு அறிவித்தருளினர்.

## 22-வது அத்தியாயம்.

நந்திதேவர், அதன் பின்னர், தேவேந்திரன் முதலிய திக்பாலகர், தேவ ரிஷிகள், அசுரரிஷிகள், கந்தர்வர், உரகர், அரக்கர், அஸ்வினி தேவர், ஸப்த மருத்துக்கள், அஷ்டவசுக்கள், ஏகாதச ருத்திரர்கள், ரிஷிகள், சகலபிதுர்கள், பக்ஷிகள், பிசாசர்கள், குஹ்யகர்கள், நதிகள், நதங்கள், சமுத்ரங்கள், மலைகள், காடுகள், கலைகள், காஷ்டைகள், மாதங்கள், ருதுக்கள், அயனங்கள், வருஷங்கள் முதலாக அங்குவந்திருந்த அனைவரையும் முறைப்படி ஒவ்வொருவராக மஹாதேவருக்குக் காண்பிக்க மஹாதேவரும் அவரவரை முறையே கடைக்கண்ணோக்காக அனுக்ரஹம் செய்தருளினர். அலர்ந்த செந்தாமரை மலரையனைய ஸந்தோஷ முகங்களையுடைய எல்லோரும் அவரவர் வரிசைக்கிரமப்படி, தங்கள் தங்கள் தகுதிக்குத்தக்க வெகுமதிப் பொருள்களை மஹாதேவர்க்குச் சமர்ப்பித்தனர். தாமரையாசனனாகிய பிரம்மதேவன், தன்தகுதிக்கேற்ற ரத்னாபரணங்களை மஹாதேவர் முன்பாக மிக்க வினயத்துடன் கூடியவனாய், பொற்றட்டுகளில் நிறைய வைத்து, ஸ்ரீ மஹாதேவரைத்தெண்டனிட்டு, "அழகினருக் கெல்லாம் முதன்மையான அழகுடையவரான ஜகதீசா! தேவரீருடைய மிக்க அற்புதமான சௌந்தர்யமானது ஆபரணங்களுக் கெல்லாம் ஆபரணமும், உலகின் கண்ணுள்ள அழகினருக்கு ஒப்பிடத்தக்கதும், அலங்காரங்களோடு ஒப்பிடத்தகாதமிக்க சிறந்த அலங்கார முடையதாயினும், இவ்வாபரணங்களால் தேவரீரது திருமேனியை அலங்காரம் செய்துகொண்டு, ஹேபிரபுவே! என்னை அனுக்ரஹித்தருளல் வேண்டும்." என்றனன். அங்ஙனம் பிரம்மன் பிரார்த்தித்ததும் ஜகதீசன், தமது அரிய திருமுகக்கமலத்தில் மந்தஹாசம் கொண்டவராய், தமது திருவிரல் நுனியால் அந்த ஆபரணங்களைப் பரிசித்து, தாம்மிக்க அற்புதமான திவ்யலாவண்யத்தை அடைந்தனர். கோடி மன்மதர்களுக்குச் சரியான அழகையும், பூரணசந்திரனைப் போன்ற திருமுகமண்டலத்தையும், அலர்ந்த செந்தாமரை மலரையனைய விசாலம் பொருந்திய நேத்திரங்களையும், கோவைக்கனியின் நிறத்தைப் போலும் நிறமமைந்த இதழ்களையும், வலம்புரிச்சங்கம் போன்ற கழுத்தில் ஆலாலவிஷத்தின் கறுப்பையும், மிக்க நேர்த்தியானதும் மிருதுவானது மாகவுள்ள திருமேனியையும், அகண்டமான மார்பின்மீது விலக்க முற்ற திவ்யமாலைகளையும், திரண்ட நான்கு புயங்களையும், பொருத்த முற்றமைந்து மிக்க பிரகாசத்துடன் உள்ள மற்றைய எல்லா உறுப்புக்களையும், அந்தந்த உறுப்பிற்கேற்ற பலவகையான ஆபரணங்களையும், உச்சி முதல் உள்ளங்கால் வரையில், ஆங்காங்கிடுதற் கேற்ற பலவிதமான அலங்காரங்களுடன் கூடிய ஆபரண சகிதமான மேனியுடன் கூடிய ஜகன்மோகன சுந்தர உருவத்தைத் தயாசாகர மூர்த்தியாகிய ஸ்ரீ மஹாதேவர் கொண்டருளினர். சன்னிதானத்தில் தண்டன் சமர்ப்பித்துக் கைகட்டி நின்ற பிரமனை அவர் நோக்கி, "வாராய் பிரம்மனே! நமது கட்டளையின்படி அனேகமான ஆபரணங்களைக் கொண்டு கலியாண மஹோற்சவத்தின் பொருட்டு இங்கு வந்திருக்கும் தேவர் எல்லோருக்கும் அலங்காரம் செய்துவிடு." என்று எச்சரிக்கை செய்தருளினர். ஸ்ரீ பரப்ரஹ்ம சொரூபராகிய மூர்த்

தியை ஞானக்கண்ணால் கண்டறிய வல்லவருள் முதன்மையான பிரம்மனும் மஹாதேவரது கட்டளையின்படி, அந்த ஆபரணங்களை வந்திருக்கும் தேவ கூட்டங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தனர். பிறகு தேவகூட்டங்கள், அந்த ஆபரணங்களை அணிந்து கொண்டதும், சங்கவாத்தியங்கள், கொம்பு, மிகவும் பெரிதாகிய காஹளவாத்தியம், பேரி, முரசம், தூரியம், அனேக துந்துபிகள், எங்கும் சமுத்திரங்களின் ஓசைகளையும் அடக்கும் டிண்டிம வாத்தியங்கள், வீணை, வேணு, நாகசுரம் முதலான வாத்தியங்களும், மற்றும் பலவகையான வாத்தியங்களும், பலவாயில் வைத்தூதப்படும் வாத்தியங்களும் செவிகளுக் கானந்தகரமாகக் கோஷிக்கத் தலைப்பட்டன. வெள்ளிமலையாகிய கைலை முதல் இமயகிரிவரையில் அப்ஸரப் பெண்கள் இடை வெளியில்லாதபடி நின்று, கைகளிற்றரித்துள்ள கங்கணங்கள் கிலுகிலு என்று ஓசை செய்யச் சாமரங் களை வீசிநின்றனர். சில பெண்கள், அதேவிதமாக எங்கும் விசிறிகளைக் கரத்தேந்தி விசிறிக் கொண்டிருந்தனர். வழியெங்கும் பரிமளமிக்க பனி நீர்தெளித்திருந்தது. மேலும், மார்க்கங்கள், எல்லாம் கஸ்தூரிச் சேற்றால் மெழுகப் பெற்றும், பச்சைக்கற்பூரப் பொடிகளை மணல்களென தூவப்பட்டும், நுரை களால் நிறையலுற்ற கடல்போன்ற வெள்ளைக் குடைகளால் நிறையப் பெற் றும், துவஜங்கள், அஸ்தமானகிரிகள் முதலிய வரிசையால் அலங்கரிக்கப்பட் டும், எவ்விடத்தும் மிகவும் பரிமளம் வீசும் அகிற்கட்டைகளின் புகை சூழப் பட்டு மிருந்தன. பிராமண சிரேஷ்டர்களாகிய முனீந்திரர்கள் வேத பாராய ணம் செய்திருந்தனர். ஸரமங்கலப் பெண்கள் மங்களப் பாடல்களைப் பாடி னர். கட்டியக்காரர்கள், ஹரிக்காரர்கள், வந்திகள் முதலானோர் ஜயவிஜயீப வா என்றுகூறி நின்றனர். பிரமதகணங்கள் அனைவரும் பிரம்புகளைப் கைப் பற்றிக் கூட்டங்களை விலக்கி நின்றனர். ஆயிரக்கணக்காக வுள்ளருத்திரகன் னிகையர் அனைவரும் அசைவற்றுச் செல்லும் ரதங்களின் மீது நடனம் செ ய்து கொண்டிருந்தனர். யோகியரனைவரும் அஞ்சலியஸ்தராய் நின்றனர். இத்தகைய வைபவங்களுடன் ஸ்ரீ சந்திரஜடாதரர் நந்திதேவருடைய கரத் தைப் பற்றியவராய் பல்வகையான அரதனங்கள் இழைக்கப் பெற்ற பாது கைகளையும், குடையையும் தரித்து, வெகுமங்களகரம் பொருந்திய சிம்மாஸன த்தினின்றும் மெல்ல எழுந்தருளி, பிராகாரங்களின் வாயிற்படிகளில் ஆங்கா ங்கு எழுகணங்களைக் காவலாக அமைத்து, முகத்வாரத்தில் நிற்கின்ற வெண் மையுடையதும், வெள்ளிமலையைப் போலும் சோபையுடையது மான நாதத் தால் நான்கு திசைகளையும் செவிடுபடச் செய்யும் பொன்மணிகளைப் பூண்ட தும், அனேக சாமரங்கள் கட்டப்பட்டு விளங்கியதும், ரத்னங்களால் இழைக் கப்பெற்ற ஸேனங்களையுடையதும், முதுகினில் உருண்டு பருத்த கொண்டை யால் மிக்க அலங்காரமாக விளங்குவதும, மிகவும் பருத்தகழுத்துடன் கூடிய தும், சிவந்து நீண்டகண்களை யுடையதும், மலைக்கு ஒப்பானதுமான மஹாரு ஷபராஜன் மீது, குண்டோதரனுடைய முதுகி லோர்பொன் மலரடியை வை த்தருளி, சாதுக்களைக் காத்தருளும் ஸ்ரீ மஹாதேவர் ஏறியருளினர். யதீஸ் வரர்கள், ஸித்தேஸ்வரர்கள், ரிஷீஸ்வரர்கள், தேவேஸ்வரர்கள் முதலானோ ரனைவரும் அப்போது, ஜயவிஜயீபவா என்றன் முதலிய மங்கள வாக்யங்க

லைக்கூறியதுடன் வேதஸூக்தங்களையும் ஓதினர். அதிதி, திதி, தநு, கத்துரு, அருந்ததி, துஷ்டி, புஷ்டிகீர்த்தி, ஸ்வதா, ஸ்வாஹா, மதி, திருதி, ஸரஸ்வதி, லக்ஷ்மி முதலானோரும், சகலலோகமாதாக்களும், தேவபத்னிகள், ரிஷிபத்னிகள் முதலானோரும், ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியின் பிரபாவங்களைப் பற்றிய திவ்யகீர்த்தனங்களை நல்ல ஸ்வரங்களுடன் பாடினர். கந்தர்வர் கின்னரர், கிம்புருடர், சித்தர், வித்தியாதரர், மகோரகர், பெயர்போன ஹாஹா, ஹூஹூ என்னும் பெயர்களையுடைய தேவலோகத்திய பாடகர்கள், தும்புருமுனிவர், நாரதமுனிவர் முதலிய எல்லோரும், வீணாகானத்திற் சிறந்த மாதர்களும் ஸ்ரீ பரமேஸ்வரனுடைய குணாதிசயங்களைப் பற்றிய கீர்த்தனங்களை வீணையென்னும் வாத்தியத்தில் அமைத்துப் பாடலாயினர். கணாதிபதியாகிய குண்டோதரன் என்பான், ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியின் பக்கத்திருந்து, நூறு கம்பிகளால் அமைக்கப்பட்டதும், சந்திரமண்டலத்துக்கிணையானதுமாக மிகவும் பெரிதானகுடையை நேசமிக்கமனதுடன் பிடித்துவந்தான் அந்தக்குடையைச் சுற்றிலும் தொங்கவிடப்பெற்ற முத்துமாலைக் குஞ்சங்கள், சர்வேஸ்வரராகிய பகவான், சந்திரமண்டலத்திருந்து கங்கையைத் தமது உச்சியில் விழச்செய்து கொண்டது போல் விளங்கின. மஹாமஹிமை பொருந்திய ரிஷபமானது சாமரங்கள் கட்டப்பெற்ற போல், நிமிர்ந்து போகையில் மேகங்கள் கோக்கலுற்ற கொம்புகளையுடையதாய் ஸ்ரீமஹாதேவனைச் சுமந்து ஆகாயமார்க்கமாக மிக்க உல்லாசத்துடன் சென்று, ஸ்ரீ கைலையினின்றும் ஒரு நொடிப்போதில் இமயமலையை அடைந்தது. பர்வதராஜனும் அவனுடைய பந்துவர்க்கமான பருவதங்களுடனும் புத்திர பௌத்ர மித்ரர்களுடனும் பல அஸ்தமானகிரிகள், கொடிகள் முதலியவற்றால் சிறப்புடனலங்கரிக்கப்பட்ட தனது ராஜதானியினின்றும் அவரை எதிர்கொண்டு சென்றான். அப்போது ஸ்ரீதேவாதி தேவனுடைய சேனைகளும், பர்வதராஜனது சைன்யங்களையும், இரண்டு சமுத்ரங்கள் ஒன்றோடொன்று சந்தித்தது போல் சந்தித்தன. இமராஜன், மைநாகன், கிரௌஞ்சன் என்னும் இரண்டு பிள்ளைகளுடன் ஸ்ரீதேவாதி தேவனை வந்தனம்புரிந்து, மிகவுயர்ந்த அனேக கோபுரங்களால் சிங்காரமானதும், ரத, கஜ, துரக, பதாதிகளால் நிறையப்பெற்றதும், பேரி, மிருதங்கம் முருவம் முதலான வாத்திய கோஷங்களின் எதிரொலியைக் கொண்டதுமான ஒஷதிப்பிரஸ்தமென்னும் தனது பட்டணத்துள் அழைத்துச் சென்றான். அந்தப் பட்டணத்துப் பெண்கள், ஸ்ரீ பரமேஸ்வரனைத் தரிசிக்க ஆவலுடையவர்களாய், அவரவரது உப்பரிகைகளில் இருந்தனர். அவர்களுள் பலர், மிக்க பேரானந்தத்தால் அவரவர் கைவேலையை விட்டவர்களாயும், அரைகுறையான அலங்காரத்துடன் கூடியவராயும், இருந்தனர். ஒருத்தி உடுக்கையின் இடையே முடிச்சு நழுவலுற்ற வஸ்திரத்தை வலது கையிலும் தனது இளங்குழந்தையை மற்றொரு கையாலுமெடுத்துக் கொண்டு மிக்க பரபரப்புடன் பல கணி வாயிலருகில் இருந்தும், மற்றொருத்தி மைக்கோலினால் ஓர் கண்ணுக்கு மட்டில் மையிட்டுக்கொண்டு மற்றோர் கண்ணை மறந்தவளாகவும், ஒருத்தி முடிச்சவிழ்ந்த கூந்தலுடன் ஆடையாபரணங்கள் அலங்கோலமாய் நழுவவும், ஒருத்தி ஆனந்தத்தால்

ஓடிச்செல்லும்போது வழிகளில் மலர்கள் உதிர்ந்து விழவும், மற்றொருத்தி, கொம்பரக்கு செம்பஞ்சு முதலியவற்றின் சாயங்கொண்டு ஒரு பாதத்தை மறந்தும் வெளிவந்து நின்றனர். சகல ஜகங்களுக்கும் பர்த்தாவாகிய ஸ்ரீ மஹேஸ்வரர் எல்லாத் தேவர்களுடனும் ராஜ மார்க்கத்திற் செல்லும்போது, மாதர்கள் அனைவரும் நெற்பொரியுடன் மலர்களைக் கலந்து மாரிபோல பொழிந்தனர். அந்தப் பெண்களின் கண் இந்திரியமெல்லாம் தேவேசனைக் கண்டு அப்படியே இமை கொட்டாதவர்களாய், மற்றைய இந்திரிய விவகார மற்றுத் தன் வசமற்றவராய்ப் பகவானைத் தரிசித்து ஆனந்தமடைந்தனர். அந்தப் பட்டணத்தில் ஒருவர்க்கொருவர் "ஸ்தாவர சங்கம ஸ்வரூபமான பிரபஞ்சங்கள் எல்லாம் இவரது திருவருளால் தான் உண்டாகின்றன. பிராணிகள் அனைவரும் இப்பெரியாருடைய பிரசாதத்தினுற்றான் மோக்ஷமடைகின்றனவேயல்லாது வேறில்லையென்று முனிவர்களும் யோகியர்களும் கூறுவது உண்மைதான். ஆதலாற்றான், கௌரியம்மை இளமைப்பருவம் உள்ளவளாயிருந்தும் பாலசந்திரனை ஜடையிற் கொண்டு விளங்கும் ஸ்ரீமஹாதேவனைக் குறித்து, அனுஷ்டிப்பதற்கு அசாத்யமான மிக உக்கிர தவத்தைப்பலகாலம் செய்தனள். பெரியவற்றிற்கெல்லாம் மிகப்பெரியவரும், காரணங்களுக்கெல்லாம் காரணரும், தெய்வங்களுக்கெல்லாம் பெரிய தெய்வமும், யோகியரால் தியானிக்கப்படலுற்றவரும், பெரியோருக்கு முக்ய கதியாகின்றவருமான ஸ்ரீமஹா தேவரைக்கண்டதால் நாமும் இப்போது கிருதார்த்தரானோம்." என்று பேசிக்கொண்டனர். இத்தகைய காதுக்கினிமையான வசனங்களை மஹாதேவர் கேட்டுக்கொண்டே மெதுவாக, மிகவுன்னதம் பொருந்தியதும், ஒப்பற்றதுமான பர்வதராஜனது பெரிய அரண்மனைவாயிலை அடைந்தருளினர்.

மஹாதேவர் பர்வதராஜன் அரண்மனை வாயிலை அடையலுற்றதும், பெருமை மிக்க ரிஷபத்தினின்றும் இறங்கி, தேவேந்திரன் கொண்டு வந்து வைத்த நவரத்ன கசிதமான பாதுகைகளைப் பூண்டு, மஹாப்பிரபுவாகிய சங்கரர், ஒரு கையைப் பிரமன் மீதும் மற்றொரு கையை மஹாவிஷ்ணுவின் கை மீதும் சுமக்க வைத்தருளி பட்டணத்துப் பெண்கள் அனைவரும் இமைகொட்டாது பார்த்து நிற்குமளவில், ஸ்ரீ திரிபுராந்தகர் பர்வதராஜனின் மிகப்பெரிதானதும் பெருமையுற்றதுமான முன்கட்டு வாயிற்படியிற் சென்றருளினர். அப்போது ஸ்ரீநந்தி தேவர் கரத்தினில் பிரம்பேந்தி, "ஜயவிஜயீபவா! பராக்! ஹே பரமேஸா! அடியவரின் மனத்துயரைப் போக்குபவரே! சிறிது சாவதானமாக வந்தருளல் வேண்டும். மேடு பள்ளங்களைப் பார்த்து திருவடி பெயர்த்துவைத் தருளவேண்டும்" என்று சொல்லிக் கொண்டே முன்னதாகச் சென்றனர். அப்போது பர்வதராஜன் பட்ட ஸ்திரீயாகிய மேனகை, தயாநிதியாகிய ஸ்ரீ ஸர்வேஸ்வரரது திருவடிக்கமலங்களைப் பசும் பாலினல் சுத்தம்செய்து, அஷ்ட மங்களங்களைப் பாடலுற்ற பெண்களுடன் திருமாளிகையினுள், விஸ்வகர்மனல் நிர்மாணம்செய்யப்பட்டுப் பலவித ரத்ன கம்பளங்கள் விரிக்கப்பட்டுள்ளதுமான விசித்ரம் பொருந்திய ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியின் கல்யாண மண்டபத்துக்குள் அழைத்துச் சென்றனர். அங்குச்

சென்றதும் சூர்யனது கண்ணைக் குத்தியவராகிய பகவான், அம்மண்டபத்தின் மத்தியில், அனேக நீலக்கற்களிழைக்கப் பெற்றதும் மிக உயரமுள்ளதும், நான்கு கம்பங்களுடன் மிக நேர்த்தியாய் அலங்கரிக்கப்பட்டதும், பலகோடி சூர்ய பிரகாசமுடையதும், நோக்கிய கண்களை மற்றெங்கும் செல்லவிடாதபடிச் செய்யவல்லதுமான திவ்ய சிம்மாஸனத்தமர்ந்து, அதனைத்தமது விஜயத்தாற் சிறக்கச் செய்தருளினர். அவர் பக்கத்தில், பல ருத்திர கணங்களுடன், ஸ்ரீ காலாக்னிருத்திரரும், ஹாடகேஸ்வர ருத்திரரும், பிரமத கணங்களும் சுற்றி நின்றனர்.

## 23-வது அத்தியாயம்.

ஸ்ரீ மஹாவிஷ்ணு, பிரம்மா, இந்திரன், உலகை விளங்கச்செய்யும் சூர்யன், அஷ்ட வசுக்கள், ருத்திரர்கள், துவதசாதித்யர்கள், அஸ்வினி தேவர்கள், பிரம்மத்தை அறிந்தவர்களாய் விளங்கும் வசிஷ்டர் முதலான பிரம்மரிஷிகள், நாரதர் முதலான தேவரிஷிகள், ஸனகர் முதலான யோகீஸ்வரர், ஸித்தர்கள், வித்யாதரர், உரகர் முதலிய எல்லோரும் தேவாதி தேவனரது கட்டளையின்படி, சுகத்தைத் தருபவரும் சந்திரசேகரருமாகிய ஸ்ரீ ஜகதீசனுக்குச் சுற்றிலும் உள்ள மிக்க விசித்ரம்பொருந்திய ஆசனங்களில் அமர்ந்தனர். உலகின் கண்ணுள்ள ஸப்தமாதர்கள், மிக்க கற்புடையவர்களான தேவப்பெண்கள், சகல ரிஷி பத்னிகள், தேவதாசிக் கூட்டங்கள், அதிதி, திதி, தக்ஷப்பிரஜாபதியின் பெண்கள் முதலானோர் மத்தியில் விளங்கிய மஹாதேவரைச் சுற்றிலுமிடப் பெற்றிருந்த ஆசனங்களில் வீற்றிருந்தனர். பர்வதராஜன் தன் மனைவியுடன் மூன்றுலகங்களுக்கும் தாயாய்விளங்கும் ஸுமங்களா தேவிக்குப் பட்டணத்தில் கும்பப்பெண்களைக் கொண்டு அலங்காரம் செய்வித்தான். அம்மங்கையரும், மஹா தேவியைத் திருமண மனைமீது கிழக்குமுகமாக கையில் பூச்செண்டுடன் உட்காரவைத்து, மஹாவாசனை பொருந்திய சிறந்த தைலங்களால் அப்பியங்கனம் செய்தனர். மேலும் அப்பெண்கள் "கௌரி கல்யாண வைபவம்." என்னும் நேர்த்தியான கீதங்களைப்பாடிக் கொண்டு வரப்பட்ட பல புண்ய தீர்த்தங்களைக் கொண்டு தேவிக்கு ஸ்நானம் செய்வித்தனர். சங்கம், சிருங்கம், பேரி, முரவம், டிண்டிமம் முதலிய சகல வாத்யங்களும் வினோதமாக முழங்கும்போது, அம்மங்கையர் அலங்காரத்துடன் தேவியை ஸ்ரீமஹா தேவரருகில் அழைத்து வந்தனர். ஸ்ரீதேவேசன் அம்மையாருடன் திவ்ய சிம்மாஸனத்தில் வைத்திருப்பது, மேருகிரியின் கொடுமுடி மீது தேவேந்திரன் ரோகணியுடன் வீற்றிருப்பது போல் அனுகியது. அக்காலையில் அவ்விடத்துப் பலவிதமான அலங்காரங்கள் செய்யப்பட்டபின், பலவகையான இரத்தனங்கள் இழைக்கப்பெற்று விளங்குவதும், சிறந்த வாசனைகொண்ட மலர் மாலைகளால் விளங்கியதும், பொற் சங்கிலிகள் பூட்டப்பெற்றதுமான ஊஞ்சலில் அமர்ந்துள்ள மஹாதேவரை, ஸ்ரீவிஷ்ணு மூர்த்தி தரிசித்து, "ஹே சர்வகுண சம்பூரணராகிய பரமேஸ்வரா! தேவரீர் தேவியாருடன் பொன்னூஞ்சலாடி யருளுவதனால் எங்கள் மனோரதத்தைத் தீர்த்தருள வேண்டும்." என்று பிரார்த்தித்தார். அவ

ருடன் மற்றைய தேவர்களும் அவ்விதமே பிரார்த்தனை செய்தனர். அந்தப் பிரார்த்தனைக்கிரங்கிய மஹாதேவர் அப்படியே நல்லதென்று ஊஞ்சலாடினர். பர்வதராஜனும் தேவியாரை அவரது பக்கத்தில் உட்கார வைத்தான். அப்போது தும்புரு நாரதர் என்னும் இருவரும் ஆனந்தமாகப் பாடினர். பிறகு உலக முறைப்படி மங்கள தீபங்கள் முதலிய கொண்டு பூஜை செய்தனர். மேனகையும் சக்களத்திமாருடன் விரைவில் அங்குவந்து, ஸ்ரீ உமையம்மையாரையும் பரமேஸ்வரரையும் பாதங்களைப் பால்கொண்டு கழுவினர். பின்னர் ஜகதீசன் திருமண மண்டபத்திற் கெழுந்தருளி, வேதியர் வேதமந்திரங்களோத உள் மண்டபத்தை அடைந்தனர். அப்போது இமவான் மேனகையுடனும் புத்ரமித்ர பந்துவர்க்கங்களுடனும் கூடியவனாய் மிக்க பக்தியுடன் ஸ்ரீ பிரபுவின் திருவடியை முறைப்படி புண்ணிய தீர்த்தம் கொண்டு கழுவி, அந்தத் தீர்த்தத்தைச் சிறிது குடித்து, உச்சியிலும் தெளித்துக்கொண்டான். அதன்பிறகு அவன் மஹாபிரபுவுக்கு மிக்க பயபக்தியுடன் முறைப்படி மதுகமளித்து, மஹாதேவிக்குத் திருமண ஆடையை யவிழ்ப்பதற்கு முன், பரமேஸ்வரருக்கு வஸ்திரங்களைச் சமர்ப்பித்து, அம்மையாரின் கழுத்தில் மங்களாபரணங்களைப் பூட்டுமாறு செய்தனன். மேலும் அந்த இமவான் பொற்கெண்டியில் நீரெடுத்து, அந்த தேவசபையின் முன் ஸ்ரீ தேவேஸனை வஸ்திராபரணங்களால் பூஜை செய்த பிறகு ஸ்ரீ பரமேஸ்வரருக்குப் பார்வதி தேவியை நீர்த்தாரையுடன் பலவித நவரத்னாபரணங்கள் அணியப்பெற்றவளாய், சகல கல்யாண வைபவத்துடன் நிறையப்பெற்ற என் பெண்ணும் இக் கன்னிகையை, பிறருக்கு எல்லாச் சுகங்களையும் தந்தருளும் தேவரீருக்கு யான் கொடுப்பதைப் பெற்றருளல் வேண்டும். பரமேசா! அடியேனுக்கு சாயுஜ்ய பதவியைத் தந்தருளவேண்டும்.'' என்று மந்திரங்கூறித் தானம் செய்தனன். மஹாதேவரும், அப்படியே பார்வதி தேவியாரை சகல உலகங்களும் சுகமடையுமாறு தம் கைகீழாகப் பிரதிக்கிரஹம் செய்தனர். அப்போது 'ஜயவிஜயீபவா' என்றன் முதலான மங்கள வசனங்கள் எங்கும் முழங்கி, திருமணத்தைப் புகழ்ச்சிசெய்தன. ஸ்ரீ மஹேஸ்வரரும் கௌரியம்மையாரது திருக்கரத்தை மஹா சந்தோஷத்துடன் பிடித்தனர்.

மஹாதேவர் தேவியாரது கரத்தைப்பற்றிய அளவில், ஸகல ஸ்தாவர ஜங்கமங்கள் வடிவமான ஜகங்கள் அனைத்தும் பேரானந்தமடைந்தன. தேவர்கள் அனைவரும் பார்வதி பரமேஸ்வரரை மிகவும் பயபக்தியுடன் வந்தனம் செய்தனர். முனிவர்கள், கணநிபர்கள், ஆத்மஞானவான்களாகிய யோகீஸ்வரர், மற்றும்உள்ள ஜீவர்கள் எல்லோரும் அவ்வண்ணமேசெய்தனர். பின்னர் பூமியானது அதிக பாரங்கொண்டு தென்பக்க முயர, வடதுபக்கம் தாழ்வடைந்தது. அதைக்கண்ட ஜனங்கள் அனைவரும்மிகவும் நடுக்கத்தை அடைந்தனர். அப்போது தேவர்களும், தவத்தையே பொருளெனக்கொண்ட முனிவரும் கீழாகக் கவிழலுற்றவராய் நடுங்கிப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, சூலபாணியைப் பன்முறை வந்தனம் செய்து, ''ஜயஜய சம்போ! தயாசாகரமே! பூமியானது வடபாகம் கவிழ நிற்கிறது! ஹே மஹாதேவா! நாங்கள் அனை

வரும் கீழே வீழ்ந்து பழுதுறாதபடி விரைவில் திருவருள் புரிதல்வேண்டும். ஹே தேவேசா! தேவரீர் தமது கட்டளையால் இந்தப் பூமியைச் சமமாக்குதல் வேண்டும்,'' என்று முறையிட்டனர். அதனால் ஸ்ரீ சந்திர ஜடாதரராகிய பரமேஸ்வரர் புன்னகை கொண்டவராய்த் தம்மையொத்து விளங்கும் ஸ்ரீ அகஸ்தியமாமுனிவரைத் தென்திசைக் கதிபராகச் செய்தருளி, அவர்க்கு அத்திருக்கல்யாண கோலத்தைப்பின் அவ்விடத்தில் காக்ஷி கொடுப்பதாகத் திருவாய்மலர்ந்து, அவரை யனுப்பினர். பிறகு அகஸ்தியமா முனிவர் மஹாதேவரது கட்டளையைச் சிரசாக வகித்து, கல்யாண வைபவத்தை அப்போது காணாததால் அதிக மனவருத்தங் கொண்டவராய்த் தமது மனைவியாருடன் ஆகாயமார்க்கமாய் மலயமலையின் அடிவாரத்தை அடைந்தனர். எக்காலத்தும் இடைவிடாது சிவபெருமானையே பாவிப்பதால், அந்தச் சிவபெருமானுக்குச் சமமான தன்மை அடைந்த அம்முனிவர் மலயகிரியை அடைந்ததும், மேடுபள்ளமான பூமியானது சமமாயது. பின்னர் நான்முகக்கடவுள், ஸ்ரீபரமேஸ்வரர் முன்னர் கைகட்டி நின்று, ''ஓ மஹாதேவா! விவாகத்திற்கான அக்னியில் செய்யவுறும் சடங்குகளை முடிப்பித்தல் வேண்டும். தாம் அந்தச் சடங்குகளைச் செய்யவேண்டியதில்லையாயினும், உலகுக்கெல்லாம் சிரேஷ்டராகியவர் அனுஷ்டிக்கப்படும் கர்மங்களையே உலகினர் ஆசாரமாகக் கொண்டு சத்தியமாகச் செய்வராதலால், அவர்பொருட்டுத் தேவரீர் திருவுளம் பற்ற வேண்டுகிறேன். பிரபுவே! தேவரீர் சகல புவனங்களுக்கும் தலைவராகிறீர்.'' என்றனர். அவ்வார்த்தையைக் கேட்ட ஜகதீசன், அந்த நான்முகனையே அக்கருமங்களை முறைப்படி செய்து முடிக்குமாறு மந்தஹாஸ முகாரவிந்தத்துடன் கட்டளையிட்டருளினர். அப்போது அக்னிதேவன் தன் சுய உருவத்துடன் பார்வதி பரமேஸ்வரரை வந்தனம் செய்து, விவாக சம்பந்தமான யாக மண்டபத்தில் சாக்ஷியம்ஸமாக ஜ்வலித்து நின்றான். பிரம்மனும் அக்னிக்கு நான்குபக்கங்களிலும் தர்ப்பைகளை பரிஸ்த்ரணம் செய்து, மூன்று பாகங்களில் ஸமித்துக்களை இட்டு, கீழ்ப்பக்கத்தில் இரண்டு சமித்துக்களைச்சொருகி, நெய்யை முறைப்படி யுருக்கி, ஆஜியஸ்தாலி யென்னும் பாத்திரத்தில் நிரப்பிக்கொண்டு, அக்னியினின்றும் தனியாக எடுத்த நெருப்பில், அந்த நெய்ப்பாத்திரத்தை வைத்து, அதனுள் இரண்டு தர்ப்பை நுனியைக் கிள்ளிப்போட்டு, ஓர் தருப்பைப் புல்லை மடித்து அக்னியிற் கொளுத்தி, ஆஜ்ய பாத்ரத்தில் காட்டி அதை வடக்குப்பக்கத்தில் எறிந்து, மற்றோர் தருப்பைப் புல்லை மடித்து அக்னியில் முன்போல் கொளுத்தி அதனால் நெய்ப்பாத்திரத்தை மும்முறைச் சுற்றி வடக்கிலெறிந்து, அந்த ஆஜ்யஸ்தாலியை வடக்கிலிறக்கி, முன்னர் பிரத்யேகமாக எடுத்த நெருப்பை அக்னியுடன் சேர்த்து, பிறகு அந்த அக்னியில் வடக்காக ஸ்தாபிக்கப்பட்டுள்ள ஓம பாத்திரத்தால் ஹோமம் செய்தனர். மேலும் அந்த நான்குமுகன் சதிபதிகள் ஒருவருக்கொருவர் நேச மதிகரிப்பதற்காக, ஸமித்து, நெய், ஹவிஸ், பொரி முதலியவற்றால் ஹோமம் செய்தனர். பின்னர் ஸ்ரீ பரமேஸ்வரரும் தமதிரண்டு திருக்கரங்களாலும் பார்வதிதேவியாரது பாதத்தைப் புன்னகையுடன் மெல்ல பிடித்து, ஏழு அடி தூக்கி அம்மியின் முனையில் வைத்தனர். தேவரக்ஷகரான பரம

சிவம், ''ஏகமிஷே விஷ்ணுஸ்துவான் வேது.'' என்ற மந்திரத்துடன் சதிசகி தராய் வெகு சந்தோஷத்துடன் அந்த அக்னியை வலம்வந்தனர். உலகங் களுக்கு முக்ய தம்பதிகளும் முதன்மைப் பிரபுக்களுமான ஸ்ரீ பார்வதி பர மேஸ்வரர், ஆங்கிருந்த பிராமணரிடத்து ஆசீர்வாதம் பெற்று மிக்க மனக்க ளிப்புடன் ஒரே ஆசனத்தில் அமர்ந்து எல்லோருக்கும் தரிசனம் தந்தருளி னர். முன்னதாக பிரம தாணுதிபர்கள், காலாக்னிருத்திரர், ஹாடகேசருத் திரர் முதலானோருக்கும், பிறகு விஷ்ணி, பிரம்மா, இந்திரன், அக்னி முத லினோருக்கும் பிறகு யோகீஸ்வரர் முனீந்திரர்கள், உலகர்கள், ஸித்தர்கள், ஸகல தேவஸ்திரீகள் முதலானவர்கட்கும் முறையே காட்சி தந்தருளினர். அவற்றுள், காலாக்னிருத்திரர், ஹாடகேஸ்வரர் சகல கணாதிபர்கள் முதலா னோரைத் திருவாக்காலும், ஸ்ரீ மஹாவிஷ்ணுவை யோர் புன்னகைப்பாலும், பிரம்மாவை யோர் பார்வையினாலும், மற்றைய தேவர்களைச் சிறிது கடைக் கண் பார்வையாலும், முனிவர்களைத் தலையசைத் தலினாலும் ஸ்ரீ மஹாதேவர் வெகுமதி செய்தனர். இந்தச்சந்தர்ப்பத்தில் மன்மதன் மனைவியாகிய ரதிதேவி இந்திரன் முதலாயினவருடன் ஸ்ரீ மஹாதேவரை நோக்கித்தனது கணவனு யிரை யளிக்குமாறு வேண்டினள். அந்தச்சமயத்தில் பார்வதியம்மையார் மஹாதேவரை யோர் இரக்கப் பார்வையுடன் உற்று நோக்கினர். அரி பிரம்மேந்திரரும் தங்கள் தங்கள் போக சுகானுபவத்தின் பொருட்டு யாசித் தனர். உலககர்த்தராகும் மஹேஸ்வரர் அவ்வெல்லாவற்றையும் நோக்கி மன க்களிப்புடன் ரதிதேவியைப் பார்த்து, ''பெண்ணே, ஸுரதத்துக்காக உனது கணவன் இருக்கக்கடவன். ஆனாலவன், மற்றவர்க் கெல்லாம் சரீரமற்றவ னாகியும், உனக்கு மட்டிலும் சரீரமுள்ள வனுமாகியு மிருப்பன். இனிமுதல் இம்மூவுலகிலும் யாம் மாரி என்ற பெயரைக் கொள்வோம். வாராய் நற்குண முள்ள பெண்ணே! அவனை அனங்கனாகவே யாம் ஆதரிப்போம். மன்மதன் தனக்கும் உனக்கு மாத்திரம் மெய்யுடையவனாவன்.'' என்று திருவாய் மலர்ந் தருளிய பின்னர், பிரயாணத்திற்குச் சித்தமான போது, இமவானது புதல் வர்கள் இருவரும் பிரபுவின் சன்னிதியை அடைந்து தண்டனிட்டு, மதுபர்க்க த்தின் மிகுதியை எவ்வாறு வினியோகம் செய்வதென்று பிரபுவிடம் கேட்டுக் கொண்டனர். அபபோது அம்மது பர்க்க நிர்மால்யத்தை யிரப்பதற்குக் கவலை கொண்டவர்களான விஷ்ணு, பிரம்மா முதலான தேவரனைவரும் ஸ்ரீ மஹாதேவருடைய திருமுகத்தைச் சிரமீதஞ் சலியஸ்தராக விரைவுடன்.நோக் கினர். ஸ்ரீ பரமேஸ்வரரும் அவர்களுடைய கருத்தையறிந்து, உடனே அந்த நிர்மால்யத்தை அவர்கட்குப் பகிர்ந்து தருமாறு கட்டளையிட்டனர். தேவ ரனைவரும் மிகவும் பரிசுத்த முள்ளவராதலால், அவர்கள் ஆவலோடு பெற இருந்த அந்தச்சிவ நிர்மால்யத்தின் மிச்சத்தை ஆத்ம பரிசுதத நிமித்தமாக ' எனக்கு! எனக்கு' எனமேல் விழுந்து பெற்றுக் கொண்டு முற்றும் பாவமற் றோராயினர். பிறகு மஹாமேருகிரியை வில்லாக உடையவரான மஹாதேவர் பர்வதராஜனை யனுக்ரஹம் செய்தருளி, ஸ்ரீ பார்வதி சமேதராக பருத்தநி மிலையுடையதான ரிஷபத்தின் மீது ஆரோகணித்துக் கைலாயகிரிக்கு, கண திபர்கள், தேவர்கள், மகரிஷிகள் முதலானோர் தம்மைப்புடை சூழ்ந்து வர

அரைக்ஷணத்தில் போய், அங்குச் சுபவடிவமாய் விளங்கும் போகபுரத்தில் உள்ள தமது திருமாளிகையின் வாயிலில் ரிஷபத்தின் மீதிருந்து கொண்டே, ஸ்ரீ காலாக்னிருத்திரர் முதலாய சகல தேவர்களையும், வசிஷ்டர் முதலான ரிஷிகளையும், மற்றுமுள்ள ஸ்தாவர ஜங்கமமான சகல பிராணிகளையும், புருவஅசைவால் விடைதந்தருளி, ஸ்ரீ பூதேசன் ஓர் க்ஷணத்துள் ரிஷபத்தினின்றும் இறங்கி, ஸ்ரீ நந்தி தேவரது கரத்தைப்பற்றிக் கொண்டு, தேவிசமேதரான சந்திர சேகரர் தமது கணங்களுடன் தமது அரண்மனையினுள் சென்றருளினர்.

இங்ஙனம் மஹாதேவர் பார்வதி தேவியாரைக் கல்யாணம் செய்து கொண்டதைப் பற்றிக்கூறும் இந்த அத்தியாயத்தை எவரேனும், கேளுங்கள், பிராமணோத்தமரே! தினந்தோறும் பக்தியுடன் படித்தாலும், அல்லது சாவதான மனதுடன் கேட்டாலும், அவர்கள் பெண்களாயினும் புருஷராயினும், மேலான பதவிகள் எல்லாவற்றையும் அடைவர். அன்றியும் ஸ்ரீ பார்வதிபரமேஸ்வரரது இக்கல்யாண அத்தியாயத்தை எடுத்துச் சொல்லும் மதியிற் சிறந்தபண்டிதரை நன்குபசரித்து மிக்க ஆதரத்துடன் கேட்டால், பெண்ணை வேண்டுவோர் பெண்ணையும், கணவனை வேண்டுவோர் தக்கமேலான கணவனையும், வித்தையை வேண்டுவோர் வித்தையையும், ஜயத்தை வேண்டுவோர் ஜயத்தையும், புத்திரரை விரும்புவோர் அளவற்ற புதல்வரையும், ஆயுளை வேண்டுவோர் நீண்ட ஆயுளையும் அடைவர். பூர்வத்தில் ஸ்ரீ விஷ்ணுமூர்த்தி இந்த அத்தியாயத்தை மிக்க பயபக்தியுடன் கேட்டதனால், அம்ருதத்தினின்றும் உற்பத்தியான லக்ஷ்மியை மனைவியாகவும், அவளும் அங்ஙனமே புருஷோத்தமராகிய விஷ்ணுவைக் கணவராகவும் கொண்டனர். முன்னர் அங்ஙனமே பிரம்மன் இதை முறைப்படி கேட்டதால் ஸரஸ்வதியை மனைவியாகவும், பெருமை பொருந்திய இந்திரன் ஏராளமான தேவஸம்பத்துடன் இந்திராணியை மனைவியாகவும் அடைந்தனர். இங்ஙனமே கௌதமுனிவர் அகலியையும், மற்ற முனிவர்களும் தகுந்த சிறந்த பெண்டிரையும் அடைந்தனர். மற்றையோரும் இந்த அத்தியாயத்தைப் படித்தால், அவரவர் தங்கள் தங்கள் இஷ்டத்தின்படி வேண்டிய வரத்தை அடைந்தனர். ஆதலால், அவரவர் தங்கள் தங்கள் மனதில் நினைத்த எண்ணம் முற்றுப்பெற, தக்க நன்முயற்சி மிகுதியாக, உத்தமமிகுந்த இந்தக்கல்யாண அத்யாயத்தைப் பக்தியுடன் படித்தல் வேண்டும்; அல்லது படிக்கக் கேட்கவாவது வேண்டும்.' என்று மேலும் சூதர் கூறுகின்றார்.

## 24-வது அத்தியாயம்.

பிறகு ஸ்ரீ பகவானாகும் மஹாதேவர், புதிதாய் மணம் செய்து கொண்ட பர்வதராஜன் புதல்வியாகிய உமாதேவியுடன் நவரத்ன கசிதமான திருமாளிகைக்குட் சென்று, ஆங்கிடப் பெற்றிருந்த பொற்சிங்காதனத்தை வீற்றிருந்து விளங்கச் செய்தனர். அப்போது அந்த உமையம்மையார், சிவத்தையன்றி வேறல்லதாவராயினும், லோகத்துப் பெண்களின் வழக்கத்தை அநுசரித்தவராய், பற்பல முகங்களையுடைய கணதிபர்கள், ஸப்தமாதருக்கள் முதலானோர் செய்யும் விளையாட்டு நடத்தைகளைக்கண்டு நாணத்தால் மிகவும்

திருமுக வணக்கங் கொண்டவராய்க் களிப்படைந்தனர். புதிதாய் மணக் கோலம் கொண்ட அம்மை நாளுக்கு நாள் சிறிது சிறிதாகக் கூச்சத்தை விட்டனள். இங்ஙனமாகப் பல காலம் சென்றபின், ஆலபாணியானவர் உமையவளுடன் பல விசித்திரமமைந்த சிங்கார தோட்டங்களில் அங்கங்குத் தங்கி விளையாடி வருமளவில், ஸகல ஜகங்களிலும் ஆண் பெண்களின் கேலி விலாசங்கள் அதிகரிக்கலாயின். மன்மதனும் தனது மனைவியாகிய ரதியுடன் லீலா விநோதங்களை அனுபவித்துக் கொண்டு, முயற்சியுடன் மூன்றுலகையும் தனது ஐந்து மலரம்புகளுக்கு வசமாய்ச் செய்து கொண்டான். பின்னர் ஸ்ரீ விஷ்ணு முதலிய தேவர்களும் தவத்தையே பொருளென மதித்த முனிவர்களும் ஸ்ரீ கல்யாண மஹோற்சவம் முடிந்த பின்னர் பரமசிவனரது விடையை யேற்றுத் தங்கள் தங்கள் லோகத்தை அடைந்தனர். அப்போது அவர்கள் சூரபதுமனுடைய பயத்தால், உபத்திரவத்தைச் சகிக்க முடியாதவர்களாய் அனைவரும் ஒன்று கூடி மஹா மேருகிரியின் குகைக்குள் விரைவில் ஓடிச் சென்று யோசிக்கத் தொடங்கினர். இந்திரன், ஸரஸ்வதி, லக்ஷ்மி என்னும் இருவரின் கணவர்கள் முன்பாகக் கைகட்டி நின்று, "சர்வகுண சம்பூர்ணர்களாக விளங்கும் விஷ்ணு பிரம்மாக்களே! வாருங்கள். ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியானவர், சூரபதுமனைக்கொல்லும் பொருட்டு, ஸ்ரீ சுப்ரமண்யர் என்னும் பெயருள்ள மைந்தரை வெளிப்படுத்திப் பிரபஞ்சங்களை ரக்ஷித்தருள்வதாக உறுதி வாக்களித்த பின் பலகாலம் கடந்தன. ஸத்யமூர்த்தியும் ஸத்ய வாக்குடையவருமான பகவானுடைய வாக்கும் தாமதமாகிறதே. நம்முடைய துரதிருஷ்டவசத்தால் துன்பம் மேலும் விருத்தியாகிறதே யல்லாது குறைந்த பாடில்லை இதற்கு ஜகதீசன் என்ன செய்வார்? ஓஹோ! இதென்ன கஷ்டம்! அந்த அரக்கரோ மிக்கபாக்ய சாலிகளாய் இருக்கின்றனர். ஸ்ரீ பரமேஸ்வரனையே அவர்களும் முக்யகதியாக நாடியிருக்கின்றனர்; அவரை அவர்கள் அநவரத பக்தியுடன் மனதால் பஜிக்கின்றனர்," என்று பயத்துடன் கூறினன். அங்ஙனமே திக்பாலகர்களும், முனிவர்களும் தங்கள் தங்கள் துன்பங்களை வெளியிட்டனர். அவற்றைக் கேட்ட பிரம்மன் அப்போது தேவர்களைப் பார்த்து, "நாம் அனைவரும் மறுபடியும் கருணாசாகரராகிய ஸ்ரீ பரமேஸ்வரரை ஆராதிக்க வேண்டும். யோசிக்குமிடத்து, அசுரர்களும், தேவர்களும், மற்றுமுள்ள ஸ்தாவர ஜங்கமமான உலகமும், ஸகல பிரபஞ்ச சொரூபராகிய ஸ்ரீ மஹாதேவருக்கு ஒன்றேயாகும். அவரிடத்து, அவற்றைப் பாகுபாடுபடுத்தும் தன்மை ஏது? பெரியவை சிறியவை யென்ற பகுப்பு, மஹா தேவரிடத்தில்லை ஆதலால், எல்லாப் பொருள்களும், அவர் சன்னிதானத்தில் ஒன்றே என்னலாம். இல்லாவிடின், கேளுங்கள் தவசிரேஷ்டர்களே! ஸ்ரீ ஜகதீசன் பர்வத ராஜகுமாரியாகிய ஸ்ரீ உமையம்மையுடன் அந்தப்புரத்தில் என்ன செய்கிறார் என்பதை நாம் முதலில் விசாரித்தறிதல் வேண்டும். இப்போது திரிபுராந்தகரிடத்து எவரை அனுப்புவது? அப்படி அனுப்பப்படுவோர் மூலமாகப் பாலசந்திரனை யுச்சியில் அலங்காரமாகக் கொண்டவராகிய ஸ்ரீ மஹாதேவரைப்பற்றிவிருத்தாந்தங்களைத் தெரிந்து கொண்ட பிறகு தக்க பிரயத்தனத்துடன் செய்ய வேண்டுவதைச் செய்தல் தான் நலமான தாகும்,

''என்றனன். இங்ஙனம் கூறிய பிரம்மாவின் வசனங்களைக் கேட்ட விஷ்ணு மூர்த்தியும் இந்திரனும் பிறரும், அங்ஙனம் செய்வதேயுசிதம் என்றனர். அந்தயுக்திக்கு மற்றைய தேவர்களும், திக்பாலகர் முதலானோரும் மெச்சிப் புகழ்ந்தனர். பின்னர் ஸ்ரீவிஷ்ணு, இந்திரன் முதலிய தேவசிரேஷ்டர்களின் உத்தரவின் பேரில், பிரம்மதேவன் ஆகாயத்திற் சஞ்சரிக்கும் வாயுவை அழைத்து, எல்லோர் முன்னதாக அவனைப் பலவிதமாக உபசரித்து, மிக்க பராக்ரமசாலியான ஸ்ரீ சரஸ்வதியின் மணாளன் வெகுமானத்துடன் அவனைப் பார்த்து, ''கேளாய், வாயுவே! யாம் அனைவரும் இப்போது வலிய அசுரர்களால் நமது சகல பொருள்களும் லோகங்களும் அபகரிக்கப்பட, பல காலமாக தேகத்தை மட்டில் மிகுதியாகக் கொண்டவராய் உள்ளோம். ஆதலால் அந்த அசுரர்களை அடக்கும் பொருட்டு ஸ்ரீ முருகப்பிரானை யன்றி மற்றைய எவரையும் காண்கிலோம். அம்முருகனோ ஊர்த்வரேத (மேனோக்கிச் செல்லும் வீர்யத்தையுடைய) ஸுடைய ஸ்ரீமஹா தேவரால் ஸ்ரீபார்வதி யிடத்துண்டாக்க வேண்டியவர். எல்லா உலகங்களுக்கும் பஞ்சகிருத்திய (ஸ்ருஷ்டி, ஸ்திதி, சங்காரம் அனுக்ரஹம், திரோபவம்) பரராகிய ஸ்ரீ மஹாதேவர் தமது திவ்ய அந்தப்புரத்தில் வசிக்கலுற்ற உமை யம்மையாருடன் வெகு காலமாக என்ன செய்கிறார் என்பதை நீ சென்று கண்டறிந்து வரவேண்டும். வாராய் சதாகதி யாகியவாயுவே! நீ உலகில் உள்ள பிராணிகளுக்கெல்லாம் உயிராகிறாய். மேலும் நீ மஹாதேவருக்குப் பெருமை பொருந்திய ஓர் சரீரமாகிறாய். வேதத்திலும், அக்கிரக (முந்திச் சொல்லப்படுவோ) றென்று சொல்லப்படுகிறாய். ஆதலால் வாயுவே! நீ தேவர்களுக்கும், இம்மூன்றுலகங்களிலுமுள்ள மற்றெல்லோருக்கும் இதத்தைச் சீக்கிரம்சென்று செய்தல் வேண்டும்.'' என்றனன். அதை வாயுதேவன் கேட்டு மிக்க பரபரப்புடன், ''கேளீர் பிரம்மாவே! அந்தப்புரத்தில் ஸ்ரீ உமையம்மையாருடன் உல்லாசமாய் இருக்கும், ஸ்ரீ பரமேஸ்வரனிடம் செல்ல யான் சக்தியுடையவனல்லன். அந்தத் தொழிலைச் செய்ய எவராலும் ஆகாது. முன், மன்மதன் அம்ருதத்தை உணவாகக்கொண்ட தேவர்கள் சொல்லைக்கேட்டு ரதிதேவியுடன் பரமேஸ்வரரிடம் சென்று சாம்பலான விஷயம் நீங்கள் அறிந்ததுதானே?'' என்று கூறினன். அங்ஙனங் கூறிய வாயுவைப் பிரம்மன்நோக்கி, ''ஆலமரத்தடியில் வீற்றிருந்து ஸனகாதியர்க்கு உபதேசம் செய்துகொண்டிருந்த ஸ்ரீ சம்புவின்மீது மன்மதன்மனைவியுடன்சென்று பானபிரயோகம் செய்தான். ஆதலால் அவன் செய்த பாவம் அவனைக் கொன்றது. நீயோ அஷ்டமூர்த்த வடிவமாகும் மஹாதேவருக்கு, பெரியோர்கள் நன்கு பூஜிக்கும் இஷ்டமான ஓர் மூர்த்தியாகிறாய். மிகப்பெரிதாகிய இந்தத் தேவகாரியத்தின்பொருட்டு நாங்கள் அனைவரும் உன்னையே கதியென நாடியிருக்கிறோம். நீ ஒரு தடையும் செய்தலாகாது; தாமதம் வேண்டாம். வாராய், வாயுவே! நீ சிறிதும் யோசனையின்றிப்போய்வா. உனக்குச்சுபமான வழியுண்டாகக்கடவது.'' என்று மீட்டும்சொல்லினன். அங்ஙனமே சகல தேவர்களும் பாவலேசமற்ற பிரம்மரிஷிகளான பிராமண பிரார்த்தனை செய்தனர். அப்போது வாயுதேவன் மிக்க வருத்தமுடையவனாய், மறுத்துரைக்க இடமில்லாது, அவர்களிடத்தில் விடைபெற்றுக் கைலைமலைக்குச்சென்றனன்,

வாயு கைலையங்கிரிக்குப் போக வடபக்கமாகச் செல்லவேண்டியவராயிருந்தும் சிறிது நேரம் மயங்கி, கிழ்ப்பக்கமாகவும், தென்பக்கமாகவும், மேற்பக்கமாகவும் சென்று, பின்னர் வேகத்தில் மிக்க சாமர்த்தியமுடையவராயிருந்தும் அதிக மெதுவுடன் சென்று, ஸ்ரீ மஹாதேவரது பட்டணத்தை அடைந்தார். அவர், மாணிக்கங்கள் இழைக்கப் பெற்றதும், கண்களைப் பறிக்கலுற்றதும், பலகோடி ஆர்யர்களுக்கொப்பானதும் ஆகாயத்தை யளாவி நிற்கும் பல வீடுகளால் ஆச்சர்யப்படத்தக்கதுமான அந்தப் பட்டணத்தைக் கோட்டைவாசல் வழியாக உட்சென்று, ஸ்ரீ மஹாதேவரது இருப்பிடமாகிய திருமாளிகையை அடைந்தனர். அவர் அங்குச் சென்றதும், ஆங்காங்குக் காவலாய் அமைந்துள்ள மஹா பயங்கர ரூபமுள்ளவர்களான வாயிற்காவலர்களுக்குப் படாமல் பல கட்டுகளைக் கடந்து, அந்தப்புரத்தின் அதிபராகிய உருவமைந்த ஸ்ரீ நந்திதேவர் வீற்றிருக்கும் இடத்தில் வந்து சேர்ந்தனர். அக்காலையில் அந்த வாயு அவ்விடத்தில் உருவமுடையவராகவே நந்திதேவருக்குப் புலப்பட்டனர். நந்திதேவர் வாயுவை அவ்விடத்திற் கண்டதும் மிகவும் கோபம் கொண்டவராய் "அடே வாயு! நீ மிகவும் சகாயமுள்ளவன்! போ போ! நீ எக்காரணத்தால் இவ்விடம் நம்முடைய உத்தரவின்றிக் கள்ளன்போல் சந்திரஜடாதர மூர்த்தியாகிய பிரபுவின் ஆலயத்துட் பிரவேசிக்கிறாய்? சொல் விரைவில்." என்றனர். ஸ்ரீ நந்திதேவரது வசனத்தைக் கேட்ட வாயுதேவர், அவர் முன்னர் வந்து கைகட்டி நின்று, அடியேனைத் தேவர்கள் அனைவரும் பன்முறை கேட்டுக்கொள்ள அடியேன் தேவகாரியார்த்தமாக இவ்விடம் வரலானேன். அவ்விஷயத்தில் யான் பெரிய அபராதத்தை இப்போது செய்தவனானேன். அதனைத் தேவரீர் கருணைகூர்ந்து மன்னித்தருளல் வேண்டும்; மன்னித்தருளல் வேண்டும். வீரீர் பிரபுவே! தாங்கள் ஸ்ரீ மஹாதேவரிடத்து, அடியேன் வந்திருப்பதாகத் தெரிவித்து, அடியேனை உட்செல்லுமாறு செய்தருளல் வேண்டும்." என்று வேண்டினர். அவ்வார்த்தையைக் கேட்ட நந்திதேவர் மேலும் கோபம் மூளப்பெற்றவராய், "அடா வாயு! நீ விரைவில் இவ்விடத்தைவிட்டுத் திரும்பிச்செல். நீ ஸ்வாமியைக் காண இது சமயமல்ல. மன்மதனைப்போல் மாண்டொழியாதே! செல்" என்று கூறினர். பின்னர் வாயுதேவர் ஸ்ரீ நந்திதேவர் வார்த்தையால் மிகவும் மனவருத்தம் கொண்டு, இனி என்ன செய்வதென்று சிந்தித்து, "இவ்விஷயத்தை நடந்தபடியே தேவ சிரேஷ்டர்களிடம் எப்படியாவது சொல்லிவிடுவதே மேல். அந்தத் தேவர் தலைவர்களே அதற்கு மேல் செய்யவேண்டிய வேலையை யோசித்துச் செய்யட்டும். "என்று மனதில் நிச்சயம் செய்து கொண்டு மனோவேகமாக, ரத்னகொடிமுடிகளுடன் கூடிய மேருமலைக்கண் தேவர்கள் அனைவரும் பயநிவர்த்தியின் பொருட்டுத் தங்கியுள்ள குகையிடத்து வந்து சேர்ந்தார்கள்.

## 25-வது அத்தியாயம்.

தேவர்கள் அனைவரும் வாயுதேவனைக் கண்ட அளவில் மிக்க சந்தோஷங் கொண்டவராயினர். அப்போது, வாயு, அந்தக் கரணத்தில் மிக்க வணக்கமுடைவராய், தேவர்கள் பக்கமாக அவர்களை வந்தனித்து நின்றார்,

அவரைத் தேவர்கள் பார்த்து, "வாரும் மஹா பாக்யசாலியான வாயுதேவரே! பெரியோர்களுக்கு முதன்மைக் கதிபதியாய்விளங்கும் ஸ்ரீ பரமேஸ்ரரர், பார்வதி அம்மையாருடன் என்னசெய்கின்றன ரென்பதை இப்போது எடுத்துச் சொல் விராக.'' என்று கேட்டனர். களிப்போடு கூடிய மனதுடன் கூடியவராய்க்கேட்ட தேவர்கள் அனைவரையும் நோக்கி, வாயுதேவன், "வாருங்கள் தேவர்களே! பார்வதி பரமேஸ்வரரது விருத்தாந்தங்கள் என்னால் அறியக் கூடவில்லை. ஸ்ரீ நந்திதேவர் மிக்க கோபத்துடன், இப்போது சுவாமியைக் காண உனக்குச் சமயமில்லை.'' என்று கோபத்துடன் கட்டளையிட்டதைக் கேட்டு, யான் மீட்டும் திரும்பி யிவ்விடம் வந்து சேர்ந்தேன். பிரபுக்களின் சமயத்தை எதிர்பார்ப்பதில் இத்தகைய சம்பவங்கள் ஏற்படுவது சகஜமன்றோ'' என்று கூறும்போது, பிரமன் முதலான தேவர்கள் அதிக மனத்துயரடைந்தவர்களாய், ஸ்ரீமந் நாராயணனுடன் அதிக நேரம் ஆலோசனை செய்தனர். பின்பு அந்த ஆலோசனையின் பயனாக முடிவில் அவர்கள் அனைவரும், மேருமலையின் குகையினின்றும் வெளிப்பட்டு விரைவில் கைலையங்கிரியை அடைந்து, அவ்விடத்தில் ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியின் பரிசுத்தமும், மிக நீண்டுயர்ந்ததுமான திருமாளிகையைச் சேர்ந்தனர். அவ்விடத்தில் அவர்கள் ஸ்ரீ மஹாதேவருடைய வெளிவாசலில் இருந்து வெகுகாலமாகச் சிறிதும் சலிப்பின்றித் தமக்கு வரப்போகும் நற்காலத்தை எதிர்பார்த்திருந்தனர். பின்னர் ஒருநாள், எல்லாப் பிரமத கணாதிபர்களாலும், சித்தர், கந்தர்வர், கின்னரர்கள் முதலானோராலும் சேவிக்கப்படலுற்ற தலைவராகிய ஸ்ரீ நந்திதேவர் தற்செயலாக வெளிவாயிலுக் கெழுந்தருளினர். அப்போது அவரைத் தேவோத்தமர்கள் தரிசித்து, தரித்திரருக்குப் புதையல் நேராகக் கிடைத்ததுபோல மிகவும் சந்தோஷமனதுடன் கூடியவராயினர். பின் அவர்கள் அந்த நந்திதேவரைக் கற்பகவிருக்ஷத்தின் மலர்களால் பூஜைசெய்து, மிக்க பயபக்தியுடன் பிரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்து அவர் எதிராகக் கைகட்டி நின்றுகொண்டு, "சாலங்காயனர் குலத்தை விளக்குவதில் திலகமெனச் சிறந்த நந்திதேவரே! தேவரீரால் சர்வகுண சம்பூரணராகும் சிலாதமுனிவர் உலகில் உள்ள பாக்யவான்களுள் எல்லாம் முதன்மையானவராய், மூன்றுலகுக்கும் சாக்ஷாத் குருமூர்த்தமாகவும் கொண்டாடப்பட்டவரா யிருக்கிறார். ஹே! மிக காந்திபொருந்திய தேவனே! ஆற்றொணாத அளவு கடந்த துயருடன் தம்மை நோக்கியிருக்கும் எங்களைப்பற்றி ஸ்ரீமாதேவருக் கறிவித்து, தேவரீர் தேவர்களுக்கு நற்றுணையாமாறு திருவுளம் பற்றல் வேண்டும். அன்றியும், துன்பம் என்னும் பெருங்கடலில் ஆழ்ந்திருக்கும் ஜகங்களைக் கைகொடுத்துக் கரையேற்றல்வேண்டும்.'' என்று வேண்டிப் பலவாறு துதிசெய்தனர். அப்போது, ஸ்ரீ மஹாதேவருக்கு மிக்க அன்புள்ளவரும் லக்ஷிமி விலாசம் பெறப் பெற்றவரும், மிக்க புண்யசாலியுமான நந்திதேவர், தேவர்களுடைய வார்த்தையைக் கேட்டு, சுயம்பிரகாசவடிவாய் விளங்கும் ஸ்ரீ மஹாதேவர் சன்னிதியில் சந்தோஷத்துடன் சென்று, ஜனங்களுக்குத் தாய்தந்தையரான பார்வதி பரமேஸ்வரரை வந்தனம் செய்து, மன்மதனுக்குப் பகைவனாரது மனக்குறிப்பை அவர் தம் முகக்குறிப்பால் உணர்ந்து, தரிசனார்த்தமாக வந்திருக்கும் தேவர்களின் வருகையை

அதிக வணக்கத்துடன் அறிவித்தனர். சர்வேஸ்வரன் நந்திதேவரால் தேவ ரின் வருகையை அறிந்து, அந்தத் தேவர்களை உள்ளே விடுமாறு நந்திதேவ ருக்குக் கட்டளையிட, அந்தக் கட்டளையை யேற்ற பிரபுவாகிய சிலாதமுனிவ ரின் செல்வப்புதல்வர் தேவர்களை ஸ்ரீமாதேவரது சன்னிதானத்திற் கழைத்து வந்தனர். அப்போது ஜகத்பிரபுவாகிய சர்வேஸனும் ஸ்ரீ உமையம்மையா ருடன் திவ்யாலங்கிருத சிம்மாசனத்தில் வீற்றிருந்து, மந்தஹாச முகத்துடன், அந்த தேவர்களுக்குக் காட்சி தந்தருளினர். பிறகு அத்தேவர்கள் அனைவ ரும் அவரையே தரிசித்து, பக்தியால் மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்ப டைந்து உள்ளம் பரவசமடைந்தவர்களாய், எல்லாத் துதிகளையும் ஏற்கத் தகு திவாய்ந்தவராகிய பெருமானை, "வந்தடிபணியும் அடியவரின் துயரைப் போக்குபவரும், அசுபங்களை விலக்குவோருமான பரமசிவத்திற்கு வந்தனம். சுபங்களையும் அபீஷ்டங்களையும் விரைவில் அளித்தருளும் தேவரீருக்கு வந் தனம். மன்மதனையும், திரிபுராதியரையும் கொன்றவரும், கலிதோஷத்தை நிவர்த்திப்பவரும், சந்திரன், சூர்யன், அக்னியாகிய மூவரையும் மூன்று கண் களாக உடையவரும் சந்திரனை ஜடாமகுடத்தின் கண் தரித்தவரும் பாவங்களை முற்றும் போக்குபவரும், தக்ஷபிரஜாபதியின் யாகத்தை அழித்தவரும், அடி யவர் சுகமடைவதற்கு முக்ய காரணராய் உள்ளவரும், எல்லாம் உணர்ந்தவ ரும், திரிசூலத்தைத் திருக்கரத்தே பற்றியுள்ளவருமாகிய ஸ்ரீ சாம்பசிவமூர்த் திக்கு வந்தனம். யமனைக்கொன்றவரும், ஆலால விஷத்தை உண்டவரும், பெரியவர்களின் பகையை அழிப்பவரும், எங்களுக்கும் மற்றும் உள்ள மூவுல கினருக்கும் மஹா பிரபுவாய் விளங்கிய தேவரீருக்கு வந்தனம். ஹே! சம்பு ! ஹே தயாபரா! ஹே! சகல ஜீவராசிகளின் துயரனைத்தையும் துடைத்தரு ளும் பரமசிவா! விரைவில் தேவ சேனைகள் பலவற்றிற்கும் தலைவனாய் ஸ்ரீ குமரனை எங்களுக்கு வெளிப்படுத்தி எங்களுக்கு அசுரர்களால் நேரிட்டி ருக்கும் துன்பத்தைத் தேவரீர் விலக்கி யருளல்வேண்டும்." என்று துதி செய்தனர்.

மஹாதேவர், தேவர்கள் அனைவரும் மிக்க வருத்தத்துடன் கூடியவர்க ளாய் உரைத்த துதியைக் கேட்டருளி, கருணையங்கடலாகிய பிரபு உடனே ஆறு திருமுகங்களுடன் விளங்கலுற்ற திருமேனியைக் கொண்டனர். அளவு சொல்லுதற் கமையாத ஸ்வரூபத்தையுடைய ஸ்ரீ ஜகதாம்பிகையின் கணவ ராய் விளங்கும் மஹாதேவர், தம்முடன் திவ்ய ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்த அம்பிகையை ஆறு திருமுகங்களாலும் மனவிருப்புடனும் மிக்க நேசத்துட னும் நோக்கி யருளினர். அப்போது உடனே, மேன்மைக்கும் வீர்யத்தை யுடைய தேவாதி தேவனிடமிருந்து, ஆறு நெற்றிக்கண்களினின்றும், கோடி சூர்யப் பிரகாஸமுடையதும், மஹா பிரளய காலாக்னிக்கு ஒப்பானதுமான தேஜஸ் வெளிப்பட்டது. அந்த ஆறு பிரிவான தேஜஸும் உடனே அண்ட பிண்ட சராசராதி ஸகல ஜகங்களிலும் வியாபித்தது. தேவர்களோ அந்தத் தேஜஸைக் கண்டு பயந்து நடுக்கம் கொண்டவர்களாய்ப் பல திசைகளிலும் ஓடிச்சென்றனர். அவர்கள் எங்கெங்குச் செல்லினும், ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி யின் தேஜஸ் இருப்பது கண்டு, மேலும் எதற்கும் அஞ்சாதவர்களாய்த் திடங்

கொண்ட மனதுடன் மீட்டும் பயத்தின் வயப்பட்டு நடுக்கத்துடன் மஹாதேவரிடம் வந்து, 'வேறு கதியற்றவர்களாய்த் தவிக்கலானோம். தேவரீரே எங்களைக் காத்தருளவேண்டும்." என்று சரண் புகுந்தனர். பயத்தால் தேவர்களின் தேகமெங்கும் நடுக்கம் உற்றன. மேலும் அவர்கள் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு, "என்று மழிவற்ற நித்யப்பொருளாய் விளங்கும் சர்வேஸா! ஹே சர்வஞ்ஞ மூர்த்தி! ஹே மஹாதேவா! சகல சக்தியும் அமையப்பெற்றவரே! எல்லாப் புருஷார்த்தங்களையும் ஜீவர்கள் அடைய மூல காரணராய் இருப்பவரே! சகல பிராணிகளிடத்தும் கருணை காட்டுவதில் கவலை கொண்டவரே! இந்தத் தேஜஸ் எங்களுடைய கண்ணொளியை மழுங்கச்செய்து விட்டது. ஆதலால், இதினின்றும் எங்களைக் காத்தருளல் வேண்டும்.'' என்று துதித்தனர். இங்ஙனம் தேவர்கள் துதியால் மனக்களிப்படைந்த மஹாதேவரும் அம்பிகையுடன் கூடியவரும், ஸ்ரீ தயாநிதியானவருமான பரமேஸ்வரர், அந்தத் தேஜஸை மனதால் ஸ்மரித்தனர். அப்போது அந்த தேஜஸானது நினைத்த மாத்திரத்தில், தாய் தந்தையரிடத்து ஓர் நொடியில் வந்து சேர்ந்தது. ஆறு உருவங்கொண்ட அத்தீப்பொறிகள் உடனே சிறியனவாயும் சாந்தமுடையனவாயும் மஹாதேவர் முன்பாக நின்ற பின்னர், கிருபா சாகரராகிய மஹாதேவர், தேவர்களை நோக்கி, அவர்களுள் இருக்கும் அக்னியையும், வாயுவையும் அழைத்து "வாருங்கள், தேயு வாயுக்களே! நமது முன்பாக மீட்டும் வந்திருக்கும் பெருமை பொருந்திய அத்தீப்பொறிகளை நீங்கள் கொண்டு மற்றைய தேவர்களுடன் விரைவில் சென்று, தேவகங்கையில் நாணற்புதரில் நமது கட்டளையின்படி சேர்த்து விடுங்கள்; தாமதம் செய்ய வேண்டாம்.'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

## 26-வது அத்தியாயம்.

இங்ஙனம் கூறிய ஸ்ரீ சூதமுனிவரைப் பார்த்து, நைமிசாரணிய வாசிகளாகிய பிராமணோத்தமர்கள், வாருங்கள், புராண முரைப்பதில் மிக்க பாக்ய சாலியரான சூதமுனிவரே! அளவற்ற வல்லமையுடையவரான ஸ்ரீ சாம்பசிவ மூர்த்திக்கு மேனோக்கிச் செல்லும் வீர்யம் அமையலுற்ற விதம் உலகில் அற்புதமும் ஆச்சர்யத்தையும் விளைவிக்கத்தக்கதாய் இருக்கிறது. நெற்றிக் கண்ணினின்றும் வெளியான ஸ்ரீ பரமேஸ்வரனுடைய தீப்பொறிகள், எவ்வாறு குமரக்கடவுளாக மாறிற்றோ, அதை எங்களுக்குத் தயைபுரிந்து சொல்லுதல் வேண்டும். வாருங்கள் கதை சொல்வதால் கேட்பவர்க்கு மெய்ம்மயிர் பொடிக்குமாறு செய்யவல்ல முனிவரரே! இந்தச்சராசர ஜகத்தில் தேவரீரே சர்வஞ்ஞர். தாம் அறியாதது ஒன்றும் இல்லை. ஆதலால் தாங்கள் ஸ்ரீசிவசுப்ரமண்யக் கடவுளின் உற்பத்தியைப்பற்றிய எல்லா விருத்தாந்தங்களையும் உரைத்தருளல் வேண்டும்." என்று கேட்டனர்.

அங்ஙனம் பிராமணர்கள் பிரார்த்தித்தபோது மஹா மேன்மை பொருந்திய வரும், ஸ்ரீவேத வியாஸருக்கு மாணவருமான சூதமுனிவர், எல்லாவற்றையும் நன்ருய் ஆராய்ந்தறிந்து, "வாருங்கள் முனி சிரேஷ்டர்களே! முன்னர் ஸ்ரீ வியாச முனிவரால் மிக்க கருணையோடு எங்களுக்குச் சொல்லப்பட்டதும்,

சகல புருஷார்த்தங்களையும் அடைவதற்கு முக்ய ஆதாரமுள்ளதுமான ஸ்ரீ சுப்பிரமண்யக் கடவுளின் உற்பத்தி சரித்திரத்தையுங்களுக்கு யான் எல்லாம் சொல்லுகிறேன்; கேளுங்கள். அத்தீப்பொறிகளை நாணற் காட்டிற் கொண்டு போய் விடுமாறு சிவபெருமானல் ஆஞ்ஞையிடப்பட்டபின், தேயு வாயுக்கள் மிகப் பயந்தவராய், ஸ்ரீ மஹாதேவரைப் பக்தியோடு பணிந்தெழுந்து, "ஹே மஹாதேவா! யாங்கள் எங்கே? சகல புவனங்களையும் அவமதிக்க வுற்ற தேவரீரது தேஜஸ் எங்கே! ஹே அம்பிகாபதியே! அப்பொறிகளை யாங்கள் சுமந்து செல்ல என்ன திறமையுண்டு?" என்று கூறினர். அதற்கு ஸ்ரீ சூலபாணியானவர் மந்தஹாஸம்பொருந்திய முகாரவிந்தத்துடன், "வாருங்கள் தேயு வாயுக்களே! தீப்பொறிகளைச் சுமப்பதிலுங்களுக்கு நமது கட்டளையின்படி பல முண்டாகக்கடவது! இத்தீப்பொறிகள் உங்களுக்கு லேசாகக்கடவது! மற்றை தேவர்களும், விஷ்ணு பிரம்மேந்திரரும் உங்களைத் தொடர்ந்து வரக்கடவர்." என்றுரைத்து, மஹாதேவர் மேன்மைதங்கிய அம்பிகையுடன் மறைந்தருளினர். பிறகு, ஒளியினுல் ஜ்வலித்தும், மிகக் குளிர்ச்சி கொண்டதுமான ஸ்ரீ பரமேஸ்வரனது அந்தத் தீப்பொறிகள் ஆறையும் தேயு தனது உச்சிமேற்றாங்கிச் சிறிது தூரம் செல்லும்போது களைப்படைந்தவனுய் வாரி தேவனிடம் கொடுக்க, அவனும் சிறிது தூரம் எடுத்துச் சென்று மிக்க களைப்படைந்து, தேயுவிடம் கொடுத்தான். இப்படியே அவர்கள் வழி முடிய ஒருவர்க்கொருவர் மாறி மாறி அந்தப்பொறிகளை உச்சியிற் சுமந்து சென்று மிக்க வருத்தத்துடன், கங்கையின் கரையில் உள்ள நாணற் காட்டுக்குள் படர்ந்திருந்த தாமரையின் மலர்க்கண், மங்களகரமானவும், மரை மலர்க்குச் சமானமானவும், மரைமலரின் வாசனையைக் கொண்டவையுமான அப்பொறிகள் ஆறையும் வைத்தனர். வைத்தவுடன், அத்தேஜஸால் நீருரிஞ்சப்பெற கங்கையானது சிறுத்து, நாணற்காட்டு மடுவின் நடுவில் உள்ள மரை மலரின் மத்தியில் அந்தத் தேஜஸை ஒதுக்கிவிட்டது. அங்கு, ஆயிரம் சூர்ய பிம்பங்களை யனைய ஸ்ரீமஹேஸ்வரருடைய தேஜஸ், ஆறு திருமுகங்களையும், பன்னிரண்டு புயங்களையும் இரண்டு பாதங்களையுமுடைய, ஸகல ஜகங்களுக்கும் சுபத்தையும் ஆயுளையும் விருத்தி செய்தருளும் அழகிய திருமேனி கொண்டு ஒரு கணத்தில் உலகில் உள்ள சிறந்த அழகினர்களுக்கெல்லாம் ஒப்பிடத்தக்க வோர் குழந்தையாயது. அப்போது அவ்விடத்தில் தேவதுந்துபி முதலான வாத்தியங்கள் முழங்கின. தேவர்கள் ஆகாயமார்க்கமாய் இருந்து மலர்மாரி பொழிந்தனர். நாட்டிய வித்தையில் மிக்க கீர்த்தி வாய்ந்தவர்களால் பல தேவதாசிகள் நர்த்தனம் செய்தனர். அப்போது திக்கனைத்தும் தெளிவடைந்தன. காற்றும் பிராணிகளுக்கு வெகு சுகமாக வீசியது. தேவ கணங்களுக்குப் புவனங்களில் மிகுந்த சோபனத்திற்கிடமுண்டாயது. ஸ்ரீ மஹாதேவரது தேஜஸ், மிகவும் அழகுபொருந்திய குமார வடிவமானதைச் சகல தேவர்களும் முதலில் தரிசித்தவுடன் தாங்கள் கோரியது கிடைக்கப் பெற்றவராய் அவ்வுருவை வந்தனம்செய்து, தாங்கள் இந்தக்காட்சியைக்கண்ட மஹிமையால், அசுரேந்திரனிட மிருந்து தங்கள் தங்கள் ஐஸ்வர்யங்கள் மீட்டும் கைப்பற்றிய கொள்கை யுடையவராய், அந்த சுந்தரத்திருமேனியைப்

பரபரப்புடன் மேலும் மேலும் வணங்கினர். இந்திரன் முதலான தேவர்கள் குழந்தையாய் விளங்கும் பெருமானைச் சூழ்ந்து பாது காத்தலாயினர். தேவர்கள் இங்ஙனம் பணிசெய்து நிற்கும்போது, அசுரர்களைக் கொல்லலுற்ற ஸ்ரீ விஷ்ணு மூர்த்தியானவர், ஆறுகார்த்திகை நக்ஷத்திரங்களை யழைத்து, அந்தச் செல்வக் குழந்தைக்குப் பால் ஊட்டுமாறு, "வாருங்கள் கார்த்திகைப் பெண்களே! இந்த ஆக்கினேய (அக்னிகுமார)னுக்கு தினந்தோறும் நீங்கள் தனப்பால் தந்து தாய்மாராகுங்கள்." என்று கூற, அவ்வசனங்களைக் கேட்டகார்த்திகைப் பெண்கள் தமது கொங்கைகளிற் சுரக்கலுற்ற பாலைப் பெருக விட்டு மிக்க அன்புடையவராய்க்குழந்தைக்கு ஸ்தன்யபானம் செய்வித்து அதனைப் போஷித்து வந்தனர். ஸ்ரீ நாராயணனது கட்டளையின்படி அக்கார்த்திகை மாதர், அருகில் உற்றபோது அச்சாம்பசிவ மூர்த்தியின் செல்வப் புதல்வர் அம்மாதரை அனுக்ரஹம் செய்யும் வண்ணம் ஓர் நொடியில் ஆறு மூர்த்திகளாயினர். அவ்வாறல் மாதரும் அதிக அழகுடைய அக்குமரன் மரைமலர்களின் மீது விளங்கி நிற்பதைக் கொண்டு களிப்பினால் உள்ளம் பூரித்தவர்களாய், ஒவ்வொருவரும் ஒவ்வொரு குழந்தையை எடுத்துக்கரத்தில் வைத்துத் தாலாட்டிப் பாலூட்டித் தங்கள் முகத்தோடு குழந்தைகளின் முகத்தை யணைத்து முத்தமிட்டனர். குழந்தைகளும் தாய்மார்களின் முகத்தைப் பார்த்த வண்ணமாக முலையுண்டன. தாய்மாரும் குழந்தைகளுக்குப் பால் கொடுத்தான பின்பு, அவற்றை மரைமலர்ப் படுக்கையில் வைத்துத் தாலாட்டிக்கண் கொட்டாது காத்து வந்தனர். அவர்கள் அங்ஙனம் செய்கையில், ஓர் குழந்தை தூங்கியது; மற்றொன்று அடிக்கடி சிரித்தது; மற்றொன்று ஓயாமல் அழுதது; மேலும் ஒன்றோ உரக்க அதட்டியதால் கதறியது. ஓர் குழந்தை சிரித்து, உடனே தூக்கத்தின் கலக்கத்தால் அடிக்கடி அழுதது. ஒன்று இரண்டு கரங்களையும் சேர்த்து வாயில் வைத்துக் கொண்டது. மற்றொன்று அடுத்த நிமிஷத்திலேயே மார்பால் நகர்ந்தது. வேறொன்று, முழந்தாள்களாலும் கைகளாலும் சிறிது சிறிதாகச் தவழ்ந்து சென்றது. ஒன்று கால்களால் இரண்டு மூன்றடி தூக்கிவைத்து நடந்து விழுந்தது. மற்றொன்று கால்களால் சிறிதுதூரம் நடந்து சமபூமி வரையிற்சென்றது. மற்றுமொன்றோ? தாயின் கரத்தைப்பற்றி நீரைவிட்டுப் பூமிக்குவந்தது. ஸ்ரீமஹாதேவருடைய மற்றொரு குழந்தை எழுந்து கீழே வீழ்ந்தது. பிறகு அடுத்தக்ஷணத்திற்குள் மற்றொன்று அடிக்கடி யோடியது. பிறகு ஒன்று கால்களால் முழுதும் நடந்தது. மற்றொன்று ஒற்றைக் காலால் குதித்துபாய்ந்தது. ஒன்று, மல்லரைப் போலவும், ஆட்டைப் போலவும், மற்றோர் குழந்தையை எதிர்க்கத் தொடங்கியது. பிறகு அவ்விரண்டு குழந்தைகளும் ஒருவரோடொருவர் கட்டிக்கைச் சண்டை செய்துகொண்டன. ஸ்ரீ பரம்பிரஹ்மமே குழந்தைத் தன்மையடைந்து இங்ஙனம் செய்து, ஆறுகுழந்தைகளாகப் பிரிபட்டது போல் அவ்விளையாட்டுச் சுகங்களை அனுபவித்து தாய்மார் அறுவரும் குழந்தைகளின் விசித்திரமான லீலாவினோதங்களைக்கண்டு, மிக்க ஆச்சர்யமடைந்தவர்களாய், அந்த எல்லாக் குழந்தைகளிடத்தும் அளவற்ற அன்பு கொண்டவராயினர். விஷ்ணு முதலான தேவர்களும் அவ்விசித்ரமான செய்

கைகளைக் கண்ணுற்றுக் களிப்புடன் மயிர்க் கூச்சலுற்றவராய், அப்போது நாடிய பயன்கள் அனைத்தையும் கைப்பற்றினவர்களாக மகிழ்ச்சி பொங்கி, "நாம் சர்வேஸனை ஓர் குமாரனை வேண்டினோம். அவரோ நம்பால்தயை கூர்ந்து ஐந்து குமாரரை அதிகமாகவே அளித்தருளினர். உலகத்திற்குக் கண்டக (முள்ளைப் போல் வருத்துபவ) ரான கொடிய அசுரர்கள் இவ்வாறு போலும் வேருடன் மாண்டொழிவர்" என்று கூறி, அத்தேவ சிரேஷ்டரனைவரும் மிக்க அழகு பொருந்திய முகாரவிந்தங்களுடன் விளங்கும் ஆறு சிவகுமாரர்களையும் கண்டு, பலவித கோரிக்கைகளை மனதில் எண்ணி மோக்ஷ சாம்ராஜ்ய லக்ஷ்மி என்னும் பிரம்மானந் தத்திலும் மேலான தான சுகத்தை அடைந்தனர். கிடைத்தற்கரிய ஸ்ரீ மஹாதேவரே பிர சன்னராக இருக்கும் போது, உலகில் எந்த மேன்மையான கார்யந்தான் நடவாமலிருக்கும்?

## 27-வது அத்தியாயம்.

தேவர்கள், ஸ்ரீ ஜகதீசனது கண்களினின்றும் வெளியான தேஜஸைக் கண்டு மிகவும் பயந்தவர்களாய் ஓடும்போது, ஸ்ரீ ஜகதாம் பிகையும் மனநடுக்கம் கொண்டு, ஸ்ரீ பரமேஸ்வரரது மடியை விட்டிறங்கி மரைமலரடிகள் அடிக்கடி இடற அந்தப்புரத்தை நோக்கி ஓடிச் செல்லும் போது, இடறிய பாதங்களில் தரிக்கப்பட்டிருந்த பாதஸரங்களில் வைக்கப் பட்டுள்ள நவரத்னங்களும் ஒரு க்ஷணத்துள் சிதறிவழி யோரத்தில் விழுந்தன. தேஜஸ், சிறிய உருவமடைந்து தேவர்களும் அதனால் பயந்தெளிந்தவராக நிற்கும் போது ஸ்ரீ பிராட்டியார் அவ்விஷயத்தை உணர்ந்து மிகவும் கோபங் கொண்டவராய்த் தேவர்களைப் பார்த்து, "வாருங்கள் தேவர்களே! எனது திருமேனியினின்றும் மைந்தன் பிறக்குமளவும் நீங்கள் பொறுத்திருக்காததால், நீங்கள் அனைவரும் பிள்ளையற்றவராகக் கடவீர்." என்று சபித்தனர். இங்ஙனம் தேவர்களை சபித்த பர்வதராஜன் புதல்வியாகிய தேவியார் மீட்டும் ஸ்ரீ மஹாதேவரது மடியில் சிறந்த மந்தஹாச முகாரவிந்தத்துடன் வரும்போது, வழியின் இரண்டு பக்கங்களிலும் சிதறிவிழுந்த ஒன்பது ரத்னங்களும் அம்மையாரின் திருமேனி பிரதிபலிக்கப் பெற்று, பத்து கௌரியம்மையாக விளங்கின. ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தி அந்தப் பிரதிபிம்பங்களைப் பார்த்து, அவற்றை விரைவாக அந்தரத்னங்களை விட்டு வரும்படியாக அழைத்தனர். ஸ்ரீ தேவேஸர் அவ்வாறு அழைக்கும் போது, அப்பெண்கள் ஸகலரத்னா பரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவராயும், அந்தந்த ரத்தினத்தின் ஒளியைக் கொண்ட திருமேனியுடையவர்களாகவும், அந்தந்த ரத்னத்தின் பெயரை யேதத்தம் பெயராகக் கொண்டு, ஸ்ரீபார்வதி பரமேஸ்வரர் அருகில் வந்து, ஸ்ரீ மஹாதேவரை மேலாக நிறைந்த மனதுடன் பார்த்தனர். தாமரை யிதழை யொத்த கண்களையும், அழகிய மூக்கையும், உயர்ந்து விளங்கும் ரத்னகுண்டலங்களுடன் களங்க மற்றசரத்கால சந்திரனைப் போல் அழகு பொருந்தி மந்தஹாஸத்துடன் சிறந்து விளங்கும் திருவதனத்தையு முடைய மஹாதேவரைக்கண்ட அந்த மங்கையர்க்கு உடனே வயிற்றில் கர்ப்பமுண்டாயது. ஓஹோ! இது என்ன ஆச்சர்யம்! பிறகு உமையம்மையார் அவர்கள்

மனக்குறிப்பை யறிந்து, கண்கள் சிறிது சிவக்க இருந்தபோது மீட்டும் அம்மையார் அப்பெண்களின் வயிறு சூல்கொண்டு விட்டதைக் கண்டு கோபத்தால் தேகம் துடிக்க. "வாருங்கள் பெண்களே! நீங்கள் பிரசவிக்காமல் நீண்ட காலம் கருப்பத்துடன் இருக்கக்கடவீர்," என்று சாபமிட்டனள். அங்ஙனம் ஸ்ரீ உமையம்மையால் சாபமேற்றவர்களும், மோக ஆசை உடையவர்களுமான அப்பெண்களுக்கு அடிக்கடி அவர்கள் சரீரத்தில் மிகுந்த வியர்வை முத்துக்கள் போல் உண்டாயின. அந்த வியர்வைத் துளிகளினின்றும் மஹா பராக்ரமசாலிகளும், கத்தி, கேடயம் முதலான ஆயுதங்களைக் கரத்தில் ஏந்தியவரும், மிக்க சூரர்களுமான லக்ஷம் படைவீரர்கள் உண்டாயினர். அவர்கள் அனைவரையும், சூர்யனது கண்ணைக் குத்தியவரான மஹாதேவர் தமது குமாரர்களாகவே பாவித்துக்கொண்டனர். உமையம்மையாரது சாபத்தினுல் வெளிவராது, கருப்பையிலேயே கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த மஹா பராக்ரமசாலிகளாகிய பிள்ளைகளோ, ஸ்ரீ மஹாதேவரை மனதில் தியானம் செய்துகொண்டே அவ்விடத்தில் இருந்துவந்தனர். ஸ்ரீ மஹாதேவருடைய கட்டளையின்படி பார்வதியம்மையாருக்குப் பணிவிடைப் பெண்களாக அமைந்த அப்பெண்களோ, கர்ப்பபாரம் சுமக்கமாட்டாதவராய் நாளுக்கு நாள் மிக்க துன்பத்தை அடைந்துவந்தனர். இங்ஙனமாகப் பலகாலம் அவ்வொன்பது மாதரும் மிக்க முயூற்சியோடு தேவியாருக்கு ஊழியம் செய்துவந்தபோது, ஸ்ரீ சங்கரும் பிரசன்னராகப் பார்வதியாரும் அவ்வூழியங்களால் மன திரக்கமுற்றிருந்தனர். அப்போது மஹாதேவர் பார்வதியாரை அப்பெண்களுக்கு அனுக்ரஹம் செய்யுமாறு வேண்டிக்கொள்ள, அக்கட்டளையைக்கொண்ட அம்மையார் தாமும் மனமிரக்கம் கொண்டவராய், அத்தோழியாரைப் பார்த்து, "பிரபஞ்சங்களுக்கு க்ஷேமம் உண்டாகும்பொருட்டு உங்கள் வயிற்றினின்றும் மைந்தர்கள் அவதரிக்கக்கடவர்." என்று அனுக்ரஹம் புரிந்தனர். அம்மையார் அனுக்ரஹம் செய்தவுடனே, அப்பெண்களின் வயிற்றினின்றும், உலகினில் வீரர்களுக்கெல்லாம் வீரர்களும், அவ்வத் தாய்மாரின் திருமேனியின் நிறத்தைக் கொண்டவர்களுமான நவ (ஒன்பது) வீரர்கள் பிறந்தனர். சிவப்பு ரத்னத்தினின்றும் உண்டான ரக்தவல்லி என்னும் பெண்ணிடத்து, மிக்க பராக்ரமசாலியான வீரபாதி என்னும் ஆரிய வீரன் உண்டாயினன். முத்துமணியினின்றும் உண்டான தானவல்லி என்னும் பெண்ணிடத்தில், ஸகல வீரர்களுக்கும் முதன்மையானவனும் லக்ஷ்மி விலாசம் பொருந்தியவனுமான வீரகேஸரி என்னும் மைந்தன் பிறந்தான். புஷ்பராகத்தினின்றும் உண்டான புஷ்பவல்லி என்னும் மங்கையிடத்து, எல்லாவீரத்தலைவர்களுக்கும் முதன்மையான வீரமகேந்திரன் பிறந்தான். கோமேதக மணியினின்றும் உண்டான கோமேத திலகை என்பவளிடத்து, ஸாக்ஷாத் வீரமஹேஸ்வரன் என்னும் வீரசந்திரனுக்கும் லோக பிரசித்திகொண்ட மைந்தன் பிறந்தனன். வைடூர்யத்தினின்றும் உண்டான வைடூர்யவல்லி யிடமிருந்து, வீரபுரந்தரன் என்னும் புதல்வன் தோன்றினன். வைரத்தினின்றும் உண்டான வஜ்ரவல்லியிடமிருந்து வீரராக்ஷஸன் என்னும் மைந்தன் பிறந்தான். மரகதரத்னத்தினின்றும் உண்டான மரகதவல்லியிடமிருந்து பகை

வர்களாகிய சேற்றையுலர்த்தும் வீரமார்த்தாண்டன் என்னும் வீரன் பிறந்தான். பவளத்தினின்றும் உண்டான பவளவல்லி என்பவளிடம் வீராந்தகன் ஜனமித்தான். இந்திர நீலக்கல்களினின்றும் உண்டான நீலவல்லியிடத்தில் வீரதீரன் என்னும் புதல்வன் தோன்றினன். இங்ஙனம் மஹா பராக்ரமசாலிகளான நவவீரர் என்னும் அவ்வனைவரும் அம்மங்கைமார்களது நாபியின் வழியாக மெல்ல வெளிவந்து, பணிவோரின் துயரைப் போக்கும் பரம்பொருளாய், ஸ்ரீ பவானியம்மையுடன் விளங்கிய ஸ்ரீமஹாதேவரைப் பணிந்து, தமது தாய்மாரின் பக்கத்தில் பராக்ரமம் விளங்க வணக்கத்துடன் நின்றனர்.

## 28-வது அத்தியாயம்.

எல்லாம் உணர்ந்தவரும், எவ்லா உலகங்களுக்கும் ஈஸ்வரருமாகிய ஸ்ரீ மஹாதேவர் அந்த நவவீரர்களையும் பார்த்து, "வாருங்கள், குழைந்தைகளே! எக்காலத்தும் அழிவில்லாத நித்யனும், மஹா பராக்ரம மிக்கவனும், தேவர்களில்பகைவர்களை வேருடன் அறச்செய்பவனுமாகிய ஸ்ரீபார்வதி குமாரன் உங்கள் அனைவர்க்கும் எஜமானனுவன்.'' என்று திருவாய்மலர்ந்தருளி, ஸ்ரீ சங்கரன் அவர்களுக்கு நாமகரணமிட்டு, உமையம்மாயாரின் புதல்வனது முகாரவிந்தத்தைப் பார்ப்பதில் காதல்கொண்டவரானுர். வணங்குவோரின் துக்கத்தைத் தீர்ப்பவர் என்னும் பொருளமைந்த பிரணதார்த்திஹரர் என்னும் பெயருடையவராகிய மஹாதேவர் பர்வதராஜ புத்ரியாருடன் ஸல்லாபம் செய்துகொண்டு, தமது மைந்தரைக் காண மிக்க ஸந்தோஷம் கொண்டவராய் மிக்க ஆதரவுடன் ரிஷபத்தின் மீது ஆரோகணம் செய்து புறப்பட்டனர். அப்போது பிரயான சன்னுகத்தின் அடையாளமாக, வாத்தியம், பேரி, சங்கம், காஹளம் முதலான வாத்தியங்களின் பேரொலி, எங்கும் பரவ, பிரமத கணங்களால் இனிமையாக முழக்கப்பட்டன. மஹா பலசாலிகளாகிய தலைவ ரனைவரும் பற்பலவிதமான அஸ்திர சஸ்திரங்களைக் கரத்தில் ஏந்தியவராய், ரதகஜதுரகங்களில் ஏறிக்கொண்டும் பதாதிகளாகவும் புறப்பட்டனர். அவர்களுடன் மிக்க ரூபலாவண்ய சுந்தரிகளான பத்துலக்ஷம் ருத்திரகன்னிகையரும், அங்ஙனமே வட்டமான தேவதாசியரும், மஹாதேவருக்கு முன்னதாக வரிசையாகச் சென்றனர். சூர்யனும் சந்திரனும், ஸ்ரீ சாம்பசிவ மூர்த்திக்கும் அம்பிகைக்கும் வெவ்வேறாக மிகுந்த பயபக்தியுடன் பக்கங்களில் இருந்து வெண்கொற்றக் குடைகளைப் பிடித்துவந்தனர். ஸ்ரீ ஹாலாஸ்யசுந்தரர், பேரன்புடன் கூடியவராய்த் தமது அருமைப் புதல்வரது அருகிற் சென்றனர். பிரயாண ஸன்னுக வாத்யங்களின் முழக்கத்தைக் கேட்டு மிக்க குதூஹலத்தை யடைந்த ஸ்ரீ குமாரமூர்த்தி யருகிருந்த விஷ்ணு முதலான தேவர்கள், ஸ்ரீ பரமேஸ்வரரைத் தரிசிப்பதற்காகப் பக்தியுடன் எதிர்கொண்டு வந்தனர். ஸ்ரீ சாம்பசிவமூர்த்தியும் மிக்க சந்தோஷமுடையவராய், ஒரு க்ஷணத்தில் தேவர்களுடன் நாணற்காட்டை வந்து சேர்ந்தனர். அப்போது ஆறுமூர்த்தமாகப் பிரிந்திருந்த கடவுள் தமது தாய்தந்தையரைப் பார்ப்பதில் மிக்க ஆவல் கொண்டவராய்த் தாமரை மலர்மீது விகசிதமாக விளங்கினர். கார்த்திகைப்பெண்கள் அறுவரும் அந்தக் குழந்தைகளுக்குப் பணிவிடை செய்து

கின்றனர். ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி, பவானியம்மையுடன் ஆகாயத்தில் இருந்த படியே பரபரப்புடன், தாய்மார்களுடன் தமது மைந்தன் விளங்குவதைக் கண்டு, குழந்தையின் அழகிய திருமுகத்தை நோக்கிய அளவில், தாம் மூன்று கண்களைப் பெற்றதனால் அன்றுதான் பயனெய்தியதாக எண்ணி மிக்க ஆதாரவோடு தேவியாரைப்பார்த்து "பூசிக்கப்படலுற்ற மங்கையே! நமது மைந்தன் ஆறு வடிவமாக மரைமல ராசனத்தில் மிகநேர்த்தியாய் வீற்றிருந் தருளுவதைக் காண்! இம்மைந்தன் ஜனங்களின் துயரனைத்தையும் போக்கவல்லவனாதலால், அவனைப் பெற்ற நீ வீரமாதா ஆகிறாய்.'' என்று கூறினர். இங்ஙனம் கௌரீசன் திருவாய்மலர்ந்தருள, தேவியார் உடனே ரிஷபத்தினின்றும் இறங்கி, அந்த ஆறு குழந்தைகளையும் ஒன்றாயணைத்து உச்சிமுகர்ந்து, தமது கொங்கைகளினிடையில் நெருங்கக்கட்டி அணைத்து, அவ்வாறு குழந்தைகளையும், இரண்டு திருவடிகள், பன்னிரண்டு புயங்கள், ஆறு திருமுகங்கள், பதினெட்டுக் கண்கள் கொண்ட ஒரே குழந்தையாகச் செய்தருளி, கொங்கைகளிற் சுரந்து பெருக்கெடுத்த மிகவும் நேர்த்தியான பாலைப் பொற்கிண்ணத்திற் காந்தனள். அந்தக் குழந்தையும், தனது தாயாரது மடிமீதிருந்து, அவளுடைய முகார விந்தத்தை, தாமரைமலரது காந்தியைக் கொண்ட கடைக்கண்களால் உற்று நோக்கிக்கொண்டு, கல்விமயமும் ஞானமயமுமான அத்திரு முலைப்பாலை விளையாட்டாக உண்டருளினர். அந்தச் செல்வக்குழந்தை அன்னையின் பாலைக் குடிக்கும்போது, அதினின்றும் சில துளிகள் வழிந்து நீரில் சிந்தின. அப்பாற்றுளியை, பாாசரமுனிவரது சாபத்தால் மச்ச உருக் கொண்டு அவ்விடமிருந்த ரிஷிபுத்திரர்கள் குடித்தனர். அதனால், அவர்கள் குடித்த அளவிலேயே அவர்களுக்கு முன் உருவம் வரலாயது. பிறகு உமையம்மையார் ரிஷபவாகனத்தில் வீற்றிருந்த ஜகந்நாதரது மடியில் வைக்கக் குமரனைத் திருக்கரத் தெடுத்துச் சென்றனர். அப்போது துந்துபி முதலான வாத்தியங்களும், 'ஜயமங்களம்' என்னும் மங்கள வாத்யங்களும் முழங்கின. அப்போது தாய்தந்தையரது சிரசின் மேல் தேவர்கள் மலர்மாரி பெய்தனர். தண்டாயுதங்களையும், சடைகளையுமுடைய முனிவர்களும் சித்தர்களும் நர்த்தனம் செய்தனர். ஸ்ரீ நீலகண்டரும் குமாரனை யெடுத்து வந்த பார்வதியம்மையாரை ரிஷபத்தின்மேல் ஏற்றிக்கொண்டு, கார்த்திகை மாதரைப் பார்த்து மிக்க ஆதரவுடன், "நீங்கள் பலநாளாக நமது பாலனை முலைகொடுத்து வளர்த்தபடியால் உங்கள் பெயரால் இவன் உலகில் கார்த்திகேயன் என்று சொல்லப்படுபவனாவன். மேலும், இவ்வுலகில் இன்றுமுதலாக உங்களுடைய நாளில் அதாவது கார்த்திகை நக்ஷத்திரத்தில் எந்த மனிதர் பாலசுப்ரமண்யனுக்குப் பிரீதியுடையவராய் மிக்க ஆதரவுடன் பலகாலம் விரதானுஷ்டம் செய்கின்றனரோ, அவர்களுக்கு இந்தப் பாலனே சகல இஷ்டங்களையும் ஒரு தடையுமின்றி அளிப்பான் என்பதிற் சிறிதும் ஐயமில்லை. புதல்வரை வேண்டுவோர் புதல்வரையும், மனைவியை வேண்டுவோர் நல்ல மனைவியையும், தனத்தை நாடுவோர் மிக்க பொருளையும், பசுக்களை விரும்புவோர் அளவற்ற பசுக்களையும், வித்தையை விரும்புவோர் வித்தையையும், எவற்றையும் விரும்பாது நிஷ்காம்யமாக விரதானுஷ்டானம் செய்வோர் நித்

தியமான மோக்ஷத்தையும் விசேஷமாக அடைவர். இந்தக் குமாரசாமியின் பிறப்பத்தியாயத்தை எந்தப்பெண்ணுபினும் ஆதரவாகக் கேட்பாளேயாயின், அவள் பிறவி மலடாக இருந்தாலும் நங்குமரனைப்போன்ற புத்திரனைச் சத்திய மாக அடைவள்.'' என்று விஷ்ணுமூர்த்தி, பிரம்மா, இந்திரன், தேவர்கள், யோகீந்திரர் முதலினோரால் பூஜிக்கப்படும் ஸ்ரீ சர்வேஸ்வரன் அந்தக் கார்த் திகை மாதருக்கு வரமருளித் தேவியாருடன் தாமும் தமது இரண்டு திருக் கரங்களாலும் மைந்தனைத் தழுவி யெடுத்து பூதகணங்களுடன் தமது ஆல யத்திற்கு மீட்டும் சென்றருளினர்.

## 29-வது அத்தியாயம்.

ஸ்ரீ சாம்பசிவமூர்த்தியின் செல்வப்புதல்வர், குழந்தை விளையாட்டில் அதிக உற்சாகமுடைவராயினர். அவன் விளையாடல் காட்டுவதில் மிகுந்த சந்தோஷமுள்ளவர்களான பார்வதி பரமேஸ்வரர் முன்னர் சிலகாலத்தை ஆனந்தமாக்கிப் பின் சந்தோஷமாக அவர்கள் மடிமீதிருந்து அவ்விடத்தை அலங்கரிக்கச்செய்தனர். ஸ்ரீ பார்வதிமைந்தர், தமது திருவடிகளில் தரித் துள்ள தண்டைகளாலும், நவரத்னங்கள் இழைக்கப்பெற்ற இரண்டு பாதச ரச் சதங்கைகளின் ஜல் என்னும் ஓசையாலும், அரைஞாணிற் சோத்தலுற்ற கிண்கிணிகளின் இன்ப ஓசையாலும், மார்பினிற் பூண்ட மணிமாலைகளாலும் மிகவும் விளங்கினர். பெற்றோர் முத்தமிடப் பெற்ற அவருடைய திருமார்பா னது, கழுத்தில் வரிசையாகப் பொருந்திய அற்புதமிக்க ஆபரணமான அனேக மோராமாலைகளாலும், சிறந்த பதக்க முதலியவற்றாலும், பலவாய நக்ஷத்திரங் கள் நிறைந்த ஆகாயம்போல் விளங்கியது. செவிக்கலங்காரமாக இருந்த நவ ரத்னகசிதமான குண்டலங்களின் ஒளியால் விளங்கிய ஆறு திருமுகங்களின் வரிசைகளும், ரத்னமாலைகளால் செய்யப்பெற்ற நெற்றிச்சாந்துடன் விளங்கிய தோற்றம் சந்திரனையும் அவனுடைய கிரஹணத்தையும் ஒத்திருந்தது. ஆறு திரு மகுடங்களில் இழைக்கப்பெற்றுள்ள மேலான நவரத்தினங்களால், நான்கு திக்குகளையும் பிரகாசப்படுத்தும் விஸ்தாரமான சிரசுகளின் வரிசை கள், தேவர்கள் வாசம்செய்யும் மஹாமேருமலையின் பல ரத்ன கொடிமுடிக ளின் வரிசையைப்போன்ற இயலைக்கொண்டு மிக்க ஆச்சர்யமாக விளங்கின. அளவில்லாததும், நாவிற்கும் மனதிற்கும் எட்டாததும், அளவில்லாத சுகங் களை யருள்வதும் ஸ்ரீ பரமேஸ்வரரது புதல்வராய் விளங்கும் சச்சிதானந்தா னந்த பரப்பிரம்மமானது இங்ஙனம் மிகவும் அழகுடைய ஓர் குழந்தைத் தன் மையை மேற்கொண்டு, ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரர் அருகில் விளையாடி அலங் கரித்து வந்தது. பின்னர் ஸ்ரீ சிவகுமாரன் தம் பரிவாரங்களுடன் உலகிற் சென்று விளையாடிவர ஆசைகொண்டு, தாய்தந்தையரைப் பன்முறை பிரத க்ஷிண நமஸ்காரஞ் செய்து, அங்கிருந்து புறப்பட்டு, உலகில், உள்ளவருடைய உள்ளத்திற்கும் இன்பம் ஊட்டினர். முன்னர் அவர் ஸ்ரீ மஹாதேவரின் எதி ராக விளங்கிய ரிஷபத்தின் திமிலை நகங்களாற் சொரிந்து, அதன் தினவை யாற்றி அதன்மீது சிறிதுநேரம் விழுந்து புரண்டு பிறகு வெளிச்சென்றனர். அந்த மிக்க அழகமைந்த சுந்தரர் தமது கணங்களுடன் சேர்ந்து, பலவித

விகாரங்களுடன். கூடிய பிரமதகணங்களைப் பார்த்துச் சிரித்துப் பரிகாசம் செய்தனர். மேலும் அவர்களிடம் அடிக்கடி சென்று, அவர்கள் முன்னர் தமது விரல்களால் ஆறு திருமுகங்களையும் மறைத்துக்கொண்டார். அன்றியும் அந்தக் குமாரக்கடவுள், விரைவாக ஒரு வீட்டினுட்சென்று, தமது கணநிபர்கள் காணுதபடி அவர்கள் கண்ணிற்படாமல், அந்த வீட்டின்புழைக் கடைத் தோட்டத்தின் வழியாக வெளிவந்து, அதற்குப்பின் மற்றொரு வீட்டுள் தப்புவழியாகப் பிரவேசித்து மீட்டும் அங்கிருந்து வெளிவந்தார். பிறகு அவர் பலவாயமரங்கள் அடர்ந்துள்ளதும் தேவர்களுக்குப் பூஜ்ஜியமாக விளங்கியதுமான கற்பகவிருக்ஷத் தோப்பில் ஆகாய மார்க்கமாய்ச் சென்றிரங்கி, ஓர் மரத்தின்மேல் ஏறிக்கொண்டு அதன் பழங்களைக் குலுங்கிவிழ உதறினர் அதன் பிறகு அவர் மற்றொரு மரத்தில் தாவி அதன் மலர்களை யெல்லாம் பறித்துப் பிறகதை விட்டு மேலுமோர் மரத்தின் நுனியிலும் மலரிலும் காதல்கொண்டும் அறுக்துக் கொண்டவராய், மற்றோர் மரத்திலேறி தமது அழகிய பவளச் செவ்வாய்கள் ஆறுலும் அதன் கனிகளைப் புசித்தருளினர். பிறகு அங்கிருந்தபடியே அவர் பூலோகத்தில் வந்து, தாமரை மலர்களிடத்தில் பிரியங்கொண்டவராய் நதிகளிற்றங்கி அவற்றைக் கலக்கிப் பிறகு அவ்விடத்தை விட்டு நீங்கி ஸப்த சமுத்ரங்களை அடைந்து, அவற்றின் கண்களைத் தமது செந்தாமரைத் திருவடிகளால் உடைத்துச் சந்தோஷத்துடன் அவ்வேழு கடலையும் ஒன்றுசேர்த்து மகிழ்ந்தனர். அதன் பிறகு அவர் அந்தக் கடலுள் வாழும் மகரம் திமிங்கலம் முதலான மச்சங்களை யமுந்த நசுக்கியும் அஷ்ட குலாசலங்களைத் தமது திருக்கரத்திற் பற்றியுள்ள குந்தாயுதத்தால் பல துண்டுகளாக உடைத்தும், அம்மலைகளிடத்திருந்த சிங்கங்களுடன் திருவிளையாடல் செய்தருளினர். அனந்தகல்யாணணே சீலரும், லோக குருவுமான ஸ்ரீ கந்தஸ்வாமியார் தமது உபய பாதாரவிந்தங்களால் மரங்களை யெல்லாம் உதைத்து உதைத்து முறித்தார். ஒரு மலையினின்று மற்றோர் மலையிற் குதினர். தமது கணங்களுடன் கூடி அளவற்ற கோடி சங்கியை கொண்ட பாம்புகள் குடியிருக்கும் ரத்னத்தாழ்வரைகளிற் சென்று பலவாறு திருவிளையாடல் புரிந்தனர். ஸ்ரீ சந்திர ஜடாதரருடைய புதல்வரும், மேலான ஸமர்த்தரும், விளையாட்டிற் சிறிதும் சலிப்படையாதவருமாகிய சிவசுப்ரமண்யர், யானையுருவம் போலும் மேகங்கள் நிரம்பிய ஆகாயத்தை நோக்கிக் கிளம்பி, அங்கு மேகங்களால் இரண்டு வில்களை யமைத்துத் தமது இருகரங்களிலும் அவ்வில்களைப்பற்றி, பலவாய நக்ஷத்திரங்களைப் பதினுயிரம்கோடி வில் உண்டைகளெனச் செய்து கொண்டு, அவற்றுல் பல தேவசிரேஷ்டரை அடித்து விழச்செய்தனர். பின்னர், சாமர்த்திய மிக்கவரும் மூன்றுலகினும் ஏற்பட்ட விபத்துக்களையும் துன்பங்களையும் போக்கி யருள்பவராகிய அச்செல்வக் குழந்தை மிகவும் பிரகாசமான உருவத்தைக்கொண்ட சூர்யனது ஏழு பச்சைக் குதிரைகளைப்பற்றி அவற்றின்மீது ஆரோகணித்து, அவற்றைப் பல வித நடைகளுடன் ஓடச்சவாரி செய்தனர். தேவகோடிகள் துதித்துப் புகழ நின்ற கார்த்திகேயர்,பின்னர் அந்தக் குதிரைகளை விரட்டி யோட்டி விட்டு, சந்திரனது தேரின்மேல் இவர்ந்து, யானை மடுவில் இறங்கி நீரைச் சுற்றிக்

கலக்குவதுபோல் சிறிதும் தடையின்றி அந்த ரதத்தைப் பத்துத்திக்கிலும் கிறுகிறு எனச்சுற்றினர். பிறகந்த ரதத்தையும் விட்டு, இந்திரன் அக்னி, இயமன், நிருதி வருணன், வாயு, குபேரன் முதலானோருடைய யானைகள் மீதேறிப் பலவித நடைகளாலும் ஓட்டங்களாலும் அவற்றை நடத்தினன். மிக்க மஹிமைபொருந்தியவரும் கீர்த்திவாய்ந்தவருமான ஸ்ரீபாலகுமாரர், பூகோளத்தின் வடக்கிலும் தெற்கிலுமுள்ள துருவங்களில் கையில்விளங்கும் காற்றாகிய விசைக் கயிறுகளில் கட்டப்பட்டுள்ள நவக்கிரகாதி நக்ஷத்திரங்களின் சக்கரத்தை அறுத்துவிட்டுத் தமது பரிவாரங்களுந் தாமுமாக அஷ்டதிசைகளிலும் அந்தச் சக்கரத்தைப்பற்றி நின்றும், ஆகாய கங்கையின் முதலைகளைப் பிடித்து அந்தக் கயிற்றில் கட்டியும், பிறகு அவற்றின்மேல் இரக்கம் கொண்டு மீட்டும் ஜலத்தில் விட்டும் விளையாடினர். பிறகு லீலைகளில் ஆவல் கொண்ட வேலாயுதர், மஹலோகம், ஜனலோகம், தபோலோகம், ஸத்யலோகம் முதலான இடங்களிற் சென்று விஸ்வர்கள், வித்தர்கள், அமரேந்திரர்கள், ஒன்பது பிரஜாபதிகள் முதலியோரை நடுங்கச்செய்தும், பூமியைக் கோட்டைபோல் வளைத்து நிற்கும் சக்கிரவாளகிரியை அடைந்து அவ்விடத்தும் திருவிளையாடல் புரிந்தனர். எல்லா உலகங்களுக்கும் இறைவராகிய இப்பால குமாரர் ஸத்யலோகம் சென்று, அங்கு ஸாக்ஷாத் பிரமதேவனது திருமுகங்களைத் தமது கைவிரல் நுனிகளால் அடிக்கடி பரிஸித்தெண்ணியும் அவரது மார்பில் விளங்கிய ஒன்றோடொன்று சோாமல் சிதறுண்டிருந்த முப்புரி நூலை அவரது தலையிலேயே மாட்டிக் கூந்தலுடன் கட்டியும், சர்வாதிநாதராகிய அப்பிரபு ஸ்ரீவிஷ்ணு லோகமாகிய வைகுண்டத்தை அடைந்தனர். அவ்விடத்தில் அவர் தம்முன் விளங்கிய அழகிய சிறகுகளையுடைய கருடனையும், அவரது ஆதிசேடன் என்னும் சர்ப்பத்தையும் பிடித்து, அவை யொன்றோடொன்று சண்டையிடுமாறு செய்து, அவை ஒன்றோடொன்று சிறகுகளினாலும் படத்தினாலும் அடித்துக் கொள்வதைக்கண்டு சந்தோஷமடைந்தார். மற்றோரிடத்தில், அவர் சிறு குழந்தையாயிருந்தும், தாம் மட்டில் தனித்து ஓர் யௌவன புருடன்போல் உருக்கொண்டு, ஆங்கிருந்த அழகிய விழிகளையுடைய மாதர்களை, விடத்தன்மை கொண்டவராகக் காமலீலா விநோதத்துடன் மயக்கியும், சிறந்த அறிவுடையோரான வித்வான்கள் பூஜிக்கும் பெருமைவாய்ந்த திருவடிகளையுடைய அக்குழந்தை வேலர், பிறகு தேவர்கள் வாழும் உலகடைந்து, அவ்விடத்தும் மிக்க விநோதமும் அற்புதமுமான திருவிளையாடலைச் செய்தருளினர். ஆஹா! இது என்ன ஆச்சர்யம்! பின்னர் அந்தப் பெருமான் ஒரு பெரிய காட்டை யடைந்து, ஆட்டுக்கடாவையும், சிங்கத்தையும் பிடித்துத் தமதிரண்டு திருக்கரங்களினால் அவற்றின் கழுத்தைப் பிடித்து ஒன்றோடொன்றைச் சண்டைக்கு விட்டும், விளையாட்டுத்தனமாக ஓர் எருமைக்கடாவையும் குதிரையையும் பிடித்துப் போரிடச்செய்தும் விளையாடினர். தேவர்கள் வணங்கப்பெற்ற அத்திருமுருகன் மறுபடியும் குழந்தையாய், எல்லா உலகிலும் உள்ள மங்கையர் அனைவரும், அவரைத் தத்தமது குழந்தையென எடுக்க அவரும் அவர்களைத் தாய்மாரெனப் பாவித்து, அவர் வேத வேதங்களில் வீற்றிருக்கும் மஹா பிரபுவாயிருந்தும்,

அம்மங்கையரிடத்து ஆசையுடையவர்போல் அவர்கள் மடிமீதும் வீற்றிருந்து விளங்கினர். பெரியோர்களுக்கு உண்மையான பந்துவும், உமையம்மையாரின் திருமகனருமாகிய பால குமாரர். ஒரு பெரிய கிழவரென உருமாறி, தலைமயிர் நரைக்கவும், கண் காதுகள் மழுங்கவும், கையில் ஓர் தடியைப்பிடித்துக் கொண்டு, அசுரர் வதையால் தேவர்கள் இல்லாமல் இருக்கும் லோகங்களைக்காக்க எண்ணமுடையவராய் அங்குத் திரியலாயினர். எல்லாத் தேவர்களுக்கும் சிரோரத்தினமாய் விளங்குபவரும், அடியவருக்குச் சர்வாபீஷ்டங்களையும் அளிப்பவருமாகிய ஸ்ரீ சிவமைந்தன், விசித்திர நிறைந்த மணிகளும், கிண்கிணிகளும் இன்பமாய் ஒலிக்கப்பெற்ற கழுத்தையுடையதும் மிகவும் மேலான அஸ்வங்களுக் கெல்லாம் அதிகமகிமை வாய்ந்ததுமான ஒரு ஆட்டுக்கடாவின் மேல் ஏறி, ஒருசிறந்த ராஜகுமாரனைப்போல், பலவிதமான நடைகளாலும் சவாரி செய்தருளினர். பின்னர், ஓரிடத்தில் அந்தப் பார்வதி மைந்தர், அதிதீக்ஷண்யம் பொருந்திய நகங்களையும் பற்களையும் உடையதும், நுனி வெளுத்தடர்ந்த மயிர்ச்சடைகளை யுடையதும், மேன்மை பெற்றவாலினால் அழகு பெற்றதும், மிகவும் பெரியதுமான ஒரு சிங்கத்தின் மீது ஆரோகணித்து. ஆகாயத்திலும் பூமியிலுமாகத் திரும்பித் திரும்பி மிகவும் அற்புதமாகச் சவாரிசெய்தருளினர். ஸ்ரீ மஹா தேவரென்னும் பாற்கடலில் தோன்றிய சுப்ரமண்ய ரென்னும் பால சந்திரன், கருடன், அன்னம். மான், சரபராஜன், புலி, பலவிதமான பறவைகள், மற்றுமுள்ள ஜந்துக்கள் முதலானவற்றின் பேரில் எல்லாம் ஏறிச்சவாரி செய்ததால் அவரது அழகிய திருமேனி எல்லாம் மாசுபடிய நிறம் குன்றி விளங்கின. விளையாட்டுத் தன்மையுள்ள மஹேஸ்வரரது மைந்தன், பல நட்வாபிகளிலும், தடாகங்களிலும், சகல நதிகளினும், தாமொருவராக நீராடித்திரிந்து விளையாடித்தமது கணங்களது மனதைக் களிக்கச் செய்தருளினர். எல்லோருடைய துன்பங்களைப் போக்கியருளும் உமைபாலர், ஓரிடத்தில் நல்ல ஸ்வரத்துடன் வெகுநேரம் வீணையைக் கரத்திலேந்தி கானம் செய்ததால், பல நாட்களுக்குமுன் காய்ந்து மடிந்திருந்த மரங்கள் எல்லாம் தளிர்விட்டன ; மிருகங்கள் அனைத்தும் மேய்வதைவிட்டு ஆனந்தத்துடன் இருவிழிகளை மூடிக்கொண்டு நின்றன. மேகங்கள் ஆகாசத்தில் சுற்றிவளைந்து கொள்ளலாயின. அப்பரப்ரஹ்மமூர்த்தி ஓரிடத்தில் பல துவாரங்கள் அமைந்த புல்லாங்குழலை யிருகரங்களிலும் பற்றி, தமது திருவிரல் நுனிகளால் அத்துவாரங்களை மூடி மூடித்திறந்து, இளங்கொங்கைகளையுடைய மாதர் பலருடைய மனமும் காமனதீனமாகுமாறு ஊதியருளினர். இளமைத் திருமேனியுடைய ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமிகள். அக்ஷராப்யாஸம் செய்யும் சிறந்த பிராமணப்பிள்ளைகளுடன் தாமும், தமிழ், தெலுங்கு, கன்னடம், நாகரம், கிரந்தம் முதலான பாஷைகளை எல்லாம் கற்றனர். மஹாத்மாவாகிய பரப்பிரஹ்ம மூர்த்தியும் பிரம்ம விஷ்ணுக்கள் தினந்தவறாது போற்றும் புகழுடையவருமான ஸ்ரீசம்பு மைந்தர் வேதாத்யயனம் செய்யும் பிரம்மசாரிகளுடன் தாமும் அத்யயனம் செய்து, மற்றைய பிராமணப் பிள்ளைகளிலும் மிக்க தேர்ச்சியுடையவ ராயினர். ஸ்ரீ பரமேஸ்வரரது அக்னி நேத்ர தேஜஸினின்றும் உண்டான சுந்தர

மூர்த்தியானவர், இவ்வண்டத்திற்கு அப்பால் உள்ள பலகோடி அண்டங்களி லும் சென்று, அவ்விடத்தும் தம்முடைய கணங்களுடன் இத்தகைய திருவி ளையாடல்களை வெகுகாலம் செய்து, பின்னர் மஹா மேருகிரியை அடைந்து, அதன் கொடுமுடிகளை எண்ணலாயினர்.

## 30-வது அத்தியாயம்.

பிறகு ஸ்ரீ ஜகதீஸனுகிய மஹாதேவரது புதல்வர் ரத்னகொடு முடிகளு டன் விளங்கும் மேருமலையின் கண்ணின்று விளையாடும் போது, அதைக் கண்ட தேவர்கள் அனைவரும் ஆச்சர்யம் உற்றனர். தேவர்களுக்கு இருப் பிடமாய் விளங்கிய ஏழுகுல பருவதங்களையும் பிளந்தவரான அந்த மஹானு பாவரை அவர்கள் பார்த்து, "இன்னும் இப்புவியில் என்ன உற்பாதங்கள் உண்டாகுமோ? என்ன தீமைகள் நேருமோ?" என்று பயந்தனர். பிறகு முப்பத்து முக்கோடி தேவர்கள், அஷ்டவசுக்கள், ஸப்தமருத்துக்கள், இரண்டஸ்வினி தேவர்கள் எல்லோரும் சேர்ந்து அஷ்டதிக் பாலகரை யும் அழைத்துக்கொண்டு இந்திரனிடம் வந்து, ஸ்ரீ சூலபாணியின் திருக் குமாரரது திருவிளையாடல்களைப் பற்றித் தெரிவித்துக் கொண்டனர். அப் போதவர்கள் அனைவரும் ஸ்ரீ சுப்ரமண்யரது மாயவிநோதத்திற் கட்டுப்பட்ட வராய் மதிமயங்கி, அந்தப் பாலரிவரென்பதை மறந்து இந்திரனை நோக்கி "கேளுங்கள், தேவேந்திரரே! யாரோ ஒருவனுடைய மகன், மிக்க சாமர்த் தியம் பொருந்திய ஒரு சிறுவன், யானைக்குட்டி ஓடையைக் கலக்குமாறு போல, இம்மூன்றுலகையும் வெகு காலமாய் கலங்கச் செய்து வருகிறான். அவன் அஷ்ட குலாசலங்களையும் சின்ன பின்னம் செய்து விட்டான். ஏழு சமுத்திரங்களையும் ஒன்று சேர்த்தான், சப்ததீவுகளையும் அழித்தான். திக்க ஜங்கள் அனைத்தையும் காலைவாரிச் சுழற்றி அடிக்கடி விட்டெறிந்தான். இங் ஙனம் தீங்கையடைந்து அலமரும் உலகில் நாங்கள் அடையும் கதிதான் என்ன?" என்று முறையிட்டனர். அந்த முறைபாட்டை இந்திரன் கேட்டு, அந்தச்சிறுவனது மேன்மை பொருந்திய வல்லமையைக்கண்டு, அப்பெருமா னது மாயையால் அவரை இன்னவரென்றறியாது, "மிக்க அற்புதமான பராக் ரமங்களையுடைய இந்தச் சிறுவன் எவனோ அறியேன். இவனது விளையாட் டால் உலகங்களும் அழிகின்றன. நாம் இந்த விஷயத்தைச் சத்தியலோ கம் சென்று நான்முகனுக்குத் தெரிவித்தல் வேண்டும். அப்போதுதான் தக்க பரிஹாரம் கிடைக்கும்." என்று தனக்குள் யோசித்துத் தேவர்களுடன் மேன் மைவிளங்கும் ஐராவதமென்னும் யானைமீதேறித் திக்பாலகர் முதலானோர் அருகில்வர ஆயிரங் கண்களையுடைய அந்த இந்திரன் மேருமலையின் குகை யருகிற் சென்றான். அப்போது ஸ்ரீ மஹாதேவரது குமாரர், அந்த மேருகிரி யின் கொடுமுடிகளைக் கைலாவகத்தால், ஒன்றொன்றாய்ப் பிடுங்கிச் சுழற்றி எறிந்தனர். அதனை இந்திரன் வழியிற்பார்த்து மிக்க கோபத்துடன் கூடிய வனாய்த் தேவர்களுடன் அந்தச் சிறுவனை அடிக்கத்தொடங்கினான். ஸ்ரீ பார் வதி மைந்தரும் மஹாப்பிரபுவுமான அச்சிறுவர் விளையாட்டிலே உற்சாகங் கொண்டவராயிருந்தும் கோபத்துடன் தேவகூட்டங்கள் மத்தியில் நிற்கும்

இந்திரனை அடிக்கத்தொடங்கினர். மிகவும் கோபங்கொண்டுள்ள இந்திரனும் தேவர்களும் ஸ்வாமியின்மீது அடிக்கடி அம்புகளைப் பிரயோகம் செய்தனர். அங்ஙனம் அவர்கள் வில்லினின்றும் வெளிவந்த மாரியையொத்த அம்புகள் அனைத்தும் ஸ்வாமிகளின் திருவடிகளில் மலர்மாரிபோல் விழுந்தன. அதனால் இந்திரன் மேலும் கோப மூளப்பெற்றவனாய், ஐராவதத்தின் மத்தகத்தில் உட்கார்ந்து, அந்த சுயம்ப்ரகாச பரப்ரஹ்மத்தின் மீது மிகவும் பிரகாசம் பொருந்தி வஜ்ராயுதத்தை ஏவினன். அந்த வஜ்ராயுதமானது, ஸ்வாமியின் மீது பட்டவுடனே, மற்றோர் வஜ்ராயுதத்தால் முட்டித்தடுக்கப்பட்டதுபோல் ஒருநொடிக்குள் தீப்பொறிகளை வெளியிட்டு ஒடிந்து பொடிப்பொடியாய்ச் சிதறியது. ஸ்வாமிகள், தம்மீது இந்திரன் வஜ்ராயுதத்தை ஏவியதால் கோபங்கொண்டவராய், ஓரம்பை வில்லில் பூட்டி ஐராவதத்தைக் குறிபார்த்தெய்தனர். அந்த அம்பு மேன்மைதங்கிய யானையின் மத்தகத்திற்பட அது, வஜ்ராயுதத்தால் சிதறுண்டு விழும் மலையைப்போல் முற்றும் உயிரற்றுக் கீழே வீழ்ந்தது. அதைக்கண்ட இந்திரன் மறுபடியும் எழுந்து, தனது வில்லைக் கரத்திலேந்தி, மழையைப்போல் சுவாமியின் திருமேனிமீது பாணங்களைப் பிரயோகம்செய்தான். அதனைக்கண்ட மஹாபராக்ரமம் பொருந்தியவரான ஸ்ரீ குமாரக்கடவுளும், அம்பை வில்லில் பூட்டி எய்தனர். அந்த அம்பானது, அவக்கிரகம் (நவக்ரஹங்களின் மாறுபாட்டால் மழைக்குநேரிடும் ஓர் துர்க்கேட்டை அறிவிக்கும் கிரகம்) மழையை அடக்குவதுபோல், அந்தச் சரமாரியை அடங்கச்செய்ததுமல்லாமல், அந்த இந்திரனுடைய வில்லையும் முறித்துவிட்டது. அதனால் இந்திரன் மறுபடியும் மிக்க ரோஷமுள்ளவனாய், அதிக தீக்ஷண்யமுள்ளதும், பத்துத்திசையிலும் ஒளிவீசுவதுமான சக்தி என்னும் ஆயுதத்தை அந்த மஹாப்ரபுவின்மீது விரைவில் பிரயோகம்செய்தனன். அஃதவர்மேல் பட்டதும் ஒரு துரும்பின் கதியை அடைந்தது. அதன்பின்னர் இந்திரன் மற்றோர் பாணத்தைப் பிரயோகிப்பதற்குள், மஹாதேவரது குமாரர் ஓரம்பால் இந்திரனது மகுடத்தைக் கீழேவீழ்த்தினர்; அக்னிபுத்திரராகிய முருகர் ஒரு பாணத்தாலிடிக்கு ஆஸ்பதமாகிய அவனது கொடியை அறுத்தெறிந்தனர். மற்றொரு பாணத்தினால், மிக்க மேன்மை பொருந்தியதும் மிகவும் பிரகாசம் பொருந்தியதுமான அவனது கவசத்தைப் பிளந்து, மற்றோரம்பால் அவனது மார்பைக் குறிவைத்தெய்தனர். அந்த அம்பு இந்திரன் மார்பிற்சென்று தைத்ததும் அவன் அடியற்றமரம்போல் மூர்ச்சையடைந்து கீழேவீழ்ந்தான். வலாசுரனைக் கொன்றவனாகிய இந்திரன் சாய்ந்ததைக்கண்ட தேவரனைவரும் கோபம் மூளப்பெற்றவராய், ஸ்ரீ சாம்பசிவமூர்த்தியின் அருமைப் புதல்வராகிய குழந்தையைச் சுற்றிநின்று தமது அம்புகளை மாரியெனப் பொழிந்தனர். அப்போது ஸ்ரீ சரவணபவமூர்த்தியானவர் அந்தச் சரமாரியைச் சில பாணங்களாற்றடுத்து, எதிர்த்த தேவர் ஒவ்வொருவரையும் தனித்தனியாகத் தமது பாணங்களால் அடித்தனர். பாலசுப்ரமண்யர், யமனை ஐந்து பாணங்களினாலும், அக்னியை மூன்று பாணங்களினாலும், வருணனை நான்கு பாணங்களினாலும், வாயுவை இரண்டு பாணங்களினாலும், சூர்யனை இரண்டு பாணங்களினாலும், சந்திரனை ஒரு பாணத்தா

னும் எய்து தனித்தனியாக அவர்களை வீழ்த்தினர். இங்ஙனம் திசைக்காவலாளராகிய யமன் முதலானோரையும் மற்றைய பல தேவர்களையும் ஒவ்வோரம்பினால் ஸ்ரீ சரவணபவமூர்த்தி ஒருநொடிக்குள் விழச்செய்தனர். இறந்தவர்கள் ஒழிய உயிர்பிழைத்த மிகுதியான மற்றைய தேவர்கள் அனைவரும் நாலாபக்கமாக ஓட்டமெடுத்தனர். அக்கால் தேவரிஷியாகும் ஸ்ரீ நாரதமஹாமுனிவர், ஸ்ரீ சம்புமைந்தராகும் மஹாவீரரது திறமையைக் கண்டு சந்தோஷம் கொண்டவராய், அந்தச் சந்தோஷமிகுதியால் மெய்ம்மயிர் பொடிப்ப நின்றவராய் விரைவில் பிரகஸ்பதியாரிடம் சென்று, நடந்த விஷயங்களனைத்தையும் அவரிடம் ஒன்றும் விடாது கூறினர். மேலும் அவர் பிரகஸ்பதியைப்பார்த்து, "வாருங்கள் தவசிரேஷ்டரே! தாம் தேவரனைவருக்கும் உயிர்க்குயிராகவும் புரோஹிதராகவும் இருக்கிறீர். அந்தத் தேவரனைவரும் இப்போது ஒரு சிறு குழந்தையிடம் போரில் ஆற்றாது அடியுண்டு மாண்டனர். இனி நடக்கவேண்டிய கார்யத்தைத் தாம் தாமதம் சிறிதும் இன்றிச் செய்தல் வேண்டும்" என்றனர். நாரதர் கூறிய அவ்வார்த்தையைத் தேவர்களின் குருவாகிய பிரகஸ்பதிகேட்டு, உடனே சர்வஜீவர்களுக்கும் தலைவரும், பெருமைமிக்க தேவசைன்யங்களுக்குத் தலைவரும், மிக்க திறமைவாய்ந்தவரும், இளங்குழந்தையுமான ஸ்ரீ கந்தபிரானுக்குத் தேவர்கள் இழைத்த அபசாரங்களைத் தனது மெய்ஞ்ஞான திருஷ்டியால் உணர்ந்து, குகையினின்றும் வெளிப்பட்டு, சுயாதீனமுள்ளவரும், சர்வஜகங்களுக்கெல்லாம் பிரபுவும், ஸ்ரீ மேருகிரியின் அலங்காரமான கொடுமுடியில் வீற்றிருந்தருளும் ஸ்ரீ கந்தஸ்வாமியைச் சரணடைந்தனர். பிறகு அவர் அவ்விடத்தைச் சேர்ந்து, சகல பிரபஞ்சங்களுக்கும் ஈஸ்வரராய் விளங்கும் சுப்ரமண்யஸ்வாமிகளைப் பணிந்து, "அளவில்லாத மஹிமைபொருந்திய கரையில்லாத சமுத்திரமே! தேவரீரது உபய பாதாரவிந்தங்களுக்கு வந்தனம். பகைவர்களை அற வாட்டவல்லவரும், ஸ்ரீ யானைமுகக்கடவுளுக்கி இளையவரும், அடியார்கொளியவருமாகிய தேவரீருக்கு வந்தனம் ஆறுமுகனும் ஏகமுகனும் பினாகபாணியாகிய சாக்ஷாத் பரசிவத்தின் சுதனாய், பன்னிரண்டு புயங்களையுடையவரும், சாந்தகுண சீலரும், தம்மைப் போற்றும் அடியவரின் எண்ணங்களை இனிது முடிப்பவரும், பார்வதிபரமேஸ்வரர்களது ஆசைக்குரிய முக்ய நேசமூர்த்தியும், என்றும் அழிதலில்லாத நித்யப்பொருளும், அளவற்ற அற்புதங்களுக்குக் காரணருமான தேவரீருக்கு வந்தனம். அளவற்ற ஒளியுடன் கூடியவரும், எக்காலத்தும் அழிவற்றைவருமான தேவரீருக்கு வந்தனம். தேவர் எல்லோரும் எவருடைய மாயையின் வன்மையால், அவரது பலவாய வெற்றித்திறத்தை உணரவில்லையோ, அத்தகைய பெருமை வகித்தவரும், பகைவரின் ஆயுதங்களினின்றும் தமது படைகளைக் காப்பவரும், அஷ்டைஸ்வர்ய சம்பன்னரும் மஹாபிரபுவுமான தேவரீருக்கு அடியேன் வந்தனம் புரிகிறேன். ஜீவர்களை ரக்ஷிக்கும் பொருட்டுத் துவைதமூர்த்தியாக விளங்கும் சர்வேசனை நமஸ்கரிக்கிறேன். எவருடைய மாயையால், தேவர்கள் மதிகலங்கி விபுதராயினும் (விசேஷ அறிவுடைய ராயினும்) அபுதராக (அறிவற்றவராக) மதிக்கப்பட்டனரோ, பூஜித்தற்குரியவரை அவமதித்ததனால் அவர்கள் தண்டனை

யடைந்ததற்குக் காரணமானவர் எவரோ அவரைப் பணிகிறேன்.'' என்று பலவாறு துதித்து, அடிக்கடி உபய பாதாரவிந்தங்களில் வீழ்ந்து நமஸ்கரித்தனர். தமது பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்த பிரகஸ்பதி முனிவரை, ஸ்ரீ பார்வதி மைந்தர் கிருபையுடன் பார்த்து, மந்தஹாசம் பொருந்திய முகார விந்தத்துடன், ''வாரும் தேவகுருவாகிய பிரகஸ்பதியே! தாம் என்னை நாடிவந்த காரணம் என்ன? தமக்கு வேண்டியவரத்தைக் கேளும், தருகிறேன்.'' என்று ஸ்ரீ சங்கரப் பெருந்தகையின் புதல்வர் திருவாய் மலர்ந்ததைப் பிரகஸ்பதி முனிவர் கேட்டு ஆனந்தபரவசராய் முருகரை வந்தனித்துக்கை கட்டியவர் சன்னிதானத்தில் நின்று, மிகவும் மேன்மை பொருந்திய வரனை வேண்டியவராய், ''ஹே! பிரபுவே! சர்வகுண சம்பன்னரே! முற்றும் உணர்ந்தவரே! சுப்ரமண்யரே! ஹே! தயாநிதி! தேவர்கள், தேவரீரது மாயையில் ஈடுபட்டவராய் அறிவழிந்து தேவரீருடன் போர் தொடுத்தனராதலால், அவர்கள் செய்தகுற்றத்திற் கேற்றபடி தம்மால் தண்டிக்கப்பட்டவர்களாய், அவர்கள் உடல் வேறுபட மாண்டனர். மிகுதியாய் உயிர் பிழைத்தவர் பல இடங்களிலும் ஒடி மறைந்தனர். ஆதலால் ஹே! பிரபு! ஹே! கருணாநிதி! அவர்கள் தங்கள் அறியாமையாற் செய்த குற்றங்கள் அனைத்தையும் பொறுத்து, அவர்களைத் தயையுடன் க்ஷமித்தருளல் வேண்டும். தேவரீர் அனுக்ரஹத்தால் தேவர்கள் அனைவரும் முன்போல் உயிர் பிழைத்தெழுந்திருக்கு மாறு செய்தருளல் வேண்டும். அவர்களுடைய அவயவங்கள், அவரவர் சரீரத்தின் ஏற்ற இடங்களில் அமையுமாறு திருவுளம் பற்ற வேண்டும். ஹே! ஜகதீஸா! எங்களை ரக்ஷிக்கும் பொருட்டுக்கிருபாநோக்கம் வைத்து, ஹேசர்வேசா! தேவரீர் எங்களுக்குத் தரிசனந்தருவதுடன் எக்காலத்தும் எங்களை ரக்ஷித்தருளல் வேண்டும்.'' என்று பணிவுடன் வேண்டினர்.

## 31-வது அத்தியாயம்.

தேவகுருவாகும் பிரகஸ்பதி முனிவர், ஸ்ரீ கந்தஸ்வாமியை இங்ஙனம் வேண்டியதால், பிரபுமிகவும் பிரசன்னராகி, அம்முனிவரது வேண்டுதலைப் பரமசந்தோஷத்துடன் தந்தருளினர். அதனால், தேவரனைவரும், உறக்கம் கொண்டு விழித்தவர்கள் போல் விழித்தெழுந்தனர். பிறகு விஷ்ணு முதலிய தேவர் அனைவரும் ஸ்ரீ குமார மூர்த்தியைக் கண்டுவந்தனம் செய்தனர். அளவு கடந்ததகைய உடையவராகிய மஹாதேவரது புதல்வர், அவர்கள் பாலிருந்த அஞ்ஞான வடிவமான மாயையை அகற்றி, தமது திருவடிகளின் மீது நீங்குதலற்ற பக்தியை அவர்களுக்கு அனுக்ரஹம் செய்தனர். அதற்குப்பின் அந்தப்பிரபு தேவர்களைப் பார்த்து, ''வாருங்கள் தேவோத்தமர்களே! நீங்கள் அனைவரும் கேவலம் அறிவீனரைப் போல் நம்மைக்குழந்தையென எண்ண வேண்டாம். நீங்கள் அனைவரும் சர்வசிரேஷ்டம் பொருந்திய நம்முடைய ஸ்ரீ பரமேஸ்வர வடிவத்தை இப்போதே பாருங்கள். நமது உண்மை உருவைப்பார்ப்பதற்குரிய திவ்ய நேத்ரங்களை இப்போதுங்களுக்குத் தந்தருளினோம்'' என்று திருவாய் மலர்ந்தருளி எல்லா உலகங்களுக்கும் குருமூர்த்தமாய் விளங்கிய குருசாமி யானவர் தேவர்களுக்குத் தமது

விஸ்வரூபக் காட்சியைத் தந்தருளினர். அந்த விஸ்வரூபத்தின் பெருமையைச் சொல்கிறேன். பிராமணோத்தமர்களே! நீங்கள் அனைவரும் ஒரு முகப்பட்ட மன முடையவராய்க் கேளுங்கள். அந்த உருவம், ஏழுபாதாள லோகங்களைப் பாதமாகவும், சப்ததீவுகளின் பூமியைக் கணுக்காலாகவும், ஏழுகடலையும் இடையிலணியும் ஆடையாகவும், திசைகளைப் புயமாகவும், ஆகாயத்தை நாபியாகவும், சுவர்க்க லோகத்தைச் சிரசாகவும், சூர்யன், சந்திரன், அக்னி என்னும் முச்சுடர்களைச் சிறந்த கண்களாகவும், மேகங்களை மேன்மைமிக்க கேசங்களாகவும், நக்ஷத்திரங்களை அந்தக்கேசங்களை அலங்காரம் செய்யும் மலர்களாகவும், ஸ்ரீ பரமேஸ்வரனை ஆத்மாவாகவும், ஸ்ரீ பராசக்தியைப் புத்தியாகவும் ஸ்ரீவிஷ்ணு மூர்த்தியை இடதுபக்கமாகவும், பகவனாகிய நான் முகனை வலதுபக்கமாகவும் சரஸ்வதியை வேதவாக்காகவும், லக்ஷ்மியை ஸம்பத்தாகவும், வாயுவை, பிராண, அபான, வியான, உதான, சமான, நாக, கூர்ம, குருகர, தேவதத்த, தனஞ்சயன் என்னும் தசவிதவாயுக்களாகவும், காலாக்னிருத்ரனையே கோபமாகவும் அக்னிதேவனை ஜாடராக்னியாகவும், அநந்தன் முதலான மஹா நாகரைப்பாதத்திற்கு பூணும், பாதசரங்களாகவும், சகல ஓஷதிகளையும் ரோமங்களாகவும், பலகோடி அண்டங்களை ரோமகங்களைப் பற்றியுல்ளபபன் முட்டைகளாகவும், கொண்டு கோடிசூர்யர்களுக் கொப்பானதும், கோடி சந்திரர்களின் குளிர்ச்சி அமையப்பெற்றதும், கோடி பிரளய காலாக்னி தொனியைப்பெற்றதுமாய் விளங்கியது. அத்தகைய அற்புதம் வாய்ந்த திருவுருவத்தை, அளவற்ற மகிமைபொருந்திய ஸ்ரீ மஹாதேவரின் புதல்வராகிய ஸ்ரீ சுப்ரமண்யக்கடவுள் ஏற்றுக்காட்சிதர, அந்த உருவத்தின் ஒளியால் தேவர்களின் கண்கள் குருடாயின. உலகில் உள்ள பேரொளிக்கெல்லாம் மிக்க பெருமைவாய்ந்த இந்த ஒளியை இமையாமையுடைய தேவர்களின் கண்களே பார்க்கமுடியாமற்போயின என்றால், அந்த உருவின் பெருமையை வேறு எவர் எவ்வாறு புகழ்ந்து சொல்லமுடியும்? தேவர்கள் அனைவருடைய மனமும் அவர் தம் ஐம்புலன்களுடன் சேர்ந்து, தேஜோமயமாக விளங்கும் பரப்ரஹ்மமாகிய ஸ்ரீ பரமேஸ்வரனிடத்து ஒரு க்ஷணநேரம் பதிந்துவிட்டது. விஷ்ணு முதலான தேவர்கள் சிறிதுநேரத்தில் தத்தம் நினைவுவரப் பெற்றவராய், பகைவரை ஹதம்செய்யும் கார்த்திகேயமூர்த்தியை வந்தனம் செய்து, கைகூப்பிநின்று, அவரை வெளிக்கண்ணால் தரிசனை செய்யுநிமித்தம், தத்தம் கண்களைத் தந்தருளுமாறு வேண்டினர்; மேலும் ।அவர்கள் "தேவ தேவா ! ।சகலஜகங்களுக்கும் தலைவனே! சங்கரன்தனையா! சகலருக்கும் ஈஸ்வரா! பெருமைபொருந்திய தேவரீரது வடிவை அடியேங்கள் தரிசிக்க அசக்தர்களாயிருக்கிறோம். ·ஹே தயாநிதியான பரம்பொருளே! எங்கள்மீது இரக்கம்கொண்டு, எங்கள் கண்களைக் கொடுத்தருளும்." என்று பிரார்த்தனை செய்தனர். அதனால் ।பகைவரைக்கொல்லும் ஸ்ரீ மஹாதேவரது மைந்தர் களிப்படைந்தவராய், புன்னகையுடன், கேவலம் மாமிசக்கண்களால் தம்மைக் காணமுடியாதென்று திருவாய்மலர்ந்தருளித் தமது நிஜவுருவத்தைத் தரிசிப்பதற்குத் தகுதியான திவ்ய நேத்ரங்களை அத்தேவர்களுக்கு அனுக்ரஹம் செய்தருளினர். பிறகு விஷ்ணு ·பிரம்மா முதலானோர், அந்தப் பரமாத்மா

வின் அளவற்ற தேஜஸுடன் கூடிய திருமேனியின் ஆயிரத்தொருபங்கை மாத்திரம் தரிசனம் செய்தனர். சகல பிரம்மாண்டங்களும் நிரம்பி நின்ற வந்தப்பிரபுவின் முழந்தாள் பாகமட்டில் உள்ளவை எவ்வளவாகும்? ஆதலால் தேவர்கள் மிகவும் மனவருத்தம் கொண்டனர். அந்தத் தேவரனைவரும் விஸ்வரூபமான பெருந்திருமேனியின் தேஜஸில் அனேககோடி பிரமாண்டங்களுடைய உலகங்களும், அவ்வவற்றைச்சார்ந்த இறந்தகால, நிகழ்கால, வருங்காலத்திய புவனங்களும், ஜனங்களும், பிரம்மவிஷ்ணு முதலிய தேவர்களும், அந்தந்த ஆவரணங்களுடன் அப்பிரபுவின் முழந்தாள்பாகமட்டிலான ரோமங்கள் ஒவ்வொன்றிலும் ஆயிரக்கணக்கான பலகோடி பேன்முட்டைகள் சடைசடையாய்ப்பற்றியிருக்கக்கண்டு மிக்க பேராச்சர்யமடைந்தவர்களாய், மிகவும் பயந்து நடுநடுங்கி வந்தனித்து, வாக்குகளுக்கு ஈஸ்வரனும், ஆனந்தப்பொருளாய் நிறைந்தவரும், மிக்க அற்புதம் நிறைந்தவருமான ஸ்ரீ சாம்சிவமூர்த்தியின் அருமைத்திருமகனுரை, வேதவேதாந்தந் திருவாக்கியங்களமைந்த துதிகொண்டு மிகுந்த சந்தோஷத்துடன் களிக்கச்செய்ய எண்ணியவராய், "எல்லாபுவனங்களும் எவரிடத்திருந்து உண்டாகின்றனவோ, அந்தப் புவனங்கள் எவரால் ஜீவிக்கின்றனவோ, அவையனைத்தும் மாண்டபின்னர் எவரிடத்தில் அடங்குகின்றனவோ, அந்த ஸாக்ஷாத் பரப்ரஹ்மமாகிய அந்தச் சுப்ரமண்யரைத் தொழுகிறோம். உலகினர் எவருடைய மாயையால் அறிவுகெட்டவர்களாகி ஸ்ரீ பராபர சச்சிதானந்தஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமல் ஞானமற்ற ஜடப்பொருள்களை உலகிற்குக் கர்த்தராகச் சொல்கின்றனரோ, அந்தப் பரமாத்மாவை வந்தனம் செய்கிறோம். எவர் வேதசொரூபரும் மிக மேலானவரும், சூர்யமண்டலமத்தியில் இருப்பவரும், மீசை தாடி முதலாக உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் பொன்மயமானவரும் அலர்ந்த செந்தாமரை மலர்போலும் இரண்டு கண்களையுடைவரும், எல்லா உலகங்களுக்கும் நாதனுமாகியவரோ, அந்தக் குஹமூர்த்தியாகிய உம்மையே வேறு கதிபற்றயாங்கள் அனைவரும் சரணடைகிறோம். எவருடைய ஆனந்தங்களில் லேசாலேசந்தான் பிரமன் முதலான தேவர்கட்குளதாகிறதோ, அந்தப் பரிபூரண ஆனந்தக்கடலானவரும் ஒப்பற்றவருமாகிய உமையம்மையாரது புதல்வரைத் தொழுகிறோம். எவருடைய மாயையாலே மூடர்கள், இந்திரன், ருத்திரன், விஷ்ணு, பிரம்மா, மற்றுமுள்ள தேவர்கள் முதலானோரை ஆதிப்பொருளெனச் சொல்கின்றனரோ, அந்தப் பரமேஸ்வரரது குமாரனை வந்தனம் செய்கிறோம். உலகில் எவருடைய தயவை அடைய சிலர், அவரே உலகங்களுக்காதி என்ற புத்தியைக் கொள்ளாமல், புலன்களைச் சொல்லுகின்றனரோ அந்தப் பரப்பிரஹ்மத்தை வந்தனிக்கிறோம். சேதன சேதனமென்று சொல்லப்படும் இருவகையான பிரபஞ்சங்களும் எவருடைய சரீரமாகின்றனவோ. அவையனைத்து எவர் நடத்துகின்றவரோ, அந்த உம்மைப் பணிகின்றோம். வாலிபம், யௌவனம், வார்த்திகமென்னும் மூன்றவங்களற்றவரும், சாக்கிரம், ஸ்வப்பனம், ஸுஷுப்தி ஆகும் மூன்றவங்களிலும் சாக்ஷியாய் இருப்பவரும், ஜீவகோடிகளை ஆட்டிவைப்பவரும், அவைகளைப் பந்தத்தினின்று விடுவிப்பவருமான உம்மைத் தொழுகின்றோம். ஜனங்கள் எவரை, சகல புருஷார்த்தங்

களையும் வல்லவரென்றறிவதனல் சௌக்யத்தை அடைகின்றனரோ அத்தகைய சகல சக்திகளேயும் சம்பூரணமாகக் கொண்ட வேலாயுதனை வணங்குகிறோம். மானிடர், தோலை விரித்து உடையாக உடுத்திக்கொள்வதுபோல், கையால் ஆகாயத்தைத் தழுவி யுடுத்திக்கொள்வாரானல் மட்டில் ஹே பரமசிவ, உம்மை அறிந்துகொள்ளாமல் துக்கத்தினின்றும் கரையேறுவார்களோ, அவ்வும்மை வணங்குகின்றோம். சகல ஜீவர்களுக்கும் நாதராகிய சுப்ரமண்ய! பராபரப்பொருளாகிய உம்மைத் தரிசிக்குமளவில், மனதில் நேர்ந்த துன்பங்கள் நீங்க ,மெய்ஞ்ஞானமடைந்து, இந்த நிலையற்ற தேகத்தைவிட்டு, எந்தப் பரஞ்சோதிப்பொருளை யடைந்து சாரூப்யபதவியை அடைகின்றார்களோ அவ்வும்மையாங்கள் அனைவரும் வந்தனம் புரிகிறோம். உம்மை யாராதிக்கும் ஸர்வ ஜனங்கள், ஸுஷுமுனை என்ற நாடியாலும்மையடைந்து தேவரீர் அதன் உக்ரஹதிருஷ்டியைப் பெற்று, சோதிமண்டலத்தின் வழியாய்ப் பரமபதத்தை அடைந்து, மறுபடியும் சம்சாரத்தில் நுழைவதேயில்லை. ஹே தேவர்களை ரக்ஷிக்கும் பிரபுவே! ஆதலால் தேவரீர் சகல அடியவர்களையும் இல்லறக்கடலினின்றும் கரையேற்றுபவராகிறீர். தேவரீரே எங்களுக்குக் கதியாதலால் மற்றதைநாங்கள் நாடவில்லை. பரப்பிரம்ம மும், பரந்தாமனும், பரஞ்சோதியும், மிக மஹிமைதங்கிய பரமேஸ்வரனும், சிரேஷ்ட உருவமுடையவரும், காமக்குரோத லோப மோகமதமாச்சர்ய மற்ற பரம ஸாந்திஸ்வரூபியும், பராபரவஸ்துவுமாகிய உம்மைப் பணிகிறோம்'' என்று பலவாறுதுதித்து விஸ்வரூபத்துடன் விளங்கினின்ற மஹாப்பிரபுவை, மீட்டும் தரிசித்து, ஹேஜகதீசா! சூரியனொளியைப் பார்ப்பதான ஊமைக்கோட்டானைப்போல் நாங்கள் தேவரீரது மிகவும் உக்கிரமான உருவத்தைக்காண திறமையற்று மிகவும் பயந்தவர்களாயிருக்கிறோம். ஆதலால், முன்போல் உருவத்தைக்கொண்டு அனுக்ரஹித்தருளல் வேண்டும். ஓ! சகல புவனங்களுக்கு மீஸ்வர! மிகவும் சாந்தமும், ஆறு திருமுகங்களையுடையதும், ஒப்பற்றதும், பன்னிரண்டு புயங்களால் அலங்கரிக்கப்பற்றதும், எங்களுக் கெப்போதும் பிரத்தியக்ஷத்தில் சம்பத்தை அருள்செய்வதுமான திருவுருவத்தைக் கொண்டருளல்வேண்டும். சகல ஆத்மகோடிகளுக்கும் ஈஸ்வரா! யாங்கள் அனைவரும் கிருதார்த்தர்களானோம்.'' என்று மீண்டும் துதிசெய்து வேண்டினர்.

இங்ஙனம் பிரமன் முதலிய தேவர்கள் பிரார்த்தித்தபோது. சகல வேதங்களுக்கும் அதிபதியாகிய முருகன், கோடிமன்மதர்களுக் கொப்பான தமது உருவத்தைப் பழமைபோல் கொண்டருளினர். ஸ்ரீ ஜகதம்பிகையின் புதல்வராகிய மஹாப்பிரபுவானவர் அந்தத் தேவோத்தமர்களைப் பார்த்து, "நீங்கள் உரைத்த இந்த மேன்மையான துதிகளால், மூவுலகிலும் நம்மைத் துதிப்போர்க்கு, யாம் அவரவர் வேண்டுவனவற்றை எல்லாம் தந்தருள்வோம் என்பதிற் சிறிதும் ஐயம் இல்லை. நீங்கள் மேலும் வேண்டிய வரங்களையெல்லாம் தடையின்றிக் கேட்டுக்கொள்ளுங்கள்.'' என்று திருவாய்மலர்ந்தருளினர். பிறகு பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்கள் அனைவரும் ஸ்ரீ கந்தஸ்வாமியின் வசனத்தைக் கேட்டு, ஸாதுக்களுக்கு மித்திரரும், ஸ்ரீ மஹாதேவரது புதல்வருமான பிரபுவை வெகுமானத்துடன் வந்தனித்து, "ஹே தேவாதிதே

வனே! ஜகதீசா! யாங்கள் வரத்தைப் பெறுதற்குரியவர்களும், தேவரீர் எங்களிடத்துத் தயைகொண்டவராய் வரத்தையளிப்பவருமானால், ஜகந்நாதா! தேவரீர் எங்களுக்கு ராஜாதிராஜராக முனிவர்களால் முடிசூடப்பெற்று, அழுகற்ற இந்தச் சர்வாதி ராஜ பதவியை அடைந்து, எங்களை யாண்டருள வேண்டும். ஹே நித்யப்பொருளே! நின்மலரே! தேவரீர் எங்களுக்குப் பகைவர்களாகிய சூரபதுமன் முதலான அசுரர்களை வெற்றிகொண்டு, தேவரீரது பராக்ரமத்தால், அவ்வசுரனால் சிறையில் வைக்கப்பட்டுள்ள தேவர்களை மீட்டுவந்து முன்போல் சுகத்தில் வைக்கத் திருவுளம் கொள்ளல்வேண்டும். மூன்றுலகின் பயத்தையும் நாசம்செய்யலுற்ற பிரபுவே! இவையே எங்கள் விருப்பம்.'' என்றனர். அந்தப் பிரார்த்தனையைக் கேட்ட பார்வதி புதல்வராகிய பிரபுவானவர் சந்தோஷங்கொண்டவராய், தேவசிரேஷ்டர்களைப் பார்த்து, வாருங்கள் சுவர்க்காதிபர்களே! இந்திரனே உங்களுக்கு இந்திரனாக இருக்கட்டும். நாம் இந்த இந்திரனுக்குப் படைத்தலைமை பூண்டு மூன்றுலகையும் வருத்திவரும் சூரபதுமன் முதலான அசுரரைப் பந்துவர்க்கத்துடன் விரைவில் ஹதம்செய்து, உலகிற்குத் தீங்களிப்பதையே தொழிலாகக் கொண்ட அவனது தம்பிகளையும் பிள்ளைகளையும் நான்குவகை சேனைகளுடன் ஒரு க்ஷணநேரத்தில் சங்கரித்துத் தேவர்களின் ஸம்பத்தையும் நமது வீரலக்ஷ்மியுடன் கொண்டுவருகிறோம்.'' என உரைத்துத் தமது பெற்றோரிடம்செல்ல எண்ணமுற்று உடனே கைலையங்கிரிக்குப் புறப்பட்டனர். அவரைத்தொடர்ந்து பிரமன் முதலான எல்லாத் தேவர்களும் சென்று, கைலைமலையில் இருக்கும் ஒரு கொடுமுடிமீது நிலைகொண்டனர். பிறகு அவ்விடத்தில் தேவரனைவரும் அந்தச் சுப்ரமண்யஸ்வாமிக்குப் படைத்தலைவராக முடிசூட்டிப் பூஜிப்பதற் கெண்ணங்கொண்டவர்களாய் விரைவில் விஸ்வகர்மனை நோக்கி, "வராய் துவட்டாவே! உம சுதராகிய ஜகதீசனுக்குப் பட்டாபிஷேகம்செய்ய, அதிசீக்கிரத்தில் நவரத்ன பிரகாரங்களால் அலங்காரமானதும், நவரத்னங்கள் நிறையப்பெற்றதுமான ஒரு பட்டணத்தை அமைத்துக்கொடு.'' என்றனர். பிறகு விஸ்வகர்மனும் அக்கட்டளையின்படி அதிசீக்கிரத்தில், உச்சியால் ஆகாயத்தை அளாவிநிற்கும் உப்பரிகைகள், கோபுரங்கள், கொத்தளங்கள் முதலியவற்றால் அலங்காரமானதும் மிகவும் மேன்மைபொருந்தியதுமான ஒரு பட்டணத்தை நிர்மாணம்செய்தனன். இங்ஙனம் ஸ்கந்தகிரி என்னும் மலையின் கொடுமுடிமீது பற்பல ரத்னங்களின் ஒளிகளால் அண்டங்கள் முழுமையும் பிரகாசிக்கக் காரணமாகிய அப்பட்டணத்தை விஷ்ணு, பிரம்பா, இந்திரன் முதலான தேவோத்தமர்கள் நன்கு நோக்கி, மரியாதைக் கேற்றவனாகிய விஸ்வகர்மன் என்னும் சிற்பியைப் பலவாறு புகழ்ந்து கொண்டாடினர்.

## 32-வது அத்தியாயம்.

ஸ்ரீ ஸ்கந்தபுரம் என்னும் அந்தப் பட்டணம் நீளத்திலும் அகலத்தினும் அனேகயோஜனைகள் கொண்டதும், மிகவும் நேர்த்தியானதும், ஸகல பாக்யங்களையும் சம்பூரணமாக உடைத்தானதும், மிகவுன்னதமான வீட்டு வரிசைகளையுடைய பல வீதிகளால் அலங்கரிக்கப்பட்டதும், அண்டச்சுவரை

முட்டி நிற்கின்ற மிகவுயர்ந்த துவஜங்களையுடையதுமாக விளங்கியது. அதன் மத்தியில் குடைவைக்கப்பட்டதும், மிக அழகுபொருந்தியதும், ராஜமன்னர்க்குத் தகுதியானதும், கோடிசூர்ய பிரகாசமுடையதுமான ஓரரண்மனையைச்செய்து அதில் சிறந்த ரத்னங்களால் இழைக்கப்பட்டதும், கோடிக்கம்பளங்களால் அலங்கரிக்கப்பட்டதும், நீர்ப்பாகங்கள் தரைபோலும், வாயிற்படிகள்சுவருபோலும், சுவருகள் வாயிற்படிபோலும் பிரம்மிக்கலான தன்மையை வகித்த சகலவித ரத்னங்கள் இழைக்கப்பெற்ற மண்டபத்தையும், அதில் சகலவித ரத்னங்களாலும் விளங்கலுற்றதும், கோடி கோடிசூர்யகளதொளியைப்பெற்றதுமான சிறந்தவோர் சிங்காதனத்தையும் விஸ்வகர்மன் அமைத்தனன். ஸ்ரீ விஷ்ணு, பிரம்மா முதலிய தேவர்களும், ஸாத்தியர்களும் சகல முனிகணங்களுடன் வேண்டிய எல்லா சாமக்ரியைகளையும் சேகரித்துக் கொண்டு திரிபுராரியாகிய ஸ்ரீமஹா தேவரது மைந்தரை யந்தச் சிங்காதனத்தில் வீற்றிருக்கச்செய்தனர். வேதவேதாந்தங்களின் கரைகண்ட வசிஷ்டர் முதலான பிரம்மரிஷிகள், பிரம்மாண்டங்களில் உள்ள புண்ணியதீர்த்தங்களால் ஜகத்குருவாகிய ஸ்ரீ சுப்ரமண்யருக்கு, பிரம்மா விஷ்ணு முதலிய சேனைகளுக்குப் படைத்தலைவராகப் பற்பல வேதமந்திரங்களை ஓதிப் பட்டாபிஷேகம் செய்தனர். அப்போது தேவதுந்துபிகள் முழங்கின. மலர்மாரி பொழியலுற்றது. நிஸ்ஸானம், திமிலை, டங்கா, வீராரனம், டிண்டிமம், சங்கம், கொம்பு, மிருதங்கம், சின்னம், காஹளம் முதலிய வாத்தியங்கள் அனைத்தும் கடல்போன்ற ஓசையுடன் செவிகளை யடக்கமுழங்கின. மேலும் அப்பொது கின்னரர்கள், கருடர்கள், ஸித்தர்கள், வித்யாதரர்கள் முதலானோரது மனைவியரும், அங்ஙனமே மேன்மைகொண்ட கிம்புருடர்களும், ஹா ஹா, ஹூ ஹூ என்னும் கந்தர்வர்களும், சித்திரஸேனன் முதலினோரும், அளவற்ற ஆனந்தமுடையவர்களாய், இனிமையான ஓசையையுடைய வீணை, புல்லாங்குழல் முதலிய ஸுகவாத்தியங்களை முழக்கினர். விஷ்ணு முதலிய தேவசைன்யங்கள் அனைவரும், ஸ்ரீஹரபுத்திரனாகிய ஜகத்பந்துவுக்குச் சேனாதிபதிப் பட்டாபிஷேகம் செய்து, வஸ்திரம், ஆசமனம், கந்தம், யஞ்ஞோபவீதம், தூபம், தீபம், நைவேத்யம் முதலிய சகல உபசாரங்களாலும் பூஜைசெய்து, "எங்களது ஜகத்பதி, தேவசேனாதிபதி, ஜகத்குரு" என உரைத்துப் பற்பல வெகுமதி சாமன்களை அவர் திருக்கரத்தில் கொடுத்து ஸ்ரீ தேவனைத்தரிசித்தார்கள். ஒப்பற்ற சோபையுடைய ஸ்ரீ மஹாதேவரது மைந்தரும் அந்தத் தேவர்களுக்குத் தரிசனம் தந்து, விரைவில் அவர்களுக்கு விடைதந்தனுப்பி விளையாடினர். இதற்கிடையில், மஹாத்மாவும், மேன்மை பொருந்திய ரிஷியுமான நாரதரென்னும் ஓர் பிராமணர் யாகம் செய்யவிருப்ப முற்றனர். யாகம் நடத்திய அந்த நாரதரது மிகுதியான தக்ஷிணைகொண்ட அந்தயாகத்தின் பண்டிதராகிய அத்துவரி என்றருத்தது விக்கானவர் ஆட்டுக்கு முறைப்படி செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து அதனங்கத்தைக் கண்டம் செய்யும் அளவில், அதினின்றும் ஓராட்டுக்கிடா உண்டாயது. அது, ஸகல அவயவங்களும் மிகவும் நேர்த்தியாக உள்ளது, மிகுந்த காந்தியுடன் மிக உயர்ந்து வளைந்த கொம்புகளையுடையதும், சிவந்த விழிகளை யுடையதும், கனைத்துக் கத்தும்

போது நீண்டதாடியையுடன் அலைதாடியால் விளங்கியதும், இரண்டு காதுகளையும், கழுத்து மூலைகளையும் உடையதும், அசைவதனால் மேகவரிசைகளைத் தள்ளலுற்றதும், நீண்ட முழந்தாள்களையுடைய நான்கு கால்களை யுடையதும், குளம்புகளினால் பூமியைப் போக்கலுற்றதும் சிலுத்துக் கொழுத்த உடலுடையதும், வாலால் நக்ஷத்திரங்களைக் கீறலுற்றதும், மிகவும் பருத்துத் தொங்கலுற்ற விருஷணத்தை யுடையதும் மதத்தால் ஓர்வகை வாசனையுடையதும், மிக்க சுருசுருப்புள்ளதும், மிகவும் பிரகாசம் பொருந்திய பலரத்தினங்கள் இழைக்கப் பெற்ற கால்களிற் பூண்டதண்டைகளும், சிலம்புகளும் சப்திக்க உள்ளதும், சிறிய சதங்கைகளாலும் நேர்த்தியான சோழி மாலைகளாலும், அழகிய கழுத்தையுடையதும், பராக்ரமத்திலும், வேகத்திலும் கருடனையும், வாவுதேவனையும் மேற் கொண்டதும், கேவலம் மிகுந்த கொழுப்புடையதும். ஜகத்தில் வேறு ஈடு இல்லாமல் எதிரியற்றது மாகத்திரிந்தது. அதன் மதவாசனைக் காற்றினாலடிபட்ட மாத்திரத்தில் திக்கஜங்கள் எல்லாம் ஓடின. மனோவேகத்தையுடைய அக்கடா, அவ்வாறதி வேகமாய் ஓடுகின்ற அத்திக்கஜங்களை அது சீக்கிரத்தில் எதிர்த்துவந்து, தனது தலையினால் சிங்கம் போல் அவற்றின் தலையில் வேகமாக முட்டிற்று. அம்முட்டினால் அப்பிரமு என்றதன்கணவனாகிய ஐராவத மென்னும் திக்கஜமானது கண்கலங்கி மதிமயக்கங் கொண்டது. புண்டரீக மென்னும் திக்கஜமானது பயத்தினால் காட்டிற் கோடியது. வாமனமென்றது பயத்தினால் நடுக்கமடைந்து மிகவும் உடல் சிறுத்தது. குமுதமென்றயானையும் மிக்க விசனத்தை அடைந்தது. அஞ்சன மென்னும் திக்கஜமோ கண்ணற்றதாயிற்று. புஷ்பதந்த மென்ற மற்றொருதிக்கயம், அந்தக்கிடாவிற்கு அடங்கி நடுங்கியது; ஸௌர்ய பௌமன் என்னும் யானை சகலபூமியிலும் ஓடியலைந்ததால் தான் அப்போது முதல் அதற்கு அப்பெயர் வந்தது. ஸுப்பிரதீக மென்னும் யானை, அதற்கு முன் நிற்கமுடியாது மிகவும் விரைவாக ஓடியது. இங்ஙனம் ஓராட்டுக் கிடாவால் திக்கஜங்கள் எல்லாம் துயரடைந்தன. பின் அந்தக்கிடாவானது தான் தனியாக இருந்து திக்கஜங்களை வென்று ரஸாதலத்திற்குப் போயது. அவ்விடத்தில் மஹாபலசாலியும் மதகர்வமுள்ளதும், மிகவேகமுடையதுமான அவ்வாடானது, பலிசக்கிரவர்த்தியின் வீட்டினில் விஷத்தை உடைய நாகங்களைக் கலங்க அடித்தது. அதற்கு மேல், மற்றைய நாகலோகங்களையும் ஹதம் செய்து பிறகு தனியாகவே, அதல, விதல, சுதல, ரஸாதல, மஹாதல, தலாதல, பாதாளமாகிய கீழ் ஏழுலகங்களையும் சக்கிரவாள பருவதம் வரைக்குமுள்ள பூமியையும் ஆங்குள்ள மானுடரையும், விலங்குகள் முதலானவற்றையும் விளையாட்டாகவே வென்று, பிறகு கடலில்வாழும் ஜலசரங்களை மிகப்பராக்ரமத்துடன் போர் செய்து நாசம் செய்தது. மேலும் அந்த ஆடானது அது சீக்கிரமாக ஆகாயத்தை அடைந்து, மற்றோர் சண்டமாருதம்போல் மேக வரிசைகளை எல்லாம் வெகு கர்வத்துடன் கால்க்ஷணத்தில் கலைத்து விட்டது. மேலும் ஒளிக்கிறைவராகிய சூர்யன், சந்திரர்களுடைய ரதங்களைத் துரத்திவிட்டது. மதத்தால் எவற்றையும் சட்டைசெய்யாத அந்த ஆசானது சுவர்க்கவாஸிகளான தேவர்களையும், மஹாலோகத்து நாதர்களா

கிய விஸ்வதேவர்களையும், ஜனலோகத்தில் சாத்திரர்களையும், தபோலோகத தில் ஸநகர் முதலான யோகீஸ்வரரையும் துன்பப்படுத்தியது, பிறகு மிக பலசாலியான அக்கிடா சத்தியலோகத்தில் கணங்களுடன்கூடி சர்வகர்த்த ராய் விளங்கும் நான்முகனையும் பயமுறுத்தியது. மேலும் யாகத்திலுண் டான அவ்வஜமானது, விரஜாநதியைத் தாண்டிச்சென்று, வைகுண்டத்தை அடைந்து அங்குள்ள விஷ்ணுபக்தர்களுக்குத் தீங்குசெய்யும்போது, இந்தி ரன் முதலான தேவர்களும், அந்த யாகத்தின் ருத்துவிக்களும், அந்த யாகத் துக் கெஜமானரான நாரதருடன் விபரீத பயனளித்த அந்த யாகசாலையை விட்டு நீங்கி, ஹால ஹால விஷத்தினின்றும் பயந்து ஸ்ரீ நீலகண்டராகிய சதா சிவமூர்த்தியிடத்து ஓடியதுபோல் ஓடி, சிவபெருமானுக்கு மிகவும் பிரிய முள்ள கைலைமலையை அடைந்தனர். அவ்விடத்தில் ஸ்ரீ மஹாதேவரது மாளி கைவாயிலில் விளையாட்டினால்'பரவசமானவரும், மஹாவீரரும், அக்னிமைந்த ரும், தேவசைன்யங்களுக்குத் தலைவரும், அகிலேஸ்வரருமான ஸ்ரீ குஹமூர்த் தியானவர் வீரபாகு முதலியவர்களுடன் இருப்பதை இந்திரன் முதலானோர் கண்டனர். அவர்கள், ஜகனாதனும், சகல துக்கங்களையும் போக்குபவரும் என்றும் அழிவற்றவருமான அப்பிரபுவை வந்தனித்து “ஹே தேவதாவா! மஹாசேனா! ஸ்ரீ மஹாதேவரது திருமேனியில் உதித்த எங்கள் பிரபுவே! ஓ சுகத்தையளிப்பவரே! தயைசெய்து எங்கள் விண்ணப்பத்தைக் கேட்டரு ளல்வேண்டும். ஸ்ரீ பரமேஸ்வரரது திருவடிமீது மிகவும் பக்தியுள்ளவரும் தேவமுனிவருமாகிய ஸ்ரீ நாரதரையொத்த மஹாத்மாவாகிய இந்நாரதமுனி வர், யாகங்களுக்கு அதிபதியும், உமையம்மையாருடன் கூடியவரும் சந்திர கலையை அலங்காரமாகத் தரித்தவருமாகிய ஸ்ரீ பரமேஸ்வரருக்குப் பிரீதி யார்த்தமாக, முற்றும் நிஷ்காம்யமான யாகத்தைச் செய்தனர். சத்துருக்களை வதைசெய்யும் பிரபுவே! அத்தகைய இவரது யாகத்தில் ஆட்டை முறைப் படி நடத்திக் கண்டம் செய்யும்போது தெய்வாம்ஸமான ஓர் பெரிய ஆடு உண்டாயிற்று. ஹே தேவாதிதேவ! எதிரில்லாத பெருங் கொடூரமுள்ள அந்த ஆட்டினால் இப்போது மூன்றுலகமும் ஹாலாஹல விஷத்தினால் வியா கூலம் அடைவதினும் பன்மடங் கதிகமாகப் பயங்கொண்டுள்ளன. தேவரீ ரதை அடக்கி, உலகங்களை ரக்ஷிக்காவிடின், ஜகமனைத்தும் அழிந்துவிடும். தேவரீரைத் தவிர, மற்றைய எவராலும், அவர் தேவராயினும், அசுரராயி னும் சரி, அதனை அடக்கமுடியாது. ஆதலால் அந்தக் கொடிய ஆட்டினின் றும் ஸ்தாவர ஜங்கமரூபமான ஜகங்களைச் சீக்கிரம் காத்தருளல்வேண்டும். ஆட்டை யடக்குதலைப்பற்றித் தேவர்கள் பிரார்த்தனைசெய்தால், தேவர்க ளைக் காக்கின்ற அப்பிரபுவானவர், வீரபாகுவின் கையைத் தமது கையால் தட்டிச் சிரித்து, விரைவில் அந்த ஆட்டைக் கொண்டுவரும்படி அந்த வீரபா குவுக்குக் கட்டளையிட்டனர். பகைவரை வதைக்கலுற்ற அந்த வீரபாகுவும் அக்கட்டளையை மேற்கொண்டு, ஆட்டைக்காண மூன்றுலகங்களிலும் அல க்ஷியமாகத் தேடி, ரஸாதலமென்னும் பாதாளலோகம் முதல், அண்டச் சுவர் வரையில் மிக்க மேன்மையுடன் சுற்றித் திரிகையில், அந்த ஆடானது விஷ் ணுவின் மாளிகையில் அசாத்யமாய் உபத்திரவம் செய்துகொண்டிருப்பதை

யும் அதனுல் ஜனங்கள் மருண்டு மிகுந்த கோலாஹலம் செய்வதையும் கண்டனர். அளவிடத்தகாத பராக்ரமமுடைய அந்தப் பல சீலரும் அதன் கொம்புகளை ஓர் கரத்தால் தழுவிப்பிடித்து, மதங்கொண்ட அந்த ஆட்டை அதிசீக்கிரத்தில் பிரபுவினிடம் ஈர்த்துவந்து சேர்த்தனர். ஸ்ரீ கந்தசுவாமியானவர், ஆயிரம்கோடி சூர்யப்பிரகாஸமுள்ளதும், மனோவேகம் வாயுவேகம் முதலான வேகங்களையும் தோற்கடிக்கக்கூடிய வேகமுடையதுமான அந்த ஆட்டைத் திருக்கண்ணுற்று, மிக்க சந்தோஷத்துடன் அதன் மீதேறிக்கொண்டு, குதிக்கால்களினாலும், கசையினாலும் அதை அடித்து அதன் கர்வத்தை அடக்கினர். சத்துருக்களை ஹதம்செய்பவரான பராக்ரமமுடைய ஸ்வாமியானவர் தக்க பிரயத்னத்துடன் அதைச் சுவாதீனப்படுத்திக் குதிரையைப்போல, அதை ஐந்துவித நடைகளைக் காட்டச் சவாரிசெய்து, பெருங்காற்றுச் சுழல்வதுபோல் மிகவும் நேர்த்தியாகச் சுற்றிச்சுற்றி அடித்துச் சகல புவனங்களையும் அதிசீக்கிரத்தில் சுற்றிவந்தனர். அந்த ஆடோ என்றால் மஹா கனம்பொருந்திய அந்தலோக குருவைச் சுமந்ததால் சந்தோஷமடைந்து, களைப்புற்றதாய், மிகுந்த வியர்வைகொண்டு, வாயெல்லாம் நுரைக்க கர்வத்தால் கனைப்பதெல்லாம் முற்றும் நீங்க, உடல் முழுமையும் நடுக்கங்கொண்டு, கசையால் அடிபட்ட வருத்தத்தால் நொந்து பலங்குறைய நின்றது. உலகங்களுக்கெல்லாம் தீங்களித்த இத்தகைய ஆட்டை மிகுந்த தயவுடைய பிரபுவானவர் அனுக்ரஹம் செய்ய, அது ஞானம்வரப்பெற்று, பார்வதி மைந்தரைத் துதித்துத் தெளிந்த மனதுடனத்தேவனை நமஸ்காரம் செய்தது. தேவனும் அதன்மீது மிகுந்த திருப்திகொண்டு அதையே வாகனமாக்கிக்கொண்டனர். ஜகத்கர்த்தா, எவர்க்கும் கிடைப்பதற்கசாத்தியமான தமது அனுக்ரஹத்தை அந்த ஆட்டுக்கே தந்தருளினர் என்றால், அவரைப் பக்தியுடன் நாடும் அன்பர் விஷயத்தில் யாம் என்னசொல்லவேண்டும்? அக்னிகுமாராகிய முருகர், அக்னியைப்போல் அன்றுமுதல் ஆட்டுக்கடாவைப் பொருத்தமுற வாகனமாகக்கொண்டனர். அப்போது யாகத்தை இழந்த நாரதரும், தேவர்களுடனும், முனிவர்களுடனும், தேவசைன்யங்களுக் கதிபதியாரான ஸ்ரீ சுப்ரமண்யக்கடவுளை வந்தனித்துமுன் நின்றனர். பிறகு அஜவாகனமூர்த்தியாகிய பிரபு, தேவர்களுடனும் முனிவர்களுடனும், யாகம் நஷ்டமானதால் கஷ்டமடைந்த அந்த முனிவரைப் பார்த்துப் பின்வருமாறு திருவாய்மலர்ந்தருளினர்.

## 33-வது அத்தியாயம்.

ஸ்ரீ பரமேஸ்வரரது அம்சபூதமாகிய தேவசேனாதிபதியாகிய பிரபுவானவர், நமஸ்கரித்துக் கைகட்டிப் பக்கத்தில் நின்ற, நாரதரை நோக்கி, "கேளும் மஹரிஷியே! உமது யாகத்தால் நமக்கு ஒரு பெரிய வாகனம் கிடைத்தது. அதனால் ஓர் இடையூறு இனி உண்டாகாது. மீட்டும் யாகத்தைப் பூர்த்தி செய்யும். தேவர்களுடன் சீக்கிரத்திற் சென்று முன்போல் ருத்துவிக்குகளால் யாகத்தைக் கிரமப்படி நடத்தி தக்ஷிணைகளைக் கொடுத்து யாகத்தை முடித்து, அவபிருதஸ்நானம் செய்யும். நமக்கு நீர் ஆடை தானம்செய்ததால் நூறு யாகங்களின் பயனை அடைவீர். உலகில் எதையாகிலும் ஒருவன் சிறி

தளவாயினும் எனக்காகப் பக்தியுடன் கொடுப்பானாயின், அவன் சகல யாகங்களினுடைய பலனையும் தவங்களின் பயனையும் விட அதிகமாகவே அடைகிறான் என்பதை நீர் அறிந்திருக்கிறீர்.'' என்று திருவாய்மலர்ந்தருளி விடைகொடுத்தனர். பிறகு அந்த நாரதர், தேவர்கள், முனிவர்கள் முதலானோர் பிரபுவின் உத்தரவின்படி யாகத்தை முடித்தனர். அதனால் அந்த நாரதமுனிவர் சந்தோஷமடைந்துக் சுகமடைந்தனர். ஸ்ரீ பகவானும் அங்குக் கைலாயத்தில் மன இன்பத்தின்படி விளையாடினர்.

ஸ்ரீ குமாரக்கடவுள் இங்ஙனம் தமது பரிவாரத்துடன் விளையாடி நிற்கும் அளவில் பிரம்மாவானவர், ஸாத்தியர்களுடனும், தேவகணங்களுடனும் சத்தியலோகத்தினின்றும் ஸ்ரீ பரமேஸ்வரனைச் சேவிப்பதற்காக, அவரது ஆலயமாகிய கைலையின் கொடுமுடிக்கு வந்தனர். அங்கனே தேவர்கள் ஸ்ரீ மஹேஸ்வரனை ஆராதித்ததால் முக்தியடைந்து சுகமாக வீற்றிருந்தனர். அந்தப் பிரமனும் தேவர்களுடன் மிக வினயமாகவே சென்று மிக உன்னதமான கொடிகளால் அலங்கரிக்கப்பட்ட பற்பல வீதிகளையும் கடந்து, மிக விசித்திரமான ஸ்ரீ பரமேஸ்வரரது ஆலயத்துக்கு வந்து, அங்கு வாசலில் ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரர்களுக்குப் புதல்வரும், அளவில்லாத மகிமையுடையவரும், வார்த்திகமற்றவரும், குழந்தையும், ஜகங்களுக்குக் குருவுமான ஸ்ரீ குஹமூர்த்தியானவர் தோழர்களோடு விளையாடுவதைக் கண்டனர். அப்போது சுப்பிரமணியர் ஓர் விநோதார்த்தமாகப் பிரம்மனுடைய நல்லறிவைய பகரித்து விட்டபடியால், அவர்குழந்தையை மிகசிரேஷ்டராகும் பிரபு என்பதை அறியாமல், சிறு குழந்தை யெனமதித்து, ஸ்ரீ மஹேஸ்வரரது சன்னிதானத்திற்குச் சென்றார். அங்கு ஸ்ரீ மஹாதேவரை வெகுநேரம் பக்திபுடன் ஆராதித்து, அங்கிருந்து சாத்தியர்களுடன் சத்யலோகம் போவதற்காக வெளியே வந்தனன். அப்போதும், மன்மதனிலும் மஹாசுந்தர மூர்த்தியான ஸ்ரீ மஹாதேவ குமாரன் அங்கு வெளிவாசலில் சமவயதுள்ள கூட்டாளிகளுடன் விளையாடி நின்றனர். தாமரையில் உண்டான பிரம்மனு மிவ்வாறு விளையாடிய ஸ்ரீ குமார மூர்த்தியண்டையில் வந்தும் அவரை வந்தனம் செய்யாமற் செல்லும் போது, அவரைப் பிரபுவானவர் கோபத்துடன் அழைத்து, ''நீயார்?'' என்று கேட்டனர். அதன் பிறகு பிரம்மன் அவரை நமஸ்கரித்து மிக்க வினயத்துடன் கைகூப்பி நின்று, ''கருணைங்கடவுளாகிய ஸ்ரீ சுப்ரமண்யரே ஜகத்குருவே! யான் பிரம்மன் இச்சாத்யர்களுடனும் தேவர்களுடனும், ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரர்களது ஸேவார்த்தமாகச் சத்தியலோகத்தினின்று வந்து, ஈஸ்வர சேவை செய்து போகிறேன். யானிப்போது தற்செயலாக அழைக்கப்பட்டுத் தேவரீரது தயவுக்குப் பாத்திரவானுனேன். அதனுல் கிருதார்த்தனுமாயினேன். யான் சத்யலோகம் போக வேண்டியதால், எனக்குத் தேவரீர் விடைதந்தருளல் வேண்டும்.'' என்று கூறி அவரது பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்தனன். அவனை ஸ்வாமிகள் நோக்கி, தமது நண்பர்களுடன் கூடிச்சிறிது நேரம் நகைத்து வேடிக்கையாக, ''வாரீர் பிரம்மாவே! உமது தொழில் யாது? உமக்கு எந்தவித்தைகளில் பாண்டித்தியமுண்டு? அதைத் தெரிந்து கொள்ள இப்போதும்மைக் கேட்பதேயன்றி உம்

மைப் பரீக்ஷை செய்வதற்கல்ல. ஹே! பிரம்மாவே! இப்போது நீர் கோபங் கொள்ளாமல் விரைவில் சொல்லும்," என்றனர். காம்பீரமும் மிக்க சாமர்த் தியமும் அமைந்த அவ்வசனங்களைக் கேட்ட நான்முகன் பயமுற்று மனப் பிரீதியுடன், "ஸகல உலகங்களுக்கும் அதிபதியே! யான் தேவர்கள், அசு ரர்கள், மானிடர் ஆகிய அனைவர்க்கும் சிருஷ்டிகர்த்தனுகிறேன். சராசரங்க ளைச் சிருஷ்டி செயவதில் எனக்குச் சரியான தேர்ச்சியுள்ளவர் உலகின் மீது ஒருவரும் இல்லை. ஓதேவாதி தேவா! பதினெட்டு வித்தைகளிலும் திறமை யுள்ளவன் யானே! வித்என்று வடமொழிப் பகுதியின் பொருளாகிய வித்தை களுக்கு எல்லாம் யானே இருப்பிடமாகிறேன்.' என்றனன். பிரமன் இவ் வாருக உரைக்கும் போது அக்னிமைந்தராசிய பிரபுவானவர் நயமானவார் த்தைகளால் அவரை உற்சாகப்படுத்தி ஆதரவுடன், "ஓகோ கோ! என்ன புத்திசாலி! எவ்வளவு கற்றவர்! இப்போது நீர் பெரியோர்களுக் கெல்லாம் மிகுந்த பெரியவர். ஆதலால் அப்பதினெட்டு வித்தைகளில் முதலாவது வித்தையான ருக்வேதத்தில் எத்தனை பதங்கள் உள்ளன? சொல்லுங்கள், கேட்போம். எங்களைப் போன்ற வாலிபர்களுக்குக் கிழவர்கள் சொல்லைக் கேட்பதில் சந்தோஷம் உண்டல்லவா? ஹேபிரம்மாவே! நாம் யான் கேட்ட கேள்விக்குச் சீக்கிரத்தில் விடைகூறும், யாம் தோழர்களுடன் கேட்கிறோம். வாருங்கள் தோழர்களே! இவர் உரைக்கின்ற மொழிகளைக் கேளுங்கள். இவரது வடிவமே எல்லோர்களுக்கும் மகிமையை நன்கு தெரிவிக்கின்றது. "என்று சொல்லக்கேட்ட பிரம்மன் முந்தியதாகிய ருக்வேதத்தைச்சொல்லத் தொடங்கி, முதலில் பதின்மூன்ருவது உயிரெழுத்தாகிய ஓகாரத்தை, பிந்து நாதங்களுடன் சேர்த்த மாத்திரத்தில், ஸ்ரீ முருகன், சிரக்கம்பம் செய்து, "நிறுத்தும், நிறுத்தும்" என்று கையசத்தலினுல் உரைத்து, "இதன் பொ ருளை எங்கள் மனதுக்குச் சந்தேகம் தோன்ருதபடி இப்போது விரைவில் மிக வும் சரியாகவும் தெளிவாகவும் எடுத்துச் சொல்லும்." என்றனர். அப்போது பிரம்மதேவன், "இதற்குப் பொருளானவன் யானே." என்றுரைக்கையில், வீரவாகுவானவர்திசையெங்கும் ஒலிக்கும்படி,கைமுட்டியால்அந்தப்பிரமனைச் சடசட என அறைந்து, கந்தகிரியின்கண் உள்ள சிறைச்சாலையில் அடைத்து விட்டார். அப்போது ஸ்ரீ கந்தஸ்வாமி, சராசரமாகிய உலகெல்லாவற்றையும் சிருஷ்டி செய்து வந்தனர். பிறகு சாத்தியர்கள், முனிவர்கள், யோகீஸ்வ ரர்கள் முதலானோரனைவரும் தேவேசனும் சந்திர சேகரனுமான பரமசிவத் தைத்தவத்தால் வெகுகாலம் ஆராதித்து அடைந்து பிரமதேவனுடைய விடு தலையைப்பற்றி அவரிடம் ஆதரவுடன் பிரார்த்தனை செய்தனர்.

ஸ்ரீ மஹாதேவராகிய பிரபுவும் தேவர்களைப்பற்றிய வரவாறுகளை அறி ந்து, ஸ்ரீ நந்திதேவரை அழைத்து, "வாரும் நந்திகேஸ்வரரே! நீர் இப்போ தே எமது கட்டளையின்படி நமது குழந்தை முன்பாகப் போய், நமது மொழி யால் அவனைத்திருப்தி செய்து, உலக சிருஷ்டிக் கிடையூறின்றி அப்பிரமனை விடுப்பீர்." என்று கட்டளையிட, சிலாதர் மைந்தராகிய நந்திதேவரும் விரை வில் கந்தகிரி சென்று, அங்கு ஸ்ரீ கந்தபிரானை யாராதித்துப்பற்பல துதிகளால் களிக்கச்செய்து, அவரை வந்தனித்துக் கைகூப்பி முன் நின்று, பகவானே!

தேவரீரது தந்தையின் திருவாக்கின்படி, முன்போல் உலக சிருஷ்டி நடந்து வரும்படியாகப் பிரமன் தேவரீரால் விடுவிக்கப்படல் வேண்டும்" என்று விண்ணப்பம் செய்தனர். உடனே அவ்வார்த்தையைச் செவிசாய்த்த ஸ்ரீ ஸேனாதிபதியானவர் கோபமூண்டு நந்திதேவரைப் பலவாறதட்டி, "அடே? நீ வந்தவழியே செல். இல்லாவிடில் உனக்கும் அந்தப் பிரம்மனுடன் சிறை வாசம் கிடைக்கும்." என்று திருவாய்மலர்ந்தனர். ஸ்ரீ கந்தபிரான் இவ்வாறாக மிகவும் கடூரமாய் உரைத்தபோது, சிலாத மைந்தரான நந்திதேவர், பிரபுவின் பொன்னடியிற் பணிந்து துரிதத்தில் திரிபுராரியாகிய ஸ்ரீ மஹா தேவரிடம் சென்றனர். கணாதிபதியான நந்திகேசுவரர் அவ்விடம் சென்றதும் சன்னிதானத்தில் ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமியினுடைய வரலாறுகளை விண்ணப்பம் செய்தனர். ஸ்ரீ ஜகதீசன் அதைக்கேட்டு மந்தகாஸத்துடன் சிரக்கம்பம் செய்து, மனதில் மிகவும் ஆச்சரியம் உற்றனர்.

## 34-வது அத்தியாயம்.

பிறகு பகவானானவர், ஸ்ரீ கந்தனாகிய மைந்தனைப் பார்க்கச் சிந்தை கொண்டு, அந்தப் புரத்திலிருந்த பார்வதியம்மைக்குச் சொல்லாமல் தாமேகந்தகிரிக்கு நேராகச் சென்றனர். அங்குப்பல தோழர்களுடன் வெகுநேரமாய் விளையாட்டில் முயன்றிருந்த செல்வனை, ஸ்ரீ ருத்திரரானவர் தமது மூன்று கண்களாலும் பார்த்தும் திருப்தி அடையாமல் விரைவிலோடிவந்து குழந்தையைத் தழுவி யெடுத்து நெருங்கக் கட்டியணைத்துப் புத்தியை வேறிடத்திற் செலுத்தாமல், திருமுகத்தை அடிக்கடி முத்தமிட்டனர். தந்தையால் நன்கணைத்துக் கட்டிக்கொள்ளப்பட்ட பிறகு ஸ்ரீ குமாரமூர்த்தியானவர் மிகக் களிப்புற்று விநயமான பக்தியுடன் ஸ்ரீ மஹாதேவனது தோள்மீதேறி உட்கார்ந்தனர். அப்போது ஸ்ரீ மஹாதேவன் அளவற்ற ஆனந்தஸ்வரூபராயினும் தமது உத்தம புத்திரனை அணைத்து அளவிடத்தகாத சந்தோஷ சாகரத்தில் ஆழ்ந்துவிட்டனர். பிறகு ஸ்ரீ பரமசிவம் திவ்ய விமானத்தில் உட்கார்ந்துகொண்டு குழந்தையினது மிகுந்த சுந்தர மேனியை மரைமலர் போன்ற மெதுவான கையினால் அவயவந்தோறும் தடவிக்கொடுத்து, பிறகு புன்னகையுடன் குழந்தையது திருமுகத்தைப் பார்த்து நன்கு முத்தமிட்டு, முந்திய சில நயமொழிகளால் சமாதானப்படுத்தி, ஸ்ரீ ஜகதீசன், "வாராய் புத்திரசிகாமணியாகிய குழந்தாய்! நீ நமது கட்டளையின்படி பிரம்மனை விட்டுவிடு. நம்முடைய ஆதித்தொழிலாகிய ஜகத் ஸ்ருஷ்டியானது விக்னமில்லாது நடக்கட்டும்." என்றுரைத்தார். ஆறுமுகக்கடவுளானவர், ஸ்ரீ சம்புவின் திருமுகத்தினின்றும் வந்த வார்த்தையைக் கேட்டும், வாளாவிருந்ததால், உடனே ஸ்ரீ பரமேசுவரருக்குக் கோபம் மூண்டுகொண்டது. அப்போது ஸ்ரீமஹாதேவரது திருமனதானது அன்பு, கோபம் இவ்விரண்டுக்கு மிடையில் உள்ளதாயிற்று. அன்பானது முந்தியே இருந்ததாயினும், புதிதாக வந்து தோன்றிய கோபமானது அதிக பலமுள்ளதாக இருந்தபடியால், அவ்வன்பை யடக்கி, ஸ்ரீ ஜகதீசனாகிய மஹாதேவனைக்கூடத் தனது கைவசமாக்கிக் கொண்டது. ஸ்ரீ மஹாதேவனும் கோபத்துடன் நகைத்துத் தனது மைந்தனை நோக்கித் திருவாக்குரைத்ததாவது:—"அடா குழந்தாய்! உனக்குக்

கொஞ்சமேனும் தெரியவில்லை. நமது வாக்கின்படி பிரமனை விட்டுவிடு. முந்தி நமது கட்டளையை நிறைவேற்றுகின்ற நந்தியின் மொழியை மறந்துவிட்டாய். இப்போது மறுக்காமல் நீ பிரம்மனை விட்டுவிடல் வேண்டும்.'' இவ்வாருக உரைத்த ஸ்ரீ பரமசிவனுடைய திருமுகத்தை ஸ்ரீ குஹமூர்த்தி நோக்கி, கணதிபர்களால் பிரம்மனை எதிரில் அழைப்பித்து விடுதலைசெய்தனர். பிறகு ஸ்ரீ மஹாதேவன் மனக்களிப்புற்று, அன்புடன் மைந்தனைக் கட்டியணைத்து, மடிமீது வைத்தருளிப் பிரமனிடத்துக் கோபங்கொண்ட முகாந்திரத்தை வினவ, "ஜகத்தைச் சிருஷ்டிக்கின்ற பிரம்மனை யாதுநிமித்தம் சிறை வைத்தாய்?'' என்றனர். ஸ்ரீ கந்தபிரானும் தம் தந்தையை வந்தனித்து, வினயத்துடன் அஞ்சலிசெய்து, மிக அன்புடன், "ஓ தந்தையே! யான் தோழரோடிங்கு மனம்போல் விளையாடி நிற்குமளவில், அவன் கர்வத்தால் என்னை அசட்டைசெய்து உட்சென்றனன். பிறகு யானுமவனை நீ யார்? உனது தொழிலென்ன? உன்னிருப்பிடமெது? என்ன கற்றிருக்கிருய்? சொல்.'' என்று அவமதிப்பாய்க் கேட்டேன். அதன்மேல் அவனும் தான் இன்னுனென்பதையும், தனது தொழில் திறமையையும், பதினெட்டு வித்தைகளிலு முள்ள தனது பாண்டித்தியத்தையும் மிகவும் மேம்பாடாய் உரைத்தனன். மறுபடியும் வேதங்களுக்கு ஆதியாகிய உயிரெழுத்தையும் அதன் பொருளையும் நான் வினவியதற்கு மாருக எதையோ ஒன்றை யுரைத்தனன். அதன்மேல் மஹாமந்திரமாகிய ஸ்ரீ பிரணவத்துக்கு விரோதார்த்தத்தை யுரைத்த இப்பிரம்மனை யான் சிறையினுள் அடைப்பித்தேன்.'' என்றனர்.

பிறகு சம்புவானவர் மனப்பிரீதியுடன் மைந்தனை யிருகன்னங்களிலும் முத்தமிட்டுத் தேவர்களுடைய முன்னிலையில் அம்மந்திரத்தின் அர்த்தத்தை எடுத்துரைக்கும்படி வினவினர். பின்பு ஸ்ரீ கந்தபிரான், ஜகங்களுக்குக் குருவாகிய பரமசிவனைத் தண்டம்செய்து, ஓதந்தையே! மஹாரகசியமாகிய அவ்வர்த்தத்தை இத்தேவர்கள் முன்னிலையில் யான் எவ்வாறுரைப்பேன்? மேலும் ஸகல ஜகங்களுக்கும் பரம குருவாகிய தேவரீர் முன்னர் எங்ஙனம் சொல்லவல்லேன். தவிரவும் புத்திசாலிகள், குருவைப் பகிரங்கமாய் வெளியிடவும், மந்திரங்களைச்சகல முயற்சியுடனும் வெளியிடாமல் மறைக்கவும் வேண்டும். இப்படியில்லாமல் குருவை யொளித்து மந்திரத்தைப் பகிரங்கப்படுத்துகிறவன் ரௌரவமென்ற நரகத்தை யடைவான். இவ்வாறுகிய தேவரீரது கட்டளையானது ஜனங்களாலும், தேவர்களாலும் கடக்கத்தகாததே'' என உரைத்த அப்புத்திரனை அடிக்கடி உச்சி முகர்ந்து மடிமீது வைத்துக் கட்டி யணைத்து, "அப்பனே! அம்மந்திரத்தின் பொருளைச் செவிதனில் இரகசியமாகச் சொல்'' என்று மிக ஆசையுடன் கேட்டருளினர். பிறகு மஹாசேனரும் சர்வலோக பராபர குருவுமாகிய தமது தந்தையை வெகு சந்தோஷத்துடன் மனதினுல் வந்தனித்து, கேளீர் பிராம்மணோத்தமர்களே! இவருக்குத் தந்தையினுல் அந்தக் கரணத்தினுதிக்கும்படி எவ்வாறனுக்ரகிக்கப்பட்டதோ அதேவிதமாக ஸ்ரீபிரணவ மஹா மந்திரத்தினுடைய பொருளை ரகஸியமாக எடுத்துரைத்தனர். ஸ்ரீ சம்புவும் அது கேட்டு, "பிர

ணவத்தின் அர்த்தம் இவ்வாறு தான்; சந்தேகம் இல்லை; வேதத்தில் ஸுப் ரம்மண்யோம் என்று சொல்லியபடி நீயும், ஸதாசிவோம் என்று சொல்லிய படி யாமுமே அதன் பொருளாகிறோம்.'' என்று உலகின்கண் எவர் அறிகின் றனரோ அவர்கள் எமக்குச் சமானமாகின்றார்கள். மேலும் இது, சகல வேதாந்தங்களுடைய விஞ்ஞானங்களால் நல்ல நிச்சய புத்தியுடைய பெரியோர் களுக்கும், ரஜோகுண தமோகுணங்களின் கலப்பற்ற சுத்த சத்வகுண முடைய யதிகளுக்கும் பரப்பிரம்மத்தை யடைய முக்கிய ஆதாரமானது,'' என மிகவும் பிரசன்ன மனதுடன் பிரீதியாக உரைத்து, "அடா செல்வ மைந்தனே! பிரணவ மந்திரத்தினுடைய மஹாமகிமை பொருந்திய இப் பொருளானது உன்னால் நன்கெடுத்துரைக்கப்பட்டது; இதை அதிகாரமா கிய மலத்தினாற் பற்றப்பட்டிருக்கின்ற நான்முகன் எவ்வாறறியலாவான்; தியானத்தினால் பாவங்களைத் தொலைக்கின்ற யோகிகள்கூட அறியார்களே! அப்பனே! எமதடியார் மட்டில் நம்முடைய அனுக்கிரகத்தால் மாத்திரம் அறிகிறார்கள். குழந்தாய்! நீ நிச்சயமாக நமது ஆத்மா ஆகையால்தான் அவ்வற்புதமான பொருளை யறிகின்றாய்; யோகீசுவரர்களில் அகஸ்திய முனிவரைத் தவிர மற்றய யாவரும் இதற்குத் தகுதியல்லர்; நீ நமது கட் டளையின்படி இவ்வர்த்தத்தை அவ்வகஸ்தியருக்கு நன்றாக உபதேசிப்பாய்; பிறகு அவ்வித்தையானது இவ்வாறாகவே பாரம்பர்யமடைந்து விட்டுப்போகா மல் விளங்கும். அடா புதல்வனே! அவருனக்கு முக்கிய சீடன். அவரைப் புத்திரனைப்போல் நீ ஆளுவாய்.'' என்று ஸ்ரீ பரமேசுவரன் மைந்தனுக்குக் கட்டளையிட்டுத் தனதாலயத்துக்குத் திரும்பிச் சென்றருளினர். அங்கு அந் தப்புரத்தில் ஸ்ரீ ஜகத்பதியானவர் பார்வதி தேவியை அழைத்து, மிகவும் உப சரணை செய்து, அவ்வம்மையைக் கட்டியணைத்து, மடிமீது வைத்து, ஸ்ரீசுப்ர மண்யனையும் பிரம்மனையும் பற்றியதான விருத்தாந்தங்களைத் திருவாக் கருளினர்.

## 35. அத்தியாயம்.

ஸ்ரீதேவியானவள், ஸ்ரீஜகதீசனுடைய திருமுகத்தினின்று குமாரமூர்த்தி யினுடைய மஹிமையைக் கேட்டு, கடப்ப விருக்ஷம்போல் மயிர்க் கூச்சலு ற்ற அவயவங்களுடன் தனது நாயகனை நோக்கி உரைத்ததாவது:–" ஓ பிர புவே! தேவரீரது மைந்தனுடைய மகிமையானது உலகில் உள்ளவைகளுக் கெல்லாம் மேற்கொண்ட அற்புத முடையது மிகவும் ஆச்சர்யம். அவன் இள மையிலே உலகங்களை விளையாட்டாகச் சிருஷ்டித்திருக்கிறான். ஓ எனது பிர புவே! இவனதுருவ மெவ்விதமாகியது? இவன் பராக்ரமம் எப்படி? இவன் யார்? இவன் மஹிமை எப்படி? ஓ ஜகதீசா! இவை யெல்லாம் வினவுகின்ற எனக்கு எடுத்துரைத்தல் வேண்டும்.'' என்றிவ்வாறாக மன்மதனையும் இய மனையும் சங்கரித்தவரும் தேவேச னுமாகிய ஸ்ரீ சம்புவானவர் கேட்கப்பட்ட தன் பேரில் தேவியை நோக்கிக் களிப்புடன் கூறியது என்னவென்றால்:— "கேளாய் சுந்தரமேனியாளே! ஓஹோ! இது மெத்த ஆச்சர்யம்! அவ் விரகசியத்தைச் சொல்லுகின்றோம். நாமோ களங்கமற்ற பரிபூரணராகிய பர சிவம். நீயோ என்றும் அழிவற்ற பரா சக்தி. நாம் இருவருமோ பகுதிவிகுதி

களைப் போலும், மொழியும் அதன் பொருளுமாகிய போலும் உள்ளவர் களென்று மதிக்கப்படுகின்றோம். கேளாய் கல்யாணி! நீ மொழியும் நாம் பொருளுமாகின்றோம். நீ ஜகமும் நாம் அதற்குப் பதியுமாகிறோம். நாம் சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், அனுக்ரஹம், திரோதனம் ஆகிய ஐந்து தொழில்களுக்கதிபரும் ஐந்து திருமுகங்களை யுடையோருமாகிய ஸதா சிவன்; நீயோ பலவாறாக வேறுபட்டிருக்கினும் ஒரே முகத்தை யுடைய பரமேசுவரி. நமது மைந்தனுமோ உனது ஸ்வரூபத்தையும் எனது ஸ்வரூபத்தையும் சேர்த்துக் கொண்டவனாகையால் ஆறுமுகனெனப் படுகிறான். மேலுமிவன் இப்பிரபஞ்சங்களுக்கு விளையாட்டாகவே ஐந்து தொழில்களையும் நடத்த வல்லவனாகின்றான். அழகியவங்கங்களை யுடைய ஆறுகார்த்திகை நக்ஷத்திரங்களும் இவனுக்கு முலை கொடுத்து, உனதிந்தமைந்தனும் அவர்களது பாலை யுண்டபடியால் கார்த்திகேயன் என்ற பெயரைக் கொண்டனன். மேலும் நீ பருவத ராஜனுக்குக் குமாரியாகியதால் பார்வதி யெனப்படுகிறாய். ஆதலால் உன்றன்புதல்வனையும் பார்வதி நந்தனன் என்று உலகினில் வேத மறிந்தவர் சொல்கின்றனர். பார்வதீ! உன்றன்மைந்தன் மூவுலகினிலும், பராக்ரமத்தோடு ஆக்ரமித்து ஸஞ்சரித்தபடியால், ஸ்கந்தனெனப்படுகிறான். நாம் அடியார்களை அக்கிரத்தில்(முன்னுக்கு)கொண்டு வருகின்றபடியால், அக்னியெனப் படுகின்றோம். உனது பாலன் அவ்வாறக்னியாகிய நம்மிடத்தினின் றாவிர்ப்பவித்த படியால், 'அக்னிபூ' (அக்னிமைந்தன்) எனப்படுகிறான். அல்லது கேளாய் யுவனசுந்தரி! வீரியம் மேனோக்கிச் செல்லலுற்ற நமது நெற்றியிலான அக்னி நேத்திரத்தினு லாவிர்ப்பவித்தபடியாலும் 'அக்னிபூ' என்று சொல்லப்படுகிறான்; என்னலாம். அன்றியும் கேளாய் நேர்த்தியான புருவத்தை யுடைய சுந்தரி! நமது கட்டளையின்படி தேஜஸ்ஸானது அக்னி தேவனால் வாயுவுடன் கூட எடுத்துக் கொண்டு போகப்பட்ட படியாலும் உன் புதல்வன் 'அக்னிபூ' என்று வித்வான்களால் உரைக்கப்படுகின்றான். வேதவேதாந்தங்களில், தகராகாசமானது (ஹிருதய கமலத்திலான ஆகாசமானது) 'குகை' என்று கூறப்படுவதனால், சகல பிராணிகளுடைய ஹிருதய கமலத்திலும் வாசம் செய்கின்ற வடிவேலன் அக்குகையில் விளங்குவதால் குஹன் எனப் படுகின்றான். இச்சுப்பிரமண்யன் பாவங்களைத் துவம்சம் செய்பவனும் ரஜோகுண மற்றவனும், என்றும் அழிவில்லாதவனும், சோக மற்றவனும், யாவராலும் சிகிச்சை செய்யப்படத் தகாதவனும், அல்லது சம்சாரமாகிய வியாதிக்குத் தன்னைத் தவிர வேறு வைத்தியரில்லாமையைப் பெற்றவனும், தாகமற்றவனும், அழகிய வாலிபப் பருவமுடையவனும் சத்தியகாமனும், சத்யசங்கல்பனும், கேளாய் மஹேசுவரீ! வரத புருடனும், சத்திய புருடனும், விசுவரூப முடையவனும், விசுவங்களுக்கு அதிகப்பட்டவனுமாகிறான். அவன் நாணற் காட்டினிற் பிறந்ததால், சரவணபவன் எனப்படுகிறான். அல்லது வனம் என்றால் ஜலம். நாணற் காட்டின் நடுவில் உள்ள தடாக மத்தியிலான மரைமலரின்கண் ஜகந்நாதனாகிய மரைமலர் சோபைத் திருமுகத்தையுடைய புத்திரன், ஜகங்களைக் காப்பதில் விருப்பமுற்று, அவதரித்தபடியாலும் சரவணபவனெனப்படுகிறான். பிராம்மணர்க

ளுக்கு அல்லது வேதங்களுக்கு யாம் முக்ய தெய்வமாகையால் பிரம்மணியர் எனப்படுகின்றேம். கோளாய் பிரியநாயகி, நமது மைந்தனே வென்றால் அதிலும் விசேஷமானதால் தேவாசுரர்களால் வந்தனிக்கப்படலுற்ற ஸ்ரீ சுப் பிரமணியன் எனப்படுகிருன். மஹா சேனைகளாகிய ஆத்மத்திரள்கள் அந்தரங்க புத்தியோடு நமஸ்கரித்து, அவனது ஸ்வாதீனத்திலு மிருக்கின்ற காரணத்தால் உனது செல்வன் மஹாசேனன் எனப்படுகிருன். கங்கையில் சனித்தபடியால் உனது பாலன் காங்கேயன் எனப்படுகிருன். உலகினில் விஷ்ணு முதலிய தேவர்கள் அவனுக்குச் சேனைகளானபடியாலும், அச்சே னையை இவன் துக்கங்களினின்று கடத்திவிட்டபடியாலும் சேனானி எனப்ப டுகிருன். பாராய் பாவமற்ற பார்வதி! உனது புதல்வனுக்கு எண்ணற்ற திரு நாமங்கள் உள்ளன. அவற்றுள் ஸகலபிராணிகளுக்கும் மோக்ஷ ஸாம்ராஜ்ய பதவியைக் கொடுக்கலுற்ற சில திருநாமங்கள் மட்டில் இப்போது நம்மால் உரைக்கப்பட்டன. எவராயினும் கந்தனுடைய ஒரு திருநாமத்தையாவது ரைத்திடில், அவருக்கு இவ்வுலகினிலே தரும காம் யார்த்த மோக்ஷங்களாகிய நான்குவித புருஷார்த்தங்களும் கைகூடும். அவனைப் பிரஹ்மஹத்தி முதலிய பாவங்கள் அணுகா. பூஜிக்கப்படலுற்ற கிரிராஜன் பெண்ணே! ஸச்சிதாநந்த ஸ்வரூபனும், களங்கமற்றவனுமான இச்செல்வனுடைய உருவத்தை உரை க்கின்றேம் கேள். கேளாய் ஜகதீசுவரி! அவன் ஒளிப்பொருள்களுக் கெல் லாம் மிகுந்த ஒளிகொண்டவனும், உவமையற்ற பரஞ்சோதிப் பொருளுமாகி ருன். அவனது மிகுந்த காந்தியினுல் சூர்யன், சந்திரன், நக்ஷத்ரங்கள் முத லியவை எல்லாம் பிரகாசிக்கின்றன. இவ்வாருகிய அவனதொளிக்கு முன் பாக இம்மின்னல்களும் அக்னியும் எம்மாத்திரம். சகலமும் அவனதருளால் விளங்குவதைத் தவிர வேறு போக்கில்லை. கேளாய், பூரணசந்திர திருமுக முடையவளே! ஆதியற்ற உனது புத்திரனுல் சரட்டினில் மணிகள் போல சகல சராசரப்பிரபஞ்சங்களும் கோத்துப் பின்னிவைக்கப்பட்டுள்ளன. இவ் வுருவம் அவனுக்குச் சுவாபத்தில் உள்ளது. மற்றென்றே வென்ருல், ஸ்தாவரஜங்கம மயமாகிய புவனங்களின் உருவமாகும். அதற்குச் சொர்க்க மே சிரசாகும்; வானம் நாபியாகும்; ஏழ் கீழ்மேலோகங்களும் பாதங்கள். அக்னி, சந்திரன், சூர்யன் என்னும் மூவரும் நேத்திரங்களாவர். இவ்வுரு வத்துக்குத் திக்குகள் புயங்களாகும். கேளாய்! மிகுந்த சுபகுணமாதே! ஓஷதிகள் இவ்வுருவத்துக்கு உரோமங்கள் எனப்படும். சகலருக்கும் அருள் அளிக்கின்ற இவ்வுருவத்துக்கு, பிருதிவி அப்பு, தேயு, வாயு, ஆகாச மாகிய ஐந்து மஹாபூதங்களும் புலன்கள். சப்தம், ரூபம், கந்தம், சுவை, பரிசம், இவைகள் அவ்வைம் புலன்களின் விஷயங்கள். திவ்ய மந்தகாச த்தையும், நேர்த்தியான விழிகளையும் உடைய நாயகி! பரப் பிரம்மமாகிய குமாரனுல், ஆறுதிரு முகங்களையும், பன்னிரண்டு புயங்களையும், பதினெட்டு விழிகளையு முடைய அழகிய திருமேனியானது லோகானுக்ரஹார்த்தமாக அங்கீகரிக்கப்பட்டது. கேளாய் சுந்தரவதனமாதே! குமார மூர்த்தியினு டைய மிகப்பெருமை பொருந்திய இவவுருவத்தை எவர் தியானிக்கின்றூர்க ளோ, அவர்கள் மிகுந்த பாக்யசாலிகளும் ஜகங்களால் புகழுப்படுவோர்களுமா

வர். மேலும் அவர்களால் நாடுகளே மிகவும் பரிசுத்தமாகும். பூதலத்தில் இவனது திருவடிகள் மீது எவர் பக்திபண்ணுகின்றார்களோ அவர்கள் தேவர்களாலும் வந்தனிக்கப்படத் தக்கவர்களும் எமக்கும் உனக்கும்கூட மிகவும் பிரியம் உள்ளவர்களுமாவார்கள். கேளாய்! உமையே! மஹாத்மாவாகிய குமாரனுடைய மகிமையை உரைக்கின்றோம். அவனுடைய கட்டளைப்படிதான் வாயுதேவன் காற்றடித்து, ஆவஹம் முதலிய தனது ஏழு ஸ்கந்தங்களால் (தோள்களால்) சிம்சுமார சக்கிரம் என்ற நவக்கிர சக்கிரம் முதலியவற்றைச் சுமந்து, புவனங்களையும் தாங்கி, தனது பிராண, அபான, வியான, உதான, ஸமானமென்ற பற்பல வாயுக்களால் பிராணிகளையும் நடத்துகின்றான். ஸகல புவனங்களாலும் மறுக்கத்தகாத, இவனது கட்டளைக்குப் பயந்துதான் உலகங்களுக்கு நேத்திரமாகிய சூரியனும் உலகுக்கொளி கொடுக்கின்றான். கேளாய், தேவி! உனது செல்வனுடைய திருவுத்தரவாலே அக்னி தேவன் தேவர்களுக்காக ஹோமம் செய்யப்படுகிற ஹவ்வியங்களையும், பிதுருக்களுக்காக ஹோமம் செய்யப்படுகிற கவ்வியங்களையும் அவரவர்களுக்குக் கொண்டு சேர்ப்பித்தும், சகல பதார்த்தங்களையும் பக்குவப்படுத்தியும் வருகின்றான். மேலும் விசுவாநர முனிவரின் தநயனாகிய அவ்வக்னி தேவன் பிராணிகளின் வயிற்றினுள் இருந்து, பிராணாபானன் முதலிய வாயுக்களுடன் சேர்ந்து மென்றும், கடித்தும், நக்கியும், குடித்தும், புசிக்கப்படுகிற நான்கு ஆகாரங்களையும் ஜீரணம் பண்ணுகிறான். இவனது கட்டளையின்படியே யமன் பாவம் செய்தவர்களை உயிரோடிருக்கையில் வியாதிகளாலும் இறந்த பிறகு நரக யாதனைகளாலும் தண்டித்து வருகிறான். இவனதாக்ஞையின்படியே நான்முக தேவனும் மற்றைய ஒன்பது பிரஜாபதிகளுடன் ஆதரவோடு ஜகங்களை சிருஷ்டித்து வருகிறான். நர என்றால் ஜலம். ஜலத்தை அதாவது க்ஷீராப்தியை ஸ்தானமாக உடையவர் என்று பொருளடங்கிய நாராயணனென்று பெயர் கொண்ட மஹா யோகியான விஷ்ணுவும், ஆறுமுகனுடைய கட்டளையின்படியே ஜகங்களைப் பாலனம் செய்து வருகிறார். பிரம்ம சொரூபியான ஸுப்ரமண்யனுடைய ஆக்கினையின்படியே அந்நாராயணன், ப்ருகு முனிவருடைய சாபத்தாற் கட்டுண்டு, மீன், ஆமை, பன்றி முதலிய அவதாரங்களை அடைந்து, தர்ம ஸ்தாபனம் செய்வதில் முயன்றவராகிய துஷ்டர்களாகிய அசுரர்களைச் சங்கரித்து வருகின்றார். உனது புதல்வனின் ஆக்கினையின்படியே ஸ்ரீ காலாக்னி ருத்ரபகவான் பிரளயகாலத்தி லிச்சர்வ ஜகங்களையும் சங்கரிக்கின்றார். காலந்தான் பிராணிகளைப் படைக்கிறது. சங்கரிப்பதும் காலம்தான். எல்லாம் காலத்தின் அதீயமேயாகும். அக்காலமோ இச்சுப்ரமண்யன் கைவசத்தில் அகப்பட்டிருக்கிறது. உனது புத்திரனது பெருமை பொருந்திய அறிக்கையின்படியே ஆகாயமானது எல்லாப் பிராணிகளுக்கும் இடவெளி கொடுக்கின்றது. இவனது ஆக்கினையின்படியே ஜலம் சகல பிராணிகளையும் ஜீவிக்கச்செய்கிறது. எவராயினும் இவனது கனம்பொருந்திய உத்தரவை மீறி நடக்கமுடியாது. இந்தப் பூமி, மலைகள், கடல்கள், சூர்யன், சந்திரன் முதலிய ஒளித்திரள்கள், விஷ்ணு

முதலிய தேவர்கள், ஸகல சராசரமான ஜகங்கள் இவை யனைத்தும் சுப்ரமண்யனது திருவாக்கின் கட்டளை வசமாகவே இருக்கின்றன.''

## 36. அத்தியாயம்.

ஸ்ரீ பார்வதி கேட்கின்றதாவது:—'' ஓ புத்திவான்களில் மிகுந்த சிரேஷ்டரே, யாதொன்றை அறிந்ததனுல் மானிடர்கள் மோக்ஷ ஸாம்பிராஜ்யத்தை அடைகின்றூர்களோ அப்படிப்பட்ட தேவரீரது புத்திரனுடைய மகிமையை எடுத்துரைத்தல் வேண்டும்.'' என, ஸ்ரீபரமேசுவரன் சொல்கிறூர்:—''ஓ ஹேோ கேளாய்! சிறந்த நிறமுடைய மாதே! சரவணபவனுடைய மகிமையைச் சர்வலோகோபகாரார்த்தமாக யாமெடுத்துரைக்கின்றதை நீ தெரிந்து கொள். கந்தன் சகல தேவஸ்வரூபனும், சகல லோகஸ்வரூபனும், சகல பிராணி ஸ்வரூபனும், என்றும் நித்தியமாகிய ஸாக்ஷாத் பிரம்மஸ்வரூபனுமாகிறூன். ஓ கிரிகுமாரி! உலகினில் யாதாமொரு பொருளல்லது பிராணியானது, மகிமை, லக்ஷ்மி விலாசம், தார்டியம் இவைகளை யுடையதோ அதில் நமது மைந்தனுடைய மகிமையின் ஓர் இலேசாலேசத்தின் விலாசந்தானுள்ள தென்பதைப் பெண்ணே! நீ அறி. ஒரு விளக்கினின்று மற்ருேர் விளக்கேற்றப் படுவது போல் ஒருவனுடைய ஆத்மாவே அவனுக்குப் புத்திரனுகிறது. ஏற்றிய தீபத்தினுடைய மகிமையினுல் மூல தீபத்தினுடைய பெருமை அறியப்படுகின்ற தன்ருே? அங்ஙனமாகவே தான், நம்மிடத்தினின்றுண்டான இப் புத்திரன் மிக மகிமை யுள்ளவனுகின்றூன். கேளாய் பெண்ணே! இவனது மகிமையினில் லேசாலேசந்தான் அங்கங்கே கொஞ்சம் கொஞ்சம் தலைகாட்டுகின்றது. ஓ கிரி ராஜகுமாரி! அளவற்ற ருத்திரகோடிகளில் இவனே காலாக்னிருத்திரன். சங்கம், சக்கிரம், கதை இவைகளைத் தரித்த அனேக விஷ்ணுக்களில் இவனே மஹா விஷ்ணு. ஸ்ரீ விஷ்ணுவினுடைய நான்கு மூர்த்திகளில் இவனே வாஸுதேவ மூர்த்தி. அவருடைய பத்து அவதாரங்களில் இவனே ராமன். ஆயுதந்தரித்த யாதவர்களில் இவனே வாசுதேவன். பாண்டவர்களில் இவனே அர்ஜுனன். வேதங்கள் அல்லது பிராமணர்களுக்கதிபதியாகிய இக்கந்தன், சகல பிரஜாபதிகளுக்குள் பிரம்மாவாகின்றூன். எல்லா மனுக்களுக்குள்ளும் இவன் ஸ்வாயம்பு மனு; ஸகல தேவர்களுக்குள்ளும் இவனே இந்திரன்; ஒளிப்பொருள்களுள் இவனே அக்னி; பிதுருக்களுள் இவனே யமன்; இவன் இராக்ஷஸ்ஸுகளில் நிருதி. ஓ பிரியமுள்ள பெண்ணே! ஜலப்பிராணிகளில் இவன் வருணதேவன். பலமுடையோர்களில் வாயுதேவன். கந்தர்வர்களில் சித்திரரதன். திரவியவான்களிற் குபேரன். இவன் திக்பாலகர்களில் சகல சுகங்களையும் கொடுக்கவல்ல ஈசான்யன். திக்கஜங்களில் ஐராவதமானவன். நதிகளில் கங்கை. ஏகாதச ருத்திரர்களில் சங்கரன். அஷ்ட வசுக்களில் பாவகன் என்னும் பெயருடைய வசு. துவாதசாதித்யர்களில் விஷ்ணு என்ற ஆதித்யன். வைத்தியர்களில் அசுவினி தேவர்களானவன். அசுரர்களில் இவன் பிரகலாதன்; ஸர்ப்பங்களில் வாசுகி; மிருகங்களிற் சிங்கம்; பறவைகளில் கருடன்; பிரும்ம ரிஷிகளில் வஸிஷ்டர்; தேவரிஷிகளில் நாரதர்; ஸகல விருக்ஷங்களிலும் இவனரசமரம்; மானிடருள் பிராமணன்; இவ்வுலகினில் தேவர்கள், விலங்கினங்கள், மானி

டர்கள் முதலியவர்களில் எங்கெங்கு பராக்ரமம், அதிக ஸம்பத்து, காந்தி, கல்வி, அறிவு, இவைகள் இருக்கின்றனவோ, கேளாய்ப் பிரிய நாயகி! அவை யெல்லாம் கந்தனுடைய மஹிமை என்பதே நிச்சயம். ஓ புவனேசுவரி! உன் றன் மைந்தனுடைய மகிமையைச் சுருக்கமாய் எடுத்துரைத்தேன். நூறு கோடி வருஷகாலம் இடைவிடாமல் உரைத்த போதிலும் அதை வளர்த்திச் சொல்ல முடியாது. பெண்ணே! இது தான் உன்மைந்தனுடைய மஹிமை. இதை முந்தியோர் முறை பிரஸ்தாபித்து மிருக்கிறோம். அதை நீ மறந்து விட்டாய். ஓ பார்வதி! உலக ரக்ஷணார்த்தமாகப் பின்னும் ஓர் முறை நீ கேட் டிருக்கலாம்.'' என்று ஸ்ரீ மஹாதேவர் பிரசன்னமாக ஸ்ரீ குமாரமூர்த்தி யின் வைபவங்களை லோகானுக்ரஹராக விருப்பத்துடன், ஸ்ரீ பார்வதிதேவிக் குரைத்தருளிப் பிறகு தேவியை யோர்வாறு ஆலிங்கனம் செய்து கொண்டு அந்தப்புரத்திற்குச் சென்றனர். இவ்விதமாக ஸ்ரீ பரமேசுவரனால் சொல்லப் பட்டதானது, உலகினில் விசேஷமாகப் பிரஸித்தமாயிற்று. அதனாலும் மிகு தியாய்த் தேவ சிரேஷ்டர்களுடைய உலகங்களில் அங்கங்கு பிரசித்திப்பட் டிருந்தது. வைகுண்டத்தில் ஸ்ரீ விஷ்ணுவினுடைய மாளிகையில் விஷ்ணு பக்தர்களாகிய மங்கையர்களால், இக்கந்தன் புகழ்கள் எப்போதும் வினோத மாக வீணைகளிற் பாடப்பட்டு வருகின்றன.

இத்தருணத்தில் தேவேந்திரனுக்குத் தம்பியும் ஸ்ரீ விஷ்ணுவின் அவ தாரமுமான உபேந்திர தேவனது கண்களினின்றுண்டான, அமிருதவல்லி யென்றும் ஸௌந்தர்யவல்லி யென்றும் பெயர்கொண்ட அழகிய கண்களை யுடைய இரண்டு பெண்களும், தினந்தோறும் அங்கங்கு ஸ்ரீகந்த பிரானுடைய மஹிமையும் சிறந்த வடிவங்களும் விசேஷமாகப் புகழப்படுவதைக் கேட்டு, மஹா துர்லபமாகிய அப்பகவானுக்குப் பெண்டிர்களாவதை விரும்பி, அவரைப் பிரியப்படுத்துவதற்காக மிகுந்த தவம்செய்தற்கு இச்சித்தார்கள். மிக கலி யாணகுண சீலர்களும், மிகவும் மிருதுவான திருமேனி உடையவர்களும், வடிவத்தி லீடற்றவர்களுமான அப்பெண்கள் தங்களது சௌந்தர்யத்துக் கிடானவர் இந்த ஸ்தாவர ஜங்கமமான ஜகத்திலப் பிரபுதான் என்று எண்ணி னார்கள். அவர்கள் அம்மகிமை பொருந்திய பிரபுவினுடைய சரித்திரங்களை வீணாகானம் செய்கின்றவர்கள் மூலமாயடிக்கடி கேட்டுக் கேட்டு மன உபத்தி ரவத்தினால் தளிர் மெத்தைப் படுக்கையிலும், ஸுகமடைய வில்லை. அவரது திவ்ய சரித்திரங்களைக் கேட்பதிலே மிகுந்த மனப்பூரிப்பு கொண்டு தினந் தோறும் தூக்கமே யற்றவர்களாய் வெகு ராத்திரிகளைப் போக்கினார்கள். அவர்கள் நாணல் வனத்துக்குச் சென்று அங்குள்ள மிக உன்னதமான ஓர் தடாகக்கரைமீது நிராஹாரர்களாக முனிவர்களுடைய நியமங்களை அனுஷ்டி த்துக் கொண்டும், இடையிற் பூண்டிருந்த நவரத்ன கசிதமான ஒட்டியாணங் களை யெடுத்து விட்டு முஞ்சம் என்கிற புல்லின் கயிறுகளை அரைஞாண்க ளாகக் கட்டியும் மிகவும் மிருதுவும் பரிசுத்தமுமான மான்தோலை யிடையில் உடுத்தியும், சிறந்த வெண்பட்டு வஸ்திரங்களை நீக்கிவிட்டு மிகநேர்த்தியான மரையுரிகளை உத்தரீயங்களாகத் தரித்தும், திருமேனி யெங்கும் திருநீற்றி னால் அலங்காரம் செய்து கொண்டும், ருத்திராக்ஷங்களை ஆபரணங்களாகப்

பூண்டும், ஸ்ரீ சுப்ரமண்ய கடாக்ஷ மஹாமந்திரத்தைப் பக்தியுடன் ஜபித்துக் கொண்டும், அப்பிரபுவையே எப்போதும் மனதில் தியானித்துக் கொண்டும், இவ்வாறாக வெகுகாலம் சென்றதன்மேல் அனாதியான ஸ்ரீ மஹாசேன மூர்த்தியானவர் நேர்த்தியான மந்தஹாசத்தினால் விளங்கிய திருமுகத் தேவர்கள் முன்னர் பிரத்தியக்ஷமாயினர். அப்போது அமிருதவல்லியும், சுந்தரவல்லியும் அப்பிரபுவை அருகிற்கண்டு, அங்கமெங்கும் மயிர்க் கூச்சலுற்று, பிரமையினால் விழிகள் மலராதுற்றவர்களாய் அவரை வந்தனித்து, அஞ்சலி கொண்டு அவரதிரண்டு பாரிசங்களிலும் நின்றார்கள். கனவிலும் முந்திக்கண்டிராத அவரை, சகலலோகங்களையு மதிகரித்து மகாமேன்மை கொண்டதான அவரது தேஜஸினால் ஸ்ரீ பரமேசுவர புத்திரனாகிய குமாரமூர்த்தி யென்றே அறிந்தார்கள். ஸ்ரீ ஜகந்நாதனு மவர்களைப் பார்த்தருளிப் புன்னகையுடன், "ஓ அழகுள்ள பெண்களே! உங்களுக்கு யாமென்ன செய்ய வேண்டும்? நீங்கள் மனதில் நாடிய இஷ்டங்களைக் கேளுங்கள். நீங்கள் இஷ்டப்பட்டுக் கேட்பதை நிறைவேற்றுகின்றோம்." எனத் திருவாய் மலர்ந்தருளினர். பெண்களு மதுகேட்டு, மனம்பூரித்தவர்களாகி,"ஓ சகல ஜகங்களும் சரணாகதி அடையப்பெற்ற ஜகந்நாதா! எப்போதும் ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களுடைய அந்தக்கரணத்தினுள் இருக்கும் பிரபுவே! சகல புவனங்களையும் பாதுகாக்கின்ற நாதனே! தேவரீர் எங்கள் முன் பிரசன்னராகி எங்களைப் பாணிக்கிரகணம் செய்து கொள்வீர். ஓ பிரபுவே! யாங்கள் வெகு காலமாகத் தேவரீருக்கு மனைவிகளாவதற்குக் காமுறுகிறோம்." என வரங்கேட்டனர்.

அப்பிரார்த்தனைகளால் களிப்புற்று மறுபடியும் பிரபு, "சிலகாலம் சென்ற பிறகு உங்கள் மனதைப்பூர்த்தி செய்கிறோம். கேளாய் அமிருதவல்லி! நீ நமதாக்ஞையின்படி தேவலோகத்தில் தேவேந்திரனிடத்தில் போயிரு.வாராய் பிரியமுள்ள சுந்தரவல்லி! நீ பூலோகம்சென்று சிவமுனியிடத்திலிரு. யாம் ஸமயத்தில் வந்து விவாகம் செய்து கொள்வோம்."என்றிவ்வாறாக பகவான் அகண்டவிழிகளையுடைய பெண்களுக் குரைத்தருளி, தாய்தந்தையர்களுடைய ஸன்னிதானத்தை நினைத்துக் கொண்டு, கைலைமலையில் பெற்றோர்களிடம் சென்றலங்கரித்தனர். கேளீர் சௌனகாதி முனீச்சுவரர்களே! ஸ்ரீ சுப்பிரமணியன் பெற்றோர்களுடைய திருவடிகள்மீது தண்டனிட்டு அஞ்சலிபந்தம் செய்து கொண்டு அவர்களுடைய திருமுகங்களை நோக்கி நின்றனர். அப்போதவர்கள் குழந்தையை எடுத்தணைத்துச் செந்தாமரை மலர்போன்ற முகத்தை முத்தமிட்டார்கள். அவர்களொவ்வொருவரும் வெவ்வேறாக முத்தமிட்டும் திருப்தி யடையவில்லை. வெகு காலமளவும் அவர்கள் ஒருவர்க்கொருவர் மாற்றி மாற்றி மடிமீது வைத்து மகிழ்ந்து பிறகு குழந்தையை, ஜகதீசுவரனும், ஜகதீசுவரியும் வெகு சந்தோஷத்துடன் தங்கள் இருவருக்கும் மத்தியில் வைத்துக் கொண்டனர். அப்போதவ்விருவர்களும் குழந்தையோடு சேர்ந்து விளங்கிய காட்சியைக் கணாதிபர்கள் தரிசித்து என்று மழிவற்ற மோக்ஷ ஸாம்பிராஜ்ய ஸுகத்தைத் தாங்கள் அடைந்து விட்டதாக நினைத்தார்கள். இப்போதுகூட, உமையோடும் கந்தனோடும் கூடிய ஜகதீசனாகிய சோமாஸ்கந்த மூர்த்தியைப் பக்தியுடன் தரிசிப்பவர்கள் பூமியில்

வெகு பாக்யவந்தர்களாகித் தேவர்களாலும் வந்தனிக்கத் தக்கவராகின்றனர். இவ்விதமாக ஸ்ரீ பரமேசுவரன் அம்பிகையோடும், குமார மூர்த்தியோடும் வீற்றிருக்குமளவில், யாதொரு கதி மோக்ஷமும் பெறாத தேவர்கள் இச்சந் தோஷ ஸமயமறிந்து கைலை மலைக்குச்சென்று, அனுப்படையாமல் அதன் மேலேறினர். விஷ்ணு முதலிய தேவர்கள், சுகிருதம் செய்யாதவர்களால் அடைவதற்கு முடியாத ஸ்ரீ சர்வலோகேசுவரனுடைய திருமாளிகை வாயிலை அடைந்து, அங்கு வாயிற்படியில் கணங்களுடன் ஸ்ரீ நந்திகேசுவரரைக் கண்டனர். ஸ்ரீ நாராயணன், இந்திரன், பிரமன் முதலிய தேவர்கள் அவரரு கில் வந்து, அவரது திருவடிகளில் ஆதரவுடன் மலர் மாலைகளாற் பூஜித்து, இருகைகளையும் தாமரை மொட்டுப்போல் மூடிச்சேர்த்துத் தலைமீது வைத் துக்கொண்டு, எழுந்தெழுந்தாய்த் தெளிவாகப் பல துதிகளால் துதித்து, அங்கம் வணக்கமுற்றவர்களாக, "ஓ ஜகங்களுக்கதிபராகிய நந்தி தேவரே! யாங்கள் இங்கு வந்திருப்பதை ஸ்ரீ சர்வேசுவரனுக்கு விஞ்ஞாபனம் செய்து, எங்களது துன்பத்தைக் கேட்பித்துத் தீர்த்து வைக்கவேண்டும்.'' என்று விண்ணப்பஞ் செய்துகொண்டார்கள். இவ்வாறாக தேவர்களால் விண்ணப் பம் செய்து கொள்ளப்பட்டதன் பேரில் ஸ்ரீ சிலாத முனிவரின் செல்வ னும், எப்போதும் ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களுடைய விநோத கிருத்தியங் களை நன்கறிந்தவரும் அந்தப்புரத்துக் கதிபருமான ஸ்ரீநந்தி பகவான் தேவர் களை நோக்கி அடியிற்கண்டபடி திருவாக்கருளினர்:—"வாரீர் தேவர்களே! உங்களுக்கு ஸ்ரீ பரமேசுவரனைச் சேவிப்பதற்கிது சமயமில்லை. இப்போ திவ்விடத்திலேயே காத்திருங்கள். ஈசுவர தரிசனத்துக்குச் சமயம் கிடைக் கும்.'' எனத் தேவர்களும் சிலாத தனயரது திருவாக்கின்படி அக்கைலைமலை யிலே காத்திருந்தனர். பிறகு வெகு காலம் கழிந்ததன்மேல் தேவர்கள் மறுபடியும் கருணைக்கடலும், உமாபதியுமான ஸ்ரீ தேவாதி தேவனுடைய தரிசனத்தைப்பற்றிப் பிரார்த்தித்துக் கொண்டு அச்சாலங்காயன முனிவரின் பௌத்திரனைப் பூஜித்துச் சேவை கொண்டார்கள். பிறகு புலன்களை வசத் திற்கொண்ட நந்தி தேவரும் ஸ்ரீ பார்வதி பரமேசுவரருடைய அந்தப்புரத்துக் குச் சென்று ஸ்ரீ மஹாதேவனுடைய திருவடிகளில் வந்தனித்து, "ஓ சர்வேசு வரராகிய மஹாதேவா! தேவர்கள் சூரபத்மனுடைய வதையினால் பராக்ரம மிழந்தவர்களாகி, இங்கு வந்து வெகுகாலமாய் அனுப்படையாமல், வாசலில் காத்திருக்கின்றார்கள். ஸ்ரீ விஷ்ணுவுடன்கூட தேவர்கள், தேவாதி தேவனா கிய தேவரீருடைய தரிசனத்தை யபேக்ஷிக்கின்றபடியால், ஸ்ரீ குமார மூர்த் தியின் சைன்யங்களாகிய அத்தேவர்களுக்கு அனுக்கிரஹம் செய்தருளல் வேண்டும்.'' என்று விண்ணப்பம் செய்து கொண்டனர். அதன்மேல் ஸகல ஜகங்களுக்கும் நாதராகிய ஸ்ரீ ஸோமாஸ்கந்த மூர்த்தியானவர் தேவசிரேஷ் டர்களையும், முனிசிரேஷ்டர்களையும் உள்ளே விடும்படி கண் ஜாடையால் அனுமதி கொடுத்தருளினர். பிறகு பாக்யவந்தர்களில் மிக்கச் சிரேஷ்ட ரும் புலன்களை வசத்திற் கொண்டவருமான ஸ்ரீ நந்திகேசுவரனும் அக் கட்டளையைக் கொண்டு, தேவசிரேஷ்டர்கள் எல்லோரையும் ஸ்ரீ மஹாதே வனுடைய அந்தப்புரத்துக் கழைத்துப் போயினர். இவ்விதமாக நந்திதே

வன் வெகு பிரயத்தனத்தின் மீது தேவர்களைச் சீக்கிரத்தில் ஸ்ரீ பரமேச்சுவர ஸன்னிதானத்திற் கழைத்துச் சென்றவுடன், அத்தேவர்கள், உமையோடும், கந்தனோடும் கூடிய என்றும் அழிவற்றவரும் ஸர்வஞ்ஞரும், ஸர்வ கர்த்தரும், ஸர்வ லோகங்களுக்கும் மஹேச்சுவரரும், பிரஸன்ன முக முடையவருமான ஸ்ரீ மஹாதேவனை வந்தித்து, நற்பொருளடங்கிய சிரேஷ்டமான வேதவசனங்களால் துதித்தார்கள். நந்திதேவனானவர், யானைத் தோலை யாடையாக வுடைய ஸ்ரீ பரமேச்சுவரன் சன்னிதானத்திற்கு மெல்ல மெல்ல வந்து, "ஓ ஸர்வஞ்ஞ! ஓ! ஸ்வாமி! சம்போ! திரிபுரஹரா! விபோ! தேவாதி தேவா! சூலபாணியே! விஷ்ணு பிரம்மர்கள் முதலிய தேவர்கள் இந்திரனுடனும், ஸாத்தியர்களுடனும், எல்லா முனிகணங்களுடனும் தேவரீருடைய இரு பாதார விந்தங்களில் வந்தனித்து இப்போது மிகுந்த தன்யர்களும் கிருதார்த்தரும் ஆய்விட்டனர்." என்று கூறினர்.

## 37. அத்தியாயம்.

பிறகு தேவர்களும், முனிவர்களும் அம்பிகைக்குப் பதியும் என்றும் அழிவற்றவருமான ஸ்ரீ மஹாதேவன் முன்பாக அஞ்சலி செய்து கொண்டு "ஓ சர்வகுண சம்பூர்ணரும், ஸர்வேசுவரனும், அசுரர்களை மர்த்திக்கின்றவரும், சூர்யன் கண்ணை விழுவித்தவருமான ஜகதீசா! வெகு காலமாய்ச் சூரபத்மன், முதலிய அசுரர்களால் திங்களிக்கப்படுகிற எங்களைத் தேவரீரது கிருபையின் வன்மையால் ரக்ஷித்தருளல் வேண்டும். தேவரீரது இக்குமார மூர்த்தியால் அத்தேவசத்துருக்களை வதைத்திடல் வேண்டும்." என்று இவ்வாறாக விண்ணப்பம் செய்து கொண்டு பிரபு முன்பாகச் சந்தோஷமாய் நின்றார்கள். பிறகு ஸ்ரீ மஹாதேவனும் அச்சகல தேவர்களிடத்தும் பிரசன்ன மனதுடையவராகி உலகைக் காக்கும் விஷயத்தைப்பற்றி வெகு நேரம் உமையோடு யோசனை செய்து, ஸ்ரீ சுப்ரமண்யனைக் கட்டித் தழுவி உச்சி முகர்ந்து, "அடா சுப்ரமண்யா! நீ நமது கட்டளையின்படி தேவர்களுக்குப் பகைவர்களாகிய துராத்மாக்களுக்குத் தலைவனாகிய சூரபதுமன் முதலானோரையும், அவனதுபுத்திர மித்திர சம்பந்தி பந்துவர்க்கங்கள் முதலிய சகல அசுரர்களையும் இப்போதே சங்கரித்துவிடு. எல்லா இடத்தும் உனக்கு வெற்றி உண்டாகக்கடவது! ஓரிடத்தும் அபஜயம் நேரிடாது." என ஸ்ரீ உமாகாந்தன் தனது குமார மூர்த்திக்கு அறிக்கையளித்துத் தனது பதினொரு ருத்திராஸ்திரங்களை அமைத்தும், சர்வ சத்ருக்களையும் கொல்விக்கவுற்ற எறிவல்லபம், துவஜாயுதம், பெரியகத்தி, சிரேஷ்டமான வஜ்ராயுதம், அம்பு, அங்குசம், கண்டாயுதம், கமலாயுதம், கோதண்டம், ஈட்டி, பரசவாயுதம், ஆகிய பதினொரு ருத்திராஸ்திரங்களும், ஒரு வேலாயுதமும் ஆகிய பன்னிரண்டு சூர்யர்களின் ஒளியைப்பெற்ற பனிரண்டு ஆயுதங்களையும் ஸ்ரீ தேவேசன் அவருக்கு மனப்பூர்த்தியாய்க் கொடுத்தருளினர். மேலும் ஸ்ரீ மஹாதேவன் பிரசன்ன மனதுடன் ஸ்ரீ கந்தபிரானுக்கு ஆயிரம் சூர்யருக்கொப்பானதும், சகல ஆயுதங்களால் நிறைந்ததும், லக்ஷம் குதிரைகள் பூட்டியதுமான ரதத்தையும், என்றும் யாவராலும் பேதிக்கத் தகாததும், பலவித ரத்னங்கள் இழைக்கப் பெற்றதுமான பொற்கவசத்தையும், என்றும் குறை

வுபடாத அம்புகளால் நிறைந்த இரண்டு அம்பறாத் தூணிகளையும், சகல சத்துருக்களையும் துவம்சம் செய்யலுற்ற ஓர் மிகவும் பெரிதான தாவாரி (பட்டாக்கத்தி)யையும் ஈந்தருளினர். மன்மதனைக்கொன்ற மஹாதேவன், இவ்வித அஸ்திரங்களையுடைய தம்மைந்தனைக்கட்டி அணைத்து, இவரது செந்தாமரைத் திருமுகத்தை யடிக்கடி முத்தமிட்டு, தேவர்களுக்கெல்லாம் முதன்மையும் சகல புவனங்களுக் கதிபதியுமான ஸ்ரீ பரமசிவன் அனேக ஆசீர்வாதமருளினர். ஸர்வலோக மஹேசுவரியும், ஸாக்ஷாத் ஸர்வபிரபஞ்ச மாதாவுமான அந்த அம்மையும் சகலாஸ்திரங்களுடன் கூடிய தனது செல்வனை யுச்சிமுகர்ந்து, சந்தோஷத்துடன் அனேக ஆசீர்வாதங்களால் வாழ்த்தி, "அப்பனே! தேவசத்துருக்களை வெற்றி கொள்." எனவிட்டனர். சேனுபதியும், ஜகங்களுக்கதிபதியுமாகிய அச்சுவாமியும் தேவ கார்யத்தை முடிப்பதில் முயன்றவராகி, சிரத்தையுடன் பெற்றோர்களுக்குப் பிரதக்ஷிணம், தோத்திரம், நமஸ்காரம் இவைகளைச் செய்து, அஞ்சலி கொண்டு அருகில் நின்றனர். அப்போது ஸ்ரீசாம்பமூர்த்தியும் ஒன்பது ரத்தினகாளிகளின் வியர்வைத்திவலைகளினின்றுண்டான இலக்ஷம் கணதிபர்களையும் வீரபாகு முதலிய நவவீரர்களையும், அஸ்திர ஸஸ்திரங்களின் ஸம்பத்துக்களையுடைய இரண்டாயிரம் சைன்யங்களையும் மஹாதீரர்களான நூற்றெட்டுப் படைத் தலைவர்களையும் ஸ்ரீ தேவசேனுதிபதியாகிய பிரபுவுக்குப் பிரசன்ன மனதுடன் சேர்த்துவிட்டு விஷ்ணு பிரம்மாதி தேவர்களை நோக்கித் திருவாக்கருளியதாவது:—"வாரீர் தேவர்களே! இச்செல்வன் உங்களது பகைவர்களை ஓர் க்ஷணமாத்திரத்தில் வெற்றி கொள்வான். இவனது பராக்ரமங்களைப்பாருங்கள். பரப்ரஹ்மத்தை அறிந்தவர்களும் வேதத்தை யுணர்ந்தவர்களுமான முனிவர்கள், யோகிகள், சித்தர்கள் சாத்தியர்கள் இவர்களுடன் நீங்கள் அஞ்சாமல் செல்வீர்கள்." என ஸ்ரீ பரமேசுவரன் அம்பிகை சகிதமாய் வெகு சந்தோஷத்துடன் கட்டளையிட்டு மறைந்தனர். ஸ்ரீ ஆறுமுகனை விஷ்ணு, பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள், தோத்திரங்களால் களிக்கச் செய்து தண்டனிட்டுச் சுகமாய்ப் பின் தொடர்ந்தார்கள். பிறகு அளவிடத் தகாத புத்தியுடையவரும், அசுரரைக் கொல்வோரும், லக்ஷ்மீபதியுமான ஸ்ரீ நாராயணன் வாயுதேவனை யழைத்து ஸ்ரீ ஷண்முக தேவனது மனோவேகமுடைய மஹா பெரிதான இரதத்தின் லக்ஷம் குதிரைகளுக்குச் சாரதியாக்கினர். அப்போது ஆகாய மெங்கும் தொனிகளால் நிரப்பலுற்ற தேவதுந்துபிகள் முழக்கப்பட்டன. மலர்மாரி பொழியலுற்றது. மிகுதியான நெற்பொரிகள் இறைக்கப்பட்டன. எல்லா முனிவர்களும் சடைகளுடன் தண்டபாணிகளாகக் கூத்தாடினார்கள். கின்னரர்கள், கந்தர்வர்கள், கிம்புருட ஸ்திரீகள் முதலானோர் பாடினார்கள். வசிஷ்டர் முதலிய பிரம்மரிஷிகளும், நாரதர் முதலிய தேவரிஷிகளும் ஸ்ரீகுமார மூர்த்தி ஜயமடைவதற்கான ஆசீர்வாத மந்திரங்களை யோதினார்கள். சர்வலோக மாதர்களும், ரிஷி பத்தினிகளும், முக்கியர்களான நாக கன்னிகைகளும், சுபமான மனதுடன் கானம் செய்தார்கள். சர்வகுண சீலர்களாகிய பிரம்ம விஷ்ணுக்களும், தேவலோக தச்சனான விசுவகர்மனும், வீரபாகு முதலிய நவ வீரர்களுக்கும் சேனைகளுக்கும், பற்பலவித ஆகிருதி

கொண்ட ரதங்களையும், அனேகவிதமான ரதத்தில் பூட்டும் குதிரை முதலிய ஜந்துக்களையும், திவ்யமான அனேக ஆயுதங்களையும், கவசங்களையும் அளித்தார்கள். சில ரதங்கள் சிங்கங்கள் பூட்டியதும், சில யானைகள் பூட்டியதும், சில புலிகள் பூட்டியதும், சில யாளிகள் பூட்டியதும், சில பூதங்கள் பூட்டியதும், சிலஅதே விதமாய் வேதாள கணங்கள் பூட்டியதும், சில பாம்புகள் பூட்டியதும், மற்றவை சிறந்த குதிரைகள் கட்டியதுமாக எல்லாம் சகலவித ஆயுதங்களாலும் நிரப்பப்பட்டும், கச்சைகள் கட்டப்பட்டும் பல ரதங்கள் நிர்மாணம் செய்யப்பட்டன. பிறகெல்லோரும் மிகச்சன்னத்தர்களாகிப் பத்துத்திசைகளையும் ஒலிப்பித்துக் கொண்டு, முந்திக் கிழக்குமுகமாகப் புறப்பட்டுப் பிறகு தென்புறமாய்த் திரும்பி யதன்பின் பெல்லாத் திசைகளிலும் சென்றூர்கள். கணங்கள், அவ்வாறு செல்வதாலும், ரதகஜ துரகபதாதிகள் செல்வதனுலும் உண்டாகிய புழுதிகளால் திசையெங்கும் மறைக்கலுற்றவர்களாகவும், கடலோசையை அதிகரித்த மிகுந்த சைன்யகோஷங்களைக் கொண்டவர்களாகவும், கந்தமாதனகிரியென்ற குலபருவதத்துக்குச் சீக்கிரத்தில் வந்தார்கள். ஸ்ரீ கந்தபிரானுடைய பராக்கிரமமானது எல்லாவற்றிற்கும் முந்திச் சென்றது. அதன் பிறகு, சைன்யங்களால் கோஷிக்கலுற்ற துந்துபி, ஜிஸ்ஸாணம், திமிலம், ஆனகம், கோமுகம், காகனம், கொம்பு ஆகிய இவ்வாத்தியங்களின் கடலுக்கு மேற்கொண்ட ஸன்னுக ஓசைகள் தொடர்ந்தன. அதற்குப் பிறகு, ரதங்களின் வண்டிகளாலும், யானைகளின் பாதங்களாலும், குதிரைகளின் குளம்புகளாலும் காலாட்களின் அடிகளாலும் உண்டாகிய, சூர்ய மண்டலத்தை மறைக்கலுற்ற புழுதித் திரள்கள் சென்றன. அதன் பிறகு காலாட்கள், வேகமுள்ள குதிரைகள், மத ஜலம் பெருகலுற்ற யானைகள் இவை முறையே சென்றன. பிறகு அதே விதமாய் ரத்தினங்கள் இழைக்கப்பெற்ற சொர்ணுபரணங்களைப் பூண்ட பிரஸித்தி கொண்ட தேர்வீரர்கள் தொடர்ந்தார்கள். பின்பு உக்ரபராக்ரமங்களையுடைய நூற்றெட்டுச் சேனுதிபதிகள் செல்லலுற்றூர்கள். பிறகு வெகு சூரர்களும், பலிஷ்டர்களுமான லக்ஷம் கணுதிபர்கள் தேவசேனைகளுக்குப் பதியும் ஜகதீசனுமாகிய ஸ்ரீசுப்பிரமணியப் பிரபுவைச் சூழ்ந்து நின்று சென்றூர்கள். அதன் பிறகு, மஹாரதர்களாகிய வீரபாகு முதலான நவவீரர்கள் பின் தொடர்ந்து சென்றூர்கள். அவர்களுக்கும் பின்னல் விஷ்ணுமுதலிய தேவர்களும், முனி கணங்களும், பின்பு தேவர்கள் முனீந்திரர்கள் இவர்களுடைய பெண்டீர்களும் தொடர்ந்து சென்றூர்கள். எல்லோர்களும் இவ்வாருகச் சென்று ஓர் க்ஷணத்தினுள் ஏம கூடமென்ற குலாசலத்தை யடைந்தார்கள். அப்போது பிரம்மவிஷ்ணு திக்பாலர்கள்முதலிய தேவர்கள் கிரௌஞ்சமென்ற மலையையும் அங்குத் தாரகாசுரனுல் பாலனம் செய்யப்பட்ட மாயாபுரி என்ற பட்டணத்தையும் கண்டு பயந்து மனநடுக்கமுற்று, ஜகதீசனை ஸ்ரீசுப்பிரமண்யனைப் பயத்தினுல் கதிகலங்கியவர்களாகச் சூழ்ந்து கொண்டார்கள். பிறகு ஸ்ரீ பிரபுவுக்கு மிகவும் பிரியம் உள்ளவருர் வீணுகானம் செய்வதிற் சிறந்தவருமான ஸ்ரீ நாரதபகவான், ஸ்ரீபிரபுமுன்பாக வந்தனித்து, அஞ்சலிகொண்டு விண்ணப்பம் செய்தனர்.

## 38. அத்தியாயம்.

நாரதர் சொல்கின்றார்—" ஓ பார்வதி நந்தனா! ஸ்வாமீ! வணங்கினோரின் துக்கங்களைத் தொலைப்பவரே! ஓ ஸ்கந்தா! ஸேநாபதே! எங்கள் மீதும் தேவர்கள்மீதும் பிரீதியை விருத்திசெய்யும் பிரபுவே! இந்தக் கிரௌஞ்சமலையானது முந்தி மிகக் கொடிய ஓர் பெரிய அசுரனாக இருந்தது. ஸ்ரீ அகஸ்திய பகவானுடைய சாபத்தினால் மலைத்தன்மை அடைந்திருக்கிறது; ஓ தேவாதிபா! மஹா பெரிய உருவங்கொண்ட சர்வலோகங்களுக்கும் பயத்தை உண்டு பண்ணுகிற இவ்விதமான துராத்மாவும், தேவசத்துருவுமாகிய அம்மலையைக் கொல்லுதல்வேண்டும். இம்மலைக்குச் சமீபத்திற் காண்கின்ற மிகவும் பீதிபளிக்கலுற்ற இந்நகரத்தில், துர்ப்புத்திகொண்ட சூரபத்மாசுரனுக்குத் தம்பியாகிய மஹா கொடூரமுடையோனான தாரகனென்ற யானைமுகத்தையுடைய ஓர் பெரிய அசுரன் வசிக்கின்றான். அவன், அனேக ரதகஜ துரகபதாதிகள் அடங்கிய பெருஞ்சேனைகளுக் கதிபன். மஹா கண்டகன்; மஹா தீரன்; தயாலேச மற்றவன், தேவர்களுக்கும், பிராமணர்களுக்கும் இராப்பகலாய் துன்பமளிப்பதைத் தொழிலாக உடையவன். ஓ மஹாஸேனாதிபரான பிரபுவே! யாகங்களுக்கும் கோவில் கட்டுதல், குளம் வெட்டுதல் முதலிய தருமங்களுக்கும் கெடுதிசெய்வோனும், மிகக்கொடியோனும், துராத்மாக்களுடைய சேர்க்கையையே கொண்டவனும், ஒருவராலும் நெருங்க முடியாதவனுமான அவ்வசுரனைச் சைன்யங்களுடன் சங்கரிக்கவேண்டும்." என்றிவ்வாறாகத் தேவர்களாலும் நாரதராலும் பிரார்த்திக்கப்பட்டதன் பின்னர் தேவரக்ஷகரும் தயவுக்கிருப்பிடமுமான பிரபுவானவர் தாரகாசுரனைக் கொன்றுவிடுவதாகத் திருவுளத்திற்கொண்டு, மஹாவீரனும், சத்துருக்களைத் தொம்சம் செய்வோனுமாகிய விரபாகுவை யனுப்பினர். ஸ்ரீ ஹரமைந்தனானவர், வீரபாகுவுடன் செல்லும்படித் தம்படைகளிற் பாதியையும், படைத்தலைவர்களிற் பாதியான ஐம்பத்தினான்கு பெயர்களையும், மஹாபராக்ரம சாலிகளான லக்ஷத்தெட்டு கணாதிபர்களையும் போகும்படி கட்டளையிட்டனர். ஸ்ரீபரமேச்சுவர புத்திரனான கந்தன் மஹாப் பிரதாபமுடைய வீரபாகுவை நோக்கிக் கட்டளையிட்டதாவது:—வாராய் வீரபாகுவே! மஹா பெரிதாகிய இச்சைன்யங்களுடன் சென்று மாயாபுரியையும், துஷ்டனாகிய கிரௌஞ்ச கிரியையும் சீக்கிரத்தில் முற்றுகை போட்டு, சூரபத் மனுக்குத் தம்பியும், துராத்மாவும் பிறரால் வெல்ல முடியாத சத்துருவுமான தாரகனை, அவனது சைன்யங்களுடனும், மந்திரிகளுடனும், போரில் முறியடித்துக்கொன்றுவிடு. கேளீர் சைன்யங்களே! நமக்குச் சாவற்ற விஷ்ணு முதலிய தேவர்கள் சைன்யங்களாக இருந்து, நாமும் இருக்கையில் இவ்வுலகங்களுக்குப் பீதியாது? மேலும் கேளாய் சத்ருக்களுடைய பட்டணத்தை ஜயிக்கலுற்ற வீரபாகுவே! நாமோ என்றால், யாவராலாவது நமக்கு அபராதம் செய்யப்படில் அதைப் பொறுப்போம். அதில் நமக்கு யாதொரு பாரமுமில்லை. ஆனால் நமதிரண்டு பாதாரவிந்தங்களைச் சரணமாக அடைந்த அடியார்களுக்கு யாவராயினும் கேடு எண்ணில் அதைச் சகிக்கவே மாட்டோம். உலகினில், அது தேவரானாலும் அசுரரானாலும் அவர்கள் எப்போதும் நம்மால் தண்டிக்கப்படத்தக்கவர்களே. ஓ

மஹாபராக்ரமசாலியான வீரபாகுவே! நமது கட்டளையின்படி நீ சீக்கிரத்தில் சகல சேனாபரிவாரங்களுடனும் முந்திச் சென்று, அக்கிரௌஞ்சகிரியோடு கூட மாயாபுரியையும் முற்றுகை போட்டு, கர்விகளான அவ்வசுரர்களுடன் கொஞ்சமேனும் தயங்காமல் போர் தொடு. நாமும் சைன்யங்களோடு வரிசையுடன் பின் தொடர்ந்து வருகிறோம். "என்றிவ்வாறாக அசுரர்களை அழிப்போரும் தேவர்களுக்கதிபருமாகிய முருகன், மஹா வீரனாகிய வீரபாகுவைக் கட்டளையிட் டனுப்பிவிட்டுத் தாம் மெல்லச் சென்றருளினர். அப்போதே தேவர்களது மனதினின்று பயம் வெளிச் சென்று பெருங்களிப்புண்டாகி யம்மனதைக் கவர்ந்தது. அதன் பிறகு அசுரர்களுடைய பட்டணந்தோறும் சாவுக்குரிய குறிக்குத் தகுதியான மஹா கோரமாகிய அபசகுனங்கள் அப்போ தடிக்கடி யுண்டாயின:—மேகங்கள் வெகு நிபிடாயமான மாரிக் கழுதை கத்துவதுபோல் கர்ஜித்து, ரத்தமாரி பொழிந்தன. அசுரேந்திரர்களுடைய வீட்டின் உப்பரிகைகளினின்று சிகரங்கள் இடிந்து விழுந்தன. பூமியைச் சுமக்கின்ற அநந்தனென்ற பாம்பினது படமாகிய நாட்டிய சாலை மீது பூமியானது ஸந்தோஷத்தினால நர்த்தனம் செய்வதுபோல் பூகம்பமுண்டாயது. உலகினில் ஒருவருக்கும் தெரியாமல் சேரிகள், கிராமங்கள், பட்டணங்கள் இவைகளில் திடீரென்று, காற்றோடு கூடிய மிகுந்த அக்னி பாதைகள் உண்டாயின. அந்தப்பெரும் அக்னி பாதையால் திசைகள் யாவும் சீக்கிரத்தில் பாழாயின. மேகங்கள் காற்றினால் திரட்டப்பட்டு மண்மாரி பொழியலுற்றன. வானத்தில் மேகமே தோன்றாதிருக்கையில் தங்குத் தடையின்றி, கோரமான மேக கர்ஜனைகள் மேலுக்கு மேல் விருத்தியாயின. பெரும் பீதியை எடுத்துரைக்கலுற்ற மிக ஜாஜ்வல்யமான கொள்ளிக்கட்டைகள் விழலுற்றன. எங்கும் நக்ஷத்திரங்கள் விழுந்தன. வானத்தில் மஹா பெரிதான வால்நக்ஷத்திரம் தோன்றலாயிற்று. நீர்க்கால்கள் எல்லாம் கலக்க முற்றன. எல்லாக் கடல்களும் மிகுந்த நுரைகளால் நிரம்பலுற்றன. அமங்களமான நரிகள் சூர்யனை நோக்கிக் கோரமாக ஊளையிட்டன. அசுரர்களுடைய தலைகளில் ஓணான்கள் விழுந்தன. அப்போது அசுரர்களுடைய வீடு தோறும் ஆமைகள் காணப்பட்டன. கண்ணாடிகளில் அவரவர்களுடைய பிம்பங்கள் தலையின்றி முண்டமாகக் காணப்பட்டன. அவரவர்களுடைய தேர்வீரர்கள் திடீரென்று தலைகீழாக விழலுற்றார்கள். அவர்களுடைய குதிரைகள் எல்லாம் எப்போதும் கண்ணீரைத் தாரை தாரையாய் விட்டன. அசுரராஜர்களுடைய இரதங்களில் கழுகுகளும் பருந்துகளும் உட்கார்ந்தன. அவர்களுடைய யானைகள் காரணமின்றிச் சீக்கிரமாகத் தலை தொங்கவிடப் பெற்றன. அசுரர்கள் சுவர்ணங்களைக் கட்டைகள்போல் காணலானார்கள். அவ்வசுரர்கள் ஜலங்களில் இந்திரதனுஸைக் கண்டார்கள். பிறகு ஸ்ரீ சுப்பிரமண்ய சுவாமியினுடைய சேனைகள், சிங்கநாதம் செய்வதனால் திசை முகங்களைச் செவிடாக்கியவர்களாகித் தாரகாசுரனால் பாலனம் செய்யப்பட்டதும், பெரிய சுற்று மதில்களை யுடையதும், மாயை என்ற அவனது தாயின் பெயர் முத்திரையை வகித்ததும், அவனைத் தாய் போல் காப்பாற்றியதுமான மாயாபுரியை ஓர் க்ஷணத்துக்குள் துரிதமாய்ச் சூழ்ந்து கொண்டனர். சூரபத்மாசுரனுக்குத்

தம்பியான தாரகாசுரன் இவ்வாறாகிய அபசகுனங்களைக் கண்டும் சகல விருத்தாந்தங்களையும் கேள்வியுற்றுத் தலைவிதியா லேவப்பட்டவனாகிப் போர் செய்ய விருப்பமுற்றுச் சிறந்த குதிரைகள் கட்டப்பட்டதும், சகல அஸ்திர சஸ்திரங்களால் நிரப்பப்பட்டதுமான ரதத்தின்மீதேறி சன்னத்தமா யிருந்த அனேக ரதகஜதுரகபதாதி சைன்யங்களோடு புறப்பட்டனன். அப்போது பட்டண மெங்கும் யுத்தப் பிரயாணத்தைத் தெரிவிக்கின்ற நிஸ்ஸான வாத்தியத்தின் தொனிகள் ஓய்வின்றிக் கேட்கப்பட்டன. அவர்களில் யுத்தத் துக்குப் போக விரும்பிய சூரர்களுக்குள், "இராஜாவானவன் தேவ சிரேஷ் டர்களுடன் போர் தொடுப்பதற்காக வெளிப்புறப்பட்டனன்." என்ற பெரிய வார்த்தை மேலுக்குமேல் உண்டாயிற்று. அப்போது சேனைகள் பட்டணத்தி னின்று நான்கு பக்கங்களிலும் கோட்டை வாயிற்படிகள் வழியாய் வெளிப் பட்டு,விளக்கில் விட்டிற் பூச்சிகள் விழுவதுபோல் தேவசேனைமீது வீழ்ந்தன. மஹாத்மாவாகிய வீரபாகுவினுடைய அச்சேனையும் துராத்மாவாகிய தாரகனு டைய அச்சேனைமீது நதிகள் சமுத்திரத்தில் விழுவதுபோல் எதிர்த்து விழுந் தன. அப்போது அசுரனுடையசேனை, வீரபாகுவினுடையசேனை இவ்விரண் டும், கீழ் சமுத்திரமும் மேல்சமுத்திரமும் பிரளயகாலத்தில் கரையற்றுச்சேர் வதுபோல் ஓர் க்ஷணத்துக்குள் ஒன்றுக்கொன்று கலந்தன. இவ்விதமாக, தேவர்களது துக்கத்தை நிவர்த்திக்கலுற்ற ஸ்ரீ ஹரமைந்தனுடைய சேனை யானது, எப்போதும் தேவ சத்துருக்களாகிய அசுரர்களால் தவிக்கலுற்ற ஜகங்களை இரக்ஷிப்பதற்காக மிகுந்த வல்லமை யுள்ளதாயினும் வீரபாகு வால் நடத்தப்பட்டு, எதிர்த்துப்போர் கலந்தது.

## 39. அத்தியாயம்.

பிறகு இருதிறத்தாருக்கும் சமமாக, மிகவும் பெரிய யுத்தம் நடந்தது. காலாள் காலாளுடனும், குதிரைவீரன் குதிரை வீரனுடனும் யானை வீரன் யானை வீரனுடனும், வலிமையுடைய தேர்வீரன் தேர்வீரனுடனும், இவ்வித மாக மிகவும் பயங்கரமான பெரிய போரானது இருதிறத்தாருக்கும் சமமாக நடந்தது. அப்போது அசுர கணங்கள் அனேக அஸ்திர சஸ்திரங்கள், ஈட்டி குண்டாந்தடி, எறிவல்லபம், இவைகளையும், மஹா பெரிதாகிய மலைகளையும் விருக்ஷங்களையும் வருஷித்தார்கள். இதேபிரகாரம் இருகக்ஷிக்காரர்களும் உயி ருக்குப் பின்வாங்காமல் ஜயத்தை எதிர்பார்த்து, ஒருவருக் கொருவர் அடித் துக் கொண்டார்கள். பிறகு வெகு கோபிஷ்டர்களாகிய கணநிபர்களால் அசு ரர்களும், அவர்களால் கணநிபர்களும் ஹதமாக்கப்பட்டார்கள். இவ்விதமாகச் சண்டைசெய்த இருகக்ஷிகளில் ஒருகக்ஷியும் ஜயம்பெறவாவது தோல்வியடை யவாவது இல்லை. தேர்க்கால் வில்லம்புகளால் பெயர்க்கப்பட்டும், குதிரைக்குள ம்புகளால் நொறுக்கப்பட்டும், பதாதிகளின் அடிகளாற்சிதறப்பட்டும், யானைக் கால்களால் விசிறித் தூற்றிவிடப்பட்டும், பூமியினின்று புழுதிகள் உயரக் கிளம்பி திசைகளில் வியாபித்துச் சூர்யனை மறைத்துவிட்டது. இவ்விதமாக முற்றும் அந்தகாரத்தினால் வியாபிக்கப்பட்ட உலகில் படைகள் பராக்ரமத் துடன் யுத்தகோலாகலம் நடத்தி வருகையில் விற்களது நாணோசையால் தன் சைன்யங்களில் ஒருவர்க்கொருவர் அறிந்து கொண்டார்கள். விபாடம், பல்

வலம் முதலான ஆயுதங்களால் அறுக்கப்பட்ட மஹாபலசாலிகளான சூரர்களுடைய தலைகளினின்று வெளிப்பட்டோடிய ரத்தப்பிரவாகத்தினாலும், புழுதிகளாலும் மேகங்களால் சூர்ய ஒளிமறைக்கப்பட்டதுபோன்ற துர்த்தினமாக இருந்ததுபோல்அத்தினம்இருந்தது. பராக்ரமசாலிகளான பூதகணங்களும், அவர்களுடைய தலைவர்களும் போர்முன்னர் எவ்வளவும் பின்வாங்காமல்,மஹாகோரங்களும், பிரளயகாலசண்டமாருதம் போன்றவையுமான அஸ்திர சஸ்திரங்களால் அசுரர்களைத் துவம்சம் செய்தார்கள். மஹா பூதங்களால் தனது சைன்யம் இவ்விதமாய் அடியுண்டுசிதறித் திக்குவிதிக்காக ஓடலுற்றதைக்கண்டு தாரகன் கொஞ்சமேனும் பொறுக்கமாட்டாதவனாய் வெகுகோபங்கொண்டு பயங்தவனாக ரதத்தினின்றும் குதித்து, அனேகபாரம் இரும்புகளால் அமைக்கப்பட்டதும், முனைகளிற் பொற்பட்டங்கள் கட்டப்படலுற்றதும், மிகுதியான மலர்களால் பூஜிக்கப்பட்டிருப்பதுமான ஓர் பெரிய கதையை எடுத்து சுழற்றி நிமிஷந்தோறும் அதைக் கைவிரல் நுனிப்பற்றுகவே சுற்றிப் பற்களைக் கடகட வென்று கடித்தும், பிரளய கால மேகம்போல் கர்ஜனை செய்தும், கீழுதடை மடித்துக் கடித்துக் கொள்வதனால் பார்ப்பதற்குப் பயங்கரமுற்றவனும், புருவங்களை நெரிப்பதனால் விகாரமுற்ற முகத்தையுடையவனும், மதம் பிடித்த யானை போன்றவனும், மஹா பயங்கரமுள்ளவனுமாக ஆயிரம் பூதகணங்களையும் கணாதிபர்களையும் அக்கதையாலடித்தும், பெரிய யானை போன்ற பராக்ரமமுடையவனாகக் கால்களாலும் கைகளாலும் சைன்யங்களை வீசியடித்தும் துகைத்தான். சைன்யங்கள் இவ்வாறு அடிபடுவதை லக்ஷம் பூதகணங்களும் நோக்கியபோது, துரிதமாக எதிர்த்துவிழுந்து, கிருஷ்ண சர்ப்பங்களுக்கு நிகரான மிகுதியான பாணங்களால் பிரளயகால மேகம்போல் தாரகாசுரன் மீது சரமாரி பொழிந்தார்கள். அக்கஜமுகாசுரனும் தனது கையிற் பற்றிய கதையினால் அப்பாணங்களை விரைவில் முறித்தெறிந்து மிகவும் கோபமூண்டவனாக மஹா வன்மையுடையதான அக்கதையினால் பூமியின்மீது ஓர் அடி அடித்தான். அக்கதையடியால் பூமி முழுவதும் பாளமாக வெடித்து இரண்டு துண்டாயிற்று. அப்போது அவனால் செய்யப்பட்ட சிங்க நாதத்தால் ஜகம் முழுமையும் செவிடாயிற்று. அக்கணங்கள் எல்லோரும் மிகக் கோபங்கொண்டு மறுபடியும் அவ்வசுரனைச் சுற்றி எல்லாத்திக்குகளிலும் வளைந்து கொண்டு அவ்வசுரன் பேரில் அனேக திவ்யபாணங்களைப் பிரளய காலமேகங்கள் உயர்ந்த பர்வதத்தில் மாரி பொழிவதுபோல் தொடுத்து வருஷித்தார்கள். எதிரிகள் திகிலடையலுற்ற பராக்கிரமம் உடையவனும், மஹாபுஜபல முள்ளவனுமான தாரகனும் கதையினாலந்தப் பாணங்களை எல்லாம் வீணாக்கித் தேவர் கூட்டங்களை எல்லாம், அவைகளின் குதிரைகளோடு சிதறச்சிதற அடித்துத் துவம்சமாக்கினான். மேலுமவன் அந்தக் கணங்களையும் வெகு கோபத்தோடு தண்டாயுதம் போன்ற தனது துதிக்கையினால் வாரிச் சமுத்திரமத்தியில் எறிந்துவிட்டான். அவர்களெல்லோரும் அச்சமுத்திரத்தினின்று கிளம்பி அங்கங்கேயொளிந்து கொண்டார்கள். இச்சமயத்தில் அளவிடப்படாத பராக்கிரமத்தையுடைய நவ வீரர்களில் ஒருவனான சாக்ஷாத் கேசரி போன்ற வீரகேஸரி

என்றவன், அவ்வியானை முகனாகிய தாரகனை எதிர்த்து, எண்ணற்ற பாணங்களை, மாரிகாலத்தில் மேகங்கள் மலை மீது பொழிவதுபோல் அவன் மீது வருஷித்தான். அப்போதவ்விருவர்களுக்கும், விருத்திராசுரனுக்கும் இந்திரனுக்கும் நேர்ந்த யுத்தம் போல் யுத்தம் நடந்தது. அப்போது தூளிகளால் படை வீரர்களை மறைக்கலுற்ற அம்மஹா யுத்தத்தில் அவர்கள் சண்டை செய்ததானது, மன்மதனுக்கும் சம்பராசுரனுக்கும் நேர்ந்த யுத்தம்போல் இருந்தது. அப்போது வீரகேஸரி மிகக் கோபம் கொண்டு, அசுரனைப் பாணங்களால் நிரப்பி மறைத்துவிட்டான். பிறகு மஹா தீரனும், கை லாகவமுற்றவனும், மிக பிரதாபவானுமாகிய தாரகனும், "அடா! எங்கே தப்பினாய்? நில் நில்." என்று அதட்டி க்ஷணம்தோறும் வில்லையசைத்துக் குணத் தொனி செய்த பேரொலியால் திசைகள் எங்கும் செவிடாக்கி வீரகேஸரியாகிய மேகத்தால் பொழியப்பட்ட சரமாரியை ஓர் நொடியில் நீக்கிவிட்டு பூண்கள் கட்டிச் சாணை பிடித்தும், கிருஷ்ண ஸர்ப்பம் போன்ற முகமுடையதாக ஜாஜ்வல்யமானவைகளும், அவனது பெயர் முத்திரையைப் பெற்றவைகளுமான அநேக பாணங்களைப் பிரயோகித்து, அடிக்கடி அனேக விதமாகச் சிங்கநாதம் செய்தான். பிறகு வீரகேஸரியும் கொஞ்சமேனும் அஞ்சாமல் அப்பாணங்களை யெல்லாம் பாதிமார்க்கத்திலே பொடிப் பொடியாகத் துண்டித்து, பிறகு மஹா கோபம் கொண்டு, கண்கள் சிவக்கலுற்று நகைத்து, அத்தாரகனுடைய கிரீடத்தைப் பத்துபாணங்களால் உடைத்துவிட்டு, கையோடு கைதட்டிப் பலதடவை சிரித்தனன். அப்போது ஆகாயத்தினின்றும் தேவர்கள் மலர்மாரிபொழிந்தார்கள். அம்மலர்களில் மொய்த்தவண்டுகளுடைய ரீங்கார வோசையால் திசையெங்கும் ஓசைகொள்ளலாயிற்று. மிகவும் பல கர்வங்கொண்டதாரகனும், மிகுந்த கோபத்தினால் கண்கள் சிவக்கலுற்று வீரகேஸரியின் மார்பினில், கதையினால் கோபத்தோடு வேசமாய் அடித்துவிட்டு, இரு கைகளையும் உயரத் தூக்கிக் கொண்டு, கல கலவென்று நகைத்தான். அவ்வடியால் வீரனும் மிகவும் நொந்து மூர்ச்சையடைந்தான். அப்போது சகல அசுரர்களையும் கொல்லலுற்ற அளவிடப்படாத மகிமைகொண்டவீரபாகு, துராத்துமாவாகிய தாரகனுடைய அப்பராக்ரமத்தை நோக்கி, வீரர்களால் சூழப்பட்டவராகத் தேர் மீதேறியத்தாரகனை யெதிர்த்து, போர்க்களத்தில் அசுரர்களை யெல்லாம் பலவாறு யதட்டி "அடா துராத்மாவாகிய துஷ்டா! எங்கே ஓடுகிறாய்? நில் நில்! நம் கண்ணிற்பட்டும் இந்நேரம் பிழைத்திருக்கின்றாயல்லவா? இனி நம்முன்னர் சண்டையில் நேர்ந்தபிறகு எங்ஙனம் உயிர்தப்பித்திரும்பிப் போவாய்" என்றுரைத்த வீரபாகுமுன்னர், பார்மீது மஹா தீரனான பெரிய அசுரனானவன் அதிசீக்கிரத்தில் தேவேந்திரன் முன்னர் மலையெதிர்த்து நின்றாற்போல் சண்டைக் கெதிர்த்து நின்றான். அப்போதவர்கள் செய்து கொண்ட யுத்தமானது மது என்ற அசுரனும் ஸ்ரீவிஷ்ணுவும் செய்த யுத்தம்போல் இருந்தது. அப்போது அந்தயுத்தத்தைப் பார்க்கவிருப்பமுற்ற சிரேஷ்டர்களான யக்ஷர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள், அப்ஸரஸ்திரீகள் ஆகிய எல்லோரும் ஆகாயத்தில் திக்கு விதிக்குகள் எல்லாம் எங்கும் மறைத்து நின்றனர். மஹாபராக்ரமசாலியான தாரகனும் தேர் மீதேறி வில்

லெடுத்து நாணேறிட்டுக் குணத்தொனி செய்ததால் உலகெல்லா மொலியால் நிரம்பியது. போர்க்களத்தில் அவன், வீரபாகுமீது புதனும் சுக்கிரனும் சேரும் போதுமாரிகாலத்தில் மேகம் பொழிவதுபோல், சரமாரிபொழிந்து, பெரியமலை மீது மழை சொரிந்து மறைப்பதுபோல் பாணங்களால் மறைத்துவிட்டான். பிறகுபாணங்கள் எல்லாம் ஒன்றோடொன்று பின்னலுற்று ஆகாயத்தில் கூடாகப்பரவி யெங்கும் இருள்சூழ்ந்தபோது, அளவிலா மகிமை கொண்டவரும், புலன்களின் அடக்கமுள்ளவருவான வீரபாகுவும் நகைத்து ஸ்ரீபரமேச்சுவரன் மஹாமேருபர்வதத்தை வில்லாக எடுத்ததுபோல் வில்லெடுத்து, நகங்களின் நுனியால் நாணைமீட்டி மஹாமனோதைர்யத்தோடு நிதானித்து, அச் சரக்கூடுகளை எல்லாம் பதினொன்கு பாணங்களால் மிகுந்த கைலாகவத்தினாற் சின்ன பின்னமாக அறுத்துவிட்டது மிக ஆச்சர்யமுள்ளதாயிற்று. அச்சரமாரி நீக்கப்பட்டு, சூர்யனைமறைத்துக் கொண்டிருந்தது திறக்கப்பட்டபோது, சகல உலகங்களும், தேவர்களது மனதும் தெளிந்து பிரகாசிக்கலாயிற்று. பிறகு தாரகனும் வீரபாகுவினுடைய அவ்வாச்சர்ய கிருத்தியத்தைக் கண்டு, மிகுந்தகோபமுற்றவனாகித் தினந்தோறும் மலர்களால் அர்ச்சிக்கப்பட்டுவந்ததும் மணிகளாலும், சாமான்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், மிகபயங்கரமானதுமான முச்சூலத்தையெடுத்து அதையோர்கையால் விளையாட்டாகவே கரகரவென்று சுழற்றினான். பிறகு அவ்வசுரன் ஜாஜ்வல்யமான அம்முச்சூலத்தினால் மிகுந்த ஜ்வாலாமாலையோடுகூடிய பிரளயகாலாக்கினியைப்போல் விளங்கலுற்றனன். அம்மகாபலசாலியான அசுரன் அச்சூலத்தை விரபாகுமீது விளையாட்டாகஎறிந்தனன். அப்போது தடுக்கமுடியாததும், மஹாபயங்கரமானதும், தீக்ஷ்ண்யமான முனைகளைக் கொண்டதுமாகிய அச்சூலம் வீரபாகுவின் மார்பினில் விழுந்ததால் அவன் கொஞ்சநேரம் மூர்ச்சையடைந்தனன். இதைமற்ற எழுவீரர்களும்கண்டுமஹாதீரனும், மிகக்கொடூரம் உள்ளவனுமான தாரகாசுரனை தங்களோடும், பலவித ஆயுதங்களோடும் சூழ்ந்துகொண்டார்கள். மதங் கொண்ட யானைபோன்ற பராக்ரமசாலியான அசுரனும் அவ்வேழுபேர்களாலும் வருஷிக்கப்பட்ட ஆயுதங்களை எல்லாம் துதிக்கைபோன்றகையிற் பிடித்த ஓர் தடியால் மறித்தெறிந்து, மறுபடியும் அவ்விரும்புக் கதையினால் அவர்களை அடித்து நோகச்செய்தான். அப்போதவர்கள்முறியடிக்கப்பட்டோட்டம் பிடிக்கையில், சத்துருக்களைத் தொம்சம் செய்யலுற்ற வீரபாகுவும் மூர்ச்சை தெளிந்து அதனால் உண்டாகிய களைப்பையும் தீர்த்துக்கொண்டு கோபத்தினால் மிக ஆக்கிரகம் கொண்டவராகித் தாரகன்மீது சரமாரி பொழிந்தனர். அப்போதத்தாரகனும் தனதுவில்லை நாணேறிட்டுக் குணத்தொனி செய்வதனால் பயங்கரனாகித் தனது கைலாகவத்தை நன்கு தெரிவித்தவனாக அனேக பாணங்களைப் பிரயோகித்து, அச்சரமாரியைப்பாதிவழியிலே துண்டித்துவிட்டு, போர்முனையில் வீரபாகுவைப் பாணங்களால் நிரப்பி மறைத்தனன். மஹா பராக்ரமசாலியான அவ்வீரபாகுவும் அவற்றையும் பாதிமார்க்கத்தில் துண்டித்துவிட்டு, சிங்கம் போல் அந்த யானைமுகனைப் பல கம்பீரவார்த்தைகளால் அதட்டி, "அடா துஷ்டா! நில் நில்! நீ நம்முன்னின்று பிழைத்துப் போவதில்லை." என்றிவ்வாறாக வீரபாகு உரைக்கையில், அசுரன் கடுஞ்சினங் கொண்டு கூறியதா

வது:—" அடா! வீரபாகுவே! நீ எமது சௌர்யத்தை அறியாமல் வீணுகப் பிதற்றுகின்ருய். அனேக சூர்யர்களுக் கொப்பானதும் சத்துருக்களைத் தொம்சம் பண்ணலுற்றதுமான விஷ்ணு சக்கிரமானது முந்தியவனுற் சண்டையில் எம்மீது பிரயோகிக்கப்பட்டபோது அஃதெனது கையினுற் பிடிக்கப் பட்டது. இந்திரனுடைய வஜ்ராயுதம் அக்னியினுடைய சக்தியாயுதம், யமனுடைய தண்டாயுதம், நிருதியின் கத்தி, வருணனின் பாசம் வாயுவின் துவஜாயுதம், குபேரனது கதை, ஈசானனது சூலாயுதம் இவையெல்லாம் என்னுல் முறிக்கப்பட்டன என்பதை நீ அறி. மேலும் பிரஹ்மாஸ்திரம் கூட எனது புஜபல பராக்ரமத்தினுல் தடுக்கப்பட்டது. அவர்களும் என்னுற் பல தடவைகளில் போரில் முறியடிக்கப்பட்டோடிவிட்டார்கள். இப்போது நீ பார்த்துக் கொண்டிருக்கையில், உனது பூதசேனைகளும், எட்டுத் தம்பிமார்களும் ஜயிக்கப்பட்டார்கள். இப்போதுன்னையும் ஓர் நொடிக்குள் சண்டையில் ஜயித்து உனது எஜமானனையும் சகல சைன்யங்களையும் இப்போதே ஜயிக்கின்றேன்; பார்." என்றனன்.

## 40 அத்தியாயம்.

பிறகு இவ்வாருகக் கர்ஜனை செய்த, மதத்தினுல் மெய்மறந்தவனும், தனதுகை நுனியால் திசை மண்டலத்தையும், காலசக்கிரமென்ற சிம்சுமார சக்கிரத்தையும் பற்றுகின்றவனும் ஒருவராலும் எதிர்க்கப்படத் தகாதவனுமான தாரகனை அளவிடப்படாத மகிமைகொண்ட வீரபாகுவானவர் தனது பெயரின் முத்திரையைக் கொண்டவையும், அனேகம் பொற்பூண்கள் கட்டப்பெற்ற அடிகளையுடையவையும், ஜ்வலிக்கலுற்ற அக்னியைப் போன்றவையும், இம்மூவுலகினிலும் பழுது பெருதவையுமான அனேக நாராச பாணங்களால் வெகு கோபத்தோடு தொடுத்து நிரப்பினர். தாரகனும் அவரது போர்த்திறமையை மெச்சி யப்பாணங்கள் தனதண்டை வருவதற்கு முந்தியே அவைகளைத் தன் பெயர்கொண்ட முத்திரையுள்ள ஆயிரம் நாராச பாணங்களால் கண்ட துண்டங்களாக்கிவிட்டனன். மிகவும் கைலாகவம் பெற்ற வீரபாகு, மறுபடியும் சாணை பிடித்துத் தீக்ஷண்யமாயுள்ள அனேக பாணங்களை யெய்தனர். மஹா வில்லாளியான தாரகனும் போரின்கண் அப்பாணங்களை மிகக் கூர்மையும், கொடூரமுமுள்ள பல பாணங்களால் தடுத்துவிட்டது மிகவும் ஆச்சர்யம் போலாயிற்று. மறுபடி அவ்வசுரன் பதினுயிரம் அம்புகளைப்பொழிந்தனன். வீரபாகுவும் அதேமாதிரியுள்ள அவ்வளவே சரங்களால் அவைகளை விலக்கிவிட்டனர். பிறகு அம்பெய்வதிலான அவரது அக்கைலாகவத்தைக் கண்ட தாரகன் வெகு கோபமுற்று விரைவில் மற்ருேர் பிரளய காலாக்னியைப் போல் புகைந்தெறிந்தவனுகி, மிக அற்புதமாகிய ஆக்கிநேயாஸ்திரத்தை வில்லில் தொடுத்துப் பிரயோகம்செய்கையில், அதனின்றக்கினியானது ஆயிரம் ஜ்வாலாமாலைகளோடு அண்டகடாகம் வரையில் உலக முழுதும் வியாபித்துச் சடசட வென்ற தொனியோ செறிந்தது. இவ்வாருக ஜக முழுமையும் நெருப்பா யெரிவதைக் கண்டு ஸ்வர்க்கத்தில் தேவர்கள் நடுக்கம் கொண்டார்கள். உடனே வீரபாகுவும் புன்னகையுற்றுக் கோபா

வேசங் கொண்டவராகி அதற்குப் பிரதியாக ஆக்கினே யாஸ்திரத்தையே பிரயோகம் செய்து அதிசீக்கிரத்தில் அடக்கிவிட்டனர். இந்தக் காரணத்தால் தான் உலகினில் உஷ்ணமானது உஷ்ணத்தாலே தணிகின்றதென்பது ஓர் ஆச்சர்ய வதந்தியாகப் பரவுகிறது. பிறகு யானை முகனும் வெகு கோபத்தோடு வருணாஸ்திரத்தைப் பிரயோகம் செய்கையில் சகல ஜகங்களும் ஓர் க்ஷணத்துக்குள் மாரிக்காலத்தைப்போல் மேகங்ளால் மூடப்பட்டு, அனேக மின்னல்களுடனும், இடிமுழக்கங்களுடனும் கீழ்க்காற்றினுல் குவித்துச்சேர்க்கப்பட்ட மேகங்களால் நிறைபலாயிற்று. வெகு கோபக்காரரான வீரபாகு வானவர் இவ்வருணாஸ்திரத்தைக்கண்டு கோபத்தினுல் தேகம் அறியாதவராகி அதை வாயவியாஸ்திரத்தால் தடுத்துவிட்டனர். அதனுல் அரைக்ஷணத்துக்குள் அசாத்தியமாய் மூடியிருந்த மேகத்திரள்கள் கலேந்து போய் க்ஷணத்துக்குள் அனுவிருஷ்டிகாலம் சம்பவித்தது போல் வெட்ட வெளியாயிற்று. எல்லாத்திசைகளும் ஆகாயமும் நிர்மலமாயின. வானத்தினின்று மாரி சொரிவதுபோல், சித்தர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள் இவர்களின் கூட்டத்தினின்று நிர்மலமாகிய மலர்மாரியானது வீரபாகுவினுடைய ரதத்தின் மீது பொழியலுற்றது. மறுபடி தாரகனும் சீக்கிரத்தில் சூர்யாஸ்திரத்தைப் பிரயோகம் செய்தனன். அப்போது எல்லாத் திசைகளிலும் பிரளய காலத்தில் உலகங்களே எரிப்பதற்குண்டாவதுபோல் அனேகம் ஆயிரம் சூர்யர்கள் ஏககாலத்தில் உதயமாயினர். அது கண்டு வீரபாகு வருணாஸ்திரத்தைச் சந்தானஞ் செய்ததால், அனேக மேகங்கள் உண்டாகி அச்சூர்யர்களே மறைத்துவிட்டன. அப்போது தாரகன் சந்திராஸ்திரத்தைத் தொடுக்க அதை அதே அஸ்திரத்தாலே அவரும் தொலேத்துவிட்டனர். இவ்வாறுக க்ஷணத்துக்குள் இந்திராஸ்திரத்தை இந்திராஸ்திரத்தாலும், யமாஸ்திரத்தை யமாஸ்திரத்தாலும், நிருதியஸ்திரத்தை நிருதியஸ்திரத்தாலுமே வீரபாகு தடுத்து விட்டனர். பிறகு அசுரன் ஓரிடத்தும் பழுதுபெருத பிரஹ்மாஸ்திரத்தைப் பிரயோகம் செய்கையில், அது சகல ஜகங்களேயும் அடியோடு நாசஞ்செய்வது போல் வானத்திற் கிளம்பலானதை வீரபாகு அதிசீக்கிரத்தில் அதே அஸ்திரத்தினுல் அழுத்திவிட்டனர். பிறகு மிக்க அஸ்திரப் பயிற்சியுள்ள அசுரன் அதிக கோபங்கொண்டு சகல சத்துருக்களேயும் கருவறுக்கலுற்ற வீரபாகு மீது நாராயணாஸ்திரத்தை யேவினன். அவரதையும் அலக்ஷியமாகவே அதே அஸ்திரத்தினுல் நிவர்த்தித்தனர். பிறகு மாயாவியாகிய அசுரன் வீரபாகுவினுடைய மிகுந்த பராக்ரமத்தைக் கண்டு, அதிக ஆக்கிரகம் கொண்டு, தூளிகளால் மிக இருண்டு கண்ணுக்கொன்றும் தெரியாதிருக்கையில் மாயா பலத்தினுல் பற்பல உருவங்களே எடுத்துப் போர்முனையிற் சண்டை செய்து ஒவ்வோருருவத்தாலும் அனேக திவ்யாஸ்திரங்களேப் பிரயோகம் செய்தனன். வீரபாகுவும் யுத்தரங்கத்தில் அவ்வஸ்திரங்களால் சூழப்பட்டவராகி, சகல சத்துருக்களேயும் கொல்லலுற்ற வீரபத்திராஸ்திரத்தைப் பிரயோகம் செய்தனர். அதைக் கண்ட மாத்திரத்தில் மாயைத் தன்மையாலுண்டான அவை யெல்லாம் நசித்துவிட்டன. மகா மாயாவியான அசுரனுனவன் மறுபடியும் அனேக அஸ்திரங்களேப் பிரயோகித்து, மாயையினுல் தானிருந்து

சண்டை செய்வது போல் வீரபாகுவைப் பிரமிக்கச் செய்து சீக்கிரமாய் ஓர் க்ஷணத்துக்குள் சுண்டெலி வளையில் நுழைவதுபோல் ஓர் குகைக்குள் நுழைந்துவிட்டான். வீரபாகுவும் அது கண்டு திரும்பி போடுவோனைக் கொல்வது தகுதியல்லவென்று மனதிற் கருதி பிரயோகித்த வீரபத்திராஸ்தி ரத்தை மீட்டும் ஆகர்ஷித்துக்கொண்டனர். பிறகு வீரபாகுவானவர், அசுரன் போன வழியோடே பார்ப்பதற்குத் தகாததும், மஹாகோரமும், மஹாரௌ ரவமென்ற நரகத்துக்குச் சரியானதுமான கிரௌஞ்ச பர்வதத்தின் குகைக் குள் நுழைந்துசென்றனர். மஹாமாயாவியும், அசுராதமனுமான அக்கிரௌஞ் சன் அசுர அரசனுகிய தாரகனது சொற்படி பலவித மாயைகளால் பிரமை கொள்ளச் செய்தான். அப்போது குருட்டிருள் என்ற மஹா நாகம்போல் அங்கெங்கும் மிக அசாத்தியமான அந்தகாரத்தால் மூடப்பட்டது. முந்தி அம்மலையினுள் பற்பல வழிகள் தோன்றின அனேகவிதங்களும் மிகப் பயங் கரமுமாகிய அவ்வழிகள் எல்லாம் அங்கங்கு மறைக்கப்படலாயின. வீரரும் அவ்வெல்லா வழிகளிலும் போய்ப் போய்த் திரும்பினர். கேளீர் சௌன காதிமுனிவர்களே! அவர் அக்கிரௌஞ்சனுடைய மாயையாலே தாரக னைக் காணக்கூடாமல் வெகு நேரமளவும் சித்தத்தில் மிகுந்த சிந்தை கொண் டனர். அந்தருணத்தில் அத்தகைய மஹாவீரனே இவ்வாறு மனத்துன்பம் கொண்டிருக்கையில், உலகினில் மற்றயாவராலும் செந்தேயிருக்கவேண் டும் என்பது நிச்சயம். "யாம் வேறோ! அல்லது நமக்குக கலக்கமோ! இல்லையாகில் கனவோ! இல்லாவிடில் நமக்குப் பிரமமோ! ஓ இவை நம் கை கள் அல்ல; இவைவேறு, வில்லும் வேறு, அம்புகளும் நம்முடைமையல்ல. சுற்றிலும் அடைக்கப்பட்டிருக்கிற மார்க்கத்தில் எங்குத்தான் போவதற்குத் தகும்!" என்றிவ்வாறாகக் கலக்கமுற்ற வீரபாகுவுக்குச் சித்தம் மிகுதியாகப் பிரமம்கொண்டது. இவ்வாறாக வீரபாகு தாமதிக்கையில் வீரகேஸரி முதலிய எட்டு வீரர்களும், இலக்ஷம் பூதகணங்களும் ஐம்பத்திஞன்கு கணாதிபர்க ளும் அவர் போனவழியாகத் தொடர்ந்து, கொஞ்சமேனும் யோசிக்காமல் பலத்தினுல் மதோன்மத்தர்களாக, உயிர், சுகம் முதலியவைகளைச் சற்றே னும் பாராட்டாமல் அக் குகையினுட்புகுந்தனர். அசுராதமன் அவர்களுடைய மார்க்கத்தையும் அடைத்துவிட்டபடியால், அக்குகைக்குள் நுழைந்த மாத்தி ரத்தில் அவர்களும் மயக்கிப்போனதைக்கண்டு அவன் ஜயம் கைக்கு வந்துவிட் டதாக நினைத்தான். இவ்வாறாக அவ் வீரர்கள் எல்லோரும் கிரௌஞ்சகிரியின் குகைக்குள் அடைக்கப்பட்டானபொழுது, பலசாலியான அக் கொடியதார கன், பெரிய ரதத்தோடுவெளிவந்து, அசுரர்களது உயிரை வாங்கலுற்றவர்க ளும், மஹாபயங்கரர்களுமான கணங்களைக் கொல்லக் கருதியதற்காக முற் றும் சன்னத்தமாகிய பிறகு நாணேடு வில்லையும், என்றும் அக்ஷயமான பாண ங்களையுடைய அம்பறாத்தூணிகளையு மெடுத்துக்கொண்டு, ரதத்தின் மீதேறி க்கொண்டு, வீரபாகுவைத் தொடர்ந்துவந்த ஸ்ரீஸேநானியுடைய சேனைகளைத் தொம்ஸம்செய்தனன். அச்சேனைகளும், நடத்துவதற்கான தளகர்த்தன் அற் றிருந்தும், அனேகவித ஆயுதங்களோடு அவ்வசுரனுடன் வெகுநேரம் அள வும் வலிமையாக யுத்தம் செய்தது மிகவும் ஆச்சர்யம் போலாயிற்று. அவர்

கள் கற்களாலும், அனேக விருக்ஷங்களாலும், மஹா பெரியவைகளான மலைகளாலும் நூற்றுக்கணக்குகளாகவும் ஆயிரம் கணக்குகளாகவும் எறிந்து, வெகுதைர்யத்தோடு போராடினார்கள். யுத்தத்திற் கைதேர்ந்த தாரக சத்துருவானவன் ஒருவனுயிருந்து அனேகம் சைன்யங்களுடன் போராடுகையில் மஹா கோபமுற்றவனாகி அப்பெரும்சைன்யங்களால் வருஷிக்கப்பட்ட அம்புகள், கற்கள், மலைகள் முதலியவற்றைச் சிதல் சிதலாகத் தவிடுபொடியாக்கினன். மஹா மனோதைர்யமுடைய சகல அசுரர்களுக்கும் அதிபதியான தாரகன் மதம்மேற்கொண்டயானையானது கடுஞ்சினத்தோடு அனேகம் கமல மலர்களால் நிறையலுற்ற தடாகத்திலிறங்கிச் சின்னபின்னமாக்குவதுபோல் தேவசேனைகட் கதிபதியாகிய ஸ்ரீசுப்ரமண்யனுடைய தளங்களைக் கலக்கலுற்றனன்.

## 41 அத்தியாயம்.

பிறகு நாயகனற்ற வீரபாகுவின் பெரும்சேனைகள் முறியடிக்கப்பட்டவர்களாகிப் பாதுகாப்போரில்லாமல் ஹா ஹா என்றுகதறி மிக ஆதுரர்களாக ஆயினர். அவர்கள் இவ்வாறாக மிகவும் பீடிக்கப்பட்டு ஒருவர் போனவழியில் ஒருவர் போகவழியில்லாதாயினர் அவர்களில் ஒவ்வொருவரும் கர்ஜனைசெய்கின்ற தாரகனால் தீக்ஷண்யமான் பாணங்களாலடிபட்டு உயிரைக் காப்பதிற் கவலையுற்றவராகித் திக்குவிதிக்காய்ச் சென்றோடிவிட்டார்கள். விஷ்ணுமுதலிய தேவர்களும் மிகவும் பயந்து நடுக்கமுற்றார்கள். இவ்வாறு கதறுதலையும் தேவர்களுடைய பயத்தையும் நாரதமுனிவர் கண்டு சீக்கிரத்தில் தேவசேனாபதியாகிய கந்தபிரான் முன்பாகச் சென்று, மஹாவித்வானாகிய அச்சுப்ரமண்ய சுவாமியை மிகுந்தபக்தியுடன் வந்தனித்து மன அச்சத்துடன் கைகட்டி வாய்பொத்தி நின்று பின் வருமாறு கூறினர்.:—ஓ பகவானே! இப்போது நமது வீரபாகுமுதலியவர்களும் கணங்களும் கிரௌஞ்சகிரியின் குகைக்குள் புகுந்து பிறகு திரும்பிவரவில்லையே! பிரவுவே! ஜகதீசா! அவர்கள் அசுரமாயையால் பிழைத்திருக்கிறார்களோ இல்லையோ தெரியவில்லையே! அவ்வீரபாகுவின் சேனைகள் எல்லாம் திசையெங்கும் ஓடி ஒளித்தன. தேவர்களுடைய நெஞ்சத்திலும் அசுரபயம் இரட்டித்துவிட்டது. ஓ தேவாதி தேவா! இவ்வாறு பெரும்பீதியினின்றும் எப்போதும் எங்களைக் காப்பாற்ற வேண்டும்.'' என்று நாரதமுனிவர் கூறியதை ஸ்ரீ மஹா தேவரது புதல்வன் கேட்டருளிய க்ஷணத்தில் எரிந்துவிடுவதுபோற் கோபத்தினால் கண்கள் சிவக்கலுற்றுத் திருவாக் குரைத்ததாவது:—ஓஹோ! இப்போதே துராத்துமாக்களாகிய அசுரர்களின் குடியை அடியோடு வேர் அறுத்துவிடுகிறோம். இப்போதே தேவர்கள் அசுரபீதியை விட்டுவிடட்டும். உலகில் எம்மைச் சரணம் அடைந்தவர்களுக்குப் பயம் ஏது? அழிவு தான் ஏது? இச்சகத்தில் நமதடியார்களுக்குப் பகைஞர் ஏது? பிணியேது? யாதாமொரு மானிடப் பதரானவன் அறிவீனத்தால் எமதடியார்களைப் பகைக்கின்றானோ அவன் நம்மையே பகைத்தவனாகின்றான். நமக்கபராதம் செய்வோனை மன்னிப்போம். அத்துராத்மாவை ஒருக்காலு மன்னியோம். இந்திரனால் ஆதரிக்கப்படினும் அவனைத் தொலைத்து விடுவோம். பார்தனில் நமதடியார்களை

ஆதரிப்போரையே யாம் காப்பாற்றுவோம். இதோ ஓர் நொடியில் அசுராத மனுகிய கிரௌஞ்சனைப் பிளந்தெறிந்து அவனது மாயையால் பிரமை அடைந்திருக்கிற வீரபாகு முதலியவர்களையும் எழுப்பி விடுகின்றோம். யுத்தத்தின் கண் முந்திய தாரகாசுரனை யோர் நொடியிற் கொல்லுகின்றோம். அவனே, துராத்துமாக்களாகிய அசுர சைன்யங்களுக்கும் அவனது சகோதரர்களாகிய சிங்கமுகன், சூரபதுமன் இவ்விருவர்களாகிய எல்லோர்களுக்கும் ஸமயமினி என்ற யமபட்டணத்தில் சீக்கிரமாக இடந்தேடி வைக்கட்டும். வாரீர் வாயுதேவனே! நீர் இப்போது சீக்கிரத்தில் குதிரைகளை இரதத்திற் பூட்டி ஓட்டுவதில் உமக்குள்ள ஸாரத்தியத் திறமையை நன்கு தெரிவிப்பீர்.'' என்று வாயுதேவன் ஸ்ரீ சுபரமண்ய சுவாமியால் ஆதரவோடு கட்டளையிடப்பட்டதன் பேரில் தேரின்கண் லக்ஷம் குதிரைகளையும் பூட்டியோட்டினன். அப்போது தேவ துந்துபினர் சங்கங்கள், கொம்புகள் ஆகிய இவ்வெல்லாவாத்தியங்களும் ஆயிரம் ஆயிரங்களாயுள்ள நிஸ்ஸானம், முரவம் டிண்டிமமாகிய இவ்வாத்தியங்களும் கோஷிக்கலுற்றன. முனிவர்களோடு தேவர்கள், 'ஜயவிஜயீபவா' என்றது முதலான மங்கள வாக்கியங்களைப் படித்தார்கள். வந்திகள் எல்லோரும் கட்டியம்கூறினர்கள். வைதாளிக் கணங்கள் (ராஜாக்களை விடியற்காலத்தில் எழுப்புவதற்காகத் துதிக்கின்ற பாடகர்கள்) எல்லாம் அளவற்ற பராக்ரமம் உடைய ஆறுமுகனது பிருதாவளி கீதங்களைப் பாடினர்கள். எக்காளம் போடுவோர்களும், கர்ஜனை செய்வோர்களும், கூத்தாடுவோர்களும் தொடர்ந்து கூத்தாடுவோர்களுமான காலாட்களுடைய சப்தங்கள் திசையெங்கும் பரவி மேலுக்கு மேல் விருத்தியாயின. குதிரைகளின் கனைப்புகளும், யானைகளின் பிளிறுதல்களும், தேர்க்கால்களின் க்ரீங்கார ஓசைகளும், கடலோசைக்கு மேற்பட்டதாயின. அப்போது ஸேனாதிபதியாகிய ஸ்ரீகந்தபிரானுடைய ஸேனையானது அசுரப்படைகளை வளைந்துகொண்டது. அப்படைகளும் கடலைக் கடலெதிர்த்தது போல் எதிர்த்துக் கொண்டது. பிறகங்கு வீரவாதத் தொனியால் மட்டில் எதிரி வீரரைத் தெரிந்துகொள்ளும்படியான புழுதியிருளில் மிகப் பயங்கரமும் ரோமங்களைச் சிலிர்ப்பிக்கலுற்றதுமான யுத்தம் நடந்தது. அப்போது 'பிடி அடி இப்போதெங்குச் செல்லுகின்றாய்? நில் நில்' என்று கோபத்தோடு சூரர்களால் கூவப்பட்ட அட்டகாசவார்த்தைகள் கேட்கப்பட்டன. முந்தி ஸ்ரீ சம்பு புத்திரனுடைய சேனையானது அசுர சேனையை வெற்றிபெற்றது. பிறகு அசுரசேனை இதையும், இது அதையும், மறுபடி அது இதையுமாக, கடலின்கண் கீழ்க்காற்றினாலும் மேற்காற்றினாலும் ஒன்றோடொன்றடித்து மோதிக்கொள்ளப்பட்ட பேரலைகள்போல், ஒன்றோடொன்றடித்துக்கொண்டு மாறி மாறி வெற்றி கொண்டது. இதற்கிடையில் தாரகாசுரன் தன்பக்கத்தில் நின்ற ஓர் சாமர்த்தியசாலியான தூதனைப் பார்த்து அவன்கையைப் பற்றிக்கொண்டுரைத்ததாவது:—"வாராய்! தூதா! அதோ பற்பல ரத்னமயமானதும் விசித்ரமானதுமான துவஜத்தினால் அலங்கரிக்கப்பட்டதும், சுவர்ணமயமான மற்றோர் மஹாமேருபருவதம் போன்றதுமான ரதமானது, இச் சேனைக் கடல் நடுவில் கப்பல்போல் விளங்குகின்றதே, அது யாவருடைய தென்பதையிப்போது நீ

சொல்வாய், அதன்கண் கோடிசூர்யப் பிரகாசம் உள்ளவனும், திசைகள் எல்லாம் ஒளியால் பிரகாசிப்பிக்கின்றவனும், உலர்ந்தகாட்டினில் பற்றிய பிரளய காலாக்கினியைப்போல் போர்முன்னர் கண்கொண்டு பார்க்க முடியாதவனும், தேவ சைன்யங்களால் முற்றும் வந்தனிக்கப்படுவோனும், எல்லையற்ற வல்லமை கொண்டவனுமாக விளங்கிய இவன் யார்? என, அசுரப்பிரபுவாகிய தாரகனை நோக்கி அவ்வேவுகாரன் வந்தனித்து வாய்பொத்தி நின்று விண்ணப்பம் செய்து கொள்வதாவது:—"வாரீர் மஹா வித்துவானாகிய அரசனே! நான் கூறிய எனது விண்ணப்பத்தை ஆலசியமின்றிக் கேட்க வேண்டும். சகல லோகங்களையும் நடத்துவோரும், யாவராலும் எதிர்க்கப்பட முடியாதவரும், ஸ்ரீவிஷ்ணு முதலிய ஸகல தேவர்களையும் ரக்ஷிப்பதில் மனங்கொண்டவரும் சிவமைந்தனுமான கந்தர் என்னும் மஹாபிரபு என்பவர் எவரோ, அவரே இவர். ஸம்பூரணமான பராக்ரமங்களை உடையவர். சரணடைந்தோரைக் கைவிடாது காப்பாற்ற வல்லவர். பலம், சத்தியம், தைர்யம், ஸாமர்த்தியம், வில்வித்தை இவைகளில் ஜகங்களுக்குக் கர்த்தாவும், ஸர்வஞ்ஞனுமாகிய ஸாக்ஷாத் ஸ்ரீ மஹேசுவரனிலும் மேலானவர். இவரது ஸௌந்தர்யமோ மன்மதனுடைய கர்வத்தை முற்றும் அடக்குவதற்கான பெரிய ஔஷதமாகும். மன்மதன், யமன், திரிபுராசுரர்கள், இவர்களையும் ஹாலஹால விஷம், தக்ஷன்வேள்வி இவைகளையும் நாசம்செய்த, சந்திரனை உச்சி யலங்காரமாய்க் கொண்ட ஸ்ரீ ஜகதீசன்கூட இவர் முன்னர் சண்டைக்கு நிற்கத் திறமையற்றவராவார். இங்ஙனமாயின் உலகில் மற்றெந்த வில்லாளி தான் இவர் முன்னர் நிற்பதற்கு வல்லவர்? ஆனதுபற்றித் தேவர்களைக் காப்பவரான இத்தகைய பெரியவரைப் புத்திரனாக அடைந்த அச்சிவபிரானே உலகினில் தன்னியருக்கெல்லாம் தன்னியர் என நினைக்கிறேன். இந்த லோக குருவானவர் ஸ்ரீ சிவபிரானாகிய தீபத்தினின்றும் ஏற்றப்பட்ட தீவட்டிபோலானவர்" என்றனன். இவ்வாறாகத் தூதனாற் சொல்லப்பட்ட வசனத்தைக் கேட்ட தாரகன் தனது ஸாரதியைப் பார்த்துக் கம்பீர தொனியுடன் வசனமுரைத்ததாவது:—"வாராய் சாரதியே! யோகநாதனும் சூலபாணியுமான ஸ்ரீ ஜகதீசனது யாதொருமைந்தனானவன் ரதத்தின்மீது கோடி சூர்யப் பிரகாசமாய் விளங்குகின்றானே, அத்தகைய அச் சிறுவனிடத்திப்போது சிலவார்த்தை யுரைக்கும்படி இருக்கின்றது. ஆகையால் எதிர்த் தோராளியற்ற அவனது தேர்க்கெதிராக நமதுதேரை, கேளாய் மஹாபுத்திசாலியே! நமது கட்டளையின்படி சீக்கிரத்தில் தாமத மின்றி, ஓட்டி நிறுத்து." என்றறிக்கையிட்டனன். அவனது திறமைபெற்ற சாரதியானவன் மிகவும் வணக்கத்தோடு வாயுவேகம் மனோவேகங்களையுடைய தேர்க்குதிரைகளை விட்டுச் சீக்கிரத்தில் சுப்ரமண்ய சுவாமி ஸன்னிதியிற் சேர்ப்பித்தனன். தாரகனும் ரதத்தின்கண் விளங்கி நின்ற மன்மதனிலும் மிக சுந்தரத் திருமேனியுடைய ஸ்ரீ சம்பு குமாரனைக் கண்ணுற்றவுடன் ஓர் க்ஷணநேரம் இதுசெய்யத்தகும், இது தகாது என்பதை அறியாதவனாய் மோஹித்து நின்றனன். பிறகு கோடிசூர்யப்பிரகாசமும், கோடி சந்திரக்குளிர்ச்சியும் பொருந்தியவரும், அலர்ந்த கமல மலர்களையொத்த ஆறுதிருமுகங்களையும், பதினெட்டு நேத்திரங்களையும்

உடையவரும், பன்னிரண்டாயுதங்களோடு கூடிய பன்னிரண்டு கைகளால் அலங்காரம் உடையவருமான ஸ்ரீ சுப்ரமண்யனைக்கண்டு, "ஓ ஹோ! உலகங்களை நடத்துவோரும் உலகங்களுக்குப் பதியுமாகிய இத்தகைய உம்மை மைந்தனாக அடைந்த புவனங்களுக்குப் பரமேச்சுவரனாகிய ஸ்ரீ சம்புவே தன்னியன். நல்லது அஃதிருக்கட்டும் கேளீர் சுவாமியே! நானிப்போதுரைக்கின்ற எனதிவ் வசனத்தைச் சற்றுப்பிரீதியுடன் கேட்டுப்பிறகு மனம்போல் நடத்துவீர். கேளீர் பார்வதி நந்தனா! தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் ஜனனகாலமுதலாக ஒருவருக்கொருவர் பகை ஏற்பட்டதென்பது பிரசித்தமாகியதே. அதை விலக்குவதற்கு யாராலும் ஆகாது. நாங்களோ அவர்களைத் துவேஷிக்கின்றோம். அவர்களும் பலிஷ்டர்களாகிய எங்களைப் பகைக்கின்றார்கள். ஆனால் அவையெல்லாம் ஸ்ரீ சந்திரசேகரனது திருவருளாலேயன்றி வேறில்லை. நீரும் அச் சிவபிரானுடைய சுயரூபத்தைக் கொண்டவராகையால் அவர்போல் நீரும் எங்களால் பூஜிக்கப்படத்தக்கவர். இப்படி இருக்கையில், 'நீர் எவ்வாறு எங்களோடு போர்தொடுக்க வரலானீர்' என்பதைச் சொல்வீராக. விஷ்ணு முதலிய தேவர்களும் எங்களை வதைக்கலாவார்கள். நாங்களும் அவர்களை வதைக்கலாவோம். வாரீர் ஸ்ரீ சிவகுமரா! நீரோ என்றால் எங்களுக்கு சாக்ஷாத் பரப்பிரஹ்மமாகிய பரசிவம்." என்றனன்.

அசுரன் அவ்வாறுரைத்த வசனங்களைக் கேட்டு ஸ்ரீ பிரபு நகைத்து, அத்தாரகனை நோக்கி வருத்தமின்றி உத்தரம் உரைத்திட்டதாவது:— "அசுரர்களில் ரதத்தின்மீது வீற்றிருக்கின்ற நீ யாவன்? நீ யாதுநிமித்தம் நம்மிடத்து வந்து கலக்கின்றாய்? உன்பெயரென்ன? நீ இங்குவந்தகார்யமென்ன?" எனத் தாரகன்கேட்டு, ஸ்ரீ ஹரமைந்தனுக்கு மறுமொழி கூறுகின்றான். "ஓ ஸ்வாமி! உலகினில் சூரபதுமாசுரனுக்குத் தம்பியாகிய என்னைத் தாரகன் என்று சொல்வார்கள். எங்களுக்கு உங்களோடு ஒருக்காலும் கலகம் இல்லை." என, ஸ்ரீ கந்தமூர்த்தி உரைக்கின்றார்:— "கேளாய் தாரகா! ஸ்ரீ ஜகதீசனனவர் இவ்வுலகங்களுக்குக் கர்த்தா என்பதும், தேவாசுரர்கள் முதலிய எல்லோர்க்கும் பரமகுருஎன்பதும் பிரசித்தியல்லவா? அவர் இச்சகங்களை மஹா வல்லமை பொருந்திய சக்திகளால் செங்கோல் நடத்தி வருகின்றார். ஈச்சுவரன் அவ்வாறு செய்யாவிடில், அவர் எவ்வாறு உலகங்களுக்கு ஈச்சுவரனாவார்? இவ் வுலகங்களில் ஒவ்வொன்றும் ஓர் வரையறையைவிட்டு நீங்காமல் இருப்பதற்காக இச்சங்கரன் ஓர் எல்லையாக இருக்கிறார். ஆகையால் தான் அவர் ஓர் எல்லைக்கு நிர்வாஹியான ஸேது (அணை) எனப்படுகின்றார். உலகுகளைத் திருமேனியாகக் கொண்ட அப்பரமேச்சுவரனால் ஆதியில் தொழிலானது இரு வகையாகப் பிரிக்கப்பட்டது. விதிப்படி செய்யத் தகுவது ஒன்றும், விலக்கின்படி நீக்கத்தக்கது மற்றொன்றுமே. இவ்விதமாகிய ஸ்ரீ பரமேச்சுவரனுடைய திருக்கட்டளையானது தேவாசுரர்களாலும் அதிக்கிரமிக்கத் தகாததே. அவ்விலக்காகிய தொழிலைச் செய்வோன் துஷ்டனென்றும் மற்றதைச் செய்வோன் சிஷ்டன் என்றும் சொல்லப்படுவான். அத்திருக்கட்டளையை மீறி நடக்கின்ற துஷ்டன் ஸ்ரீ பரமேச்சுவரனுடைய தண்டனைக்குள்ளாகின்றான். அக்கட்டளைக் குட்பட்டு நடக்கின்றவனோ அவர தனுக்

கிரஹத்துக்குப் பாத்திரனுகின்முன். துஷ்ட சிஷ்டர்களுடைய வரை யறை யிவ்வாறிருக்க நீங்களோ உலகில் எப்போதும் முற்றும் தீயகாரியங்களையே நடத்திவருகின்றீர்கள். நாள்தோறும் பிராணிகளுக்குத் திங்களிப்போர்களும், யாகம் செய்தல், ஆலயப் பிரதிஷ்டை, வாபிகூப தடாகாதி நிர்மாணங்கள் முதலிய ஸத்கிருத்தியங்களுக்குக் கெடுதி செய்வோர்களுமாய் இருக்கின்றீர்கள். புவனங்கள் அனேக விதமாக உண்டாகி இருக்கின்றன; உண்டாகின்றன; உண்டாகவும் போகின்றன. எல்லாம் ஸ்ரீ ருத்திரஸ்வரூபமே யென்றும், அவரே எல்லா ஜகங்களுக்கும் கர்த்தா என்றும், அச்சகங்களுக்கு மேன்மை கொண்டவர் அவர் தான் என்றும் வேதம் கூறுகின்றது. ஸ்தாவர ஜங்கம வடிவமாக இருக்கிற ஜகமே அவரது திருமேனி; அச்சகத்தாலே ஸ்ரீ சங்கரன் சரீரமுடையோராகின்ருர். ஆகையால் இச்சகத்தின் கண்ணுள்ள எந்தப் பிராணிக்காயினும் அனிஷ்டத்தைச் செய்கின்றவன் அச்சிவபிரானுக்கு அனிஷ்டத்தைச் செய்வோனுகவே உலகினில் எண்ணப்படுகிருன். விஷ்ணு முதலிய தேவர்களோ அவரது செங்கோல் முறை நீதிக்குட்பட்டு நடக்கின்றவர்கள். ஸ்ரீ ஜகதீசனுன எமது தந்தை அவர்களையும் முச்சகங்களையும் பாதுகாப்பதற்காகவும், உங்களைத் தொலைப்பதற்காகவுமே நம்மைத் திட்டமிட்டிருக்கிருர். ஆகையால்தான் யாம் இப்போது பலவித சதுரங்க சேனைகளோடு கூடிய மிகுதியான தளங்களுடன் உங்களோடு யுத்த மாடுவதற்கு நேரில் இங்கு வரலுற்றேம். அடா தாரகா! நீ நம்மைப் பாலகன் என்று எண்ணி அவமதிக்க வேண்டாம். இப்போதே யுத்தம் செய்; உனது சகோதரர்களுக்கும் இப்போதே இச்சங்கதிகளைச் சொல்லியனுப்பு; தாமதம் செய்யாதே. இன்னும் சொல்கிறேம். கேள்: உனது, பிராகாரங்கள், கோட்டைகள் இவைகளைத் தளங்களைக் கொண்டு அரணிப்பாய்க் காத்துக் கொள். நீ நமது பார்வையில் அகப்பட்ட பிறகு உயிர் பிழைத்து மீண்டு போவதில்லை. உங்களால் துன்பம் அளிக்கப்பட்ட விஷ்ணு, பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள், ஸ்ரீ தேவாதி தேவனுடைய சன்னிதானத்தில் பயத்தினுல் கதறி, முறையிட்டார்கள். ஆகையினுல் இப்போது உனது துஷ்டக் குடிப்பூண்டை யோர் நொடிக்குள் முடித்து விடுகின்றேம்.'' என்றனர்.

## 42. அத்தியாயம்.

ஸ்ரீ வடிவேலனுடைய இவ்வண்ணமான வசனங்களைத் தாரகன் கேட்டுச் சினத்தால் உதடுகள் துடிக்கலுற்றுப் புருவங்களை நெரிப்பதனுல் கண்கள் வக்கிரமாகி, அடிக்கடி பெருமூச்சுவிட்டு மறுபடி உரைத்ததாவது.—''நீ யாதும் அறியாத குழந்தை. எப்படி இங்குச் சண்டைக்கு வரலுற்ருய்? நாங்களோ மஹா பலசாலிகளான சூரர்கள். முன் வைத்த காலைப் பின் வாங்கிப் புறம் செல்லாதவர்கள். மேலும் அசுரர் எல்லோர்களும் நெஞ்சத்தில் ஈரமற்ற கொடியோர்கள். நீ யுரைத்த ஸ்ரீ பரமேச்சுவரனது திருக்கட்டளை எங்களுக் குரித்தானதே. நீ விலக்காகச் சொன்னதே அசுரர்களுக்கு விதி முறை. அன்னியர்களின் தருமத்தை நன்காசரிப்பதைப் பார்க்கினும் தனது தர்மம் துர்க்குணமாயினும் அதை அனுஷ்டித்தலே நல்வாழ்வுக் குரித்தானதாகும்.

எங்களது அசுரர்கள் நாள்தோறும் ஆயிரம் ஆயிரம் முறையாக எல்லாத் தேவர்களுடைய மிகுந்த வலிமையையும் அடக்கி அவர்களை வதைக்கின்றார்கள். இந்திரனும் போர் முனையில் எங்களது அம்புகளால் வஜ்ராயுதத்தை இழந்து முறியடிக்கப்பட்டனன். மேலும் நம்மால் திக்பதிகள் எல்லோரும் ஆசையொழிந்து திக்கற்றவர்களாகச் செய்யப்பட்டார்கள். பிரம்மனும் அதி சீக்கிரத்தில் ஜயிக்கப்பட்டான். அவன் பிரம்மாஸ்திரம் நம்மால் விழுங்கப் படலாயிற்று. நல்லது! அவை யெல்லாம் நிற்கட்டும், விஷ்ணுவானவன் ஸ்ரீ பரமேச்சுவரனுடைய சரணத்தில் தனது கண்ணைப் பிடுங்கி அர்ச்சித்ததனுல் அம்மஹேச்வரன் பிரீதிகொண்டு அவனுக்கருளிய ஆயிரம் சூர்யர்கள் போன்ற பிரகாசம் உடையதும், சத்துருக்களாகிய இருளுக்குச் சூரியனுகியதும், பகைஞரிடத்துச் செல்லும் பராக்ரமத்தை உடையதுமான ஸுதர்சனம் என்னும் சக்கரமானது போர்முனையில் புறங்காட்டிப் பயந்தோடுகின்ற அவ்விஷ்ணுவால் சண்டையில் துரிதமாக நம்மீது விடப்பட்டதில் நமது மார்பினில் மோதி, ஆரங்கள் மழுங்கிவிழ, பிறகு நாம், லக்ஷ்மியின் கணவனைக் காப்பதான மிக ஒளி பொருந்திய அச்சக்கிரத்தை வலிமையாற் பிடித்துப் பதக்கமாகக் கழுத்தினில் அணிந்தனம். மேலும் ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், ஸுப்பிரதீகம் ஆகிய இத்திக்கஜங்கள் எல்லாம் நமது துதிக்கையின் அடியால் மஸ்தகங்கள் பிளக்கப்பட்டுத் திக்குவிதிக்காய் ஓடிவிட்டன. நல்லது! இப்போது வீரபாகுவும், உனது மற்ற தம்பிகளும் எங்கே? அவர்களும் உனது லக்ஷம் கணங்களும் கிரௌஞ்சகிரியின் குகை மத்தியில் சிக்கிக் கொள்ளப்பட்டார்கள். உனதாயிரம் மகா சேனைகளும் மஹா வீரர்களாயிருந்தும், சண்டையிலெனது சரத்தா லடிபட்டுச் சிகையவிழ முண்டமாகி மறுபடியும் திரும்புவதற்கிடமின்றித் தெருத் தெருவாய்த் திசை யெங்கும் சிதறினார்கள். இவை யெல்லாவற்றையும் இப்போது நான் அந்தக்கரணத்தில் சிந்திக்கும் அளவில் ஒருவனும் பதினறுவயதளவும் யுத்தத் தொழிலுக்குத் தகுதியல்லன். மேலும் கேளாய்! ஆக்கினேய பாலகா. உங்கள் மீது எங்களுக்கு யாதொரு பகையும் இல்லை. உலகத்தில் இளங்கன்று பயமறியாதென்பது பிரசித்தமான வதந்தி. ஆகையால் உனது தாய் தந்தையரிடத்துத் திரும்பிச்சென்று சுகமாய் இரு'' என்று தாரகன் உரைத்திட்ட வசனங்களை ஸ்ரீ மஹா தேவரது சுதன் கேட்டு, கோபத்தினல் உதடு துடிக்கலுற்றவராகி ஏளனமாகக் களித்துச் சில மொழிகளுரைத்ததாவது:—"அடா துஷ்டநடத்தை கொண்ட தாரகா! நெடுநேரம் இவ்வாறாக வீணய்ப் புகழ்ந்து கொள்கிறய். விஷ்ணு சக்கிரமானது பதக்கம்போல் எனது மார்பினில் இருக்கின்றதென்று நீ புன்னகைப்புடன் பிதற்றுகின்ற தற்புகழ்ச்சி எல்லாம் நிற்கட்டும். நமதிஷ்டத்தின்படி நாம் இருக்கின்றோம், போகின்றோம் அல்லது யுத்தந்தான் செய்கின்றோம். நீ பிதற்றிய வீரவாதங்களை யாம் இப்போது நினைக்க நினைக்க நீ கேவலம் அற்பப்பதர் என்று நமக்கு விளங்குகின்றது. நாம் விளக்கிய உண்மைப் பொருளை நீ கலக்கம் கொள்ளாமற் கேள். 'விஷ்ணு சக்கிரத்தைக் கூட' என்று மிகு வெகுமானத்துடன் புகழ்ந்து கொண்டாய்.

மஹா பராக்ரமமுடைய கவிராயரால் " கூட " என்ற மொழி நன்குபயோகிக்கப்பட்டது. சத்துருக்களால் ஸகிக்க மாளாத அச்சக்கரத்தினுடைய மகிமையைக் கேள். தக்ஷயாகத்தின் யுத்த முனையில் ஜபசாலியான விஷ்ணுவால் முந்தி விரபத்திரன் மீது பிரயோகிக்கப்பட்ட அச்சக்கரமானது, ஓரிடத்தும் பழுது பெறாததாயினும், அவர் பூண்டிருந்த சிரமாலையின் ஓர் முண்டமான தலையால் விழுங்கப்படலாயிற்று. மேலும் பூர்வத்தில் விஷ்ணுவால் தேவர்களுடைய சபையில் ஓர் முக்கிய கணமாகிய பூதத்தின் மார்பின்மீது அச்சக்கரமானது பிரயோகிக்கப்பட்டபோது, அவன் கண்ணுற்ற மாத்திரத்தில் அது முனைமழுங்கி ஓர் துரும்பாகத்தென்பட அப்பூதத்தால் பக்ஷித்துவிடப்பட்டது. இன்னமும் முந்தியோர் தடவை அச்சக்கரமானது, ததீசி முனிவரது உடல் எலும்பில் அடிபட்ட மாத்திரத்தில் தன் கூர் வாய்கள் சிதறலுற்றதாயிற்று. நீ புகழும் அந்தச் சக்கரமானது உன்னால் பெருமைபாகக் கொள்ளப்பட்டது. நம் முன்பாக உனது சௌர்யத்தைப்பற்றி இவ்வாறெல்லாம் புகழ்ந்து கொண்டாயல்லவா? இப்படிப் பிதற்றுகின்ற உன்னை இப்போது ஓர் க்ஷணத்துக்குள், சண்டையில் நமது வேலினால் துண்டந் துண்டமாகச் சித்திரவதை செய்வதாக நமது மலரடி மீது சபதம் செய்கின்றோம்."

## 43. அத்தியாயம்.

ஸ்ரீ குமாரமூர்த்தி இப்படி உரைத்த மாத்திரத்தில் தாரகன் கோபாவேசங் கொண்டவனாகி மிகவும் வலிமைகொண்டதும், பெரிதுமான தனுசை எடுத்து நாணேறிட்டு, மிகுந்த நாணோசையினால் பத்துத்திக்குகளையும் நிரப்பி, சுவாதி நக்ஷத்திரத்தில் சுக்கிரன் சேரும்போது மேகம் பொழிவதுபோல் பாணங்களைப் பலவாறாகச் சொரிந்தான். அச் சரமாரியால் ஓர் நொடிக்குள் எல்லாத் திக்குகளும், சூர்யமண்டலமும் மறைக்கப்பட்டன. அப்போது வானத்தி னின்றெங்கும் கொள்ளிக் கட்டைகளும், நக்ஷத்திரங்களும் விழுந்தன. சமுத்திரங்கள் எல்லாம் பொங்கலித்தன. பூமியும் நடுக்கமுற்றது. ஸ்ரீகந்தபிரானும் பெரியதனுசை எடுத்து நாணோசையால் எங்கும் ஒலிக்கச்செய்து பாணங்களால் மிகவும் கொடூரமான அச்சரமாரியையும் விலக்கிவிட்டனர். பிறகு தாரகனும் கிருஷ்ண ஸர்ப்பங்களுக்கு நிகரான பத்துலக்ஷம் சரங்களை ஆக்கிரத்தோடு அக் குமரன்மீது பிரயோகித்தான். அம் மகாவீரன் அவற்றையும் அந்த க்ஷணத்திலே வணக்கமுற்ற கணுக்களையுடைய பத்து லக்ஷம் பாணங்களால் ஒழித்துவிட்டனர். பிறகு தாரகனும் புன்னகைப் புற்றவன் போல் தனது பெயர் முத்திரைகொண்ட பத்துப்பாணங்களைச் சுருக்காய்க் கந்தன்மீது சந்தானித்தான். அப்போது பிரபுவும் போர்க்களத்தில் விளையாடியவர்போல் அவைகளை நீக்கினர். பிற்பாடு அகங்காரம் கொண்ட சூரனான தாரகன் சாரதியை நோக்கி யுரைத்ததாவது :—" அடா சாரதி! யாம் இப்போது போர்க்களத்தில் சண்டைசெய்ய ஆசைகொண்ட சங்கர சுதனோடு சமரலீலை சாதிக்கின்றோம். நீ அசுவங்களை வலசாரி இடசாரியாய்ச் செலுத்தி உனது சாமர்த்தியத்தை எமக்குச் சரிகாட்டுவாய்." என, சாரதியும் அப்படியே யாகட்டுமென்று அவனுடைய குதிரைகளை ஓட்டினன். குதிரைகளும்வலசாரி இட

சாரியாகக் கர கரவென்று அதிவேகமாகச் சுற்றலுற்றன. யுத்தத்தில் ஜயசீல னான சரவணபவனும் சாரதியாகிய வாயுதேவனை நோக்கி உரைத்ததாவது:— "கேளீர் வாயுதேவரே! நமது ரதத்தையும் நீர் சற்றுநேரம் மண்டலாகார மாகச் சுற்றுவிப்பீர்." என, மிகப் புத்திசாலியான வாயு, அதிசீக்கிரத்தில் லக்ஷம் குதிரைகளையும் அசுரன் இரதம் இடசாரியாகச் சுற்றுகையில் வலசாரியாகவும் அதுவலமாகச் சுற்றுகையில் இடமாகவும் மனோவேகமாக ஓட்டினர். இவ்வா றாகப் பிரபுவினுடைய ரதமும் அசுரன்ரதமும் ஒன்றோடொன்று சுற்றுகை யில் யுத்தத்தைக் காட்சிபெறக் காதல்கொண்ட சித்தர்கள், சாரணர்கள், கந் தர்வர்கள், யக்ஷர்கள், இவர்கள் எல்லோரும் மிகுதியான மலர்களைக் கையிற் கொண்டவர்களாக வானம்எங்கும் மறைந்து நின்றார்கள். பிறகு தேவப்பிரபு வும் அசுரப்பிரபுவும் துரிதமாக வில்லெடுத்து எங்கும் ஒலிக்கும்படி குணத் தொனிசெய்து, கேளீர், சௌனகாதி முனிவர்களே! அவன்மீ திவரும், இவர் மீ தவனும் ஒருவரோடொருவர் கைச்சுருக்குள்ளவர்களும், வெற்றியை விரு ம்பியவர்களுமாய்ச் சரமாரிபொழிந்து கொண்டார்கள். சினத்தினால் கண்கள் சிவக்கலுற்ற தாரகன் தேவர்களுக்கு அபயமளிக்கலுற்ற பிரபுவையும், பூமி யையும், வானத்தையும் பாணங்களால் ஓரே தடவையில் விரைவாக நிரப்பி மறைத்தனன். தருப்பைப் புல்லின் நுனிபோன்ற தீக்ஷண்யமுள்ள புத்தியுடை யவரும், மிக பிரதாபமுடையவரும், கைவேக முள்ளவருமான ஹரகுமார னும் அவை எல்லாவற்றையும் விரைவாகப் பறக்கடித்து, பின்னர் ஓர் சரத்தி னால் அர்த்திகளுக்குப் பூரிதாதா (சத்துருக்களை மிகவும் தண்டிப்போர்) வுமா கிய ஸ்ரீ மஹாபிரபுவானவர் அசுரனுடைய வில்லைக் கண்டனம் செய்தனர். பிறகு அத் தாரகன் முறிந்தவில்லை எறிந்துவிட்டு, வேறு திடமான ஓர் வில்லை விரைவினில் எடுத்து அனேகமாயிரம் பாணங்களைத் தொடுத்தடித்தனன். பிறகு சரவணபவனுஞ் சில அம்புளால் அவைகளை லகுவாய்த் தொலைத்துவி ட்டுப் பின்னும் லக்ஷம் பாணங்களால் அவனது அற்புதமான தனுசையும் சேதித்துத் திரும்பவும் சில மஹிமைபொருந்திய சரங்களால் தாரகனது மர் மஸ்தானங்களில் அடித்து நோகச்செய்தனர். மேலும் சிங்கக்குட்டிபோன்ற பராக்கிரமத்தையுடைய அப்பாலகுமாரன் இரண்டே பாணங்களால் அவனது துதிக்கையையும் இரண்டு கொம்புகளையும் துண்டம் துண்டமாகச்செய்து தள்ளினர். அதனால் தாரகன் மிக ஆக்கிரங்கொண்டு கிருஷ்ண சர்ப்பங்கள் போன்ற பல பாணங்களால் பிரபுவினுடைய ரதத்தினின்று, அதன் துவஜத்தை வேறாகத் துண்டித்தது மிக ஆச்சர்யம் போலாயிற்று. ஸ்ரீ வடிவேலனும் எட் டுப்பாணங்களால் அவனது வில்லைக் கண்டித்த பிறகு ஆயிரம் பாணங்களால் ஸாரதியையும் கொன்றுவிட்டனர். அதன்மேல் மஹாபலவானாகிய தாரகனும் தானே குதிரைகளை நடத்திக்கொண்டு பொற்பட்டங்கள் கட்டப்பெற்ற மற் றோர் வில்லை எடுத்து, ஆயிரம் சரங்களைச் சந்தானித்து, ஸ்ரீ ஷண்முகனு டைய சாரதியாகிய வாயுதேவனை நோகப் பண்ணினான். அதனால் கந்தன் சினங்கொண்டு கைத்திறமையுடன் தாரகன்மீது நூறுபாணங்களைப் பிரயோகி த்துப் பிறகு ஆயிரம் நாராச பாணங்களையும் வில்லில்பூட்டி அவனது நெற்றி யில் அடித்தனர். அவ்வாறாக நெற்றியிலடிபட்ட மாத்திரத்தில் அசுரன் மிகவும்

மூர்ச்சைகொண்டனன். அதைக்கண்டு மற்றோர் சாரதிவந்து அவனது தேரைப் போர்முனையை விட் டப்புறமோட்டிப் போயினன்.

பிறகு மஹாரதர்களாகிய தாரகனுடைய வீரர்கள் எல்லோரும் அனேக சங்கையுள்ள மற்றசைன்யங்கள் யானைகள், குதிரைகள் இவைகளோடு வளை ந்துகொண்டு பாணங்கள், பல்லாயதங்கள், விடபாடங்கள், கைக்கத்திகள், மர ங்கள் இவற்றைச் சொரிந்தார்கள். ஸ்ரீ தேவாதி தேவனுடைய குமாரன் மிக இளமைத்திருமேனி உடையோராயினும் அசுரர்களாகிய மேகங்களினின்று பொழியலுற்ற சரமாரியை விளையாட்டாக விலக்கி அவ்வெல்லோர்களையும் யமனாகிய இல்லறத்தானுக்கு விருந்தினர்களாக்கினர். அதற்குள் மிக மூர்ச்சை கொண்டிருந்த தாரகன் களைதெளிந்து எழுந்து கோபத்தினல் பரவசங்கொ ண்டு, தனதுசாரதியை "சீ சீ" என்று இழிவாகப் பேசிச் சைன்யங்கள்யா வும் அடிபட்டுமாண்டும் மஹாவலிமையாய்ச் சடுதியில் எதிர்த்து நேர் நோக்கி நின்று, சண்டையில் தன்படைகள் மாண்டுபோனதினுல் சினத்தால் கண்கள் சிவக்கலுற்றவனுகி, ஸ்ரீ ஹர குமாரன்மீது பிரமாஸ்திரத்தைப் பிரயோகம் செய்துவிட்டனன். ஓரிடத்தும் பழுதுபெருததும், ஊழிகாலக் காற்றுக்குச் சமமாகியதும், மஹா பெருமைபொருந்தியதுமான அவ் வஸ்திரமானது தாரக னுடைய வில்லினின்று கிளம்பித் துரிதமாய் அடிக்கடி கந்தபிரானுக்கு வந்த னம் செய்துகொண்டே அண்டையிற் சென்றவுடன் ஜகத்குருவாகிய முரு கனைத்துதிசெய்தது. பின்னும் அசுரனுல் ஏவப்பட்ட ஆக்னேயாஸ்திரம், யாமி யாஸ்திரம், ஐந்திராஸ்திரம், வருணுஸ்திரம், ஸௌராஸ்திரம் அசுராஸ்திரம் காந்தர்வாஸ்திரம், யக்ஷாஸ்திரம், மிக கடோரமும் சத்துருக்களைக் கொல்ல லுற்றதுமான சம்மோஹநாஸ்திரம் இவைஎல்லாம் போர்முகத்தில் தேவனிடம் சென்று மூர்த்திகரித்து அஞ்சலிசெய்து சிஷ்டர்களால் பூஜிக்கப்படலுற்ற ஸ்ரீ ஜகதீசனைத் தோத்திரங்கள்செய்தன. பிறகு அவ்வசுரன் கோபத்தோடவை களை, "சீ சீ" என்று திக்கரித்துரைத்து மஹா மஹிமை பொருந்திய திவ்ய மான பாசுபதாஸ்திரத்தை மனதினுல் பூஜித்து, எல்லாவற்றையும் ஏககாலத் தில் நாசம் செய்யத்தக்க அவ்வஸ்திரத்தைத் துரிதத்தில் வில்லிற்றெடுத்த னன். புவனங்களுக் கீச்வரனுன ஸ்ரீ குமாரசுவாமியோ என்றால் மிகக் கொடூரம் உள்ளதும், ஓரிடத்தும் பழுதடையாததும், அண்டச்சுவரளவும் புவ னங்கள்மீது அக்னி ஜ்வாலைகளை வீசலுற்றதுமான அவ்வஸ்திரத்தையும் யுத் தகளத்தில் விளையாட்டாகவே ஓர் கையினுல் பற்றினர். பிரமாஸ்திரம் முத லிய எல்லா அஸ்திரங்களும் நிஷ்பலமாகிவிட்டபோது அசுரன் மஹா கோபா வேசம் கொண்டவனுகி, ஸாரதியை நோக்கி, "அடா எனது சேனைகளது அனீ தங்களை யெல்லாம் பக்ஷிப்பதற்கேற்பட்ட சமயசத்துருவாகிய ஸாரதியே! போர்க்களத்தில் ஒருவராலும் ஜயிக்கமுடியாத இச்சத்துருவை அவமானப் படுத்துவதற்கும், இந்திரன் முதலிய தேவர்களின் கர்வத்தைப் பங்கப்படுத்து வதற்கும் சீக்கிரத்தில் எனது ரதத்தை மறுபடியும் அடிக்கடி இடசாரி வல சாரியாய்ச் சுற்றிவிடு." என்றனன். மாயையின் மைந்தனுகிய தாரகனது கட்ட ளையின்படி ஸாரத்திய விதிகளை நன்கறிந்த ஸாரதியானவன் சீக்கிரத்தில் குதி ரைகளை நடத்தி கால் க்ஷணத்துக்குள் அம் மஹாரதத்தைப் பம்பரமாகக் கர

கர வென்று சுற்றுவித்தனன். அசுரன் இவ்வாறு சுற்றும்போதே பொன்மயமான அடிப்புறங்களை உடையதும், மனோரம்மியமானதும், கழுகிறகு பூண்டதும், தீக்ஷண்யமான முனைகளையுடையதும், மிகத்தாட்டீகமானதும், வணங்கிய கணுக்களையுடையதும், கிருஷ்ண சர்ப்பங்கள் போன்றவையுமான சரங்களைச் சடுதியில் கோடி கோடியாக வருஷித்தனன். அவன் பாணங்களை அம்பறுத் தூணிகளினின்றெடுப்பதும் வில்லில் தொடுப்பதும் சடுதியில் விடுவதும் ஒருவராலும் குறிப்பிடப்படக்கூடவில்லை. தாரகன்கையில் வில்லைப்பற்றிக்கொண்டு ஒரு காளமேகம்போல் கர்ச்சனைசெய்து சரமாரி சொரிவதனால் எட்டுத் திசைகளையும், ஆகாச மண்டலத்தையும், நிரப்பி மறைத்தனன். ஸ்ரீ குமாரமூர்த்தியினுடைய ஸாரதியான வாயுதேவனும், முந்திப்பிரபுவால் கட்டளையிடப்படாதவராயினும் வீட்டினில் தீப்பற்றுகையில் மூர்த்தன்யமாய்க் கூடுவதுபோல் தாமாகவே மனோவேகமுடைய லக்ஷம்தேர்க்குதிரைகளையும் மண்டலாகாரமாகச் சுற்றுவித்தனர்.

## 44. அத்தியாயம்.

பிறகு ஸ்ரீ மஹாசேனரானவர் மஹாமேரு மலைபோன்ற வில்லை எடுத்து நாணேறிட்டு குணத்தொனியாலெட்டுத்திசைகளையும் சத்தியலோகம் பாதாளலோகம் முதலியவைகளையும் நிரப்பிச் செவிடாக்கி, தாரகாசுரனாகிய மேகத்தினால் சொரியப்பட்ட சரமாரியையடக்கிவிட்டு, கேளீர் சௌனகாதி முனிவர்களே! மகா ஸாமர்த்தியசாலியான ஸேனானியானவர் ரதத்தின் கண் வீற்றிருந்து மிகவும் துரிதமாகக் கர கர வென்று சுற்றியருளினர். கோலாஹலமான இப் போர்முழக்கத்தி லாகாசத்தின் கண் இடைவெளியின்றி போர்க்காக்ஷி கொள்வதற்கு லக்ஷியங்கொண்ட யக்ஷர்கள், சாரணர்கள் கந்தர்வர்கள், சித்தர்கள் நிரம்பினர். பிறகு ஸ்ரீ குமாரனுக்கும் தாரகனுக்கும் மிக கொடூரமானதும் இருதிறங்களும் நெருங்கியதாற் பெருங்கூட்டமுள்ளதும் மயிர்க்கூச்சலடைவிக்கப் பெற்றதும் உவமையற்றதும் குறிப்பிடத்தகாததுமான யுத்தமுண்டாயிற்று. குமாரனுக்கும் தாரகனுக்கும் நடந்த யுத்தத்திற்கு மீடு குமாரனுக்கும் தாரகனுக்கும் நடந்த யுத்தமேயாம். ஒருவருக்கும் வெற்றியாவது தோல்வியாவது உண்டாகவில்லை. கந்தன் கெலிக்கும்போதெல்லாம் தேவர்கள் பளா பளாவென்று கைகொட்டி மெச்சினார்கள். சித்தர்கள் கந்தர்வர்கள் கின்னரர்கள் இவர்களெல்லோரும் பூமாரிசொரிந்தார்கள். மற்றவன் கெலித்தபோது அசுரர்கள் அவனை மெச்சினார்கள். ஸ்ரீசிவன் செல்வன், சகல சராசரப்பிரபஞ்சங்களையும் ஓர் சடிதியிற் சமுகரிக்கச் சத்துவமுடையோராயினும் ஸ்ரீபாலனை வேலன், கேவலம் லீலா விநோதார்த்தமாக வசுரனுட னப்போதைக்கப்போதெதிர்க்கெதிராக மட்டிற் பதில்செய்துகொண்டு விளையாட்டுக் கிடமாக வுலகினிலொப்பில்லாதபடி கலகமாடினார். முந்திபோல் ஸ்ரீசம்பு புத்திரனால் துண்டிக்க, துதிக்கையும்கொம்புகளும் ஈசனது வரமகிமையால் பின்னும் உண்டாயின. அதனால் பிரபு மிக ஆக்கிரங்கொண்டு மறுபடியும் துதிக்கையையும் கொம்புகளையும் அறுத்தெறிந்தனர்.பின்னும் அவைகள் துண்டிக்கத்துண்டிக்க உடனுக்குடனே அதிசீக்கிரத்தில் முளைத்து விருத்தியாயின. இவ்வாறாகத் துதிக்கையும் கொம்புகளும் ஸ்ரீ ஸேனானியால் பலவாறு அறுக்கப்பட்டபோது

மாயாவியாகிய அம்மஹா அசுரன் மாயையால் வெல்வதற்கு எண்ணமுற்றுப் பிரபுவானவர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே விரைவினில் தேரோடு கிரௌஞ்ச மலைக்குள் மறைந்து விட்டனன். மிக துராத்மாவும், லோக கண்டகனும் மாயையில் மஹாதேர்ச்சியுடையனுமாகிய அத்தாரகன் அக்கிரௌஞ்சனுடன் சேர்ந்து பல மாயைகளைச் செய்தனன் உடனே அக்கிரௌஞ்சன் எஃகுமயமானதும் வெள்ளிமயமானதும், பொன்மயமானதுமான மூன்று பட்டணங்கள் ஆயினன். தாரகனே, வித்யுன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் திரிபுராசுரர்களாயினன். அப்போதே ஸ்ரீ சம்புமைந்தன் திரிபுர மெரித்த பரமேச்சுவரனுகிப் பூமியாகிய தேரில் வீற்றிருந்து ஓர் புன்னகைப்பு மாத்திரத்தால் அவ்வெல்லாவற்றையும் எரித்து விட்டது மிகவும் ஆச்சரியம் போலாயிற்று. பிறகு கிரௌஞ்சன் மேகமாகவும், தாரகன் இடியாகவும் ஆயினர். உடனே ஸ்ரீ ஜகதீசன் சண்டமாருதமாகி யவற்றை நாசமாக்கினர். பிறகு அம்மலை கடலாக உருமாறினன். தேவர்களுக்குச் சத்துருவாகிய தாரகனும் வடவாக்னியாகி எரிந்தனன். ஸ்ரீ புவனேசனும் அவற்றை உள்ளங்கை நீர்போல் விளையாட்டாகக் குடித்து விட்டனர். அதன்மேல் உடனே கிரௌஞ்சகிரி பூமியைச் சுற்றிலுமுள்ள சக்கிரவாள பர்வதமாகி, மற்றத்தாரகனும் இருளுலகாயினன். அவற்றையும் உமாமைந்தன் கோடிசூர்யப்பிரகாசராகித் தனது லீலையால் எரித்து நீக்கிவிட்டார். அதன் பிறகு கிரௌஞ்சன் இமயகிரி, நிஷதகிரி, விந்தியகிரி, மாலியவான், பாரியாத்திரகம், கந்தமாதனம், மஹாகிரியான ஏமகூடம், ஆகிய இவ்வேழு குல பர்வதங்களாயினன். மற்ற அசுரக்கேடனும் அவனது மாயையினல், ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், ஸாரவபௌமம், ஸுப்பிரதீகம் ஆகிய திக்கஜங்களாயினன். இவ்வாருகத் தாரகன் ஸ்ரீ குமாரனைப் பலவிதமாக மதிமயங்கச் செய்து மிகுந்ததுன்பம் அளிக்கையில் மஹாபராக்ரமசாலியான ருத்திர குமாரனும் துரிதத்தில் வச்சிராயுதத்தைப்பிரயோகித்து, அவ்வெழு குல பர்வதங்களையும் சேதித்து, எட்டு திக்கஜங்களையும் சண்டையில் ஓடச் செய்தது மிகவும் ஆச்சர்யம் போலாயிற்று. பிறகவ்விருவர்களில் ஒருவன் மிக்க கொடியதான அக்னியாகவும், மற்றவன் காற்ருகவும் உருவம் எடுத்தனன். முருகன் அவற்றையும் மிக ஆக்கிரத்துடன் கால்க்ஷணத்தில் சாந்தமாக்கினர். பிறகு கிரௌஞ்சன் கோடி பிரளயகாலாக்னியைப் போன்றவனும், தாரகன் ஆயிரம் பிரளய கால சூர்யர்களைப் போன்றவனுமாகி யுத்தாங்கத்தில் சிவன் செல்வனை வஞ்சகம் செய்தனர். இவ்விருவர்களது ஒளிகளும் மூவுலகின் மீதெல்லாத்திசைகளிலும் பரவின. பூமி எல்லாம் நடுக்கம் கொண்டது, எல்லாச் சமுத்திரங்களும் மிகவும் பொங்கிக் கொந்தளித்தன. சகல தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், சாரணர்கள், பூதபதிகள் இவரெல்லோரும் பயங்காளிகளாக ஓடினார்கள். அதன் மேல் சங்கர குமாரனும் வல்லமையுடையோர்க்கெல்லாம் வல்லவனுமான சரவணபவன், ஸகல சத்துருக்களையும் நாசம் செய்யவுற்றதும், தனது சக்தியே அவ்வுருவங் கொண்டது போன்றதுமான தனது சக்தி என்னும் வேலாயுதத்தைப் போர்முனையில் மாயாவியாகிய தாரக

னுடையவும், கிரௌஞ்ச கிரியினுடையவுமான உயிர்களை வாங்குவதற்காகத் தமது எல்லாவல்லமையுடனும் பிரயோகித்தருளினர். அவ்வேலானது ஓர் க்ஷணத்திற்குள்ளாக வானத்திற் சென்று தன் ஒளியினால் திசை எங்கும் ஜாஜ்வல்லியமாய்ப் பிரகாசித்து விளங்கலாயிற்று. மூவுலகுகளையும் நக்கி விழுங்கலுற்ற, பிரளய காலாக்னியது நாவைப்போல் பொறிகளைக கக்கலுற்றதும், மணிகளாலும் சாமரங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், ஊழி காலத்திய அனேகம் ஆயிரம் மேகங்களின் இடி முழக்கம்போன்ற சத்த முடையதும், பார்க்கலுற்ற சகல தேவர்களுடைய மனோபீதியையும் தொலைப்பிக்கலுற்றதுமான அவ்வேலானது அரை நிமிஷத்திற்குள்ளாகத் தாரகனது கற்பாரைபோன்ற மார்பையும், கிரௌஞ்சகிரியையும் பிளந்து, சகல புவனங்களையும் மோகிப்பிக்கலுற்ற அம்மாயைகளையும் சடிதியிற் சங்கரித்து, முந்திக்கொல்லப்பட்டது போகப் பாக்கி நின்ற அவனது சேனைகளையும் ஒரே தடவையில் ஓர் நொடிக்குள் மடித்துவிட்டது. மஹா சாமார்த்தியசாலியும் அசுரர்களை யதம் செய்வோருமான கார்த்திகேயன் அசுரனது மாயையினால் கிரௌஞ்ச பர்வதத்தினுள் மோகத்தினால் மயங்கி நின்ற வீரபாகு முதலியோர்களை விரைவாக வெளியில் அழைப்பித்தனர். அவர்கள் தூங்கி எழுந்திருப்போரைப்போல் சுவபாவத்தின்படி தேகச்சந்திகள் சரிவரப் பொருந்தி ஓர் க்ஷணத்துக்குள் எழுந்தனர். தாரகக் கிரௌஞ்சர்களின் சங்கார கதையைப்பற்றிய மிக மங்களகரமான இவ்வத்தியாயத்தைப் பக்தியுடன் நாள்தோறும் படிக்கின்ற அல்லது கேட்கின்ற மானிட சிரேஷ்டர்களைக் கண்ட மாத்திரத்தில் அவனது சத்துருக்கள் பயங்கொண்டு ஓட்டம் பிடிப்பார்கள். ஸ்ரீ விஷ்ணுவானவர் இவ்வத்தியாயத்தைச் சிரவணம் செய்ததால் மஹா பலசாலியான இரணியகசிபு இரணியாக்ஷன் மிகவும் கொடியோனுகிய ஸோமகன் இவர்களை யெல்லாம் போரில் முறியடித்தனர். பலராமன் ஜயிக்க முடியாத பல சத்துருக்களையும், இந்திரன் கொடிய பாதகர்களான பல அசுரர்களையும் யுத்தத்தில் வெற்றி பெற்றுர்கள். ஸ்ரீ பரமசிவ ஸ்வரூபனும், பார்வதி நந்தனருமாகிய கந்தன் சகல தேவர்கள் முனீச்சுவரர்கள், மானிடர்கள் இவர்களுடைய க்ஷேமார்த்தமாக அவர்களது கண் முன்னிலே இவ்வண்ணமாகக் கொடியோனுகிய தாரகாசுரன், வெகு மாயாவியான கிரௌஞ்சகிரி, இன்னும் மற்ற அசுரர்கள் இவர்களெல்லோர்களையும் வெகு லீலா விலாசமாகவே யுத்தரங்கத்தில் நாசம் செய்தனர்.

## 45. அத்தியாயம்.

வேலாயுதமானது தாரகனுடைய மார்பினிற் பாய்ந்து கொஞ்சமேனும் ரத்தப்பற்றுதலின்றி ஊடுருவிப் புறம்செல்லுகையில் சமுத்திரத்தை அதிகரித்த ஓர் சப்தமுண்டாயிற்று. அவ்வேலானது தாரகனுட்புகுந்து சென்றதோ இல்லையோ என்றொருவராலும் அறியப்படவில்லை. ஆனல் அவ்வசுரக் கேடன் உயரக் கிளம்பிக்கிளம்பிப் பல தடவை துடித்துக் கீழே விழுந்து உயிரை விடும்போதுதான் எல்லோர்களுக்கும் தெரியலானது மிகவும் ஆச்சர்யம். வேலினால் தாரகன் அதம் செய்யப்பட்டதைத் தேவர்களும் முனீச்சு

வர்களும் கண்டு மிகுந்த சந்தோஷத்துடன் ஸ்ரீ தேவன்மீது மலர்களைச் சொரிந்தார்கள். சகல முனிவர்களும் ஜயவிஜயீபவா என்று பாடிக் கூத்தாடினார்கள். வீரபாகு முதலிய நவவீரர்களும், லக்ஷம் கணநிபர்களும், ஐம்பத்து நான்கு தளகர்த்தர்களும் அஞ்சலிகொண்டு ஸ்ரீ பிரபு அருகிற்சென்று, அவர் முன்னிலையில் புலன்களும் மனதும் குளிர்ந்தவர்களாகிச் சுற்றிலும் நின்றார்கள். ஸ்ரீ சங்கர குமாரனும் மிகச் சந்துஷ்டியுள்ளவராகி யவ்வெல்லோர்களையும் திருக்கண்ணுற்றுத் திருவாக்குரைத்ததாவது:—"வாரீர் பரமசூரர்களே! நீங்கள் அசுரக்கேடர்களால் மிகவும் துன்பம் அடையப்பெற்றீர்கள். இப்போது தெய்வானுகூலத்தினால் மிகவும் பெரிய அச்சங்கடத்தினின்று விடுபட்டீர்கள். வாரீர்! புவனங்களை காக்கும் வீரர்களே! நீங்கள் நமதருளினால் ஸுகமாய் இருங்கள்." என, அவர்கள் உத்தரம் சொல்லியதாவது:—"ஓ பிரபுவே! ஸாக்ஷாத் ஜகதீசனாகிய தேவரீர் இருக்கையில் எங்களுக்குக் குறை வேது? துன்பம் ஏது? ஹானி ஏது? ஓ! தயாநிதியான ஜகதீசா! தேவரீரது செந்தாமரைத் திருவடிகளை நாடியோர்களுக் கெதுதான் அஸாத்தியம்?" என்று சொல்லிய எல்லோர்களையும், அசுரர்களை அடியோடு முடிப்போரான தயாநிதியானவர் மிகவும் சந்தோஷிப்பித்து வீரபாகுவை அருகில் அழைத்து, துராத்துமாவாகிய தாரகாசுரனால் முந்தி பிரயோகிக்கப்பட்டுத் தம் கையால் பிடிக்கப்பட்டிருக்கிற உலகினில் பழுதடையாத திவ்யமான பாசுபதாஸ்திரத்தை அவருக்கு ஈந்தருளினர். அப்போது கற்பக விருக்ஷ மலர்களின் மாரியானது பொழியலுற்றது. தேவ துந்துபிகள் முழக்கப்பட்டு வானமெல்லாம் ஒலியால் நிரம்பலுற்றது. முனிவர்களும், சித்தர்களும், நர்த்தனம் செய்தார்கள். அப்போது இந்திரன் முதலான தேவர் எல்லோர்களும் சூரபத்மனும், சிங்கமுகனும் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமியினுடைய ஓர் லீலா மாத்திரத்தினால் மாண்டு போனவர்களாகவே எண்ணினார்கள். ஸ்ரீ ஜகதீசன் அவர்களுடைய களிப்பையும் திருக்கண்ணுற்றுப் போர்க்களத்தை விட்டு இமயகிரிக்கு எழுந்தருளினர். பிறகு சத்துருக்களைத் தொம்சம் செய்கின்ற ஸ்ரீ ஸேநானியானவர் ஸகலதேவர்கள், கணநிபர்கள், சேனைகள் இவர்களுடன் அங்கு ஒஷதிப்பிரஸ்தத்தில் தங்கிப்பாட்டனாராகிய பெயர்போன அக்கிரிராஜனை வந்தனித்துச் சீக்கிரத்தில் விடைபெற்றுக்கொண்டு அதன் மேல் தேவகிரிக்குச் சென்றருளினர். அத்தருணத்தில் அவரது கட்டளையின்படி சூர்யன் அஸ்தமனமாயினன். அப்போது பிரபுவானவர் அத் தேவகிரிக் கனுக்கிரகம் அளிக்கத் திருவுளங்கொண்டு தமதுசதுரங்க சைன்யங்களையும் அங்கு நிறுத்தி, மஹாரதனாகிய ஸ்ரீ சிவன்செல்வன் மஹிமைபொருந்திய ரதத்தினின்றிறங்கி ஸாயங்காலா னுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அத்தேவகிரியால் அதிதி பூஜைகள் செய்யப்பட்டவராகி மஹா சந்தோஷத்துடன் அவ்விரவில் அங்கு வசித்தனர். பிறகு தேவர்கள், அடியார்களுக்குச் சகலஸித்திகளையும் அளிப்போரும் சங்கரனுக்குப் புத்திரனுமாகிய அப்பிரபுவினிடத்துவந்து வந்தனித்து விண்ணப்பம் செய்துகொண்டதாவது:— "ஓ சர்வகுணஸம்பூர்ணராகிய பிரபுவே! தேவேசா! கந்தா! சேனாபதி! தேவரீர் இவ்விரவில் இங்குத்தங்கி யருளல்வேண்டும். ஓ அளவற்ற மகிமைகளுக்கும் இருப்பிட

மாகிய பகவானே! நாங்கள் தேவரீரைப் பூஜித்து அதனால் உண்டாகிய மனத் திருப்தியைப் பெறுவதற்குக் காமுறுகின்றோம். அதற்கனுமதி தந்தருளல் வேண்டும்.'' பிறகு அடியார்களுக்கு அதீனராகிய முருகன் அத் தேவர்களுக்குப் பிரசன்னராகி அவர்கள் தம்மைப் பூஜைசெய்யும்படி விடைகொடுத்தருளினர். அதன்மேல், விஷ்ணு பிரமாமுதலிய தேவர் எல்லோர்களும் ஸ்ரீ ஜகதீசனுக்காலயம் கட்டுவதற்காக மிக நேர்த்தியான சிற்பவேலைகளிற் றேர்ச்சி பெற்ற விசுவகர்மனை அழைத்து, ''வாரீர்! விசுவகர்மாவே! இத்தேவகிரியிலே ஸ்ரீ சங்கரகுமாரனுக்காக மிக சிரேஷ்டமானதும், மிகுதியான காந்திகளால் நிறையலுற்றதும் இந்திரத் துவஜங்களால் நிறைந்ததுமான ஓர் பட்டணத்தை அமைத்தல்வேண்டும். அதில் கணங்களுக்கும் கணத்தலைவர்களுக்கும் வசிப்பதற்கு மிகவும் தகுதியான பருவதத்தின் கொடுமுடிகள் போன்ற வீடுகளையும், ஸ்ரீ ராஜாதி ராஜனுடைய செல்வனுக்கும் வசிப்பதற்குத் தகுதியுள்ளதும், மிக அற்புதமானதும், விசித்திரங்களான பல சித்திரங்களின் சோபைகளால் நிறைந்ததும், பற்பல ஆலயங்களோடு கூடியதும், மிக உயரம் உள்ளதுமான ஓரரண்மனையையும் நமது கட்டளையின்படி இப்போதே துரிதத்தில் அமைத்தல் வேண்டும்.'' என்றனர். பிறகு விசுவகர்மனும் இவ்வண்ணமான தேவசிரேஷ்டர்களுடைய கட்டளையைப் பெற்று அரைக்ஷணத்துக்குள் ஸ்ரீ மஹாதேவ தனயனுக்கு மிகவும் பிரியமுள்ளதான ஓர் நகரத்தை மிகசாமர்த்தியமாக உண்டாக்கினன். விசித்ரமான பொன்மதில்களாலும் ரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், ஆயிரம் மேல்மெத்தைகள் உள்ள உப்பரிகைகளை உடையதும் ஸகலவித இரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் லக்ஷம் வீதிகளால் நிறைந்ததும் பூப்பந்தல்களால் விளங்கியதும், ரத்னப்படிக் கட்டுகளால் அலங்கரிக்கப்பட்ட பல வாபிகள், கிணறுகள், குளங்கள் முதலிய வற்றால் சிறந்ததும், செந்தாமரை மலரின் சோபையைக் கொண்டதும், ஆயிரம் சூர்யர்களின் ஒளிஉடையதுமான அப்பட்டணத்தில் ஸ்ரீ தேவாதி தேவ சுதனாகிய மஹாஸேனரையும், வீரபாகுமுதலிய சகலவீரர்களையும் தேவதுந்துபி சங்கம், சிருங்கம் ஆகிய இவ்வாத்தியங்களின் முழக்கத்தோடு யாவரும் ஊர்கோலம் செய்வித்தார்கள். கணசிரேஷ்டர்கள் அவர்களுக்குத் தக்கபடியுள்ள வீடுகளுக்குச் சென்றார்கள். மரீசி, காசியபர், அத்திரி, வாக்சாதுர்யமுள்ளோர்களில் மேன்மை பெற்ற ஸ்ரீ வசிஷ்டர் ஆகிய இம்முனிவர் எல்லோரும் வேதாகமப் பொருள்களை நன்கறிந்தவரும் பூரண கும்பங்களைக் கைப்பற்றினோர்களுமான இன்னும் மற்றப் பிராமணர்களுடன் எல்லோர்களுமானந்த ஸுகத்தோடு அருகிற் சூழ்ந்து நின்று வேத மோதிக்கொண்டு, பிரமன், விஷ்ணு, முதலிய தேவ சிரேஷ்டர்களோடு, பகைவர்களைத் தோற்றுவிக்கலுற்ற பரமேசுவரன் செல்வனை அவரது பெருமைக்குத் தக்கதான ரத்தின மாளிகையி லெழுந்தருளச் செய்வித்தார்கள். தேவாதி தேவனுக்குச் சுதனும் ஜகத்பதியுமான ஸ்ரீ மஹா பிரபுவும் வீரபாகுவால் கொண்டு வந்து வைக்கப்பட்ட மிக விசித்ரமான பாதுகைகளைப் பூண்டு உள்ளத்தில் களிப்புற்றவராகத் திருமாளிகைக்குள் எழுந்தருளி அங்கு நவரத்னங்களால் நிறைந்த மிகவும் மேன்மை பொருத்திய சிங்காதனத்தை அலங்கரித்தனர்,

புவனங்களை ரக்ஷிக்கின்றவரும், சர்வஞ்ஞனும், சகல ஜகங்களாலும் பூஜிக்கப்படுகின்றவரும், ஸ்ரீ பரமேசுவர புத்திரனுமான அச்சரவணபவன் மிக நேர்த்தியான சிங்காதனத்தில் விற்றிருக்கையில், தேவர்களுச்சிமீ தஞ்சலி கொண்டவர்களாகப் பற்பல துதிகளால் களிப்பித்து, பிறகு ஸ்ரீ ஈசானருடைய செல்வனுக்கு அர்க்கிய பாத்தியம் முதலியவற்றால் பூஜை செய்தார்கள். மேலும் அப்பிரபுவுக்குப் பரிவார தேவதைகளான வீரபாகு முதலிய நவவீரர்களையும் தேவசிரேஷ்டர்கள், சிறந்த நூல்களிற் கூறிய விதிப்படி வரிசைக் கிரமமாகப் பூஜித்துத் தங்களதாத்மா கிருதார்த்தமாகும்படி வந்தனித்து நிகரற்ற பரமானந்தம் பெற்றுப் பிரபுவின் அருகில் இருந்தார்கள். சகல ஜகங்களும் சரண் அடையப் பெற்றவரும், விநோத கிருத்தியங்களைச் செய்தருளுகின்ற பார்வதி பரமேசுவரர்களின் திருமகனுமான ஸ்ரீ குமாரசுவாமியும் அப்போது, மிகவும் பெரிதான அத்தேவகிரியை, ஜகங்களுக்காதிப் பொருளான ஸ்ரீ சங்கரன் கைலேயங்கிரியை வைத்துக் கொள்வது போல் அன்று முதல் தமக்கு வாசஸ்தானமாகக் கொண்டனர். மிக விநோத கிருத்தியங்களைச் செய்தருளுகின்ற பார்வதி பரமேசுவரர்களின் புத்திரனும், அடியார்களது இடையூறுகளைத் தொலைப்பிக்கின்றவருமான வடிவேலன் ஸகலகணநதிபர்களுடனும் தேவகணங்களுடனும் அத்தேவகிரியைப் பிரியத்தோடு வாசஸ்தானம் ஆக்கிக்கொண்டனர்.

## 46 அத்தியாயம்.

மஹாபலசாலியும், தேவர்களால் துதிக்கப்படுவோனும் வஜ்ராயுதத்தைப்பற்றியவனுமான குமாரசுவாமியால், கொடியோனான தாரகன் சகலசைன்யங்களோடும் சங்காரம் செய்யப்பட்ட பிறகு, ஸாக்ஷாத் ரதிதேவி போன்றவளான கௌரி என்ற அவனது மனையாளும் மற்றும் உள்ள அவன் பெண்டிர்களும் அப்போர்க்களத்துக்குச் சென்று மிகவும் துக்காக்கிராந்தர்களாகக் குரரிப்பறவையைப்போல் நேர்த்தியான ஸ்வரத்துடன் அழுதார்கள்: "ஓ நாதனே! நாதனே! மூவுலகுகளிலும் அளவிடப்படாத விக்கிரமத்தை யுடைய அசுரவரசனே? எங்கள் எல்லோரையும் விட்டிப்போது எங்குச் சென்றுவிட்டீர்! ஐயோ! இதென்ன காரணமோ! ஒ சத்துருக்களை நாசம் செய்யலுற்ற நாதனே! நாங்கள் இப்போதே சீக்கிரத்தில் அக்னிமார்க்கமாக உமதண்டைக்குவந்து உமதூழியக்காரிகளாகின்றோம். ஒஹோ! இப்போது தேவர்கள் எல்லோரும் நிர்ப்பயராக இருக்கலாயிற்றே! இப்போது மூத்தவராகிய சூரபதுமர் செத்ததுபோல் தான். இப்போது சிங்கமுகனும் ஸகலபந்துவர்க்கங்களுடனும் மாண்டவரே என்பது நிச்சயம்! உம்முடைய யாதொரு உறுதியான மார்பின்மீது விஷ்ணுசக்கிரம் கூடமோதப்பட்டு விழுந்ததோ அத்தகைய மார்பை ஓர் வாலிபனுடைய வேலானது எவ்வாறு பிளந்து உயிரையும் வாங்கிற்றோ? யாதொரு மார்பினில் பிரம்மாஸ்திரமானது விசைகொண்டு மோதியதனால் முனைமுறியலாயிற்றோ, தேவேந்திரனுடைய வஜ்ராயுதமானது மழுங்கலாயிற்றோ, அது ஒரு சிறுவனால் எவ்வாறு பிளக்கப்பட்டது?" என்றிவ்வாறாகப் பெண்டீர்கள் தீனஸ்வரத்துடன் பலவிதமாய் புலம்பியழுது, பிரேத சரீரத்தைத் தங்கள் மடிமீதெடுத்துச் சுற்று மிருந்து

வியாகூலமுற்று துக்காக்கினியால் கொதிக்கின்ற மார்பின்மீது கண்ணீர் மாரிகளைச் சொரிய விட்டார்கள். அசுரன் பெண்டீர்கள், மாயாபுரியினின் றும் வந்திவ்வண்ணம் அழுது கொண்டிருக்கையில், இத்தாரகனுக்கு மைந்த னன அசுரேந்திரன் என்னும் பெயருடைய சிம்மத்தின் பராக்கிரமம் போன்ற வீரமுடைய அசுர சிரேஷ்டனானவன், யானை குதிரை ரதங்களோடு ரதத்தின் மீதேறிக்கொண்டு சிங்கமுகனது நகரத்தினின்று தற்செயலாக வராநிற்ருன். தந்தையைப் பார்க்க விருப்பமுற்றுத் தன்னிச் சையாகத் துரிதத்தில் வருகையில் அவன் நடுவழியில் தந்தையது விருத்தாந்தத்தைக் கேட்டுமனம் ஒடிந்தவனாகிச் சீக்கிரமாய்ப் பட்டணத்துக்கு வந்து அடி யற்றமரம் போல் விழுந்து ஒப்பாரி வசனங்களால் புலம்பிக் கொண்டு வாசலில் விழுந்து, ஒரே அணியோடு ஆனந்த மிழுந்து தலைமயிர் சித றத் தரைதனில் உருண்டு புரண்டான். அவன் புலம்பி, "ஐயோ! அண்ணா! ஐயோ! அசுரேந்திரா! உலகை யெல்லாம் தவிக்க அடிக்கவல்லவா! எங்குச் சென்று விட்டீர்? உம்முடைய யாதொரு மார்பானது விஷ்ணுவின் சக்கரத் தாலும் இந்திரனுடைய வஜ்ராயுதத்தாலும் அலங்கரிக்கப்பட்டதோ, அம்மார் பானது இம்மூலையுண்கின்ற பாலகனுடைய வேலாயுதத்தால் எவ்வாறு பிளக் கப்படலாயிற்றோ? இதை யொத்த மிகுந்த விந்தை தரணிதனில் இல்லை! ஐயோ! இதென்ன கஷ்டம்!" என்று கதறிப் பெண் கூட்டங்களால் நிறை யப் பெற்ற போர்க்களத்துக்கு மெல்லச் சென்று, அடிபட்டுப் பூமியில் விழுந்து கிடக்கின்ற தகப்பனை நோக்கித் தாய்மார்களுக்கெல்லாம் அதிகதுக்கம் ஜனிக் கும்படி மிகவும் பிரலாபித்தான். "ஐயோ! இப்போது ஸகல தேவர்களி னும் அக்கினிக்கு உமது சரீரத்தைத் தகிப்பதனால் வயிறுகுளிரலாயிற்றே! இப்போது இந்திரனுக்கு இந்திராணீ பெண்டீராகவும் மற்றைய சுவர்க்கத் தில் வசிப்பவர்க் கெல்லாம் அப்ஸரஸ்திரீகள் வாய்த்து விடவும் ஆயிற்றே! ஐயோ! இப்போது இந்திரன் முதலிய தேவர்கள் எல்லோர்களும் மஹா சுகிகளாகிவிட்டார்களே! சுவர்க்கமும் அவர்களது நகரமாய்விடுமே! ஐயோ! இப்போது சிங்கமுகனும் சூரபத்மாசுரனும் ஆசையற்று நாசம் அடைந்தவர் போல் ஆனர்களே! அவர்களது வலது கைமுறிந்து போயிற்றே!" என்று மிகவும் பரிதாபப்படும்படிப் பத்துத் திக்குகளையும் நோக்கி நோக்கிப் பலவா றுகப் பலம்பி, கையோடு கைபிசைந்து பற்களை நறநற வென்று கடித்து உதடு களையும் மடித்துக் கடித்துக் கொண்டு, கோபத்தினால் கண்கள் சிவக்கலுற்று அடிக்கடி சிரித்துக் கொண்டும் அடிக்கடி நல்லதிருக் கட்டும்," என்று மார் தட்டியும், அகில் தேவதாரு, சந்தனம் முதலிய வாசனைக் கட்டைகளால் அமைத்த சிதையில் தந்தையை ஏற்றுவித்து அதி லுடன்கட்டை ஏறிய, கணவனையே தெய்வமாகக் கொண்ட கௌரீ முதலிய தாய்மார்களையும் தந் தையையும் தகனம் செய்து பின்னும் உள்ள அவர்களது பிரேதகிருத்தியங் களை முறைப்படி முடித்து விட்டு, நகரத்தினின்று சதுரங்க சேனைகளுடன் துரிதமாகப் புறப்பட்டு, மதிகலக்க முற்றவனாகப் பின்னரும் வீரமாகேந்தி ரம் என்ற நகரத்துக்குத் திரும்பிச்சென்ருன். பிறகு அங்குத் தந்தைக்கு முத்தோனாகிய சூரபதுமன் அடிகளில் விரைவில் மிகவும் துக்காக்கிராந்தனாக

விழுந்து பலவாருய்ப் பிரலாபித்து அழுதான். பரிதாபப் பட்டத்தக்க முகத்தோடு பூமிதனில் புரண்டழுகின்ற அவ்வசுரேந்திரனைச் சூரபதுமன் கைகளால் வாரி எடுத்து மார்போடணைத்து, "அப்பனே! பயப்படாதே! பயப்படாதே!" என்று உரைத்துச் சத்துருக்களைக் கொல்லலுற்ற அசுரன், இதென்ன! இதென்ன! என்றடிக்கடி உரைத்துக் கொண்டு, கண்ணீர்களைத் துடைத்துச் சோகத்திற்கு யாதுகாரணம் என்று வினவ, தாரகன் மைந்தன் நடந்ததை யெல்லாம் அழுதுகொண்டே கூறினன். பிற்பாடு அசுரேந்திரன் உரைத்த தனது தம்பியின் வதையைப்பற்றிய இடிக்கொப்பான வசனங்களைச் சூரபதுமன் எவ்வளவும் கலக்கம் கொள்ளாமலே கேட்டு, தாரகன் பராக்ரமத்தை நினைத்து அதை நம்பவே இல்லை. நம் புலன்களிற் பட்டவைகளான அண்டங்களுக் கதிபர்களாகிய எந்தத் தேவர்களும், யுத்தத்தில் நம் தம்பி முன்னர் நிற்பதற்கு பார்தனில் இல்லை. இங்ஙனமிருக்க நம் தம்பியானவன் சம்புபுத்திரனுல் போர்முன்னர் எவ்வாறு கொல்லப்படலாவான்? நல்லது! இங்குக் கேட்க வேண்டிய விஷயங்கள் சில இருக்கின்றன. அடா குழந்தாய்! உனக்குச் சித்தப்பிரமமோ? ஏனடா குழந்தாய்! இல்லையாகில்கனவு கண்டாயோ? அடா எனது மைந்தனே! பயப்படாதே!" என, அசுரேந்திரன் உத்தரம் சொல்கின்ருன்:—ஓ அண்ணு! எனக்குச் சித்தப்பிரமம் இல்லை. யான் கனவும் காணவில்லை. அன்னியர் வார்த்தையைக் கேட்டுச் சொல்லவும் இல்லை. சண்டையில் மாண்ட எனது தந்தையை உடன் கட்டை ஏறின என் தாய்மார்களோடு நானே நேரில் தகனம் செய்து பின்னும் உள்ள சடங்குகளையும் முடித்துவிட்டு, நான் உங்கள் முன்னிலைக்கு வந்தேன். அங்கு சம்பு மைந்தனுக்குப் பயந்து அரைக்ஷணம் கூடத் தங்கவில்லை. ஓ பிரபுவே? இச்சங்கதியில் இப்போது கொஞ்சமேனும் சந்தேகம் வேண்டாம். கேளீர்? அசுர சிரேஷ்டரே! இதைப்பற்றி உமது மலரடிகளில் ஆணைவைக்கின்றேன். ஓ? சத்துருக்களைக் கொல்லுகின்ற தந்தையே! அஃதிம்மட்டோடு போகாது. அம்மஹா பராக்ரமசாலியான குமாரனுல் நமக்கும் மிகுந்த கேடு வரலாயிற்று என்றறிந்து கொள்ளும்." என்று செவிதனில் ஆணி அறைந்தது போன்ற தனது மைந்தனது இவ்வசனங்களைக் கேட்டுச் சூரபதுமன் உள்ளத்தில் ஆராய்ந்து பயத்தினுல் மிகவும் நடுங்கியவனுகிச் சிங்கக் கால்களைக் கொண்ட தனது ஆசனத்தினின்றும் திடீரெனப் பூமியில் விழுந்து ஹாஹா எனக்கதறினுன்.

## 47-வது அத்தியாயம்.

பிறகு அவன் தம்பியாகிய சிங்கமுகனும் வேரறுட்ட மரம்போல் கீழ் விழுந்து பலவாறு புரண்டு கேசங்கள் அலங்கோலமாய் விரிபட்டவனும், தேக முழுதும் புழுதிகள் பற்றலுற்றவனுமாகி இருகைகளாலும் கீழே விழுந்து புரண்டு கொண்டிருந்த சூரபதுமனை வாரி எடுத்து மிக துக்கத்தோடு மார்போடணைத்துக் கொண்டு "ஐயோ! தெய்வமே! உன்னுல் யாங்கள் எல்லோரும் செத்தோம்." என்று பரிதாபப்படத் தக்கவனுகப் பல்விதமாய்ப் பிரலாபித்து அடிக்கடி "ஹாஹா' என்று கதறி மிகவும் தீனகுரலுடன் அழுதான். பிற்பாடு சகல மந்திரிகளும், சேனுதிபதிகளும் புரோ

ஹிதர்களும் பண்டிதர்களுமாகிய எல்லோர்களும் துக்கித்தார்கள். சூரபது மன் துக்கத்தினுல் தலைமீதடித்துக் கொண்டு பூமியில் மிகவும் மூர்ச்சித்தவ ஞகி விழுந்து பிறகெழுந்து புலம்பி மறுபடி திடீரென்று விழுந்து இவ்வித மாகப் பல தடவை மூர்ச்சை அடைந்தனன். பிறகு மந்திரிகள் எல்லோர் களும் அவனை எடுத்து வெகு நேரம் ஆசுவாசப்படுத்தி, அனேக சைத்யோப சாரங்கள் முதலியவற்ருல் மெல்ல மெல்ல மறுபடியும் அவனுக்குக் களை தெளிய வைத்தார்கள். மஹாபத்மனுகிய சூரபதுமன் பிறகு மூர்ச்சை தெளிந்து, மஹா கோபாக்கிராந்தனுகி கீழ் உதட்டையும் மேல் உதட்டையும் மடித்து மடித்துப் பற்களால் கடித்துக்கொண்டு, எல்லாத் திசைகளையும் உற்று நோக்கிப் பற்களைக் கடகட வென்று கடித்துக் கைகொட்டி ஓர் க்ஷணத் துக்குள் விழிகளால் சராசரப்பிரபஞ்சங்களை எல்லாம் எரித்து விடுவான்போற் சிரித்தும், பற்களால் உதடுகளை மடித்துக் கடித்தும் பேரிடிகளுக்கொப்பான ஓசையுடன் பூமியைக் கிடுகிடென்று நடுங்கச் செய்வதுபோற் பல தடவை ஹுங்காரம் செய்து கொண்டும் சொன்னதாவது:—"என திரண்டடிகள்மீது சபதம் செய்து கொள்கின்ற என் வசனத்தைக் கேளுங்கள். யான் யுத்தத் தில் அக்கந்தனை அவனது பந்துக்களுடன் சங்கரிக்காவிடில் போர்முனையில் அவனுல் அடிபட்டு நிச்சயமாக ஓர் க்ஷணத்துக்குள் உயிர்களை இழக்கின் றேன். மஹா பெரிதான சதுரங்க சேனையானது திடமான விற்களைப்பிடித்த ஸேனுதிபர்களோ டிப்போதே யுத்தத்திற்குச் சன்னத்தமாகிப் பட்டணத்தி னின்று வெளிப்புறப்படட்டும். நமது கட்டளையின்படி சகல வாத்தியங் களும் முழங்கட்டும். இப்போது நிஸ்ஸானம், டிண்டிமம் முதலான வாத்யங் களுடன் பேரிகைகள் கோஷிக்கட்டும்." என்று இவ்விதமாகத் திட்டமிட்டு மறுபடியும் கோபத்தினுல் அவயவங்கள் எல்லாம் வியர்வையால் நனையலுற்ற வனுகி ரோஷத்தினுல் பயங்கரனுகி வேவுகாரர்கள் எல்லோர்களையும் அழைப் பித்து, "கேளீர் தூதர்களே! நமது கட்டளையின்படி பயத்தைவிட்டு இப் போதே துரிதத்திற்சென்று திரிபுரமெரித்தனுடைய அம்மைந்தனைச் சண் டைக்கழையுங்கள். இதோ கேளீர்கள்! 'ஒன்று மறியாத சிறுவனுன எனது யைப் போர்க்களத்தில் வஞ்சகம்செய்து தேவர்களைச் சேர்த்துக் கொண்டு தம்பி கொன்று விட்டாயல்லவா? ஆகையால் நீ அம்பிகைக்குக் குமாரனுகியும் எனக்கு இப்போது சத்துருவாகி விட்டாய். யானெனது தம்பியோடு ஜீவித் திருக்கும்போது நீ எப்படித் தூங்குகின்ருய்? எப்படித் தான் உண்ணுகிருய்?' என்றிவ்வாருகிய எனது வசனங்களை இப்போதே தேவர்களிடத்திற் சொல் லுங்கள். இன்று முதல் உங்களுக்குப் பூரண ஆகாரம் நடப்பிக்கின்ருேம். இப்போ தென்னிடம் இருந்து நீங்கள் சென்று இவ்விதமாக உரைத்துவிட்டுத் திரும்பி என் முன்னர் வாருங்கள்." என்றிவ்விதமாகத் தூதர்களுக்கு அறிக் கையிட்டு மறுபடியும் மிகவும் கோபம்கொண்டு அசுவ பரிக்ஷையில் மிகவல் லவனுன ஸாரதியை நோக்கிச் சீக்கிரத்தில் கட்டளையிட்டதாவது:—அடா ஸாரதியே! ஆயிரம் கோவேறு கழுதைகள் பூட்டியதும் தங்கத்தாற் செய்து ஸகல ரத்தினங்களாலும் இழைக்கப்பட்டதும் ஸகலவித ஆயுதங்கள் வைக் கப்பட்டதுமான ரதத்தைக் கொண்டுவா. பிளப்பதற்கு மாளாத இருப்புக்

கவசம் பொற்கவசம், கொம்புகளால் அமைத்த விற்கள், இன்னும் மற்ற பெரிய ஆயுதங்கள், என்றும் குறைவுபெருத அம்புகளால் நிறைந்த இரண்டு திவ்ய அம்பருத் தூணிகள் இவையெல்லாம் கொண்டு வா.'' என்றிவ்விதமாக வேலைக்காரர்களை அசுரராஜன் கட்டளை யிடுகையில் மந்திராலோசனைகளை நன்கறிந்தவனும், மஹா புத்திசாலியும், புலன்களின் அடக்கம் கொண்டவனும், அமோகன் என்னும் பெயருடையவனும் நீதி நூல்களில் திறமையுடையோனுமான மந்திரியானவன் சபையின்கண் அரசனை நோக்கிப் பயத்தைவிட்டுக் கூறியதாவது:—''ஓ ஸ்வாமி! ராஜநீதி மிகவும் பெரிதானது. அது சாதாரணமாக ஜனங்களாலும் இன்னும் பாமரர்களான அமரர்களாலும் நன்ருய் அறிய முடியாதது. சகல சுகங்களையும் அளிக்கவுற்றதும் மூன்றுவித சக்திகளையுடையதுமான அந்நீதியை அரசர்கள் அவசியம் கைக்கொள்ளல் வேண்டும். அம்மூன்று சக்தியோ என்ருல்:—முதலாவது தைரிய சக்தி. இரண்டாவது அதிலும் மஹா பெரிதான மந்திராலோசனையால் உண்டாகிய சக்தி. மூன்ருவது அளவற்ற பொருள்களையும் தளங்களையுமுடைத்தாதலாகிய பிரபு சக்தி. ஆனல் இவையெல்லாம் தேவரீரிடத்தெக்காலத்தும் எங்கும் உள்ளதே. மேலும் ஸந்தி (சமாதானப்படுத்தல்,) விக்கிரகம் (சண்டை செய்தல்,) யானம் (தண்டெடுத்தெதிர்த்தல்,) ஆஸநம் (இருக்குமிடத்தே இருந்து கோட்டை முதலான துர்க்கங்களை அரணிப்பாகப் பாதுகாத்தல்,) துவைதீபாவம் (மித்திர பேதம்) சமாஸ்ரயம் (அடுத்துச் சினேகம் செய்தல்,) ஆகிய ஆறு ராஜ குணங்களும் தேவரீருக்குத் தெரிந்த விஷயமே. மேலும் ஓ சுவாமி! சுவாமி (இராஜா), அமாத்தியன் (மந்திரி,) ஸுஹ்ருத் (சினேகிதன்), கோசம் (பொக்கிஷம்), காஷ்டிரம் (அரசாக்ஷியின் விஸ்தீரணம்,) துர்க்கம் (கோட்டை கொத்தளம் முதலிய பலவித ஆவரணங்கள்,) பலம் (தளங்கள்) ஆகிய ஏழு ராஜ்யாங்கங்களும் தேவரீருக்குத் தெரிந்தவை தான். ஆகையால் தேவரீருக்கு யான் சொல்லத் தகுவது யாதுமில்லை. ஆனுலும் கொஞ்சம் நினைவு மூட்டினேன். இதோ கேளீர்கள்! இச்சிறுவன் திறமையற்றவன் என்பதில்லை. அவனே ஸ்ரீ ருத்திரமூர்த்தியினுடைய திருமேனியினின்று உண்டானவன். அவன் ஒன்றும் அறியாத சிறுவன். ஆனல் மிகுந்த பராக்கிரமமுடையவன்; வேலாயுதன்; சத்துருக்களைப் பூண்டோடு வேரறுக்கிறவன். நமக்கோ உலகுகளுக்கெல்லாம் சுகத்தை யருளுகின்ற ஸ்ரீ சங்கரன் மீது பகை யாதும் இல்லை. கந்தனும் அவருக்குப் பிள்ளையாகியதால் அவனை ஸாக்ஷாத் சங்கரன் என்றே நினைத்தல் வேண்டும். ஏதோ தன்னிச்சையாய் வந்த அச்சிறுவனோடு தேவரீர் தம்பி அறியாவண்ணமாகப் போர்தொடுத்துச் சடுதியாகச் சண்டையில் மாண்டான். நமக்குச் சத்துருக்களாகிய தேவர்களால் ஸ்ரீசம்பு வானவர் பிரார்த்திக்கப்பட்டு அதன் பேரில் அவர் குழந்தையை அனுப்பி இருக்கலாம். அக்குழந்தையோ நம்மனோரால் பூஜிக்கப்படத் தக்கவன், ஆகையால் தேவரீர் இனி அவனுடன் பகைத்தொழிலை நாடுவது தகுதியல்ல.'' என்றிவ்வாருகிய மஹா புத்திசாலியான அமோகனுடைய பழுதுபெருத வசனங்களை அரசன் கேட்டு இவை எல்லாம் மனதில் நன்காலோசித்து மெல்ல மெல்லத் தணிவடைந்தான். பிறகு மறுபடியும் சிம்மாசனத்தில் உட்கார்ந்து

சும்மா இருந்தான். அதன்மேல் மகாஸமர்த்தனும் அசுரேசுவரனுமான சூரபதுமன் பெரிதும், மிகநேர்த்தியுமான ஆசனத்தின் மீதுட்கார்ந்துகொண்டு பகன் (கொக்கு,) சாரு (ஓர் பறவை,) மயூரன் (மயில்,) சியேனன் (பருந்து) சக்கிரவாகன், சுகன் (கிளி) இவர்கள் முதலான இன்னும் சிலரை அழைப்பித்து,) அவர்களுக்குத் தகுந்த போஜனம், வஸ்திரம், ஆபரணம் முதலியவற்றால் வெகுமானம் செய்து அவர்களது செவிதனில் உரைத்ததாவது:—கேளீர் அசுரர்களே! மஹா புத்திசாலிகளும், வேண்டிய உருவங்களை எடுக்கக்கூடியவர்களுமாகிய நீங்கள் எல்லோர்களும் ஓர் க்ஷணத்துக்குள் அவரவர்கள் பெயர்களைக் கொண்ட பக்ஷிகளின் உருவமெடுத்துச் சுப்பிரமணியனிடம் சென்று ஸ்ரீ ஹரமைந்தனுடைய உருவம் யாது; வயதென்ன; அவனது புத்தியின் கூர்மை எவ்வாறு; அவனுக்கினி என்ன வேலை; அவன் எங்குப் போவதற்கு விருப்பம் உற்றிருக்கிறான்; அவனெப்போதும் எவ்வளவு தளங்களால் காக்கப்படுகிறான்; அங்கு வீரர்கள்யாவர்; அவர்கள் உருவம் எப்படி; அங்கு மஹாரதர்கள் யாவர்; மந்திராலோசனைகளுக்குரிய அந்தரங்கப் பிரபுக்கள் யாவர்; அவனுக்கு யாவருடைய வசனத்தில் பற்றுதல்; அவனுக்கு ஆறு ராஜ குணங்கள், மூன்று ராஜசக்திகள், மூன்று ராஜவர்க்கங்கள் (க்ஷயம் ஸ்தானம், விருத்தி) ஏழரசாக்ஷியங்கங்கள் ஆகிய இவைகளின் ஆராய்தல் தேர்ச்சியிருக்கின்றதா; எதைக்குறிப்பிட்டுப் பிரயாணம்? நீங்கள் எல்லோர்களும் அவனது சேனையென்ற சமுத்திரத்துக்குச் சென்று அங்கு வெகுநேரம் தங்கி நன்கு விசாரித்து, ஒ கனவான்களே! பிறகு இங்கு வாருங்கள்.'' என்று உத்தரவு செய்தனன்.

## 48· அத்தியாயம்.

இவ்விதமாக வேவுகாரர்களுக் கறிக்கையிட்ட பிறகு இந்திரனுக்குச் சத்துருவும், மஹா புத்திசாலியுமான சூரபதுமன் சகல மந்திரிகளோடு கூட அடிபட்டு மாண்ட தம்பியை நினைத்துக்கொண்டே காலந்தள்ளி வந்தனன்.

பிறகு தேவகிரியில் அவ்விரவு கழிந்தவுடன் மகா மேதாவியான கந்தன், ஆதித்தியன் உதித்த பிறகு விஷ்ணு, பிரமன் முதலிய சகல தேவர்கள் முனிவர்கள், யோகிகள், இவர்களுடனும், மிகுதியான சேனைகளுடனும், தமக்கு மிகவும் பிரியம் உள்ள தேவகிரியை மனவருத்தத்துடன் விட்டு, ஆகாய மார்க்கம் சென்று வாயுவேக மனோவேகமாய் திக்பாலகர்களுடன் ஸ்ரீ அகஸ்திய முனிவர் வசிக்கலுற்ற தென்திசையை நோக்கிச் சென்று, ஸ்ரீ மஹேசுவரனால் லோகானுக்ரஹமாக ஏற்படுத்தப்பட்டிருக்கிற சிவத்தலங்களை அந்தரங்கபத்தியோடு தரிசனம் செய்தனர். அவற்றுள் முதலில் ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களுக்குச் சுபத்தானமும், யாதாமொரு பிராணியும் அங்கோர் உளுந்தளவு நீரைப் பக்தியில்லாமலாயினும் குடிக்கில் பிறகு நிச்சயமாகவே தாய் முலை யுண்பதற்குப் பிறப்படையாத மகிமையைப் பெற்றதுமான கேதார க்ஷேத்திரத்திற்கு விஜயமாகி அங்கு சகலபிரபஞ்சங்களுக்கும் தமக்கும் தந்தையும், ஸாக்ஷாத் ஜகத்குருவுமாகிய லிங்காகாரமான ஸ்ரீகேதாரேசுவர ரென்ற ஸதாசிவனை மனதினால் பூஜித்து ஸ்ரீ ஜகதீசனுடைய பிரகாசத்தினாலே பிரகா

சம் பொருந்திய காசி க்ஷேத்திரத்துக்கருளி அங்கு ஜகத்பிரபுவான ஸ்ரீ விசுவேசுவரரை ஜகன்மாதாவாகிய விசாலாக்ஷி அம்மையோடுகூட மானஸிகமாகப் பூஜை செய்து பிறகு ஸ்ரீமஹாதேவனுக்கு மிகவும் பிரியமாயுள்ள ஸ்ரீசைலம், மஹாமேன்மை பொருந்திய ஸ்ரீவிரூபாக்ஷம், சுவர்ணமுகி என்ற நதியின் கரைமீதுள்ளதான தக்ஷிண கைலாஸமென்ற ஸ்ரீகாளஹஸ்தி, என்றும் ஸ்ரீ சுப்ரமண்ய பிரபு ஸான்னித்தியமாக வாசம் செய்வதால் மஹாபிரசித்திகொண்டதும் அற்புதமானதுமான ஸ்ரீ வெங்கடாசலமென்ற திருப்பதி ஆகிய க்ஷேத்திரங்களில் யாத்திரை செய்து பிறகு சுவாமி புஷ்கரணி என்ற தடாகக் கரை மீதுள்ள திருவாலங்காட்டுக் கருளி அங்கு விஷ்ணு முதலிய தேவர்களால் பூஜிக்கப்பட்டவும், காலைச் செங்குத்தாகத் தூக்கி நடனம் செய்வதால் மிக அலங்காரமாய் விளங்கியவருமான ஸ்ரீ வடாடவீசுவரரை மனதினுற் பூஜித்துப் பின்பு முறையே ஸ்ரீ காஞ்சிபுரத்துக்கு எழுந்தருளினர். ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாதேவன் நடனத்துக்குத் தக்கப்படி ஸ்ரீமஹா விஷ்ணு மத்தளம் அடிப்பதனுல் மிக நேர்த்தியாய் விளங்கும்படி சகல பிராணிகளுக்காகவும் ரக்ஷா தாண்டவத்தை ஆடியருளிய அந்த க்ஷேத்திரத்தில் பராகாச குஹாஸ்வரூபியான தேவியையும், சகல வேதங்களும், ஒன்ருய் உருவம் எடுத்த மாமரத்தின் அடியில் விளங்கிய அழிவற்ற உண்மைப் பொருளும், ஸர்வ லோகேசுவரர்களுக்கும் ஸாக்ஷாத் ஈசுவரனுமான ஸ்ரீ ஜகதீசனையும் பூஜித்துப் பின்பு எல்லாவற்றிலும் மிகுந்த சிரேஷ்டமான குமார கோஷ்டத்துக்கு எழுந்தருளி அதையும் தமது முக்கிய வாசஸ்தானமாகச் செய்து, மேலும் அங்குள்ள, அளவற்ற பராக்ரமங்களையுடைய ஸ்ரீ சம்புவினுடைய எல்லாத் தலங்களிலும் உள்ள லிங்கங்களை உள்ளக்களிப்பினுல் பூரிக்கலாகிப் பக்தியுடன் பூஜித்துப் பிறகு திருவண்ணுமலைக்குச் சென்று அங்கும் இவ்வாறே செய்தருளினர். அதன் பிறகு தபா நிதியாகிய முருகன் பெண்ணை யாற்றின் கரையிலுள்ள திருவெண்ணெய் நல்லூருக்குத் துரிதமாக வந்து அதன்மேல் விருத்தாசலம், சிதம்பரம் ஆகிய இந்த க்ஷேத்திரங்களில் ஸ்ரீ பரமேசுவரனைத் தரிசித்து மற்றுமுள்ள பல சிவஸ்தலங்களை ஆகாசமார்க்கத்தில் இருந்தபடியே சேவித்து ஸ்ரீ மாயூரத்துக்கு வந்து, பிறகு காவேரியின் சமுத்திர சங்கமத்தில் ஸ்நானம் ஆடி, காவேரியின் வடபாகத்தில் உள்ள மண்ணியாற்றுக் கெழுந்தருளினர். அங்கு சூர்யாஸ்தமனமாகித் திசைகள் இருளால் நிரம்பப்பட்டது. வானம் எங்கும் ஒளி பொருந்திய நக்ஷத்திரங்களால் நிறையலுற்றது. ஆம்பல் மலர்களுக்கு நண்பனும் இரவுக்கிறையோனுமாகிய சந்திரன் கீழ்த்திசையில் உதயமாகித் தனது கிரணங்களால் இருள்களைத் தொலைப்பித்தனன். அரக்கர்களை இறக்க அடிக்கின்ற மயிற் கொடியோன் இங்கு மண்ணி நதிக்கரையிலே தேவர்களுடன் அன்றிரவில் வசிப்பதற்கு இச்சைகொண்டனர். இங்கும் விசுவகர்மனுனவன் மூவுலகிலும் குமாரபுரமென்றும் திருச்சேய்ஞலூர் என்றும் பிரசித்தமாய்த் தெரியப்பட்டதும் இவரது திருநாமத்தைக்கொண்டதனுல் மங்களகரமாய் உள்ளதும் மிக நேர்த்தியுமான துமான ஓர்நகரத்தை உண்டாக்கினன். அதன் மத்தியில் நவரத்தினங்களாலும் விசித்திரமாய் அலங்கரிக்கப்பட்ட திருமாளிகையின்கண் ஸ்ரீ ருத்திர சர்மன்

அன்றிரவில் வசித்தனர். மேலும் பிரபுவானவர் தேவர் எல்லோர்களையும் அவரவர் விடுதிகளுக்குச் செல்லும்படி அனுமதியிட்டருளினர். அவர்களும் அவரது கட்டளையின்படி அவரவர்கள் கூடாரத்துக்குச் சென்றார்கள். இந்திரனனவன் தனது விடுதிக்குச் சென்று படுக்கையில், சீர்காழி என்ற பட்டணத்திய வனதேவதையானவள் முந்தி இந்திரனால் அசுரபயத்தினாலோடி ஒளிகையில், ஒளித்து வைக்கப்பட்ட ஆபரணங்கள் அடங்கிய பாண்டத்தை அன்றிரவில் கொண்டுவந்து தானே நேரில் ரகசியமாக அவன் முன்னர் வந்து கொடுத்தனள். அப்போது இந்திரனும் அத்தேவதையால் கொடுக்கப்பட்ட ஆபரணப் பெட்டியைத் திறந்து பார்க்கையில் அதில் முந்தி இந்திராணி ஆபரணத்தைக் கண்டதில் ஆயிரம் கண்களையுடைய அவ்விந்திரன் அவளது பிரிவினையால் புலன்கள் கலக்கம் அடைந்தவனாகி அவ்விந்திராணியை நினைக்கலாயினன். எல்லோர்களுக்குமே ஓர் வஸ்துவோடு சம்பந்தப்பட்ட மற்றொரு பொருளைக்கண்ட மாத்திரத்தில் அவ்வஸ்துவின் நினைப்புண்டாவது வழக்கந்தான். மன்மதனுமோ என்றால் இச்சந்தர்ப்பத்தைக் கைக்கொண்டு இந்திரனைக் கூர்மையுள்ள மலரம்புகளால் நோக அடித்து அவனை மதமிழக்கச் செய்தான். காமாதுரனான தேவராஜன் மிகவும் மனவியப்புற்றவனாகி அவ்வாபரணங்களைத் தனது பரிவாரமங்கையர்களது கைகளிற் கொடுத்துத் தனது வேலைக்காரர்கள் மலர்களைக் கொண்டு வந்தமைத்த படுக்கை மீது இந்திராணியது விரகதாபத்தினால் அவ்விரவின் ஒவ்வோர் க்ஷணத்தையும் கல்பகாலமாகப் போக்கினன்.

## 49. அத்தியாயம்.

இந்திராணியினது பிரிவினையால் அவ்விரவில் வெகு நேரமளவும் சிங்காரத் தோட்டங்களிலும், குளக்கரைகளிலும் உலாவிப் பார்த்து அவன் நித்திரையின் சுகத்தைப் பெறவில்லை. அவன் அவ்விரவு முழுமையும் மலர் மெத்தை மீதே யோர் சிறிய இராத்திரியை ஆயிரம் யுகங்களாகக் கழித்தான். பிறகு மறு நாட்காலையில் வெகு பிரயாசையுடன் மிகவும் திடசித்தமுள்ளவனாக உள்ளத்தில் தேறுதலைக் கொண்டு காமன் அம்பால் உண்டாகிய தேக விகாரங்களைப் பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ முதலிய வாசனைத் திரவியங்கள் கலக்கப்பட்ட சந்தனத்தால் பூசி மறைத்துக்கொண்டு, பிறகவன் ஸ்ரீ கந்தனது பாதகமலத்தை மறுபடி சேவிக்க மனமுற்றவனாகி மற்ற தேவர்களோடு மிகுந்த களிப்புடன் சென்றான். பிறகு ஸ்ரீ குமாரமூர்த்தியும் அதிகாலையில் எழுந்து, காலைக் கடன்களை முடித்துக்கொண்டு தாய் தந்தையர்களது பொன்னடிகளைப் போற்ற மனமுற்று, தம் தந்தையாகிய லிங்கரூபமான ஸ்ரீ சதாசிவனையும், மஹா தேவியையும் மிகுந்த மனபக்தியோடு தாமே பூஜித்தனர். விஷ்ணு, பிரம்மன், இந்திரன் முதலிய ஸகல தேவர்களும் ஸாத்தியர்கள், விசுவதேவர்கள், சித்தர்கள், வித்யாதரர்கள் ஆகிய இவர்களுடன் சிவார்ச்சனத்துக்காக மிகுந்த பக்தியுடனும், கவலையுடனும் நூல் முறைப்படி புஷ்பம் முதலிய பூஜா திரவியங்களைச் சேகரிப்பதில் முயன்றவர்களாகி ஊழியம் செய்தார்கள். ஸ்ரீ குமாரசுவாமியானவர் மிகுந்த அகண்ட விபவங்களோடு பாசுபதம் என்ற நோன்பெடுத்து அங்குத் தம் தந்தையைப்

பூஜிக்கும் அளவில் தந்தையான ஸ்ரீ சங்கரனனவர் தாயாகிய உமையம்மை யோடு திரு எருதேறித் தமது கணேந்திரர்களுடன் நேரில் தோன்ற, ஸ்ரீ ஸேநானிக்குத் தமது சாங்கராஸ்திரத்தையும், மற்றுமுள்ள தம்முடைய ரௌத்திராஸ்திரம், பாசுபதாஸ்திரம், முதலிய மேன்மை பொருந்திய அஸ்தி ரங்களையும் ஈந்து அனுக்கிரகித்து, மறைந்தருளினர். அதன்பிறகு தேவசைன் யங்களைக்காக்கின்ற ஜகத் பிரபுவானவர், ஸ்ரீ மஹாதேவனை வந்தனித்துப்பிரா ர்த்தித்துக் கொண்டு துரிதமாக இரதமேறிப் பிரமன் விஷ்ணு முதலிய தேவர் களுடன் அப்பட்டணத்தினின்று புறப்பட்டு அவ்வியாத்திரையில் மற்றுமுள்ள ஸ்ரீ சிவபிரானுடைய நேர்த்தியான ஸ்தலங்களைத் திருக்கண்களால் தரிசனம் பண்ணிக்கொண்டு செல்லுகையில் இடையில் ஓர் நீரற்ற மைதானமாகிய பாலை வனத்துக்குற்றனர். காட்டுத் தீக்கொப்பான அக்காடோ யாவராலும் செல்லத் தகாத மஹாகடோரமானது. மேலும் அதில், சூர்யகிரணமும், எரிக்கும் போது சூர்யகாந்தக்கல் மீது பட்டாற்போல் அதனின்றக்னி ஜ்வாலைகள் உண்டாகி அச்சூர்யகாந்தக் கல்லினும் மிகுதியான நெருப்புப் பொறிகளைக் கக்கலுற்றன. பனிகாலத்திய இரவின் கடைப்பாகத்திற் பிரகாசிக்கின்ற சந் திரனுடைய கிரணங்கள் கூட அக்காட்டைக் குளிரச்செய்யத் திறமைபெற்ற தில்லையாகும். இவ்வண்ணமாயின் அதைப்பற்றி யாதுரைத்தல் வேண்டும்! அங்கு முளைத்திருந்த சதுரக்கள்ளி முதலிய மரங்கள் எல்லாம் மாரிகாலத் திற் கூட முதுவேனிற் பருவத்தின் அவஸ்தைகளை அனுபவித்தன. வேறென்ன கஷ்டம் வேண்டும்? அங்கு வெடித்திருந்த பூமியில் அதல மென்ற கீழ் லோகத்தில் வசிக்கும் ஸர்ப்பங்களது படங்கள் மீதுள்ள ரத்தி னங்களின் ஒளியானது எப்போதும் காணப்பட்டது. மிருகங்கள், பக்ஷிகள், இவை எல்லாம் அங்குத் தற்செயலாகச் செல்லுமாயின் அவைகளது உடற் சந்திகள் ஓர் க்ஷணத்திற்குள் பொசுங்கலாகி வேறிடங்களுக்குத் திரும்பிச் செல்லும். கொடுமையான பாலைவனம் போன்ற அல்லது விஷத்துக் கொப் பான அத்தகைய வெட்ட வெளி கூட ஸ்ரீ சங்கர குமாரன் அங்கு விஜயம் செய்தருளுகையில் ஸகல பிராணிகளுக்கும் இன்பம் பயக்கலாயிற்று. ஸ்ரீ சிவன் செல்வனும் அப்பாலை வனத்தைக்கடந்து, மலைக்கரசனன பராச வத்து (திருபரங்குன்றத்து)க்குச் சென்றருளினர். இந்த நேர்த்தியான மலையின் கண் தவசிகளிற் சிறந்தோர்களான மஹா மகிமை பொருந்திய ஆறு முனிவர்களான, தப்தர், அநந்தர், நந்தி, சதுர்முகர், சக்கரபாணி, மாலி ஆகிய இவ்வாறு பெயர்களும் ஜகங்களின் துக்கங்களைத் தொலைப்பிப் போரான ஸாக்ஷாத் ஸ்ரீ ருத்திரபுத்திரனைத் தூரத்திற் கண்டு வெகுமானத் துடனும், ஆதரவுடனும் அவர் முன்னிலையில் தண்டம் செய்தார்கள். இதற் கிடையில் அத்தேவராஜனுகிய இந்திரன், ஜகதீசனன தேவனை வந்தனித்து அஞ்சலி கொண்டு அம்முனிவர்களுடைய பூர்வீக விருத்தாந்தங்கள் யாவை யும் வணங்கிச் சொல்லலாயினர். "ஓ பிரபே! இவர்கள் பூர்வத்தில் வியாஸ முனிவருக்கு மூத்த சகோதரர்களும், பராசர முனிவருக்குப் பிள்ளைகளு மானவர்கள். மதிக்கேட்டினல் மூடத் தன்மை கொண்டு நாணற்காட்டின் மீதுள்ள ஓடையில் மச்சங்களைப் பிடித்துத் துரிதமாய் அவைகள் வாய்

களில் கயிற்றைக் கோத்துக்கொண்டு விளையாடினர். அப்பிள்ளைகளைத் தந்தைகண்டு கோபம்கொண்டு "ஆஹா! வீண்கேடர்களான புத்திரர்களே! நீங்கள் மதிதடுமாறி இங்கு மீன்களுக்குத் துன்பம் அளிக்கின்றபடியால் நீங்கள் மச்சங்கள் ஆகக் கடவீர்கள்" என்று சபித்தனர். முனிவரால் இவ்விதமாக நேரில் சாபம் அடைந்த தப்தர் முதலிய மைந்தர்கள் மிகவும் பயங்கொண்டவர்களாகி முனி சிரேஷ்டரான தந்தையை வந்தனித்து உச்சி மீது கைகளை அஞ்சலி கொண்டு அச்சாபத்தின் நீங்குதலைப்பற்றி வினவினார்கள். சாப பயத்தினால் வியாகூலம் உற்ற புத்திரர்களை நோக்கி முனிவர் உத்தரம் அளித்ததாவது:—வாரீர் எமது மைந்தர்களே! எப்போது ஸ்ரீ பார்வதிதேவியுடைய முலைப்பாலானது உங்களால் குடிக்கப்படுகிறதோ அப்போதுடனே உங்களுக்குச் சாபம் நீங்கும்." என்றனர். இவ்வாறாக முனிசிரேஷ்டரான பராசரர் மைந்தர்களுக் கனுக்ரஹமளித்துச் சென்றபோது உடனே அவர்கள் பிராமண திருமேனியை இழந்து மச்சவுருவத்தைக் கொண்டனர்.

## 50. அத்தியாயம்.

பிறகு மச்ச உருவம் அடைந்த முனிபுத்திரர் எல்லோர்களும் கானல் வனத்துக்குள்ளான ஓர் குளத்தில் மீன்களுக்குரியபடி விளையாடிச் சஞ்சரித்து வந்தனர். ஒ குமார பிரபுவே! இவ்விதமாக வெகுகாலம் சென்றதன் மேல் ஜகத்குருவாகிய தேவரீர் கபா நிதியான ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரனிடத்தும், பார்வதியிடத்தும் ஆவிர்ப்பவித்தபோது, பராக்ரமசாலியைப் பெற்ற லோகமாதாவான பரமேசுவரியானவள் கேளீர்! ஜகத்குருவே! தம் கொங்கையது பாலைத் தேவரீருக்குக் கொடுக்க, மேன்மை தங்கிய ஸாக்ஷாத் அவ்வமிருதத்தைத் தேவரீர் பானம் பண்ணும்போது, "ஓ தேவசா! கருணை கொண்ட அவ்வம்மையது முலைப்பாலில் கொஞ்சம் குளத்தில் சிந்த, அப்பாலை மச்ச உருவங்கொண்ட முனிபுத்திரர்கள் குடிக்க அதனால் அவர்கள் உடனே மறுபடியும் தங்கள் சுப உருவத்தைக் கொண்டனர். அம்முனி புத்திரர் எல்லோரும் தங்கள் நிஜ உருவத்தைக் கொண்டதன்மேல் ஸ்ரீ பார்வதியோடு கூட தேவரீரை மடி மீது வைத்து வீற்றிருந்த ஸ்ரீ மஹாதேவனை சாஷ்டாங்கமாக வந்தனித்து, அம்முனி சிரேஷ்டர்கள் ஸ்ரீ பரமசிவனையும் என்றும் அவரைவிட்டுப்பிரிவினை அடையாத ஸகலலோகமாதாவான உமாதேவியையும் துதிகளால் களிப்பித்தார்கள். பிறகு லக்ஷம் கோடி சூர்யர்களுக் கொப்பான காந்தியுடையவரும் ஸகல உலகங்களையும் ஆள்வோரும், யாவராலும் மீறப்படாத கட்டளையுடையோருமான ஸ்ரீ ஸாம்பமூர்த்தியானவர் அம்முனிவர்களை நோக்கித் திருவாக்கருளியதாவது:—"கேளீர், பராசரமுனிவரின் மைந்தர்களே! நமது கட்டளையின்படி நீங்கள் சாபத்தினின்று விடுபட்டீர்கள் பரபருவதத்தி (திருப்பரங்குன்றத்தி) னுச்சிக்குச் சென்று தவம்செய்து கொண்டு, தேவர்களோடு கூடச் சுப்பிரமண்ய தேவன் பாதாரவிந்தத்தினால் அனுக்ரஹிக்குமளவும் அங்கேயே இருங்கள். அவன் அங்கு வரும்போது அவனை ஆதரவுடன் சரணமடைந்து நீங்கள் மிகுந்த மேன்மையைப் பெறுவீர்கள்." என, இவ்விதமான ஈசன் கட்டளையைப்பெற்று மிக்கொடூரமான தவம் [illegible] அம்முனிவர்கள் [illegible]

ஓ தேவேசா! அவர்கள் நாடிய பயனைக் கைக்கொண்டார்கள் என்பதில் ஐயம் இல்லை.'' என்றிவ்விதமாக இந்திரன் உரைத் திட்டவசனங்களைத் தேவர்களுக் கதிபனாகிய ஸ்ரீ ருத்திரபுத்திரன் செவிதனிற் கொண்டு, தப்தர் முதலிய அவ் வாறு முனிவர்களையும் அனுக்ரஹித்து, நல்லது நல்லது என்று அம்முனிவர் களுக்குத் திருவாக்கருளி, அவர்கள் தம்முடன்கூடத் தொடர்ந்து வரும்படிக் கும் அனுமதி கொடுத்தருளினர். பிறகு சத்துருக்களைச் சங்கரிக்கின்றவரும், விக்கிரமத்தினால் அசுரர்களை அடக்குவோருமான தாரகாரியானவர் இவர் களோடு புறப்பட்டுச் செந்திபுரம் என்ற திருச்செந்தூர் சேர்ந்தனர். அவ்வி டத்திலும் விசுவகர்மாவினால் ஸ்ரீபிரபுவுக்கு விசித்திரமும், பெரிதுமானதும் மிக உன்னதமான ரத்னகோபுரங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான ஓர் திருமா ளிகை அமைக்கப்பட்டது. பிறகு அத்திருச்செந்தூர் மத்தியில் விளங்கலுற்ற மஹாபெரிதான ஆலயத்திற்கு விஜயம்செய்து ஸ்ரீ ருத்திரபுத்திரன் மேன்மை பொருந்திய ரத்னசிங்காதனத்தை அடைந்து, அவ்வாசனத்தின்கண் ஸாக்ஷாத் ஸ்ரீமஹேச்சுவரன்போல் விளங்கினர். அப்போதங்கு ஹாஹா, ஹூஹூ, தும் புரு, விசுவாவசு இவர்களும், இன்னும்மற்ற கந்தர்வர்களும் கின்னரர்களும் மிகவும் ஆதரவோடு ஸ்ரீ பிரபுவினுடைய பிறந்தது முதல் நடந்த தேவமானி டர்களது கிருத்தியங்களை அதிகரித்த வினோதகரும விருத்தாந்தங்களை யெல் லாம் விஞ்ஞானம்செய்தார்கள். பிரமன், விஷ்ணு, இந்திரன் இவர்கள் மலர்மாரி சொரிந்தார்கள். ஸப்தமருத்துக்களும் ஸ்ரீ சங்கரகுமாரனுக்குச் சாமரம் போட் டார்கள். அக்னி, வருணன் இவ்விருவர்களும் மிக அற்புதமான குடையைப்பிடி த்தார்கள். மற்ற திக்பாலர் எல்லோர்களும் அங்குவிசித்ரங்களான விசிறிகளைப் பற்றிக்கொண்டு சேவகம் செய்தார்கள். சத்துருக்களைச் சங்கரிக்கின்ற வீரபா குவும் மிகுதியான தங்கத்தினாலும், ரத்தினங்களாலும் அமைக்கலுற்றதும், விசித்திரமான ரத்தினங்களால் செய்தபிடியுடையதுமான கத்தியைக் கைப்ப ற்றிக்கொண்டு ஆடையாபரணங்கள் முதலியவைகளின் பொக்கிஷத்தைக் காத்தனர். மற்ற எட்டுவீரர்கள், லக்ஷம்கணாதிபர்கள் நூற்றெட்டுப் படைத்தலை வர்கள் இவ்வெல்லோர்களும் அவரவர்களுக்குத் தக்கபணிகளைச் செய்தார்கள். அப்போது ஆறுதிருமுகங்கள், பன்னிரண்டுகைகள், கமலமலர்கள்போன்ற பதினெட்டு கண்கள் இவைகளையுடையவும், புன்னகையுடைய திருமுகங்கள் உடையவும் காம்பீர்யமுடைய திருமேனி கைக்கொண்டவும், விசித்திரமான மகுடங்களால் விளங்கியவும், மிகுதியான ரத்தினங்களால் அமைக்கப்பட்ட மஹாமேன்மைபொருந்திய திவ்யஸிம்மாஸனத்தில் விளங்கி இருந்தவருமான மஹாப் பிரபுவை முனிவர்கள் தரிசித்துக் கண்களைக் கொண்டதற்குண்டான அப்பயனைக் கைக்கொண்டார்கள், அப்போது தேவதேவேசுவரரான சரவண பவன் பிரஸன்னராகி, விஷ்ணு, பிரமன், முதலியதேவர்களைப் புன்னகைப்பு டன் நோக்கித் திருவாய்மலர்ந்தருளியதாவது:— வாரீர் தேவர்களே! அசுரர் கள் யாவர்?, அவர்கள் எவ்வளவாகிருதியுள்ளவர்கள்? அவர்களின் உருவம் எப்படி? அவர்கள் யாவருடைய பிள்ளைகள்? அவர்களிற் பிரதானமாகிய வன் யாவன்? இவைகளை இப்போது உள்ளபடி எடுத்துரைப்பீர்கள்.'' என் றிவ்வகையான ஸ்ரீ குமாரசுவாமியினுடைய திருவாக்கியங்களைக் கேட்டுத்

தேவசிரேஷ்டர்கள், ஸ்ரீ விஷ்ணு பிரம்மர்களோடுகூட ஒருவரோடொருவர் கலந்தாலோசனைசெய்துகொண்டு, வாக்குக்கிறையோனுன பிரஹஸ்பதி தேவனைச் சபையில் நோக்கி, "தேவனே! நமது ஈசனும் சரவணபவனுமான ஸ்ரீ குமாரசாமி கேட்பதற் குத்தரஞ்சொல்வீர்" என்றிவ்விதமாகத் தேவசிரேஷ்டர்கள் கூறுகையில், தேவகுருவும் பிரபுவை வந்தனித்து அஞ்சலித்துக் கொண்டு, "தேவசிரேஷ்டர்களுடைய துக்கங்களைத் தீர்க்கவுற்ற குருநாதனுக்கு வந்தனம் அளிக்கின்றேன். என்றுரைத்துக்கொண்டு பிரகஸ்பதியானவர் அவ்வசுரர்களுடைய ஸகல விருத்தாந்தங்களையும் மகாவினயத்துடன் யோகீசுவரர்களுடைய தகராகாசத்தில் விளங்கிநிற்கும் பிரபுவுக்கு அடுத்த காண்டத்திற் கூறியபடி ஆதியோடந்தமாக எடுத்துரைத்தனர். சூதர் சொல்கின்றார்:— சௌனகாதிமுனீச்சுவரர்களே! இச் சம்பவகாண்டமோ என்றால் வேதார்த்தங்களோடு ஒப்பிடப்பட்டது. ஆதலால் இது வித்வான்களும் பெரியோர்களும் மேன்மைபெற இன்றியமையாத காரணமானதாகும்.

சம்பவ காண்டம் முற்றிற்று



உ

முருகன் துணை.

# அசுர காண்டம்.

## 1. அத்தியாயம்.

சௌனகாதி முனி சிரேஷ்டர்கள் சூதமுனிவரைப் பார்த்து, "வாருங்கள் எல்லாக் குணங்களும் நிறைந்தவரும், புராணப் பொருள்களை அறிந்து வைப்பதில் மிகவும் தேர்ச்சி பெற்றவருமாக விளங்கும் சூதமுனிவரே! சூரபதுமன், சிங்கமுகன், மிகவும் பராக்ரமம் அமையப்பெற்ற தாரகன் முதலானோருடையவும், மற்றும் உள்ள அசுரர்களுடையவும் பிறப்பு முதலாகிய வரலாறுகளைத் தங்களிடமிருந்து தெரிந்து கொள்ள நாங்கள் மிக்க ஆவலுடையவர்களாக இருக்கிறோம். ஆதலால் தாங்கள் தயைசெய்து அவற்றை எங்களுக்கு விளக்கமாகவும், விரிவாகவும் எடுத்துச் சொல்லியருளல் வேண்டும்." என்று கேட்டனர். சூதமுனிவர், "வாரீர் முனிவர்களே! முன்னர் அளவில்லாத மகிமையை யுடையவர்களாகிய குமரக்கடவுளுக்குத் தேவகுரு எடுத்துரைத்த வரலாறுகளை உங்களுக்கு ஆதியோடந்தமாக யான் இப்போது எடுத்துச் சொல்லப்போவதை நீங்கள் எல்லோரும் கவனத்துடன் கேளுங்கள். அசுரர்களுக்குத் தந்தையாய் விளங்கிய காசியபர் என்னும் முனிவர் ஒருவர் இருந்தனர். அவர், தவத்தையே பொருளாய்க் கொண்டவர்; பிரம்மாவுக்குப் புதல்வர்; கோபத்தை வென்றவர்; ஸத்தியந் தவறாதவர்; அன்றியும் தருமங்களிலே மிக்க ஆவலுள்ளவர். அவர் தமது மனைவி திதி என்பவளிடத்து மிகவும் வீர்ய பராக்ரமம் அமையப்பெற்ற அறுபத்தாறு கோடி ஸங்கியை கொண்ட பல அசுரர்களைப்பெற்றனர். அவ்வசுரர்களுள் மிகவும் பலசாலியும் ஸம்பத்துமுடைய அசுரேந்திரன் என்பவன் தலைமையானவன். அந்த அசுரேந்திரன் மங்களகேசனி என்னும் பெண்ணுடன் சேர்ந்து, சர்வாவயவமும் அதிசுந்தர மமையப்பெற்ற ஒப்பற்ற ஸுரஸை என்னும் பெண் மகவைப் பெற்றனன். அந்தப் பெண்ணோ அசுரர்கள் குருவாய் விளங்கும் சுக்கிரபகவானிடத்துப் பணிவிடை செய்து வந்தாள். அவளுக்குச் சுக்கிர பகவான், அவளது பணிவிடைக்கு மெச்சி, அவளுக்குப் பல வித்தைகளையும் உபதேசம் செய்து, மாயை என்னும் வேறு பெயருமிட்டனர். பிறகு அவர் தேவர்களுக்குள்ள மேன்மையையும் அசுரர்களுக்குள்ள மிக்க தாழ்மையையும் கண்டு, தமது மனதில் அதைப்பற்றி நன்றாய் ஆராய்ந்தனர். அப்போது தக்ஷப்பிரஜாபதியின் யாகத்தில், ஸ்ரீநந்தி தேவரால் தேவர்களின் ஐசுவர்யங்கள் க்ஷீணித்துப்போம்படியிட்ட சாபமும், இனி நேரிடப்போகும் விஷயமும் அவர் எண்ணத்தில் உதிக்க, மாயையைப் பார்த்துச் சொல்வதாவது:— "கேளாய், மாயை என்னும் பெண்ணே! அசுரர்களெல்லாமிப்போது தேவர்களாலும், முனிவர்களாலும் நாசம் செய்யப்பட்டிருக்கிறார்கள்.

உனது தந்தையாகிய அசுரேந்திரனே கேவலம் மனவேக்கம் கொண்டனன். இப்போதசுரர்கள் உந்தனால் நிலைநிறுத்தப்பட்டுக் காப்பாற்றப்படலும் வேண்டும். ஆகையால் நீ காசியப முனிவரிடஞ்சென்று, பிள்ளைகளைப் பெற்று, பெயருமிட்டு, அவர்களது செழித்தலுக்காக அவர்களுக்கு யாகம், விரதம் முதலியவற்றையு முபதேசித்து, நீயும் தேவர்களது மங்குதலை வேண்டித் தவம்புரிவாய்!'' என, அப்பெண்ணு மப்படியே பாக்கியமென்று புறப்பட்டுத் தந்தையாகிய வசுரேந்திரனிடஞ் சென்று சங்கதிகளையுரைத்து அவனிடத்து விடைபெற்று மற்றோர் மாயையே பிரத்தியக்ஷமாய்த் தோன்றியது போன்று வெளிப்புறப்பட்டனள். அவள், மார்க்கத்திற் செல்லுகையில் கண்ணுற்றவர்களை யெல்லாம் மோகிக்கும்படி செய்து கொண்டு காசியப முனிவரிருக்குமிடஞ் சென்று அங்கு மகாவுன்னதமுள்ளதும், சித்திரங்களாலலங்கரிக்கப்பட்டதுமான பல மண்டபங்களையும்; வாபிகள், கிணறுகள் விருக்ஷங்கள், மிகுந்த மலர்களிவைகளோடு விளங்கிய சிங்காரத் தோட்டங்கள், அனேக விளையாட்டுக் குன்றுகள், இவைகளையு மோர் க்ஷணத்துக்குள் மாயையினாற் படைத்தனள். அப்போதிவை யெல்லாவற்றையும் காசியபரென்ற முனிவர் கண்டு, ''ஓ கோ! இதோ வினோதமான மண்டபம் முதலியவைகளெல்லா முண்டுபண்ணப்பட்டிருப்பது என்ன வாச்சரியம்! இவைகளைப் படைத்தது பிரம்மாவா? விஷ்ணுவா? அல்லது மற்றெந்தத் தேவனாவதா?'' என்று ருஷியானவர் பலவிதமாகச் சிந்தை கொண்டு திசைகளெங்கும் நோக்குகையில், மிக ரூபலாவண்ணியம் பொருந்திய மெல்லிய தடிபோன்ற மேனியுடையவளும், மோகப்படுத்துவதற்கான மன்மதனுடைய ஸகல சரக்குகளுக்கு மிருப்பிடமுமான அம்மாயை ஓர் க்ஷணத்துக்குள் காணப்பட்டனள். அப்போதம் முனிச்சிரேஷ்டர் அவளருகில் வந்து அவளைக் கண்ணுற்று மிகநேசமும், சிங்கார ரசங்களாற் சாதுரியமுள்ளதுமான வசனங்களை யுரைத்ததாவது:—'' அடி! மாதே! ஒண்டி மங்கையாக நிற்கின்ற நீ யாவள்? உன் பெயரென்ன? நீ யாவருக் கேதுமுறைவேண்டும்? உனக்குத் தேசம் யாது? இப்போதெங்கு வரலுற்றாய்? அடி! திருமேனியதெல்லாவவயவங்களும் மிகச்சுந்தரமாக வமைந்ததேனோ!'' நீ யுத்தாமுறைத்தல் வேண்டும்.' என, மாயை கூறுகின்றாள்:—''மங்கையாகிய யான் ஒண்டியாக விக்குன்றில் நிற்குமளவில் நீ ரெந்தனோ டிவ்வாறுரைப்பது தவசிகளுக்குச் சரியோ? யான் மேருகிரி யருகினின்று கங்கா ஸ்நாநம் செய்வதற்காக விங்கு வரலுற்றேன்; நீரிங்கே நில்லும்; யானெனது மனக்குறியின்படிச் செல்லுகின்றேன்.'' என, முனிவர் சொல்லுகின்றார்:—'' யானிப்போது கங்கையையும், இன்னும் மகா பெருமை பொருந்திய புண்ணியத் தலங்கள், தீர்த்தங்கள், ஆகிய யாவையு மிப்போதே தருவிக்கின்றேன். மேலுமுனக் கற்புதமான விரண்டு சாமரங்கள் போடுவிக்கின்றேன். மிகுந்த புத்திரர்களையும், பணி செய்வதற்காக வாயிரம் தேவ ஸ்திரீகளையும் கொடுக்கின்றேன். இந்நேர்த்தியான விடத்தில் ஏகாந்த லீலை செய்வதற்கென்னை நீ யாதரித்தல் வேண்டும்.'' என, கமல மலர் முகத்தின்கண் குறுநகையுடைய அவ்வழகு மங்கையானவள் அப்போது திடீரென்று மின்னற் கொடி

போல் மறைந்துவிட்டனள். அப்படி யவள் மறைந்தவுடன் தவசிகளில் மேன்மைகொண்ட காசியப முனிவர் கேவலம் மோகாக்கிராந்த சிந்தையுடன் துரிதமாகத் தரைதனில் விழுந்து மிகவும் மதனவெறிகொண்டவர் போல துக்காக்கிராந்தராகி யழுதனர். மாயையையும் முனிவரிவ்வாறிருப்பதைக் கண்டு ஓர் நொடிக்குள் எங்கே நேரில் தோன்றினள். அவ்வண்ணம் தோன்றிய வச்சிற்றிடையாளைக் கண்டவுடன் முனிவர் மோகம் தெளியலுற்றவராகித் தரித்திரனுக்குத் திரவியம் வாய்த்தாலாநந்தப்படுவதுபோல் புன்னகையோடு முகமலர்ச்சி கொண்டவராகிப் பலவிதமாகக் கூத்தாடி பிறகு மிக நேச விசுவாசத்தோ டம்மாயையின் கால்களில் விழுந்தனர். அப்போது கேவலம் காம வெறிகொண்ட வம்முனிவரை நோக்கி யவள் வசன முரைத்ததாவது:—
"கேளீர்! காசியபரே, இப்போது யான் கொண்டிருக்கின்ற மிகவற்புத சுந்தரத் திருமேனிக் கொத்த வுருவத்தைக் கொள்வதற்குமக்குத் திறமை யிருக்குமாயி னும்முடன் யான் கலவி தொடுக்கின்றேன்," என, யோகிகளிற் சிறந்த காசியபமுனிவரு மவ்வண்ணம் வேண்டியவுருவத்தைத் தரித்து அவ்வாறுரைத்த வதிசுந்தரத் திருமேனியாளோடு மிகநேர்த்தியும் நிர்மானுஷியமுமான வம் மண்டபத்தில் கேவலம் காமாதுரராகப் பலதடவைகள் கலவி செய்தனர். அப்போ தவ்விரவின் முதற் சாமத்தில் அசுரர்களுக்கெல்லாம் தலைமையான மகாபெருமை பொருந்திய சூரனென்று பெயர்கொண்ட மைந்தன் பிறந்தனன். அப்போதவ்விருவர் கலவியிலுமுண்டாகிய வியர்வை ஜலத்தினால் முப்பதினாயிர மசுர சேனைகளுண்டாயின. பிறகிரண்டாம் சாமத்தில் மறுபடியு மவ்விருவர்களும் மற்றொருமண்டபத்துக்குச் சென்று சிங்கவுருவ மெடுத்துச் சம்போகம் பண்ணினார்கள். அப்போதாயிரம் முகங்களின் வரிசையையும் இரண்டாயிரம் கைகளையும்கொண்ட சிங்கமுகனுண்டாயினன். அப்போதக் கலவியாலவர்களுக் குண்டான வியர்வைத் திவலைகளினின்று சிங்கமுகங்களையுடைய மகா கோரர்களான நாற்பதினாயிரம் சேனைகளுண்டாயினார்கள். அதேவிதமாக, விநோதமாக வலங்கரிக்கப்பட்ட மற்றோர் மண்டபத்துக்கு அவ்விருவர்களும் மூன்றாம்சாமத்திற் சென்று யானைவுருவமெடுத்து அங்கும் பலமுறையாகக் காமலீலை செய்தார்கள். அப்போதமுகிய யானைமுகத்துடைய தாரகனென்ற வசுரராஜன்பிறந்தனன். அங்கும்யானையுருவங்கொண்ட மற்றோர் நாற்பதினாயிரம் சேனைகளுண்டாயின. பிறகவ் விருவர்களும் நான்காவது ஜாமத்தில் மற்றோர் மண்டபத்துக்குச் சென்றங்கு ஆட்டுருவங்கொண்டு பின்னும் புணர்ந்தனர். அப்போ தஜமுகியென்ற வசுரப்பெண் பிறந்தாள். புணருங்காலுண்டான வியர்வைத் திவலைகளினின்று ஆட்டுருவங்கொண்ட மகாபயங்கரமான மற்றோர் முப்பதினாயிரம் சேனைகளுண்டாயின. பிறகவர்கள் மறுநாள் காலையிலும் மண்டபத்துக்கு மண்டபம் சென்று சிவிங்கி புலி, குதிரை, மான், பசு, கரடி, பன்றி, காட்டு எருமை, செந்நாய், காண்டாமிருகம், கழுதை, ஒட்டை, குரங்கு, நரி, இவைமுதலிய மிருகங்களி னுருவமெடுத்துக் கொண்டங்கங்கு காமக்கிரீடை பண்ணினார்கள். அப்போதந்த மிருகங்களி னுருவத்தோடு அறுபதினாயிரம் சேனைகளுண்டாயின. பிற்பாடு இவ்விரண்டிலக்ஷம் மொத்தச் சேனைகளையும், அஜமுகியென்ற பெண்ணோடு சூரன்

சிங்கன், தாரக னிவ்வசுரர்களையும் கண்டு அவ்விருவர்களும் மிகுந்த வாநந்தத் தினு லந்தக்கரணம் மலர்ந்தவர்களாகி யோர் க்ஷணத்துக்குள் தங்கள் நிஜவுருவத்தைக் கொண்டார்கள். அப்போது சூரபத்துமாசுரன் தாய் தந்தையர்களை வணங்கி, "ஓ! தந்தையே! யாங்கள் செய்ய வேண்டிய காரியங்களை யெல்லா முற்றபடி யெடுத்துரைத்தல் வேண்டும். மேலு மதுவிஷயத்தி லம்மையுடைய சம்மதம் யாது?" எனக் கேட்டு உட்கார்ந்தனன். அப்போது முனிவர் கூறியதாவது:—"வாரீர்! மைந்தர்களே! என்மனதிலிருப்பதை யுரைக்கின்றேன் கேளீர்கள்! நீங்கள் புலன்களைக் கைவசத்திற் கொண்டெப்போதும் தவம்புரிவதே காரியமாகும். முந்தித் தேவரெல்லாம் தவத்தினுலே தேவத்தன்மையை யடைந்தார்கள். அப்படித் தவஞ்செய்ததாலே சில முனிவர்கள், ஜீவன்முக்தி (ஜீவனோடு மோக்ஷம்) யடைந்திருக்கிறார்களல்லவோ, ஆகையால் கேளீர்! மைந்தர்களே! எப்போதும் பாவங்களின் சேர்க்கையற்றுப் பசு பதி பாசமென்ற முப்பொருட்களின் விஞ்ஞானத்தைப் பெற்று அதனுலானந்த மயமாகிய சிவபதத்தை யடைவது தான் தகுதி. அப்படியே பாவங்களைத் தொலைப்பதற்காகத் தருமங்களையுமென்றும் அனுஷ்டித்தல் வேண்டும். பூர்வத்தில் சில முனிவர்கள் தருமத்தாலே சுவர்க்கலோக மடைந்தார்கள். புத்திமான்கள் சர்வப் பிராணிகளிடத்தும் என்றும் தயவுள்ளவர்களாய் இருத்தல் வேண்டும். நீங்கள் மேலுரைத்த நடவடிக்கைகளோடு பாவமற்றிருப்பீர்களாயின் ஸ்ரீ பரமேசுவரன் அருளைக் கொள்வீர்களென்பதிற் சந்தேகமேயில்லை. ஸ்ரீமகேசுவர னருளாலிகத்திலும் பரத்திலும் சகல சித்தியும் கைகூடும்.

## 2. அத்தியாயம்.

காசியபர் சொல்லுகிறார்:—"பிரமன், விஷ்ணு, இந்திரன், முதலிய தேவச் சிரேஷ்ட ரெல்லோர்களும் தவத்தினுல்தான் சிவனருள் பெற்று அவரவர்கள் ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறார்கள். பூர்வத்திற் சில ருஷிகள் கொடூரமான தவங்களைச் செய்தே சிவனருளடைந்து தங்கள் விருப்பங்களைக் கைக் கொண்டது நிச்சயம். ஆகையால் நீங்கள் சகல முயற்சியுடனும் தவத்தினுற் சிவபிரானைக் களிப்பித்து, இகத்தில் போக போக்கியங்களையும் பரத்தில் மோக்ஷ ஸாம்பிராஜ்யத்தையு மடைதல் வேண்டும். இதோ! ஓர் புண்ணிய கதை யிருக்கிறது; அதை யுங்களுக்கு யான் கூறுகின்றேன் கேளுங்கள். பூர்வத்தில் குத்ஸ முனிவர், தவத்தின்மகிமையா லிறந்து போன பெண்ணையும் தூங்கி யெழுந்தவள் போலோர் நொடிக்குட் பிழைத்தெழுந்திருக்கச்செய்தனர். மேலுமவர் மற்றோரிடத்திலோர் யானைக்கும் தேவத்தன்மையை யீந்தனரல்லவோ? அத்தவ மகிமையாலே மிருகண்டு முனிவரை மைந்தனுகவடைந்தனர். அம்மிருகண்டு முனிவருமப்படியே தவத்தினுல் பிரமன், விஷ்ணு, இந்திரன் முதலியவர்களாற் பூஜிக்கப் படலுற்ற மார்க்கண்டேயரைப் பரமாநந்தத்தோடு மைந்தனுக வடைந்தனர். அம்மார்க்கண்டேயரோ தவத்தினுற் பரமேசுவரனை யாராதித்து மிருத்தியுவையும் வென்று நித்தியமான பரமபதத்தைப் பெற்றனரல்லவோ." என்றுரைத்துச் சும்மாவிருந்தனர். பின்பு மாயையானவள் பிள்ளைகளை நோக்கிக் கூறுகின்றாள்:—"கண்

மணிகளே! தவசிகளில் மேன்மைபெற்ற உங்களது தந்தை வுரைத்ததெல்லாம் பெரியோர்களாகிய யோகிகளுக்கல்லவோ தகுதி. உங்களுக்காக வேண்டியதை யானுரைக்கின்றேன்:—"பௌருஷத்துக் கிருப்பிடமான நீங்கள் ஐசுவரியம், சௌரியம், ஆயுசு, பிரஸித்தி கொண்ட கீர்த்தி, பிரபுத் தன்மை யிவைகளை யல்லவோ, தேடிக் கொள்ளல் வேண்டும். பூமியின் வடக்கில் பெரிதான வடத் தீவமொன்று பிரஸித்தி பெற்றிருக்கின்றது. நீங்களங்கு சென்று ஸ்ரீ பரமேசுவரனைக் களிப்பிப்பதற்காக வீரயாகம் பண்ணுங்கள். அதற்காக வேண்டிய திரவியங்களை யானுங்களுக்குத் தருகின்றேன். பிறகு ஸ்ரீ ஜகதீசன் ஸான்னித்திய மாகும்போ தென்தனுற் கூறப்பட்டவைகளையே நீங்கள் கேட்டுப் பெறுவீர்கள்." என்றிவ்விதமாக, மாயையானவள் மைந்தர்களுக்குச் சொல்லிப் பிறகும் அவர்களுக்கனேக மந்திரங்களையும் அதற்குள்ள தந்திரங்களோடு, உபதேசித்தனுப்பினள். அதன் பிறகு அவள் அப்போது முனிவரைநோக்கி வசனமுரைத்ததாவது:—"ஓ! சுவாமீ! என் பெயர் மாயை யெனப்படும். பிள்ளைகளைப் பெற வேண்டி யும்மிடம் வந்தேன். உம்மால் மகா பராக்கிரமசாலிகளான இப்பிள்ளைகள் நன்றாக உண்டாக்கப்பட்டார்கள். யான் தவஞ்செய்யப் போகின்றேன்." என்று சொல்லி யுடனே சென்றுவிட்டனள். அவள் போன பிறகோ வென்றால் காசியப முனி யவளைக் காணாததனால் கேவலம் மூட ஜனங்களைப்போல் மிகவுந் துக்கத்தினால் நொந்து புலம்பலுற்றனர். பிறகவ்வாறு புலம்புகின்ற முனிவரைக் கண்டு பிரம்மன் தாமே நேரிலங்கு வந்து, "கேளாய் மைந்தனாகிய காசியபா! ஒன்றும் தெரியாத மூடன் போலேன் வீணாக இப்போதிங்கழுகின்றாய்? சொல். உந்தனுக்கிப் போதழுகை வேண்டாம். நமது கட்டளையின்படி சுகமுற்றவனாக விரு. அப்பாவத்தைத் தொலைப்பதற்காக ஸ்ரீ பரமேசுவரனைக் குறித்து ஸகல பாவத்திரள்களையு மடிக்கவுற்ற, சிரேஷ்டமாகிய உக்கிரமான தவத்தைச் செய்தலல்லவோ வேண்டும்." என உரைத்துப் பிரமனானவர் அவ்விடத்து வந்தது போலுடனே மறைந்துவிட்டார். அப்போது காசியபரும் தவம்புரிவதற்காகத் தனதாசிரமத்துக்குச் சென்று விட்டனர். கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போதங் குண்டாயிருந்த மண்டபங்களெல்லாம் மாயத்தினாற் செய்யப்பட்டவைபோல் மறைந்துவிட்டது மிகவுமாச்சரியம். பெருஞ் சேனைக் கூட்டங்களையுடைய சூரபத்துமனும் தம்பிகளோடு கூட ஸ்ரீ பார்வதிபதிக்குத் திருப்தி செய்வதைக் குறித்து யாகம் பண்ணுவதற்காகப் புறப்பட்டு நடுவழியில் செல்லுகையில் அப்போது அசுர குருவாகிய சுக்கிர பகவானங்கு தற்செயலாக வரலுற்றனர். அப்போதவர்கூட மகா பயங்கரர்களான அவ்வசுரர்களைக் கண்ணுற்றதில் மிகவும் திகிலடைந்தது என்ன ஆச்சரியம்! பிறகவர் அவ்வசுரர்கள் சாந்தத் தன்மையைக் கொள்ள வேண்டி வசியமந்திரத்தை ஜபித்துக்கொண்டு சூரனருகிற்சென்று, "அப்பா குழந்தாய்! யானுங்களுக்குக் குரு" என்றனர். அவரிப்படிச் சொன்னவுடன் சூரனவரடிகள்மீது பணிந்து விநயத்தோடு வணக்கமுற்று நின்றனன். அப்போது சுக்கிரன் தானாகவே யாகங்களுக்குரிய இடையூறுகளை விலக்கிக் கொள்வதற்கான ஸ்ரீ சிவபிரானது மந்திரத்தை யப்போதவனுக் 'குபதேசித்த

உடனே சென்றுவிட்டனர். சூரனும் தம்பிகள் ।சேனைகள் சகிதனாகத் துரிதத்தில் வடத் திவத்துக்குச் சென்று அங்கு பதினாயிரம் யோசனை விஸ்திரண முள்ளவோர் யாகசாலையை யமைத்து அதைச் சுற்றிலும் மலைகளைக் கோட்டையாக வளைத்தான். அதைச் சுற்றிலும் பற்பல வாயுதங்களாற் பயங்கரமான பல சேனைகளை நிறுத்தி யங்கு மத்தியிலாயிரம் யோசனைச் சதுரமு மாழமுமுள்ளவோ ரக்னி குண்டத்தை யுண்டாக்கி யதைச் சுற்றிலுமதே விதமாக நூற்றெட்டுக் குண்டங்களையும், அவைகளையும்சுற்றி யதே விதமாக வாயிரத்தெட்டுக் குண்டங்களையு மேற்படுத்தியவற்றுள் பிரதான குண்டத்தில் தானேமம் செய்ய வெத்தனப்பட்டனன். பயங்கரனான விச்சூரபத்மன் அக்குண்டத்தின் மீது ஜலத்தைப் புரோக்ஷித்து (தெளித்து) பாதாளலோகம் வரையிலுள்ள பூதப் பிரேதாதிகளைவிலக்கிவிட்டனன். அதன் பிறகு மாயை யென்பவள் வந்து அடியிற் கண்ட யாகத்துக்குரிய ஸாமான்களைக் கொடுத்தனள்:—எருக்கு, வெள்ளெருக்கு, நாயுருவி, புரசு, வேம்பு, இரளி, புளி, தாளி, இவை முதலான விஷ விருக்ஷங்களது சமித்துகள் மிகுதியான பால், நெய்,தயிர், வெண்ணெய், தேன், துவரை, பயறு, உளுந்து, எள், கொள்ளு, கடுகு, அரிசி, நெல் முதலியவை, இலக்ஷம் பசுக்கள், ஆடுகள், எருமைகள் முதலியவை, அளவற்ற இரத்தங்கள் மாமிசங்கள் முதலியவை, பச்சைக்கற்பூரம், சந்தனம், கஸ்தூரி, விசித்திரங்களும் நல்ல வாசனையுடையவைகளுமான பற்பல புஷ்பங்கள், தர்ப்பங்கள், ஜீஹு (அத்திமரத்தாற் செய்யப்பட்டவோர் ஓம பாத்திரம்), பிரஸ்தரம் (தர்ப்பத்தினோர் முட்டி), ஸ்வதிதி (பசுக்களை சேதிப்பதற் குற்றவாயுதம்), அரணி (கடைந்து அக்கினி யெடுப்பதற்கானவோர் கட்டை,) இவை முதலிய யாகத்துக்கு வேண்டிய பற்பல சாமான்களையும் மாயையானவள் மூவாயிரம், மைபில்சதுரம் நிரப்பினள். அதற்கு மேலிச் சூரபத்மன் துர்க்கை, பைரவன், பத்திரகாளி, பூதம், பிரேதம் பைசாசம் டாகினீ கணங்களின் கூட்டம், சாமுண்டி ஆகிய இத்தேவதைகளைக் கிழக்கு முதலிய வெட்டுத் திக்குகளிலும் பூஜித்தனன். பின்பு, அசுரர் அரணியைக் கடைந்து அதிற் கொஞ்சம் நெய்யை விட்டு அக்கினியை விருத்தி செய்து குண்டமத்தியில் மூட்டிவளர்த்து, அக்குண்டமத்தியில் தானே முனைகூர்மையுடைய வோர் வச்சிரகம்பத்தை நாட்டி அக்கினியில் துவரை, எள், உளுந்து மாமிசம்,நெய், எண்ணெய் இவைகளை ஸ்ரீசிவபிரானுடைய மந்திரத்தினாற் பதினாயிர வருஷங்களளவும் ஓமம் செய்தான். அதேவிதமாக மற்றக் குண்டங்களிலும் மகாவீர பராக்கிரமங்களையுடைய சிங்கமுகாசுரன், தாரகன் இவ்விருவர்களும் முறையே நூற்றெட்டுக் குண்டங்களிலும், ஆயிரத்தெட்டுக் குண்டங்களிலும் ஓமம் பண்ணினார்கள். அவர்களவ்வாறு:செய்திடினும் ஸ்ரீமகாதேவன் பிரசன்னராகவில்லை. பிறகு சூரன் வெகுகோபம் கொண்டு ஆகாசத்திற் கிளம்பிக் குதித்து நின்று கொண்டு தனதுடலைக் கண்டம் கண்டமாக நறுக்கி ஆயிர வருஷமளவும் மனதினால் ஸ்ரீ பரமேசுவரனைத் தியானித்துக் கொண்டு இரத்தங்களாலும் மாமிசங்களாலு மோமம் செய்தான். இவ்வளவு செய்தும் ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி அவ்வியாகத்தில் ஸான்னித்திய மாகவில்லை. பிற

கப்போது சூரபத்தும னுயரமாகவானத்திற் சடிதியாகக்கிளம்பி அவ்வயிரக் கம்பத்தில் விழ அதன்முனை யாசனத் துவாரத்தின் வழியாகப் பாய்ந்து மூளை யைக் கிழிக்கப்பெற்றவனாகவே அதனடிப்புறத்திற் சேருகையில் அப்போது குண்டமத்தியில் விசுவேசுவரனுயிரை மடுத்தான். அப்போதசுரர்களுக்குள் மிகுந்த ஆங்காரமுண்டாயிற்று. தேவர்களுக்கோ அப்போது பேரானந்தம் உண்டாயிற்று. பிறகு சிங்கமுகனும் துரிதமாகத் தனது சிரசுகளை வெட்ட வெட்ட மறுபடியும் அதேவிதமாக முளைத்து முளைத்துண்டானவைகளையும் வெட்டி வெட்டி யோமஞ்செய்தான். தாரகாசுரனுமிதே விதமாகச்செய்தான். மகாபலிஷ்டர்களான மற்றவசுரர்களும் தீக்குண்டத்திற் பொத்துப் பொத்தெ ன்று குதித்தார்கள். அப்போதுகூட ஸ்ரீமகாதேவன் பிரத்தியக்ஷ மாகாததைக் கண்டு சிங்கமுகனும் அவ்வாறே அங்குயிரை யிழப்பதற்கு மனமுற்றனன். அப்போ தக்கினியானது பிரமாண்டச் சுவர் வரைக்கும் சுவலித்தெரிந்தது. உயரத்திலிவ்வாறு எரிப்பதுபோல் கீழும் பாதாளலோகமளவும் எரித்தது. அப்போது ஸ்ரீபரமசேுவரனோர் கிழவனுருவத்துடன் ஸ்ரீவிஷ்ணுவினுடைய முதுகெலும்பினாலமைத்த ஓர் தடியைக் கையிற்கொண்டு தோன்றினர். அவர் வேதமோதிக்கொண்டு இங்குமங்கு மிடலுற்ற திருவடிகளைக் கொண்டவரா கிச் சிங்கமுகனண்டை வந்து அடா நீங்கள் யாவர்? யாவருடைய புத்திரர்கள்? நீங்கள் இங்கென்செய்கிறீர்கள்? இவைகளை ஆதியோடந்தமாகத் தெரிவியென திருவாய்மலர்ந்தருளினர். இவ்வுரையைக்கேட்ட சிங்கமுகன் அப்பெரி யோரை வணங்கி அவரைக் கண்டதனால் சிவனையே கண்டு ஆனந்தமடைந்ததா கக் கூறினன். அவன் மேலும் அவர்கள் காசியப முனிவரது மைந்தர்களான அசுரர்களென்றும், வீரயாகம் செய்து பரமேசுவரனுக்குத் திருப்தியை உண் டாக்கி அரசாக்ஷியை பெறுவதற்காக அங்குவந்து அவ்வீரயாகத்தைச் செய் கிறோமென்றும், ஸ்ரீபரமேசுவரன் அருள் புரியாததனால் அவன் மூத்தோன் வயிரக்கம்பத்தில் விழுந்தக்கினி குண்டத்தில் மரணமடைந்தானென்றும் தானும் அவ்வாறே தேகத்தை யிழக்க சித்தமாயிருப்பதாகவும் தெரிவித்தான். இதைக் கேள்வியுற்ற அப்பெரியோர் "நீங்கள் இனி துன்பப் படவேண்டிய காரணமில்லை; உங்களுக்கு இனிசுகம் ஏற்படப்போகிறது." என்றுகூறி ஆகாய கங்கையை கீழிறங்கி வரும்படியாகக் கட்டளையிட்டார். கங்கையும் சிவபிரா னாகிய அப்பெரியாரின் கட்டளைக்கிணங்கி மலைகள் மீது விழுந்து பெரிய அலை கள் மோதலுற்றவைகளாக ஒரு பந்தைப் போல் கிளம்பி வெகு சீக்கிரமாக வும் வெகு பிரவாகத்தோடும் கீழிறங்கியது. அதனால் அங்கிருந்த குண்டங்களி லும் சமித்துகளிலும் பற்றியிருந்த அக்கினியெல்லாம் தணிக்கப்பட்டு சூரன் முதலியவர்களும் அந்நீரினால் நனைக்கப்பட்டு எல்லோரும் பிரஞ்ஞை கொண்டார்கள்.

## 3 அத்தியாயம்.

பிறகு சிவபிரான் பார்வதி சகிதராய் பிரகாசம் பொருந்திய கங்கணம், தோள்வளை முதலியவைகளை அணிந்துகொண்டு முத்து மாலை முதலியவைக ளால் அலங்கரித்துக்கொண்டு சடைமுடிமீது தரித்த சந்திரகலையோ

திருநீறணிந்த திருமேனியோடும் உருத்திராக்கங்களணிந்த கோலத்தோடும், புன்னகையோடுங் கங்கையை சடாபாரத்தில் தாங்கியும், அநேக வாத்தியங்களினல் புடைசூழப் பெற்றும், மற்றசிவகணங்களாலும் இன்னம் பிரமன் விஷ்ணுமுதலிய தேவர்களினல் சூழப்பட்டவராகவும் எல்லாபக்கங்களிலும் அநேக ஆயிரம் தேவமங்கைத் திரள்களால் நிரம்பப்பெற்றவராகவும் நேரில் பிரசன்னமானர்.

இப்படிப்பட்ட ஸ்ரீ மகா தேவனைக்கண்டு சூரபத்மன் கண்கள் மலரவுற்றவனுகித் தம்பிகளுடனும், சகல சேனைகளுடனும் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, வேத வேதாங்கங்களாக விசைக்கப்பட்டமேன்மை பொருந்திய துதிகளால் தோத்திரம் செய்தான். பிறகப்போ தவனைத்திருக் கண்ணுற்று ஸ்ரீபரமேசுவரன் அலர்ந்த செந்தாமரைபோன்ற திருமுகத்திற் பெருகியதேன் போன்ற திருவசனங்களை யளித்ததாவது:— " வாரீர் அசுரவல்லவர்களே ! உங்களது தவத்தினல் மிகவும் திருப்தியடைந்தோம். ஓ பலமுற்ற பரிசுத்தர்களே. உங்கள் மனதிலபீஷ்டமுள்ள எல்லாவற்றையும் நம்மிடத்துரைப்பீர்களாயின் அவையெல்லா மிப்போதே நிச்சயமாக உங்களுக்கு கொடுக்கின்றோம்'' என்ருர். உடனேசூரன் "ஓ சர்வகுண சம்பூர்ணராகிய ஸ்ரீ மகாதேவா! யான் பக்தியோ டாராதித்ததற்காக தேவரீர் பிரசன்னமானது உண்மையானல், ஆயிரத்தெட்டண்டங்களையும் யானேர் குடையின் கீழ் ஆண்டு ஆஞ்ஞா சக்காம் செலுத்துவதையும் எங்களுக்கென்று மழிவில்லாமையையும், விஷ்ணுமுதலிய தேவரெல்லோர்களும் என்முன்னிற் வரும்போதே மிகப் பயந்தோட்டம்பிடிக்கத்தக்கவுற்ற வாயுதத்தையும் எந்தனுக்கு ஈந்தருளி அவ்வெல்லா வண்டங்களுக்கும் யான்போய் வரவுற்றவல்லமையையும் அருளல்வேண்டும் என்ருன். சர்வேசுவரன் அவனை நோக்கி அவனிடத்தில் மிகவும் கருணைகொண்டவராகிக் கேட்கப்பட்டதெல்லாம் அப்படியே யாகட்டும். ஆனல் சூரா உனக்கு ஆயிரத்தெட்டண்டங்களின் ஆதிபத்தியமானது நூற்றெட்டு யுக காலவரைக்கும் மட்டில்தானிருக்கக்கடவது. மேலும் பற்பல இரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஓர் இந்திரவிமானமும் மற்ருேர் சிங்கவாகனுமும் பாசுபதாஸ்திரமும் அசுவனி தேவதைகளின் அஸ்திரங்களும் வஜ்ராயுதம் போன்ற வலிமையுடைய தேகமும் அக்கினிகுண்டத்திலுண்டான பல அசுரர்களும் பதினுயிரங்கோடி சங்கியைகொண்டசதுரங்க பல சைனியங்களும் உனக்கிங்கே உண்டாக்கக் கடவது. மேலும் மற்ற உன் சகோதரர்களும், பல ஆயுதங்களும், நூற்றெட்டு யுககாலமட்டும் ஆதிபத்யமு முண்டாககக் கடவது. மற்ற விஷ்ணு முதலிய சகல தேவர்களோடு உனக்கு யுத்தம் நேரிடினும் நம்முடைய அழிவற்ற சக்தியினலொழிய மற்ற யாவராலு முந்தனுக்கு நாசமுண்டாகத் தக்கதில்லை. ஆனலுனக்குச் சாவுநிச்சயமாக உண்டு. என்று திருவாக்கருளியவுடன் சருவேசுவரர்களுக் கீசுவரனன ஸ்ரீ சாம்பமூர்த்தியானவர் மறைந்தருளினர். பிற்பாடு சூரபதுமன் முதலிய அசுரர்கள் மிகவும், பேரானந்தங் கொண்டார்கள். மற்றவர்கள் கத்தியை கையிற்கொண்டு மிகுந்த அட்டகாசத்தோடு கூத்தாடினர்கள். பிறகு சூரபதுமன் அசுரர்களை நோக்கி, இவ்வளவு காலமளவும், நீங்களிங்கு காத்திருந்தீர்

களல்லவோ என்று உபசார.வார்த்தைகளுரைத்தான். அதன்மேல் அவர்களும் அப்போததற்குத் தக்க சமாதான உத்தரங்களை மிகவணக்கத்துடன் சொல்லிக்கொண்டார்கள். அப்போது சம்புவாலருளப்பட்ட சதுரங்க சைன்யங்களையும் வகுப்புவகுப்பாகப் பிரித்து அததற்கேற்ற சேனாதிபதிகளையும் ரதங்களையும் துரிதத்திலேற்படுத்திவிட்டு பிறகு தந்தையாகிய காசியபமுனிவரிடத்துக்குத் தம்பிகளுடனும், சைன்யங்களுடனும் சென்று அவரைத் தண்டனிட்டு " ஓ சுவாமீ, தேவரீரைவிட்டுப்போன பிறகு நான் செய்த வேள்வியினால் சர்வேசுவரனாகிய பரமேசுவரன் மிகவும் பிரீதிகொண்டவராகி மிகுந்த சந்தோஷத்துட னெந்தனுக்கு ஆயிரத்தெட் டண்டங்களுக்கும் ஆதிபத்தியத்தை யீந்தருளினர். தேவரீ ரினிச்செய்யத்தக்க புத்திமதிகளை யிப்போது எந்தனக்குத் தயவுசெய்து உரைத்தல்வேண்டு" மென்று மிகுந்தவணக்கத்துடன் உரைத்தான். பிறகு காசியபர் தேவர்களுக்கு நேரிடக்கூடிய அபாயத்தை மனதினாலூகித்தறிந்து கொண்டு "அப்பனே! உங்களது குருவாகிய சுக்கிராச்சாரியிடம் சென்று கேட்டுக்கொள்ளுங்கள்." என, தவத்தை விக்கினப்படுத்த மனமற்றவர்போல் துரிதத்திற் சொல்லி முடித்தனர். அதன்மேல் அசுர சிரேஷ்டர்களெல்லோர்களும் சேர்ந்து தங்களுடைய க்ஷேமத்தைக் கோரியவரும் சகல சாஸ்திரப் பொருள்களினும் தேர்ச்சிபெற்றவருமான சுக்கிராசாரியாரிடம் சென்று வந்தனித்துக் கைகளை யஞ்சலிகொண்டு சங்கதிகளை தெரியப் படுத்தி, "ஓ சுவாமி, இனி யாங்கள்நடக்கவேண்டிய காரியா காரியபுத்திமதிகளை துரிதமாகச் சொல்லி அருளல்வேண்டுமென வுரைத்து விஷயத்தினால் வணக்க முற்றவர்களாகி அப்போ தவரைச் சுற்றி நிற்கலானார்கள். அதற்குச் சுக்கிரனேனென்றால் சூரபத்ம னென்பவனை மட்டில் தனிமையிலழைத்து மிகுந்த பேச்சுக்காரரான அச்சுக்கிரன் உலகினில் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்ற நடவடிக்கைகளுக் கொத்ததான வசனங்களை சொன்னதாவது "கேளீர் ராஜனே! ஸ்ரீ பரமேசுவரனே வென்றால் கேவலம் மாயையைக்கொண்டே வானம்முதலியவற்றைப் படைத்தனர். அதே விதமாகக் கேவலம் லீலையைமட்டில் பிரயோஜனமாகக் கொண்டவராகி, தமது பரமாத்மாவின் அமிசத்தை பிரிவினைசெய்து சரீரத்தோடும் இந்திரியங்களோடும் கூடி யவரக்க அவரே ஜீவாத்மார்களாக விளங்கி வருகிறார். குடத்துக்குள்ளிருக்கும் ஆகாயமானது அக்குட முடைந்த உடன்ஒரே பேராகாயத்தோடு சேர்ந்து விடுவதுபோல ஒருவருடைய தேகத்துக்குலயம் நேரிட்டவுடன் தேகத்தைப்பற்றி யிருந்த ஜீவாத்மாவானது ஒரே பரமாத்வாவாகிய ஸ்ரீ மஹேசுவரனோடு சேர்ந்துவிடுவதாகும். ஆகையால் உண்மையில் பாவமென்பதும் புண்ணியமென்பமும் பொய்யே. மோக்ஷமென்பதும் இவ்வாறுதான். ஆகையால் நீர் செய்யத்தக்கது யாதென்றால், உம்முடைய ஆத்துமாவை சாக்ஷாத் பரப்பிரம்ம சுவரூபமாகவே நினைத்து மனச்சோகத்தை விட்டு அதன்மேல் விஷ்ணு பிரமன் முதலிய தேவர்களை முற்றும் விலக்கி தஹராகாசமத்தியில் விளங்கிய ஸ்ரீபரமசிவனை மனதில் தியானித்து இந்திரன்முலிய தேவர்களை மிகுந்த பயத்தினால் கதிகலங்க நடுங்க அடித்து, அவர்களுடைய பதவியில் மகா அக்கிரமசாலிகளான வசுரர்களை ஸ்தாபிக்கலாவீர். மேலும் சத்துருக்களிடத்துக் கொலை, காதல், புரட்டு

திருட்டு முதலியவற்றைச் செய்யலாவீர். இவ்வண்ணம் செய்யா விடில் உம்மை யாதொருமானிடனாவது தேவனாவது மதியான். உம்முடையதான சகல அண்டங்களுக்கும் அடிக்கடி நீர்போய் அங்கங்குள்ள நடவடிக்கைகளை ஜாக்கிரதையாக விசாரித்து நீருமது தம்பிகளோடும் கணங்களோடும் இம்மத்திய வண்டத்திலே வாசம்பண்ணும்.'' என உரைத்தனுப்பி இன்னும் அவ்வண்டத்தினுடைய நீளமகலம், மலைகள், கடல்கள், அனேகம் தீவுகள் பற்பல உலகங்கள் தேவர்கள் லோகபாலர்கள் திக்கஜங்கள்முதலியவைகளை விஸ்தாரமாக வெடுத்துரைத்து, இவ்வண்டத்திலிருப்பதாக எந்தனு லுவைக்கப்பட்டது போலே மற்றெல்லாவண்டங்களிலு முள்ளவர்கள் எனஉரைத்து மற்றும் அவர்களுக்குச் சொல்லவேண்டிய சகலவிஷயங்களைச் சொல்லி யவர்களை அனுப்பினர். பிறகு சூரபத்ம னச்சுக்கிராச்சாரியனை வந்தனித்து கோடிசூரியப் பிரகாசம் போன்றதும் பற்பல விரத்தினங்களாலிழைக்கப்பட்டதும் கோடிக் குதிரைகள் பூட்டப்பட்டதும் அழிவற்றதும் குடை துவஜம் முதலியவைகளா லலக்கரிக்கப்பட்டதும் மிக நேர்த்தியானதுமான விந்திரவிமானத்தின் மீதேறிக்கொண்டு புறப்பட்டான். மகாபலசாலியாகிய சிங்கமுகனும் பத்துலக்ஷம் யாளிகள் அதே யெண்கொண்ட குதிரைகள் பெரிய பூதங்களிவைகள் பூட்டப்பட்ட இரதத்தின் மீதேறிக்கொண்டு பறபறவென்று பயணமானன்.

## 4. அத்தியாயம்.

பின்பு தாரகனே பதினாயிரம் குதிரைகள் பூட்டப்பெற்ற மிக நேர்த்தியான விமானத்தி லேறிக் கொண்டும், மற்றவர்கள் இரதங்களிலும், கோல் போன்ற மெல்லிய உடம்போடு வழகினர்களாகிய மற்றவர்கள் யானைகள் மீதும், குதிரைகள் மீதும் யேறிக்கொண்டும் மற்றப்படியுள்ள மிகுதியான சேனைகளுடனும் பிரயாணப் பட்டார்கள். அப்பேதுகாளி, பேரி படஹம் முதலிய வாத்தியங்கள் மிகுதியாக முழக்கப்பட்டன. மேலும் வாத்தியங்களில் பற்பல விதமான டிண்டிமம் முரசம் முதலியவைக ளெல்லாம் கடலுக்கு மேற்கொண்ட பேரோசை யுள்ளவைகாளக மிகுதியாயாங்கு முழக்கப்பட்டன. சிலர் கத்திகளைப் பிடித்தவர்களும் சிலர் தடிகளைக் கொண்டதனல் பயங்கரர்களாகவும் சிலர் கட்வாங்க பாணிகளாகவும் சிலர் உலக்கைகளைக் கர்வத்தோடு தரித்துக்கொண்டும். அநேககோடி சேனைகள் குடைகளைப் பிடித்துக்கொண்டும் பலகோடிபடைகள் துவஜங்களைக் கைகளிற்பிடித் துக்கொண்டும் மற்றவர்கள் பட்டாக்கத்திகளை கையிற்பற்றி இங்கு மங்கும் ஓடிக்கொண்டும் அதேவிதமாய் மற்றவர்க ளொருவரோடொருவர் கை தட்டி அட்டகாஸம் பண்ணிக்கொண்டும் இவ்விதமாகப் பலவாறுய் நான்கு பக்கங்களிலும் திரிந்து கொண்டு இருப்பவர்களும் இவ்வள வென்று கணக் கெடுப்பதற்கு மாளாதவர்களும், மகா பராக்கிரமம் கொண்டவர்களுமான அசுரராஜனுடைய வெண்ணிக்கையற்ற ரத கஜ துரக பதாதிகளான யானை, காலாட்களின் கால்களாலும் குதிரைகளின் குளம்புகளாலும் கிளப்பி விடப்பட்ட புழுதிகளப்போது சூரியமண்டலம் வரைக்கும் எழும்பி யெங்கும் பரவலாயிற்று. இவ்விதமாக நான்குபக்கங்களிலும் மூன்று கோடியோசனை விஸ்தீ

ரணத்திற்குப் பூமியானது நான்குவகைச் சேனைகளாலும் மிகவும் நெருக்க மாக நிரம்பப் பட்டது. மகாசூரனாகிய சூரபதுமன் இவ்விதமாகத் தம்பி யர்களுடனும், சைன்னியங்களுடனுஞ் சென்று உயர்ந்த கோட்டையால் சூழப்பட்ட அளகாபுரியை முற்றுகை போட்டான். இச்செய்தியைக் குபேரன்தனது தூதர்களாலறிந்து முன்னர் இச் சூரர்கள் பெற்றவரத் தினை நன்கு ஆலோசித்து மிகவும் பயந்தவனாகி மிக்கப்பணிவுடன் வணக் கஞ்செய்துகொண்டுப் பலவாறாக வாழ்த்தி யேராளமான திரவியத்தோடு பலவஸ்திரங்கள், ஆபரணங்கள் முதலியவைகளைச் சூரபதுமனுக்கு காணி க்கையாகக்கொடுத்துச் சூரனைநோக்கி, "ஓ சுவாமி! நான் தேவரீர் அடி யனாக விங்கிருந்து காலந்தள்ளிக் கொண்டு வருகிறேன். என்னைத் தய வுடனிப்போது இரக்ஷிக்கவேண்டுமென வேண்டினன். அதுகண்ட வசுரன் அதனை யேற்றுக்கொண்டு குபேரனை மன்னித்தனன். பிறகு குபேரனான வன் தனது நகரஞ்சேர்ந்தனன். அதற்குமுன்னமே அவனது பட்டண மானது அசுரர்களால் நாசமாக்கப்பட்டன. அவற்றால் குபேரன் மிக்க துயரத் தையடைந்தான். பிறகு சூரபதுமனானவன் ஈசானனைச்செயிக்க விரும்பிப் புறப் பட்டுச் செல்லுகையில் நடுவழியிலேயே ஈசானனானவன் ஸ்ரீபரமேசுவரனு டைய வனுக்கிரகத்தால் காளகண்டம் திரிநேத்திர முதலிய சிவச் சின் னங்கள் பலவற்றைப் பெற்றிருக்கிறான் என்பதைப் பலரால்கேள்விப்பட்டு இவரைச் செயித்தல் அரிதென்று அவனாக அவரைவிட்டு இந்திரனை வெல்ல மனதிலெண்ணியவனாய் கிழக்குத் திசையை நாடிச்சென்றனன். இந் திரனது பட்டணமுழுவதும் முற்றுகையிட்டுப் பிறகு அங்குள்ள கற்பகத்தரு முதலிய விருக்ஷங்களையெல்லா முறித்தெறிந்து அங்குள்ள பலவளங்களை யெல் லாம் கொள்ளையிட்டனன். இவற்றைக் கேள்விப்பட்டவுடனே இந்திரனானவன் ஆகாய மார்க்கமாகப்போய் மறைந்துவிட்டான். பின்னும் சூரனால் அநேக தேவப்பெண்கள் சிறைபிடிக்கப்பட்டார்கள். சூரனுடைய சேனைகள் இந்திர னது மாளிகையை வளைத்துக்கொண்டு அதனுட்கிடந்த திரவியங்களை யெல் லாம் வாரிக்கொண்டு போனார்கள். இதேவிதமாக அப்பட்டணத்துள்ள வீடு களிலெல்லாம் கொள்ளையிட்டுக்கொண்டு பிறகு அப்பட்டணத்தைத் தீக் கிரையாக்கினார்கள். அந்தச்சமயம் பலதேவர்கள் ஓடிப்போக முடியாமல் அகப் பட்டுக் கொண்டார்கள். உடனே மகா கொடியவனாகிய சூரனானவன் அங்கு கொள்ளையடித்த திரவியங்களை யெல்லாம் மூட்டையாகக் கட்டி யத்தேவர்கள் தலையில் வைத்துச் சுமந்துவரச்செய்தான். பிறகு அக்கினிதேவனுடைய பட்ட ணத்தைத் தீக்கிரையிட அநேகவசுரர்களாகிய தனது பலம்பொருந்திய சைந் நியங்களோடுஞ் சென்றனன். அப்போது அக்கினிதேவனுடைய பெரியசேனை யானது அவர்களோடு போர்புரியச்சென்றனர். பின்பு அவ்விருவர்சேனைகளும் ஒன்றோடொன்று முட்டிக்கொண்டு அஸ்திர சஸ்திரங்களைக்கொண்டு போர் புரிந்தன. அக்கினிதேவனது சேனைகள் தன்னுடைய சேனைகளால் முற் றுந் தோற்கடிக்கப்பட்ட அச்செய்தியை யக்னிதேவனுக்கறிவிக்கச் சென்றார் கள். அதுகண்ட அக்கினிதேவன் கோபத்தினால்தன்னைமறந்தவனாய்ச்சடுதியிற் சென்று ஜனங்கள் முழுவதையுமெரிப்பதற்கானப் பிரளய காலாக்கினியைப்

போல் திகுதிகென்று ஜுவாலைவிட்டெரிந்து கொண்டு அநேக அஸ்திரங்களை யசுரர் படைத்திரளின் மீது பிரயோகித்தனன். பிறகு மகாபுத்திசாலியும், பற்பல அஸ்திரசஸ்திரங்களின் பயிற்சியில் கைதேர்ந்தவனுமான தாரகன் இடது கையில் வில்லெடுத்து வலதுகையினால் நாணேறிட்டு ஊழிக்காலத்திய மேகம் கர்ஜிப்பதுபோல் நாணைமீட்டி வில்வித்தைமுறைப்படி யவன்தீர்மானம் பெற்றிருக்கிற வழியை யனுசரித்து, ஸ்ரீபரமேசுவரனை மனதில் தியானித்து மகா பெருமைபொருந்திய பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகிக்க உருத்திர மூர்த்தியைப்போல் வில்லைவளைத்து நின்றான். அதனால் அக்கினி திகிலடைந்து மனம் நடுங்கி ஐயோ, ஸ்ரீபசுபதியினுடைய இவ்வஸ்திரமானது ஓர் க்ஷணத்துக்குள் உலகுகளை யெரித்துவிடுமே, காலாக்கினியின் முன்னிலையிற் கொசுக்களைப் போலாவதற்குத்தான் இலக்காகும். நாமெங்கே! ஸ்ரீபரமேசுவரனுடைய அஸ்திரமெங்கே! ஆ! ஹா! ஹா! நாமிப்போதே மாண்டு விடலாமோவென்று சிந்தித்து உயிரைக் காப்பாற்றுவதற்காக விப்போது தாரகனை சரணம்பெறுவோமென நிச்சயித்துத் துரிதமாக வாயுதங்களை யெல்லாமெறிந்துவிட்டுச் சரணம் சரணமென்று சொல்லிக்கொண்டே தாரகனண்டை அஞ்சலி செய்துகொண்டு சென்று யான் தேவரீரடியனுகின்றேன்: என்னை மன்னித்து விடல் வேண்டும்! '' என வுரைத்துப் பயத்தினால் மெய்நடுங்க நின்றனன். அதன் பிறகு அசுரராக்ஷசனான தாரகன் பிரீதிகொண்டு குளிர்ந்த வார்த்தைகளாலக்கினியைச் சமாதானப்படுத்தி நீ பட்டணத்துக்குச் சென்று முன்போல் பிரஜைகளைப் பாலனம் செய்வாய்; இது நிச்சயம். என்னுடைய கட்டளையின்படி முற்றும்பயத்தைவிட்டு உன் பட்டணத்திலிருந்து வருவாயாக, என, பிறகு, அக்கினியும் "யானறியாமையால் தாறுமாறாகச் செய்ததை யெல்லாம் மன்னித்தருளல்வேண்டும். என வுரைத்துத் தன் நகரம் சென்றனன். இதற்குமுன்னமே பலவிதத்தில் எங்கே யென்று காத்துக்கொண்டிருக்கிற குதிரை வீரர்களால் துரிதத்திலவனது பட்டணமும் கொள்ளை யிடப்பட்டது. பின்பு சூரர்களுக்கெல்லாம் சூரனும் மகா சாமர்த்தியசாலியுமான சூரபத்மன் பளிங்கனென்ற தனது சாரதியை நோக்கி, ரதத்தைத் தென்திசையைக் குறித்துச்செலுத்தும்படி யுரைத்தவுடன், அப்பளிங்கன் ரதத்தை யசுரனருகில் கொண்டுவந்து குதிரைகளை விரட்ட அவைகளோர் க்ஷணத்துக்குள் தருமராஜனுடைய பட்டணம் சேர்ந்தன. சதுரங்க சைனியங்களும் மற்றோர் சமுத்திரமே கரைபுரண்டதுபோற் சென்றது. யமபட்டணமு முடனே யசுரர்களாற் மிகுதியாய்ச்சூழ்ந்து கொள்ளப்பட்டது. பட்டணமிவ்வாறு முற்றுகையிடப்பட்டதை இமன், தூதர் முகமாய்க்கேட்டு " ஓ! கோ! இவனால் குபேரன் பட்டண முழுமையும் பறிகொள்ளப்பட்டது; அதே விதமாக வக்கினியுடைய பட்டணமும் மிகக் கொள்ளையிடப்பட்டது. என்றிவ்வாறான சிந்தையாற்பரவசம் கொண்டு வேகமாய் இவனண்டைக் கோடிவந்தான். மேலுமவன் வருகையில் அனேகம் திரவியங்கள், வஸ்திரங்கள், விநோதமான ஹாரங்கள், மலைபோல் குவிந்தமெல்லிய அரிசிகள், பயறு, கொள்ளு, துவரை, உளுந்து முதலான பல சாமான்களையு மேராளமாகக்கொண்டு வந்து அவனுக்குக் காணிக்கையாகக் கொடுத்து, " ஓ! சுவாமி! அடியேன் தேவரீரது கட்டளை

யின்படி தேவரீரடியனுக விச்சமயமினி இப்பட்டணத்தில் காலந்தள்ளி வருகின்றேன். மகாவீரர்களான அசுரர்களெல்லாம் பட்டணத்தைச் சின்னபின்னம் பண்ணுகிறார்கள்; தேவரீரவர்களைச் சிக்கிரமாகத் தடுத்தழைப்பித்து அடியேனைக் காப்பாற்றல்வேண்டும்.'' என்று யமனுரைக்கத் தாரகனும் தூதர்கள் மூலமாய்க்கொள்ளைக்காரர்களைத் தடுத்தழைத்து தருமராஜனையும் பலவிதமாகச் சமாதானப்படுத்தி மரியாதையாகப் பட்டணத்துக் கனுப்பி யுடனே யசுரராஜன் சைனியங்களோடு நிருருதி திக்குக்குச்சென்று அவனது பட்டணத்தையும் முற்றுகை போட்டனன்.

## 5 அத்தியாயம்

பிறகு நிருருதி ராஜனும் துரிதமாக நகரத்துக்கு வெளியே புறப்பட்டுச் சத்துருக்களைக்கண்டிப்போனன தாரகாசுரனண்டைக்கு அஞ்சலிகொண்டு வந்தப்போ துரைத்ததாவது:—'' ஓ! அசுரேந்திரா! (இராக்ஷஸ ஜாதியால்) தேவரீரினத்தோனுகிய யான் தேவரீரது கட்டளையின்படி இங்கு காலந்தள்ளி வருகின்றேன்; தேவரீரே இவ்வைசுவரியத்தையெல்லாம் தங்களினத்தோர்களுடைய போஷணார்த்தமாய்ப் பாதுகாத்திடல்வேண்டும்.'' என இவ்வாறுரைத்த நிருருதி ராஜனை வெகுமானத்துடன் பட்டணத்துக்கனுப்பிவிட்டுத் தாரகன் சீக்கிரமாக மேற்றிசையை நோக்கிப்புறப்பட்டனன். அதன்மேல் வருணதேவனது வரவைக்கேட்டுச் சமுத்திரம் சென்றுவிட்டனன். உடனே அசுர சைனியமான துமகா பெரிதான அப்பட்டணத்துக்குட்சென்று பட்டணத்துக்குள் ளிருப்பவர்களுடையவும், இங்கு மங்கு மோடுகிறவர்களுடையவுமானபல வஸ்திராபரணங்களை யெல்லாம் பறித்துக்கொண்டு பற்பல இரத்தினங்களாற் சோபிக்கலுற்ற அப்பட்டணத்தையும் கொள்ளைகொண்டு அதேவிதமாக அவன்சேனைகளோடு ஓர்க்ஷணத்துக்குள் வாயுதிக்குக்குச்சென்றனன். ஓ! கேட்டீர்களா! சௌனகாதி முனிவர்களே! அவ்வாயு தேவனே வென்றால் ஓர் நொடியிலிருளுலகு சென்று விட்டனன். தாரகன் நான்கு பக்கங்களிலும் ஜாஜ்வலியமாயுள்ள அப்பட்டணத்தையும் கொள்ளையிட்டான். இவ்விதமாக அசுரவல்லவரெட்டுத் திக்குகளையும் வெற்றிபெற்று நாகர்களைத் தத்தளிக்கக் கருதி சகல சைனியங்களுடனும் பாதாளலோகஞ் சென்றார்கள். அங்குள்ள ஸர்ப்பத் தலைவரெல்லாம் போர்முன்னர் வீரியமிழந்து அசுரனுக்கு விசித்திரங்களான பலவிரத்தினங்களைக் கொடுத்தனர். தலைமையரசனை சூரபத்துமன் அங்குள்ள வமுதத்தைப்பானம் பண்ணி யங்குண்டான வசுரர்களால் மிகுந்த பிரீதியுடன் பூஜிக்கப்பட்டு, அங்குள்ள விநோதங்களையும் மிக நேர்த்தியான பிலத்துவாரங்களையும் கண்ணுற்று, அங்கோர்தினம் தங்கிப் பிறகு சடிதியில் பூதலத்துக்கு மறுபடி வந்தனன். பின்பவன் பற்பல சைனியங்களோடும், மகா பலிஷ்டர்களான தம்பிகளோடும் எல்லாதிக்குகளிலுமுள்ள நேர்த்தியான பற்பலவித தீவுகளுக்குச் சென்று அங்கங்குள்ள பற்பல விநோதங்களையும் கண்டு, '' ஸ்ரீ மகாவிஷ்ணு யோகநித்திரைபண்ணும் திருப்பாற்கட லடைந்தனன். அப்போதசுர சேனைகளெல்லாம் மதம்கொண்ட யானைகளைப்போல கடலிலிறங்கிப்பாலை மிகுதியாகக் குடித்துக் கடலை

யும் கலக்கின. அப்போது ஸ்ரீ விஷ்ணுவின் பெண்டிர்களான இலக்குமிதேவியும் பூமிதேவியு மக்கூச்சலைச் செவிகொண்டு பயமுற்றவர்களாகி ஸ்ரீவிஷ்ணுவண்டையிற் சென்றவரை யெழுப்பினர்கள். "ஓ! சுவாமி! திடீரென்று பயம் நேர்ந்துவிட்டதே! இப்போதுதானு ஆதிசேடன்மீது பள்ளிகொண்டு நித்திரைசெய்வது? சீக்கிரத்தில் நித்திரையை விட்டெழுந்து பயங்கொண்டு நடுங்கிய வெங்களைக் காப்பீர்," என, அதன்மேல் விஷ்ணுவானவர் தூக்கத்தை விட்டெழுந்தனர். அதற்குள் அசுரரெல்லோர்களும் அவரதண்டைக்குற்றனர். உடனே மகா சதுரரான ஸ்ரீ ஹரியானவர் கௌமோதகி யென்றகதை, நந்தக மென்றகத்தி, பாஞ்சஜன்னிய மென்ற சங்கம் ஸுதர்சன மென்றசக்கிரம், சார்ங்கமென்ற தனுசு, இவையெல்லாம் கைக்கொண்டும், கச்சையிறுக்கிக்கட்டிக் கவசமணிந்து, அம்பறுத்தூணியை முதுகில் மாட்டிக்கொண்டும் கருடன் மீதேறிச் சூரன் சேனையருகிலுற்றனர். பிறகவர் இடதுகையால் வில்லைப் பற்றி வலதுகையினுற் சடிதியில் நாணேறிட்டு வேகத்துடன் தாரகனுடைய சேனையில் அஸ்திரங்களை யேராளமாக வருஷித்தனர். அப்போதப்பாணங்கள் விழுந்ததனல் பலசேனைத்திரள்கள் மடிந்தன. மற்ற வசுரர்கள் அம்படியால் கைகால் முதலிய வவயவங்கள் துண்டிக்கப்பட்டு முண்டமாகவோடி மிகவும் கிலேசத்தினுல் நொந்து தாரகனைச் சரணமடைந்தார்கள். பின்பு தாரகனும் மிகுதியான மகாபெரிய அஸ்திரங்களை யெடுத்துக்கொண்டு ஸ்ரீநாராயணரோடு போர்தொடுப்பதற்காகப் புறப்பட்டுத் துரிதமாகச் சென்று, கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! வில்லை நாணேற்றித் தனுட்டங்காரம் செய்து நாராயணன் மீது அவரது வாகனமாகிய கருடனுடலிற்கூட இரத்தம்பெருகும்படி மிகுதியாகச் சரிமாரி பொழிந்தான். அசுரவிரோதியாகிய ஸ்ரீமாதவனும் மிகக்கோபமுற்றவராகி அதிதீக்ஷண்யமுடைய பாணங்களையப்போது தாரகனுடைய சகல வவயவங்களின்மீதும் மிகுதியாகப் பிரயோகித்து, பிறகு வேறஸ்திரங்களைத் தொடுத்து அப்போதேயவனது ரதத்தைப்பொடிப்பொடியாகவுடைத்து, ஸாரதியையும் பூமியில் விழுத்தி அவனது வில்லையும் செதல் செதலாகமுறித்தெறிந்துவிட்டனர். பிறகு தாரகன் துரிதத்தில், ஜாஜ்வலியமான மற்றோரி ரதத்தின்மீதேறி மறுபடியுமோர் வில்லெடுத்து மிகவுத்தண்டமாக வட்டகாசம் பண்ணிக் கோடைமேகம்போல் அவர் திருமேனிமீது பற்பல பாணங்களை மிகுதியாக வருஷித்து தீக்ஷணியமுள்ள பலசஸ்திரங்களால் அங்கு விளையாட்டாகவே ஓர் நொடியில் நிரப்பினன். அப்போது அந்த சஸ்திரங்கள் விழுந்ததனல் விஷ்ணுவினுடைய திருமேனியினின்று கவசம் தெறிபட்டு மிகுந்த இரத்தம் பெருகலாயிற்று. பிறகு விஷ்ணுவும் பற்றி எரிகின்றவர் போல் மகா கோபங்கொண்டவராகி மர்ம்ம ஸ்தானங்களைத் துளைக்கவுற்ற சில நாராசபாணங்களாலவனது சரீரத்தை நோகப்பண்ணி சூலங்களாலும் பற்பல வஸ்திரங்களாலு மவனது ரதத்தையுடைத்துத் தள்ளி மறுபடியவன் வில்லையுமாயிரம் சுக்குகளாக முறித்துவிட்டனர். தாரகன் உடனே மேன்மை பொருந்திய மிகவற்புதமான மற்றோரி ரதத்திலேறிக்கொண்டு மிகவும் கெட்டியான மற்றோர் வில்லையுமெடுத்து மகா கோபாக்கிராந்தனுகி யப்போது ஸ்ரீஹரி மீது அனேக அஸ்திரங்களைப் பிரயோகித்தனன். பின்பு மகா சஸ்திரப்

பயிர்ச்சியுள்ள மாயாவியான ஸ்ரீ விஷ்ணுவானவர் மிக பரபரப்போடு பல உருவங்களைக்கொண்டு இலக்ஷங்கோடி சஸ்திரங்களையெடுத்து அங்கங்கு பலவிடங்களிலிருந்து தாரகன்மீது துரிதமாகச் சொரிந்தனர். அப்போது உடனே தாரகனும் தாயுபதேசித்த மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அனேக உருவங்களாக வேறுபட்டிருக்கிற விஷ்ணுவை எண்ணற்ற அஸ்திரங்களால் அடித்தனன். இவ்விதமாக, யுத்தத்தில் நல்ல மல்லர்களான விஷ்ணுதாரக ரிருவர்களுமப்போது மிகவும் முனைந்து பனிரண்டு வருஷகாலம் ஒருவரோடொருவர் போர்புரிந்தார்கள். அப்போது, கைடபனென்ற அசுரனைக்கொன்ற ஸ்ரீவிஷ்ணுபிரான் மிகப் பயங்கரமான கௌமோதகியென்ற கதையைக் கையிற்பற்றிக் கரகரவென்று சுற்றி யதே க்ஷணத்தில் அவ்வசுரன்மீதெறிய தாரகன் தன்னைக் கொல்ல எத்தனித்தவர்களைத் தனது கதையினால் மிகவாக்கிரத்தோடு தடுத்தனன். அதினாலப்போதடியுண்ட கதையானது சோகமுற்றவர்போல் பூமியில் விழுந்தது. விஷ்ணுவினுடைய நந்தகமென்ற கத்தியுமிவ்வாறே பழுதடைந்தது. மேலும் அப்போது தாரகன் மகாகோபத்தோடு கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! ஸ்ரீவிஷ்ணுவைக் கொன்றுவிடமுயன்று, மிகவும் பருத்தவோர் கதையைக் கரகரவென்று சுழற்றிக்கொண்டு துரிதத்தில் ஹரியருகில் ஓடிவந்தனன். தனதண்டைக்கவ்வாறு ஓடிவருகின்ற மகா வீரனை ஸ்ரீமாதவன் கண்டவுடன் ஊழிக்காலமேகங்கள் கர்ஜனை செய்வதுபோல் அப்போது சங்கத்துவானம்செய்து சகல சத்துருக்களையுமறுத்துத் தள்ளலுற்ற மகா பயங்கரமான ஸுதர்சனமென்ற சக்கிரத்தைத் துரிதத்தில் வஜ்ஜிரம் போன்ற, அவ்வசுரனுடைய மார்பினிற் பிரயோகிக்கும்போது கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அது அவன் மார்பின்மீது விழுந்து பதக்கத்தின் தன்மையை அடைந்துவிட்டது என்னவாச்சரியம்!

## 6 அத்தியாயம்.

அதன்பிறகு அப்போது ஸ்ரீ விஷ்ணுவானவர் கௌமோதகி என்ற கதை, நந்தகமென்றகத்தி, பாஞ்சஜன்னியமென்ற சங்கம், சாரங்கமென்ற தனுசு, சுதர்சனமென்ற சக்கிரம் ஆகிய ஐந்தாயுதங்களையுமிழந்தவராகிச் சத்துருக்களை வதைப்போனானதாரகனிடத்து சுவயமாகவே துரிதத்திற் சென்று வசனமுரைத்ததாவது.—“ஓ! கோ! கோ! என்ன பலம்! என்ன தைரியம்! சகல அஸ்திரங்களிலுமென்ன தேர்ச்சியுள்ள பயிற்சி! இப்படிக் கொத்தவைகள் முக்கண்ணுடைய ஸ்ரீருத்திரமூர்த்தியிடத் தொழிய மற்றெங்கும் காணப்படவில்லை ஓ! அசுரோத்தமா! உம்மைப் பிள்ளையாகவடைந்த உமது தாயே உலகினில் நல்ல புத்திரவதி! அதிகமாக வளர்த்துவதில் யாது பயன்? நீர் மிகுந்த சந்தோஷத்துடனே எனது பிழைகளை மன்னித்தல்வேண்டும்.” என, அசுரவல்லபனான தாரகனும் மிகச்சந்தோஷமுற்று அவ்விஷ்ணுவைப் பற்பல வசனங்களால் ஆதரித்தனுப்பிவிட்டு வணக்கத்தோடஞ்சலிகொண்டு சூரனிடஞ்சென்றான். அப்போது சூரனுமத்தாரகனை அன்புடனுச்சிமுகர்ந்து கட்டியணைத்துக்கொண்டான். பிறகு எல்லா அசுரர்களும் சேர்ந்து சக்கிரவாளகிரிக்குச் சென்று அங்

குள்ள விநோதங்களைப் பார்த்துவிட்டுச் சுவர்க்கலோகத்துக்குப் புறப்பட்டார்கள். அங்குள்ள மகேந்திரனோ அசுரர்களுடைய வரவைக்கேட்டவுடன் மிகப்பயந்து நடுங்கியவனாகி இந்திராணியோடுகூட கிளியுருவமெடுத்து துரிதமாக வானத்திற் சென்றனன். அவன் வெளிப்பட்டோடிய மார்க்கத்தின்வழியாகவே அசுரர்கள் அச்சுவர்க்கத்துக்குவந்து எல்லாப்பக்கங்களிலும் அதைச் சூழ்ந்துகொண்டு வெளிப்பட்டோடிய தேவர்களைக் கட்டிவைத்து அப்போதே அதைமுற்றும் கொள்ளையிட்டுப் பிறகு மஹாலோகத்துக்குச்சென்று அங்குள்ள ரிஷிகளால் பூஜிக்கப்பட்டு, பின்பு அதைவிட்டு ஜனலோகம், தபோலோகமிவைகளுக்குச் சகல சேனையுடனும் சூரபத்துமன் சென்றுநோக்கிப் பிறகு பிரம்மனாலலங்காரமாக விளங்கிய சத்தியலோகத்திற்குச் சடுதியிற் சென்றவுடன் பிரம்மன் மற்றப்பத்துப் பிரம்மர்களுடனுமோர் க்ஷணத்துக்குள் சூரன் முன்பாக வந்து மிகவும் குளிர்ந்த வசனங்களாலுரைத்ததாவது: "ஓ! அசுரேந்திரா! உங்களுக்கெல்லாம் பாட்டனாகிய யான் எப்போதும் இங்கு வாசம்பண்ணுகின்றேன். எனதிவ்வைசுவரியமெல்லாம் உம்முடையதே! நீர் வந்ததனாலிப்போது எனக்கு மிகவும் சந்தோஷமாயிற்று. இதோ! மிகுதியான இவ்வாயுதங்கள், பிரம்மாஸ்திரம் நேர்த்தியான ரதம் இவைகளெல்லாம் உமது தம்பிகளுக்காக இருக்கட்டும்" என்று கூறி அவைகளைப் பிரமனீந்தனர். பிறகு சூரனும் அப்பிரமனை மிகவாதரித்தனுப்பிவிட்டுச் சடுதியாக மிகுதியான சகல சைனியங்களுடனும் விஷ்ணுலோகஞ் சென்றனன். அப்போது பிரபுவாகிய ஸ்ரீவிஷ்ணுபிரானும் அவனது வரவைக் கேட்டுச் சீக்கிரமாக அவனது முன்னிலைக்குச்சென்று, "ஓ! அசுரேந்திரா உமது தயவினால் இவ்வெனது லோகத்தில் வாசம்பண்ணிவருகின்றேன். நீர் உமது சைனியங்களோடுகூட எனது லோகத்தை நன்றாய்ப் பார்த்துப் போதல்வேண்டும்." என உரைத்து, ஸ்ரீஹரியானவர் அசுரர்களுடன் தன்பட்டணத்துக்குள் வந்து அங்குள்ள விநோதங்களையெல்லாம் அவ்வசுரர்களுக்கு நன்றாகக் காண்பித்துப் பிறகு அசுரேந்திரனுக்கு மிகுந்த பொருள்களைக் காணிக்கையாகக்கொடுத்து அநேக உபசார வார்த்தைகளையும் உரைத்தனர். பின்பு சூரபத்துமனும் மிக மனக்களிப்புற்றவனாகி அப்போது ஸ்ரீவிஷ்ணுவை மிக நேர்த்தியான வார்த்தைகளாலாதரித்து உடனே புறப்பட்டுச் சிவலோகஞ் சென்றனன். அநேக ருத்திரர்கள், கணாதிபர்கள், தேவர்கள், மகாத்துமாக்களான முனிவர்கள் இவர்களால் நிறைந்ததும் மிகச்சிறப்புடையதும் சுற்றிலுமுள்ள பிராகாரங்கள், கோபுரங்கள் அட்டால மண்டபங்கள், கொடுங்கைகள் ஆயிரக்கால் மண்டபங்கள் இவைகளாலலங்கரிக்கப்பட்டதும் பற்பல ரத்தினாபரணங்களைப்பூண்ட அநேகமாயிரம் ருத்திர கன்னிகைகள், வீணை புல்லாங்குழல், மிருதங்கம் பேரி, காஹளம் டிண்டிமம் நாட்டியம் வாத்தியம் இவைகளில் குசலர்களும், நல்ல பாடகர்களுமான கின்னரர்கள் கேட்பதற்கு ஆனந்தகரமாயுள்ள வேதகோஷங்கள் இவைகளால் எப்போதும் விளங்காநின்றதுமான ஸ்ரீசிவலோகத்தைப் பார்த்துச் சூரபத்துமன் தூரத்திலிருந்தபடியே சேனைகளை அங்குதானே நிறுத்திவிட்டுச் சிங்கமுகன் தாரகன் இவ்விருவர்களோடுகூடப் பயபக்தியோடஞ்சலிகொண்டவனாகி மனதினில்

ஸ்ரீசிவபிரானைத் தியானித்துக்கொண்டே மெல்ல மெல்ல நடந்துவந்து மகா வைபவம் பொருந்தியதும் விசித்திரங்களான பற்பல ரத்தினங்களால் மிகவும் நேர்த்தியாக அமைக்கப்பட்டதும், சுற்றிலுமுயர்ந்த உருக்குத் தங்கத்தாலமைக்கப்பட்டதும், மிக ரமணியமானதும், பொன்னரசிலை முதலியவற்றைத் தொடுத்துக் கட்டப்பட்ட தோரணங்களால் சிங்காரமுள்ளதும் திசைகளெங்கும் வரிசையாக வைக்கப்பட்ட இருஷபங்களால் உல்லாசமுள்ளதுமான பிராகாரங்களால் விளங்கியதும் இங்குமங்குமுள்ள ஒவ்வொன்றும் ஒவ்வோரண்டம்போன்றதும் முறையே பவளங்களாலும் இந்திர நீலக்கற்களாலும் அமைக்கப்பட்ட படிக்கட்டுகளையுடையதுமான பற்பல பொன் மண்டபங்களால் ரமணீயமாகியதுமான ஸ்ரீமகாதேவாலயத்தை அங்குதரிசித்து, அப்போதசுரனனவன் கண்களைக் கொண்டதற்குற்ற நற்பயனைப் பிரத்தியக்ஷமாகக் கைக்கொண்டு தம்பிகளோடுகூட மௌனமாகத் தண்டாகாரமாய்ச் சாஷ்டாங்கமாகத் தண்டம்பண்ணி சருவாங்கமும் திருநீற்றுப் பூச்சினுலும் ருத்திராக்ஷாபரணங்களாலும் அலங்காரமாய் விளங்கியவரும் காதுகளிற் பூண்ட குண்டலங்களால் பிரகாசமுடைய திருமுகத்தையுடையவரும், கைகளிற் பிரம்பைப்பற்றியவரும், ஸ்ரீபரமேசுவரனுடைய திருமாளிகையின் வாசற்படியைக் காப்பதில் மிகவும் முயன்றதேவனும், மகா பயங்கரர்களும், மகாகொடியவர்களும், மகாப்பிரளயங்களைச்செய்வோர்களும், மதோன்மத்தர்களும் மகா வீரர்களும் மகா பலபராக்கிரமங்களை யுடையவர்களும் அனேக கோடி பிரம்மாண்டங்களையும் சமுகரிப்பதற்குற்ற உருவங்கொண்டவர் போன்றவர்களும் ஹூம்காரம்செய்வதனுல் சகல சமுத்திரங்களையும் உள்ளங்கை நீராகக் குடித்து விடுவோர்போன்றவர்களும், சிலர் அழகிய உருவங்களையும் சிலர் விகார உருவங்களையும் சிலர் அங்கவீன உருவங்களையும் சிலர் இரண்டு கால்களையும் மூன்று கால்களையும் நான்கு கால்களையும் ஒரு காலையும் ஒரு கையையும் இருகைகளையும் மூன்று நான்கு கைகளையும் சிலர் சிங்கமுகத்தையும் யானைமுகத்தையும் புலிமுகத்தையும் சிலர் பயங்கரமான சிவிங்கிமுகத்தையும் சிலர் மான், கழுதை, பசு, எருமை, நரி, கரடி, முயல், சர்ப்பம், இவற்றின் முகத்தைக்கொண்டவர்களும் ஒன்று இரண்டு மூன்று முதலிய பலமுகங்களையுடையவர்களுமான அனேக கோடிகணதிபர்களால் இருபாரிசங்களிலும் சூழப்பட்டவரும் முதற்கட்டு வாசற்படியில் வீற்றிருப்பவருமான ஸ்ரீநந்திகேசுவரனை அப்போது தூரத்திலிருந்தபடியே தரிசித்து மனமலர்ச்சிகொண்டவனுகி மிகவும் வணக்கத்தோடு தண்டனிட்டனன். பிறகு ஸ்ரீநந்திபிரான் சூரபத்துமனை நோக்கித் திருவாக்கருளியதாவது:—"வாரீர்! அசுரேந்திரா! முந்தி நீர் பெரிதான யாகத்தினுல் ஸ்ரீமகேசுவரனைப் பூஜித்து வேண்டிய பயன்களையும் கைக்கொண்டீரல்லவோ! இப்போது யாது நிமித்தமிங்கு வரலானீர்?" என, சூரன் சொல்லுகின்றுன். "ஓ! பிரபுவே! சகல ஜெகங்களுக்கும் அதிலும் மிகுதியாக வெந்தனுக்கும் நாதனுகிய ஸ்ரீதேவாதிதேவனைத் தண்டம் பண்ணுவதற்கே யான் வரலானேன்; எந்தனுக்கு இதைத்தவிர வேறென்ன வேலை உண்டென்பதைச் சொல்வீர். ஆகையால் யான் சேவை செய்வதற்காகத்தேவரீர் சமயம் பார்த்து எந்தனை இப்போது இட்டுப்போகுதல் வேண்

டும்.'' என, நந்திதேவரும் அந்தப்புறஞ்சென்று ஸ்ரீஜகதீசன் முன்னர் விண்ணப்பஞ்செய்து ஸ்ரீசம்புவாலறிக்கை அருளப்பட்டதன்மேலங்குவந்து பிறகு அந்நந்தியால் சூரபத்துமன் உள்ளழைத்துப்போகப்பட்டனன். அவன்போகும்போது அங்கங்கு வாசற்படிகளிலுள்ள கணாதிபர்களைச் சாஷ்டாங்கமாகத் தண்டம்பண்ணிக்கொண்டும், அஞ்சலியோடு பக்தியுடன் தியானம்பண்ணிக்கொண்டும் அந்தப்புரத்திற்குச் சென்று அஷ்டைசுவரியமுடையோரும், மகாதேவனும், முக்கண்ணுடையவரும், சத்தியஞ்ஞானநந்த ஸ்வரூபரும், பிரத்தியக்ஷத்தில் மோக்ஷத்தையருளி இரக்ஷிப்பவரும், கழுத்தினிற் கறுப்பையும் சடைதனிற் சிவப்பையுமுடையவரும் அல்லது திருமேனியிலோர்பாதி கறுப்பாகவும் ஓர் பாதி சிவப்பாகவுமுள்ளவரும், மேல்நோக்கி ஜ்வலிக்கும் வீரியத்தையுடையவரும், ஒப்பற்றவரும், பராபர வரும்பொருளும், காமிகம் முதலிய இருபத்தெட்டாகமங்களால் துதிசெய்யப்பட்டவரும், நான்கு வேதங்களாலும் எப்போதும் துதிக்கப்பட்ட சரணாரவிந்தங்களையுடையவரும் பாதசாஸ்திரங்களை நன்கறிந்தவர்களும், மிகச் சுந்திரமேனியுடையவர்களும், தாமரைத்தண்டு நூல்போல் விளங்காநின்ற சாமரங்களைக் கைகளிற்பற்றியவர்களும், இடையாபரணங்கள் இன்பமாக ஜொலிக்கும்படி எல்லாத் திக்குகளிலும் நாட்டியஞ்செய்வோர்களுமான அனேகமாயிரம் ருத்திர கன்னிகைகளாலும், முக்கண்ணுடையவர்களும், கழுத்தினிற் கறுப்புடையவர்களுமான ஸ்ரீசிவ ஸாரூப்பியம்பெற்ற அனேக முக்தர்களாலும், கும்பன், நிகும்பன் முதலிய மகாத்துமாக்களான பல கணாதிபர்களாலும், மறுபிறப்பற்று ஒரே தடவையாக முக்தியடைந்தவர்களான ருஷிகளாலும் சேவிக்கப்பட்டவருமான ஸ்ரீபரமேசுவரனைத் தரிசித்துச் சூரபத்துமன் இரு தம்பிகளுடன்கூட ஆதரவுடனும், பக்தியுடனும் நமஸ்காரம்பண்ணினன் :—'' ஓ! மகாதேவா! சிருஷ்டி, ஸ்திதி, சம்மாரங்களைச் செய்கின்ற உமக்கு வந்தனம். ஓ! அடியார்களுக்கு நேசனாகிய விசுவேசா! விசுவரூபமுடையவரும், சுகத்தை உண்டுபண்ணுகின்றவரும், மங்களகரரும், பயங்கரமான உருவமுடையவரும், சாந்த ரூபியுமான உமக்கு இவ்வந்தனம்: ஓ! சங்கரா! ஜெகதம்பிகையோடு கூடியவருமாகிய உம்மை வந்தனமளிக்கின்றேன், வந்தனமளிக்கின்றேன். கங்கையைத் தரித்தவரும், மன்மதன், யமன் முதலியவர்களைக் கொன்றவரும், சாக்ஷாத் மோக்ஷ ஸ்வரூபியும், சுத்தமான ஸ்படிகம்போன்ற திருமேனியுடையவரும், பரப்பிரம்மமுமாகிய உம்மை வந்தனம் செய்கின்றேன்,'' என்றிவ்வாறாகத் துதிசெய்து சூரன் முதலிய சகோதரர்கள் மிகவும் வணக்கத்தோடு அங்கு நின்றார்கள். பிறகு ஸ்ரீமகேசுவரன் நந்திதேவனை நோக்கித் திருவாக்கருளியதாவென்றால் :—'' கேளீர்! நந்திகேசுவரா! நமதாக்கினையின்படி இங்கு வரலுற்ற நமது தொண்டனாகிய இச் சூரபத்துமன் அவனது அண்டங்களைச் சுற்றிப்பார்த்துக்கொண்டு அங்கங்கு அதிகாரிகளை நியமித்துவிட்டுப் பிறகு திரும்பிவந்து இவ்வண்டத்தின் மத்தியில் அவனது தம்பிகளோடுவாசம்பண்ணட்டும்.'' என்றிவ்வாறாக ஸ்ரீபகவானால் கட்டளையிடப்பட்ட பிறகு கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! நந்திதேவன் அச்சூரனை நோக்கி உரைத்ததாவது :—'' கேளீர்! சூரபத்துமா! நீர் போய் உமது அண்டங்களை

யெல்லாம் பார்த்து அங்கங்கு அதிகாரிகளை நியமித்துவிட்டுப் பிறகு இவ்வண்டம் மத்தியிலே வாசம்பண்ணுவீர். இதுதான் ஸ்ரீபரமேசுவரனுடைய கட்டளை '' என சூரன் உலகங்களுக்குச் சுகத்தையளிக்கின்ற ஸ்ரீசங்கரனை நமஸ்கரித்துப் பிறகு தம்பிகளோடுகூட வெளியில் வந்து முதல் வாசற்படியில் வீற்றிருப்போரான நந்திபிரானை வணங்கி அவரிடம் விடைகொண்டு உடனே தனது சேனைகளிருக்குமிடஞ் சென்றனன்.

## 7 அத்தியாயம்.

பிறகு சூரனுனவன் சேனைகளோடுகூட அண்டங்களைப் பார்த்துவருவதற்காகப் புறப்பட்டு ருத்திரர்களால் காக்கப்பட்ட பிரமாண்டத்தின் சுவருக்கு வந்தவுடன், அவ்வுருத்திரர்களும் அவன் சிவாஞ்ஞைபின்படி சேனைகளோடு வந்திருப்பதைக்கண்டு தங்களது மார்க்கத்தை அவனுக்கு விட்டார்கள். பின்பு மஹா பராக்கிரமசாலிகளான அங்கெல்லோர்களும் சந்தோஷங்கொண்டு அண்டத்துக்கு வெளியிற்சென்று அந்தந்த அண்டங்களுக்குப் போய் இவ்விதமாகவே சத்துருக்களை ஜெயித்து அங்கங்கு வேண்டிய அதிகாரிகளை நியமித்துப்பற்பல போகபோக்கியங்களையும் அனுபவித்தபிறகு அசுரர் எல்லோர்களும் துரிதமாகப் புறப்பட்டு, ஓர் க்ஷணத்துக்குள் இவ்வண்டத்துக்கு வந்தார்கள். அண்டத்துக்கதிபர்களான ருத்திரர்கள் அப்போது அவர்கள்வரவை அறிந்து, கேளீர்! சௌனகாதிமுனிவர்களே! அவர்களுக்கு வேண்டிய அளவு பிரமாண்ட சுவரை இடித்து வழிவிட்டார்கள். பிறகு சூரபத்மன் மிகக்கொடியர்களும் ஒருவரோடொருவர் ஓட்டம் பிடிக்கின்றவர்களுமான பற்பல சைன்யங்களுடன் துரிதமாகச் சுவர்க்கலோகம் சென்றனன். அதன்மேல் முந்தி தேவர்களால் சண்டையில் தோல்வியடைந்து பலமற்று நின்ற மாதாமகனுன அசுரேந்திரன் என்பவன், சுக்கிராசாரியருடன்கூட இச்சூரபத்மன் அண்டைக்குவந்து சுக்கிரனேடு தனக்குள்ள நேசத்தையும் அவனுக்குச் சாதுர்யமாக உரைத்தனன். பிறகு சூரபத்மன் அசுர குருவாகிய அச்சுக்கிரனையும், அசுரேந்திரனையும் அப்போது வந்தனமளித்து மிகப் பிரீதியுடன் பலவாருகப் பூஜித்தான். பிறகு அவன்தான் திக்குவிஜயங்கொண்டதையும் பல வண்டங்களுக்குச் சென்றதையும் அவர்களுக்குக்கூறி, பிறகு அவர்களுடனும், தம்பிகள் சைன்யங்களுடனும் மிக ஜொலிக்கலுற்றவனுக விரைவில் பூதலம் சென்றுன். பின்பு அதுகேட்டுத் தேவர்கள் இந்திரனேடுகூட இவன்மீது பயங்கொண்டவர்களாகவும், மிகவும் நோயுற்றவர்களாகவும் துரிதத்தில் விஷ்ணுலோகத்துக்கு வந்து சத்துருக்களைக் கொல்லலுற்ற விஷ்ணுவைக்கண்டு உரைத்ததாவது:—''ஓ சுவாமி! அசுரரிடத்தில் பயந்து மனநடுக்கமுற்றிருக்கிற எங்களைத் தேவரீர் ரக்ஷித்தருளல்வேண்டும்.'' என, மாதவன் ''ஓ மூடர்களான தேவர்களே! முடிவில் ஏன் வீணுக வாதைப்படுகிறீர்கள்? முந்தி தக்ஷன் வேள்வியில் அத்துவர் ராஜாவான (வேள்விக்கிறையோனுன) ஸ்ரீமகாதேவனை நீக்கிவிட்டு நீங்கள் என்னேடுகூட அவிர்ப்பாகங்களைப்பெற்றுக்கொண்டிருந்தீர்களல்லவா? அதற்குற்ற பயனை யாம் அப்போதே அடைந்துவிட்டபோதிலும் இங்கும் மறுபடி அப்பாவத்தின் பயனைப் புசிக்க

வேண்டுவது நிச்சயம். ஆகையால் அசுரோத்தமனாகிய சூரனிடத்தில் போய் வேண்டியபடி அண்டித்தான் பிழைத்தல் வேண்டும்,'' என உரைத்து ஸ்ரீநாராயணரே அப்போது முப்பத்து முக்கோடி தேவர்களுடன்கூட சூரனிடத்துக்கு நேரில் புறப்பட்டனர். பிரபுவான ஸ்ரீவிஷ்ணுவானவர் சூரனிடம் சென்று வசனம் உரைத்ததாவது:—ஓ அசுரேசுவரா? அண்டியவரை ஆதரிப்போரும், பகைஞருக்குப் பயங்கரருமான தாங்களும், தங்கள் தம்பிகளும், ராணுவங்களும் க்ஷேமமா? யான் தேவரீரது தயவினால் இதுவரை இருந்துவருகிறேன்,'' என, பிறகு சூரபத்மனும் ஸ்ரீஹரியை அப்போது ஆதரித்துத் தேவர்களது மத்தியில் நின்ற அளவற்ற ஒளிபெற்ற பல ருத்திரர்களைக்கண்டு, "வாரீர் மாதவா! இதோ முக்கண்ணுடையவர்களாகவும், கழுத்தினில் கறுத்தவர்களாகவும் ஸ்ரீ ருத்திர மூர்த்தியினுடைய உருவத்தைக் கொண்டவர்களாகவும் நிற்கின்றார்களே! இவர்கள்யாவர்? யாதுநிமித்தம் தேவரீருடைய மத்தியில் வரலுற்றனர்? என, ஸ்ரீ புருஷோத்தமன் அவனது வசனத்தைக் கேட்டு உத்தரம் உரைத்ததாவது:—"கேளீர் அசுரராஜனே! பூர்வத்தில் பிரம்மாவானவர் ரஜோகுணம் மேலிட்டு வீண் அஹங்காரத்தினால் கர்வங்கொண்டவராகி, யாமே சர்வஜகங்களையும் படைப்பவர்; ரக்ஷிப்பவர்; அழிப்பவரும் யாமே; என்று மிகுந்தமாயையினால் மோஹம் உற்றவராகி எல்லாம் ஸ்ரீ பரமசிவனது திருவிளையாடல் என்பதை மறந்து மஹா மாயையால் மோகம் கொண்டனர். ஆனது பற்றி ஸ்ரீ சிவாக்கினையால் அப்போது சிருஷ்டித்திறமை அற்றுப் போயது. உடனேயவர் "ஓ! கோ! கோ! மூடபுத்தியால் யாது நாம்தவறி நினைத்து விட்டோம்; ஸ்ரீ சிவபிரானுடைய மாயையை யோதாண்ட முடியாதது; அது சகலப்பிரபஞ்சங்களையும் மோகிப்பிக்கலுற்றது; எம்மைப் படைத்தவரும், அழிவற்றவருமான ஸ்ரீ சர்வேசுவரனைச் சகல அண்டங்களுக்கும் சிருஷ்டி முதலிய தொழிலைச் செய்வதற்கு முயன்ற வகிலாண்ட கோடிப்பிரமாண்ட நாயகரென்றறியாமல் யாம் மிகுந்த வாண்மை கொண்டதனால் தான் யாமிப்பயனை யடைந்தோமென்பது நிச்சயம்.'' என்று மிகுந்த சிந்தையினாற் பரவசம் கொண்டவராகி புருவங்களின் மத்தியில் ஸ்ரீ பார்வதி சகிதரான பரமேசுவரனை முக்கண்ணுடையவராகவும், கழுத்தினிற் கறுத்தவராகவும் அலர்ந்த செந்தாமரை மலர்போன்ற திருமுகங்களையுடையவராகவும், குருந்து மொட்டுப் போன்ற மந்தஹாசத்தைக் கொண்டவதனமுற்றவராகவும், சிறந்த முத்துமாலைகளால் விளங்கியவராகவும், கோடி சூரியப்பிரகாச முற்றவராகவும், சிறந்த நவரத்தின ஸிம்மாசனத்தில் வீற்றிருப்பவராகவும், சுகத்தையுண்டு பண்ணுகின்ற ஸச்சிதாநந்தத்திருமேனி யுடையவராகவும் தியானம் செய்து கொண்டிருந்தனர். அதன் மேல் ஸ்ரீமகேசுவரரானவர் மனப்பிரீதி கொண்டவராகி யேகாதச ருத்திரர்களையேவினர். அப்போதவ் வுருத்திரர்கள் ஓர் க்ஷணத்துக்குள் பிரம்மனுடைய புருவமத்தியினின் றுவிர்ப்பவித்தார்கள். உடனே பிரம்மன் அவர்களை வந்தனித்துப் பக்தியோடு வசனமுரைத்ததாவது: "நீங்கள் யாவர்? யாது நிமித்தமிங்கு வரலானீர்கள்?'' என்று பிரம்மன் வினவ, ருத்திரர்களுத்தர முரைத்ததாவது:—"கேளீர் பிரம்மாவே! ஸ்ரீ தேவாதி தேவனாகிய சம்புவானுமக்

காகச் சிருஷ்டி பண்ணுவதற்கு நியமிக்கப்பட்டவர்களாகி யிப்போது உம் மிடம் வந்தோம்.'' என, அதன் பிறகு ஸ்ரீ ருத்திரனிடத்துப் பக்தியுடைய பிரம்மன் அவ்வுருத்திரர்களை நோக்கி யுரைத்ததோ வென்றால்:—''ஓ! ருத்திரர்களே! ஸ்ரீ ஸர்வேசுவரனுக்கினையின்படி அச்சிருஷ்டியுங்களாலே சிருஷ்டிக்கப்படல் வேண்டும்.'' என்று பிரம்மனுரைத்திட்ட வசனத்தைக் கேட்டு அவ்வுருத்திரர்க ளப்போது ஒவ்வொருவரும் கோடிசங்கியை வீதம் ருத்திர சிருஷ்டிபண்ணினார்கள். அப்போது மகாத்துமாக்களான பதினொரு ருத்திரர்களாலும் சிருஷ்டிக்கப்படலான வனேக ருத்திரர்களைக்கண்டு ஜகம் முழுதும் கேவலம் ருத்திரர்களாலே நிரம்பப்பட்டபோது பிரம்மனுரைத்ததோவென்றால்:—''ஓ ! ருத்திரர்களே ! மகாத்துமாக்களான இவ்வுருத்திரர்களையிவ்விதமாகச் சிருஷ்டி செய்தது போதுமானது. இனியுங்களாக்கினையின் பேரில் யானே யிச்சிருஷ்டியைச் செய்கின்றேன்'' என வுரைத்ததும் பிரம்மனவர் அவ்வேகாதச ருத்திரர்களுடனும், அவர்களாற் படைக்கப்பட்ட பதினொருகோடி ருத்திரர்களுடனும் பற்பல வைபவங்களால் நிரம்பிய ஸ்ரீ சிவபிரானுடைய லோகத்துக்குத் துரிதத்திற் சென்றனர். அங்கடைந்தவுடன் பிரம்மன் நந்திகேசுவரன் மூலமாக ஸ்ரீ மகேசுவரனுக்கு விண்ணப்பம் செய்து கொண்டதன் பேரில் நந்தியாற் கூப்பிடப்பட்டு அந்தப்புரத்துக் கேகினர். பிரம்மன், உலகங்களுக் கனுக்கிரக மளிக்கின்ற மகாதேவனையங்கு கண்டு, பூமிதனில் தண்டம் போல் சாஷ்டங்கமாக வந்தனித்து, அனேகம் துதிகளால் தோத்திரம் செய்து நிற்கையில், ஸ்ரீ மகாதேவன் சிருஷ்டிகர்த்தரான அப்பிரமனை நோக்கி ''யாது நிமித்தமிங்கு வரலானீர்?'' என வினவ, பிரம்மன் தனதறிவீனத்தினாற் சம்பவித்த பாவத்தையும், சிவாக்கினையின்படி ருத்திரர்கள் வரலானதையும் அப்போது நடந்த ருத்திர சிருஷ்டி முதலான சங்கதிகளையும் மிகுந்த பயத்தோடறிவித்துக் கொண்டனர். பின்பு ஸ்ரீ மகேசுவரன் அலர்ந்த செந்தாமரை மலர் போன்ற கண்களால் அவரை நோக்கி, ''கேளீர், பிரம்மாவே! நீரிப்போது முதல் நமதாக்கினையின்படி கர்வத்தைவிட்டு முன்போல் பிராணிகளைச் சிருஷ்டி பண்ணும். எனக்கட்டளையிட்டு பிறகு ஏகாதச ருத்திரர்களை யவர்களது லோகத்துக் கனுப்பி பதினொருகோடி ருத்திரர்களையும் தேவர்களோடு சேர்த்தருளினர். அவர்களைச் சேர்த்துத்தான் தேவர்களுடைய சங்கியை முப்பத்து முக்கோடியாகின்றது. பின்பு பிரம்மாவும் ஸ்ரீ ஜகதீசனை நமஸ்கரித்துத் தமதிருப்பிடம் சென்றனர். கேளீர்! சூரருக் கெல்லாம் சூரனாகிய ராஜனே! இப்போது கூறலான அவ்வுருத்திரர்க ளிவர்தான்.'' என்று விஷ்ணுவாலுரைக்கப்பட்ட வற்புதமான ருத்திர சிருஷ்டியைக் கேட்டுச் சூரபத்துமன் தம்பிகளுடனும், சைனியங்களுடனும் ஒப்பற்ற களிப்பைக் கொண்டனன். அதன் பிறகு சூரன் சுக்கிரனாற் குறிக்கப்பட்டபடி லவணாப்தியில் (உப்புக் கடல்) மிகநேர்த்தியு மற்புதமுமானவோர் நகரத்தை விசுவகர்மனைக் கொண்டமைத்துக் கொண்டனன். அந்நகரமோ வென்றால்:—நீளத்தி லெண்பதினாயிரம் யோஜனையும் அகலத்தில் நூறு யோஜனை விஸ்தீரணமு முள்ளதும், (அந்நகரமாகிய மங்கையர்க்கு) ஒட்டியாணங்கள் போன்ற பிராகாரம், அகழ்

இவைகளாற் சூழப்பெற்றதும், நான்கு வாசற்படிகளை யுடையதும், அண்டத்திற்கு நான்கு கம்பங்களை முட்டுக் கொடுத்தது போன்ற அண்டச் சுவற்றை யளாவலுற்ற மிகஉன்னதமான நான்கு கோபுரங்களைக் கொண்டதும், திசைகள் தோறும் வாபிகள், கிணறுகள், குளங்கள், ஏரிகள் இவைகளாற் சூழப்பட்டதும், நான்கு திசைகளிலு முள்ள பல சிங்காரத்தோட்டங்கள், அரணியங்கள் இவைகளாற் சிறக்கலுற்றதும், தெங்கு, மா, பலா, பாதரி, இலுப்பை அசோகம், கமுகு, கூந்தற்பனை, பனை, நார்த்தை, மாதுளை, நாவல், இரளி, ஸூரிப்புன்னை, வன்னி, முற்றிலவு, மலையகத்தி, ஆல், மந்தாரை, மகிழ், அரசு, வேமா, எலுமிச்சை, கொய்யா, தாளி, வெளளலொத்தி, முரள், வாகை, பில்வம், அழிஞ்சி, கருந்தும்பை, சிம்சுபா, சந்தனம், ஏறி, மாவலிங்கை, கொடி முந்திரி, மருதை, ஏழிலம் பாலை, பச்சிலை, மஞ்சாடி, முதலிய பற்பல விருக்ஷங்கள், செடிகள், கொடிகள் இவைகளாற் சுற்றிலும் சூழப்பெற்றதும், கொடுங்கைகள், அட்டாள மண்டபங்கள், அரண்மனைகள், படிக் கட்டுவரிசைகள், முதலியவைகளால் விளங்கலுற்றதும், திண்ணைகள், இரேழிகள், ஏறவாரங்கள், பலகணிகள் முதலியவற்ருற் சிறக்கலுற்ற, மாணிக்கங்களா லிழைக்கப் பெற்ற நூறு, ஆயிரக்கணக்கிலடங்கிய வைகளான பற்பல வீடுகளாற் சோபிக்கலுற்றது மாயுள்ளது.

## 8. அத்தியாயம்.

சூதருரைக்கின்ருர்:—கேளீர் சௌனகாதி முனிவர்களே! அதன் மத்தியிலுள்ள சூரத்துமனுடைய திருமாளிகையோ வென்ருல்:—மிகநேர்த்தியானதும், மதில், அகழ்களாற் சூழப்பெற்றதும், நான்கு வாசற்படிகளிலும் நான்கு பெரிய கோபுரங்களாலலங்கரிக்கப்பட்டதும், அநேக அங்கணங்களுடையதும், மிகநேர்த்தியான வுப்பரிகைகளைக் கொண்டதும், ஸ்படிகக்கற்களால் அமைக்கப்பட்டவனேகம் திட்டாணிகளாலும், பலபல திசைகளிற் சாத்தி வைக்கப்பட்ட விநோதங்களான பதினுயிரம் ஏணிகளாலும் சுவர்கள் மீதுள்ள பலவித சித்திரங்களாலும் விசித்திரமானதும், திசைகள் தோறுமுள்ளவனேக விளையாட்டுக் குன்றுகளாலும், சுற்றிலுமுள்ள பல வாபிகளாலும், அநேமாதிரியான பல கிணறுகளாலும், பெரிய வாடிகளாலும், (மரங்களின் வரிசை முதலிய பலவிதச் சுற்ருவர்ணம்) சூழப்பட்டதும், வஸந்தம் முதலிய எல்லாருதுக்களி (பருவங்களி)லும் பரிமளிக்கலுற்ற மலர்களை யென்றுமுடைய பல சிங்காரத தோட்டங்களாலும், பிரமதாவனம் (அந்தப்புரஸ்திரீகள் விளையாடும் தோட்டம்) களாலுமெங்கும் சிங்காரிக்கப்பட்டதும், திசைகள் தோறும் பலபாக சாலைகளால் விளங்கலுற்றதும், அனேகமாயிரம், போகசாலைகள், தானசாலைகள் விசாலமான சமையற் சாலைகள், பல வாபரணச்சாலைகள், யுத்தசாலைகள், அஸ்திர சாலைகள், நாட்டிய சாலைகள், வித்தியா சாலைகள், போஜனசாலைகள், கஜசாலைகள், அசுவசாலைகள், இவைகளாலும், அநேக ஸபா மண்டபங்களின் வரிசைகளாலும் சோபிக்கப் பெற்றதும், அனேகம் தேவமண்டபம், அசுரமண்டபம், மந்திரி மண்டபம், பற்பல இரத்தினங்களாற் சிங்காரிக்கப்பட்ட ஏகாந்தமண்டபங்கள், மிகமனோரஞ்சிதமும்,

முத்துக்களா லமைக்கப்பட்டவையுமான மற்றமண்டபங்கள், ஜுவலிக்கலுற்ற ஒளிகளை வெளிவிளக்கிய அல்லது பால சூரியனுடைய காந்திக்கு மேற் கொண்டதான பவளமண்டபங்கள், வைடூரியங்களா லிழைக்கப்பட்ட பல மண்டபங்கள், மங்களகரமான புஷ்பராகங்களாற் கட்டப்பட்டவையும், பிர காசமாக ஜ்வலிக்கலுற்றவனேக பத்துமராகங்களாலும், மிகுந்த காந்திகளை விசலுற்ற மரகதங்களாலும் மிகுந்த காந்திகளால் சிறப்பாக விளங்கலுற்ற இந்திர நீலக்கற்களாலும், திராஸமென்ற பயதோஷமற்ற விலையற்ற வைரக்கற் களாலு மமைக்கப்பட்டவையுமான மற்ற மண்டபங்கள், மிகநேர்த்தியான சிறந்த பல ஸ்படிகங்களாலும் கோமேதகக் கற்களாலும் தளவரிசை செய் யப் பட்டவைகளும், மிகமணம் பொருந்திய பல செஞ்சந்தனக்கட்டைகளால் விநோதமா யமைக்கப்பட்டவைகளும் இங்ஙனமான இன்னும் பலவித முள்ள வைகளுமான மண்டங்க ளிவைகளாலிங்கு மங்குமெங்கும் விளங்குவதனால் மிகநேர்த்தியா யலங்கரிக்கப் பட்டதும் அங்கங்கனேக கோடி மாணிக்கங்க ளாற் கட்டப்பட்டும், கேவலம் வானமார்க்கத்தை யெட்டியளாவிய பல துவஜ ங்களால் ஸ்வர்க்க லோகத்துக்கும் போட்டியாக வேற்பட்டது போலெங்கும் விளங்கியதும், முத்து மாணிக்கங்களா லிழைக்கப்பட்டவனேக மாயிரம் கத வுகளாலும், ஜனங்களுடைய மனதைத்திருடாநின்ற ।நிலைகளது மேற்படி கீழ்ப்படிகளாலும் மிகரமணீயமாய் விளங்குவதுமாக வமைக்கப்பட்டு அந்நக ரத்துக்குச் சூரபத்துமன் மூவுலகினிலும் பிரவித்தி கொண்ட வீரமாகேந் திர புரமென்று பெயருமிட்டனன். மேலும் சூர்பத்தும னப்போதந்நகர த்தைச் சுற்றிலும் ஹேமபுரியென்றும், அதேமாதிரியாகத் தேவபுரி யென் றும், இலங்காபுரி யென்றும், நீலபுரியென்றும், சுவேதபுரி யென்றும், அசுரர் களுடைய பெரிய பட்டணமாகிய வாமாபுரி யென்றும், அதேவிதமான பத் துமபுரி யென்றும் ஆகிய வெட்டுப்பட்டணங்களையும் சாமர்த்திய சாலியான சூரபத்தும னமைத்தனன். பின்னுமப்போ தசுரனிதே பிரகாரமாகச் சமுத் திரத்தின் வடபாகத்தில் சகலரத்தினங்களாலும் விசித்திரமாயுள்ள நேர்த்தி யான ஆசுரபுரி யென்றதையும், அப்படியே மேருகிரிக்குத் தெற்கில் ஜம்பூத் தீவில் ஹேம கூடபருவதத்திற் கருகில் மாயாபுரி யென்ற மிகவும் பெரிதான வோர்பட்டணத்தையும், தவிர தீவுக்குத்தீவு கடலுக்குக்கடலெங்கு மனேக நகரங்களையு முண்டுபண்ணி யதன்பிறகு மகாசுரனாகிய வச்சூரபத்துமன் வீரமாகேந்திர பட்டணத்துக்குத் துரிதமாகச் சென்று, அங்குள்ள விநோதங் களை யெல்லாம் பார்த்துப் பின்னர் தன தரண்மனைக்குட் சென்றனன். இவ் விதமாக அசுரேந்திரன் விஷ்ணு முதலிய தேவர்களுடனும், தம்பிகளுடனும் அங்குச் சென்றவுடன் சிங்காதனத்தில் உட்கார்ந்தனன். அப்போது மஹா புத்திசாலியான பிரம்மன் அவனுக்கு மங்களகரமான கிரீடத்தைத் தமது கையினால் எடுத்துக் கொடுத்துச் சகல தேவர்களுடனும் பட்டாபிஷேகமும் நடப்பித்தனர். பிறகு சகல அசுரேந்திரர்களும் மிகுந்த சந்தோஷத்தை அனுபவித்தார்கள். அப்போது சூரபதுமன் விஷ்ணுவை நோக்கி, மிகுந்த சந்தோஷத்துடன் உரைத்ததாவது;—'வாரீர் விஷ்ணுவே! யாம் எப்போது ம்மை அழைக்கின்றோமோ அப்போது நீர் வரவேண்டும். நல்லது! இப்

போது நீர் போகலாம்.'' என உரைத்துத் திக்பாலகர்களாகிய ரஸானரையும், மற்றைய பதினொருகோடி ருத்திரர்களையும் இவ்வாருக அனுப்பிவிட்டுச் சிங்க முகனையும், தாரகனையும் அப்போது வீற்றிருக்கச் செய்து பிறகு தேவர்க ளில் ஒவ்வொருவருக்கும் பணி ஏற்படுத்தினன். வெற்றிலைத் தம்பலம் உமி ழ்கின்ற பாத்திரத்தை இந்திரன் கையில் கொடுத்தும், அக்னி, யமன் இவ்விரு வர்களுக்கும் குடி நீரெடுக்கும் வேலையையும், நிருதிக்கு அவன் தனது இனத் தோனுகையால் வைதிகானுஷ்டானுதிகளுக்குரிய ஜலபாத்திரமாகிய கெண்டி யையும், வருணன் கையில் விசிறியையும், வாயுவின் கையில் சாமரத்தையும், அதேவிதமாய்க் குபேரன் கையில் பாக்குப்பையையும், சந்திர சூர்யர்களின் கையில் குடையையும், முந்தித் தேவர்களால் மிகவும் துன்பம் அடைந்து வந்த அசுரேந்திரன் கையில் அவர்களை வேலை வாங்குவதற் குரிய மிகவும் நேர்த்தியான கத்தியையும் கொடுத்து, பற்பல கீதங்களில் மிகுந்த சதுரர்க ளான வித்தர்கள், வித்தியாதரர்கள், கின்னரர்கள், கருடர்கள் இவர்கள் கீதங் கள் பாடவும், ரம்பை, ஊர்வசி, மேனகை இவர்கள் நாட்டியம் செய்து சே விக்கவும், இவ்விதமாகச் சிங்காதனத்தில் வீற்றிருந்து சுற்றிலும் காத்து நிற்கின்ற தேவர்களை நோக்கி, அப்போது தேவராஜனுகிய இந்திரனுக்கு உரைத்ததாவது:—'' அடா இந்திரா! நீ மற்றைய தேவர்களோடுகூட, 'நாம்' என்ற வீண் ஆண்மையை எல்லாம் தூரத்தில் விட்டு, நெஞ்சத்தில் அச்சங் கொண்டு, நமது மனிதர்கள் திட்டம் இடுகிறபடிப் பயிர்த்தொழில் வேலையை யும் தினந்தோறும் நடத்தி வருவாய்.'' என்றனன். பிறகு சூரன் அக்னி தேவனை நோக்கி உரைத்ததாவது:—'' கேளாய் அக்னியே! அசுரர்கள் உன்னைத் தொட்டாலும் அவர்கள் சூடுணராமல் ஜாக்கிரதையாய் அவர்களுக் குச் சமயல்செய்து கொண்டு இப்பட்டணத்திலேஇரு. அடா இயமா! நீ அசு ரர்களுடைய பார்வைக்குச் சாந்த உருவமாக விருந்து கொண்டு, அவர்களு க்குச் சாவுநேரிடச் செய்யாமல் ஜாக்கிரதையாய் இவ்விடத்திலேயேயிரு. '' அடா! வருணு! நீயோ வென்ருல் எப்போதும் நம்முடைய விப்பட்ட ணம் முழுவதும் வெகு ஜாக்கிரதையுடன் மிகுந்த குளிர்ச்சியும் நல்லவாசனை பொருந்தியதுமான தண்ணீரை யெப்போதும் தெளித்து வரல் வேண்டும்! '' அடா! வாயுவே! நீ இளங்காற்றை வீசிக்கொண்டும், நல்லவாசனையும் குளிர்ச்சியும் பொருந்திய நீர்த்தி விலைகளை நாள்தோறும் நமதழகிய மங்கையர் களின் கொங்கைகளின் மீது வீசியும், மேலும் நீ முற்றும் நெஞ்சத்திலச்ச முற்றவனுக வெங்கும் குப்பை கூட்டிவருதல் வேண்டும்.'' ''அடா! குபேரா! நீ சங்கநிதி பதுமநிதிகளைத் திறந்து எப்போதும் ஸாவதானத்துடன் நமது தூதர்களுக்கு வேண்டியமட்டும் திரவியம் கொடுத்து வருதல் வேண்டும்; ''வாராய்! சூரியா! நீ குளிர்காலத்திற்கூட நமது நாயகிகள்மீது உஷ்ண மான வியர்வைத் திவிலைகளால் அலங்கரித்துக் கொண்டு கோபுரவாசலிலிரு ந்து வெயிலிறைத்து வருதல் வேண்டும்.'' ''அடா! சந்திரா! நீ யெப்பொழு தும் பூர்ணக்கலையோடிருந்து நமது மனோகர்வமுள்ள ஸ்திரீகளின் மனதையி ளக்கி (அவர்கள் நம்மை வலிய ஆலிங்கனம் செய்யும்படி) நீ காம தூது பண்ணிவருதல் வேண்டும்.'' '' கேளாய்! பிரம்மாவே! நீயுனது மைந்தர்க

ளாகிய பத்து பிரஜாபதிகளுடன்கூட இங்கேயிருந்து சுபதின திதி வாலாறு களைப் பஞ்சாங்கமுறைப்படி சொல்லிவருவாய்.'' என, இவ்விதமாக, மகாசதுர ராகிய சூரபத்தும னப்போது பலபல தேவர்களுக்கு அவர் அவர்களுக்குரிய ஊழியங்களைச்சொல்லிவிட்டு, குருவாகிய சுக்கிராசாரியனால் குசோதகங்களால் புரோக்ஷிக்கப்பட்டவனாகிச் சிங்காதனத்தின் மீது சுகமாக வீற்றிருந்தனன். கேளீர் சௌனகாதி முனிவர்களே! சிரேஷ்டனாகிய சூரபத்தும னிவ்வாறாக நாள்தோறும் இந்திரன் முதலிய தேவர்களாலும், அசுரத்திரள்களாலும் தன தூழிய மெல்லாம் முடித்துவரப் பெற்றவனாகவும், வேறெதிரற்றவனாகவும், மிகுந்த இலக்ஷ்மீ விலாசத்தைப் பெற்றவனாகவும் தம்பிகளோடு கூட என் றும் ஸார்வபௌமனாக (ஒருகுடையின் கிழாக) அரசு செலுத்திவந்தான்.

## 9 அத்தியாயம்.

பிறகு மிக அறிவுடையோனான சூரபத்மன் மனதுக்கு ரம்யமான விசுவ கர்மன் பெண்ணாகிய பத்மகோமளையைக் கலியாணம் செய்துகொண்டான். அதன்மேல் அவளுக்கு மிகுந்த பலிஷ்டர்களான பானுகோபன், அக்னிமு கன், இரணியன், வஜ்ரபாஹு என்னும் பெயர்களையுடைய நான்குபிள்ளைகள் பிறந்தனர். மேலும் சூரனவ்விதமாகவே அநேக தேவ கன்னிகைகள், அசுர கன்னிகைகள், ராக்ஷச கன்னிகைகள், கந்தர்வ கன்னிகைகள், வித்த கன்னிகைகள், வித்தியாதர கன்னிகைகள், நாக கன்னிகைகள் கிம்புருட கன் னிகைகள், கருட கன்னிகைகள், கின்னர கன்னிகைகள், ஆகிய இவர்களையும் மணம்புரிந்து, கேளீர் சௌனகாதி முனிவர்களே! அப்பெண்டிர்களிடமாக மஹாவீர்ய பராக்ரமங்களையுடைய மூவாயிரம் ஸங்கியைகொண்ட பிள்ளைக ளைச்சீக்கிரமாகப்பெற்றனன். மஹாவீர்யமுடைய சூரனானவன் உடனே சிங்க முகன், தாரகன், இருவர்களையும், ஒவ்வொருவருக்கும் இரண்டிரண்டு கோடி சைன்யங்களுடன் முறையே ஆஸுரபுரியிலும், பெரிதான மாயாபுரியிலும் வசிக்கச்செய்தான். பிறகு சிங்கமுகன் அவ்வாசுரபுரிக்குச்சென்று, யமன் கன் னியாகிய விமூதிகை என்பவளை மணம்புரிந்து அவளிடமாக மஹாசூர னென்ற ஓர் மைந்தனை அடைந்தான். இதேவிதமாக இன்னும் பலகன்னிகை களைக்கொண்டு நூறுபிள்ளைகளைப் பெற்றனன். அங்ஙனமே தாரகனும் அப் போது ஸௌரிகை என்ற நிருதி கன்னியை மணந்துகொண்டு மிகவும் தருமத் தில் பற்றுதல் உள்ள அசுரேந்திரன், என்ற ஓர் மைந்தனைப்பெற்று அந்நோத் தியான மாயாபுரியில் சௌக்யமாக வசித்துவந்தனன். பிறகப்போது சூரபது மன் தீவுதோறும் பல அசுரர்களையும் இரண்டுகோடி சைன்யங்களையும் அனு ப்பி, பாதாளம், பூமி, ஸ்வர்க்கம் இவைகளில் ஆறாறுகோடி சைன்யங்க ளோடு பற்பல வகுப் பசுரர்களையும் ஏற்படுத்தி வைத்தான். பின்பு சூரபது மன் வீரமாகேந்திர புரத்துக்குச் சுற்றுப்புரங்களில் உள்ள எட்டுப் பட்ட ணங்களிலும் கஜாநநன் (யானைமுகன்), துரகாஸியன் (குதிரைமுகன்), யாளிவக் திரன் (யாளிமுகன்), பல்லூகவக்திரன் (கரடிமுகன்), மஹா பலவானாகிய வியாக்ரவக்திரன் (புலிமுகன்), வராகமுகன் (பன்றிமுகன்), ஸிம்மவக்திரன் சிங்கமுகன், கவயாஸியன் (பசுப்போன்றதான கவயம் என்ற மிருகத்தின்

முகத்தையுடையவன்) ஆகிய மஹாவீரர்களும், மஹாபராக்ரமசாலிகளுமான இவ்வெட்டுப் பெயர்களேயும் எண்பதினுயிரம் சைன்யங்களோ டனுப்பினன். மேலும் சூரனப்படியே தன் பட்டணத்திற்குள் லக்ஷம் சைன்யங்களேயும், அந்தேவிதமாகக் கோட்டைவாசல்கள், கோட்டைமதில்கள், முதலிய விடங்களிலும் ஸ்தாபித்தும், மிகுந்த வீர்ய பராக்ரமங்களேக் கொண்ட துர்க்குணன் தருமகோபன், துர்முகன், சங்கபாலன், மர்மங்களே அறிவோனுன வஜ்ரபாலன், மஹிஷன் இவர்களே மந்திரிகளாக வைத்துக்கொண்டு அவர்களோடு சூரன் அரசு முறைசெலுத்திவந்தனன். தேவேந்திரன் முதலிய தேவர்களும் தவத்தையே பொருளாய்க்கொண்ட முனிவர்களும், நாள்தோறும் சூரன், சிங்கமுகன், தாரகன் இவர்களின் பிள்ளேகள், மந்திரிகள் இவர்களேக் கண்டு அவர்களால் ஏவப்பட்டுவந்த ஊழியங்களேச் செய்துகொண்டு கருடனிடத்துச் சர்ப்பங்கள்போல் பயந்து நடுங்கி யொடுங்கி இருந்துவந்தார்கள். இப்படி இருக்கையில், ஒருநாள் சூரன் இந்திராதி தேவர்களேப்பார்த்து, "ஒ தேவர்களே! நீங்கள் சிக்கிரத்தில் மிகுதியான மீன்களேப் பிடித்து வரவேண்டும்" என, அப்போது தேவர்கள் மிகவும் மனதில் வியாகூலமுற்று, "நல்லது அப்படியே பாக்கியம்" என்று உரைத்துவிட்டு எல்லோர்களும் கூடிக் கடற்கரைசென்று தக்ஷப்பிரஜாபதியின் யாககாலத்தில் தாங்கள் செய்யலான சிவத்த்துரோக பாவத்தை மனதில் நினைத்து நினைத்து, மிகப்பயந்தவர்கள் ஆயினர். அப்போது இந்திரன் வருணனேநோக்கி, "நீர்விரைவில் கடலினின்று திரண்ட மீன்களேப் பிடித்து வருதல்வேண்டும்." என வருணனும் மிகுந்த பயத்தோடுசென்று அனேகம் அயிரைமீன்கள், பெரிய மீன்களே விழுங்குகின்ற திமிங்கில மீன்கள், அத்திமிங்கிலங்களே விழுங்கலுற்ற மகரமென்ற சுருமீன்கள் இவை முதலான இன்னும் பலவகை மீன்களேயும் பிடித்தோர் நொடியில் கடலினின்று கரையேற்றினன். யமன் அவைகளது உயிரை வாங்கினன். சூர்யன் அவைகளே உலர்த்தினன். பிறகவைகளே யாவரும் நாகபாசத்தினுற் கட்டிச் சிக்கிரமாகச் சூரன் விடுதிசேர்ந்தார்கள். அப்போது சூரன் அவர்களே பார்த்துச் சிரித்து, "ஒ தேவர்களே! நீங்கள் நாள்தோறும் இவவாருகவே திரண்ட மீன்களேக் கொண்டு வரல்வேண்டும்" என்றுரைத்தனன்.

கேளீர் சௌனகாதி முனிவர்களே! பூர்வத்தில் இந்தப் பிரகாரமாகத் தேவர்கள் மிகுந்த பயத்தோடு நடந்துகொண்டுவந்தார்கள். என, முனிவர்கள் சூதரைக்கேட்டதாவது:—"ஒ மஹாபுத்திசாலியான சூதமுனிவரே! பூர்வத்தில் உங்களால் பிரஸ்தாபிக்கப்பட்ட அஜமுகி என்பவளேப்பற்றிய சரித்திரம் முழுமையும் உள்ளபடி எடுத்துரைத்தல்வேண்டும்" என சூதர்சொல்கின்றார்.

கேளீர்! பிராம்மண உத்தமர்களே! யான் கூறுகின்ற அவளதுசரித்திரத்தைக் கேளீர்கள்! அவள் மஹா கொரமுடையவளும் மஹாபாவியும் மிகுந்த காமத்துக்குள்ளானவளும், மிகவும் சூதுள்ளநெஞ்சத்தை யுடையவளும், எப்போதும் எங்கும் அலேந்து திரிகின்றவளும், பதினுன்கு லோகங்களிலும் தனது மனம்போனபடி சஞ்சரிப்பவளும், அங்கங்குள்ள பிராமணர்கள், முனிவர்கள், மற்றதேவர்கள், அசுரர்கள், அரக்கர்கள் இவர்களில் அழகினரானுலும், அழகில்லாராலும், வாலிபனுனுலும், வயதுசென்றவரானுலும், யாவ

ரானுலும் வழியில் நேர்கின்றவர்களில் தினமொன்றுக்கு இவ்வாறாக ஆயிரம் பெயர்களைச் சேர்ந்துவருவது வழக்கம். அதேவிதமாக அவள் மார்க்கத்தில் சந்திக்கக்கூடிய அழகிகளான பாலியஸ்திரீகள், யௌவன ஸ்திரீகள், கன்னிகைகள் இவர்களைப் பலவந்தமாகக்கட்டி அவள் தன் அண்ணன்மாருக்குக் கொண்டு வருவாள். மேலும் அவள் யாகங்கள், தவங்கள் இவைகளுக் கெல்லாம்கெடுதி செய்துகொண்டேவந்தாள். இவ்விதமாக அவள் மிகக்கொடூரமான கிருத்தியங்களைச் செய்துகொண்டிருக்கும் அளவில் ஒருக்கால் முனிவர்களிற் சிறந்த துர்வாஸமஹாரிஷியிடஞ் சென்றுரைத்ததாவது:—“வாரீர் தவசிகளில் சிரேஷ்டரான துர்வாஸ முனிவரே! யான் மக்களைப்பெறுவதற்காக இங்கும்மிடம் வந்தேன். நீர் என்னோடுகூட மிகுந்த போக சுகத்தை அனுபவித்தல் வேண்டும்.” என முனிவர் அவ்வசனத்தைக் கேட்டு மிகப்பயமுற்றவராகி, “அடிபேதாய்! யான் தவசியாதலால் அதற்குத் திறமையுள்ளவன் அல்லன்; நீ சென்றுவிடு” என, உரைக்க, அவரை அவள் அதன் மேல் மிகப்பலவந்தமாக விழுந்தணைத்து அவருடைய அதரோஷ்டங்களைப் பானம்பண்ணிப் பிறகவரைக் கீழேதள்ளி மிகுந்த வலிமையுடன் ஸுரதம் பண்ணினள். அவர்களுடைய கலவியின் வலிமையால் சத்துருக்களை வெல்லலுற்ற இரண்டு மைந்தர்கள் பிறந்தனர். தந்தையைக் கொண்ட இல்வலன் தாயைக் கொண்ட வாதாபி ஆகிய துராத்மாக்களான இவ்விருவர்களும் ஒருநாள் தந்தையைப் பார்த்து, “ஐயா! உமதெல்லாத் தவத்தின் வலிமைகளையும் எங்களுக்கு ஈந்து விடல்வேண்டும்.” என்றுரைக்க அப்போது முனிவர் கோபம் கொண்டு அவர்களை நோக்கி, “அடா துராத்மாக்களான மூடர்களே! தவத்தின் பயனை ஏன் கொடுப்பது?” என்றுரைத்து அவர்களைப் பாராமல் நிஷ்டையில் இருந்து விட்டார். பிறகு அப்பாவிகள் அப்போது அம்முனிவரைக் கொல்ல யத்தனிக்க அதுகண்டு முனிசிரேஷ்டரும் கோபத்தினுல் பரவசராகி அத்தகைய அவர்களை நோக்கி, “அடா துராத்மாக்களே! நீங்கள் இவ்விதமாகவே ரிஷிகளிடத்தில் அகிருத்தியங்களைச் செய்து நாசம் அடைவீர்கள்.” என்று முனிசிரேஷ்டர் சபித்தனர். கேளீர்! செஸனகாதி முனிவர்களே! அதன்பிறகு இல்வலன் பிரம்மாவைக் குறித்து மிகவும் நியமத்தோடுகூட வெகுகாலம் யாகம்செய்ததில் பிரம்மனுடைய அருளைப் பெறுவதற்காக வில்வலன் வாதாபியை அனேகங் கண்டங்களாகச் சேதித்து அக்னியில் ஓமம்செய்தனன். அதன்மேற் பிரம்மனும் துரிதத்தில் ஆவிர்ப்பவித்து, “ஓஹோ! வாராய் பாவமற்ற அசுரா! யாம் இப்போது உன்றனக்குப் பிரசன்னராகி விட்டோம். உனக்குவேண்டிய அபீஷ்டத்தை அருளுகின்றோம். அதை இப்போதே சொல்வாய். யாம் இப்போது உரைத்தது சத்தியம்.” என இல்வலன் கேட்டுக்கொண்டது:—“ஓ சுவாமி! ஆட்டுருவமாய் நிற்கும் வாதாபியை யான்கொன்று, அப்படி இறந்தவனை எப்போது கூப்பிடுகின்றேனே அப்போதவன் நிஜஉருவத்தோடு வருதல்வேண்டும்.” என பிரம்மனும் அவ்வாறே வரனளித்துப் பிறகு தமதிடம் சென்றனர். பிறகு மஹா வீரர்களான அவ்விருவர்களும் சூரபத்மனிடம் சென்று மிக அன்புடன் வந்தனித்துத் தங்கள் விருத்தாந்தங்களை உரைத்து அங்குச் சிலகாலம் வசித்துவிட்டுப்

பிறகு குடகுநாட்டுக்குச் சென்று அங்குள்ள நேர்த்தியான ஆரண்யத்தில் மனதுக்கு ரமணியமான ஓர் ஆச்சிரமம் கட்டி அங்கிஷ்டத்தின்படி சுகங்களை அனுபவித்து வசித்துவந்தார்கள். வழிநடையோரத்தில் குடியிருந்துவந்த அவ் வசுரர்கள் வழிப்பிரயாணிகளான பிராமணர்கள், ரிஷிகள் இவர்களைக் கண்ட வுடன், தாங்களும் ரிஷிவேடம் எடுத்துச் சென்று அவர்களை வந்தனித்து அர்க்கியபாத்தியாதிகளால் உபசரித்துச் சிறந்த ஆஸனத்திலும் இருக்கச் செய்து பிறகவர்களால் அனுமதி கொடுக்கப்பட்ட பிறகு தாங்களும் தரை மீது உட்கார்ந்து, “ஓ தவத்தைத் தனமாகக்கொண்ட பிராமணோத்தமர் களே! இன்றைக் கெமது பிதுர்பூஜை எங்ஙனம் நிறைவேறும் என்று சிந்தையினால் பரவசங்கொண்டிருக்கையில் நீங்கள் வந்தது எங்களது பரம பாக்கியமே.” என்றனர்.

## 10 அத்தியாயம்.

இல்வலன் மேலும் சொல்வதாவது :—ஓ பிராமணோத்தமர்களே! இப்போதுங்களால் இப்பிரதேசங்கூட நன்கலங்கரிக்கப்படலாயிற்று. ஆகை யால் எனது சுகிருதத்தின மஹிமையால் யானே உலகினில் மிகுந்தபாக்கிய சாலி. நீங்கள் இங்கு போஜனம் செய்வதற் கேற்றுக்கொள்ள வேண்டும்.” என்றுரைத்துப் பாவம் செய்தலையே தொழிலாகக் கொண்ட அவ் வில்வலன் அவர்களைச் சாப்பிடும்படி திட்டம்செய்து, ஆட்டுருவத்துடன் இளம் புல் தரைமீது மேய்ந்துக் கொண்டிருக்கும் வாதாபியை அழைத்து அப்போதே அவ்வாட்டைக் கொன்று நெருப்பில் சமைத்து உடனே பிராமணரைக் கூப் பிட்டு ஓர் க்ஷணத்துக்குள் அவருக்குக் கழுத்தளவு நிரம்பச் சாப்பாடிட்டுப் பிறகு ஆச்சிரமத்துக்கு வெளியேவந்து, “அடா வாதாபி! வா வா! என்று ரக்கக் கூப்பிடுவான். கேளீர் சௌனகாதி முனிவர்களே! உடனே வாதாபி அந்தப் பிராமணர் வயிற்றைக் கிழித்து அவரது ஏழுயிர்நாடிகளையும் பற்றிக் கொண்டு துரிதமாகப் பரபரப்போடு ஓடிவருவான். அப்பிரம்ம ஹத்திசெய் வோனான துராத்மாவானவன் இவ்வாறாகவே நாள்தோறும் செய்துகொண்டு அங்கிருந்து மனம்கொண்டபடி யெல்லாம் செய்யத்தகாத துர்க்கிருத்தியங்க ளைச் செய்துவந்தான். கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அஜமுகியின் சரித்திரம் இவ்விதந்தான் என்பதை உங்களுக்கு உரைக்கலானேன். பிறகு மறுபடியும் சூரனுடைய சரித்திரத்தைச் சொல்கிறேன் கேளுங்கள்.

சூரபத்மன் இந்திரவிமானத்தின் மீதேறிக்கொண்டு நாள்தோறும் மண் டலங்களுக்குப்போய் வருகையில் ஒருநாள் பாதாளலோகத்துக்குச் சென்று அங்குப்பகலில் இருந்து பிறகிரவில் வீரமாகேந்திரபட்டணம் வந்து விடுவான். அவ்வாறாகவே மறுநாள் பூலோகம் சென்று அங்கும் பகலிருந்து பிறகு முன் போல் உடனே தனது நகரம்சேர்வான். இதேவிதமாக அதற்கு மறுநாள்புவர் லோகம்போய்வருவான். மேலும் அப்படியே சந்திர மண்டலம், புதமண்டலம் சுக்கிரமண்டலம், சூரியமண்டலம், செவ்வாய்மண்டலம், குருமண்டலம், சனி மண்டலம், பிரம்மலோகம், அப்படியே விஷ்ணுலோகம் இவற்றிற்குச் சென்று அங்குள்ள விநோதங்களைக் கண்ணுற்று அந்தந்த நாட்களில் அங்

கங்குப் பகலில் தங்கி இரவுதோறும் இவ் வீரமாகேந்திர பட்டணம் வந்து சேர்வான். இப்படி இருக்கையில் ஓர் நாள் இச் சூரபத்மன் இந்திராணியோடு புணர்வதற்கு மிகுந்த காதல்கொண்டவனுகி, காமன் அம்பினுல் அடியுண்டு தவித்துச் சேனுதிபதிக்குக் கட்டளை யிட்டதாவது:—" வாராய் வீரா? இந்திரனைக் கட்டி யுருட்டி இந்திராணியை நம் பட்டணத்துக்குச் சீக்கிரமாய் அழைத்துவா என்றனன். உடனே அப்போ தொன்பது கோடி அசுர ஸ்திரீகள் புறப்பட்டார்கள். அவர்கள் வருவதைக் கேட்டு இந்திரன் இந்திராணியோடு கூட மிகப் பயந்து மனநடுக்கம் உற்றவனுக விரைவில் பட்டணத்தை விட்டுப்புறப்பட்டு ஓடிச் சென்றனன். பிறகு இந்திராணியை ஏற்றிப்போக வந்த ஸாரதியானவன் அசுரஸ்திரீகளோடு தேவலோகம் சென்றனன். பிறகு அச்சாரதி அக்குள்ள தேவர்களை மிக அடித்துத் துன்பப் படுத்திக் கேட்கையில் இந்திரன் ஓடி விட்டதைக்கேட்டு உடனே சூரனிடம் சென்றனன். அப்போது மஹாபலிஷ்டனுன சூரனும் அவன் முகமாகச் சங்கதிகளை யறிந்து கொண்டடனே சகல லோகங்களிலும் சென்று தேடும்படி வேவுகாரர்களைத்திட்ட மிட்டனன். கேளீர் சௌனகாதி முனிவர்களே! பின்பப்போது தேவர்கள் இந்திரனுடைய பிரிவினையாலே தேவலோகத்தில் ஐசுவரியங்களை இழக்கலாகி மிகவும் துக்கமுற்று, விஷ்ணுலோகத்திலிருந்த இந்திரன் மைந்தனுன ஜயந்தனுக் கறிவித்தார்கள். அப்போது சௌனகாதி முனிவர்கள் சூதரை வினவியதாவது:—"ஓ தவசிகளிற் சிறந்த சூத முனிவரே! ஜயந்தனை அப்போது யாது நிமித்தம் சுவர்க்கலோகத்தை விட்டு விஷ்ணு லோகத்தில் இருந்தனன் என்பதை எங்களுக்கு எடுத் துரைத்தல் வேண்டும்." என சூதர் கூறுகின்றுர்:—"வாரீர் பிராமணுேத்தமர்களே? நீங்கள் எல்லோர்களும் ஜாக்கிரதையுடன் கேளீர்கள்! பூர்வத்தில் இந்திரன் தம்பியான உபேந்திரன் தேவேந்திரனுேடு கூட மற்றெங்கும் அச் சூரனிடத்துப் பயத்தினுல் மிக நடுக்கமுற்றிருப்பதைக்கண்டு, தேவேந்திரன் இந்திராணியோடு கிளியுருவெடுத் துச் செல்லுங்கால் தான் விஷ்ணுலோகத்துக்குச் சென்று அன்று முதல் அங்கிருந்து வந்தான். தேவர்கள் அப்போ தவனை அழைத்துக் கொண்டு அவனுடன் சுவர்க்கலோகம் வந்தார்கள். ஜயந்தனே தந்தையைப் பற்றிய துக்கத்தினுல் மெய் மிகவும் மெலிய லுற்றவனுகி, அப்போது தேவலோகத்தில் இருந்து கொண்டே, அசுரர்களது ஊழியங்களைச் செய்து வந்தான். இவ்விதமாகச் சிலகாலங் கழித்த போது நாரத முனிவர் வந்தனர். அப்போது அவன் அம் முனிச்சிரேஷ்டரைக்கண்டு பத்தியோடு தெண்டனிட்டு உரைத்ததாவது:—ஓ மஹாரிஷியே! தேவரீருடைய பொன்னடிகளைக் கண்டமாத்திரத்தில் யான் மிகுந்த பாக்கியவானுயினேன். பெற்றோர்கள் இல்லாததனுல் என்னை மிகுந்த துக்கம் பாதிக்கின்றது. என உரைத்து விநயத்தினுல் வணக்க முற்று நின்ற அந்த ஜயந்தனை நோக்கி நாரதர் கூறுகின்றுர்:— வாராய் ஜயந்தா! இப்போது சோகத்தைவிடு. உங்களது கோரிக்கை நிறைவேறப் போகின்றது. இன்னும் கொஞ்ச காலத்திற் கெல்லாம் உனக்கும் பெற்றோர்களின் சேர்க்கை உண்டாகும். கேளாய் தவசிரேஷ்டா! யாவனுல் எங்கு என்ன கருமம் எவ்வளவு செய்யப் படுமோ, அவ

ரால் அங்கங்கே அவ்வளவே அதன்பயன் அனுபவிக்கப் பட்டே தீர வேண்டும் என்பது நிச்சயம். உன்தந்தையான இந்திரனோ என்றால் இந்திராணி தேவியுடன் பூலோகம் சென்று அசுரர்கள் நாசமடைவதற்காக ஸ்ரீசிவபிரானைக் குறித்துத் தவம்புரிகின்றான். ஆகையால் நீ இப்போது சகல தேவர்களுடனும் வெகு புத்திசாலித்தன்மையோடு ஜாக்கிரதையாக அவர்களுடைய ஊழியத்தை எப்போதும் செய்து கொண்டிரு. என்று உரைத்து விட்டு, ஸ்ரீ நாரதர் துரிதமாக வானம் சென்று விட்டார். கேளீர் சௌனகாதி முனிவர்களே ! இந்திரனோவென்றால் பூலோகத்தில் சிதம்பரத்துக்குச் சமீபத்தில் உள்ள சீர்காழி என்ற நேர்த்தியான பட்டணத்தின்கண் ஸ்ரீமஹாதேவனை மிகு தியாகப் பூஜைசெய்து வருகையில் சூரனுடைய வேவுகாரர்கள் தேடித் திரிவதைத் தெரிந்துகொண்டு, இந்திராணியோடு கூடத் தோட்டத்தின் மீதுள்ள மரங்களின் இடையில் மூங்கில்உருவமாகக் கபடவேடந்தரித்துக்கொண்டான். அனாவிருஷ்டிகாலம் நேரிட்டதால் மழை பெய்ய வில்லை. அங்குள்ள விருக்ஷங்கள் எல்லாம் மழையில்லாததனால் வாடலுற்றன. ஓஹோ! துர்க்கிருத்யங்களுடைய மகிமையைப் பிரமனாலும் தாண்டமுடியாதல்லவோ ! நாம் இங்குவந்த மாத்திரத்தில் மரங்களும் மிகக் காயலுற்றதே ! இவ்விதமாக இந்திரன் மிகவும் சிந்தாபரவசனாகி இருக்கும் அளவில் துக்கங்களை ஆற்றலுற்ற சுபமான ஓர் அசரீரிவாக்கு தொனிக்கலுற்றதாவது:—'வாராய் தேவேந்திரா! நீ சோகத்தை விட்டு விடு. இன்னும் கொஞ்சகாலத்திற் கெல்லாம் ஒரு சிறந்த நதி வரலாகி விருக்ஷங்கள் எல்லாம் முன்போலவே சிறகுகள் எல்லாம் உதிரலுற்றும்பின் நன்றாகச் செழிக்கலுமாகும்.' என இவ்வாறாகிய அசரீரி வாக்கை இந்திரன் அப்போது செவியுற்று, கேளீர் ! சௌனகாதி முனிவர்களே ! உடனே துக்கத்தை விட்டு மிகவும் சந்தோஷத்தை அடைந்தான்.

இங்ஙனமாக, அதேசமயத்தில் நாரதமுனிவர் துரிதமாக விந்திய பர்வதத்திற்கு வந்தனர். அப்போதவ் விந்தியனும் உடனே அங்கு வரலுற்ற முனிவரைத் தண்டம்செய்து அர்க்கிய பாத்தியாதிகளை அளித்து அவரை ஆஸனத்தில் வீற்றிருக்கச்செய்து, " ஓ ! முனிசிரேஷ்டரே ! தேவரீரைத் தரிசித்த மாத்திரத்தில் மிகவும் தன்னியனானேன் " என உரைத்து நின்ற விந்தியனை நோக்கி நாரதன் உரைத்ததாவது:—" பெரியோர்களால் வெகுமதிக்கலுற்ற கிரீந்திரா ! ஸௌக்கியமா ? யாம் இப்போது மஹாமேருகிரியிலிருந்து உன்னிடம் வந்தோம். அம் மேருகிரி உரைத்த ஓர் வார்த்தையைக் கேட்டதில் எனக்கே ஆச்சர்யமாக இருக்கின்றது. அப்பனே விந்தியா ! மிகவும் அப்பிரியமான அவ்வசனத்தையும் முன்னம் யான் எவ்வாறு கூறுவேன் ? ஆகிலும் நீ நம்மீது மூபற்சியுடன் குருவிடத்திலுள்ள மரியாதையை வகிக்கின்றதானது உனக்கு உரைக்கும்படி நம்மைத் தூண்டியது. அஃதாவது:—தினந்தோறும் சந்திர சூர்யர்கள் நக்ஷத்திர ராசிகளுடன் எப்போதும் என்னையே பிரதக்ஷணம் செய்துகொண்டு மன அச்சத்தோடு செல்கின்றனர். மேலும் திரிபுரர் [illegible]ரித்த ஸ்ரீ ச[illegible]வுக்கு யான் வில்லாயினேன். ஸகலதேவர்களும் [illegible] தெஆகா[illegible]ரிவிக்கி[illegible]றார்கள். ஆகையால், பெருமையால் எனக்கு ஒப்பான பர்வதம் உலகின்கண் யாதும் இல்லை. என்று மேருகிரி உரைக்க

லாயிற்று.'' என, விந்தியனும் கோபத்தினுல் உதடு துடிதுடிக்கலுற்றவனுகி வசனம் உரைத்ததாவது:—"கேளீர் முனிவரே! பூர்வத்தில் ஸ்ரீ பரமேசுவரன் தன்னை வில்லாக வளைத்ததை மிகவும் மூடனுகிய அம்மேரு வீணுண்மை கொண்டு ஓர் பெருமையாகப் பிதற்றுகின்றுன். மேலும் தேவர்கள் அதன் மேலேறி மிகவும் துகைத்துக்கொண்டு நாள்தோறும் வாசம் செய்கிறுர்கள். தவிரவும் நாஸிம்மத்தை ஹதம்செய்த ஸ்ரீ சர்வேர்வர மூர்த்தியினுடைய நுகக்கண்ணில் ஒருளுந்தளவாக மட்டில் அவன் பற்றலான நிலைமையை அறியவில்லையோ!'' என இவ்வாருன விந்தியன் வசனங்களைக் கேட்டு, நாரதர் அவனுக்கு ஆசீர்வாதம் அளித்துவிட்டுக் கேளீர் சௌனகாதி முனிவர்களே! அப்போது ஆகாச மார்க்கமாகத் துரிதத்திற்சென்று விட்டனர். பிறகு அவ்விந்தியனே மிகவும் கோபம் உடையவனுகி, அண்டத்தளவு வளர்ந்து விட்டனன். அப்போது ஆகாச மார்க்கத்தில் சூரிய சந்திரர்களுடைய சுற்றுதல் அற்றுப்போனபடியால் பூமியில் ஓர்பக்கம் இருளால் மூடப்பட்டும், மற்றைய பக்கம் எப்போதும் சூர்யனுல் கொளுத்தப்படவும் ஆயிற்று. ஸகல ஜனங்களும் அப்போது காலக்குறிப்புக் கிடமின்றி, யாதொரு தொழிலும் அற்று, அழியலானதைத் தேவர்கள் சிந்தித்து, இது விந்தியனுடைய காரியந் தானென்று நிச்சயித்து, விரைவில் ஸ்ரீ அகஸ்திய முனிவரிடம் சென்று, அம்முனி சிரேஷ்டரை மேருகிரியின் குகைக்குள் கண்டு, "ஓ தவசிகளில் சிரேஷ்டரான அகஸ்தியபகவானே! தேவரீர் ஸகல சமுத்திரங்களையும் உள்ளங்கை நீராக ஆக்கினவர் அல்லவோ! பூர்வத்தில் தேவரீரால் இந்த ஜகங்கள் அனேக முறை நன்குரக்ஷிக்கப்பட்டிருக்கின்றது. இப்போது விந்தியனுடைய கர்வத்தினுல் உலகில் ஓரிடத்துச் சூரியனற்றும் மற்றவிடத்தெப்போதும் சூரியனுள்ளது மாகியபடியால் எங்கும் தொழிலற்று எல்லாம் அழியலாகின்றது. யாகங்கள் அற்றுப்போனதால் எங்களுக்குப் பசி மிகவும் வருத்துகின்றது. ஆகையால் தேவரீர் விந்தியன் கர்வத்தைப்போக்கி ஜகங்களையும் அதிலும் விசேஷமாக எங்களையும் ரக்ஷித்தருளல் வேண்டும்.'' என்று தேவர்கள் அப்போது முறையிட்டார்கள்.

## 11. அத்தியாயம்.

பிறகு அகஸ்திய முனிவரும் அப்படியே நல்லது என்று தேவர்களை அனுப்பிவிட்டு, ஹிருதய கமலமத்தியில் விளங்கி நிற்கும் ஸ்ரீமஹாதேவனைத் தியானம் செய்து, ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி பிரத்தியக்ஷமானவுடன் முனிவர் கேட்டுக் கொண்டதாவது.—"ஓ பகவானே! ஸர்வஞ்ஞா! அடியார்க்கு நேசனே! சங்கரா! பிரபுவே! தேவரீரது கருணைவசத்தினுல் இப்போது விந்தியனுடைய கர்வத்தை அடக்குவதற்கும் உலகங்களைக் காப்பதற்குமான வலிமை என்னக்குண்டாகுதல் வேண்டும். மேலும் தென்றிசைக்குச் செல்லப் போகின்ற எனக்கோர் புண்ணிய தீர்த்தம் தந்தருள வேண்டும்.'! என உரைத்துப் பக்தியால் வணக்கம் உற்று நின்ற அகஸ்தியரை நோக்கி, ஸ்ரீ ஜகதீசன் திருவாக்கருளியதாவது:—ஓ அகஸ்திய முனிவரே! உமக்கு மிகுந்த வலிமையுண்டாகக் கடவது. மேலும் நதிகளிற் சிறந்த காவேரியை நீர்குடத்தில் வைத்துக் கொண்டு போக

வேண்டும்.'' என்றுரைத்த ஸ்ரீ பகவானை நோக்கி, காவேரி கூறியதாவது:— ''ஓ பரமசிவா! யான் இப்போது அப்புருடருடன் எவ்வாறு செல்வேன்?'' என, "கேளாய் மாதரசே! முனிவர் உன்னைவிட்டு விடுவார். பின்பு நீதானாக வே செல்லலாவாய்.'' என உரைக்க, காவேரியை அகஸ்தியரோடு சேர்த்து விட்டு ஆகாயத்தை அடியார்களுக்கு அபயம் அளிக்கின்ற பரமசிவன் துரிதத்தில் மறைந்தருளினர். பிறகு தவசிகளிற் சிறந்த முனிவரும் விந்தியகிரியை நோக்கிப் புறப்பட்டு, மாயாபுரி பக்கமான வழியோடு வருகையில், மஹா கொடூரனும், மிகுந்த மதிமயக்கத்தைச்செய்விப்பவனும் பாதாளத்தைப் பூமியாகவும், பூமியை ஆகாயமாகவும் ஆகாயத்தைப் பாதாளமாகவும் மலையை ஜலமாகவும் ஜலத்தை மலையாகவும், நிலத்தை நீராகவும், நீரை நிலமாகவும் பிரத்தியக்ஷத்தில் மாற்றுவோனும், பற்பல உருவங்களைக் கொள்வோனும், மஹாபாவியும், மாயையால் மலையுருவத்தோடு வழிநடுவில் இருப்போனும், மிகவும் கொடியோனும், துஷ்டனுமான கிரௌஞ்சாசுரனிடத்து முனிசிரேஷ்டர் வந்து வழியென்று பிரமித்து மலையுருவங்கொண்ட அவ்வசுரன் மீதேறிச் சென்றனர். பின்பு அங்கு வழியைக் காணமல் க்ஷணநேரம் கலக்கமுற்று நின்று, பிறகோர் சிறிய மார்க்கத்தைக் கொஞ்சம் தூரம் வரையில்கண்டு அவன் வழியாகச் சென்று பின்னும் பிரமமுற்று நின்றனர். மறுபடியும் அப்போது இங்கும் அங்கும் உற்று நோக்கியதில் வழியொன்றையும் காணமல் அப்போது துரிதமாக அடிக்கடி மிகவும் இடரனுற்றவராகி ஓடியதில் அங்கு மற்ருேர் வழியைக் கண்டு அதனேடு சென்றதில் அங்கும் மயக்கம் கொண்டு நின்று பிறகு சற்று நிதானித்து நடந்தும் இவ்வாருகப் பல பல முறை போய்ப் போய்த்திரும்பி வந்ததில் அப்போது கொஞ்சம் வழியைக்கண்டு நடுக்காட்டுக்கு வந்து விட்டனர். அவ்விடத்திலோ என்ருல், கேளீர் சௌனகாதி முனிவர்களே! தூண்தூணுக மிகுந்தமாரி பொழியலுற்றது. பிரளயகாலம்போல் பயங்கரமான மேககர்ஜனைகளும் க்ஷணததுக்கு க்ஷணம் பளீர் பளீர் என்று மினனல்களும் உண்டாகி, அப்போது அக்காடு முழுதும் காடாந்தகாரத்தினுல் சூழப்பட்டும், பயப்படுத்துவோர்க்கெல்லாம் பயங்கரமானதும், மதிமயங்கச் செய்வோரை எல்லாம் மதிமயக்குவதும் மிருத்தியுவுக்கும் மிருத்தியுவானதும், ஸகலர்களுக்கும் பிரமத்தை உண்டுபண்ணுவதுமாயிருந்ததை அகஸ்திய முனிவர் பரபரப்போடு இது என்னவென்று ஆலோசித்ததில், ஞானதிருஷ்டியாலே உடனே இவை எல்லாம் கிரௌஞ்சாசுரனுடைய மாயை என்றறிந்து நிர்ப்பயராகிக் கைதனிற்பற்றிய கோலினுல் அப்போதவ்வசுரனை அடித்து, "அடா துராத்மாவே? நீ மலையுருவமாக இருந்தும் சகத்தினுல் நம்மை பிரமிக்கச்செய்ததால் நீ சீக்கிரத்தில் இப்போதே மலையாகக்கடவாய். மேலும் ஸ்ரீ ஆறுமுகக் கடவுளுடைய வேலாயுதத்தினுல் உன்றன் சரீரமானது பிளக்கப்படக்கடவது!'' என்று மாமுனிவர், கையினுல் நீர் எடுத்து அவ்வசுரனை இவ்வாருகச் சபித்துவிட்டுப் பிறகு வழியோடு சென்று காசிப்பட்டணம் சேர்ந்தனர். முனிவர் அங்கு போய், விசுவநாதனும் ஜகத்குருவும், பிராணிகளின் செவிதனில் தாரக பிரம்ம மந்திரத்தை உபதேசித்தருளுவோருமான ஸ்ரீ மஹாதேவனைப் பூஜைசெய்து பிறகு அதை விட்டு விந்தியகிரி யடைந்து,

"வாரீர் முனிவரிடத்து மனப்பிரீதி கொண்ட பர்வத ராஜனுகிய விந்தியகிரி யாரே! சகல பிராணிகளேயும் தயவோடு நடத்துகிறவரும் நீர் தான். திருப் புகின்றவரும் நீர் தான். மஹா தைர்யசாலியான உமக்குத் தென்புறமாக எமக்குப் போகவேண்டிய வேலே கொஞ்சம் இருக்கிறது. ஆகையால் எமக் கிப்போது சீக்கிரமாக வழி விடுவீர்." என்று, கேளீர் சௌனகாதி முனிவர் களே! நயமான வார்த்தையாகவே விந்தியனே வேண்டிக்கொண்டனர். அப் போது அம்மாமுனிவரை நோக்கி விந்தியன் உரைத்ததாவது:—"வாரீர் முனி வரே! உமக்கு யாதொன்றும் தெரியவில்லே. இதென்ன வழி; நீர் கிரமமான வழியோடு செல்வீர்." என உரைத்தனன். பிறகு அகஸ்தியர் உடனே அப் பொது துரிதமாகக் கையை உயரத்தூக்கி விந்தியன்மீது வலிமையோடமுத் தினர். உடனே கிரிராஜன் அக்கையமுந்தலால் பூமியிற் குன்றியிருந்து போகலுற்றனன். பிறகு விந்தியன் மிகவும் பயங்கொண்டவனுகி முனிவரை நோக்கிக் கூறியதாவது:—"ஓ தவசிகளிற் சிறந்த ஸ்ரீ சிவபிரானது நேசத் திற்கிசைந்த அகஸ்திய பகவானே! யான் அறியாமையாற் செய்த பெரும் பிழையை மன்னித்தென்னே இப்போது காத்தருள்வீர்! காத்தருள்வீர்! எனக்கு உயரம் முன்போல் எப்போதுண்டாகும்?" என உரைத்து விநயத் தால் வணக்கமுற்றவனுகி நின்ற விந்தியகிரியை நோக்கி, முனிநாதர் திருவாக் கருளியது:—"கேளாய் விந்தியா! யாம் மறுபடியும் எப்போதிங்கு திரும்பி வருவோமோ அப்போது நீ பயம் இன்றி மிகுந்த உயரத்தைப் பெறுவாய்." என உரைத்து உடனே புறப்பட்டு, மிகுந்த பாபிஷ்டர்களான இல்வல வாதாபிகள் இருக்கும் தேசத்திற்கு அவ்வகஸ்திய முனிவர் ஓர் க்ஷணத்துக் குள் வந்தனர். அப்போது இல்வலன் அம்மாமுனிவரைக் கண்டு முன் சொல்லிய வழக்கம் போல் உரைத்து, அப்போதவர் உண்பதற்கான அனு மதியை அவரிடம் பெற்றுப் பிறகு சீக்கிரத்தில் வாதாபியை வழக்கம்போற் செய்து, வேண்டிய மட்டில், நெய், பால், கனிகள், பணியாரங்கள், தயிர் இவைகளோடு கூட மிகவும் மிருதுவும் ருசியுமான சுத்தான்னம், பாலிற் சமைத்த சர்க்கரைப் பொங்கல் இவைகளால் மிக மேன்மையான போஜனம் அளித்து, பிறகு இல்வலன் வழக்கம் போல் 'அடா வாதாபி' என்று கூப் பிடுகையில் உடனே முனிவரது வயிற்றினில் சுழற்சி நேரிடும்போதே அவர், 'அது அசுரனுடைய வஞ்சனே,' என்றறிந்து, தமது கையினுல் வயிறுதனேத் தடவி மேன்மை பொருந்திய ஒரு மந்திரத்தைச் சபிக்க அம்மந்திரத்தின் மகிமையால் வயிற்றினில் தீங்களித்த வாதாபியானவன் ஜீரணமாயினன்.

கேளீர், சௌனகாதி முனிவர்களே! அப்போது இல்வலன், 'வாதாபி பஸ்மமாகி மாண்டுவிட்டான்' என்று எண்ணி உடனே ஸ்ரீ அகஸ்தியரைக் கொன்றுவிட எண்ணி அவரருகில் ஓடி வந்தான். அப்போ தம்முனிவர் அவனேப் பார்த்தவுடன் அவனே ஒருதருப்பைப் புல்லினுல் கொன்றுவிட்ட னர். பிறகு அவர் அக்குடகு நாட்டைவிட்டுக் கொங்க நாட்டுக்கு வந்து, இரண்டு பிரஹ்மஹத்தி தோஷத்தினுல் மிகவும் பாதிக்கப்பட்டவராகி அங்கு லிங்கரூபியாகவுள்ள ஸ்ரீ சதாசிவனேப் பூஜை செய்தார்.

கேளீர்! சௌனகாதி முனிவர்களே! இஃதிப்படி இருக்கையில், ஸ்ரீ நாரத முனிவர் இந்திரனிடம் ஓர் நொடிக்குள் வந்தனர். அப்போது இந்திராணியின் கணவனும், வந்தமுனிவரை அர்க்கிய பாத்தியாதிகளால் மிகவும் பூஜித்து, கேவலம் பரிதாபப்படத்தக்க ஸ்திதியைக் கொண்ட அவ்விந்திரன் கெஞ்சி உரைத்ததாவது:—ஓ பிரஹ்ம ஸ்வரூபியான முனி நாதா! பயத்தினால் வாதைப்படுகிற என்றனக்கு எப்போது நிவர்த்திகாலம் உண்டாகும்? யான் எப்போது என்னிடம் போய்த் தேவர்களோடு கூட வசித்து வாழ்வேன்! சூரன் வேவுகாரர்கள் தேடித்திரிவதனால் எப்போது யான் மூங்கில் உருவம் கொண்டேனே அப்போதே தோட்டம் தோப்புகளில் உள்ள மரங்கள் எல்லாம் கேளீர் சுவாமி! மழை இல்லாததினால் நீர் சுண்டலாகி வாடலுற்றன; விருக்ஷங்கள் வாடிப்போயின. அப்போது முதலாக என் மனதை வருத்துகின்றது. ஆகையால் விருக்ஷங்களுடைய போஷணைக்காக எப்போது மழை யுண்டாகும்?'' என உரைத்த தேவேந்திரனை நோக்கி நாரதர் வசனம் உரைத்ததாவது:—''வாராய் இந்திரா! நீ துக்கத்தைவிட்டு விடு. கொஞ்சகாலம் பொறுத்த பிறகுதான் மறுபடியும் உனக்குச் சுவர்க்கலோகப் பிராப்தி யுண்டாகும். கேளாய் தேவோத்தமா! அகஸ்திய முனிவர் ஸ்ரீ கைலாஸத்திலுள்ள ஸகல தீர்த்தங்களின் மத்தியிலிருந்து நதிகளிற் சிரேஷ்டமான காவேரியைக் கொண்டு வந்திருக்கிறார். அம்முனிவர் இப்போது இதோ கொஞ்சம் தூரத்தில் உள்ள கொங்க நாட்டில் இருக்கிறார். ஓ! இந்திரா? ஆகையால் நீ இப்போது சிக்கிரமாக ஸ்ரீ விநாயகக் கடவுளைப் பூஜை செய். அவருனக்குப் பிரஸன்னராகி உடனே காவேரியைக் கொண்டு வந்தருளுவார்.'' என்று ஸ்ரீ நாரதர் உரைத்துவிட்டு விரைவில் ஆகாயம் சென்றனர். கேளீர், சௌனகாதி முனிவர்களே! அதன் பிறகு தேவராஜனும் மிகுந்த அமுதத்தைப் பெருக்க லுற்றதும் ஸகல துக்கங்களையும் தொலைப்பிப் பதுமான நாரதருடைய திருவசனத்தைக் கேட்டு, அப்போதே துரிதத்தில் ஸ்ரீ யானை முகத்தோனைப் பூஜைசெய்வதற்கு மதி வைத்தனன். பிறகு இந்திரனனவன் ஆறுமுகனுக்கு மூத்தோனாகிய ஸ்ரீ யானை முகக் கடவுளுக்கப்போது, அப்பம், கொழுக்கட்டை, பால், நெய், அன்னம் இவைகளோடு கூட மஹாபரிசுத்தமானதும் மிகுந்த பாவத்திரள்களை அடியோடு தொலைப்பிக்கலுற்றதுமான பூஜையைச் செய்தான். அப்போது அடியார்களின் கிலேசங்களை விலக்குவோரும் அடியார்களின் பாவத்திரள்களைப் போக்கடிக்கின்றவருமான ஸ்ரீ விநாயகமூர்த்தியானவர் வெண்ணிறத்தினாற் சுத்தப் பிரகாசம் உடையவராக அவ்விந்திரனுடைய ஆயிரம் கண்களுக்கும் காட்சியளித்தனர்.

## 12. அத்தியாயம்.

ஸ்ரீ பகவானாகிய விக்கினராஜன் பிரசன்னராகி அப்போது தேவராஜனுக்குத் திருவாக்கருளியதாவது:—'' ஓ இந்திரா! யாம் உனக்கிப்போது பிரஸன்னமாகிவிட்டோம். உனக்கு வேண்டிய எல்லா வரத்தையும் பெற்றுக் கொள்.'' என உரைத்திட்ட ஸ்ரீ விக்னேசுவரனை நோக்கி, இந்திரன் வசனம்

உரைத்ததாவது:—"ஒ அடியார்க்கு நேசனாகிய விக்னேசுவரா! இம் மரங்களின் போஷணைக்காகத் தேவரீருடைய திருவருளால் மிகுந்த ஜலம் உண்டாகுதல் வேண்டும்." என்ற இந்திரன் வசனத்தைக் கேட்டு ஸ்ரீ ஜகதீசன் அவனுக்குப் பதில் உரைத்ததாவது:—"வாராய் இந்திரா! அண்டத்திலும் அதற்கு வெளியிலும் உள்ள ஜலங்கள், ஆகாய கங்கை, இன்னும் மற்ற பாதாள கங்கை இவை முதலிய நீர்க்கால்கள் இவ்வுலகின் மீதுள்ளன அல்லவோ? இவற்றில் உனக்குத் தருவிக்க வேண்டியது எந்த ஜலம்? சொல்." என்று ஸ்ரீ விநாயகருரைத்த கம்பீரமும் திருத்தமுமான வசனத்தை இந்திரன் கேட்டு, "ஒ கருணைக்கடலாகிய விக்னேசுவரா! தவசிகளிற் சிறந்த அகஸ்திய முனிவர் இப்போது காவேரி என்கிற புண்ணிய நதியை இதோ அருகில் வைத்துக் கொண்டிருக்கிறார். ஒ பிரபுவே! தேவரீர் சென்று அதை இப்போதே கொண்டுவருதல் வேண்டும்." என்று உரைத்து விநயத்தோடு நின்ற இந்திரனுக்கு நல்லதென்று அபயம் அளித்து ஸ்ரீ பகவான் ஆச்சரியகரமான காக்கை உருவங் கொண்டு முனிவர் அண்டைசென்று, அவருடைய குடத்தின் மீது உட்கார்ந்தனர். பிறகு மாமுனிவர் குடத்தின் பேரில் உட்கார்ந்த காக்கையைக் கண்டு பரபரப்போடு அதைக் கையினால் ஓட்ட, கேளீர், சௌனகாதி முனிவர்களே! அப்போது அக்காக்கையானது துரிதத்தில் கால்களால் அக்குடத்தைத் தள்ளிவிட்டு, உயரக் கிளம்பிப் பயமுற்றது போல் உடனே கொஞ்ச தூரம் ஓடிற்று. கேளீர், சௌனகாதி முனிவர்களே! முனிவர் குடம் கவிழ்ந்துவிட்டதைக் கண்டு "ஆஹா! பரமசிவா!" என்று கூவிக் கொண்டோடிச் சென்று, "யாது நிமித்தம் இப்போது இக்காக்கை இங்கு வரலாயிற்று. இன்னும், முன்னும் பின்னும், இங்கும் அங்கும் இக்காக்கை பல தடவை ஓடி நிற்கின்றதே! யாம் எந்த உபாயத்தாலாவது இதை வலிமையுடன் கொன்றுவிட வேண்டும்." என்றுச் சொல்லிக் கொண்டு மிகக் கோபத்தோடு அதன் அருகிற்சென்றதன் மேல், அங்குக் காகத்தைக் காணாமல் இதென்ன! என்று ஆச்சர்யம் உற்று, இங்கும் அங்கும் முகம் நிமிர்ந்து பார்த்ததில் அங்கோர் திருநூல் அணிந்த வாலிபன் இருந்ததை நோக்கி, "ஓகோ யாம் காக்கை யென்று வீண் பிரமம் கொண்டனம். குடத்தைக் கவிழ்த்தது இவன் தான்." என்று நிச்சயித்து, "இப்போதிப்பயலை நன்றாகக் குட்டி யடிக்க வேண்டும்." என்று ஸத்திய வாக்குடைய அகஸ்திய முனிவர் அவனருகில் ஓடினர். பிறகு பிரமசாரியானவன் பயமுற்றவன் போல் பரபரப்போடு துரிதமாகக் கொஞ்ச தூரம் ஓடிச் சென்று நின்றனன். முனிவர் மறுபடியும் அங்கோடி அப்போதப் பிரம்மசாரியைக் குட்டுவதற்காகக் கோபத்தோடு கையைத் துரிதமாக ஓங்குவதற்குள்ளாக மறுபடியும் அவனோர் நொடிக்குள் கையினால் எட்டிப் பிடிக்கப்படக் கூடியவன் போல் முந்தியோடி அம்முனி சிரேஷ்டரை ஏமாற்றினன். ஒளி பொருந்திய விக்னேசுவரன் இவ்வாறாகப் பல தடவை அம்முனிவரை ஏமாற்றி, பிறகு பற்பலவித கணங்களாலும் சுற்றிலும் ஸேவிக்கப்பட்டவராகித் தமது நிஜவுருவத்தை அம்முனிவருக்குக் காட்சி கொடுத்தருளினர். அப்போது மாமுனிவர்

அவரைக்கண்டு, துதிசெய்ததாவது:—"யானைமுகத்தோனும், பெரியவயிற்றை யுடையவரும் முறம்போன்ற காதுகளைக் கொண்டவரும் நன்கு தொங்கலுற்ற உதட்டையுடையோரும், சந்திரகலையைத் தரித்தவரும், வேண்டிய உருவத்தைக் கொள்வோரும், ஸகலகணங்களுக்கும் கணபதியுமான உம்மை வந்தனிக்கிறேன். கவிகளுக்கெல்லாம் மிக்க கவிராயரும் பரப்ரஹ்மஸ்வரூபியும் ஸகல பிராமணர்களுக்கும் முதன்மை ராஜனுமாகிய மங்கள மூர்த்தியை எப்போதும் வந்தனிக்கின்றேன். ஸகல இடையூறுகளையும் விலக்குவோரும், ஸகலபாபங்களையும் தொலைப் பிப்போரும், ஸ்ரீ கந்தபிரானுக்கு மூத்தோருமான ஸ்ரீவிநாயகக் கடவுளை அவ்வாறே சாஷ்டாங்கமாக வந்தனிக்கின்றேன்." என்றிவ்வாறாக ஸ்ரீ கணநாதரைத் தோத்திரம் செய்து அடிக்கடி நமஸ்கரித்தனர். பிறகு பகவானும் முனிவரை நோக்கித் திருவாய் மலர்ந்தருளிய தாவது:—வாரீர்! விந்தியகிரியது கர்வத்தை நிவர்த்தித்த முனிவரிற் சிறந்த அகஸ்தியரே! உமக்கு யாம் பூரணமாகப் பிரசன்னமாயினோம். இப்போது உமக்கு வேண்டியதைக் கேட்கலாவீர்? என உரைத்த ஸ்ரீவிக்னராஜன் முன்பாக அகஸ்தியர் தெரிவித்துக் கொண்டதாவது:—ஓ அடியார்களுக்குக் கருணைக்கடலாகிய கணநாதா! எனது இவ்வபராதத்தை மன்னித்துத் தேவரீரது, மரையடி இடத்து என்றும் பிரியாத பக்தியை ஈந்தருள வேண்டும். காவேரிநதியோ என்றால் ஸ்ரீ பரமேசுவரனுக்குப் பூஜை செய்வதற்காகக் கொண்டு வரப்பட்டது. ஓ யானைத் திருமுகனே! குடம்கவிழ்ந்து போனதால் அக்காவேரி ஓடிப்போய் விட்டதல்லவோ? ஸ்ரீபரமேசுவரனைப் பூஜிப்பதற்காக என்ற உனக்குப் பூஜைக்காக ஒரு தீர்த்தத்திற்கு வழிசெய்யவேண்டும். யான்தேவரைக் குட்டுவதற்காக வந்தமையால் அந்தக் குட்டுகள் என்றனுக்கேவிழட்டும். என்று அப்போது தமது தலை மீது இருகைகளையும் முட்டி செப்து குட்டிக் கொண்டனர்.

ஓ சனகாதிமுனிவர்களே! இது ஆச்சர்யம்! இவ்விதம் உரைத்து நின்ற கார்யம் அறிந்த அகஸ்தியமுனிவரைச் சமாதானம் செய்து, அப்போது வசனம் உரைத்ததாவது;—ஓ கேளீர் முனிசிரேஷ்டரான அகஸ்தியரே! விருக்ஷங்கள் பட்டுப் போனபடியால் இந்திரனால் வேண்டிக் கொள்ளப் பட்டதன் பேரில் ஜலத்துக்காக யாம் இங்கேவந்தோம். அதே காரணத்துக்குத்தான் குடமும் கவிழ்க்கப்பட்டது. உம்மாற் செய்யப்பட்ட இவை யாவும் எமக்குச் சந்தோஷமே! ஸ்ரீ திரிபுராரியைப் பூஜிப்பதற்காக இதோ இந்த ஜலம் இருக்கட்டும். என்று ஸ்ரீ விக்கினேசுவரன் தமது துதிக்கையினால் காவேரியிலிருந்து நீரெடுத்து, அக்குடத்தில் சொரிந்தனர். அந்த க்ஷணமே குண்டிகை நிரம்பி வழிந்து எங்கும் பரவியோடிற்று. பிறகு அப்பிரபுவும் முனிவருக்கு இவ்விதமாக அனேக வரங்களை அருளிவிட்டு அந்தர்த்தானம் அடைந்தனர். பிறகு அகஸ்தியருமோ என்றால் சீக்கிரமாகத் திருக்குற்றாலமென்ற பட்டணத்துக்குப் போயினர். அங்குள்ள வைஷ்ணவர் எல்லோரும் திருமேனி முழுதும் திருநீற்றினால் சிறக்கலுற்றவரும், ருத்திராக்ஷ ஆபரணங்களால் விளங்கலுற்றவருமான, அம் முனிசிரேஷ்டரைக் கண்டு, அடா பிராமணா! சைவனாகிய நீ எங்கள் பட்டணத்

துக்கு வருதல் கூடாது. என்றுரைக்க, முனிவர் அப்படியே சரியென்று பட்டணத்துக்கு வெளியிற் சென்று மாயையினால் துரிதமாக வைஷ்ணவ உருவத்தை எடுத்துக்கொண்டு அப்பட்டணத்துக்குள் மறுபடியுஞ் சென்றனர். அப்போதங்கு வீதிகளில் இருந்த வைஷ்ணவர் எல்லோர்களும் அவ்வைண வரைக் கண்டு அவரை வெகு சிறப்புடன் ஏற்று வந்தனித்து, ஆலயத்திற்கு அழைத்துவரச்சென்றனர். அப்போது மா முனிவர் வைஷ்ணவர்கள் பேசிக் கொள்கிற முறைப்படியே அவர்களோடு பேசிப் போயினர். பிறகவர் வைஷ் ணவர்களைப் பார்த்து "இப்போது யான் விஷ்ணு பூஜை செய்ய வேண்டும்" என்றுரைத்து அவர்களை வெளியிற் போகும்படி செய்து பிறகு அங்கு ஆல யத்திலிருக்கும் விஷ்ணு பிம்பத்தை ஸ்ரீ சிவபிரானாகவே மனதில் பாவனை செய்து கையினால் தொட்டு வலிமைகொண்டழுத்திப் பிடிக்க, அப்போ தவ் விஷ்னு பிம்பமானது உடனே சிவலிங்காகார மாகிவிட்டது. அதன் மேல் அகஸ்தியரும் லிங்காகாரமாயுள்ள ஸ்ரீ பரமேசுவரனை வைஷ்ணவர்கள் பார்த் துக் கொண்டிருக்கையில், முறைமைப்படி பூஜை செய்கையில், அப்போது வைஷ்ணவர் எல்லோர்களும் கும்பலாகச் சேர்ந்து முனிவரை அடிக்கத் துரி தமாய் வந்தனர். பிறகு அகஸ்தியரும் அவர்களைக்கண்டு கோபத்தோடு பார்க்க அவரது கோபாக்கினியால் அவர்கள் எல்லோரும் தகிக்கப்பட்டவர் களாகி ஓட்டம் பிடித்தார்கள். பின்பு அகஸ்தியர் அங்குச் சைவர்களைக் குடி யேற்றிவிட்டு, ஸஹிய பருவதம் சென்றபிறகு, ததீசிமுனிவர், கண்வர், ஸ்ரீ நந்திகேசுவரர், பிருகு, கௌதமர், பிரஹஸ்பதி, பிருங்கி, ஸ்ரீ துர்வாசமுனி வர் இவர்களால் அவ்வைஷ்ணவ நிர்பாக்கியர்களுக்கு நேரிட்டிருக்கும் சாபத்தை முனிவர் அப்போது நினைத்துப் பார்த்து, கேளீர் சௌனகாதி முனிவர்களே? அப்போ தப்போது ஐயரைக்குறித்து மிகவும் பரிதாபப் பட்டனர்.

கேளீர், முனிவர்களே! காவேரியானது குடத்திலிருந்து புறப்பட் டோடி சீர்காழிப் பட்டணத்திய மரங்களுக்குப் பாய்ந்தவுடன் அப்போதே அம்மரங்கள் சிறகுதிர்ந்து, எல்லாம் துளிர்கொண்டு பற்பல மலர்களால் விளங் கப்பெற்றதை வலாசூரனைக் கொன்ற சத்துருக்களை வதைப்போனான இந் திரன் கண்டு மனக்கவலை நீங்கி, அப்போது மிகவும் மகிழ்ச்சி கொண்டவனா கித் தனது நிஜ உருவத்தைக்கொண்டு இந்திராணியோடு கூட விசித்திரமான பத்திரங்கள் மிகுந்த வாசனைகொண்ட புஷ்பங்கள் இவைகளை மிகுதியாக எடுத்துச் சேகரித்து, அத்தகைய சத்துருவின் ஆட்டங்களை அடக்க முயன்ற வனாகி விசுவேசுவரனாகிய ஸ்ரீ சதாசிவனைப் பூஜை செய்தான். இச்சமயத் தில் தேவர் எல்லோரும் தேவேந்திரனைப் பார்ப்பதற்காக வந்தார்கள். அவ் வெல்லாத் தேவர்களும் இந்திரனை வந்தனித்து வசனம் உரைத்ததாவது:— "ஓ அரசனே! நீர் எங்ஙனம் உமது தேவர்களை எல்லாம் விட்டு விட்டு இந்தி ராணியோடு கூடத்தனியாகக் கபடவேடங் கொண்டிங்கு வனவாசஞ்செய்து கொண்டிருக்கிறீர்? ஓ தேவேந்திரா! நீ ரிப்போது சுவர்க்கலோகத்தி லிருந்து கொண்டு முன்போல் இத்தேவர்களை மிகுந்த தயவோடசுரர்களைத் துரத்தப் பெற்றவர்களாகக் காப்பாற்றி வரவேண்டும்?" என்றிவ்விதமாக உரைத்து

நின்ற மிகவும் பரிதாபப்படத் தக்க தேவர்களை நோக்கி இந்திரன் உரைத்த தாவது:—"ஓ கேளீர் தேவர்களே! இப்போது நம்மால் செய்யத்தகுவது யாது? முந்திச் சூரபதுமனுடைய கட்டளைக்கமைந்து திரண்ட மீன்கள், இறைச்சி முதலிய இன்னும் பல இகழ்ச்சியான பண்டங்களும் நம்மால் கொண்டு வரப்பட்டன. இவ்வாறெல்லாம் செய்து அச்சூரன் பலவந்தமாக நம்மைச் சிறையில் அடைத்து விட்டு இந்திராணியைத் தருவிப்பதற்குக் காதல் கொண்டனன் அல்லவோ? ஆகையால் மானக்குறைவு நேரிடுவதற் குப் பயந்தல்லவா யாம் இப்போதிங்கிருந்து கொண்டிருக்கிறோம். அப்படி இங்கிருப்பதிலும் அசுரர்களுடைய விநாசத்துக்காக ஸ்ரீ மஹாதேவனைப் பூஜை செய்து கொண்டிருக்கிறோம். இங்ஙனம் இருக்கையில் நீங்களும் இங்கேது நிமித்தம் வந்தீர்கள்? நல்லது நாம் எல்லோரும் இப்போது கைலை கொடுமுடிக்குப் போவோம். அங்குச் சென்று ஸ்ரீ மஹாதேவனிடத் தெல்லாவற்றையும் உள்ளபடி அறிவித்துப் பிறகத் தேவாதி தேவனால் திரு வாக்கருளப்பட்ட வசனங்களைக் கேட்டு நாம், எல்லோரும் நன்னெறியி லிருந்து வருவோம்." என உரைத்தவர்களை யங்கு நிறுத்திவிட்டுப் பிறகவ் விந்திரன் இதை இந்திராணிக் கறிவிப்பதற்காகத் துரிதத்திற் சென்றனன். உடனே இந்திராணி அவனைக் காணும்போதே சங்கதிகளை இங்கிதத்தினால் அறிந்து கொண்டு மனவருத்தத்துடன் துக்கப்பட்டாள். அப்போது இந்தி ரனும், கேளாய் அன்புள்ள நாயகி! தேவர் எல்லோர்களும் இங்கு வந்திருக் கிறார்கள். அவர்களுடன் ஸ்ரீ மஹேசுவரனுக்கு இச்சங்கதிகளை அறிவித் துப் பிறகு உன்னிடம் திரும்பி வருகிறேன். இதோ இச்சாஸ்தா தேவர் உன்னைக் காப்பார்" என்றுரைக்க, இந்திராணியும், "ஓ சுவாமி! என்னைக் காப்பதற்குள்ள ஈசனான இச்சாஸ்தா தேவர் யாவர் என்பதையும் இவருக் கெல்லோரையும் காக்கும் தன்மை எங்ஙனம் உண்டாயிற்றென்பதையும் எடுத்துரைத்தல் வேண்டும்." என்றனன்.

## அத்தியாயம் 13.

இந்திரன் உரைக்கின்றான்:—கேளாய், மாதரசே! பூர்வத்தில் தேவா சுரர்கள் எல்லோர்களும் சென்று திருப்பாற்கடலைக் கடைந்தனர். அல் லவோ? அப்போ தங்குண்டான அமுதத்தை அவ்வெல்லோர்களுக்கும் பகுத்துக் கொடுப்பதற்காக ஸ்ரீ அச்சுதரானவர் மோஹினி ரூபமெடுத்து அசுரர்களைக் காதல் அடையச்செய்து அவ்வமுதத்தைத் தேவர்களுக்கு மட்டும் விரைவில் பகிர்ந்து போஜனமளித்தனர். அச்சமயத்தில் அம்மோகி னியைப் பார்ப்பதற்காக ஸ்ரீசர்வேசுவரன் அங்குத்தோன்றி மிகலாவண் யம் உடையவளும் சுழலலுற்ற கடைக்கண் பார்வையை யுடையவளும் மிக நேர்த்தியாக மின்னி உடனே மறைந்து விடாமல் நிலையாய் நிற்க லுற்ற மின்னற்கொடி போன்றவளும், நேர்த்தியான ஆபரணங்களால் பார்ப்பவர் மனது கவரலுற்ற பருத்த இரு கொங்கைகளது பாரத் தினால் சற்றுவணக்கமுற்ற மெல்லிய இடையைக் கொண்டவளுமான மோகினியைக் கண்ணுற்ற மாத்திரத்தில் கலவிகொள்ளக் காதலுற்றப் பர

மேசுவரன் திருவாக்குரைத்த தாவது;—அடி நேசம் உற்ற மாதரசி! நீ இப்போதிங்கு எம்முடன் கூடிச் சம்போகம் செய்தல் வேண்டும். என்ற ஆசை எனக்கு அதிகம் அல்லவோ இருக்கின்றது.'' என்றுரைத்துத் தரிசிப்பதற்கு மிகத் துறையாக நின்ற ஸ்ரீ சிவபிரானை நோக்கி அப்போது அம் மோகினி உரைத்ததாவது.—ஓ சர்வேசுவரா! யான் நாராயணன் அல்லவோ? இப்போது மோகினி உருவம் எடுத்து நிற்கிறேன். தேவரீர் என்னோடு எவ்வாறு சம்போகம் செய்தல் தகும்! என்று உரைத்து லஜ்ஜையோடு தலைகுனிந்து நின்ற அம்மாதரசியை நோக்கி சங்கரன் பின்னுஞ் சொல்லுகின்றார்:— ஆ அடி தேனே! நீ நமது நான்கு சக்திகளின் மத்தியிலான புருஷன் என்ற சக்தியல்லவோ? ஆகையால்தான் முந்தி உன்னோடு புணர்ந்து பிரமனைப் பிறப்பித்தோம். மேலும் தாருகாவனத்தில் இதேமாதிரியாக நீ மோகினி யுருவம் எடுத்திருக்கையில் ஆ எனது ஆசைக்கிசைந்த பெண்ணரசியே! அப்போது நீ அல்லவோ வலிய எம்மோடு கலவி செய்வதற்குக் காதலுற்றாய்? ஏனடி அழகியகுழலாய்! அப்போது அங்கு யாம் இதோ ஆயிற்றென்று உன்னுடன் புணர்ந்தனம் அல்லவோ? ஆகையால் நீ இப்போது எமதிச்சையின்படி பலதடவை காமலீலை செய்வது தகுதியாகும் என்றனர். இவ்வாறுரைத்ததும் அவள் திருமுகத்தைத் திரும்பிநிற்கும் அளவில், ஸ்ரீ ஜகதீசன் அப்போது விரைவுடன் அவளை வாரியெடுத்து, துரிதத்தில் அச்சுந்தர மங்கையைச் சம்புத்தீவில் உள்ள சாலவிருக்ஷத்தின் அடியில் கிடத்தினன். மிகவும் இனிமையான ஸுரதத்தின் வேகத்தைத் தாங்குவதற்கு அவள் திறமையற்றவளாகித் திருமேனிமுழுதும் மிகுந்த வியர்வையால் நனையலுற்று அப்போது குபீரென்று வாந்தி செய்தனள். கேளாய் பெண்ணே இந்திராணி! அவ்வாந்தி, நதியெனப்பெருகி அதில் வஜ்ஜிரதந்தமென்ற புழுக்கள் உற்பத்தியாயின. அப்புழுக்கள் எல்லாம் தங்கள் வாய் நீரினல் அங்குள்ள லேசான களிமண்ணைக்கொண்டு கரையடியில் கூடுகட்டி அக்கூட்டினுள் பேசாமல் ஒண்டியிருந்தன. பிறகு அந்நதியில் பிரவாகம் வந்து நீரோடுகையில் அவைகள் செத்துப்போக, அப்பிரவாகத்தில் அக்கூடுகள் மிகுதியாய் மிதந்து போயின. அப்போது அக்நாட்டில் உள்ள சில மானிடர்கள் அந்நீர்க்காலில் வலைகட்டி அக்கூடுகளைப்பிடித்து அவற்றிற்கு உள் இருக்கும் தங்கத்தை எடுத்துக்கொண்டு அக்கூடுகளை விலைக்கு விற்றனர். கேளாய் மாதே! அப் பூச்சுக்கூடுகள்தான் இப்போது சாளிக்கிராமம் என்றுபெயர் வழங்கப்படுகிறது. ஆனால் அவைக்கு விஷ்ணுபிரானது வாந்தி நீரின்கண் உண்டாகியபடியால் அவ்விஷ்ணுவிற்குரிய சிலைகள் என்று பிரசித்தி பெறலாயிற்று. அதேகாரணத்தால் தான் இப்போதும் உலகின்கண்ணுள்ள பெரியோர்கள் ஸ்ரீ சிவலிங்கத்திற்கு வேண்டிய யோனிபீடமாகிய ஆவுடையாருக்காக அச்சாளிக்கிராம சிலையென்று கண்டகி நதிச்சிலையை விசேஷமாக ஆதரிக்கிறார்கள். இவ்விருபுணர்ச்சியில் நின்றுதான் ஐயனர் என்ற ஸ்ரீ சாஸ்தாதேவர் உண்டானது. மேலும் அவர் அவ்விருவர்களுக்கும் பிறந்தபடியால் ஹரிஹர புத்திரர் எனப்படுகின்றார். ஸாஸ்தாவாகிய அம்மைந்தன் ஸ்ரீ மகாதேவன் முன்பாக 'ஓ தந்தையே! யான் செய்யத்தகுவது யாது?' எனஉரைத்து மிகவணக்கமாக நிற்கையில்

ஸ்ரீ ஜகதீசன் அப்போது அவருக்குப் புவனங்களின் ஆதிபத்தியத்தைத் தந்தருளினர். கேளும் இந்திராணியே! அத்தகைய ஸ்ரீ சம்பு புத்திரராகிய இச்சாஸ்தாதேவர் உந்தனைக்காத்து ரக்ஷிக்கட்டும் என்றுரைத்த பிறகு இந்திரன் அப்போது இந்திராணிக்கு முன்னிலையிலே ஜகங்களுக்குப் பிரபுவாகிய ஸ்ரீ சாஸ்தாதேவரை ஏகாக்ரசித்தராகி நினைக்க, அப்போதே சாஸ்தாவானவர் மிகக் கொடியர்களான பலகணங்களாய் சூழப்பட்டவராய் பிரத்தியக்ஷராகி யாம் என்ன செய்ய வேண்டும்? என்று திருவாக்கருள, இந்திரன், ஒ தேவனே! யான் ஸ்ரீ சம்புவினுடைய கைலையங்கிரிக்குப் போகுதல் வேண்டும், யான் திரும்பி வரும்வரையில் எனது பிராணநாயகியான இந்திராணியை இங்குத் தேவரீர் காத்தருளல் வேண்டும். எனக்கேட்டுக் கொண்டு இந்திராணியை அலரண்டையில் ஒப்புவித்து, அவளிடத்தும் ஸ்ரீ சாஸ்தாதேவியிடத்தும் விடைபெற்றுக் கொண்டு விருத்திராசுரனைக்கொன்ற இந்திரனனவன் தேவர்களுடன்கூடத் துரிதமாகக் கைலைக்குப் புறப்பட்டனர். பிறகு சாஸ்தாவானவர் தமது கணாதிபராகிய மஹாகாளரைஇந்திராணியைப் பாதுகாக்கும்படி ஏற்படுத்திவிட்டுத் தமது இருப்பிடம் சென்றனர். இந்திரனும் மற்ற தேவர்களுடன் புறப்பட்டுச் சகலபாபத்திரள்களாகிய மிகுந்த இருள் கூட்டத்துக்குச் சூர்யன் ஒளிபோன்றதான கைலைகிரிக்கு விரைவிற்சென்று அங்கு அவன் தேவர்களுடன்கூட ஸ்ரீ நந்திகேசுவரரைக் கண்டு தூரத்தில் இருந்தபடியே தண்டனிட்டு நிற்கையில் பிறகு அத்தேவனல் அழைக்கப்பட்டதன் மேல் அவர் அருகிற் சென்றனர். அப்போது நந்திகேசன், "வாராய் இந்திரா! யாது நிமித்தம் இப்போது இங்கு வரலானய்?" என, அப்போது இந்திரனும் பயத்தினல் மெய் நடுக்கம் கொண்டவனகி, "ஒ சிலாத முனிவரின் தலைவரான ஸ்ரீ நந்திகேசா! யான் சகல தேவர்களோடும் இப்போது ஸ்ரீ பரமேசுவரனை சேவிப்பதற்காக இங்கு வந்தேன். தேவரீர் என் மீது கருணையருளல் வேண்டும்." என்றனன். இவ்விதம் உரைத்து வணக்கத்தோடு நின்ற இந்திரனை நோக்கி, பிரமத கணங்களுக்குத் தலைவரான ஸ்ரீ நந்திதேவர் உரைத்ததாவது:—ஒ தேவேந்திரா இப்போது ஸ்ரீ ஸர்வேசுவரன் சனகாதிகட்கு ஞானேபதேசம் செய்து கொண்டிருப்பதால் நீ சேவை செய்வதற்கு இப்போது இங்குச் சமயம் இல்லை. நீ போய்விடு." என்றனர். பின்னர் இந்திரனும் அவரது வசனத்தைக் கேட்டுச் சகல தேவர்களுடனும் அவரைப் பல முறை வந்தனித்து மற்றோர் கொடு முடிக்குச்சென்று அங்கு ஸ்ரீ மஹாதேவனை நினைத்துக்கொண்டு வசித்து வந்தனன்.

இப்படி இருக்கையில் கேளீர் சௌனகாதி முனிவர்களே! மிகக் கொடியவளும் பாவம் செய்வதையே தொழிலாகப் பூண்டவளும் ஓர் க்ஷண நேரத்தில் அண்டத்தின் பொந்தெல்லாம் சுற்றிவருவோளும் நடுப்பாதையில் நேர்ந்த பலப்பல புருடர்களோடும் சுரதமாடுவோளும் அதேவிதமாய் நேரக் கூடிய இயற்கையாகவே மிக அழகிகளான அந்நிய பெண்களில் நாள்தோறும் இரண்டாயிரம் பெயர்களை மிகவும் பலவந்தமாகப் பிடித்துச் சூரனுக்குக் கொண்டு விடுபவளும் மஹா பயங்கரம் உள்ளவளுமான அஜமுகி என்பவள் மஹா வ்யபிசாரியான துன்முகி என், ஓர் தோழியோடு சீகாழி என்னும்

பட்டணத்தின் தோப்பில் வந்து, அங்கிருந்த இந்திரனுக்குப் பிராண நாயகி யும் மிகச் சௌந்தர்யமும் உடையவளுமான இந்திராணியைக் கண்டதில் மிகுந்த ஆனந்தங் கொண்டபோது அவள் வசனம் உரைத்ததாவது:—வாராய் பெண்ணே இந்திராணி! நீ யாது நிமித்தம் இங்கு நிற்கின்றாய்? யான் உனது நிமித்தமே இங்கு வரலாயினேன். ஸகலஜகங்களையும் ஓர் குடையின் கீழ் ஆளு கின்ற எனது அண்ணன் உன்றன்மீது மிகுந்த காதலைக் கொண்டிருக்கின்றான். நீ அவனது அந்தப்புரத்துக்கு வந்திடில் அவ்வசுரேசன் சீக்கிரத்தில் உன்றனையே அவனது எல்லா மங்கையர்களிலும் முக்கியநாயகியாக வைத்துக்கொண்டு உன் றனுடன் கேலிவிலாசம் செய்துகொண்டிருப்பான். இந்திரன் முதலிய சகல தேவர்களும் கேவலம் பலஹீனர்களாகி அவனுக்கு ஊழியராகி விட்டார்கள். ஆகையால் நீ இப்போதே இவ்விடத்தைவிட்டுச் சீக்கிரமாய் புறப்படல்வேண் டும். இல்லாவிடில் கேளாய்! மெச்சத்தக்க பெண்ணரசே !! யான் உன்னைப் பலவந்தமாகப் பிடித்திழுத்துப் போவேன்." என உரைத் தருகில்வந்த அவ் வசுரப் பெண்ணைக்கண்டு அப்போதிந்திராணி உரைத்ததாவது:—"கேளாய் பெண்ணே! பூர்வத்தில் தேவர்கள் மிகுந்த ஐசுவர்யத்தோடு செழித்திருந் தார்கள். அப்போதசுரர்களோ கேவலம் பலவீனர்களாய் இருந்தார்கள். அவர வர்கள் கருமத்துக்குத் தக்கபடி தரித்திரனானாலும் செல்வனானாலும் அவ ளவள் பதியே அவளவளுக்குக் கதி என்னும் தவறாத நீதியை மீறுவதற்குத் தகாதல்லவா? என்னைக் காப்பவரான கணங்களுக்கு எல்லாம் தலைவராகிய ஈசுவரனை இன்னாரென்றறியாமல், ! 'யான் பலவந்தமாகப் பிடித் திழுத்துப் போவேன்' என்று உன்னால் சொல்லப்பட்டதல்லவோ? அடி துராத்மாவா கிய மூடமே! உனக்கென்ன தெரியும்? சீ! நீ இப்போது போ போ," என்ற னள். பிறகு கேளீர் சௌனகாதி முனிவர்களே! அவ்வரக்கியானவள் இவ் வாறுரைத்த இந்திராணியை மிகக்கோபத்துடன் பார்த்து, 'அடி! உன்னை விடுவிப்போனான இவனது திறமையைக் காண்கின்றேன். "என்றுரைத்துத் துரிதமாகப் பிடித்துக் கர கரவென்றிழுத்தனள். உடனே இந்திராணியும் மிக பயங்கொண்டு தடிபோன்ற திருமேனி நடுக்கமுற்றுக் கால்களை உதறிக் கொண்டு ஹா ஹா! என்றுறக்கக் கதறினள். அப்போது மகாகாளரானவர் உரத்த குரலைச் செவியுற்று," இஃதென்ன! என்று ஆச்சர்யப்பட்டு மரத்தடியி னின்றெழுந்து இந்திராணியைப் பார்த்தவுடன் அப்போது மிகுந்த கோபம் கொண்டவராகிச் சடிதியில் அவ்வரக்கியை, அடி மூடமே! இந்திராணியை விட்டு விடு. இல்லையாகில் உனது கையைக் கத்தியால் துண்டித்து விழச்செய் வோம் என்றுரைத்துக்கொண்டு அக்காலதிபர் விரட்டினர். அப்போது அஜமுகியும் மிகக் கோபம்உற்று, 'நீ யாவனடா?' என மஹாகாளர், அடி பேதாய்! வெள்ளையானையை வாகனமாகக்கொண்டவரும் சந்திரனைச்சிரோரத் தினமாகக்கொண்ட ஸ்ரீ ஸர்வேசுரனுக்கு புருடனென்ற சக்தியான ஸ்ரீ மஹா விஷ்ணுவினிடத்தில் சனித்தவரும், இவ்வுலகை ஆள்வோருமான யாதொரு ஸ்ரீசாஸ்தாவுண்டோ அவரதுசேவகன் யான். இப்போதுன்னால் யாது செய்யத் தகும்.? சீ பூஜிக்கப்படலுற்ற அவ்வம்மையை விட்டுவிடு, "என்று கூறியதைக் கேட்டவுடன் அப்போது அப்பாதகியானவள் சூலத்தை எடுத்து வேகமாய்

அவர் மீதெறியும்போது, மஹாகாளரும் அதை வேகமாய் நூறு துணுக்கு களாக முறித்தெறிந்தனர். பின்பவளும் கையிற்பற்றிய இந்திராணியைத் துரித மாகத் துர்முகியின் கைதனிற் பிடிப்பித்து அவளது கையில் இருந்த மற்றோர் சூலத்தைக்கொண்டு அப்போதக் கொடியவள் கொடூரமான அச் சூலத்தைக் கூடியவலிமையோடவர் மீதெறிந்தனள். உடனே அச்சூலமும் முன்போல் அவரால் நூறு துணுக்குகளாக முறியுண்டு பூமியில் விழுந்தது. பிறகு அவள் ஓர் மலையைப்பிடுங்கி வேகமாய் அவர்மீதெறிய அப்போ தம்மஹாகாளர் அதை யும் அவ்வாறே உடைத்துவிட்டனர். அப்போதவரது கத்தியானது மலையை உடைத்தவேகத்தினால் முறிவுண்டது. அக்கத்தி முறிபட்டதை அவள் கண்ட வுடன், கேளீர் சௌனகாதிமுனிவர்களே! அடா ஆயுதமற்ற உன்னால் இனி யாது செய்யத்தகும்?'' என்று சொல்லிவிட்டு அவ்விந்திராணியை மறு படியும் பிடித்திழுத்தனள். அப்போதுடனே பெருந்திருமேனியுடைய வீர னான அம்மஹாகாளர் மிகக் கோபாவேசங்கொண்டு தம் பின்தட்டினிற் கட்டி விளங்கியிருந்த கூர்மை பொருந்திய சிறிய கைக்கத்தியினால் மிகப்பயங்கரமான அவளது கடினமான கையைச் சேதித்து, துர்முகியது கையையும் வெட்டிப் பூமியில் வீழ்த்திவிட்டுச் சீக்கிரத்தில் இந்திராணியை விடுவித்துக்கொண்டு திரும்பி அவ்விருக்ஷங்கள் நிறைந்த அத்தோப்பிற்கு வந்தனர். கேளீர் சௌன காதிமுனிவர்களே! பிறகு அந்த அஜமுகியோ என்றால், தலைமயிர் அவிழ்ந்து அலங்கோலமாகச் சிதறலுற்றவளாகி, தரைதனில் விழுந்து புரண்டதனால் அங் கம் எங்கும் புழுதிபற்றியவளாகவும் தனது கை யிரண்டு துண்டமாக்கப்பட் டதைக் கண்டு மிகவும் மன வியாகுல முற்றவளாகிக் கதறிப் புலம்பினள். 'ஆ இப்போது கடலை உள்ளங்கையில் எடுத்துக் குடித்துவிடுகிறேன். ஆகாயம் அதிலுள்ள சூர்யன், சந்திரன், மேகங்கள், நக்ஷத்திரங்கள், பூமி, அவற்றுள் முதலியவை இவை எல்லாவற்றையும் அவ்வாறே செய்துவிடுகின்றேன்.' என் றுரைத்துக்கொண்டு கண்டமானகையின் மற்றோர் துண்டத்தைப் பார்த்துப் பார்த்து பூமியில் அடிக்கடி பொங்கி அறைந்துகொண்டு புலம்பலான அவ்வஜ முகியை நோக்கித் துர்முகி உரைக்கின்றாள்.

## 14 அத்தியாயம்

துர்முகி சொல்வதாவது:—"வாராய்! சகியே! யாதுநிமித்தம் நீ அழு கின்றாய்? இவ்விதமாகத் துக்கம்பாராட்டுவதை விட்டுவிடு. பூர்வத்தில் தக்ஷப் பிரஜாபதியினுடைய யாகத்தில் தேவ ஸ்திரீகள் எல்லாம் ஸ்ரீ வீரபத்திர ஸ்வாமியால் மூக்கறுபட்டவர்களும், முலைகள் இழந்தவர்களும் காதுகள். கைகள், வெட்டுண்டவர்களும் ஆனார்கள். என்றனுக்கும் இவ்வித துக்கம் நேரிட்டிருக்கிற தல்லவா? ஆகையால் கேளாய் என்சகியே! இவ்விதமாகத் துக்கம் அடையாதே! நீ உரைத்தபடி கடல் முதலியவற்றை உள்ளங்கையிற் கொண்டு குடித்துவிடுவது முதலான காரியங்களை நடத்திவிட்டால் உலகுமு ழுமையும் நமது சூானது; ஆகையால் அதனால் வரும் நஷ்டம் எல்லாம் அவனுக்குத் தான்.'' என இவ்விதமாகத் துர்முகியால் சமாதானப் படுத் தப்பட்டதன் பேரில் அஜமுகியானவள் உடனே யழுவதைவிட்டு, மஹா

காளரைப் பார்த்து, "அடா சேவகா! உனதெஜமானனுகிய இந்திரனுக்கும் உன்றனக்கும் விலங்குமாட்டும்படி யான் செய்யாவிட்டால் அப்போது இதோ இம்முலைகள் என்னுடையன அல்ல. என உரைத்துவிட்டுத் தூர்முகியோடு கூட அவ்வரக்கியானவள் துரிதமாய்ப் புறப்பட்டுச் சென்றனள்.

கேளீர் சௌனகாதி முனிவர்களே! இவ்விருத்தாந்தங்களை எல்லாம் ஸ்ரீ நாரத முனிவர் அப்போது கைலையங்கிரிக்குச் சென்றிந்திரனிடத் துரைக்க அது கேட்டு இந்திரனும் மிக வியாகுலமுற்றவனுகி, ஸ்ரீ நந்திகேசுவரனிடத்தில் விடை பெற்றுக்கொண்டு துரிதத்தில் இந்திராணியிடம் சேர்ந்து, பிறகு வளால் சகல சங்கதிகளையும் அறிந்துகொண்டு மஹா காளரை நமஸ்காரம் செய்து துதித்துப் பிறகுடனே அவரைவிட்டுப் புறப்பட்டு இந்திராணியோடு கூட மேருகிரிக்குச் சென்று அக்கிரியின் குகைக்குள்ளிருந்து தவம் செய்து வந்தனன்.

அஜமுகியானவள் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு அடிக்கடி புலம்பிக் கொண்டே சூரன் செங்கோல்நடத்துகிற வீர மகேந்திரபட்டணம் அடைந்தனள். அப்போது வீதிகளில் இருந்த அசுரஸ்திரிகள் எல்லாம் மிகவும் துக்கத்தோ டவளைப் பார்த்தார்கள். வாலிப ஜனங்கள் எல்லாம் கூட்டம் கூட்டமாக மிகுந்த வியாகுலத்தோடு அவள் பக்கங்களில் நின்ருர்கள். ஆட்டுக் கடா சண்டை, சேவற் சண்டை, மல்லர் சண்டை, யானைப் பந்தயம், குதிரைப் பந்தயம் இவைகளில் முயன்றிருந்த பல பல வசுரர்கள் அந்தச் சண்டைகளை நிறுத்திவிட்டு 'ஆ, இதென்ன விந்தை! இவளுக்கு யாவரால் இவ்விதம் செய்யப்பட்டது?' என்று ஆச்சர்யம் அடைந்தார்கள். சொக்கட்டான் முதலிய சூதாட்டங்களில் முயன்றிருந்த சிலர்களும் தேர் ஏறுவதில், ஆசையாய் இருந்தவர்களும், இவை முதலிய இன்னும் பல பல விஷயங்களில் முயன்றிருந்தவர்களும் அவரவர் வேலையைவிட்டு, 'ஆ ஆ! இது ருத்திரனுற் செய்யப்பட்டிருக்குமா? அல்லது இது நடத்தினது வீரபத்திரனு? பைரவனு? அல்லது சாஸ்தாவா? அல்லது துர்க்கையா? என்று பலப்பல விதமாகச் சந்தேகித்தார்கள். கைமுறி கொண்ட அவ்வரக்கியைக் கண்டு சிலர் "இவ்விருவரும் ஒருவருக்கொருவர் இவ்வாறு செய்து கொண்டிருப்பார்களோ!" என்றும் அனேகவிதமாய் நினைத்தார்கள். அப்போ தஜமுகியும் தனது தாய், தகப்பன், சகோதரர்கள், பிள்ளை, மருமக்கள் இவர்களை நினைத்துக் கொண்டு, ஆயிரம் யோஜனை விஸ்தீரணம் உள்ளதும், ஆயிரம் கோடிக் கம்பங்களை யுடையதும் தன்னுடைய அனேக அண்டங்களிலும் உள்ள மிகச் சிறந்த ரத்தினங்களாகிய பல பல பண்டங்களால் செய்யப்பட்டதும் அதே விதமாய் மேலும் கீழும் பக்க வட்டங்களிலும் விசித்திரமான கண்ணுடிகள், வஸ்திரங்கள், சாமரங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்டதுமான சூரனுடைய ஆஸ்தான பண்டபத்துக்கு விரைவில் சென்றனள். அங்கு அயலரசர்கள் இருபக்கங்களிலும் வீற்றிருந்த மஹாபயங்கரர்களான தம்பிகள், பிள்ளைகள், பேரப் பிள்ளைகள், மஹா வீரர்களான சேனுபதிகள், மந்திரிகள், தூதர் கூட்டங்கள், இவர்களாலும், சிலர்

சாமரம், சிலர் விசிறி, காளாஞ்சி, வெற்றிலைப் பெட்டி, குடை துவஜம் இவை களைக் கைகளிற் பற்றியவர்களாலும் புடை சூழப்பட்டுச் சிங்காதனத்தில் வீற்றிருப்பவனும், ஊர்வசி மேனகை இரம்பை முதலிய அப்ஸரஸ்திரீ களால் சுற்றிலும் நாட்டியமர்டிச் சேவிக்கப் பெற்றவனும், பயங்கரமான உரு வத்தைக் கொண்டவனும், மங்கள ஆரத்திகளைக் கைப்பற்றிய அனேக தேவ ஸ்திரீகள், தினசுத்திகளை ஓதிவருகிற பிரம்மன் அவரது மக்கள், மந் திரவாதிகள், ஜோதிடர்கள் பெயர்போன கவிராயர்கள், ஸாமுத்ரிக நூற் புலவர்கள், வைத்தியர்கள் இவர்களால் சூழப்பட்டவனும், பற்பல ரத்தினங் களால் விசித்திரமாய் அமைக்கப்பட்ட ஆபரணங்கள், ஹாரம், கங்கணம், தோள் வளைகள், கிரீடம், மோதிரங்கள், ஆயிரத்தெட்டு மாற்றுத் தங் கத்தினால் விநோதமாய் அமைக்கப்பட்ட அரைஞாண் இவை முதலிய பற் பல ஆபரணங்களைப் பூண்டவனும் மிக நேர்த்தியான வஸ்திரங்களை உடுத்திய வனும், மிக மேன்மை கொண்டவனும் கானம்பண்ணுகின்ற கின்னரர் சிரேஷ் டர்கள், ஸித்தர்கள், வித்தியாதரர்கள் இவர் முதலியவர்களாலும், கட்டியக் காரர்கள், அரிக்காரர்கள் இவர்களாலும் பற்பல குணாதிசயங்களை யெடுத்துத் துதிக்கப் பெற்றவனுமான ஸாக்ஷாத் மற்றோர் ருத்திரன்போல் ஸுகமாக வீற்றிருக்கின்ற புருஷ சிங்கமான அச்சூரபத்மனை அவ்வஜமுகி கண்டு மெய் மறந்தவளாகிப் பூமியில் விழுந்தனள். "ஓ சூரா! உன்றன் வலிமையெல் லாம் எங்குப் போயிற்று? போர் முன்னர் ஹரியானவன் உன்னால் சபிக்கப் பட்டவன் அல்லவோ? சூர்யனுடைய கிரணத்தின் முன்னர் கோட்டான் போல் இந்திரன் இந்த உனது பராக்கிரமமாகிய ஒளியைக் காண்பதற்குத் திற மையற்றோனாகிச் சீக்கிரத்தில் குகைக்குள் புகுந்துவிட்டனன் அல்லவோ? ஓ அண்ணா அத்தகைய இந்திரனுடைய சேவகனான ஒரு கொடியோனால் எனக்கிவ்வாறு செய்யப்பட்டது. ஓ சிங்கமுகா! ஆயிரம் சிரசுகளையும் இரண் டாயிரம் கைகளையும் உடைய நீ இந்திரனோடு கூடிய ஐராவதத்தை வாரிச் சுருட்டிச் சுழற்றி ஆகாயத்தில் எறிந்தாய் அல்லவா? அத்தகைய உன்றன் வலிமை இப்போது எங்குப் போயிற்று? யாதொரு தாரகனால் முந்தி யுத்தத்தில் விஷ்ணுவால் பிரயோகிக்கப்பட்ட சுதர்சனமென்ற சக்கரமானது மார்பின் மீதோர்விதப் பதக்கம் போல் அணியப்படலாயிற்றோ. அதேவித மாக இளமையிலே சூர்யனுக்குப் பகைஞனான யாதொரு பானுகோபனால் விளையாட்டுத் தன்மையாகவே சூர்யன் தொட்டிலின் மீது கட்டப்பட்டனனோ. இவர்களாலும் இதேவிதமான அக்னிமுகன் ஹிரணியன், வஜ்ஜிரபாகு, மஹா பலிஷ்டர்களான துவிசிரஸு, திரிசிரசு, முதலியவர்களுடன் உங் களால் எல்லாம் கிரமமாகவே இப்போதென்னுடைய இத்தகைய நிலைமை யானது எவ்வாறு தான் பார்க்கப்படுகின்றதோ! பூர்வத்தில் மஹா வீரர் களான என்மைந்தர்கள் இந்திரனால் கொல்லப்பட்டார்கள். மஹா பலிஷ்டர் களான நீங்கள் எல்லாம் அதையும் கவனியாமல் இருந்துவிட்டீர்கள். ஐயோ என் அப்பனே! என்னம்மா! ஐயையோ! மஹா பலிஷ்டர்களான வென் றன் மக்களா! எங்குச்சென்று விட்டீர்கள்?" என்றிவ்வாறெல்லாம் பலவித மாகப் புலம்பிக் கொண்டுரைத்துப் பூமியில் சுற்றிலும் புரண்டழுகிற அஜ

முகியைச் சூரர்களுக்கெல்லாம் சூரனுன சூரபதுமன் பார்த்துக் கேளீர் சௌனகாதி முனிவர்களே! துடிக்கலுற்ற உதட்டினுல் கோபாக்னியை மிகுதியாகக் கக்கலுற்றவனுகி, "ஆ குழந்தாய்! நீ அழுவதை நிறுத்தி யாவரால் இக்கொடுமை யளிக்கப்பட்டதென்பதை விரைவில் உரைப்பாய். அப்பகை ஞனைப் புத்திரமித்திர பந்துவர்க்கங்களுடனும் சங்கரித்து விடுகின்ருேம்." என்றுரைத்தனன். இவ்வாறு சொல்லிய சூரபத்மனை நோக்கி அஜமுகி மிகத் துக்கம் உற்றுக் கூறுகின்ருள். "ஓ அண்ணு! சீர்காழி நகரத்தி மரத் தோட் டத்தின் கண்ணிருந்த இந்திராணியைக் கண்டு, "அடி சுந்தரி! சூரனிடத் துக்கு வா என்றுரைத்த மாத்திரத்தில் அப்போதவனைப் பாதுகாத்துக் கொண்டிருந்தவன் விரைவில் கை மீது கத்தி எடுத்து என்னை இவ்வாருகச் செய்துவிட்டான்." என்று மிக அழுதுகொண்டே உரைத்த அவளது வசனத்தைக் கேட்டுச் சூரன் மிகக் கோபங்கொண்டவனுகி, சூர்யன் முதலிய நவக்கிரஹ தேவதைகள், ஆறு ருதுக்கள், இன்னும் மற்றுமுள்ள தேவர்கள் இவர்களை எல்லாம் அழைத்து, அவர்களுக்குக் கடுமையான விலங்குகளை மாட்டி அவர்களைக் கொடுமையாகத் திட்டி, "ஓ கேளீர் சௌனகாதி முனி வர்களே! அங்கெல்லோர்களையும் சிறைச்சாலையில் அடைப்பித்தான். மேலும் அப்போது பூலோகத்தில் காவலாளிகளாய் இருந்த அசுரர்களை யெல்லாம் சிரச்சேதம் செய்வித்தனன். பிறகு சூரபத்மன் பிரமனைக்கொண்டு அவ்வஜமுகிக்குக் கையைச் சரியாக்குவித்தனன். அப்போது பிரமன் "ஓ சூர பத்மா! சூர்யன் முதலிய நவக்கிரஹ தேவதைகள் எல்லாம் உலக ரக்ஷ ணார்த்தமாக ஏற்பட்டிருப்பதால் அவர்களை விடுவிக்க வேண்டியதல்லவா?" என்று மிகவும் அன்புள்ள பல வார்த்தைகளால் சொல்லிச் சீக்கிரத்தில் அவர் களை விடுவித்தனர். அதன் பிறகு இந்திரன் மீது மிகுந்த கோபம் கொண் டிருந்த சூரபத்மனை நோக்கிப் பானுகோபன் வசனம் உரைக்கின்ருன்.

## 15. அத்தியாயம்.

பானுகோபன் சூரபதுமனை நோக்கி "ஓ! அண்ணு! இந்திரனென்ற அவ்வற்பனைப்பற்றித் தேவரீர் யாது செய்ய வேண்டும்? யான் சென்று அவனெங்கிருந்தாலும் பிடித்துக் கட்டி அவனை இந்திராணியோடு தேவரீர் முன்பாக வோர் நொடிப்போதிற் கொண்டுவருகிறேன். எந்தனுக்கு அவ்விந் திரன் அகப்படாவிட்டால் அவனது அமராவதிப் பட்டணத்தைக் கொளுத்தி விட்டு அங்குள்ள தேவர்களை யெல்லாம் கட்டித் தேவரீர் முன்பு கொண்டு வருகிறேன் என உரைத்துக் கேளீர்! முனிவர்களே! பானுகோபன் தாதையிடத்து உத்தரவு பெற்றுக் கொண்டு புறப்பட்டனன். பிறகு அச்சூர பத்மனும் அங்கிருந்த பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களை அவர் அவர்களிடத்திற்குச் செல்லும்படி அறிக்கையிட்டுத் தானும் அந்தப்புரத் துக்குச் சென்றனன். அப்போது பானுகோபனேடு ஆயிரம் வாகினி சேனைகளும், அவைகளின் தேர் வரிசைகளும், மதங்கொண்ட யானைவரிசை களும், குதிரைகளும் அநேக குடைகள், பலபல துவஜங்கள் ஆகிய இவைக ளுடன் பிரயாணப்பட்டன. பானுகோபனும் இவ்விதமான தளங்களோடு

புறப்பட்டு இருபதினாயிரம் குதிரைகள் கட்டப்பட்ட மிகவும் உத்தமமான தேர்மீது விரைவில் உட்கார்ந்து கொண்டு, துர்முகி யென்பவளுடன் சீர்காழிக்குவந்து அவளாற் காட்டப்பட்ட அங்குள்ள மரத் தோட்டத்தை யுற்று நோக்கி அதில் அங்கு இந்திரன் காணப்படாததனால் அம்மரத்தை வெட்டிச் சின்னாபின்னமாக்கினன். கேளீர்! முனிவர்களே! பிறகு அவன் அங்கிருந்து புறப்பட்டுச் சேனைகளோடு பூமியெங்கும் தேடித்திரிந்து அதில் அங்கு அவ்விந்திரன் காணப்படாததனால் அதன்மேல் சுவர்க்க லோகஞ் சென்று அங்குள்ள கற்பகவிருக்ஷங்களை யெல்லாம் வெட்டி அலங்கோலப் படுத்தி இந்திரனுடைய பட்டணத்தை முற்றுகை போட்டான். அப்போ தங்கிருந்த ஜயந்தனும் அது கேட்டு மிகவும் ஆலோசித்ததன்மேல் அவனோடு போர் புரியத் தீர்மானித்து மிகச் சிரேஷ்டரான ஐராவத மென்ற வெள்ளை யானையின் மீதேறிக்கொண்டு பற்பல வாயுதங்களையும் தரித்தவனாகிச் சாவற்ற தேவர்களுடன் பட்டணத்துக்கு வெளியில் வந்தனன். மிகுந்த கர்வங்கொண்ட பானுகோபன் சேனையானது யுத்தத்திற்குச் சன்னத்தமாய் வந்த தேவசேனையைக்கண்டு அதனோடு எதிர்த்தது. அப்போது அவ்விருசேனைகளுக்கும் மிகுந்த உயுத்தம் உண்டாயிற்று. கேளீர்! தரணிதேவர்களே! தேவசேனைகள் கிலேசங்கொண்டு உடனே வோட்டம் பிடித்தன. அப்போது வசுரர்களும் ஓட்டங்கொண்ட தேவர்களைப் பிடித்துக்கட்டி விரைவில் பானுகோபன் அருகிற் கொணர்ந்து அவன் உத்திரவு பேரில் அவர்களை இறுக்கிக் கட்டி யுருட்டினார்கள். அதுகண்டு வெகு கீர்த்திவந்தனான ஜயந்தனும் மிகவும் ஆலோசித்து எராளமான பாணங்களை வருஷித்து அசுரசேனைகளில் நூறு வாகினி சேனையைக்கொன்றனன். ஓ! கோ! அப்போது ஐராவதம் பலவசுரர்களைக் கொன்றது. பிறகு மிகப் பலவானான நீலகேசனென்ற கொடிய வசுரன் ஜயந்தன் மீது மிகுந்த அஸ்திரங்களைப் பிரயோகித்தனன். பிறகு ஜயந்தனும் அவ்வசுரன் மீது அநேகம் அம்புகளைப் பொதிந்து ஓர் கணத்துள் அவனது வைரம் பொருந்திய கவசத்தை யழித்தான். அப்போது நீலகேசனும் மிகவாத்திரங் கொண்டவனாகி பல அஸ்திரங்களை வருஷித்து ஜயந்தனது வில்லின் நாணைத் துண்டித்தனன். அதன்மேல் ஜயந்தனும் மாயா மந்திரத்தை ஜெபஞ் செய்து பற்பல வுருவங்களை யெடுத்து அவன் மீது மிகுந்த சரங்களைச் சொரிந்தனன். அப்போது நீலகேசன் சிறிது பலங் குன்றியவுடனே சோமாசுரன், வருணன், பத்துமன், மிகப்பலவானான மாயாபலீ, மகாசுரனானவரிமன், மாகதன், தண்டகன், மாருதபலி, மிகுந்த பலபாரக்கிரமங்களைக் கொண்ட ஸுரகேசரி ஆகிய இவர்களெல்லாம் நீலகேசன் வலிமை குறைந்ததைக்கண்டு விரைவிற் கொடிய உயுத்தத்தை நடத்துகையில் அச்சயந்தனது மாயையைக்கண்டு மயக்க முற்றவர்களாகி மிக பலிஷ்டர்களான அவ்வெல்லோர்களும் சிறிது மன ஊக்கங்குறைந்து நின்றுவிட அதுகண்டு மகாபலிஷ்டனான பானுகோபனும் தானே தனது பராக்கிரமங்களைச் சொல்லிக்கொண்டு ஜயந்தன் முன்னர்வந்து விரைவிலநேக அஸ்திரங்களைப் பிரயோகித்தனன். பிறகு ஜயந்தனும் தனது பெயரின்புகழை யுரைத்துக் கொண்டு பல அஸ்திரங்களைப் பிரயோகித்து மறுபடியும் மிகுந்த பெயர் போன

வாயிரம் அஸ்திரங்களைத் துரிதமாக வருஷித்துப் பானுகோபனது கெட்டியான வில்லை முறித்தனன். பின்பு பானுகோபனும் மிகக் கோபங் கொண்டவனாகி மற்றோர் வில்லை யெடுத்து அப்போது ஜெயந்தனால்விடப் பட்ட அஸ்திரங்களைத் துண்டித்து பின்னு மனேகமாயிர மஸ்திரங்களை அவன்மீது பிரயோகித்தனன். அப்போது ஜயந்தனும் ஆயிரக் கணக்கான அஸ்திரங்களைச் சந்தானித்து பானுகோபனது ரதத்தையு முடைத்து அதிற் பூட்டிய குதிரையையும் கொன்றனன். பிறகு பானுகோபன் விரைவில் மற்றோர் இரதமேறிக்கொண்டு அவன்மீது வேறு அனேகவித பாணங்களை வருஷித்து அவனது அம்பறாத்தூணியையும் அறுத்து ஐராவதமென்னும் யானையையும் பலவிடங்களில் உதிரம்பெருகி ஓடவடித்தான். அப்போது ஜயந்தன் மூர்ச்சையடைந்து விழுந்தான். உடனே மகாவலிமைகொண்ட ஐராவதமானது பானுகோபனது ரதத்தைக் கொம்புகளால் குறுக்காக வேகமாயிடித்துக் சாரதியையும்கொன்று பானுகோபனையும் கொம்புகளால் குண்டுக்கல்போன்ற கெட்டியான மார்மீது முட்ட அப்போது அம்முட்டின் வலிமையால் கேளீர் சௌனகாதி முனிவர்களே! அதன் இரண்டு கொம்புகளும் முறிந்துபோயின. அப்போது பானுகோபன் கொம்பொடிந்த அக்கஜராஜனைக் கன்னத்தில் நோக வடிக்க அவ்வடிபட்ட மாத்திரத்தில் அவ்வியானை மூர்ச்சை யடைந்தது. பிறகு அசுரர்கள் எல்லோரும் மிகுந்த ஆட்டகாசஞ்செய்தார்கள். அப்போது பானுகோபன் அசுரர்களுடன் பட்டணத்துட் புகுந்து பின்னும் தீயிட்டு மிகுதியிருந்த தேவர்கள், தேவஸ்திரீகள், மூர்ச்சையடைந்த ஜயந்தன் இவர்களை எல்லாம் கட்டி, அவர்களையும் முந்திகட்டிவைத்த தேவர்களையும், கைக்கொண்டு விரைவிற் சூரனிடஞ் சென்று சகல விருத்தாந்தங்களையும் ஆதியோடந்தமாய்ச் சரிவர வுரைத்தனன். அதன்மேல் அச் சூரபதுமன் மானமழிந்த தேவர்களை அப்போது கண்ணுற்றதில் வெகு கோபமுற்றவனாகி அஜமுகிக்கு முன்பாக அவர்களை அடித்து, மேலும் அவ்வசுரவரசன் அவர்களது கை கால் முதலிய உறுப்புகளைக் கண்டனஞ் செய்தனன். உடனே யவர்களுக்கு அவயவங்களுண்டாகி விட்டதைக்கண்டு அது அவர்கள் அமிர்தபானஞ் செய்திருப்பதால் இத்துன்பத்தினின்றும் நீங்கினேமென்று அறிந்து ஓ! கோ! கோ! அப்போது ஜயந்தன் முதலிய தேவர்களுக்கு விலங்கிட்டவர்களை அவ்வசுரன் விரைவிற் சிறைமீது அடைப்பித்தனன். மேலும் அச் சூரன் தேவஸ்திரீகளை யெல்லாம் அசுரர்களுக்குப் பணிவிடை செய்யும்படி திட்டமிட்டு அப்போது மைந்தனாகிய பானுகோபனை நோக்கி "அடா, பானுகோபா! பூர்வத்தில் நீ குழந்தயாக விருக்கையில் சிறிய தொட்டிலிற் படுத்திருக்கும் போது உந்தன் மீது பலகணிவாயின் வழியாகக் கிரணங்களால் தொட்ட சூரியனை யப்போது உடனே நீ பிடித்துக்கொண்டுவந்து உனது தொட்டிலின் காலில் இருக்கிக் கட்டிவிட்ட அப்போது பிரம்மன் எம்மிடத்தில் சூரியனை விடுவிக்கும்படி கேட்டுக்கொண்டதற்கு யாம் அவ்வாறு உரைத்த பிரம்மனை நோக்கி, 'ஓ! பிரம்மாவே! அவனைக் கட்டிவைத்த பானுகோபனே, அவனை விடுதல் வேண்டும்' என, பிறகு பிரம்மனுந் தன்னிடம்வந்து உனக்கு பிரம்மாஸ்திரம் முதலியவற்றை வெகுமதியாக ஈந்து உந்தனைப் பிரார்த்திக்கையில்

பிறகு நீ யவனை யவிழ்த்து விட்டாயல்லவா ஆ! என் கண்மணியே! உந்தன் பலமும் பராக்கிரமும் அவ்வாறிருக்க இப்போது இச் சயந்தன் உந்தனுக்கு எம்மாத்திரம்?'' என்று இவ்வாறான பலவார்த்தைகளைச் சூரபதுமன் தன் மைந்தனாகிய பானுகோபனுக்கு உரைத்து அவனை அவன் விடுதிக்கனுப்பி விட்டுத்தானும் தனது அந்தபுரத்திற்குச் சென்றான்.

கேளீர்! சௌனகாதி முனிவர்களே! பிறகு ஐராவதம் மூர்ச்சை தெளிந்தெழுந்து மகா பரிசுத்தமும் மகாமங்களகரமுமுள்ளதுமான திருவெண்காட்டென்ற பட்டணத்துக்குச் சென்று அங்கு ஸ்ரீ மகாதேவனைப் பூஜித்து மிக்க நேர்த்தியான கொம்புகளையடைந்து பிறகு அப்போது இந்திரனிருக்கும் மேருகிரிக்குச் சென்றுவிட்டது. இந்திரன் முதலிய தேவர்கள் எங்ஙனம் சூரபதுமனால் தீங்களிக்கப்பட்டார்களோ இதேவிதமாகவே, ஸ்ரீ நாராயணன் பிரமன் மகாத்துமாக்களாகிய ரிஷிகள் இவர்களெல்லோரும் மகாபாதகர்களான சூரபதுமன் சிங்கமுகன், தாரகன் இவர்களது மைந்தர்கள் இவர்களால் இராப்பகலாய் ஒப்வில்லாமல் வதையுண்டார்கள். இதேவிதமாக தேவர்களால் பூஜிக்கலுற்ற பிரகஸ்பதிதேவனால் சகலதுரிதங்களையும் தொலைப்பிக்கலுற்ற ஸ்ரீ ஷண்முகப் பெருமாளுக்கு அசுரர்களது வரலாறுகள் உரைக்கப்பட்டன. அதே வரலாறுகளை பாவலேசமற்ற வுங்களுக்கு இப்போது யான் ஆதியோடந்தமாகச் சரிவர முறையே யெடுத்துரைத்தேன்.

அசுர காண்டம் முற்றிற்று.



# வீர மாகேந்திர காண்டம்

## 1 அத்தியாயம்

---

நைமிசாரண்ய முனிவர்களை நோக்கிச் சூதமுனிவர் சொல்லுவதாவது:—
கேளுங்கள் அந்தணர்களே! தேவகுருவாகிய பிரஹஸ்பதியானவர் சொல்லிய வசனங்களைக் கேட்டபிறகு ஸ்ரீ முருகக்கடவுளானவர் பிரம்மா விஷ்ணு முதலிய தேவர்களைத் தனது கடாக்ஷம் நிரம்பிய பார்வையினால் பார்த்து அவர்களுக்கு அநுகூலமானதும், செவிக்கினிமையானதுமான சொற்களால், "கேளுங்கள் பிரம்மா விஷ்ணு முதலிய தேவர்களே! தன்னுடைய தவ வன்மையினாலும், தன்னுடைய தம்பியர் முதலாயினோர் வலிமையினாலும், சுத்தஹிருதயமுடையவர்களாகிய உங்களை யெக்காலமும் துன்பத்திற்குள்ளாக்கிக் கொண்டுவரும் சூரனை இக்கணமே அவனுடைய சுற்றத்தாரோடும் அதஞ்செய்து தேவர்களாகிய உங்களுக்குண்டான துன்பத்தினை யொழித்து உங்களை உங்கள் பதவியில் கலக்கமின்றி இன்பத்துடன் வாழும்படிச் செய்கின்றேன். அதுகாரணமாக இச்சமயம் அவனுடைய பலாபலம் முதலியவற்றை நன்குணரத்தக்கவனும், சமயோசித தந்திரமுடையவனும், நல்ல பராக்கிரம முள்ளவனுமுள்ள ஒருவனை நாம் தூதாகவனுப்பவேண்டு மல்லவா? அதற்காக நீங்கள் யாரை நியமிக்கின்றீர்கள்" என்று முருகபிரான்கேட்க தேவர்கள் அப்பெருமானது திருவருளை வியந்து பாராட்டித் தங்களுக்குள்ளே யாலோசித்து "சுவாமீ! தங்களுடைய திருவடியில் சதா அன்புபூண்டு ஒழுகுபவராகிய வீரபாகுத்தேவரே யச்செயலுக்குகந்தவர்" எனக்கூறினர்கள். பின்னர் குமாரக்கடவுள் வீரபாகு தேவரைத் தூதனுப்பச் சம்மதித்தனர். அதுகண்டதேவர், குழாங்களெல்லாம் மிகுதியும் ஆனந்தபரவசராகி வீரபாகுவினிடஞ்சென்று, "வீரமுந் தீரமும்மிக்குயர்ந்த வீரபாகுவே! தாங்கள் தயவுசெய்து தேவர்கள் படும் துன்பத்தினை யொழிக்கவேண்டிச் சூரனது நகரஞ்சென்று அவனது குடி, படை, அரண் முதலியவைகளைச் செவ்வனே யறிந்துவரக் கோருகிறோம்" என்று முறையிட்டனர். அது காரணமாக வீரபாகுவானவர் ஸ்ரீ குமாரக்கடவுளைத் தரிசித்து அடிபணிந்து அவரது உத்திரவுக்கெதிர்பார்த்து நிற்கையில் அடியார்க்கெளியனாகிய நமது முருகப்பெருமான் வீரபாகுவை நோக்கி "ஏ! வீரபாகு! சூரனிடம்சென்று நமது தூதென்பதை யறிவித்துப்பின் 'நீ சிறையில் வைத்திருக்கின்ற சயந்தன் முதலிய தேவர்களை யெல்லாம் சிறையினின்றும் வெளியில் விட்டுவிடுவது மல்லாமல் இன்றுமுதல் நீயிதுவரையில் செய்துவந்த பாபகாரியங்களை யெல்லாம் விட்டுக்கிரமமாக நடப்பையேல் உன்னைக்குமரக்கடவுள் இரக்ஷிப்பார். இல்லையேல் உனது சுற்றத்தோடும் அழித்துவிடுவார்' என்பதை அவனுக்கறிவித்து வரக்கடவை" எனக் கட்டளையிட்டனர். இந்தவிதமாக முருகப்பெருமானது திருவாக்கைக் கேட்ட வீரபாகுவானவர். மிகுதியும் ஆனந்தித்தவராகி அவ

ரது திருவடியினை வணங்கி விடைபெற்றுத்தேவர்கள் உரைத்தவற்றையும் மனத்துட்கொண்டு, சூரனுனவன் இருந்து அரசுபுரியும்படியான வீரமாகேந்திர பட்டணஞ் செல்லப் புறப்பட்டனர். இவ்விதமாகப் பிரயாணப்பட்ட வீரபாகுவானவர் சூரனது நகரம் எந்த திக்கிலுள்ளது என்று பார்ப்பதற்காக எல்லா மலைகளிலும் உயரத்திலும், பரப்பிலும் பெரியதான கந்தமாதன கிரியையடைந்து அதன் மீதேறிநின்று, மிகப்பயங்கரமுடையதாயும், பிரமலோகம் வரைச்சென்று முட்டுவதாயுமுள்ள ஒருபெரிய விசுவரூபமெடுத்துச் சூரனுடைய மிகவுன்னதமான நகரத்தைக் கண்டனர். அந்நகரமானது பலவசுரர்களாலும், பலகோபுரங்களாலும், அனேக சிறு நகரங்களாலும், பற்பல சோலைகள், மாளிகைகள், முதலியவைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. மற்றுஞ் சுற்றிலுமுள்ள சப்த சமுத்திரங்களையும், அட்டகுல பர்வதங்களையும் கண்ணுற்றனர். பிறகு இத்தகைய வசுரர்களால் நிரம்பிய விந்தநகரத்தை உள்ளங்கையினுற் பிசைந்து நசுக்கி விடுவோமென்றுல் அங்குச் சூரனுல் சிறையில் அடைக்கப்பட்டுள்ள தேவர்களும் மடிந்துவிடுவார்களே என்று எண்ணியவராய் அங்கிருந்து வீரபாகுவானவர் கடலைத் தாண்டுவதற்காக அட்டகாசஞ் செய்தனர். அச்சமயம் அம்மலையானது பூமிக்குள் ளாழ்ந்திவிட்டது. அம்மலைக் குகைக்குள்ளிருந்த தாரகனது வீரர்களான சிலவசுரர்கள் பூமிக்குள் ளாழ்ந்திமாண்டனர். பிறகு வீரபாகுவானவர் கடலைத் தாண்டுவதற்கேற்ற வடிவத்தைக் கொண்டு தேவர்சேனபதியாகிய ஸ்ரீமுருகப்பெருமானது திருவடியை மனதில் தியானித்துக்கொண்டு சமுத்திரத்தை மிகவேகத்தோடு ஒரு நொடியில் தாண்டினர். பின்னர் அம்மலையானது முன்போலவே வெளியில் கிளம்பியது. வீரபாகுவானவர், ஆடம்பரத்துடன் கடலைத்தாண்டிச் செல்லுகையில் பர்வதங்களெல்லாம் பெருங்காற்றிடைப்பட்ட சிறுதுரும்புகளைப்போல் அவருடன்வருவதாயின. சமுத்திரமும் தன்னிடத்து அலைகளைவீசிக் கொந்தளிப்பை யடைந்தது. அக்கடல் நடுவே இருந்த வடவாக்னியும் அவர் செல்லுகையில் உண்டான காற்றின் விசையினுல் அணைந்து போயிற்று. மேகக்கூட்டங்களும், நக்ஷத்திரங்களும், சூரிய சந்திரர்களும் நிலைதிரிந்தனர். இவ்விதமாக வந்தர மார்க்கமாய்ச் செல்லும் வீரபாகு செயலைக்கண்ட சிங்கமுகாசுரனது சேனபதியும் மிகுந்த பராக்கிரமு மமைந்த வீரசிங்கனென்பவன் நமது எஜமானுகிய சிங்கமுகாசுரனது ஆளுகைக் குட்பட்ட இலங்கைமா நகரத்திலிதுகாறும் ஒருவருமிவ்விதம் வந்ததில்லையே. இன்று ஒருவன் வர நாம்விடுவதோ எனக்கருதியவனுய், அந்தர மார்க்கம் சென்று மிகுந்த விரைவினேடு செல்லும் வீரபாகுவை நோக்கி, அடே! யாரடா நீ, துரிதமாக எங்குச் செல்லுகின்றுய்? நீ யாவன்?'' என இடியானது இடித்தால் போன்று அதட்டி வினவினுன். வீரபாகுவானவர் "அடா! யான் வீரபாகு. சூரனது நகரத்திற்குச் செல்லுகின்றேன். உன்னுல் என்ன செய்யமுடியும் நீ? போய் விடு'' என்று சொல்லிக்கொண்டே தான் விரைந்து செல்லுவதிலேயே கருத்தாகச் சென்றுர். அதுகாலையில் வீரபாகுமீது வீரசிங்கனுனவன் சரமாரிபொழிந்தான். வீரசிங்கனது சேவகர்களான அசுரர்க ளனைவருங் கூக்குரலிட்டனர். அதனைக் கண்ணுற்ற வீரபாகுவானவர் ஒருகத்தியை யெடுத்து நூறுவாகினி எண்ணிக்கை

யுள்ள வசுரர்களைச் சேதித்துத்தள்ளினர். ஏனைய அசுரர்களெல்லாரும் ஓட்டம் பிடித்தனர். இதைக்கண்ட வீரசிங்கன் தானே நேரில்வந்து ஓர் சூலத்தையும் வச்சிராயுதத்தையும் வீரபாகுதேவருடைய திருமேனியைக் குறிப்பிட்டுமிகு வேகமாய் வீசினான். அது காலையில் மிகுந்த வல்லமைசாலியாகிய வீரபாகுத் தேவர் அந்த இரண்டு ஆயுதங்களையும் தன் கையிற் பிடித்திருந்த கத்தியினால் வெட்டித் தள்ளி வீரசிங்கனது சிரத்தையும் கைகளையும் சேதித்துவிட்டனர். இவ்விதமாக ஆகாயத்திலிருந்து கொண்டே பல அசுரர்களைச் சடுதியில் நாசம் பண்ணிவிட்டு, மிகப் பயங்கர ரூபத்தையுடையவராய் வீரவாகுத் தேவர் இலங்கை மீது வேகமாகக் குதிக்க அந்த வேகத்தினால் இலங்கை யானது கடலுக்குள் மிகவும் ஆழ்ந்தது. அதனால் பல அசுரர்கள் உயிர் துறந்த னர். அங்க வீனராயினர். சிலர் திமிங்கில முதலிய கடல் ஜெந்துக்களுக்கு இரையாயினர். இதுகளைக் கேட்ட யாளிமுகாசுரனது புத்திரனாகிய அதிவீர னென்னுமசுரன் மிகக் கோபமுடையவனாய் மகா கர்வத்துடனே யுத்த சன்னத்தங் கொண்டு வெளிப்புறப்பட்டான். அவனுடைய சேனைகளோ கோபா வேசமுடையவர்களாய் வீரவாகுத் தேவரை எதிர்த்துக் கோடைமேகங்கள் போல சரமழை பொழிந்தனர். இப்பாணங்க ளனைத்தையும் ஒருவினாடியில் சேதித்துத் தள்ளி வீரவாகுத் தேவரானவர் அதிவீரனுடைய சேனாவீரர் சிலரை யமனுலகு புகுத்தினர். இதன்மேல் அதிவீரன் என்னுமசுரன் யுத்த சன்னத்தனாகிப் புறப்பட்டு அதிபயங்கரத் தோற்றத்தோடு நிற்கிற வீரவாகுத் தேவர்மீது சக்தி யென்னும் பெயருடைய ஆயுதத்தைப் பிர யோகஞ் செய்தான். அதையும் மகாவீரனாகிய அவ்வீரவாகுத் தேவர் தனது கத்தியினால் வெகு லேசாகச் சேதித்துத் தள்ளி விட்டதைக் கண்ட அவ்வசுரன் தன்னிடமிருந்த மிகத்திடமான ஓர் கதாயுதத்தை யெடுத்து வீரவாகுத்தேவர் திருமேனியின் மீதெறிய அஃது அவர் திருமார்பின் மீதுத் தாக்கித் தூளாக முறிந்துவிட்டது. இதைக்கண்ட அதிவீரன் முன்னிலும் மிகுந்த கோபமுடையவனாகி ஓர் சூலாயுதத்தை எடுத்து அவர் மீது வேகமாக விடுக்க மிகப்பயங்கரமான அச்சூலாயுதத்தை வீரவாகுத்தேவர் தமது திருக் கரத்தாற்பொடிசெய்து வீசினர். உடனே அவ்வசுரன் அடக்கமுடியாத ஆவே சங்கொண்டவனாகி சதுர்முகனா லளிக்கப்பெற்றதாகிய மிகவும் பிரகாசம்பொரு ந்திய தனது கத்தியை யெடுத்து அதனுடைய மகிமைகளில் சிலவற்றைத் தன துநாவினால் கூறிக்கொண்டே வீரவாகுதேவருக்கு அருகிலோடி கரகரவென் றுமுன்னும் பின்னும் மேலுங் கீழும் பாரிசங்களிலுமாகச் சுழற்றிக் கடைசி யில் அதைவட்டமாகக் கரகரவென்று சுழற்றிக்கொண்டே தனக்குத் தெரி ந்த சிலம்பப் பயிற்சியை மிகுதியாகக் காட்டும்போது, வீரவாகுவும் அவ ருடைய சிலம்பப் பயிற்சியை வெளிப்படுத்துமாறு தானும் அவனுடன் யுத் தஞ் செய்து சிறிது நேரங் கழித்து, தனது கரத்திற்பிடித்திருந்த தீக்ஷணிய மாகிய கத்தியால் அவ்வசுரனது ஒரு கரத்தையும் சிரத்தையுமறுத்து மறுபடி யும் மற்றொரு கரத்தையும் அனுயாசமாக வறுத்துத் தள்ளினர். கேளீர் சௌனகாதி முனிவர்களே! இவ்விதமாக இவ்விரு வீரர்களும் சிலம்ப யுத்தஞ் செய்ய வீரவாகுத்தேவர் வெற்றி கொண்டதுடன், மேலும் மேலும் தன்னை

யெதிர்த்து வந்தஅநேக அசுரர்களை யெல்லாம் அதம்பண்ணிக்கொண்டு இலங்கா புரியிலே மிகுந்த அட்டகாசஞ் செய்து கொண்டே மிகப் பயங்கர ரூபமுடையவராய் ஆகாயமார்க்கஞ் சென்றருளினர்.

## 2. அத்தியாயம்.

பின்பு வீரபாகுவானவர் ஆயிரம் யோசனை விஸ்தீர்ணமுள்ள அகழியை ஓர் க்ஷணத்தில் வேகமாய்த் தாண்டி வீரமகேந்திரபுரத்தின் வடக்குக் கோட்டை வாயில் காப்போராகிய கோரன் அதிகோரன் என்னும் இரண்டுபயங்கரமுடைய அசுரர்களையும், ஆயிரம்வாகின எண்ணிக்கையுள்ள வேழங்கள், அதே எண்ணிக்கையுள்ள தேவர்கள். அதில் இரட்டிப்புக் கணக்குள்ள குதிரைகள், தளங்கள் முதலிய வற்றையும் கண்டு இவ்வழியாகத் தாம் உள் நுழைந்தால் நமது வேலைக்கு ஒரு சிறிது தடைநேர விடமுண்டாகுமென நினைத்து அங்கிருந்து கீழண்டை கோட்டை வாயிலடைந்து அங்குள்ள மகாபலசாலிகளான, மகிஷாக்ஷன் வீரபானு வென்கிற பெயர்களை முறையே யுடையவராகிய வாயிற் காவலாளரையும், வடக்குவாயிலி லிருப்பது போலவே யானை தேர் குதிரை, காலாள், முதலிய நான்குவகைத் தளங்களிருப்பதையும் ஒரு சிறிது கண்ணுற்றுப் பிறகுத் தென்னண்டை கோட்டை வாயிலடைந்தனர். கேளீர் சௌனகாதி முனிவர்களே! வீரவாகுத் தேவரானவர் வீரமகேந்திர புரியின் தெற்குக் கோட்டை வாயிலடைந்ததும், அங்கும் முற்குறித்த காவலாளரைவிட மிகப் பயங்கரமான காக்ஷியையுடைய கஜமுகனென்கிற பெயரையுடைய அசுரன் தனது ஆயிரம் முகங்களோடும் இரண்டாயிரம் கைகளோடும் ஆயிரம் தும்பிக்கை களோடும் கூடியவனாய் தனது சைனியங்களுடனே ஆகாயத்துக்கும் காவல் செய்து கொண்டிருப்பதைக் கண்டார். உடனே கஜமுகாசுரனும் வீரவாகுத் தேவரைப் பார்த்து மிகக் கோபாக்கிராந்தனாய் 'அடா! நீ யாவன்? உன்னை அனுப்பினவன் எந்தத் தேவன்? நீ இவ்விடம் வந்த மார்க்கமெது? என்று வினவிக் கொண்டே மிக்க உயரமாகிய மலையைப் பிடுங்கி தன்கரங்கொண்ட வேகத்துடன் வீரவாகுத் தேவருடைய திருத்தோளின்மீது படும்படி வீசி யெறிந்தான். வீரவாகுத் தேவரோ அம்மலையைத் தன் தோள் மீது வெகு சாதாரணமாக ஏந்திக்கொள்ள, அம்மலையானது தூள் பட்டு நொருங்கிற்று.

கேட்டீர்களோ முனிபுங்கவர்களே! இதைக்கண்ட கஜமுகாசுரன் மிகுந்த ஆச்சரியமடைந்து முற்றிலும் பன்மடங்கு கோபமுடையவனாய் ஒரு கணததில் ஆயிரம் மலைகளைத் தனது ஆயிரம் துதிக்கைகளால் வாரியெடுத்து வேகங் கொண்டு வீசியெறிந்தான். ஆனால் இம்மலைகளும் முன்போலவே அவரது திருமேனியிற்பட்டுப் பொடியாயின. மறுபடியும் அவ்வசுரன் கண்களில் நெருப்புப்பறக்க ஒரு கதாயுதத்தைக் கையிலெடுத்துக் கரகரவென்று சுழற்றி வீரவாகு தேவர் மேலே வீச, அதையும் வீரவாகுத் தேவர் தனது கரத்திற் பிடித்தருளிய கத்தியினாற் வெட்டி யெறிந்தனர். இதைக்கண்ட கஜமுகன் தனது இரண்டாயிரம் தோள்களும் துடிக்கத் தனது ஆயிரம் துதிக்கைகளாலும் ஆயிரம் ஆலமரங்களைப்பிடுங்கி கரகர வென்று சுழற்றி யவர்மீது வீசி

யடிக்க வீரவாகுத்தேவர் அவைகளையும் தமது திருக்கரத்திற் பிடித்தருளி யுள்ள கத்திக் கிரையாக்கினர். அதன்பிறகு அவ்வசுரன் முட்டி யுத்தஞ் செய்ய நினைத்துத் தனது கரங்களை யுயர்த்திக் கொண்டு அட்டகாசத்துடனே வேகமாக தனதிடம் ஒடி வருவதைக் கண்ட வீரவாகுப் பிரபு தனது கை யிற் பற்றியுள்ள கத்தியைக் கொண்டு கஜமுகா சுரனுடைய இரண்டாயிரங் கைகளையும் ஓராயிரம் துதிக்கைகளையும் சேதித்துத் தள்ளினர். மறுபடி யும் அவ்வசுரனுனவன் அவரைத் தனது முண்டக் கைகளா லடிப்பதற்காக ஒடி வருவதைக் கண்ட வீரவாகுத் தேவர் அவனைத்தனது திருக்காலாலு தைத்தருள, உடனே கஜமுகாசுரன் கீழே விழுந்து உயிரைவிட்டான். கேளுங்கள் அந்தணச் சிரேட்டர்களே! கஜமுகாசுரனை உயிர் நீக்கியருளிய வீரவாகுப்பிரபுவானவர் தான்வந்த காரியம் தாமதப் படுவதைக் கண்டு மனத் தி லெண்ணினவராய் தனது சரீரத்தைச் சுருக்கி மிகச் சிறிய ஒரு உருவங் கொண்டவராகி வீரமகேந்திர புரியின் மேலைக்கோட்டை வாயிலின் மீது ள்ள அதியுன்னதமான கோபுரத்தின் மேல் ஏறிநின்று அங்கிருந்த படியே மிகநேர்த்தியானதும் பற்பல அசுரர்களால் நிறையப் பெற்றதும், அநேகம் தெருக்களால் நிறையப் பெற்றதும், பிரமாண்டத்தைப் பிளந்து கொண்டு வெளியே வந்து ஆகாயத்திற் பறப்பன போன்ற அநேக கொடிகளாலே சாக்ஷாத் தெய்வ லோகத்தைத் தோற்கடிக்கச் செய்துகொள்ளக் கூடியது மாகி பல வரிசைகளையுடைய மண்டபங்களால் அலங்கரிக்கப் பெற்றதும், அநேக கோபுரங்களால் விளங்குந்தன்மையுடையதும் அநேக வாவிகள், கிணறு கள், குளங்கள், பூந்தோட்டங்கள் முதலியவைகளால் நேர்த்தியானத் தோற் றத்தையுடையதும் பலவிதமான விருக்ஷ வகைகளால் சோபிப்பதுமான பல வகைப்பட்ட நல்ல சுந்தர முடையவர்க ளென்று, சொல்லக்கூடிய அசுரர் களால் சூழப்பெற்ற வேசிகள் வசிக்கும் வீதிகளையுடையதும் காவலில் வைக் கப்பட்டிருக்கிற அநேக தெய்வப் பெண்களைக் கொண்டதும், வீடுகள்தோறும் மகா மங்களகரமான பல கற்பகவிருக்ஷங்களை யுடையதும் வேண்டியவற்றை நினைத்த மாத்திரத்தில் தரத்தக்கவைகளாகிய அநேக காமதேனுக் களை யுடையதும், ஒன்பது ரத்தினங்களா லிழைக்கப் பெற்றப் பல வீடுகளின் பலவகைப்பட்ட காட்சியை யுடையதும் வாயில்களின் இரு புறங்களிலும் அலங்காரமாகக் கட்டி யிருக்கும் வாழை மரங்களால் மங்களகர மெய்தி யுள் ளதும், நான்கு புறத்து முள்ள யானை குதிரை தேர்களால் ஆகிய நால்வகைப் பட்ட சேனுசைனியங்கள் அணிவகுத்து நிற்கும் அழகினைக் கொடுப்பதும் மாடிகளின் மேல் முற்றத்தி லேறி விநோதமாகக் காலங்கழிக்கலுற்ற அசுரப் பெண்களை யுடையதும் ஒவ்வொரு விஞடியும் மிகுந்த பய பக்தியுடனே வாயுபகவானுனவர் குப்பைகளை வாரிக் கொட்டிக் கொண்டிருக்கும் பெரு மையை யுடையதும், சூரியன், சந்திரன், அக்கினி முதலியவர்கள் தங்கள் தங்களுக்கிடப்பெற்ற வேலைகளை ஜாக்கிரதையுடன் செய்துவரப் பெற்ற தும் அசுரப்பெண்களானவர்கள் அழுகிற தங்கள் குழந்தைகளுக்குச் சூரியனுடைய தேரிற் பூட்டியுள்ள குதிரைகளை விடுவித்துக் கொடுத்து விளை யாடச் செய்யும் விசித்திரத்தை யுடையதும் வியபசாரத்திற் றேர்ந்த பல

அசுரப் பெண்களானவர்கள் கண்ணுக்கு ரம்மியமான முனிவர்களையும் தேவர்களையும் பலவந்தமாக இழுத்து வந்து வரிசை வரிசையாக வுள்ள தங்களுடைய உப்பரிகைகளின் மீதுள்ள மஞ்சங்களில் கிடத்திச் சுரதம் பண்ணுவதால் விநோதமானதும், அம்மங்கையர்கள் கலவினல் தங்களுக்குண்டான ஆயாசத்தை நீக்கிக் கொள்ளக்கருதி அமுதமாகிய கிரணங்களை யுடைய சந்திரனைக் கரத்தாற்பற்றி அவ்வமுதக் கிரணங்களைப் பருகித் தங்கள் களைதிரப்பெற்ற பிறகு, பசியுள்ள மனிதர் இளநீரைக் கையாற்பற்றிப் பருகிப் பசி தீர்த்துக்கொண்டு கோப்பையை வீசி விடுவதுபோன்று, சந்திரனை தங்கள் உப்பரிகையின் பாரிசங்களிலுள்ள பலகணிகளின் வழியாய் வெளியே யெறியப்பெற்ற சிறப்பினையுடையதும், இன்னும் பற்பலவிதமானச் சிறப்புக்களையுடையதுமாகிய அந்த நகரத்தைத் தனது திருக்கண்களால் ஒரு சிறிது நோக்குதல் செய்தருளிய வீரவாகுத் தேவரானவர் ஈதென்ன காக்ஷி! இஃதென்ன பாக்கியம்! இது எவ்வுலகினும் கிடைத்தற்கரிதே. இதன் லக்ஷ்மி விலாசத்தைக்கண்டு களிக்க வேண்டுமாயின் பல்லாயிரங் கண்களல்லவோ தேவையாயிருக்கும்? பிரம்ம தேவனுடைய சத்தியலோகமும் விஷ்ணுவினுடைய வைகுண்டமுங்கூட இதற்கு நிகராகாது. என்று அந்நகரின் மகிமையைக் குறித்து வியப்புற்றவராகிக் கோபுர வாயிலிலிருந்து கிழே பாய்ந்தார். கேளீர் சௌனகாதி ரிஷிகளே! கோபுரத்தின்மீதிருந்து கிழே பாய்ந்தருளிய வீரவாகுத் தேவரானவர் ஓர் தெருவின் வழியாகச் சென்று அவ்வீதியிலுள்ள பற்பல விநோதங்களைக் கண்ணுற்று மற்றுமொரு தெரு வழியே சென்று அங்குள்ள அநேகநேக அற்புதங்களைக் கண்டருளிப் பிறகு இன்னுமோர் வழியாகச் சென்று ஆண்டும் அமையபெற்ற வேறு வேறு வகைகளான விசித்திரங்களைப் பார்த்தருளி இவ்விதமாகப் பல தெருக்களுங்கடந்து சென்றுக் கடைசியாக அசுரர்களால் கொண்டு வந்து காவலில் வைக்கப்பெற்றத் தேவர்கள் வாதைப் பட்டுக் கொண்டிருக்கிற மாடியண்டை வந்து சேர்ந்தார். அச்சிறைச்சாலையில் கேளுங்கள் முனிபுங்கவர்களே! மிகுந்த குரூரத் தன்மையுடையத் துஷ்டர்களாகிய தண்டன் முதலியவர்கள், சகு, நிச்சங்கு, கண்டகன், மிகுந்த வலிவும் பராக்கிரமுமுள்ளவனான மகா பலி முதலியவர்கள் எல்லாரும் ஜயந்தன் முதலியத் தேவர்களைப் பார்த்து "இந்திரனும் அவன் மனைவியும் எங்கு போயிருக்கின்றார்கள்? உடனே சொல்லுங்கள். இல்லாவிட்டால் செத்தீர்கள்" என்பது முதலான கொடிய வார்த்தைகள் கூறி அதட்டிவிட்டுச் சென்றவுடனே, ஜயந்தன் முதலிய தேவர்கள் பரமசிவத்தைத் தியானித்து நின்று, "ஏ! மகா தேவா! என்ன காரணத்தினு லிப்போது இவ்வேழைகள் மீது கிருபை செய்யாதிருக்கிறீர்களோ வறியோம். முன்னிட்டு முப்புரமெரித்து எங்களைக் காத்தருளிய வள்ளலே நின் கருணை யிப்போது எங்குள்ளது? ஏ காளகண்டப் பிரபுவே! தேவாசுரர்களால் கடைந்தெடுக்கப்பட்ட ஆலகால விஷத்தை நினது திருக்கண்டத்தி னிடந்தாங்கி யெங்களை ரக்ஷித்தத் தயவு இப்போது என்ன காரணத்தினல் மறைந்து கிடக்கின்றதோ தெரியவில்லையே! மேலும் கஜாசுரன், அந்தகாசுரன் முதலியவர்

களைச் சம்மரித்து எங்கள் வாழ்வை நிறுத்திய கிருபாவள்ளலாகிய தாங்கள் எங்கு சென்றிருக்கின்றீர்கள்? தவிரவும் விஷ்ணுவானவர் கொண்ட அவதாரங்களில் மச்சாவதாரத்தின் போது அவரது கண்களையும், கூர்மாவதாரத்தின் போது அவருடைய முறட்டெலும்பையும், வராக அவதாரகாலத்தில் அவருடைய சிங்கப் பற்களையும், நரசிம்மாவதாரக் காலத்தில் அவருடைய மேற்றோலையும் திருவிக்கிரமாவதாரகாலத்தில் அவரது முதுகெலும்பையும் தாங்கள் கிருபைகூர்ந்து பிடுங்கிக்கொன்று எங்களைக் காப்பாற்றியருளினீரே. ஓ! பரமேசுவரா ஓ! சர்வேசுவரா! மேலும் ஓ! மகா தேவா! பண்டாசுரன், ஜலந்தராசுரன், மகாசுரனாகிய பஞ்சமேட்டிரன் இவர்களை யெல்லாம் ஹதம்பண்ணி முந்தி எங்களைக் காப்பாற்றி யருளியவர் தாங்களல்லவோ? ஓ! சுவாமி! அசுரவர்க்கங்களா லுண்டான எல்லாக் கஷ்டங்களையும் தீர்த்தருளி பயமென்னும் கடற்கடக்கச்செய்துத் தேவர்களை யெல்லாங் கரையேற்றிய மகாப்பிரபுவே! ஓ! தேவேசா! ஓ! கிருபேசா! சகல உயிர்களும் உறக்கங் கொண்டிருக்குங் காலத்தில் தாங்கள் விழித்திருந்து சோம்பலற்றவராகிய தாங்கள் ஓ! சுவாமி! கெட்ட வழியில் பற்றுதலுள்ள மனதில் சன்மார்க்கத்தைத் தந்தருளுகின்றீர்! ஓ! சம்போ! சகல ஜகங்களும் வருத்தங் கொண்டிருக்குங் காலத்தில் தாங்களிருந்து அவ்வருத்தங்களை விலக்கியருளுகின்றீர்! ஓ! மகாதேவா! சகலஜகங்களும் பயங்கொண்டுள்ளபோது தாங்களிருந்து அப்பயத்தைத் தீர்த்துத் தீரத்தைத் தந்தருளுகின்றீர். தாங்களெப்போதும் ஜாக்கிரதையுடனிருந்து சகலத்தையும் காப்பாற்றி வருகின்றீர். ஓ! சம்போ! தங்களுடைய திருக்கட்டளையின்படி நாங்கள்செய்த கருமத்தினால் நாங்கள்படுகின்ற இந்த மிகப்பெரிய வருத்தத்துக்குத் தாங்கள் என்ன செய்யத்தகும்? ஓகோ! சத்துருக்களைச் சங்காரஞ்செய்பவராகிய தேவேந்திரன், இந்திராணியுடன் எங்கு சென்றனரோ? அந்தப் பிரபுவின் பதியாகிய ஜரீவதம், எல்லாப் பருவங்களிலும் தனித்தனியா யுண்டாகக் கூடிய எல்லா வகைப் புட்பங்களையும் எக்காலமும் நிறையப்பெற்ற தேவர்கள்தம் பட்டணமாகிய அமராவதி, நந்தனமென்னும் பெயரையுடைய சோலை, வைஜயந்தி என்னும் பெயருடைய அரன்மனை, பாகனாகிய மாதலி, ஆன்றோர்கள் கூடுமிடமாகிய ஸுதர்மாவென்னும் தேவ சபை! இவைகளெல்லாம் எங்கு தான் போயிற்றோ? விருத்திராசுரனைக் கொன்ற இந்திரன் யாங்களனுபவிக்கின்ற இத்துன்பங்களைப் பற்றி யறிந்திருக்கின்றாரோ? இல்லையோ? அல்லது, அவர் எங்கள் துன்பங்களை யறிந்தும் தான், பிர்மா, விஷ்ணு, முதலிய தேவர்களைக் கூடிக்கொண்டு சகல பாவங்களையுந் தொலைத்தருளுபவராகிய சிவலோகத்தை யடைந்து, கணங்களுக்குள் தலைமை பெற்றவராகிய நந்திதேவரைத் தரிசித்து அவர்த மாக்ஞைபெற்று, பார்வதி சமேதனாக விளங்குகின்ற ஸ்ரீ பரமேச்சுரப் பிரபுவினிடத்தே விண்ணப்பித்தக் கொண்டனரோ? அல்லது ஸ்ரீ நந்திகேச்சுரனால் இது சமயமல்லவென்று மறுதளிக்கப்பட்டுக் கலங்கி நிற்கின்றனரோ! அந்தோ! சூரனுவிடப்பெற்ற சகல வேலைகளையும் தேவர்கள் நடத்திவந்தனரே! அப்படி இருந்தும் அந்த மாபாதகன் தேவர்களை மானக்கேடு செய்ய நினைவு கொண்டானே! ஓ! சம்போ! மகா தேவா!

பரமேசா! தேவர்களாற் செய்யப்பட்ட பாவமு மித்தகைத்தோ? எறும்பு முதலாகக் கூறப்படும் சகல உயிர்களுக்கும் தாங்களே ரக்ஷகராயிருக்கின்றீர்களே! உங்களைத் தவிர வேறு யார் எங்களுக்கிருக்கிறார்கள்?'' என்று இவ்விதமாகப் பிரலாபித்துக் கொண்டே நித்திரை கொண்டுவிட்டார்கள்.

## 3. அத்தியாயம்.

கேளுங்கள் சவுனகாதி முனிபுங்கவர்களே! சகல தேவர்களும் நித்திரை கொண்டபோது ஸ்ரீ மகாதேவன் திருக்குமாரரான ஆறுமுகவள்ளலானவர் தானாகவே ஆவிர்ப்பவித்தனர். எப்படி யென்றால் பற்பலவிதமான இரத்தினங்களா லிழைக்கப்பெற்ற திவ்வியமாகிய பொன் மகுடத்தைச் சிரத்திற்றாங்கி, மலர்ந்த செந்தாமரை மலரை யொத்த திருமுகங்களானவை மிகுந்த காந்தியை வீசுவனவாக விளங்கி, உருண்டு திரண்டு கரைவாக நீண்டு நுகத்தடி போன்ற பன்னிரு தோள்களும் பிரகாசிக்கச் செய்து பெரிய கதவைப்போல் அகன்று விரிந்து, மிருதுத் தன்மையோடுங் கூடிய அலங்காரத்தைச் செய்யும்படியான திருமார்புடனும், ஆயிரத்தெட்டு மாற்று கொண்ட தங்கத்தினாற் செய்த பொன் பூணூலுடனும் இடையிலே தகத் தகாயமாய் ஜ்விக்கின்ற பொன் அரைஞாணை யுடையவராய், பற்பல விசித்திரமான முத்துக்களாலும் பவளங்களாலும் ஆக்கப்பட்ட ஹாரங்கள் கிடந்து புரளுகின்ற மார்பினையுடையவராய் மிகப் பெரிய மயில்வாகனத்தின் மீது ஆரோகணஞ் செய்து அவ்விடம் எழுந்தருளி, அசுரர்களாலே தங்களுக்கு நேர்ந்துள்ள துக்கங்களையும் இம்சைகளையும் அநுபவித்துக் கொண்டுள்ள தேவர்களானவர்கள் அவ்வசுரர் சென்ற பிறகு அயர்ந்து நித்திரை செய்யத் தொடங்கியபோது அத்தேவர்களுக்குக் கனவிற் காட்சி தந்து ஜயந்தன் முதலியவர்களின் மனமானது திடப்படும்படியாய்த் திருவாய் மலர்ந்தருளுகின்றார். 'ஓ! ஜயந்தா! இப்போதே சகலதுக்கத்தையும் விட்டு விடு. இனி யுனக்கு க்ஷேமகாலந் தொடங்குகிறது. தேவேந்திரனும் அவன் மனைவியும் சுகமாயிருக்கிறார்கள். இன்னும் ஒரு விநாடியிலே மிகப்பலம் பெற்று விளங்கு கின்ற நமது தூதனொருவ னிவ்விடம் வருவான். நாம் சூரனை அவனுடைய தம்பியுடனும் சகல சேனை பலங்களுடனும் நாசம் பண்ணி உங்க ளனைவரையும் பழையபடியே அவரவர்தம் நிலைகளில் நிறுத்துவோம்'' என்று இவ்விதமாக ஸ்ரீ தேவசேனாதிபதியாகிய ஸ்ரீ சுப்பிரமண்ணியப் பெருமான் கனவிலே தேவர்களுக்கு வாக்களித்து விட்டு துரிதத்தில் மறைந்தருளினார்.

கேளீர் சவுனகாதி முனிவர்களே! உடனே அத்தேவர்கள் நித்திரை தெளிந்து ஒருவரோ டொருவர் தாங்கள் கண்ட கனவினைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் போது, தீங்கிழைப் பவர்களாகிய அசுரர்களை மயங்க அடித்துத் தள்ளிக் கொண்டு வருகிற வீரவாகுத்தேவரானவர், சடுதியில் அங்குத் தோன்றி, அங்குள்ளத் தேவர்களால் பற்பலவிதமாக வந்தன மளிக்கப் பெற்று அப்போது திருவாய் மலர்ந்து சொல்லுகின்றார்: 'கேளாய் ஜெயந்தா!

உங்களுக்கு இப்போது வெகு சீக்கிரத்தில் ஜெயமுண்டாகப் போகின்றது. உனது பிதாவாகிய இந்திரன், பிரமா விஷ்ணு முதலிய சகல தேவர்களுடன் கூடி திருக்கைலாயமலை யடைந்து அங்கு பார்வதி நாதனாகிய ஸ்ரீ மகேச்சுவரனைப் பணிந்து தோத்திரம் பண்ணி, அந்தத் தேவாதி தேவரிடம் சூரனாதியரால் தேவர்களுக்கு நேர்ந்துள்ள குறைகளை முறையிட்டுக் கொள்ளவே, அவர்களால் துதிக்கப் பெற்ற பகவானானவர் சகல அசுரர்களையும் நாசஞ் செய்யவுற்ற வரும் மிக்க உயர்ந்தவருமான ஒரு ஒப்பற்றத் திருக் குமாரனை ஸ்ரீ பார்வதி பிராட்டி யாரிட முண்டுபண்ணினர். அச்சிவகுமாரனும் பரமேச்சுரனாணைப்படியே சகல தேவர்களுடனும் திருச்சீரலைவாய்க் கருளி, சூரனுடைய விருத்தாந்தங்களைத் தெரிந்து வரும்படி எமக்குக் கட்டளை யிட்டபடியால் யாம் இங்கு வந்தோம். உனது தாயாராகிய இந்திராணி நேர்த்தியான மேருமலையில் சுகமாயிருப்பதாக உனது பிதாவாகிய இந்திரன் அப்போது உனக்குச் செய்தி சொல்லினன். தேவேந்திரனும் இப்போது சுகமாகத்தானிருக்கின்றான். ஸ்ரீ குகப்பெருமானானவர் கிரௌஞ்சன், தாரகன், என்னும் பெயர்களையுடைய அசுரர்களைத் தொம்சம் செய்து விட்டார். ஓ! ஜயந்தா! எமது தலைவராகிய ஆறுமுகப் பெருமான் வெகு சீக்கிரத்தில் சூரனாதி அசுரர்களைச் சம்மரித்து நின்னை யுனது பெற்றோரிடஞ் சேர்ப்பித்துத் தெய்வலோகத்தில் அமர்த்திக் காப்பாற்றப் போகின்றார்." என்று கூறியதைக் கேட்ட அத்தேவர்கள் தாங்கள்கண்ட கனவினை ஸ்ரீ வீரவாகுத் தேவரிடம் கூற அதனைத்தன் செவியேற்று மகிழ்ந்து தான் வந்த வழியில் நடந்தவைகளை யெல்லாம் அத்தேவரிடம் முறைப்படக் கூறி உடனே திரும்பிப் பிரயாணமானர். அசுரர்களும் அப்போது துக்கந் தெளிந் தெழுந்தனர். கேளீர் சவுனகாதி முனிவர்களே! பிறகு வீரவாகுப் பிரபுவானவர் அங்கிருந்து புறப்பட்டு பின்னுமுள்ள அந்தத்தெருக்களிற் சென்று ஆங்காங்குள்ள ஆச்சரியங்களைக் கண்ணுற்றுக் கொண்டே அதே சிறிய உருவத்தோடுங் கூடியவராய்க் கோபுர வாசற் காவலாளரான உக்கிரன், மயூரன் இவர்களுடையவும் இவர்கள் தம் தூதராகிய ஏனைய அசுரர்களுடையவும் பார்வைகட் ககப்படாமலே மிகவும் சுந்தரம் வாய்ந்த சூரனுடைய அரண்மனைக்குச் சென்றருளிச் சூரனைக் கண்டனர். அதுகாலையில் சூரனானவன் தன்னைப்பல அசுரர்கள் சேவித்து நிற்கவும், திவ்வியமான சிம்மாசனத்தில் வீற்று, திவ்விய வஸ்திரங்களைத் தரித்து மிக்கச் சிரெஷ்டனாய்ப் பிரகாசம் பொருந்திய பொற் கிரீடத்திலே இழைக்கப் பட்ட நவரத்தினங்க ளானவை ஒளித்திரள்களைச் செய்து அவ்வொளியினால் சூழப்பெற்று, காதுகளினிடத்தே இரு குண்டலங்க ளிருந்து அவனது முகத்தை அலங்கரிக்கச் செய்யவும், பல் வரிசைகளானவை மந்தஹாசத்தினால் சோபித்தலைச்செய்யப் பெறவும், நெற்றியினிடத்து திரிபுண்டாமாய் விபூதியைத்தரித்து மேன்மையுறவும், மகாநேர்த்தியாய் அலங்கரிக்கப் பெற்ற ஆயிரம் யோசனை விஸ்தீர்ண முள்ள மண்டபத்தினிடத்தே நடிக்கின்ற நாட்டிய சங்கீதங்களில் மிகவும் சமர்த்தரான பல தெய்வப்பெண்களாலும் ஆலாத்திச் சுழற்றாநின்ற பல தேவ ஸ்திரீகளாலும் நெருங்கிச்சூழப் பெற்று பற்பல அலங்காரங்களோடுங் கூடியவனாய்ப் பற்பல மொழிகளில்

தேர்ச்சி யுற்றவனும் விளங்கினன். கேளீர் அந்தணச் சிரேட்டர்களே! வீரவாகுத் தேவரானவர் அப்படிப்பட்ட சூரனைத் தமது திருக்கண்களாற் கண்டு அவனெதிரில் ஓர் ஆசன மில்லாமல் நாம் சென்று நின்றால் நமக் கவமரியாதை யாகு மென் றெண்ணி அக்கணமே தனது பரிசுத்தமான மனத்திடத்தே—ஸ்ரீ கந்தப் பெருமானை நினைத்தல் செய்தருளினர். உடனே அக்குகப்பெருமானுடைய திருக்கடாக்ஷத்தால், மகாஉன்னதமும், பற்பலரத்தின வகைகளாலலங்கரிக்கப் பெற்றதும் பலகோடி சூரியப்பிரகாசம் பொருந்தியதும், ஒப்புவமையில்லாததும் மிகவும் பிரகாசிப்பதும் சூரனுடைய சிம்மாசனத்தைச் சீ யென்றவமதித்துத் தள்ளத்தக்க மிகுந்த காந்தியை யுடையதுமான ஓர் சிம்மாசனத்தைப் பெற்று உடனே வீரவாகுவானவர் தமது சுயரூபத்தை யடைந்தவராகி அச்சிங்காதனத்தைச் சூரனுக்கெதிரிவிட்டு அதன் மேலமர்ந்து மிகுந்த கீர்த்தியுடையவராகத் தோன்றினர். இதைக்கண்ட அசுரனைவரும் திடுக்கிட்டு அவ்வீர சிம்மத்தைக்கண்டு கண்கூசி யோசிக்கலாயினர். அதிகதேஜஸோடுங்கூடிய இம்மகாபுருடன் யாவன்? பிரமனோ? விஷ்ணுவா? அல்லது பார்வதி நாதனையோ? காவலர்களை யெல்லாம் வஞ்சித்து இவன் ஒண்டியாக இவ்விடம் எவ்விதம் வந்தடைந்தனன். என்றிவ்விதமாக மனங்கலங்கி யெண்ண மிடுமற அசுரர்களின் தலைவனான சூரனானவன் கடுஞ்சினங்கொண்டு கூறுகின்றான். "அடா! நீ யாவன்? நீ யெவ்விடமிருப்பவன்? நீ எவனுக்கு என்ன உறவினன்? அடா! உடனே சொல்! அடா நீ செய்த இந்த மகேந்திர ஜாலவித்தை மிக நன்றாயிருக்கின்றது? என்ன உனது வித்தை? பிரமன் முதலாகக் கூறப்படுகின்ற தேவ தேவோத்தமர்களனைவரும் நம்மெதிரில் நிற்கவும் நடுநடுங்குகின்றனர். நீயோ மிகுந்த தேர்ச்சியுற்ற சாஹஸக்காரனாய் ஒரு சிறிதும் பயமில்லாமல் மிகவும் மேலான சிம்மாசனத்தின் மேல் ஏறிக்கொண்டு சகலவிதமான வஸ்திராபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றுச் சிறந்தவனாய் உட்கார்ந்திருக்கின்றனை. பேஷ், பேஷ் நன்றாயிருக்கின்றது. நம்மெதிரிலே நீ இப்போது செய்திருக்கிற இம்மகா வித்தையின் சாமர்த்தியத்துக்காக வேண்டிய சன்மானத்துக்காக ஒரு விநாடிக்குள் உனக்கு பிராணத்தியாகத்தை (உயிர் கொடுத்தலைத் தருகின்றோம். தடையில்லை. நல்லது, நீ இவ்விடம் இப்போது எது காரணங்கொண்டு வந்தனை? அந்தவரலாற்றை விஸ்தாரமாகச் சொல்லக்கடவை! என்றனன். கேட்டீர்களோ முனிபுங்கவர்களே! இவ்வார்த்தைகள் யாவையும் தன் திருக்காதுகளாற் கேட்டவராகிய ஸ்ரீ வீரவாகுத் தேவரானவர் சூரனைக்கண்டு புன்சிரிப்புக்கொண்டவராய்ச் சொல்லுகின்றார்: அடா சூரா! நாம் இப்போது சொல்லும் வார்த்தைகளைக் கர்வம் முதலியவற்றை நீக்கிக் கவனமாயும் ஜாக்கிரதையுடனும் கேள். எக்காலத்தும் உன்னால் துன்பமடைந்து வந்தவர்களாகிய பிரமன் விஷ்ணு முதலிய தேவர்களனைவரும் ஸ்ரீ கைலை நிவாசனாகிய தேவாதி தேவனும் எல்லாருக்கும் அபயமளிப்பவரும் சகல பிணிகளையும் நீக்கியருள்பவரும் மிகச்சாந்த மூர்த்தியும், நேராக மோக்ஷத்தை யளிப்பவருமான ஸ்ரீ சர்வேச்சுரனிடத்துச் சென்று அங்கு அவரை நமஸ்கரித்துப் பல தோத்திரங்களால் துதித்து உன்னால் உண்டாக்கப்பட்டக் குறைகளைக் குறி

த்து முறையிட்டுக் கொண்டதில் ஸ்ரீ மகாதேவன் கருணைத் திருமுகங்காட்டிய காலத்தில் அவர்கள் மிகவும் வணக்கஞ் செய்து எச்சரித்துக் கொண்டார்கள். அதாவது:—'ஓ தேவாதி தேவா! மகாதேவா! காளகண்டதேவா! கயிலாசவாசா! சூரபதுமன் தேவர்களை அதிகத் துன்பப்படுத்துகின்றான். ஓ பகவானே! ஆனபடியினால் அவனை ஒழிப்பதற்காக தேவரீர் தேவர்களுக் கதிபராயிருக்கத்தக்க ஓர் சுந்தரகுமாரனை ஸ்ரீ பார்வதி தேவியிடத்துண்டுபண்ணும்படியாய்ப் பிரார்த்திக்கின்றோம்' என்றிரந்தனர்: அதைக் கேட்டருளிய பார்வதீ நாதன் நல்லதென்று தேவர்களுக் கபயமளித்து விட்டுச் சில காலங்கழித்து அசுர குலத்தை வேரோடுங் களைந்தெரியக்கருதி ஸ்ரீ'குமாரமூர்த்தியையுண்டாக்கி அவ்விளங்குமரனைப்பார்த்து கூறினர். ஏ! குமார! நீ தேவசேனாதிபதியாய் நமதாக்கினையின் பிரகாரம் சூரன் முதலிய அசுரர்களை விரைவில் நாசஞ்செய்து பயந்திருக்கின்ற தேவர்களைக் காப்பாற்றுவாய் என்று திருவாய் மலர்ந்தருளியதைக் கேட்ட முருகன் ஸ்ரீ பகவானு லிடப்பெற்றக்கட்டளைப்படியே உடனே புறப்பட்டு வழியில் மகாபாதகனாகிய கிரௌஞ்சன் என்னும் அசுரனையும் மிகக்கொடியவனும் உன் தம்பியுமாகிய தாரகனையும் அச்சண்முக வீரன் சம்மரித்து விட்டு இப்போது மிகவும் ரமணீயமான திருச்செந்தூரி லெழுந்தருளி யிருக்கின்றனர். இன்னும் அந்தத் தேவநாதன் இளகிய மனமுடையவராகவே உன்னிடத்துக்கு என்னை அனுப்பி ஜயந்தன் முதலிய தேவர்களை முன்போலவே விடுதலை செய்து உன் நகரத்திலே நீ சுகமாய் வசித்துக் கொண்டிரு. தவறினால் நாம் வந்து உன்னைக் கொன்றுச் சந்தேகமில்லாமல் அதம் பண்ணிவிடுவோம்'' என்று உனக்குப் புத்தியருளியதை உனக்கெடுத்துரைக்கும்படி எனக்கு உததரவிட்டருளினர்'' என்று கூறினர்.

## 4. அத்தியாயம்.

கேளுங்கள் சவுனகாதிமுனிவர்களே! சூரனுக்கு வீரவாகுத் தேவர் மேலும் சொல்லியவைகள் என்ன வென்றால்: கேளடா! சூரபத்மா! ஆனபடியினா லிதுமுதலாக நீ வீண் கர்வத்தை யெல்லாம் விட்டு விட்டு ஜயந்தன் முதலியத் தேவர்களை முன்போலவே விடுதலை செய்து விட்டு ஒரு சிறிதும் தவறுதலில்லாமல் நடந்து கொள்ளக்கடவாய்'' என்றிவை முதலிய சொற்களை மிகத்தெளிவாகவும், கம்பீரமாகவும் சொல்லிவிட்டுப் பிறகு சும்மாவிருந்தனர். பிறகு சூரனானவன் வீரவாகுத் தேவரை நோக்கிக் கோபத்தினால் தீயை இறைத்து, ''நமது பராக்கிரமத்தைப்பற்றி அவன் என்ன அறிவன்? அவ்விளைஞனுக்கு இச்செய்கை களெல்லாம் தகுதியுடையனவல்ல. முன்னமே தாரகனைக் கொன்ற செய்தி காதிற்பட்டவுடனே ஒரேகணத்தில் அவனைக் கொல்லத்தீர்மானித்துப் புறப்பட்ட நாம் ஒரு சிறிது ஆலோசித்துப் பார்த்து, என்ன, நாமிப்போது சிறிதளவும் லஜ்ஜையில்லாமல் ஒரிளைஞனைக் கொல்லச் செல்லுகின்றோமே என்று யாம் சும்மாவிருந்து விட்டோம். நல்லது, ஆயினும் மிகவும் கர்வங்கொண்டுள்ள அச்சிறுவனைச் சயிப்பதற்காகச் சைனியங்களை நாளைதினமே அனுப்புகின்றோம். ஐயந்தன் முதலிய தேவர்களில்

ஒருவரையும் நாம் விடுவதில்லை. நல்லது, இப்போதே யாம் அவர்களை யீண்டு தருவித்துக் கட்டி அடித்து நமது அடிமைகளாக்கி நாம் வாழ்வோம்.'' என்றிவை முதலிய மிகக் கர்வமான வார்த்தைகளை சூரன் அப்போது சொல்லக் கேட்டு வீரவாகுவானவர் மிகவும் கோபங் கொண்டவராகிச் சூரனைப்பார்த்துச் சொல்லலுற்றார்:—அடா ! துர்ப்புத்தி கொண்டவனே ! ஸ்ரீ கந்தபிரான் அவர்களின் மகிமையை அறியாமல், நீ அம்மகாப்பிரபுவை, அவன் என்றும், இளைஞன் என்றும், உன்னை அறியமாட்டான் என்றும் இன்னும் பலவாறாகவும் உரைத்திட்டாயல்லவா ? அடா ! சூரா ! அவர் யாரென்றால்:—தேவாதி தேவனாகிய ஸ்ரீ பரமேச்சுரனுடைய 'கந்தன்' என்ற அழிவற்ற மூர்த்தியாகின்றார். சகல அண்டங்களும் அவருடைய திருமேனி மீதே உற்பத்தியாகிப் பிறகு அதின்கண்ணே லயமடைகின்றது. நல்லது, நாமிப்போது தூதத்தன்மையில் நியமிக்கப்பட்டு வந்தபடியால் அப்போர்க்கொத்த எம்மால் துஷ்டனான வுந்தனுக்குத்தக்க அவமானம் சத்தியத்துக்காகக் கொஞ்சமேனும் செய்யப்படவில்லை.'' என்று இவ்விதமான கடுஞ்சொற்களால் அவனை அதட்டிப் பயமுறுத்தினார்.

கேட்டீர்களோ சௌனகாதிமுனிகளே ! இதன் மேல் அச்சூரனானவன் மிக்கக் கோபங்கொண்டவனாகி அசுரர்களை எவுதல் செய்ய உடனே ஆயிரம் தலைகளையும் இரண்டாயிரங் கைகளையுமுடைய ஓராயிரம் அசுரர்கள் சன்னத்தங் கொண்டவர்களாய்ச் சண்டை செய்வதற்காக அந்தவீரவாகுத் தேவரை வளைந்து கொண்டார்கள். அதுகண்ட வீரவாகுத்தேவர் அவ்வசுரர்களனைவரையும் ஒரேவாறாகச் சேர்த்து வாரிப்பிடித்து வேகமாகத் தரையின் மேல் மோதியடித்து அவர்களுடைய உயிர்களைப் போக்கி விட்டனர். இவ்விதமாக சூரன் கண்ணெதிரில் ஒரு க்ஷணத்துக்குள் அவர்களனைவரையும் நாசஞ்செய்து விட்டுப்புறப்பட்டனர். உடனே வீரவாகுத் தேவருடைய சிம்மாசனமும் மறைந்து விட்டது. பிறகு சூரனானவன் சதமுகன் என்பவனை ஏவ அவன் மிகுந்தச் சைனியங்களைக் கூட்டிக்கொண்டு வீரவாகுவுடன் யுத்தஞ் செய்யச் சென்றனன். ஓ சௌனகாதியர்களே ! இதைக்கண்ணுற்ற வீரவாகுத் தேவரானவர் உடனே இருபதினாயிரம் சிகரங்களையுடைய ஓர் கோபுரத்தை அடியோடு பிடுங்கி வீசியெறிய, ஆஹா ! அச்சைனியங்கள் யாவும் அக்கோபுரந்தாக்கி விழுந்து மாண்டு போயினர். மேலும் சதமுகனானவன் கோபமிகுந்து பல பாணங்களைப் பொழிந்தனன். ஆனால் அப்பாணங்களனைத்தும் வீரவாகுவின் திருமேனிமீதுப்பட்டு உடனே பொடிப் பொடியாய் விட்டன. பிறகு வீரவாகுவானவர் கோபத்தீயினால் பற்றியெரிகின்றவரை யொத்து ஆவேசங்கொண்டு மற்றொரு கோபுரத்தைப் பிடுங்கி அவனை வீசி அடித்தனர். சதமுகனோ அஸ்திரவித்தையில் மிகவும் பயிற்சியுள்ளவனான படியினால் அக்கோபுரத்தைத் தடுத்துச் சிதைத்துத் தள்ளிவிட்டனன். மேலும் அவ்வசுரனானவன் மிகுந்த கோபங் கொண்டவனாகி, தோமரம், பட்டாக்கத்தி, வேல் முதலிய ஆயுதங்களை யெல்லாம் வீரவாகுத் தேவர்மீது, பிரயோகித்தனன். உடனே வீரவாகு அப்பாணங்களையும் சிதறவடித்து

அவனுடைய வில்லையும் ஒடித்துத்தள்ளினர். அதன் மேல் சதமுகன் தன்னுடைய இருநூறு கைகளாலும் அவரைப் பிடித்துக் கட்டக்கருதி யவரிடம் ஓடிவந்ததைக்கண்டு வீரவாகுவானவர் அவனைத்தனது தோள் முட்டினாலிடித்துத்தள்ளி, அவன் பூமியில் விழுந்தவுடனே, அவனை அவர் மிகுந்த வேகத்தோடு ஒரு காலினா லவனுடைய மார்பின் மீது மிதித்துக் கொண்டுஉடனே மற்றக்காலினால் ஜனங்கள் தேங்காய்களைப் புறங்காலினாலிடறித் தள்ளுகிற மாதிரி அவன் தலைகளையிடறித் தள்ளிவிட்டனர்.

மகாபலிஷ்டனான வீரவாகுவானவர் இவ்விதமாகச் சதமுகனைச் சம்மரித்துவிட்டு, மறுபடியும் மிகவும் உந்நதமான அற்புதத் திருவுருவந்தாங்கி ஓர் காலினால் பூமியை அதிரவுதைத்து நிற்கும்போது அவர் நின்ற பூமியின் பாகமானது மிகவும் தாழ்ந்து தொங்க, அத்தாழ்ச்சியால் ஓகோ! மிகுந்த ஜலப் பிரவாகங்கொண்டு அங்கிருந்த அசுரர்களை முதலைகள் அப்போது இழுத்துச் சென்றன. சில அசுரர்கள் நடுப்பிரவாகத்தி லகப்பட்டு மாண்டார்கள். அதன் பிறகு ஐம்பது வாகினி அசுரச் சேனைகள் வீரவாகு மீது மிகுந்த சரமாரிகளைச் சொரிந்து கொண்டே மறுபடியும் புறப்பட்டன. அப்போதவர் திருமேனியிலிருந்து உதிரமானது மிகுதியாகப் பொழியலுற்றது. கேளீர் சவுனகாதிமுனிவர்களே! பிறகு வீரவாகுவானவர் அவ்வசுரர்களை யெல்லாம் தனது கைகளாலுங் கால்களாலும் அறைந்து அவர்களனைவரையும் கொன்றனர். மேலும் இவ்விதமாக ஒரு நொடியிலவர்களைச் சம்மரித்துவிட்டு அந்த நகரக்காவலாளர்களையும் நாசஞ் செய்து விட்டுத் திரும்பவும், லக்ஷம் பொற்சிகரங்களால் விளங்குவதும் மிக நேர்த்தியானதும் சுற்றளவிலு முயரத்திலும் முறையே நூற்றைந்து ஆயிரம் யோசனைகள் கொண்டதுமான ஓர் கோபுரத்தைக் கையாற் பிடுங்கித் துரிதமாய் எரிய, அது அச்சூரனுடைய ஆஸ்தான மண்டபத்தின் மேல் விழுந்தது. அப்போது அவ்வாறு விழுந்ததால் அந்த மண்டபமுமிடிந்து விழுந்தது. மேலும் அவர் இன்னுமுள்ள மற்ற பண்டபங்கள், மதில்கள், கொடுங்கைகள், கோபுரங்கள், அட்டாளமண்டபங்கள், அரண்மனைகள், கம்பங்கள், குண்டுக்கற்கள், ஆகிய இவைகளையும் அங்குள்ள மரங்களையும் பிடுங்கிப் பிடுங்கி எறிந்து இடித்துத் தள்ளிவிட்டு கைகளை யுயரத்தூக்கிக் கொண்டு விளையாட்டாக வட்டகாசம் பண்ணிக் கூத்தாடினர். மற்றுமுள்ள அசுரர்கள் இங்கு மங்கும் அவைகள் இடிந்து விழுந்ததனால் மரித்துவிட்டார்கள். சிலர் முடி யவிழுந்து உடையிழந்து ஓட்டம் பிடித்தார்கள். சூரனேவென்றால் ஆஸ்தான மண்டபமிடிந்துப் பட்டண முழுவதும் அல்லோலகல்லோலமாய்க் குழம்பலுற்றதை யறிந்து ஐந்நூறு முகங்களையும் ஆயிரங் கைகளையுங் கொண்ட பல அசுரர்களைப்பார்த்துச் சொன்னதாவது:—ஓ! அசுரர்களே! நீங்களிப்போதே அவனைச் சேர்த்துப் பிடித்துக் கட்டியுருட்டிக் கொண்டு வாருங்கள் என்றுக்கினையிட அவ்வாக்கினையின்படியே அந்த வல்லமையுடைய அசுரர்கள் எல்லாரும் ஒரு க்ஷணத்திற்குள் திட்சண்யமுள்ள அநேக ஆயுதங்களைமாட்டிக் கொண்டு, 'ஓ சுவாமி! நாங்கள் ஆயிரம் பெயர்களும் முந்

தியே அவனைக் கட்டுவதற்கு ஆவல் கொண்டிருந்தோம், ஆயினும் தங்களுடைய கட்டளையை எதிர்பார்த்து இதுவரைக் காத்திருந்தோம்' என்று கூறி விடைபெற்றுப் புறப்பட்டுச் சென்று மகா அசுரர்களாகிய அவர்கள் எல்லாரும் வீரவாகுவைச் சூழ்ந்து கொண்டு கூர்மையாகிய பற்பல ஆயுதங்களைத் துரிதமாகப் பிரயோகித்தார்கள். உடனே வீரவாகுவும் மகா கோபங் கொண்டவராய் அப்போது ஒரு ஆலமரத்தைப் பிடுங்கிக்கொண்டு அவ்வஸ்திரங்களை எல்லாம் பொடிப் பொடியாக்கி அவர்களையும் இம்மரத்தினாலே ஆக்கிரத்தோடு இடித்துக் கொன்றுவிட்டனர். அதன் பிறகுச் சூரன் அசுரர்கள் மாண்டதை தூதரர் மூலமாக வறிந்து அம்மகா பலவானாகிய வீரபாகு மீது மிகவும் கோபங் கொண்டனன். கேளீர் சவுனகாதி முனிவர்களே! பிறகு வஜ்ஜிரவாகு வென்ற சூரன் குமாரனானவன் தந்தையின் உத்திரவுப்படி பற்பல பூஷணங்களாலும் அழகு செய்யப்பட்ட நேர்த்தியான பதினாயிரம் குதிரைகள் பூட்டிய மேலான தேரின்மேலேறிப் புறப்பட்டான்.

## 5. அத்தியாயம்.

கேளுங்கள் முனிபுங்கவர்களே! பிறகு சூரன் குமாரனான வஜ்ஜிரவாகு வென்ற மகாசுரன் மந்திரி சேனாதிபதிகளின் பிள்ளைகளோடு கூட ஐந்நூறு வாகினி கொண்ட யானைகள், இரதங்கள், ஆயிரம் வாகினி சங்கியை கொண்ட வாயுவேகமுடைய குதிரைகள், இரண்டாயிரம் வாகினி சைனியங்கள் இவைகளால் சூழப்பட்டவனாகி சமுத்திரத்தின் பேரோசைக்கு மேற் கொண்ட படஹ வாத்தியத் தொனியுடனும், குடை, சாமரம், துவஜம் இவைகளைக் கையிற்பற்றிய, அநேகர்களுடனும் மகா பலங்களோடு கூடிய வனாக வீரவாகுவை நோக்கி ஆக்கிரத்துடன் புறப்பட்டுச் செல்லுகையில் அவன் பட்டணத்தில் திடீர் திடீரென்று அகஸ்மாத்தாக பயங்கரமானக் கொள்ளிக்கட்டைகள் விழலுற்றன. பட்டுப்போன மரங்களின் அடிக் கிளைகளின் மீது காக்கைகள் உட்கார்ந்து கத்தலுற்றன. எங்கும் நரிகள் ஊளையிடுஞ் சத்தம் அவ்வசுரன் காதிற்பட்டது. மேலும் அவன் செல்லும் போது தூரஸ்திரீ கைம்பெண், சிவந்த மாலையையும் சிவந்த வஸ்திரத்தையும் தரித்தவள், எண்ணெயிட்டுக் கொண்டவன், மூக்கறு பட்டவன், கை நொண்டி, கால் நொண்டி இவர்களெதிர்ப்பட்டனர். பின்வரும் அபாயத்தை முன் தெரிவிக்கலான அவசகுனங்களைக் கண்டும் அவற்றைச் சட்டை செய்யாமல் துரிதமாக வீரபாகு வண்டைக்குச் சென்றனன். அப்போது வீரவாகுவும் அச்சேனைகளின் ஆடம்பரங்களைக் கண்டு இதோ ஓர் நொடிக்குள் இச்சேனை முழுதையும் ஹதம்பண்ணிவிட்டு யாம் ஸ்ரீ ஷண்முகன் சந்நிதிக்குச் செல்கின்றோம். இல்லாவிடில் யாம் அவருடைய தூதனல்ல! என்று சபதம் பண்ணிக்கொண்டு மகா பலவானாக வேகத்தோடெழும்பி பெழும்பி கூத்தாடிக் கர்ஜனம் செய்தனர். அப்போது வஜ்ஜிரபாஹுவும் அக்கர்ஜனையைக் கேட்டு மனக்களிப்புற்றவனாகி தனது சாரதியாகிய விஜயனை இது என்னவென்று கேட்டறிந்து யுத்தத்துக்குச் சன்

னத் தமாயினன். அப்போது அதற்கு முந்தியே அவனுடைய சைனியங்கள் வீரவாகுவின் திருமேனிமேல் சரமாரி பெய்து ரக்தவெள்ளம் மிகுதியாகப் பெருகிக் கொண்டிருந்தது. உடனே வீரவாகு மிகுந்த கோபம் கொண்டு ஒரு கையினால் அவ்வசுரர்களைப்பற்றிவாரி யெடுத்து அண்டச்சுவர் தண்டச் சடிதியிலெறிந்தனர். திரும்பவும் சிலரைப் பிடித்துக் கரகரவென்றுச் சுழற்றிப் பூமியில் மோதினர். வேறு சில வசுரர்களைப் பிடித்துச் சுழற்றித் திசை யெங்கும் வீசி யெறிந்தனர். சிலரைக் கன்னங் கன்னமாக அறைந்து கொன்றனர். பல வசுரர்களைக் குடுமிகளைப் பிடித்துக் கரகரவென்றுச் சுழற்றி நடுக்கடலிலும், சக்கிரவாளகிரியின் நான்கு பக்கங்களிலும், ஒவ்வொரு தீவுகளிலும் எறிந்தனர். சிலரைக் கால்களால் உதைத்தும் சிலரை முட்டி யுத்தத்தாலும், பல அசுரர்களின் கால்களைத் தன் இருகைகளாலும் கூட்டிப் பிடித்துப் பூமியிலடித்து விளையாட்டாக வாகாயத்தில் வீசியெறிந்தும், சிலரை மண்டைகளிலும் சிலரை வயிறுகளிலும் முட்டியாலடித்தும் மற்றச் சிலரை ஜவவிக்கலுற்ற காலினால் மார்பின் மீது மிதித்துக் கொண்டும், மற்றக் காலினால் தலைகளை நான்குத் திசைகளிலும் இடறி யெறிந்தும் மிகக் கொடியவர்களான மற்றும் பலரைத் தனது கையினால் ஒரே அறையாக அறைந்தும், நொறுங்கப் பிசைந்தும் அம்மகா பலசாலியானவர் சடுதியில் ஒரே உருண்டையாகத் திரட்டியும், மற்றும் சிலர்களின் கால்களை வாரி வலிமையோடு உயர வெறிந்தும் அவர்கள் பூமியில் வந்து விழுவதற்கு முந்தியே வேறு சிலரை வாரி அவர்கள் மீது படும்படிக் குறிப்பிட்டெறிந்தும் கேளுங்கள் முனிபுங்கவர்களே! இவ்விதமாகச் சகல வசுரர்களையும் நாசம் பண்ணிச் சேனாதிபதிகளின் பிள்ளைகளான மகாசுரர்களையும் ஓர் ஆல மரத்தை எறிந்து அவர்கள் பிராணன்களை யிழக்கச் செய்தனர். அதன் பிறகு வஜ்ஜிரபாகுவும் மிகுந்த பரபரப்போடு துரிதத்தில் இடது கையால் வில்லைப்பற்றி வலது கையினால் நாணோடு அம்புகளைத் தொடுத்து நிற்க அச்சூரன் குமாரன் ஆயிரம் பாணங்களைப் பிரயோகித்தனன். வீரபாகுவோ அவை யனைத்தையும் தூள் தூளாக்கிவிட்டனர். பிறகு அப்பலவான் மிகுந்த தீக்ஷணியமுள்ள பதினாயிரம் நாராச பாணங்களைப் பிரயோகிக்க அவற்றையும் இவர் தம் முஸலாயுதத்தினால் தெள்ளு பொடியாக்கினர். பின்பு அவன் அனேக ஆயிரம் சரங்களைத் தொடுத்து மாரியாகச் சொரிந்ததை யெல்லாம் இவர் கையாலே பழுதாக்கிவிட்டனர். ஓகோ! பிறகு வஜ்ஜிரவாகுவோ வென்றால் அவர் மீது மிக கோபத்துடன் தலை மார்பு, கை கால், நெற்றி, கழுத்து, மர்மஸ்தலங்கள் முதலிய விடங்களிலெல்லாம் ஆயிரம் ஆயிரங்களாக மிகக் கூர்மையுள்ள பாணங்களை வர்ஷிக்க, அவ்வாறு விடப்பட்ட பாணங்களெல்லாம் அவருடைய கெட்டியான முஸலாயுதத்தையும் உடைத்து அவரது அங்கம் முழுதும் மிகவும் பற்றலானதினால் உடனே வீரபாகு ஓர் நொடி நேரம் மிகவும் களைப் புற்றவர் போலிருந்து, பிறகு எழுந்து மிகவுங் கோபங் கொண்டவராகி மிகவுஞ் சுந்தரமாகிய அவனுடைய தேரைக் காலினாலுதைக்க அது நூறு துணுக்குகளாகி விழலுற்றது. உடனே வஜ்ஜிரபாகு சீக்கிரத்தில் மற்றொரு மகா ரதத்திலேறிக் கொண்டு வீரபாகுவின் நெற்றி

யின் மீது ஆயிரம் அஸ்திரங்களைச் சந்தானிக்க அவையாவற்றையும் அவர் முனை முறிந்து விழச் செய்தனர். பிறகு அவர் அவ்வசுரனோடு கூட தேரைச் செங்குத்தாகத் துரிதத்திலெடுத்து உயரத்தில் லக்ஷம் யோசனைத் தூரத்திற் கப்பால் எறிய, பிறகு அந்த ரதம் பூமியில் விழுந்து ஓர் க்ஷணத் துக்குள் துண்டு துண்டாகச் சிதறலுற்றது. அதனோடு விழுந்த வஜ்ஜிர வாகுவோ தப்பியெழுந்து மிகக் கோபங் கொண்டவனாகித் திரும்பவும் ஓர் உன்னதமான வில்லை யெடுத்து யுத்தத்துக்கு எத்தனிப்பதற்குள் அப்போதே இவர் அவனுடைய அந்தத் தனுஸை இரண்டு துண்டமாக்கிவிட்டனர். அதன் மேல் அவன் ஆக்கிரம் கொண்டவனாகி ஓர் கத்தியைக் கைப்பிடித்துக் கிளம் பிக் குதித்து ஓடிவருகையில் சடுதியில் கத்தியைப் பிடித்த படியுள்ள அந் தக் கையை வெட்டி யெறிந்தனர். பின்பு அவன் கடுஞ்சினங்கொண்டு ஓர் பெரிய கதையைக் கரகரவென்றுச் சுற்றி அவர் மார்மீதடிக்க அதையும் அவ் வீரவாகு தன் கைக்கத்தியால் துண்டித்துவிட்டுப் பிறகு எழும்பிக் குதித் துக் கொண்டு சிக்கிரமாகக் கத்தியினால் அவ்வஜ்ஜிரவாகுவினது மிகவும் திடமான தலைகளை வெட்டித் தள்ளினர். கேளீர்! சௌனகாதி முனிவர்களே! இவ்விதமாக வீரபாகுச் சகல அசுரர்களையும் நாசஞ்செய்துவிட்டு ஸ்ரீ கந்த பிரானன்டைக்குத் திரும்பிச் செல்ல எண்ணங் கொண்டபோது சூரியனும் விரைவில் அஸ்தமனகிரி யடைந்தனர். அப்போது வீரவாகு, ஆகா! சூரன் ஸ்ரீ கந்தபிரானை நிந்தித்ததற்குற்ற பயனை யிப்போது கைக் கொண்டானல்லவா? என்று மனதிலெண்ணிப் புறப்படுகையில் மறுபடியும் அப்பட்டணத்து வீதி களிலுள்ள விநோதங்களை அப்போது பார்த்துக் கொண்டு வேகமாய் அக ழைத் தாண்டி ஓர் நொடியில் இலங்காபுரிக்கு வந்தனர். அப்போது அங்குள்ள ஆயிரம் தலைகளின் வரிசைகளையும் இரண்டாயிரம் கைகளையுங் கொண்ட யாளி முகாசுரன் என்றவன் அவர் வரவை யறிந்து வெகு கோபத்தால் அவ ரால் தன் மகன் சாவுண்டதை மனதில் எண்ணியிருந்த அசுரச் சேனைகளோடு அவரைத் தடைசெய்து அவரைப்பார்த்துக்கொடூரமான வார்த்தைகள் இயம்பு கின்றான்:—"அடா! நீ! நமது மைந்தனைக் கொன்றபடியால் நீ மிகுந்த ஸாஹ ஸச் செய்கையுடைய வனாகின்றாய். ஆகையால். உன்னை நாம் இப்போதே கொன் று விடுகின்றோம். நமது மிகுதியான வீரியத்தை இப்போது பாரடா" என்று இவ்விமாக வுரைத்த அவனது கடும் வசனங்களை வீரவாகுக் கேட்டுக் கொஞ்சம் புன் சிரிப்புற்ற வராகி அப்போது அவ்யாளி முகனை நோக்கிக் கூறு கின்றார். "அடா நீயோ ஆயிரம் முகங்களோடும் இரண்டாயிரங் கைக ளோடும் பயங்கரனாக விருக்கின்றாய். நாம் ஒரே முகத்தோடு விளங்கு கின் றோம். வெகு சௌரியத்தை யுடைய நீ செய்யக் கூடியதை யெல்லாம். இங்கு யுத்தத்தில் செய்" என்றனர். அப்போது அந்தக் கொடிய அசுரனுடைய சேனைகள் அவ்வாறு உரைத்த வீரவாகுவைக் குறிப்பிட்டுக் கூர்மை பொருந் திய சஸ்திரங்களை மிகவும் துரிதத்தில் சொரிந்தார்கள். பிறகு அத்தேஜோ வான் உடனுக் குடனாகவே அவற்றை யெல்லாம் தன் கைக் கத்தியாற் சேதி த்து விட்டனர். அதன் மேல் யாளிமுகன் வெகு கோப முற்றவனாகி அவ ரைத் தனது ஆயிரங்கைகளால் அவருடைய கற்பாரை போன்றக் கொட்டி

யான மார்மீது அறைய, அவர் அக்ஷணத்திலே அவனுடைய அக்கைகளைக் கத்தியால் துண்டித்து விட்டனர். ஓ பிராம்மணர்களே! பிறகு அவன் மிக்க கொடூரமான மற்றக் கைகளால் மகா உன்னதமான பலமலைகளைப் பிடுங்கி வீரவாகுவின் திருமேனிமீ தெறிந்தான். அவைகளெல்லாம் அவர் மீது பட்ட மாத்திரத்தில் பொடிப் பொடியாகி விட்டன. அப்போது வீரவாகு அவ்வாயிரங் கைகளையுஞ் சேதித்து இன்னும் அவ்வசுரனால் தன்னைக் கட்டும் பொருட்டு நீட்டப்பட்ட ஆயிரம் துதிக்கைகளையும் கத்தியினாற் கண்டனம் செய்து அவைகளை அங்குப் பூமி முழுதும் பரப்பினர். மேலும் அக்கணாதிபரானவர் அங்குள்ள அசுரப் பூண்டுகளை யெல்லாம் மலை முதலியவற்றால் அதம் பண்ணி விட்டுச் சமுத்திரத்தைத் தாண்டக் கந்தமாதன கிரியை யடைந்து ஸ்ரீ கந்தபிரான் வாசஞ் செய்கின்ற மிகுந்த ஒளியுள்ள திருச்செந்தூருக்கு வந்தனர். நாட்டியக்காரன் வேடம் மாறுவது போல் ஓர் வினாடிக்குள் தன் சுய உருவத்தைக் கொண்டார், அப்போது அங்குள்ள மகா பராக்கிரம சாலிகளான லக்ஷத் தெட்டுக் கணங்களும் பிரமன், விஷ்ணு முதலிய சகல தேவர்களும் இந்திரனோடு கூட அங்கு வரலுற்ற மகாத்மாவான வீரவாகுவைக் கண்டவுடனே பல துதிகளால் அவ்ரை வணங்கி அஞ்சலி செய்து நின்றார்கள். அப்போது வீரவாகுவும் அவ்வெல்லோர்களுடனும் சம்பாஷித்து ஒவ்வொருவரையும் கட்டி யணைத்துக் கொண்டதன் பேரில் அவ்வனைவருக்கும் அதிலும் விசேஷமாய் இந்திரனுக்கும் சகல விருத்தாந்தங்களையும் சொல்லி அப்போது அவர்களெல்லாரும் தன்னைப் பின்றொடர்ந்து வர ஸ்ரீ கந்தபிரான் திரு மாளிகைக்கு வந்து அங்கு தேவ சைனியங்களுக்கு ரக்ஷகரும் பரமாத்துமாவுமாகிய ஸ்ரீ குக மூர்த்தியைத் தரிசித்து மிகுந்த பக்தியுடனவரை நமஸ்கரித்து, அநேகம் துதிகளால் தோத்திரம் பண்ணி மிகுந்த வணக்கத்துடன் கைகளைக் கட்டிக்கொண்டு சந்நிதியில் நின்றனர். அப்போது ஸ்ரீ கந்தபிரான் கட்டளை யிட்டதன் பேரில் வீரவாகு தான் போய்வந்த விருத்தாந்தங்களைச் சந்நிதானத்திலறிவித்துக் கொண்டனர். "ஓ! சுவாமி! தேவரீரால் திருவாக் கருளப்பட்ட படியே அடியேன் அசுரனுக் கறிவித்தும் அவன் அதற்குச் செவிகொடாமல் தேவரீரது கட்டளையை மறுதளித்து விட்டதோடு ஓ பிரபுவே! என்னைக் கொல்வதற்காக அவன் சில அசுரர்களுக்குத் திட்டமிட்டான். அதன்மேல் யான் தேவரீரது கிருபாவசத்தினால் அவ்வசுரர்களை அதம் செய்து விட்டுப் பிறகு திரும்பி இங்குச் சந்நிதானத்திற்கு வந்துள்ளேன்." என்றிவ்விதமாய் வினயத்தோடு உரைத்து வணக்கமாய் நின்ற அவ் வீரவாகுவை நோக்கி ஸ்ரீ ஷண்முகப் பெருமான் அப்போது திருவாய் மலர்ந்தருளிய தாவது: "கேளாய்! எமது அன்புள்ள பக்தனே! எம் விஷயத்தில் நீ மிகுந்த பிரயாசை யெடுத்துக் கொண்ட படியால் மிகவும் ஆயாச முடையவனாக விருக்கின்றாய்." என்றது முதலான பல உபசார வார்த்தைகளை யருளிவிட்டுப் பிறகு ஸ்ரீ முருகக்கடவுள் பிரமா! விஷ்ணு! இந்திரன் முதலியத் தேவர்களை நோக்கிச் சடிதியில் உரைத்தருளுகின்றார்: "கேளுங்கள் விஷ்ணு முதலிய தேவர்களே! அவ்வசுரன் நமது கட்டளைக் குட்படாதபடியால் நீங்கள் பார்த்தக்

கொண்டிருக்கும்போதே இச் சூரபத்மனை அவனுடைய பந்துவர்க்கங்களுடன் நாளைதினமே சமுகரித்து விடுகின்றோம்'' என்றனர். ஓ சௌனகாதி முனிவர்களே! இவ்விதமாக ஸ்ரீ பிரபுவால் திருவாக்கருளப் பட்ட வார்த்தைகளை ஸ்ரீ விஷ்னு முதலிய தேவச்சிரேட்டர்கள் அனைவரும் கேட்டு மிகுந்த ஆனந்த மடைந்தார்கள் ஓ புண்ணியமானது மேலும் மேலும் விருத்தி யடையப் பெற்ற முனீந்திரர்களே! முக்கிய அசுரர்க ளெல்லாரையும் நாசஞ் செய்தருளிய வீரவாகுவின் சரித்திரம் முழுதும் உங்களுக்கு இவ்விதமாக உரைத்தனம். மேலும் யாம் சொல்லுகின்ற பின்னு முள்ள விருத்தாந்தங்களையும் மிகுந்த வணக்கத்துடன் கேட்பீர்களாக.

## 6. அத்தியாயம்.

பிற்பாடு சூரன் தன் புத்திரன் மரண மடைந்ததைக் கேட்டு அசுரர்களோடும் பத்மகோமளை யென்ற பட்டஸ்திரீயோடும் மற்று முள்ள ஸ்திரீகளோடும் மிகவும் துக்கப்பட்டனன். அப்போது அவனுடைய மந்திரியாகிய மகா புத்திசாலியான தருமகோப னென்பவன் மிகவும் துக்க முற்றவனாய் வருந்துகின்ற சூரனிடம் வந்து சிலவார்த்தைகளைச் சொல்லி சீக்கிரத்தில் சமாதானப் படுத்தினன். ஓ மகா பராக்கிரம சாலியான அரசனே! தேவரீர்! ஐசுவரியம், கீர்த்தி, புத்தி, தைரியம், சௌரியம், பராக்கிரமம், இவைகளுக் கெல்லா மிருப்பிடமும், சகல தந்திரங்களையு மறிந்தவரு மல்லவோ? யாது நிமித்தம் கேவலம் ஓர் மூடனைப்போல் இப்போதத் துக்கமுறுகின்றீர்? ஓ பிரபுவே! இப்படிப்பட்ட உம்மைப் பிரமாதி தேவரெல்லாம் கண்டு சிரிக்கமாட்டார்களா! ஆனபடியால் தாங்கள் இப்போது சோகத்தை விட்டு விடல் வேண்டும். ஒரு அற்பனுடைய தூதனா லிந்த மாதிரி செய்யப்பட்டதைக் குறித்துத் துக்கம் பாராட்டுவது எப்படித் தகுதியாகும்? இம்மைந்தனுக் கேற்பட்ட வாழ்நாள் இவ்வளவு தானிருந்தது. இல்லையானல் சகல சத்துருக்களையும் கொல்லக் கூடிய பராக்கிரமம் பொருந்திய இம்மைந்தன் ஓர் அற்பத்தூதனல் எப்படிக்கொல்லப் படலானன்?'' என்றிவ்வா றெல்லாம் பலவிதமாக அத்தருமகோபன் உரைத்த தன்மேல் சூரபத்மன் துரிதமாகப் பக்கத்தி லிருந்தவர்களை நோக்கி 'அத்தூத னிப்போது மிருக்கின்றானே? அல்லது போய் விட்டானே' வென்று கேட்க, கேளீர் சௌனகாதி முனிபுங்கவர்களே! அப்போது 'அவன் சென்று விட்டான்' என்று சொன்னதைக் கேட்டு பிறகு அப்பலவானன சூரன் ஒரு தூதனை நோக்கி 'அடா! பிர்மனை இங்கழைத்துவா' என, அத்தூதன் எங்குமோடிப் போய்ப் பார்த்ததில் அப்பிரமன் சகல தேவர்களுடனும் முருக பிரானருகிலிருப்பதைக் கண்டு திரும்பி வந்து செய்தியைச் சொல்ல சூரபத்மனும் அத்தூதன் வார்த்தையைக் காதாற் கேட்டு தன்மனதில் பிர்மாதி சகலதேவர்மீதும் கோபித்துக்கொண்டு உடனே மற்றோர் அண்டத்துக் கதிபனை, *பிரமனை அழைப்பித்துத் தூதன்

---

*இதனல் அனேககோடி பிரமாண்டங்களில் ஒவ்வோரண்டத்துக்கும், சிருஷ்டி திதி, சம்மாரங்களாகிய மூன்றுவித அதிகாரங்களையும் நடத்திவருவதற்காக வெவ்

முகமாய் அவரை நோக்கி 'ஓ! பிரமனே! நம்பட்டணத்தை முன்னிருந்தது போல் செய்துவிடு' என்று சொல்ல உடனே அப்பிரமன் முன்னிருந்தபடியே நகரத்தைச் சீர் திருத்திவிட்டுப் பிறகு சூரனிடம் செல்ல, சூரனும் அவரை வெகுமானத்துடன் தனது தூதரைத் துணைசேர்ப்பித்து அவருடைய அண்டத்துக்குச் செல்லும்படி யனுப்பினன். உடனே அத்தூதர்கள், அப்பிரமனை அந்தப் பிரமாண்டத்துக்கு வெளியிற் கொண்டுவிட பிறகு அவர் சென்றுவிட்டனர்.

முந்தி (சம்பவகாண்டம் 47-வது அத்தியாயத்திற் கூறிய) அனுப்பப்பட்ட வேவுகாரர்கள் அனைவரும் இப்போது இங்குவந்துசேர்ந்து சிம்மாசனத்தில் வீற்றிருக்கின்ற சூரனிடத்தில் வினயத்துடன் தெரிவித்துக் கொண்டதாவது:—ஓ! நாதனே! தேவரீர் கட்டளையின்படிக்கு யாங்கள் சென்று யாவற்றையுங் கண்டுகொண்டிங்கு வரலானோம். ஸ்ரீ பரமேசுவரனது திருமேனியினின்றுண்டான கந்தபிரான் திருச்செந்தூரின் கண் மகாபலிஷ்டர்களான இரண்டாயிரம் வாகினி பூதசேனைகள், மகாபராக்கிரமசாலிகளான நூற்றெட்டுச் சேனாதிபதிகள், அளவற்றச் சக்தியையுடைய இலக்ஷத்தொன்பது மஹாவீரர்கள் இவர்களாற் சூழப்பட்டவராகி மிகுந்த பேரொளியால் விளங்கியவராக வெழுந்தருளியிருக்கின்றார். அவர் மகாபலவானான வீரவாகுவைத் தங்களண்டைக் கனுப்பி, பிறகுத் திரும்பிவந்த அந்த வீரவாகுவானவர் இலங்கைக் கதிபராகிய மகாசூரனாகிய யாளிமுகன் மாண்டுவிட்டதையும், மிகச்சிறப்பான அவ்விலங்கையும் அவனாற் கொளுத்திவிடப்பட்டதையும், மற்றுமுள்ள தேவரீர் பலம், விருத்தாந்தம் முதலிய யாவற்றையும். சொல்லக்கேட்டுத் திருவுளங்கொண்டு, சிவகுமாரரான அந்தக் கந்தபிரான் கடுஞ்சினங்கொண்டு யுத்தம் நடத்தத் தீர்மானித்தவராகிப் பிர்மன் முதலியத் தேவர்களை நோக்கி "ஓ! தேவர்களே! நாளைத்தினமே அசுரரோடு யுத்தந் தொடுக்கின்றோம்." என அதனால் மிகுந்த சந்தோஷங்கொண்ட தேவரால் மிகவும் சேவிக்கப்பட்டவராகி அங்கு துலங்க விளங்கி நிற்கின்றார்." என்று தூதர்களுரைத்த வசனத்தைக் கேட்டுக் கேளீர்! சவுனகாதி முனிவர்களே! சூரபத்மன் தன் மைந்தர்கள் சிங்கமுகன், சேனாதிபதிகள், மர்மங்களை யறிந்த மந்திரிகள், இவர்களனைவரையும் துரிதத்திலழைப்பித்து அவர்களை நோக்கி மிகவும் ஆலோசித்துச் சொல்லுகின்றான்:— ஓ! தம்பீ! மைந்தர்காள்! நீங்களெல்லோரும் கவனமாகக்கேளீர்கள்! பிர்மன் விஷ்ணு முதலிய சகலத் தேவர்களும் ஸ்ரீ மகேச்சுரனுடையச் சந்நிதிக்குச் சென்று "ஓ! ஜெகதீசா! சூரபத்மன் இத்தேவர்களுக்கு மிகவுங் கொடுமைகள் அளிக்கின்றான். ஆகையால், இப்போது தேவரீர் எங்களைக் காத்தருளல்வேண்டும். என்று முறையிட்டுக் கொண்டார்களாம். அவ்வசனங்களைக் கேட்ட பகவானும் உடனே மனமிரங்கி குமாரனை உற்பத்திசெய்து அவனுக்கு வேண்டியவளவு

---

வேறு பிரமன், விஷ்ணு, உருத்திராகள் உண்டென்பதும், சச்சிதானந்த பிரம்மமூர்த்தியாகிய ஸ்ரீ பரமேச்சுவரனே சகலபிரம்மாண்டங்களுக்கும் பொதுவான மூலகாரணப் பொருள் என்பதும் தெளிவாகும்.

சைனியங்களையுஞ் சேர்த்துவிட்டு அவ்விளைஞனை அனுப்ப அவ்விளைஞனும் நாளைத்தினமே நம்மோடு யுத்தஞ்செய்யத்தீர்மானித்து, கோளுரைப்பதையே தொழிலாகக்கொண்ட பிர்மன் விஷ்ணு, இந்திரன் முதலானத் தேவர்களுடன் இப்போது திருச்செந்தூரில் வந்திருக்கின்றானாம். அப்பயலானவன் தாரகனைக் கொன்றபோதே யாம் அவனைக் கொன்றுவிடுவதாகச் சேனைகளுடன் பிரயாணமாயினோம். ஆனால் உலகின்கண்ணே சூரபத்மர்கூட ஒரு இளம்பயலைச் சட்டைசெய்துகொண்டு வெளிக்கிளம்பினரென்ற அவதூறு நேரிடலாகுமென்றுத் திரும்பிவரலானோம். ஆகிலும் இப்போது நீங்கள் இனி நடக்க வேண்டிய காரியங்களின்னவென்று எமக்கெடுத்துரைப்பீர்களாக.'' என்று கூறி அவன் ஒய்ந்தவுடன், கேளீர் சவுனகாதி முனிவர்களே! மயூரனென்கின்ற மந்திரியுரைக்கின்றான். "சுவாமீ! நமது தாரகனைக்கூடக் கொன்றுவிட்ட ஒருவனைத் தாங்களும் கேவலமாக எதனால் எண்ணலாம். அவனைப் பாலனென்றெண்ணலாமோ? நமது வஜ்ஜிரவாகுவுக்கும் யமனாகிவந்த அந்த வீரவாகுவினிடத்தில் பிரபுவாகிய தங்களுக்கு ஓர் தூதனென்ற புத்தி எதனால்? மேலும் படைகள் நெருங்கிவந்திருக்கின்ற இச்சமயத்தில் தேவரீருக்கேது இவ்விதமானபுத்தி? நல்லது! வளர்த்துவதில் என்னபயன்? இப்போது உடனே சண்டைக்குத்தயாராவதுதான் நலமென்பது என் யோசனை.'' என்று ஆலோசனையிற் சிறந்தவனான மயூரன் சொல்லி ஒய்ந்தனன். பிறகு துர்க்குணன் என்பவன் சூரனை நோக்கிச் சொல்லுகின்றான்:— ஓ! பிரபுவே! அந்தப் பயலும் அப்பூதச்சேனையும் தேவரீரால் சட்டை செய்யப்படத்தக்கவையல்ல. சேனைத்தலைவர்களை யனுப்பி அச்சிறுவனைச் சைனியங்களோடும் வெற்றி கொள்ளவேண்டும்'' என்ன, அவ்வசனத்தைக்கேட்ட தருமகோபன் கூறுகின்றான்: "ஓ! சுவாமீ! தங்களது மைந்தர்களில் ஹிரணியன், அக்கினிமுகன், இவ்விருவர்களிலொருவருக்குக்கூட வச்சிறுவன் வீரபராக்கிரமங்களில் போதுமானவனல்லன். ஆனால் தாரகனோ் சிறியோனாதலால்தான் அவனது அஸ்திரங்களுக்குப் பதிலஸ்திரங்களை விடமுடியாமல் அச்சிறுவனாற் கொல்லப்பட்டானென்பதுண்மை. கிரௌஞ்சமலையும் அகஸ்திய முனிவரின் சாபத்தால்தான் அவனால்பிளக்கப்பட்டது. வாலிபனான நமது வஜ்ஜிரவாகுவோவென்றால் சமயத்தில் தேர், வில், அம்பு முதலிய கருவிகள் கைக்குக் கிட்டாதபடியால்தான் அச்சிறுவனது தூதனாற் கொல்லப்பட்டனன். ஆனபடியினால், தாங்கள் உடனே நமது சேனாபதியைக் கட்டளையிட்டனுப்பி விஷ்ணு முதலியத் தேவர்களோடு அச்சிறுவனை வெற்றிபெறவேண்டும்'' என்று சொல்லி ஒய்ந்தனன். அப்போது கேளீர் முனிந்திரர்களே! உடனே காலஜித்தென்பவன் கூறுகின்றான்: "ஓ! அசுரோத்தமா! தேவரீர் முன்னமே விஷ்ணு, பிர்மன் முதலிய தேவர்களையெல்லாம் வெற்றிகொண்டிருக்கிறீர். அப்போது இவ்வித ஆலோசனைகளொன்றுமில்லாதிருக்கையில் இப்போதுமட்டிலென்ன வந்தது? ஆ! ஆ! மிகவும் கஷ்டம்! நல்லது, இப்போது சீக்கிரத்தில் ஜெயம் பெறுவதற்காகச் சேனையை உடனே அனுப்புங்கள். அல்லது தேவரீர் கட்டளையின்படி நானாகிலும் சீக்கிரமாகப் புறப்படுகின்றேன் என்றனன்.'' இவ்வசனங்களைக் கேட்டு சண்டனன் என்பவன் அசுரேந்திரனைப் பார்த்துக்

சொல்லுகின்றான். "கேளுங்கள் சுவாமீ! அந்தப் பயலையாவது அப்பூதச்
சைனியங்களையாவது கெலிக்கும்பொருட்டுத் தேவரீரை யொத்த மஹா சூரர்
கள் கூட இப்போது மனக்கவலைப் படுவதற்குக் காரணம் என்ன? இதோ
யானிப்போதே சென்று அவனுக்குத் துணைவந்திருக்கின்ற பூதச்சேனைகளைக்
கொன்றுதள்ளி யச்சிறுவனை யொருநொடிக்குள்ளே இவ்விடம் கொண்டு
நிறுத்துகிறேன்." என்று சொன்னான். அப்போது அனலன் என்பவன் சொல்
லுகின்றான்: "ஓ! சுவாமி! யான் இப்போதே தடையின்றி சென்று அத்
தேவர்களை யெல்லாம் முறியடித்து வருகின்றேன்" என்றனன். அதன் பிறகு
மந்திரிகளில் முந்தினவனான சிங்கன் அரசனை நோக்கி யுரைத்ததாவது: "ஓ
அசுரராஜனே! இந்திரனுக்குத் துணையாகவந்த இந்தச் சிறுவனைச் செயிப்ப
தற்குக்கூடத் தாங்கள் ஏன் இங்குக் கவலைப்படுகின்றீர்கள்? அண்டத்திலுண்
டான அகண்டமானவர்களும் ஒன்று சேர்ந்து நெருங்கிவந்தாலும் அவர்
களோடு அவனையும் வெற்றிகொண்டே தேவரீர் முன்னர் திரும்பிவருவேன்.
ஓ பிரபுவே! இப்போதெனக்குக் கட்டளையிட்டருளல் வேண்டும் என்றனன்.
அப்போது சேனாதிபதிகளோடு சகல மந்திரிகளு மிதேவிதமாக சூரனிடத்து
ரைத்தார்கள். பிறகு அதி சாமர்த்தியமுள்ள பானுகோபன் "ஓ சுவாமி! உத்
தமரான தாரகக்கிரௌஞ்சாசுரர்க ளெப்பொழுது கொல்லப்பட்டார்களோ
அப்போதே அக்கந்தன் என்னைக்கிளப்பிவிட்டான். இப்போது நான் தங்களால்
நியமிக்கப்பட வேண்டியதில்லை. பல்முளையாத அப்பாலகனிடம்தேவரீர் வேவு
காரரையும் அனுப்பினீர்கள். மேலும் தங்களுக்குள்ள வீர பராக்கிரமங்களைத்
தாங்களே அறியவில்லை. அநிகஞ்சொல்லி என்ன பலன்? ஓ பிதாவே! விரை
வில்என்னை அனுப்பவேண்டும்"என அவனது வசனத்தைக் கேட்டதின்மேல்
ஹிரணியனும் சொல்லுகின்றான்: "ஓ தந்தாய்! ஜனங்களெல்லாரும் அசுரேச
னான சூரபத்மன் ஒரு குழந்தையுடன் போர்புரிய இவ்வளவு யோசித்தா
ரென்று பரிகசிப்பார்கள். மேலும் இந்த அற்பகாரியத்துக்காகப் பானுகோபன்
சென்றபோதிலும் மிகுந்த அபகீர்த்திக் கிடமாகுமென்பதிற் சந்தேகமே
யில்லை. ஆகையால் தங்களுடைய உத்தரவின்மேல் நானே போய்ச் சீக்கிரத்
திலவனைச் சேனையோடு முறியடித்துவிட்டு இதோ திரும்பி வருகின்றேன்."
என்றான். பிறகு அக்கினிமுகன் சூரனை நோக்கிச் சடுதியிலுரைத்தா
வது:— ஓ தந்தையே! பாலகர்களாகிய நம்மிருவர் சகோதரர்களும் அப்ப
யலினாலும் தூதனாலுங் கொல்லப்பட்டார்களல்லவா! ஆகையால் யான் சென்
றவ்விருவர்களையும் அவர்களது சேனையோடுச் சத்தியமாய்ச் சீக்கிரத்தில் சங்
கரித்து விடுகின்றேன். ஓ! அசுரேசுவரா! தவறினால் நான் திரும்பித் தங்களி
டம் வரமாட்டேன். யான் முந்திப்பாதாள லோகத்திலுள்ள அரக்கர்களை
யெல்லாம் ஜெயிக்கவில்லையா? ஓ! கோ! தேவரீர் எந்தன் பராக்கிரமத்தை
அறியீர்களா? பிரமனாலெந்தனுக்களிக்கப்பட்ட கவசம், தனுசு மகாகோலமா
கிய பலவகையாயுதங்கள் இவையாவும் என்னிடமிருக்கின்றன. ஆகையினால்
ஓ அசுரேசுவரா, என்னை யிப்போதே சண்டைக்கு நியமிப்பீராக" என்றான்.
ஒருவருக்கொருவர் இவ்விதமெல்லாம் அனைவரும் கூறிக்கொண்டிருக்கை
யில், சகல அர்த்தங்களின் சாராம்சங்களையும் நன்கறிந்தவனான சிங்கமுகா

சாரணனவன் அவர்களுடைய வசனங்களையெல்லாம் கேட்டுச்சூரனை நோக்கி உள்ள தத்துவங்களை யெடுத்துரைத்ததாவது:—ஓ! அசுரேசுவரா, ஸ்ரீ சுப்பிர மணியரிடத்து உமக்கேது சிசுவென்ற புத்தி தேவரீர் எந்த மகேசுரனிட மிருந்து வரன் அடைந்தீரோ? அவர்தானிவர். இவரது திருவாக்கினையின் படித்தான் ஸகல வண்டங்களும் உண்டாகி அப்படியே லயமடைகின்றன. தேவரீர் அவரால் அருளப்பெற்ற ஐசுவரியங்களை அநுபவித்துச் சுகித்து இப் போது மிகவுங் கர்வங்கொண்டுவிட்டீர். இனி பிர்மன், விஷ்ணு, இந் திரன் இவர்களுக்கும் தீங்கிழைத்து இந்திர குமாரனுன ஜயந்தனையும் விட்டு விடாவிட்டால் தேவரீர் தப்பப்போகின்றதில்லை. இவை யெல்லாம் கேட்டுத் தான் ஸ்ரீ கந்தபிரான் அவர்கள் மீது வைத்துள்ள கருணை வசத்தினு லிப்போது திருச்செந்தூருக் கெழுந்தருளி யிருக்கின்றனர். மேலும் தேவரீர் அத்தூதனை ஓர் பூதமென்று நினைக்கின்றீர். மகா பலசாலி யான அவ்வீரபாகு கணங்களில் ஸ்ரீ நந்திகேசுவரரிலும் மேற்பட்டவர். அம் மகா வீரனை நீர் நேரிலே நன்ருய்ப்பார்த்தும் அவரை யறியவில்லையல்லவோ? தவிரவும் கேளீர்! அசுரேசுவரா! ஸ்ரீ பரமேசுவரனு லுமக்களிக்கப்பெற்ற நூற்றெட்டு யுககாலத்தின் ஆயுளும் இப்போது சென்று விட்டது. மேலும் அவர் அப்போது உமக்கு முடிவில் அவருடைய சக்தியினுல் மரணம் என்று திருவாக்கருளி யிருக்கின்ருர். மிகுந்த சுந்தரத் திருமேனியுடைய ஸ்ரீகுமார சுவாமியானவர் சக்தியை (வேல்)தரித்துக்கொண்டு இதோ எழுந்தருளியிருக் கின்ருர். ஓ! கோ! அசாத்தியமானவை யெல்லாம் முடிக்கவுற்ற ஸ்ரீ மகா தேவன் மாயையை யானறியேன். ஓ அண்ணு! உமக்கேது இப்போது இப் படியான கெடுபுத்தி யுண்டானது. இனியாவது தேவர்களைச் சிறைவிடுத்து, பயமின்றி ஸ்ரீ ஷண்முகன் சந்நிதிக்குச் சென்று அவரைப் பலதடவை வந்தனித்து அவரது புத்திமதிகளைக் கேட்டு இந்நேர்த்தியான உமது பட்ட ணத்திலிருந்து வேண்டிய சுகங்களை அநுபவித்து வாழ்வீர்'' என்றனன். அவ னுடைய இவ்வித வார்த்தைகளைக் கேட்ட அவ்வசுர அரசன் மிகக்கோபத் தோடு உதடு துடிக்க விளங்கியவனுகி அங்கமெல்லாம் வியர்வை பெருகி நனைய வுற்று இரத்த விழிகளைச் சுழற்றிக்கொண்டு சொல்லுகின்ருன்:—அடா! மூடா! நீ நம்மிடம் வெட்கங் கெட்ட வார்த்தைகளை யுரைக்கின்றனை. எவனே ஒரு வாலிபனையும் அவனது கணங்களையும் உயர்த்தி உயர்த்திப் பேசுகின் ருய்; மேலும் ஓ! கோ! கோ! அடா! துர்ப்புத்தி கொண்டவனே! ஜயந்தன் முதலியவர்களை விடுவித்தவனிடத்துக்குப் போய்க் கும்பிட்டு நின்று அவன் புத்தியையும் கேட்டுப் பிழைக்கச் சொன்னுயல்லவா? அடா! தவிரவும் நூற்றெட்டு யுகங்களின் முடிவில் சீக்கிரமாக நமக்குச் சக்தியினுல் மா ணம் கிடைப்பதான அபாயமும் நேரிடுமென்று பொய்ம்மொழி யுரைத் தாயல்லவா? ஆ! ஆ! மிகவும் கஷ்டம்! அடா நீ மாயையா லிப்படிப் பிதற்றுகின்றனையா? அல்லது வேறு காரணமுளதா? உனக்குப் புத்திகேடா? அல்லது அசுரேசுரனுக்கிருக்க வேண்டிய வீரியமிழக்கப்பட்டதா? நமக்கு ஸ்ரீ பரமேசுவரனுல் கிடைத்தவரனை நீ யிப்போதறிய வில்லையா? நல்லது, இப்போது நீ நம்மிடத்தை விட்டெங்காகிலும் சடுதியிற் சென்று விடு''

என்று மிகுந்த கர்வத்தோடுரைக்கப்பட்ட அச்சூரன் வசனத்தைக் கேட்ட போது சிங்கமுகன் ஓ! கோ! நம்மாலுரைக்கப்பட்ட அநுகூல வசனங்களை இம்மூட புத்திக்காரன் கேட்கின்றானில்லை. விநோதமான வார்த்தைகளாக லெடுத்துக் கொள்கின்றான். ஆகையாலினி இவனுக்குத் தக்க வசனங்களை யுரைக்க வேண்டும் என்று மனதில் நிச்சயித்துக்கொண்டு கேளீர் சௌனகாதி முனிவர்களே! அப்போது அவன் வசன முரைத்ததாவது:—ஓ! அசுரேசுவரா! என்னிடம் அநேகவித ஆயுதங்களிருக்கின்றன. தாங்கள் உத்தரவு செய்தால் நான் இப்போதே சென்று அவ்விளைஞனையும் சைனியங்களையுங் கொன்றுவிட்டு தேவரீருடைய சந்நிதிக்கும் திரும்பி வருகின்றேன். என்று நடுநடுங்குகின்ற தேவக் கூட்டங்களாகிய யானைக் கூட்டங்களுக்குச் சிங்கம்போன்றவனான பயங்கரனாகிய வச்சிங்கமுகனுரைக்கலானான்.

## 7 அத்தியாயம்

பின்பு சூரபத்மன் சிங்கமுகன் வசனங்களைக் கேட்டு மிகச் சந்தோஷங் கொண்டு அப்போது அவனை நோக்கி ஊக்கத்துடன் சொல்லுகின்றார். "ஓ! தம்பி! நீ உண்மையில் என் மனதைச் சோதிப்பதற்காகவே இவ்வாறு கூறினாய். நல்லது கேவலம் ஒரு வாலிபனைக் குறித்து நீ போவது மிகவும் இழிவு. ஒரு சமயம் அவன் இங்கு வருவானாகில் அப்போது உன்னைச் சீக்கிரத்தி லழைப்பிக்கின்றோம். ஆகையால் இப்போது நீ உன் விடுதிக்குச் செல்வாயாக" என்று கூறி அவனை அனுப்பி விட்டு அவன் அந்தப்புரஞ் சென்றனன். கேளீர் சௌனகாதி முனிவர்களே! பிறகு ஸ்ரீ ஆறுமுகக்கடவுளும் அன்றிரவு கழிந்ததன்மேல் காலையிலெழுந்து பற்பல இரத்தினங்களாற் சோபிக்கலுற்ற சிங்காதனத்தின்மீது எழுந்தருளி பிர்மன், விஷ்ணு இந்திரன் முதலிய சகல தேவர்களாலும் சுற்றிலும் வணங்கப்பெற்றவராக இலக்ஷத்தொன்பது பூத சேனாதிபதிகளால் சூழப்பட்டவராகி வீரவாகுவை நோக்கித் துரிதத்தில் திருவாய் மலர்ந்தருளுகின்றார்:—"கேளாய்! வீரவாகுவே! சண்டைக்குப் புறப்படுவதற்காக நீ இப்போது துரிதத்தில் தேரைக் கொணர்விப்பாயாக" வென, வீரவாகுவானவர் இவ்வசனங்களைக் கேட்டு மிகவும் துரிதங்கொண்டவராகி வாயுதேவனிடம் ஸ்ரீ கந்தபிரான் உரைத்தபடியே தெரிவிக்க, உடனே வாயுபகவான் மிகவும் பிரகாசிக்கின்ற தேரைக் கொண்டு வந்து ஸ்ரீ ஷண்முகப் பெருமானாருடைய திருச்சந்நிதானத்தில் நிறுத்தினார். இச்செய்தியை வீரவாகு தெரிவித்தவுடனே ஸ்ரீ ஷண்முகப் பிரபு தன்து ஆசனத்தி லிருந்திறங்கி ஒரு கணத்தில் தேரிலேறியுட்கார்ந்தனர். தாரகனை வதைத்தவராகிய அப்பிரபு விஷ்ணு, பிர்மன் முதலியத் தேவர்களை அவரவர் வாகனங்களின் மீதமரும்படிக்குக் கட்டளையிட்டருளினார். அதன் மேல் அவர்களெல்லோர்களும் அவருடைய கட்டளையின்படி வாகனங்கள் மீதுட்கார்ந்தனர் கேளீர் சௌனகாதி முனீந்திரர்களே! இவ்வாறு பிரமன் அன்னத்தின் மீதும், விஷ்ணு கருடன்மீதும், இந்திரன் விமானத்திலும் மற்றும் படைத்தலைவர்களெல்லாரும் சுந்தரமான இரதங்களின் மீதும் உட்கார்ந்தனர். இரண்டாயிரம் வாகினி பூத சேனைகளும் புறப்பட்டன. அங்கு

தேவ துந்துபிகளும் முழங்கின. இவைகளுடன், ஜல்லரி, கஹளம், மட்டு, டிண்டிமம், படஹம், முதலிய சகல வாத்தியங்களும் ஊழிக்கால கடலோசையின் மேலோசைப்பட முழங்கின. விபஞ்சி, பரிவாதினி, வல்லகி, உருத்திரம் முதலிய பற்பலவித வீணை வாத்தியங்கள் வாசிக்கப்பட்டன. சங்கம், கொம்பு, சின்னம், இவை முதலிய வாத்தியங்கள் யாவும் கோஷித்தன. இனிமையான சுரங்களையுடைய கின்னரர்கள் கந்தர்வர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், உரகர்கள் இவரெல்லாரும் ஸ்ரீ தேவசேனாதிபதியாகிய தேவனது வீரவாளிகளை எடுத்துப் பாடினார்கள். அந்த கற்பக விருக்ஷங்களின் மலர்மாரி பொழியலுற்றது. மேலும் நாரதர், தும்புரு இவ்விருவர்களும் ஸ்ரீ பரமேசுவரனுடைய குமாரனின் பக்கங்களில் நின்று அப்பிரபுவின் விருதாவளிகளை ஆர்ப்பாடஞ் செய்தார்கள். அப்போது எல்லோர்களும் புறப்பட்டு மிகுந்த அட்டகாசங்களுடன் கடற்கரைக்குச் சென்றபோது, தேர்கள், குதிரைகள், காலாட்கள் இவைகளது கால்களால் கிளப்பி விடப்பட்ட புழுதிகளெங்கும் பரவிக் கடலிற் சேர, பிறகு, அக்கடல் முழுதும் சேறாக, அதன் மீது சைனியங்கள் நடந்து செல்லுகையில் அக்கடல் காய்ந்து அங்கும் புழுதிகள் கிளம்பலுற்றன. ஸ்ரீ ஷண்முகன் இவ்விதமாகச் சேனைகளோடு சமுத்திரத்தைக்கடந்து வீரமகேந்திர புரத்தின் வடவாசலையடுத்த விடத்தை யடையும்போதே, பிர்மன் விஷ்ணு இருவரும் துரிதமாகப் பிரபு சந்நிதியில் தண்டம்போல் பூமியில் விழுந்து தெண்டனிட்டெழுந்து வணக்கத்தோடு நின்று அக்கந்தனுக் கறிவித்துக்கொண்டதாவது:—ஓ அடியார்களுக் கபயமளிக்கின்ற தேவாதிதேவா! ஜயா விஜயயிபவா! ஓ சுவாமி! ஓ பிரபுவே! அம்மகாபாதகனுடைய பட்டணத்துக்குள் தேவரீர் விஜயஞ் செய்வது தகுதியன்று. இங்கிருந்தே யிவ்விடத்து வரலாகின்ற அப்பாதகனைக் கொல்வீராக'' என இவ்வாறாகத் தேவர்களால் வேண்டிக்கொள்ளப்பட்ட அத் தேவசேனாபதியானவர் விசுவகருமனை நோக்கி 'இப்போது ஓர் நொடிக்குள் நமக்கோர் பட்டணம் அமைப்பாயாக' வென்றாக்ஞாபிக்க அது கேட்ட விசுவகர்மனும் அனேக மண்டபங்களோடு கூடியதும், பல கோபுரங்களால் விளங்கியதும் பல விநோதங்களோடு கூடியதும் நடுவில் ஸ்ரீ கந்தபிரானுடைய திருமாளிகையால் அலங்கரிக்கப்பெற்றதும் பல பல வீதிகளிலுள்ள தெருக்களின் வரிசைகளால், சூழப்பெற்றதும், மிக நேர்த்தியானதும் மதிக்க முடியாததுமான தங்கத்தினா லமைக்கப்பெற்றதும் ஏமகூடம் என்று பெயர் கொண்டதுமான சிறந்த பட்டணத்தை அமைத்தான். பிறகு அவன் தன் மாயாசக்தியினால் அப்பட்டணம் அவ்வாறு அமைக்கப்பட்டதனை அப்பிரபுவுக்கறிவிக்க ஸ்ரீ கந்தபிரானும் அந்நகரத்தைக் கண்ணுற்று அச்சிற்பியை மெச்சித் தனது திருமாளிகையின் வாயிலுக்கெதிர் சேர்ந்து தேரினின் றிறங்கியருளினர். அப்போது சேனாதிபதிகள் நூற்றெண்மருக்கும் தனித்தனி வீடுகள் அமைத்தனர். ஓ! சவுனகாதி முனிவர்களே! அவர்களின் பெயர்களை எடுத்துரைக்கின்றேன்; கேட்பீர்களாக. சுப்பிரன், மேகமாலி, சுவேத சிர்ஷகரன், பலவானான கபாலி, பெயரில்லாதவன், சித்திராங்கன், ஜுவாலகாது, வஜ்ஜிரன், பீமன், உக்கிரன் உக்கிரசேபன், பிப்

பலன், நந்திசேனன், பிரம்மஜன், பிரம்மசேனன், பத்மகன், கராளன், தண்டன், பத்திரகன், பரிகநேமி, மகானுகிய ஹுதவகன், பலவானுன புஷ்பதந்தன், ருத்திரகன். அரஹரன், மதிஜித், கேதுமாலி, வக்திரன், பிரம்மகேசன், நதிபதி, கலிங்கன், கோரன், அச்சுதன், பலன், சாந்தன், சித்திரசேனன், பூரி, சுசீலகன், மாஜயன், மானவான், சிம்மன், உத்தரசிம்மன், உபதிஷ்டன், ஜயேசன், மத்தகன், மதங்ககன், சண்டி, மகாபலன், சேதன், நீலபத்திரன், சுபாஹுகன், அண்டாபரணசங்கன், காகபாதன், பிங்களன், சமாயன், மாயன், நிகும்பன், கும்பன், சங்கன், பாலகன், விசிகன், சத்ருதாவு, புத்திசாலியான ஹயக்கிரீவன், அயுதாக்ஷன், சஹஸ்ரபாஹு, அநந்தன், வாமன், மங்களகேசன், மகானுகிய சோமன், வஜ்ஜிரமாலி, சண்டன், பலிஷ்டனுன அச்சமுகன், சரபன், இரந்தன், அந்தகன், கடந்தன், மேகவிஜயன், வித்துருமன், சாலிகன், பிருசன், மகாவீரர்களான தண்டனும், வியாக்கிரனும், கொடியோனுன காலபாசன், தசமுகன், குமுதன் பானு, அத்திரி, அசுரகாலன், ஹரிகேசன், இடபவுருவங்கொண்ட தநஞ்செயன், புத்திசாலியான சுசிமுகன், அநலகேசன், சுவக்திரன், மத்தன், உன்மத்தன், நந்தீ, மனேபவன், மிகுந்த பராக்கிரமங்களையுடைய வாயுவேகன், ஸஹஸ்ரபாகு, பானுகம்பன், பதங்கன், சுத்தன், அநீகன், சீதன், சுநாதன், சுமாலி, மாலி, சுவாலாகேசன், ஆகிய நூற்றெட்டுச் சேனுதிபதிகளாகின்றூர்கள். பிறகு பிர்மன், விஷ்ணு முதலிய சகல தேவர்களாலும் இலக்கத்தொன்பது வீரர்களாலும் முன் மீனுருவங் கொண்டிருந்த சிரேஷ்டர்களான முனிவர்களாலும், சிரேஷ்டமான தோத்திரங்களால், துதிக்கப்பட்டவராகி ஸ்ரீ பிரபுவானவர் தமது திருமாளிகைக்கருளி மிக அற்புத உருவங்கொண்ட சிறந்த சிங்காதனத்தில் விஜயஞ் செய்தனர்.

அச்சமயத்தில் தேவரிஷியான ஸ்ரீ நாரத முனிவரானவர் துரிதமாகச் சூரனிடம் வந்து "கேளீர்! சூரபத்மா! உங்களுக்குக் குருவாகிய சுக்கிராசாரியர் எனக்கு மிகுந்த பிராண சிநேகிதராகின்றூர். ஓ அசுரேசுவரா! இப்போது கந்தனிங்கு யுத்தங் கருதி வந்திருக்கின்றூர். அதை உமக்குச் சொல்வதற்காகவே யாமிங்கு வந்தோம். ஆகையால் நீர் கொஞ்சமேனும் அஞ்சாமல் யுத்தஞ் செய்வீர் யாம் உமக்குச் சயமுண்டாக வேண்டுமென்று அருந்தவஞ்செய்கின்றோம்" என்றுரைத்துச் சென்றனர். கேளீர் சவுனகாதியரே! சூரனும் அவ்வார்த்தையைக் கேட்டு மிகுந்த கோபாவேசங் கொண்டவனுகி "இதிலென்னப் பிரயாஸை" யென்று சொல்லிக் கோரன் அகோரனென்ற இருவர்களையும் நோக்கி 'அடா! நீங்களிருவரும் சமுத்திர ராஜனை நம்மிடம் சீக்கிரங் கொண்டு வாருங்கள்' என, அவர்கள் அவ்வண்ணமே ஓர் க்ஷணத்தில் அழைத்து வந்ததன்மேல் சூரன் கடலரசனைக் கண்டு "அடா சமுத்திரா! நீ அச்சிறுவனேடு கூட பூதங்களையும் ஏன் இங்கு விடலானுய்?" என, அது கேட்டுக் கடலரசன் "ஓ! அசுரேசுரா! அப்பூதச் சேனைகளின் காற்புழுதிகளால் யான் தூர்ந்து காய்ந்துவிட்டபடியால் தேவதேவேசுரனுகிய இப்பாலகுமாரனைத் தடை செய்யத் திறமையற்றேே

ணயினேன்.'' என சூரனும் அவ்வசனங்கேட்டு, கேளீர் முனிவர்களே! ஸ்ரீஷண்முகனைக் குறித்துள்ளத்தில் மிகுந்த கோபங்கொண்டனன். அச்சமயத்தில். தூதர்கள் சகல சங்கதிகளையுமறிந்து அவனண்டைக்கோடிவந்து சிங்காதனத்தில் வீற்றிருந்த சூரபத்துமனை நோக்கிக் கூறுகின்றார்கள். ஓ! ராஜனே! யாங்கள் மிகுந்த ஜாக்கிரதையோடு எல்லாச் சங்கதிகளையும் பார்த்து வந்தோம். கந்தன் பூதசேனைகளோடுகூடக் கடலையுங்கடந்து இங்கு வந்துவிட்டனன். பார்வைக்கு ரமணீயமான இலங்காபுரியானது வீரவாகுவால் அழிந்திருப்பதையும் பார்த்து, கேளீர்! அசுரேசுரா! இப்போது தேவரீர் பட்டணத்திய வடபாகத்தில் பல பல ஆச்சரியங்களோடு கூடிய சிறந்த மற்றொரு நகரத்தை அமைத்துக்கொண்டு அத்தேவேசனை பாலகுமாரன், பிர்மன், விஷ்ணு, இந்திரன், முதலியவர்களால் வணங்கப்பெற்றவராகி, இப்போது, தேவரீரோடு போர்புரிவதற்குச் சந்நத்தமாயிருக்கின்றார்'' என, கேளீர்! முனிவர்களே! சூரபத்மன், தூதரிவ்விதமாக வுரைத்த வசனத்தைக் கேட்டதில் கோபாக்கினியால் மிகவும் பற்றி யெரிகின்றவன்போல் காணப்பட்டவனாகி தூதர்களைக்கொண்டு தனது மைந்தனான பானுகோபனை அழைப்பித்தனன். பானுகோபனும் பல வாலிபர்களால் சூழப்பட்டவனாகித் துரிதமாகத் தேர்மேலேறிக் கொண்டு சூரனுடைய அரண்மனை வாயிலுக்கு வந்து சடுதியிற்றேரை விட்டிறங்கிச் சூரன் முன்னிலைக்கு வந்து, அசுரேசனும், மகா பலவானுமான தந்தையை வணங்க, சூரனும் அங்கு வந்து நின்ற மைந்தனை நோக்கிச் சங்கதிகளைச் சொல்லினன். அது கேட்ட பானுகோபனப்போது உரைக்கின்றான்:—ஓ! தந்தாய்! யான் இப்போதே சென்று இவ்வெல்லோர்களையும் ஓர் நொடியில் வென்று சகல சேனைகளோடும் அச்சிறுவனைக் கட்டித் தேவரீர் முன்பாகக் கொண்டுவருகின்றேன். என, சூரபத்துமன் மைந்தன் அவ்வாறுரைத்ததில் மிகவும் சந்தோஷங்கொண்டு அவ்வசுரேசுவரனை யுத்தஞ் செய்வதற் கனுப்பலாயினன்.

முற்றிற்று.

உ
வேலுமயிலுந் துணை

# உயுத்த காண்டம்.

## 1-வது அத்தியாயம்.

---

பிறகு பானுகோபன் அதேக்ஷணத்தி லிரதமேறித் தன் விடுதி சென்று வஜ்ஜிரம்போல் வலிமை கொண்ட கவசம்பூண்டு அம்பறுத்தூணியால் ரமணீயமான முதுகையுடையவனுகவும், கைதனிற்பற்றிய கத்தியினுல் விளங்கியவனுகவும் பதனிட்ட தோலினுலமைத்த விரற் கூடுகளாலழகிய கைவிரல்களைக் கொண்டவனுகவும், மணிக்கட்டுக்கு மேற்பட்ட கைகள்மீ தணியப்பட்ட வுடும்புத் தோற் கவசத்தினுல் நேர்த்தியானவனும் ஆயிரத்தெட்டு மாற்றுருக்குத் தங்க ஜரிகையால் விளங்கிய பீதாம்பரத்தை யுடுத்தியவனுகவும் வீரப்பட்டயத்தாலும் பற்பலவித வாபரணங்களாலு மலங்கரிக்கப்பட்டவனுகவும் தும்பைமலர் மாலை யணிந்ததால் மிகுந்த சுந்தரமுள்ளவனுகவும் மிகுந்த ஸம்மோஹனுஸ்திரங்களைத் தரித்தவனுகவும் இடுப்பினிற்கட்டிய கைக்கத்தியால் விளங்கியவனுகவும் முப்பதினுயிரம் குதிரைகள் கட்டப்பெற்ற வுன்னதமான இரதத்தின் கண் வீற்றிருந்தவனுகவும், குடைகள் சாமரங்கள், கெண்டிகள், காளாஞ்சிகள் இவைகளைக் கைப்பற்றியவர்களாலும், வெற்றிலைப் பெட்டிகளைக் கைக்கொண்டவர்களாலும் இன்னும் மற்றுமனேகர்களாலும் ஸேவிக்கப்பட்டவனுகவும், கத்திகேடயங்களைத் தரித்த கொடியர்களான பல வசுரர்களா லருகினில் சூழப்பெற்றவனுகவும், நிறைந்து வெளிப்பிதுங்கிய பல வஸ்திரங்களாற் சுமத்தப்பெற்ற கோடி கோடி யிரதங்களாற் பின்தொடரப் பெற்றவனுகவும் உயுத்தத்துக்காகப் புறப்பட்டனன். பெருமைதங்கிய வச் சூரன் மகன் புறப்படும்போதே மிகுந்த பயங்கரமும் பராக்கிரமமும் பொருந்திய வனேகம் படைத் தலைவர்களும் வெளிக் கிளம்பினுர்கள். அவர்களோ வென்றுல்:—அன்னியர்களால் ஜெயிக்கமாளாத விஜயன், மகா பலிஷ்டர்களான நேமிமாயன், முஸலி, கண்டகன், கரன், மகா பராக்கிரமசாலியான மூர்க்கன், தசமுகன், முனிலாவன், மகாபலன், பிரசண்டன், சண்டன், அஜமுகன், மகிஷன், உக்கரபாகுகன் விஷ்ணுஸேனன், விமோகன், விஜயஸேனன், ஸோமகன் மதூ உச்சிஷ்டன், சுவக்திரன், சனி, சூன்னியகேது, அஸுரஸேனன், முதலியவர்களே. அதேவிதமாக இலக்ஷம் வாகினிசங்கியைக் கொண்ட இரதகஜதுரகங்களும் துரிதமாய்ப் புறப்பட்டன. அப்போது மட்டு, துந்துபி முதலிய வாத்தியங்களினுெலிகளும் குதிரைகளின் கனைத்தல்களும், யானைகளின் பிளிறுதல்களும், இரத சக்கிரங்களின் க்ரீங்காரவோசைகளும் யானை மணிகளது நாதங்களும் குதிரைகளது கழுத்தினிற் கட்டிய சப்தங்களின் கிலு கிலு வொலிகளும் சேனைகளின் கூக்குரல்களும் சமுத்திரத்தின் பேரோசைக்கும் மேற் கொண்டதாயின. அப்போதுண்டான புழுதி

கள் சூரியனண்டையிற் சூழ்ந்ததோடு எல்லா திசைகளிலும் மிகுதியாகச் சூழ்ந்து பரவலாயிற்று. கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போதப் பானுகோபனும் ஜ்வலிக்கலுற்ற பல கட்டியக்காரர்களால் அருகினிற் சூழப் பட்டு வீராவளி விருதாவளிகளெல்லாம் கம்பீரத் தொனியோடு முறை கூறப் பெற்றவனாகிப் பிரளயகால சமுத்திரம் கரை புரண்டு வருவதுபோன்ற சேனைகளோடு செல்லலுற்றனன். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப் போது பிரம்மன் மைந்தனும், தேவமுனிவருமாகிய நாரத ரிவற்றை யெல்லா மறிந்து கொண்டு ஸூரியனை வெற்றிபெற்ற பராக்ரமம் கொண்ட பானு கோபனும் யுத்தத்திற்காகப் புறப்பட்டுவிட்ட செய்தியை யுரைப்பதற்காகத் தேவக் கூட்டங்களாற் சூழப்பெற்ற ஸ்ரீ பார்வதி தேவியினருமைத் திருமக ஞன முருகப்பிரானெதிரிற் சென்றனர்.

## 2-வது அத்தியாயம்.

நாரதமாமுனிவர், வந்தவுடன் ஸ்ரீ சுப்பிரம்மணியனை மிகுந்த சந்தோ ஷத்தோடு, வந்தனித்துச் சிறந்த துதிகளால் தோத்திரம் பண்ணி நின்று அப் போது வசனம் கூறியதாவது:—ஓ! சுவாமி! தேவேசா! தேவரீரெல்லா வற்றையு மறிந்தவராயினும் ஓர் க்ஷண நேரம் தயவுசெய்து நானிப்போ தறி வித்துக் கொள்வதைக் கேட்டருள வேண்டும். தேவரீரிங்கு விஜயமாகி யிருப் பதை வலிமைகொண்ட சூரபத்மனறிந்தவனாகி யிளமையிலே சூரியனைச் சயித்தோமென்று பெயர்போன பானுகோபனென்ற தனது மைந்தனைத் தேவரீரோடு யுத்தமாடுவதற்கனுப்ப, மகா மாயாவியும் மிக மயங்கவடிப்போனு மான அம்மைந்தனும் புறப்பட்டுவிட்டான். அவன், பிரம்மன், விஷ்ணு இய மன், வருணன், இவர்களை யெல்லாம் யுத்தத்தில் வென்று அவர்களது மற்ற வாயுதங்களைவிட்டுப் பிரம்மனுடைய பிரம்மாஸ்திரம் விஷ்ணுவின் சக்கிரம் வருணன் பாசம், இயமனதுகாலதண்டம், இவைகளை யெல்லாம், வலிமை யாற் பறித்துக் கொண்டனன். அப்படிப்பட்டவனை ஸ்ரீ பரமேசுவரனுக்கினை யின்படி தேவரீரே வெற்றி பெறுவது தகுதியாகுமென்று சொல்ல ஸ்ரீ பிரபுவு மவ்வசனத்தைக் கேட்டு மரைமலர் வதனத்தின்கண் மந்தஹாசம் கொண்டவ ராகி" ஓ! முனிவரே! சரபத்தோடு சிங்கமும், சிங்கத்தோடு யானையும், புலி யோடு, நரியுமெதிர்க்க வருவதுபோல் அவன் நம்மிடத்தில் வருகின்றானென் றுரைத்து விட்டுச் சீக்கிரத்தில் அக்கந்தபிரான் பக்கத்தில் நின்ற மகா பல சாலியான ஒப்பற்ற பராக்கிரமம் கொண்ட மிகுந்த கம்பீரமுடைய வீரபா குவை நோக்கி, ஓ! வீரபாகுவே! நீ இப்போது உடனே, மகா வீரர்களான இலக்ஷத்தெட்டு வீரர்களுடனும், ஆயிரம் வாகினி சைனியங்களுடனும், சிறப்புற்றவனாகி இத்துர்ப்புத்திக்கார வசுரனுடைய பட்டணத்துக்கே சென் று அதை முற்றுகைபோட்டுக் கோட்டையைத் துரிதத்திலிடித்துத் தள்ளி மகா பயங்கரமாக யுத்தத்தை நடத்தி யவ்வசுராதமர்களையும் நம தாக்கினையின்படி வெற்றிகொண்டு நம்மிடம் திரும்பிவருவாயாக என, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! வீரபாகுவுமப்போ திவ்வாறுக பிரபுவால் திட்டமிடப்பட்டவுடன், புறப்பட்டுச் செல்வதெப்படி யென்றால்.

மகா பயங்கரமுள்ளவரும் ஸகல வீரலக்ஷணங்களும் பொருந்திய மைந்தரும் காதுகளிற் குண்டலம் பூண்டவரும் இடுப்புகளிற் கொண்ட தங்க அரை ஞாணல் விளங்கியவரும் உயர்ந்த பதுமராகத்தின் மிகுந்த ஸோபையா லழகிய மோதிரங்களாற் விளங்கிய விரல்களையுடையவரும், ஹாரம், கங்க ணம் தோள்வளை கிரீடம், இவைகளினொளியால் விளங்கலுற்றவரும் இய மன், காலதண்டத்தைக் கொண்டதுபோலோர் மகா பெரிய கதாயுதத்தைக் கைதனிற் பற்றியவரும் மிகுந்த பாணங்களாற் நிறைந்த வம்பறாத் தூணி களை யிடுப்பின், பாரிசங்களில் கட்டியவரும், ஸ்ரீ சங்கரன், பினாகமென்ற தனுசைப் பற்றியதுபோல் மிகவும் பெரியதான வில்லைத் தரித்தவரும், கத்தி ஈட்டி, கைக்கத்தி, பட்டாக்கத்தி, தோமரம், முதலிய பல வாயுதங்களாற் விளங்கியவரும், மேருகிரி, மந்தரகிரி கைலைகிரிகள் போன்ற மகா வுன்னத மான இரதத்தின் மீது வீற்றிருந்தவரும், சங்கம், காகளம், நிஸ்ஸானம், படகம் முதலிய வாத்தியங்கள் மிக வாடம்பரத்தோ டொலிக்கப்பெற்ற வரும் பிரகாசமாக விளங்கிய விசிரப்படலுற்ற வெண்சாமரை சோபை யின லலங்கரிக்கப் பெற்றவரும் ஓர் மலையானது அடர்ந்து வளர்ந்த மிகுந்த வாழைத்தோட்டத்தோடு விளங்குவதுபோல் மேகங்களைச் சீலை களாற் றொடலுற்ற பல துவஜங்களால் விளங்கியவரும், பூர்ணிமைச் சந் திரனது மிகுந்த சோபையைக்கொண்ட முத்துக் குடைகள் பிடிக்கப்பெற்ற வரும், வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் முதலியவற்றைக் கொண்டவர்க ளால் சூழப்பட்ட பாரிசபூமியை யுடையாரும், தமது, நேர்த்தியான பற்பல குணாதிசயங்களை யெடுத்து முறைகூறலுற்ற பல கட்டியக்காரர்களால் சூழப் பட்டவருமாகப் புறப்பட்டுச் சென்றனர். அப்போது மகா பராக்கிரமத்தை யுடைய வீரர்களும், படைத்தலைவர்களும், வீரபாகு, இவ்வாறாகப் பிரயாணப் படுவதைக் கேட்டுத் தாங்களும் இரதங்கள் மீதேறிப் பிரயாணப்பட்டார்கள். ஆயிரம்வாகினி பூதசேனைக் கூட்டங்களு மப்போது புறப்பட்டன. சேனை கள், குதிரைகள், இரதங்கள், வாத்தியங்கள் முதலியவற்றி னோசைகளும் காலடிப் புழுதிகளும் இவ்வீரபாகுக்கு முந்தி பட்டணத்தி லெட்டிப் பரவலா யிற்று. படைகளிற் சில ரொருவரோடொருவர் கொம்மாளமிட்டு வட்டமாகச் சூழ்ந்து கிளம்பிக் கிளம்பி குதித்துக்கொண்டு வேகமாயோடி இவ்வண்ணம் முந்திச்சென்றப் பட்டணத்திய வாசற்படியில் நிறைந்துநின் றடைத்துக் கொண்டார்கள். பிற்பாடு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இச்சங்கதி யைப் பானுகோபன் முந்தியே கேள்வியுற்று 'இதோ இவனை யோர்நொடியிற் கட்டியிறுக்கி யசுரர்களாற் சூழப்பட்டவராகிய சூரராஜனண்டைக்கு யாம் சத்தியமாகக் கொண்டுசேர்க்கின்றோ' மென்றுரைத்து மிகுந்த கோபாவேசம் கொண்டவனாகி மகா ஆரவார சத்தங்களோடு கூடிய வசுரர்களுடன், துரிதமாகப் பட்டணத்தினின்று புறப்பட்டனன். பிறகசுரர்கள், பூத சேனையைப் பார்த்தபோது ஓ! இவர்கள் முந்தி நம்மாற் பார்க்கப்பட்ட வர்கள்தான்! இவர்களை வெல்வது கடிமை யாது? என்றெண்ணியெக்களித் தார்கள். அதுகேட்டு பூதசேனையும் மகா பயங்கரமாகச் சத்தமிட்டுக் கொண்டு அப் பாதகர்களை யெதிர்த்து மேலுக்குமேல் விழுந்து சென்றார்கள்,

அதன்மேல் கொடியர்களான வசுரரெல்லோர்களும் பாணங்களையும் மற்ற வாயுதங்களையும் பூதசேனையின்மீது வருஷித்தார்கள். ஓ! கோ! கேளீர்! முனிவர்களே! அப்போதச் சஸ்திரங்களாலடிபட்ட பூதப்படைகள், கால் கைகள், முறிந்து மிகவும் மூர்ச்சை கொண்டார்கள். அதன்மேல் பூதங்கள் கோபம்கொண்டு யானைகளால் யானைகளையும், குதிரைகளால், குதிரைகளையு மடித்துக்கொன்று இரதங்களாலே பல ரதங்களையு முடைத்து மிகுந்த கோபத்தோ டிவ்வாறாகவே யசுரர்களையே பிடித்துச் சுழற்றி யசுரர்கள் மீத டிக்க, அப்போதனேகர் மாண்டார்கள். அதுகண்டு பானுகோபனது சேனைத் தலைவர்களிற் சிறந்தவனான அனலனென்றவ னிரதத்தைத் துரிதமாக விரட் டிக்கொண்டு பூதகாட்டுக்குட் புகுந்து வில்லை நாணேறிட்டுப் பாணங்களை வரு ஷிக்கலாயினன்.

## 3-வது அத்தியாயம்.

பிறகு பூதசேனைகள் பயந்து நான்கு திக்குகளிலும் சிதறுண்டோடலுற் றன. அவ்வனலன் பாணங்களாலடியுண்ட சில பூதங்கள் மூர்ச்சைகொண் டன. அப்போதப் பூதப்படைகளுக்குத் தலைவனான பெருமைதங்கிய ஸிம்மனென்பவன் ஊழிக்காலத்தில் பிரஜைகளை மடிப்பதற்கியமன் காலதண் டத்தை யெடுப்பதுபோலோர் தண்டத்தைக் கைதனில் எடுத்துக்கொண்டு எதிரியின் தேர்க்குதிரைகளை யடித்துக் கொன்றுவிட்டனன். உடனே யனல னும் "நாமிப்போதிவனை ஜயிக்காவிட்டா லினி போர்முனையில் வில்லெடுப்பதே யில்லை யென்று சபதம் பண்ணிக்கொண் டவன்மீது சரங்களைச் சொரிந்தனன். அப்போது சிம்மனேவென்றால் அச் சரப்பிரவாக மத்தியில் விழுந்தெதிராக நீந்திச்சென்று அவனது ரதத்தின்மீது சடிதியிலேறி யவன் வில்லைப் பிடுங்கி யெறிந்துவிட, பிறகனலனும், மகா பயங்கரமான வோர் தண்டத்தை யெடுத் துக்கொண்டு வெகு கவனத்தோடுகூட வஜ்ஜிரம்போற் கெட்டியான ஸிம்ம னது சரீரத்தின் மீதடிக்க, உடனே யவன் கடும்சினம் கொண்டவனாகியவ்வன லன் மார்பினில் கைமுட்டியினால் தயிலென்றிடித்துத் தனதோர் கையினாலே யவன் இருகால்களையும் வளைத்துப் பிடித்துக் கரகரவென்று சுற்றித் தரை மீதடிக்க, அவனப்போது நூறு துணுக்குகளாயினன். பின்பவன் செத்தவு டன், சண்டனென்ற வோரசுரப் படைத்தலைவன் ஆயிரமாயிரமாகச் சரங்களை யவன்மீது சொரிந்துகொண்டு யானை சிங்கத்தோ டெதிர்த்ததுபோல் துரிதமா கப் போர்முகத்தில் வந்தனன். உடனே ஸிம்மனங்கு கிடக்கலான விறந்து போன வனலனது தண்டத்தைத் துரிதமாக வெடுத்துக்கிட்டத்தில் வந்த வச் சண்டன்மீது வேகத்தோடடிக்க, மகா பலவானான, அவ்வசுரேசன், தனது தண்டத்தைக் கைப்பற்றி இயமன் போலாக்கிரகம் கொண்டவனாகி அச்சிம் மன்மீதடித்தனன். இவ்விதமாக ஒருவர்க்கொருவர் தண்டங்களாலடித்துக் கொண்டதி லிருவரும் மூர்ச்சை கொண்டு பூமியில் விழுந்தனர். அது கண்டு அசுரப்படைத் தலைவனான மாயனும் பூதப்படைத்தலைவனான நீல னும் துரிதமாக யுத்தகளத்தினுள் வந்ததில் நீலன் மாயன் மீது தனது

தண்டத்தை யெறிய வேகத்தோடடியுண்ட வசுரன் கொஞ்ச நேரம் மூர்ச்சை யாகிக் கிடந்துவிட்டுப் பிறகு தெளிந்தெழுந்து தனது சூலாயுதத்தை நீலன் மீது பிரயோகித்தனன். உடனே பூதசேனாதிபதியான நீலனு மவ்வாறே சற்று மூர்ச்சையாகிக் கிடந்து பிறகு தெளிந்தெழுந்தவுடன் மிகவும் ஆக்கிரத் தோடு கையினாலவன் மார்பினிலறைந்து பிறகு உடனே தனது கையாலவன் இருகைகளையும் பின்கட்டு மாறாகக் கட்டிப்பிடித்து மிகவும் கெட்டியான தனது பற்களாலவன் கழுத்தினிற் கடித்துப் பெருகிய விரத்தத்தையு முறிஞ் சியவனைச் சாகச்செய்தனன். பின்பு, கேளீர் ! சௌனகாதி முனிவர்களே, முந்தி மூர்ச்சையாகி விழுந்த மகா பலசாலிகளான சண்டன், ஸிம்மனிருவர் களுமெழுந்து தடிகளை யெடுத்து ஒருவரை யொருவர் அடித்துச் சண் டையிட்டுக் கொண்டதில் ஒவ்வொருவனும் மற்றவன் அடிப்பதைத் தன் தன் கோலினால் மறுத்து மறுத்துத் தம் தம்மைக் காத்துக்கொண்டார்கள். ஒரு வன் மற்றவன் தலைமீதடிக்கக் கருதிக் காலைக் குறிப்பிடுவன்போலே மாற்று வதை மற்றவன் சூதினாலறிந்து கொண்டு அந்த அடியினின்று தப்பித்துக் கொண்டனன். இங்ஙனமிருக்கையில் மகா பலசாலியான ஸிம்மன் தன் கோலைச் சுழற்றித் துரிதமாக மற்றவன் தடியை யடித்துத் தூள் தூளாக்கி விட்டனன். இங்ஙனமாகச் சண்டன் தண்டமிழந்தவனாயினும் தடியைக் கொண்ட சிம்மனோடுகூடத் தனது கையாலே யடித்தடித்துச் சண்டையிட் டான். அப்போது சிம்மன் வெகு கோபம் கொண்டவனாகித் தனது தண்டத்தினா லவன் கைமீதடிக்க அக் கையானது மரத்தினின்றோர் பெரிய கிளை முறிந்து விழுவதுபோ லொடிந்து பூமியில் விழலுற்றது. அதன்மேற் சண்டனும், மகா பயங்கரமான அக்கையை யெடுத்து மிகுந்த கர்ஜனையோ டவன் மார்பினிலடிக்க, அவனும் மகா கொடியோனான அப்பேர்ப்பட்ட சண்டனைக் காலினாலுதைத்தான். கேளீர், பிராம்மணோத்தமர்களே! அது கண்டு ஆகாயத்தில் சஞ்சரிக்கலுற்ற தேவர்களெல்லோர்களு மப்போது வசன முரைத்ததாவது:— ஒ! ஒ! ஸிம்மனே! இவ்வசுரோத்தம னியமனைக் கூட ஜயித்தானல்லவோ! ஆகையால் மகா பலவானும், மகா பாதகனுமான வித் துராத்துமாவைத் தொலைத்துவிடல் வேண்டும் என, அப்பூதத்தலைவனும் தேவர்களின் வசனத்தைக் கேட்டவுடன் சிங்கம் யானையை யறைவதுபோ லோங்கி யவன் கன்னத்தின் மீதோரறைவிட அசுரனவ்வறை தாங்காமல் நினைவுதப்பி மண்ணில் விழலுற்றனன். ஆ! ஆ! அப்போதியமதூதர்க ளவன் பிராணனைக் கொண்டுபோவதற் கச்சங்கொள்ள பிறகு சிம்மன் ஆக் ஞை செய்ததின்பேரில்தான் பிராணனைக் கொண்டுபோனார்கள். அவனிவ் விதமாக யமலோகம் சென்ற பிறகு பெருமைபொருந்திய அஜமுகனென் றவனப்போது ஸிம்மனைக் குறிப்பிட்டு மகா ஆரவாரத்தோடு வெளிக் கிளம்ப, உடனே மகா பலவானான மது யென்றவ னவ்வாறு வருகின்ற வனை யெதிர்த்துக் கொண்டான். அப்போ தஜமுகனும் துரிதத்திலவன் மீது மிகுந்த வம்புகளை யெய்கையில் மதுவானவ னவ்வம்புகளைச் சற் றேனும் பாராட்டாமல் முன்னிருந்த வோர் பெரிய வாலமரத்தைப் பிடுங்கிக்கொண்டு மிகுந்த சிங்காதத்தினால் பூமியை நடுநடுங்கச் செய்

சடிதியாக வுயரக்கிளம்பிப் படேலென் றவ னிரதத்தின்மீது குதித்தனன். அப்போதவ் வசுரனு மப்பெருஞ் சப்தத்தைக் கேட்டு மிகப் பயந்து கையிலி ருந்த வில்லையும் நழுவவிட்டுத் தட்டுக்கெட்டுத் தடிபோன்ற வுடல் வடவடவெ ன்று நடுக்கங்கொண்டான். அப்போது மதுவுமவ்வாறு பீதிகொண்ட வசுரனை நோக்கி 'அடா! சூராளியில்லாப் பயங்காளியாகின்றபடியா லிப்போதே திரும்பி யோட்டம் பிடித்துவிடு' என்று கூறியவ னவ் வஜமுகனை யிரதத்தி னின் றிறக்கிவிட்டுத் தானுமாலமரத்தை யெறிந்துவிட்டுத் தன் கூடாரம் போகப் புறப்பட்டனன். அவனிவ்வாறு செல்லுகையில் அசுரன் மிகுந்த துக்கத்தினல் பரவசம்கொண்டு "சீ! சீ! போர்முனையில் வலிமையோ டெதி ரியை வெல்லமுடியாத வெந்தன் ஜென்ம மென்னஜென்மம்! இப்படிப்பட்ட வன் பிழைத்திருப்பதைவிட சாவதே, நலமென்று மனதில் யோசித்துச் சண் டைசெய்வதாகவே தீர்மானித்துக்கொண்டு அவ்வசுரன் "அடா! உன்னை ஜயிக்காமல் யானிருப்பதில்லை,"யென்ற மிகுந்த கர்ஜனையோடு துரிதமாக மிகு தியான பாணங்களை வருஷித்துக் கொண்டவனை யதிவேகமாக வெதிர்த் தோடிவந்தான். அதன்மேல் மகா வலிமை பொருந்திய மதுவும் திரும்பி வர லுற்ற அவ்வசுரனைக் கண்டு நகைத்து ஆயுதமேயின்றி கையினலே யப் பாணங்களை யெல்லாம் பழுதாக்கிவிட்டு இன்னுமடிக்கடி விடப்பட்ட பாணங் களையு மவ்வாறே செய்து பிறகப்போது மிகுந்த கோபத்தினல் கையினலவ னது இரதத்தை யவ்வசுரனேடு கூடச்செங்குத்தாக வெடுத்துச்சுழற்றிக் கடல் மீதெறிய அசுரனப்போதே துரிதமாகப் பூமியிற் குதித்துக் கைமுட்டியா லவன் மார்பின்மீ தோங்கிக் குத்தினன். பிறகு மதுவும் பரிகாயுதம்போல் விளங்கலுற்ற தன் கையினலே யவ்வசுரனை, இந்திரன், வஜ்ஜிராயுதத்தினல், மலையை யடித்ததுபோலறைய, இவ்விதமாக, மகா பலிஷ்டர்களான அவ்விரு வரு மொருவனை யொருவன் மயிரோடு மயிர் பிடித்தும் கையோடு கை கலந் தும் சண்டைசெய்ததில், கேளீர்! பிராம்மணேத்தமர்களே! அஜவக்திரன், மது இவ்விருவர்களும் மல்லர் முறைப்படி பூமியில் விழுந்து பிறகெழுந்து மிகுதியாக யுத்தம் செய்தார்கள். இப்படியிருக்கையில் மதுவானவன் சண் டையிற் பூமியில் விழுந்தவன்போல் சூதாகத் தானே விழுந்துகொண் டெதி ரியையும் தன்மீதேறவிட்டுத் தன்னிரு கால்களாலு மவன் மார்பின்மீது செங் குத்தாக உதைத்தவனை மேகமண்டலம் கிட்ட வெறிந்தனன். பிறகசுரன் கீழேவிழுந்தவுடன் துரிதத்திலெழுந்து, கிட்டவந்து மிகுந்த கோபத்தோடு மார்புதட்டிப் பிறகுடனே மாயையால் மறைந்தவனகி ஜுவலிக்கலுற்ற விஷ்ணு சக்கிரத்தைப் பிரயோகிக்க, அச் சக்கராயுதமு மெதிரியாயுத மற்றி ருந்தது கண்டு உடனே திரும்பி வந்து, கேளீர்! சௌனகாதி முனிவர்களே! தன்னை யெய்தவன் கழுத்தையே சடிதியிலறுத்துத்தள்ளிச் சென்றுவிட்டது. மகா பலவானுன வஸுரன் தன்னயுதத்தாலே சாவுண்டபோது அப்போ தஸுரப்படைத்தலைவர்க ளெல்லோர்களு மொன்றுகூடிச் சடிதியில் வந்து பூதப்படைகள் மீது மிகுதியான பாண வருஷங்களைக் கர்ச்சனையோடு கூடிய கோடைமேகங்கள் பெரிய தாரையாக மாரி பொழிவதுபோல் நான்கு திக்கு களிலும் கனமாகப் பொழிந்தார்கள். பிறகப்போ தசுரப்படைகள் மிகப்

பயந் திங்கு மங்கு மோடும் போது மிகுதியான விலக்ஷம் வீரர்களில் சத்து ருக்களைத் தண்டிப்போனுன தண்டகனென்றவ னெண்டியாகவே சிறந்த மகாயுதங்களைக் கொண்டவனுகிச் சத்துருக்களை யெதிர்த்துவந் திடையன் மாடுகளை யோட்டுவதுபோல் பாணங்களால் விரட்ட, அப்பாணவருஷங்களா லடிபட்டு அநேக மசுரர்கள் மாண்டார்கள். சிலர், கால், கை, கவசம், மணிக் கட்டு முதலியவைகளை யிழந்தவர்களாகிச் செத்தவர்கள் போல் பூமியில் விழுந்து கண்களை யிறுக மூடிக்கொண்டு கிடக்கலானுர்கள். அதேவிதமாகச் சிலர் காது, தோள், மூக்கு முதலியவைகளை யிழந்தவர்களாகி யோட்டம் பிடித்தார்கள். மேலு மப்போது கடலோசையொத்த மிகுந்த ஹா ஹா கார முண்டாயிற்று. அதுகண்டு பானுகோபன் மிகுந்த கோபாக்கினியால் ஜுவ லிக்கலுற்றவனுகித் தனது உதடுகளை மடித்து மடித்துக் கடித்துக்கொண்டு வில்லை வளைத்தோர் நொடிக்குள் நாணேறிட்டு அவ்வசுரன் "ஓ! கோ! நாம் வீணிலசட்டையா யிருந்துவிட்டதா லிரண்டாயிரம் வாகினி யசுரர்கள் மாண் டுவிட்டார்கள். மற்றவர்களு முறுப்புகளிழந்த வுடம்போடு நடுநடுங்கி யோடி விட்டார்களே! ஆயிரவாகினி யசுரசேனைகள் தான் மிகுதி யிருக்கின்றுர்கள். ஆகையால் நாமே சென்றிவனைச் சைனியங்களோடு யுத்தத்தில் நிச்சயமாகச் சமிக்கின்றோம்; இல்லையாகில் யாம் சூரன் குமாரனல்லர்" என, வுரைத்து, போர்முன்னர் மிகப் பயங்கரனுகிய வப் பானுகோபன் தன் சாரதியைத் தேரைத் துரிதமா யோட்டும்படி யுத்திரவிட்டு வில்லின் மத்தியில் முஷ்டியாற் பிடித்து நாணை மீட்டிக் கோடைகாலத்தில் மேகக்கூட்டங்கள் கர்ஜிப்பது போல் மிகுதியாக டங்காரவோசைபண்ணி யக்கொடியோன் பூதப்படை மீதுச் சரமாரி சொரிந்தான். அப்போதப் படைகளும் மகா ஆரவார சப்தங்க ளால் பயங்கரர்களாகி, மரங்கள், மலைகள், பெரிதான கற்பாறைகள், மிகவும் கொடியதான வாயுதங்கள் இவைகளை யெல்லாம் பானுகோபன்மீது துரிதத்தி லெறிந்தார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவற்றையெல்லாம் மகா பலவானுன பானுகோபன் சடிதியில் தீக்ஷணியமுள்ள கோடி பாணங்களைக் கோபத்தோடு விட்டுப் பொடிப் பொடியாக்கிப் பின்னுமவன் தனுசை மண்ட லாகாரமாக வளைத்ததன்கண் ணனேக கோடி பாணங்களைப் பூதப்படை மீது மிகவேகத்தோடு சந்தானிக்க அவ்வாறவனுல் விடப்பட்ட பாணங்கள் கருடன் களைப்போல் துரிதமாக வெளிக் கிளம்பி பூதங்களின் கைகால் முதலிய வுறுப்புகளை யப்போது கண்டனம் பண்ணி மறுபடியு மட்டகாசம் செய்து நூறு, ஆயிரக்கணக்குகளாக தீக்ஷணியமுள்ள பாணங்களைக் கோடைக் காலத்தில் மேகம் நீர் சொரிவதுபோல், வருஷிக்கையிலப்போது பூதப் படைகளது தடிபோன்ற வுடல்கள் சின்ன பின்னமாக வாகி மிகப் பயந்தவர் களாக இரத்த வெள்ளத்தைப் பெருகவிட்டுக்கொண் டோட்டம்பிடித்தார் கள். அப்போதோடிய பூதங்களுக்கு நேரிட்ட வவமானத்தைச் சீக்கிரத்திற் கண்டு மகா பலசாலியான உக்கிரனென்பவன் பயங்கரமான வோர் தண்டத் தைக் கைதனிற்சுழற்றி மிகுந்த சப்தமிட்டுக் கொண்டு மிக வேகத்தோடு யுத்தத்துக்கு வந்தான். அப்போதற்புதமான விக்கிரமத்தைக் கொண்ட பானுகோப னதிகர்வத்தோடு கர்ஜனை பண்ணிக்கொண்டு பாணங்களைக் கோடி

கோடிகளாக அவ்வுக்கிரன் மீது பிரயோகிக்க, உக்கிரனுமவற்றை யெல்லாம் தன் தண்டத்தாலடித்துப் பழுதாக்கிவிட்டனன். பிற கசுரராஜனுமோர் தண்டத்தைத் துரிதமாயெடுத்து உக்கிரன் மீதெறிய, அவனதையும் தன் தண்டத்தாலடித்து வீணாக்கிவிட்டான். பின்னுமோ வென்றால்:—மகா பலவானன அவ்வுக்கிரன் எதிரியாகிய பானுகோபனது தேர்க்குதிரைகளை யத்தேரோடு கூடத் தன் தண்டத்தினுல் தொம்ஸம் பண்ணிவிட்டனன். அசுரர்களாகிய இருள்திரள்களுக்குச் சூரியன்போன்ற மகா பலசாலியான வுக்கிரனுலிவ்வா றுக்கிரமாய்த் துடைக்கப் பட்டபோது கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அசுரர்களிற் சிரேஷ்டனன பானுகோபன் ஜுவலிக்கலுற்ற காந்தியுடைய மற்றோரிரதத்தில் துரிதமாக வேறிக்கொண்டு யுத்தகளத்துக்கு வந்தான்.

## 4-வது அத்தியாயம்.

பிற்பாடு பானுகோபன் மிகுந்த கோபத்தோடு கூர்மையுள்ள பல பாணங்களை விட்டெதிரியின் தண்டத்தைத் தூளாக்கிவிட்டுப் பின்னும் கூர்மையுள்ள வெகு பாணங்களை யவன் மெய்தனில் வருஷித்தான். அவற்றையெல்லா மவ்வுக்கிரன் கையாலேயடித்து வியர்த்தமாக்கிக் கொண்டு பின்னுமப்பலவான் நதியில் மீனெதிர்ப்பது போலச் சரப்பிரவாக வேகத்தையெதிர்த்துச் சென்று பானுகோபனோடு கூட அவனது இரதத்தைச் செங்குத்தாகத் தூக்கிப் போர் முன்னர் வெகு பயங்கரனை விருந்து கொண்டதைச் சூரியமண்டலம் தண்டவெறிந்ததி லவ்விரதத்தோடு வருகின்ற பானுகோபனை நோக்கிச் சூரியனப்போத மிகுந்த பீதியடைந்தனர். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! சூரியன் "ஐயோ! இதோ பானுகோபன் வருகின்றானே! யாமேதாகிலு மவனுக்கபராதம் செய்தனமோ" என எங்கிய மனதோடவனைப் பூமியில் விழுந்து மறுபடி சடிதியிலெழுந்து உக்கிரனது மார்பிலோ ரறையறைந்து அவன்கால்களை வாரிப் பிடித் தாகாயத்தினிலெறிய அப்போதுக்கிரன் மிகுந்த வேகத்தோடு ஸத்திய லோகம் வரைக்குமோர் நொடிக்குள் சென்று அங்கு பிரம்மனுலருளப்பட்ட சக்தியும் வரப்பெற்றவனுகி (புண்ணியலோகமடைந்த)ஸுகிருதுகளவரதுஸுகிருதத்தின் பயனை யனுபவித்தானவுடன் மண்ணுலகுக்குத் திரும்புவதுபோல் திரும்பலாகி யோர் பெரிய மலைபோற் பூமியிற் பொத்தென்று விழுந்து மூர்ச்சையடைந்தனன. பிறகவன் விழுந்தவுடன் மகா வீரனன தண்டியென்பவனோர் பெரிய மலையைப் பிடுங்கி மிகுந்த கர்ஜனை செய்து கொண்டு பானுகோபன் மீதெறிய, அதை யவ்வசுரனோர் நொடிக்குள்ளாயிரஞ் சரங்களைப் பிரயோகித்து நூறு துணுக்குகளாக்கிவிட்டனன். பிறகத்தண்டியும் முன்னிலிருந்தவோர் பெரிய மாமரத்தைப் பிடுங்கி யிரதத்தின் மீதிருந்த அவனது சாரதிமீதடித் தவனைக் கொன்றுவிட்டனன். அதன்மேல் பானுகோபன் கோபத்தினுல் பற்றியெரிகின்றவன் போலாகி யோர் க்ஷணத்துக்குள் மேகம் போல் மிகவும் கர்ஜனை செய்துகொண் டவனது நெற்றியின் மீது தீக்ஷணியமுடைய பதினுயிரம் பாணங்களையப்போது வருஷிக்க அப்பலவானும் சரங்களாலடியுண்டு பூமியில் விழுந்து மூர்ச்சை கொண்டான். அவன் சாய்ந்து

விட்டதைப் பினுகியென்கின்றவனறிந்து சீக்கிரமோடிவந்து மிகுந்த வலிமை யோடு தன் துடை தட்டிக் கொண்டு கைகளை நீட்டி மலையைப் பானுகோபன் மீதெறிவதற் கெத்தனிக்கும்போது, கேளீர் பிராம்மணோத்தமர்களே போர் முன்னர் பயங்கரனான வவ்வசுரன் அதற்கு முந்தியே ஆயிரமஸ்திரங் களைத் துரிதத்திலப்பினுகியினுடைய மார்பினிற் பிரயோகிக்க அவ்வஸ்திர மெல்லாம் சடிதியிலவனது மார்பைப் பிளந்துகொண்டு வெளிச்சென்றன. அப் போ தப்பினுகியானவன் இந்திரனுலடியுண்ட மலை சாய்ந்ததுபோல் பூமியில் விழலாக, உடனே சகல பூதங்களும் ஸேனுதிபர்களுமொன்றாகச் சேர்ந்து மலைகள், மரங்கள், குண்டுக்கற்கள், கதைகள், இவைகளை யெல்லாம் கட லோசைக்கு மேற்கொண்ட மிகுந்த பேரிரைச்சலோடு வந்து பானுகோபன் மீதப்போது மிக வேகத்தோடெறிந்தார்கள். உடனே மிகுந்த பல பராக்கிர மங்களைக் கொண்ட பானுகோபன் அநேக பாணங்களைத் தொடுத்தவை யெல் லாவற்றையும் துரிதமாகத் தறித்துப் பூமிதனிற் பரத்திவிட்டு மறுபடியும் பல வம்புகளை விட்டவர்களை யெல்லாம் விரட்டினன். அதனுல் சகல சைனி யங்களு மோட்டமெடுக்கையில் மகா பலன், அகண்டன், உருத்திரன், தண் டகன் நிரஞ்சனன், கபாலகன், அண்டலோசனன் இவர்கள் முதலிய இல க்ஷம் வீரர்களுமப்போது வந்தனர்கள். மிகவுமழகிய மேனியுடையவர்களும் ஸகல வாபரணங்களாலு மலங்கரிக்கப்பட்டவர்களும் சகல லக்ஷணங்களும், பொருந்தியவர்களும், வில்வித்தைதனில் மிகுந்த தேர்ச்சிப் பெற்றவர்களு மான அவ்வீரர்களெல்லா மொரேகாலத்தில் விற்களை நாணேடிசைத்து அவர் கள் தேர்ச்சியடைந்த முறைப்படி யெல்லோர்களுடைய துடைகளையும் நேர் வரிசையாகத் தேர்கள் மீது வைத்துக்கொண்டு மீட்டியதால் டங்காரவோசை யொலிக்கலான ஞாண்கள்மீ தம்புகளின் காம்புகளைத் தொடுக்கலுற்றவர் களாகி மிக வட்டகாசத்தோ டப்போதசுரன்மீது மிகுந்த பாணங்களை வருஷித்தார்கள். அவைகளிற் சில பாணங்களவ்வசுரனதுடல் மீது பாய்ந் துருவிச் சென்றன. சிலவற்றையவன் துரிதத்தில் சில பாணங்களைவிட்டுத் துண்டித்தும் விட்டனன். மேலும் மிக பலவானுன அவ்வசுரன் பின்னும் சினம்கொண்டு ஆயிரக்கணக்கிலடங்கிய கோடி, கோடி பாணங்களையவரெல் லோர்கள் மீதும் குறிப்பிட்டுப் பிரயோகிக்க, ஓ! கோ! கேளீர்! பிராம்ம ணோத்தமர்களே! அவைகளை யிவர்களவற்றினேழு மடங்கதிகமான பாணங்களைவிட்டவ னன்டைக்கே திரும்பிவிட்டார்கள். மறுபடியுமளவற்ற பராக்கிரமத்தையுடைய வப்பானுகோபன் மயனென்ற வசுரத் தச்சனுலமைக் கப்பட்ட அநேக கோடி யெண்கொண்ட பாணங்களை வருஷித்து இவர்களது வில்லஸ்திரங்களைச் சடிதியில் செதல் செதலாக்கிவிட்டனன். பிறகவ்வெல்லா வீரர்களும் மறுபடி வேறு வில்லம்புகளை யெடுத்தப்போ தவ்வசுரன் மீது வேகத்தோடெய்து அவனுல் விடப்பட்ட பாணங்களையும் சீக்கிரத்தில் சேதித்தனர்கள். பின்னுமவர்கள் மேலுக்கு மேல் முயன்றவர்களாகி அவன திரதத்தின் மீதாயிரம் சரங்களையும் நூறு பாணங்களைக் குதிரைகள் மீதும் அங்ஙனமே பல வம்புகளைத் துவஜங்கள் மீதும் ஸாரதி மீதாயிரம் பாணங் களையும் விட்டவைகளை யெல்லாம் பூமியிற் சாய்த்தார்கள். அதன்மேல் மகா

பலசாலியான வப்பானுகோபான் மிகுந்த கோபாக்கினியால் ஜுவாலிக்க லுற்ற மனமுடையவனாகி மறுபடியோர் மகாரதத்திலேறிக் கொண்டு தீக்ஷணியமுள்ள வொப்பற்ற நாராச பாணங்களைப் பதினாயிரம் பத்திலக்ஷங்களாக வருஷித்ததி லவைகளெல்லாமவர்கள் தேகம் முழுதுரோமம் சிலிர்த்தது போல் தைத்துப் பொத்தல் பொத்தலாகி யிரத்தம் தாரை தாரையாய்ப் பெருகலுற்ற அக்கணங்கள் மிகவுமுற்சாக மிழந்தவர்களானார்கள். பிறகவர்களவ்வாறாகிவிட்டதைக் கண்டு மகா கனம் பொருந்திய வீரசிம்மனென்றவன் சீக்கிரமாக யுத்தத்துக்குக் குரிய கோலாகல சத்தத்துடனனேக மஸ்திரங்களை வருஷித்துக் கொண்டே வீரர்களைத் தண்டிக்கும் பூதலமாகிய யுத்தகளத்துக் மகா பயங்கரனாகி வேகமாய் வந்தனன். அவனவ்வாறு விட்டுவந்தச் சரங்களை யெல்லாம் போர்முன்னர் தீரனானப் பானுகோபன், சடிதியி லிலக்ஷம்கோடி பாணங்களால் தூள் தூளாக்கிவிட்டுப் பின்னு மவன் மீது சினங்கொண்டவனாகி யாயிரம் வஜ்ஜிராஸ்திரங்களையும் பிரயோகித்தனன். பிறகு வீரசிங்கனும் மிக வேகத்துடனே ஆயிரம் அம்புகளா லவனஸ்திரங்களைத் துண்டித்துப் பின்னும் வெகு கோபத்தோ டவனது மார்பின்மீதும் நிரப்பினன். அப்போது பானுகோபனு மவனது, பாணங்களால் மிகவுமடிபட்டவனாகி முற்றும் நொந்து தேகமெங்கு மிரத்த தாரைகள் பெருகப்பெற்றவனாகி பிறகோர் க்ஷணத்துக்குள், சகல சத்துருக்களையும் நாசம் செய்யலுற்ற நாராயணாஸ்திரத்தை வெகு கோபத்தோ டவன்மீது விட்டனன். அவ்வஸ்திரமோ வென்றால் பத்துத்திக்குகள்மீதும் திரண்ட வொளிகளை வீசிக்கொண்டு துரிதத்தி லெல்லோர்களையும் பிரமிக்கச்செய்யலுற்றதாகி யனேகமனேக மஸ்திரங்களாகப் பிரிந்து மிக வேகத்தோடு கிளம்பி மிகுந்த வொலியால் மலைகளது குகைகளை நிரப்பிக்கொண்டு வீரசிங்கன் .பதிலஸ்திரம் பிரயோகிக்க வெத்தனிப்பதற்கு முந்தியே யவனது மார்பைப் பிளந் தவனைப் பூமியில் விழுவித்தது. அதுகண்டு வீரமார்த்தாண்டன், கோபத்தினால் பரவசங்கொண்டவனாகி வில்நுனியில் நாணையேற்றிக்கொண்டு வருகையி லவனை யசுராதிபன் சீக்கிரமாய்ப் பார்த்தவுடன் சில பாணங்களைப் பிரயோகித்ததனா லவனது நாணை யறுத்து வில்லையு முறித்துக் கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அவனது, நெற்றியைப் பற்றியும் சில வம்புகளை யெய்தான். பிறகு மிகுந்த புத்திசாலியான வீரமார்த்தாண்டனுந் திரும்பவும், மகா வுன்னதமான வோர் வில்லை யெடுத்ததின்கண் நாணேற்ற வெத்தனிப்பதற்குள் ளதையும் மகா பலவானான வப்பானுகோபன் துண்டித்து அவ்வீரமார்த்தாண்டனுடைய விரதத்தையும் குதிரைகளையும் சில அஸ்திரங்களாற் பூமியில் துரிதமாக விழுவித்துப் பின்னரு மவனது மார்பின்மீ தெழுநூறஸ்திரங்களைப் பிரயோகித்தான். பிறகு வீரமார்த்தாண்டன் மிகுந்த கோபவசத்தினால் மகாவட்டகாசம் பண்ணிக்கொண்டு தனதி ரதத்தினின்றெழுந்துவுடனே யசுரன் மிகுந்த பரபரப்புள்ளவனாகி யிடையிலிருந்த கைக்கத்தியை யுறையினின்றுடனே யெடுத்தவனது மார்புக்குட் சொருகிப்பிடுங்குகையில், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இரத்தத்தாரை பெருகலாகி மிகவும் பயங்கரமாகக் குபீரென்று சொருகினவன் மார்பின் கண்ணே பீரிட்டடிக்கலாயி

ற்று. அப்போது வீரன் மிகவும் கோபமுண்டவனாகித் தனது கத்தியைக் கையிலெடுத்துச் சீக்கிரத்தில் அசுரன் மார்பினிற் குத்த அதனாலவன் பூண்டிருந்த கெட்டியான கவசமானது பிளக்கலுற்றது. பிறகசுரனுமோ வென்றால் கடுஞ்சினங்கொண்டவனாகி கத்தியைப் பின்னொர்வ றாறிழுத்தவனது நெற்றியிற்குத்தி யவனைப் பூமியில் விழுவித்தான். உடனே யாவராலும் ஜயிக்க முடியாத மகாவீரனான வீரராக்ஷஸ னென்பவன் சீக்கிரமாகப் புறப்பட்டுவந்து ஆயிரம் பாணங்களைப் பிரயோகித்தனன். அவை யெல்லாம் அசுரேசுவரன் கர்ஜனைச் சத்தத்தினால் .திசையெல்லாம் நிரப்பிக்கொண்டனே கமம்புகளை விட்டுக்கண்டனம் செய்து, மறுபடியும் நூறுபாணங்களாலவனது ஸாரதியையும் தொலைத்து விட்டான். உடனே மகாபலவானான வீரராக்ஷஸன் வேறு சாரதியை வைத்துக்கொண்டு தீக்ஷணியமுள்ள வாயிரம் சஸ்திரங்களால் பிரகாசிக்கலுற்ற அவனது கிரீடத்தை யப்போது பூமியிற்சாய்த்து விட்ட பிறகு பானுகோபன் மிகவெட்கம் கொண்டவனாகி யொளி பொருந்திய வேறு கிரீடத்தைத்தலைமீது வைத்துக்கொண்டு மிகுந்த கோபாக்கினியால் ஜ்வலிக்கலுற்றவனாகிக் கூர்மையுள்ளவனேக மாயிரம் சரங்களால் வலிமையோடவனது வில்லைக்கண்டனம் பண்ணினான். மறுபடி யப்பலவான் துரிதமாக வேறு வில்லைக்கொள்ள வெத்தனிப்பதற்குள் பானுகோ பனனேக பாணங்களை விட்டவன திரதத்தை யுடைத்துவிட பிறகோர்க்ஷணத்துக்குள்ளவ்வீரன் மிகுந்த கர்ஜனையால் திசையெல்லா மொலிக்கச் செய்தவனாகி வேறு சுந்தரமான விரதத்திலுட்கார்ந்து கொண்டு மகாகோபத்தோடு வில்லெடுத்து யுத்தத்துக்கு வரும்போதே பானுகோபன் பின்னருமவனுடைய அவ்வில்லைத்துண்டித்து விட்டனன். பிறகு மகாகோபத்தோ டவ்வீரன் மிகுந்த வாரவார சத்தம்பண்ணிக் கொண்டு தனது வேலைப்பிரயோகிக்க அதையும் பானுகோபன் மகாதீக்ஷணிய முள்ள நூறு பாணங்களாலோர் நொடிக்குள் தூளாக்கி விட்டனன். அதன்மேல் வீரராக்ஷஸன் துரிதத்திலிரதத்தை விட்டிறங்கி யிரதத்தோடு கூட அவ்வசுரனைச் செங்குத்தாகத் தூக்கியாகாயத்தினில் வீசியெறிய, ஆகாயத்தில் மேல் நோக்கிப் போகையிலே யம்மகாசுர னிரதத்திலிருந்தபடியே மகா அட்டகாசத் தொனியால் திசைகளெங்கும் நிரப்பிக்கொண்டு தீக்ஷணியமுள்ள தன்வேலை யவ்வீரன் மார்பின் மீது கோபத்தோடு பிரயோகிக்க, அப்பெரிய வேல் விழுந்த மாத்திரத்தி லவ்வீரன் மூர்ச்சை கொண்டு பூமியிற்சாய்ந்து விட்டனன். ஓ! கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போதது கண்டு மகாபலிஷ்டர்களான வீராந்தகன், வீரமகேசுவரன், வீரபுரந்தரன், வீரதீரன் இவர்களெல்லாம் யுத்தத்துக்காகப் புறப்பட்டனர்.

## 5-வது அத்தியாயம்.

அப்போ தம்மகாவீர ரெல்லோர்களும் விற்களை எடுத்துக் கொண்டு நீருண்ட மேகங்கள் கர்ஜிப்பது போல் மிகுந்த சப்தம் செய்வதினாலதிக பயங்கரர்களாகிக் கோபத்தோடு பானுகோபன் மீது சரங்களை வருஷித்துக் கொண்டே பிரயாணப்பட்டார்கள். பிறகு பானுகோபனும் பற்பல வலங்

காரங்களோடு கூடிய வேறு இரதத்திலேறிக்கொண்டு மிகுந்த பாணங்களை வருஷித்தான். அப்போதிப் பிரகாரமாகத் தேவராஜர்களுக்கும் அசுரராஜனுக்கும் நான் முன்னே, நான் முன்னேயென்று மகா கொடுமையான யுத்தமுண்டாயிற்று. அப்போதிரண்டு வீரர்களசுரனது பாணங்களாலடிபட்டதனால் பிரக்ஞையிழந்து விழுந்தார்கள்; மற்றிருவர் தேரிழந்தார்கள்; மற்றுமுள்ள வொருவன் பயத்தினால் திகைத்துச் சாய்ந்தான். அப்போதசுர சேனையானது ஒளியிழந்த பூதர்களுடைய விற்றிறமையைக் கண்டு மிகுந்த ஆரவாரசப்தங்களால் மகாபயங்கரமாகி யதிகவேகத்தோடு வரலுற்றது. சிலர் விற்களை கையிற்பிடித்துக் கொண்டு அட்டகாசம் செய்து கூத்தாடினார்கள். சிலர் கத்திகேடயங்களை வைத்துகொண்டு நான்கு திக்குகளிலும் கொம்மாளமிட்டோடினார்கள். இவ்விதமாக வசுரர்கள் சப்தமிடுகையில் அப்போதோர் நொடிக்குள்ளாக மகா கைக்காரனான வீரபாகுவானவர் ஸ்ரீ வடிவேலனுடைய துதிகளையே மனதினிற் கருதியவராகி பற்பல வேதவேதாந்தங்களை நாவினாலுரைத்துக் கொண்டும் ஹிருதயகமல குஹைக்குள் விளங்காநின்ற ஸ்ரீ குஹபிரானை தியானித்துக் கொண்டும் ஸ்ரீ சங்கரன் பினாகமென்ற வில்லைப்பற்றியது போலோர் கெட்டியான வில்லை யெடுத்துக்கொண்டு வெளிக்கிளம்பினார். அப்போதவர் சரமாரி தொடுப்பதற்காக வில்லின் நாணை யேற்றி தூங்கலுற்ற பாம்பினுடலை யொத்த மகா பயங்கரமான அந்தஞ்ஞாணை மீட்டலுற்றனர். அப்போது மிகுந்த பயங்கரமான வோசையானது ஸகல திசைகளையும், பிரம்மாண்டம் முழுமையும், மலைகளின் குகைகளையும் நிரப்பிக் கொண்டுண்டானதில் மானிடர்கள் திடீரென்றண்டம்தான் வெடிக்கலாயிற்றோ, அல்லதிது பிரம்மனுக்கும் பெரும்பீதியளிக்கலுற்ற பிரளயகாலக்கடலினலை யோசையோவென்று பற்பலவிதமாகச் சொல்லிக் கொண்டார்கள். அப்பேர்ப்பட்ட பேரோசையைக் கேட்டு மான்கள் புலியின் சப்தமென்று பயந்தும், புலிகளும் யானைகளும் பயங்கரமான சிங்கநாதமென்று கலங்கியும், சிங்கங்களெல்லா மீது சரபத்தின் கர்ஜனையோவென்று திகைத்தும், மலைப்பொந்துகளை விட்டுத் திசைகளெங்கு மோட்டம்பிடிக்கலாயின. அப்போது பானுகோபனும் நாணைமீட்டு கையில் அதேமாதிரியெல்லோர்களாலு மாச்சரியப்படும் படியாக மிகுந்த யோசையுண்டாக்கினான். பின்பு பானுகோபன் மகா பலசாலியான வீரபாகுவை நோக்கி அடா! நீபிரமனல்ல, விஷ்ணுவல்ல, சுந்தனல்ல, இந்திரனுமல்ல, நீயாவனோவோர் தூதனாகியவன், உனக்கிப்பேர்ப்பட்ட கர்வம், யாதடா? நீ முந்தி மாயவசத்தினால் பல வசுரர்களைக் கொன்றுவிட்டுத் தப்பியோடிவிட்டாய். நாமப்போது சத்தியமாகவே யோர் தூதனென்றுந்தனை விட்டுவிட்டோம். அடா! உங்கள் சைனியங்களை யெல்லாம் கொன்றிப்போது விரட்டியடித்தோம். பார்த்தாயா? யாமிப்போது, சீக்கிரத்திலுந்தனைப் போர்தனில் வென்று உந்தனைச் சேர்ந்த தேவர்களுக்கெல்லா மிதோசந்தேகமின்றி பளுவான விலங்குகளை மாட்டுகின்றோமென இவ்வாறுரைத்த அவ்வசுரனை நோக்கி வீரபாகுவுரைத்ததாவது:—"அடா! அசுரா! நீ தன்னைத்தானே மேன்மையுள்ளவனாக நினைத்துக்கொண்டு யாதுரைத்திட்டாய்? யுத்தத்துக்கு வந்தவனைத் தூத

னென்றெவ்வாறுரைப்பது ? தூதரிடத்து பலமும் சௌரியமுமிரா வென்பது யாவருடைய அபிப்பிராயம் ? ஆகையாலிவ்வித வீணாண்மையெல்லாம் விட்டு நீயிப்போது நம்முடன் யுத்தம் செய்யடா" என்றிவ்வாறாக மகா பலவானாகிய தேவேசன் வசனமளிக்கையில் பானுகோபன் பத்துப் பாணங்களைக் கோபத்தோடு தொடுக்க தேவர்களைக்காக்கவுற்ற வீரபாகுவுமவற்றைப் பத்து பாணங்களை விட்டுத் துண்டித்தெறிந்தனர். பின்பசுரன் சினங்கொண்டு மறுபடி நூறு பாணங்களைத் தொடுக்கையில் அவரவைகளையுமவ்வளவே பாணங்களை ஜுவலிக்கலாகும்படி விட்டு முறித்தெறிந்தனர். அதன் மேலசுரன் மிக வாக்கிரகம் கொண்டாயிரம் பாணங்களைப் பிரயோகிக்க, வீரபாகுவவைகளையும் கோபத்தோடாயிரம் பாணங்களாலே துண்டித்துவிட்டுப் பிறகசுரன் மீது பதினாயிரமஸ்திரங்களைச் சந்தானம் பண்ணினர். பின்பசுரனவைகளைப் பதினாயிரம் பாணங்களாற் துண்டித்துவிட்டத்தேவன்மீ திலக்ஷம் பாணங்களைப் பிரயோகித்தனன். அப் பாணங்களை வீரபாகு வீணாக்கிப் பின்னரும் மிகுந்த சப்தத்தோடு கூடிய பத்திலக்ஷம் பாணங்களை யசுரன்மீதெய்ய, பானுகோபனவைகளைப் பழுதாக்கிப் பிறகவர் மீது வெகு கோபத்தோடு கோடி பாணங்களை வருஷித்தான். தேவநாயகரும் அதனைபவ்வளவே சரங்களாற் கண்டனம் பண்ணிப் பின்னருமவனைக் குறிப்பிட்டிலக்ஷம் கோடியம்புகளை நாண் மீது பூட்டினர். தேவரக்ஷகரால் விடப்பட்ட வப்பாணங்களையும் அசுரனவ்வளவு கொண்ட சரங்களாற்கண்டித்து மறுபடியவர் மீது மாரிகாலமேகங்கள் பொழிவதுபோல் மிகுதியான சரங்களை வருஷித்தான். அதன் மேல் வீரபாகுவும் மிகுந்த கோபத்தோடு மகா அட்டகாசம் பண்ணிக்கொண்டு மகாப் பிரளயகாலமேகம்போல் பெரும் சரமாரி பொழியலாயினர். அப்போதிவ்விதமாக வவ்விருவர்களு முயுத்தம் நடத்துகையில் பேராச்சரியத்துக்குரிய துர்த்தின (கொஞ்சமேனும் சூரியனொளிக்கிடமின்றி மேகங்களால் மறைக்கப்பட்டதினம்) முண்டாயிற்று. அதேதோவென்றால்:—ஒலிக்கவுற்ற நாணின் டங்கார வோசைகளாகிய மேக கர்ஜனங்களால், மகா பயங்கரமானதும், பாணக் கூட்டங்களது ஒளித்திரள்களாகிய தகதகாயமான மின்னல்களாற் சூழப்பெற்றதும், எல்லாதிக்குகளையும் சூரியமண்டலத்தையும், மறைக்கவுற்ற அம்புத்திரள்களாகிய பெருமாரி யுடையதும் அம்புக்குவியல்களாகிய வாறுகளினிடையில் வட்டமாகச் சுற்றவுற்ற அவர்களதிரதங்களாகிய மலைகளால் விளங்கியதும், வெளிப்படவுற்ற பாணங்களி னொளிகளைக்கொண்டே யொருவர் முகத்தை யொருவர் நிதானிக்கப்பெற்றதும் காம்பொடித்துக் கிடக்கவுற்ற வெள்ளைக் குடைகளாகிய நுரைவரிசைகளால் விளங்கியதும் இமைக்கொட்டற்ற தேவர்களாற் கூட கண்ணிமைத்தலோடு பார்க்கப்பெற்றதுமாக விளங்கலாயிற்று. இவ்விதமாகத் துர்த்தினம் நேரிட்டபோது பானுகோபன் வீரபாகுவால் விடப்பட்டவனேக மம்புகளையும் பல சரங்களாற் சேதித்து, பிறகு வீரபாகு மகா வுன்னதமான மற்றோர்வில்லைக் கைக்கொண்டு துரிதத்திற் சில சரங்களைப் பிரயோகித்து அவனது வில்லை முறித்துவிட்டனர். பின்பவனும் மற்றோர் பெரிய வில்லை வேகமாயெடுத்துப் பேரொலியால் பத்துத் திசைகளையும் நிரப்

பியவர் மார்பின்மீது மிகத் தீக்ஷணியமுள்ள வாயிர மம்புகளைச் சொரிந்தான். அதன்மேல் வீரருக்கெல்லாம் வீரனன வீரபாகுவும் மிக வாங்காரத்தினல் பற்றி யெரிகின்றவர் போலாகி யேழு பாணங்களா லவ்வசுரனது கிரீடத்தைச் சிதறுண்டு விழச்செய்தனர். உடனே யசுரன் வேறு கிரீடத்தினுற் சிரசை யலங்கரித்துக் கொள்வதற்குள்ளாக அவர் பின்னும் சில பாணங்களா லவ னது கவசத்தைப் பிளந்தெறிந்தனர். அப்போ தப்பேர்ப்பட்ட நிலைமையி லிருந்த பானுகோபனைப் பார்த்துச் சூரியன் நகைக்கலாயினன். பிறகசுர னும் வெகு கோபமுண்டவனுகிக் கெட்டியான வில்லைக் குணத்தொனிபண்ணி வீரனுடைய நெற்றிதனி லாயிரம் நாராசங்களைப் பிரயோகித்ததி லங்கு தைத்துக் கோர்க்கலான வந்நாராசங்களை வீரன் கையினுற் பிடுங்கி யெறிந்து மிகுந்த சிங்கநாதத்தோ டட்டகாசம் பண்ணிக்கொண்டு பிரளய காலாக்கினி போல் ஜுவலிக்கலுற்றவராகி நாணை மீட்டி யவனது மார்பு, முகம், இரு தோட்கள், கைகள், இவற்றி னெவ்வொரு தானத்தையு மாயிரமாயிரம் சரங் களா லடித்தனர். அப்போ தசுரன் அக்கினிக்கு நிகரான வப்பாணங்களா லெரிக்கப்பட்டவனுகி கேளீர்! சௌனகாதி முனிவர்களே! வில்லின் நுனியை யிருகைகளாலும் பற்றிக்கொண்டு மூர்ச்சையடைந்து சாய்ந்தான். துராத்து மனும் கொடிய பாதகனுமாகிய பானுகோபன் மூர்ச்சைக்கொண்டு சாய்ந் தபோதவ னணிந்திருந்த விருபக்கங்களிலுமுள்ள மலர் மாலைகளிரத்தங்க ளாற் புரசம்பூவின் நிறத்தோடு விளங்கலாயிற்று. பிற்பா டசுரரெல்லோர் களும் பரபரப்போ டொன்ருகக் கூடி யவரைச் சூழ்ந்துகொண் டெல்லோரு மேககாலத்தில் கோடைமேகம்போற் சரமாரி சொரிந்தார்கள். பிறகு வீர பாகுவும் கர்வத்தோடு கர்ஜிப்பதால் திசையெங்கு மொலிப்பித்தவராகி யசுரர் களைச் சமுகாரம் செய்யலுற்ற ஸ்ரீ குகபிரானை மனதில் நேராகத் தியானித் துக்கொண்டோர் நொடிக்குள் ளாயிரம்கோடி பாணங்களை யெய்தெய்து சூரி யன் கிரணங்களால் பனிமுட்டங்களைத் தொலைப்பதுபோ லசுரர்களது சரங் களையெல்லாம் தொம்சம் செய்துவிட்டுப் பின்னரு மனேககோடி பாணங்களாற் சகல வசுரர்களையும், கேளீர்! பிராம்மணேத்தமர்களே! ஸ்ரீ ருத்திரன் முப் புரத்தை யெரித்ததுபோல் விளையாட்டாக மடித்துவிட்டனர். அப்போ தசுரர்களது தலைகளெல்லா மம்புகளோடு பற்றிக்கொண்டு சில கடல்மீதும், சில மலைகள் மீதும் மற்லவை நதிகளிலும், சடிதியில் விழலுற்றன. மேலும் சிலவை தீவுதீவாந்திரம் வரையிலு மண்டச்சுவர் வரையிலும் சென்று விழ லுற்றன. இன்னுமற்ற சில தலைக ளவரவரது பெண்டீர்கள் முன்னில் தானே போய் விழலாயின.

## 6-வது அத்தியாயம்.

அப்போது மிகுந்த கபந்தங் (தலையற்ற முண்டங்களெழுந்து பயங்கரமா கக் கூத்தாடின. மேலுமவர்களது இரத்தங்களா லோர் பெரிய நதியுண்டா யிற்று. அதாவென்ருல் :— மாமிசங்களாகிய சேற்றினல் நிறைந்தும், கேசங்களாகிய பாசிக்கொத்துகளால் மிகவும் நிரம்பியும் காம்பொடிந்து மிதந்த வெண்குடைகளாகிய நுரைவரிசைகளா லலங்கரிக்கப்பட்டும், உருண்டு

பிறழ்கின்ற தலைகளாகிய பெரும் கல்திரள்களால் மிகுந்ததும், மிகுந்த வெலும்புகளாகிய வேராளமான பெரிய கிளிஞ்சில் முட்டைகளாற் நிறைந்ததும், பருந்து, காக்கை, கழுகு முதலியவை மேலாக வட்டமிடுவதால் பயங்கரமுள்ளதும், மாமிசவாசையினால் நாய் நரிகள் சூழப்பெற்றதும், சுற்றிலும் பேய்பிசாசங்களாற் கூடப்பட்டதுமாயிருந்தது. இவ்விதமாக வசுரசேனையெல்லாம் வீரபாகுவின் பாணக்கினியால் மடிந்த பிறகு, சகல பூதர்களும், பூதப்படைத்தலைவர்களும் இன்னும் மூர்ச்சையடைந்து கிடந்த மற்றவர்களுமெழுந் தெல்லோர்களு மொன்றுசேர்ந்து கூத்தாடிப் பாட்டுப்பாடிக்கொண்டும், ஒருவரோடொருவர் கொம்மாளமிட்டுச் சிரித்துக்கொண்டு மிருக்கையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது பானுகோபன் சடிதியில் மூர்ச்சைவிட்டெழுந்து தன் படைகளெல்லாம் பலவிதமாக மாண்டுகிடப்பதையும் கொஞ்சமேனும் மிச்சமின்றித் தேவப்படைகள் முழுமையும் பிழைத்தெழுந்து கூத்தாடிப் பாடியெக்களிப்பதையும் பார்த்து மனதில் நினைத்ததாவது:—ஓ! கோ! இவரெல்லோர்களு மெம்மோடெதிர்த்துப் போராடி யோட்டம் பிடித்தவர்கள். இவர்களிவனொருவனே, சூராதி சூரன். இவனுக்கீடு மற்றொருவருமில்லை' யாமப்பேர்ப்பட்ட விச்சூரனையோர் நாழிகையளவுக்குள் ஸத்தியமாகக் கொன்றுவிடுகின்றோம். இல்லையாகி லவ்வாறவனைக்கொல்லாத வில்லாளியாகிய யாமிங்குதானே யக்கினிப் பிரவேசம் செய்துவிடுவோமென்று அசுரப்படைத் தலைவராகிய பானுகோபன் கோபத்தோடுறுதி பண்ணிக்கொண் டப்போதுடனே மகாவுன்னதமான சிங்கம் போற் சடிதியிலுரக்கக் கர்ஜித்துத் தேவவீரர்மீ தாயிரம் மூவிலையம்புகளைச் சொரிந்தனன். பிறகு தேவரக்ஷகரு மதேமாதிரியான அவ்வளவம்புகளாலவனதம்புகளை முறித்தெறிந்து மறுபடியுமவ்வசுரன் மீதாயிரமம்புகளை யெய்தனர். அதன்மேல் மகாபல பராக்கிரமங்களுடைய அவ்வசுரனோ வென்றால் அவ்வெல்லாவற்றையும் மகா கோபாவேசங் கொண்டவனாகி யதிகூர்மையுள்ள வாயிரமம்புகளாற் சடிதியிற் கண்டனம் பண்ணிவிட்டுப் பின்னரு மக்கொடியோன் பதினாயிரம் சஸ்திரங்களை சந்தானித் தவரதிரதத்திற் பூட்டிய குதிரைகளையும், ஸாரதியையும் கொன்றனன். உடனே பூதசேனாதிபரும் மகாவாக்கிரகம்கொண்டு அப்போதே துரிதத்தில் வேறு இரதத்தின் மீதுட்கார்ந்து கேளீர்! சௌனகாதி முனிவர்களே! கூர்மைகொண்ட விரு நூறிருநூறு பாணங்களைப் பிரயோகித்து அசுரனது தேர், குதிரைகள், ஸாரதி, தனசு இவற்றை யெல்லாம் கொன்று பூமியில் விழுத்தினர். பிறகு பானுகோபன் பறுபடி வேறிரதத்தையும் மூயர்ந்த தனுசையும் கொண்டு வீரன் மீதெழுநூறு வஜ்ஜிராஸ்திரங்களைப் பிரயோகிக்க அதனால் அவர்கொஞ்சம் துன்ப மடைந்து பிறகு மிகக்கோபம் கொண்டவ ராகி யவனது கடினமான வில்லைப் பதினான்கு பாணங்களால் துரிதத்தில் துண்டித்து மிகுந்த சிங்கனாதம் செய்வதனா லவ்வசுரயானையை நடுநடுங்கச் செய்து மறுபடியுமாயிரம் சரங்களாலவனது தேர்ப்பாகன், தேர், குதிரைகள் இவைகளை யெல்லாம் செதல் செதலாக்கிக் கீழேதள்ளிப் பின்னும் கூர்மையுள்ள நூறு பாணங்களை விட்டவனது மார்புதனைப் பிளந்தனர். பிற்பாடசுரன் மகா வுன்

னதமான வேறிரதத்தின்கண் ணுட்காருகையி லப்போது வீரபாகு அவன் மீதாயிரமம்புகளைச் சந்தானிக்க, அவைகளவனது மார்பின் விலாப் புறத்தைச் சிதைத்துக் கொண்டு அவன் முதுகினிற் பூட்டிருந்த வம்பறாத் தூணியைச் சேதித்து விட்டன. பிறகசுரன் பரபரப்புக் கொண்டவனாகி போர்க்கள மத்தியிலிருக்கு மிவ்வீரனை வில்லினால் வெல்வ தசாத்திய மென்றப்போது தீரவாலோசித்துக் கொண்டு எல்லோர்களையும் முற்றும் மயங்கவடிக்கலுற்ற மோஹனாஸ்திரத்தைக் கைமீதெடுத்து மகாபயங்கரமான அவ்வஸ்திரத்துக்குரிய மந்திரத்தை மனதினில் ஜபித்ததனைப் பிரயோகித்தனன். கன்னங்கரேலென்ற குருட்டிருட்போற் கறுப்பானதும், ஜனங்களுடைய கண்களைக் குருடாக்கலுற்றதும் ஸகல திசைகளிலும், பரவிச் சூழலுற்றதும் பெரும் பீதியைக் கொடாநின்றதும், அதிகோரமானதும் மிகுந்த மாயையை யளிக்கா நின்றதும், மோகப் படுவதை யெல்லாம் மிகவும் மோகிக்கச் செய்வதும் பயப்படுவதை யெல்லாம் மிகவும் பயப்படச் செய்வதுமான அவ்வஸ்திரம் வெளியிற் புறப்படும்போதே பூதர்கள், படைத் தலைவர்கள் முதலிய வெல்லோர்களு மவரவர்கள் தங்கள் தங்கள் வசத்திலுள்ள மிகவும் கோரமான வாயுதங்களை யெல்லாம் சடிதியி லவ்வஸ்திரத்தின் மீது விட்டு மவற்றையத்து கொஞ்சமேனும் சட்டைபண்ணும லதிவேகத்தோடு வரலாயிற்று. தேவரக்ஷகரான அவ்வீரனதைக்கவர லுற்று ஆ! ஆ! இதென்ன! மகா பயங்கரமும், கோரமுமாகிச் சகல வஸ்திரங்களையும் துரிதத்திலடக்கி மேற்கொண்டு சீக்கிரமாய் வருகின்றதே! இதனை யெதனால் தடுக்கலாகும்'' என்றதனைப் பரபரப்புடன் பார்த்துத் தேவநாயகன் மனவியாகுல முற்றிருக்கையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வஸ்திரமானது வீரபாகு உள்பட வெல்லாப் படைகளையும் மதிமயக்கம் கொள்ளச் செய்தது. ஓ! கோ! பூதத் தலைவ ரெல்லோர்களுமப்போது கம்பம் போல் நின்று விட்டார்கள். அது போலவே தேராளிகள் தேரிலும், மற்றவர்கள் நிலத்திலும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவரவராயுதங்களைக் கைகளிற் பிடித்துக்கொண்டே நித்திரை கொண்டு விட்டார்கள். அப்போதவர்கள் கேவலமோர் சிறுவனாற்கூட முற்று மெளிதினில் முறியடிக்கப்படுவோர்போ லிருந்தனர்கள். அச்சமயத்திற் பானுகோபன் வெகு சந்தோஷத்தோ டவர்கள்மீது பல சரங்களைத் துரிதத்தில் வருஷித்து அத்தேவத் தலைவரெல்லோர்களையு மிரத்தம் பெருகவிடச்செய்தனன். இப்படியிருக்கையில் சகலப் பிராணிகளுடைய ஹிருதய கமலத்திலும், விளங்கியிரா நின்றவரும், கருணைக் கடலானவரும், மிகவும் மெதுவான வழகிய திருமேனியுடையவரும், சச்சிதாநந்த மங்கள மூர்த்தியுமாகிய ஸ்ரீகுமரேச னிது விஷயங்களைத் திருவுளத்திற்கொண்டு தேவகணங்களாற் சுற்றிலும் பக்கங்களிற் சேவிக்கப் பெற்றவராக ஏம கூடமென்ற பட்டணத்தில் திவ்விய நவரத்தின ஸிம்மாசனத்தின்கண் வீற்றிருந்தபடியே ஸகல மோகங்களையும் தொம்சம்பண்ணலுற்ற பிரபுவாகிய ஸ்வாமியானவ ரவ்வஸ்திரத்தி னாட்டவாட்டங்களை யடக்குவதற்காகத் தகதகாய மாய் ஜுவலிக்கலுற்ற மகாகோரமான அமோஹாஸ்திரத்தைப் பிரயோகித்தனர். அதுவேவென்றால் சகல திசைக

ளையும் தனதொளித்திரள்களால் சூரிய கிரணங்கள்போல் மிகவும் பிரகாசிப்பிக்கலுற்றதாகி யம்மோகனுஸ்திரத்தைத் துரிதமாகத் தொலைத்துவிட்டது. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! உடனே, வீரபாகு முதலிய தேவர்களும் ஸகல பூதப்படைத் தலைவர்களு மோர் நொடிக்குள் மோகம் தெளிந்து தூங்கி யெழுந்தவர்போ லெழுந்தார்கள். பிறகவ்வமோகாஸ்திரமோவென்று லம் மோகனுஸ்திரத்தைப் போக்கிவிட்டு ஸ்ரீ குகபிரானண்டைக்கு உவமையற்ற வோசையோடு மிகத்துரிதமாகத் திரும்பி வந்துவிட்டது. பிறகுடனே வீர ரெல்லோர்களு மெழுந்து மனவெட்கம் கொண்டவர்களாகி சீ! சீ! பதிலஸ்திரம் பிரயோகிக்கத் திறமையற்ற நமக்கிங்கென்ன சௌரியமிருக்கின்றது? ஸ்ரீ ஆறுமுகப்பிரானது கருணையாலல்லவோ நாமெல்லோர்களு மோர்நொடிக்குள் இரக்ஷிக்கப்பட்டோ மென்றெல்லோர்களும் ஸ்ரீ முருகேசனை வேதவேதாந்தங்களா லிசைக்கப்பட்ட துதிகளாற்றோத்திரம் பண்ணிப் பிறகுரோஷம் கொண்டவர்களாகி யசுரசிகாமணியோடு யுத்தம் தொடுக்கத் தொடங்கினர்கள். தேவநாதனுன் வீரபாகுவு மப்போதவ் வசுரனைச் சுருக்கினிற் கொன்றுவிட விருப்பமுற்றவராகி வேகத்தோடு பாசுபதாஸ்திரத்தைக் கைக்கொண்டனர். அதுகண் டசுரவீரனும் மிகுந்த மனவச்சம் கொண்டு, ஓ! நாமிவ் வஸ்திரத்திற்குற்ற பதிலஸ்திரத்தை யெடுத்துவரவில்லையல்லவோ! ஆகையால் நாம் நகரம்சென்று மென்மை பொருந்திய பாசுபதாஸ்திரத்தைச் சீக்கிரமெடுத்துக்கொண் டிம்மகாபலவானோடு யுத்தம் புரிய வாலாவோமென்று மனநிச்சயம் கொண்டவனுகித் துரிதத்திலிலேசான வுருவத்தைக்கொண் டிரதத்தை விட்டுப் பற்பல வசுரர்களால் நிறைந்த தனது, நகரத்துக்குத் திரும்பிச் சென்றங்கு தெருத்திண்ணையிலுட்கார்ந்து பாட்டுப் பாடுவோர்களும், சூது சொக்கட்டானுடுவோர்களுமான பல வசுரோத்தமர்களைக் கண்ணோக்கிக்கொண்டே பற்பல விரத்தினங்களால லங்கரிக்கப்பட்டதும், மனதைத் திருடலுற்றக் கொடி போன்ற வுடல்களைக்கொண்ட பல சுந்தரமாதர்களாற் சூழப்பெற்றதுமான தனதரண்மனைக்குட் சென்றங்கு பலபல வுபசாரங்களா லாதரிக்கப்பட்டு மிகுந்த மனவெட்கம் கொண்டவனுகி, கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அவனிங்கு யுத்தத்தைப் பற்றிச் சிந்தையடைந்து மிகவும் நொந்திருந்தனன்.

பூதங்களும் படைத் தலைவர்களும் கோலாகல சத்தத்தோடு கொண்டானடித்தார்கள். அப்போ தாகாயத்திலிருந்த தேவர்கள் மலர்மாரி சொரிந்தார்கள். அதுபோல் தேவதுந்துபிக ளடிக்கப்பட்டு மிகவுமொலி முழங்கலாயிற்று. மகாபலவானுகிய வீரபாகுவை நோக்கியப்போது பூதர்க ளுரைத்திட்டதென்னவென்றால்: ஓ! தேவரக்ஷகரான வீரனே! இப்போதவ் வசுரவீரனைப் பட்டணத்திலிருந்திங்கு கட்டிக்கொண்டு வரல் வேண்டு'' மொன்றிவ் விதமாகப் பூதர்களுரைக்கையி லப்போது வீரபாகு வசனமுரைத்ததாவது:—ஓ! கேளீர்! வீரர்களே! இவன் யாவரானுலும் போரினின்று புறம்காட்டியோடுவோனைத் திரும்பவும் படைகளைக்கொண் டவமதித்தல் தாகதென்று தத்துவப்பொருட்களை யறிந்த பெரியோர்கள் கூறுகின்றார்கள். ஆகையால வன் தானுகவே வந்தாலவனைச் சந்தேகமின்றிச் சமுகரித்து விடுகின்றோமென பூதப் படைத் தலைவர்களு மப்போதிவ்வாறு வசனத்தைக்

கேட்டு மனக்களிப் படைந் தெல்லோர்களும் தங்கள் ஏமகூட புரத்துக்குப் புறப்பட்டு விட்டார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பானுகோ பனுக் கிப்பேர்க் கொத்த அவமானம் நேரிட்டதுகண்டு சூரியன் பீதிகொண் டவன்போல் கிரணங்களை யொடுக்கிக்கொண்டு மேற் கடலிலாழ்ந்தனன். ஸகல வீரர்களுமப்போ தெல்லா வசுரர்களையும் கொன்றுவிட்டு மகாமகிமை பொருந்திய ஸ்ரீ சுப்பிரம்மணியன் வாஸஸ்தானமாகிய ஹேம கூட புரத்தைச் சீக்கிரமடைந்தார்கள்.

## 7-வது அத்தியாயம்.

அப்போது வீரபாகு முதலியவர்களும் மற்றுமுள்ள வெல்லாப் பூதப் படைத் தலைவர்களும் ஸ்ரீ குமரேசன் சன்னதிக்குச் சீக்கிரமாகச் சென்று பூமியில் விழுந்து வந்தனம் பண்ணி சிறந்த துதிகளால் தோத்திரம் செய்து சங்கதிகளை யறிவித்தனர். பிறகு பிரபுவானவர் அவர்களெல்லோரையும் பரிபூர்ண கிருபையோடு திருக்கண்ணுற் றப்போதவர்களைத் தம்தம் விடுதி களுக்குச் செல்லும்படி யனுமதி யருளினர். பின்பவரெல்லோர்களும் மகாசந்தோஷத்தோ டத்தேவாதிதேவனை வந்தனித்துவிட்டு வீடு சென் றூர்கள்.

அப்போது பகவானுன சூரபத்துமன் தன்மைந்தனடைந்த அவமானத் தைத் தூதர்மூலமாய்க் கேட்டு ஓ! நாளைத்தினமே யாம் சென்றவ்விளை ஞனை கந்தன் முதலிய வெல்லோர்களையும் சடிதியிற் சந்தேகமின்றி ஜயித்துவிடுகின்றேமென்றுகூறித்தன் தூதர்களை யவர்கள் வீட்டுக் கனுப்பிவிட்டு அவ்வசுரேச னவ்விரவு முழுதும் சிந்தாக் கிராந்தனுக் கிருந்து பிறகு காலையிலெழுந்து காலைக் கடன்கள் முழுமையும் முடித்துக் கொண்டு பற்பலவித இரத்தினங்களால் விளங்கப்பெற்ற சிங்காதனத்திலி ருந்து தனதாயிரம் கோடி தூதர்களையு மங்கங்கு பலபல விடங்களிலுள்ள தனது சைனியங்களை யழைத்து வரும்படி யனுப்பினன். உடனே யத்தூதச் சிரேஷ்டர்கள் புறப்பட்டுச் சென்று அந்தந்தத் தீவு முதலியவைகளது பூஸந்தி களிலுள்ள யுத்த வீரர்களையும் அவர்களது தலைவர்களையும் சடிதியிலழைத்து வந்தார்கள். அப்போது சூரபத்துமனவர்களைப் பார்ப்பதற்காக கோபுரத் தின் மீதேறி யதனுச்சியிலிருந்துகொண்டு தளத்தினர்களான விலக்ஷம் வாகினி சங்கியை கொண்ட வசுரப்படை வீரர்களைக்கண்டு வெகு சந் தோஷங்கொண்டு சீக்கிரமாயிறங்கி யவ்வசுரேசன் பற்பல வித விரத்தினங் களா லிழைக்கப்பெற்ற வோருன்னதமான மகாதனுசைக் கையிற்கொண்ட போது இந்திர தனுசைக் (வானவில்) கொண்ட மேகக் கூட்டங்கள்போல் விளங்கலுற்றவனும், புடம்போட்ட தங்கமயமான பாணங்களால் நிறைந்த வம்பறுத்தூணிகளைக் கொண்டவனாகவும் மறைந்து விடாமல் நிலையாகவே மின்னிக்கொண்டிருக்கின்ற மின்னற் கொடிகளினொளித்திரள்களால் விளங்க லுற்ற கார்மேகம் போன்ற வுருவ முடையோனும், தரிக்கலுற்ற தும்பை மலர் மாலைகளால் மிகுந்த சோபையைக் கொண்டவனும், அதனல் கொக்கு முதலிய வெண் பறவைகள் மாலை கோர்த்ததுபோ லருகினிற் பறக்கப்

பெற்ற நீருண்ட மேகங்களது காந்தியைக் கொண்டவனும் தண்டாயுதம், பட்டாக்கத்தி, கைக்கத்தி வாள்கத்தி, கண்டரக் கோடாலி முதலிய பல வாயுதங்களால் விளங்கியவனுமான வசுரராஜன், மந்தரகிரி, கைலாசகிரி மகாமேருகிரி முதலியவைகளை மேற்கொண்டதும் பற்பல விரத்தினங்களால் விளங்கானின்றதும், விசித்திரமும், சிரேஷ்டமுமானதும் ஆகாயகங்கையில் ஜலத்தை யளைகின்ற குடையினாலு மாலவட்டத்தாலு மலங்கரிக்கப்பட்டதுமான விந்திரலோகத்தேரின்மீ திட்கார்ந்துகொண்டு சிறந்த மந்திரிமார்களுடனும், மகாவீரர்களும், மகா பல சாலிகளுமான மற்றச் சேனாதிபதிகளுடனும், சகல வாயுதங்களாலும், நிரப்பப்படலுற்ற மற்றப் பல தேர்களுடனும் புறப்பட்டு இராஜவீதியைக் கடந்து கோபுரவாசலுக்கு வந்த பிறகு சிங்கமுகன் சுதனான வதிசூரனையும், தாரகன் செல்வனான வசுரேசனையும், படைத்தலைவர்களாகப் பட்டங் கட்டி முந்திச் செல்லும்படி யனுப்பி விட்டுக் காஹாரி பேரி, படஹம், மட்டு, டிண்டிமம், ஜர்ச்சரம், முதலிய வாத்தியங்க ளமக்களமாய் முழக்கப்பட்ட வோசைகளாலும், சங்கம், புல்லாங்குழல், வீணை முதலிய வின்பவாத்தியங்கள் வாசிக்கப்படுவதாலும், குதிரைகளின் கனைத்தல்களாலும், மதயானைகளது பிளிறுதல்களாலும், சுற்றியோடுகின்ற தேர்களது பெருஞ் சக்கிரங்களின் விளும்போசைகளாலும் சேனைகளின் கோலாஹலச் சத்தங்களாலும், கட்டியக்காரர்களுடைய துதிபாடல்களாலும், ஊழிக் கால கடலின் பெரிய வோசையை மேற்கொள்ளப் பெற்றவனும் சிறந்த பலபல விரத்தினங்களா விழைக்கப் பெற்ற குடைகளின் வரிசையால் மறைக்கப் பெற்ற முகத்தையுடையவனும், சேனைகளின் கால்களால் கிளப்பி விடப்பட்ட புழுதித்திரளினால் சூரிய மண்டலம், ஆகாயத்தினிடைவெளி திசை முகங்கள் முதலியவைகளெல்லாம், பரவி மறைக்கப்படப் பெற்றவனுமாக வச் சூரபத்துமன் துரிதமாகச் சேனைகளோடு மகாபெரியதான போர்க்களத்தை யடைந்தான். அது கண்டிந்திரனு மவன் வரவைப்பற்றி ஸ்ரீ குமரேசன் சன்னதியிலறிவித்து அத்தேவேசனை வந்தனித்துப் பிரார்த்தித்துக் கொண்டதாவது:—ஓ! அடியார்களுக்கு நேசனே! சகல புவனங்களையும் காப்பவனே! ஓ! மகாபிரபுவே! இப்பொழுது யுத்தத்துக்கு நேர்ந்திருக்கின்ற சகல வசுரர்களுக்கும் அதிபதியான துராத்துமனாகிய விவ்வீரனைச் சுருக்கினிற் ஜயிக்கவேண்டும். என ஸ்ரீ முருகனு மிவ்வாறுகப் பிரர்த்திக்கப்பட்ட தன் பேரில் நல்லது அப்படியே ஆகட்டுமென் றிந்திரனுக்குத் திருவாக்கருளி, பிறகச் சகல வசுரர்களையும் தொலைப்போரானப் பிரபுவானவர் சிங்காதனத்தினின் றிறங்கித் தமது ஸாரதியான வாயு தேவனைத் துரிதத்தி லிரதத்தைக் கொண்டு வரும்படி கட்டளையிடப் பிறகு அம்மகாரதம் கொண்டு வரப்பட்டவுடன் பிரபுவானவர் பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலியவர்களால் துதி கூறப்பட்ட மரையடிகளைக் கொண்டவராகவும், வீணை வாசிப்பதில் முயன்று நின்ற ஸ்ரீ நாரதர் முதலியவர்களாற் சேவிக்கப் பெற்றவராகவும், இதே விதமாய் (முந்தி மீனுருவமடைந்திருந்த) ஆறு முனிவர்களும், தடிகளோடு கூத்தாடப் பெற்றவராகவும், பேரீ, காஹளம், நிஸ்ஸானம், ஜர்ச்சரீ, மட்டு, மத்தளம், சங்கம், புல்லாங்குழல், வீணை முதலிய வாத்திய முழக்கங்களால் கடலோ

சையைவெல்லப் பெற்றவராகவும், கீதங்கள் பாடலுற்ற கின்னரச் சிரேஷ்டர்களாலும், தமது சிறந்த குணங்களை யெடுத்துக் கூறிய கட்டியக்காரர்களாலும் குடை சாமரங்கள், முதலியவற்றைக் கைதனிற் பற்றிய தேவச் சிரேஷ்டர்களாலும் இன்னும் பல்பல வுபசாரங்களைச் செய்து வரலுற்ற மற்றவர்களாலு மருகினிற் சூழப் பெற்றவராகவும், கேளீர்! சௌனகாதி முனிவர்களே! ஸ்ரீ சுப்பிரமணியன் தமதிரதத்தின்கண் ணெழுந்தருளித் துரிதமாகப் பிரயாணப்பட்டனர். அப்போது அவ்வீரர்களும் சகல படைத் தலைவர்களோடுகூட சகல ஸரணங்களாலு மலங்கரித்துக்கொண் டிரதங்கள் மீதுட்கார்ந்து துரிதமாகப் புறப்பட்டனர்கள். பூதப்படைகள் யாவும் கோலாஹலச்சத்தம் பண்ணிக்கொண்டு பிரயாணப்பட்டுச் செல்லுகையில் புழுதித்திரள்கள் கிளம்பிச் சூரியனை மறைக்கலாயிற்று. இவ்விதமாக வெல்லோர்களும் சன்னத்தப்பட்டு மிகுந்த சந்தோஷத்தோடு யுத்தகளத்துக்கு வந்தனர்கள். உடனே பூதப்படைகள், வடவாக்கினியானது கடல் நீரால் சூழப்பட்டதுபோல் மகா பலவான்களான வசுரர்களால் மிகுதியாகச் சூழ்ந்து கொள்ளப்பட்டன. அப்போது பூதர்கள் மரங்களையும் மலைகளையும் பிடுங்கி, பெரிதான கற்பாறைகளையுமெடுத்துத் துராத்துமாக்களான வசுரர்கள் மீதெறிய, அவ்வசுரர்களுமப்போது, வெகு கோபம் கொண்டு மிகுந்த கூச்சல் செய்தவர்களாகி மகா கோரங்களான தங்கள தாயுதங்களைத் துரிதமாக வப் பூதர்கள் மீதெய்தார்கள். பிறகு பூதர்கள் மகாவாக்கிரகம் கொண்டவர்களாகி நூறசுரர்களை வாரிவாரி யெடுத்துச் சுழற்றி யடிப்பகா லசுரர்களையும் பதினுயிரம் குதிரைகளால் மிகுந்த குதிரைகளையும், ஆயிரம் பெரிய யானைகளால் மதம் கொண்ட யானைகளையும், மேலு மிப்பூதங்களாலும் யானைகளாலும் மற்றுமுள்ள வசுரர்களையும் பரபரவென்று வாரிவாரி யடித்தடித்து மிகுதியான வசுரர்களையும், யானைகளையும், குதிரைகளையும் கொன்றார்கள். தவிரவுமவர்கள் சில வசுரர்களையும், குதிரைகளையும், கால்களையும் வாரிப் பிடித்துக் கரகரவென்று சுழற்றிப் பூமியிலோங்கி யடித்து மடித்தார்கள். பிரகசுரர்களும் பெரும் கூச்சல் செய்வதனுல் மகா பயங்கரர்களாகிய பூதர்களால் விட்டெறியப்பட்ட விருக்ஷங்களையும், மலைகளையுமாயுதங்களால் கண்டித்து ஓ! கோ! மறுபடியுமவர்கள்மீது பல பல வாயுதங்களைவிட்டுக் கைகால்களை முறித்துத் துரத்தினர்கள். பின்புடனே பூதப்படைத்தலைவர்கள் கோபமுண்டவர்களாகி மிகுந்த சத்தமிட்டுக்கொண்டு முன்னோக்கி வந்து தண்டாயுதம், கத்தி, பாணம் முதலியவின்னும் பல வாயுதங்களால் பல வசுரர்களைக் கொன்று மற்றவர்களை விரட்டினர்கள். அப்போதசுரர்களிலனேகம் தலைபற்ற முண்டங்களுண்டாகி மிகுந்த விரத்தப் பிரவாகமுடைய வாறு பெருகலாயிற்று. இப்படி யிருக்கை யிலசுரர்களுக்குள் மிகுந்த பலிஷ்டனுன, சிங்கமுகன் மைந்தனுன மகாசூரனென்ற அதிசூரனிதைக் கண்டு மிகுந்த கர்வத்தோடு, சிங்காதம், செய்வதினுல் திசைமுகங்க ளொளிக்க போகப் புறப்பட்டு ஏறியதே ரொடிந்திடில் மறுபடியேறுவதற்காக வேண்டிய, வேறிரண்டாயிரம் தேர்களால் பின்தொடரப்பெற்றவனுகி மகாவுன்னதங்களான பதினுயிரம் குதிரைகளாலிழுக்கப்பட்ட விரதத்தின்கண் ணுட்கார்ந்து

கொண்டு மேகம்போல் மிகுதியாகக் கர்ஜனை செய்து சரமாரியைச் சொரியலாயினன். அப்போது மகா பெருமை பொருந்திய உக்கிரனென்ற ஓர் வீரச்சிரேஷ்டன் அப்போர்க்கொத்த மகா சூரனை, வேகத்தோடு தண்டாயுதத்தையெடுத்து மார்பின்கண் ணோங்கியடிக்க, அப்போதவ்வடியினலவன் மார்பினிலிருந்த கவசம் பிளக்கப்பட்டது. அதன்மேலதிசூரன் வெகு கோபங்கொண்டிலக்ஷமம்புகளைத் தொடுத்து அவனது தேகத்தை பிரத்தக்குமிழிகொள்ளவடித்தான். பிறகப்பூதநாதன் பறபறப்போ டோருயர்ந்த மலையைப் பிடுங்கிமகாவேகத்தோ டவன்தேர்மீதெறிய அது விழுந்ததாலத்தேர் அனேகம் துணுக்குகளாகிப் பூமியில் விழுந்தது. உடனே யவ்வசுர னோர்நொடிக்குள் ஜாவலிக்கலுற்ற மற்ருேரிரத்தின் மீதேறிக் கொண்டனன்.

## 8-வது அத்தியாயம்.

மற்ருேரிரத்தி லவன் வேகத்தோ டேறும்போதே யவர்களைக் காக்கின்ற அவ்வுக்கிரன் வாயுவேகமுடைய அவனது குதிரைகளைக் காலினு லோருதைவிட்டுக் கீழே சாய்த்தான். அதன்மே லசுர னத்தேவேசன்மீது நூறம்புகளைப் பிரயோகிக்க, அவற்றையவன், தன் தண்டத்தினுல் தட்டிவிட்டட்டகாஸம் செய்தான். பிறகசுரனும், மகா வுன்னதமான வேறிரதத்திலிருந்து கொண்டு பிரளய காலாக்கினிக் கொப்பான வொளியைக் கொண்ட மகா கோரமான ஆக்கினேயாஸ்திரத்தைப் பிரயோகித்து ஊழிக்கால மோகம்போ லதிபயங்கரமாகக் கர்ஜனம் பண்ணினுன். அப்போதவ்வஸ்திரமோவென்ருல் நூறு கிளைகளாகப் பிரிந்து நெருப்புப் பொரிகளைக் கக்கிக் கொண்டு மிகுந்த சத்தத்தோடதி பயங்கரமாகப் பத்துத் திசைகளையும் பிரகாசிப்பித்துக் கொண்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மகாவேகத்தோடு உக்கிரனருகிற் சென்றது. அதன் பிறகு பூதவீரன், ஹிருதய கமலத்தில் ஸ்ரீ குகபிரானைத் தியானித்துக் கொண் டோர்நொடிக்குளதனைப் பிடித்து அபக்கென்று விழுங்கிவிட்டான். அது விழுங்கப்பட்டவுடன் மகாபலவானுன அவ்வசுரன் மகா கோபங் கொண்டு நீர்மயமான வருணுஸ்திரத்தைப் பிரயோகிக்க அதுவும் மிகுந்த சத்தத்தோடு பயங்கரமாகி அலைகளோடு கடல் புரண்டு வந்ததுபொற் கிளம்பி வருகையில் மகா பயங்கரமான அவ்வஸ்திரத்தையு மத்தேவேசன் பக்ஷித்து விட்டான். அசுரன் திரும்பவும் கோபம் கொண்டு மகாபயங்கரமான சத்தத்தோடும் கூடிய பிரம்மாஸ்திரத்தைவிட, அவ்வஸ்திரம் திசைகளையெல்லா மொலியால் நிரப்பிக் கொண்டு நான்கு நான்கு முகங்களோடனேகம் கிளைகளாகப் பிரிந்து கிளம்பி வாய்களை 'ஹா' வென்று பிளந்துகொண்டு மகாவேகத்தோ டவனருகிற் சென்றது. அப்போதுக்கிரன் ஸ்ரீ வடிவேலனை மனதில் தியானித்துக்கொண் டப்போர்க்கொத்த மகாகோரமான வப்பிரம்மாஸ்திரத்தையும் கோபத்தோடு முன்போலவே வாய்க்கிறைபாகக் கொண்டுவிட்டனன். இவ்வாருக வெல்லாவஸ்திரங்களு மிரைகொள்ளப்பட்டவுடன் மகா வீரன் சகலங்களையும் சமுகாரம் செய்யலுற்றது. ஒலியினுல் சகல ஆசை (திக்கு) களையும் பூர்ணம் செய்யலுற்றதும், போர்முன்னர் சத்துருக்களை நிராசர் (ஆசை யொழித்தவர்) களாகச் செய்விக்கலுற்றதும், சண்டையில்

முன்னேரிடத்தும் பழுது பெருததுமான நாராயணஸ்திரத்தை முறைப்படி யத் தேவேசன்மீது பிரயோகித்தனன். அப்போ தவ்வஸ்திரமோவென்ருல் பத்து திக்குகளையும் மிகுதியாகப் பிரகாசிப்பித்துக் கொண்டும் பிரளய கால மேகம்போல் மிகுந்த சத்தம் செய்து கொண்டும் பலவுருவமடைந்து மகா வேகத்தோடு தேவேசனண்டையில் வரும்போ தவன் கோபத்தினுற் சிங்கம் போற் கர்ஜனம் பண்ணி, தேவாதிதேவனுகிய ஸ்ரீ முருகேசனை யந்தக் கரணத் தில் தியானம் பண்ணிக்கொண் டம்மகாபலவா னதனை நாவினுலே நக்கி யுட் கொண்டு விட்டனன். அப்போதவ்வசுரன் அப்பேர்க்கொத்த பராக்கிரமத் தைக் கண்டு ஆ! ஆ! இவன் யாவன்? பிரம்மாவா? விஷ்ணுவா? அல்லது பகவானுகிய ஸ்ரீ ருத்திரனு? ஓ! கோ! எந்த மகாபலவான்தா னிப்பேர்க் கொத்த திவ்வியாஸ்திரங்களுக்கு முன்னின்று சமாளிக்கலாகும்? இவனே வென்ருலவற்றை யெல்யாம் பக்ஷித்துவிட்டானே! இவனுக்கென்ன வீரியம்! என்ன தைரியம்! என்றிவ்விதமாக வாச்சரிய மடைந்து பயத்தினல் மெய் நடுக்கம் கொண்டவனுனன். பிறகு சண்டைக்காக வந்தவசுர ரெல்லோர்களும் பயத்தினல் நடுக்கம் கொண்டார்கள். ஆகாயத்திலிருந்த தேவர்களெல்லோர் களு மவனது மகாவற்புதமான வலிமையைக் கண்டு மிகுந்த வாச்சரியத்தோடு கொண்டாடித் துரிதத்தில் பிரம்மனை நோக்கி யுரைத்ததாவது, ஓ! பிரபுவே! இவனுக்கிவ்வளவு வலிமையும், வீரியமும், தைரியமும் மெவ்வாறுண்டாயிற் றென்பதை யெடுத்துரைத்தல் வேண்டுமென, பிரம்ம னிவ்விதமாகச் சந்தேகங் கொண்ட தேவர்களை, நோக்கி யுரைத்த தென்னவென்ருல்:—கேளீர்! தேவர் களே! ஸ்ரீசிவபிரானை யடுத்திருக்கின்ற வனேகர்களிலிவன் முதன்மையான சிவ நேசன். அளவற்ற மகிமைகொண்ட ஸ்ரீ பரமேசுவரனுடைய வருளை யிவன் பூர்ணமாயடைந்தவன். இப்பலவான் சகல வண்டங்களையுமோர் நொடிக்குள் நாசம் செய்ய வல்லவன். பூர்வத்தில் போர்முன்னர் விடப்பட்ட விஷ்ணுச் சக்கிரத்தை விழுங்கலரன மகா பலவானுகிய கணத்தைக் காட்டிலுமிவன் மிக மேன்மைகொண்டவன். ஆகையாலிவனுக் கவ்வசுரர்க ளெம்மாத்திரம்? மேலும் ஸ்ரீ மகாதேவன் புதல்வனுன சரவணபவனிடத்துப் பற்றுதலுள்ள மனதையுடையவர்களும் உலகமெல்லாம் பரிசுத்தம் பண்ணுவோர்களும், சகல தேவாசுரர்களாலும் பூஜிக்கப்படலுற்றவர்களுமான அவர்க்கெதுதான சாத்தியம்? என்றிவ்விதமாகப் பிரம்மனுல் மிகவாதரவோ டுரைக்கப் பட்டதின் பேரில் தேவர்கள் மரைமலர் மாலையணிந்த ஸ்ரீ குமரேசனை ஹிருதய கமலத் தினில் தியானம் பண்ணிக்கொண்டெல்லோர்களு மாநந்தக் கண்ணீர் பெருகித் ததும்பிய கண்களையுமுரோமங்கள் சிலிர்க்கப்பெற்ற வுடல்களையும் கொண் டவர்களாகி, ஓ! ஓ! இவனுக்குக் கந்தனருளா லிதிலும் அதிக வலிமையுண்டா கக்கடவதென்று வாழ்த்தி விட்டுச் சண்டையைக் காக்ஷிக்கொள்வதற்காக வாகாய மார்க்கஞ் சென்றங்கு நிலைகொண்டார்கள். பிறகசுரனேவென்ருல், ஓ! கோ! இவனை யெந்த உபாயத்தினல் சடிதியில் வெல்லலாகும்? போர் முன்னர் மகா பயங்கரனுகிய பெருமை பொருந்திய பலவானுன அத்தேவாக்ஷ கனை யெந்த மகாஸ்திரம்தான் வென்று விரட்டலாகுமென் ருலோசித்ததில் உடனே மகிமைகொண்ட பாசுபதாஸ்திரத்தை நினைவிற்கொண் டவ்வசுர

வீரன் அச்சிவாஸ்திரத்தை மனதினுற் பூஜை செய்து மிகக் கொடூரமுள்ளதும் மகா சமுகாரஞ் செய்யவுற்றதுமான அவ்வஸ்திரத்தைப் பிரயோகம் செய்ய, அது வெளிக்கிளம்பி எல்லாவுலகங்களையும் சமுகாரம் செய்ய முயன்ற ஸ்ரீ காலாக்கினி ருத்திரனட்டகாசம் செய்வதுபோல பிரம்மாண்டம் முழுதும் பேரொளியால் நிரம்பலாகி பல பல விஷங்கள், சர்ப்பங்கள், அக்கினி, இயமதூத கணங்கள், இவைகளையும் இன்னும் ஜுவலிக்கவுற்ற மகா கொடூரமுடைய பற்பலவாயுதங்களையும், கக்கிக்கொண்டு சகல வுலகங்களையும், பூதத் தலைவர்களையும் நடுநடுங்கச் செய்து கொண்டும் மகா விரைவாகத் துரிதத்திற் பூதசைனியங்களைத் துரத்தலாயிற்று. அதுகண்டுக்கிரனும் பெரும் பீதிகொண்டவனுகித் தண்டத்தை யெரிந்துவிட்டுத் தனது சிரமீதஞ்சலி கொண்டு ஸ்ரீ சிவபிரானை ஹிருதய கமலத்தில் தியானித்துடனே ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை மனதினிலுச்சரித்துக் கண்ணை யிறுக மூடிக்கொண்டு ஓ! ஹரஹர; சிவ சம்போ, மகாதேவா, சிவா, சங்கரா வெந்தனைக் காத்தருளவேண்டும் என்று ஜபித்துக்கொண்டே, அம்மகா பலவானுனவனப்போதுடல் முழுதும் வடவடவென்று நடுக்கம் கொண்டவனுகி நின்றனன். கேளீர் சௌனகாதி முனிவர்களே! உடனே மகா கோரமான அவ்வஸ்திரமோவென்ருல் ஸ்ரீ சிவாக்கினையின்படி யவனையணுகாமலப்போதச் சிவபிரானண்டைக்கே யேகிவிட்டது.'' என, அப்போ தம்முனிவர்கள் சூதமுனிவரை நோக்கிக் கேட்டதோவென்ருல்:—பகவானுகிய சூதமுனிவரே! ஓரிடத்தும் பழுது பெருத வெல்லாத் தெய்வங்களுடைய அஸ்திரங்களுக்கும் ராஜாதிராஜனுன மகாகோரமாகிய வப்பாசுபதாஸ்திரமானது அசைக்க முடியாத இவ்வுக்கிரவீரனையணுகாமலே யெவ்வாருக, ஓ, யாவுமறிந்த முனிவரே! ஆக்கினையின்படி ஸ்ரீ சர்வேசுவரனண்டைக் கேகிவிட்டதென்பதை யெடுத்துரைத்தல் வேண்டுமென, எல்லாப் பொருட்களின் சாராமிசங்களையும், நன்கறிந்தவரான சூதமுனிவரவ்வாறு கேட்கலான முனிவர்களை நோக்கி யுரைக்கின்ருர்:—கேளீர்! முனிவர்களே! மகிமை பொருந்திய பாசுபதாஸ்திரமானது முந்தி ஸ்ரீ மகாதேவனுலிவ்வசுரனுக் கருளப்படும்போதே யப்பகவானவனுக்குத் திருவாக்கருளியதோ வென்ருல் ''கேளாய்! அசுரா! நீ யெப்போது ஆயுதம் வைத்திராதவன்மீ திவ்வஸ்திரத்தை விடுகின்ருயோ அதப்போதுடனே நம்மிடம் வந்துவிடலாகும்'' என்றருளப்பட்டிருப்பதால் இப்போது ஸ்ரீ மகேசுவரனிடம் சென்று விடலாயிற்று. பிறகு மகாசூரனென்ற வதிசூரன் முதலிய வசுரர்களெல்லாம் அப்பாசுபதாஸ்திரமும் வீணுகிவிட்டதைக் கண்டெல்லோர்களும் கஷ்டம் கஷ்டமென்று மனமொடிந்து, பயத்தினுலுடல் நடுக்கம், கொண்டவர்களாகி மிகவும் கதி கலங்கலானுர்கள். அப்போதுடனே, பூதர்களெல்லாம் கோலாஹலங் கொள்ளவும், தேவர்களுயர மலர்மாரி பொழியவுமா யிருக்கையில் அதிசூரன் தேரை விட்டிறங்கிக் கைமீது தண்டாயுதமெடுத்து புறப்படலாயினன்.

## 9-வது அத்தியாயம்.

பிறகு அதிசூரன் கோபத்தினுல் பற்றியெறிகின்றவன் போலாகி விரைவோடு கரத்தினுல், தண்டத்தைக் கரகரவென்று, சுற்றிக்கொண்டே இங்கு

மங்கு மெழும்பிக் குதித் தோடிவந்து தனதாயுதங்களெல்லாம் தவிடு பொடியாக வீணுகி விட்டதை நினைத்து உருகியவனுகி யவ்வசுர ராஜன் பூதர்களின் தலைவனுன வுக்கிரனைப்பெரும் சத்தத்தோடதட்டிப் பயமுறுத்திக்கொண்டே துரித மாயவனருகில் வந்தவனது மார்பின் மீதடித்தனன். அதன் மேலவனும் வெகு கோபங்கொண்டவ்வசுரன் தண்டத்தையே பிடுங்கிக்கொண்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே:—விரைவோடவனை யடித்துப் பிணம் புரட்டி விட்டனன். அப்போதவன், மாண்டு விட்டதைப் பூதசைனியங்கள் கண்டு கடலிரைவது போலெல்லோர்களும் மகா பயங்கரமாகப் பெரும் கூச்சலிட்டார்கள். அதன் பிறகு தாரகன்மைந்தனுன வசுரேந்திரனென்பவன் புறப்பட்டுக் கார்மேகம் நீர் சொரிவது போல் மிகுந்த சத்தத்தோடம்புகளை யோர் நொடிக்குள் மாரிமாரியாகப் பொழிந்து கொண்டே கிளம்பினுன். மகா வேகத்தோடு வரலுற்ற அவ்வசுரனைக் கண்டு பூதர்களோட்டம் பிடித்தார்கள். உடனே பெருமை கொண்ட கனகனென்றவ னவ்வசுரேந்திரனுடைய வலிமையை யறியாமல் மிகுந்த சத்தம் செய்து கொண்டவனுக்கெதிர் முகமாகப் புறப்பட்டனன். அப்போதசுரனுனவன் மெய்தனிலோரம்பையெய்தனன். கனக னதனையோர் கையினுல் தட்டி விட்டவன திரதத்தின் மீதேறி அவன் ஸாரதியை யடித்து மடித்து அவனுடைய வில்லின் நாணையும் பற்களால் கடித்து சினங்கொண்டு துண்டு துண்டாக்கி விட்டனன். பிறகப்போது கனகன் திரும்பிச்சென்று துரிதமாகவோர் மலையை கை மீதெடுத்துக் கூர்மையுள்ள எட்டு பாணங்களா லம்மலையைத் தூளாக்கி விட்டுத் திரும்பியும் மகா வலிமை யோடாயிரமம்புகளை விட்டவ்வசுர வீரன் கனகனை மண்மீது சாய்த்து விட்டான். அப்போதவன் சாய்ந்தவுடன் அசுரன் மற்ருேர் பாகனை வைத்துக்கொண்டு பூதசேனைகளை நான்கு பக்கங்களிலும் விறட்டிக் கொண்டே சீக்கிரமாய் வருகையில் தேவரக்ஷகனுன மலைக்கு நிகராகிய உன்மத்தனென்பவன் கையினுலோர் பெரிய மலையைப் பிடுங்கிக்கொண்டு அதிகோரமாக வருகின்ற அவ்வசுரனை மிகுந்த கர்ஜனைகளால் அதட்டி சிங்கத்தை யானை யெதிர்த்தது போலவனேடெதிர்த்து மகா வலிமையோடவனது தேர்க் குதிரைகளைக் கொன்ருன். பிறகசுரன் மிகுந்த கோபாக்கினியோடவனைப் பார்த்தவன் மீதனேக பாணங்களை விட்டுத் துளைத்து இரத்தம் தாரை தாரையாய்ப் பெருகச் செய்தோர் நொடிக்குள் ளத்தேவவீரனை மூர்ச்சையடைவித்தான். அப்போது மதம் தலை மேற்கொண்ட அவ்வசுரனை நோக்கி மத்தனென்றவன் சீக்கிரமாகப் புறப்பட்டுக் கண்களில் நெருப்புப் பொரிகள் பறக்கலுற்றவனுகி யோர்பெரிய மலையை யெடுத்துக்கொண்டோடி வருகையிலவனைப் பார்த்து அசுரன் கோபத்தினுற் . கண்கள் கலங்கப்பெற்றவனுகி யவன்மீது மகா வோசைகொண்ட பத்துப் பாணங்களைப் பிரயோகிக்க, தேவவீரனவைகளா லடிபட்டு ரத்தம் தாரை தாரையாய்ப் பெருகியோடியதால் மகா பயங்கரனுகித் தான் வைத்திருந்த வுன்னதமான மலையை மிகுந்த கோபத்தோடவன் மீதெறிந்தான். அவ்வாறு வருகின்ற மலையை யசுரன் தானுகவே, மார்பினிலேற்ற, அம்மலையானது மிகுந்த கெட்டியும் விஸ்தாரமுமுள்ள அவன் மார்பினிடையில் விழுந்தவுடன் தூள் தூளாகச் சிதறிச்

சோகத்தினல் படேரென்று கீழே விழுவது போல் பூமியில் விழுந்து விட்டது. மலை வந்து விழவே யசுரன் கோபாக்கினியானது ஜ்வாலை கொண்டெரியப் பெற்றவனுகி யதிதீக்ஷண்யமான வாயிரம் பாணங்களை யத்தேவரக்ஷகன் மீதெய்தவுடன் அவ்வீரனும் அவனது கரங்களாலுடலறுபட்டு மூர்ச்சை யடைந்தான். அதன் மேல் சிம்மனென்பவன் மிகுந்த கர்ஜனை செய்து கொண் டதிவேகத்தோடு கிளம்பி யசுரனுக்கு நேராக வோர் பெரிய மலையை யெறிந்தான். பிறகசுரனதனைக் கூர்மையுள்ள வோரம்பினுற் பொடிப் பொடியாக்கி விட்டான். மேலுமவ்வசுரவீரன் மறுபடியவனல் விடப்பட்ட மகா பயங்கரமான தண்டாயுதத்தையு மதிகூர்மையுள்ள பல பாணங்களாற் சேதித்தவனையும் மூர்ச்சை கொள்ளச் செய்தான். அதன் பிற கவ்வசுரேந்திரன் மற்றெல்லாப் பூதசேனுதிபர்களையு மிடையன் காட்டினில் மாட்டு மந்தையை விரட்டுவது போல் துரத்துகையில் இரத்தின காளிகளுடைய வியர்வைத் திவிலைகளினின்றுண்டான இலக்ஷம் வீரர்களிலொருவனுன தண்டகனென்பவன் சடிதியில் வெளிக்கிளம்பிச் சினங்கொண்டு சிங்கநாதஞ் செய்வதனல் மகா பயங்கரனுகி யவ்வசுரவீரன்மீ தாயிரம் சரங்களைப் பிரயோகித்தனன். அப்போதசுரன் கடுஞ்சினங் கொண்டவனுகி யவனது நெற்றிதனிற் கூர்மையுள்ள பல வம்புகளை யெய்து கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! யவனையும் மூர்ச்சை யடைவித்தனன். பின்புடனே ஸோமகனென்பவன் தேவர் சேனைகளுக்குத் தலைவனுகத் துரிதமாய் வரவே யவன் மீது மசுரராஜன் பல வம்புகளைத் தொடுத்தான். அப்போ தவ்வீரன் கர்வத்தோடு சிங்கநாதம் செய்வதால் திசை முகங்களை நிரப்பிக்கொண்டு தீக்ஷண்யமுள்ள வாயிரம் பாணங்களை விட்டவனது சாரதியையு மிரதத்தையும் சடிதியிற் சேதல் செதுலாக்கிப் பூமியில் வீழ்த்தி விட்டான். உடனே யசுரன் மகா வுன்னதமான வேறி ரதத்திலுட்கார்ந்து நிகரற்றவோர் வேலை யதிகோபத்தோடத்தேவன் மீது பிரயோகிக்க அது விழுந்ததாலவனுமுடனே மூர்ச்சை கொண்டு விட்டான். பின்பு மகா பராக்கிரம சாலியான வசுரேந்திரனைச் சயிப்பதற்காக விஜயனென்பவன் துரிதமாய் வந்தாயிரம் சரங்களால் மகா பலவானுகிய வத்தேவப்படைத் தலைவனது சாரதியையும் கெட்டியான வில்லையும் பூமியில் வீழ்த்தினன். பிறகசுரேசுவரன் கோபாக்கினியால் கண்களில் நெருப்புப் பறக்கலாகியோர் தண்டத்தைக் கரகரவென்று சுற்றியத் தேவவீரன் மீதெறிந்ததினலப்போததனைக் கண்டிப்பதற்காக வதன் மீதவனேக பாணங்களை விட்டு மவைகளையது கொஞ்சமேனும் சட்டை செய்யாமல் வந்தவன்மீது விழுந்தவனைக் சாய்த்து விட்டது. அம் மகாவீரன் சாய்ந்தவுடனெல்லா வீரர்களும் வந்து கலகலவென்ற சத்தத்தினல் திசை முகங்களைச் செவிடாக்கலுற்றவர்களாகி கோபாவேசம் கொண்டு பற்பல வித அஸ்திரங்களை வருஷித்தார்கள். பிறகு அசுரனுமவர்களை யானைகளைச் சிங்கம் விரட்டுவது போல் பாணங்களால் விரட்டும்போது மகா பலசாலியான வீரபாகு அவனது நிகரற்ற பராக்கிரமத்தைக் கண்டு விரைவோடு வில்லை வளைத்து நாணேறிட்டவன் முன்னில் வந்து அவன் மீதனேக மம்புகளை யெய்தவனது மெய்தனில் நிரப்பினர். அசுரனும் கடுஞ்சினம் கொண்டாயிரம்

தீக்ஷணமான பாணகளாலவ்வீரனை நிரப்பி யிரத்தம் வடியச் செய்து பின்னரு மேழு பாணங்களாலவரது சிறந்த வில்லைக் கண்டனம் செய்தனன், பின்பு வீரபாகுவோ வென்றால் மிகுந்த கெட்டியான வேறு வில்லைக் கைக்கொண்டு கோபத்தினால் பிரளய காலமேகம் போல் கர்ஜனை செய்து ஆயிரம் பாணங் களாலவனது சாரதி, வில் குதிரை, இவைகளைக் கண்டித்தனர். பிறகசுரன் பர பரப்பேடு மற்றோர் தேர் மீதுட்கார்ந்து கோரமான வில்லைக்கொண்டு சிங்கநாதஞ் செய்தவனாகி நூறு பானங்களா லத்தேவேசனது ஸுந்தர இர தத்தை யுடைத்துவிட்டான். உடனே வீரபாகு மிகக் கோபமூண்டவராகி யாகாயத்திற் கிளம்பி நிலைகொண்டு ஸ்ரீ குகபிரானைத் தியானம் பண்ணிப் பிறகம் மகா வீரன் மிகுந்த கோலாகல சத்தங்களா லசுரசேனையை நடுநடுங்கச் செய்து பளபளவென்று மின்னுகின்ற கத்தியைக் கைமீதெடுத்துச் சடிதியில வனது ரதத்திற் குதித்தோர் கையைத் துண்டித்தனர். பிறக சுரன் மற்றோர் கையினால் கெட்டியான தண்டாயுதத்ததை யெடுத்து விரைவுடன் வீரபா குவை மார்பினிலடிக்க அபபோதத் தேவேசன் காலினாலவன் தலைமீ தோங்கி யோறுதை விட்டு மிகுந்த கர்ஜனையுடன் துரிதத்திலாகாயம் சென் றனர். அப்போதசுரனும் கைகத்தியை யெடுத்துக்கொண்டு பின் தொடர்ந் தோடினான். பிறகு வீரபாகுவும் திரும்பி, தொடர்ந்து வரலுற்ற, மகா கொடியோனான அவ்வசுரேந்திரனை யோர் நொடிக்குட் சிரச்சேதம் பண்ணி இயமன் வீட்டிற்கு விருந்தினனாக வனுப்பினர்.

அப்போது தேவர்க ளவ்வசுரேந்திரன் மாண்டதைக் கண்டு மிகுந்த கோலாகலம் செய்தார்கள். முறியடிக்கப்பட்ட வசுரரெல்லோர்களும் பெரும் பீதிகொண் டோட்டம் பிடித்தார்கள். பிறகு மகா பெருமை பொருந் திய சூரர்களுக் கெல்லாம் சிரேஷ்டனான சூரபத்துமன் தன் தம்பிகளது அருமை மைந்தர்களான வதிசூரனும் அசுரேந்திரனும் மாண்டுவிட்டதையும், அசுரர்களெல்லாம் பத்துத்திக்குகளிலும் சிதறுண் டோடலானதையும் கண்டு புறப்பட்டு இரதத்தைச் சீக்கிரமா யோட்டச்சொல்லி யோர் கெட்டியான வில்லை யெடுத்ததன் நுனியில் நாணைப் பூட்டி முட்டியாலதன் மத்தியைப் பிடித்துக்கொண்டு மற்றோர்கையினா லஞ்ஞாணை மீட்ட, அது 'அடா! அசு ராதமா! யானெனது நிலைமையில் தவறாதிருக்கையில் நீ யாது நிமித்த மென் னை யடிக்கின்றாய்? இப்போதுடனே யுந்தனுக் கிவ்வித அடிபடல் நேரிடக் கடவது, ஆம் இது சத்தியம்' என்றவ் வசுரராஜனுக் குரைத்ததுபோ லப் போது சத்தமிட்டது. இஞ்ஞாணோசையைச் செவிகொண்டு ஸகல வுலகங்க ளும் நடுநடுங்கின. பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலிய, தேவரெல்லோர் களு மப்போது பொறி கலங்கலுற்றார்கள். மேலு மதைக் கேட்கலான பூதர் களெல்லா மவர்களை யிரக்ஷித்தருளுகின்ற ஸ்ரீ முருகேசனிடம் சரணம் பெற வோட்டம் பிடித்தார்கள். இவ்விதமாக விச் சத்தமானது ஜனங்களால் பனி ரண்டு வருஷகாலம் வரையில் கேட்கப்படலாயிற்று. இப்படி இருக்கையில் மகா பராக்கிரமங்களுடைய சேனாதிபர்களெல்லா மப்போது மரங்களாலும் மலைகளாலு மஸ்திரங்களாலு மின்னும் மற்ற பற்பல வாயுதங்களாலும்,

மகா வேகத்தோடு சூரபத்துமன் மீதெறிந்தெறிந்து யுத்தம் செய்கையில் அவ் வசுரேச னவைகளை யெல்லாம் தீக்ஷணமுள்ள பத்தம்புகளால் தூள்தூளாக்கி விட் டின்னமும் நூறு, ஆயிரம் கோடிகளாகப் பல சரங்களை மேலுக்குமேல் வருஷித் தவர்களதுடல்களைத் துளைத்தான். சிலரப்பாணங்களா லடிபட்டு மிகவும் துயரமடைந் திருந்துவிட்டார்கள். சிலர் மனந் தடுமாறிப் பூமியில் விழுந்து புறண்டார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மற்றச் சேனை திபர்கள் பெருமூச்சுவிட் டோட்டமெடுத்தார்கள். இவ்வாறாகப் பலவிதத்தி லவ்வெல்லோர்களு மவமானம் கொண்டார்கள். அதன்மேல் வியர்வைத் திவி லைகளா லுண்டான விலக்ஷம் வீரர்களும் போர்க் களத்துக்கு வந்து மிக வலி மையோ டசுரேசன் மீது கூர்மையான சரங்களைச் சொரிந்தார்கள். பிறகம் மகா சூரனு மவர்களது தேர்களுக் கெதிரிலிருந் தாயிரங்கோடி பாணங்க ளாலவர்கள் விட்ட பாணங்களையும் கண்டித் தவர்களது வில்லிரதங் களையும் தூள்தூளாக்கிப் பின்னு மதிகக் கோபம் கொண்டவனாகி யவர்களது மார்புக களைக் குறிப்பிட் டிலக்ஷம் சங்கியை கொண்ட கூரம்புகளை வருஷித்தனன். அதனாலவர்க ளெல்லோர்களும் மார்பு பிளக்கலுற் றுடனே மூர்ச்சைகொண் டார்கள். பின்பு நவவீரர்களி லொருவனான விலக்ஷ்மிவிலாஸம் பொருந்திய வீரமார்த்தாண்டன் கிளம்பலாகி யவ் வசுரேசன்மீ தேராளமான வம்புகளைத் தொடுத்தான். அசுரனும் சிங்கநாதம் செய்தவற்றை யெல்லா மனேக பாணங்களாற் கண்டித்துப் பின்னரு மவனது நெற்றியைப் பற்றி யாயிர மம்பு களைத் தொடுக்க அத்தேவச னவ்வம்புகளை யாயிர மம்புகளாலே துரிதமாகத் துண்டித்தனன். பிற்பாடு சூரபத்தும னாயிரம் பாணங்களா லவனதம்புகள், வில் அம்பறாத்தூணி யிவைகளைத் துரிதமாகக் கண்டித்துவிடச் செய்து மறு படி யாயிர மம்புகளைத் தொடுத் தவனையும் கீழ் வீழ்த்தினன். அதன்மேல் மகா வீரனான வீராக்ஷஸனென்பவன் தோன்றி யம்மகாசுரன்மீ தாயிரம் சஸ் திரங்களைப் பிரயோகிக்க, உடனே யச்சூரனு மாயிர மம்புகளா லவைகளைத் துண்டித் தவனது வில்லையும் முறித்துவிட்டான். பின் பம்மகாவீரன் மிக்க கோபம் கொண்டவனாகி யவ்வசுரன் தேர்தனிற் குதித்துத் தனது கத்தியால் அவனது வில்லை வெட்டியதி லக்கத்தியே முறியலாக பிறகவ னச்சூரனை முட்டியாற் குத்த வெத்தனிக்கைபி லவனாயுத மற்றிருப்பது கண்டு சூரன் வெகு கோபத்தோ டவனது காலை வளைத்துப் பிடித் தண்டகோடி முட்ட வுயர வெறிந்தனன். அப்போதத் தேவேச னண்டச்சுவரி லடிபட்டு பூமியில் விழுந்து மெய்நொறுங்கி மூர்ச்சை கொள்ளலாயினன். உடனே வீரமகேந்தி ரன் கிளம்பிப் பெருங் கூச்சலோ டசுரன் மீதனேக பாணங்களைப் பிரயோ கிக்க அசுரராஜ னவைகளை யனேக மம்புகளாற் கண்டித்தனன். அப்போ திருவரு மொருவரோடொருவர் தேரை யிடசாரி வலசாரியாகச் சுற்றி விட்டுக்கொண் டம்புகளா லுயுத்தம் செய்கையிற் சூர னுக்கிரகம்கொண்டவ னாகி யவனது கால்களில் முப்பது சஸ்திரங்களையும், மார்பின் மத்தியில் நாற் பதும், இரண்டு புயங்கள் மீதும் முப்ப தஸ்திரங்களையும் சடிதியில் தொடுக்க, அவனும் மூர்ச்சைகொண்டு மோதி விழுந்தான். அதன்மேல் வீரதீரனோர் நொடிக்குட் புறப்பட் டனேக சரங்களைச் சொரிந்துகொண்டே வந்ததி லசுர

மன்ன னுயிரமம்புகளா லச்சரங்களோ டவனது வில்லையும் துண்டித்து அவன் தேரையு மேழு சஸ்திரங்களா லுடைத்துப் பூமியில் தள்ளினன். பிறகத்தேவனவனை யடிப்பதற்காகத் தண்டத்தை யெடுத்துவருகையி லப்போதசுர னத்தண்டத்தையும் நான்கஸ்திரங்களா லிருதுண்டாக்கி விட்டு மறுபடி கோபங்கொண்டு பதினன்கு ஸஸ்திரங்களை யவன் புயங்க ளிலு மவைகளது மத்தியிலும் பிரயோகித்து இந்திரன் மலையை சாய்த் தது போல் அவனைப் பூமியிற் சாய்த்தனன். அதன்மேல் வீரமகேசுவர னென்றவன் தோன்றி இவனை வில்லினல் வெல்ல முடியாதென்று கருதி, வேலாயுதத்தைப் பிரயோகித்தனன். அப்போதுடனே சூர னவ்வேல்மீ தாயிரமம்புகளைச் சொரிந்து மவற்றையெல்லாம் சேதம் பண்ணினன் பிறகவ்வீரன் தண்டத்தை யெடுப்பதற்கு முந்தியே, யேழம்புகளா லசுர னவனைச் சாய்த்துவிட்டான். பிற்பாடு கணதிபனன வீரகேசரி யென்பலன் வரலாகி மகா கோபத்தோ டவ்வசுரன்மீதனேக பாணக்களை யதிசிக்கிரத்தில் வருஷித்தான். பிறகசுரன் ஏழம்புகளால் அவனது வில்லையும், நூறம்புகளா லவன் தேரையும் சேதித்து அத்தேவேசன் நெற்றி மீதாயிரம் பாணங்களைப் பிரயோகித்தான். பிறகு வீரன் கடுஞ்சினங் கொண்டவனகி யோர் மலை யைப் பிடுங்கி சூரன் மீதெறிய, அசுரனுடனே யதனை யோரம்பினல் தூளாக் கிப் பூமியிலுதித்தனன். பின்பு வீரன் மிகக் கோபமுண் டசுரன் தேரிற் பாய்ந்து அசுரனது கெட்டியான மார்பின்மீது கையினலோங்கி யறைந்த மாத் திரத்தி லக்கை யொடிந்து சிதறலாகி யக்கணதிப னசுரன் முன்னிலையிலத் தேர் மீதே விழுந்தனன். சூரனுடனே யவ்வீரனைத் துரிதத்தில் வாரி வேகத் தோடு பாற்கடல் மீதெறிந்தனன். அவனங்கு மூர்ச்சை தெளிந்தபிறகு அவ்விடம்விட்டுச் சேனையோடு சேர்ந்தான். பிறகோர் க்ஷணத்துக்கெல்லாம் வீரபுரந்தர னிங்குவந்து மகா பலவானன வவ்வசுரன் மீது கன்னங் கரேலென்று மகாகோரமான காலாஸ்திரத்தைப் பிரயோகிக்க அதவ் வசுரன் மார்பினிலடையிற்பட்டுச்சுக்கு நீறுயிற்று. அது கண்டு தேவ ரக்ஷகன் பிரம்மாஸ்திரத்தை யெடுக்கையில் தானே யசுரன் அவன் மார்பு மீது நூறஸ்திரங்களை விட்டப்போதேயவனை மண் மீது மல்லாத்தினன். பிறகு வயது முறைப்படிக்கவன் மூத்தோனன மகா வீரனகிய வீராந்தக னென்பவன் மிகுந்த சிங்கநாதமிட்டுக் கொண்டு வீரர்களைக் கண்டிக்கும் தல மாகிய போர்க்களத்துக்கு வந்து இவ்வசுரனல் நமது சைனியங்களுக்குக் கூட விவ்வாறவமான மெவ்வாறு தகுமென்று, சொல்லி வெகு கோபத்தோடு துரிதமாய்'மிகுந்த கொடிய அஸ்திரங்களை யசுரமன்னன்மீது வருஷித்து அசு ரப்படைகளைப் பயமுறுத்தி அடிக்கடி சிங்கம்போன்று கர்ஜனம் செய்தான். அப்போதசுரனுமவ் வஸ்திரங்களைக் கண்டித்துவிட்டு மேலும் தேவன் மீதா யிரம் சஸ்திரங்களைப் பிரயோகிக்க, அவனும் மேகம்போல் கர்ஜனம் செய்த வைகளை யாயிரம் ஸஸ்திரங்களாலே சேதித்துவிட்டான், அப்போது அசுரன் வெகு கோபமுண்டு வஜ்ஜிர மயங்களானவாயிரம் கூரம்புகளாலவனது, வில், தேர், சஸ்திரங்கள் இவைகளைக் கண்டனம் பண்ணி யுடனேயவன் மார்பை யும் பிளந்து நொடிக்குள் அவனை மூர்ச்சையடைவித்தான். அவ்வாறவன்

மோகித்துவிட்டது கண்டு வீரபாகு தோன்றலானதில் உயுத்தமதிற் பின் வாங்காமல் நிற்கலுற்ற சூரபத்துமன் அம்மகா பலவானை நோக்கி யுரைத்ததாவது:—அடா! நீ முந்தித் தூதவுருவத்துடன் வந்தனேக மசுரர்களையும் நமது மைந்தனையும் கொன்றுவிட்டு மாயவடிவமெடுத் தோடிவிட்டாயல்லவா ஆகையால் நமதாக்கினைபின்படி யிப்போதவ் வில்லை யெறிந்துவிட்டுத் தூதனாகிவிடு; இல்லாவிடி லிப்போதே யோர் நொடிக்குள்ளுந்தனைப் பிளந்து சத்தியமாகக் கொன்றுவிடுவோமென வீரனும் போர்க்களமதி லவ்வாறுரைத்த சூரனை நோக்கி வசனமளித்ததாவது. அடா! அசுரா! யாம் ஸ்ரீ முருகேசன் திருவாக்கினையின்படி முந்தித் தூதராக வந்தோம்; இப்போது படை வீரராகவும் வரலுற்றோம். அதனாலுனக் காவதென்னடா? நீ வீணாகப் பிதற்றுவதைவிட்டு நம்மோடு யுத்தம் செய்யடா வென்றிவ்வாறாக மகா வீரனை வீரபாகு வுரைக்கையிலசுரனுக்கிரகம் கொண்டு சிங்கநாதமிட்டாயிரம் கோடி சஸ்திரங்களை யவர் மீது வருஷித்தான். வீரனுமவ்வளவே விட்டவைகளை யோர் நொடிக்குள் நிஷ்பலமாக்கினர். மறுபடியவனால் விடப்பட்ட விலக்ஷம் சஸ்திரங்களையும் தேவன் கோடி சஸ்திரங்களால் கண்டித்துவிட்டுப் பின்னும் அவன் மீது நூறம்புகளைத் தொடுக்க அவையவன் மீது பட்டுக் கற்பாறை மீது குத்திய ஊசிபோல் தெறிபடலாயின. அது கண்டவர் ஓ! கோ! இவன் ஸ்ரீ வடிவேலனது திருவேலினாலின்றி யிங்கு நம்மால் கொல்லப்படலாகான்; ஆகிலுமிவனைப் பல சரங்களா லடித்து நிச்சயத்தில் நோகச் செய்வோம் என்று மனதினில் தீர்மானித்தவர் பல சரங்களை வருஷித்தனர். அப்போதசுரனச் சரங்களைச் சேதித்து விட்டுப் பிறகெட்டு பாணங்களை வெகு கோபத்தோடக்கணுதிபரது மார்பினிலும் புயங்களிலுமெய்து, பின்னுமவன் கோடி சரங்களால் ஓர் நொடியினிலவர் ஸாரதியைக்கொன்று மறுபடியுமைம்பது சரங்களால் துரிதத்திலவனது இரதத்தையு முடைத்தெறிந்தனர்.

## 11-வது அத்தியாயம்.

பிற்பாடு வீரபாகு வேறிரதமேறிக் கொண்டு வாயவியம்! ஆக்கினேயம் இவ்விரண்டஸ்திரங்களையும் சேர்த்துப் பிரயோகித்தனர். மிகுந்த பலவானான சூரனதைக் கண்டு இவன் திறமையாலாகியதை யெல்லாம் பார்போமென்று பதிலஸ்திரம் பிரயோகிக்காமல் சும்மா விருந்துவிட்டான். அவ்விரண்டஸ்திரங்களும் கற்பாறையுனுமதிகக் கெட்டியான அவன் மார்பின் நடுவில் வேகமாய் விழுந்து உடனே தூள் தூளாகிப் பூமியில் சிதறிவிட்டது. பின்பு வீரன் சினங்கொண்டு இயமாஸ்திரம் சூரியாதிஸ்ரம் இவ்விரண்டையும் சேர்த்தவன் மீது விட்டவுட னவைகளுமவன் மீதுபட்டு முனை முறிந்து விழுந்துவிட்டது. அதன்மேல் வீரபாகு பற்றி யெறிகின்றவர்போல் கோபம் கொண்டவராகிச் சீக்கிரத்திலிரண்டு சஸ்திரங்களை, வாருணாஸ்திரம் ஐந்திராஸ்திரங்களுக்குரிய மந்திரங்களால் ஜபித்துத் தொடுத்துப் பிரயோகிக்கையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே:—அவைகளுமவ்வாறே யங்கு பூமியில் விழுந்துவிட்டன. அதன்மேல் தேவன் மிகுந்த கோபத்தோடு நாராயணாஸ்திரத்துடன் பிரமாஸ்திரத்

தையும் சேர்த்துச் சந்தானிக்கையில் மகா பயங்கரமுள்ளவையும், சகலங்களை யும் சமுகாரம், செய்யனுற்றவையுமான அவ்விரண்டும் நெருப்புப் பொரிகளை கக்கிக்கொண்டவனது நெஞ்சினில் விழுந்து மோதியெதிர்த்து விழலாயிற்று. அப்போதெல்லோர்களு மவனதிப்பேர்க்கொத்த பல பராக்கிரமங்களைக் கொண்டு மிகுந்த வாச்சரியம் கொண்டார்கள். அச்சமயத்தில் சூரபத்மன் வீரபாகுவை நோக்கி உறத்த சத்தத்தோ டுரைத்ததாவென்றால்:—அடா வீரா உனது திவ்வியாஸ்திரங்களெல்லாங்கூட உபயோகிக்காமலிருந்த நம் மீது பட்டு வீணாயினவல்லவோ! நாமுந்தனை முந்தியே கொன்றிருப்போம்; உந்தன் வீரிய பராக்கிரமங்களையு முந்தனஸ்திரங்களது வைபவங்களையும் பார்ப்போமென்றே யிருக்கலாயினம். நானுந்தனைச் சந்தேகமின்றி இப்போதோர் நொடிக்குள் கொன்றுவிடுகின்றோம், என்றவன் சொன்ன மாத்திரத்திலப் போது வீரபாகு கோபத்தினல் ஜுவலிக்கலுற்றவராகி மகா கோரமான பாசுபதாஸ்திரத்தை யசுரமன்னன் மீது பிரயோகித்தனர். அப்போதவ்வஸ் திரமானது ஸர்ப்பம் முதலியவைகளைக் கக்கிக்கொண்டு வெளிப்பட்டு வேக மாய் வருவதைக் கண்டு சூரபத்துமனு மப்போததே யஸ்திரத்தைப் பிர யோகித்தனன். சௌனகாதி முனிவர்களே! அப்போ தவ்விரண்டு மொன்றோடொன்று மகா பயங்கரமாகப் பெரும் சத்தத்தோடு சண்டைப் போட்டுக் கொண்டு பிறகு திரும்பி யெய்தவரிடமே யோர் நொடிக்குள் சென்றுவிட்டன. பிறகு சூரன் அடா! வீரா! உனது வலிமை யெல்லா மிவ் வளவு தானே! இப்போது நமது பராக்கிரமத்தைக் காட்டுகின்றோம் பாரடா வென்று பல சரங்களை வருஷிக்க, வீரபாகு மகா வாக்கிரத்தோடனேக சஸ் திரங்களை யவ்வசுரன் மீதெய்தனர். அப்போதசுரனும் கடுஞ்சினங் கொண்டு பதினைந்து சஸ்திரங்களாலவரது வில்லைத் துண்டித்தனன். உடனே யத்தே வகணதிபர் நிகரற்ற வோர் வேலை யசுரன் மீது பிரயோகிக்க, அது அவன் கனமான மார்பினில் விழுந்து பொடிப் பொடியாகிவிட்டது. பிறகசுரனும் தே வன் மீது தண்டாயுதத்தைப் பிரயோகிக்கையிலப்போதே தேவனுமவன் மீது தம் தண்டாயுதத்தை யெறிய, அது அசுரனுடைய தண்டமதனைத் தூள் தூளாக்கிவிட்டு மிக வேகத்தோடவரது மார்பின் மத்தியில் விழுந்தவரை மூர்ச் சாக்கிராந்தராக்கிவிட்டது. அது கண்டு சாரதியான விலாசனென்றவன் அவ ருக்கு மூர்ச்சை தெளிவிப்பதற்காக ஜுவலிக்கலுற்ற தேரை யொதுக்கியப் புறமோட்டிப் போயினன். இப்படியிருக்கையில் சூரனும் பீதிகொண்ட பூதர் கள்மீ தனேக பாணங்களை வருஷிக்கலாகையி லப்பூதர்களெல்லா மப்போது பத்து திக்குகளிலும் சிதறுண்டோடத் தலைப்பட்டார்கள். அதன்மே லொப் பற்ற பராக்கிரம முடைய ஸ்ரீ பகவானன குமரேசன் பூதர்க ளோடுவதையும் அவர்களது தலைவர்களெல்லாம் மூர்ச்சைகொண்டு கிடப்பதையுமறிந்தவுடனே கோடி சூரியப் பிரகாசம் கொண்ட சிரேஷ்டமான தமதிரதத்தை யோட்டச் செல்லிப் பிரயாணப்பட்டு வந்தனர். அப்போதவரை நோக்கிச் சூரன் வசனமு ரைத்ததாவது:—கேளாய்! சிறுவனே! மகா பராக்கிரமசாலிகளான உனது படைத்தலைவ ரெல்லோர்களும், சகல வசுரர்களையும் சமுகாரம் செய்ய லுற்ற சகல ஈசுவரர்களுக்கு மீசுவரரான கந்தபிரா னென்றெண்ணி வந்து

விழுந்து மாண்டதைக் கண்டாயோ! ஆகையால் நீ யிப்போதே திரும்பி யோடிவிட்டு, ஓ! தேவர்களுக்கீசனே! கேவல மிளம்பிள்ளை விளையாட்டு டைய நீ, நம்மைப் பலவீனர்களான தாரகனையும், கிரௌஞ்சனையும் போல் நினைத்துக்கொண்டிங்கு வரலாகின்றாய். நீ யோர் மிகவும் சிறுபையலாகையால் நம் பலத்தை யறியவில்லை. விஷ்ணு முதலிய தேவர்களுக்கெல்லாம் மிகுந்த பீதியுண்டாகும்படி அவரது சண்டை நடுவில் வந்த உந்தனை வெல்லுகின்றோம்'' என, ஸ்ரீ வடிவேலன் முகாரவிந்தமதில் மந்தகாசம் கொண்டவராகி யச்சூரனை நோக்கி யுரைத்ததோ வென்றால்:— அடா! துராத்துமாவாகிய! அறிவில்லாத வசுராத்மா! நீ கேவல மடபுத்தியால் நம்மைச் சிறுவனென்று யல்லவா! யாமிப்போதேயுனது வலிமையை வாங்குகின்றோம். அடா! ஸ்ரீ சர்வேசுவரனது நெற்றிக்கண் நெருப்பி னோர்பொரியே யண்டங்கள் முழுமையும் சாம்பலாக்கப் போதுமானதடா! என்று கந்தனருளிய திருவசனத்தைக் கேட்டதில் சூரன் வெகு கோபம் கொண்டவனாகி யப்போதோர் மிகுந்த உன்னதமான தனுசைக் கைக்கொண்டான். அத்தனுசோ வென்றால், ஸ்ரீ மகா விஷ்ணுவினுடைய திரிவிக்கிரமாவதார திருமேனி போல் விளங்கலாயிற்று. அப்போதவ னவ்வில்லை நாணேறிட்டு குணத்தொனி பண்ணுகையி லெழுசமுத்திரங்களும் கரை புரண்டொன்றுகூடி யொலித்ததுபோ லோசை யுண்டாயிற்று. அப்போது தேவப் படைத்தலைவரான ஸ்ரீ குமரேசனும் பிரளயகாலத்தி லூர்த்துவ தாண்டவ மருளிய ஸகல சமுகார காரணரான ஸ்ரீ காலாக்கினிருத்திர மூர்த்திபோல் விளங்கலுற்ற மிகச் சிரேஷ்டமும், மகா வுன்னதமுமான தனுசைக் கைதனி லெடுத்துச் சகல வண்டங்களு மேககாலத்தில் படேலென்று வெடிக்கலுற்ற சத்தம்போல் மிகுந்த குணத்தொனி செய்தனர். பிறகு கொடூரமுடைய சூரன னேக பாணங்களால் அவரது திருமேனி தேர் இவைகளையு மிச்சகலவுலகங் களையும் சடிதியில் நிரப்பினன். தேவரக்ஷகரும் அவன் விட்ட பாணங்களைச் சின்னபின்னம்பண்ணி யவன் மீதனேக சரங்களை கோடைகால மாரிபோல் வருஷித் தாகாயத்தில் மறைந்தனர். பிறகு சூரன் சினங்கொண்டவர் விட்ட பாணங்களை யெல்லாம் கண்டனம் பண்ணி யத்தேவேசன்மீது பதினாயிரம் பாணங்களை வருஷித்தான். ஸ்ரீ குகனுமவனது பாணங்களைத் தமதம்புகளால் தூள்தூளாக்கிவிட் டவனதிருபுயங்களிலும் பதினான்கு சிறந்த பாணங்களை பிரயோகிக்க, அவை யங்குபட்டு மழுங்கி விழலாயிற்று. அது கண்டு பார்வதி மைந்தன் கூர்மையுள்ள வாயிரம் சரங்களால் இந்திரன் வஜ்ஜிராயுதத்தினால் மலையைப் பிளந்ததுபோ லவன் வில்லைக் கண்டித்தனர். பிறகு சூரன் பிரம்ம விஷ்ணுக்களுக்கும் மகா பயங்கரமான தனது வேலைப் பிரயோகிக்க அதையும் ஸ்ரீ முருகன் சினங்கொண்டு பதினான்கு பாணங்களாற் சேதித்துவிட்டனர். அதன்மேற் சூரன் பரபரப்போடு மிகவுன்னதமான வேறு வில்லை கைக் கொள்ள பிறகிருவரு மொருவரோடொருவ ரனேக மனேக பாணங் களை வருஷித்துக்கொண்டு யுத்தம் பண்ணினார்கள். அப்போது சண்டைதனில் தோர்ச்சிபெற்ற சூரன் ஸ்ரீ தேவன் புயத்திலேழம்புகளை யெய்துவிட்டுச் சிங்கம்போல் மகாபயங்கரமாக கர்ஜனம் பண்ணினன், அவ்வம்புகளோ அவர்

புயமதில் விழுந்த மாத்திரத்தில் உடனே தூள் தூளாயின. பிறகு மகாமகிமை கொண்ட ஸ்ரீ ஷண்முகன் கடுஞ்சினத்தினுலுக்கிர மூர்த்தியாகி அதிதீக்ஷண மான பதினுன்கஸ்திரங்களால் அவனது சிறந்தவில்லேயும் வேருயிரத்தாலவ னேறிய தேரையும் அதுபோலவே, வேறு பதினுன்கிலக்ஷம் சஸ்திரங்களா லுரை போட்டு மூடுவிக்கப்பட்ட மற்றெல்லா இரதங்களேயும் முறையே செதல் செதலாக்கினர். பிறகு சூரன் மிகுந்த சிங்கநாதம் செய்து கூர்மையுள்ள தனது சூலத்தைவிடவே தேவேசனவனே நான்கு பாணங்களாற் பிளந்தெறிந்து பின்னும் ஏழம்புகளாலவனது வெண்குடையையும் துண்டித்து, ஓரம்பினுலவனது கிரீடத்தையு முடைத்துத்தள்ளி, அதுபோலவே பலசரங்களாலவன் பூண்டவாபரணங்களே யெல்லாம் சடிதியில் மண்மீது சிதறவடித்தனர். கேளீர்! பிராம்மணுேத்தமர்களே, பிறகு சூரனவ்வாறுபட்ட அவமானச் சுமையைச் சுமக்க மாட்டாதவனுகித் தலேகுனியலுற்று கை வலிமையிழந்து பொருளற்றதரித்திரன் போல் வறியனுக நிற்கலானுன். கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! இவ்வாறு நின்றவசுரமன்னனே யசுரரெல்லோர்களும் கண்டுடனே போர்க்களத்தி லொன்றுகூடி மிகுந்த கர்ஜனே செய்து வெளிகளே யெல்லாம் நிரப்பியவர்களாகி யதிக வீணுசை கொண்டு பூஜிக்கப்படலுற்ற வடிவேலனுேடு கூர்மையுள்ள வம்புகளாலும் பலபல வாயுதங்களாலும் போராடினுர்கள்.

## 12-வது அத்தியாயம்.

அதன்மேலம்பிகையின் செல்வனுனவர் கோபமுற்றவராகி சகல வுலகங்களேயும் சமுகாரம் செய்யவுற்ற சக்கிராயுதத்தைக் கிறுகிறென்று சுற்றியசுரப் படைகள் மீது பிரயோகிக்க, அது கோடி சூரியர்களுதித்ததுபோன்ற தனது காந்தியினுல் சைன்னிய கூட்டங்கள் மீது பிரகாசித்துக்கொண்டவ் வசுரப் படைதனிற் சடிதியிற்சென்றுடனே பலவாருகக் கொன்றது. அப்போது சிலர், காது, கைகளிழந்தவர்களும், சிலர் கால், கழுத்து முறிந்தவர்களும், மூக்கு, கண், பாதங்கள் அறுபட்டவர்களும் கூந்தலாடை பறிபட்டவர்களுமாகி யங்கு கூடலான வெல்லோர்களும் சாவுண்டார்கள். அதனுலுன்னதமான பல தேர்களுமவ்வாறே பொடிப்பொடியாக்கப்பட்டன. அங்குள்ள யானே, குதிரைகளெல்லாமோர் நொடிக்குள் நாச மடைந்தன. அவ்வசுரர்களே யமன் புஜிப்பதற்குரிய வெள்ளிப் பாத்திரங்களேப் பரப்பியது போலெல்லாவெண் குடைகளேயும் சேதித்தப்போது தரைமீது பரப்பலாயிற்று. தோமரங்கள், துவஜங்கள், சஸ்திரங்களிவையெல்லாம் நான்கு திக்குகளிலும் கிடந்து சிதறலுற்றன. அங்கெல்லாம் தலேயற்ற முண்டங்கள் நெருக்கமாயெழுந்து கூத்தாடவும், பிசாச கூட்டங்களால் நிரம்பவுமாயிற்று. மேலும், கழுகு, காக்கை, பருந்து இவைகளால் நிறைந்து வட்டமிடப்படவுமாயிற்று. அப்போதந்த யுத்தரங்கம் முழுதும் நொடிக்குள்ளிவ்வாறு சம்பிரமமுள்ளதாயிற்று. அப்படிக்கொத்த வம்மகா சக்கிரத்தை ஸ்ரீ விஷ்ணுவினுடைய சுதர்சனமென்ற சக்கரமானது கண்டு மெய் நடுக்கம் கொள்ளலாகி மிகச் சிரேஷ்டமான துதிகளால் தோத்திரம்

செய்தது. கேளீர்! சௌனகாதி முனிவர்களே, அம்மகாசக்கிர மிவ்விதமாக வசுரர்களை யெல்லாம் நாசம் செய்து ஸ்ரீ பகவானிடம் சென்று விட்டது. பிறகு சூரபத்தும னிவ்வாருக வசுரர்களெல்லாம் மோர் நொடிக்குள் மடிந்து விடலானது கண்டு, ஓ! கோ! இதென்ன! பாசுபதாஸ்திரமோ! வேலாயுதமோ? அல்லது யாதா மொருவர் சாபமோ? மகாபராக்கிரம சாலிகளான வசுரரெல்லோருமோர் நொடிக்குள் மடிந்து விட்டார்களே! என்றிவ்வாறெல்லா மாச்சரியப்பட்டுக் கொண்டவன் தனிமையாகவே நின்ருன். பிறகுடனே யவ்வசுர மன்னன் பரபரப்புற்றவனுகி யதிகொடூரமும், மிகுந்த சத்த முடையதுமான பிரமாஸ்திரத்தை யத்தேவேசன் மீதெய்ய, அவ்வஸ்திரமானது பிரம்மனது உருவங்கொண்டு பல வாருகக் கிளம்பலாகிப் பயமுறுத்திக்கொண்டு துரிதத்தில் ஸ்ரீ முருகேசன் திருச்சன்னதியில் வரவே யப்பகவான் கைதனில் விளங்கிய வேலானது அதனை யபக்கென்று பக்ஷித்தல்லவோ விட்டது! பின்பசுரன் வெகு கோபங்கொண் டவர்மீது வைஷ்ணவாஸ்திரத்தை விட, அது பெருங் கூச்சலோடு சகல ஜகங்களையும் பயமுறுத்திக்கொண் டனேக விஷ்ணுக்களாக உருவமெடுத் ததுவு மவர் சன்னதிக்கோர் நொடிக்குள் வரலாக, உடனே அத்திருவே லசுரனுடைய, இவ்வஸ்திரத்தையு மவ்விதமாகவே யாதரித்துவிட்டது. அதன்மே லசுரன் மகாஆக்கிரகம் கொண்டவனுகிக் கோடையிடி யிடித்ததுபோல் கர்ஜனம் பண்ணியஸ்திர மெடுப்பவர்களில் மெத்த சிரேஷ்டமான வப்பிரபுவின்பேரில் பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகம் செய்ததி லவ்வஸ்திர மெல்லாத் திசைகளையும் ஒளிப்பித்துக்கொண்டு, பல வுருவத்தோடு வெளிப்பட்டனேக ஸர்ப்பங்கள், இயமன்கள், பிசாசங்கள், பூதங்கள், இராக்ஷஸர்க ளிவைகளை யெல்லாம் கக்கிக்கொண்டு மகா பயங்கரமாகி யப்போது ஸ்ரீ குகன்சன்னதிக்கு வந்தவுடன் கேளீர்! பிராம்மணோத்தமர்களே யப்பகவான் கையை நீட்டியதனைப் பிடிக்கலாயினர். இவ்விதமாக வம்மகாஸ்திரமெல்லாம் வீணுகிவிட்டதி லசுரன் பல விசாரமுற்ற நெஞ்சமுடையவனுகி ஓ! இச்சிறுவனிப்போதெம்முடனும் கூட வெதிர்த்து நிகரற்று யுத்தம்பண்ணத் திறமையுள்ளவனே யென்று, அவர் அற்புதமான பராக்கிரமத்தைச் சிந்தித்து நிற்குமளவில் ஸ்ரீ பகவானை நோக்கி மகா கம்பீரத் துவனியோ டுரைத்ததாவது:—

அடா! கேடுகெட்டவசுரா! தேவர்களை விட்டுவிடென்று நம்மால் கூறப்பட்டதை நீ முந்தி கேட்கவில்லையல்லவா! இப்போதோர் க்ஷணத்துக்குள் உனதிலக்ஷம் வாகினி யசுரப்படையெல்லாம் மாண்டுவிட்டதையும், உன் முடி முதலியவை யெல்லாம் தொலைந்துவிட்டதையும் கண்டாயோடா! இனிமேலாகிலும் தேவர்களை விட்டுவிடென்று யாமுந்தனுக்குப் புத்தியுரைக்கின்ருேம். 'ஓ! அசுரர்களுக்கெல்லாம் கேடுகெட்டவனே இல்லையாகி லுந்தனுக்கிங்கு தோன்றலாகின்ற புத்தியை யிப்போதோர் நொடிக்குள் கூறலாவாய். கேளாய்! அசுரா! யாம் முந்தி யுந்தனது தம்பியான தாரகனை யெவ்வாருேர் நொடிக்குட் கொன்றனமோ வவ்வாறே இப்பேர்க்கொத்த வுந்தனையும் கொல்வதற் கிங்கு வரலானேம். இப்போது யாமுன்மீ திரக்கத்தினுல்தான் நமது திருவேலைப் பிர

யோகிக்கவில்லை. ஆயினு மினிப் போர்முன்ன ருந்தன்மீததனை யவசியம் பிர யோகிக்கலாவோ மென, சூரபத்தம னிவ்வாறு கூறிய கந்தன் திருவசனங்க ளைச் செவிகொண்டதன்மேல் மிகமதிக்கத்தக்க அப்பிரிய வசனங்களை மன தினிலாலோசித்து ஓ! கோ! இச்சிறுவன் நமது வலிமையை யறியாமலே நமது சேனைகள் மாண்டதையும் ஆயுதங்களற்றதையும் கண்டென்றுமழி வற்ற விப்பேர்க்கொத்த நம்மைப் பார்த்து அடா! வோர்நொடிக்குள் தேவர்களை விட்டுவிடென்று எமக்கு சில புத்தி கூறவும் யாமுன்மீது தயவினாலல்லவோ வேலை பிரயோகிக்கவில்லை யென்றுரைக்கவு மாயினன். ஆயினும் நமது மகாவற்புதமான வலிமையைப்பற்றி இவனுக்கு யாது தெரியலாகும்? யானொருவனாயிருந்து மென்னைப் போரினில் வெல்ல முடியாது. ஆனால் பகுத்தறிவில்லாத விப்பையலுக் கிப்பேர்க்கொத்த நட வடிக்கை யுரித்ததுதான். ஆகையால் நாமிப்போது நகரம்சென்று நமக் குள்ள சைனியங்கள் யாவையு மழைத்துவந்து போராடி யிவ்வாறு துள்ளி விழுகின்ற விளைஞனை வெல்லுகின்றோமென்று மனதினில் நன்காலோசித்துக் கொண்டு சூரபத்துமன் அப்போதே யோர்நொடிக்குள் மாயத்தினால் நகரத்தி லுள்ள தனது சிறந்த வரண்மனைக்குச் சென்றனன். இவ்விதமாகச் சென்ற வச்சூரனை யப்போதே தமது தீரவேலினால் தொலைத்துவிட அவர் திறமை கொண்டவராயினும் கேளீர்! முனிவர்களே! யவனது புத்தி நோக்க த்தை சோதிப்பதற்காகவே சும்மா விருந்துவிட்டனர். பிறகு விஷ்ணு முதலிய தேவர்கள் தேவாதி தேவனாகிய ஸ்ரீ சுப்பிரம்மணியரிடம் வுச்சிமீ தஞ்சலிகொண்டு சென்று மிகுந்த மனக்களிப்போடு தண்டம் பண்ணி ஸாக்ஷாத் பரப்பிரம்ம சுவரூபியானவக் கடவுளை யனேகம் துதி களால் தோத்திரம் பண்ணி ஓ! சுவாமி! மனதுக்கு மெட்டாத தேவரீ ரது வலிமை யெங்கே! தேவரீர் முன்னரவ்வசுர னெம்மாத்திரம்? ஆகை யால் துராத்துமனாகிய விவ்வசுரனைக் கொல்வதிலுங்களுக்குக் கொஞ்சமேனு மிலக்ஷியமில்லை. ஓ ஜகதிசா! ஓர் விளையாட்டாகவே யவனைவிட்டுச் சும்மாவிரு ந்துவிட்டீர்களே யன்றி வேறில்லை யென்றிவ்வித முரைத்து மிகுந்த வணக் கத்தோ டருகினில் நின்ற வத்தேவர்களை நோக்கிப் பகவான் திருவாக்கரு ளியதாவது:—

ஓ! தேவர்களே! அந்த மகா சுரனிங்கு மறுபடி திரும்பிவரும் போ தத் துராத்துமனைச் சந்தேகமின்றிக் கொன்று விடுகின்றோமென் றருளிய மாத்திரத்தில் தேவர்களப்போது கொம்மாளமிட்டார்கள். மேலுமப்போது மூர்ச்சை தெளிந்த இலக்ஷத்தொன்பது வீரர்களும் சகல பூதர்களும் படைத் தலைவர்கள் முதலிய சைனியங்களோடு கூட வெல்லோர்களும் ஸ்ரீ கார்த்தி கேயன் சன்னிதியிலொன்றுகூடி யதன் பேரில் ஸ்ரீ முருகனுக்கிணையின்படி ச்சகல படைத் தலைவர்களும் பூதர்களோடு கூட வசுரன் பட்டணத்தைக் கொள்ளை இடுவதற்காகக் கிளம்பி மிகுந்த கோலாகல வொலியாற்றிசை முகங் களைச் செவிடாக்கிக் கொண்டு சடிதியிற் கோட்டைவாசற்படி சென்றம் மகா பலிஷ்டரெல்லோர்களு மொன்றுகூடி மிகுந்த கர்வத்தினால் அட்டகாசம்

செய்து கொண்டு சடிதியில் கோட்டை வாசற்கதவைப் பிளக்கலானார்கள். அப்பெருங் கூச்சலைக் கேட்டு வாசற் காப்போனாகிய வதிகோரனென்று பெயர்போன மகா சுரன் சதுரங்க பலத்துடன் புறப்பட, அப்போது பூதர்களுக்கும் அசுரர்களுக்கும், மிகுந்த பயங்கரமான யுத்தம் நடக்கலாயிற்று. அதிலங்கு கூடிய வசுரரெல்லோர்களும் தோல்வியடைந்தார்கள். அப்போதவ் வதிகோரன் மகா கோரமானவோ ரிரும்புலக்கையை யெடுத்ததனைக் கோபத்தோடு கையினாற் கரகரவென்று சுழற்றிக் கொண்டே பூதர்களைத் துரத்தினான். அது கண்டு மகா பலவானான மோக னென்பவன் துரிதமாய்க் கிளம்பியோர் பெரிய மலையைப் பிடுங்கி மிக வாக்கிரத்தோடவன் மீதெறிய அதனை மகா வலிமை கொண்ட அவ்வசுரன் உலக்கையினால் தூள் தூளாக்கிவிட்டான். பின்பு தேவனவ்வசுரனைக் கையாலவனது நெஞ்சிலறைந்தவுட னவ்வசுரன் மகாரோஷமுற்றுத் தனதுஉதடைமடித்துக் கடித்துக்கொண்டு மறுபடியுமவ் வுலக்கையாலே போர் முன்னரவன் மார்பினிடையிலடித்தான். அதன்பேரில் மோகன் கோபத்தினால் கண்கள் மீது நெருப்புப் பொரிகள் குபி குபீலென்று பறக்கலுற்றவனாகி யுயரக் கிளம்பிக் குதித்துக்கொண் டவ்னை யோர் கையினாலிழுத்துப் பிடித்து மற்றக் கையினாலவன் கன்னத்திலோங்கி யறைந்தனன். மேலும் பூதரெல்லோர்களுமுயரத்தில் ஆயிரம் யோஜனை கொண்ட நகரத்துக் கலங்காரமான கோபுரத்தைப் பெருங் கூச்சலிட்டுப் பிடுங்கி தேவர்கள் மந்தரகிரியைக் கடலில் போட்டதுபோ லதனை நடுக்கடலிலெறிந்தார்கள். முந்தியே கோபுரத்தின் மீதிருந்த பல வசுரர்க ளப்போதக்கடல் நடுவிலாழ்ந்தினார்கள். அப்போதக்கடலானது அலைகளாலன்னகரத்தைத் தழுவலாயிற்று. பின்னுமப்பூதர்கள் அந்நகரத்திற்குக் கவசம் போன்றதான வடமதிலை பிடித்து வீழ்த்திவிட்டு யாதொரு தடையு மற்றுட்புகுந்து ஓடலுற்ற பல வசுரர்களையும் கொன்று பல பல வீடுகளை யிடித்துப் பாத்தி மனம் கொண்டபடி கொள்ளையடித்தும் பிறகங்குவிட்டுத் திரும்பித் துரிதமாகத் தேவாதி தேவனான ஸ்ரீ கந்தன் சன்னிதி வந்தார்கள். அதன் பிறகு பகவான் மகா கோலாஹல சத்தம் செய்யாநின்ற தமது சகல சைனியங்களுடனும் ஹேமகூடபுரத்துக்குப் பிரயாணப் பட்டனர். தேவர்கள் மகா சந்தோஷத்தோடு புஷ்பங்களை வருஷித்தார்கள். கடலோசையை யதிகரித்துத் தேவ துந்துபிகள் பேரொலியோடு முழங்கலுற்றன. அப்போது சகல மங்களவாத்தியங்களும் மிகுதியாகக் கோஷிக்கலுற்றன. கட்டியக்காரரெல்லாம் குணகணங்களை யுதாரவாக்குடன் கூறினார்கள். இவ்வாறு சம்பிரமங்களோடு ஸ்ரீகுமரேசனடியார்களது கூட்டங்களால் தமது சிறந்த துதிகள் படிக்கப்பெற்றவர்களாகி யோர் நொடிதனில் ஏமகூடபுரத்தினுள்ள சுந்தரமான தமது திருமாளிகைக்கு விஜயமாகி மிகச் சிரேஷ்டமும், நேர்த்தியுமான சிங்காதனத்தில் வீற்றருளி அதன்மேற் சேனைகளை யெல்லாம் வரவர விடுதிகளுக்கனுப்பிவிட்டு சந்தோஷமுடையவராகவும் தமது பாதாரவிந்தங்களைப் பற்றிப் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களாற் றுதி கூறப் பெற்றவராகவும் பல பல வுபசாரங்களெல்லாம் செய்யப்பெற்றவராகியச் சிறந்த வாசனமதிலருளியிருந்தனர். பிற்பாடு வானமதில் விளங்கிய சூரியனு

மப்பகவானுடைய வெற்றியைக் கண்ணுற்றதி லதனைத் தனதாகவே மதித்து மிகவும் பயம்தெளிந்து சிவப் பிரீதியினால் விளங்கிய மேனியுடையவனாகி மேற்றிசைக்கோடி யடைந்தவுடன், பிராம்மணோத்தமர்களே, கடற்குள் ளாழ்ந்தலானான். பிறகு சூரபத்துமனன்றிரவு முழுதும் தூக்கமேயின்றி சண்டையைப்பற்றி பதுமகோமளையென்ற தன் மனையாளுடன் மிகுந்த சிந்தை கொண்டிருந்தனன். அப்போது பானுகோபன் தந்தை வந்து விட்டதைக் கேள்வியுற்றவுடன் சண்டையில் வெற்றி பெறுவதற்காகத் தான் செய்து கொண்டிருந்த மந்திரத்தின் புரச்சரணை (அந்தந்த மந்திரத்துக்குரிய ஜபம், ஹோமம், தர்ப்பணம், முதலியவை), சண்டைப் பயிர்ச்சி, மாயை இவைகளையெல்லாம், விட்டுவிட்டுப் போர் மீது மனக்கவலை கொண்டேங்கியிருந்த சூரனிடமவ்விரவினில் வந்து முந்தியதினத்தில் நடந்த தனது விருத்தாந்தத்தை யப்போதறியப் படுத்தினன்.

## 13-வது அத்தியாயம்.

பானுகோபனுரைத்ததாவது:—ஓ! தந்தாய்! யான் சகல சேனைகளுடனு மாயுதங்களுடனும் சென்று ஜயிப்பதற்காகப் புறப்படச் சன்னத்தமாயிருக்கையிலடியேனுக் கறிவிக்காமல் தேவரீர் செல்லலானீர். ஓ ரிளம் பிள்ளையோடு யுத்தமாடுவதனால் ஜயம் அல்லது தோல்வி இவைகளின் பயனையாதடையப் போகின்றீர்? ஜயம் பெறினும்புகழில்லை: ஜயமடைந்தாலும், தோல்வி யடைந்தாலும் அபகீர்த்தியே யுண்டாகுமென்பதி லாக்ஷேபணையேயில்லை; இது நிச்சயம். அடியேன், தேவரீரின் ஆக்கினையின்படி காலையிலே சென்றவனைக் கொன்று விடுகின்றேன். ஓ! அப்பா நீரதனை தூதர் முகமாய்ப் பிறகு கேட்டானந்திக்கலாவீர். ஆனால் யான் சண்டையிலெதிரியை வெல்லாவிட்டா லப்பேர்க்கொத்த வெந்தனுக்கும்மோடு கூடி வாழ்தல் வேண்டாம். ஓ! அசுரேசுவரா! எந்தனுக்கும்முடைய வரசாக்ஷியும் வேண்டுவதில்லை யென்றுமைந்தனாலுரைக்கப்பட்ட வசனங்களைக் கேட்டு சூரனும் கேளாய் மைந்தா! இப்பாலகனைச் சண்டையில் வெல்வதற் கெம்மாலின்றிவேறொருவராலும் மாளாது! ஆகையால் நீ நமதாக்கினையின்படி சென்றிங்கு வந்த தூதனையும் (வீரபாகு) அவன் சேனைகளையும் சீக்கிரம் வெற்றிக் கொண்டு வரலாவாயென்று தன் பிள்ளைக்குச் சொல்லியனுப்பிவிட்டு மனதிற் களிப்படைந்து தனதரண்மனையில் வசித்திருந்தனன். பானுகோபனங்கிருந்து வெளியில் வந்தவுடன் சில தூதர்கள் விரைவா யோடிவந்து பூதசேனைகளால் நகரம் கொள்ளை கொண்டதையும், கோபுரம் சமுத்திரத்திலெறியப்பட்டதையும், வீடுக ளிடிபட்டதையும், அதிகோரன் மரண மடைந்ததையும், மதிலிடித்துப் பரத்தப் பட்டதையும் சொன்னார்கள். கேளீர்! சௌனகாதி முனிவர்களே! சூரன் போர்க்களமிருந்து வந்த மாத்திரத்தி லிவ்வாறெல்லாம் நடத்தப் படலானதை பானுகோபன் தூதர் முகமாய்க் கேட்டு கோபத்தினால் ஜுவலிக்கலாகி, பிறகு மயனென்ற வசுர சில்பனை யிவையெல்லாம் முன்னிருந்தது போல் சீர்திருத்தும்படி யுத்திரவிட்டு அத்திசையைக் காப்பதற்காக மகாகாயனென்றவனை பதினாயிரம் வாகினி சேனைகளோடு கூட்

வனுப்பிச் சடிதியில் பற்பல இரத்தினங்களா லலங்கரிக்கப்பெற்ற தனதரண் மனைச் சென்றான். அப்போ தசுரதச்சனுமந்தந்த வேலைகளையெல்லாம் முன் னிருந்தது போல் முடித்து விட்டு விரைவினிலே தன் வீடு வந்து சேர்ந் தான். பகாபலவானன மகாகாயனும் சேனைகளோடங்கு சென்று அநேக தீவட்டி வெளிச்சங்களாலிருளை விலக்கப்பெற்றவனுக விருந்தனன். பிறகு சூரியனுதயமானவுடன் பானுகோபன் சீக்கிரமெழுந்து துரிதத்திலன்றனுஷ் டானங்களை முடித்துக்கொண்டு தவஞ்செய்துக் கொண்டிருக்கின்ற தன் பிதா மகிமையாகிய மாயையென்பவளை நினைக்க அவளங்கு வந்தவுடனவைகளைப் பார்த்து வந்தனித்து பல துதிகளால் தோத்திரம் பண்ணி வீரபாகுவால் தனக்குக் கிடைத்த அவமானத்தைச்சொல்லி வேண்டிய யுத்தி புத்திகளை வினவினன். அப்போ தவ்வசுரியும் விநயத்தினல் வணக்க முற்றுநின்ற அவ் வசுரேசனை நோக்கிச் சொல்லியதாவது:

அடா! பானுகோபா! பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களெல் லா முங்களால் மிகவும் துன்ப மளிக்கப்பட்டனர்களல்லவோ! அப்படி யிருக்கையி லிப்போதுங்களுக் கெவ்வாறு வெற்றிகிடைக்கும்? என்று பலவருக வுரைத்த அம்மாயையை நோக்கி யப்போதசுரன் கூறிய தாவது:—ஓ! பேரனுக்குச் சுகத்தைக் கருதிய பாட்டி இனி நேரிடுவ தெப்படியானு லுமாகட்டும், ஆனல் வீரபாகுவை வெல்வதற்காக வெந் தனுக்கிப்போதோ ராயுதத்தை யீந்தருளவேண்டு மென்று மகாபுத்தி சாலியான பானுகோபனல் கேட்டுக் கொள்ளப்பட்டபோதவள் அடா அசுரா! இதோ இந்த அஸ்திரமானது போர்தனில் சத்துருக்களுக்கு மிகுந்த மூர்ச்சையைக் கொடுக்கலாகும். சத்தியமாக வுந்தனுக்கின்று தினம் வெற்றியுமுண்டாகுமென் றுரைத்தவ்வாயுதத்தையு மவனுக்குக் கொடுத்து விட்டு மாயையென்ற வசுரி, வெளிச்சென்று விட்டாள். பானு கோபனும் மாயையால் தரப்பட்ட நிகரற்ற அஸ்திரத்தை மகா சந்தோ ஷத்துடனடைந்து பிறகு சடிதியில் தனுசை யெடுத்துக்கொண்டு பாணங்க ளால் நிறைந்த வம்பறாத் தூணியை மாட்டியும், வஜ்ஜிரத்துக்கு நிகரான கவச த்தை தனதுடலில் தரித்தும் மேலு மம்மகா பலவான் வாயவியாஸ்திரம், ஆக்கி னேயாஸ்திரம், இயமாஸ்திரம், சந்திராஸ்திரம், சூரியாஸ்திரம், பிரம்மாஸ் திரம், வைஷ்ணவாஸ்திரம், முதலிய சிறந்த அஸ்திரங்களையும் சிறந்த அஸ் திரங்களுக்கெல்லாம் மேற்பட்டவைகளுக்கும், மிகுந்த மேன்மை கொண்ட அஸ்திர ராஜாவான ஸ்ரீ பாசுபதாஸ்திரத்தையு மெடுத்துக் கொண்டும் ஒவ் வொன்றிலும் பதினயிரம் வாகினி கொண்ட சிறந்த மிகவுன்னதங்களான தேர், குதிரை, யானைகளுடனும் இருபதினயிரம் வாகினி கொண்ட, சைனியங் களுடனும் மிகுந்த பேரொலி கொண்ட பேரிகை முதலிய வாத்திய முழக்கங் களோடும் சூரனைச் சூழ்ந்து மறைக்கலுற்ற புழுதிகளுண்டாகப் போர் செய்வ தில் மிகவுற்சாகம் கொண்டு அப்பானுகோபன் பிரயாணப்பட்டனன். அப் போது யானைகளெல்லாம் மேகமார்க்கத்திலடி வைத்துக் கொண்டும் ஏகாலத் தில் குடித்தத்தீர்த்த திவலைகளைத் துதிக்கையால் பல பீத சொரிந்தன. கா

வேகமுடைய குதிரைகளோ முற்றும் சூரிய மார்க்கத்திலடிவைத்துச் செல்லலாயின. மிகவுன்னதமான தேர்களின் சக்கிரங்களது ரீங்கார வோசைகளப் போதங்ஙனமே மிகுதியாக வுண்டாயின. நெருப்புக் கண்களையும் கருப்பு மேனிகளையும், செம்பட்டை மயிர்களையும் கொண்ட பல திரண்டவசுரர்களும் மிகுந்த கோலாகல சத்தங்களோடு புறப்பட்டனர்கள். இரதகஜ துரகபதாதிகளும் நிழலிடலுற்ற ஆலவட்டங்களும், மிகுந்த விரத்தின வொளித்திரள்களாற் பிரகாசிக்கலுற்ற குடைகளும், சாமரங்களு மடர்ந்து செல்வதினால் கனதியாகச் சூழலுற்ற விருள் திரளானது ஆயுதங்களினு மாபரணங்களினு மிழைக்கப்பட்டச் சிறந்த விரத்தினங்களின் காந்திகளால் விலக்கப்படலாயிற்று. இவ்விதமான பலவித ஸம்பிரமங்களோடு பானுகோபன் வெளிப் புறப்பட்டோர் நொடிக்குள் சைனியங்களுடன் கோட்டை வாசற்படி வந்து ஆயிரம் குதிரைமுகங்களைக் கொண்ட வோர் தூதனை நோக்கி வசன முரைத்தாவது:—

அடா! தூதா! நீ வீரபாகு வென்ற தூதனிடம் சென்று நாமுந்தனைப் போர்தனில் வெல்வதற்காக வோர் நொடியினில் வருகின்றோம்; ஆகையால் நீ சீக்கிரமாகச் சேனைகளோடு சன்னத்தமாகி வெளிப்படலாவாயென்று நாமுரைத்ததாக அவனிடம் சொல்லிவருவாயென, அத்தூதனுமிவ்வா றசுரனாலுரைத் தனுப்பப்பட்டதின் பேரில் சடிதியிலவ்வீர வீரனிடம் சென்றவ்விதமே யறிவித்தனன். அது கேட்டு வீரபாகுவும், நல்ல தப்படியே ஆகட்டுமென்றத் தூதனை யனுப்பிவிட்டுப் பிறகப்பிரபுவானவர் தம்பிகளோடு சீக்கிரமாய் ஸ்ரீ குமரேசனிடம் சென்று மிகுந்த பக்தியுடன் வந்தனித்துக் கைகளை யஞ்சலி கொண்டு நின்றனர். அப்போது சகலப் பிராணிகளுடைய அந்தக்கரணங்களிலும் வசித்தருளாநின்ற ஸ்ரீ கந்தபிரானவரைத் திருக்கண்ணுற்றுரைத் தருளியதாவது:—

ஓ! வீரபாகுவே! இப்போதத் துராத்துமன் மிகவாக்கிரத்தோடுன்னுடன் போர் தொடுக்க வருகின்றான். ஆயிரம் வாகினி பூதர்களுடனும், சேனாதிபர்களுடனும் இலக்ஷத்தெட்டு வீரர்களுடனும் நீ நமதாக்கினையின்படி சென்று யுத்தம் நடத்தலாவாய். ஆனாலவன் போர்தனிலுங்களை மாயாஸ்திரத்தைப் பிரயோகித்து மூர்ச்சை யடைவிக்கப்போகிறான். என்றாலும் மிகச் சிரேஷ்டமான அழிவற்ற நமது திருவேலானது அவ்வஸ்திரத்தைக் கண்டித்துப் போக்கிவிடலாகும்'' என்றிவ்விதமாகத் திருவாக்கருளி ஸ்ரீ மகாஸேனரப் பலவானை யனுப்ப, வீரபாகுவு மக்கந்தனை வந்தனித்து விட்டுத் தேர் மீதேறிப் பூதர்களுடையவும், படஹம் முதலிய வாத்தியங்களுடையவுமான பேரொலிகளுடன் புறப்பட்டனர். பின்பு மகாபலவான்களான வெல்லோர்களு முயுத்தரங்கம் சேர்ந்தார்கள். அதன் பேரிலசுரர்களும் மிகுந்த பெருங்கூச்சல் செய்வதனால் பயங்கரர்களாகித் தேவர்கள் மீதும் அது போலவே பூதப்படைகள் மீதும் தங்க ளாயுதங்களைப் பிரயோகித்தார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதனேகம் பூதர்கள், கைமுறிந்தவர்களும், காலொடிந்தவர்

களும் இருதோள்களிழந்தவர்களும் நுனிக்காலற்றவர்களுமாகி மிகுதியாய்ப் பூமியிற் சாய்ந்தனர்கள். அதன் பிறகெல்லாப் பூதர்களுமொன்றுகூடி சில வசுரர்களை யுச்சந்தலையி லோங்கி யடிவைத்து மிதித்தும் இன்னும் சிரேஷ்டர்களான பல சூரர்களை வாரியெடுத்துப் பிண்டங்களாகப் பிடித்தும், அப்படியே சிலர்களைக் கையினால் கால்களை வாரிப் பிடித்துத் தரைதனிலடித்தும், மற்றவர்களைக் கரகரவென்று சுழற்றிக் கடல் தனிலே வெறிந்தும் பல விதமாய்க் கொல்லலானார்கள். மாயாபுர நகரினோர்களான சத்துருக்கள் சிறந்த சேனைகளையெல்லாம் ஸ்ரீ பரமேசுவரன் திரிபுராசுரர்களைச் செய்தது போலோர் நொடியில் வீணாக்கிவிட்டார்கள். மேலும் கறுத்த நிறமுள்ளவர்களும், பஞ்சாயுதங்களைப் பற்றியவர்களும், பத்தும நேத்திரங்களை யுடையவர்களும் அசுரமாற்றான்களுமான சில பூதர்களப்போ தசுரர்களைக் கொன்று சங்கத்துவானம் செய்ததனால் பல விஷ்ணுக்கள் போல் விளங்கலானார்கள். சில பூதர்கள் யானைகளது கொம்புகளைச் சடிதியினிற் பிடுங்கி சுழற்றியதால் ஆதிவராஹமூர்த்தியின் சிங்கப்பல்லைப் பிடுங்கலான பல சுப்பிரமணியர்கள் போல் விளங்கினார்கள். யானை முகங்களைக் கொண்ட பல வசுரர்கள் மலைபோன்ற சத்துருக் கூட்டத்தினுள் புகுந்து புகுந்து புறப்படுவதால் கிரௌஞ்சகிரிக்குள் புகுந்து புறப்படலுற்ற யானைமுகம் கொண்ட தாரகாசுரன்போல் விளங்கலானார்கள். மகா பயங்கரர்களான சில வசுரர்கள்; முந்தி விஷ்ணு முதலிய தேவர்களை வென்று பிறகு பூதசக்கிர (உண்டுபண்ணப்பட்ட சக்கிராயுத)த்தினால் மடியலான ஜலந்தராசுரன் போல் பூத சக்கிர (பூதர் கூட்டம்)ங்களால் வதை செய்யப்பட்டார்கள். மற்ற சில வசுரர்கள், ஸ்ரீ பைரவமூர்த்தியா லந்தகாசுரன் தோற்கப்பட்டதுபோல் சூலங்களிற் சேர்க்கப்பட்டார்கள். இவ்வாறு பல பலவிதமாக அனேகமசுரர்கள் பூதர்களால் வதைக்கப்பட்டார்கள். தவிரவும் மற்றுமுள்ள வீரர்களிற் சிலரும் தீக்ஷணமுள்ள பல சரங்களைச் சொரிந்தார்கள். பிற்பாடு பானுகோபன் இவைவெல்லாம் கண்டு ஓர் நொடிக்குள் தேர்க்குதிரைகளை விரைவாய்ப் பூதப் படைகளுக் கெதிராகக் கோபத்தோடு விரட்டிக் கொண்டேறிட்ட நாணை ஜம்மென்றொலிக்கும்படி குணத்தொனி செய்து வெளிக் கிளம்புகையில் மகா கணதீரரான வீரபாகுவும் துரிதமாய்ப் புறப்படலானார்.

சண்டைப் புலிகளான அவ்விருவர்களு மொருவரோடொருவர் வெற்றியை வேண்டியவராகி மகா கோபத்தோடனேகம் கூரம்புகளை வருஷித்துக் கொண்டார்கள். அவ்விருவரா லெய்யப்பட்ட பாணங்கள் ஸர்ப்பங்கள்போலொன்றோடொன்றடித்துச் சண்டையிட்டுக் கொண்டோர் நொடிக்குள் மடியலாயின. அத்தேவாசுரரிருவரும் சீக்கிரமாகத் தேவலோகஞ் சென்றும், உடனே யோர் நொடிதனில் பிரம்மலோகம் சேர்ந்தும், பிறகு விஷ்ணுலோகம் வந்தும், பிறகு சமுத்திரங்கள், திசைகள், அதுபோலவே சக்கிர வாளகிரி யிவ்விடங்களெல்லாம் சென்றும் தேர்மீதிருந்தபடியே மகா கோலாஹல சத்தத்தோடு யுத்தம் செய்தார்கள்.

## 14-வது அத்தியாயம்.

பின்பு பானுகோப னுக்கிரங்கொண்டவனுகி வீரனுடைய கெட்டியான மார்பின்மீது கூர்மையுள்ள வாயிரம் கணைகளைத் தொடுக்க வீரபாகுவோ கோபாக்கினியானது ஜ்வாலை விட்டேரிவதனுல் மிகப்பயங்கரராகி தீக்ஷண மான வாயிரம் அம்புகளாலவனது ஸாரதி,குதிரைகள், தேர் இவைகளைத் துரித த்திற் கண்டித்தனர். பிறகசுரன் மறுதேரேறியிவர் மீது சினத்தோடு கணைக ளைத்தொடுப்பதற்கு இச்சிப்பதற்குள் அவரவனது புயங்களினிடை தனில்ஆயி ரமம்புகளைத்தொடுத்ததுகண்டு பூதர்கள் யுத்தரங்கத்தில் மிகுந்த சத்தமிட் டார்கள். அதன் மேலசுரனும் வெகு கோபமுற்றுவாருணாஸ்திரத்தைப் பிரயோ கித்தனன். அவ்வஸ்திரமோவென்றுல் சகல திசைகள், உலகங்கள், ஸப்த ஸமுத்திரங்களெல்லாம் வியாபித்துப் பயங்கரமாகிப் பெரும் சத்த மிட்டுக் கொண்டு பூதர்களை மிகவும் துரத்தவும் பூதசேனுபதிகளைப் பயமுறுத்தவுமாகி யோர் நொடிக்குள் கிளம்பி வருகையில்அதனை வீரபாகு கண்டு மகிமை பொரு ந்திய வாக்கினேயாஸ்திரத்தைச் சந்தானம் பண்ண, அதுவுமோர் பக்கத்தில் மிகுந்த நெருப்புப் பொரிகளாலும் மற்றோர் பக்கத்தில் மிகுந்த ஜுவாலைகளா லும், மற்றோர் பக்கத்திலொளிகளாலும் வியாபிக்கப் பட்டு பிரம்மாண் டம் முழுதும் வெடிக்கலாகவும், நக்ஷத்திரக் கிரகங்களெல்லாமாட்டம் கொள் ளும்படியும் கங்கை முதலிய நதிகள், சமுத்திரங்களெல்லாம் வற்றலாகும் படியும், சகல பருவதங்களும் தூள்தூளாக நொறுங்கலாகும்படியும், பூமண் டலம் படேலென்று வெடிகொள்ளும்படியு மெங்கும் பரவலாகி யவ்வாரு ணாஸ்திரத்தை நாவினுல் நக்கிக்கொண்டு அசுரனிடம் நெருங்கலானதை யவன் கண்டப்போது வாயவியாஸ்திரத்தைத் தொடுத்தான். அதோவென்றுல் மிகுந்த வூழிகாலப் பெருங்காற்றோடு பார்க்கமுடியாததாகிக் கடல்களை யல் லோல கல்லோலப்படுத்தியும், மலைகளைக் கிடுகிடென்று மிகவு மாட்டங் கொள்ளச் செய்தும், மிகுந்த பேரிரைச்சலோடு மகா பயங்கரமாகி யவ் வாக்கினேயாஸ்திரத்தைத் தணித்துவிட்டுத் தேவன் சன்னிதானத்தில் வர, அம்மகா பலவானுன வீரபாகு சினங்கொண்டு ஸர்ப்பாஸ்திரத்தைச் சந்தானிக்க, அவ்வஸ்திரமோ வனேக மாதிசேடர்களாற் சூழப்பட்டதாகி மகா வேகத்தோடு கிளம்பி மிகுந்த பெருமூச்சினுலும், கக்கலுற்ற விஷங்க ளாலும், நெருப்புப் பொரிகளாலு மிப்புவனங்களைச் சாம்பலாக்கிக்கொண்டும், அநேகபடங்களா லலங்கரிக்கப்பட்டதாகிச் சூரியனையும், வானத்தையும் சூழ்ந்துகொண்டும் அசுரன்விட்ட வாயவ்யாஸ்திரத்தை இரைகொண்டுவிட்டு அசுரனருகினிற் சடிதியாகச் சென்றது. பிறகு பானுகோபன் ஸகல வுலகங் களையும் நடுநடுங்கச் செய்யலுற்ற அவ்வவ் வஸ்திரத்தைக் கண்டு காரு டாஸ்திரத்தைப் பிரயோகித்தனன். அதுடனே யநேகம் கருடவுருவத் தோடு கிளம்பிப் பெருங்காற்றுனது பஞ்சுகளை யிரைப்பது போலிறக் கைக் காற்றினுல் மலைகளையெல்லாம் வானமதில் மிகவும் வாரி யிறைத் துக்கொண்டும், சமுத்திரங்களையெல்லாம் கரைபுரளச்செய்தும், மூக்குநு னியால் அச்சர்ப்பங்களைக் கொத்தி விழுங்கிவிட்டுத் தமதருகினில் வரலா

னதை யத்தேவேசன் கண்டு வெகு கோபம்கொண்டு மிகுந்த வலிமையும் பராக்கிரமமும் கொண்டதும், சகலர்களையும் நடுங்க வடிக்கலுற்றதும் மகா கொடூரமான விருடபாத்திரத்தைப் பலவான்களுக்கெல்லாம் மகா பலவானன் முறைகளறிந்த அவ்வீரன் முறைப்படி யவ்வசுரன்மீது பிரயோகிக்க, அவ் வஸ்திரமும் கறகறவென் ஞெலிக்கலுற்ற சதங்கை மாலை யதிடையிற் கட்டிய மணியின் மிகுந்த நாதத்தையுடையதும், ஒலிக்கலுற்ற சிறு மணிகளின் பேரோசையால் திசைமுகங்களைச் செவிடாக்கலுற்றதும், சிறந்த மிகுந்த மகா கிரிகளையெல்லாம் கொந்தி வாரி யெரியலுற்ற கொம்புகளால் விளங்கா னின்றதும், தனது கால்களின் குளம்பு நுனிகளால் பூமியை மிகவும் இடறிப் பேர்க்கலுற்றதும், விசிரலுற்ற பெரிய வாலின் காற்றினல் ஸப்தசமுத்திரங் களையும் கொந்தளிக்கச்செய்யலுற்றதும், கம்பீரமாய் கர்ஜிக்கின்ற முக்கார வோசையா லண்டத்தின்பேரிடை வெளிகளை நிரப்பலுற்றதுமாகக் கிளம்பி யக்காருடாஸ்திரத்தை யோர் மூச்சுக்காற்று மாத்திரத்தா லுட்கொண்டு விட்டு மகா பயங்கரமாகிச் சகல வசுரர்களையும் கதிகலங்கச் செய்துகொண்டும் சகல ஜகங்களையும் கலக்கிக்கொண்டு மப்பானுகோபனைப் பயப்படுத்தலாகிச் சடிதியிலவனருகினில் வரலாயிற்று. அதன்மேல் அசுரன் வெகு பரபரப்போ டியமாஸ்திரம், பிரம்மாஸ்திர மிரண்டையும் சந்தானித்தான். அவ்விரண்டு மோவென்று லனேகங்களாகக் கிளம்பி யததற்குரிய மகா பயங்கரமான வுரு வங்களோடு பேரோசை யுள்ளவையும் மகா கோரங்களுமாகி கேளீர்! பிராம் மணோத்தமர்களே! யவ்விருடபாஸ்திரத்தைக் கண்டவுடன் பயத்தினல் நடுக் கம்கொண்டு அதனை யப்போது வந்தனித்துவிட்டு வந்தவழிபார்த்துச் சென்று விட்டது.

பிற்பாடசுரன் மகாகோரமான நாராயணஸ்திரத்தைப் பிரயோகிக்க, அது அனேக நாராயண வுருவங்களோடு வேகமாய்க் கிளம்பி சங்கம், சக்கி ரம், கதை, சார்ங்கம், கத்தி ஆகிய வைந்தாயுதங்களையும் கொண்டதாகி யவ்விடபாத்திரத்தோடு, மகா பயங்கரமாகச் சண்டையிட்டது. அதுகண்டு வீரபாகுவும் வீரபத்திராஸ்திரத்தை வெகு விரைவோடு விட்டனர். மகா கோரமும் மகா பயங்கரமும், மகா வலிமைகொண்டதுமான அவ்வஸ்திரமா னது அநேககோடி வீரபத்திரர்களாற் சூழப்பெற்றதாகி யந்நாராயணஸ்திரத் தைப் பிளந்தெறிந்துவிட்டுத் தன்னை நோக்கி வரலானதை யசுரமன்னன் கண்டு மகா பீதிகொண்டவனுகி எல்லா வஸ்திரங்களுக்கும் இராஜாவான பாசுபதாஸ்திரத்தை முறைப்படி பூஜை நைவேத்தியம் முதலியவைகளா லுபசரித்தத்தேவன் மீது பிரயோகிக்க அப்போதே மகா பலவானன வீரபாகுவும் அதே யஸ்திரத்தைப் பிரயோகித்தனர். மேன்மையுள்ள வஸ் திரங்களுக்கெல்லாம் மிகுந்த மேன்மைகொண்ட வப்பாசுபதாஸ்திரம் புறப் படலான தெப்படியென்றல்:—

அதிவேகமும் மகா பயங்கரமுமான ஊழிகாலச் சண்டமாருதத்தைக் கொண்டது. எல்லாத்திசை முகங்களினும் பரவிச் சூழலுற்ற வடர்ந்த புகைகளால் நிறைந்ததும், ஓரிடத்துப் பற்றலுற்ற ஊழிகாலப் பெரும்

திக்களால் ஜுவலிக்கலுற்றதும், ஹாலாஹலம் முதலிய நஞ்சுகளின் கோலாஹலத்தினால் பயங்கரமானதும், கரைபுரண்ட பிரளயகாலக் கடல்களைக் கக்காநின்றதும், அதேவிதமாய்ப் பிரளயகாலத்தி லுண்டாகாநின்ற புஷ்கலாவர்த்தமென்ற மேகத்தை யோரிடத்தும், எல்லோர்களை நடுங்க வடிக்கலுற்ற அநந்தன் முதலிய வெட்டுநாகேந்திரர்களையும் மற்றோரிடத்தும், பூதப்பிரேத பிசாசங்களையும் அதேவிதமாக வேறிடத்தும், எல்லா வுலகங்களிலும் பரவிச் சூழலுற்ற கன்னங்கரேலென்ற குருட்டிருளையும் கக்கி வெளிவிடாநின்றதும், மகா மாயைகளால் மிகுந்த மதிமயக்கங்களைச் செய்யாநின்றதும், சிங்கப்பற்களோடு பயங்கரமான முகங்களையுடைய மிருத்தியு கணங்களாற் சூழப்பெற்றதும், வெகு பயங்கரமான திரண்ட மகா சஸ்திரங்களாற் பாரிசங்களில் சூழப்பெற்றதும் சிறந்த மூஞ்சூறு வாகனங்கள் மீதேறலுற்ற பல கணராஜக் கூட்டங்களால் நிறையப்பெற்றதும், ஓரிடத்துப் பெரிய மலைகள் போன்ற மிகுந்த நரசிங்கக் கூட்டங்களாலும் மற்றோரிடத்து மகா கோரமும், மிகுந்த கர்ஜனையிடுவதுமான திரண்ட சரபக் கூட்டங்களாலும், நாய்கள் மீதேறியவர்களாலும், மகா பயங்கரர்களும், மிகுந்த வலிமைகொண்டவர்களும், மைமலைக்கு நிகரான வுருவமுடைய பிசாசுக் கூட்டங்கள் மீதேறியவர்களும், எல்லா வுலகங்களையும் பயப்படுத்தலுற்ற பெரும் பூதங்கள் மேலேறியவர்களும் சிறந்த வியாளிகள் மீதும், ருஷபங்கள் மீதும் ஏறியவர்களும், மிகுந்த விரைவுடைய குதிரைகள் மீதேறியவர்களும், மகா பலிஷ்டர்களும், மிகுந்த கோபமுகத்தையுடைய மகா பயங்கரமான பல புலிக்கூட்டங்கள் மீதேறியவர்களும், அனேக சிங்கங்கள், சிறந்த யானைகள் மிகவும் பெரியதான பர்வதங்களுக்கு நிகராகிய தேவர்கள் பல பல விரத்தினங்களி னொலித்திரளால் விளங்கிய விமானங்கள் இவைகள் மீதேறியவர்களும் இன்னும் மற்றனேக வீரமுள்ளவர்களுமான வுருத்திரகணங்களால் சூழப்பட்டதும், பிரம்மன், விஷ்ணு, வாயு, இந்திரன், வருணன், இயமன் ஆகிய அவர்களது வுருவங்களைக் கொண்ட அந்தந்த தெய்வங்களின் பற்பல சஸ்திரங்களாற் சுற்றிலும் சூழப்பபெற்றதும், கத்தி, கட்வாங்கம், உலக்கை, திருகுதடி, குண்டாந்தடி, இரும்புக்கட்டு தடி, எறி வல்லயம், சக்கிரம், இரும்புலக்கை, பீரங்கி, ஈட்டி முதலியவை, பாணங்கள், கல்லுளி, அங்குசம், வேல், வில், கதை, பாசம், கண்டரைக் கோடாலி, சூலம் பெருங்கத்தி, கைக்கத்தி, வஜ்ஜிராயுதம் முதலிய பயங்கரமான மற்ற வஸ்திரங்களாலு மெங்கும் நிறையப்பெற்றதால் மிகவும் பயங்கரமாகவும் இருக்கலாயிற்று. இவ்வாறு வெளிப்படலான அவ்விரண் டஸ்திரங்களுக்கும் மிகுந்த கோரமான யுத்தமுண்டாயிற்று. எப்படியென்றால்:—

பெரிய சுனைகள், சமுத்திரங்கள், இயமுனை, கங்கை முதலிய நதிகள் இவைகளெல்லாம் வற்றலாகவும், ஆகாயம் பூமியெல்லாம் பற்றியெரியவும், பெருஞ் சத்தத்தோடு மேருகிரி இடிந்து விழலாகவும், நவக்கிரகங்கள், நக்ஷத்திர மண்டலம் முதலியவை யெல்லாம் மிகவும் தவிக்கலாகவும், பிரம்மாண்டச் சுவர் வெடிக்கலாகவும், மலைக்கு நிகரான

சூரியன் தேர் தூள்தூளாகும்படியும், பெரும் பீதியால் திக்கஜங்கள் பூமியில் விழுந்து கொம்பு முறியலாகவும், வாயு வக்கினிகளது ஆட்ட வோட்டங்க ளற்றுப்போகவும், பாதாளம், நடுக்கங்கொள்ளவும், ஸகல ஜீவ ராசிகளும் மிகத் தவித்து ஹா ஹாவென்று கதறுவதால் மிகப் பயங்கரமாக வும், மிகுந்த பீதியோடு இலக்குமியால் தழுவப்பட்டு ஸ்ரீ விஷ்ணுபிரான் திகில டையவும், இரதிதேவி, மன்மதனைக் கட்டிக்கொண்டு கதறியழவும், மற்று முள்ள விருஷிபத்தினிக ளவரவர் கணவனைத் தழுவிக்கொள்ளவு மிவ்வாறெ ல்லா மாகும்படி யவ்விரு பாசுபதாஸ்திரங்களுக்கும் சண்டை நேர்ந்தபோது பிரளயகாலம்போ லனேகம் சேனைகள் மாண்டன. அப்போது மிகுந்த மோகத்தை யுண்டுபண்ணலுற்றதும் பயங்கரமானவைக் கெல்லாம் மிகப் பயங்கரமானதும், மயங்கச்செய்வதை யெல்லாம் மிக மயங்கச்செய்வதும், மிருத்தியுவுக்கும் மிருத்தியுவை யளிப்பதும் மகா கோரமுள்ளதும் சகலப் பிராணிகளுக்கும் மிகுந்த பயத்தை யளிப்பதுமான அவ்விரண்டஸ்திரங்க ளின் பெருங்கூச்சலைக் கேட்டச் சூரன் பட்டணத்திலுள்ள பாதகர்களான வசுரரெல்லாம் மிகவும் பயங்கொண்டார்கள். சூரனு மிதென்னவென் றுலோ சித் தாலோசித்துச் சீக்கிரமாயோடலுற்ற தூதர்களை யதை யறிந்துவர அனுப்பினன். அப்போதே சில தூதர்க ளவற்றையெல்லா மறிந்து சீக்கிரம் வந்து உள்ளபடி சொன்னார்கள். அப்போது சூர னத்தூதர்களை நோக்கி ஓ! கோ! யாமவ்வீரபாகுவை யோர் வீரனென்றறியாமல் கேவலமோர் தூத னென்றே யெண்ணியிருந்தோம். ஓ! கோ! அவனோர் தகுந்தவீரன்தா னென்றுரைத்தனன்.

அவ்விரு பாசுபதாஸ்திரங்களு மிவ்விதமாக மிகு பயங்கரமான உயு த்தஞ்செய்து "ஓ! நாமிருவரும்! சண்டையிட்டுக் கொள்வதாலுலகங்க ளே யழியலாகு" மென்றறிந்து இரண்டும் அதததனை யெய்தவரிடமே திரும்பிச் சென்று விட்டன. அப்போதது கண்டு தேவரெல்லோர்களும் மிகவும் சந் தோஷங் கொண்டார்கள். ஓ! கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப் போது துர்புத்திக்கொண்ட பானுகோபனும் சேனைகளையெல்லாம் சாகக் கொடுத்துவிட்டு மாயையினல் உருமறைந்தவனுகி வானமார்க்கம்சென்று அங்கு நிலை கொண்டான். அதன் பிறகு சகல பூதர்களும் வீரர்களும், சேனுதிபர் களும் அவனேடிவிட்டானென்று நிச்சயித்து மிகுந்த அட்டகாசம் செய்தார் கள். கேளீர் !! பிராம்மனோத்தமர்களே, சூரியனும் அஸ்தகிரியி னுச்சிமீதிருந் தாகாயமார்க்கத்தில் மறைந்துகொண்டிருந்த பானுகோபனைக் கண்டு பயங் கொண்டவன் போல் ஆகாயத்தைவிட்டு (வஸ்திரம் நழுவலாகி) கிரணமிழந்த வனுகி கைநடுக்கம்கொண்டு கடலின் கண்ணுழ்ந்தினன்.

## 15-வது அத்தியாயம்.

பின்பு அவ்வீரரெல்லாம் ஸகல பூதர்களுடனும் சேனாதிபர்களுடனும் கூட விடுதிசென்று அழிவற்ற வடிவேலனை வந்தனித்துவிட்டு மறுநாள் வரு வோமென்று நிச்சயித்துப் பிரமாணத்துக்குச்சன்னத்தப்பட்டு மிகவும்சிந்தை

யற்றிருக்குமளவிஅசுரனும்,இஸ்திதியில் தான் போய்விட்டா அபகீர்த்திக்கிடமாகுமென்றுகருதி யெல்லாவற்றையும் மிகவும் மதிமயங்கச் செய்யலுற்றதும், ஊழிகாலத்திய வடர்ந்த மேகத்தோடு கூடிய பெருங்காற்றையும் பெரும் சத்தத்தைமுடையதான மாயாத்திரத்தைக்கொண்டிங்கு வந்து அதனைப் பிரயோகித்துப் பூதர்களையும் மகாபலிஷ்டர்களான சேனாதிபர்கள் முதலான வீரர்களோடு கூடிய ஸகல தேவரக்ஷகர்களையும் மயக்கி யேழாவதாகிய சுத்த நீர்க் கடலின் நடு ஆழத்திலவர்களை யெல்லாம் கட்டியெறிந்து, பிறகப்பானு கோபனோர் நொடிக்குள் தந்தையிடம் சென்று, ஓ! தந்தாய்! யான் சத்துருக்களைச் சீக்கிரத்திற் சயித்தெல்லோர்களையும் கடலிலெறிந்துவிட் டிங்கு வரலானேன்; மேலும் நாளைக்கே சென்றந்தப்பையலையும் வென்றுப் பிரம்மன் முதலிய தேவர்களை யெல்லாம் சந்தேகமின்றிச் சிறையிலடைக்கின்றேனென சூரனும் தன் மைந்தன் வசனத்தைக் கேட்டு மிகுந்த மகிழ்ச்சி கொண்டவனாகி யப்போதச் செல்வனைக் கட்டியணைத் துச்சிமுகர்ந் தருகினிலுட்கார்த்திக் கிரீடம் முதலிய சிறந்த வாபரணங்களை யவனுக்கீந்து மேலும் சிலவன்பு வசனங்களை யுரைத்து ஓ! கண்மணியே? நமதாக்கினையின்படி நீ நாளைத் தினத்தில் முறியடிக்கப்பட்ட தேவர்களை யெல்லாமவ்வாறே செய்யலாவாயென, உடனே பானுகோபனும், தந்தையிடத் துத்திரவுபெற்று விடுதிசென்றனன். பிறகு தேவர்கள் வீரர்களுக்கப்போது நேரிட்ட அவ்வபாயத்தைக் கண்டு மிகவும் மனம் நொந்தவர்களாகி ஸ்ரீ குஹனிட மறிவிக்கச்சென்றார்கள். அதற்கும் முந்தியே ஸ்ரீ நாரதமுனிவரிவற்றை ஸ்ரீ முருகேசனுக் கறிவித்த தன் பேரில் பகவானுடனே திருவேலை யெடுத்து ஓ! வேலே! அம்மகா வீரர்களை யம்மாயாத்திரத்தினின்று விடுவித்திங்கழைத்து வாலாவாயென்று திருவாக்கருளியதனைப் பிரயோகித்தனர். அது புறப்படலானதோவென்றால்:-

ஆயிரம் கோடி சூரியப் பிரசாகம் பொருந்தியதும், காடாந்தகாரத்தினால் வியாபிக்கப்பட்ட அவ்விரவினில் விஷத்தீப்பொறிகளைக் கக்கிக்கொண்டு செல்வதால் மிக பயங்கரமுள்ளதும், திரண்ட மகா கிரிகளையெல்லாம் பம்பரமாகச் சுற்றுவிக்கானின்ற' பெருற்காற்றினோசையால் பயமளிக்கலுற்றதும், புருவ நெரியால் கொடூரமான மிகுந்த இயமன்களுடைய கூட்டங்களால் நிரம்பப் பெற்றதும், ஓரிடத்துப் பிரளயகாலமேகங்களின் நிறத்தை யொத்த புகைகளின் வரிசையால் சூழப்பெற்றதும், மின்னற் கொடிகளையொத்த ஜுவாலா மாலைகளது நெருப்புப் பொறிகளால் நிரம்பலுற்றதும், மற்றோரிடத்து இடி முழக்கங்களோடு கூடிய பெரிய மேகங்களால் நிறைப்பெற்றதும், அக்கினி சூரியன், இயமன், வாயு இந்திரன், சந்திரன், வருணன், பிரம்மன், விஷ்ணு ஆகிய இவர்களது அஸ்திரங்களாலும், இவை யொத்த வின்னும் மற்ற வத்திரங்களாலும் பின் தொடர்ந்து துதிகூறப் பெற்றதுமாக வரானின்ற அளவற்ற பராக்கிரமமுடைய ஸ்ரீ கந்தபிரானுடைய வப்போர்க்கொத்த நிகரற்ற வேலைக் கண்டவுடன் சமுத்திரராஜன் பயத்தினால் மெய் நடுக்கங்கொண்டவராகி யெதிர்கொண்டு புறப்பட்டு வந்து, ஓ! திருவேலரசே! எந்தனாலிப்போர்க்கொத்த வபராதமொன்றும் செய்யப்படவில்லையே! ஆகையாலெந்தனைக்

காத்தருளல் வேண்டுமென் றனேகம் சிறந்த துதிகளால் தோத்திரம் பண்ணி யடிக்கடி தண்டம் பண்ண, அத்திருவேலவனைத் தெரியப்படுத்திவிட்டு மிகவே கத்தோடுஅந் நடுக்கடற்குச் சென்றவுடன் அப்போதே தேவ தலைவர்களெல்லோர்களும் மூர்க்சை தெளிந்தவர்களாகி ஸ்ரீ வடிவேலனுடைய வப்பேர்க்கொத்த திருவேலைத் தரிசித்து மிகுந்த பரமானந்தத்தோடு சக்தித் துதியென்ற ஸகல உலகங்களையும் பரிசுத்தம் செய்யவுற்ற சிறந்த துதியால் தோத்திரம் பண்ணி, ஓ! ஸ்ரீ வேலாயுதமே! முந்தியாங்கள் தாரகனுடைய மாயையினின்றுந்தனுற் காக்கப்பட்டனமல்லவோ! இப்போதும் எங்களையிரக்ஷித்தருளிய வுந்தனுக்கு யாங்கள் யாது பதிலுபகாரம் செய்வது?

வேல் கூறியதாவது:ஓ! வீரர்களே! ஸ்ரீ குஹபிரானெந்தனை நீசென்றுமாயாத்திரத்தைத் தொலைத்துவிட்டு வீரர்களை நம்மிட மழைத்துவாவென்று கட்டளையிட்டெந்தனை யனுப்பல்ாயினன். ஆகையால் நீங்களச்சகதீசன் சன்னிதிக்குச் சீக்கிரம் வருவீராக. யான் அச்சன்னிதிக்குத் திரும்பிச் செல்லுகின்றேனென வுரைத்து ஸ்ரீ தேவனிடம் சேர்ந்தது.

பிறகு புறப்பட்டுச் செல்லுகையில் வீரபாகு மற்ற வீரர்களையும் சேனைகளோடு கூடிய மற்றப் படைத் தலைவர்களையும் நோக்கியுரைத்ததாவது:—கேளீர் வீரர்களே! இதோ! எதிரிலோர் கூப்பிடு தூரத்தில் அசுரன் நகரம் தெரிகின்றதல்லவா! இதில்தான் மாயையால் நம்மெல்லோர்களையும் மதிமயங்கச் செய்த பானுகோபாசுர னிருக்கின்ருன். ஆகையாலவனைக் கொல்வதற்காக, நாம் சீக்கிரத்தி லந்நகரம் சென்று கொள்ளையடித்துக் கொளுத்திவிட்டால் அவ்வசுரன் தானகவே வரலாவான். அப்போது யாமவனைச் சண்டை முன்னர் சமுகரித்து விடுகின்ருேம். இல்லாவிடில் வில்பிடித்தபடியே தீதனிற் குதித்து நிச்சயமாக மரித்துவிடுகின்ருேம் என்றிவ்வாருகச் சொல்ல, அது கேட்டு மற்ற வீரர்களுமவ்வாறே உறுதி செய்து கொண்டு வீரபாகுவோடுகூட மகா கோலாகல சத்தத்தோடந் நகரத்தின் மேற்புரம் சென்ருர்கள். அப்போது அக்கோட்டைவாசற் காப்பவர்களில் தலைவனுன மாயையென்பவளின் மைந்தனுகிய வியாக்கிரமுகனென்ற சிரேஷ்டனுன மகாசுரன், கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! அங்கு மிகுந்த தீவட்டி வரிசைகளால் வெளிச்சமிட்டுக் கொண்டு திரண்ட சைனியங்களாற் சூழப்பட்டவனுகிச் சிறந்த சிங்காதனத்தின் மீது வீற்றிருக்கு மளவில் அக்கூச்சலைக் கேட்டுத் தனது சகல சைனியங்களுடனும் புறப்பட்டனன். பிறகு பூதர்களுக்கும் அசுரர்களுக்கும் மிகவும் பெரிய உயுத்தம் நடத்தப்பட்டது. அப்போதனேகமசுரர்கள் மலைகளாலும், மரங்களாலும் அத்திரங்களாலும்கெட்டியான கற்பாரைகளாலு மடிபட்டு இரத்தம் தாரை தாரையாய்ப் பெருகலாகிச் செத்தார்கள். அதன் மேல் வியாக்கிரமுகன் ஆக்கிரம் கொண்டு சடிதியிலோர் சூலத்தை யெடுத்துப் புறப்பட்டு அம்மலைகளையும், மரங்களையும் கண்டித்துச் சிங்கநாதம் செய்தான். அதன்மேல் பூதப்படைத் தலைவனுன பெருமை பொருந்திய விம்மனென்பவன் ஊழிகாலத்திய மேக கர்ஜனை போன்ற சிங்கநாதத்தினுற் பயங்கரனுகிக் கிளம்பி அச்சூலத்தாலே யடிக்க,

பிறகு தேவனும் தன் சூலத்தை யசுரன் மீது பிரயோகித்தான். இவ்விதமாக அவ்விருவர்களுடைய சூலங்களுமொன்றோடொன்று அடித்துக் கொண்டு முறியலுற்றன. பிறகு தேவன் அதிகோரமாக மல்ல யுத்தம் செய்து அசுரனைக் கொன்று விட்டான். அவனிறந்தவுடன் தேவர்கள் மிகவும் மலர்மாரி பொழிந்தார்கள். மகா பலவானான வீரபாகுவுமப்போது மிகவும் களிப்புற்றனர்.

பிறகு பூதர்களெல்லாம் மிகவும் உயரமுள்ள கோட்டைச் சுவரையிடித்துவிட்டு மிக நேர்த்தியான கோபுரத்தைப் பிடுங்கி யந்நகர மத்தியில் வீசை கொண்டெறிந்தார்கள். அவ்வாறு அது விழுந்ததாலதற்குள்ள வனேகர் மடிந்தார்கள். அதன்மேல் வீரர்கள் பூதகணங்களோடு வீதிக்குள் நுழைந்தபோதனேக மசுரர்களையும் கோபுரங்கள் விமானங்கள், பல, பல வீடுகள் இவைகளையும் வெகு கோபத்தோடு ஹதம்பண்ணிவிட்டு மிகுந்த வட்டகாசம் செய்தார்கள். மேலும் மகா பராக்கிரமசாலிகளெல்லாம் மந்திரங்களாற் சதுரங்க சைனியங்களை யொறுக்கினர்கள். பிறகு வீரபாகுவு மந்நகரத்தைக் கொளுத்த ஆவல்கொண்டவராகி வெகுகோபத்தோடு ஆக்கினேயாத்திரம், வாயவியாத்திரம் இவ்விண்டையு மொன்றாகச் சேர்த்துப் பிரயோகித்தனர். அப்போதக்கினிதேவ னவ்வசுரப்பட்டணத்தைக் கொளுத்துவதற்குப் பயத்தினாற் கொஞ்சமாலோசனை கொண்டுப் பிறகெம்மை யெய்தவரிருக்கயா மென்ன செய்யலாகு மென்று தேறுதலைக் கொண்டு அதனையோர் பக்கமதிற் பற்றிக்கொண்டு மிகுந்த ஜ்வாலைமாலைகளாற் சூழப்பட்டவனாகவும், வானமதிற் சுற்றுநின்றதிரளான கிரஹங்கள், நக்ஷத்திரங்கள் இவையெல்லாம் மிகுந்த தாபமடையப் பெற்றவனாகவும், இங்கு மங்கு மோடலுற்ற வசுரர்களால் மிகுந்த துயரத்துடன் பார்க்கப் பெற்றவனாகவும், மிகுந்த பேரோசையோடெரித்தனன். அப்போதிதுகண்டு தூதர்களோர் நொடிக்குட் சூரனிடஞ் சென்று, கேளீர்! அசுர சிரேஷ்டரான சுவாமி! பானுகோபனது யுத்தத்தினின்று இங்கு திரும்பிவருகையில், தேவரெல்லோர்களும் மயக்கிக் கடலினிற் போடப்பட்டார்கள். பிறகவர்கள் கந்தன் வேலினால் மோகத்தினின்று விடுவிக்கப்பட்டவர்களாகி தேவரீரது நகரத்தினுட்புகுந் தோர்நொடிக்குள் வியாக்கிரமுகன் முதலிய பல வசுரர்களையும் கொன்று நேர்த்தியான நகரத்தில் பதினாயிரம் யோஜனை விஸ்தாரத்திற்குத் தீயிட்டு விட்டார்கள். ஓ! அசுரர்களைக் காக்கின்ற ராஜனே, இப்பொழுது கூட வின்னும் நெருப்பணையாமலெரிந்து கொண்டிருக்கின்றது என, மகாசுரனான சூரபத்மன் அதனைக் கேட்டு மிகுந்த கோபங் கொள்ளலாயினன்.

## 16-வது அத்தியாயம்.

பிறகுஅசுரன் மகாகோபத்தோடு மிகவுன்னதங்களான தலைமை மேகங்களை யழைப்பித்துத் தீயைச் சடிதியில் அணைக்கும்படி யனுப்ப அவைகளும் அப்படியே பாக்கியமென் றாகாயமார்க்கமாய் மகாப்பிரளய காலத்துக்குரியஉருவத்தைக்கொண்டு புறப்படலாகி யாம் இதனைத் தணித்துவிட்டால் வீரபாகு. நம்மைக்

கொன்று விடுவார். இல்லாவிடில் சூரன் நம்மைச் சந்தேகமின்றி சிறை மீதடைத்து விடுவான்; ஆயினும் நமக்கிதைக் காட்டிலும் வீரபாகுவால் சாவடைவது நலமாகுமென்று நிச்சயித்துக் கொண்டம்மேகங்களெல்லாம் மிகுந்த சத்தத்தோடு கர்ஜனை செய்து கொண்டோர் க்ஷணத்துக்குள் எத்தீயை நீர்த்தாரைகளால் தணித்து விட்டன. வீரபாகு அவைகளைப் பார்த்து ஓ! கோ! இதென்ன? அசுரனலேவப்பட்ட மாயையா? அல்லது பிரளயகால மேகங்களா? வென்று மனக்கலக்க முற்றவராயினர். இப்படியிருக்கையி லங்கு முனிவர்களிற் சிரேஷ்டரான ஸ்ரீ நாரதமுனிவருடனே தோன்றி, ஓ! வீரனே! இவ்வேழு மகாமேகங்களும் சூரனல் தூண்டிவிடப்பட்டவைக ளாகி யூழிகால முழக்கங்களோடு இடைவிடாமல் நீரைப்பொழியலாகின்றன. ஆகையால் நீர்வடவாக்கினி யத்திரத்தைச் சந்தானிக்கலாவீ ரென்றுரைத்துச் சென்று விட்டனர். பிறகு வீரபாகுவும் மனதினிலங்ஙனமே நிச்சயித்துக் கொண்டப்போது வடவாத்திரத்தைச் சந்தானிக்க அவ்வத்திரமானது மிகு ந்த ஜுவாலாமாலைகளாற் சூழப்பட்டதாகி யவைகளது நீர்களைக்குடித்து விட்டது. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதம்மேகங்கள் ஸார மற்று பூமியில் விழலாகிப் பிறகு ஸ்ரீ முருகேசனது திருநாமத்துதிகளால் வலி மையடைந்து சமுத்திரம் சென்றன. பின்பு தேவரெல்லாம், வீரன்மீது பூமாரி சொரிந்து மிகுந்த சந்தோஷத்தோடு பெருங் கூச்சலிட்டுக் கூத்தாடினர்கள்.

பிறகிச்சங்கதிகளை யெல்லாம் சூரன் தூதர்முகமாய் கேட்ட றிந்து கோபம் கொண்டவனாகி யப்போதத்தூதனையே நோக்கி 'ஓ, தூதா! உயுத்தத்துக்குப் போவதற்காக இரதந்தைக் கொண்டுவா' வென்று மகாகோபத்தாலுரைக்கப்பட்ட வச்சூரன் வசனத்தைக் கேட்டு மிகுந்த மாயாவியும், மகாவலிமை கொண்டவனும், பாதாளவுலகை யாள்வோனும், மூன்று சிரசுகளையுடையவனும், மகாகூர்மையுள்ள புத்தியுடையவனுமான அவன் மைந்தனாகிய ஹிரணிய னென்பவனெழுந்து தந்தையை வந்தனித்து வணக்கத்தோ டுரைத்ததாவது:—

ஓ! தந்தாய்! தேவர்களுக்கு தீங்களிப்பதனல் ஐசுவரியத்துக்கும் ஆயு ளுக்கும் நாசம் நேரிடலாகும். இதோ! இப்போ தவர்கள்மீது மிகுந்த கருணை யோடு ஸ்ரீ சர்வேசுவரனது செல்வகுமார ரெழுந்தருளியிருக்கின்றார். பிரம்ம, விஷ்ணுக்கள் மீது நீர் பெற்ற வெற்றியெல்லாம் ஸத்தியமா கவே அவரது வரத்தா லடையப்பட்டதேயின்றி வேறில்லை. கேளீர்! அசுர வேந்தனாகிய தந்தாய்! அப்படிக்கொத்த வலிமையை யுமக் கீந் தருளிய ஸ்ரீ மகேசுவரனுக்குத்தம் வலிமையைத் தாம் மீட்டுக்கொள்வ தில் யாது மிகுந்த பாரமிருக்கிற தென்பதைச் சொல்வீர். மேலும் சுகத்தை வேண்டுவோர்களால் ஸ்ரீ பரமேசுவரனுடைய சிரேஷ்டமான திருக்கட்டளை மீறத்தகாதல்லவோ, ஏ! அசுரேசா! ஸ்ரீ சிவாக்கினையை மீறி நடந்தவரெல் லாமதோகதி யடைந்து விட்டார்க ளென்பதை யறியீரா? மகாபராக்கிரம சாலியான திரிபுராசுரர்கள், கஜாசுரன், அந்தகாசுரன், ஜலந்தராசுரன்,

பண்டாசுரன், வியாக்கிரன், முதலிய வசுரர்கள், மன்மதன், இயமன், ஸ்ரீ விஷ்ணுவின் திரு அவதாரங்களான, மச்சம், கூர்மம், வராஹம், மகாபராக்கிரமமுடைய நரசிம்மம், வாமனம், அது போலவே தக்ஷப்பிரஜாபதி, ஐந்திராவணர்கள் முதலியவரக்கர்கள் இவர்களெல்லாம் முந்தி ஸ்ரீசிவாக்கினையை மீறி நடந்ததாலல்லவோ, மகாகோரமாக மரண மடைந்தார்கள். மேலும் மகாதேவனுல் கங்கையின் கர்வத்தை யடக்குதல், ஹாலாஹல விஷத்தைப் புஜித்தல், இந்திரனுடைய கைகளைப் பங்கம் செய்தல், பிரம்மன் சிரசையறுத்தல், விஷ்ணுவின் இரத்தத்தை யுறிஞ்சுதல், அநேக கோடி பிரம்மர்களுடைய மண்டையோடுகளை மாலையாக அணிதல், திடவுருவம் கொண்ட அபஸ்மாரத்தைப் பொன்னடியால் மிதித்தல் இவைமுதலிய திருவிளையாடல்களெல்லாம் செய்தருளப்பட்டனவல்லவோ! ஆகையால் ஓ! அப்பா! அப்பேர்க்கொத்த ஸ்ரீபரமாத்துமாவின் செல்வக் குமாரனோடு நீங்கள் சண்டைக்கு நிற்பது சரியல்ல! மேலும் ஸாக்ஷாத் ஸ்ரீ மகாதேவ சுவரூபியான விப்பரமாத்துமாவைக் கேவலமோரிளைஞரென்று நினைக்கலாவீர். தவிரவும் கேளீர்! அப்பா! இவரோர் திருவிளையாட்டாகவே விசுவரூபம் கொண்டதையும் (இவர் சகல அண்டதுண்ட சராசரங்களில் சுவரூபமுடையவரென்பதையும்) பிரமனைச் சிறையிலடைப்பித்ததையும், உலகங்களை சிருஷ்டிக்கலானதையும், நீரறியலாம். மேலுமிக்கத் தன் மகாமகிமை பொருந்திய ஆதிவராக மூர்த்தியினுடைய சிங்கப்பல்லைப் பிடுங்கி ஸ்ரீபரமேசுவரனிடம் கொடுத்தனரல்லவோ! கிரௌஞ்சனையும், உமது தம்பியான தாரகனையும் கொன்று போட்டனரல்லவோ! ஆகையாலுமக்கு இவர்மீது ஓரிளைஞனென்ற கொள்கைவேண்டாம். இன்னமும் கேளீர்! தந்தாய்! சகல ஜகங்களையும் நாசஞ்செய்வதற்கு ஸ்ரீ மகேசுவரனுடையவோர் புன்னகைப்பு மட்டிலே போதுமானதல்லவோ? காங்கேயன், கார்த்திகேயன், முதலிய திருநாமங்களுக்கெல்லாம் ஸ்ரீபரமேசுவரன்தான் பொருளென்பதே சிறந்த மாமுனிவர்களுடைய கொள்கையேயன்றி வேறில்லை. கேவலம், மூடர்கள்தான் வித்தியாசமாகச் சொல்வார்கள். முந்தி அவராலேழாவதான தெள்நீர்க்கடலுக்கனுப்பி யருளப்பட்ட திருவேலானது இங்குப் பிரயோகிக்கப்பட்டாலெந்த அரசன் தான் பிழைக்கலாவான்? மேலும் மகாவீரனுன வீரபாகுவிடத்து உமக்கோர் தூதனென்ற கொள்கை வேண்டாம். அவருக்கோ மரணபயமில்லை; சகல தெய்வங்களுடைய அத்திரங்களின் பயமுமவ்வாறே. அவராலநேக மசுரர்கள் கொல்லப்பட்டு நமது பானுகோபன்கூட தூரத்தியடிக்கப்பட்டிருக்கிறன். அவரால் நமதிந்நகரமானது இதோ கொளுத்தப்படுகின்றது. அப்பேர்க்கொத்தவரோடு சண்டையிடுவதற் கெவரால் தான் முடியும்? தவிரவும் ஸ்ரீ கந்தனே கொல்லவேண்டுமென்ற நினைவைக் கொண்டுவிட்டால் அவர் முன்னரெந்த அசுரன்தான் நிற்கவல்லவனுவான்? அப்பகவானு முண்மையில் மிகுந்த தயவினுல் தான் நீ தேவர்களை முன்போல் விட்டு விட்டுச் சுகமாயிரென்று தம் தூதர் மூலமாய் உமக் கறிவித்துமிருக்கிறார். ஆகையாலவருக்குக் கோப முண்டாவதற்கு முந்தியே யிப்போது தேவர்களை விட்டுவிட்டவரது திருவடியில் வணங்கலாவீர். அப்படிச் செய்வீராகில் அவர் மிகவும் பிரசன்ன

ராகியுமக்கு வேண்டிய வரனையு மளித்து விட்டுச் சகல சேனைகளுடனும் வந்ததுபோற் சென்றருளிவிடுவாரென்றான்.

இவை முதலிய தன் மைந்தனான விரணியனது வசனங்களைக் கேட்டுச் சூரபத்துமன் கடுஞ்சினங்கொண்டு உதடு படபட வென்று துடிக்கலுற்றவனாகி "அடா! மூடா! தன்னையே மகா பண்டிதனாக வெண்ணலுற்ற நீ, யாதடாவுரைத்திட்டாய்? நம் முன்னர் கூட சத்துருவான வப்பையலை யுயர்த்திச் சொன்னாயல்லவா! யாவனுந்தனுக்கிவ்வாறு போதித்தானென்பதை யுரைப்பாயாகிலவனை யிப்போதே கொன்று விடுகின்றோம். நம்முடைய சாசுவதமான ஐசுவரியம், பலம், பராக்கிரமம், என்றும் சாகாமை இவைகளையும், விஷ்ணுவானவன், போர் முன்னர், நம் தம்பி முன்பாகச் சக்கிரத்தை யிழந்துவிட்டு ஓட்டம் பிடித்ததையும் நாள் தோறும் நமக்கு பிரம்மன் தனதொன்பது மைந்தர்களோடும் கூட பஞ்சாங்கம் சொல்லிவருவதையும் இந்திரன் முதலிய தேவரெல்லோர்களும் நமக்கு மீன் சுமந்து வரவேற்பட்டதையும், அசுரர்களின் குல நீதியையும் நீ கொஞ்சமேனு மறியாமலுரைக்கலானாய். இனி இவ்வாறு உரைப்பாயாகில் சந்தேகமின்றி உன்னைக் கொன்று போடுவோமென்று சூரனுரைத்திட்ட வசனங்களைக் கேட்டு ஹிரணியன் மனவியாகுலம் கொண்டவனாகி, "ஆ! ஆ! இவனுக்கு விநாசகாலம் நெருங்கிவிட்டபடியால் நமது வசனங்களைக் கேட்கின்றானில்லை. ஆகையாலிவன் மன நோக்கத்தின்படி கூறுவதே நலமென்று தீர்மானித்துக்கொண்டு அவ்விரணியன் ஓ! அப்பா! மனதைச் சோதிப்பதற்காக வென்தனாலுரைக்கப்பட்ட வசனங்களைத் தேவரீர் மன்னித்தல் வேண்டும். இதோயான் சென்று யுத்தத்துக்காக வந்திருக்கின்ற வச் சிறுவனைச் சகல சேனைகளோடும் ஜயித்து தேவரீர் முன்பாக வருகின்றேன். அவனை வெல்வதில் பிரயாசையாதென்று கூறுவீர்? ஆகையால், ஓ! தந்தாய்! இப்போதே எந்தனைச் சண்டைக் கனுப்பலாவீரென்றுரைத்து மைந்தன் சூரனை வந்தனித்தனன். ஓ! முனிவர்களே! சூரனுமவ்வசனங்களை வெகு நேசத்துடன் கேட்டவனை யனுப்பலானான். பிறகு ஜுவாலிக்கலுற்ற காந்தியுடைய ஹிரணியனென்ற அவ்வசுரோத்தமன் தனதரண்மனைசென்று சண்டைசெய்வதாகவே மனதினில் தீர்மானித்துக் கொண்டு தனதாயிரம் தம்பிமார்களுடனும் துரிதமாய்ப் புறப்பட்டனன்.

## 17-வது அத்தியாயம்.

மகா சூரனான ஹிரணியன் தும்பைமலர் மாலைகளாலலங்கரித்துக்கொண்டாயிரம் சிங்கங்கள் கட்டப்பெற்ற மகாவுன்னதமான தேரிலுட்கார்ந்து பட்டணத்து மாதர்களெல்லாம் கண்டு இச்சை கொள்ளப்பெற்றவனாகி ஆயிரம் படைத் தலைவர்களோடுகூடிய சதுரங்க சைனியங்களோடும் புறப்படும்போது எண்ணூறு வாகினி கொண்ட தேர்கள் மிகவும் பெரியதான மலைகள் போன்ற அதே எண் கொண்ட யானைகள், இரண்டிலக்ஷம் குதிரைகள், அதேயெண்கொண்ட அசுர வீரர்கள் முதலிய வெல்லாமவனோடுடனே

புறப்பட்டன. அப்போது கடலின் பேரோசையை யதிகரித்து இரண பேரிகள் கோஷித்தன. மேலுமிவ்விதமாகவே பல பல வாத்தியங்களெல்லா மடர்த்தியாக நிறைந்து முழக்கப்பட்டன. இவ்விதமாக அவ்வசுரனோர் க்ஷணத்துக்குள் வீரபாகு வண்டைக்கு வந்து அந்நிசியில் தனது பட்டணத்தி னலங்கோலத்தைக் கண்ணுற்று மிகுந்த கோபத்தினால் பற்றி யெறிகின்றவன் போலாகி, அம்மகாசுரன் தனது சைனியங்களில் ஆயிரமாயிரம் வாகினிகளாக நான்கு அணிகளாக வகுத்து நான்கு திசைகளிலும் வெவ்வேறாய் ஏற்படுத்தி விட்டு மிகுந்த தனது மற்றப்படைகளோடுகூட கோபத்தோடு மிகுந்த சிங்கநாதம் செய்துகொண்டு வீரபாகுவை யெதிர்த்துவந்தான். அவனைப் பார்த்ததன்மேல் வீரபாகுவு மிவன் யாவனென்று, கொஞ்சம் கலக்கமுற்ற னர். பிறகப்போது, பிரம்மகுமாரரான ஸ்ரீநாரதமுனிவரால் அவனது பராக்கிர மங்களறிவிக்கப்பட்டதின்பேரி லப்புத்திமானானவர் தனது சைனியங்களையும் நான் கணிகளாகப் பகுத்தங்கங் கேற்படுத்திவிட்டு மிகப் பயங்கரமாகச் சிங்க நாதம் செய்து கொண்டு மகா பராக்கிரமசாலிகளான தனது மற்ற சைனியங் களோடுகூட அவ்விரணியனுடன் யுத்தம் பண்ணினார். அப்போது பூதர் களுக் கசுரர்களோடு மிகுந்த சண்டை யுண்டாயிற்று. அதுபோலவே யசுரப் படைத் தலைவர்களுக்குப் பூதப்படைத் தலைவர்களோடும், வீரபாகுவின் தம்பி மார்களுக் கசுரனுடைய ஆயிரம் தம்பிகளுடனும் யுத்தம் நேரிட்டது.

அப்போது உலக்கை, இரும்புலக்கை, சக்கிரம், திருகுதடி, எறிவல்ல யம், கத்தி, பெருங்கத்தி, அம்பு, சூலம், வஜ்ஜிரம், வேல், கோடாலி, இவை களாலும், மரங்கள், கற்கள், மலைகள், குண்டாந்தடிகள், மண்கட்டிகள், இவை களாலும், கைகள், விரல்கள், கால்கள், முறிந்தவர்களும்; முழங்கைகள், மூக்குகள் மூளியானவர்களும், அடித்துடைகள் மணிக்கட்டுக ளறுபட்டவர் களும், பற்களுடை பட்டவர்களும், நுனிக்கால்களிழந்தவர்களும், கணுக்கால் கள், துடைகள், இடுப்பு, அடிவயிறு, நெஞ்சு, மார்பு, காதுகள், கண்கள் சேதிக் கப்பட்டவர்களுமாகிக் குபீல்குபீலென இரத்தம்மிகுதியாகப் பீலிட்டடிப்பத னு லதிகபயங்கரமுள்ளவர்களுமாம் அனேக மசுரப்படைக ளிறந்தும் மூர்ச்சை டைந்தும் சாய்ந்தன. தவிரவும் வீரபாகுவும் வந்து மகாகோபத்தோடு குணத் தொனி செய்வதா லதிக பயங்கராகி யனேகம் கணைகளைத் தொடுத் துப் பல வசுரர்களை மடித்தனர். அப்போது மிகுந்த இரத்தப்பிரவாகத்தினு லதிக வேகமுடைய வோர் பெரிய நதி யோடலாயிற்று. மேலுமங்கு அனேகம் தலையற்ற முண்டங்களெழுந்து கூத்தாடியதால் அத்தலம் மிகுந்த பயங்கர முள்ளதாயிற்று. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதிரணியன் மகா வாக்கிரகம் கொண்டவனாகி ஆயிரம், பதினாயிரம், லக்ஷம், கோடி பாணங் களாற் சில பூதர்களைப் பிளந்தும், சிலரை மூர்ச்சையடைவித்தும், சிலர் களைத் துரத்தவுமானான். அதன்மேல் பூதசேனாதிபர்களில் சிரேஷ்டனான நீலனென்றவன் மகா கோலாஹல சத்தத்தினால் திசைவெளிகளை நிரப்பிக் கொண்டு புறப்பட்டு வருகையில் அப்போதிரணியன் மிகக் கோபங்கொண்ட வனாகி யவன்மீது மிக வொளிபொருந்திய தனது வேலைப் பிரயோகிக்க அது

விழுந்ததனுல் நீலன் க்ஷணநேரம் மூர்ச்சைகொண்டு பிறகெழுந்தோர் ஆல விருக்ஷத்தை யெடுத் தசுரன் தேரை யுடைத்தனன். பிறகசுரன் சினத்தோடு வேறு தேர்மீது உட்கார்ந்து கூர்மையுள்ள சரங்களைத் துரிதமாயவன் மார்பி னிற் பிரயோகித்தனன். அப்போது நீலன் மகா கோபங்கொண்டு மிகுந்த சிங்கநாதத்தினுல் பயமுறுத்தியவனுகி யோர் பெரிய மலையைப் பிடுங்கி யவ்வசு ரன் மீதெறிகையில் அம்மலையை அவ்வசுர னப்போது மூன்றம்புகளாலே பொடிப்பொடியாக்கிவிட்டான். பின்பு தேவனெதிர்த்தோடி வந்து அசுரனுடை வனது மலைபோன்ற தேரைச் செங்குத்தாகத் தூக்கி மகா வேகத்தோடு டுயர வெறிந்தான். அப்போதசுரன் அத்தேரிலிருந்தபடி யாகாயம்சென்று பிறகு திரும்பிவிழுந்து விரைவுடன் வேறு இரதத்திலேறப்போவதற்குள் நீலன் அவ னிடஞ்சென்று அவன் நெஞ்சினில் ஓரறைவிட, அப்போதசுரன் சினங்கொண் டவனைக் கையினுற் பிடித்துத் தள்ளிவிட்டான். பின்பு பெருமைபொருந்திய பூதத்தலைவன் பரபரப்போடு நெருங்கிவந்து அனேக் காலினுலொருதைவிட்டு யுயர வெறிந்து மிகுந்த சிங்கநாதஞ்செய்தான். பிறகவ் வசுரேசுவரன் ஆகாயத்தி லிருந்து பூமியில் விழலானதைக் கண்டவுடன் நீலன் மகா கோலாகல சத்தத் தோடவன்மீது வேகமாகப் பொத்தென்று விழுந்ததில் அவனிரத்தத்தைக் கக் கிக்கொண்டு மூர்ச்சையாகி விழுந்தான். பிறகு மாயாவியான அவ்வசுரவேந் தன் சீக்கிரத்தில் கொஞ்சம் மூர்ச்சைதெளிந்து கேளீர்! பிராம்மணுேத்தமர் களே! நீலனுேடு யுத்தம் செய்வதற்காகத் தன்னைப்போன்ற வோர் மாயா வுருவத்தை நினைக்க, அப்போ துடனே, அவ்விரணியன் வடிவத்தையே கொண்ட வோர் பொய்யசுரன் வெளிக்கிளம்பி பெருஞ்சத்தம் பிடுவதால் பயங்கரனுகி தேவனுேடு யுத்தம் பண்ணினுன்.

அப்போது நீலனு மப்பொய்யசுரனை யோர் பெரிய தண்டத்தினுல் மகா கோபத்தோடு உச்சிமீது ஓங்கியடிக்க அவன் மூர்ச்சைகொண்டவன் போல் பூமியில் விழுந்து பிறகோர் க்ஷணத்துக்கெல்லாம் நடுவானம் சென்று சிங்கம்போல் கர்ஜனைசெய்தான். பிறகு நீலன் அங்கும் தொடர்ந்து செல்லு கையில் அசுரன் அவனுேடு பயங்கரமாக யுத்தம் பண்ணிப் பிறகோர் நொடி க்குள் பூமிக்கு வந்து கோலாஹல சத்தம் பண்ணினுன். நீலனங்கு அவ னைத் தொடர்ந்து சினத்தோடு யுத்தம் தொடக்கையில் அப்பொய்யசுரனும் சண்டைசெய்பவன் போலிருந்து தேவனை சமுத்திரத்திற்கு இழுத்துப் போயும்,. பிறகுத் தீவுக்குத் தீவும், மகா பயங்கரமான வனத்துக்கு வன மும், மலைக்கு மலையும், குஹைக்கு குஹையும், உலகத்துக்கு வுலக முமாக, மகா பலவானுன வந்நீலனை யிழுத்துக்கொண்டு போய்த் திரும்பத் திரும்பச் சுற்றுவித்து மனத்துன்பம் கொள்ளச்செய்தான். அப்போது சூரன் மைந்தனுன விரணியாசுரன் நன்ருய்க் களைதீர்ந்து கேளீர்! பிரம்மணுேத்த மர்களே! வேறுதேரி லுட்கார்ந்துகொண்டு, தானும் மாயாவசுரனுேடு சேர்ந்து, தேவனுேடு யுத்தம் செய்கையில் மகா பராக்கிரமசாலியான வந் நீலன்மீது மகா வாக்கிரத்தோ டாக்கினேயாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அவ னுடனே யிரத்தத்தைத் தாரை தாரையாய்ப் பெருகவிட்டு மூர்ச்சையடைந்

தான். அப்போது வீரபாகுவானவர் அவன் முர்ச்சைகொண்டதை யறிந்து மகா கோபங்கொண்டவராகி யசுரனுடைய மாயையைத் தெரிந்துகொண்டப்போது விஞ்ஞானஸ்திரத்தைப் பிரயோகிக்க, அப்போதசுரன் அம்மாயாசுரனை யிழந்து தனிமையாக நின்றான். பின்பவ் வசுரனும், மேகம்போற் கர்ஜனை பண்ணி யவ்வீரபாகுமீது துரிதமாக வாயிரம் கணைகளைத் தொடுக்க அவைகளவ் வீரன் மார்பு மத்தியில் விழுந்து முனை மழுங்கி விழலாயின. அதன்மேல் வீரபாகு மகா வாக்கிரகம் கொண்டவராகிச் சில கூரம்புகளைத் தொடுத்து அவனது, கவசம், துவஜம்,தனுசு இவைகளை யோர்நொடிக்குள் செதல்செதலாக்கினர். பிறகசுரன் மற்றோர் வில்லைச் சடிதியாகக் கைப்பற்று கையில் மகா பலிஷ்டனான அவ்வீர னுயிரம் பாணங்களா லவனுடைய, அவ்வில், அம்பறுத்தூணி, ஸாரதி ஸகிதமான தேர் இவைகளை யெல்லாம் சேதித்துப் பூமியில் பரத்திவிட்டு மறுபடி கோபத்தோடு சில வம்புகளைத் தொடுத்தவனது விசாலமான மார்பினைப் பிளந்தனர். அதன்மே லவ்வசுரன் வேறு தேர்மீ துட்கார வெத்தனிக்கையில் தேவன் அத்தேரையும் பலவம்புகளால் உடைத்தெறிந்து, பின்னு மங்கக்குள்ள அவனதெல்லாத் தேர்களையும் சின்னபின்னப் படுத்தியவுடன் அவ்விரணியன்மட்டில் தனியாகமிஞ்சினவன் ஆகியப்போது மிகுந்த சிந்தைகொண்டதோவென்றால்:—ஓகோ! நமதெல்லா வாயுதங்களும், சைனியங்களும் தொலைக்கப்படலாயின; இக்கந்தபிரான் சூரன் முதலிய வெல்லா வசுரப் பூண்டுகளையும் சமுகரிக்கவே போகின்றார். நமது தந்தையாகிய சூரபத்மனே வனேகம் பிள்ளைகளைப் பெற்றிருக்கையில் அவர்களில் யாவனுவதொருவன் அவனுக்குப் பிண்டம் போடுவதற்காக (பிதுருகிருத்தியம் செய்தல்) மிஞ்சியிருந்தால் அப்போதிவ் வுலகினிற் புகழுள்ளதே யன்றி யில்லாவிடில் மிகுந்த வபகீர்த்திக் கிடமாகும்; ஆகையாலவனுக்குப் பிண்டம் கொடுப்பதற்காக நாமிருந்தே தீரவேண்டுமென்று மனதில் நிச்சயித்துக் கொண்டோர் மாயாவுருவம் கொண்டு துரிதமாகச் சமுத்திரம் சென்றங்கு மீனுருவமெடுத்து நிலைத்திருந்தான். மற்றுள்ள மூவகைச் சேனைகளுமவர்களால் மடிக்கப்படலானார்கள். பிறகு பூதர்களும் சேனாதிபர்களுமவனோட்டம் பிடித்தது கண்டு மிகவும் பூரித்துக் கோலாகலம் செய்தார்கள். அப்போதுவீரபாகுவும் மிகுந்த தொனியோடு சங்கத்துவானம் செய்யலானார்.

தேவர்கள் அவ்வீரன் மீது மகாபரிமளம் பொருந்திய மலர்களை வாரிச் சொரிந்தார்கள். பிற்பாடு சூரபத்மன் இச்சங்கதியையெல்லாம் தூதர் முகமாய்க் கேட்டு கோபத்தினால் பற்றியெரிவோனாகித் தலைகுனியலானான். பின்னர் இரணியன் தம்பியான அக்கினிமுகாசுரன் வந்தான். அவன் திக்கஜங்கள், சூரியனுடைய விரதம், மகா வேகமுடைய அவனதுகுதிரைகள் இவைகளையெல்லாம் பிடித்து வந்து சதுரங்கக்காய்களாகக் கொண்டு விளையாடலானவன். மேலுமவன் கர்ப்பத்தில் வசிக்கும்போதே தாய்க்கு மிகுந்த தாபத்தை யளித்தபடியாலவனை யவனது பிதாமகியான மாயை யக்கினிமுகனென்றழைக்கலானாள். தவிரவும்அம் மகா பலவான் வாலிபத்திலே விளையாட்டாகவே ஸ்ரீவிஷ்ணுவின் கருடன்,பிரம்மாவின் அன்னம் இவைகளைக் கயிற்

றினுற் கட்டிக்கொண்டு வந்து விளையாடினுன். மேலும் மகாபாதகத் தொழிலைச் செய்யலுற்ற அந்த துராத்துமன், தன் மூத்தோனுகிய பானுகோபன் சூரியனைப்பிடித்து கட்டலானுனென்று கருதி சந்திரனைப் பிடித்து வந்து வசித்தவன். அவன் சகல தேவர்களுடைய அத்திரங்களையும் பூரணமாய்க் கொண்டவன். மகா மாயாவி, மகா பலவான். அப்பேர்க்கொத்த வக்கினி முகாசுரன் வந்து தந்தையை வந்தனித்து வசனம் கூறியதாவது:—

'ஓ! அப்பா! ஓ! கோ!கோ! பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய சகல தேவர்களையும் வென்ற தேவரீர்கூட யாது தலை குனியலாகி யாலோசிக்கின்றீர்? என்று மைந்தனுல் வினவப்படுகையிலசுரவேந்தன் ' கூறியதோ வென்றுல்:—அடா! செல்வனே! தேவசேனைகளுக் கிறையோனுன கந்தனது தூதனுகிய வீரபாகுவென்றவ னிப்போது, தன் கூட்டத்தார்களுடன் வந்து நமது சுந்தரமான நகரத்தைக் கொளுத்தி, வா, வாவென்றழைக்கின்றுன். அத்தீதனைத் தணிப்பதற்காக யாமனுப்பிய விராஜ மேகங்க ளெல்லாமவனுற் சண்டை முகத்தில் கண்டிக்கப்பட்டுத் தோல்வி யடைந்தன. உந்தன் சகோதரனும் பலிஷ்டனுமாகிய விரணியன்கூட அவனேடு போராடித் தோல்வியுண்டு கடல் சேர்ந்தங்கு மாற்றுருவத்தோடு வசிக்கின்றுன். அவனுல் மகா பலசாலிகளான, வனேக மசுரர்களெல்லாம் மரணமடைந்து விட்டார்கள்.' என, அக்கினிமுகன் அவ்வாறுதந்தை வசனங்களை கேட்டு உத்தரம் சொல்லுகின்றுன். "ஓ! தந்தாய்! அத்தூதனைச் சயிப்பதிலுமக்கு யாது வேலை யென்பதைச் சொல்வீர்? யான் தேவரீர் கட்டளையைச் சிரமேற் கொண்டு போய் அவனைப் போர்தனில் வென்று உம் முன்னர் வருகின்றேன். ஆகையால் ஓ! பிரபுவே! எந்தனுக்கு விடையருள்வீர்.' என, பிராம்மணேத்தமர்களே! அப்படியே சூரன் வாக்கினுலனுப்பப்பட்ட வக்கினி முகனப்போதே நேர்த்தியான தனதரண்மனை சென்று தனக்குப் பாட்டியாகிய மாயையாலருளப்பட்ட வற்புதமான வில்லை யெடுத்துக் கொண்டும், சகல தெய்வங்களுடைய வத்திரங்களையும் தரித்துக் கொண்டும் பெருமை பொருந்திய அவ்வக்கினி முகன் ஆயிரம் வாகினி யானைகள், அசேசங்கியை கொண்ட தேவர்கள் வாயுவேகமுடைய இரண்டாயிரம் வாகினி குதிரைகள் அநேக வாகினி யசுரர்கள் முதலிய சைனியங்களாலும் ஸோமகண்டகன், சோமன், சூரிய சத்துரு, மேகன், பிங்களகன் முதலிய வின்னும் மற்றனேக சேனுதிபர்களாலும், சுற்றிலும் சூழப்பெற்றவனுகி அநேகம் படைகள், துவஜங்கள் மிக நேர்த்தியான குடைகள் இவைகளுடனும் பெரும் புழுதிகளாலெங்கும் 'வியாபிக்கப்பெற்றவனுக மறுநாள் சூரியோதய நேரத்தில் வீரர்களெல்லாம் மிகுந்த பிரதாபங்களோடு விளங்கியிரானின்ற போர்க்களத்திற்கு வந்தான்.

## 18-வது அத்தியாயம்.

அப்போதவ் விருதிறத்தார்களு மொருவரோடொருவர் மகா வாங்காரத்தோடு மிகுந்த மரங்களாலும், மலைகளாலும், மிக கொடுமையாக யுத்தம் செய்தார்கள். அதன்மேல் மகா பலசாலிகளும் சாமர்த்திய முடையவர்களு

மான விலக்ஷ வீரர்களும் மகா வாக்கிரகத்தோடு கிளம்பி யவ்வசுரர்களை யம்புகளால் துரத்தினார்கள். பிற்பாடு ஸோமகண்டகன், மேகன், ஸோமன், ஆகிய படைத்தலைவர்கள் மிகுந்த கர்ஜனையோடோர் நொடிக்குள் கிளம்பி யம்புகளாலும் மற்றுமுள்ள பெரிய ஆயுதங்களாலு மவ்விலக்ஷம் வீரர்களோ டெதிர்த்துப் போராடினார்கள். பிறகு மகா மகிமைகொண்ட வீரபுரந்தரனென்ற பூதசேனாதிபன் துரிதமாய்க் கிளம்பி சில கணைகளைத் தொடுத்தவ்வசுரவீரர்களுடைய தேர்களை யுடைத்துச் சில வம்புகளாலுடனே ஸோமகண்டகன் என்பவனையும் கொன்றுவிட்டான். பிறகசுரவீரர் எல்லோர்களும் துரிதமாக மறுதேரேறி மிகுந்த சத்தத்தோடு மகா பயங்கரமாயிருக்கும்படி கொடிய யுத்தம் செய்தார்கள். பிறகு அம்மகாவீர னதிக கோபாக்கிராந்தனாகி மிகுந்த கூர்மையுள்ள சில கணைகளையெய் தவர்களது, தேர்களையும், விற்களையும் தூள்தூளாக்கி யவர்களுடைய நெற்றி, இருபுயங்கள் மார்பு இவைகளையும் துளைத்து மிகுந்த சிங்கநாதம் செய்தான். அதன்மே லசுரவீரனான மேக னதிகவேகத்தோடோ ருன்னதமான தண்டமதை யெடுத்துக் கர கர வென்று சுழற்றி யவனது சாரதியை யடித்து மடித்தான். அது கண்டு மகா பலிஷ்டனான அவ்வீரபுரந்தரன் கடுஞ்சினம்கொண்டவனாகி வேலாயுதத்தினாலோர் நொடிக்குள் அவனது மார்பினைப் பிளந்தவனைக் கொன்றுவிட்டான். உடனே யவ்வசுரப்படைத்தலைவ ரெல்லோர்களு மோட்டம்பிடிக்கலானார்கள். அதன் பிறகு மகா பெருமைபொருந்திய வக்கினிமுகாசுரன் தன் படைகளோட்டமெடுப்பதை நோக்கிச் சினங்கொண் டநேக சரங்களைச் சொரிந்து பூதப் படைகளைத் துரத்தினான். அப்போது மகா வீரனான வீரபுரந்தரன் வந்து மிகுந்தவட்டகாசத் தொனியோடுஅனேகம் அம்புகளை யவ்வக்கினிமுகன் மீதெய்தவுடன் அசுரவீரன் பலகணைகளாலவனது அம்பறாத்தூணியையு மவனது திடமான வில்லையும் கண்டித்துப் பிறகு தன் வேலினாலவனையுமோர் நொடிக்குள் மூர்ச்சை யடைவித்தான். அப்போது மற்ற வீரர்களும் வீரபுரந்தரன் மூர்ச்சையடைந்ததைக் கண்டு மகா வாக்கிரகம் கொண்டவர்களாகி யாயிரமம்புகளை யவன் முகத்திலும் அப்படியே யவன் கைகளிலு மிருதோட்களிலுமெய்து பின்னும் சில பாணங்களாலவனது மகாவுன்னதமான தேரையுமுடைத்து விட்டார்கள். பிறகசுரனவர்களை நோக்கி வசனமுரைத்ததாவது :—

ஓ! வீரர்களே! யாமிப்போதுங்களையும் வென்று பிறகோர் நொடிக்கெல்லாம் அவ்வீரபாகுவையும் ஜயித்து விடுகிறோமென்ற அவனது வசனத்தைக் கேட்டதன் பேரில் மகா பலிஷ்டர்களானஅவ்வீரர்கள் கோபாவேசங் கொண்டவர்களாகிச் சில கணைகளாலவனது தேரையும், குதிரைகளையும் துண்டித்து பெரும் கற்பாரைபோன்ற கெட்டியான அவனது மார்பையும் பிளந்தார்கள். பின்பவ்வசுரன் கண்களில் நெருப்புப் பறக்கப்பெற்றவனாகி யோர் நொடி நேரத்துக்குள் வேறு தேர்மீ திட்கார்ந்து மகிமை பொருந்திய பாசுபதாஸ்திரத்தைச் சடிதியிற் பிரயோகிக்க, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வீரர்கள், அக்கினி ஜுவாலைகளைக் கக்கிக்கொண்டு வராநிற்ற அவ்வத்தி

ரத்தை ஆக்கினேயாத்திரமென் றெண்ணியப்போது மிகவும் மனம் கலங்கியவர்களாகி யெல்லோர்களும் வாருணாத்திரத்தைப் பிரயோகித்தார்கள். அம் மகா பாசுபதாஸ்திரமோவென்று லவர்கள்விட்ட அத்திரங்களைவிழுங்கிவிட்டு, ஓ! கோ! கேளீர்! முனிவர்களே! அவ்வீரர்களையுமோர் நொடிக்குள் கொன்றுபோட்டன, அப்போது அக்கினிமுகன் அவர்களைக் கண்டட்டகாசம் பண்ணினான். பூதர்களெல்லாம் பயங்கொண் டோட்டம்பிடித்தார்கள். படைத் தலைவர்கள் மிகவும் வியாகுலம் கொண்டார்கள். அப்போது அதுகண்டு வீர பாகுவும் மகா கர்வத்தோடுறக்கக் கர்ஜனைசெய்து சிங்கம் கரிராஜனை டெதிராக வந்ததுபோல் சடிதியில் வந்தார். அவ்வாறு வரலான வீரனைப் பார்த்தவ் வசுரனுரைத்ததேதோவென்றால்:—ஓ! தூதா! நீ முந்திப் போர்முகத்தில் பல வசுரர்களைக் கொன்றாயல்லவா! ஆகையா லிங்குவரலான வுந்தனையாம் ஓர் நொடிக்குள்ளாக முறியடிக்கின்றோம். உந்தனைப் போரினில் வெல்லமாட்டாதவன் பேடியாவான்; என்றுரைத்திட்ட அவ்வசுரனை நோக்கி வீரபாகு வெகு கோபத்தோ டுரைத்ததாவது:—

கேளாய் அசுரா! மகா மாயாவியான ஹிரணியனென்ற மகாசுரன் இப்போது சூரியன் முன்னர் நிற்கத் தகுதியற்ற கோட்டான்போல் நம் முன்னர் நிற்பதற்குத் திறமையற்றோனாகி ஓட்டம் பிடித்தான். மகாபாதகனான பானுகோபனுமோ மாயையைச் செய்துவிட்டு ஓடிப்போனானல்லவா? ஆகிலும் அவனடுத்த தடவை நம்முன்னர் யுத்தத்தில் நேர்ந்தவுடனவனைத் தீர்த்துவிடுகின்றோம். நீயுமிப்போது சண்டை செய்கின்றாயா? அல்லது ஓட்டம் பிடிக்கின்றாயா? நீயாவனாற் காக்கப்பட்டபோதிலு முந்தனைச் சண்டையில் தொலைத்து விடுகின்றோம் என்றுரைத்து வில்லெடுத்து நாணேறிட்டு மகா கோபத்துடன் மிகப் பயங்கரமாகக் குணத்தொனி செய்தனர். அசுரனுமவ்வாறே பயங்கரமாய் குணத்தொனி பண்ணினான். அப்போதங்குள்ள வெல்லோர்களும் அந்நாதோசைகளைக் கேட்டு மிகவும் பயங்கொண்டார்கள். பிறகசுரன் கோபத்தினால் மிகுந்த தீயெறியப் பெற்றவனாகித் தீக்ஷணமுள்ள பதினான்கம்புகளை தேவனைக் குறித்தெய்தனன். பிறகு வீரபாகுவுமவைகளை யவ்வளவே பாணங்களாலோர் நொடிக்குள் கண்டித்துவிட்டுப் பிரம்மாண்டம் முழுமையும் சத்தத்தினால் நிரப்புவோர்போல் மிகுந்த வட்டகாசம் பண்ணினர்.

அப்போதக்கினிமுகனும் சினங்கொண்டவனாகி மிகுந்த சத்தத்தோடு கொடிய வார்த்தைகளால் அதட்டிக்கொண்டவர்மீ திருபதம்புகளைச் சந்தானித்தான். பிறகு பூதசேனாதிபருமவைகளை யெல்லாமவ்வளவே சரங்களாற் கண்டித்தனர். அதன்மேலசுரன் பின்னருமாயிரம்கணைகளைத் தொடுத்துவிட்டுச்சங்கத்துவானம்பண்ணினான். அதனால் தேவன் மெய்தனி லடியுண்டதில் உதடு துடிக்கப்பெற்றவராகி மகாகோபத்தோடவ்வளவே சரங்களைப் பிரயோகித்து அவனது தேர், குதிரைகள் வில் இவைகளைச் சேதித்துவிட்டனர். உடனே யசுரன் மிகவுன்னதமான வேறிரதம் ஏறிக்கொண்டோர் பெரிய தண்டத்தை

யெடுத்து வீரன் திருமேனியிற் பிரயோகிக்க, அத்தேவரக்ஷகர், மகா கோர மாக வரலுற்ற அத்தண்டத்தையு மந்திரத்தாற் கண்டித்துவிட்டனர். பிறகசுர வீரன் உடனே மற்றோரற்புதமான வில்லைக்கொண்டு கோபத்தோடு வாயு சூரியன், இயமன், ஆகிய இத்தேவதாத்திரங்களைப் பிரயோகிக்க, வீரபாகு வும் அதேயத்திரங்களை ஆக்கிரத்தோடு விட்டவைகளைக் கண்டித்துப் பிறகு தீக்ஷணமான வோர் சரத்தை யவ்வக்கினி முகனாகிய மகாசுரன் மீது தொடுக்க அசுரனதனால் அடியுண்டு தனது தேரின் கண்ணே மூர்ச்சையாகி சாய்ந் தனன். பிறகவனோர் நொடிக்கெல்லாம் மூர்ச்சை தெளிந்தவனாகித் தன் னுலாராதித்து வரப்பட்ட காளியம்மனை நினைக்கலானான். உடனே யப் பத்திரகாளியும், வில், சூலம், கண்டரைக் கோடாலி முதலிய சிரேஷ்ட மான வாயுதங்களைக் கைப்பற்றியவளாகிச் சிங்கவாகனத்தின் மீதே றிக்கொண்டும், தனது பரிவாரங்களான அநேககோடி காளிகளால் சூழப் பட்டும், மிகுந்த வாத்திய முழக்கங்களால் திசைவெளிகளை நிரப்பிக் கொண்டும் தோன்றலாயினள். அப்பேர்க்கொத்த பத்திரகாளியைப் பார்த் தசுரன் பிரார்த்தித்துக்கொண்டதாவது:—

ஓ! தனதடியார்களுக்கு ஜயத்தோடு சுபத்தையும் சத்துருக்களுக்கு மாணத்தையும் அருளலுற்ற பத்திரகாளீ! இப்போது மகா கொடி யோனாகிய வீரபாகுவை கொல்லல் வேண்டு மென்று கேட்டுக்கொண்ட அவ்வசுரனைப் பார்த்துத் தேவியு மப்படியே ஆகட்டு மென்று கூறி யுட னே மகா கோரமுடையவளாகவும் அதிக சத்தம் செய்வதால் மகா பயங்கரமுள்ளவளாகவும் புறப்பட்டு வருகையில், கேளீர்! பிராம்மணோ த்தமர்களே! அவளைப் பார்த்து வீரர்களெல்லாம் பீதியடைந்தார்கள். பிற கப்போது கொடியவளான வக்காளியானவள் சூலத்தை யெடுத்து வீரபாகு மீது பிரயோகிக்க, அதனை யவருடனே பதினான்கம்புகளாலே பொடி பொடி யாக்கினர். பின்பு கொடியவளான வத்தேவேசுவரியானவள் மறுபடியும் கொடிய வார்த்தைகளால் அதட்டிக்கொண்டே மகா கோரமும் கூர்மையுமான மற்றோர் சூலத்தைப் பிரயோகிக்க, அதனையுமம்மகா பலவான் மிகுந்த கோபத்தோடாயிர மம்புகளால் துண்டித்துவிட்டனர். உடனே யவள் மகா கோபங்கொண்டு மிகுந்த பரபரப்போடு வாகனத்தினின் றிறங்கி மகா பயங் கரமான வோர் கத்தியைக் கைக்கொண் டவ்வீரபாகுவைக் கொல்லக் கருதிய வளாக மகா வேகத்தோடு வருகையில் வீரபாகு அப்போதவள் கிட்ட நெருங் கிவரலானதைக் கண்டு பெண்களை வதைப்பது மகா பாதகமென்று மனதிற் கருதித் தமதோர் கையினா லவளது எட்டு புயங்களையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு மற்றோர் கையினாலவள் மார்பின்கண் ணோங்கி யறைந்தவுட னவள் வாயினா லிரத்தத்தை கக்கிக்கொண்டு வலிமை குறைந்தவளாகி அழுது கொண்டே பூமியில் விழுந்து பிறகெழுந்துநின்று, ஓ கோ! கந்தன்! தம்பி யோடு யுத்தம் செய்வதில் நமக்கு வெற்றிக் கிடைக்காதென்று மனதிற் கருதி யவளாகி மகா பலவானாகிய அவ்வீரபாகுவை நோக்கி, "ஓ! மகா பலவானான வீரனே இவ்வசுரனுக்கு எந்தன்மீதுள்ள பக்திவசத்தினால் யானுமது வலி

மையை யறியாம லிங்கு வந்துவிட்டேன். நீரோ வக்கினிமுகனையும் மற்று முள்ள பானுகோபன் முதலிய வெல்லா வசுரர்களையும் சமுகரித்துப் பரிபூர்ணமான கந்தனருளைக் கொள்ளலாவீர். என்றிவ்வாறு வார்த்தைகளை யுரைத்தவரைத் தோத்திரம் பண்ணி, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிறகவரது கட்டளைப்படியே சிங்கமேறி விரைவோடு தனது இருப்பிடம் சென்றனள்.

பிற்பாடு மகா சூரனாகிய வக்கினிமுகன் பத்திரகாளி சென்றுவிட்டதை யறிந்து, ஓ! நாம் இவளால்தான் யுத்தத்தில் நேர்ந்த சத்துருக்களை யெல்லா மதுவரைக்கும் வென்றுவந்தோமோ, நாமவளது பராக்கிரமத்தை சோதிப்பதற்கல்லவோ அவளை நினைக்கலாயினம். நமக்கிம்மூவுலகினிலு முயுத்தம் நடத்துவதற்காக வேறு சகாயம் வேண்டுவதில்லை. நாமே யிப்போதோர் நொடிக்குள் சகல சத்துருக்களையும் கொன்றுவிடுகின்றோம். இல்லையாகில் யாம் சத்தியமாகவே தந்தையாகிய சூரனிடம் திரும்புவதில்லையென் றிவ்விதமாகச் சபதம்செய்துகொண்டு மகா பலவானாகிய அவ்வசுரச் சிரேஷ்டன் விரைவோடு கிளம்பி, மிகுந்த சிங்காநாதத்தால் திசைமுகங்களை நிரப்பியவனாகி மகா கோபத்தோடு வீரபாகுமீது நூறு சரங்களைச் சொரிந்தான். பிறகு வீரனுமவைகளை நூறம்புகளாலே கண்டித்துப் பின்னுமவ் வசுரன்மீது கோபத்தோடு மகா வேகமுடைய பல சரங்களை வருஷித்தார். பின்பு பராக்கிரமமுடையோனான அவ்வசுரவேந்த னவைகளை நூறு பாணங்களால் துண்டித்து உடனே மகாப் பிரளயகால மேகம் கர்ஜிப்பதுபோல் சங்கத்துவானம் செய்தான். பிற்பாடு வீரன் மகா பரபரப்புக்கொண்டு பதினான்கம்புகளா லவனது மகா வுன்னதமான வில்லை முறித்தெறிந்து கோலாஹல சத்தம் பண்ணினார். அதுகேட்டு அக்கினிமுகன் 'மகா கோபம்கொண்டவனாகிச் சகல சத்துருக்களையும் சமுகாரம் செய்யவுற்ற பிரம்மாத்திரத்தைச் சந்தானம் பண்ணினான். அவ்வத்திர மனேகப் பிரம்மவுருவங்களோடு வேகமாய் வெளிக்கிளம்புகையி லப்போதே வீரபாகுவும் வீரபத்திராஸ்திரத்தைப் பிரயோகிக்க, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மகா கோரமும், மகா பயங்கரமுமான அவ்வத்திரம் அப்பிரம்பாத்திரத்தைத் துரிதமதில் ஓரேவாயாக விழுங்கிவிட்டுப் பிறகு மகா வேகத்தோ டவனது மகா பெரியதான தலையையும் துண்டித்துப் பூமியில் விழச்செய் தவனைக் கொன்றுவிட்டது.

## 19-வது அத்தியாயம்.

பிற்பாடங்குள்ள சிரேஷ்டர்களான இருபத்தினான்காயிர மசுரப்படைத் தலைவர்களு மவன் செத்ததை யறிந்து தங்களது சிறந்த சேனைகளோடு கூடவொன்றுசேர்ந் தெல்லோர்களும் ஊழிகால மேகம்போல் மிக முழக்கங் கொண்டவர்களாகி மிகக் கூர்மையுள்ள பல சரங்களைச் சொரிந்தார்கள். பின்பு அவ்வீரபாகுவும் அவ்வசுரர்கள்மீது நூறுகோடி பாணங்களை வருஷித்துப் பலசாலிகளான சிலரைத் துரத்தியடித்தும் மற்றச் சிலர்கள் ஆயுதங்களைச் சேதித்தும், காப்பாற்றும்படி காலில் விழுந்த சிலரை மன்னித்து விட்டும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்பலவானானவர் மற்

றவர்களைக் கொன்று விட்டனர். அப்போது சில வசுரர்கள் தங்கள் மீது சில அசுரப்பிணங்களை வாரிச் சுமத்திக்கொண்டு கிடக்கையில் அவர்களதிக பாரத்தைச் சுமந்ததனுல், விதி வசத்தின்படி மாண்டார்கள். மற்றவர்களும் பிரமத்தினுலெங்கும் வீரபாகு வேறிருப்பது போல் திகிலடைந்து மிகவும் மூர்ச்சை யடைந்தார்கள். சில வசுரர்களங் குண்டான விரத்த நதியில் விழலாகிச் சமுத்திரம் சேர்ந்ததில் பலர்கள் மாண்டார்கள். ஓ! கோ! இது மிகவும் கஷ்டம்; மேலும் அங்கு பல தலையற்ற வுடல்களெழுந்து கூத்தாடின. மாமிசவாசையா லங்கனேகம் காக்கை, கழுகுகள் முதலிய பல பறவைகள் வட்டமிட்டன.

அப்போது அந்நகரத்தினிலங்கங்கு கிலிகிலியென்ற கூச்சல்களும், நான்கு பக்கங்களிலும் ஜனங்களினழுகைக் குரல்களு முண்டாயின. அப்போதெல்லாத் தேவர்களு மேராளமான மலர்களை வாரிச் சொரிந்து தங்கள் தங்களது உடைகளைச் சுருட்டி யெறிந்து எறிந்து பிடித்து மனமகிழ்ச்சி கொண்டவர்களாகி மிகுந்த கூச்சலோடு கூத்தாடினுர்கள். மேலும் சகல பூதர்களுமவர்களின் தலைவர்களும் மூர்ச்சை தெளிந் தெழுந்தார்கள். இப்படியிருக்கையி லப்பொழுது மகாவீரனன உக்கிரனென்ற புத்திசாலியாகிய தேவச் சிரேஷ்டன் வீரபாகுவை நோக்கி யுரைத்ததாவது:—

ஓ! சுவாமி இங்கிருந்து நூறுயோஜனை தூரத்திலோர் பெரியதான ஆலமரமிருக்கின்றது. அங்கு அம்மரத்தடியில் உமது தம்பிகளெல்லாம் உயிரிழந்துகிடக்கின்றுர்கள். இயமனும் அவனதுயிரைக்கொண்டுத் தனதுபட்டணம் சேர்ந்துவிட்டான்.என,வீரபாகுவும்அவனதுவசனம்கேட்டு மகாதுக்கித்தவராகி,தடுமாறலுற்றநடையோடங்கு துரிதமாய்ச்சென்று கட்டைபோற் கிடக்கலான தமது தம்பிமார்களைக் கண்டவுடன் அவர்கள்மீது விழுந்து மூர்ச்சை கொண்டனர். பிறகோர் க்ஷணத்துக்குள்மூர்ச்சைதெளிந்தெழுந்து பலவாறுபுலம்பி "ஓ! கோ! ஸ்ரீபரமேசுவரனுடைய வத்திரத்தால்அடியுண்டவரிடத்து,யமனுக்கென்ன அதிகாரம் வந்தது? அல்லது, இவர்கள் ஸ்ரீசுப்பிரம்மண்ணியரது தம்பிகளென்பதை யம்மூடனறியானு?மேலும் மார்க்கண்டேயர் விஷயத்தைப் பற்றி முந்தி அவன் தண்டனை அடைந்ததையும், ஓர் நொடிநேரம் மட்டில் 'ஹர'' வென்றேதி, ஓர் மலரைச் சிவார்ப்பணம் செய்தவொருவர் விஷயமாய் அவன் முந்தியிடது காலாலுதை பட்டதையும், மேலுமவ்விதமாகவே துச்சகன் துர்மதி இவர்கள் விஷயத்தைப் பற்றியும், சுவேதகேது வென்றவனைப் பற்றியும், முந்தியவனடி பட்டதையும் எல்லாம் அஜாக்கிரதையுள்ள அவ்வியமன் மறந்து விட்டானே?" வென்றுரைத்து அடா! இயமா! திருநீறு உருத்திராக்ஷங்களைத் தரிப்பவர்களின் மார்க்கத்திற்கூட செல்லாத உந்தனுக் கிப்பேர்க்கொத்த மதம்யாது நேரிட்டதென்று அவரோரம்பினிலெழுதியதனை மகா கோபத்தோடு யமலோகத்திற்கனுப்ப, உடனே யவ்வத்திரமும் சீக்கிரமாக இயமலோகம் சென்று எல்லா திசைகளையு மொளிப்பித்துக்கொண்டு அதிவேகமாயவன் அருகினில் வந்தவுடன் இயமன் அதனையெடுத்து இதென்ன வென்றுச்சரியம் கொண்டவனுகி யதனைத் துரிதமாய்ப் படித்தறிந்து பெரும் பயம் அடைந்தனன்.

பிறகவ்வியமன் ஞானதிருஷ்டியாலூகித்ததில் அவர்கள், மலைகளிற் சிறந்தஸ்ரீ கைலைகிரிதனில் ஸ்ரீமகேசுவரன் போலாநந்த மடைந்துகொண்டிருப்பதாக வறிந்துடனே பயங்கரமான பெரிய எருமைக் கடாவின் மீதேறிக்கொண்டும் பல பல வுருவங்களைக் கொண்டவர்களும் மகா பயங்கரர்களுமான தனது சகல சேனைகளுடனும் சென்று, அங்கு அம்மகா வீரர்களைக் கண்டதிலவர்கள் உத்தியானவனத்தில் வசித்துக்கொண்டு அசுரர்களால்கொல்லப்பட்ட பலபூதர்களாற் சூழப்பெற்றவர்களாகவும், திவ்வியவுருவம் கொண்டவர்களாகவும், வித்தியாதரர் ஸங்கீம் பாடவும், அபஸர ஸ்திரீகள் நாட்டியமாடவும், முதலான பல சம்பிரமங்களாற் சிறப்புற்றவராகவும், மிகுந்த பிரம்மாநந்தம் கொண்டவர்களாகவும் அநேக ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றவர்களாகவும் விளங்கியிருப்பதைக் கண்ணுற்று அவர்களை வந்தனித்து அஞ்சலி கொண்டு அவ்வியமன் கூறியதாவது:—

ஓ! வீரர்களே! யானுங்களைக் கொண்டுபோய் விட்டதாக நினைத்து வீரபாகுவானவர் மகா கோபம் கொண்டிருக்கின்றார். ஆகையால் மகா பராக்கிரமசாலியான நீங்களெல்லோர்களு மென்மீது தயவு செய்து அங்கு மறுபடி வரவேண்டுமென்று அவர்களைவேண்டிக்கொண்டு அவ்வியமனத் தேவச் சிரேஷ்டர்களை வீரபாகு முன்னிலைக் கனுப்ப, அப்போது மகாபராக்கிரமசாலியான அவ்வீரர்கள் தூங்கியெழுந்தது போலெழுந்தார்கள். உடனே வீரபாகு அவர்களைக் கண்டணைத்து அடிக்கடி உச்சிமுகர்ந்து மிகுந்த சந்தோஷமடைந்தனர். அப்போது தருமராஜனும் மிகுந்த ஊக்கம் கொண்டு அங்கு வரலாகி யம்மகாவீரனை வந்தனித்து, மிகுந்த வணக்கத்தோடு வசனமுரைத்ததாவது:— ஓ! சுவாமி! திருநீறு, உருத்திராக்ஷங்களைத் தரிப்பவர்களின் வழியில் கூப்பிடுதொலையிற்கூட யான் மிகுந்த பயத்தோடு செல்லுகின்றேன். ஓ! தேவேசா! தேவரீருடைய தம்பிமார்களான இவ்வீரர்கள் ஸ்ரீகைலைகிரியில் மகா வானந்தத்தோடு வீற்றிருந்தார்கள். யான் மிகப் பயங்கொண்டவனாகி அவர்களைத் தேவரீர் முன்பாக அழைத்துவந்தேன். ஓ! கருணைக்கடலே! எந்தன்மீது தயவு வைத்துக் கோபத்தைத் தணித்திடல் வேண்டும், என இவ்வாறுரைத்த அவ்வியமனை நோக்கி வீரபாகு அப்போதுரைத்ததாவது:—ஓ! தருமராஜனே! நீ ஸ்ரீ சிவபிரானிடத்தும் மிகவும் நேசமுள்ளவன். அப்பேர்க்கொத்த நீ யிவ்வண்ணம் செய்திருப்பாயா? ஆகையால் நம்மிடம் கொண்ட பயத்தை விட்டுவிடு. யாமிவர்கள் மரணமடைந்ததை யறிந்தவுடன் மிகவும் துக்கப்பட்டுக் கொண்டிருக்கையில் உண்மையில் புத்திமாறுதலாலே நீ செய்திருப்பாயென்று பிரமித்தோம். ஆகையால் நீ ஸ்ரீ சிவாக்கினையின்படி யிப்போது சீக்கிரமாய் முன்போலுனது பட்டணம் சென்றுவிடு.

என, இவ்விதமாக வீரபாகு கட்டளையிட்டதின்பேரில் இயமன் உடனே கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தனது சைனியங்களோடு ஓர் நொடியில் தனது பட்டணம் சேர்ந்தான். அப்போது தேவர்கள் தேவேசரான வீரபாகுமீது மலர்களைச் சொரிந்தார்கள். பூதர்கள் படைத்தலைவர்களோடு கூட அட்டகாசம் செய்தார்கள். ஓ! பிராம்மணோ

த்தமர்களே! வீரபாகு இவ்விதமாக மற்ற வீரர்களால் புடைசூழப்பெற் றிருக்கையில் தூதர்கள் அச்சங்கதிகளை யெல்லாம் சூரனிடம் சொல்ல, அவன் தூதர் முகமா யறிந்தவுடன் தனது மைந்தனை வக்கினிமுக னிறந்ததைப் பற்றி மிகவும் கதறியழுதனன். அப்போதவன் பெண்டீர்களும் ஹாஹா வென்று மிகவும் கதறினர்கள். அப்பட்டணத்தில் வசித்த அசுரரெல்லோர்க ளும் துக்கமடைந்தார்கள். அப்போதச் சூரன் மக்களான மூவாயிரம் பெயர் கள் வந்து மிகவும் துக்கப்பட்டவர்களாகிச் சூரனை நோக்கி வசன முரைத் ததாவது:—

ஓ! சுவாமி! மகா பலசாலிகளாகிய இலக்ஷத்தெட்டு வீரர்களும் பூதர் களுமான விப்பேர்க்கொத்த மிகுந்த பலிஷ்டர்களோடு யுத்தம் செய் வதற்காக அவனொருவனைமட்டில் எவ்வாறனுப்பலானீர்? மேலுமவன் இற ந்துபோனதைப்பற்றி யேன் வீணில் துயரப்படுகின்றீர்?' ஓ! கோ! மிகவும் கஷ்டம்; தவிரவும் மகா பலசாலிகளான நாங்களெல்லோர்களும், மகா பல பராக்கிரமசாலிகளான ஹிரணியனும், பானுகோபனும் உயிரோடிருக்கையில் சேனைகள் மடிந்துவிட்டன வென்று தேவரீரேன் ஆலோசிக்கவேண்டும்? ஒரு கால் கடல்வற்றினாலும் வற்றும், எங்களது பராக்கிரமோ என்றும் குறைவு பெறா! மேலும் யாங்கள் மகா மேருவைக் கூட இருப்பிடம் விட்டுப் புறட்டி விடுவோம்; அப்படியிருக்கையில் கிரிராஜனான விமயகிரி முதலியதைப்பற்றி யாதுரைத்தல் வேண்டும்? வடவாக்கினியையு மணைத்துவிடுவோம். ஆகை யால் எங்களை யிஷ்டப்படி யனுப்பிவிடுவீராகில் நாங்களப் பூதர்களையும், வீரர்களையும் இளைஞனான வச் சுப்பிரமணியனையுங்கூட வெற்றிப்பெற்றுத் தேவரீர் முன்னர் திரும்பி வருகின்றோ மென்றனர்.

இவ்வாறுரைக்கப் பட்டதைக் கேட்ட அச்சூரபத்துமனும் அப்புதல் வர்களைப் போர்புரிவதற்கு அனுப்பலானான். பிறகு மகா பராக்கிரமசாலி களான அவ்வெல்லோர்களும் தந்தை யுத்தரவைப் பெற்றவர்களாகிச் சன்னத்தப்பட்டும், நேர்த்தியான, தும்பைமலர் மாலைகளை யணிந்துகொ ண்டும், மிகவுன்னதமான தேர்கள்மீதேறிக்கொண்டும் மகா சூரர்களான வனேக சதுரங்க பலங்களுடனும், கடலோசையை யதிகரித்த வாத் தியகோஷங்களுடனும், குடைகள், துவஜங்களுடனும், ,யௌவன, பருவ முடைய வச்சூரன் மைந்தர்கள் திடமான விற்களை யெடுத்துப் புறப்படும் போது, கேளீர்! பூமி தேவர்களே! பூமியானது, ஓ! இவர்களுக்குச் சீக் கிரம் மரணம் நேரிடுவதால் நமக்கு நிச்சயமாகப் பாரம் குறையலாகுமென்று நர்த்தனம் செய்ததுபோல் பூகம்பமுண்டாயிற்று. மேலும் அவர்களுக்கு, மேலாகக் கழுகுகளும், காக்கைகளும் பயங்கரமாக வட்டமிட்டன. கொள் ளிக்கட்டைகள் அப்போது பூமியிலெங்கும் மகா பயங்கரமாக விழலுற்றன. சாவு சம்பவிக்கப்போவதை நன்கு அறிவிக்கலுற்ற விப்பேர்க்கொத்த அபசகு னங்கள் நேரிடலானதை யவர்கள் கொஞ்சமேனும் பாராட்டாமல் யுத்தர ங்க மடைந்தனர். உடனே யவ்விருதிறத்தார்களும், மரங்கள், மலைகள்,

கற்பாறைகள் இவைகளை யொருவர்மீ தொருவர் வருஷித்துக்கொண்டு மிகுந்த வமக்களமான யுத்தம் செய்தனர்.

இச்சண்டையில் அசுரர்கள் மகா வீரர்களான பூதசைனியங்களால் முறியடிக்கப்பட்டு நிற்கத் திராணியற்றவராகி யிங்கு மங்குமாக நான்கு பக்கங்களிலு மோட்டம் பிடித்தார்கள். அவர்களைப் பார்த்துச் சூரபத்துமனது செல்வக் குமாரர்களெல்லாம் மிகுந்த திடம்கொண்ட விற்களில் ஞாண்களை யேறிட்டுஅவைகளை மிகுந்த சத்தத்தினுற் பயங்கரமாகும்படி டங்காரம்பண்ணி மிகுந்த கொடூரமும், கெட்டியும் தீக்ஷணமுமான வனேக பாணங்களை வருஷிக்க, அப்போதப் பூதர்களும் நான்கு பக்கங்களிலு மோட்டம்பிடிக்கத் தலைப்பட்டார்கள். பிறகுடனே மகா பலிஷ்டர்களான வச்சேனைத்தலைவர்கள் பயங்கரர்களாக மிகுந்த சிங்கநாதஞ் செய்துகொண்டு துரிதமாய்ப் புறப்பட்டோர் நொடிக்குள் மரங்களாலும், மலைகளாலும், தண்டங்களாலும், குதிரைகளையும், தேர்களையும் நொறுக்கி ஸாரதிகளையு மடித்து மற்ற தேர்களைக் கால்களாலுயர வாரிவிட்டு இருப்புலக்கைகளா லவர்களது விஸ்தாரமான மார்புகளின் மீதடித்தும் அவ்வாறே கண்டரைக் கோடாலிகளாற் சிலர் தலைகளைக் கண்டித்தும், கோபத்தோடு பெரிய மலைகளை வாரி யெறிந்தும், மற்றவர்களின் விற்களைத் துண்டித்தும், இவ்விதமாக மிகுந்த யுத்தம் செய்தார்கள். இதேவிதமாக வசுரப்படைகளு மம்மகாவீரர்களோடு யுத்தம் செய்தார்கள். பிறகு சூரன் பிள்ளைகளெல்லோர்களு மவ்வுயுத்தத்தைப் பார்த்து மிகக் கோபங்கொண்டவர்களாகி மிகவும் ஜுவலிக்கலுற்றவைகளும், மகா மகிமைகொண்டவைகளுமான வாக்கினேயாஸ்திரங்களைப் பிரயோகிக்க, அவைகளால்அச்சேனுதிபதிக ளடிபட்டுச் சற்று நோகலானுர்கள். அதன்மேல் தேவேசர்களான இலக்ஷம் வீரர்களில் விஜயன், ஜயப்பிரதாபன், மதி, கோரன், அசவன், கரவீரவிருஷன், அநந்தவாமன், அநந்தவாருணன், மஹானுன அந்தகன், அகளங்கன், நிர்க்குணன், மாருதன், சசிகண்டகன், சதவலி இவர்கள் முதலான வாயிரம் பெயர்கள் கிளம்ப, அவரெல்லோர்களும் சடிதியிலொன்றுகூடி யத்துராத்துமர்களைக் கொல்ல ஆலோசித்துக் கொண்டு வீரபாகுவிடம் விண்ணப்பம் செய்துகொள்ள, அப்படியே அவரதாக்கினையைக் கொண்டு அம் மகா வீரர்கள் ஓர் நொடிக்குள் வந்து, மிகுந்த கோபத்தோடு பயங்கரர்களாகிய சத்துருக்கள் மீது கூர்மையான பலகணைகளைத் தொடுத்தனர்.

பிறகொருவருக்கொருவர் மிகுந்த யுத்தமுண்டாயிற்று. அப்போதச் சூரர்கள் அவ்வாயிரம் பெயர்களுடைய தேர்களையுமுடைத்து விட்டார்கள். உடனே யவ்வாயிரம் வீரர்களும் அவ்வசுரர்களது தேர்களையும், விற்களையும், நொறுக்கிவிட்டுப் பின்னும் உறைபோட்டு மூடிவைத்திருந்த மலைகளை யொத்தவெல்லாத் தேர்களையும் செதல் செதல்களாக யுடைத்தெறிந்தார்கள். பிறகசுரர்கள் பூமியில் நின்றுகொண்டு மகா அட்டகாசத் தொனியோடு மரங்களையும், மலைகளையும் பிடுங்கி யத்தேவ வீரர்கள்

மீதெறிந்தார்கள். அதன்மேலவ்வாயிரம் வீரர்களு மவ்வசுரர்களது தேர்களை யும், விற்களையும் நொறுக்கிவிட்டுப் பின்னும் உரைபோட்டு மூடி வைத் திருந்த மலைகளை யொத்தவெல்லாத் தேர்களையும் செதல் செதல்களாக வுடை தெறிந்தார்கள். பிறகசுரர்கள் பூமியில் நின்றுகொண்டு மகா அட்டகாசத் தொனியோடு, மரங்களையும், மலைகளையும், பிடுங்கித் தேவ வீரர்கள் மீதெறிந் தார்கள். அதன்மேல் அவ்வாயிரம் வீரர்களுமோ அவைகளைக் கூர்மையான பாணங்களாற் சேதித்தும் பின்னுமவ்வசுரர்கள் மீது மகா கோரங்களான வாக்கினேயாத்திரங்களைப் பிரயோகித்தார்கள். அவைகளாற் சில வசுரர்கள் மெய்பிளக்கப்பட்டுஇரத்தத்தைத் தாரைதாரையாகப் பெருகவிட்டுக் கொண்டு மூர்ச்சையடைந்தார்கள். உடனே ஓ! கோ! யுத்தமதிற் கர்வம் கொண்ட மகா பலிஷ்டர்களான அவ்வீரர்கள் துரிதமாகப் பொத்தென்று பூமியிற் குதித்து வேறு இரதங்களேறி மறுபடியும் அநேக பாணங்களை வருஷித்தார்கள். பின்பு அசுரர்களச்சரங்களால் மிகவும் நொந்து மகா கோபம் கொண்டவர் களாகி மறுபடியும் சன்னத்தர்களாகி ஜடிதியில் அவர்களது விற்களை முறித்து விட்டார்கள்.

## 20-வது அத்தியாயம்.

திரும்பவும் அவர்களுக்கு மிதமற்ற யுத்தமுண்டாயிற்று. அப்போது தேவர்களசுரர்களால் மிகவு மடிக்கப்பட்டவர்களாகித் துயரமடைந்தார்கள். பிறகு ஸ்ரீ மகேசுவரனிடமிருந்தோர் வில்லையும் பாணங்களால் நிறைந்த ஓரம்பறாத்தூணியையும் வரத்தால் பெற்றவனும் அவர்களி லோர் மகா பலசாலியும், வீரனுமான விலக்ஷ்மி விலாசம் பொருந்திய விஜயனென் றவன் மகா கோபத்தோடவ்வசுரர்கள் மீதம்புகளைத் தொடுத்தான். அவ் வாறவனு லெய்யப்பட்டவம்புகள் சடிதியிலவர்களது தலைகளைக் கொத் திக் கொண்டு அத்தலைகளுடனே கடல் மீது நான்கு பக்கங்களிலு மிங்குமங்கு மாப் பரவி விழுந்தன. உடனே யோர் நொடிக்கெல்லாம் அவ்வசுரர்கள் பின் னும் தலைகள் முளைக்கப்பெற்றவராகி யப்போது மிகுந்த கர்வத்தோடு கூச்ச லிட்டுக்கொண்டு தங்கள் ஆயுதங்களா லத்தேவனோடு யுத்தம்செய்தார்கள். பிறகவ்வீரன் கடுஞ்சினங்கொண்டவனாகி மிகுந்த சிங்கநாதத்தால் அவர்களை யதட்டிக்கொண்டு பயங்கரமான கணைகளாலவர்களது, கை, கால், தலை முத லிய வுறுப்புகளைத் திரும்பவும் கண்டித்தெறிந்தான்.

பிறகு அதேவிதமாய் அவ்வெல்லாவுறுப்புகளும் மறுபடி முளைக் கலாகிப் பாதகர்களான அவ்வசுரர்கள் சத்துருக்களால் ஜயிக்க மாளாத அவ்விஜயன்மீது கொடுமையான சரங்களைப் பிரயோகித்தார்கள். இவ் வாறு பலிதமாகத் துண்டிக்கப்பட்ட தலைகளெல்லாம் மறுபடி முளைக் கக் கொண்டவர்களான அவ்வசுரர்களைப் பார்த்து விஜயனானவன் மன தினிலாலோசித்துக் கொண்டு, ஓ! மகா புயங்களைக்கொண்டவரும் ஸகல வசுரர்களையும் தொம்ஸம் செய்பனுற்றவருமான ஸ்ரீ குஹபிரானே! ஓ! சுவாமி! யான், கை, கால், தலை முதலிய வுறுப்புகளைக் கண்டிக்கக்

கண்டிக்க் விம்மாயாவிகளான அசுரர்கள் அவைகளை மறுபடி முளைக்க்க் கொண்டவர்களாகித் திரும்பவும் அவ்வெல்லோர்களு மேக காலத்தில் ஒரேமுட்டாய் ஏகோபித்துக் கொஞ்சமேனும் மனம் சலியாமல் எந்தனுடன் சண்டை யிடுகின்றார்களே! இதற்கு யானென்ன செய்வேன்! என்று மனத்துயரப்பட்டுக் கொண்டு ஹிருதயத்தில் ஸ்ரீ வடிவேலதனைத் துதிக்கையில், பார்வதிமைந்தனான அப்பகவான் உடனே யவன்முன் ஸான்னித்தியராகி ஓ! விஜயா! இதோ உந்தனுக்கிப்போதே யெமதாக்கினையின்படி வெற்றியுண்டாகும். கொடிய நடத்தையையுடைய விப்பாதகர்கள் பிரம்மனிடமிருந்து வரன் பெற்றவர்கள். யாதாமொரு பலவான் ஒரே பாணத்தினால் இவ்வெல்லோர்களுடைய தலைகளையு மொரேகாலத்தில் சடிதியாகக் கண்டிக்கின்றானோ அப்போது தானவர்களுக்குச் சாவுண்டாகும். இவர்களில் யாவனொருவனாயினும் விடுபட்டால் அப்போதவர்களுக்குச் சாவு நேரிடாது. ஆகையால் கேளாய்! வீரா! நீ ஒரேயம்பினாற் சடிதியில் இவ்வெல்லோர்களுடைய தலைகளையும் கண்டித்து இவர்களைக் கொல்லலாவாய்; ஓ! எமதாக்கினை மிகவும் வலியதல்லவோ! என்று திருவாக்கருளி, யாதொன்றினால் பிரம்மனுடைய தலை கண்டிக்கப்பட்டதோ அப்பேர்க்கொத்ததும் சத்துருக் கூட்டங்களுக்கு மகா பயங்கர முள்ளதுமான பைரவாத்திரத்தை யவனுக் கீந்தருளிவிட்டு பார்வதி செல்வனான அப்பகவானுடனே மறைந்தளிருனர்.

பிறகு ஸ்ரீ கந்தனிட மிருந்து அத்திரம்பெற்ற அவ்விஜயன் மிகுந்தவட்டகாஸம் பண்ணிக்கொண்டு ஸகல சத்துருக்களையும் சமுகரிக்கலுற்ற மகா பயங்கரமான அவ் வத்திரத்தைப் பிரயோகம் செய்தான். உடனே யவ்வத்திரமானது அநேக பைரவமூர்த்தி யுருவங்களாகி பல கிளைகளாக வேறுபட்டு ஸகல சத்துருக்களையும் நடுநடுங்கச் செய்துகொண்டு துரிதமாய்ப் புறப்படுகையில் அது கண்டு மகா கைக்காரனான வசுரச் சிரேஷ்டனாகிய மத்தனென்பவன் அதைத் தடுப்பதற்காக மகா கோபத்தோடு துரிதமதில் மாயாத்திரத்தைப் பிரயோகிக்க, அதனை அவ்வத்திரம் கொஞ்சமேனும் சட்டைபண்ணாமல் கண்டித்துவிட்டு மகா வேகத்தோடு ஒரே தடவையில் அவ்வெல்லோர்களுடைய தலைகளையும் கண்டித்து அவ்வசுரர்களைக் கொன்று போட்டது. ஓ! பிராம்மணோத்தமர்களே! அம்மூவாயிரம் அசுரர்களும் மடிந்தவுட னவ்விஜயன் மிகுந்த மனமகிழ்ச்சி கொண்டவனாகி ஸ்ரீ முருகேசன் துதியை ஜபித்தான். சகல பூதர்களும் பயங்கரமாகப் பெருங் கூச்சலிட்டார்கள். அப்போது தேவர்கள் மிகுதியாக மலர்மாரி சொரிந்தார்கள். அவையெல்லாம் கண்டு தூதர்கள் சூரனிடமோடிச் சொன்னார்கள். அது கேட்டுச் சூரன் துக்கக் கடலில் ஆழ்ந்தினன்.

அப்போது மந்திரிகளிற் சிரேஷ்டனான பெருமை பொருந்திய தருமகோபன் என்பவன் அச்சூரபத்துமனை நோக்கி, ஓ! சுவாமி! தன் பிள்ளை! தந்தை! சகோதரன் முதலிய பந்து வர்க்கங்கள் இறந்த போதிலும் மகா வீரியபராக்கிரமங்களை உடையவர்கள் இவ்வாறு துயரப்படுதல் தகாதல்லவோ? அதிலும், ஓ! எக்காலத்தும் எல்லாவற்றை

யும் கொடை கொடுக்கலுற்ற பிரபுவே! தேவரீரோ அசுரச் சிரேஷ்டனும் மகா புத்திசாலியும், ஸகலர்களுக்கும் வேந்தனும், மகா மகிமை கொண்டவருமானவர்! ஆகையாலிவ்வாறு துயரப்படுதல் தேவரீருக்குத் தகுதியல்ல. சகலருடைய உயிர்களையும் அபகரிக்கின்ற யமன் நம் கைவசத்திலிருக்கின்றான். போன உயிரைக் கூடச் சிருஷ்டிப்பதற்குப் பிரம்மனுமிருக்கின்றான். தவிரவும், ஐசுவரியம், வீரியம், இந்திரவிமானம் சேனைகள், மகா வீரர்களான மந்திரிகள் முதலிய வெல்லாமிருக்கையில், மகா பிரபுவே! தேவரீருக்கு யாது குறைவிருக்கின்றதென்று, மகா புத்திசாலியான தருமகோபன் துக்கமடைந்த மகா சூரனாகிய சூரபத்துமனை யிவ்வாறு வசனங்களால் சமாதானப் படுத்தினான். அவ்வசனம் கேட்டு அசுரவேந்தன் துக்கத்தை விலக்கியவனாகி யாமே சென்று அவ்வெல்லோர்களையும் சீக்கிரத்தில் ஜயித்துத் திரும்பிவருவோமென்று பெருமை பொருந்திய தருமகோபனை நோக்கி யுரைத்துப் புறப்படுகையில் மகா புத்திசாலியான அத்தருமகோபன் வசன முரைத்ததாவது:—

ஓ! பிரபுவே! தேவரீரது ஊழியர்களாகிய யாங்களெல்லாருமிருக்கையில் இவ்வற்பர்களைப் பாராட்டி தேவரீர் செல்வது தகுதியல்ல. ஓ! அசுரேசா! தேவரீர் கட்டளையைச் சிரசிற்கொண்டு யான்சென்றிங்கு வந்திருக்கலுற்ற எல்லா சத்துருக்களையும் ஜயித்து விடுகின்றேன். என, சூரனுமவ் வசனங் கேட்டதில் மிகவானந்தங் கொண்டப்படியே நல்லதென்று அவனை யனுப்பிவிட்டுத் திரும்பவும் சிங்காதனமேறினன். பிறகு தருமகோபன் பலபல சிறந்த வத்திரங்களை யெடுத்துக்கொண்டு புண்டரீகமென்ற திக்கஜத்தின் மீதேறியவனாகி வேறு நிகரற்றவனாகவும், துவஜங்கள், குடைகள், ஆலவட்டங்கள் இவைகளால் வெயிலை மறைக்கப் பெற்றவனாகி வெளிக்கிளம்பினான். மேலுமப்போது அனேக மந்திரிமார்களும், சதுரங்க சைனியங்களும் புறப்படலானார்கள். ஊழிகால மேககர்ஜனைகளை யொத்த வாத்திய கோஷங்கள் முழக்கப்பட்டன. அவ்வசுரன் இவ்விதமாகப் புறப்பட்டு அங்குள்ள அனேக வீதிகளையும், தாண்டித் துரிதமாக மகா பலசாலிகளான சைனியங்களுடனும், கோரமான யுத்தகளத்துக்கு வந்தான்.

அப்போது அவ்வாறு வருகின்ற அவ்வசுரனைக் கண்டு பூதர்களெல்லாம் வேகத்தோடு கிளம்பிக் கிளம்பிக் குதித்துக்கொண்டு ஸமுத்திரம் போல் மகா பயங்கரமாகக் கோலாஹல சத்தம் செய்தார்கள். பிறகு பயங்கரனான அவ்வசுரன் அச்சத்தங்களைக் கேட்டு மனதினில் மிகவாலோசனை கொண்டவனாகி ஜடிதியில் வில்லை நாணேற்றிக் குணத்தொனி செய்து கூர்மையுள்ள பல வம்புகளை வெகு கோபத்தோடு பூதர்கள் மீது சொரிந்தான். அசுரப்படைகளோடு பூதர் படைகளுக்கும், மந்திரிகளோடு இலக்ஷம் வீரர்களுக்குமாக இருதிறத்தவர்களுமொருவர் மேலொருவர் அனேகம் தேவதைகளுடைய வத்திரங்களை யததன் பெயர்களையும் மகிமைகளையும் கூறிக்கொண்டாடி வருஷிக்கலாகி மிகவமக்ள்

மும், பயங்கரமுமான கொடிய யுத்தம் நேரலாயிற்று. அப்போதெல்லாவீரர்களும் அதிசீக்கிரத்தில் வரலுற்ற யெமதூதர்கள் போற் சடிதியில் வந்தவர்களுடைய உயிர்களை வாங்கிச் சென்று விட்டார்கள். அப்போது தரும கோபனும் மகா கோபத்தோடு சிங்கநாதத்தால் பயமுறுத்திக்கொண்டு பூதசைனியங்கள் மீது அனேகம் கொடிய கணைகளைச் சொரிந்தான். ஓ! கோ! புண்டரீகமென்ற யானையும்கூட மற்ற சத்துருக்களைக் கொல்லலாயிற்று. அதன்மேல் வீரர்கள் அவ்வியானை மீது அனேகம் கணைகளைத் தொடுக்க, அத்திக்கஜம் உடல் முழுதும் இரத்தம் பெருகப்பெற்றதாகி மிகுந்த கோபத்தோடோர் கோரமான விரும்புலக்கையை யெடுத்துக்கொண்டு அதனால் மகா வேகத்தோடு எல்லாப் பூதர்களையும் இடிக்க அவர்களிற் சிலர் மூர்ச்சைகொண்டார்கள். சிலரோட்டம் பிடித்தார்கள்.

அது கண்டு வீரர்களுக்கதிபரான வீரபாகுவானவர் கோபம் கொண்டு அவ்வியானை மீது ஜடிதியில் அனேகம் சரங்களைத் தொடுக்க, அப்பாணங்கலாலடிபட்ட மாத்திரத்தில் அவ்வி யானை கொஞ்சம் பலவீனம் கொள்ளலாயிற்று. ஓ! பூதேவர்களே! அது கண்டு தரும கோபன் அக்கஜராஜனையடக்கிவிட்டு அவ்வீரன் மீது கோபத்தோடு பத்திலக்ஷம் பாணங்களை வருஷிக்க அப்போதத் தேவசிரேஷ்டர் சத்துருவின் பாணங்களாலடிபட்டு மேனியெங்கு மிரத்தம் பெருகலுற்றவராகியோர் நொடிநேரம் தேரின் கண்ணேயிருந்தார். மறுபடியும் மகா திறமையுடைய அவ்வசுரச் சண்டாளன் அவர் மனம் நொந்திருப்பதை யறிந்து மிகுந்த வோசையால் பயங்கரமானவோர் வேலைப் பிரயோகித்தான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிற்பாடு வீரபாகு துரிதமாகவெழுந்து சமீபத்தில் வரலான அவ்வேலை யோரம்பாலே தூள்தூளாக்கி விட்டுப் பின்னும் சில சரங்களால் மகா கெட்டியான அவனது கவசத்தைப் பிளந்தெறிந்தனர். அப்போதசுர மன்னன் மந்திரியான அத்தரும கோபன் கவசமிழந்தவுடன் கோபம் கொண்டு இயமன் தண்டாயுதத்தைப்பற்றியது போலோர் பெருந்தண்டாயுதத்தை யெடுத்து அவர் மீதெறிய அவ்வீரன் அது விழுந்தவுடன் ஓர்நொடி நேரம் துயரம் கொண்டனர். தவிரவும் மகா சூரன் தன் வீராவளி, பலம், சௌரியம் இவைகளைக் கூறிக்கொண்டடு அத்தேவமன்னன் மீது மகா தீக்ஷணமான வனேக நாராசங்களை வருஷித்தான். வீரனுமுடனே யவன் மீது கோபத்தோடனேகம் அத்திரங்களைப் பிரயோகித்துப் பிறகவனது மாறுதலானக் கொடுந்தன்மையையாலோசித்து நிகரற்றதனது வேலைப் பிரயோகிக்க அதனை அத்துராத்மனுகிய வசுரன் கண்டித்து விட்டனன். ஓ! கோ! இது மிகவும் கஷடம்! அது கண்டு வீரபாகு கடுஞ் சினங்கொண்டவராகி மறுபடியோர் நொடி நேரத்துக்குள்ளாக கற்பாரையினிலும் அதிக கெட்டியான அவனது மார்பை யத்திரத்தினல் பிளக்கலானர்.

அப்போதே யவ்வசுரன் அவ்வி யானையின் கழுத்தின் பேரிலே மூர்ச்சையடைந்தான். உடனே யம்மகா கஜமானது கோபாவேசம் கொண்டதாகியோர் திடமான உலக்கையை யெடுத்து, அதனால் அவ்வீரபாகுவின் ஸாரதியை

யடித்துக் கொன்று விட்டது. பின்பு தேவனுக்கிரகவசத்தினால் தேரினின்று துரிதமாயிறங்கி யவ்வியானையைக் கன்னத்தினிலோர் அறையறைந்து அதனை யுயர வெறிந்தனர். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது தரும கோபனுடைய அக்கஜராஜனானது ஸ்ரீ பரமேசுவரனால் அடியுண்ட கஜாசுரன் போல் பூமியில் விழுந்தோர் நொடிக்குள் மூர்ச்சை யடைந்தது. அதன்மேல் மகா பாதகனாகிய அவ்வசுரன் திரும்பவும் துரிதமாக வெழுந்து மிகப்பெரிய தானவோர் தண்டத்தை யெடுத்து அவரது நெஞ்சினில் அடிக்க, அதனை யவர் மகாகோபாவேசங் கொண்டவராகி கையினாற்பற்றி முறிந்தெறிகையில் அதனை அசுரச் சிரேஷ்டன் கண்டு பெரியதான வஜ்ஜிராயுதத்தைப் பிரயோகம் பண்ணினான். அப்போதத் தேவன் அதற் கெதிராகவேயோடியதனைக் கைதனிற் பற்றிக் கொண்டு மகா கோபத்தோடு அவ்வசுரப் பாதகனை யடித்துப் பிறகு அவன் பூமியில் விழுந்தவுடன் அவர் காலினால் துகைக்க அவ்வசுரன், வாயினா லிரத்தத்தைக் கக்கிக்கொண்டு மடிந்தான். பிறகு, மற்ற வசுரர்கள் அவ்வசுர மந்திரி மரணமடைந்து விட்டது கண்டு அவ்வீரபாகு முன்னிலையில் நிற்பதற்கு முற்றும் திறமையற்றவர்களாகி ஆயுதங்களை நான்கு பக்கங்களிலுமெறிந்து விட்டு மிருந்த மனவியாகுலமுற்றுக் கூந்தல் முடியவிழலாகி வேகத்தோடு துரிதமாயோட்டம் பிடித்தார்கள்.

## 21-வது அத்தியாயம்.

பிற்பாடு புண்டரீகமென்ற திக்கஜமானது மூர்ச்சை தெளிந்தெழுந்து வீரபாகுவண்டை வந்து வந்தனித்து, மிகவினயத்தோடவரை நோக்கியுரைத்ததாவது:—ஓ! மகா பலவானாகிய தேவனே! அடியேன் திக்கஜங்களில் தலைவனென்பதை விண்ணப்பம் செய்து கொள்ளுகின்றேன். அப்பேர்க்கொத்த என்னை இத்துராத்துமன் பிடித்து வந்து விலங்கிட்டு வைத்து அவனுக்கு வேண்டியபோது தறித்து விட்டு எந்தன் மீதேறிக்கொண்டு வேண்டிய விடங்களுக்குச் செல்வான். அப்படியவனது உத்திரவுக்கமையாவிடில் அப்போதவன் எந்தனைக் கொடுமை செய்வான். ஓ! தேவேசா! அப்பேர்க் கொத்த அப்பாதகனைக் கொன்று தேவரீர் இப்போதெந்தனைச் சுயேச்சையாக விடுவித்தீர். ஓ! கருணைக் கடலான தேவரக்ஷகரே! தேவரீர் மகிமையை யறியாமல் மூடபுத்தியுடைய எந்தனால் அளிக்கப்பட்டபெரும் பிழையை மன்னித்தருள வேண்டும். நானிப்போது தேவரீராக்கினையின் பேரில் முன் போலெழுந்துளன்னிருப்பிடம் சென்று வசித்து வருகின்றேனென்று மிகவேழ்மை வார்த்தைகளாலுரைத்துஅடிக்கடி வந்தனம் செய்தது.பிறகு வீரபாகு வப்படியே நல்லதென்று அக்கஜேந்திரனையனுப்ப, கேளீர்! தரணித் தேவர்களே! அக்கஜம் விடைபெற்றுத் தனதிருப்பிடத்திற்குச் சீக்கிரம் சென்றது. அப்போது தெவரெல்லாரும் ஆநந்த மடைந்து வீரன் மீது மலர்களைச் சொரிந்தார்கள். சைனியங்களும் மிகவுற்சாகம் கொண்டவைகளாகி யெழும்பி யெழும்பிக் குதித்து மிகுந்த வட்டகாசம் செய்தன. சூரபத்துமன் இச்சங்கதியெல்லாம் தூதர்முகமாய்க் கேட்டு அதிக துக்கமடைந்து மிகவுமாலோசனை கொண்டான். ஓ! பிராம்மணோத்தமர்களே! அவ்விரவானது (மாயாத்திரத்தினின்று வீரபாகு

முதலியவர்கள் திருவேலினால் விடுவிக்கப்பட்டது (முதற்கொண்டு) அநேக மசுரர்களை இயமலோகத்திற் கொண்டு நிலைநிறுத்திவிட்டுத் தானுமப்போது தான் முடிவடைந்தது. பிற்பாடு பானுகோபன், சென்றதினத்தில் மாயாத்திரத்தைப் பிரயோகம் செய்துவிட்டுத் துரிதமாய் தன் விடுதி சேர்ந்தது முதலாய் அம்மகாசூரன் தன் தூதர் முகமாய் தருமகோபன் மரணமடைந்ததையும் இங்கு வந்திருக்கலுற்ற தேவச் சிரேஷ்டர்களால் நகரம் கொள்ளைகொண்டதும், முதலான சகல விருத்தாந்தங்களையும் கேள்வியுற்று உள்ளமதிற் பெரும் துக்கத்தினால் மிகவும் பற்றியெறிவோனாகித் தன் வீட்டைவிட்டு வெளிக்கிளம்பி யோர்நொடிக்குள் தன் தந்தைமனை யடைந்து தகப்பனாகிய சூரபத்துமனை வந்தனித்து அப்போது வசனமுரைத்ததாவது:—

கேளீர்! அப்பா! நம்மால் இம்மகாபலவான்களைப் போர்தனில் வெல்லமுடியாது. மகா பராக்கிரமசாலியான தேவரீர் கூட வம்மிகுந்த பலவான்களா லவமானம் செய்யப்பட்டீ ரல்லவோ! மேலும் யாம் தேவர்களை யிம்சித்தது பற்றி யக்கந்தனாலே நமது சைனியமெல்லாம் கொல்லப்பட்டன வென்று யானுரைக்கக்கூடவில்லை! ஆனாலோ! பல வசுரர்கள் கேவலம் பயத்தினாலே மடிந்துவிட்டார்கள். ஓ! அசுரவேந்தனே! யாம் பிழைத்துத் தப்புவதற்குற்ற காலமெப்போதென்றால் யாம் கட்டிவைத்திருக்கிற தேவர்களை யிப்போதாயினும் விட்டுஅவ் வடிவேலனை வந்தனித்ததின்பேரில் அப்பகவானும் பிரஸன்னரானா லப்போது தான் நமக்கிங்கு நிலையுண்டாகுமென்று மைந்தனால் உரைக்கப்பட்ட அவ்வசனங்களைக் கேட்டதி லப்போதசுரன் வெகு கோபம் கொண்டு மிகவும் ஜுவலிக்கலுற்றவனாகி வசனமுரைத்ததாவது:—

அடா! பயலே! பிரம்மன், விஷ்ணு முதலிய ஸகல தேவர்களாலும் வணங்கித்துதி கூறப்பெற்ற யாம் தொண்டைக்குழியி லுயிர்வந்தாலும் பிடித்த காரியத்தைக் கைவிடோம். அவ்வாறு கைவிடில் மிகுந்த அபகீர்த்தியுண்டாகும். அடா! மூடா! நீ இங்கு மிகுந்த பயங்காளியாகின்றதால் இப்போதெங்காகிலும் தொலைந்து தூங்கலாவாய். யாமே நேரிற்சென்று போர்முகத்தில் வரும் அச்சத்துருக்களை யெல்லாம் ஜயித்து வருகின்றோ மென்ற சூரன் வசனங்களை யவன் மைந்தனான பாநுகோபன் கேட்டு, ஓ! அப்பா! யான் வஞ்சகமா யவ்வாறுரைத்தேனேயின்றி வேறில்லை. ஆகையா லென்தனை மன்னிக்க வேண்டும். ஓ! தந்தாய்! யான் தேவரீர் பலத்தைக்கொண் டிப்போதே சகல சத்துருக்களையும் ஜயித்துவருகின்றேன் என, அசுரமன்னன் அவ்வாறு வசனங்களால் மிகவும் களிப்புற்றவனாகிச் சத்துருக்களைக் கொல்லலுற்ற பானுகோபனை யுத்தம் பண்ணுவதற்காக அனுப்பினான். பிறகு பலவானான பானுகோபன் தன் விடுதிசென்று அனேக தேவாஸ்திரங்களையும் உரை போடப்பட்ட பற்பல இரதங்களையும் சேகரித்துக்கொண்டு தான் மகா வுன்னதமானவோர் தேர்மீதேறிக்கொண்டு மிகுந்த வாத்தியங்களின் முழக்கங்கள், நேர்த்தியான துவஜங்கள், குடைகள், அனேக மசுரப்படைகள் இவைகளால் நன்கு சிறப்புற்றவனாகித் தன் சகோதரன் மீதுள்ள நேசவாசையால் துக்கப்பட்டுக் கொண்டே தனக்கும் மரணத்தையே நிச்சயித்தவனாகி வீதிகளைக் கடந்து

யுத்தரங்கத்துக்கு வந்தவுடன் அங்கு மரித்துக்கிடக்கின்ற தன் தம்பிகளான மூவாயிர வீரர்களையும் இன்னும் சுற்றுபக்கங்களில் விழுந்து கிடந்த மற்ற பல வசுரர்களையும் கண்டு மிகுந்த துக்கபாரத்தினால் ஆக்கிரமிக்கப்பட்டவனாகி மிகுந்த கோபத்தினால் ஜுவலித்துக்கொண்டு 'ஓ! அப்போர்க்கொத்த இச்சத்துருக்களைப் போர்முனையிற் சடிதியிற் சமுகரித்து விடுகின்றேன்; இல்லாவிடில் எந்தனை யிங்கெல்லா ஜனங்களும் காமவிகாரம்கொண்ட தரித்திரன் விலைமகளுக் காசைப்படுவதை நிந்திப்பதுபோ லெந்தனை யிகழ்வார்களென்று அசுரன் மனதுக்குள் உரைத்துக்கொண்டு சத்துருக் கூட்டமடைந்தான். பிறகு பூதர்களெல்லாம் இம்மகாசுரனைக் கண்ணுற்று, ஆ! ஆ! அநேகம் கொடிய சேனைகளுடன் இதோ வேகத்தோடு மகா பயங்கரமாய் வருகின்றானே! இப்பாதகன் யாவன்? என மனக்கவலை கொண்டவர்களாகி மகா கோபத்தோ டவ்வசுரப்படையை யெதிர்த்து நின்றார்கள். ஓ! பிராம்மணோத்தமர்களே! அப்போது, மரங்கள், மலைகள், கற்பாறைகள், கதைகள், இரும்புலக்கைகள் இவைகளை யொருவர்மீ தொருவர் வருஷித்துக்கொண் டிருதிறத்தார்களுக்கும் மிகுந்த யுத்தம் நேரலாயிற்று. அவற்றில் மிகுந்த பல பராக்கிரமங்களுடைய வநேகம், சூரர்கள் மடிந்தார்கள். அநேகம் தலையற்ற முண்டங்கள் மகா பயங்கரமா யெழுந்து கூத்தாடின. மாமிசவாசையா லனேகம், நரிகள், காக்கைகள், கழுகுகள் இவையெல்லா மங்கு வந்து கூடின. இவ்வாறு பயங்கரமான யுத்தம் நேரிடுகையில், பூதர்கள் அசுரர்களுக் கெதிரில் நிற்கத் திறமையற்றவர்களாகி நான்கு பக்கங்களிலு மோட்டம் பிடித்தார்கள். பிற கப்போதே பூதசேனாதிபர்கள் வந்து கோபத்தோ டவ்வசுர பாதகர்களை யத்திரங்களால் மர்மத்தலங்களைப் பிளந்து மிகுதியா யுத்தம் செய்தார்கள். அப்போதசுரர்கள் உடலறுபட்டவர்களாகி ஓடத்தலைப்பட்டார்கள். அவர்களைக் கண்டு மகா பாவியான பானுகோப மகாசுர னனேக மகாத்திரங்களை விட்டு யெதிரிகளாற் எறியப்பட்ட மரங்களையும், மலைகளையும், தூள்தூளாக்கி யதிககோபத்தோடு மிகுந்த சிங்கநாதத்தாற் பயமுறுத்திக்கொண் டப்படைத்தலைவர்கள்மீ தனேக மாக்கினேயாத்திரங்களைப் பிரயோகித்தான். அப்போதப் படைத் தலைவர்கள் போரினில் அவ்வத்திரங்களைச் சகிக்கமுடியாம லிரத்தங்களைத் தாரைதாரையாய்ப் பெருகவிட்டுக்கொண்டு தெறிபட்டோடினார்கள். அதுகண்டு வீரபாகு தம் தேரை யோட்டச்சொல்லி வேகத்தோ டெதிர்த்துவந்து வில்லைவளைத் தனேகங் கணைகளைத் தொடுத்து அசுரனால் விடப்பட்ட வேராளமான வாயுதங்களையெல்லாம் கண்டித்தெறிந்து பின்னர் அம்மகா பலவா னங்கு சண்டைபோடலான பல வசுரர்களையும், கொன்றுபோட்டனர். அதன்மேல் பானுகோபன் அவ்வீரனை நோக்கிக் கோபத்தோ டுரைத்ததாவது:— அடா! தூதா! நீ முந்தி பல வசுரர்களைக் கொன்றுவிட் டோடிப்போனாயல்லவா! மறுபடி யிப்போதுகூட நீ நம்முன்னர் நேர்ந்தபிற கெங்கோடப்போகிறாய்? அப்படி யெங்காகிலும் தப்பியோடினு முந்தனை நிச்சயமாகச் சமுகரித்து விடுகின்றேனென் றிவ்வாறாக வக்கேடுகெட்ட வசுரன் தனது வீரத்தன்மையைக் கொஞ்ச முரைக்கலாயினன்:—

அப்போது பலவானன வீரபாகுவானவர் வசனமுரைத்திட்டதாவது:—'அடா அசுரா! நாமிருவரு மிப்போதங்கு பயங்கரமாக யுத்தம் செய்வோம்; வெற்றியையும், தோல்வியையும் சகல தேவர்களும் பார்க்கட்டும், அடா! துராத்துமாவே! வீண்வாதினுலென்ன பயன்? நம்மோடு நின்று யுத்தம் பண்ணடா, வென்றுரைத்த மாத்திரத்தில் பானுகோபன் மகா கோபம் கொண்டவனுகி யப்போது வீரன் மார்புதனிலாயிரம் சரங்களைப் பிரயோகித்தான். அதன் மேல் யுத்தமதிற் கர்வம்கொண்ட வீரபாகுவும் கடுஞ்சினம் கொண்டவராகி யவனது புயங்கள் மீதாயிரம் கணைகளைத் தொடுக்க, அவைகளையும், அவர் அம்பறுத்தூணியையும், அசுரன் நூறம்புகளாற் சேதித்துவிட்டனன். பிறகு வீரன் மிக வாக்கிரத்தோடு கோலாஹலச் சத்தம் பண்ணிக்கொண்டு அசுரனது நெற்றிதனில் ஜுவலிக்கலுற்ற தனது வேலை சடிதியிற் பிரயோகிக்க, அது விழுந்ததாலசுரன் கொஞ்ச நேரம் களைப்படைந்தான். பின்னுமப்போது தேவராஜனன வீரபாகு வாயவ்வியாத்திரத்தை சந்தானிக்க, மகா பலவானன அவ்வசுரனு மதேயத்திரத்தைவிட்டு அதனைக் கண்டித்தான். பின்பு தேவன் துரிதமாயாக்கினேயாத்திரத்தை யவ்வசுரனைக் குறித்துப் பிரயோகிக்க, அதனையுமவன் அதே யத்திரத்தினுல் கண்டித்துப் பின்னும் கோபத்தோடு சூரியாத்திரத்தைவிட்டனன். பிறகு வீரபாகுவுமதனை யதேயத்திரத்தினுல் வீண் செய்ய, பிற்பாடசுரனத் தேவேசனை யாக்கிரத்தோடு பயமுறுத்திச் சகலர்களையும் சமுகாரம் செய்யலுற்ற பிரம்மாத்திரத்தைப் பிரயோகித்தான். அதன்மேல் மகா பலவானன வீரபாகு வதனையு மதேயத்திரத்தினுற் பழுதாக்கினர். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இவ்விதமாக வத்திரங்களெல்லாம் வீணனபொழுது அசுரமன்னன் மகாகொடியதும் மகா பயங்கரமானதுமான நாராயணுத்திரத்தை வீரபாகு மீது வெகு கோபத்தோடு துரிதமாய்ப் பிரயோகிக்க, அவ்வத்திரம் மகா கோரமாய்ச் சகல திக்குகளையு மொளிப்பித்துக் கொண்டு வெளிப்பட்டு வரலானதை வீரபாகு கண்டு கோபத்தோடதே யத்திரத்தைச் சடிதியிற் சந்தானித்தவுடனவ் விரண்டத்திரங்களு மொன்றோடொன்றடித்துக் கொண்டு சும்மாவிருந்தன. அதற்குமேல் பானுகோபன் மிகுந்த கோபத்தினுல் பற்றியெரிவோனுகி, ஓ! யாம் சகல சத்துருக்களையும் சமுகாரமும் செய்யலுற்ற ஸ்ரீ பாசுபதாத்திரத்தைப் பிரயோகித்தாலவனு மதேயத்திரத்தைப் பிரயோகிக்கலாவானென்று மிகவுமாலோசனை கொள்ளலானுன்.

## 22-வது அத்தியாயம்.

அம்மாயாவியானவன் அவ்வாறு யோசித்த பிறகோர் க்ஷணத்துக்குள் மாயையினுல் மறைந்து கொண்டு தேவேசனுக் கிருபக்கங்களிலும், முன்னிலும் பின்னிலும் வட்டமிட்டுக் கொண்டே யவர் திருமேனியிலனேக மத்திரங்களை வருஷித்தான். அப்போது வீரபாகு இரத்தம் பெருந்தாரைகளாகப் பெருகக் கொண்டவராகி, ஓ! கோ! அத்துராத்தும னிப்போதெங்கிருந்து கொண்டு நம்மீது பாணங்களைத் தொடுக்கின்றுன்? பாணங்கள் விழு

வதுமட்டில் தெரிகின்றதே யன்றியவன் காணப்படுகிறானில்லை. என்று திக்கு விதிக்குகளிலங்கு மிங்கும் பார்த்து மனக் கவலைகொண்டு நின்றனர். அப் போது தேவர்களும், பூதர்களும், சேனாதிபர்களும் மிகவும் பயமடைந்தார் கள். பிறகு வீரன் சற்று நேரத்திற்குள் எத்துராத்துமனுடைய மாயையை யறிந்து ஸகல மாயைகளையும் தொலைக்கவுற்ற விஞ்ஞானாத்திரத்தைப் பிர யோகிக்க அவ்வத்திரத்தின் மகிமையாலவன் வானமார்க்கத்தில் தேர்மீது வீற்றிருப்பதைக் கண்டு வீரன்மகா வாக்கிரகம் கொண்டவராகித் தேரோ டங்கு சென்றவுடனப்போதவ் விருவர்களுக்கும் மகா பயங்கரமான கொடிய யுத்தம் நேரலாயிற்று. அவரவர் தேரை நான்கு பக்கங்களிலு மிங்குமங்கு மாக இடசாரி, வலசாரியாய்ச் சுற்றிவிட்டுக் கொண்டும், கோடையிடிபோ ன்ற சத்தங்களோடிருவரும் சரமாரி பொழிந்து கொண்டும் "அடா உன்னால் கூடிய பாணங்களை விடு ; நம்முன்னர் நீ யெம்மாத்திரம்? உந்தனைக் கொன்று போடுகின்றோ" மென் றொருவருக் கொருவருரைத்துக் கொண்டே பல சரங்களைச் சொரிந்து கொண்டும், பிறகு மிகுந்த கோபத்தோடு சடிதி யிற் சபதம் செய்து கொண்டும், ஒருவருக்கொருவர் தம் தம் பெயர்களை யெடுத்துச் சொல்லி வீராவளி கூறியும், ஒருவர் மற்றவர் அத்திரங்களைக் கண்டித் தொருவருக்கொருவர் அதட்டியும், ஒருவ ரத்திரங்களை யொரு வர் பழுதாக்கி விட்டொருவரை யொருவரேசியும், சந்தோஷத்தினாலெக் காளித்தும், மற்றவர் பெயரைக் கூப்பிட்டும், மகாகோலாகலத்தினால் மிகுந்த சத்தத்தோடு சங்கத்துவானம் செய்தும், பொறாமையாற் கொடிய வார்த்தைகளா லொருவரை யொருவரதட்டியு மிவ்வாறாக வத்தேவேசர் அசுரேசரிருவர்களுக்குமப்போது கொடிய யுத்த முண்டாயிற்று. அப்போது விழலான பாணங்களால் பூமியெல்லாம் மறைக்கப்படலாயிற்று. மேலுமப் போது பராக்கிரமசாலிகளான பல பூதர்களும் அசுரர்களும் மாண்டார்கள் ஆதித்தியன் முதலிய கிரகங்களெல்லா மச்சண்டையை நோக்கிப் பயமடைந் தன. வேகத்தில் வாயுவையும், கொல்வதிலியமனையும், போர்தனிற் சத் துருக்களை மிகவு மெரிப்பதில் பிரளயகாலாக்கினியையும், பிரகாசிப்பதிற் சூரியனையும், மிகுந்த சத்தத்திலிடிகளையும், சத்துருக்களை கோரமாய்ப் பரித பிக்கச் செய்வதில் ஸ்ரீ புரமாற்றானுடைய சரங்களையும் போன்றவைகளான இவ்வித சஸ்திரங்களை யடிக்கடிப் பிரயோகித்துக் கொண்டு அப்போ தவ்விரு போர் வீரர்களும் மிகுதியாக யுத்தம் செய்தார்கள். அப்போது மலை களெல்லா மிச்சரங்களாலே, யடிப்பட்டுத் துணுக்கு துணிக்குகளா யின. மேலும் திக்குவிதிக்குகள், சூரிய சந்திரர்கள், பிரமாண்டம், ஆகாச பாதா ளங்கள் சமுதிரங்கள் இவையெல்லாம் நிறையப்பட்டன. திக்கஜங்கள், பருவ தங்கள் மேகங்கள் இவையெல்லாமங்கங்கு கொளுத்தப்படலாயின. அப் போது பூமியானது அச்சரங்களால் மிகவும் தகிக்கப்பட்டு வெடிக்கலாயிற்று. ஸகல ஸமுத்திரங்களும வற்றலாயின ; ஸகல நக்ஷத்திரங்களு மெரியலாயின. பிரம்மாண்டத் தினிடை வெளியெல்லாம் புழுதித்திரள்களால் சூழ்ந்து கொள்ள ப்பட்டது. அப்போதவ் விருவரும் ஒருவருக் கொருவரனேக மத்திரங்களைச், சேதித்து விட்டார்கள், தேவர்களும், தவசிகளுமவர்களது சண்டையினாச்

சரியங்களைப் பார்த்து ஒ! கோ! இவ்விருவருக்கும் நிகரான வில்லாளிகள் இவ்வுலகின் மீதில்லையே! ஒ! கோ! என்ன வீரியம்! என்ன சௌரியம்! என்ன காம்பீரியம்! என்று மிகவு மாச்சரியப்பட்டார்கள். பிற்பாடு மகாசூரனை பானுகோபனதிக கோபத்தோடாயிரமம்புகளால் வீரபாகுவின் தேரைத் தூள் தூளாக்கி விட்டுப் பெண் சிங்கத்தோடு கூடிய வாண்சிங்கம் காம வெறிகொண்டு கர்ஜனையிடுவதுபோல் கர்ஜனைசெய்தான். உடனே யம் மகா வீரன் பரபரப் புற்றவராகி யத்துராத்துமனுடைய தேரை யாயிரம் சரங்களாற் பொடிப் பொடியாக்கிப் பூமியில் வீழ்த்தினர். மறுபடி யசுரனும் மகா கோபங்கொண்டவனாகி யிருபது சஸ்திரங்களை யவர் மார்பினிற் பிரயோகித்து கேளீர்! தரணி தேவர்களே! அவரை பயமுறுத்துவது போல் கைகளாலிரு தோட்களிலும் தட்டிக்கொண்டு சிங்கநாதமிட்டான். ஒ! கோ! கோ! அவ் வீரன் மகா கோபாக் கிராந்தராகிப் பதினான்கு பாணங்களாலவனது பெரிய தான கிரீடத்தையுடைத்துப் பூமியில் வீழ்த்தினர். பிறகு மிகுந்த வலிமை கொண்ட பாதகனான அவ்வசுரனு மவ்வளவே பாணங்களாலவரது கெட்டி யான கவசத்தை நூறு துணுக்குகளாகப் பிளந்தெறிந்தான். அப்போது வீரபாகு மகா வாக்கிரகம் கொண்டு மிகுந்த வட்டகாசம் செய்தவராகித் தீக்ஷணமான வேழம்புகளாலவனது சிறந்த வில்லைக் கண்டித்து விட்டனர். அவ்விதமாக வில் முறிபட்டவுடன்அவ்வசுரன் புருவ நெறியால் கோணலுற்ற கண்களை யுடையவனாகி, அத்தேவேசன் மீது நிகரற்றதான பிரம்மவேலைப் பிரயோகித்தான்; பின்பத்தேவோத்தமன் அவ்வேலின்மீது தீக்ஷணமான நூறு கோடியம்புகளைப் பிரயோகிக்க, அவைகளையது சடிதியிற் சேதித்துவிட்டு அவ ரதருகினில் வரலாயிற்று. அப்போதத் தேவவேந்தன் அவ்வேலருகினில் வந்து விட்டது கண்டவுடன் ஹிருதயத்தினுள் விளங்கிய வெண்தாமரை மலரின் கண் ஸ்ரீ முருகேசனைத் தியானம் பண்ணிக்கொண்டு உரையிலிருந்த ஸ்ரீ மகேசுவரக் கத்தியைக் கை மீதெடுத்து மகா வலிமையோடதனை வெட்ட, அவ் வேலிருதுண்டுகளானது கண்டு தேவர்கள் சந்தோஷம் கொண்டார்கள்.

தேவேசனுடனே யக்கத்தியை யுரைக்குள் போட்டு நிற்குமளவில் மகா பாவியாகிய பானுகோபனும் அற்புதமானவோர் கத்தியை யெடுத்துக் கோலா ஹல சத்தம் பண்ணிக் கையினாலதனைச் சுழற்றிக் கொண்டே நெருங்கி வரு மளவிலப்போது வீரன் கடுஞ்சினங்கொண்டவராகி யனேகம் சிறந்த பாணங் களா லப்பாதகனுடைய வஜ்ஜிரத்தினும் கெட்டியான நெஞ்சைச் சடிதியாய்ப் பிளந்தும் அதனை யசுரன் கொஞ்சமேனும் பாராட்டாமலிரத்தம் தாரை தாரை யாய்ப் பெருகப் பெற்றவனாகி மகாகோபாவேசம் கொண்டு அவரருகினில் வந்து அக்கத்தியாலவரது தனுசைத் துண்டித்து விட்டு மறுபடியும் மிகுந்த சிங்க நாதம் செய்து அங்கு மிங்கு முலாவுகையிலப்போதத் தேவமன்னனும் தன துசிரேஷ்டமான கத்தியைக் கைக்கொண்டனர். அப்போதக்கினி தேவனையும் யமதேவனையும் போன்றவர்களான கொடியவர்களாகிய அவ்விரு வீரர்களுக்கும் மகா கோரமாகவும் மகா பயங்கரமாகவும் கத்திச் சண்டை நேரிடலா யிற்று. அவற்றிலவ்வசுர பாதகன் துரிதமாய்த் தேவேசன் புயத்தினில்அக்

கத்தியை நாட்டலாகையில் அத்தேவேசுரன் அதனையோர் நொடிக்குள்தட்டி விட்டு வீணுக்கி அவனது வலது தோளை வெட்டிப் பூமியில் வீழ்த்தினர். பிற் பாடசுரன் ரோஷத்தோடு இடது கையால் அக்கத்தியை மறுபடியெடுத்துக் கொண்டு அவரை வெட்ட முயலுகையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவர் அக்கையையும் துண்டித்து விட்டனர். அதன் மேல் அவ்வசுர பாதகன் கோபாவேசம் கொண்டவனுகி அச்சண்டையில் மகா கோரமான மாயாத் திரத்தை யத்தேவேசன் மீது பிரயோகிக்க நினைப்பதற்குள்ளாகவே, கேளீர்! சொளனகாதி முனிவர்களே! அத்தரும மூர்த்தியானவர் பருவதம் போன்ற பெரியதான அவனது தலையை வெட்டிப் பூமியிற் சாய்த்தனர். அவ்வசுரப் பாதகன் யமன் கைவசத்திலகப்படலானது கண்டு தேவர்கள் மிகுந்த சந் தோஷத்தோடு நன்மணம் பொருந்திய மலர்களைச் சொரிந்தார்கள்.

அப்போது பூதர்களும், சிறப்பிக்கலுற்றவராகி, ஓ! இப்போதப் பாத கன் சமுகரிக்கப் பட்டபடியால் நம் சபதம் நிறைவேறலாயிற்று. நாம் நேற் றுதினம்கூட தேவதேவோத்தமனை ஸ்ரீ சுப்பிரம்மணியனை வந்தனிக்கவி ல்லையென்று எல்லோர்களையும் நோக்கியுரைத்து வீரபாகு அவர்களோடு கூட மிகுந்த வாத்திய முழக்கங்களோடு சிறந்த ஹேம கூடபுரம் சேர்ந்து ஸ்ரீ கந்தபிரானது திருமாளிகைவாசலில் தமது தேரினின்றிறங்கி மாளிகை க்குள் சென்று திவ்வியமங்கள மூர்த்தியான ஸ்ரீ முருகேசனைத் தரிசித்து மிகுந்த வானந்தத்தோடும், விநயத்தோடு மனேகம் தடவை வந்தனித்தனர். பின்பு பகவானுனவர் வீரபாகுவைதிருக்கைகளால் தழுவியெடுத்து, ஓ! அப்ப னே! நீ மிகுந்த பிரயாசையெடுத்து கொண்டு அம்மகா பாதகனைக் கொன்று யல்லவோ. நீ யிப்போது மிகவும் களைப்படைந்திருக்கிறாய்; இப்போது நமக்கு மிகுந்த சந்தோஷமுண்டாகிய படியால் ஓ! மகா பலவானுகிய தம்பியான வீர! உந்தனுக்கு வேண்டிய மட்டிலுள்ள வரன்களைக் கேட்டுக் கொள்வாய்; என்று திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீ முருகேசனை நோக்கி வீரபாகு கைகளைக் கட்டிக்கொண்டு வசனமறிவித்துக் கொண்டதாவது:—

ஓ! பிரபுவே! யான் தேவரீரது திருவாக்கினையின்படி யவ்வசுரனைக் கொல்லலானதில் தேவரீரெந்தனுக்குப் பிரசன்னமான துண்மையானுல் எந்தனுக்குத் தேவரீர் பாதார விந்தத்தின் மீது மாறுதபக்தி விருத்தியா கும்படி யருள் செய்யவேண்டும். ஓ! பிரபுவே! பிரம்மன், விஷ்ணு முத லிய தேவர்களின் பதம் வேண்டுவதில்லை. தேவரீரது இருபொன் மரைத் திருவடிகள் மீதுள்ள மகா பரிசுத்தமான பக்தியே போதுமானது என்று வேண்டிக் கொள்ளப்படலான அத்தேவேசன் மகா விநயத்தோடு நின்ற வீரனை நோக்கி, ஓ! தம்பி நம்மீ தழிவற்றதானபரிசுத்த பக்தியானது தேவோத்தமர்களாலு மடையத்தகாதது. ஆனுலப்போக்கொத்த பக்தியானது நம் கருணை வசத்தினுலுந்தனுக்கே யுண்டாகக் கடவதென்று திருவாக்கருளி விட்டு அத்தேவேசன் அவரையும் மற்றெல்லோர்களையுமவரவர் விடுதிகளுக் குச் செல்லும்படி யனுப்ப, அவ்வீரரெல்லோர்களும் ஸ்ரீ வடிவேலனை வந்தனி த்து விட்டவரவர் விடுதிகளுக்குச் சென்றார்கள்,

யாதாமோருவன் இவ்வத்தியாயத்தைத் தினந்தோறும் பக்திச் சிரத்தைகளுடன் படிக்கின்றானோ! எந்த மானிடோத்தமர்கள் வீரபாகுவால் செய்யப்பட்ட, மற்றொருவராலும் முடியாததும், மகா கோரமுமான பானுகோபப் பாதகனது வதையைப் பற்றியதுமான இவ்வத்தியாயத்தின் கதையைக் கேட்கின்றார்களோ! அவர்களுக்குச் சகல சத்துருக்களிடத்தும் ஜயமுண்டாவதோடு ஸகல வேண்டுதல்களும் கைகூடலாகும் என்றும், தரும மார்க்கத்தையே அனுசரித்து வந்த பாண்டவர்கள் இவ் வத்தியாயத்தின் கதையைக் கேட்டுத்தான் சத்துருக்களாகிய மிகுந்த மதம் கொண்ட துரியோதனன் முதலியவரிடத்துப் போரினில் வெற்றி பெற்றார்கள். இவ்விதமாகவே பரசுராமனும் கார்த்தவீரியார்ஜுனன் முதலிய மகா பல பராக்கிரமசாலிகளான சத்துருக்களைச் சண்டை முகத்தில் வெல்லலானார். இதை முனிவர் முகமாய்க் கேட்டே வாலியும் அஞ்சனாதேவிக்கு மைந்தனான ஹனுமாரும் மற்றவர்களால் ஜயிக்கமாளாத சத்துருக்களை வெற்றிகொண்டார்கள்.

## 23-வது அத்தியாயம்.

பிற்பாடு சூரபத்துமன், மைந்தனான பானுகோபனிறந்ததைத் தூதர் முகமாயறிந்ததன்மேல் மிகவும் துக்கப்பட்டுப் பூமியில் மூர்ச்சையாகி விழுந்தான். பிறகு சகல வசுரர்க்கு மதிபனான வச்சூரனுடனே மூர்ச்சை தெளிந்து புலம்பியதாவென்றால்:—ஆ! ஆ! எந்தனருமை மகனான பானுகோபா! ஆ! சூரியனை ஜயித்தவனே! மிகுந்த பல முடையோனே! உந்தனுக்கும் சாவுவந்து விட்டபடியாலிப்போது தேவரெல்லாம் சுகமடையலாயிற்றே! இப்போது குகைகள் மீதொளிந்து கிடக்கின்ற விஷ்ணு கூட அவைகளை விட்டுப் பூமிதேவியு மிலக்குமிதேவியும் கால் பிடிக்கலாகித் திருப்பாற் கடலிற் கவலையற்றுத் தூங்கலாயிற்றே! இந்திரனு மிந்திராணியோடு கூட மறுபடி சுவர்க்கலோகத்தில் சுகித்து வாழலாயிற்றே! இன்னும் மற்ற திக்பாலர்களெல்லாம் சுகமடைந்து விடுவார்களல்லவோ! என்றிவ்விதமாக அவன் புலம்பித்தவிக்கு மளவிலப்போது சிலவசுரர்கள், பானுகோபனுடைய தலை உடல், கைகள் இவைகளை யெடுத்துவந்தார்கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! சூரனப்போது தன்மைந்தனுடைய அவ்வுறுப்புகளைப் பார்த்து மறுபடி அவைகளை முன்போல் சரிவர சேர்த்துவைத்து மிகுந்த துக்கத்தோடு பலவிதமாய்ப் புலம்பினான். அப்போதவன் மனைவியான பத்துமகோமளையும் தன்சக்களத்திமார்களுடன் வந்து செல்வனுடைய அவயவங்களை யடிக்கடி பார்த்துத் தடவிமுகர்ந்து மிகுந்த துக்கத்தினாற் பரிதவித்துக் கூந்தல் முடியவிழலாகிச் சற்றுநேரம் பூமியில் விழுந்து புறண்டு புலம்பியதாவென்றால்:—.

ஆ! எனதருமை மகனே! இலக்குமி தேவி கைதனிற் பற்றிய தாமரை மலரைக் கொண்டுவரும்படி முந்தி யான் கேட்டதற்கு நீயுடனே யதனைக் கொண்டு வந்து எனக்குக் கொடுத்த பலவானல்லவோ! இத்தேவர்களிப்போதெந்தனுக்கு இப்பேர்ப்பட்ட துக்கமதை யளித்தபடியா லவர்களது பெண்டிர்களும் சீக்கிரத்தி லிப்பேர்ப்பட்ட நிலைமையை யனுபவிக்கக் கட

வார்கள். என்றிவ்விதமெல்லாம் சூரனும் மற்றெல்லாவசுரர்களும் அவரவர்கள் பெண்டீர்களு மிறந்துபோன மைந்தனைப் பார்த்தங்கு மிகவும் பிரலாபித்துக் கொண்டிருக்கையில், கேளீர்! தாணித் தேவர்களே! சூரனெழுந்து, மிகுந்த கோபத்தினல் பற்றியெரிவோனுகி, ஓ! கோ! யாமிப்போதோர் கொடிக்குள்ளாக விச்சத்துருக்களை ஹதம் பண்ணி அவர்களது இரத்தங்களைக் கொண்டிங்கு வீரயாகம் முடித்து இறந்துபோன பானுகோபனையும், பிழைப்பிக்கின்றோமென்றுரைத்துச் சில வசுரர்களைப் பிணத்தைப் பாதுகாக்கும்படி யேற்படுத்திவிட்டு பத்தும கோமளை முதலிய பெண்டீர்களையு மந்தப்புரத்துக் கனுப்பி பிறகப்போது தூதர்களை நோக்கி யுரைத்ததாவது:—ஓ! தூதர்களே! நீங்களெல்லோர்களு மிப்போதே சிங்கமுகனிடஞ் சென்று நமது பானுகோபன் முதலியவர்கள் இறந்துபோன சங்கதிகளைச் சொல்லிவிட்டுச் சீக்கிர மிங்கு வருவீர்கள் என்று கட்டளை யிட்டனன். அவர்களுடனே பற்பலவிரத்தினங்களால் விளங்காநின்ற ஆசுரபுரி யென்ற சிங்கமுகன் பட்டணத்துக்கு விரைவாகச் சென்று அங்கு மகா பலவானுகிய வசுரச்சிரேஷ்டனுன சிங்கமுகனைக் கண்டு வந்தனித்தஞ்சலி கொண்டவர்களாகி யவர்கள் வினயத்தோடு வசனமுரைத்ததாவது:—

ஓ! சுவாமி! தேவரீர் மூத்தோராகிய வசுரச்சிரேஷ்டர் தங்களைச் சீக்கிரமழைத்து வரும்படி யிவ்வெங்களை யனுப்பினர். ஆகையால் தேவரீர்தாமதமின்றிப் புறப்படல் வேண்டுமென்று சொல்லிய மாத்திரத்தில் அப்போதவனுல் விவரம் வினவப்பட்டதின் பேரில், கேளீர்! பிராமணோத்தமர்களே! அவர்கள் சிங்கமுகனுக்குப் பானுகோபன் வதையை யுரைக்கையில் அதுகேட்டவுடன், அவ்வசுரன் மிகுந்த துக்கம்கொண்டு அடிக்கடி கோபத்தினுல் ஜுவலிக்கலுற்றவனும், நாணத்தினுல் தலை குனியலுற்றவனுமாகி யுடனே யெழுந்து தேர்மீதேறிக் கொண்டு சதுரங்க சைனியங்களுடனும், அநேகம் துவஜங்கள், குடைகளுடனும், பற்பல வாத்தியங்களின் மிகுந்த வோசைகளுடனு மாகாய மார்க்கமாகச்சென்று சூரன் அரசாளும் பட்டணம் சேர்ந்து துரிதமாகத் தேரினின்றிறங்கி மூத்தோன் மாளிகைக்குட் சென்றங்கு அசுரவேந்தனுகிய தமையனுன சூரனைக் கண்டு வந்தனிக்க, அப்போது பலவானுன சூரன் தன் தம்பியைக் கைகளால் தழுவித் தன்னருகினிலவனை யுட்காரவித்தவுடன் சிங்கமுகன் ஓ! அசுரேசா! தேவரீர் யாது நிமித்தம் துக்கமுற்றவர் போலிருக்கின்றீரென சூரபத்மன் நடந்த வரலாறுகளை யாதியோடந்தமா யுரைத்துவிட்டு நல்லது! ஓ! சிரேஷ்டனுன தம்பி! நீ சென்று அச்சத்துருக்களையெல்லா மிப்போதே போரினில் வென்று பிறகு நம் மண்டைக்குத் திரும்பிவா இபோதிதற்காகவே யுந்தனை யாமிங்கழைப்பித்தனம் என சிங்கமுகனவ்வாறு சூரன் வசனங்களைக் கேட்டு உத்தரமுரைத்ததாவது:—

ஓ! அண்ணு; முந்தியே யானுரைத்திட்ட வசனங்களைக்கேளாமற் சகல வசுரர்களையும் கொன்று கொண்டீரல்லவோ! கேவலம் ஸத்திய ஞானனந்த சுவரூபியான விப்பரமசிவனை நீர் ஒரிளைஞ்சனென்றுரைத்த படியா

லதற்குத் தக்கபயனை யனுபவிக்கலானீர். ஒ! கோ! விதியை வெல்வதற்கு யாவராலும் முடியாது. அப்போது யானுரைத்ததெல்லா முமக்கு மிகவும் தகிக்கலுற்ற விஷயமாகத் தோன்றலாயிற்றல்லவோ! ஒ! நல்லது! இனி இப்படி யுரைப்பதிற் பயன் யாது? ஒ! அண்ணு! யானிப்போதே சென்றச் சத்துருக்களையெல்லா மோர் நொடியினில் வென்றுவிட்டுமது முகத்தைப் பார்க்கின்றேன். அவ்வாறு வெல்லாவிடினுமுமை யான் பார்ப்பதில்லையென சூரனவ்வசனம் கேட்டு நல்லதப்படியே யாகட்டுமென்று மகா பலசாலியான வத் தம்பியை யனுப்ப, பிறகு சிங்கமுகனற்ற நகரில் அவனுக்காக வேற்பட்ட தான தனது மாளிகைசென்று ஏழு சமுத்திரங்களின் அளவு கொண்ட மாமிசம், பலவகை யிரத்தம், தேன், பால், தயிர்கள் இவைகளை யுண்டு மிகுந்த வாசனைத் திரவியங்களைப் பூசிச் சிறந்த மாலைகளையுமணிந்து புதியதான வஸ்திரங்களையு மாபரணங்களையும் தரித்துக்கொண்டு ஸ்ரீ பரமேசுவரனால் அருளப்பட்ட தண்டம், சக்கிரம், வஜ்ஜிராயுதம், சூலம் இவைகளையும் மிகுந்த மகிமை கொண்டவைகளான மற்ற தெய்வங்களின் அத்திரங்களையும் மிகக்கொடூரமான மாயாபாசத்தையும் சீக்கிரமா யெடுத்துக்கொண்டு அப்பலவான், பத்திலக்ஷம் குதிரைகள் கட்டப்பெற்றதும், மிக நேர்த்தியுமான தேர்மீதுட்கார்ந்து மகா வீரர்களான ஸேனுதிபர்களுடனும், மகா பலவான்களான தன் பிள்ளைகளுடனும், மகா கோரமானவர்களும் மிகுந்த சத்த மிடுகின்றவர்களும் பற்பல வாயுதங்களைத் தரித்தவர்களு மிலக்ஷம் வாகினி ஸங்கியைக் கொண்டவர்களுமான சதுரங்க சைனியங்களுடனும் சீக்கிரமாக வெளிக் கிளம்பினுன். ஒ, பூமி தேவர்களே! அப்போது யானைகளுடைய மத ஜலங்களும் குதிரைகளின் வாய்நுரைகளும் சமுத்திரம்போல் மகா பயங்கரமாகப் பெருகின. கடலின் பேரோசைக்கு மேற்கொண்ட வாத்திய கோஷங்கள் முழங்கப்பட்டன. மேலுமப்போ தம் மார்க்கமானது அநேக கோடி சங்கியைகொண்ட குடைகளாலும், மகா வுன்னதங்களான துவஜங்களாலும், ஸகல திசைகளிலும் பரவிச்சூழ்ந்து மிகவும் நெருக்கமுளதாயிற்று. அப்போது கழுகுகள் குடைகளின் பேரிலும் பருந்துகள் தேர்களின் பேரிலுமுட்கார்ந்தன. எங்கும் கொள்ளிக்கட்டைகள் பயங்கரமாக விழலுற்றன. அப்போது காக்கைகள் பட்ட மரங்கள் மீதுட்கார்ந்து கோரமாய்க் கத்தலாயின.

கேளீர் பிராம்மணேத்தமர்களே! இவ்வாறனேகவித வபசகுனங்களப்போது நேரலாயின. இவ்விதமாகச் சிங்கமுகன் தனது சைனியங்களோடு வரலானதைக் கண்டு பிரம்மன், விஷ்ணு, முதலிய தேவரெல்லோர்களும் மிக பயங்கொண்டவர்களாகி ஸ்ரீ கந்தபிரானிடஞ் சென்று அத்தேவாதிதேவனை வந்தனித்து அஞ்சலிகொண்டு பக்தியினுல் வணக்கமுற்றவர்களாகி, ஒ! தேவாதி தேவா! கருணைக்கடலே! சிங்கமுகனென்று பெயர்போன மகாசுரனிதோ வருகின்றுனே! இவன் சூரபத்துமனுக்கு மற்றோர் தம்பி; இவனுயிரம் தலைகளைக் கொண்டவன்; மகாபலவான்; மிகவும் பெரியதான விரண்டாயிரம் கைகளையுடையவன்; இவனுயிரம் யோஜனை விஸ்தி

ணமுடைய மிகவும் கெட்டியான மார்பைக் கொண்டவன்; மேலுமவன் சத்துருக்களைப் பலவந்தமாகச் சயித்து ஆயிரம் அண்டங்களையாண்டு வருகின்றான். ஒருநாள், எட்டுக்குல பருவதங்களாலு மெட்டுத் திக்கஜங்களாலு மெட்டு நாகங்களாலு மாதிகூர்மத்தாலும் சுமந்து தாங்கப்படா நின்றவிப் பூமியை மகாபலவானும் மாயாவியும் மிகுந்த பாதகனும், மகாதுஷ்டனுமான இவ்வசுரனெடுத்துத் தூக்கலானான். மேலும் இத்திடவான் பிரம்மாண்டத்தோடுகூட விச்சகல உலகங்களையு மொரேயுருண்டையாக விழுங்கக்கருதி யொருக்கால் மகாமேருகிரியைப்பிடுங்கியண்ட குண்டத்திலடித்ததில் அதுசாரமுள்ளதுஇல்லையென்றுஅதனை முன்போலிருந்த விடத்திற் போட்டு விட்டான்.

இவன் ஸ்ரீபரமேசுவரனால் அருளப்பட்ட விருபாரிசங்களிலும் நிழலாடப் பெற்றவோர் சூலத்தைப் பிடித்திருக்கின்றான். இவன் மூத்தோனாகிலும் ஸ்ரீ ஹரி, பதினோரு கோடிருத்திரர்கள், ஈசானன், இவர்களை மட்டில் இமிசிக்காமல் வழியோடு காத்துவருகின்றான். மகாபாதகனை வித்துராத்துமனே வென்றால் இவர்களைக் கூடத்தொழில் செய்யும்படி தொந்திரவு செய்கின்றான். ஆகையால் மகாபயங்கரனும், கொடியோனும், மிகுந்த பல பராக்கிரமசாலியுமான அப்பேர்ப்பட்ட இவ்வசுரனைச் சமுகரித்து ஓ! தேவாதி தேவரான கருணைக்கடலே! இத்தேவர்களைக் காப்பாற்றிட வெண்டுமென ஸ்ரீ வடிவேலனவர்களது வசனங்களை கேட்டருளி மிகுந்த தயவோடு நல்லதப்படியே செய்வோமென்று திருவாக்கருளி அருகினில் நின்றவின்பமான ஸாரதியாகிய வாயுதேவனை நோக்கி, ஓ! வாயுதேவா! மகாபெரியதான நமது தேரைச் சீக்கிரம் கொண்டு வாருமென, அவ்வசனம் கேட்டுப் பக்கத்தில் நின்ற வீரபாகுவானவர் ஸாக்ஷாத் ஸச்சிதாநந்த பரமாத்தும ரூபியாகிய ஸ்ரீ குஹபிரானை வந்தனித்து, ஓ! தேவாதி தேவரான பிரபுவே! இவனுள்பட போர்முனையில் நேர்ந்த வெல்லோர்களையும் யானே சமுகரிக்கின்றேன், ஆகையால் தேவரீர் தம்பியான இவ்வெந்தனை யனுப்பியருளல் வேண்டுமென, அவ்வசனங்களை மனதில் வைத்துக்கொண்டு திருமுக மலரில் மந்தஹாஸம் கொண்டவராகி யத்தேவாதி தேவரானவர் வீரபாகுவை யுத்தத்திற்கனுப்ப, அவ்வீரனும், மற்ற இலக்ஷத்தெட்டு வீரர்களுடனும், சேனாதிபர்களுடனும் புறப்பட்டுத் துரிதமாகத்தமது விடுதி சேர்ந்து பிறகப்பலவான் நேர்த்தியான வஸ்திரங்களையுடுத்திக் கொண்டு தும்பைப்பூ மலர் மாலைகளாலலங்கரிக்கப் பட்டவராகிப் பற்பல வாயுதங்களையு மெடுத்துக் கொண்டு மிகுந்த சுந்தரமான தேர்மீதுட்கார்ந்து அதேவிதமாய்த் தேர்மீதுட்காரலான மகாபலிஷ்டர்களாகிய மற்ற வீரர்களுடனும், மகிமைகொண்ட வாயுதங்களைத் தரித்தவாயிரம் வாகினி ஸங்கியை கொண்ட பூதர்களுடனும் புறப்படலாயினர்.

அப்போது திரண்ட புழுதிகள் கிளம்பலாகிச் சூரியனை மறைக்கலுற்றன. அம்மகா சைனியங்களால் அனேகவிதவாத்தியங்கள் நான்குபக்கங்களிலும் முழக்கப்பட்டன. அப்போதவருக்கு முன்னிலையில் மேகங்களை யளாவிய துவஜங்களும், பற்பல விரத்தினங்களின் காந்தியினால் விளங்கிய வோராளமான குடைகளும் பிடிக்கப்பட்டன. இவ்வித

மாக வம்மகாபலசாலிக ளெல்லா மோர்நொடி நேரத்துக்குள் யுத்தரங்கம் சேர்ந்தார்கள். அப்போது மிகுந்த கொடிய வாத்திய முழக்கச் சத்தத்தினல் காதுகளைச் செவிடாக்கப் பெற்றவைகளும், சுழன்றோடலுற்ற பெரியதான தேர்ச் சக்கிரங்களது விறும்புகளின் பயங்கரமான மிகுந்த வோசைகளைக் கொண்டவைகளும், யானைகளின் மணிகள், குதிரைகளின் சதங்கைகள் இவைகளுடைய மிகுந்த வோசைகளால் பயங்கரமாகியவையும், குதிரைகளின் கனைத்தல், சிறந்தவியானைகளின், பிளிறுதல் இவைகளது சத்தத்தைப் பெற்றவையுமான அவ்விருதிறச் சைனியங்களுக்கும் மரம், மலை, கற்பாறை, கட்டை, சூலம், அத்திரங்கள், இவைகளை வருஷிக்கலுற்ற பூதர்களுக்கும், அநேகபாணங்கள், சூலம், பெரியகத்தி, பட்டாக்கத்தி, சிறந்த எறிவல்லயம் இவைகளை வருஷிக்கலுற்ற வசுரர்களுக்கும், மிகுந்த கொடிய யுத்தம், நேரிடலாயிற்று.

இவ்விதமாகக் காலாட்களின் மிகுந்த விரைச்சல்களோடு ஒருவர்க் கொருவர் கொடூரமாய்ப் பேசிக்கொண்டு சண்டை யிடுகின்ற அவ்விருதிறத்தார்களுக்கும் மிகுந்த போர்க்கூட்ட முள்ளதும், உலகுக் கெல்லாம் மிகபயங்கரமுள்ளதுமான யுத்தம் நடக்குமளவில் அப்போது போர்தனில் தேர்ச்சி கொண்டவர்களான அசுரவில்லோர்களு மொன்று கூடியவர்களால் எறியப்பட்ட மலைகளையும், மரங்களையும், இன்னு முள்ள மற்றவைகளையும் துரிதமாகக் கண்டித்தெறிந்து அம்மகாசுரர்களெல்லாம் அச்சகலபூதர்களையும், துரத்தத்தலைப்பட்டார்கள். அப்படியிருக்கையில் பூதசேனதிபதியான பெருமை பொருந்திய ஸிம்மனென்பவன் துரிதமாய்ப் புறப்பட்டு மகா கோபத்தோடோர் பெரிய தண்டத்தினல் அவ்வசுரரெல் லோர்களையு மடித்தடித்துச் சிங்கம் யானைகளைக் கொல்வதுபோல் அநேகம் கொடியர்களைத் தொலைத்து விட்டான். அதன் பிறகு அசுரப் படைத்தலைவர்களி லொருவனும், மகாபலவானும் சண்டையில் ஸ்ரீ விஷ்ணுவைப் போன்றவனும் மகாபயங்கரனும், மகாபாவியும், பத்துத்தலைகளை யுடையவனுமான யுதிட்டிரனென்றவன் துரிதமாய்ப் புறப்பட்டுக் கூர்மையுள்ள பல பாணங்களை வருஷிக்கையில் தேவச் சிரேஷ்டனுன ஸிம்மனோர் பெரிய தண்டத்தினல் அவைகளையெல்லாம் துண்டித்து மறுபடியும், மகா கோபத்தோடவன் மீதெதிர்த்துச் சென்றவ்வசுரனது திடங்கொண்ட மார்புகளில்அடிக்க, கேளீர்! பிராம்மணேத்தமர்களே! அவ்வடியினலவன் கவசம் சடிதியிற் பிளக்கப் பட்டது.

பிறகு கொடியோனுன அசுரனும் கடுஞ்சினம் கொண்டவனுகியோர் பெரிய தண்டத்தைச் சுழற்றியவன் மார்பினி லடிக்க, அத்தண்ட மத்தேவனதுகடின மார்பினிற் பட்ட மாத்திரத்திற்பொடிப்பொடியாகி விட்டது. மறுபடி யவ்வசுர பாதக னத்தேவனையதட்டிக் கொண்டோர் கண்டரைக் கோடரியை யவன்மீது மிகுந்த வேகத்தோ டேறியும் போது அதனையு மத்தேவோத்தமன் தண்டத்தினல் தூள் தூளாக்கி விட்டுப் பிறகதி சீக்கிரமாய் அவனது சிறந்த வில்லையும் முறித்தெறிந்தனன். பிறகவ்வசுரன் அத்

தேவவல்லபன் மீதுதனது வேலைப்பிரயோகிக்க, மகா வேகத்தோடு வாலுற்ற அவ்வேலாயுதத்தை யத்தேவன் மிகுந்த வாக்கிரகத்தோடு தன் சக்கிராயுதத்தினல் துண்டித் தெறிந்தான்.

## 24 வது அத்தியாயம்.

பிறகு மகா பாதகத் தொழிலுடைய அவ்வசுரவீரன் தன்வேல் முறியுண்டதுகண்டு மகா கோபத்தினல் பற்றியெறிவோன் போலாகிக் கால தண்டத்தைக் கையிற்பற்றிய இயமன்போல் மகாபயங்கரமானவோர் தண்டத்தை யெடுத்துக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அத்தேவச் சிரேஷ்டன் மீதெறிய தேவ னவ்வடியுண்டதினு லிரத்தம் பெருகலாவதால் மேனி குலையலாகிச் சற்றேயந்திருந்து, பிறகு வேகமாயோடி வந்து அம்மகா சுரனது விசாலமான மார்பினில் தண்டம் போன்ற தன் கைகளாலோங்கி யறைந்தவுடன் அத்துராத்துமன் முகத்தினின்றிரத் தங்களை மிகுதியாகக் கக்கிக்கொண்டப்போதே யங்கு தரைதனில் மலைபோல் விழுந்து மரணமடைந்தான். அதன் மேலசுரரெல்லலார்களு மொன்றுசேர்ந்து கோபத்தோடவனுடன் சண்டை செய்தார்கள். அது கண்டி லக்ஷம் வீரர்களிலொருவனுன மகா பலசாலியும், இலக்ஷுமி விலாஸம் பொருந்தியவனும், தங்கம் போன்ற மேனியுடையோனும் மஹா வீரனுமான கனகனென்பவன் மிகவிரைவாயோடி வந்து மகா கோபத்தோடெல்லோர்களையு மம்புகளைக் கொண்டு துறத்தலானுன். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அசுரர்களப்போதவன் முன்னிலையில் நிற்கத் திறமையற்றவர்களாகி யோட்டம் பிடித்தார்கள். அதன்மே லசுரசேனுதிபனுன துர்முகனென்றவோர் பாதகன் மிகுந்த வலிமை கொண்டவனுகிப் பயந்தோடியவப் படைகளைத் தேக்கிக்கொண்டு கோடையிடிபோல் மிகுந்த கர்ஜனம் பண்ணி மகா பயங்கரமான பாணங்களை வருஷித்தான். அப்போது பூதர்களுமொன்று சேர்ந்துகொண்டு மிகுந்த சிங்கநாதங்களோடப் பாதகன் மீதனேகம் மலைகள், மரங்கள், கற்பாறைகள், முதலியவைகளை யெறிந்தார்கள். பிறகு வஞ்சகயுத்தம் செய்யவுற்றவனுன வத்துர்முகனும் கடுஞ்சினம் கொண்டவனுகி நூறுருவங்களாக வேறு பட்டுக் கொண்டு அத்தேவசைனியங்களோடு யுத்தம் செய்தான். அப்போது பூதர்களுக்குத் தலைவனுன வீரமார்த்தாண்டன அப்பாதகனுடைய சூதையறிந்து புறப்படலாகையில் மகா கோபத்தோடு விஞ்ஞானுத்திரத்தைப் பிரயோகஞ் செய்கையில் அப்போதசுரன் சூழுந்து தான மட்டில் தனிமையாக நிற்கலாகி மிகப் பரபரப்போடு துரிதமாய்க் கூர்மையுள்ள வாயிரமம்புகளைச் சொரிந்தனன்.

பிறகு மகா பலவானுன வத்தேவனுமாயிரம் கணைகளாலவைகளைக் கண்டித்துவிட்டுப் பின்னுமேழம்புகளாலவனது திடமான வில்லையுமோரம்பினுல் அவன் கவசத்தையும் பிளந்தெறிந்தும் அநேகம் கணைகளால், அவனுடம்பையும் கிரப்பியகொடும்பாவியான அவ்வசுரன் சற்று மூர்ச்சையாய்க் கிடந்து பிறகு மாயையால் மறைந்து கொண்டு தேகமெங்கு மிரத்தம் பெருகியோடவுற்றவனுகி யோட்டம் பிடித்தான். பிறகு பூதர்களெல்லா மப்பாவத்தொழிற்காரனுன

துர்முக ஞேடிவிட்டதை யறிந்து யுத்தத்தினின்றேடியவனைத் தொடர்ந்து துரத்துவது நீதியல்லவென்று கருதி, மிகுந்த வட்டகாசத்தோடு திரும்பி விட்டார்கள். இங்கு யுத்தத்துக்காக வந்த அசுரரெல்லோர்களுமோட்டம் பிடித்தார்கள். அவ்வோட்டத்தைக் கண்ணுற்று அசுரமன்னனும், மகா பலபராக்கிரமசாலியுமான சிங்கமுகன் துரிதமாக வெளிக் கிளம்புகையில் கேளீர்! தரணித் தேவர்களே! மலைபோன்ற வுருவமுடையவனும், மகா பயங்கரனுமாகிய அவ்வசுரன் மிகுந்த சிங்கநாதஞ் செய்து கொண்டு வருவதைக் கண்டு பூதர்களெல்லாமேகோபித்து மலைகளையும், மரங்களையும் அசுரனுடைய மார்புமீதெறிய, அவைகளும் நெருப்புக் காற்றினல் போசுக்கப்பட்டுத் திரும்பி விழுந்தன. அவைகளிற் சில தூள் தூளாகிப் பூமியில் நான்கு பக்கங்களிலும் சிதறுண்டன. மேலுமங்குள்ள சிங்கம் முதலிய மிருகங்களெல்லாம் சீக்கிரம் விழுந்தோடின. அப்போதவன் முன்னிலையில் விழலான மலைகளாலும் மரங்களாலும் கிரஹ நக்ஷத்திரங்களுடைய மார்க்கம் கூடத்தடுக்கப்படலாயிற்று.

அப்போததுகண்டு அசுரன்மகா கோபங்கொண்டவனுகித் தேரினின்று குதித்துஅதே மலை மரங்களை வாரியெறிந்து சிலபூதர்களைக்கொன்று போட்டான். மேலுமம்மகாசுரன் சிலரை வாரித் தரை மீது வேகமாயடித்தும் மற்ற சில பூதர்களை மலையின் பேரிலும், சூரியன் தேரின் பேரிலும், சிலரைக் கடல்களிலும், தீவுகளிலும் வலிமையோடு வாரிவாரி யடித்தெறிந்தும், சிலரை வாரியெடுத்து முட்டியாற் குட்டிப் பற்களால் கடித்து அண்டச் சுவர் மீதெறிந்தும், சிலரை வாரிச்சுழற்றியடித்து பிரம்மன், விஷ்ணு முதலியவர்களுடைய லோகங்களிலும், இந்திரன் முதலிய திக்பாலர்களுடைய மிகவகண்டமான ஸ்தானங்களிலும் தூக்கித் தூக்கியெறிந்தும், சிலரை வட வாக்கினியிலும், மற்றவர்களைப் பாதாளத்திலும், சிலரை பூமியிலும் வாரியெறிந்து நிரப்பி, யம்மகா பலவான் இவ்விதமாகச் சகல வுலகங்களிலு மெல்லாத் திக்குகளிலும் வாரி யிறைக்கலானான். தவிரவும் அவன் சிலபூதர்களைக் காலினலுதைத்தும், சிலரைக் கால்களாற்றுகைத்தும் காலினல் தலைகளை யிடறி முறித்தும், மற்றவர்களைக் கொடிய பார்வையால் பார்த்து ஹூம்காரம் செய்தும், சிலரைக் கைகளாற் பிசைந்து கோபத்தோடு புஜித்தும், உலக்கை, குண்டாந்தடி, அப்பு, கலப்பை, கண்டரைக் கோடாரி, சூலம், மரம், மலை, இவைகளாலு மின்னுமுள்ள மற்ற வாயுதங்களாலு மடித்து அவைகளையெல்லாம் சின்னுபின்னமாக்கி யப்பூதர்களை மடிக்கலானான்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இவ்விதமாகப் பல பூதர்கள் மடியும்போது, பிரம்மன், விஷ்ணு, இந்திரன் முதலியவர்களெல்லோர்களும் ஓட்டம் பிடிக்கத் தலைப்பட்டார்கள். அதன்மேல் அப்பாதகன் வெகு சுந்தரமான தேர்மீதேறியவுடன் அக்கினிகோபனனென்ற வோர் பூதசேனாதிபதியானவன் மிகக் கோபங்கொண்டவனுகி யோர் நொடிக்குள் கிளம்பி வந்து கேளீர்! பிராம்மணோத்தமர்களே! சிங்கமுகனுக்கெதிராகத் தனது

பராக்கிரமத்தைச் சொல்லிக்கொண் டம்மகாசுரன் மீது மகா கோரே மான வோர் பெரிய சூலத்தைப் பிரயோகிக்க, அது மிகவும் கெட்டி யான அவனது மார்பினிற் பட்டவுடன் முறிந்து விழலாயிற்று. பிறகத் தேவ ரக்ஷகன் மிகுந்த கோபாக்கினியோடோர் தண்டத்தை யெடுத்துக் கறகறவென்று வேகமாகச் சுழற்றி யட்டகாசம் பண்ணிக்கொண்டு அவ் வசுரன் ஸாரதியை யடித்து இயமனுடைய இராஜதானியாகிய ஸம்யமினீ பட்டணத்துக் கனுப்பிவிட்டான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அது கண்டு சிங்கமுகனும் மிகப்பயங்கரமான வோர் தண்டத்தை யெடுத்து அவன் மீதெய்து அவனை மூர்ச்சை கொள்வித்தான். பிறகவ்வசுரச் சிரேஷ்டன் ஸுமாலியென்ற மற்றோர் சாரதியை வைத்துக்கொள்ள, அப்போது அப்பூத சேனாதிபதி மிகக் கோபத்தோடு வந்து பெரிய மலைக்கு நிகரான அவ்வசுரச் சிரேஷ்டன் மீதோருயரமான மலையைப் பிடுங்கி மகா கோபத்தோடடிக்க, மகா பல பராக்கிரமசாலியான அவ்வசுரன் அதனையே கையினாற் பற்றிக் கொண்டு சிறுவர் பந்தடிப்பதுபோலத் தேவச் சிரேஷ்டன் மீதடித்தான். அது அவன் மார்பினில் விழுந்ததால் அப்போதேயவன் மூர்ச்சை யடைந்து விட்டான்.

அவனவ்வாறு விழுந்தது கண்டு தேவர்களைக் காப்பவனான தண்டி யென்பவன் ஓர் தண்டமதை யெடுத்து வஜ்ஜிரம்போன்ற கெட்டியான அவ னதுமார்பு நடுவினிலடிக்க அது அங்குபட்ட மாத்திரத்தில் பொடிப்பொடியாகி விட்டதன் பேரில் அத்தேவநாயகன் மகாகோபங்கொண்டு, சிங்கத்தை யோர் மதங்கொண்ட யானை யறைவதுபோல் மறுபடியுமவ்வசுர வேந்தனைக் கையா லறைந்தவுடன், அக்கொடியோன் அத்தேவனைக் காலினாலுதைத்துப் பூமி யில் தள்ளி யக்காலாலேயாகாயத்தில் வாரிவிட்டான். உடனே யத்தேவச் சிரேஷ்டனோவென்றால் மகா வேகமாக அவ்வசுரன் பேரிலே குதித்துக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஓர் குரங்கானது மரங்களிற் கிளைக்குக் கிளை தாண்டுவதுபோல் விஸ்தாரமான அவனதெல்லாக் கைகளிலும் தாவித் தாவிக் குதித்து கோபத்தோடு அடிக்கடி துகைத்தும், கொடிகள் மீது வண்டு கள் சஞ்சரிப்பதுபோல் கைக்குக்கை இலாகவமாகத் தொத்தித் தொத்திப் பற்றியுலாவினன். இவ்வாறு தாவலான அத்தண்டியை யசுரன் மானிடர் களீக்களையடிப்பது போல் கையினாற் கோபத்தோடறைந்து பிண்டமாகப் பிடித்தெறிந்தனன். பிறகத் தேவசேனோவென்றால் தூரத்தில் விழலாகி மூர்ச்சை கொண்டனன். தவிரவும் சகல சேனாபதிகளுமவனாலோர் நொடிக் குள்ளாகச் சயிக்கப்பட்டார்கள். அதன்மேல் வீரரெல்லோர்களு மம்பு களைச் சொரிந்துகொண்டே துரிதமாகக் கிளம்பிவருகையி லவ்வம்புகளவ னது தேகம் முழுதும் மலர்மாரி சொரிவதுபோல் விழலுற்றன.

பிற்பாடசுரன், சிரேஷ்டமான தனது இரதத்தினின்றிறங்கிமிகுந்த வட்ட காஸம் செய்துகொண்டு சிங்கம் யானைகளைப் பிடிப்பதுபோல் சத்துருக்களைக் கைகளாற் பிடித்துக் கோபத்தா லொருவரோடொருவரை யடித்தும்,சிலரைக்

கால்வாரி யடித்தும், சிலரை யிரதத்தோடு தூக்கி யுயரவெறிந்தும், மற்றவரை மிக வலிமை கொண்டவனாகி வேறுவிதமா யொருவரை யொருவராலடித்துக் கொன்றும், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இப்படி யனேகவிதமாக அவ் வீரர்களை யெல்லாம் ஜயிக்கலானான். அப்போதெல்லோர்களும் மிகவும் பயங்கொண்ட மான்களோடுவது போலோட்டம் பிடித்தார்கள். அதன் மேல் மகா வீரரான வீரபாகுவானவர் அவர்களோடுவதைக் கண்டு திடமான வில்லை யெடுத்துக் கொண்டு கொடும்பாவிகளான அசுரர்கள் மீது கோடை கால மேகங்கள் போல் கணைகளை வருஷித்தார். அப்போது மிகுந்த பாதகத் தொழிலைச் செய்யலுற்ற பல வசுரர்கள் மடியலானார்கள். மேலுமோர் நொடி நேரத்துக்குள் நான்குவகைச்சேனைகளும் நாசமடைந்தன. அங்குண்டான விரத்தப் பிரவாகத்திலனேகம் தலையற்ற வுடல்கள் கூத்தாடின. தவிரவும் அப்போதங்கு அனேகம் கழுகு, பருந்து முதலியவைகளும், பிசாசங்களும் சுற்றி வட்டமிட்டன. அது கண்டு ஒருவராலுமெதிர்க்க முடியாதவர்களான சிங்க முகனது நூறு பிள்ளைகளும் தேவேசரான வீரபாகு மீதுஅனேக பாணங்களைச் சொரிந்தார்கள். அவரும் மகா வாக்கிரகம் கொண்டவராகி அவர்கள் மீது அனேகம் கணைகளைச் சொரிந்தனர். மகா பலிஷ்டர்களான அவ் வசுரர்களும் அனேகம்கோடி யெண்கொண்ட பாணங்களை வருஷித்தார்கள். அப்போதவரும் அவைகளை யவ்வளவே பாணங்களால் கண்டித்துவிட்டவர்களது விற்களையும் தேர்களையும், மகா கோபத்தோடு சேதித்து மிகுந்த சிங்கநாதம் செய்தார். பிறகு அவ்வசுரரெல்லோர்களு மொன்றாகச் சேர்ந்து மஹா பலவானாகிய இவ்வீரனோடு தாங்களும் கத்திகளை யெடுத்துக்கொண்டு மிகுந்த சிங்கநாதம் செய்தவர்களாகிப் பற்பலவிதப் பயிர்ச்சி முறைப்படி சண்டை செய்தார்கள். பிறகு மகா துஷ்டர்களான அவ்வசுரர்கள் அத் தேவோத்தமனைக் கத்தியாலும் வெல்லத் திறமையற்றவர்களாகி யவரைக் கொல்வதற் கெண்ணங்கொண்டு சுற்றிலும் சூழ்ந்து கொண்டார்கள்.

கேளீர்! தரணி தேவோத்தமர்களே! மகா பலவானான வீரபாகுவும் அப்போது சிங்கமுகன் மைந்தர்களான அவ்வசுர பாதகர்களைத் தனது கூர்மையுள்ள கத்தியாகிய வோரே ஆயுதத்தால் வீசிக்கொன்றுவிட்டு மிகுந்த மங்களகரமான தனது தேர்மீது சடிதியிலேறிக் கொண்டனர். அப்போது தேவர்கள் மிகுந்த சந்தோஷத்தோடு மலர் மாரி சொரிந்தார்கள். அது கண்டு சிங்கமுகன் மிகவும் மனம் நொந்தவனாகி ஓ! கோ! இவனொருவனாயிருந்தே இவ்வெல்லா மைந்தர்களையும் கொன்று போட்டானல்லவா, என்றோர் பக்கத்தில் லஜ்ஜை கொண்டவனும் ஓர் பக்கத்தில் கோபத்தினால் ஜுவலிக்கலுற்றவனுமாகி யவன் மனதிற் சிந்தித்ததாவது :—

ஓ! இவ்வெல்லோர்களையும், மகா பலவானாகிய இவ்வீரனோடு கூடச் சாப்பிட்டு விட்டு மேலும் கோபம் தீருவதற்காகச் சகல லோகங்களையும் நாசம் பண்ணி விடுகின்றோமென, அவ்வசுரன் தேரோடு கூட வீரபாகு வண்டைக்கு வந்தவுடன், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வாறு வரலான

வசுரனை வீரபாகு வெதிர்த்துக் கொள்ளுகையில் அவரை நோக்கி யசுரனுரைத்ததாவது :—

அடா! நீ சுப்பிரமணியனல்ல வென்பது நிச்சயம். ஆனல் நீ லக்ஷம் வீரர்களிலொருவனு? அல்லது ஒன்பது வீரர்களிலொருவனு? இல்லாவிடில் நீ யொருதூதனு? வென்பதைச் சத்தியமாகச் சொல் என்று வினவப்பட்ட பலவானுகிய அத்தரும மூர்த்தியானவர் அவன் முன்னிலையில் உத்தரஞ்சொல்லியதாவது :—

ஓ! கேளாய்! அசுரா! எம்மை நிகரற்ற பராக்கிரமமுடைய தேவாதிதேவரான ஸ்ரீ வடிவேலனது தாஸனென்றும், முந்தி தூதத்தன்மையோடிங்கு வந்து இசுரரெல்லோர்களையும் நாசம் பண்ணலானவர்என்றும் கவனத்திற்கொள். மேலுமெம்மைத் தேவோத்தமர்களெல்லோரும், வீரபாகு என்று சொல்லுவார்கள். ஓ! அசுரா! நல்லது! யாம், யாவரானுலும் அதனுலுந்தனுக்காவது யாது? என்று கம்பீரவாக்கினுலுரைத்த வத்தேவேசனை நோக்கி யசுரன், ஓ! தூதா! பல வினர்களான வசுரர்களைக் கொன்றதினுலுந்தனுக்கென்ன வலிமை? மிகவுமிளைஞர்களான வெந்தன் மைந்தர்களை நீயிப்போதிங்கு கொன்றிருக்கின்ருயல்லவா! ஆகையாலுந்நனையோர் நொடிக்குள் கொன்று பருந்து முதலியவைகளுக்குத் திருப்தி செய்விக்கின்ருேம். மேலுமதி சீக்கிரத்திலுந்தன் கந்தன், பூதர்கள், தேவர்கள், மற்ற வீரர்கள், இவர்களது ஆண்மையைப் போர் முன்னிலையில் தொலைத்து விடுகின்ருேம் என்றது முதலிய, தன்னைப் பற்றியவின்னும் பல பராக்கிரமங்களை யப்போது கூறலானுன். ஓ! கேளீர்! சௌனகாதி முனிவர்களே! சிங்கமுகனுல்இவ்வாறுரைக்கப்பட்ட வசனங்களெல்லாம் மிகக்கொடூரமாயிருந்தபடியால் அவைகளை வீரபாகுத் தொன்னைகளையொத்த நேர்த்தியான தமது இரு செவிகளாலும் மெல்ல மெல்ல வுட்கொண்டுத் தமது இருவிழிகளால் இருதயகுஹைகளினின்று கோபாக்கினியைக் கக்கவிட்டுக் கொண்டிருக்கலாயினர்.

## 25-வது அத்தியாயம்.

பிற்பாடுஅத்தேவேசனுன வீரபாகுவானவர் தீக்ஷணமான பத்துஅத்திரங்களையத்துராத்துமனுடைய கெட்டியான மார்பின் மத்தியில் பிரயோகிக்க, அவையங்குபட்ட மாத்திரத்தில் முறிந்து பூமியில் விழுந்தவுடன் அப்போதசுரசிகாமணியானவன் ஜ்வலிக்கவுற்ற மகா பயங்கரமானவோர் தண்டத்தையவர்மீதெறிந்தனன். அப்போது வீரனும்அதனை நான்கம்புகளாற் கண்டித்துவிட்டு மறுபடியும் மகா கோபத்தோடு அவன் சிரசினில் ஆயிரம் கணைகளைத்தொடுக்க, கேளீர்! தரணித் தேவர்களே! அவைகளுமங்கு விழுந்த மாத்திரத்திற் பொடிப் பொடியாயின. பிறகு சிங்கனும் மிக வாக்கிரகம் கொண்டு மகா பயங்கரமான வோர் சூலத்தைப் பிரயோகிக்கையில் அதனைக் கண்டிப்பதற்காக வீரனுல் விடப்பட்ட வாயிரம் பாணங்களையும் துண்டித்து விட்டுச் சடிதியில்அவரண்டைக்கு வரலாயிற்று. அப்போதுடனே வீரன்அதனைக் குறிப்பிட்டு

மறுபடி யாயிரமம்புகளையெய்தும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவைகளையும்அது துரிதமாய்க் கண்டித்து விட்டு அவராருகினில் வந்து விட்டது. அப்போது வீரபாகு மகா பரபரப்போடு கத்தியை யெடுத்து மகா கொடூரமான வச்சூலத்தை முறித்தெறிந்தவுடன் அப்போது தேவரெல்லா மவரது மிகுந்த பராக்கிரமத்தைக் கண்டு களிப்படைந்தனர்கள். மறுபடியும் மிகுந்த பலசாலியான வீரபாகு மிகவாக்கிரகம் கொண்டு எல்லாவற்றையும் சமுகரிக்கவுற்ற மகா பெருமைதங்கிய ஸ்ரீ பாசுபதாத்திரத்தைப் பிரயோகிக்க, அப்போதசுரனும் மகா பயங்கரமான வதேயத்திரத்தைச் சடிதியிற் சந்தானிக்கலாகையில் அப்போதவ்விரண்டத்திரங்களும் ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொண்டு வந்த வழியோடு திரும்பிச்சென்றன.

அப்போது வீரபாகு திருவுளமதில் அவ்வசுரனைப் பற்றி மிக வாச்சரியப்பட்டுக்கொண்டு ஓ! கோ! இவன் யுத்தத்தில் ஸ்ரீ வடிவேலனை லொழிய வெம்மால் கொல்லப்பட முடியான்; ஆயினும் அவனது சேனைகளைச் சமுகரித்துவிடுவோ மென்று கருதிக் கோபத்தினால் மிகவும் ஜுவாலிக்கலுற்றவராகிப் பதினான்கு பாணங்களை விட்டு அவனது ஸாரதியைக் கொன்றனர். பிற்பாடு அசுரனும் மகா கோபங்கொண்டு மிக பயங்கரமான வோர் கதையைப் பிரயோகிக்க, அது வீரனது திருமேனியிற் பட்டமாத்திரத்தில் ஆயிரம் துணுக்குகளாக முறியலுற்றது. அதன்மேல் அத்தேவன் சினங்கொண்டு, ஆயிரமம்புகளால் அவனது தேரை யுடைத்துவிட்டார். தவிரவும், ஸகல பூதர்களும், மலைகள், மரங்கள், குண்டாந்தடிகள், கற்பாறைகள், இவைகளை வருஷித்துக்கொண்டே யம்மகாசூரனை வளைந்துகொண்டார்கள். அதன்பிறகு சிங்கமுகன் வேறு இரதமேறிக்கொண்டு மகா கோபத்தோடு ஆயிரம் விற்களை யெடுத்துச் சடிதியில் நாணேற்றிட்டு மகா பயங்கரமாய்க் குணத்தொனி செய்து மிகுந்த கோலாஹல சத்தம் செய்தவனாகி யப்பூதர்கள் மீது அனேககோடி சரங்களை வருஷிக்கையில், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது அனேக பூதர்களும் உயிரிழந்து அவ்வுயுத்தஅரங்கத்தினின்று மலைகள், நதிகள், அரணியங்கள், தீவுகள், திசைகள், ஆகாயம், சிம்சுமார சக்கிரம், சூரியனுடைய தேர், பிரம்மாண்டம், பாதாளம், சக்கிரவாளகிரி இவ்வெல்லா விடங்களிலும் கேளீர் முனிவர்களே! கொஞ்சமேனும் யிடைவெளியின்றி விழுந்து நிரம்பலாயின. மூவுலகங்களிலும் இப்பாணங்களால் அடிபடாத பிராணியே யில்லை. அப்போது வீரபாகுவும், வெகு கோபங்கொண்டு ஓர் நொடிநேரத்துக்குள்ளாக அனேகம் கூர்மையான பாணங்களால் அனேகம் அசுரப்படைகளைக் கொன்று போட்டனர். மேலும்அவனது அம்புகள் மகா வேகத்தோடு எங்கெங்கு செல்லுகின்றனவோ தேவனும் அங்கங்கெல்லாம் அனேகம் அத்திரங்களை விட்டு அவைகளை துண்டித்துவிட்டனர்; அதைத் தேவரெல்லாம் கண்டு மிகுந்த வாச்சரியம் கொண்டார்கள்.

பிறகு சிங்கமுகன் சினங்கொண்டு அவரிடத்துத் தன் விருதாவளிகளைக் கூறிக் கொண்டான்; அப்போது வீரனும் அம்மகாசூரனை நோக்கிக் கொடிய வசனங்களை யுரைத்தனர். பிறகு அசுரன் அட்டகா

ஸம் செய்து பயமுறுத்திக் கொண்டு மகா கொரமுடைய பதினாயிரம் அம்புகளை யத்தேவேசன் மீது எய்ய, தேவனும் அவைகளை யோராச்சரியம்போ லோர்நொடிக்குள் கண்டித்துவிட்டு மிகுந்த சிங்கநாதம் செய்தவராகி யப்பாதகன்மீது கோடைகால மேகங்கள் போல் ஆயிரக்கணக்குகளாக அனேக பாணங்களை வருஷிக்குமளவில் அவ்வசுரன் ஆக்கிரகம் கொண்டு பத்திலக்ஷம் பேரம்புகளால் அவர் விட்ட பாணங்களைத் துண்டித்துப் பின்னரும் அனேககோடி சரங்களை வருஷித்தான். பின்பு தேவனும் அவைகளை ஆயிரம்கோடி அம்புகளை விட்டு முறித்துத்தள்ளினர். பிறகு அசுரன் மிகுந்த பரபரப்புக்கொண்டு இரண்டாயிரம் சிறந்த அம்புகளால் மிகுந்த முயற்சியோடு அவ்வீரனுடைய திடங்கொண்ட வில்லை முறித்தெறிந்து மறுபடியவர் வேறு வில்லை யெடுப்பதற்கு முந்தியே அவரை அனேககோடி பாணங்களால் திருமேனி முழுதும் இரத்தம் தாரைதாரையாகப் பெருகும்படி அடித்தான். அங்ஙனமாயினும் வீரன் மறுபடியும் மிகவும் திடங்கொண்ட வோர் சிறந்த வில்லை யெடுத்து வளைத்து அவ்வசுரவேந்தன் மீது நூறாயிரம் அம்புகளைத் தொடுக்க, அவனும் அவைகளை மகா கோபத்தோடு இலக்ஷ மம்புகளாற் கண்டித்துப் பிறகும் அவ்வசுரமன்னன் மிகுந்த சத்தத்தோடு அவர்மீ தனேகம் கணைகளைச் சொரிந்தான்.

அதன்மேல் மகா பலசாலியான அத்தேவரக்ஷகரும் அவைகளை யெல்லாம் துரிதமாய்க் கண்டித்து மறுபடியும் ஓரிலக்ஷம் அத்திரங்களைப் பிரயோகித்து மகா வுன்னதமான அவனது சுந்தர ரதத்தை உடைத்தெறிந்தனர். பிற்பாடு சிங்கமுகன் சினங்கொண்டு நேர்த்தியான மற்றோரி ரதத்தின் மீது பூமியை நடுங்கச்செய்வோன்போல் மகா வேகத்தோடு ஏறப்போகையில் அப்போதே யத்தேவோத்தமன் தீக்ஷணமான பல கணைகளைத் தொடுத்துக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவன் கைகளிற் பற்றிய மகா கொடியவைகளான வாயிரம் விற்களையும் மகா கோபத்தோடு துரிதமதில் இரண்டிரண்டு துண்டுகளாகக் கண்டித்துவிட்டனர். அப்போ தெல்லா பூதர்களும் மிகுந்த அட்டகாஸம் செய்தார்கள். அதுகண்டு அப்பாதகனும் மிகுந்த கோபாக்கினியால் பற்றி யெரிவோனாகி மனதினில் ஆலோசித்துக்கொண்டு மிகுந்த வலிமையோடு மகா கொரமான மாயாபாசத்தைத் துரிதமாயெடுத்துச் சகல சத்துருக்களையு முதயகிரிதனிற் கொண்டு போட்டுவிடு என்று அதற்கு மந்திரம் பண்ணி யதனைப் பிரயோகித்தவுடன், கேளீர்! முனிவர்களே! மகா கொரமும் கன்னங்கரேலென்ற குருட்டிருளாற் சூழப்பெற்றதுமான வப்பாசமானது சகல சத்துருக்களையும் பயமுறுத்திக்கொண்டு மிகுந்த சத்தத்தோடு மகா வேகமாய் வெளிப்புறப்படுகையில் அதைக்கண்டு தேவர்களையும் பூதர்களையும் காப்பவர்களான வீரர்கள் இது மாயையென்று யெண்ணினார்கள். அப்போதே யப்பாசமானது பூதர்களையும், சேனாதிபர்களையும் வீரபாகு முதலிய வீரர்களையும் கட்டியவ்வுதய கிரிதனிற் கொண்டு அவ்வெல்லோர்களையும் போட்டுவிட்டது.

ஓ! கோ! இது துன்பம்! பிற்பாடு அச் சிங்கமுகப் பாவியானவன் அட்டகாசத் தொனிகளைச் செய்துகொண்டு ஓ! கோ! இப்போதச் சிறுவனெங்கிருக்கின்றான்? அவன் மிகவும் பயங்கொண்டவனாகி யோட்டமெடுத்து விட்டானோ? வென்று தன் தூதர்களை வினவியதில் மிகுந்த வலிமை கொண்ட அவ்வாறுமுகன் நேர்த்தியான ஏமகூடபுரமதிலாயிரம் வாஹினி பூதகணங்களாற் தமது திருவடிக் கமலங்கள் போற்றப் பெற்றவராகி விளங்கி நிற்பதையவர்கள் மூலமாயறிந்து கொண்டு ஓ! அவனங்கு மிகவும் பயங்கொண்டிருக்கின்றான். நல்லது! யாமங்கு சென்றவனையோர் நொடிக்குள் ஜயித்து விட்டிங்கு திரும்பிவருகின்றோ மென்று அவ்வசுரப்பாதகன் சகல வசுரர்களுக்கும் சொல்லிவிட்டுத்தான் துரிதமாகப் புறப்பட்டனன். அப்போது வாயுதேவன் அவ்வெல்லாவற்றையும் சீக்கிரம் தெரிந்து கொண்டு ஸ்ரீ வடிவேலன் இடத்தறிவித்துக் கொண்டதாவது:—

ஓ! பிரபுவாகிய சுவாமீ! வீரபாகு முதலிய வெல்லோர்களும் இவ்வசுரனாலே மாயாபாசத்தினாற் கட்டப்பட்டு சூரியனது உதயகிரிதனிற் கொண்டு போடப்பட்டிருக்கின்றார்கள். ஓ! சுவாமி! அவனும் இதோவருகின்றான் என்றான். பிற்பாடு ஸ்ரீ பகவானானவர் யுத்தம் செய்வதாகத் திருவுளம் கொண்டு பிரம்மனால் கொண்டு வைக்கப்பட்ட பற்பல விரத்தினங்களாற் சிங்காரிக்கப் பெற்ற பாதுகைகளை திருவடிக் கமலங்களிற் பூண்டு புறப்பட்டுத் திருமாளிகையின் வாசற்படிகளைத் தாண்டி வாயுவாற் கொண்டுவரப்பட்ட மிகவும் ஜுவலிக்கலுற்ற திவ்ய ரதத்தின் மீதேறிக் கொண்டு பிரம்மவிஷ்ணுக்களால் மலர்களை வாரிச்சொரியப் பெற்றவராகியும், தாமரைத்தண்டு நூற்களுக்கு நிகரான சாமரத்தைப் பற்றிய மற்றத்தேவர்களாலும் இருபாரிசங்களிலும் ஒளி பொருந்திய முத்துக்குடைகளைப் பற்றிய சூரிய சந்திரர்களாலும் பகலின்கண் பெரிய தீவட்டிபிடிக்கலுற்ற அக்கினி தேவனாலும் பிரகாசம் பொருந்திய நேர்த்தியான கத்தியைக் கையிற் கொண்டு தொடர்ந்து செல்லலுற்ற இயமனாலும், சிறந்த நிருதியாலும், காளாஞ்சியைக் கைமீது கொண்டு தொண்டூழியம் செய்யாநின்ற வருணனாலும், அதேவிதமாய்த் தங்க வெற்றிலைப் பெட்டியைப்பற்றிச் செல்லா நின்ற குபேரனாலும், பெரியதான சூலத்தைக் கைமீது கொண்ட வீசான தேவராலும் இன்னும் பற்பல வுபசாரங்களைச் செய்யலுற்ற மற்றத் தேவர்களாலும், இலக்ஷுமிவிலாசம் பொருந்தப் பெற்றவராகி ஸ்ரீ முருகேசன் புறப்பட்டுச் செல்லுகையில் அப்போதொரேகாலத்தில் மிகுந்த பலவாத்திய முழக்கச் சத்தங்களுண்டாயின. அப்போது ஏராளமான வெண் குடைகளும், துவஜங்களின் வரிசைகளும் புறப்பட்டன. மிகுந்த மங்களகரம் பொருந்திய சில துவஜங்கள் பிற்பக்கங்களிலும் பிடிக்கப்பட்டன. அப்போது முனிவர்கள் தோத்திரம் பண்ணினார்கள். நாரதர் முதலியவர்கள் சங்கீதம் பாடினார்கள். மதுரமான கண்ட நாதத்தையுடைய கட்டியக்காரர்கள் ஸ்ரீபகவானுடைய விருதாவளிகளைப் படித்தார்கள்.

அநேக பூதர்கள், மகாகொடூரமான வாயுதங்களைக் கைநுனியாற் சுறகறவென்று சுழற்றிக் கொண்டு அங்கு மிங்கு மோடினார்கள்; மேலும் அப்போது காஹளி வாத்தியங்களுடைய மிகவும் நேர்த்தியும், மதுரமுமான சத்தங்கள் கேட்கப்பட்டன. தவிரவும் "ஓ! ஜபாவிஜயீபவா! தேவாதி தேவேசா! அடியார்க்கு நேசனே! ஸகலபுவனங்களையும் காப்பவனே! தேவரீர் திருவடிகள் மீது பக்தி செய்வதிலே முயன்றிருக்கின்ற இத்தேவர்களை யெல்லாம் காத்தருள வேண்டும்" என்றும் ஆ! ஆ! அசுரகுலத்தை அடியோடு தொலைக்கின்ற பகவானிதோ வருகின்றார்; வருகின்றார்; தேவ சைனியங்களைக் காத்தருளுவோர் இதோவருகின்றார்;வருகின்றார்;சகலலோகேசுவரன்இதோ வருகின்றார்; ஸ்ரீ பார்வதிமைந்தன் இதோ வருகின்றார்; சத்துருக் கூட்டத்துக்குச் சிங்கமாகியவர் இதோ! வருகின்றார். அசுரர்களுக்கு இயமனான மகா தேவ குமாரனிதோ! வருகின்றார். திருவேலைப் பற்றியதால் பிரகாசமாய் விளங்கவுற்ற கைதனைக் கொண்ட ஸ்ரீ கந்தபிரானிதோ வருகின்றார். அடியார்களைப் காப்பதையே கடமையாய்க் கொண்ட ஜகதீசனிதோ வருகின்றார்; லீலாமாத்திரத்தால் ஸகல வுலகங்களையும் திருவிளையாடல் அருளவுற்றவரும் ஸகல லோகங்களாலும் வந்தனிக்கப்படுவோரும் சகலப் பிராணிகளுடைய ஹிருதய குகைகளிலும் விளங்கி யிரானின்றவரும், பரம கலியாணகுண சீலரும், நிகரற்ற பராக்கிரமமுடையுவருமான ஸ்ரீ குஹபிரானிதோ வருகின்றார்; தேவர்களுக் கிசுவரனும், அஷ்டைசுவரியங்களும் நிறையப்பெற்றவரும், எல்லாவற்றையு மறிந்தவரும், எல்லா வுலகங்களையும் நடத்துவோரும், விஷ்ணு முதலிய சகல தேவர்களாலும் வந்தனிக்கப்படுவோரும், ஸகலர்களாலும் பூஜிக்கப்படுவோரும், சகல ஜகங்களுக்கும் சிருஷ்டி, ஸ்திதி ஸம்கார காரணருமான மகாப் பிரபு இதோ வருகின்றார். ஸ்ரீ சர்வேசுவரனுக்கு நிகரான புகழுடையோரும், ஸ்ரீ சம்புவின் நேசத்திற்கென்று முரியவரும், அணிமாதி குணங்களுடையவரும், சுயாதீனமுடையோரும், என்றும் ஸகலங்களையும் செய்வோரும், எல்லாப் பிராணிகளாலும், கேட்கத்தக்கவரும் எல்லோர்களுடைய செவிகளுக்கும் மிகுந்த சுகத்தை யளிப்பவருமான வடிவேலனிதோ வருகின்று''ரென்றதுமான மிக நேர்த்தியான சத்தமானது படகம் முதலிய வாத்தியங்களின் பேரொலியை யதிக்கிரமிக்கலாயிற்று. அப்போது ஸ்ரீ முருகேசன் இவ்வாறு முதலிய மூவுலகினிலும் வியாபிக்கலான பேரொலியைக் கேட்டருளிக் கொண்டே மகா பலசாலிகளான வீரர்களுடன் யுத்தகளத்துக்கு விஜயமாயினர்.

## 26-வது அத்தியாயம்.

ஸ்ரீ சுப்பிரமணியன் பிரம்மன் விஷ்ணு முதலிய சகல தேவர்களையுமப்போது தூரத்தில் நிறுத்திவிட்டுத் தான் மிகுதியிருந்த வீரர்களோடு ஓரிடத்திலிருந்து கொண்டனர். மரங்கள், மலைகள், கற்கள், இவைகளை வாரி வாரிச்சொரியலுற்ற பூதர்களுக்கப்போது மிகுந்த துராத்துமர்களான வசுரர்களோடு கொடிய சண்டையுண்டாயிற்று. அவற்றில் அசுரர்கள் மகா பலசாலிகளான பூதர்களால் துன்பமடைந்து தோல்வியுண்டார்கள். அதுகண்டு

மகா பயங்கரமான சரீரத்தை யுடைய சிங்கமுகன் புறப்படுகையிற் பூதர்கள் மகா கோரமான பெரிய வாகிருதிகொண்ட வச்சிங்க முகன் மீது மலைகளையும், மரங்களையும், கற்களையும், வாரி யிறைத்தெதிர்த்தார்கள். கேளீர்! பிரம்மணோத்தமர்களே! அப்போதவன் அவ்வெல்லோர்களையுமொரே காலத்தில் தனதிரண்டாயிரம் கைகளாலும் துரிதமாய் வாரியெடுத்துப் பெரும் தேகத்தையுடைய வச்சிங்கமுகன் தன் வாய்களைத் திறந்து வயிற்றுக்குள்ளெறிந்து கொண்டான். அதன்மேற் சில பூதர்களவனது காது மூக்குகளின் துவாரங்களால் வெளியில் வந்து துரிதமாய்த் தூரத்திலோடிப் போனார்கள். வயிற்றுக்குள் போன சில பூதர்கள், கேளீர்! தரணி தேவர்களே! வெளியில் வருவதற்காகத் தங்களாயுதங்களாலவன் வயிற்றைத் துளைக்க விடம்தேடி யங்கோடித் திரிந்தார்கள். பயங்கரனாகிய அம்மகா பாவியானவன் இவ்வாறாக ஆயிரம் வாகினி கணக்குள்ள அவ்வெல்லாப் பூதர்களையும், விழுங்கிவிட்டு மறுபடியுமங்குள்ள மற்ற வீரர்களையும் சேனாதிபர்களையு மெடுத்தங்ஙனமே விழுங்கிவிட்டான். அப்போது சத்துரு நாசகரான முருகேசனொருவர் மட்டிலே யிவ்வெல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தனர். அவையெல்லாம் கண்டு சில தூதர்கள் சீக்கிரமாயோடிச் சூரனிடம் சென்றிவையெல்லா முள்ளபடி யுரைத்தார்கள்.

பிறகவ்வசுரேந்திரன், வீரபாகு முதலிய வீரர்கள் மாயாபாசத்தாற் கட்டுண்டதையும், பூதரெல்லாம் தம் தம்பியினால் விழுங்கப்படலானதையும் கேட்டு, மிக்க களிப்புற்றவனாகி, அப்போதத் தூதர்களுக்கு மிகுந்த திரவியங்களையும் நேர்த்தியான ஆடையாபரணங்களையும் கொடுத்து அவ்வனேகம் பெயர்களைப் பெருமைதங்கிய தன் தம்பியிருக்குமிடத்துக் கனுப்பிவிட்டுத் தான் சிங்காதனத்தினின் றிறங்கிச் சகல சத்துருக்களையும் பக்ஷிப்போனான தன் தம்பியைப் பார்ப்பதற்காகக் கோபுரத்தின் மீதேறிக்கொண்டான்.

பிறகு சூரனிவ்விதமாய்க் கோபுரத்தின் மீதிருந்துகொண்டு போர்க்களத்தில் தனிமையாய் நின்ற ஸ்ரீவடிவேலனையும், பயங்கரமான வுருவத்தைக் கொண்டவனும் மகா பெரிதான சரீரத்தையுடையவனுமான சிங்கமுகனையும் பார்த்து மிகுந்த சந்தோஷம் கொண்டு பின்னுமங்கே யிருந்தான். இவ்விதமாய் அசுர மன்னன் கோபுரத்தின் மீதிருந்துகொண் டிருக்குமளவில் ஸ்ரீகந்தபிரான் சிங்கமுகனோடு யுத்தம் செய்வதற்காகச் சடிதியிற் புறப்பட்டனர். அப்போதே திரண்ட வசுரர்களும் மிகுந்த சத்தம்செய்து கொண்டு அவரை யெதிர்த்துக்கொண்டார்கள். பிறகு ஸ்ரீ தேவேசன் கேவலம் கொசுவுக்கு நிகரான அவ்வசுரர்களைத் திருக்கண்ணுற்று விளையாட்டாகவே தமது மேன்மை பொருந்திய வில்லவளைத்து ஞாணோடு சேர்த்து உரங்கலுற்ற ஸர்ப்பம்போல் மகா பயங்கரமான வஞ்ஞாணை மீட்டுகையிலப்போது பிரம்மாண்டம், வெடிக்குங்கால் உண்டாகும், பெரும் சத்தம்போல் ஓசை யுண்டாயிற்று. அப்பேரொலியைக் கேட்ட மாத்திரத்திற் சிங்கமுகன் குதிரைகளெல்லாம் பீதிகொண்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தலை தொங்கவிட்டுப் பூமிதனில் விழலாயின. பின்புடனே சிங்கமுகன் ஓ! இவன் தான் தாரகனைக் கொன்றவனென்று நிச்ச

யித்துக்கொண்டு அம்மகா பலவான் ஸ்ரீ குஹபிரானண்டைக்கு வந்தபோத வரை நோக்கி வசனமுரைத்ததாவது:—

“ஓ! தேவனே! நீர் யாது நிமித்த மிங்கு வரலானீர்? எங்களது சத்துருக்களை யாங்கள் கொல்வதினாலுமக்கென்ன குறைவு? ஆகையால் நீரிப்போது வழியோடு திரும்பிச் சென்றுவிடும் என இவ்வாறவனது வசனத்தைக் கேட்டருளி ஸ்ரீதேவ ஸேனாதிபதியானவர் மந்தகாஸம் கொண்டவராகி, அடா! அசுரா! யாங்கள் நல்லோர், கொடியோர்களால் தீங்களிக்கப்படுவதைப் பார்க்கச் சகியோமல்லவா? தவிரவும் நல்லோரை யிரக்ஷிப்பதும் அதுபோலவே தீயோரைக் கண்டிப்பதும் எங்கள் கடமையாகையால் யாமிப்போதிங்கு வரலானோம். கேளாய்! மகாசுரா! வீணாய் வளர்த்துவதிலென்ன பயன்? பாவிகளான வுங்களால் தேவரெல்லாம் இம்சிக்கப்படுகின்றபடியால் உங்களைக் கொல்வதற்கே யிங்கு வரலானோமென, சிங்கன் சொல்லுகிறான்:—

ஓ! தேவனே! இப்போதும்மால் தேவர்களை விடுவிப்பதற் கெவ்வளவும் முடியாது; எங்களுக்கு வலிமையில்லாவிடிலல்லவோ வுமது கோரிக்கை நிறைவேறும்; ஓ! வளர்த்துவதாலென்ன? அசுரர்களைப் போர்தனில், வெல்வதற்குமது தகப்பனாலு முடியாது. ஆகையால் நீர் நமது உத்திரவின்படியோடிவிடும். மேலும் சத்துருக்களைக் கதறவடிக்கலுற்ற யாமோ எல்லோர்களையு மெடுத்து விழுங்கியும், மற்றவர்களை மாயாபாசத்தினாற் கட்டி யுதயகிரியிற் போடுவித்தும் சகல படைகளையும் கொன்றுபோட்டனம்; சிறைமீதுள்ள தேவர்களை மீட்பதற்காக நீரொருவர்தான் மிஞ்சி யிருக்கின்றீர். அப்பேர்க் கொத்த வெம்மை நீர் வாலிபனான தாரகன்போல் வீணாய் நினைக்கலாகின்றீர். நம்மாற் கொன்றுவிடப் பட்டவர்களு மின்னும் மற்றோடிப் போனவர்களும் கணக்கிலடங்கார்கள். போர் முனையில் வந்திருக்கின்ற நீரெம்மை அப்பேர்க் கொத்தவராக வறியவில்லை. நல்லது! கட்டிலகப்பட்ட தேவர்களையு மிங்கு வந்து சேரலான வும்மையும் கனவிலும் விடோமென, இவ்வாறுரைக்கலான பேச்சுக்காரனாகிய மகாசுரப்பாதகனைத் திருக்கண்ணுற்று ஸ்ரீ பகவானவர் பிரகாசம் பொருந்திய பல்வரிசைக் காந்தியால் வீசப்பெற்ற வராய் கொஞ்சம் புன்னகையுற்று ஸ்ரீ தேவேசனோர் அத்திரத்தினால் கடினமான அவனது மார்பைப்பிளக்கலாயினர். அப்போதிரத்தம் தாரை தாரையாகப் பெருகியோடி வரலான துவாரத்தின் வழியாயவனது வயிற்றுக்குள்ளிருந்த சில பூதர்கள் வெளியில் வந்து மிகவேகமா யோட்டம் பிடித்தார்கள். கேளீர் பிராம்மணோத்தமர்களே! அப்பாதக னப்போதே தன் கையினாலதனைப் பொத்திக்கொண்டு மற்றவர்களை வயிற்றுக்குள்ளே தேக்கி மகா பயங்கரமானவோர் பெரிய தண்டத்தை யெடுத்துக் கோபத்தினால் பற்றியெறிவோனாகிய பார்வதீமைந்தன் மீதெறிய, அப்போது தேவேசனு மத்தண்டத்தின் மீது நான்கு சஸ்திரங்களைப் பிரயோகித்தனர். அவைகளுடனே அத்தண்டத்தைக் கண்டித்துவிட்டு அவனது நெற்றிதனில் விழ அதனாலவன்வலிமை குறைந்து வயிற்றுப் பொந்ததனைவிட்டுக் கையை யெடுத்துக்கொண்டு மனமூர்ச்சை

கொண்டான். கேளீர் பிராமணோத்தமர்களே! அப்போது சகல பூதர்களு மப்பொந்தின் வழியாய் வெளியில் வந்து விட்டார்கள். மேலும் முந்தியசுரர் களாலும் சிங்கமுகனாலும் கொல்லப்பட்ட பூதர்களெல்லாம் ஸ்ரீ சுப்பிரமண் ணியரது திருவாக் கினையின்படி யுடனே நான்கு பக்கங்களி லிருந்து மெழு ந்து விட்டார்கள்: தவிரவும் கேளீர்! முனிவர்களே! பிறகு ஸ்ரீ பகவானவர் கிருபைகூர்ந்து வீரவாகு முதலிய தம்பிகளை யிங்கழைப்பிப்பதற்காகப் பாசத்தை விடுவிக்கும்படியான வோர் சரத்தைப் பிரயோகித்தவுடன் அது சூரியனுடைய உதயகிரிக்குச்சென்று, மாயாபாசத்தைக் கண்டித்து அங்கு மூர்ச்சை கொண்டிருந்தவர்களை யெழுப்பிப் புஷ்பக விமானம் போலவ்வெல் லோர்களையும் சுமந்துகொண்டு சுகமா யவர்களை இங்கு கொண்டு சேர்த்து, பிறகு ஸ்ரீ கந்தனுக்கினையின்படி யம்பறுத் தூணியிலடங்கி விட்டது. ஓ! முனிவர்களே! பிறகப்போது வீரபாகு முதலிய வீரர்கள் மிகுந்த சந் தோஷத்தோடு ஸகலவபாயங்களையும் தொம்சம் செய்யலுற்ற ஸ்ரீ முருகே சனைவந்தனித்து மிகுந்த பக்தியோடு ஸ்தோத்திரம் செய்தார்கள். அப்போதப் பகவானும் ஓ! வீரர்களே! அத்தூரத்துமனுற் பாசத்தினற் கட்டுண்டு நீங் கள் மிகவும் களைப்படைந்திருக்கிறீர்களல்லவா? என்றது முதலான பிரியவ சனங்களை யவர்களுக்குக் கூறலாகையி லப்போதவர்க ளுரைத்ததாவது:—

ஓ! பிரபுவே! எங்களுக்கிங்கு, தேவேசரும், சகலவசுரர்களுக்கும் விநாசகர்த்தரும், அஷ்டைசுவரிய முடையவருமான தேவரீ ரெங்களெல் லோர்களையும் மிகுந்த கிருபாகடாக்ஷத்தோடு நோக்கிய மாத்திரத்தில் தேவரீ ரருளினல் யாதொருகளைப்பு மில்லை. ஸ்ரீ பகவானுடைய பயங்கரமான குண த்தொனியைக் கேட்டு மூர்ச்சைக் கொண்டிருந்த வசுர பாவிகளெல்லா மப் போது மூர்ச்சை தெளிந்தெழுந்து பெருங் கூச்சலிட்டு அத்தேவேசன் மீது கொடூரமான சரங்களைச் சொரிந்து கொண்டேயவரைச் சூழ்ந்து கொண் டார்கள். பிறகு ஆறுமுகனுமப்பாதகர்கள் மீதனேக பாணங்கள், தண்டாயு தம், பெருங்கத்தி, பட்டாக்கத்தி, வேல், கண்டரைக் கோடலி முதலியவை களை வருஷிக்கலாயினர். அவைகளோ பயங்கரமான வுருவங்களோடு பத்து த்திசைகளையு மொளிப்பித்துக் கொண்டு வேததருமங்களைப் பிரம்மன் போல் சிருஷ்டிப்பவைகளும், தேவச்சிரேஷ்டர்களை ஸ்ரீ நாராயணன் போல் நிலை நிறுத்தி யிரக்ஷிப்பவைகளும், அப்பாவிகளை ஸ்ரீ ருத்திரன்போற் சமுகரிப் பவைகளுமாகி வாயுவேக மனோவேகங்களையுடைய மகாமேகங்கள், சமுத்தி ரங்கள், வடவா முகாக்கினி இவைகளைச் சோஷித்துக் கொண்டும், சூரியன் முதலியவர்களினிரதங்கள், பிரம்மாண்டம், மேருகிரி, பூமி, முதலியவை களை வெடிப்பித்துக் கொண்டும் மிகுந்த பெரும் சத்தமுடையவைகளாகி, யசுரர்களுடைய தலைகள், கைகள், உடல்கள் இவைகளை மிகுதியாயறுத்தும், அதுபோலவே, யானை, குதிரை, தேர்கள் முதலியவைகளைக் கண்டம் கண்ட மாய்த்துண்டித்து இவ்வண்டத்தின் மத்தி எங்கும் வாரியிறைத்துக் கொண் டும், இம்மண்ணுலகண்டத்தைப் பிளந்து கொண்டப் பாலுள்ள வகண்டமான

நீர்களிற் சென்று அவைகளை மிகுந்த செந்தூட்களாற் சேருக்கியும், பிறகு மற்றுமுள்ள வண்டங்களுக்குச் சென்றன.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அங்கங்குள்ள தேவர்கள், முனிவர்களையும், இன்னுமுள்ள மற்றவர்களையும் விலக்கியங்குள்ள பல வசுரர்களையும் கொன்று விட்டன. ஓ! முனிவர்களே! ஓ! கோ! ஸ்ரீ சுப்பிரமணியரது மகிமையாவரால்தான் அறிய முடியும்? யாதெனிலவராலம்பு விடப்பட்ட மாத்திரத்திலொன்று கோடி மடங்காகின்றது. பிறகக்கோடி பாணங்களும் மகாவேகமுடையவாயிரம் கோடி மடங்குகளாகின்றன. பிறகவைகளோ கணக்கிலடங்காத வைகளாகிப் பலபல வண்டங்களிலும் சென்று மிகஜாஜ்வலியமானவைகளாகி யங்கங்குள்ள பாவிகளான வசுரர்களை யெல்லா மிவ்வாறுய்க் கொன்று விடலாயின. அப்போது பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய தேவர் எல்லோர்களும் மெய்நடுக்கம் கொண்டவர்களாகிப் பயத்தினுலுடனே கண்களை யிறுகமூடிக்கைகளை யுச்சிமீதுவைத்துக் கொண்டு ஓ, பகவானே! சுவாமி! தேவாதிதேவா! கருணைக்கடலே! ஓ! அடியார்க்கு! நேசனே! மகாபாவிகளான வசுரர்களை யெல்லாம் கொன்று எங்களை யிரக்ஷித்தருள்வீர். ஓ! சுப்பிரமண்ணியா! ஓ! தேவ தேவோத்தமா! இத்தேவர்களைக் காத்தருள்வீர்! காத்தருள்வீர்! என்றிவ்விதமாயப் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் அஷ்டைசுவரிய முடையவரும், பரமகலியாண குணமூர்த்தியும், மனமதிற் கெட்டாத மகிமைகளுக் காதாரரும், வழுவுதலற்ற விபவமுடைய வருமான ஸ்ரீ குகமூர்த்தியை யப்போது துதிசெய்தார்கள். பிறகிவ்விதமாயோர் நொடிநேரத்துக் கெல்லா மவ்வுயுத்த ரங்கத்திலுள்ள வசுரர்கள் மாண்டு போகையிலங்கனேகம் தலையற்ற வுடல்கள் மகாபயங்கரமாய்க் கூத்தாடின. மேலுமப்போதங்கு, செந்நாய், நரி, கழுகு முதலியவைக ளெல்லாம் சேர்ந்து கூடின. பிற்பாடு பெரும் தேகத்தை யுடையவனும், மாயாபாசத்தை விட்டவனுமான சிங்கமுக னப்போது மூர்ச்சை தெளிந்து முன்போலுள்ள தேகத்தைக் கொண்டவனுகி யசுரரெல்லாம் மடியலானதையும், பூதர்கள் சேர்ந்து நிற்பதையும் வீரர்கள் வந்திருப்பதையும் பார்த்து மிகுந்த கோபத்தினுற் பற்றி யெரிவோனுய் நின்முன்.

## 27-வது அத்தியாயம்.

பிற்பாடசுரனுயிரம் விற்களை யெடுத்துக் கொண்டு மிகுந்த சிங்கநாதம் செய்தவனுகித் துரிதமாய் ஸ்ரீ பகவான் மீது பத்திலக்ஷமம்புகளைப் பிரயோகிக்க, அவைகளை யப்பார்வதிமைந்தனுயிரம் கணைகளாற் கண்டித்துக் கேளீர்! தாணி தேவர்களே? மறுபடியும் வெகு கோபத்தோடப்பாதகன் மீதாயிரம் சரங்களைப் பிரயோகித்தனர். அதன் பிறகு அசுரமன்னன் தேவேசுவரன் மீது பத்திலக்ஷம் பாணங்களைப் பிரயோகிக்கையில் அம்முருகேசன் ஜ்வலிக்கலுற்ற கோபாக்னியால் கலங்கலான திருக்கண்களைக் கொண்டவராகி அவ்வளவே கொண்ட பாணங்களால் அவைகளை விளையாட்டாகவே விரைவில் கண்டித்தனர். பிறகு பாதகனை சிங்கமுகனும் வெகு கோபங் கொண்டு ஸ்ரீதேவேசனுடைய மஹா பலவானுன ஸாரதியின் மார்பினை ஆயி

ரம் பாணங்களால் பிளக்கலாயினன். அப்போதச் சாரதிக்கு ரத்த வெள் ளம் பெருகலானதை மகா பலவானாகிய ஆறுமுகன் திருக்கண்ணுற்று மிகுந்த கோபத்தோடதி தீக்ஷணமான நூறம்புகளை எய்து அவ்வசுரனது தேரை யுடைத்துவிட்டனர். அதன்மேல் அசுரன் மஹா பரபரப்போடு அனேகம் அம்புகளை எடுத்துத் தேவேசன் மீது மிகுந்த கோபத்தோடு கோடைகால மேகங்கள் போல் வருஷித்தனன். அப்போது ஸ்ரீ வடிவே லன் அவைகளை யெல்லாம் அனேகம் அம்புகளால் கண்டித்துவிட்டுப் பின் னும் ஆயிரம் கணைகளால் ஓர் க்ஷணத்துக்குள் அவனதாயிரம் விற்களையும் கோபத்தோடோரே தடவையில் முறித்தெறிந்தனர். பிறகு அசுரன் விற் களை இழந்ததன்மேல் மஹா கோபங்கொண்டோர் பயங்கரமான சூலத்தை எடுத்து, கோலாஹலசத்தம் செய்தவனாகி அத்தேவேசன் மீது பிரயோகித் தான். அப்போது மஹாகோரமாய் அருகினில் வரலான அச்சூலத்தைத் தேவநாதன் கண்ணுற்றதனை அவர் கொடூரமான பதினான்கம்புகளால் துரித மாய்த் துண்டித்துப் பின்னும் அப்பாதகன் மீதாயிரம் சரங்களைப் பிரயோ கித்தனர். அவ்வசுரத்தியனும் அவைகளை ஓர் தண்டத்தினால்தடுத்துவிட்டு மிகுந்த அட்டகாஸம் செய்து கொண்டு ஸ்ரீ கந்தனை நோக்கி எதிர்த்துவந் தான். அப்போது ஷண்முகன் அவ்வாறுவரலான அசுரமன்னனை நோக்கி எழு கூரம்புகளால் அவனது முக்கியமான கைதனைத் துண்டித்துவிட்டனர். அப்போது மறுபடி முன்போல் முளைத்துவிடலான அதே கையினால் அசு ரன் மிகவும் பயங்கரமான அத்தண்டத்தை மறுபடியும் எடுத்துக் கோபத்தி னால் பற்றி எறிவோனாகி யத்தேவேசன் மீதெறிய, மஹா பயங்கரமாய் வர லுற்ற அத்தண்டத்தை ஸ்ரீ தேவநாதன் கண்டு கேளிர் பிராம்மணோத்தமர் களே! மஹா கோபத்தோடதனைத் துரிதமாய் ஆயிரம் சரங்களால் முறித்து விட்டனர்.

அதன் பிறகு அசுரன் அத்தேவரக்ஷகன் மீது மஹா கோரமான ஓர் பாசத்தைப் பிரயோகிக்கலாகையில் அதனை யவர் ஆயிரம் அம்பு களாற் சின்னாபின்னமாக்கிவிட்டனர். பிற்பாடசுரன் மிகுந்த ஆக்கிரம் கொண்டவனாகித் தனதிரண்டாயிரம் கைகளாலும் அக்குகபிரானைக் கட்டு வதற்காக மிகுந்த அட்டகாஸத்தினால் திசை முகங்களைச் சத்தத்தால் நிரப் பியவனாகி, அம்மகா பலவானான அசுரன் மஹா வேகத்தோடு ஓடிவருகையில், அவன் கைகளை விரித்துக்கொண்டு அவ்வாறு வருவதைக் கண்டவுடன் இரண்டாயிரம் சரங்களால் அவனதெல்லாக் கைகளையும் அடித்து வீழ்த்தி னர். அப்போதக் கைகள் மஹா பெரியதான விருக்ஷங்கள் போல் பூமியில் விழலாயின. மறுபடியும் அப்பாதகனுக்கு அக்கைகள் உடனே முளைத்துவிட அம்மகாசுரன் அக்கைகளால் முறிந்து விழலான கைகளையே எடுத்துக் கொண்டு, அஞ்ஞானத்தினால் உண்டாகிய மிகுந்த மதத்தைக் கொண்டவனாகி அதி கோபத்தினால் மிக அட்டகாசம் செய்துகொண்டு விரைவாய் அவ்வசுரா மாற்றான் அருகில் ஓடி வருகையில் அப்போது தேவனானவர் புருவங் களது நெரிததலால் வக்கிரமான கண்களையுடைய அப்பாதகனைக் கண்ட

வுடன் கூர்மையுள்ள ஆயிரம் பானங்களால் அவனது தலைகளைச் சேதித்தும் பின்னும் மஹா கோரங்களான இரண்டாயிரம் கணைகளால் அவனது எல்லாக் கைகளையும் வெட்டியும் எறிந்தனர். பிறகுடனே மஹா கோரங்களான அவனது தலைகளும் கைகளும் முன்போலவே யுண்டாகிவிட அதைத்தூரமதில் நின்ற எல்லாத் தேவர்களும் கண்டு பயத்தினால் மிகுந்த மனவியாகூலம் உற்றவராகி மிகவும் ஆச்சர்யம் கொண்டார்கள். அப்போது பார்வதி மைந்தனும் இவ்வசுரர்களால் முந்தி ஆலமரத்தடியில் பரமாத்மாவாகிய ஸ்ரீ பரமேசுவரனைக்குறித்துச் செய்யப்பட்ட வீரயாகத்தைத் திருவுளத்தில் நினைத்து அதனால் தான் இப்பாதகனுக்குக் கைகளும் மற்ற உறுப்புகளும் முளைக்கலாகின்றன.' என்று நிதானித்துக் கொண்டிருக்கையில் அப்போதவ்வசுரப் பாதகன் உரைத்ததாவது :—

ஓ சிறுவனே! ஸ்ரீ பரமேசுவரனால் எமக் கருளப்பட்ட வரத்தால் மிகஉத்தமமான நமது பலம், சௌர்யம் இவைகளையும், வெட்டுண்ட கைமுதலிய உறுப்புகள் மறுபடி முளைக்கலாகும் தன்மையையும் நீ அறியவில்லை. கேளாய் பையனே! சிறைமீதடைக்கப்பட்ட தேவர்களை நாம் விடப்போவதில்லை. ஆனால் மிகவும் இளைஞன உன்னை மட்டில விட்டுவிடுகின்றோம். ஆகையால் உனதிஷ்டத்தின்படி எங்காகினும் ஓடிப்போய் விடு.' என, அவ்வாறவனது வசனத்தைக் கேட்டு ஸ்ரீ பகவான் "அடா துராத்மாவே! நீ இங்குயாதடா பிதற்றுகின்றாய்? இனி இவ்வாறு பிதற்றுதல் வேண்டாம், இதோ ஒருகணத்தில் பாரடா! உன்னை யாதொருபிரயத்தனமும் இன்றியே கொன்றுவிடுகின்றோம். இதைச் சத்தியமாய்ச் சொன்னோமே யன்றிவேறு விதம் இல்லை என்று கேளீர் பிராமணோத்தமர்களே! ஸ்ரீ ஸ்கந்த பகவான் கம்பீரமாய் உரைத்தனர்.

அது கேட்டப்பாதகன் கடுஞ் சினம் கொண்டவனும் சிங்கநாதம் செய்வோனுமாகி மஹா பிரயத்தனத்தோடு புறப்பட்டுத் தனது இரண்டாயிரம் கைகளாலும் அச்சங்கியையே கொண்ட மலைகளைப்பிடுங்கி அத்தேவநாதன் மீதெறிகையில் அவைகளை அம்மஹாவீரன் அப்போது நூறு கணைகளால் பொடிப் பொடி யாக்கிவிட்டுப் பின்னும் ஆக்கிரத்தோடவனது மார்பினில் ஆயிரம் அம்புகளைத்தொடுத்தனர். பிறகப்பாதகன் பெருகலுற்ற மிகுந்த ரத்தவெள்ளத்தைக் கொண்டவனாயினும் கொஞ்சம் சிரித்துக்கொண்டு மஹாபயங்கரமாகச் சிங்கநாதமிட்டு மிகப்பெரியதான பலமலைகளைப் பிடுங்கினன். கேளீர் பிராமணோத்தமர்களே! அப்போது ஸ்ரீ சுப்பிரமணியன் சினம் கொண்டவராகிக் கேவலம் லீலாமாத்திரமாய் ஆயிரம் கணைகளால் அவனது எல்லாத்தலைகளையும் கண்டனம் செய்தார். மறுபடியும் அத்துராத்மனுக்கு முன்போல் அத்தலைகள் எல்லாம் முளைக்கலான உடன் அப்போதவன் மிகுந்த சிங்கநாதம் செய்துகொண்டு அம்மலைகளை அவர் மீதெறியலாகையில் ஸ்ரீ கந்தபிரான் இரண்டாயிரம் அம்புகளால் அம்மஹாகிரிகளைத்தூள் தூளாக்கி அவ்வசுரனது எல்லாக்கைகளையும் மறுபடியும் துண்டித்துவிட்டனர். கேளீர் முனிவர்களே!

அக்கைகள் பின்னும் முளைக்கலாக, இவ்விதமாய் முளைக்க முளைக்க அப் பாதகனுடைய உறுப்புகளை ஆயிரத்தெட்டு முறைகண்டிக்கலாயினர். இவ்வித மாய் அவ்வசுரனுடைய மஹாபெரியவைகளான தலைகளும் கைகளும் எல்லாத் திசைகளிலும் பாதாளம், பூமி, ஆகாயம், சமுத்திரம் இவைகளிலும், மலை முதலிய எல்லா இடங்களிலும் இடைவெளியின்றி மிக அடர்த்தியாய் விழலாயின. அப்போது தேவோத்தமர் எல்லாம் அவைகள் அறுபட்டு விழலான ஓசையினல் பயமடைந்தார்கள். மேலும் அத்தலைகள் எல்லாம் வாய்களைப் பிளந்து கொண்டு விழுகையில், பறவைகள், மிருகங்கள் முதலிய வையெல்லாம் மிகுந்த பயத்தினல் குகை என்று பிரமித்து அவ்வாய் களுக்குள் புகுந்த கொண்டதன் பேரில், கேளீர் தரணிதேவர்களே! பிற கவ்வாய்கள் மூடிப்போனபடியால் அவைகள் இறந்து போயின. இவ்வாறுய் வெட்டுண்ட உறுப்புகள் எல்லாம் மறுபடி முளைக்கும் போது ஸ்ரீ குக மூர்த்தியானவர் ஓர்தலையையும் இருகைகளையும் விட்டு அம்மஹாசுரனது மற்றெல்லாத்தலைகளையும் கைகளையும் துண்டித்தனர். அப்பொதும் முன் போல் அப்பாவியினுடைய அக்கைதளும் தலைகளும் முளைத்துவிட்டன. இவ்விதமாய் மறுபடி அவ்வசுரனதுறுப்புகள் சீக்கிரம் சீக்கிரம் முளைக்கலா கையில், ஓஹோ கேளீர் பிராமணோத்தமர்களே! அப்போது ஸ்ரீ பார்வதி மைந்தன் மூக்குநுனியில் தமது விரலை வைத்துக் கொண்டு, இப்போது முளையாதே' என்று திருவுளமதில் நினைத்துக் கொண்டதனைக் கோபத்தோடு ஹா என்று கட்ட, அப்போதவ்வசுரவேந்தனது தலைகளும் கைகளும் ஸ்ரீ சுப்பிரமணியரது திருவாக்கினையால் ஆமைக்குள் அதன்தலையடங்குவது போல் உள்ளடங்கிவிட்டன. பிறகு அப்பகவான் ஓர்தலையையும் இருகை களையும் மட்டில் மிச்சமாய்க்கொள்ளலான அச்சிங்கமுகனை நோக்கி "அடா! மூடா! ஓ நமது தலைகள் வெட்டுண்ட போதிலும் உடனே ஓர் நொடிக்குள் முளைத்துவிடும்." என்று உன்னல் உரைக்கப்பட்டதல்லவா? நல்லது, நமது இத்தகைய ஆக்கினையின் மகிமையைக் காணடா என்று மந்தஹாஸமுற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகித் திருவாய் மலர்ந்தருளினர். அது கேட்டு மஹா பாதகனுன அவ்வசுரன் மிகக் கோபவேசம் கொண்டவனுகி, "அடா பையலே! யாம் இப்போதோர் தலையை மட்டிற் கொண்டோராயினும் நமது பராக்ரமத்தை இதோ பாரடா" என்று ஸ்ரீ சுப்ரமண்யரை நோக்கிக் கோபத் தினல் கர்ஜனை செய்துரைத்து ஓர் மலைதனைப்பிடுங்கி அத்தேவநாதன் மீதடிக்க அதனை அவர் ஒரே சரத்தினல் விரைவில் சேதித்துவிட்டனர்.

பிறகு அசுரன் கோபாவேசம் கொண்டவனுகி ஓர் பயங்கரமான தண்ட மதை எடுத்து ஓ பாலகா! உனக்கெம்மோடு வேலினலும் அம்புகளாலும் யுத்தம் செய்யத் திறமை இருப்பதேயன்றி நம்மோடு வேறுயுதத்தினற் போராடவுனுக்கு வல்லமை இல்லையே! என்றுரைத்து அதனை எறிய, கேளீர்! முனிவர்களே! அப்போது பார்வதிமைந்தனும் அனேக கோடி சூர்யர்களுக்கு நிகரான ஒளியால் ஜாஜ்வல்யமானவையாய் விளங்கலுற்ற பயங் கரமான பெருமை பொருந்திய ஓர் வஜ்ராயுதத்தைப் பிரயோகிக்க, அது மிக

சத்தத்தோடு ஸகல ஜகங்களையும் பயமுறுத்திக்கொண்டு புறப்படலாகி மஹா வேகமாய் அவனது தண்டத்தைத் துண்டித்துவிட்டுப் பிறகவன் மார்பினி லும் விழுந்து பிளந்து ஓர் கணமாத்திரத்தில் அத்துராத்மனுடைய உயிர்களை யும் எடுத்துக்கொண்டு புறப்பட்டுச் சென்று, கேளீர் பிராமம்ணோத்தமர்களே! கங்கையாற்றில் ஸ்நானம் செய்துவிட்டுப் பிறகு திரும்பி முன்போல் ஸ்ரீ கந்த னுடைய திருக்கையை அடைந்தது. அப்போது ஓர் நொடிக்கெல்லாம் அத்து ராத்மன் தரைமீது விழுந்து வாயினால் நான்கு பக்கங்களிலும் மிகுந்த ரத்தத் தைத் தாரை தாரையாய்க் கக்கிக்கொண்டு அங்கும் இங்கும் புறண்டு துரிதத் திற் பிராணவாயுவை விட்டனன். அப்போதப் பாதகன் இறந்துவிட்டதைக் கண்டு தேவோத்தமர் எல்லோரும் மிகக் களிப்புற்றவராக அதிவிசித்திரங் களான நல்ல பரிமள புஷ்பங்களை வாரி இறைத்தார்கள். அப்போது பூதர் கள் எல்லாம் மிகுந்த அட்டகாசம் செய்தார்கள். பிற்பாடு ஸ்ரீ பகவானான வர் வீரர்களையும், பூதர்களையும் மற்றுமுள்ள தேவர்களையும் சேர்த்துக் கொண்டு மிகுந்த வாத்திய கோஷத்தோடும் பூதர்களின் கோலாகலத் தோடும், ஹேமகூடபுரம் சேர்ந்து திருமாளிகையின் வாசற்படிக்குச் சீக் கிரம் வந்து தமது இரதத்தினின்றிறங்கி எல்லா வீரர்களையும் அவரவர் விடுதிகளுக் கனுப்பிவிட்டுக் கேளீர் பிராமணோத்தமர்களே! தேவர்களுடன் நேர்த்தியான தனது அந்தப் புரத்துக் கெழுந்தருளிச் சிறந்த சிங்காதனத் தின் மீது உட்கார்ந்தனர். இக்கதையை எல்லாக் காலங்களிலும் கேட்போ னும், படிப்போனும், வேண்டுவதை எல்லாம் கைக்கொண்டு சத்துருக் கூட் டங்களில் மிகுந்த வெற்றியையும் அடையலாகின்றான். தசரதன் மைந்த ரான ஸ்ரீராமர் இவ்வத்தியாய கதையை ஸ்ரீ அகஸ்தியமா முனிவர் முகமாய்க் கேட்டுத் தான் மஹா பாவங்களைச் செய்தோனான ராவணன் முதலிய அரக் கர்களை வெற்றிகொண்டார்.

## 28-வது அத்தியாயம்.

ஓ பிராம்மணோத்தமர்களே! பிற்பாடு கோபுரத்தின் உச்சி மீது இருந்த சூரன் சிங்கமுகன் இறந்ததைத் தூதர் முகமாய்க் கேட்டவுடன் அங்கிருந்து கீழே விழுந்து அங்கும் இங்கும் புரண்டு மஹா துக்காக்கிராந்தனாகிப் புலம் பியதோ என்றால்:—

ஐயோ! பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய எல்லாரும் அவரவர் தானத்தை அடைவதற்குச் சித்தப்படலாயிற்றே! அடா சத்துருக்களைத் தோம்சம் செய் யனுற்ற சகோதரா! உனக்கித் தகைய நிலைமை எவ்வாறு சம்பவித்ததடா?'' என்றிவ்வாறெல்லாம் மிகுதியாய் அவ்வசுரேசன் புலம்பித் தவித்தெழுந்து மஹா துக்கம் உடைபவனாகித் துரிதமாய்ப் பெருமை பொருந்திய சிங்காதனத் தின் மீது ஏறிக்கொண்டு கோபத்தினால்கண்கள் மிகவும் துடிக்கப் பெற்ற வனாகி, "ஓ கோ! நமதரசாக்ஷியில் உள்ள அண்டங்களில் எல்லாம் இறந்து போன இச்சிங்கமுகனிலும் அதிக கீர்த்தி கொண்ட அசுரர்கள் ஏராளமாய் இருக்கின்றார்கள். இவர்களை அழைப்பித்துக் கொண்டு நாமே சென்று அப்

பாலகன் ஒருவனை யுத்தத்திற் சயித்து விட்டுப் பிறகோர் நொடிக்கெல்லாம் நமது பட்டணம் திரும்பி வருகிறோம்.'' என்று சொல்லிவிட்டு ஆயிரம் கோடி தூதர்களை அனுப்பலானன். பிறகத் தூதர்களும் அப்படியே எல்லா அண்டங்களுக்கும் சென்று அங்குள்ள மஹா பலவான்களான பல அசுரர்களுக்கும் சூரன் சொல்லியதை அறிவித்துப் பிறகு மஹா பலவான்களான அவ்வசுரர்களோடு இவ்வண்டத்துக்கு வந்த விதம் எப்படி என்றால்:—

முந்தி ஓர் காலத்தில் ஸ்ரீ பரமேசுவரனுக்கு உலகங்களைப் படைக்க விருப்ப முண்டாகும்போது தேவர்கள் அசுரர்கள், மானிடர்களோடு கூடிய இச்சகல பிரபஞ்சங்கள் இவைகள் அவரது திருவடிகளின் நின்றே வெளிக் கிளம்பலானது போலும், அவரது சடைமுடித் தடத்தினின்று கங்கையானது பெருகிவந்தது போலும், மஹா பயங்கரமாகி வரலுற்ற, அங்கங்குள்ள அசுரர்கள் அவ்வண்டங்களின் வாசற்படி மார்க்கத்தின் வழியாய் அவை அவைகளை இடித்து விட்டுக்கொண்டு தங்களது தேகங்களின் இருள் திரள்களால் சூரியன் முதலியவைகளின் ஒளியை மறைத்துக்கொண்டு மூவுலகுகளின் வெளிகளையும் நிரப்பப் பெற்றவர்களும், மஹா கோரர்களுமாகி வெளிப்பட்டு வந்தார்கள். அப்போதவர்களது வேகத்தினல் அக்கினிக்கும், நெருக்கத்தினல் வாயுவுக்கும் பேரோசையால் ஸகல உலகங்களுக்கும் மிகுந்த பயம் உண்டாயிற்று. அவர்கள் அடி வைப்பதனல் கிளம்பலான புழுதிகளால் ஸகல சமுத்திரங்களும் வற்றலாயின. அப்போதவர்கள் காலடி வைத்த மிகுந்த வேகத்தினல் பிரம்மாண்டம் கூட வெடிக்கலாயிற்று. பூமி ஆகாயம், பாதாளம், இவைகள் எல்லாம் மிகவும் நெருக்கம் உளதாயின. மேலும் பிரமன் முதலிய தேவர் எல்லாம் எங்காகிலும் நகருவதற்குக் கூட தங்களுக்கிடமற்றுப்போனதால் மிகவும் மனவிசாரத்தோடு பயம் அடைந்தார்கள். அப்போது மலைகள் எல்லாம் ஆகாயத்திற் பஞ்சாய்ப் பறக்கலாயின. பிரமாண்டம் முழுதும் அசுரப் படைகளாலே நிறைக்கப்படலாயிற்று. மற்றவண்டங்களில் இருந்துஇங்கின்னும் வரும்படியுள்ள அசுரர்களுக்குக் கொஞ்சமேனும் இடம் இல்லை. பிற்பாடு சூரபத்மன் அவ்வசுரர்கள் வந்து விட்டதைக் கேட்டு மிகுந்த சந்தோஷத்தோடெழுந்து அந்தப்புரம்சென்று ஸ்நானம் செய்யவேண்டியபடி செய்து, முறைப்படி பூஜித்துத் திருநீற்று மூப்பட்டைகளையும், ருத்திராக்ஷ மாலைகளையும் பூண்டிருப்பதாற் சரீரம் சிறக்க அலங்கரிக்கப் பெற்றவனுகி நல்ல பரிமள சந்தனங்களால் சரீரத்திற் பூசியும்,சிறந்த மலர் மாலைகளால் வாசனை பொருந்திய சிரசைக் கொண்டவனும் பல விசித்திரங்களான புதிய வஸ்திராபரணங்களைத் தரித்தும், மேன்மை கொண்ட வத்திரங்களுக்கெல்லாம் ஈச்வரனுன திவ்ய பாசுபதாஸ்திரத்தையும் பிரம்மாஸ்திரம் முதலிய மற்ற அஸ்திரங்களையும் எடுத்துக் கொண்டும், உறை போடப்பட்டவைகளான ஆயிரம் கோடி ரதங்களால் பின் தொடரப் பெற்றவனுகி, அசுரர்க்கு வேந்தனுன சூரபத்மன் துரிதமாய்ப் புறப்படலாகையில் அப்போது அசுரர்கள் க்ஷணநேரத்துக்குள் ஓர் சிம்ம வாஹனத்தையும் ஏழாயிரம் குதிரைகள் சிங்கங்கள் பூதகணங்கள் இவைகள் கட்டப்பெற்றதும் சிங்கத்வஜமுடையதும், மிகநேர்த்தியானதும், மனோவேகம் வாயு வேகமுடையதும் மிக

வும் ஜ்வலிக்கலுற்றதுமான மற்றோர் இரதத்தையும் அங்கு கொண்டுவந்தார்கள். அவ்விரதம் ஓடி வருகையில் மலைகள் எல்லாம் கரகர என்று மிகவும் சுற்றலாயின. சூர்யன் குளிர்ச்சியாயினன். வடவாக்னி அணைய லுற்றது. இவ்வாறாகியதும், பற்பல ஆயுதங்களால் நன்கு சுமத்தப்பெற்றதும், எட்டுக் குலபர்வதங்களையும், பங்கப்படுத்துவதான பெரிய சக்கரங்களால் நேர்த்தியானதும், வீரயாகத்தினின் றுண்டானதும், பிரம்மப்பிரளயத்திற் கூட அழிவு பெறாததுமான அந்நேர்த்தியான ரதத்தின் மீது அச்சூரபத்மன் உட்கார்ந்து கொண்டு அனேக வாத்திய கோஷங்களாலும், பெரியோர்களால் செய்யப்பட்ட வாழ்த்தல்களாலும், முன்னிலையில் இறைக்கப்படலான மிகுந்த மலர் மாரிகளாலும், களிப்புற்ற மனதையுடையவனாகி, அவ்விரதத்தை ஓட்டுவதற்காகப் பல சாரதிகளை நியமித்துக் கொண்டு தங்கமயமான மேருகிரியின் நடுவில் ஒரு மை மலையிருந்ததுபோல் அவ்வசுரமன்னன் ரதத்தின் மீது வீற்றிருந்து துரிதமாய்ப் புறப்பட்டனன். அப்போது சிலர் காளாஞ்சிகளைக் கை மீது கொண்டவர்களாகி, சிலர் பாக்குப் பைகளைப் பற்றியவர்களும், சிலர் கெண்டிகளைக் கொண்டவர்களும், விசிறப்படுவதால் பிரகாசமாய் விளங்காநின்ற வெண்சாமரத்தை வகித்தவர்களும் மற்றவர்கள் ஆலவட்டங்கள், பெரிய குடைகள் இவைகளைப் பற்றியதால் நேர்த்தியான கைகளை உடையவர்களுமாகித் தொடர்ந்து சென்றார்கள். அப்போதனேகம் அசுரர்கள் மிகுந்த அட்டகாசம் செய்தார்கள். இவ்வாறு சம்பிரமங்களோடு அசுரன் அனேக வீதிகளையும் கோபுரங்களையும் தாண்டிக் கொண்டனேக அசுரப்படைகளோடங் நகருக்கு முக்கியமான கோபுரவாசற்படி வரலாகையில், அப்போதங்குள்ள அசுரர் எல்லாம் அவ்வசுர வேந்தனைக் கண்டு, தங்கள் தங்கள் ஆயுதங்களைப்பற்றியவர்களாகிக் கிலுகிலுவென்று மிகுந்தசப்தம் செய்தார்கள். பிறகு சூரபத்மன் அவர்களோடு கூட வெளியில் வந்து பெரிய யானைகள் மதஜலங்களால் நிறப்பப்பட்டிருக்கிற பட்டணமார்க்கத்தைக் கடந்து யுத்தகளம் சேர்ந்தனன். அப்போது மஹா பாதகர்களும் மஹா பலிஷ்டர்களுமான சில அசுரர்கள் சிரேஷ்டமான ஏமகூடபுரத்தை முற்றுகை போடலாகையில் அப்போது பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர் எல்லாம் மூர்ச்சை கொண்டார்கள். மேலும் எல்லாப் பூதர்களும் வீரர்களும் சேனாதிபர்களோடு கூடப் பயமடைந்தார்கள். பிறகு பிரமன் முதலிய தேவர்கள் தேவாதி தேவனான ஸ்ரீ குஹமூர்த்தியை வந்தனித்து விண்ணப்பமிட்டுக் கொண்டதாவது:—

“ஓ ஸ்வாமி! துராத்மனாகிய அசுரேச்வரனான சூரபதுமன் ஸகல அண்டங்களிலும் உள்ள எல்லா அசுரர்களையும் படை சேர்த்துக் கொண்டு இப்போது, தானே நேரில் யுத்தத்திற்கு வந்திருக்கிறான். அவனது சேனைகளும் தேவரீர் பட்டணத்தை முற்றுகை போட்டிருக்கின்றன. ஓ! தேவேசா! ஆகையால் அவ்வசுரப் பாவியை இப்போது சீக்கிரமாய்க் கொன்று போடவேண்டும்.” என அவர்களது வசனங்களைக் கேட்டு ஸர்வஜீவதயாபரரான ஸ்ரீ வடிவேலன், “ஓவாயுவே! சிரேஷ்டமான மனோவேகமுடைய நமதிரதத்தை இப்போது சீக்கிரம் கொண்டு வாரும்,” என்றுதிருவாக்கருளிச் சிங்காதனத்தினின்று துரிதமாய் இறங்கலுற்றனர்.

## 29-வது அத்தியாயம்.

பிற்பாடு அக்னிபூவாகிய ஸ்ரீ கந்தபிரான், பரசு, வஜ்ராயுதம், சூலம் பயங்கரமான வேலாயுதம், கத்தி, கேடயம், பெரியதான சக்கரம், தண்டம், முசலம், தனுசு, மஹா கோரமான பாணங்கள், சிரேஷ்டமான எறிவல்லயங்கள் இவைகளை எடுத்துக்கொண்டு வெளியில் விஜயமாகி, வாயுவால் கொண்டுவரப்பட்ட நேர்த்தியான ரதத்தில் ஏறிக்கொண்டு, ஸகல அசுரர்களாலும் புஷ்ப வருஷங்களாற் பூஜிக்கப்பட்டவராகி மஹா பலிஷ்டர்களும் சிரேஷ்டமான துதிகளால் தோத்திரம் செய்வோர்களும், உன்னதமான ரதங்களின் மீதேறியவர்களும், மிகுந்த புகழ் பெற்றவர்களுமான லக்ஷத்தொன்பது வீரர்களுடனும், மஹா பலவான்களும், இரண்டாயிரம் வாகினி சங்கியை கொண்டவர்களும், பெரிய ஆயுதங்களைக் கொண்டவர்களுமான பூதர்களுடனும் ஸ்வாமியானவர் சீக்கிரமாய்ப் பிரயாணப்பட்டனர். பிரமன் முதலிய எல்லாத் தேவர்களும் மலர்களை வருஷித்தார்கள். பிரளயகால மேகங்களின் சத்தம்போல் மிகுந்த வாத்திய கோஷ முழங்கலாயிற்று. அப்போது சூர்யனுடைய வெயிலை முற்றும் மறைக்கலான திரண்ட குடைகளும் சாமரங்களும் வரிசையாய்ப் பிடிக்கப்பட்டன. மதுரமான வாக்குகளையுடைய கட்டியக்காரர்கள் தேவனுடைய குணாதிசயங்களைக் கூறினார்கள். பிற்பாடு சகல பூதர்களும் கூடிக்கொண்டு, ஓ! கோ! கொடூர நடத்தையுடையவர்களும், மஹா பலிஷ்டர்களும், அனேகம் தலைகளையும் கைகளையும் உடையவர்களும், மஹா மாயாவிகளும் பாவிகளுமான ஆயிரத் தெட்டண்டங்களிலும் உள்ள அசுரர்களும் இதோ வந்திருக்கிறார்களே! இவர்களில் ஒவ்வொருவரும் சகல லோகங்களையும் வாரி வாய்தனில் போட்டுக் கொள்ளவல்லவர்கள். அதேவிதமாய்ச் சகல அண்டங்களையும் நடுங்க அடிக்கவல்லவர்கள். இவர்கள் நெருப்புப் பறக்கலுற்ற பெரிய கண்களையுடையவர்கள். சமுத்திரத்தை யொத்த பெரிய வாய்களைக் கொண்டவர்கள். சந்திர சூர்யர்களுடையவும் நக்ஷத்திரங்கள் உடையவுமான மார்க்கங்களை எட்டி முட்டலுற்ற தலைகளையுடைய பலவான்கள். மேலும் இவ்வெல்லோர்களும் பாவியான சிங்கமுகன், கொடியோனான பானுகோபன், தாரகன், அக்னிமுகன், மஹா சூரனான யாளிமுகன், ஸுந்தன், உபசுந்தன், மது, கைடவன், பலவானற வந்தரன், மஹிஷாசுரன் இவர்களைப்போலவே யொத்த கொடியோர்களும், மஹாபல பராக்ரமங்களைக் கொண்டவர்களாயும் இருக்கின்றார்கள், பிரமன் விஷ்ணு, மஹேந்திரன் முதலியவர்களதும் திக்பாலகர்களதுமான ஆயுதங்களைக் கொண்டவர்கள். ஓஹோ! இவ்விதமாய் அளவற்றகோடி சங்கியை கொண்ட பாபிகள் கூடி இருக்கின்றார்களே! ஓரண்டத்திய அசுரர்களே நம்மெல்லோர்களையும் கதறக்கதற அடிந்திருக்கின்றார்கள் அல்லவோ! ஆகையால் நாம் எல்லோர்களும் உயிர்பிழைக்கும் வகை எவ்வாறுண்டாகும்? தவிரவும் பிரமன், விஷ்ணு முதலிய சகல தேவர்களையும் யாதொரு பிரயாசையும் இன்றியே ஜயிப்பதற் கிவ்வெல்லா அண்டத்து அசுரர்களிலும் ஒருவன்போதுமானதே. அப்படி இருக்கையில் அவர்களில் இருவர் சேர்ந்துவிட்டால் அவர்கள் முன்னர் யாவர் தான் நிற்கவல்லவர்கள்? அவர்களை ஜயிப்

பதற்கு வீரர்களும் சேனாதிபர்களும் திறமையுள்ளவர் அல்லவே! அங்ஙன மாயின் மரங்களாலும் கற்களாலும் சண்டை செய்வோரான நமக்குத்திறமை ஏது? மேலும் அத்தகைய அசுரர்களின் இச்சதுரங்க பலங்களும் சண்டைக் குத் தலைப்பட்டுவிட்டால் அப்போது வீரர்களும் சேனாதிபர்களும் பெருங் காற்றில் அகப்பட்ட துரும்புபோல் எல்லோர்களும் சுற்றிச் சுற்றிப் பறக்க லாவார்கள். ஒருக்கால் வீரபாகு சற்று நின்றபோதிலும் அவரும் வலிமை குறைந்தவராகிச் சந்தேகம் இன்றி அபஜயம் அடைவார். ஆனால் சகல அசு ரர்களையும் வதைக்கலுற்ற ஸாக்ஷாத் ஸ்ரீ சுப்பிரமண்யர் ஒருவர் தான் இங்கு நிற்கத் தகுதியாவர். நாம் எங்காயினும் ஓடிவிடுவதற்குக் கூட இடை வெளி கிடைக்கவில்லை. ஆகையால் பலமுள்ள மட்டில் சண்டை செய்துவிட்டு இங் குத்தானே மரணம் அடைவோம்.'' என்று அப்பூதர்கள் எல்லோரும் ஒரு வருக்கொருவர் சொல்லிக்கொண்டு சண்டைக்குத் தொடங்கினார்கள்.

கேளீர், முனிவர்களே! வீரர்களும், சேனாதிபர்களும் அவ்வசுரர் களைப் பார்த்து "ஓஹோ! இப்போது நம் வலிமை எல்லாம் போனது தான்'' என்றொருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு யுத்தத்துக்குத் தொடங்கி னார்கள். மேலும் அப்போதிந்திரன் முதலிய தேவர்கள் விஷ்ணுவை நோக்கி உரைத்ததாவது:—

"ஓ கேசவா! பாவிகளான இவ்வெல்லா அசுரர்களையும் கொல்வதற்கே ஸ்ரீ சுப்பிரமணியருக்கு அனேக நாட்கள் பிடிக்கும் அல்லவா? ஆகையால் சூரனைக் கொல்வதற் கெப்போது தான் முடியலாகும்? எப்போது தான் தேவர்களுக்குக் கதிமோக்ஷமுண்டாகி, நமது துக்கமும் தொலைந்தெப்போது தான் பதம் கிடைக்குமோ? மேலும் நாம் உயிரோடிருப்பதற்குள் நமக்கிவை யெல்லாம் கிடைக்காமற் போய்விடுமோ யாதோ?'' என இவ்வாறவர்களது வசனம் கேட்டு ஸ்ரீ விஷ்ணு சொல்லுகின்றார்:—

"கேளீர் தேவர்களே! நமக்குக் கர்த்தாவும், நடத்துவோரும் சுகம் அளிப்பவருமான ஸாக்ஷாத் ஸ்ரீ பரமசிவன் தேவர்களை ரக்ஷிப்பதற்காகத் தாமே ஸ்ரீ ஷண்முகன் என்ற பெயரை வகித்துக்கொண் டெழுந்தருளி இருக்கின் றார். அச்சண்முகமூர்த்தியானவர் லீலா விநோதத்தினால் தமது திருமேனி யின் ரோமங்கள் மீது பிராணிகளோடு கூடச் சகல லோகங்களையும் அண் டங்களையும் காக்ஷியருளினர் அல்லவோ! தவிரவும் ஸகல சத்துருக்களையும் சங்கரிக்கலுற்ற சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், அனுக்கிரஹம், திரோதன மாகிய பஞ்சகிருத்தியங்களை அருளலுற்ற அப்பரமாத்மாவுக்கு இவ்வசுரர் களைக் கொல்வதிற் பாவம் யாது? அக்குஹ மூர்த்தியானவர் இவ்வெல்லோர் களையு மோர் க்ஷணநேரத்துக்குள் சங்கரித்துவிடுவர். நீங்கள் எல்லோ ரும் அவரது மகிமையை மறந்தேவிட்டீர்கள். ஓ இந்திரா! நீ மஹா பரி சுத்தரான அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகராகிய அக்குஹபிரான் மீது ஓர் குழந்தை என்ற கொள்கையையே விசேஷமாய்ப் பாராட்டுகின்றாய்.

இவர் தேவர்களதான ஏதோ ஓர் தவத்தின் மஹிமையால் இங்கு வரவில்லை. இத்தேவநாதன் இத்தகைய ஸர்வ மங்களமூர்த்தியான பால உருவத்தைக் கொண்டே, சூரன் முதலிய சிரேஷ்டர்களான எல்லா அசுரர்களையும் ஓர் புன்னகைப்பு, கோபம், சாபம், அல்லது யுத்தம் இவைகளில் யாதொன்றினாலாவது ஓர் நொடிக்குள் கொன்று விடவல்லவராவர். அத்தேவரது மஹா அற்புதமான வலிமையை யாவர்தான் அறியலாவர்? அவர் ஆயுதங்களைத் தரித்தும் பூதர்களையும் மஹாபராக்ரமசாலிகளான வீரர்களையும் சேர்த்துக் கொண்டிங்கு யுத்தத்துக்காக வந்திருக்கின்றார் அன்றோ? இதோ ஓர் நொடி நேரத்துக்குள் இவ்வசுரர் எல்லோர்களையும் கொன்று விட்டசுர மன்னனை சூரனையும் சங்கரித்து விடுவார். ஓ! கேளீர் சகலர்களான தேவர்களே! யான் கூறிய இவை எல்லாம் சத்தியம், சத்தியம்." என இந்திரன் முதலிய எல்லாத் தேவர்களும் விஷ்ணுவினுடைய இத்தகைய வசனங்களைக் கேட்டதன்மேல் சந்தேகம் நீங்கி, ஸத்திய ஞானனந்த ஸ்வரூபியும், ஸகல சத்துருக்களையும் தொலைவிப்போருமான ஸ்ரீ தேவநாதனை ஹிருதய கமலத்தில் தியானித்துக் கொண்டு, அத்தேவர்கள் விஷ்ணு பிரமர்களோடு கூட ஸ்ரீ கந்தபிரான் அருகில் வந்து, பிறகெல்லோரும் அப்பிரபுவைப் பின்தொடர்ந்தவரோடு கூட அவ்வசுரக்கடற்குட் சென்றனர். அப்போது வடிவேலனும் இவற்றை எல்லாம் மந்தஹாஸத்தோடு நோக்கிக் கொண்டே சகல தேவர்களுடனும், வீரபாகு முதலிய வீரர்களுடனும் யுத்தரங்கம் சென்றனர். "கேளீர், பிராமணோத்தமர்களே! மரங்களையும் மலைகளையும் கற்களையும் வாரி வருஷிக்கலுற்ற பூதர்களுக்கு அப்போது அசுரர்களோடு ஓரிடத்து மிகுந்த கொடியயுத்தம் உண்டாயிற்று. அதேவிதமாய் மற்றோரிடத்து வீரர்களுக்கும் அசுரப் படைத்தலைவர்களுக்கும் சண்டை நேரிடலாயிற்று. அவற்றில் இவ்வெல்லோர்களும் அசுரர்களால் முறியடிக்கப் பட்டார்கள். பிறகு வீரபாகு உன்னதமான வில்லைச் சீக்கிரமாய் எடுத்துக் கொண்டு திரளான வருஷங்களை வருஷிப்பதினால் அனேகம் அசுரர்களை ஓர் நொடியதனில் கொன்றும் முடிவில் தோல்வி அடைந்தவராகி ஸ்ரீ சண்முகன் அண்டைக்கு வந்துவிட்டார். பின்பு மஹா கொடியர்களும் பாவிகளுமான அசுரர்கள் ஸ்ரீ முருகேசனைச் சூழ்ந்து கொண்டு, "ஓ! இவன் முற்றும் சிறுவன். இப்போதிவனுக்கு யுத்தத்துக் கென்னதிறமை இருக்கப் போகின்றது?" என்று சொல்லிக் கொண்டே அப்பாதகர்கள் தண்டங்கள், சக்கரங்கள், வஜ்ராயுதங்கள், சூலங்கள், வேல்கள், சிறந்த அஸ்திரங்கள் முதலியவைகளை எல்லாம் மிகுந்த சிங்கநாதம் செய்வோர்களாகி ஒரேகாலத்தில் மிகுதியாய் வருஷித்தார்கள். அதன்மேல் ஸ்ரீ சுப்பிரமணியரும் அப்பாதகர்களை நோக்கியதிற் கோபங்கொண்டு, கொடூரமான வில்லைவளைத்து நாணேறிட்டுப் பிரளயகால மேகம் போற் குணத்தொனி செய்தனர். "ஓ பிராமணோத்தமர்களே! அசுரர்களின் சதுரங்க பலங்களும் அப்போதக் கொடூர ஓசையைக் கேட்டவுடன் மூர்ச்சை கொண்டு பூமியில் விழுந்து விட்டார்கள். என்றாலும், அத்தரும மூர்த்தியானவர் அனேக மந்திரங்களைத் துரிதமாய்ப் பிரயோகித்து இந்திரன் பர்வதங்களைக் கண்டித்தது போல் அவ்வசுரர்களது கால்கள், கைகள், தலைகள், மார்

புகள், புயங்கள் இவைகளை எல்லாம் வெட்டி வெட்டிப் பூமியில் வீழ்த்தினர். தவிரவும் அந்தேவேசன் குதிரைகளுடைய வால்கள், கால்கள், கொழுத்த கழுத்துக்கள் முதலியவைகளையும் அதேவிதமாய்ப் பெரிய தேர்களின் சக்கரங்கள், ஆலவட்டம், கம்பங்கள் இவைகளையும், யானைகளுடைய கொம்புகள், துதிக்கைகள், கால்கள் வால்கள் மஸ்தகங்கள் இவைகளையும் அசுரர்களுடைய துவஜங்கள், குடைகள், சாமரங்கள், ஆயுதங்கள், விசித்திரமான ஆபரணங்கள், பெரிய கிரீடங்கள் முதலியவைகளையும் கண்டித்துப் பூமியில் வீழ்த்தி விட்டனர். கேளீர் தாணி தேவர்களே! தவிரவும் அளவற்ற பராக்கிரமங்களையுடைய ஸ்ரீ முருகேசனது அவ்வத்திரங்கள் அப்போது அங்குவரலான பல அசுரர்களைக் கொன்று கொண்டே ஸ்வர்க்கலோகம், பிரம்மலோகம், விஷ்ணுலோகம், பூலோகம், பாதாளம், அண்டச்சுவர், ஆகாயம், சக்கிரவாள கிரியாகிய இவ்விடங்களில் எல்லாம் வியாபிக்கலாயின.

## 30-வது அத்தியாயம்.

அப்போது கேளீர், பிராமணோத்தமர்களே! தேவர்கள், முனிவர்கள் தவிர மற்றிவ்வனேகம் அசுரர்களுடைய தலைகளும் ராகுவின் சிரசுபோல் வெட்டுண்டு கிளம்பலாகி ஸ்தாவர ஜங்கம ஸ்வரூமாகிய இப்பிரபஞ்சங்கள் முழுமையும் அவைகளாலே நிரம்பலாயின. மேலும் அசுரர்களுடைய வெட்டுண்டகைகளில் உள்ள ஆயுதங்கள் எல்லாம் ஸ்ரீ கந்தனது சரங்களால் இடறப்பட்டவைகளாகி மிழுந்தனேகம் அசுரர்களைக் கொன்றன. இவ்வசுரக்கேடரெல்லாம் இவ்வாறனேக விதமாய்க் கொல்லப்படலானார்கள். அப்போது பிரம்மவிஷ்ணுக்கள் முதலிய சகல தேவர்களும் மற்றுமுள்ள வீரர்களும் ஸேனதிபர்களும் இவற்றைக்கண்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்தார்கள். தவிரவும் முந்தி அசுரர்களையங்குவந்து நிற்கும்போது பார்த்த அத்தேவர்கள், இமை கொட்டாதவராயினும் பிறகவர்கள் கொல்லப்பட்டு நான்கு பக்கங்களிலும் பிணங்களாகி விழுந்து கிடப்பது மட்டிற் கண்டார்களே அன்றியவ் வடிவேலன் ஓர்கண மாத்திரத்திற் செய்யப்படுகிற சங்காரத்தைக் காணக் கூடவே இல்லை. அப்போதவ்வீரர்கள் எல்லாம் தேவர்களோடு கூடமிகுந்த நேசத்தோடு ஸ்ரீ பகவானைத் தோத்திரம் செய்தார்கள். துராத்மர்களான அசுரர் எல்லாம் இவ்விதமாய் மடிந்து விடலாகிப் பிரமாண்டத்தில் இடைவெளி உண்டானவுடன் முந்தியே இடமில்லாததினால் வரக்கூடாதிருந்த மற்றண்டங்களிலுள்ள மஹா பலிஷ்டர்களான அசுரர் எல்லாம் இவ்வண்டத்துக்கு வந்து முன்போலவே நிரம்பலாகி அவ்வாறங்குவந்த அசுரர் எல்லாம் ஸகல அசுரருக்கும் வேந்தனான பாதகனாகிய சூரபத்மனைக்கண்டு மிகுந்த கோலாஹலம் செய்து கொண்டு, பூமிதனில் விஸ்தாரமாய்க் குவிந்து கிடக்கின்ற, இறந்த அசுரர்களின் தலையற்ற முண்டங்கள் மீது அடிவைத்துக் கொண்டே இரத்த பிரவாகங்களைத் தாண்டலாகி "ஆ! ஆ! சூரராஜனுக்கு மாற்றானாகிய இச்சிறுவனை யாங்களிப் போர்க்களத்தில் கொன்று விடுகின்றோம்." என்றுகருதிச் செய்தவர்களாகி அவர்கள் சத்துரு நாசகரான ஸ்ரீ கந்தபிரானைக் கண்டு," ஒஹோ! இவனோ ஓர் மிகுந்த குழந்தையாய் இருக்கிறான். இவன்

யுத்தகளத்தின்கண் ஒருவனாய் இருந்து கொண்டே மற்ற அண்டங்களில் இருந்து வரலான அசுர சேனைகளை எல்லாம் கொன்றிருக்கிறான். இச்சிறு வனுக்கோ யானைகள் இல்லை! குதிரைகள் இல்லை. தேர்முதலியவைகளும் இல்லை.'' என்று அக் குஹமூர்த்தியைச் சூழ்ந்து கொண்டே அப்போதவர்கள் ஆச்சர்யம் அடைந்து, "ஓஹோ! சூரராஜன் வருவதற்கு முந்தியே இச்சிறு வனை யாம் கொன்று போடவேண்டும்.'' என்று அம்மஹாபலவான்கள் எல் லாம் வெகு கோபத்துடன் அனேகம் கூர்மையுள்ள பாணங்களையும் ஆயுதங் களையும் வருஷித்தார்கள். அப்போது பூதர்களும், வீரர்களும், ஸேனாதிபர் களும் மிகுந்த மனவியாகூலம் கொண்டார்கள். பிறகு மஹாபரிசுத்தரான பகவான் வாயுதேவனை நோக்கி மந்தஹாசமுற்ற முகமலரைக் கொண்டவராகிக் கம்பீரமான திருவாக்கினால் உரைத்ததாவது:—

"ஓ வாயுவே! நம்மிரதத்தை யோர் கணமாத்திரத்தில் முன்னோட்டம் பின்னோட்டம், நடுஓட்டம், பக்கங்களின் ஓட்டம் ஆகிய எல்லாவிட ஓட்டங் களிலும் விரைவாய் ஓட்டல் வேண்டும்.'' என இவ்வாறு கந்தனால் அருளப் பட்ட திருவாக்கைக் கேட்டு வாயுதேவன் அப்படியே பாக்கியம் என்று மஹா வேகம் உடைய அவ்விரதத்தைத் துரிதமாய்ப் பூமி ஆகாசம், சமுத்திரங்கள், நதிகள், சக்கிரவாளகிரி முதலிய எல்லாவிடங்களிலும் விடலாகையில் அங்க ங்குள்ள மஹா கோரர்களும், சத்துருக்களால் ஜயிக்க முடியாதவர்களுமான அசுரர்களை ஸ்ரீவடிவேலன் அனேக கோடி சங்கியை கொண்ட பாணங்க ளாற் கொன்று வருகையில், ஓர் நொடி நேரத்துக்குள் அவ்வசுரர்களுடைய சதுரங்க சைன்யங்களும் மடியலாயின.

சௌரீர் பிராமணோத்தமர்களே! அப்போது மடிந்து விழுந்து கிடந்த அசுரர்களால் பூமியானது மிகுந்த பாரத்தினால் சுமத்தப்பட்டதாகி யதைத் தாங்கா நின்ற ஆதிசேடனும் நடுக்கமுற்றபடியால் கிடுகிடென்றாட்டம் கொண்டது. ஆ! இது கஷ்டம்! அப்போதங்கு கிடக்கலான அசுரப் பிணங்களை யெல்லாம் நாய்கள் தின்றன. ஆகாய மார்க்கத்தில் கேடயங்க ளோடு கூடிய அசுரர்களின் வெட்டுண்டகைகள் எல்லாம் சூர்ய சந்திரர் களுடைய பெரிய மண்டலங்களைப் பிடித்திரா நின்ற ராகுகள் போல் விளங் கலாயின. மேலும் அப்போது தேவர்களை இழுப்பதற்காகப் பூட்டியிருந்த மஹா கோரங்களான பூதப்பிரேத பிசாசங்கள் எல்லாம் அவ்வசுரர்களின் மாமிசங்களைத் தின்னத் தலைப்பட்டன. ஓ! தாணி தேவர்களே! ஸ்ரீ பக வானிடமிருந்து வெளிப்படும் அத்திரங்கள் எல்லாம் சில சூல உருவங்களாகி யும், சில பெரிய பரசு உருவங்களாகியும் சில சக்கர உருவங்களாகியும் மற்றவை வஜ்ராயுதம், வேல், அக்னி, வாயு முதலிய உருவங்களாகியும் கிளம்பி அசுரர்களுடைய மாயை, சௌர்யம் .அவர்களால் பிரயோகிக் கப்பட்ட தேவாஸ்திரங்கள் இவைகளை யெல்லாம் தொலைத்துவிட்டுச் சகல உலகங்களிலும் வியாபித்தன. அத்தேவேசனுடைய ரதமோ என்றால் அதி சீக்கிரமாய் ஓட்டலுற்ற வாயு தேவனால் நன்கு செலுத்தப்பட்டு

தாகி அங்கங்கவரால் விடப்பட்ட அஸ்திரங்களின் வேகத்தையும் அதிகரித்தே செல்லலாயிற்று. அப்போது பிரம்ம விஷ்ணு முதலிய தேவர் எல்லாம் அளவற்ற பராக்கிரமத்தையுடைய குமரேசனது ரதவேகத்தையும், சரங்கள், வில் இவைகளுடைய வேகத்தையும், ஸாரதியின் திறமையையும் கண்டு, "ஓ ஹோ! இது ஸ்ரீ குஹன் மஹிமையா? ஸாரதியின் மஹிமையா? அல்லது அஸ்திர முதலியவற்றின் வேகந்தானு?" என்று நினைத்து மிகுந்த ஆச்சர்யத்தை அடைந்தார்கள். இவ்விதமாய்க் கந்தபிரான் ஓர் கணநேரத்துக்குள் அவ்வசுரர்களை எல்லாம் கொன்று போட்டனர். பூமிதனில் எல்லா இடங்களும் பிணக்காடாயின. கேளீர், பிராமணோத்தமர்களே! இவ்விதமாய்ப் பாதகர்களான அவ்வெல்லா அசுரர்களும் மடிந்தெல்லா விடங்களிலும் அனேக கோடி பிணங்கள் மஹா பயங்கரமாய்க் கூத்தாடிக் கொண்டிருக்கும் போது, மறுபடியும் இன்னும் உள்ள அசுரர்கள் மற்றண்டங்களில் இருந்து மஹா கோரர்களும், சகல ஆயுதங்களையும் பற்றியவர்களுமாய் முன்போல் இவ்வண்டத்துக்கு வந்து நிரம்பலானூர்கள். பிறகு சகல அசுரசங்கார மூர்த்தியான ஸ்ரீ குமாரக் கடவுளானவர் அவ்வெல்லோர்களையும் ஒரு நொடிக்குட் கொன்று, பின்னும் இவ்வாறே அடிக்கடி வரலுற்ற அசுரர்களையும் அவ்விதமே நொறுக்கி விட்டு, மிகுந்த கோபத்துடன் அண்டத்தின் வாசற்படியையும் பாணங்களால் அடைத்து விட்டனர்.

கேளீர்! தரணி தேவர்களே! அப்போது மார்க்கமற்றுப் போனதால் மற்ற அசுரர்கள் வரக்கூடவில்லை. ஓகோ கோ! முனிவர்களே! அப்போது உயிரிழந்த அசுரர்களால் பிரமாண்டச் சுவரை முட்டியதாகிப் பிணங்கள் மயமானவோர் பெரிய மலை உண்டாகி விட்டது. மேலும் அவ்வசுரர்களின் ரத்தங்களால் ஓர் கடலும் உண்டாயிற்று. அதன்மேல் ஸ்ரீ கந்தபிரான் புன்னகைப்புறறவராகி அம்மலைதனைக் கோபத்தோடு தம் பன்னிரண்டு திருக்கண்களாலும பார்த்துப் பிரகாசிக்கலுற்ற பொறித்திரள்களால் அதனை ஓர் கணத்திற்குள் சாம்பராக்கி விட்டனர். பிறகெங்கும் முன்போல் வெட்ட வெளியாகி விட்டது. அப்போது நான்கு பக்கங்களிலும் துளித்துளி சாம்பல்கள் மட்டில் பறக்கலாயின. பிறகு விஷ்ணு, பிரம்மா, தேவேந்திரன் முதலான தேவ சிரேஷ்டர்களும் மற்றைத் தேவர்களும், பூதகணங்களும் பிறரும் ஸ்ரீ சுப்பிரமண்யருடைய மகிமையைப் பார்த்து மிகுந்த ஆனந்தம் கொண்டார்கள். மேலும் அவர்கள் மஹா பரிசுத்தம் பொருந்திய துதியைக் கூறினுர்கள். மேலும் அவ்வெல்லோர்களும், "ஓ கோ! இச்சகதீசன் மஹா பாதகர்களான இவ்வசுரர்களை எல்லாம் கொன்று ரத்தமாகிய கடலில் மிதக்கலுற்ற பிணமேயாய் உள்ள ஓர் பெரிய மலைபோல் கோபத்தோடு கண்ணிமைப்பு மாத்திரத்தினுல் ஒரு நொடிக்குள் சாம்பலாக்கி விட்டனரல்லவோ! அத்தகைய மஹானுபாவனுக்கிந்த சூரபத்மனைக் கொல்வதில் என்ன பாரம்?" என்று மஹா சந்தோஷத்தோடொருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு ஸ்ரீ வடிவேலனை வந்தனித்தார்கள். பிறகு சூரபத்மனும் தேவனை நோக்கி மிகுந்த கோபாக்னியால் ஜ்வலிக்கலுற்றவனுகி, அத்தேவநாதனைக் கொடிய வார்த்தை

களால் அதட்டிக்கொண்டே எதிர்த்து வருகையில் ஸ்ரீ சுப்பிரமணியரும் அப்பாதகனை எதிர்த்துக் கொள்ள, அவரை நோக்கிய அசுரவேந்தனானவன் வசனமுரைத்ததாவது:—

"ஓ கேளாய் பாலகா! ஸ்ரீ பரமேச்வரனுடைய வரத்தினல் எமக்கு மரணம் இல்லை என்பது நிச்சயமே! மேலும் இப்போது நீ தம்மோடெதிர்த்துச் சண்டை செய்தவர் எல்லாம் தோல்வியை அடைந்தனர் என எண்ணியிருப்பாய். என்னோடெதிர்த்தவர்கள் இதுவரை என்னை வெற்றி கொண்டவர் இல்லை. உயிர் பிழைத்தவரும் சிலரே. இவ்வுண்மை எவரும் அறிவர். இங்கு நம்மிடத்தில் தொண்டு செய்துகொண்டிருந்த தேவர்கள் வார்த்தையைக் கேட்டுக் கொஞ்சமேனு மாலோசனையற்றவனுகி யிங்கு யுத்தரங்கத்துக்கு வந்து தேவர் பக்கத்திலிருந்து கொண்டு நமது சைனியங்களைக் கொன்றிருக்கிறாயல்லவா? ஆகையா லப்பேர்ப்பட்ட உந்தனையெங்கோடினபோதிலும் நாம் விடுவோமில்லை" என, ஸ்ரீ தேவேசனுன குமாரமூர்த்தி யிவ்வாறவனது வசனத்தைக் கேட்டு "அடா! கேடுகெட்ட வசுரா! மகாபாபியாகிய வுந்தனோடு யாம் பேசத்தக்கதில்லை! ஆகிலும் அஸ்திரங்கள் உந்தன் தேகத்தைப் பிளந்து உனக்குப் பதிலுரைக்கட்டும். அடா! அசுரப்பாதகா! கிரியாம்சை மூலமாய் நமதற்புதமான வலிமையைப் பார்த்துக்கொள்" என, அதுகேட்டப் பாதகன் மிகுந்த கோபத்தோடு மிகவுன்னதமான தனுசை வளைத்து நாணேறிட்டுச் சிரேஷ்டமான பாணங்களை வலிமைகொண்ட தேவசேனைகள் மீது வருஷிக்கலாகையில் அப்போது பூதர்களும், வீரர்களும் சேனுதிபர்களோடு கூடியவர்களாகி யொரேகாலத்தில் அவ்வசுரவேந்தன்மீ தனேகம் கொடிய சரங்களைப் பிரயோகிக்க, சூரன்விட்ட பாணங்க ளவைகளைத் துண்டித்து விட்டு அச்சைனியங்கள்மீது விழலாயின.

## 31-வது அத்தியாயம்.

கேளீர்! தரணித்தேவர்களே! அதனுற் சில ரோடினர்கள்; சிலர் தலையறுபட்டும், மார்பு பிளக்கப்பட்டும் இறந்தார்கள்; சிலர் மூர்ச்சையடைந்தார்கள். ஆனல்வீரபாகு முதலிய சிலர் கூர்மையுள்ள சில அம்புகளை வருஷித்தபோதிலும் அவையவனது மார்பினில் விழுந்து மழுங்கலாயின. பிறகு மகா பலவானுன சூரனும் வெகு கோபத்தோடு அனேகம் பாணங்களைப் பிரயோகித்துப் பின்னு மவர்களா லெய்யப்பட்ட பயங்கரமான பாணங்களைக் கண்டித்து மேலு மவர்கள் அத்திரங்களையும் பெரிய விற்களையும் சேதித்து அவர்களது, கை, மார்பு, தலை இவைகளில் நூற்றுக்கணக்கான பாணங்களால் நிரப்பிவிட்டுக் கேளீர்! முனிவர்களே! அம்மகாசுரன் அடிக்கடி மகா கோர மாயட்டகாசம் பண்ணிக்கொண்டே யிரதத்தைக் கரகரவென்று சுழற்றி விட்டுக்கொண் டதட்டலுற்றான். அப்போது வீரர்க ளிரத்தங்கள் தாரைதாரையாய்ப் பெருகலுற்ற மேனியுடையவர்களும், மெய்நடுக்கங் கொண்டவர்களும், போர்முகத்தில் வஸ்திரங்களை நழுவவிட்டவர்களுமாகி ஓட்டம்பிடித்தார்கள். கேளீர்! தரணித்தேவர்களே! அப்போது மகா வீரரான வீரபாகு

மகாகோபங்கொண்டு அவனது இரதத்தண்டையோடிவந்து தமது கைக்கத்தியால் அவனது கோரமான வில்லை வெட்டியெறிந்தனர். அப்போது அருகினில் வந்த வீரபாகுவை அசுரன் கையினு லறையும்போது அத்தேவநாதனும் அவன் புயத்தினு லடியுண்டு மூர்ச்சையடைந்தார். அப்போது அசுரன் ஓ! இப்போதிங்கு தூதனைக் கொல்வது சூரர்களுக்குத் தகுதியல்ல'வென்று கருதி கையினுல் வீரனைக் கால்களிற் பிடித்துத் தூக்கி ஆகாயத்தி லெறிய, அப்போது தருமமூர்த்தியும் மகாபல பராக்கிரம முடையவருமான அவ்வீரன் நடுவானஞ் சென்று ஓர் நொடிநேரத்துக்குள் மூர்ச்சைதெளிந்தவராகி ஸ்ரீ பகவானருகில் வந்து சேர்ந்தனர். பிற்பாடு அசுரன் கடுஞ்சினம் கொண்டு கிரௌஞ்சமலைக்கு நிகரும், சத்துருக்களுக்குப் பயங்கரமுமான மற்றோர் வில்லை யெடுத்து அவ்வில்லின் நுனியில் ஞாணை மாட்டிப் பயங்கரமான வஞ்ஞாணை மீட்டலாகையில் அப்போது மகா பயத்தை யளிக்கலுற்ற மிகுந்த வோசையுண்டாயிற்று. பிறகு தருமஸ்வரூபியான தேவநாதனுகிய ஸ்ரீ சுப்பிரமணியஸ்வாமியானவர் விஷ்ணு பிரம்மர்கள் முதலியவர்களும் சமுகாரம் செய்யப்படலான மகாப்பிரளயகாலத்தில் அண்டச்சுவர் வரையில் வளர்ந்து விளங்கலுற்ற என்று மழிவற்ற கைலைகிரியினும் அதிகச் சிரேஷ்டமு முயரமுமான விற்களுக்கெல்லாம் மிக மேன்மைபொருந்திய தனுசைக் கைதனிற் பற்றி யதனை நாணேடு சேர்த்து உலகிலுள்ள வனேககோடி ஜீவராசிகளும், தனித்தனியே ஒவ்வொரு வஜ்ஜிராயுதமா 'யுருவங்கொண்டு ஆகாயத்தி லிடிமுழக்கக்கூடிய பேரோசைபோல்மகா கோரமும் மகா பயங்கரமுமான குணத்தொனியைச் செய்தருளினர். பிறகு சூரன் வெகு கோபத்தோடு வாயுவினுமதிக வேகமுடையதும், அக்கினிபோல் மிகவும் தவிக்கவடிப்பதும், இயமன்போல் சமுகரிப்பதும் மேரு முதலிய மலைகளைப் பிளக்கலுற்றதும், பிரம்மாண்டத்தைப் பேதிப்பதும், விஷத்தைக் கக்குகையில் கறுப்பும், மின்னல் மின்னுகையிற் சிவப்புமாயுள்ளதும், சகல ஜகங்களிலும், வியாபிக்கலுற்றதுமான சிறந்த பாணங்களை நூறுகோடி, ஆயிரங்கோடி, பதினுயிரங்கோடி, இலக்ஷம் கோடிக்கணக்குகளாய்ப் பிரயோகித்தனன்.

இவ்விதமாய்த் துராத்துமனுகிய அவ்வசுரவேந்தன் பிரயோகிக்கலாகையில் தேவரெல்லாம் மிகவும் பயங்கொண்டவர்களாகிச் சீக்கிரமாய் விஷ்ணுவிடம் வந்து "ஓ! மாதவா! நமக்கிப் பாண வருஷங்களினின்று தப்பிக்கொள்வதற்காக இருப்பிடமெங்கிருக்கின்றதென்று மிகுந்த வியாகுலசித்தத்தோடுரைக்க, அப்போது ஸ்ரீ ஹரியானவர் அத்தேவர்களை நோக்கி யுத்தர முறைப்பதற்குள் 'ஓ! கோ! ஸ்ரீமுருகேசனது அத்திரங்களவனது பாணங்களை யெல்லாம் கண்டித்துவிட்டன. அது கண்டத் தேவரெல்லாம் மிகவும் களிப்படைந்தார்கள். அப்போதவ்வசுரக்கேடன் மறுபடியும் வடிவேலன் மீதத்திரங்களை வருஷிக்க, ஸ்ரீதருமமூர்த்தியானவர் மறுபடியவன் விட்ட பாணங்களையும் சடிதியாய்க் கண்டித்துத் தூள் தூளாக்கிவிட்டுப் பின்னுமவ்வசுரன் மீதெழுநூறு சரங்களைப் பிரயோகிக்க, அவைகளை யசுரன் பழுதாக்கிவிட்டு அவர் மீது இரண்டாயிரமம்புகளைத் தொடுத்தான். பிறகு

ஸ்ரீ தேவநாதன் அநேசங்கியை கொண்ட பாணங்களாலவைகளைக் கண்டித்துப் பின்னும் கோபத்தோ டிரண்டாயிரமம்புகளை யவன் பேரிலெய்தனர். பிறகு சுரனும் அவைகளை யிரண்டாயிரம் மகா பாணங்களாலே கண்டித்துப் பிறகு மிகுந்த வட்டகாசங்களால் ஆதிசேடன், பூமி முதலியவைகளை நடுங்கச் செய்து கொண்டளவற்ற சங்கியை கொண்ட பாணங்களை வருஷிக்க அவை களை யெல்லாமுடனே ஸ்ரீ சண்முகன் பொடிப் பொடியாக்கிவிட்டனர். இவ் விதமா யவ்விருவரு மொருவர் விட்ட பாணங்களை யொருவர் கண்டித்துக் கொண்டு சண்டை செய்கையில் அம்போடு அம்பிடித்துக் கொள்வதினின்று நெருப்புக் கிளம்பலாகி ஓ! கோ! கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஆகாய கங்கையும் சமுத்திரங்களையும், வற்றச் செய்யலாயிற்று. அப்போது வீர லக்ஷ்மியானவள் அவ்விருவர்களுடைய பராக்கிரமத்தையும் பார்த்தாச்சரியப் பட்டு இவ்விருவர்களில் யாவரைத்தான் யாம் பெறலாகுமென்றவர்களருகி னில் காத்திருந்தனள். அவ்விருவர்களுடைய திருமேனிகளும், பாணங்களா லடர்ந்து மிகுதியாய்த் தைக்கப்பட்டிருந்தபடியால் கொஞ்சமேனும் தெரிய வில்லை. பிற்பாடு சூரபத்துமன் ஸ்ரீ பகவானுடைய தேர் மீது விளங்கலான மிகப் பெரிதாகிய துவஜத்தைக் கண்டித் தட்டகாசம் பண்ணி மிகுந்த சத் தத்தோடு சங்கத்துவானம் செய்துவிட்டுப் பின்னு மத்துராத்துமன் ஸ்ரீ கந் தன் மீதேராளமான பாணங்களை வருஷிக்க, அவைகளை யெல்லாம், ஸ்ரீ சர் வேசுவரன் சிரேஷ்டமான பாணங்களாற் பழுதாக்கிவிட்டுக் கேளீர் பிராம்ம ணோத்தமர்களே! பின்னுமத் தேவேசனேழம்புகளா லவ்வசுரன் தேரின் துவஜத்தைத் துண்டித்துக் கடலில் வீழ்த்தினர்.

பிறகு பூதர்களின் மத்தியிலிருந்து பானுகம்பனென்ற வோர் மகா பலவான் தனதாயிரம் வாய்களிலுமாயிரம் சங்கங்களை வைத்துக்கொண்டு ஸகல வோசைகளையுமடமதிக்கலுற்ற மிகுந்த பெருஞ் சத்தத்தைச் செய் தான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதச் சத்தமானது அண் டச்சுவரில் முட்டி யெதிரொலிகொண்டு அநேகயுகம் வரையிற் கேட்கப் படலாயிற்று. தவிரவுமப்போது ஸ்ரீ விஷ்ணுவானவர் தமது சிரேஷ்ட மான பாஞ்ச ஜன்னியமென்ற சங்கத்தைத் துவானம் செய்தனர். பிற கக்கினி தேவன், தேவர்களால் தூண்டி விடப்பட்டதின் பேரில் கோழியுருவமெடுத்து ஸ்ரீ குஹமூர்த்தியினுடைய இரதத்தின் பேரில் கோழிக் கொடியுருவத்தோடிருந்து கொண்டு. மகாப் பிரளயகாலத்திய மேகம் போல் மிகுதியாய்க் கர்ஜனம் செய்தான். அப்போதிவ் வெல்லாவற்றையும் விஷ்ணு பிரம்மர்கள் முதலிய தேவரெல்லாம் கண்டு மிகுந்த மனக்களிப்புற்ற வர்களாகி மகா கோலாஹலசத்தம் செய்தார்கள். அப்போது பாவப்பிண்ட மாகிய சூரபத்துமன் அம்மிகுந்த கூச்சலைக்கேட்டு ஆ! ஆ! மிகுந்த பயத் தோடு தினம்தோறும் நமக்குத் தொண்டூழியம் செய்து வந்த விஷ்ணு முத லிய வித்தேவர்களுக்கு நம்முன்னிருந்து கொண்டு அட்டஹாஸம் செய்வதனு லென்ன வலிமை? ஆகையால் முந்தியிவர்களை ஹதம்பண்ணிட் பிறகச்சிறுவ

னையும் ஜயித்து விடுகின்றேமென்று உறுதிசெய்து கொண்டு அவனிரதத்தோடு கூடவே ஆகாயத்திற் சென்று மகா கோபத்தோடு தேவர்கள் மீது அனேகம் சஸ்திரங்களை வருஷிக்க, ஸர்வப் பிரபஞ்சஸ்வரூபரும், பரமபாவனமூர்த்தியுமான ஸ்ரீ குஹபிரான் இங்கு பூமியிலிருந்துகொண்டே சிரேஷ்டமான சில பாணங்களாலவைகளை யெல்லாம் பழுதாக்கிவிட்டனர். பிறகு கந்தபிரான் தாமும் இரதத்தைச் செல்வித்து ஆகாயமடைந்து அத்தேவர்களை நோக்கிப் பயப்படாதீர்களென்று திடப்படுத்தி யவர்களை யோரிடத்திலிருக்கும்படி திட்டமிட்டருள, அவர்களும் மிதமற்ற சந்தோஷம் கொண்டு ஸ்ரீ கந்தனுக்கினையின்படி யவ்விடத்திலே யிருந்தனர்கள். பிற்பாடு மகாசுரனாகிய சூரன் தன் முன்னிலிருந்து விளங்கிய அப்பகவானைப் பார்த்து, ஓ! கோ! தேவரெல்லோர்களும் நமதம்புகளை வஞ்சகம் செய்தோடிவிட்டார்கள். இம்மூடப் பையலோ தானாகவே நம்முன்னர் வந்து நிற்கின்றான். ஆகையால் நமக்கிப்போது யுத்தரங்கத்தில் வலிமை சரியாய் வாய்த்திருக்கின்றது என்றிவ்வாறாய் நினைத்துக்கொண்டு மிகுதியான கணைகளைச் சொரிந்தான். அப்போது தேவநாதனும் பதிலஸ்திரங்களாற் சிக்கிரமாயவன் விட்ட கணைகளைக் கண்டித்து விட்டனர். கேளீர்! தரணித் தேவர்களே! அவ்வாறு யுத்தம் செய்த அவ்விருவருடைய இரதங்களும் சுழற்காற்றுப் போலும் சக்கிரம்போலும், இராசி சக்கிரம் போலும், அல்லது குயவன் சக்கிர மெவ்வாறு சுற்றுமோ அது போலும் சுற்றலுற்றன.

பிறகோர் நொடிக்கெல்லாம அவ்விரதங்கள் பாதாளம், பூமி, திசைகள், கடல்கள், இவைகளிலும், மேகம்போல் மலைகளிலும், பிரம்மா, விஷ்ணு லோகங்களில் எல்லாப் பக்கங்களிலும், சக்கிர வாளகிரி, மகா ஸமுத்திரம், இருளுலகு இவ்விடங்களிலும், பிறகோர் கணத்துக்குள் அண்டகடாகத்தின் கீழ்ப்புறம், மேற்புறம், இவ்வெல்லாவிடங்களிலும் சென்று அவைகளை, வீசலுற்ற தங்கள் காந்தியாலொளிக்கச் செய்து கொண்டு கேளீர் ! பிராம்மணோத்தமர்களே! இவ்வாறு அவ்விருவர்களுடைய இரதங்களும் சுற்றிச் சுற்றி வருகையில் ஸகல ஜனங்களும் பயமடைந்தார்கள். பூமி நடுக்கம் கொண்டது; ஏழு சமுத்திரங்களும் கொந்தளிக்கலாயின; மலைகளெல்லாம், தூள் தூளாயின; பிரம்மாண்டமும் வெடிக்கலுற்றது. நக்ஷத்திரங்களும் மேகங்களு மிவ்வாறாய் நடு நடுங்கி யெங்கும் விழலாயின. அப்போது சூரபத்துமன் பாணங்களை நெருப்புமாரிபோல் மிகுதியாய்ப் பொழிந்தான். மேலும் அம்மகா பாதகன் நடுவில் நடுவில், கண்டரைக் கோடாலிகள், குலிசங்கள், மிகுதியான வஜ்ஜிராயுதங்கள், சூலங்கள், இரும்புலக்கைகள், கல்லுளிகள், வேலாயுதங்கள், ஈட்டிகள், பிண்டிபாலங்கள், எறிவல்லயங்கள், கலப்பை முதலிய வின்னும் மற்றவாயுதங்கள் இவைகளையும் கணக்கில்லாதபடி வருஷிக்கலாயினன். அப்போது ஸகலப் பிரபஞ்சஸ்வரூபியான பிரபுவானவர் அவைகளை யெல்லாம் வாயவியாஸ்திரங்களாற் கண்டித்துவிட்டுப் பின்னும் பதினான்கம்புகளால் அவனது தேர்க் குதிரைகளைக் கொன்றுபோட்டனர்.

## 32-வது அத்தியாயம்.

பிற்பாடு சூரன் தேர்க் குதிரைகளை யிழந்ததன்மேல் பூமியில் நின்று கொண்டு வில்லைப்பற்றியவனாகிக் கோபத்தோடு ஸ்ரீசுப்பிரம்மணியன் தன்மீதெய்த அளவற்ற கணைகளைக்.கண்டித்துவிட்டுஅவன் மீதனேக பாணங்களைச் சந்தானித்தனர். பிறகப் பார்வதிமைந்தன் தன் பாணங்களை யவன் சில கணைகளாற் கண்டித்துவிட்டதுகண்டு பின்னுமவன் புயங்கள் மீதாயிரமம்புகளைத் தொடுக்க அவைகள் மலை மீது விழுந்த மழைத்தாரைகள்போல் கற்பாறையிலுமதிகக் கெட்டியான அவனதிருபுயங்களிலும் விழுந்து நிஷ்பலமாயின. பிற்பாடு கேடுகெட்ட வசுரனானவச்சூரன் கோபத்தோடு ஸ்ரீ சுப்பிரம்மணியன்புயங்கள் மீது தீக்ஷணமான விரண்டாயிரமம்புகளைத் தொடுத்துப் பிறகத் துராத்துமன் மிகுந்த கோலாஹல சத்தம் செய்தான். அப்போதவைகளவரது புயங்கள் மீது விழுந்தவுடன் சாம்பலாகிவிட்டன. அது கண்டு அசுரப்பாதகனும் மிகுந்த கோபத்தோடு பற்றியெறிவோனாகிப் பூதர்கள் மீதும் படைத்தலைவர்கள் மீதும், வீரர்கள் மீதும் அளவற்ற சரங்களைச் சந்தானிக்க ஸர்வப் பிரபஞ்ச ஸ்வரூபியும் அளவற்ற பராக்கிரமத்தைக் கொண்டவருமான வச்சகதிசனாயிரம் கூரம்புகளாலவைகளைச் சேதித்தவனது சிறந்த வில்லையும் கண்டித்து விட்டனர். அப்போது அசுரனுடனே வேறு வில்லை யெடுத்து மகாவேகத் தோடாகாயம் சென்றங்கிருந்து கொண்டு அநேகசரங்களைச் சொரிந்தான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிறகு தேவேசனுமங்கு சென்றவனோடு யுத்தம் செய்கையில் மகாபாபியும், மகாதுஷ்டனுமான அவ்வசுரனங்கு யுத்தம் செய்வோன் போலிருந்து பிறகோர் நொடிக்கெல்லாம் அவரை மாயையால் வஞ்சகம் செய்துவிட்டுத் திரும்பவும் பூதலம் வந்து விட்டான்.

பின்பு ஸ்ரீ தேவஸேனனியானவர் அங்கும் வந்து அவனோடு யுத்தம் செய்தனர். பிற்பாடும் அவ்வசுரப்பாதகன், பாதாளம், கடல்கள், சக்கிரவாளகிரி, மேருகிரி, மகாசமுத்திரம், திக்பாலர்களுடைய லோகங்கள், பிரம்மலோகம், விஷ்ணுலோகம், இவ்விடங்களுக் கெல்லாம் மாயையால் அங்கங் கோடிக் செல்லலாகையில் அததேவேசனு மங்கங்கெல்லா முடனுடனே சென்று சென்று அவனோடு யுத்தம் செய்தனர். பின்பசுரன்; அண்டபித்துக்குச் சென்றங்கிருந் தனேகம் சரங்களை வருஷிக்கையில் ஸ்ரீதேவேசனங்கும் சென்றோர் நொடி நேரத்துக்குள்ளனேக மம்புகளாலவனது சிரேஷ்டமான இரதத்தை யுடைத்துப் பூதலத்தில் வீழ்த்தினர். அதன்மேல் அவ்வசுரன் இந்திரலோக ரதத்தை மனதினில் நினைக்க அது வேகமாய் வந்தவுடன் அவனதன்பேரி லுட்கார்ந்து கணைகளால் யுத்தம் பண்ணினான். பிறகசுரன் அவ்வண்டத்தின் வாசற்படியைப் பார்க்கு மளவிலது ஸ்ரீ சுப்பிரமணியரது சரங்களாலடைப்பட்டுப் போனதை யறிந்து அவைகளைத் தன் பாணங்களாற் கண்டித்து விட்டான். அச்சஸ்திரங்கள் பேதிக்கப் பட்டவுடன் அவ் வாசற்படி முன்போலாகி விட்டதிலங்கு வந்திருந்த மிகுந்த வசுரப்படைகளையெல்லா மத்துராத்துமன் கூப்பிடலானதை யவைகள் கண்டு அட்டகாசம்

பண்ணிக் கொண்டு கைதட்டி யொருவரோ டொருவ ரெம்பி யெம்பிக் குதித்துக்கொண்டு வேகமாய் வரலான வச்சதுரங்க பலங்களையு மப்போது விஷ்ணு முதலிய தேவர்கள் கண்டு, ஓ! கோ! இதென்ன? மகாகோரங்களான ஹாலாஹல விஷங்களா? அல்லது அநேக வஜ்ஜிராயுதங்களா? பிரளய காலாக்கினியின் புகைத்திரளா? அல்லது அண்டத்துக்கு வெளியிலிருந்து மிகுந்த ஜலப்பிரவாகந்தான் வெகு வேகமாயிங் கோடிவருகின்றதா? என்று மிகவாச்சரியம் கொண்டவர்களாகி யாலோசித்து மிகுந்த பயங்கொண்டவர்களாகித் துரிதமாயோட்டம் பிடித்தார்கள். அப்போது அவ்வசுரபாவிகளெல்லாம் ஸ்ரீ வடிவேலனைச சூழ்ந்து கொண்டும் மகாபயங்கரர்களாய் அனேகம் கொடிய பாணங்களையும் பற்பல சஸ்திரங்களையும் வருஷித்தார்கள். ஓ! பிராம்மணோத்தமர்களே! உடனே ஸ்ரீ பரமாத்துமா கொஞ்சம் மந்தகாசம் பண்ணியோர் ஹுங்காரத்தோடு அவர்களைத் திருக்கண்ணுற்ற மாத்திரத்தில் அவ்வெல்லோர்களையும் கொளுத்திப் பறக்கலுற்ற சாம்பல் தூளிகளாயாக்கி விட்டனர். மேலும் மறுபடி, மறுபடி வரலான அசுரர்களையு மிவ்வாறே கொளுத்தி விட்டார். தவிரவும், ஸ்ரீ தருமமூர்த்தியானவர் சக்கிராயுதம், கண்டன கோடரி, தண்டம், முஸலம், கத்தி இவைகளைத் துரிதமா யெடுத்து எல்லா பிரம்மாண்டங்களிலு மங்கங்குள்ள மகாபலவான்களும் கொடியர்களுமாயுள்ள வசுரர்களெல்லா மிங்கு இனி வராமலிருக்கும் படியாய் நீங்கள் நமதாக்கினையின்படி யங்கங்கு சென்றெரித்து விடுங்களென்ற கட்டளையுடன், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வெல்லோர்களையும் கொல்வதற்காக அவைகளைப் பிரயோகித்தனர். உடனே அவ்வைந்தா யுதங்களும் சடிதியாய் மகா வேகத்தோடு வெளிக்கிளம்பி ஸ்ரீ பகவானருகினிலிருந்த வசுரர்களை யெல்லாம் கொன்று விட்டுப்பிறகோர் நொடி நேரத்துக்குள் ளண்டத்துக்கு வெளியிற்சென்று அளவற்ற கோடி சூரியபிரகாசங்களுடனும், மிகுந்த சத்தங்களுடனுமனேக முறுக்கு களாய்ப் பிரிந்து பிரம்மாண்டங்கள் தோறும் புகுந்து கேளீர்! முனிவர்களே! அங்கங்குள்ள பாதகர்களான வசுரர்களை யெல்லாம் கொன்று விட்டனவன்றோ! அதன் மேற் சூரபத்துமன் வெகு கோபங் கொண்டு ஸகலலோகங்களையும் ஸமுகாரம் செய்யலுற்றதும், சக்கிராயுதங்களுக் கெல்லாம் முக்கிய தெய்வமுமான ஸ்ரீ பரமேசுவரனு லருளப்பட்ட மகா பயங்கரமான சக்கிரத்தை, மகாபரிசுத்த மூர்த்தியான ஸ்ரீ தேவசேனாதிபர், மீது பிரயோகிக்க, அப்போது ஸ்ரீ வடிவேலப் பிரபு அதனைக் கண்டவுடன் எவ்வித பதிலஸ்திரத்தினாலு மடக்கமுடியாத மகிமை பொருந்தியவச் சக்கிரத்தை யோர் விளையாட்டாகவே தமது திருக்கையை விரித்துத் துரிதமாய்ப் பற்றி விடலாயினர்.

அதை யசுரன்கண்டு தன்னுள்ளத்தில் மிகுந்த துக்கமடைந்தவனுடைப் பிறகு மாயையினாற் பலவுருவங்களை யெடுத்துக் கொண்டப் பிரபுவோடு யுத்தம் செய்தனன். பிற்பாடு ஸ்ரீ தேவநாதன் அனேக வுருவங்களால் வேறுபட்டிருக்கின்ற அவ்வசுரனை நோக்கிப் புன்னகைப் புற்றவராகி மகாமோகங்களையு மபகரிக்கலுற்ற மகிமை பொருந்திய கோரமான ஞானாஸ்

திரத்தைச் சந்தானிக்க, அப்போது அசுரன் மாயையை யிழந்தவனாகித்தான் மட்டில் தனிமையாய் நின்றான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிறகு பிரம்மன் முதலிய தேவரெல்லாம் மலர்களை வாரியிறைத் தெல்லோர்களு மொரே காலத்தில் கோலாஹல சத்தம் செய்தார்கள். பிற்பாடு சூரபத்து மன் இப்பிரம்மாண்டத்தைக் கடந்து ஸ்ரீ குஹமூர்த்தியைக் கூப்பிடலாகையிற் பிறகிருவரும் மற்றோரண்டம் சென்று மகாபயங்கரமாய்ச் சண்டை செய்தார் கள். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பின்பு மகாபராக்கிரம சாலிகளான அவ்விருவர்களும் மற்றோரண்டத்துக்குப் போய் வெகு கொடூரமாய் யுத்தம் பண்ணிப் பிறகதையும் விட்டு அத்தேவாசுரரிருவரும் மற்றெல்லா வண்டங் க்ளுக்கும் இம்மாதிரியே சென்றங்கங்கு மகாபயங்கரமாய் யுத்தம் செய்துக் கொண்டிருக்கையில், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது பிரம் மன் முதலிய தேவரெல்லாம் பீதியினால் கலக்க முற்றவர்களாகி ஸ்ரீ விஷ்ணு வை நோக்கி வினவியதாவது:—

ஓ! விஷ்ணுவே! இச்சூரனோ ஒருவராலும் ஜயிக்க முடியாதவன்; மகா மாயாவி; மகாவஞ்சகன்; அப்பேர்ப்பட்ட அவ்வசுரன் தேவநாதரான ஸ்ரீ சுப்பிரமணியரை யுத்தத்துக்காகக் கூப்பிடுகையிலத் தேவனுமவனது வசனத்திற் கிரங்கி மற்றண்டத்திற்குத் தொடர்ந்தனர். மகாவஞ்சகனான அப்பாதகனை யவரங்கு கண்டாரோ, இல்லையோ, அல்லது சண்டைதான் நேர்ந்ததோ, இல்லையோ யாமறிகிலோம். மிகுந்த சந்தேகமனதை யுடைய யெங்களைப் பெரும்பீதி பாதிக்கின்றதே! யென, இவ்வாறவர்களது வசனத் தைக் கேட்டதன்மேல் ஸ்ரீவிஷ்ணுவானவர் ஸ்ரீ தேவேசனுடைய மகிமையை மனதில் நினைத்துப் பயத்தினால் மெய்நடுக்கம் கொள்ளலான அவ்வெல்லாத் தேவர்களையும் நோக்கி வசன முரைத்ததாவது:—

ஓ! தேவரெல்லோர்களும், கேளீர்கள்! உங்களுக்குப் பயம்யாது? முருகன் சாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரனான சம்புவே! இதற்குச் சந்தேக மில்லை; நிகரற்றவில்லாளியான அப்பேர்ப்பட்ட பகவானுடைய மகாவ ற்புதமான வலிமையை நீங்கள் நன்கறிந்தவர்களாயினு முங்களை மிகுந்த சந் தேகம் பாதிக்கின்றது. அவர் சகலவண்டங்களுக்கும் சென்று அதிசீக்கிரத்தி லிங்குவரப்போகின்றார். ஆகையாலுங்களுக்குச் சந்தேகம் வேண்டாம். யாம், சொல்லியது சத்தியம்! சத்தியம்! என, இவ்வாறு விஷ்ணு வசனததைக் கேட்டுத் தேவர்கள் வெகு சந்தோஷ மடைந்தார்கள். கேளீர்! பிராம்ம ணோத்தமர்களே! அப்பொழுதே சூரனெல்லாவண்டங்களிலும் பெருஞ் சண்டை செய்துவிட்டுத் திரும்பித் தன் பட்டணத் தண்டைக்கு வந்து விட்டான். உடனே அவனால் சண்டைக் கழைக்கப்பட்டவராகி மகா வலிமை கொண்ட ஸ்ரீ கந்தபிரானு மவ்வசுரனைத் தொடர்ந்தே யங்கு விஜயமாயினர். அதன் பிறகு அவ்வீரமாகேந்திர பட்டணத்திலுள்ள மிகக் கொடியவர்களான அசுரரெல்லோர்களும் அக்குஹபிரானை நோக்கி யச்சூரபத்து மனாலேவி விடப் பட்டவர்களாகி யவரை வளைந்து கொண்டார்கள். உடனே ஸ்ரீ முருகேசன்

அப்பாதகர்களையோர் புன்னகைப்போடு நோக்கிய மாத்திரத்திலெரித்து விட்டனர். ஆ! இது மிகவும் கஷ்டம்! அப்போது தேவரெல்லோர்களும் புஷ்பஹாரங்களை வாரி இறைத்து அஷ்டைசுவரியங்களும் நிறையப்பட்டவரும் தேவநாதனுமான ஸ்ரீ சுப்பிரம்மணியரைத் துதிசெய்தார்கள்.

## 33-வது அத்தியாயம்.

அப்போ தசுரவேந்தன் தனது சைனியங்களான அசுரரெல்லாம் சாம்பலாகி விட்டதையும், ஸ்ரீ சுப்பிரமணியன் சகல சைனியங்களோடும் கூட அருகில் விளங்கி நிற்பதையும் கண்டு மிகுந்த துக்கத்தினால் துன்பமடைந்து "ஓ! கோ! நாமிப்போதென்ன செய்யலாகு" மென்று மனக்கவலை கொண்டவனாகி, யத்துராத்துமன் உருவமில்லாமல் தவம் செய்து கொண்டிருந்த தன் தாயாகிய மாயையை நினைக்க, அவளுடனே மகா வேகத்தோடு அசுரமன்னன் முன் வந்து நிற்கையில் அவளை நோக்கி ஒ! தாயே! இப்போ திறந்துபோன வசுரர்களை யெல்லாமுயிர் பிழைப்பித்தல் வேண்டுமென, அவள் அசுரேசுவரனான சூரனை நோக்கி வசன முரைத்ததாவது:—

"அடா! மைந்தா! ஸாக்ஷாத் மகா தேவஸ்வரூபியான ஸ்ரீ கந்தபிரானை நீயோ நிந்திக்கலாகின்றாய்; நீ எந்த ளுவுரைக்கப்பட்ட பெற்றோர் வசனத்தைக் கேட்கவில்லை. மேலுமொருவராலும் ஜயிக்கமாளாத அம்முருகனோடு நீ மதிமயக்கத்தினாற் சண்டை செய்யலாகின்றாய்; ஆகையால் நீ அவரது வேலாயுதத்தினால் மரணமடையப் போகிறாய். அதிற் சந்தேகமேயில்லை. நல்லது, அதெல்லா மிருக்கட்டும்; உனக் கிப்போ திறந்துபோன வசுரரெல்லாம் பிழைக்க வேண்டுமானால் மகா சமுத்திரத்தின் கோடியில் இறந்துபோன சுரர்களையுமோர் கணத்துக்குள் திரும்பப் பிழைப்பிக்கவுற்றதான, ஸுதாமந்தரமென்றோர் மலையிருக்கின்றது. அதிங்குகொண்டு வரத்தக்கது. என்றுரைத்துச் சென்று விட்டாள்.

பிறகு அசுரமன்னனவளுடைய வப்பேர்ப்பட்ட வசனத்தைக் களிப்புடன் கேட்டுத் தான் இந்திரலோகரதத்தை விட்டு ஸிம்மவாஹனத்திலேறிக் கொண்டு ஒ! இரதமே! நீ போயச்சுதாமந்தரமென்ற மலையையிங்கு கொண்டு வரலாவா யென்றுரைத்து, அப்போது இந்திரலோக ரதத்தைத் துரிதமாயனுப்ப, அதுவு மப்படியே நல்லதென்றங்கு சென்று அவ்வற்புத மலையை யெடுத்துச் சுமந்து கொண்டு, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மகா வேகத்தோடு துரிதமாய் வந்து விடுகையிலப்போதே சூரபத்துமன் பிள்ளைகளும், தம்பிகளுமான மகா பலிஷ்டர்களாகிய பானுகோபன், சிங்கமுகன் முதலியவர்களும், இன்னுமடிந்து போன மற்றவர்களுமான வெல்லா வசுரர்களும் அம்மலைக் காற்றினால் வீசப்பட்ட மாத்திரத்தில் கேளீர் பூமி தேவர்களே! தூங்கினவர்கள் போல், மகா கோரர்களாயெழுந்து விட்டார்கள். அப்போத சுரரெல்லோர்களு மேககாலத்தில் மிகுந்த வட்டஹாஸம் செய்து கொண்டு ஆ! இதென்ன! உயுத்தரங்

க்ம் போலிருக்கின்றது, என்றந்தப் பாவிகள் சொல்லிக் கொண்டே யங்கு நான்கு பக்கங்களிலும் விழுந்து கிடந்த வாயுதங்களை யெடுத்துக் கொண்டு எல்லோர்களும் யுத்தத்துக்குச் சித்தம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். பிற்பாடு சூரபத்துமன் பிழைத்தெழுந்திருக்கலான பிள்ளைகள், சகோதரர்கள் முதலிய வசுரர்களையு மிந்திரலோக ரதத்தையும் கண்ணுற்று மிகவும் சந்தோஷப்பட்டுப் பாவ கருமங்களையே செய்யலுற்ற வத்துராத்துமன் தேவரெல்லோர்களையும் திட்டினன். அப்போது, தேவரெல்லோர்களு மிவ்வெல்லாவற்றையும் தூரத்திலிருந்தபடியே பார்த்து மிகப்பயமடைந்து, ஓ! கோ! துஷ்டர்களான இவ்வசுரர்களால் நாமின்னு மதிகத் துன்பமடையாதிருந்தால் அது தான் நமக்கு நல்ல பதமென்று சொல்லிக்கொண்டு கேளீர்! முனிவர்களே! அவரவர் தங்கள் தங்களாயுதங்களை யெறிந்து விட்டு அநேகர் சக்கிரவாக பக்ஷியினுருவத்தோடும், சிலர் மயில், அன்னம், புரு, கிளி, கோட்டான், வண்டு, கொக்கு, முதலியவைகளினுருவத்தோடும் மிகவும் பயத்துடனே யோட்டம் பிடித்தார்கள். மேலுமப்போது சேனதிபர்களோடு கூட வீரர்களும், பூதர்களும் மிகுந்த துக்கமடைந்தார்கள்.

அப்போது ஸாக்ஷாத் ஸச்சிதாநந்த பரமாத்தும மூர்த்தியாகிய ஸ்ரீ குகபெருமா னிவ்வெல்லாவற்றையும் நோக்கி மந்தஹாஸத்தோடு கூடிய முகாரவிந்தத்தைக் கொண்டவராகி விளங்கியிருந்தனர். அப்போது சிங்கமுகன் முதலிய துஷ்டரெல்லாம், சூரனு லுத்திரவிடப்பட்டவர்களாகி விளக்கு வெட்டுப் பூச்சிகள் தீபத்தினிடம் செல்வது போல் ஸ்ரீ முருகேசனைச் சயிப்பதற்காக அவரிடம் வந்து கூர்மையுள்ள சரங்களை யவர் மீது சொரிந்தார்கள். அப்போது வீரர்களவ் வசுரர்களின் அட்டகாஸத்தைப் பார்த்து மிகவும் பயங்கொண்டார்கள். அதன் மேல் தரும மூர்த்தியான ஸ்ரீ ஷண்முகனுடனே யப்பாதகர்கள்மீது ஸகல சத்துருக்களையும் நாசம் செய்யலுற்ற மகா கோரமாகிய பாசுபதாத்திரத்தைச் சந்தானம் பண்ண, அது பெரிய சர்ப்பங்கள், வஜ்ஜிராயுதங்கள், விஷங்கள், அளவற்ற வுருத்திரர்கள், மருத்துக்கள், பெரிய பெரிய சஸ்திரங்கள், அலைகளோடு கூடிய மகா பயங்கரமான சமுத்திரங்கள், அக்கினிகள், மற்றுமுள்ள மகா கோரங்களான வத்திரங்கள் இவைகளை யெல்லாம் நான்கு திக்குகளிலும் கக்கிக் கொண்டோர் நொடி நேரத்திற்குள் மகா பயங்கரமா யவர்களது அத்திரங்களை யெல்லாம் கண்டித்து விட்டுப் பிறகொரே நேரத்திலவ் வெல்லா வசுரப் பாதகர்களையும் அதம் பண்ணி, அச்சுதா மந்திரகிரியையும் தூள் தூளாக்கி விட்டப்போது சீக்கிரமாய் ஸ்ரீ பகவான் திருக்கைக்குத் திரும்பி வந்து விட்டது. அப்போது யுத்தரங்கத்தில் சூரன் மட்டில் மிஞ்சியொண்டியாய் நிற்கலாகையில் பிரம்மன் முதலிய தேவர்கள் மிகுந்த சந்தோஷ மடைந்தார்கள். பிறகு துஷ்டனுன சூரன் மகா கோபங் கொண்டு புருவங்கள் நெரித்தலால் வக்கிரமான கண்களை யுடையவனுகி இந்திரலோக ரதத்தை நோக்கியப்போது வசன முரைத்ததாவது:—

ஓ! ரதமே! நீ வீரர்களையும், பூதர்களையு மின்னுமுள்ள மற்றவர்களையும் சீக்கிரமாயண்ட கோளத்திற்கொண்டு வைத்திரு என்றவ் விரதத்தை

யனுப்ப, அதுவு மப்படியே நல்லதென்று மகா வேகத்தோடு பயமுறுத்திக் கொண்டே புறப்பட்டுக் கேளீர்! தரணித் தேவர்களே! வீரர்களையும், பூதர்களையு மப்போதே மூர்ச்சை கொள்வித்துப் பிறகவர்களைத் தூக்கிக் கொண்டோர் நொடி நேரத்திற்குள்ளங்கு சென்று தானு மிருக்கலுற்றது. அப்போதசுரக் கேடனுகிய வச்சூரன் மிகுந்த சந்தோஷ மடைந்தான். தேவர்கள் ஹா ஹா வென்று பயப்பட்டு மிகவும் துக்கமடைந்தார்கள். அப்போது பரமாத்துமாவான வடிவேலன் அவர்களெல்லா மிந்திரலோக ரதத்தினுலண்ட கோளத்திற்கொண்டு வைத்துக் கொள்ளப்பட்டிருப்பதை யறிந்து மிகுந்த வத்திரங்களைப் பிரயோகிக்க, கேளீர்! முனிவர்களே! அவ்வத்திரங்களு மதிவேகமாய்ச் சென்றவ் விரதத்தின் மீதிருந்தவர்களையெல்லாம் மூர்ச்சை தெளிவித்துப் பிறகோர் நொடி நேரத்திற்குள் ளவ்விரதத்தோடு கூடவே அவர்களை யதிவேகமாய்ப் பகவானிடம் கொண்டு சேர்த்து விட்டன. பிற்பாடு வீரர் முதலியவர்க ளவ்விரதத்தை விட்டிறங்கி ஸ்ரீ வடிவேலனைத் தரிசித்து மிகுந்த பக்தியோடு தண்டனிட்டுத் தோத்திரம் செய்தார்கள். அப்போது ஸ்ரீ சுப்பிரமணியனசுரனது ரதத்தை நோக்கி நீ யினி யவ்வசுரனிடம் போகத்தக்கதில்லை. இங்கேயிரு என்றவ் விந்திரலோக ரதத்தைத் தம்பனம் செய்து பிறகத் தரும மூர்த்தியானவர் தம் திருக்கண்களாலச் சூரனை நோக்கிக் கொண்டங்கு விளங்கியிருந்தனர். அது கண்டசுரனும் மகா கோபம் கொண்டு ஸ்ரீ ஷண்முகன் மீதத்திரங்களை வருஷித்தான்.

பிறகு வடிவேலன் அவைகளைச் சில கணைகளாற் கண்டித்துவிட்டுப் பின்னும் பல சரங்களைத் தொடுக்க, பாவத்தொழிற்காரனான அவ்வசுரனுமவரது சரங்களைப்பழுதாக்கிவிட்டு, மேலும் மகா கோபத்தோடவர் ஸாரதிமீது திரளான பாணங்களைத் தொடுக்கலாயினன். அப்போது வாயுதேவன் அவனத்திரங்களாற் பீடிக்கப்பட் டிரத்தங்கள் தாரைதாரையாய்ப்பெருகப் பெற்றவனுகித் தேரோட்டத் திறமையற்று மகாவியாகூலங் கொண்டங்கே யிருந்துவிட்டான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அது கண்டு பகவானுடனே கூர்மையுள்ள வாயிர மம்புகளாலவனது வில்லை முறித்தெறிந்தனர். அதன் பிறகு சூரன் கடுஞ்சினம் கொண்டவனுகித் துரிதமாய்ச் சிம்மவாகனத்தை விட்டிறங்கி மகா வட்டகாஸம் செய்து கொண்டு ஸ்ரீ பகவான் சன்னிதியில் வந்தான். அப்போதவனது வாகனமாகிய சிம்மமானது சகலர்களையும் சமுகாரம் செய்யலுற்றவோர் சூலத்தை விரைவாயெடுத்து ஸ்ரீ முருகேசனுடைய தேர்க் குதிரைகளை வேகத்தோடு குத்திக்குத்தி மிகுந்த கர்ஜனம் செய்தது. தவிரவுமப்போதசுரனும் ஸ்ரீ ஷண்முகன் மீதோர் சூலத்தைப் பிரயோகிக்க, அது மிகுந்த அக்கினிகள், கொடிய விஷங்கள், வஜ்ஜிராயுதங்கள், பயங்கரமான பூதங்கள், பெரிய வாயுதங்கள், இவை முதலிய வின்னுமனேகங்களை மகாபயங்கரமாய் வாரியிறைத்துக் கொண்டு மகா வேகத்தோடு கந்தன் சன்னிதிக்கு வரலாகையி லப்போதவர் திக்ஷணமுடைய கோடி பாணங்களை யதன்பேரிலெய்தும், கேளீர்! தரணித் தேவர்களே! அவைகளை யச்சூலம் அசட்டையு

டன் சேதித்து விட்டு அவர் முன்னர் வந்துவிட்டு அது. அப்போதேயவர் மிகுந்த கோபத்தோடதன் பேரில் மகா கோரமான வோர் குலிசாயுதத்தைச் சந்தானிக்க, ஸ்ரீ குஹ மூர்த்தியினுடைய கோரமான வக்குலிசமானது அச்சூலத்தை வாய்தனிற் கௌவிக் கொண்டவரிடம் கொடுத்துத் தானுமவர் திருக்கையை யடைந்து விட்டது.

பிறகு தேவரெல்லாம் மனக்களிப் புற்றவராகி "ஓ! கருணைக்கடலாகிய பிரபுவே! பாவியான விக்கொடிய துராத்துமனைக்கொன்றெங்களை யிரக்ஷித்தருள வேண்டும்" என்று பார்வதி மைந்தனுன வத்தேவேசனைத் தோத்திரம் செய்தார்கள். பிற்பாடு பிரபுவானவர் மகாகோரங்களான விரண்டாயிரம் சரங்களை யத்துராத்துமனுடைய வாகனமான சிம்மத்தின் மீது துரிதமாய்ப் பிரயோகித்தவுட னப்போதே யச்சிங்கம் சடிதியில் பூமிதனில் விழுந்து மரணமடைந்தது. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதசுரன் சீக்கிரமாய்ப் பூமிதனிற் குதித்து மிகவற்புதமும், மகாகோரமுமான வோர் சக்கிரவாகப் பறவையினுருவத்தைக் கொண்டாகாயத்தினுயரக் கிளம்பலானுன்.

## 34-வது அத்தியாயம்.

அப்போது பறவை யுருவங்கொண்ட வசுரன், பூதர்கள், வீரர்கள், ஸேனாதிபர்கள், இவர்களை இறக்கைகளாலடித்தும், பிறகு சிலர்களை மூர்ச்சையடைவித்தும், சிலரை மூக்கினல் கொத்தித்தின்றும், சிலரைக் கோபத்தோடு மூக்கினல் கொத்தியாகாயத்தி லெறிந்தும் சில பூதர்களைக் காலினல் கிழித்தாகாயத்தி லெறியவு மாயினன். மேலு மவ்வசுரனு காயத்திற் கறகற வென்று சுற்றிக்கொண்டே வெகு வேகமாய், வந்து ஸாரதியையு மிரதத்தையும் அறைந்து ஆகாயம் சென்று பிறகு வந்து தேர்தனிற் கட்டிய குதிரைகளைக் கோபத்தேடு துரிதமாய்த் துன்பப்படுத்திப் பகவானுடைய கொடிய வத்திரங்களையு முறித்து முறித்துத் தூள்களாக்கினன். பிறகு ஸ்ரீ தேவநாதன் துராத்துமனுகிய வச்சூரனுடைய விக்கொடுமையை யெல்லாம் கண்டளவற்ற கோடி சங்கியை கொண்ட சஸ்திரங்களை யவன்மீது வருஷிக்கலாகையில் அவைகளை யெல்லாம் அவ்வசுரனிறக்கைகளால் மிகுதியா யடித்தும், மூக்கினல் துரிதமாய் முறித்தும், கால்களால் கிழித்தும், மறுபடி வேகத்தோடு பாதாளம், சமுத்திரங்கள் சக்கிரவாளகிரி, பூமி, மலைகள், நதிகள், இவைகளை யெல்லாம் சுற்றியும் பிறகு வெகு வேகத்தோடு வந்து வீரர்களையும், பூதர்களையும் தின்றும், மற்றவர்களைக் கோபத்தோடு மூக்கினுற் கொத்தி யுதறியும் ஸ்ரீஷண்முகனது தேருக்கு மேலாய் மிகுந்த சத்தத்தோடு வட்ட மிட்டனன்.

அப்போது ஸ்ரீ பார்வதி மைந்தன் அக்கொடூரமான பக்ஷியைப் பார்த்து மந்தஹாஸம் செய்து கொண்டு "ஓ! இப்போதிப் பறவையோடு இவ்விதமாய்ப் போராடுவது நமக்குச் சரியல்ல" வென்று சொல்லி யிரதத்தை விட்டிறங்கிப் பூமியில் நின்று கொண்டு அத்தேவநாதன் தம்முன்னில் நின்ற விந்திரனுடையு

முகத்தைத் திருக்கண்ணுற்ற மாத்திரத்தில் அவனுடனே யோரற்புதமான மயிலுருவத்தைக் கொண்டவனாகி வந்து அசுரர்களுக்குயமனுனை அப்பகவானை வணக்கத்தோடு துரிதமாய் வந்தனிந்து, ஓ! சகல தேவர்களுக்கு மீசுவரனுன சுவாமி! தேவரீ ரடியேன் மீதுட்கார்ந்து கொண்டு இத்துராத்துமனோடு யுத்தம் செய்தல் வேண்டுமென்று அவ்வடிவேலனைத் தோத்திரம் பண்ணினன். பிறகவன் சொல்லிய வசனத்தைக் கேட்டு "நல்லதப்படியே செய்வோ" மென்று அப்பகவான் அம்மயிலின் பேரிலேறிக்கொண்டு அதனைக் கோபத்தோடச் சக்கிரவாகத்தின் பேரில் ஏறுகையிலப்போது அச்சக்கிரவாகம் வெகு கோபத்தோடு வந்துஅம்மயிலைத் துரிதமாய்க் காலினுலறைந்து மூக்கினுற் கடிக்க, அப்போதுஅம்மயில் மிகவும் பயமடைந்ததாகித் துயரமடைந்தது. அது கண்டு ஸ்ரீ பார்வதிமைந்தனுமதன் முகம், தலை, மார்பு, கால்கள், இவைகளில னேக மம்புகளை மிகுதியாயெய்தனர். அப்போதப் பறவை யக்கணைகளால் மிகவும் துயரமடைந்து இரத்தம் மிகுதியாய்ப் பெருகப்பெற்றதாகி மறுபடியுமது மகாபயங்கரமான விறக்கைகளை விரித்துவிட்டுதறிச் சகல லோகங்களையும் நடுங்கச் செய்துகொண்டே யோர் நேரத்திற்குட் சுற்றிவந்தது. அப்போது ஸ்ரீ தேவநாதனுமவ்வசுரக் கேடனெங்கெங்கு வெகுவேகமாய்ச் சென்றுனே அவ்வெல்லாவிடங்களிலும் பாணங்களைப் பிரயோகித்துப் பிரளயகாலத்தில் முயன்றிருக்கும் மேகம்போலவன் மீது சொரிந்தனர். பிறகு கேளீர்! தாணித் தேவர்களே! அப்பறவையுமவரது வில்லை முறிக்கக் கருதியவ்வாறு முகனண்டைக்கு வெகு விரைவாய் வந்தது. அப்போது பகவானது சமீபத்தில் வரலானதைக் கண்டு அதனைக் கத்தியாலிரண்டு துண்டாய் வெட்டிப் பூமியில் வீழ்த்தினர். அத்துராத்துமன் கீழே விழுந்தவுடன் பூமி வடிவமாய்அண்டம்வரையில் மிகுதியாய் வளர்ந்து கொண்டு ஸ்ரீ பகவானைப் பயமுறுத்துகையிலப்போது சூரியன், சந்திரன், வாயு, இவர்களுடைய மார்க்கமெல்லாமத்துராத்துமனுல் அடைபட்டுப் போனதைத் திருக்கண்ணுற்று மகா பயங்கரமான வுருவத்தோடிருந்த அவ்வசுரனைப் பார்த்து 'அடா! துராத்துமாவே!' யென்றவனைச் சொல்லி யப்பாதகன் மீது தீக்ஷணமான வேழு பாணங்களைப் பிரயோகிக்க, உடனே யப்பாணங்கள் மகா சமுத்திர வுருவத்தோடு சென்று அசுரனுலுருவம் கொள்ளப்பட்ட வப்பூமியை நாசம் செய்துவிட்டன.

பிறகசுரன் வெகு கோபம் கொண்டு மறுபடி யோர் பெரிய சமுத்திரத்தினுருவத்தை யெடுத்துக் கொண்டு பெரிய அலைகளுடனுறுமுகனை யெதிர்த்தான். ஸ்ரீ தேவேசன் அவன் மீது நூறம்புகளை யெய்தனர். அப்பாணங்களுடனே யளவிறந்த அக்கினிகளினுருவங்களைக் கொண்டவையாகி யசுரனுல் துன்மார்க்கமாய்க் கொள்ளப்பட்ட மகா கோரமான வச்சமுத்திரத்தை வற்றச் செய்தன. பிறகசுரப் பாவியானவன் ஓர் பெரிய அக்கினி யுருவங்கொண்டு வீசிப் பிரகாசிக்கலுற்ற நெருப்புப் பொரிகளாற் சூழப்பெற்றவனுகி ஸ்ரீ தேவேசனை யெதிர்த்து வந்தான். அப்போது தேவன் மந்தஹாசம் கொண்டவர் போலிருந்து கொண்டு ஆயிரம் கணைகளைத் தொடுத்தார். கேளீர்! முனிவர்களே! அவைகள் சண்டமாருதங்களாய்ச் சென்றப்போதே

யிப்பேர்ப்பட்ட அக்கினியை யணைத்துவிட்டன. மகாவஞ்சகனும், பாவ பிண்டமுமான அவ்வசுரக்கொடியன் அப்போதே மிகவும் பயங்கரமானவோர் பெருங்காற்றின் உருவத்தைக் கொள்ளலாகையில் பிரபுவானவர் அவன் மீதிலக்ஷம் கொடிய சரங்களைச் சொரிய, அவைகளனேகம்பெரிய சர்ப்பங்களி னுருவத்தோடு சென்று அக் காற்றுதனைப் பக்ஷித்து ஸ்ரீ குஹனிடம் திரும்பி வந்துவிட்டது. இவ்வாறாய் அந்தந்த வல்லா வத்திரங்களும் அசுரனுடைய அந்தந்த உருவத்தை யதம்செய்துவிட்டுச் சீக்கிரமாய்ச் சருவேசுவரனிடமே திரும்பிவந்துவிட்டன. கேளீர்! பிராம்மணோத்தமர்களே! யுத்தமல்லர்களான அத்தேவேசர் அசுரேசர்களுடைய கொடிய யுத்தம் நான்கு தினங்களாய் இவ்வாறு நடைபெற்றது. பிற்பாடு மகா சூதுகாரனான அவ்வசுரன்திரிமூர்த்தி களி னுருவத்தோடும், ஓரிடத் தசுரவுருவத்தோடும், மற்றோரிடத்து இந்திரன் முதலிய தேவர்களி னுருவத்தோடும், பூதர்களி னுருவத்தோடும், பிசாசம், பயங்கரமான அக்கினி இவைகளி னுருவத்தோடும், மற்றோரிடத்து மகா கோரமான யமனுருவமெடுத்தும் வெகு வேகமாய் வந்தான். தவிரவு மத்தூர்ப்புத்திக்காரனானவன், பெருங்காற்றுருவத்தோடு நான்கு பக்கங்களிலும் வீசிவந்தான். மேலு மோரிடத்துக் கடல், எருது, நஞ்சு, மேகக் கூட்டங்கள், இடி, இருள், மலை, சூரியன், இவைகளின் கூட்டம்போ லுருவமெடுத்தும், திக்கஜங்கள், சிங்கம், பக்ஷி, மான் இவைகளின் கூட்டம்போலோரிடத்தும், ஓரிடத்துத் தன் சுயஉருவத்தோடும், நக்ஷத்திரங்களி னுருவத்தோடும், நான்கு பக்கங்களிலும் சிங்கமுகன், அக்கினிமுகன், பானுகோபன், முதலிய தம்பிகளுடையவும், பிள்ளைகளுடையவுமான பயங்கரமாகிய உருவங்களோடும், ஒவ்வோரிடத்துத் தன் மந்திரிகள், சேனாதிபர்களி னுருவங்களோடும் புறப்பட்டு வந்து மிகுந்த கர்ஜனங்களால், பயமுறுத்தினான். அப்போது தேவரெல்லாம் மிகப் பயந்து நடுக்கமுற்று நான்கு பக்கங்களிலும் ஓடத் தலைப்பட்டார்கள். ஸ்ரீ சுப்பிரம்மணியரும் இவற்றையெல்லாம் திருக்கண்ணுற்று மந்தஹாசம்பண்ணி யவன்பேரில் ஆயிரம்கோடி ஸங்கியை கொண்ட தீக்ஷணமான பாணங்களை வருஷிக்கலாயினர்.

## 35-வது அத்தியாயம்.

ஸ்ரீ பகவானால் விடப்பட்ட அவ்வத்திரங்களெல்லா மத்துராத்துமனுடைய ஒவ்வோ ருருவத்திற்கும் ஏழுமடங் கதிகமாய்த் துரிதத்தில் வந்துடனே யவ்வுருவங்களையெல்லா மதம்பண்ணிவிட்டு அவரிடமே சென்றுவிட்டன. அப்போது சூரனொருவன்மட்டிலே ஸ்ரீ பிரபுவண்டையில் ஒண்டியாய் மிஞ்சி நிற்கலாகையில் மகா மகிமைபொருந்திய வத்தேவேசன் அவ்வசுரனைத் திருக்கண்ணுற்று அடா! அசுரா! உனதிப்பேர்ப்பட்ட வுருவங்களையெல்லாம் யாம் கண்டோம். ஆகிலும் நமது திருவுருவத்தையும் நீ பார்க்கலாவாயென்று திருவாக்கருளிவிட்டு அத்தேவநாதன் நாவுக்கும் மனதிற்கு மெட்டாதபடி தமது விசுவரூபத்தைக் கொண்டருளினர். அது எப்படியென்றால்:—மகாமகாபருவதங்களெல்லா மவர் பாதமத்தியி லிருந்தன. ஸமுத்திரங்களெல்லாம் அவர் நுனிக்காலிலும், நக்ஷத்திரங்கள், மின்னல், நவக்கி

ரகங்கள், இவை யெல்லாம் கால் விரல்களுக்குள்ளு மடங்கியிருந்தன. சூரியன், சந்திரன், நிருருதி, வருணனிவ ரெல்லாமிருகால் குறடுகளிலி ருந்தார்கள். முனிவர்களும், சிந்தாமணியும் அம்மகேசுவரன் திருக்கணுக் கால்களிற் காணப்பட்டார்கள். வித்தை முதலியவைகளவரது முழந்தாட் களிலும், இந்திர ஜயந்தர்கள் துடைகளிலு மிருந்தார்கள். காலனும்யமனு மிடைச் சந்திகளிலும், அசுரர்கள் முதுகிலும், தேவர்கள் விலாப்பக்கங்களி லும் நாகர்கள் அபானத்துவாரம் முதலிய விடங்களிலுமிருந்தார்கள். ஆண் குறியில் அமுதமிருந்தது. சகல ஜகங்களுடைய உற்பத்தியும் அப்பிரபுவின் நாபிதனிற் காணப்பட்டது. சகல சாஸ்திரங்களும் இவரது திவ்யமான மார் பின் கண்ணிருந்தன. ஞானம் திருநூற் சரடுகளாய் விளங்கிற்று. அநேக கோடி பிரம்மாண்டங்களு மவரது மயிர்க்காலிற் காணப்பட்டன. ஸகல வித சுகங்களு முள்ளங்கையிலிருந்தன. பிரம்மனும், விஷ்ணுவும் அவரது புயங் களிலும், தேவஸ்திரீகளெல்லாம் விரல்களிலு மிருந்தார்கள். சகல வித தொனிகளு மவரது கழுத்தினிற் காணப்பட்டன. கேளீர்! தாணித் தேவர் களே! எல்லா வேதங்களுமத் தேவாதி தேவனுடைய திருவாய் நடுவில் விளங்கி நின்றன. அக்ஷரங்களெல்லா மவர் பற்களிலும், சிவாகமங்கள் நாவி னிலும், எழு கோடி மகா மந்திரங்களும் அவரது உதட்டினிலும் ஏற்பட்டி ருந்தன. அவரது மூக்கினில் வாயுவும், சூரிய சந்திரர்கள்இரு கண்களிலும் திசைகளெல்லா மவரது காதுகளிலும், நெற்றிதனிற் பிரணவமு மிருக்க லுற்றன. மேலும் பரமாத்துமாவாகிய ஸாக்ஷாத் ஸ்ரீ பரமசிவனே சிரசினில் தாமே விளங்கலாயினர். இவ்விதமான அற்புதவுருவத்தை ஸ்ரீ ஷண்முகன் காக்ஷியளித்தருளுகையில் தேவரெல்லோர்களும் தரிசித்துப பயத்தினல் மிகவும், நடுக்கம் கொண்டவர்களாகி யுச்சிமீது அஞ்சலிகொண்டு சிரேஷ்ட மான துதியைச் செய்தனர்கள். அப்போது மகா பரிசுத்தரும், கருணைக் கடலுமான ஸ்ரீ முருகேசன்அவர்களைத் தயவுடன் நோக்கி, ஓ! தேவர்களே! இப்போது இங்கு பயப்படாதீர்க" னென, தேவர்களப்போதச் சுப்பிரமணி யரைத் தண்டனிட்டுத் தோத்திரம் பண்ணினர்கள். சூரனுமப்போது தெய்வ வசத்தினல் ஸ்ரீ குஹனுடைய வப்பேர்ப்பட்ட திருவுருவத்தைத் தரிசித்த மாத்திரத்தில் நல்ல ஞானத்தை யடைந்து மனதினிலாலோசித்துக் கொண்ட தாவது:—

ஓ! கோ! இவர் அசுர சேனைகளை மற்றெல்லோர்களுடன்கூடக் கொன்று போட்டு எந்தனேடும் மகா கோரமா யுத்தம் பண்ணிப் பிறகு இந்திரலோக ரதத்தையும் தமது வசமாக்கிக்கொண்டு எந்தனுற் செய்யப்பட்ட மாயைகளை யும், நாசம் செய்து விட்டுத் தேவாசுரமானிடர்களோடு கூடியதும், அளவற்ற கோடி பிரம்மாண்டங்களுக்கும் இருப்பிடமும் வேறு நிகரற்றதுமான திருவு ருவத்தைக் காக்ஷியருளினர் அன்றோ! அப்பேர்ப்பட்ட அப்பரமாத்துமாவை மூடபுத்தியினலோர் வாலிபனென்றெண்ணினேமே! ஓ! கோ! இவரே மகா தேவனும், பரமாத்துமாவுமான ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரன்! முந்தியே நமது மைந்தனும், சிங்கமுகனு மிவ்வாறு உரைத்தனர்களன்றோ! மகோன்

மத்தனும், ஐசுவரியத்தினுல் கெர்வம் கொண்டிருந்தவனுமான யான் அவர்கள் வார்த்தைகளைக் கேளாமற் போனேனே. ஓ! கோ! நமது சொந்தமான வாயிரத்தெட்டண்டங்களுமவரது பொன்னடி மீதுள்ள மயிர்களின் கண்ணே காணப்படுகின்றனவே! ஆ! நமது கண்களாலவரது திருவுருவத்தை யுச்சி முத லுள்ளங் தாள்வரை நோக்கியதில் அனேக காலம் பார்த்திருந்தாலும் அவ ரது சௌந்தரியம் பார்க்கப் பார்க்கப் புதிது புதிதாயே விளங்கலாகின் றதே! போதுமென்று திருப்தியுண்டாக வில்லையே! மேலுக்கு மேலா சையே விருத்தியாகின்றதே! ஏதோ தவத்தின் மகிமையால் தான் அவர திப்பேர்ப்பட்ட திருமேனியைத் தரிசிக்கலானேம். இத்தேவநாதன் நம் மீதுள்ள தயவினுல்தான் இங்கு யுத்தத்துக்காக வந்தருளினர். நமதந்தக் கரணத்தில் மேலுக்குமேல் பக்தி விருத்தியாகின்றது. நமது மனமும் பிர தக்ஷிணம், நமஸ்காரம், தோத்திரம் இவைகளிலே நாடுகின்றது. ஓ! கோ! நமது வலக்கண்ணும், வலக்கையும் துடிக்கின்றனவே. இவர் நமது சத்துருக்களுக் குதவியாய் வரலானதை யறிந்து, கோபத்தினுல் மிகவும் பற்றியெறியலான வெம்மனமிப்போ துருகுகின்றதே! இத்தேவேசனே எந்தனைக் கொல்வதற்காகப் போர்முகம் வந்திடில் அப்போதவருக் கதிலென்ன வோர் மிகுந்த பிரயாசை! அவர்! செய்ததெல்லாம், திருவிளையாடலே! ஆனுல் நாம் தேவர்களைச் சிறையிலடைத்ததால்தான் அவர் நமக்கத்திருக் காக்ஷி யருளலாயினர். அஞ்ஞானத்தினுல் மதிமயக்கம் கொண்ட சிலர் 'இது சரியல்ல' வென்று கூறினர்களே! இவரோடு சண்டை செய்ததால்தான் மிகுந்த பராக்கிரமும், கீர்த்தியுமுண்டாயின. தேவர்களையும் விட்டு நாமுமி வரைச் சரணமடைந்துவிட்டால் நமக்கிவையெல்லாமேது?" என்றிவ்வாறு சூரபத்துமனிங்கு மனதினிலாலோசித்துக்கொண்டு நிற்குமளவில் ஸர் வப் பிரபஞ்சஸ்வரூபியான பகவான் பிறகு தமது விசுவரூபத்திரு மேனியைச் சுருக்கிக் கொண்டு அவனது நல்ல ஞானத்தையும் அபகரித்துக் கொண்டு, கேளீர்! முனிவர்களே! தமது முந்திய திருவுருவத்தையே கொண் டருளினர்.

பிறகு நல்ல அறிவு அபகரிக்கப்பட்டானவுடன் அசுரன் கடுஞ்சி னத்தாற் பீடிக்கப்பட்டவனுகித் தேவனை நோக்கி நகைத்து, மகா பயங்கர மாய்க் கைகளைத் தட்டி ஓ! இப்பையல் நம்மோடு சண்டை செய்யத் திறமை யற்றவனுகி மாயையால் மற்றோருருவத்தை யெடுக்க, அதனை நாமோர் நொடி நேரத்திற்குள் தொலைத்துவிட்டோம். ஆகையால் நமக்கீடான ஸமர்த்தனுல குகளிலே யில்லையன்றோ! இதோ! வோர் நொடிக்கெல்லாமவனைத் தூண்டி விட்ட வித்தேவர்களை யெல்லாம் சந்தேகமின்றிப் பக்ஷித்துவிட்டுப் பிறகுடனே யிவனையும் ஜயித்துவிடுகின்றோமென்று அத் துராத்துமன் விதிவசத்தினுல் தூண்டிவிடப்பட்டவனுகி மனதினிலாலோசித்துக் கொண்டு மாயையாலோர் பரும் கும்பிருட்டை யுண்டுபண்ணி அநேகம் கால்களையும் கைகளையு முடை த்தானதும் அநேகமுகங்களால் மிகப் பயங்கரமுள்ளதுமான வோர் சரீரத்தை யெடுத்துக்கொண்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இப்பேர்க்கொத்தகோர

மான வுருவத்தோடு ஆகாயத்திற் கிளம்பி யங்கிருந்துகொண்டே யசுரன் மகா கோரத்தோடு தேவர்களையெல்லாம் நோக்கித் துரிதமா யனேகங்களான தன் கைகளை விரித்துக்கொண்டு அவர்களைப் பக்ஷிப்பதற்குத் தலைப்படுகையி லப்போது தேவரெல்லாம் மிகவும் பயந்து நடுக்கமுற்றவர்களாகித் தேவேச னன ஸ்ரீ சுப்பிரம்மணியனிடத்தில், "ஓ! கருணைக்கடலே! அடியார்களுக் கபயமளிப்போரே! தேவர்களுக்குப் பயமளிப்பவனும் மஹா கொடியோனும், மஹா பாதகனும் மூவுலகையும் நடுங்கச்செய்வோனுமான இத்துராத்மனைக் கொன்று எங்களைக் காக்கவேண்டும்" என்று முறையிட்டுக்கொண்டே நான்கு திக்குகளிலும் ஓட்டம் பிடித்தார்கள். மயிலுருவங் கொண்டிருந்த தேவேந் திரனும் அவ்வாறு வேண்டிக்கொண்டான். பிறகவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் ஸ்ரீ தேவநாதன் கிருபைகூர்ந்தவராகிச் சத்துருக்களைச் சங் காரம் செய்யலுற்றதான நிகரற்ற வேலாயுதத்தை நோக்கி, 'ஓ வேலாயுத மே! இவ்வசுரனைத் துரிதமாய்ப் பிளந்தெறிந்துவிட்டு இங்கு வரலாவாய்" என்று கட்டளையிட்டு அதனைப் பிரயோகித்தனர். உடனே அவ்வேலானது, கோடிசூர்யப் பிரகாசம் உள்ளதாய் மெல்ல மெல்ல வெளிக்கிளம்பிப் பெருந் தீயைப் பொழிந்துகொண்டே அவ்வசுரனுடைய இருளையும் அவனது மாயா வுருவத்தையும் போக்கடித்துக் கொண்டு அசுரனிடம் வரலாகையில், கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போதவ்வசுரன் 'ஓஹோ! என்றும் அழிவே இல்லாத நமமை இவ்வேலாயுதம் யாது செய்யத்தகும்' என்று அவ்வசுரன் மிகுந்த கோபத்தோடு நகைத்துக்கொண்டு, 'ஓ ஓ! இதோ ஓர் நொடிக்குள் சலக உலகங்களையும் ஹதம் செய்துவிட்டு அப் பையலையும் கொன்றுவிடுகின் றேம்' என்று அதிவேகமாய் நடுக்கடலுக்குச் சென்று எரியலுற்ற நெருப்புப் போன்ற மிகுந்த தளிர்களையுடையதும், புகைத்திரள்போன்ற இலைகளால் நிறையப்பெற்றதும், உருகலுற்ற தங்கம்போன்ற மலர்களால் மிகுந்ததும், பச்சைக்கற்கள் போன்ற வடுக்களைக் கொண்டதும், மாணிக்கத்தைஒத்த கனி களால் நிறைந்ததும், மேகம்போன்ற கிளைகளால் நேர்த்தியானதும், பிரம் மாண்டச் சுவர் வரையில் கீழ் வேரோடி மேலும் மிக வுன்னதமானதும், இலக்ஷம்யோசனை தூரம் நிழல்கொண்டதும், கேளீர்! தரணித்தேவர்களே! விஷ்ணு பிரம்மர்களின் லோகங்களையும், திக்குபாலர்களையும், சர்ப்பங்கள், சூரியன, சந்திரன் முதலிய தேவர்கள், சப்தகன்னிகைகள், இவர்களுடைய லோகங்களையும் ஏழுகடல்களையும், நடுநடுங்கச்செய்வதும், அப்போது அண் டச்சுவரை யிடித்துவிட்டுப் பூமியையும் பிளக்கலுற்றதுமான இத்தகைய வோர் மாமரத்தின் உருவத்தை யெடுத்துக்கொண்டு அவ்வசுரன் கோபத் தோடு கிளைகளால் சகல ஜகங்களையும் மோதியும் களித்தான்.

அப்போது அவனது ஆரவாரங்களால் பூமியானது நடுநடுங்கி வெடிக்க லாயிற்று. எல்லாக் கீழ்லோகங்களும் இடிந்து விழலுற்றன. ஆதிகூர்ம மும், எட்டு திக்கஜங்களும், அநந்தன முதலிய மகா நாகங்களும் நடுநடுங்கின. அப்போது எல்லாச் சமுத்திரங்களும் ஒன்ருயின. ஓ! வேதியர்களே! எல்லா மலைகளும் நக்ஷத்திரங்களும் நான்கு பக்கங்களிலும் விழலாயின. சந்

திர சூரியரிருவர்களும் மற்றெல்லாக் கிரகங்களோடும் அவரவர் இரதங்களை விட்டுக் குதித்து மிகப் பயங்கொண்டவர்களாகி பூமியில் நான்குதிக்குகளிலும் சிதறுண்டோடினார்கள். பிரம்மாவின் அண்டம் மிகவும் இடிந்து பூமிதனில் விழுந்தது. பிறகு ஸ்ரீ குகபிரானுடைய சிரேஷ்டமான அவ்வேலானது துராத்துமனாகிய அவ்வசுரனுடைய மாயையைக் கண்டு கோபத்தினால் மிகப்பயங்கரமுள்ளதும் மகாப் பிரளயகால ருத்திரன் போல் காந்தியுடையதும், சகல ஜகங்களிலும் வியாபிக்கலுற்றதும், பிரம்மதேவன் திருமாளிகையில் விளங்கலுற்ற சோதிலிங்கத்தின் சொரூபத்தை யுடையதும், ஸ்ரீ மகா பைரவமூர்த்தியினுடைய சூலத்துக்கு நிகரான புகழுடையதும், மகா பயங்கரமுள்ளதும், கைலயங்கிரி நீங்கலாய் மற்றெல்லா லோகங்களையும் எதிர்த்துவிடலுற்றதுமாகிக் கடல்களையும் வற்றச்செய்து அம் மாமரத்து உருவமாயிருந்த வசுரனை இரண்டாய்க் கிழித்துவிட்டது.

பிறகு பாதகனான அவ்வசுரன் மாமரவுருவத்தை விட்டுத் தன் சுயவுருவத்தையடைந்து வோர் கத்தியை எடுத்துக் கொண்டு வேகமாயோடிவர கேளீர்! வேதியர்களே! மறுபடியும் அவ்வேலானது கொடூரனான அவ்வசுரன் மார்பினைப் பிளந்து விட்டுத் திரும்பி ஆகாயத்தை மறைத்துக் கொண்டு சகல தேவர்களாலும் துதி கூறப்பெற்றதாகி வோர் கணத்துக்குள் ஆகாய கங்கையில் ஸ்நானஞ் செய்து விட்டுக் கேளீர்! வேதியர்களே! அத்தேவாதி தேவனுடைய திருக்கைதனில் அடங்கிற்று. பிறகு இரண்டு துண்டங்களாக்கப்பட்ட அவ்வசுரப் பாதகன் வோர் துண்டத்தினால் மயிலுருவத்தையும், மற்றோர் துண்டத்தினால் கோழி யுருவத்தையும் யெடுத்துக் கொண்டு புறப்படலானான். அப்போது அம்மயிலும், கோழியும், மகா கோபத்தோடு யெழும்பி யெழும்பிக் குதித்துக் கொண்டு ஸ்ரீ பரமேசுவரனான வச்சுப்ரம்மண்யரோடு யுத்தஞ் செய்வதற்கு விரைவில் ஓடி வருகையில் ஸ்ரீ வடிவேலன் அம்மயிலையும், கோழியையும் கருணைகடாக்ஷத்தினால் நோக்கியவுடன் அப்போது அவைகள் சர்வத்தை யிழந்தவைகளாகி நல்ல ஞானத்தை யடைந்து அம்முருகேசனை வந்தனித்து மிகுதியாய்த் தோத்திரஞ் செய்தன. அப்போது ஸ்ரீ சிவசுப்ரம்மண்யனும் மகா பயங்கர வுருவத்தைக் கொண்ட அக்கோழியை நோக்கி, ஓ! கோழியே! நீ துவஜ உருவமாகி நமது இரதத்தின் பேரில் இருக்கலாவாய்! என்று திருவாக்கருளினர். அப்போது நல்ல ஞானம் உற்ற அக்கோழியும் அவ்வாக்கினையைச் சிரமேற்கொண்டு அவரது சிரேஷ்டமான தேர்மீது ஏறி யுட்கார்ந்து கொண்டு மிக்கப் பயங்காமாய் உகாந்த காலமேகம் போல் பெரும் சப்த மிட்டது.

பிறகு கேளீர்! முனிவர்களே! ஸ்ரீ பகவானானவர் இந்திரனாலுருவங் கொள்ளப்பெற்ற தமது மயிலினின்று மிறங்கி இம்மயிலின் மீதேறி அதனைத் துரிதமாய் வோட்டினர். ஓ! பூமி தேவர்களே! அப்போது அம்மயிலானது பூமி, ஆகாயம் சுவர்க்கம் முதலிய சகல லோகங்களி

னும் அவரைச் சுமந்துகொண்டு ஓர் நொடி நேரத்திற்குள் பறந்து சென்றது. அப்போது அவ்வாறு ஓடலுற்ற அம்மயிலின் வேகத்தினுல் கடல்களெல்லாம் கொந்தளித்தன. மேருவும் பூமிதனில் விழலாயிற்று. அப்போது பூமியும் வெடிக்கலாயிற்று. அக்கினி வாயுக்களும் பிரம்மாண்டத் தோடு மிகவும் நடுநடுங்கினுர்கள். மேலும் அம்மயில் தனது அலகுகளை விரித்துக் கொண்டு அகவுவதினுல் மூவுலகங்களையும் மிகவும் பயமுறுத்திக் கொண்டும், அதனுல் ஆதிசேடன், இராகு, கேது முதலிய சர்ப்பங்களுக்கு விசேடமான பயத்தை யுண்டு பண்ணிக் கொண்டும், தேவசேனுபதியும் மகா வலிமை கொண்டவருமான ஸ்ரீ சுப்ரம்மண்ய சுவாமியைச் சுமந்துகொண்டு திசைகளெங்கும் சுற்றி வருகையில் ஸ்ரீ மகா விஷ்ணுவானவர் மேக வுருவத் தோடு ஸ்ரீ பரமேசுவரனைச் சுமந்தது போல் விளங்கலாயிற்று. பின்பு அளவ ற்றகோடி சூரியர்களின் ஒளிகள் வீசப்பெற்ற ஸ்ரீ வடிவேலன் திசைகளெங் கும் இவ்விதமாய் அம்மயிலை ஓட விட்டுக்கொண்டு தேவர் முதலியோர்கள் இருக்கலான யுத்த களத்திற்கு வந்தனர். அப்போது அக்கினியும், இந்தி ரனும், முருகேச னுக்கினையால் கோழி யுருவத்தையும், மயிலுருவத்தையும் விட்டு நிஜவுருவத்தை எடுத்துக்கொண்டு அப்போது பகவானைத் தண்டஞ் சமர்ப்பித்து மிகுந்த பக்தியோடு துதி செய்தார்கள். மேலும் பூதர்களும் வீரர்களும் சகல படைத் தலைவர்களும் சைனியங்க ளுடனும் சேர்ந்து தேவ னைச் சூழ்ந்து கொண்டு கோலாஹல சத்தங்களைச் செய்தார்கள். தவிரவும் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களெல்லாம் என்றும் அழிவற்றவராகிய வடிவேலனை வந்தனித்து வாழ்த்தினுர்கள். அப்போது குமரேசனும் அவ்வெல் லோர்களையும் கருணையால் நிரம்பப்பெற்ற திருவிழிகளால் பார்த்தருளினர்.

கேளீர்! பூமிதேவர்களே! இப்படி இருக்கையில் சூரனுடைய மனையா ளான பதுமகோமளை அவனிறந்ததைக் கேள்வியுற்று அப்போதே மரண மடைந்துவிட்டாள். மேலுமவனது மற்றப் பெண்டீர்களும் மிக நேர்த்தி யான பெருந்தீயிற் குதித்துவிட்டார்கள். தவிரவும் சூரபத்மமன் மைந்தனுன இரணியனென்பவன் சூரன் முதலியோர்களின் மரணத்தைக் கேள்வியுற்ற தின்பேரில் "ஐயோ! அப்பா! நாங்கள் சொல்லியதை யெல்லாம் கேளாமற் போனீரே! இப்போது மடியலாகிச் சத்துருவின் தேரின்கண் கோழியுரு வத்தோடு துவஜத்திலிருக்கலானீரே! இது மிகவும் கஷ்டம்! தவிர இப போது மயிலுருவத்தை யெடுத்துக் கொண்டு அச்சத்துருவைச் சுமக்கலானீ ரல்லவோ" என்று இவ்விதம் அவன் புலம்பி "ஓ! அவருடைய சைனியங்கள் கண்டால் எந்தனை மிகவும் துன்பப்படுத்துவார்கள்." என்று மனதில் நினைத் துக் கொண்டு அவ்வசுர குமாரனுனவன் தங்கள் புரோகிதரான சுக்கிரனிடஞ் சென்று தாய்தந்தையருக்கு உரிய சாவு சடங்குகளை முடித்துக்கொண்டு "ஓ! ஐசுவரியமெல்லாம் ஓர் க்ஷணத்துக்குள் அழியலுற்றதே! என்று தீர் மானித்து மோக்ஷத்தையே கருதியவனுகி ஸ்ரீ பரமேசுவரனைக் குறித்து தவஞ் செய்யலாயினன்.

யாதாமொருவன் இவ்வற்புதமான சரித்திரத்தைப் படிக்கவாவது கேட்கவாவது செய்தால் ஸ்ரீ சுப்ரம்மண்யருடைய கிருபாவசத்தினல் அவனுக்குச் சத்துரு பயமே இராது. கேளீர்! வேதோத்தமர்களே! ஸ்ரீ விஷ்ணுவானவர் இதனை முனிவர்கள் மூலமாய்க் கேட்டுத் தான் சத்துருவான முராசுரனையும் கோரனுன காலநேமியையும் ஜயிக்கலானர். ஸ்ரீ கிருஷ்ணனும் இதனை உமபந்யுமா முனிவரிடங் கேட்டுத் தான் மகா பாவிகளான பௌமன் முதலிய வசுரர்களை யெல்லாம் வோர் கணத்தில் வென்றார். மேலும் தவசிகளிற் சிறந்த ததீசிமா முனிவரும் மகா பரிசுத்தமான விச்சரித்திரத்தைப் பாட்டனுகிய சுக்கிரனிடமிருந்து கேட்டுத் தான் அச்சுதரான ஸ்ரீ மஹா விஷ்ணுவை வெற்றிபெற்றனர்.

உயுத்த காண்டம்

முற்றிற்று.

உ

வேலுமயிலும் துணை.

# தேவகாண்டம்.

## 1. அத்தியாயம்.

சிறிது கடைக்கண் பார்வை மாத்திரத்தால் அடியவருடைய பகைவரை நாசம்செய்து, அவர்களுக்குச் சுகத்தை அளிப்பவரும், மேருகிரியை வில்லாகக் கொண்ட ஸ்ரீ மஹாதேவருக்கு மைந்தரும், கருணையங்கடலும், கல்யாண சுந்தரமூர்த்தியும், எக்காலத்தும் அழிவில்லாதவரும், பர்வதராஜ புத்திரியின் அன்பிற்குரியவரும், மஹா பரிசுத்தரும், ஸ்ரீ கணநாதருக்கு இளையவரும், தேவ சேனையாருக்குக் கணவருமான ஸ்ரீ கந்தபிரானை நமஸ்கரிக்கின்றேன்.

வல்லி, தேவசேனையாருக்குக் கொழுநரும், மயில்வாகனரும், வேலாயுதரும், தாரகனைக் கொன்றவருமாகிய ஸ்ரீ குஹபிரானை மிகவும் பணிகிறேன்.

பின்னர், வடிவேலன் வீரபாகுவைப் பார்த்து, "ஓ வீரபாகுவே! அசுரர்களால் சிறையிலடைக்கப்பட்ட ஜயந்தன் முதலான தேவர்களை இவ்விடம் அழைத்துக்கொண்டு வா." என, அவரும் அப்படியே பாக்யமென்று, ஸ்ரீ கந்தஸ்வாமியின் ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு புறப்பட்டு, ஜயந்தன் முதலிய தேவர்கள் இருக்கும் இடத்தை அடைந்து, அவர்கள் வந்தனத்தை யேற்று, அம் மகாபலமூர்த்தி, தாம்வந்த காரணத்தை அவர்களுக்கெடுத்துரைத்து, அவர்களை அழைத்து வந்தனர். அப்போதவர்கள், ஸ்ரீ கந்தபிரானை தரிசித்து, வந்தனம்செய்து மிகுதியாய்த் துதி செய்தனர்.

கேளுங்கள், பிராமணோத்தமரே! அப்போது கருணையங்கடலாகிய பகவானவர், "ஹே ஜயந்தன் முதலான தேவர்களே! நீங்கள் முன்போலவே ஸ்வர்க்க போகங்களை இச்சமயமுதல் அனுபவித்துச் சுகமாய் இருங்கள்" என,அவர்கள் அதிக சந்தோஷம் கொண்டவராய், அவ்வடிவேலருக் கருகிருந்த தேவேந்திரனையும் பணிந்தனர். அப்போது அத்தேவ ராஜனும் மிக்க சந்தோஷம் கொண்டவனாய் சயந்தன் முதலான தேவர்களை அன்புடன் அணைத்துக் கொண்டு, அவர்களுடன் சில வார்த்தைகள் பேசினான். பிறகு ஷண்முனைவர், "யுத்தரங்கத்தில் முந்தி மாண்டுபோன பூதர்களும் வீரர்களும் சீக்கிரமாய்த் திரும்பி எழுந்திருக்கக்கடவார்கள்" என்று திருவுளத்தில் நினைத்த மாத்திரத்தில் இறந்துபோன அவ்வெல்லோர்களும் அவரதாக்கினையின்படியே அறிவடைந்தவர்களாகி அவரை வந்தனித்தார்கள். பின்னும் சத்ருக்களைச் சங்கரிக்கலுற்ற சரவணபவன் சமுத்திரத்தை நோக்கி "ஓ சமுத்திரமே! அசுரர்களால் வாசம் செய்யப்பட்டுவந்த வீர மகேந்திர நகரத்தை நீ நமதாக்கினையின்படி சீக்கிரமாய்ச் சாப்பிட்டு விடு" என்று கட்டளை யிட்டனர் கேளீர்! பிராமணோத்தமர்களே! அச்சமுத்திரமும் அப்பட்டணத்தை வெகு

சந்தோஷத்துடன் அப்படியே செய்துவிட்டது. அதன்பிறகு ஸ்ரீசண்முகன், தேவர்கள், வீரர்கள் முதலிய இன்னும் மற்றவர்களுடன் புறப்பட்டு, மிகுந்த வாத்திய கோஷங்களோடு நேர்த்தியான திருச்செந்தூருக்கு வந்து தமது மயிலினின்றிறங்கிப் பெருமை பொருந்திய சிங்காதனத்தில் வீற்றிருந்தருளினர். அப்போது சூரியனும் அஸ்தமனமாயினன். அங்குத் தேவர்கள் குமரேசனை மிகுந்த பக்தியோடு பூஜை செய்தார்கள். அப்போது அத்தேவேசனும் அவர்கள் மீது கிருபையோடு கடாக்ஷம் வைத்தருளினர்.

பிறகு மறுநாள் சூரியனும் உதயமாகும்போது, ஸ்ரீஷண்முகன் தாமும் ஸகல ஜகங்களுக்கும் தந்தையான ஸ்ரீ சர்வேசுவரனை பூஜை செய்தனர். பின்பவர் திரிபுர மெரித்தோனை பரமசிவனைப் பூஜை செய்ததன்மேல் வெகு சந்தோஷமுடைய மனதைக் கொண்டவராகி, அனேகவித அலங்காரத்தினற் சிறக்கலுற்றதும், மிகவும் நேர்த்தியுமான மயிலின்பேரில் ஏறிக்கொண்டு, ரதங்களின் பேரில் ஏறிக்கொண்ட வீரர்களோடும், சேனுதிபர்களோடும் திருச்செந்தூரினின்று புறப்பட்டுக் கேளீர்! பிராமணோத்தமர்களே! மிகுந்த சந்தோஷத்தோடு திருப்பரங்குன்றத்தை நோக்கிப் புறப்பட்டனர். மேலும் கேளீர்! முனிவர்களே! அப்போது விஷ்ணு பிரமர்கள் முதலிய சகல தேவசிரேஷ்டர்களும் முருகேசன் ஆக்கினையின்பேரில் தங்கள் தங்கள் வாஹனங்களில் ஏறிக்கொண்டு துரிதமாய்ப் புறப்பட்டனர். அனேகம் குடைகளுடையவும் சாமரங்களுடையவுமான வரிசைகள் விசிரிகளோடுகூடப் புறப்படலாயின. அதே விதமாய் மஹா உன்னதமான பல துவஜங்களும் அனேகவித வாத்தியங்களும் சென்றன. தவிரவும் கேளீர், பிராமணோத்தமர்களே! அம்மயிலோ என்றால் மூக்கினல் பூமியைக் கீறிக்கொண்டும், மஹா கோரமான சத்தங்களால் சர்ப்பங்களைப் பயமுறுத்திக் கொண்டும் செல்லலாயிற்று. ஓ! தரணி தேவோத்தமர்களே! அக்கோழியானது மஹா மேகங்களையும் இடிகளையும் தன் மூக்கினல் கொத்திக் கொண்டே மிகுந்த சத்தம் இட்டுக்கொண்டு சென்றது. அவரவர் வாகனங்களான விலங்கினங்களுடையவும், பூதர்களுடையவுமான சத்தங்களால் மற்ற மிருகங்கள் எல்லாம் நடுக்கம் கொண்டவைகளாகிச் சுற்றிலும் உள்ள மலைகளின் பொந்துகளிற் புகுந்து கொண்டன. மயிலுடையவும் கோழியுடையவும் சத்தங்களால் பெரிய சர்ப்பங்கள் எல்லாம் மிகவும் பயந்து மிகுந்த ஆழமுள்ள பொந்துகளில் விரைவில் நுழையலாயின. ஓ முனிவர்களே? அப்போது வேதகோஷங்கள் உண்டாயின. ரிஷி சிரேஷ்டர்கள் எல்லாம் அஷ்டைசுவர்யமுடையவரும் துதிகளிற் பிரியம் உள்ளவருமான அக் கந்தபிரானைத் தோத்திரம் செய்தார்கள். அப்போது அசுரர்களுக்கு யமனுன வடிவேலன் கின்னர சிரேஷ்டர்களுடைய கானத்தில் திருமனதை விருப்பமாய்ச் செலுத்திக் கொண்டே மிகுந்த பெருங்கூச்சலோடு திருப்பரங்குன்றம் வந்தருளினர்.

அப்போது முந்தி மீனுருவம் அடைந்திருந்த ஆறுமுனிவர்களும், பிரமன் முதலிய தேவர்களும், ஸ்ரீ வடிவேலனை, "ஓ தேவேசா! மேன்மைகொண்ட இப்பருவதத்தில் தங்கி அருளல்வேண்டும்." என்று உரைத்துத் தேவநாதரான அச்சுப்ரமண்யரைத் துதிகளால் பிரார்த்திக்கையில் அவர்களை நோக்கி

வடிவேலன் திருவாக்கருளியதாவது:—"ஓஹோ! நீங்கள் நன்ருய்ச் சொன்னீர்கள். யாம் முந்தி யாதுகட்டளை யிட்டோமோ அது இப்போது நினைப்பு மூட்டப்பட்டதல்லவா?" என்று திருவாக்கருளி அத்தேவேசன் அம்மலை மீதேறினர். பிறகு அங்குச் சென்றவுடன் அவ்வடிவேலன், தன் முன்னிலையி லிருந்த விசுவகர்மனை நோக்கி, "ஓ தேவர்களுக்குப் பிரியம் உள்ள விசுவகர்மனே! இங்கு நமக்கோர் நேர்த்தியான நகரத்தை நீ அமைத்தல்வேண்டும்." என்று கருணம்ருத மூர்த்தியான அக்கந்தன் திருவாக்கருளியவுடன் அத்தேவதச்சன் அம்மலையின் உச்சியில் ஓர் அரண்மனையை அமைத்துப் பிறகு பற்பல விருக்ஷங்களால் சோபிக்க லுற்றதும், பல கோபுரங்களையும் அட்டாள மண்டபங்களையும் கொண்டதும், அனேகம் பிரகாரங்களாலும் கொடுங்கைகளாலும் சூழப்பெற்றதும், பற்பல விநோதங்களோடு கூடியதும், பற்பல அலங்காரங்களால் சிறக்கலுற்றதுமான ஓர் நேர்த்தியான நகரத்தை அமைத்தவுடன் இவ்வாருய் விஸ்வகர்மனுல் உண்டு பண்ணப்பட்டதைப் பிரபு வானவர் கண்டு மிகுந்த சந்தோஷம் கொண்டவராகிப் பூதர்களைச் சேனுதிபர்களோடுகூட வீதிகளில் உள்ள வீடுகளில் இருக்கும்படி திட்டமிட்டுத் தமது நேர்த்தியான அரண்மனைக்கருளி மயிலினின்றும் இறங்கி இருபாரிசங்களிலும் தேவர்களை இருப்பித்துத் தாம் வீரர்களால் பற்பல உபசாரங்கள் செய்யப்பெற்றவராகிச் சிங்காதனம் ஏறி வீற்றிருக்கையில் அவ்வாறு முனிவர்களும் அப்பார்வதி மைந்தனைப் பூஜை செய்தார்கள். கேளீர் தரணி தேவோத்தமர்களே! அப்போதவர் அம்முனிவர்களுக்குத் தம்மை நன்கறிவதைப்பற்றிய ஞானேபதேசத்தை அருளத் திருவுளங் கொண்டவராகிப் பிரமன் முதலிய தேவர்களை அவரவர் விடுதிகளுக்கு அனுப்பிவிட்டு அவர்களுக்கு ஞானேபதேசம் செய்துவிட்டு, அங்கு வீற்றிருந்தனர். அப்போது தேவேந்திரன் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவசிரேஷ்டர்களை நோக்கி, "ஓ தேவோத்தமர்களே! எனது குமாரியை இங்கு ஸ்ரீ வடிவேலனுக்கு விவாகநூல் முறையின்படி பாணிக்கிரஹணம் செய்து கொடுக்கிறேன்." என, அவர்கள் அவ்விந்திரன் வசனத்தைக் கேட்டு அப்படியே நல்லதென்று, கோரிய பயனைக் கைக்கொண்டவர்போல் மிகுந்த சந்தோஷத்தோடு ஒரு நொடிதனில் அவரவர் விடுதிகளுக்குச் சென்ருர்கள்.

இந்திரன், தன்மாளிகை சேர்ந்தவுடன், இந்திராணியையும், தன் பெண்ணுகிய கஜநாயகியையும் அப்போது அழைத்து வரும்படி சில தூதர்களை அனுப்ப அவர்களும் அப்படியே பாக்கியம் என்று துரிதமாய்ச்சென்று மேரு கிரியிலிருந்த இந்திராணியை வந்தனித்துச் சூரன் முதலியவர்களின் சங்காரத்தையும் தேவர்களின் விடுதலையையும் பரமாத்மாவாகிய ஸ்ரீ வடிவேலன் திருப்பரங்குன்றத்துக்கு விஜயமானதையும், இந்திரனுல் நன்குரைத்தபடி குமாரியினுடைய கல்யாண பிரஸ்தாபத்தையும் அவளுக்கறிவித்து, அவ்வம்மையை அவள்பெண்ணுடனும் ஐராவதத்துடனும் கூட அழைத்துக்கொண்டு பற்பல அலங்காரங்களால் விளங்காநின்ற இந்திரன் மாளிகைக்கு வந்தனர். அப்போது சிறையிலடைக்கப்பட்டிருந்த தேவகன்னிகைகள் எல்லாம் அங்கு வரலான இந்திராணியைப் பார்த்து மலர்ந்து சிலிர்த்த கன்னங்களை உடைய

வர்களாகி வந்து வந்தனித்தார்கள். ஜயந்தனும் வந்து தனது அன்னையை வந்தனித்தான். உடனே அவள் அழலுற்றவளாகி அவனை அணைத்துக் கொண்டு மிகவும் துக்கப்பட்டாள். மேலும் அவள் தேவ ஸ்திரீகளுடனும் சில நல்ல உபசார வார்த்தைகளைப் பேசினள். அப்போது ஸகல ஜனங் களும் ஸ்ரீ சரவணபவனுக்குக் கலியாணம் நடக்கப் போவதைக்கண்டு உள் ளம் குளிர்ந்து மிகுந்த சந்தோஷம் அடைந்தார்கள். பிற்பாடு தேவரா ஜன் ஸகல தேவர்களோடும் கூடப்புறப்பட்டு வந்து ஸ்ரீ ஷண்முகனை நமஸ் காரம் பண்ணி, விநயத்தினல் முகம் வணங்கப்பெற்றவனுகி விண்ணப்பம் செய்து கொண்டதாவது:—

"ஓ கருணைக்கடலாகிய ஸ்வாமி! தேவரீர், சூரபதுமன் முதலிய அசு ரர்களைக் கொன்று எங்களைப் பதத்தில் வைத்து இத்தேவர்களை எல்லாம் ரக்ஷித்தருளினீரே! ஓ லீலாவிநோதமுடைய கல்யாணசுந்தரமூர்த்தியே! நாங்கள் தேவரீருக்கு எதைத் தான் கொடுக்கப்போகிறோம்? அப்படி இருந்த போதிலும் ஓ! அடியார்களின் வேண்டுதல்களை நிறைவேற்ற லுற்ற தேவாதி தேவா! ஓ ஸகல தேவேசுவரா! தேவரெல்லாம் க்ஷேம மாய் இருப்பதற்காகத் தேவரீர் அடியேனுடைய குமாரியைப் பாணிக்கிர ஹணம் செய்து, ஓ கருணைக்கடலே! எங்களைக் காத்தருள்வீர்! காத்தருள் வீர்!" என்றுரைத்துக் கொண்டு சாஷ்டாங்கமாகப் பூமியில் விழுந்து நமஸ்கரித்தான். அப்போது முருகேசனும், "அப்படியே நல்லது." என்று இந்திரனுக்கு உரைத்து, "ஓ இந்திரா! நமதாக்கினையின்படி நாளையதினமே கலியாணம் நடக்க வேண்டும். ஆகையால் நீ சீக்கிரமாய்ச் சென்று அதற் காக வேண்டிய முயற்சியைச் செய்யலாவாய்! என்று திருவாக்கருளி அத் தேவ மன்னனை அனுப்பினர்.

பிறகு இந்திரன் வெகு சந்தோஷத்துடன் கூடியவனுகிப் புறப் பட்டுத் தன் வீடு சேர்ந்து, கேளீர், பிரம்மணோத்தமர்களே? தனது தூதர்களை நோக்கி, "ஓ தூதர்களே? முசுகுந்த சக்ரவர்த்தி முதலிய பூபாலர்களையும், கந்தர்வராஜர்களையும், தேவர்களையும், 'ஸ்ரீ வடிவேலனுக்கு நாளைக்கு இங்குக் கல்யாணம்' என்று சொல்லிச் சீக்கிரம் அழைத்து வாருங்கள்." என்று கட்டளையிட்டனுப்பினன். பிறகு அவன் விசுவகர் மனை நோக்கி, "ஓ விசுவகர்மனே! ஓர் கல்யாண மண்டபத்தையும், வாபி கள், கிணறுகள், குளங்கள் முதலியவைகளையும் மேலும் வேண்டியவை களையும் அமைக்கலாவாய்." என்று அத்தேவ தச்சனைத் திட்டமிட்டனன். அத்தச்சனும் அப்படியே நல்லதென்று அவற்றை எல்லாம் சீச்சிரமாய்ச் செய்து முடித்தனன். அப்போது இந்திரன் இவ்வாறுக எல்லாவற்றையும் ஏற்பாடு செய்துவிட்டுக் கல்யாணோற்சவத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தான். ஓ பிராமணோத்தமர்களே! அத்தூதர்கள் இவ்விருத்தாந்தங்களை யெல்லாம் முசுகுந்தன் முதலிய அரசர்களுக்குத் தெரியப்படுத்தியதன்பேரில் முசுகுந்த சக்கரவர்த்தியும் ஸ்ரீ ஷண்முகருக்குக் கல்யாணம் நடப்பதைக் கேட்டதன் மேல் மிகுந்த சந்தோஷத்தினல் அத்தூதர்களை அதிக உபசாரத்தோடும்

மரியாதை செய்துவிட்டுத் தமது நகரத்திலும், தேசத்திலும் உள்ளசகல பந்து வர்க்கங்களுடனும் நகரத்தில் உள்ள விலாஸம் பொருந்திய கற்புடைய பெரிய குடும்ப மங்கையர்களுடனும் புறப்பட்டு, ஸ்ரீ கந்தபிரான் விளங்கியிருக்கின்ற நேர்த்தியான பட்டணம் வந்து சேர்ந்தார்.

ஓ முனிவர்களே! மேலும் திசைக்கோடியிலான தேசாதி தேசங் களில் இருந்து மற்ற பூபாலர்களும், சந்திர சூர்யர்களும் மற்ற தேவர் களும் புண்யசாலிகளான முனிவர்களும் ஸ்ரீ சரவணபவனுக்குக் கலியா ணம் நடக்கவிருப்பதைத் தூதர் முகமாய்க் கேட்டு, எல்லோரும் களித்த மனதை உடையவர்களாகிப் பற்பல அலங்காரங்களால், சுமக்கமாட்டாத வர்களாய்ச் சதுரங்க சைன்யங்களுடனும், வாத்தியங்களின் மிகுந்த ஓசை களுடனும், பல்லக்குகளிலும் மஞ்சங்களிலும் ஏறிச் செல்லா நின்ற பிரபுக்களுடனும், சுற்றிலும் மிக நேர்த்தியான அழகிய மங்கையர்களு டனும் புறப்படலாகி அம்மஹாபலவான்கள் எல்லாம், கேளீர் பிராமணோத்த மர்களே! திருப்பரங்குன்றத்தின் வெளிப் புறங்களில் உள்ள பூந்தோட்டங் களிலும், மரத்தோட்டங்களிலும், நதிகளிலும், தண்ணீர்ப்பந்தல்களிலும் மண்டபங்களிலும் வெகு சந்தோஷத்தோடு நெருக்கமாய் இடம் ஏற்படுத் திக் கொண்டார்கள். அப்போது முசுகுந்தன் முதலிய அரசர்களும், தேவர் களும், ரிஷிகளும் மிகுந்த சிறப்போடு இந்திரன் மனைக்குச் சென்று அவனைப் பார்த்ததன்மேல் அவர்கள் ஒருவருக்கொருவர் உபசாரம் செய்யப்பட்டவர்க ளாகி வார்த்தை பேசிக் கொண்டிருந்தார்கள். மேலும், தேவ ஸ்திரீகளும் சிரேஷ்டர்களான ராஜ ஸ்திரீகளும் இந்திராணியிடம் சென்று அவளைத் தண் டம்செய்துவிட்டு, அம்மாதர்கள் எல்லாம் திருமணக்கோலமுடைய கஜ நாயகி என்ற அவள் பெண்ணைச் சிறந்த ஆடையாபரணங்களால் அலங்கரித்தார்கள். ஓ பிராமணோத்தமர்களே? பிறகு இந்திரனானவன் 'பிரமனால் கலியாணத்துக் காகக் குறிக்கப்பட்ட சமயம் இது தான்' என்பதைக் கேட்டு விஷ்ணு முத லியவர்களுடன் கூட, ஸ்ரீ கந்தன் அரண்மனைக்குச் சென்று அத்தேவனை வந்தனித்து, "ஓ கருணைக்கடலான தேவாதி தேவா! இது தான் கல்யா ணத்துக்குரிய நல்ல வேளை ஆகையால் மணம் புரிவதற்காகத் தேவரீர் இப் போது அடியேன் கிரகத்துக்கு எழுந்தருளி, இவ்வெல்லோரையும காப் பாற்றிடல் வேண்டும்." என, பரமாத்மாவாகிய கந்தனும் அவ்வாறுரைத்த இந்திரனை நோக்கி சந்தோஷத்தினால் கொஞ்சம் மந்தஹாசம் செய்து கொண்டு சிங்காதனத்தை விட்டிறங்கிப் பற்பல அலங்காரங்களால் நிரம் பப்பெற்ற நேர்த்தியான தமது மயிலின் மீது ஏறிக்கொண்டு, லக்ஷத் தொன்பது மஹா வீரர்களுடனும் கைகளை அஞ்சலிசெய்து தங்களைப் பரி சுத்தர்களாய் ஆக்கலுற்ற சிறந்த துதிகளைக் கூறா நின்ற தேவர்களுடனும், ஓ பிராமணோத்தமர்களே! மிகுந்த சந்தோஷத்தோடு மலர்மாரிகளைச் சொரிந்து கொண்டுவரும் சிறந்த அடியார்களான பிரம விஷ்ணுக்களுடனும் துரிதமாய்ப் புறப்படலாயினர்.

அப்போது சந்திரனும் சூரியனும் ஜ்வலிக்கலுற்ற இரு குடைகளைப் பிடித்தார்கள். வாயுவும் வருணனும் சாமரத்தாலும் விசிறியாலும் சேவித்

தார்கள். யமனும் ஓர் பயங்கரமான கத்தியைப் பிடித்துக்கொண்டு புறப்பட்டான். செவிகளுக்கு இனிமையான வேதகோஷங்களும், வாத்தியங்களின் மிகுந்த கோஷங்களும் அப்போதுண்டாயின. ரிஷிகள் எல்லாம் துதிகளுக்கு எற்பவரும் என்றும் அழிவற்றவருமான அப்பகவானைத் தோத்திரங்களால் பஜனம் செய்தார்கள். கோழியும் அப்போது மஹா பயங்கரமான சத்தங்களைச் செய்தது. மதுரமான கண்டநாதங்களையுடைய கின்னரர்கள் நேர்த்தியான ஸங்கீதங்களைப் பாடினார்கள், ஊர்வசி, மேனகை, ரம்பை இவர்கள் சங்கீதம் பாடிக் கொண்டே நர்த்தனம் செய்தார்கள். முனிவர்கள் பூர்ண கும்பங்களை எடுத்துக்கொண்டு முந்திச் செல்லலுற்றார்கள். இவ்விதம் பலவித உபசாரங்களுடன் இந்திரனுடைய மாளிகை வாசற்படி வீதிக்கு வந்தவுடன் ஸரஸ்வதி லக்ஷ்மி முதலிய சிரேஷ்டர்களான தேவ ஸ்திரீகள் அஷ்டமங்களம் பாடி ஹாரத்தி சுற்றி மூன்று பிரதக்ஷிணம் செய்துவிட்டு மாளிகைக்குட் சென்றார்கள். பிறகு ஸ்ரீ பகவானும் மயிலினின்று இறங்கி மங்கள சத்தங்களோடு கலியாணமண்டபத்திற் கருகினில் விஜயமாயினர். அப்போது இந்திரன் தேவியான இந்திராணி அம்மையானவள், மிகுந்த சந்தோஷத்தோடு அப்ஸர ஸ்திரீகளுடன் வந்து ஸ்ரீ கந்தனை நமஸ்காரம் செய்து அவர் பொன்னடிகளைப் பாலினால் கழுவி, சிறந்த மலர்களாற் பூஜித்துத் தீபாராதனங்கள் செய்தும், பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்துவிட்டும் போயினள். அதன் பிறகு முருகேசன் பற்பல ரத்னங்கள் இழைக்கப்பெற்ற நேர்த்தியான பொற்பாதுகைகளைப்பூண்டு மெல்ல நடந்து கல்யாண மண்டபத்திற்கருளி, அங்கு விளங்கிய சிறந்த சிங்காதனத்தில் ஏறி வீற்றிருந்தனர். பின்பு விஷ்ணு முதலிய தேவர்களும் ஸ்ரீ வடிவேலனது ஆக்ஞையின்பேரில் அவரவர் தங்களாசனங்களில் உட்கார்ந்தார்கள். முசுகுந்த சக்ரவர்த்தி முதலியோர்கள் தண்டம் செய்து அஞ்சலி கொண்டார்கள். மேலும் வீரபாகு முதலிய வீரர் எல்லாம் ஸ்ரீ பகவானுக்குரிய உபசாரணைகளைச் செய்தார்கள். இவ்விதமான பலவித உபசாரங்களால் பூஜிக்கப்பட்டவராகி ஸ்ரீ தேவேசன் விளங்கியிருக்கையில் ஸ்ரீ பரமேசுவரனானவர் இக்கல்யாண மஹோற்சவத்தைப் பார்த்தருள்வதற்காகப் பர்வதராஜ புத்திரி ஸகிதராய் வானமதிற்செல்லலுற்ற பல ரத்தினங்கள் இழைக்கப்பெற்ற தங்கத்தினலான அதிவிசித்திரமான திவ்ய விமானத்தில் ஏறிக்கொண்டு மேக நாதத்தை அதிகரித்த அனேக வாத்திய கோஷங்களோடு மிகவும் நிர்மலமான ஆகாய மார்க்கத்தில் எழுந்தருளல் ஆயினர்.

## 2. அத்தியாயம்.

ஸ்ரீ மஹாதேவன் அங்கு வருவதை முருகேசன் முதலியோர் கண்டவுடன் எழுந்து நமஸ்காரம் செய்து, மிகுந்த பக்தியோடு கைகளைக் கட்டிக்கொண்டு துதி செய்தார்கள். பிறகு ஸ்ரீ பரமசிவனும் பார்வதியம்மை ஸகிதராய்த் தமது விமானத்தினின்று இறங்கியருளுகையில், ஸ்ரீ சுப்பிரமண்யர் அவர் முன்னிலையிற் சென்று அப்பார்வதி பரமேசுவரர்களைச் சிரசினால் திருவடிகள் மீது வந்தனித்து விநயத்துடன் தோத்திரம் செய்தார். ஓகோ! கேளீர்

பிராமணோத்தமர்களே! உடனே ஸ்ரீ சிவபிரான் வடிவேலனைக் கட்டியணைத்தடிக்கடி உச்சிமுகர்ந்தும் கொஞ்சமேனும் திருப்தியடையவில்லை. அப்போது விஷ்ணு பிரம்மா முதலிய தேவர் எல்லாம் முக்கண்ணுடைய அம்மஹா தேவனைத் தண்டம் செய்து அஞ்சலி கொண்டவராகிப் பற்பல துதிகளால் தோத்திரம் செய்தார்கள். பின்பு ஸ்ரீ ஜகதீசன் அவர்களைத் தயவுடன் கடாக்ஷம் செய்து திருக்கல்யாண மண்டபத்திற் கெழுந்தருளினர். அப்போது தேவர் எல்லோர்களும் அப்பரமேசுவரனைப் பின் தொடர்ந்து சென்றார்கள். அப்போது சிவாக்கினையால் அங்கவரது திவ்ய ஸிம்மாஸனம் தோன்ற அதனைப் பரமானந்த மங்களமூர்த்தியாகிய அம்மகா தேவன் வீற்றிருந்து சிறப்பித்தவராகி ஸ்ரீ குமரேசனைத் தம்மடி மீதில் உட்காரவைத்துக் கொண்டனர். ஸகல தேவர்களும் மைந்தனோடு கூடிய பார்வதிநாதனை வந்தனம் செய்தார்கள். "ஓ சுவாமி! தேவரீர் ஆக்கினையின்படி ஸ்ரீ வடிவேலன் தேவ சத்துருக்களான அசுரர்களை எல்லாம் சங்கரித்துச் சிறையில் கட்டுண்டிருந்த தேவர்களையும் விடுவித்துக்கொண்டு இத்திருப்பரங்குன்றத்திற் கருளினர். ஓ பிரபுவே! அவ்வாறுமுகனுடைய சந்துஷ்டிக்காக இவ்விந்திரன் தன் குமாரியை அவனது குலவிருத்தி நிமித்தம் அவருக்கு இங்குப் பாணிக்கிரஹணம் செய்து கொடுக்கின்றான்." என்றிவ்விதமாய்ப் பிரமன் ஸ்ரீ பரமேசுவரனுக்கு விருத்தாந்தங்களை உரைத்தனர்.

அதனை ஸ்ரீ பரமேசுவரன் சிரக்கம்பத்தினல் அங்கீகாரம் செய்து கொண்டு, "ஓ யாமும் இங்குக் கல்யாணத்தைப் பார்ப்பதற்காகத்தான் வந்தோம்." என்று திருவாக்கருளினர். ஓ பிராமணோத்தமர்களே! அப்போது ஸ்ரீ விஷ்ணுவானவர் இந்திரனை நோக்கி, ஓ இந்திரா! கல்யாண கோலமுடைய உமது சிறந்த குமாரியை இங்கழைத்து வாரும்." என, உடனே இந்திரனும் சென்று லக்ஷ்மி ஸரஸ்வதிகளோடுகூட தனதழகிய குமாரியைத்திருக்கல்யாண மண்டபத்திற்கழைத்து வந்தான். அப்போது தேவர் எல்லாம் எழுந்து பெருமை பொருந்திய அவ்வம்மையை நமஸ்கரித்தார்கள். அவளும் மாமி மாமனர்களான ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களை வந்தனிக்கையில் தம் முன்பாக ஆறு முகனைக்கண்டு நாணம உற்றனள். ஸ்ரீ ஸர்வேசுவரன் அவளைப்பார்த்துக் கருணை கூர்ந்தனர். உடனே ஸகல உலோகங்களுக்கும் மாதாவான பார்வதி தேவியும் அம்மருமகளைத் தயவுடன் நோக்கிக் கையினல் தடவிக்கொடுத்து இரு கன்னங்களிலும் முத்தம் இட்டுக்கொண்டு அவளையும் தன்மைந்தனையும் சிங்காதனத்தில் உட்கார வித்துத்தான் சென்றாள். பிறகோரே ஆசனத்தில் வீற்றிருக்கலான தேவசேனையையும் சுப்பிரமண்யரையும் கண்டு தேவர் எல்லோர்களும் வந்தனித்து மிகவும் சந்தோஷம் கொண்டார்கள். அப்போதிந்திரனுனவன் பரிசுத்தமாய் இருந்து கொண்டு இந்திராணிகைதனில் கெண்டியை வைத்துக் கொண்டு விடலான ஜலத்தினல் ஸ்ரீ ஷண்முகன் பொன்னடிகளைக் கழுவி, சந்தனங்கள், புஷ்பங்கள், தூபதீபங்கள் முதலிவைகளால் பூஜித்துப்பற்பலவுபகாரங்களைச் செய்தவனுகி மஹா பரிசுத்தமான அப்பாத ஜலத்தைப்பிந்தி

உபயோகப் படுத்திக்கொள்ளும்படி ஓரிடத்தில் ஜாக்கிரதையாய் வைத்து விட்டுக் கேளீர் பிராமணோத்தமர்களே! அவ்விந்திரன் ஜலத்தைக் கைதனில் எடுத்துக் கொண்டு இவள் ஸ்ரீ முருகேசன் மனையாள்." என்றுரைத்துத்தாரை வார்த்தான்.

அதன் பிறகு பிரமன் மனதினால் நினைத்தமாத்திரத்தில் ஓர் மாங்கல்ய சூத்திரத்தை அமைத்துத் தாம் கோரிய சுப கார்யத்தை நிறைவேற்றுவதற்காக அதனைக்குமரேசனது மரை மலர்போன்ற கைதனிற்கொடுக்க அதனைத் தேவநாதன் தேவசேனை அம்மையின் கழுத்தினில் கட்டிப்பின்னும் நல்ல பரிமளம் பொருந்திய மலர்மாலைகளால் அவ்வம்மையின் கழுத்தை அலங்கரித்தனர். பிற்பாடு புத்திசாலியான இந்திரன் நல்ல ரசவர்க்கங்களில் மேன்மை கொண்ட அமுதம் கனி, முதலியவைகளால் கலக்கப்பட்ட மதுபர்க்கத்தை வதுவரர்களுக்கு நைவேத்தியம் அளித்தான். அப்போது மேக கர்ஜனம்போல் மிகுந்த வாத்திய கோஷம் உண்டாயிற்று. அங்கிருந்த பெரியோர்கள் எல்லாரும் ஆசீர்வாதம் செய்து மிகுந்த சந்தோஷம் அடைந்தார்கள். ஓ! பிராமணோத்தமர்களே! பின்பு பிரமதேவன், வலமாய்ச் சுற்றி எரியலுற்ற அக்னியில், ஸமித்து, அன்னம், ஆஜ்யம் இவைகளை முறையின்படி ஓமம் செய்தார். அதன்மேல் பிரபுவாகிய கந்தபிரான் அக்கினியைப் பிரதக்ஷிணம் செய்து விட்டுத்தானே கையினால் மனையாளுடைய மலரடியைப் பிடித்து அம்மியின்பேரில் ஏற்றிவைத்தனர். அப்போது அத்தம்பதிகள் இருவரும் அருந்ததியைத் தரிசித்து விட்டுப்பிறகு ஸகல ஜனங்களுக்கும் பெற்றோர்களான ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களை இந்த மூன்று பிரதக்ஷிணங்கள் செய்து தண்டம் செய்தனர். உடனே கௌரீசங்கரர் மைந்தனையும் மருமகளையும் கிருபாகடாக்ஷத்தினால் நோக்கியருளி, துரிதமாய்க் கட்டியணைத்துத் தங்கள் ஆசனத்தில் வைத்துக்கொண்டார்கள். அதன் மேல் விஷ்ணு முதலிய தேவர்கள் மங்களகரமான சிங்காதனத்தில் வீற்றிருந்த கண்களுக் கானந்தகார்களான அந்தாலருபேர்களையும் வந்தனித்து மிகுந்த பக்தியோடு தோத்திரம் செய்தார்கள்.

கேளீர்! பிராமணோத்தமர்களே! அப்போதே அப்பார்வதி பரமேசுவரர்கள் அந்தர்த்தானம் அடைந்து விட்டார்கள். பிறகு தேவர்கள் ஆச்சர்யத்தோடு அப்பார்வதி பரமேசுவரர்களைத்துதி செய்தார்கள். அப்போது ஷண்முகர் தம்பாரியாளுடன்கூடப் பலவித மங்கள வாத்தியங்களையும் தோத்திரங்களையும் கேட்டருளிக்கொண்டே தமதரண்மனைசென்று அங்கு வாசற்படியில் இருந்தபடியே தேவரெல்லோர்களையும் அவரவர் விடுதிகளுக்கனுப்பி, வாசற்படிக்குச் சில துவாரபாலகர்களை நியமனம் செய்து விட்டுப்பிறகு அப்பிரபு வானவர், கேளீர், முனிவர்களே! மனையாளுடைய கையைப்பிடித்துக் கொண்டே நேர்த்தியான அந்தப்புரத்துக்குட்சென்றருளினர். அங்கு ஸ்ரீ கந்தபிரானும் தேவசேனபிராட்டியும் மரியாதைக்குரியவர்களான முசுகுந்தன் முதலிய அசுரர்களையும், மற்றுமுள்ள தேவர்களையும், முனிவர்களையும் அவரவருக்குத்தக்கபடி பூஜித்தும், கற்பக

விருக்ஷத்தினின்றுண்டான சிறந்த ஆடையாபரணங்களாலும், தாாசம் என்ற தோஷமற்ற சிறந்த ரத்னங்களாலும், ஹாரங்களாலும் கிரமப்படி சந்தோஷிப்பித்து அவர்களை அனுப்பிவிட்டு, அப்போது இந்திராணியோடு கூடத் தம்மாளிகையில் மிகுந்த சந்தோஷத்தோடிருந்தனன்.

கேளீர் ! முனிவர்களே ! சகலதேவர்களுக்கும் சிரேஷ்டமான ஸ்ரீ சுப்பிரமண்யர் தேவியோடு கூட இங்குச் சிலகாலம் இருந்து விட்டு, பிறகு இந்திரனுக்குப் பட்டாபிஷேகம் செய்விப்பதற்காகச் சொர்க்கலோகத்துக்குப் புறப்பட்டுத் துரிதமாய்த் தமதரண்மனை வாயிற்படிக்கு விஜயமாகும்போது, பூதர்கள், வீரர்கள், சேனதிபர்கள் இவரெல்லாம் பிரயாணப்பட்டுப் படஹ வாத்தியங்களின் பேரோசைகளோடு மிகுந்த கோலாஹல சத்தம்செய்தார்கள். அதுகேட்டு இந்திரன், பிரமன், விஷ்ணு முதலியவர்களும், மற்றுமுள்ள தேவ சிரேஷ்டர்களும் அப்போதங்கு ஸ்ரீகந்தன் மாளிகை வாசல் அண்டையில் கூடினர்கள். பிறகு ஸ்ரீஷண்முகன் மனோவேகமுடைய சிறந்தரதத்தின் மீதேறிக்கொண்டு ஸ்தோத்திர வசனங்களைச்சொல்லி நின்ற ஸகல தேவர்களையும் அவரவர் வாகனங்களில் உட்காரும்படி திருவாக்கருளிவிட்டுக் கேளீர் முனிவர்களே ! தம்தேவியோடுகூட ஓர்க்ஷணநேரத்துக்குட் புறப்படலாயினர். பிறகு ஸ்ரீ கந்தன் கட்டளையின்படி தேவர்கள் அவரவர் வாகனத்தில் உட்கார்ந்து கொண்டு மிகுந்த பக்தி உடையவர்காளாகிய அவருக்குச் சமீபமாய் முந்திச் சென்றார்கள். ஊழிக்கால மேகங்கள்போல் ஓசையுடைய வாத்தியகோஷங்கள் முழக்கப்பட்டன. அனேகர் குடைகளையும், துவஜங்களையும் வெண்சாமரங்களையும் பிடித்துக்கொண்டு புறப்பட்டார்கள். ஸ்ரீ தேவேசன் இவ்வாறு சம்பரமங்களோடு புறப்பட்டு அமராவதிக்குச்சென்று, அப்பட்டணம் தீயினல் முற்றும் கொளுத்தப்பட்டுப் பாழாய் இருந்ததைக்கண்ட பார்வதி மைந்தன் தேவதச்சனைநோக்கி, "ஓ விசுவகர்மனே! இப்பட்டணத்தை ஓர் கணத்துக்குள் முன்போல் செய்துவிடலாவாய்!" என்று அக்கருணமிர்தக் கடலான கடவுள் கட்டளை யிட்டவுடன் அவனும் அப்படியே ஸகல தேவர்களுக்கும் இருப்பிடமான அங்நகரத்தைத் துரிதத்தில் சிறப்பாய் அமைத்துப் போட்டான்.

கேளீர் பிராமணோத்தமர்களே ! அப்போது விஷ்ணு முதலியதேவர்கள் சிற்பிகளிற் சிறந்த விசுவகர்மனை நல்ல உபசாரவார்த்தைகளால் மிகுதியாய்ச் சந்தோஷப்படுத்தினர்கள். பிறகு தேவர்கள் அத்தச்சனோடு கூட ஸ்ரீ வடிவேலனிடம் சென்று இதனை விண்ணப்பம் செய்துகொள்ள அவரும் அவர்களது வசனத்தைக் கேட்டுத்தம் வாகனத்தினின்றிறங்கி, அங்குள்ளதான பல விசித்திரங்களால் விளங்கலுற்ற தமது திருமாளிகைக்குச் சென்று அங்குள்ள சிறந்த சிங்காதனத்தில் தேவியோடு கூட வீற்றிருந்தனர். அப்போதிந்திராணியும் விமானத்தோடு தேவஸ்தீரீகள் சகிதமாய்ச் சகல இரத்தினங்களாலும் நிரம்பப்பெற்றதும், சகல விநோதங்களோடும் கூடியதுமான தனதரண்மனைக்கு வந்துச் சேர்ந்தாள். உடனே ஸ்ரீ அக்னிபூவானவர் பக்கத்தில் நின்ற பிரம்மாவைநோக்கி, ஓ பிரம்மனே! நீர் இந்திரனுக்குப்பட்டாபிஷேகம்செய்துவிட்டு சீக்கிரம் வரலாவீரென பிரமனும் அத்தேவனுடைய அவ்வாறு பெருமை

46

பொருந்திய கட்டளையைச் சிரமீது கொண்டு வேண்டிய சாமான்களைச் சம்பாதித்துக்கொண்டு அவ்விந்திரனரண்மனைக்குவந்து அவனுக்கு நல்ல தண்ணீரினலபிஷேகம் செய்து பட்டமும் கட்டிவைத்துப் பிறகு அவ்விந்திரனல் பூஜிக்கப்பட்டவராகித் தமது மாளிகை சேர்ந்தார். பிற்பாடு இந்திரன் முனிவர்களால் ஆசிர்வதிக்கப் பட்டவனுகியும் சகல தேவர்களாலும் வந்தனிக்கப்பட்டவனுகியும் நர்த்தனம் செய்பலுற்ற அப்ஸர ஸ்திரீகளின் கூட்டங்களாலும் சங்கீதம் பாடலுற்ற கின்னரச் சிரேஷ்டர்களாலும் பற்பலவுபசாரங்கள் செய்யப் பெற்றவனுகியும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! கொஞ்ச நேரம் சிங்காதனத் திருந்துவிட்டுப் பிறகு ஸ்ரீ குமரேசனிடம் சென்று மிகுந்த சந்தோஷங்கொண்டவனுய் நமஸ்கரிக்க, அப்போது ஸ்ரீ சரவணபவன் இந்திரனை நோக்கி "ஓ! இந்திரா! நீ முன்போல் பயமற்றுச் சுகமாயரசாண்டுவருவாயாக" வென்று கருணைக்கடலான அக்கந்தபிரான் திருவாக்கருளினர்.

கேளீர் பிராமணோத்தமர்களே! அதன்பிறகு ஸ்ரீ குஹ மூர்த்தியானவர் விஷ்ணு முதலிய தேவர்களை யவரவர் விடுதிக்களுக்கு அனுப்பிவிட்டுத் தேவர்களான தமது வீரர்களைத் தம்மாளிகை வாசற்படியிலேற்படுத்தி விட்டு மிகுந்த சந்தோஷ முடையவராகி அந்தப்புரம் சென்றருளினர். ஸ்ரீ வடிவேலவன் இவவிதமாய்க் கொஞ்சகாலம் சொர்க்கலோகத்தில் வேண்டியபடி வசித்துவிட்டுப் பிறகு மனையாளோடுகூடக் கந்தகிரிக்குப்போகத் திருவுளம் கொண்டு மிகுந்த பக்தியோடு வந்தனித்து அஞ்சலிகொண்டு முன்னிலையில் நின்ற பிரமன் முதலிய தேவர்களைத் தயவுடன் நோக்கி அவர்களை அவரவர் லோகங்களுக் கனுப்பிவிட்டுத் தேவியோடு கூடச்சுந்தரமான ரதத்தின் மீது உட்கார்ந்து மகாபலவானுகிய வீரபாகுவைச் சாரதியாய் வைத்துக் கொண்டு புறப்பட்டு வீரர்களாலும் சேனதிபர்களாலும் புடைசூழப் பெற்றவராய்க் கைலைகிரியடைந்து இரதத்தை விட்டிறங்கி மகா தேவரான ஸ்ரீ பரமேசுவரனையும் தமதன்னையையும் மிகுந்த பக்தியோடு வந்தனித்து அவர்களாற் கொண்டாடப்பட்ட பிறகு அவர்களிடம் உத்தரவு பெற்றுத் தம் மங்கையருடனும் மற்றத்தமது பரிவாரங்களுடனும் சிறந்த கந்தகிரிக்கு விஜயம் செய்து, கேளீர்! பிராம்மணோத்தமர்களே!! அங்குள்ள நேர்த்தியான சிங்காதனத்தில் வீற்றிருந்தனர்.

ஓ கேளீர் மகா மகிமை பொருந்திய பிராம்மணோத்தமர்களே! உமையம்மன் செல்வனான ஸ்ரீ கந்தபிரானுடைய திருக்கல்யாண மங்கள சரித்திரத்தின் சாராம்சமானதும் செவிக்கினிமையும் மங்களகரமும் மிகச்சுந்தரமுமானதுமான இவ்வத்தியாயத்தை மிகுந்த பக்தியோடு படிப்போரும் கேட்போரும் பெண்டிர்கள் பிள்ளைகள் பசுவர்க்கங்கள் முதலியவைகளுடன் தீர்க்காயுளுடையவராகி யெப்போதும் மேலுக்குமேல் விருத்தியடைந்து வாழலாவார்களென்று சொல்லப்படுகிறது. ஸ்ரீ வடிவேலன் சாக்ஷியாய் இது சத்தியம் சத்தியம்.

## 3. அத்தியாயம்.

பிற்பாடு பிரமன் முதலிய தேவரெல்லாம் ஸ்ரீ வடிவேலனது உத்தரவின் பேரில் தங்கள் தங்களுடைய ஸ்தானங்களையடைந்து தங்கள் ஹிருதயத்தினில் ஸ்ரீ கந்த பிரானைத் தியானம் பண்ணிக்கொண்டே சுகமாயிருந்து வந்தார்கள். இந்திரனோவென்றால் க்ஷணத்துக்கு க்ஷணம் சூரனாற்செய்யப்பட்ட தீங்குகளை நினைத்துப் பார்த்து வைராக்கியத்தினால் சமுசாரத்தை நிந்தனை செய்தொழித்து வாய்பேசாதவனாகித் தலைதனைக்குனிந்துகொண்டே ஹிருதயத்தில் பகவானைத் தியானம் பண்ணிக்கொண்டிருந்தான். இப்படியிருக்கையில் பிரகஸ்பதி தேவன் அதனை யறிந்ததன்மேற் சீக்கிரமாய் இவ்விந்திரனிடம்வந்து அவனுக்குத் தனிமையில் காமசாஸ்திரத்தை யுபதேசிக்க பின்பு அவன் அதே சரியென்று நிச்யித்து, காமவிகாரத்தினால் மோஹம்கொண்டவனாகி, 'ஓ கோ மாதரோடு போகிப்பதே நல்ல சுகம்; அதை ஒழிப்பது மிகவும் துக்கமே; மேலும் ஸ்திரீ சம்போகத்தினால் அடையப்படும் சுகமே ஜன்மமெடுத்ததற்குற்றபயன்; தவிரவும் சந்தேகமேயின்றி ஐசுவரியம் பலம் ஞானம் இவைகளைக்கொண்டதற்கும் கலவிச் சுகந்தான் தக்கபயன்; போகங்களின் மிகுந்த போகமும் சுகங்களில் மிகுந்த சுகமும் அதுவே; அப்பேர்க்கொத்த இப்பரசுகத்தை ஜனங்கள் திரவிய லோபத்தனத்தால் வீணாய் நிந்திக்கின்றார்கள்' என்று மனதினில் ஆலோசித்துக்கொண்டு தன் குருவையு மனுப்பிவிட்டுத் தன் செங்கோலை நடத்துவதற்காக மைந்தனான ஜயந்தனை யேற்படுத்தி விட்டு மிகுந்த சந்தோஷங்கொண்டவனாகி யிரவும் பகலுமா யிந்திராணியோடு ரமித்துக்கொண்டிருந்தான்.

அப்போது ஜயந்தன்சொர்க்கலோகத்தை நீதிவழுவாமல் அரசாண்டு வருகையி லொருநாள் சகல சாஸ்திரார்த்தங்களிலும் மிகுந்த ஸமர்த்தரான தன் குருவாகிய பிரகஸ்பதியை நோக்கி "ஓ குருவே! சூரபத்துமன் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய நம்மெல்லோர்களையும் மகாகோரமாய்த்தனது ஊழியத்திற் கேற்படுத்திக்கொண்டானே. ஓ எல்லாவற்றையு மறிந்த குருவே! அது எவ் வினையின் பயனென்பதை யெடுத்துக் கூறுதல்வேண்டும். ஏனென்றால் வினையாலன்றிப் பிராணிகள் யாதொருபயனையு மனுபவிப்பதில்லையே" யென்று அப் பிரகஸ்பதியை வந்தனித்து வினவுகையில் குருவுரைத்ததாவது:—

கேளாய் ஜயந்தா! முந்தி தக்ஷன் வேள்வியில் விஷ்ணு முதலிய நாமெல்லோர்களும் யாகங்களுக்கதிபரான ஸ்ரீ முக்கண்பிரானை விலக்கி விட்டு ஹவிர்ப் பாகங்களைப் புஜிப்பதற்கிருந்தனமல்லவோ? அதற்குத்தகுந்த பயனை முந்தியே யாம் ஸ்ரீ வீரபத்திரமூர்த்தியா லடைந்தனுபவித்தான போதிலும், கருமசேஷ வசத்தினால் சூரமத்துமனென்ற வோர் வியாஜமாய் நமக்குத்தாண்ட முடியாத இக்கொடும் துன்பமானது சம்பவிக்கலாயிற்று. ஆ ஆ வினையின் பயன் மிகவும் கொடுமையாயுள்ளதே" என, ஜயந்தன், ஓ சுவாமி! பிரம்மன் புத்திரர்களில் முதன்மையான தக்ஷனாவன் வேள்விக்கு வேந்தனாகிய் ஸ்ரீமகாதேவனைவிலக்கி விட்டு மற்றத் தேவர்களை வைத்துக்கொண்டு யாக தீக்ஷை செய்துகொண்டதற்காக ஓ சகல ஞானங்களிலும் தேர்ச்சிபெற்ற குருவே! தேவர்கள் தம்பயனை வீரபத்திர மூர்த்தியால் எப்போதடைந்தனர்களென்ற சந்தேகத்தை யெந்த

னுக்குத் தெளிவித்தல்வேண்டுமென்று வேண்டி, அதனேக்கிரமப்படி யவன் குருவிடைய முகாரவிந்தத்தினின்று கேட்டறிந்து மிகுந்த மனக்களிப்புற்றவ ஞகி ஸ்ரீ மகாதேவனை ஹிருதயகமலத்தில் நினைத்துக்கொண்டும் கேளீர் தாணி தேவர்களே! அம்மஹாதேவனை நிந்திப்போர்களான மகாபாவிகளை சீ சீ யென் றிகழ்ந்துகொண்டும் சுகமாயிராஜ்ய பரிபாலனம் செய்து கொண்டு வந்தான்.

சௌனகாதி முனிவர்கள் சூதரை நோக்கி, "ஓ புராணங்களில் மிகவல்ல வரான சூதமுனிவரே! ஸ்ரீ சுப்பிரமண்ணியரப்போது கந்தகிரிதனிலிருந்து வருகையில் யாது செய்தருளினரென்பதை யெடுத்துரைத்தல் வேண்டு"மென சூதர் சொல்லுகிறார்: "ஓ கேளிர், மிகுந்த ஆவல் கொண்ட முனிவர்களே! அப்போது பகவானுகிய ஸ்ரீ ஷண்முகன் சௌந்தரவல்லி யென்ற வள்ளிநாய கியை லீலையாய்த்திருக்கலியாணம் செய்து கொண்டனன்." என முனிவர்கள், "ஓகோ அவளை எவ்விடத்தில் மணம்புரிந்தார்? அவள் யாருடைய பெண்? வல்லியென்ற பெயரவளுக்கென்ன காரணத்தினுலுண்டாயிற்று? ஓதவசிகளிற் சிறந்தோரான சூத முனிவரே! இவற்றை யெல்லாமிப்போது எங்களுக்குத் தெளியக்கூற வேண்டுமென சூதர் கூறுகின்ருர்.

ஜகங்களில் முக்கியத்தானமாகிய காஞ்சிபுர மென்ருேர் பெரிய தலமிருக் கின்றதன்ருே? அதனருகில் பூர்த்தாஸ்பாடி (மேற்பாடி) யென்ருேர் பட்டண மிருக்கின்றது. அங்கு வல்லிக் (வள்ளிக்கோடி) கொடிகளுக் கிருப்பிடமான வோர் மலை விளங்குகின்றது. கேளீர் முனிச்சிரேஷ்டர்களே! அதனில் மிகவும்லக்ஷ்மி விலாசம் பொருந்திய வேடர்களுக்கு வேந்தனுன ஒரு வேடன் மக்களற்றிருந்தான். அவன் தினந்தோறும் தனக்குப் புத்திர பாக்கிய முண் டாக வேண்டுமென்று வேண்டிக்கொண்டிருந்தான். அம்மலைமீதுள்ள ஓர் பெரிய காட்டினில் மகா புண்ணிய சீலரும் சிறந்த தவசியும் சத்திய சந்தரு மான சிவனென்ருேர் முனிவர் தவம்செய்து கொண்டிருந்தார். அம்முனிவர் ஓர் நாள் தம்மருகினிலோரழகிய மான்பேடு நின்று கொண்டிருந்ததைக் கண் ணுற்று காமவிகாரம் கொண்டு அப்போது மிகவும் மோஹாக் கிராந்தராயினர். அப்போதவரால்பார்க்கப்பட்ட மாத்திரத்தினுல் அம்மானுனது கர்ப்பம்கொண் டதாகி அவ்வள்ளிப் புதர் நடுவினிலோர் சிரேஷ்டமான பெண் குழந்தையைப் பெற்றவுடன் வேறு ஜாதிப் பிறப்பான வக்குழந்தையைக் கண்டு மிகவும் பயத்தினுற் பரவசமுற்ருேடி விட்டது. கேளீர் பிராம்மணுேத்தமர்களே! அப்போதக் குழந்தையானது மதுரமான குரலோடழலுற்றது. இப்படியிருக் கையில் அங்கோரிடத்தில் தினைத்தானியங்கள் பூர்ணமாய் விளையப்பெற்ற ஓர் கழனியைப்பார்ப்பதற்காக வந்த அவ்வேடத்தலைவன் அங்கழுதுகொண்டிருந்த அக்குழவியைக் கண்டு மிகுந்த சந்தோஷங்கொண்டு யவ்வழகிய குழந்தையை யெடுத்துக்கொண்டு போய்த் தன் மனையாளுடைய கைகளில் கொடுத்து புத்திரோற் சவத்திற்குரிய சடங்குகளைச் செய்து விட்டுக் கேளீர் பிராம் மணுேத்தமர்களே! ஓகோ அவ்வேடன்தன் பெண்டிரோடுகூட நாளுக்கு நாளாய் வளர்த்துவருகையில் அக்குழந்தை நாளடைவில் பன்னிரண்டு வயது கொண்டவளாகி வாலிபத்துக்குரிய மண விளையாட்டு முதலியதைச் செய்ய லானுள்.

பிறகு அவ்வேடனானவன் பருவத்துக்குரிய முதிர்ந்த புத்தியைக்கொள்ள லான அப்பெண்ணைச் சிறந்த தினைத்தானியங்களைப் பறவை முதலியவை களின் தீங்குகளின்று காப்பதற்காக கழனியிலோர் நேர்த்தியான விடத்தி லிருக்கும்படி யேற்பாடு செய்தான். அதன் பிறகு அப்பெண்ணும் அங்கு கொஞ்சம் நிழலேற்படுத்திக் கொண்டு பலவித உறத்த சத்தங்களால் பறவை களை யதட்டிக்கொண்டே அங்குள்ள வள்ளிப்பாதத்தியில் விநோதமாயிருந்து வந்தாள். வள்ளிப்புதரினின்று பிறந்து பாத்திதனிலே வசித்து வந்தபடி யால்தான் வல்லீநாயகி (வள்ளியம்மை) என்ற பெயருண்டாயிற்று. அப் போது ஸ்ரீநாரத முனிவரும் அவ்வல்லீநாயகியை யங்குகண்டதில் அவளை ஸ்ரீ வடிவேலனுக்கு மனையாளென்பதாயறிந்து வந்தனித்துவிட்டு எங்குமுலா வித்திரிந்து பிறகு மகாவற்புதமான ஸ்ரீ பரிபூர்ணமென்ற கிரிக்குவந்து அங்கு தேவாதி தேவனான ஸ்ரீ கந்தபிரானைத் தரிசித்து வந்தனம்பண்ணி, ஓ சுவாமி, நானிப்போது வல்லீநாயகியைத் தரிசித்துவிட்டிங்குவரலாகின்றேன் என்று அத்தேவனுதனை மறுபடியும் விசேஷமாய் நமஸ்கரித்துவிட்டுத் தம திச்சையின்படி சஞ்சரிக்கலானார். பின்னர் முருகன் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு வேகமாய் வல்லீநாயகியிடம் வந்து "அடி குழந்தாய்! நீ யாவள்? யாருடையபெண்? உன் பெயரென்ன? நீ எங்குபிறந்தாய்? ஓ கோ இப்பேர்க் கொத்த அதிரூபலாவண்ணியமுடைய பெண்மணியான வுந்தனையிவ்வேடர்கள் எவ்விதமாய்த்தான் காடுதனில் தினைக்கொல்லை காப்பதற்கு வைத்தார்களோ! அடிசிறந்த முகத்தையுடைய பெண்ணரசே! நீ நாணத்தைவிட்டுத் தன் பிறப் புவழியை யெந்தனுக்கு உரைத்து எந்தனை புன்னகைப்போடிங்கு சற்றுத் திரும்பிப்பாரடி. ஆ அடி அமுதத்தை நிரம்பப் பெற்ற அதரத்தையுடைய யெந்தன் பிராணநாயகி! காடுகளில் அதிகமாய்ச்சுற்றி வந்தபடியால் எந்தனுக் கமுத (அதராமுதம்) பானம் செய்ய வேண்டியதாகம்மெத்த விருக்கின்றது. ஆகையால் நிர்மானுஷ்யமான, இவ்வனத்துக்குரிய விஷயத்தை நீ அறிய லாவாயென்று இவ்விதமாய்த் தேவநாதன் உரைக்கையில் கேளீர் பிரம்மஞேத் தமர்களே! அவளுக்குத் தந்தையான வேடராஜன் கொடிய உருவங்கொண்ட வர்களும் நல்ல வில்லாளிகளுமான பல வேடர்களால் சேவிக்கப் பட்டவனுகி முன்னிலையில் மகா பயங்கரமான பலவாத்திய கோஷங்களுடன் புறப்பட்டுவரு கையில் அப்போது தேவநாதன் அனந்தமான வேதங்களாகிய கிளைகளைக் கொண்ட மகா வற்புதமானவோர் வேங்கை மரத்தினுருவத்தை யெடுத்துக் கொண்டு அக்கழனிக்கருகினில் மிகவும் குளிர்ச்சியான நிழலைச்செய்து கொண் டிருந்தனர்.

அப்போது அவ்வேடன் அங்குவந்து கேளிர் முனிவர்களே! தன் பெண் ணுக்குப் பற்பல கனிகளையும் தேன்கலந்த தினைமாவையும் மெத்த வன்புடன் கொடுத்தனன். அப்போது அவன் பரிவாரங்களான மற்ற வேடர்களெல்லாம் அம்மரத்தைக்கண்டு ஓ கோ, இதற்கு முந்தி இம்மரத்தை இங்குகண்டதில்லை யென்று அதனைவெட்ட வெத்தனித்தனர். அப்போதவர்களுக்குத் தலைவனான இவ்வேடன் அவர்களைத் தடுத்துவிட்டுப் பெண்ணை நோக்கி, ஓ குழந்தாய்! நல்ல நிழலையிடவுற்ற இம்மரமிங்கு எவ்விதம் உந்தனுக்குவாய்த்தது." என்று

ரைக்கலான அத்தந்தையை நோக்கி "ஓ தந்தாய் யானிதனையறியேன். இது ஓர் மிகுந்தமாயை போலிருக்கின்றது" என அச்சுந்தர முகமுடைய பெண்ணு ரைக்க ஓ குழந்தாய், நல்ல குளிர்ச்சி பொருந்திய இம்மரத்தைப் பற்றியுந் தனுக்குப் பயமே வேண்டாம். அது உனக்கிவ் வரணியத்தி லெப்போதும் மிகுந்த சுகத்தைக் கொடுக்கலுற்ற வோர் துணையாக விருக்கட்டு மென் றுரைத்து விட்டு அவ்வேடன் வேறு பற்பல வரணியங்களுக்குச் சென்று விட்டான். அவன் பரிவாரங்களுடன் போய்விட்டவுடன் ஸ்ரீ குஹபிரான் முந்தியவுருவத்தை யெடுத்துக்கொண்டு கைதனில் வில்லைக் கொண்டவரும் மிகவும் சௌர்யம் பெருந்தியவரும் யௌவன பருவமுடையவரும் கண் களுக்கு இன்பமானவரும் மிகச் சிரேஷ்டருமான அப்பகவான் ஆலிங்கனம் செய்து கொள்ள மிகுந்த விருப்பம் கொண்டவராகிக் கேளீர் பிராம்மணோத்த மர்களே! அவளை யணைந்து கொள்வதற்காகச் சாதுரியமான நேச வார்த்தை களை யுள்ளத்தினின்று வெளியிட்டுரைத்தனர். அப்போது அவள் பயத்தினல் நடுக்கமுற்றவளாகி அவரைநோக்கித் தலை குனிந்துரைத்ததாவது: 'ஓ ராஜனே, நானோ ஈனகுலத்தில் பிறந்தவள். நீரோவென்றால் ராஜ குலத்தில் பிறந்த வராயிருக்கின்றீர். மேலும் நான் தினைத் தோட்டம் காப்பவளாகின்றேன். உமக்கும் எனக்கும் எவ்வளவு தூரம்? ஆகையால் உமக்கு இங்கு இப்பேர்க் கொத்த காரியம் தகுதியல்ல; வந்த வழியோடு போய்விடும் போய்விடும்; உம்மை வேடர்கள் கண்டுவிட்டால் உமக்கு நிச்சயமாய் மிகுந்த கேடு நேரி டும்." என்று அவளுரைக்கலாகையில் அப்போது வேடராஜன் மிகுந்த அட்ட காசங்களோடு கூடிய அநேக வேடர்களோடு திரும்பவும் வந்தனன்.

அப்போது உடனே ஸ்ரீ வடிவேலன் துரிதமாய் மூப்பினல் தேகம் முழு தும் நரைக்கலுற்ற ஓர் அற்புதமான கிழவனுருவத்தை யெடுத்துக் கைதனி லோர் தடியைப் பிடித்துக்கொண்டு அவ்வேடனுக்கு ஆசீர்வாதம் பண்ணித் திருநீறுகொடுக்க அதன்பேரிலவன் 'ஓ கிழவனாரே! உமக்கு எங்குபோக வேண்டும்? இங்கு உமக்கு வேண்டுவது என்ன?' என கேளீர் பிரம்மணோத் தமர்களே! அதற்கு விருத்தர் கூறியதாவது: "ஓ வேடனே! எந்தனுக்கு யாதோர் பண்டங்களிலும் இச்சையில்லை. ஆனல் உந்தன் மலைமீதுள்ள குமரி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதற்காக இங்குவந்தேனென்று அறிந்து கொள் வாய்." என அவ்வசனத்தைக்கேட்ட அவ்வேடனும் ஓ ஐயா! அப்படி ஆனல் நீர் ஸ்நானம்செய்துவிட்டு இங்கு தானே எந்தன் புத்திரிக்குத் துணையாயிருக்க வாருமென்று அவருக்குரைத்துவிட்டு முன்போலவே அப்பெண்ணுக்கு அனே கம் கனிவர்க்கம் முதலியவைகளைக் கொடுத்துவிட்டுக் கேளீர் முனிவர்களே! அவ்வேடன் தன் பரிவார மனிதர்களுடன் சென்று விட்டான். பிறகு அக் கிழவனர் அக்கன்னிகையை ஓ அம்மணி! எந்தனுக்குமெத்தப்பசி வாதிக்கின்ற தென்று சொல்லி அவள் கையிலிருந்த கனி மா தேன் முதலியவைகளை வாங் கிப்பக்ஷித்துவிட்டுப்பிறகு அவளைநோக்கி, ஓ பெண்ணே! மெத்தத்தாகமாயிருக் கிறதென அதற்கவள் ஓ கிழவனாரே இதோ ஓர் தடாகமிருக்கின்றது. நீர் இக் குன்றுகளையும் கடந்துசென்று அங்குள்ள மிக ருசிகரமான நீரைக்குடித்து விட்டுத்திரும்பி ஓர் நொடிக்குளிங்கு வந்துவிடும் என்றாள்.

இவ்வாறு அவள் வசனத்தைக் கேட்டதன்பேரில் கிழவனார் பெண்ணே! யான் வழியை யறியமாட்டேனாகையால் நீ துணையாய் வந்து பாதையைக் காட்ட வேண்டுமென அவளுமப்படியே நல்லதென்று புறப்பட்டு அத்தடாகம் வரையில் அழைத்துப்போக அதன்மேல் அவர் அச்சிரேஷ்டமான குளத்திற் சென்று அங்கு வேண்டிய அளவு நீரைக் குடித்துவிட்டுத் திரும்பி வந்து, அப்பெண்ணை நோக்கி, 'அடி மாதே! எந்தனுக்கு நீரை விரும்பின தாகம் நீங்கிவிட்டது. ஆனாலும் உன் ஸம்போகத்தை நாடியதாகம் இன்னும் வாதிக்கின்றது. அடி சகல அவயவங்களும் சுந்தரமாய் அமையப்பெற்ற மாதரசே! நீ யெந்தன் மீது கருணைவைத்து அதனைத் தீர்க்க வேண்டும். அடி அமுதத்தை நிரம்பப்பெற்ற மதுரமான அதரங்களைக் கொண்ட சுந்தரி, உந்தனைத் தண்டம் பண்ணுகிறேன். எந்தனை மன்மதன் வாதிக்கின்றபடியால் நிர்மானுஷ்யமான இவ்வரணியத்தில் எந்தனை நீ அங்கிகரித்தல் வேண்டும்' என்றனன்.

அவரது வசனத்தைக்கேட்ட வள்ளியம்மையானவள் அக்கிழவனாரை நோக்கி 'ஓ ஐயா நீரோ கிழவர்; அதிலும் தவசி; இங்ஙனமிருக்கையில் எந்தனை யேதேதோ சொல்லுகின்றீர். மேலும் நீர் முதிர்ந்தவயது சென்றவராய் இருந்தும் எந்தனை வந்தனம் பண்ணுவதாய் இப்போதுரைக்கலானீர். இப்பேர்க்கொத்த நீர் எங்களினத்தாரால் காணப்படக்கூடாது. ஆகையால் இப்போது நான் சீக்கிரம் செல்லுகிறேன்; நீர் பிந்தி வாரும் என்றுரைத்துவிட்டு முந்திப் புறப்பட்டனள். அச்சமயத்தில் ஸ்ரீ சண்முகரானவர் தம் முத்தோராகிய யானை முகத்தோரை மனதினில் தியானிக்க அவருமோர் மதம்கொண்ட யானையுருவங் கொண்டவராகி வெகு வேகமாய் அங்கு வந்தார். அப்போது அவ்வம்மையானவள் சிரேஷ்டமான அவ்வியானையைக் கண்டு மிகுந்த பயந்தவளாகி அதிவேகமாய் ஓடி வந்து அக்கிழவனாரைக் கட்டிக்கொண்டு "ஓ ஐயா நீர் யாது சொல்லிடினும் கேட்கின்றேன். ஓ சரணமடைந்தோருக்கு நேசமுள்ள ஐயனே! எந்தனை அவ்வியானையினின்று காப்பாற்றும் காப்பாற்றும்" என்றனள்.

இவ்வாறு அவளது வசனத்தைக்கேட்டவுடன் விருத்தவேஷங்கொண்ட ஷண்முகரானவர் ஸ்ரீ கணநாதரை வந்தனித்து மிகுந்த பக்தியுடன் தோத்திரம்பண்ண, கேளீர் முனிவர்களே! அப்போது ஸ்ரீ விநாயகர் அவ்வுருவத்தை விட்டு மறைந்தருளினர். அதன் பிறகோ வென்றால் ஸ்ரீ வடிவேலன் மெத்த நேர்த்தியான அப்பெரிய வரணியத்தின்கண் அவ்வம்மையின் கூந்தலைக் கூட்டிப் பிடித்துக் கொண்டபடி அவளுதட்டினைப் பற்களால்கடித்துக் கொண்டு அவளோடு சம்போகித்தனர். ஓ முனிவர்களே அவ்வாறு அவர்களோடு கலவி தொடுத்ததன் பிறகு அவர் தம் நிஜவுருவத்தைத் தரிசனம் கொடுத்தருளுகையில் அவரை அவ்வள்ளியம்மை கண்டவுடன் பயமடைந்தவளாகி மிக அன்புடன் அவரை வந்தனித்து அஞ்சலிகொண்டு, ஓ தேவாதி தேவா! தேவரீர் முந்தியே இப்பேர்க்கொத்த சுந்தரத் திருமேனியை அடியேனுக்குக் காக்ஷியருளாமற் சும்மா இவ்வாறு வஞ்சகம் செய்யலானீரே.

ஓஹோ தேவரீரது திருவிளையாடல் இப்பேர்க்கொத்த மாக்ஷிமை கொண்டதோ'' என்றிவ்வாறு வசனங்களைச் சொல்லிவிட்டு அவ்வல்லீநாயகியானவள் அம்முருகேசனைத் தோத்திரம் செய்தாள். பிறகு அத்தேவராஜனும் மந்தஹாசமுள்ள முகாரவிந்தத்தைக் கொண்டவராகி அவ்வம்மையை நோக்கி திருவாக்கருளியதாவது. கேளாய் பெண்ணரசே! நீ பூர்வத்தில் ஸ்ரீ விஷ்ணுவின் பெண்ணாயிருக்கையில் மோகம் கொண்டவளாகி எந்தன் மீது நேசரஸத்தை அதிகமாய்க் கொண்டதனால் உனது விசுவாசத்துக் கிணங்கியே இவ்விதமாய்ப் புணர்ச்சி புரியலானோம். ஆகையால் நீ இப்போது நமக்கு முந்தியே தினைவயலுக்குச் சென்றுவிடு. அடி மகா பாக்கியசாலியான கண்ணே! நாமும் அங்கு பிந்தி விரைவோடு வருகின்றோமென இவ்வாறு அவரது வசனத்தைக் கேட்டு வல்லிதேவியானவள் அவ்வடிவேலனுக்குச் சிரேஷ்டமான வந்தனங்களைச் செய்துவிட்டு அவர்மீதே முற்றும் நாடியமனதைக் கொண்டவளாகி அத்தலத்துக்குச் சீக்கிரமாய் முந்திச் சென்றனள்.

## 4. அத்தியாயம்.

கேளீர் முனிவர்களே! அவள் அங்கு சென்ற பிறகு தினைத் தானியம் காப்பவளான அவளுடைய தோழியானவள் அவ்வள்ளியம்மையை "ஓ அம்மா இவ்வளவு நேரம் எங்கே போனாய்?'' என்று கேட்க அதற்கு அவள் "அடி பாங்கி! இக்குளத்துக்குப்போய் நீராடி திரும்பிவந்தேன்'' என்றாள். பின்னும் அவள் உந்தனுதட்டைப் பரிசுத்தமாக்கலுற்ற அக்குளம் எங்கிருக்கின்றது அம்மா? மேலும் ஓ அம்மணி! வெகு நேர்த்தியான உனது கண்களிரண்டிலும் இரத்தம் குழம்பியிருக்கின்றது; கூந்தல்கள்சுற்றிலும் சிதறுண்டிருக்கின்றன; உந்தன் முகத்திலுமோ மிக நேர்த்தியான வியர்வைத் திவலைகளுண்டாயிருக்கின்றன; என்று, தான் செய்திருக்கும் காரியத்தைப்பற்றிச் சந்தேகப்பட்டுக் கேட்கலானதை வள்ளியம்மை யறிந்து, ஆ பாங்கி, நீ இப்போது எந்தன்மீது அவதூறு கற்பிக்கின்றாயென இவ்விதமாய் இருவருமொருவரோடொருவர் மேலுக்குமேல் வாக்குவாதம் செய்து கொண்டிருக்கையில் ஸ்ரீ சுப்பிரம்மணிய சுவாமியானவர் வில்லம்புகளைக் கைப்பற்றிக் கொண்டு வேட்டையாடி மிகவும் களைப்படைந்தவர்போல் அங்கு விஜயமாகி அவர்களை நோக்கித் திருவாக்குரைத்ததாவது.

ஓ பெண்களே! எனது அம்புகளால்தேகமெங்கும் அடிபட்டு இங்கோடி வரலான மிக வுன்னதமான ஓர்சிறந்த யானையை நீங்கள் கண்டீர்களா? என்று அவருரைத்த வசனத்தைக் கேட்டு அவரை நோக்கிச் சகி சொல்லுகின்றாள். ஓ ஐயா உமது பராக்கிரமத்தை உம்மைப்போலொத்த சூரரிடத்தில் சொல்லிக் கொள்ளும் எங்களிடம் வேண்டாமென்று சொல்லிவிட்டுக் கேளீர் முனிவர்களே! அவள் மனதிற்குள் ஆலோசித்துக் கொண்டதாவது: "ஓஹோ இவ்விருவர்களுடைய விழிகளே, இவன் யானை முதலியவற்றை ஆச்சரியமாய்த் தேடுவதையும் அதேவிதமாய் அவள் தினைத்தானியத்தைக் காப்பதையும் தெளிவாய்க் காட்டுகின்றன. இவள் அவனைப் பார்க்கின்றாள்; அவனும் இவளை உற்றுப்பார்க்கின்றான் என்று அச்சகியானவள் இவ்வல்லீநாயகியை

யும் ஷண்முகனையும் பற்றிக் கொஞ்சமேனும் சந்தேகப்படாமல் நிச்சயித்து மிகுந்த கோபத்துடன் தன்னுடைய வயலுக்கு வேகமாய் ஓடினாள். கேளீர் முனிவர்களே! ஸ்ரீ தேவேசனும் கெஞ்சிக் கெஞ்சிக் கொண்டு அவளைத் தொடர்ந்து துரிதமாய்ச்சென்று, 'கேளாய் பெண்ணரசே! நீ கோபம்கொள்ள வேண்டாம். ஓ சிறந்த வதனமுடைய மானே! உங்களிருவருக்கும் எது வேண்டியதோ அதனைக் கொடுக்கின்றேன். ஆகையால் நீ சீக்கிரமாய்த் தயவு செய்யல் வேண்டும்.' என, அத்தோழியுமவரது வசனத்தைக் கேட்டு ஓ ஐயா, அரசர்கள் வேடக்கன்னிகைகளை விரும்புவதுண்டோ? நீ ரிப்பெண்ணை எவ்வாறு இச்சிக்கின்றீர்? இந்த உத்தமமான பெண்ணானவள் விஷ்ணுவின் வரத்தினாலடையப்பட்ட தேவாமுதமே. இவள் வேடனுடைய தவத்தின் மகிமையால் அவனுக்குப் பெண்ணாய் வாய்த்தனள். என அதற்கு ஸ்ரீ பகவான் ஓ சுந்தரீ! நீ இவளை எந்தனோடு சேர்த்துவைத்தால் மங்களகரம் பொருந்திய அப்பெண்ணை நாளைக்கு நான் சந்தேகமேயின்றிப் படத்திலெழுதி வைத்துப் பார்த்துக் கொண்டிருப்பேனென அப்போது சகியும் அவரது வசனத்தைக் கேட்டதின்பேரில் மொழியுரைத்ததாவது.

'ஓ மானிகளிற் சிறந்தவரே, இப்பேர்க்கொத்த வார்த்தை உமக்குச் சரியல்ல. ஆகிலும் நான் அவளை மிக நேர்த்தியான அத் தோட்டத்திற் கழைத்து வருகிறேன்.' நீர் அங்கு போயிரும். ஆனால் நீர் இப்பேர்க்கொத் தவராய் வேடர்களாற் காணப்பட்டால் உமக்குக் கெடுதி மிகவும் நேரிடும். ஆகையால் நீர் மிகவும் ஜாக்கிரதையாயிரும்.' என்றுரைத்துவிட்டுச் சகியான வள் ஓர் நொடி நேரத்துக்குள் வள்ளியம்மையிடம் வந்து வந்தனித்து அவர் கொண்டிருக்கும் விசேஷமான காதலை யவளுக்கு எடுத்துரைத்து அவ்வழகிய பெண்ணரசை யழைத்து வந்து அத்தோட்டத்தினோர் பக்கத்திலிருப்பித்து விட்டுத் தான் மலர்கொய்யப் போகும் வியாஜமாய் வேறிடம் சென்றுவிட்டாள்.

பிறகு ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்வாமியானவர் அவ்வல்லீநாயகியைப் பார்த்து அங்கு வந்தவுடன் அவள் திடீரென்று எழுந்து மிகக் காமவிகாரம் கொண்டவளாகி அவரை வந்தனித்தாள். அதன்மேல் ஸ்ரீ தேவேசன் அவ்வம்மையைக் கட்டி யணைத்து மொட்டுக்கள் போன்ற இரு கொங்கைகளையும் பிசைந்து கோடு கோடாய் நகக்காயப் படுத்தியவராகி உதடுகளைக் கடித்துக் கொண்டு அவளோடு கலவி தொடுத்தனர். அதன் பிறகு அச்சகியும் மலர்களைக் கொய்துகொண்டே கணத்துக்குள் வந்து அவள் கூந்தலில் அனேகம் மலர்களைச் சூட்டி அவளைத் திரும்பவும் அழைத்துக் கொண்டு தினைகாப்பதற்காக அக்கழனிக்கு வந்துவிட்டனள். ஸ்ரீ வல்லீநாயகியும் ஓகோ நமக்கு இனி எப்போது தான் ஸ்ரீ முருகேசனுடைய சேர்க்கை நேரிடுமோ வென்று மிகுந்த விரகதாபத்தினால் வியாகுலமுற்ற மனதை யுடையவளாயினள்.

பிற்பாடு தினைகள் முற்றிப்போனவுடன் வேடர்கள் வந்து மகாமங்களகரம்பொருந்திய வல்லீநாயகியை வீட்டிற் கழைத்துப் போனார்கள். அவள் தோழியும் வீடுசென்று விட்டாள். ஓகோ கேளீர் பிராம்மணோத்த

மர்களே! அதன் பிறகு ஒளி பொருந்திய வள்ளியம்மையானவள் போகும் போது அங்கு செல்லலுற்ற பறவைகள் மரங்கள் மலைகள் இன்னும் மற்ற மிருகங்கள் இவைகளுக்கெல்லாம் தான் போகுதலைச் சொல்லிக் கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தாள். பிறகு அவ்வம்மையானவள் மன்மதனால் பிடிக்கப்பட்டவளாகி ஸ்ரீ வடிவேலனை நினைத்துக் கொண்டே பந்தடித் தலையும் பெண்களுக்குரிய இன்னும் மற்ற விளையாட்டுகளையும் ஒழித்துவிட்டு காமவசப்பட்டவளாகி மிகவும் மனத்துபரமுற்று மூர்ச்சை யடைந்தனள். அதன்மேல் அவள் தாய் முதலியவர்கள் அவளைச் சுற்றிலும் சூழ்ந்து கொண்டு இவளுக்கு ஏதோ அவேசம் கொண்டிருப்பதாய் ஆலோசித்து அதை விலக்கு வதற்காகக் குலதெய்வமான ஸ்ரீ குமரேசனை மிக உபசாரத்தோடுநைவேத்தியம் முதலியவைகளால் சந்தோஷிப்பித்தார்கள். கேளீர் முனிவர்களே! அதன் பிறகு அவள் வளர்ப்புத்தாயின் பேரிலாவேசம்வந்து, ஓகோ அளவற்ற பராக் கிரமத்தைக்கொண்ட வடிவேலனுடைய சேர்க்கை இவளுக்குண்டாகிவிட்டது என, உடனே அவ்வள்ளியம்மையானவள் ஸ்ரீவடிவேலன் திருநாமங்களைக் கேட்டவுடன் திடுக்கிட்டு வேகமாயெழுந்தனள். பிற்பாடு வேடர்களும் பழுக் கலான தினைத் தானியங்களை யறுத்துப்போய் விட்டார்கள்.

இப்படி யிருக்கையில் ஸ்ரீ சண்முகரும் அக்கழனியிற் போய்ப்பார்த்த தில் தமது நாயகியைக்காணுமல் மிகவும் விரகதாபம் கொண்டவராகி இங்குமங் கும் தேடிப்பார்த்து மலைகள் மரங்கள் அரணியங்கள் மிருகங்கள் வாவிகள் கிணறுகள் குளங்கள் முதலியவைகளை எல்லாம் ஆ! என் பிராணநாயகி எங்கே போயினள்? என்று கேட்டுக்கேட்டு பிரயோஜனப்படாமல் மாலையில் சூரியன் அஸ்தமனமானதின்பேரில் இரவுதனிற் ஸ்ரீ பார்வதி புத்திரனுனவன் அவ்வள் ளியம்மையின் வீட்டுப் பின் புறத்தில் போயிருந்து கேளீர் வேதோத்தமர் களே! அவ்வழகினள் எப்போது அங்குவருவாளென்று காத்துக் கொண் டிருந்தார். அச்சமயத்தில் அவள் சகியானவள் அங்கு வரலாகி ஷண்முகனைக் கண்டு, ஓ ஐயா! நீர் அவரோடு இங்கு புணருவதற்கு இடமுண்டாகமாட்டாது. ஏனென்றால் அப்பெண்ணோடு இவ்வீட்டில் தானே சுரதஞ்செய்வது கிரம மில்லையன்றோ? அவளை வேறு எங்காவது அழைத்துப் போய்விடும் என்று உரைத்து விட்டுச் சகியானவள் வீட்டுக்குள் அவளிடம் வந்து அவள் தாய் தந்தை முதலான எல்லோரும் தூங்கி விட்டதை அறிந்து கொண்டு ஒர்கண நேரத்திற்குள் அவளை அழைத்துப் போய்க்கதவை திறந்து கொண்டு சர வணபவன் சந்நிதியிற் சேர்ப்பித்துவிட்டு, கேளீர் வேதோத்தமர்களே! அச் சகியானவள் ஸ்ரீகந்தனைநோக்கி "ஓ ஐயனே நீர் வேடர்களாற்காணப்பட்டால் மிகவும் துன்பப்படலாவீர். ஆகையால் நீர் இவளை ஜாக்கிரதையாய்ப் பார்த் துக்கொண்டு வேறிடத்திற்குப் போய்விடும்" என்று அவளுடைய இருகை களையும் பிடித்து பரமாத்துவான ஸ்ரீ முருகேசன் கைகளில் ஒப்புவித்த தன்பேரில் அவரால் பற்பல உபசாரங்கள் செய்யப்பெற்றவளும் உள்ளத் தில் மிகவும் களிப்புற்றவளுமாகி துரிதமாய் வந்தனித்து வள்ளியம்மை யைக் கட்டி யணைத்துவிட்டுப் பிறகவர் அனுமதி பெற்று வீடு சேர்ந் தனள்.

பிறகு அவ்வள்ளிநாயகியும் மிகுந்த துணிவுடன் அக்காடாந்தகாரத்தில் ஸ்ரீ வடிவேலனை வந்தனித்து, ஓ சுவாமி! கருணை வசத்தினால் அடியேனை ரக்ஷிப்பதற்காக தேவரீர் இங்கு எவ்விதம் வரலானீரென்று மிகுந்த நேசத்தோடு மனதைத்திருப்பலுற்ற மொழிகளால் உரைக்கலானதை அக்குக பிரான்கேட்டு மிக்கச் சந்தோஷம் கொண்டே தலையாரிகளால் பார்க்கப் படாமல் தூரத்திலுள்ள ஒருபெரிய தோட்டத்திற்கு அவளுடன் சென்றுகலவி நூற்களில் மிக்கத்திறமை கொண்ட அக்கந்தபிரான் அவளோடும் புணர்ந்தனர். பிறகு அவ்விரவு கழிந்தவுடன் அவ்வள்ளியம்மனுடைய தாயாரானவள் எழுந்து பக்கத்தில் பார்த்ததில் பெண்ணைக் காணாமல் மிகுந்த பரபரப்போடு அவளுடைய தோழியிடம் சென்று 'வல்லீ எங்கே' என்று வினவ அவளும் ஓ அம்மா! அதிகாலையிலேயே அவள் எந்தனாற் காணப்படவில்லை என்றனள்.

கேளீர் கரணி தேவர்களே! இதனாற் பட்டணமுழுதும் கூக்குரலுண்டான போது வேடத்தலைவனும் மகா கோபம் கொண்டவனாகி அவளைத்தேடுவதற்காக மற்ற வேடர்களோடு வெளியிற் புறப்பட்டு, ஓ கோ உயிர் வைத்துக் கொண்டிருக்கின்ற மானிடரில் யாவர் தான் நமது பெண்ணைத் திருடிப்போய் உயிர்வைத்து இருக்கின்றார்கள் என்று அங்குள்ள பல மார்க்கங்களில் கொடியர்களான அநேக வேடர்களை அனுப்பித்தாலும் நேர்த்தியான வனங்கள் மலைகள் நதிகள் இவ்விடமெல்லாம் சுற்றிப் பார்த்துக் கொண்டு பகவான் கேளிசெய்கின்ற மரத்தோப்புக்கு வந்தான். அப்போது அவ்வேடர்களைக் கண்டவுடன் வல்லியம்மையானவள் பயத்தினால் நடுக்கம்கொண்டவளாகி ஓ தேவாதிதேவா! வேடரெல்லாமிங்கு ஆயுதபாணிகளாய் வருகின்றார்களே, எந்தனைக் காப்பாற்றவேண்டுமென்று உரைத்து தன்டம்பண்ணலான அப்பெண்ணை ஸ்ரீஷண்முகன் திருக்கண்ணுற்று, சற்றுப்புன்னகையையுடைய திருமுகத்தைக் கொண்டவராகி, 'ஓ நமது நாயகியாகிய பெண்ணரசியே! நாமிருக்குமளவும் நீ பயப்படல்வேண்டாம். நமக்குச் சண்டை செய்யத் திறமையிருக்கின்றது. நீ நமது பின்பக்கத்திலேயே யிரு என்று அவர் உரைக்கலான திருவசனத்தை அவ்வம்மை கேட்டுக் கொண்டு அவர் பின்புறத்திற்குப் போகும்போது அப்போதே அவர்கள் நெருங்கிவந்து இவன் தான் பெண் திருடியென்று மகாகோபத்தோடு கொடியவார்த்தைகளைப் பிதற்றிக்கொண்டு அவர்மீது அநேக அம்புகளைச் சொரிந்தார்கள். அப்போது வல்லீதேவியும், பயத்தினால் மிகவும் நடுக்கம்கொண்டவளாகி ஓ பிராணநாதா! மகா பலசாலிகளான இவர்களைச் சமுகரித்துப் பயத்தினின்று விடுவித்து எந்தனைக் காப்பாற்றவேண்டுமென்று சகல ஜீவராசிகளுக்கும் சௌக்கியத்தையேயருள முயன்றவரான அத்தேவரிடமுரைத்தனள். அப்போதது கேட்டு ஸ்ரீ பார்வதிமைந்தரானவர் தமது கோழியை நினைத்தருள அது உடனே வெகு வேகமாய் வந்து மிகுந்த சத்தமிட்டது. பிரளய காலமேக கர்ஜனைக்கு நிகரான அப்பெரும் சத்தத்தைக் கேட்டு அவ்வெல்லோர்களும் பெரிய பயத்தினாற் பிடிக்கப்பட்டவர்களாகிப் பூமிதனில் விழுந்துயிர்களை யிழந்தார்கள்.

## 5. அத்தியாயம்.

அப்போது ஸ்ரீ தேவநாதன் எல்லா வேடர்களையும் அதம் செய்து விட்டு வெளியே புறப்படுகையில் கேளீர் முனிவர்களே! வல்லீநாயகியும் தந்தையைப் பற்றித் துக்கமுடையவளாகி வஸ்திரத்தினால் திருமேனி முழுவதும் போர்த்திக் கொண்டு அம்முருகேசனைப் பின் தொடர்ந்தாள். அச்சமயத்தில் தவசிகளிற் சிறந்தவராகிய பிரம்மன் மைந்தனான ஸ்ரீ நாரதமுனிவர் நடுவழியில் வந்து திருவிளையாடல் நிமித்தமாய் மானிட உருவம் கொண்டிருந்த அவ்வடி வேலனை வந்தனித்து வரலாறுகளையெல்லாம் ஆதியோடந்தமாய்க்கேட்ட பிறகு தேவேசனைக் கேட்டுக்கொண்டதாவது:—'ஓ சுவாமி! இவ்வம்மையின் தந்தை முதலிய இறந்துபோன இவ்வெல்லா வேடர்களையும் பிழைப்பித்தருளும். ஓதேவரக்ஷகா! பிறகு சகல கலியாண வைபவங்களோடு வல்லீதேவியை முறைப்படி கலியாணம்செய்துகொள்வீர்' என்ற அவரது வசனத்தைக் கேட்டு ஸ்ரீ நாரதமுனிவரால் உபசாரத்தின்படி நடத்தவேண்டிய விருப்பத்தோடு திரிப்பிடப்பட்டவராகி ஸ்ரீ பகவான் ரூபலாவண்யமுடைய வள்ளியம்மையை நோக்கியவாராய் பெண்ணரசே! இப்போது நமது திருவாக்கின்படி இறக்கலான உனது தந்தை முதலிய எல்லா வேடர்களையும் நீதானே தயவுகொண்டு உந்தன் விழிகளாற் பார்த்து எழுப்பலாவாய் என, உடனே ஸ்ரீ முருகேசன் ஆசைநாயகியாகிய அவ்வம்மையும் அவ்வாறுகவே எல்லோரையும் பிழைப்பிக்கச் செய்தனள்.

ஓ தரணி தேவர்களே! உடனே அவ்வேடர்களெல்லாம் தூக்கத்தினின்று எழுந்திருப்பவர்கள்போல் எழுந்து கேளீர் தரணி தேவர்களே! திருவிளையாடல் நிமித்தமாய் மானிடவுருவம் கொண்டிருந்த அப்பகவான் சில காட்சி தந்தருளினர். அப்போது தேவசேனைக்கு மணவிபரும் ஆறுமுகமும் பன்னிரண்டு கைகளும் நுகத்தடிபோல் நீண்டதும் கற்பகமலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும் சிரேஷ்டமுமான பன்னிரண்டு புயங்களையுடையவரும் அகண்ட மார்பையும் பருத்த கழுத்தையும் உடையவரும் மனதிற் கெட்டாதவரும் தமக்குமேலான உத்தமரற்றவருமான அவ்வடிவேலனைக்கண்டு, வேடர்கள் தோத்திரம் பண்ணி சுற்றிலும் சூழ்ந்து கொண்டு, ' ஓ தேவாதி தேவா! தேவரீரால் மரியாதையுள்ள நாங்கள் இவ்வாறு அடக்கப்பட்டால் எங்கள்குலத்திற்கு மிக அபகீர்த்தி உண்டாகுமல்லவா? ஓ சகல ஜனங்களையும் காத்தருளும் ஜகதீசா! ஆகையால் தேவரீர் முறைமைப்படி பெண்ணை மணம்புரியலாவீர். என்று விண்ணப்பமிட்டுக்கொண்டார்கள். சகல ஜனங்களும் பராபர குருவான இக்குமரேசனை வந்தனித்தார்கள். பிறகு தேவசேனன் அவர்கள் வார்த்தையை அங்கீகரித்துக் கொண்டு வேடர்களால் குடியேறப்பெற்ற அவ்வேடச்சேரிக்கு ஸ்ரீநாரதருடன்சென்று கேளீர் பிராமணோத்தமர்களே! அவர்களால் போடப்பட்ட புலித்தோல் ஆசனத்தில் வீற்றிருந்தனர். மேலும் அப்போது பாம்பானது பழைய சட்டையை உரித்ததுபோல மானிட உருவத்தை நீக்கிச் சிறந்ததோர் உருவத்தோடு சிரேஷ்டமான அவ்வாசனத்தில் உட்காரலானார். அவ்வல்லியம்மையையும் அவர்கள் காஷிகொண்டார்கள். கேளீர் முனிவர்களே!

அப்போது வேடத்தலைவனானவன் கையினால் ஜலத்தை எடுத்துக் கொண்டு சிரேஷ்டமான மாப்பிள்ளையாகிய அவ்வடிவேலனுக்கு முறைப்படி தாரை வார்த்தான். அப்போது முறைப்படி நாரதர் அக்னிச்சடங்குகள் செய்தனர். அச்சமயத்தில் ஸ்ரீமகாதேவன், பிரமன் விஷ்ணு முதலிய தேவர்கள் தமது பாதாரவிந்தங்களை துதிக்கப் பெற்றவர்களாகி ஸ்ரீ பார்வதியம்மையோடு கூடி ஆகாயத்தில் எழுந்தருளி அங்கிருந்தபடியே திருமணக் கோலம் கொண்டிருந்த குமரேசனையும் வல்லீநாயகியையும் நோக்கியருளினர். அப்போது ஸ்ரீ வடிவேலனும் தன் மனைவியோடு கூட விரைந்தெழுந்து அவரை நமஸ்காரம் பண்ணினர்.

விஷ்ணு முதலான தேவரெல்லோரும் அச்சரவணபவன்மேல் பூக்களைச் சொரிந்து விட்டு வல்லீ சுப்ரமண்யரான தம்பதியை தண்டம் பண்ணினர்கள். உடனே ஸ்ரீமகா தேவன் அத்தேவோத்தமர்களோடு மறைந்தருளினர். பின்னர் வேடர்தலைவன் மற்றைய வேடர்களோடும் பெண்டீர்களோடும் ஸ்ரீ வடிவேலனை, வந்தனித்து உள்ளத்தில் மிகுந்த சந்தோஷங் கொண்டான். வேடத்தலைவனும் ஸ்ரீ சுப்ரமண்யர் மீது மலர்களைச் சொரிந்தான். ஸ்ரீ முருகேசன் இவ்வாறு பற்பல உபசாரங்களாற் போற்றப்பட்டவராகி மகா மங்களகரமான ஸ்ரீ பரிபூரணகிரிக்குப் புறப்பட்டு மங்கைமார்களுடன் கூடப்புறப்பட்ட வேடர்களையும், வேடத்தலைவனையும் அப்பட்டணத்திற்குத் திரும்ப அனுப்பிவிட்டுத் தாம் வள்ளிதேவியோடுகூட அம்மலைக்கு விஜயமாகி அங்கு விசுவகர்மானால் அமைக்கப்பட்ட இரத்தினங்களின் ஒளிகளால் நிறைந்த நேர்த்தியான சிங்காதனத்தில் தேவி யோடுகூட வீற்றிருந்தனர். அப்போது தேவியானவள் என்றும் அழிவற்றவரான ஸ்ரீ குகபிரானை நமஸ்கரித்து, ஓ சுவாமி இம்மலையின் பெயரென்ன? இதன் மகிமை இவ்வாறு என்பதையும் உரைத்தருளவேண்டும் என, அதற்குப் பகவான் கேளாய் பெண்ணே! இம்மலையானது ஸ்ரீதேவியால் என்றும் நிலைத்திருக்கிறபடியால் ஸ்ரீ பரிபூரணகிரியெனவும் இங்கு நம்மால் சிலர் யுத்தத்தில் மடிக்கப்பட்டபடியால் யுத்தகிரியெனவும்படும். மேலும் இது ஸ்ரீ காஞ்சிபுரத்திற்குச் சமீபத்தில் இருப்பதால்தான் அக்காஞ்சியானது புண்ணிய தீர்த்தங்களில் கங்கையைப் போலும், சகல மலைகளிலும் கைலைகிரியைப்போலும் எல்லாப் புண்ணிய ஸ்தலங்களில் மிக்க மேன்மைகொண்டதாகின்றது. பூர்வத்தில் இந்திரன் இம்மலைதனில் தமது திருப்திக்காக மிக்கப் பரிமளம் பொருந்திய செழித்த செங்கழுநீர் மலர்கள் முச்சந்திகளிலும் மலரப்பெற்றதும், மிகத் தெளிவான சுத்த ஜலத்தினால் நிரம்பப்பெற்றதுமான கல்ஹார என்ற ஒரு தடாகத்தை வெட்டி காலை உச்சி மாலை என்ற மூன்று காலங்களிலும் இங்கெம்மைபூசித்து மகாமங்களகரமான இம்மலைதனிலே அவன் தனது கோரிக்கையைக் கைக்கொள்ளலானான். அன்றியும் என்றனை எவர் இம்மலைகளில் தரிசிக்கின்றார்களோ அவர்கள்செய்திட்ட பாவங்கள் எல்லாம் உடனேதொலைந்துவிடும் என்பதில் சந்தேகம் இல்லை. யாதோர் மானிடன் சிறந்த தடாகத்தில் ஸ்நானம் பண்ணி நம்மை பூஜிக்கின்றானோ அவன் நமது கிருபையை பரிபூர்ணமாய்க் கொண்டவனாக நமது லோகத்தை அடைகின்றான். மேலும் இவ்விடத்தில்

ஐம்புலன்களையும்வென்று யாவர் நம்மை ஐந்து தினம் தியானிக்கின்றார்களோ அவர்கள் வேண்டிய பொருள்களை எல்லாம் கைக்கொண்டவர்கள் ஆகின்றார்கள். முடிவினில் மோக்ஷ சாம்ராச்சியம் பெறுகின்றார்கள். சிரேஷ்டமான இம்மலைதனைக் கண்டுவிட்டு வந்தனம்பண்ணு மானிடக் கேடருக்கு அவர்களால் சம்பாதிக்கப்பட்ட புண்ணியங்கள் கூட பாவத்தின் பயனையே கொடுக்கலாகும். மஹா பாதகர்களானாலும் யாவர் இச்சிறந்த மலையை வந்தனிக்கின்றார்களோ அவர்கள் அப்பாதகங்களை உதறி விட்டுப் பிரஹ்ம விஷ்ணு முதலியவர்களால் வந்தனிக்கபெற்ற நமது சிறந்த பதவியை அடைகின்றார்கள். இதனில் யாதோர் ஆக்ஷேபணையும் இல்லை. மானிடர்களால் இவ்விடந்தனில் நன்றாய்ச் செய்யப்பட்ட ஓர் கருமமானது அநேகம் பயன்களைக் கொடுக்கலுற்றதாகும். இதைச் சத்தியமாகச் சொன்னேமே யன்றி வேறில்லை. மஹா மஹா கோரமான பாவங்களும் இங்குத் தொலையலாகும் என்றார்.'

பரமாத்மாவான ஸ்ரீ குஹபிரானுடைய இவ்வித வசனங்களைக்கேட்டு அம்மையாரும் புன்னகையுடைப முகத்தை உடையவளாகி மிகவும் பிரீதி கொண்டவளானாள். பிறகு ஸ்ரீ தேவநாதர் அங்குசிரேஷ்டமான ஓர் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைபண்ணி திரிபுமெரித்தோனாகிய ஸ்ரீ மகேசுவரனைப்பூசை செய்து அவருடைய தயவினையும் கைக்கொண்டு ஓ ! முனிவர்களே ! இவ்வுத்தமகிரிதனில் சிலகாலம் வசித்தருளிவிட்டு ஸ்ரீ தேவேசன் வல்லீ தேவியோடு கூடத் தமது திவ்விய விமானத்திலேறிக்கொண்டு நேர்த்தியான கந்தகிரிக்கு விஜயமாகி விமானத்தினின்று இறங்கிக்கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தேவியோடு கூடத்தமது திருமாளிகையில் அந்தப்புரத்துக்குச் சென்றருளினர். அப்பொது அங்கு ஸ்ரீ தேவசேனையம்மை யெதிர்கொண்டுவந்து அத்தேவாதி தேவனை வந்தனிக்க அவர் நேசத்தோடவளை நோக்கி மிகுந்த சந்தோஷத்தோடு கிருபை செய்தனர். பிறகு மகா மங்களகரமான ஸ்ரீ வள்ளி நாயகியும் அத்தேவ சேனையை நமஸ்காரம் பண்ண, அப்போது அவள் மிகுந்த நேசம் கொண்டவளாகி அவளை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு மந்தஹாசத்தோடு ஓ அம்மா குழந்தாய் ! நீ எந்தனுக்கு ஓ நல்ல துணையாக வாய்த்தா யல்லவா? என்றனள்.

பிறகு கந்தரானவர் ஒருவரோடொருவர் நேசம் கொண்டிருந்த அவ்விருவர்களுடனும் சிங்காதனத்தி லுட்கார்ந்தவுடன்; தேவசேனையம்மை, தமது என்றும் அழிவற்ற கணவரான ஸ்ரீகந்தபிரானை நோக்கி வள்ளியம்மையுடைய விருத்தாந்தத்தை ஆதியோடந்தமாய் விளங்கக்கூறும்படி. வணக்கமாய்க்கேட்க பகவான் சொல்லுகின்றார். கேளாய் சிறந்தவதனமுடைய மாதே, முந்தி நீங்கள் இருவரும் உபேந்திரரான விஷ்ணுவின் பெண்களாயிருக்கையில் நம்மைத் திருமணம்செய்து கொள்வதைவேண்டி மிகுந்த தவம்செய்தீர்கள். அத்தவத்தினால் யாம் களிப்புற்றவராகி இந்த வள்ளியைப் பூதலத்திலும் உந்தனை இந்திரனிடத்திலும் உற்பத்தியாகும்படி யாமாக்கினை செய்ததின்பேரில் நீங்கள் அவ்வாறே உற்பத்தியானீர்கள், யாமுமப்படியே இந்திரன் புதல்வியான உந்தனை விதிப்படி

மணம்புரிந்து கொண்டோம். முந்தி இப்பெண்ணேவென்றால் அக்கினிதனில் அத்தேகத்தைவிட்டுப் பிறகு சூக்ஷ்ம வுருவத்தைக் கொண்டவளாகி காஞ்சீ புரத்துக்குச் சமீபத்திலுள்ள வள்ளியென்ற ஓர் நேர்த்தியான மலைமீது நம்மிடத்து மிகுந்த நேசத்தைக் கொண்டு எம்மையே மனதில் தியானித்துக் கொண்டிருந்தனள். இப்படி யிருக்கையில் விஷ்ணுவானவர் கண்ணுவ முனி வரின் சாபத்தினால் சிவ முனியென்ற பெயர் கொண்டவராகி அங்கு ஓர் வனத் தின்கண்ணுள்ள ஓர் நதிக்கரையில் கொடுந்தவத்தைச் செய்து கொண்டிருந் தனர். அப்போது இலக்குமியும் ஓர் மானுருவங் கொண்டவளாகி அங்குவர லுற்றனள். அப்போது அம்முனிவர் அம்மானைக்கண்டவுடன் காமாதுரராகி மோகம்கொள்ள அப்போது அவ்வழகிய மங்கையானவள் அம்மானிடமிருந்து அங்குள்ள (வள்ளிப்) புதரினில் ஜனித்தபடியால்தான் இச்சுந்தரியானவள் இப்பெயரினால் இவ்வுலகினில் வழங்கிவரப்படுகின்றாள். மேலும் உபேந்திரனும் கண்ணுவ முனிவரின் சாபத்தினால் வேடர்குலத்தில் சனிக்கலானான். பிறகு அவ்வேடச் சிரேஷ்டன் அப்பேர்க்கொத்த வள்ளியைப் பார்த்தவுடன் மக்க ளில்லாதவன் ஆகையால் அக்குழவியை எடுத்துத் தன் மனைவியிடம் கொடுத் தனன்.

ஒ கேளாய் பிரியநாயகி அப்பேர்க்கொத்த வள்ளியை யாம் மணம்புரிந்து பிறகு அவளுடன் ஸ்ரீ பரிபூர்ணமென்ற கிரிதனிற் சிலகாலமிருந்துவிட்டு பிறகு இவளோடுகூட உந்தனிடம்வந்து சேர்ந்தனம். என அது கேட்டக் கஜநாயகி யும் மிகுந்த களிப்புற்ற மனதைக் கொண்டவளாகி ஒ கருணாமூர்த்தியான தேவாதிதேவா! அங்கங்கேயிருந்துகொண்டிருந்த இவ்வெந்தனையும் பெண்ணை யும் ஓரிடத்திற் சகோதரிகளாய்ச் சேர்த்து வைக்கலானீரே என்று அவளு ரைத்தன்பேரில் வல்லீயம்மையானவள் கஜநாயகியை நோக்கி, ஒ அக்கா உமது தங்கையாகிய எந்தனை இது முதல் எப்போதும் நீர் பாதுகாத்திடல் வேண்டு மென்று சொல்லிவிட்டுத் தண்டம் பண்ணுகையில் அப்போது தேவசேனையும் அவளைக்கட்டியணைந்து கொண்டு ஒ குழந்தாய்! நீ தான் எந்தனுக்கு மிகவும் அந்தரங்கமான தோழி. மேலும் உந்தனால்தான் ஸ்ரீ சுப்பிரம்மணியருடைய கிருபையானது எந்தன் மீது பரிபூர்ணமாய்ச் செய்விக்கப்பட்டது. ஆகையால் யான் இப்போது கிருதார்த்தையாகிவிட்டேன்; என்றுகேளீர் பிராம்மணோத் தமர்களே! அவ்விரண்டு தேவிமார்களும்ஒருவரோடொருவர்பேசிக்கொண்டே ஸ்ரீ குஹபிரானுடைய பாரிசங்களிலிருந்து விளங்கி வந்தார்கள். தவிரவும் ஸ்ரீ வடிவேலன் திருவாக்கினையின்படி மயில் கோழி, மனோவேகமுடைய விர தம், ஆட்டுக்கடா வேலாயுதம் விமானம் இவையெல்லாம் அக்கந்தகிரிதனிலே யிருந்து வந்தன. ஸ்ரீ சுப்பிரம்மணியரோவென்றால் பற்பல உபசாரங்கள் செய்யப்பெற்றவாகி இருதேவிமார்களுடனும் சிரேஷ்டமான சிம்மாசனத்தில் வீற்றிருந்து விளங்கலாயினர். கேளீர் பிராம்மணோத்தமர்களே! உங்களால் கேட்கப்பட்ட ஸகல தேவச்சிரேஷ்டர்களுக்கு மீசுவரனான ஸ்ரீ ஷண்முகனு டைய சரித்திரம் யாவும் இவ்வாறு ஆதியோடந்தமாக எடுத்துச் சொல்லப் பட்டது. மேலும் உங்களுக்கின்னும் இங்கு கேட்க விருப்பமுள்ள சகல விருத் தாந்தங்களையும் எடுத்துரைக்கின்றோம்.

## 6. அத்தியாயம்.

சௌனகாதி முனிவர்கள் சூதரைக்கேட்கின்றதாவது: ஓ சூதமுனிவரே! ஸ்ரீ சுப்பிரம்மணிய பரமாத்துமாவினுடைய திருக்கலியாணத்துக்கு முசுகுந்த சக்கிரவர்த்தி என்ற ஓரரசன் வந்தனரென்று முந்தி உம்மாற் சொல்லப் பட்ட தன்றோ? அவர் யாவரென்பதை யெடுத்துரைக்க வேண்டும் என சூதர் சொல்லுகின்றார். ஓ பிராம்மணோத்தமர்களே! அவ்வரசனைப்பற்றி யானுரைக் கலாவதை நீங்கள் கவனமாய்க் கேட்க வேண்டும். பூர்வத்தில் ஸ்ரீ பார்வதீ பர மேசுவரர்கள் கைலையின் கொடி முடி மீதுள்ள சிங்காரத் தோட்டத்தைப் பார்த்தருளிக் கொண்டோர் வில்வ மரத்தடி மேடையில் உட்கார்ந்திருக்குமள வில் அப்போது முகத்திற் கறுப்புடைய மகாவலிமைகொண்ட ஓர் குரங்கானது (கொண்டை முசுர்) தம் மரத்தில் ஏறிக்கொண்டு மகா சந்தோஷத்தோடு அவ் வில்லபத்திரங்களைப் பறித்து மிகுந்த பக்தியுடனவர்கள் மீது மிகுதியாய்ப் போடலாகையிற் ஸ்ரீ பார்வதியம்மையானவள் இதென்ன வென்று அம்மரத் தைப் பார்க்கும்போது அம்மரத்தின் பேரிலிருந்த அக்குரங்கைக் கண்டவுடன் கோபாவேசம் கொண்டவளாகி அப்போது அவ்வம்மையானவள் அதன்சேஷ் டையை ஸ்ரீ மகாதேவனுக்கு அறிவிக்க அப்போது ஸ்ரீ ஜகதீசன் அம்மையை நோக்கி, கேளாய்பார்வதி! இது நம்மீது மிகுந்தபக்தியுடைதாகுமென்று வசன மளித்து சிரேஷ்டமான குரங்கைக் கூப்பிட அது உடனே வந்து ஸ்ரீ மகேசு வரனைத் தண்டம் செய்தது.

அப்போது ஸ்ரீ பார்வதீநாதனும் மிகுந்த கருணை கொண்டவராகி ஓ குரங்கே! நீ வில்வ பத்திரத்தினால் எம்மை யார்ச்சித்தபடியால் சீக் கிரமாய்ப் பூமிதனில் சகல பூபாலர்களுடைய முடிகளும் உன்னடிதனில் விழப்பெற்ற ஓர் சிறந்த சக்கிரவர்த்தியாகி முடிவினில் இக்கைலாசத்துக்கு வந்து, கிடைப்பதற்கு மிகவும் அசாத்தியமாகிய நமது கணத்தலைவர் பதவியை அடைந்து மஹா சந்தோஷத்தோடு வாழக்கடவாய் என்று அதனை நோக்கித் திருவாக்கருளுகையில் அப்போது குரங்காயிருந்த முசுகுந்தன் ஸ்ரீ மஹா தேவனை நோக்கி "ஓ தேவாதிதேவா! கருணாமிருதக் கடவுளே! ஸகல புவனங்களையும் காப்பவரே! தேவரீர் அடியேனை இவ்வென்றனக்குப் பிறப் புண்டானால் அப்போது நிச்சயமாக அஞ்ஞானம் மேலிட்டுவிடும். ஆகையால் எனக்கிதே முகத்தைக்கொண்ட ஒருருவம் உண்டாகும்படி அருள்செய்து என்னை மிகுந்த சந்தோஷத்தோடு காப்பாற்ற வேண்டும்." என்று ஸ்ரீ பக வானை அருள்புரிவிக்கும்படி செய்து கொண்டதன்மேல் அரிச்சந்திர ராஜனு டைய வம்சத்தில் ஜனித்துப் பிறகு ஸ்ரீ வடிவேலனுடைய திருக்கல்யாண காக்ஷியைக் கண்ணுற்று ஸ்ரீ சுப்ரமண்யன் மீது சிறந்த பத்தியைக் கொண்ட வராகி என்றும் எல்லாத் தேசங்களிலும் முசுகுந்த சக்கரவர்த்தி என்று புகழ்பெற்றிருந்தார். அவர் தவசிகளிற் சிறந்தவரான வசிஷ்டமா முனிவ ரிடமிருந்து ஸ்ரீவடிவேலனுக்குரிய சிறந்த விரதங்களை யெல்லாம் செவியுற்று, அவைகளைக் கிரம்பப்படி மிக ஆதாவோடு அனுஷ்டித்து வந்தார் என அப் போது சௌனகாதி முனிவர் கேட்டதாவது, "ஓ சூத முனிவரே! முசுகுந்த ரென்ற ராஜசிரேஷ்டன் முனிவரிற் சிறந்த வசிஷ்ட முனிவரிடமிருந்து

கேட்டு மஹா சந்தோஷத்தோடு விரதங்களை அனுஷ்டித்து வந்தார் என்றீரே! அவைகளில் என்னென்ன விரதங்களை எவரெவர் அனுஷ்டித்திருக்கிறார்கள் என்பதை எங்களுக்கு இங்கெடுத்துக்கூறல் வேண்டும்'' என சூதர் கூறுகின்றார்.

''கேளீர் தரணி தேவர்களே! பூர்வத்தில் மஹா தர்மிஷ்டியாகிய பகீரதன் என்றோர் அரசன் இருந்தான். அவன் கோரன் என்ற ஓர் அரக்கனால் போர்தனில் முறியடிக்கப்பட்டு, அத்தேசத்தை இழந்தவனாகி மிகுந்த பயத்தினால் குடும்பத்தோடு காட்டுக்கு ஓடிவிட்டான். அவனது ராஜ்யமானது, அவ்வரக்கன் வசமாயது. அவ்வரசன் காடுசென்று பிருகு மாமுனிவரிடமிருந்து ஸ்ரீ முருகேசனுக்குரிய விரதத்தைக்கேட்டு மிகுந்த பக்தியோடு கூட வெள்ளிக்கிழமை தினத்தில் முறைப்படி ஸங்கல்பம் செய்து கொண்டு மூன்று வருடகாலம் சிரேஷ்டமான அச்சுக்கிரவார விரதத்தை அனுஷ்டித்து வந்தான். பிறகு சில காலத்துக்கெல்லாம் தேவாதி தேவனாகிய ஸ்ரீ குஹபிரானுடைய அழிவற்ற திருவேலானது அந்தங் கோர ராக்ஷஸனைக்கொன்று விட்டது. பகீரதன் வெகு ஸந்தோஷத்தோடு தன் அரசாக்ஷியை அடைந்து முன்போல எதிரியற்று மஹா ராஜனாய்ச் சகல ராஜ்யங்களையும் பரிபாலனம் செய்து வந்தான்.

ஆகையால் ஸ்ரீ கந்தபிரானுடைய சுக்கிரவார விரதமானது வேண்டிய பயனைக் கொடுக்கவுற்றதாகும். மேலும் முனிவரிற் சிறந்த நாரதமுனிவர் கார்த்திகை நக்ஷத்திரத்தில் சிரேஷ்டமான விரதத்தை முறைப்படி யனுஷ்டித்துத்தான் முனிவர்க்கெல்லாம் சிரேஷ்டராயினர். தவிரவுமோர் வேதியர் அதே கார்த்திகை நக்ஷத்திரத்தில் வெகு ஸந்தோஷத்தோடு விரதத்தை யனுஷ்டித்து வந்து பிறகு அவர் மகாலக்ஷ்மி விலாசத்தோடு கூடிய மனு சக்கரவர்த்தியாகி இப் பூமிதனையாண்டு வந்தார். மேலும் மற்றோர் பிராமணரும் கார்த்திகை நக்ஷத்திரத்தில் உத்தமமான அவ்விரதத்தை முடித்து திரிசங்குவென்ற பெயரோடு ராஜாதி ராஜனாகி யுலகினையாண்டு வந்தார். தவிரவும் மற்றவிரண்டு பிராம்மண சிரேஷ்டர்கள் ஸ்ரீ சுப்பிரமணியர் மீது மகா பக்தியுடையவர்களாகிக் கார்த்திகை நக்ஷத்திரத்தில் சாஸ்திர முறைப்படி அம்மகா விரதத்தை யனுஷ்டித்து அந்நிதிமனென்றும் வஸந்திமனென்றும் இரண்டு பெயர் போன அரசர்களாகி யிராஜ்யத்தைப் பரிபாலித்து வந்து ஸ்ரீ கந்தபிரானது திருவருளாலே முடிவினில் மோக்ஷமடைந்தார்கள். இன்னும் கந்தசஷ்டி விரதமென்று மற்றோர் விரதம் மூவுலகினில் பிரசித்தி பெற்றிருக்கின்றது. முந்தி தேவர்களும், தவத்தையே தனமாய்க்கொண்ட முனிவர்களும் அவ்விரதத்தை யனுஷ்டித்து வந்தபடியால் அசுர பயத்தினின்று விடுபட்டு முன்போல தங்கள் தங்கள் பதங்களை அடைந்தார்கள்.

பெரிய மனதையுடைய முசுகுந்த சக்கிரவர்த்தியும் ஸ்ரீ குஹ பிரானிடத்திலே, மனதை நாட்டிக் கொண்டு விரதங்களைக் கிரமப்படி யனுஷ்டித்து வருகையில் ஸ்ரீகுஹபரமாத்துமாவானவர் தாமே நேரில் அவர்முன்னர்தோன்றலாகி ஓ ராஜசேகர! உமக்கு வேண்டியவைகளைக் கொடுக்கின்றோம். அவைகளைச் சொல்வீரென்று திருவாக்கருளி அப்பகவான் திருவடிகளில்தண்டம்போல்பூமி

யில் வந்தனித்துப் பற்பலதுதிகளால் தோத்திரம்பண்ணி கேளீர்முனிவர்களே! அவர் வேண்டிக்கொண்டதாவது: ஓ கருணைக்கடலாகிய தேவாதி தேவா ! இல க்ஷத்தொன்பது வீரர்களும் அடியேனுக்குத் தம்பிகளாகவேண்டும். ஓ சுவாமி! நானவர்களைத் துணையாய் வைத்துக்கொண்டு தேவரீர் கட்டளையின்படி சத்துருக்களற்று இவ்விராஜ்ஜியத்தைப் பரிபாலனம்பண்ணி வருகின்றேனென அது கேட்டு ஸ்ரீ தயாநிதியும் அப்படியே ஆகட்டுமென்று திருவாக்கருளிவிட்டு வீரபாகு முதலிய வீரர்களை நோக்கி வசனமுரைத்ததாவது.

கேளீர் வீரர்களே! நமதாக்கினையின்படி இப்போதே நீங்கள் சீக்கிரமாய் இவ்வரசனுக்குத்தம்பியாகி விடுங்களென்று அவருரைத்திட்ட திருவசனத்தைக் கேட்டவுடன் அவ்வீரரெல்லாம் பயத்தினல் நடுக்கமுற்றவர்களாகி ஜகங்களுக்கெல்லாம் புருஷரான தேவாதிதேவா! அசுரர்களைச் சமுகரிக்கலுற்ற அடியார்களுக்கு மிகவும் தாழ்ச்சியான இவருக்குத் தம்பிகளாயிருக்கும் தன்மையில் எவ்வாறு உருசியுண்டாகுமெனறு அவர்கள் உரைத்திட்ட வசனத்தைக்கேட்டவுடன் மனதினிற் கோபாவேசங்கொண்டவராகி ஸ்ரீபகவான் அவர்களைநோக்கி யதட்டிக்கொண்டு மறுபடியும் திருவாக்குரைத்ததாவது: ஓகோ வீரர்களே! நீங்கள் கர்வங்கொண்டவர்களாகி நமது திருவாக்குக் கமையாதபடியால் நீங்கள் மானிட ஜன்மத்தையடைந்து அவ்வரசனுக்குத் தம்பிகளாய் அவரோடிருந்த பிறகு சிரேஷ்டமான தவத்தைச்செய்வதனல் இப்பாதகத்தினின்று பரிசுத்தர்களாகிப் பிறகு முடிவினில் நமதாக்கினையின்படி நம்மண்டைக்கு வரக்கடவீர்கள் என்று உரைத்திட்ட மாத்திரத்தில் அவ்வீரரெல்லாம் மானிடவுருவத்தைக் கொண்டவர்களாகி, ஓ கருணைக்கடலான தேவாதி தேவா! எங்களது பிழையை மன்னித்தருள வேண்டுமென்றுரைத்துப் பயத்தினலங்கம் பதறலுற்றவராகிப் பூமிதனில் தண்டம்போல் வந்தனம் செய்தார்கள்.

பிறகு அவர்கள் ஸ்ரீ பகவானிடமிருந்து அனுமதி பெற்றவர்களாகக் கேளீர் தரணி தேவோத்தமர்களே! ஸ்ரீ விஷ்ணுவாகிய உபேந்திரன் இந்திரனுக்குத் தம்பியானதுபோல் அவ்வரசனுக்குத் தம்பியாகிய அவரைச் சூழ்ந்துகொண்டார்கள். பிற்பாடு பரம பாவனமூர்த்தியாகிய ஸ்ரீகந்தபிரான் அம்முசுகுந்த சக்கிரவர்த்திக்கு இவ்வாறு யனுக்கிரகம்செய்துவிட்டு மறைந்தருளினர்.

பிறகு மகா புத்திசாலியான முசுகுந்தனும் பெரியதான தமது சதுரங்க சைனியங்களை மிகுந்த ஸந்தோஷத்தோடு தன்தம்பிகளுக்குவெவ்வேறுய்ப்பகிர்ந்து கொடுத்து ஸ்ரீ வடிவேலனை மனதினில் தியானித்துக் கொண்டே மிகவும் ஆனந்தத்தோடு ராஜ்யபரிபாலனம்செய்துவந்தார். மேலும் அவர் கருப்பூரென்ற கிராமத்தில் ராஜகன்னிகளாய்த்தோன்றியிருந்த அப்சரஸ்திரீகளைத் தம் தம்பிகளுக்கு மணம்புரிவித்தனர். அதனில் மகா பலவானுகிய வீரபாகுவானவர், புஷ்பகந்தியென்பவளைக் கலியாணம் பண்ணி கேளீர் முனிவர்களே! சித்திரவல்லி யென்ற தம்பெண்ணை பாவனைக்கு மட்டில் தமயனுகிய மூசுகுந்தருக்கு விதிப்படி விவாகம் செய்து கொடுத்தார். இப்படிக்கொத்த சித்திரவல்லியின் கைதனிலிருந்த நேர்த்தியான ஓர் கிளியை அப்போது யமபடர்கள் பலவந்தமாய்ப் பிடுங்கிக்கொண்டு போய் அதனை விரும்பிய இயமனுடைய மனையாளுக்

குத்துரிதமாய்க்கொடுக்க கேளீர் தரணிதேவர்களே; வீரர்கள் அச்சங்கதியைக் கேள்வியுற்று மகா கோபாவேசம் கொண்டவர்களாகி, யமனோடு யுத்தம் செய்து அதனைத்துரிதமாய்ப்பிடுங்கி மறுபடியும் சித்திரவல்லியிடம் கொடுத்து அவளை மிகவும் சந்தோஷப்படுத்தினார்கள். மேலும் அரசனுக்குப் பிரியநாயகி யான சித்திரவல்லி கர்ப்பமா யிருக்கும்போது மகா இரஸவத்தான மலையாள தேசத்திலிருந்த ஓர் கனியை யவள் விரும்ப கேளீர் முனிவரர்களே, உடனே வீரர்கள் அதனைக் கொடாததினால் அவர்கள் கோபாவேசம் கொண்டவர்களாகி யுடனே அங்கு சென்று அவ்வரசனைப்போர்முனையில் முறியடித்து விட்டு அக்கனியைச் சீக்கிரமாய் எடுத்துவந்து சித்திரவல்லிக்குக் கொடுத்தனர்கள். மேலும் கேளீர் பிராமணோத்தமர்களே! அவ்வீரர்கள் தேசங்கள் தோறும் அங்கங்குள்ள கொடியர்களை யெல்லாம் போரினில்வென்று பார்முழுதும் தங்கள் வசமாக்கிக்கொண்டு நீதிவழுவாமல் அரசு செலுத்தி வந்தார்கள். அப்போது முசுகுந்தனுக்குப் பிரியநாயகியும் சகல அவயவங்களும் சுந்தரமாய் அமையப்பெற்றவளுமான அச்சித்திரவல்லியும் அக்கினி வர்ணனென்ற ஓர் குமாரனைப் பெற்றாள்.

கேளீர் பிராம்மணோத்தமர்களே! இப்படியிருக்கும் காலத்தில் மதங் கொண்டவனான வலன் என்ற ஓர் மகா சூரன் துர்ப்பலனான தேவேந்திரனைப் போரினில் வென்று அவனது நகரத்தை வளைந்துகொண்டான். அப்போது தேவராஜனுக்கு அவனோடு யுத்தம் செய்யத் திறமையில்லாதபடியால் அவன் தன் தூதர் மூலமாய் இராஜச்சிரேஷ்டனாகிய முசுகுந்த சக்கிரவர்த்தியைத் தனக்கு வந்துதவிசெய்யும்படி கேட்டுக்கொள்ள அப்படியே மகா பராக்கிரமமுடைய அச்சக்கிரவர்த்தியும் வந்துமிகுந்த வலிமைகொண்ட அவ்வசுரன் சேனைகளை எல்லாம் போர்முகத்தில் நின்று கொன்று போட்டனர். அப்போது மகா சூரனான வலன் மட்டில் ஒண்டியாய் மிஞ்சி நிற்கலாகையில் கேளீர் தரணிதேவர்களே! தேவராஜன் வஜ்ஜிராயுதத்தினால் அவனை யடித்துக் கொன்றான். அதனால் தான் இந்திரன் அது முதலாய் வலாரி யென்று சொல்லப் படுகின்றான். தேவராஜன் இவ்விதமாய் மகா கொடூரனான அவ்வசுரனைக் கொன்று போட்டு முசுகுந்தரோடு கூட மகா சந்தோஷத்துடன் தன் அரண்மனை சேர்ந்தான்.

## 7. அத்தியாயம்.

பிற்பாடு அவ்வசுர மன்னரும் தேவமன்னரும் ஸ்நாநம்செய்து மகா மங்களகரர்களாகித் திரபுரமாற்றாகிய ஸ்ரீ சர்வேசுவரனைப் பூசை செய்யும் திரு மாளிகைக்குட்சென்றார்கள். அப்போது ராஜமன்னன் அங்குள்ளச் சிரேஷ்டமான வோர் ஆசனத்தில் சுகமாயுட்கார்ந்த பொழுது இந்திரன் பூஜை செய்யுங் காலத்தில் அவனுடைய ஸ்ரீசோமாஸ்கந்தரான மகேசுவர விக்கிரகத்தைக் கண்டவுடன் அவர் அந்த செந்தாமரை மலரையொத்த திருமுகத்தையுடையவரும், பரமானந்த மங்களமூர்த்தியுமான ஸ்ரீ பரமேசுவரனை யம்முசுகுந்த சக்கிரவர்த்தித் தரிசனம் பண்ணக் கைலாச வாசியும் பார்வதியோடு கூடியவருமான மகா பிரபுவை மனதினில் தியானம் பண்ணிக்கொண்டு ஆநந்தக் கண்

ணீர் பெருகப்பெற்றவராகி மிகுந்த பக்தியோடு தோத்திரம் செய்கையில் ஸ்ரீ பகவான் அம்முசுகுந்தர் முன்னர் ஸான்னித்யமாகி, ஓ ராஜனே முந்தி யாம் விஷ்ணுவால் பூஜை செய்துவரப்பட்டு இப்போது இவ்விந்திரனிடம் வந்திருக் கின்றோம். அப்பேர்க்கொத்த எம்மை நீ நமதடியார்களில் மெத்தச் சிறந்தவ னுகையால் நீயே பூஜைசெய்துவரலாவாய். என்று கேளீர் பிராம்மணோத்தமர் களே, ஸ்ரீபரமேசுவரன் அவ்வரசனுக்கு இந்திரன் செவியிற் படாதிருக்கும்படி இரகசியமாய்த் திருவாக்கருளினர். அது கேட்டு முசுகுந்த சக்கிரவர்த்தியும் உள்ளம் குளிர்ந்தவராகி மற்றெங்கும் மனதை நாட்டாமலே தேவேந்திர னுடைய பூஜையைப் பார்த்துக்கொண்டிருந்தனர். பிறகு இந்திரனும் பூஜையை முடித்துக் கொண்டு அரசனேடுகூட புறப்பட்டுப் போஜன சாலைசென்று தனது காமதேனுவை நினைக்க, தன்னை யண்டியவர்களுக்கு வேண்டியதைக் கொடுக்கலுற்ற அக்காமதேனுவும் சீக்கிரமாய் வந்தது.

பிறகு இந்திரன் அக்காமதேனுவால் கொடுக்கப்பட்ட பால் முதலியவை களோடு கூடிய சேர்த்தியான அன்னத்தால் அப்போது அவ்வரசனுக்குப் போஜனமளித்தும் அநேக வஸ்திராபரணங்களைக் கொடுப்பித்தும் கேளீர் தரணி தேவர்களே! அத்தேவராஜன் "ஓ ராஜனே உமக்கு வேண்டியதைச் சொல்லவேண்டும்" என்று மிகவும் அன்புடன் அம்முசுகுந்தரைப் பன்முறை கேட்டான். அது கேட்ட அவ்வரசனும் அப்போது மிகுந்த சந்தோஷங் கொண்டவராகி "ஓ இந்திரா உம்மாற் பூஜை செய்யப்படுகிற ஸ்ரீ சோமாஸ் கந்த விக்கிரகத்தை நீர் கொடுப்பீராஞல் நான் மிகுந்த பக்தியுடன் அப்பரமேசு வரனைப் பூஜைசெய்து வருகின்றேன்" என அதுகேட்டு இந்திரன் மிகுந்த மனக்கவலை கொண்டவனுகி யவரை நோக்கி வசனமுரைத்ததாவது:—

ஓ ராஜனே! இம்மகேசுவர மூர்த்தியானவர் ஸ்ரீ விஷ்ணுவால் ஆரா தித்து வரப்படுவோரேயன்றி எனக்குச்சொந்தமில்லை என்று சத்தியமாய் சொல்லுகின்றேன். அவர் பூசை செய்து வரலான காரணத்தை யெடுத்துக் கூறுகின்றேன். இதனை நீரிப்போது கவனமாய்க்கேட்கலாவீர். முந்தி விஷ்ணு வுக்குப் புத்திரன் இல்லாதபடியால் அவர் ஸ்ரீ பரமேசுவரனை மனதினில் தியா னம் பண்ணிக்கொண்டு கேளீர் ராஜனே புத்திர வேண்டியவராகி மிகவும் கொடிய தவத்தைச் செய்தனர். அப்போது அவர் முன்னர் ஸ்ரீ மகாதேவர் பிர சன்னராகையில் அவர் மிகுந்த சந்தோஷத்தோடு தண்டம்பண்ணி, ஓ தேவாதி தேவா! மகாதேவா! தேவரீரால் இப்பெருமை பொருந்திய பதவியும் முடிவற்ற வாயுளுமருளப் பட்டிருக்கையில் எந்தனுக்கு யாதொரு குறையுமில்லை, ஆகி லும் ஓ கருணைக்கடலே! ஓ தேவேசா! புத்திர ஹீனனென வெனது பாவத்தை யோர் நொடிக்குள் விலக்கித் தேவரீரது திருவருளால் எந்தனுக்குப் புத்திர பாக்கிய முண்டாக்க வேண்டுமென்று விஷ்ணுவானவர் ஸ்ரீ பரமேசுவரனை அப் போது பிரார்த்திக்க, ஸ்ரீபார்வதீநாதனும் நல்லது அப்படியே ஆகக்கடவதென்று விஷ்ணுவுக்குவரமளித்தனர். அப்போது ஸ்ரீபார்வதீ தேவியானவள் அவ்வெல் லாவற்றையும் பார்த்து மிகுந்த கோபம் கொண்டவளாகி ஓ இவ்விஷ்ணுவான வன் நம்மை விலக்கி ஸ்ரீ பரமேசுவரனை மட்டிற் பூஜைசெய்து வரனையும்

பெற்றனனல்லவோ. ஆகையாலவனுக்குப் பிறக்கும் பிள்ளையானவன் ஸ்ரீ பரமேசுவரனுடைய நேத்திராக்கினியால் தகிக்கப்படலாகும்படி இவனுக்கு நேரிடக் கடவதென்று சபித்துவிட்டு, தயாநிதியாகிய பரமசிவா ! மகா மாயாவியும் சூதனுமான அவ்விஷ்ணுவானவன் ஸாக்ஷாத் பரப்பிரம்ம ஸ்வரூபியான தேவரீர் இருக்கையிலே தானே பிரம்மமென்று எப்போது பிதற்றிக்கொண்டே சகல ஜீவராசிகளையும் துர்மார்க்கத்தில் தள்ளிவிடுகின்றான். ஆகையால் அவனது முகத்தில் விழிப்பதே தகுதியல்லவென்று, ஜகன்னாதனை ஸ்ரீ தேவேசனிடத்து அடிக்கடி யுரைத்துக் கேளீர் ராஜனே ஸ்ரீ பார்வதி தேவியானவள் பரமேசுவரனோடுகூட அந்தர்த்தானமாயினள்.

பிற்பாடு விஷ்ணுவானவர் துக்கத்தினால் மிகவும் பீடிக்கப்பட்டவராகி மகா பெருமை பொருந்திய இச்சோமாஸ்கந்த விக்கிரகத்தைச் சாஸ்திரமுறைப்படி பிரதிஷ்டைபண்ணி வெகுகாலம் பூஜை செய்துவந்தனர். இப்படியிருக்கையில் ஓர் நாள் தயாநிதியான மகாதேவன் பார்வதி சுப்பிரமணியர் சகிதராய் விஷ்ணுவின் முன்னர் பிரத்தியக்ஷமாயினர். அதன்மேல் விஷ்ணுவானவர் அம்பிகையோடும் குமாரனோடும்கூடிய ஸ்ரீ பரமேசுவரனைத் துதிக்க பிரசன்னரான அப்பகவான்கௌரியம்மனுடைய திருமுகத்தை நோக்குமளவில் அவ்விங்கிதத்தை விஷ்ணு வறிந்து கொண்டதன்மேல் பருவதராஜபுத்திரியான உமாதேவியை நமஸ்காரம் பண்ணி ஓ பவானி எனது அறியாதத் தன்மையால் உம்மைப் பூஜியாமல் அம்மகேசுவரன் ஒருவனை மட்டில் பூஜித்தபடியால் எந்தனுக்கு அபராதமுண்டாயிற்று. யானே வெகுகாலம் முதலாய்ப் புத்திரனைவேண்டித் தவம் செய்யலானேன். ஓ மகேசுவரீ! ஆகையால் பிறந்த மைந்தன் எரிந்துபோகக் கடவதென்ற சாபத்தைக் கொண்ட அப்பேர்க்கொத்த வெந்தனைக் காப்பாற்றியருள வேண்டுமென்று நாராயணன் ஸ்ரீ மகா தேவியைத் துதிசெய்து பிரார்த்திக்க பிறகு பார்வதியும் மிகக் களிப்புற்றவளாகியவரை நோக்கி திருவாக்குரைத்ததாவது.

கேளீர் விஷ்ணுவே! 'எரியலாகும் உமது மைந்தனுக்கு அம்மகேசுவரனாலே பிறகு சீக்கிரமாய்ப் பிழைப்புண்டாகக்கடவது. ஏனென்றால் நமது ஆக்கினை மெத்தவும் வலிமையுளதன்றோ' என்று திருவாக்குரைத்துவிட்டுப் பார்வதியானவர் பரமேசுரனோடுகூட மறைந்தருளினர் . பிற்பாடு என்றும் இருப்போரான விஷ்ணுவானவர் மிகவும் களிப்புற்ற மனதுடன் ஸ்ரீ மகாதேவரது திருவாக்கினையின்படி மனதினால் நினைத்த மாத்திரத்தில் மனோபவ (மன்மத) னென்ற மைந்தனைப் பிறப்பித்தனர். அம்மன்மதன் வெகுகாலம் விஷ்ணுவால் வளர்க்கப்பட்டவனாகிப் பிறகு தேவகாரியத்தைச் சாதிப்பதற்கு எத்தனப்படும்போது ஸ்ரீ திரிபுரமாற்றானால் தகிக்கப்பட்டு பிறகு இரக்கம் கொள்ளலான அச்சிவபிரானாலே அவன் பிழைப்பு மூட்டப்பட்டான். இவ்விதமாய் விஷ்ணுவானவர் அப்பேர்க்கொத்த இவ்விக்கிரஹத்தைப் பூஜைசெய்தே அவ்வரனைப் பெற்றனர்.

பிறகு ஒருக்கால் அவர் திருப்பாற்கடலின்கண் ஆதிசேடன் மீது படுத்துக்கொண்டபடி இவ்விக்கிரகத்தை மார்பினில் வைத்துக்கொண்டுயோக நித்

திரைபண்ணுகையில் அப்போது விஷ்ணுவின் நடுமார்பினில் விளங்கலான இச் சோமாஸ்கந்த மூர்த்தியான ஸர்வேசுவரன் ஆதிசேடன் விஷ்ணு இவர்களுடைய உள்மூச்சு வெளிமூச்சுக் காற்றுகளால் ஆட்டிவிடப்பட்டவராகிக் காற்றினலடிபடும் விருக்ஷம்போல் அங்குமிங்கும் அசையலுற்றார். இவ்வாறாய் விஷ்ணுவானவர் அவ்விக்கிரகத்தை மார்பினில் வைத்துக்கொண்டு நித்திரைசெய்யுமளவில் அப்போது வாக்காலி என்ற ஓர் மகாசூரன் சண்டைக்குவந்தான். கேளீர் முசுகுந்த சக்கிரவர்த்தியே! பிற்பாடு யான் மிகவும் பயம் கொண்டவனாகி அப்போது கடல்மீது தூங்கலுற்ற விஷ்ணுவுக்குச் சங்கதியை யறிவிப்பதற்காக அங்கு சீக்கிரமாய்ச்சென்றவுடன் அவர் திடீரென்றுவிழித்து எந்தனை நோக்கி யான் வரலான வேலையை யறிந்துகொண்டெந்தனை நீ பயப்படாதே யென்று திடப்படுத்தி தித்தம் மார்பினிலிருந்த மகேசுவரனான இச்சோமாஸ்கந்த விக்கிரகத்தை எந்தனிடம் கொடுத்து விட்டுத் தாம் வெளியிற் புறப்பட்டுப் பூலோகத்தில்விளங்கிய சிரேஷ்டமான சிதம்பரமென்ற தலத்துக்குச் சென்று அங்கு விளங்கிய சைதனியரூபியான ஸ்ரீ மகாதேவனைச் தரிசித்து ஆநந்தக் கண்ணீர் தளும்பலுற்ற விழிகளையும் தழதழக்கலுற்ற வாக்கையும் கொண்டவாராகி அங்காராயணன் நான்கு மாதமளவும் போதொன்றையும் அறியாதவராயிருந்து கொண்டு பிறகு ஸ்ரீ பரமேசுவரனுடைய அற்புதமான திருவருளைப் பெற்ற தன் மேலெழுந்து வெளிப்பட்டுப் போர்தனில் மிகக்கொடியவனாகிய மகாசூரனை வாக்காலியைக் கொன்று போட்டு எந்தனை யெனது நகரத்துக் கனுப்பி விட்டுத்தாமும் திருப்பாற்கடல்சேர்ந்து முன்போல் ஆதிசேடன்மீது பள்ளி கொண்டனர்.

கேளீர் ராஜனே! நானும் எனது நேர்த்தியான நகரம் சென்று அன்று முதலாகி அருகினில் ஸ்ரீ முருகேசனை வைத்துக் கொண்டு பார்வதியம்மையோடு கூடிய என்றும் அழிவற்ற அம்மகேசுவரனை மற்றெங்கும் மனதைச் செல்லவிடாமலே பூஜை செய்து வருகின்றேன். ஆகையால் விஷ்ணுவுக்குச் சொந்தமான இவ்விக்கிரகத்தை யவரது தெளிவான அனுமதியில்லாமல் யான் கொடுப்பது சரியல்ல. ஆனல் ஓ ராஜச் சிரேஷ்டரே! அளவற்ற பராக்கிரமத்தைக்கொண்ட அவ்விஷ்ணுபிரானுடைய அனுமதியைப் பெற்றதன்மேல் இதனைச் சீக்கிரமாய் வாங்கிக்கொள்வது தகுதியாகுமென முசுகுந்த ராஜனும் தேவேந்திரன் சொல்லிய இவ்வசனங்களைக் கேட்டவுடன் விஷ்ணுவிடம் அந்தச்சங்கதிகளை எல்லாம் சொல்லி அவரது அனுமதி கொண்டதன்மேல் இந்திரனிடத்துக்கு திரும்பவும் வந்து ஓ தேவராஜனே! யானிப்போது விஷ்ணுவின் அனுமதியை வாங்கிக் கொண்டேன். ஆகையால் நீர் இப்போது அப்பகவானை யென்னிடம் கொடுத்து விடுவது தகுதியாகுமென கேளீர் பிராமணோத்தமர்களே! இந்திரன் இவ்வாறான அவரது வசனத்தைக் கேட்டவுடன் மிகுந்த கவலை கொண்டவனாகி விசுவகருமனால் அவ்விக்கிரகத்துக் கொப்பான வேறு சிறந்த மூர்த்திகளைத் துரிதமாய் அமைப்பித்து அவ்விக்கிரகங்களை ஒவ்வொன்றாய் அவ்வரசனுக்குக் கொடுத்ததும் அப்போது அரசன் அவைகளைப் பார்த்து இந்திரனுடைய சூதை யறிந்துகொண்டு பின்னும் இந்திரனை

நோக்கி அதே விக்கிரகத்தைக்கேட்டனர். பிற்பாடு இந்திரன் அவ்வரசனுக்கு அதே மூர்த்தியைக் கொடுக்க பிறகு ராஜச்சிரேஷ்டரான முசுகுந்தன் அம் மகாதேவனை மிகுந்த சந்தோஷத்தோடு வாங்கிக்கொண்டு உத்தமத்தலங்களுக் கெல்லாம் மிக உத்தமமான ஸ்ரீ கமலாலயத்து (திருவாரூர்)க்கு வந்து அங்கு அத்தியாகராஜ ஸ்வாமியைச் சாத்திர முறைப்படி பிரதிஷ்டை பண்ணி மேலும் அவ்வரசன் மிகுந்த பக்தியுடையவனாகி அச்சோமாஸ்கந்தமூர்த் திக்கு பூஜை உற்சவம் முதலியவைகளான அநேக உபசாரங்களை நடத்தி வந்தார். தவிரவும் கேளீர் பிராமணோத்தமர்களே! மகாத்துமாவான அவ்வர சன் மற்ற விக்கிரகங்களையும் அத்திருவாரூருக்குச் சமீபத்திலுள்ள வெவ் வேறு பட்டணங்களில் பிரதிஷ்டை செய்து பூஜை நடத்தி வந்தார். பிற்பாடு தேவேந்திரனும் தன்னாற் பூஜை செய்யப்படாத வேறு சோமாஸ்கந்த மூர்த் தியைக் கொடுத்தபடியால் சண்டாளப் பிறப்பை யடைந்து உடனே மகாபுண் ணியத்தலமான அத்திருவாரூர் கண்ணேயிருந்து கொண்டு ஸ்ரீ மகாதேவ னுக்கு வாத்திய கோஷங்களைச் செய்து ஸ்ரீ மகாதேவனை யருள்புரியும்படி சந்தோஷிப்பித்து மறுபடியும் இந்திரத்தன்மையை யடைந்தனன். அப்போது முசுகுந்த சக்கிரவர்த்தியும் திரிபுர மாற்றானாகிய ஸ்ரீ தியாகராஜ மூர்த்திக்கு அனேகம் பிராகாரங்கள் மண்டபங்கள் அட்டாள மண்டபங்கள் கோபுரங்கள் முதலியவைகளைக் கட்டுவித்து மிகுந்த பக்தியுடையவனாகி ஸ்ரீ மகாதேவனுக்கு மிகுதியான பூஜைகளை நடப்பித்து வந்து கேளீர் முனிவர்களே! முடிவினில் தம் மைந்தனான அக்கினிவர்ணனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்துப் பருவ தச் சிரேஷ்டமாகிய ஸ்ரீ கைலாசத்தையடைந்தார். மேலும் வீரபாகு முதலிய வீரர்களும் தங்கள் தங்கள் புத்திரர்களை அவ்வக்கினி வர்ணன் இடத்தே ஸ்தா பித்து வைத்துத்தாங்கள் செய்வதற்கு முற்றும் அசாத்தியமான கொடிய தவத்தைச்செய்து தாங்கள் கொண்டிருந்த மானிட சரீரத்தை இழந்து துரி தமாய்த் தங்களது திவ்ய சரீரத்தைக் கொண்டவர்களாகி நேர்த்தியான கந்த கிரியை யடைந்து என்றும் அழிவற்றவரான ஸ்ரீ குமரேசனை வந்தனித்து அவ ரது சிறந்த திருவருளைக்கொண்டவர்களாகி மிகுந்த சந்தோஷத்துடன் அங்கே யிருந்து விளங்கி வந்தார்கள்.

தேவ காண்டம் முற்றிற்று.



வேலுமயிலுந் துணை.

# தட்ச காண்டம்.

## 1. அத்தியாயம்.

ஞானுடைய தலைமீதிருக்கும் இரதத்தையும், வில்லினுச்சிமீது சஞ்சரிக்கலுற்ற இரண்டு சக்கரங்களையும், சக்கரத்துக்குள்ளிருக்கும் பாணத்தையும் அப்பாணத்தின் வயிற்றிலிருக்கும் சாரதியையும் அச்சாரதியின் வாய்களிலிருக்கும் குதிரைகளையும், அக்குதிரைகளின் உச்சியின்கண் குடியிருப்பையும் ஆகிய இப்பேர்க்கோத்த விநோதமானவைகளைச் சின்னங்களாய்க் கொண்ட ஸ்ரீ பகவான் என்றும் சுபத்தைச் செய்யட்டும். இவற்றுள்:—ஸ்ரீ சதாசிவப்பெருமான் திரிபுரசமுகாரம் செய்யுமளவில் ஆதிசேடனை ஞானகவும் அவர் தலைமீதிருக்கும் பூமியை யிரதமாகவும், மகா மேருகிரியை வில்லாகவும், அதன் உச்சிமீது சஞ்சரிக்கும் சூரிய சந்திரர்களை சக்கரங்களாகவும், அச்சூரிய மண்டலத்தின் மத்தியில் விளங்கும் ஸ்ரீநாராயணனைப் பாணமாகவும், அவன் வயிற்றினின்றுண்டான பிரம்மனைச் சாரதியாகவும், அவர் நாவினில் விளங்கும்வேதங்களை குதிரைகளாகவும் கொள்ளலாயினரென்பதும் அவ்வேத வேதாங்கங்களால் மிகுதியாய்ப்புகழ்ந்து கொண்டாடப்படுகின்றவரென்பதுமே கருத்து.

சௌனகாதி முனிவர்கள் சூதரை நோக்கிக் கேட்கின்றதாவது:—ஓ! தவத்தையே தனமாய்க்கொண்ட சூத முனிவரே! தேவரீர் பிரகஸ்பதி பகவானனவர் இந்திரன் மைந்தனன ஜயந்தனுக்குத் தக்ஷப்பிரஜாபதியால் செய்யப்பட்ட யாகத்தின் விருத்தாந்தத்தை எடுத்துரைத்தனரென்று சுருக்கமாய்க் கூறினீரன்றோ! அதனை இப்போது எங்களுக்கு விஸ்தாரமாய் எடுத்துரைக்கலாவி"ரென, இவ்வாறாகிய அவர்களது வசனத்தைச் செவியிற் கொண்டு சூதர் சொல்லுகின்றார். பிரம்மத்தை யறிந்தவர்களில் சிரேஷ்டர்களான பிராம்மணோத்தமர்களே! நீங்களெல்லோர்களும், கவனமாய்க் கேளீர்கள். பூர்வத்தில் பிரம்மாவானவர் சகல தேவர்களுடனும், புத்திரர்களான பத்துப்பிரஜாபதிகளுடனும் ஸத்தியலோகத்தில் வீற்றிருக்கையில் பிராம்மணோத்தமர்களே! அவருக்கு முதற் புத்திரனன தக்ஷப்பிரஜாபதியென்பவன் தந்தையைச் சிரசினல் வந்தனித்துச் சகமதற்கெல்லாம் பிரபுவான அப்பிரமனை வினவியதாவது:—

ஓ! எல்லாப்பொருட்களையும் அறிந்தவரும், சகல வேதார்த்தங்களையும் கரைகண்டவருமான தந்தையே! மும்மூர்த்திகளுக்குள் மிகவும்சிரேஷ்டரும், ஜகங்களுக்கெல்லாம் பிரபுவும், எங்கும் நிறைந்தவரும், பரஞ்சோதியும், பரமாத்துமனும், பிறப்பற்ற நித்தியரும், ஸகல ஜகங்களுக்கும் சிருஷ்டி, ஸ்திதி, சமுகாரங்களை நடத்துவோரும், எல்லா ஜீவராசிகளுக்குள்ளும் எங்கும்சாக்ஷி

யாய் விளங்கியிருப்போருமானவர் யாவர்?'' என, பிறகு பிரம்மதேவர் அவனுரைத்த இவ்வாறு வசனத்தைக்கேட்டு ஸ்ரீ பரமேசுவரனை மனதினில் தியானம்பண்ணிக் கொண்டு ஆனந்தக்கண்ணீர் பெருகப்பெற்றவரும், சந்தோஷத்தினல் சற்றுநேரம் வார்த்தை தழதழக்கலுற்றவருமாகி "கேளாய் மைந்தா! மிகுந்த மதி மயக்கத்தினல் ஆங்காரம்கொண்டு ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொள்ளலான பிரம்ம விஷ்ணுக்களாகிய எங்களிருவருக்கும், மத்தியில் திரண்ட அக்கினி ஜுவாலைகளால் சூழப்பெற்றவராகி யாவர் தோன்றினரோ, அவரொருவர்தான் தகராகாய மத்தியில் விளங்கலுற்ற சுயம்புவான ஸர்வேசுவரன். இவரே சகல ஜகங்களுக்கும் அதிலும் முக்கியமாய்ப் பிரம்ம விஷ்ணுக்களாகிய எங்களிருவருக்கும் கர்த்தா'' வென, தக்கனும் "ஓ! தந்தாய்! தரணிதனில் சிருஷ்டி, ஸ்திதி ஆகிய இரண்டு கிருத்தியங்களையும் நடத்தி வரலுற்ற ஜகதீசர்களான உங்களிருவருக்கும் சமுசாரத்தொழிலை நடத்தலுற்ற இச்சிவபிரான் எவ்வாறு கர்த்தாவாகின்றார்?'' என, பிரம்மனுரைக்கின்றார்:—

கேளாய் தக்ஷா, இம்மகாதேவர் பிரம்மனான எந்தனையும் ஸ்ரீ விஷ்ணுவையும் படைத்துவிட்டு எங்களுக்குத்தொழிலையும் ஏற்படுத்தி எங்களது இருதய கமலத்திலே குடியிருந்து கொண்டு ஸகலப் பிரபஞ்சங்களையும் காப்பாற்றலுற்ற அப்பகவான் எங்களிருவரையும் அவரவர்தொழிலை நடத்தி வரும்படி என்றும் எங்கும் ஆட்டிவைக்கின்றார். மேலும் எங்களுக்குப் புத்திக்கேடு நேரிடும்போது எங்களை அடக்கியும் காப்பாற்றி வருகின்றார். அவ்விதமாயினும் முந்தி எங்களுக்கு வேத புராணங்களைக் கற்பித்த அம்மகாதேவர் எங்களிருவர்க்குள்ளும் ஒருவர்போலவே விளங்கி வருகின்றார். ஆனல் பரமேசுவரன் மலருக்குள் வாசனைபோலும், எள்ளுக்குள் எண்ணைபோலும், மணிக்குள் நாதம் போலும், அக்கினிதனில் ஒளிபோலும், எல்லா விடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா பொருட்களிலுமிருந்து விளங்கி வருகின்றார். ஓ! புத்திரா! இப்படியிருக்கையில் அப்பிரபுவானவர் எங்கள் இருவருக்குள் மட்டிலொருவர் என்பது எவ்வாறு தகும்?'' என, தக்ஷனும் "ஓ! ஜனங்களுக்கெல்லாம் பிரபுவான எந்தாய்? 'ஸர்வம்கலு'வென்ற இவ்வேத வாக்கியமானது எல்லா பிரம்ம ஸ்வரூபமும் தானென்று பொறுத்துச்சொல்வது எவ்வாறு தகுமென்றுகேட்க, பிரம்மன் சொல்லுகின்றார்:—ஓ மைந்தா! வேதமானது 'எல்லாப் பொருளும் பிரம்மத்தன்மையுள்ள' தென்று உபசாரார்த்தமாய்ச் சொல்லியதேயன்றிவேறில்லை; எப்படியென்றால் பூலோகத்திலுள்ள பிராம்மணர்கள் எவ்விதமாய் எந்தனைக்காட்டிலும் வித்தியாஸமுள்ளவர் அல்லவென்று சொல்லப்படுகின்றார்களோ அதேவிதமாய்ச் சகல ஜகங்களும் பிரம்மத்தன்மையுள்ளனவென்பது நிச்சயமே! மேலும் என்றும் அழிவில்லாத அவ்வேதமானது ஸ்ரீ பரமேசுவரன் எங்கும் நிறைந்து விளங்கியிருப்பதைக் கண்டு யெல்லாம் ஸ்ரீ மகாதேவ சுவரூபமுள்ளதென்று சொல்லியிருப்பதென்பது நிச்சயம். ஆனல் சுபாவத்தில் அவ்வேதமானது, மிருத்தியுவை வென்றவரும் உமாபதியும் ஸகல பிரபஞ்சங்களுக்கும் மேற்பட்டவருமான ஸ்ரீ மகாதேவனையே சாசுவதமான பரப்பிரம்மமென்று மிகுந்த பயத்தோடு உரைக்கின்றது. இச்சகல ஜீவராசிகளுக்குள்ளும் அந்தர்யாமியாய் விளங்கி நிற்போரான அப்பர

மேசுவரனொருவரே ஸகல பிரபஞ்சங்களுக்கும் கர்த்தாவேயன்றி ஸ்ரீ பரமேசுவரனாகிய அவ்வுருத்திரனைத் தவிர வேறொருவருமில்லை. அப்பரமேசுவரன் யாதொரு குணமுமற்றவராயினும் அவர் ஸகல குணங்களும் நிறையப் பெற்றவரும், அவர் உருவமே யற்றவராயினும் அனேகவித உருவங்களைக் கொண்டவரும், ஸர்வ ஸ்வரூபியும், அரும்பொருளுக்கெல்லாம் அரும்பொருளும், பசு, பதி, பாசம், ஆகிய முப்பொருட் சுவரூபியும் ஸகல சுபங்களுக்கும் காரணரும், ஈசனும், பரத்துவமும் பரஞ்சோதியும் தத்துவங்களுக் கெட்டாதவருமாயிருக்கிறார். முந்தி விஷ்ணு பிரம்மர்களாகிய யாங்கள் புத்திப்பிரமை கொண்டகாலத்தில் எங்களை அவர் காப்பாற்றலானார். அப்பேர்க்கொத்த ஸ்ரீ மகா தேவன் அவற்றின் அடையாளத்துக்காக எங்களது எலும்புகளைத் தரிக்கின்றார். மானிடர்கள் தோலை உடுத்துவதுபோல் வானத்தையுடையாகக் கொள்வார்களானால் அப்போதும் ஸந்தேகமின்றி ஸ்ரீ பரமேசுவரனை அறிந்து மோக்ஷம் பெறுவார்கள்.

கேளாய்! புத்திரா! இப்பேர்க்கொத்த அப்பரமேசுரனுடைய மகிமையை எடுத்துக் கூறுவதற்கு எந்தனால் எவ்வளவும் முடியாது. வேதமானது எங்காகிலும் ஓரிடத்தில் எந்தனையும் விஷ்ணுவையும் பற்றிச் சொல்வதெல்லாம் உபசாரத்துக்கு மட்டிலேயன்றி இவ்விடத்திற் கூட உண்மையில் ஸ்ரீ பரமேசுவரனைப்பற்றியே தான். மேலும் வேதமானது யாகம் முதலிய கருமங்கள் விஷ்ணு முதலிய தேவர்கள் இவர்களை எல்லாம்பற்றி ஓர் பாகத்திலுரைக்கின்றது. ஆனால் மற்றோர் பாகத்திலோ ஸ்ரீ ஸர்வேசுவரனொருவரைப் பற்றியே மிகுந்த பயத்தோடு கூறுகின்றது. தவிரவும் அவ்வேதம் எங்களைப்பற்றி உரைக்குமிடத்திற்கூட அச்சருவேசனென்ற பாவனையோடுரைப்பதைத் தவிர வேறில்லை. யாரொருவன் பிரமத்தினால் தத்தித் தட்டுக்கெடலாகி விஷ்ணு முதலிய எங்களை ஸ்ரீ ஜகதீசனுக்கு நிகராய் உரைக்கின்றானோ அம்மகா பாதகன் கொடிய நரகத்தையே அனுபவிக்கலாவான். ஆனால் எங்களை அப்பரமேசுரனுக்கு அடியார்களென்றே சொல்லுகின்ற மற்றவரிடத்தோ யாங்கள் மிகுந்த நேசத்தையே பாராட்டுகின்றோம். மகா பாதகத் தொழிற்காரர்களான துர்புத்திக்கொண்ட மற்றவர்களையெல்லாம் கொடிய சத்துருக்களாகவே மதிக்கலாகின்றோம். ஸ்ரீ மகேசுவரனை சம்புவேபதி; மற்ற யாங்களெல்லாம் பசுக்களே. தவிரவும் நாங்கள் யாவரும் ஸ்ரீ மகேசுவரனுடைய லிங்கங்களைப் பூமிதனில் விதிப்படி பிரதிஷ்டை பண்ணிப் பூஜைசெய்து வருவதே அதற்குத் திருஷ்டாந்தம். தம்மை அண்டியவர்க்கு அவரே போகத்தையும் மோக்ஷத்தையும் அருளுகின்றார். ஆகையால் யாவராலும் சரணமடையப்பெற்ற அப்பரமேசுவரனையே நீ யடைக்கலம் பெறல் வேண்டும். ஓ! மைந்தா! முந்தியே சுபாவத்தில் இவ்விதமாகவே யுந்தனுக்குரைத்திருக்கின்றேன். நீ ஸ்ரீ சர்வேசுவரனுடைய இப்பெருமைகளை எல்லாம் மோகத்தினால் மறந்துவிட்டாய்' யென்று பிரம்மனாலுரைக்கப் பெற்ற இச்சங்கதிகளை யெல்லாம் தக்ஷன் செவியுற்றதன்மேல் மனதினில் ஐசுவரியத்தை விரும்பிக்கொண்டு தவத்துக்குரிய விடத்தைப்பற்றி அவரை வினவுகையில் அப்பிரம்மனுரைத்ததாவது:—

கேளாய் தக்ஷா! நம்மனதிலுண்டான 'மானஸ'மென்ற தடாகத்தின் மங்களகர மான கரைக்குச் சென்று அங்கு ஸ்ரீ பரமேசுவரனைத் தவத்தினுற் களிப் பித்து அவரிடமிருந்து வேண்டிய வரனைக் கைக்கொள்வாயாக' என்றுரைத்துப் பிரம்மன் தன் புத்திரனை தக்ஷனை அனுப்பினர். பிறகு தக்ஷனும் அப்போது களிப்புற்று நற்புத்தியைக்கொண்டவனுகி அவர்சொல்லியவண்ணம் அவ்விடம் சென்று ஸ்ரீ பரமேசுவரனிடத்தே மனதை நாட்டிக்கொண்டு மாரிக்காலத்தில் மழையிலும், பனிக்காலத்திற் பனியிலும், கோடைக்காலத்தில் பஞ்சாக்கினி மத்தியிலுமிருந்துகொண்டே மூலாதாரத்தினக்கினிதனை மூட்டியவனுகி யிரு பத்தோராயிர வருடமளவு மிகுந்த கொடிய தவத்தைச் செய்தான்.

## 2. அத்தியாயம்.

பிறகு பிரம்மன் மைந்தனுன அத்தக்ஷன் முன்னர், ஸ்ரீ பரமேசுவர னுனவர், முனிச் சிரேஷ்டர்கள் கந்தர்வர்கள், கின்னரர்கள் இவர்களால் துதி கூறப்பெற்றவராகிப் பிரத்தியக்ஷமாயினர். அப்போது அத்தக்ஷனும் மிகுந்த சந்தோஷத்தோடு அம்மகேசுவரனைத் தரிசித்துப் பல சிறந்த துதிகளால் துதித்து அனேகம் முறை வந்தனம் செய்தான். பிறகு ஸ்ரீ பக வானும் அவனைத் திருக்கண்ணுற்றுக் குளிர்ந்த திருவுளம்கொண்டவராகி 'ஓ! தக்ஷா, உனக்கு யாம் மிகவும் பிரசன்னராகிவிட்டோம். உந்தனுக்கு வேண்டியவரனைக் கேட்டுக் கொள்வா"யென, தக்ஷனும் அத்திரு வசனத்தைக் கேட்டு மிகுந்த சந்தோஷங் கொண்டுரைத்ததாவது:—

"ஓ தேவாதி தேவா! மகா தேவா! மகா தேவா! அண்டியவரிடத்து நேசங்கொண்டவரே! சகல ஐசுவரியங்களும் நிறையப்பெற்றவரே, தகராகாய மத்தியில் விளங்கியிருப்போரே! பூமி, அந்தரிக்ஷம், சுவர்க்கம், பாதாளம், விசேட மாய்ப் பிரம்ம விஷ்ணுக்களின் லோகங்கள் இவைமுதலிய உலோகங்களையும் அடியேனுக் கீந்தருள வேண்டும்; மேலும் அங்கங்குள்ள எல்லோர்களும் எந்தன் ஆக்கினைக் குள்ளடங்கி நடக்கவேண்டும்; ஓ! ஸர்வேசுரா! தேவரீர் திருவருளால் எந்தனுக்குஎல்லாவிடத்தும் நல்லபூஜியதை உண்டாகவேண்டும். ஸ்ரீ பகவானும், மகா தேவனுமாகிய தேவரீரைத் தவிர மற்ற யாவரையும் யான் பஜனைபண்ணுவதில்லை. ஓ! கருணைக்கடலே! ஆனல் இத்தேவரெல்லாம் எந்தனைப் பூஜித்தல் வேண்டும். ஓ! சகல லோகங்களுக்கும் பாட்டனுரான ஸர் வேசுரா! மேலும் எந்தனுக்கு வேதத்திற் கரை கண்டவர்களான பல புத்தி ரர்களும் அனேக பெண்களுமுண்டாக வேண்டும். ஓ! தேவர்களைக் காக் கின்ற பரமசிவா! அடியேனுடைய கர்ப்பமதிற் பிறக்கலாகும் கௌரியம் மையை யான் தேவரீருக்குக் கொடுக்கவும், தேவரீர் அவளைத் திருமணம் செய்ய எந்தனை இரக்ஷிக்கவும் வேண்டும்" என, ஸ்ரீ மகேசுவரனும் இவ்வாறு முதலிய அவனது விருப்பங்களை மிகுதியாய்க் கொடுத்தருளி ஓ! தக்ஷா! நீ நீதிவழியிலேநடந்து வருவாயாகில் இவையெல்லாம் நமதாக்கினையின் படி மேலுக்குமேல் விருத்தியாகக் கடவன" வென்று திருவாக்கருளிவிட்டு ஸ்ரீ பரமேசுவரன் துரிதமாய் மறைந்தருளினர். பிற்பாடு தக்ஷன் ஸ்ரீ பரமே சு வரனிடமிருந்து வரம்பெற்றவுடன் மகா சந்தோஷம் கொண்டவனுகி, லோகு

நாதனாகிய தன் தந்தையான பிரம்மனை நினைக்க, அப்பிரம்மனும் அதனையுடனே அறிந்து மனதினில் நினைத்துக் கொண்டதாவது:—"ஓ! கோ! ஸ்ரீ மகா தேவன் பிரசன்னராகியும் நம்மைந்தன் சிற்றின்பத்திற்காக வரன் கேட்டது மிகவும் கஷ்டம். துன்பமே யற்ற பேரின்பமதிற் புத்தி நுழையாமற் போயிற்றே; ஐயோ! அதெப்போதும் தாண்டமுடியாத துக்கத்தைத் தருவிக்கலுற்றதே; ஓ! கோ! ஸ்ரீ சர்வேசுவரனுடைய திருவருளாலின்றி யாவருக்குத் தான் மோக்ஷத்தில் விருப்பமுண்டாகும்'' என்றுலோசித்துக் கொண்டு அப்பிரம்மதேவன் துரிதமாய் அங்கு வந்து அத்தக்ஷனால் வந்தனிக்கப்பட்டவராகி அவனை ஆசிர்வதித்தனர். பிறகு தக்கனுமுள்ளம் பூரிக்கப் பெற்றவனாகித் தந்தையாகிய அப்பிரம்மனை நோக்கி சந்தோஷத்தோடுரைத்ததாவது:—"தந்தாய்! எந்தனுக்கு மகா பெருமை பொருந்திய நேர்த்தியான ஓர் பட்டணத்தை அமைத்திடல் வேண்டும்" என, பிரம்மனும் அப்படியே ஆகட்டுமென்று பற்பல ஆச்சரியத்தோடு கூடியதும், மூவுலகினிலும் தக்ஷபுரி யென்று பிரசித்தி கொண்டதுமான வோர் மிக நேர்த்தியாகிய நகரத்தைச்சீக்கிரமாய் அமைக்க அவ்வாறு அமைக்கலானதைத் தக்கனும் அப்பிரமன் முகமாய்க் கேட்டவுடன் மிகவும் மனக்களிப்புற்றவனாகித் துரிதமாய் தன் நகரம் சென்று தன் வீட்டுக்குப் போய் பிரகஸ்பதியோடு கூடிய இந்திராதி தேவர்களாலும் சுக்கிராசாரியோடு கூடிய வசுரர்களாலும் சூரியன் முதலிய கிரகங்களாலும், திக்பாலர்கள் லோகபாலர்கள்முதலிய பின்னும் மற்றவர்களாலும் சேவிக்கப்பெற்றவனாகிப் பற்பல விரத்தினங்களால் செய்விக்கப்பட்ட விசித்திரமும் அற்புதமும் நேர்த்தியுமான சிங்காதனத்தில் வீற்றிருந்தான்.

பிறகு அவன் நாளடைவிலே பிரம்மாவின் புத்திரியான மகா சுந்தரியாகிய வேதவல்லி என்ற பெண்ணை மணம்புரிந்து மிகுந்த பிரதாபத்தோடு கூடியவனாகி மிகவும் ஸாத்துவீக தன்மையுடையவர்களான வாயிரம் புத்திரர்களைப் பிறப்பித்து அவர்களுக்கு அவன் முறைப்படி நாமகரணம் முதலிய சடங்குகளைச்செய்துவிட்டு அவர்களை நோக்கி "ஓ! புத்திரர்களே! நீங்கள் ஸ்ரீ பரமேசுவரனாகிய பராபரக் கடவுளைத் தவத்தினாற் சடிதியிற் சந்தோஷிப்பித்துச் சகல லோகங்களையும் சிருஷ்டி செய்யும் தன்மையைக் கைக்கொண்டு சீக்கிரமாய் வாருங்களென்று கேளீர் பிரம்மனோத்தமர்களே! தன் மக்களைத் தவம் செய்வதற்காக அனுப்பினான். பிறகு தக்கன் மக்களெல்லோர்களும் மானஸமென்றச் சிரேஷ்டமான தடாகத்துக்குச் சென்று ஸ்நானம் பண்ணி பரிசுத்தமான சித்த நிலையுடையவர்களும், பொறிகளின் அடக்கம் கொண்டவர்களுமாகி மற்றவர்களாற் செய்வதற்கு அசாத்தியமான கொடிய தவத்தைச் செய்தார்கள். அப்போது ஸ்ரீ நாரதமாமுனிவர் அவர்கள் தவஞ் செய்யுமிடத்திற்கு வாலாகையில் தவத்தையே தனமாய்க்கொண்ட அத்தக்கன் மக்கள் அம்மாமுனிவரைக் கண்டு அவரை முறைப்படி வந்தனித்து க்ஷேமத்தை விசாரிக்க எல்லோர்களும் மிகுந்த ஆனந்தமடைந்தார்கள். அப்போது அம்முனிவரும் "ஓ! தக்ஷன் மக்களே! நீங்கள் இங்கு எதற்காக மிகுந்த கொடிய தவத்தைச் செய்கின்றீர்க''ளென்று வினவ, அவர்கள்

"ஓ! ஸ்வாமி, ஸ்ரீ மகா தேவன் திருவருளால் எங்களெல்லோர்க்கும் ஜகங்களைச் சிருஷ்டிபண்ணும் திறமையுண்டாக வேண்டுமென்று தவம் செய்கிறோமென்று சொன்னார்கள். அது கேட்டு மாமுனிவரும் தக்கன் மக்களை நோக்கி யுரைததாவது:—"ஓ குழந்தைகளா! ஓ! கோ! கோ! தவஞ் செய்கிற உங்களுக்குக் கூடவென்ன மிகுந்தப் பிரமை? ஸ்ரீ மகாதேவனைத் திருப்தி செய்துவிட்டுப் பாவலேசமற்ற உங்களால் மிகவும் துக்கக்கரமான பிரம்மாவின் சிருஷ்டித் தொழிலானது பிரார்த்திக்கப் படுகிறதே! இப்பேர்க்கொத்த உங்களது பாட்டனான பிரம்மனுக்கு அதிக புத்திப் பிரமை நேரிட்டபடியால் ஸ்ரீ பரமேசுவரனுடைய கணத் தலைவரால் தலைவெட்டுப்படலாயிற்று. மேலும் அப்பிரம்மன் வெகு பெரியோர்களால் சபிக்கப்பட்டும் இருக்கின்றார். தவிரவும் அவர் ஒருக்கால் மிகவும் கர்வமடைந்தபடியால் பக்ஷிபுருவத்தைக் கொண்டு அப்பரமேசுவரனை யெட்டிப்பார்க்க முடியாமல் மிகுந்த வருத்த மடைந்திருக்கிறாரன்றோ! இன்னும் அவர் பிறப்பு முதலிய மிகுந்த துக்கங்களை யடைந்து இராக்ஷஸர்களாலும் அசுரர்களாலும் இன்னும் மற்றவர்களாலும் தினம்தோறும் வாதிக்கப்படுகின்றன ரன்றோ! சிருஷ்டித் தொழிலானது கொஞ்சம் சுகமேயல்லாமல் இவ்விதமா யெல்லாம் மிகுந்த துக்கரமா யிருக்கின்றதல்லவோ.

ஆகையால் நீங்கள் மிகவும் துக்கத்திற்கே முக்கிய விருப்பிடமான விச்சிருஷ்டித்தொழில் ஆசையை யொழித்துவிட்டுத் தவத்தினால் ஸ்ரீ பரமேசுவரனாகிய மகேசுரனைக் களிப்பித்துக் கொஞ்சமேனும் துன்பமேயற்ற வொப்பில்லாத பேரின்பத்தை அடையலாவீர்கள்'' என்று அவ்விதமாக ஸ்ரீ நாரத முனிவர் அவர்களுக்குக் கேவலம் சைவமார்க்கமான தத்துவ ஞானத்தை உத்தேசித்துவிட்டுக் கேளீர் தரணி தேவர்களே! தமதிச்சையின்படி வானத்திற் சென்றனர். அது கேட்டு மகாத்துமர்களான அவ்வெல்லோர்களும் அப்படியே மனதினில் தீர்மானித்துக் கொண்டவர்களாகிப் பேரின்பத்தை நாடியே ஸ்ரீ ஸர்வேசுவரனைத் தவத்தினால் அருள்புரிவித்துக் கொண்டு மறுபிறப்பற்ற மோக்ஷ ஸாம்பிராஜியத்தை அடைந்தார்கள்.

## 3. அத்தியாயம்.

பிறகு தக்கன் அச்சங்கதியை யறிந்து மிகவும் மனத்துயரமுற்றவனாகி முன்போல் மறுபடியுமாயிரம் பிள்ளைகளைப் பிறப்பித்து அவர்களுக்கு வேண்டிய நாம கரணம் முதலிய சடங்குகளைச் செய்து முடித்து பிறகு அப்புத்திசாலியானவன் ஸகல லோகங்களுக்கும் சிருஷ்டிபண்ணும் திறமையைப் பெறுவதற்காக அவர்களை மனப்பிரீதியோடு தவத்திற்கு அனுப்பினான். அப்படியே அவர்களும் மிகுந்த கொடிய தவத்தைச் செய்ய எத்தனிக்கையில் ஸ்ரீ நாரத முனிவர் துரிதமாய் அங்கு வந்து சிருஷ்டித் தொழிலை இகழ்ந்து அவர்களுக்கு மோக்ஷத்திலே புத்தி பதியும்படி செய்துவிட்டு முன்போலாகாயம் சென்றுவிட்டனர். பிறகு அவர்களும் ஸ்ரீ பரமேசுவரனைத் தவத்தினால் திருப்திசெய்து அவரது அருள்பெற்று தாயின் வயிற்றினிற் பிறக்கும் நினைப்பிற்கே இடமில்லாத மோக்ஷபதவியை அடைந்துவிட்டார்கள். தக்கன் அந்த

விருத்தாந்தத்தையும் அறிந்து மகா கோபங்கொண்டவனாகி இனி ஆணைச் சிருஷ்டிப்பதை விட்டு மிகுந்த சௌந்திரியமுள்ள தேகத்தையுடையவர்களும், ஸகல இலக்ஷணங்களோடும் கூடியவர்களுமான இருபத்து மூன்று கன்னிகைகளைச் சிருஷ்டித்து அவர்களைத் தருமர், பிருகு, மரீசி, புலத்தியர், ஆங்கிரஸர், புலஹர், வஸிஷ்டர் அத்திரி இவர்கள் முதலிய தவசிகளுக்கு முறைப்படி கொடுத்து விநோதமான கலியாணத்தை நடத்தினான்.

பிறகு தக்கன் பெண்களும் மிகுந்த சௌந்தரியம் பொருந்திய அநேகம் புத்திரர்களையும் மிகுந்த காந்தியுடைய அநேகம் பெண்களையும் பெற்றார்கள். அத்தக்கன் இவ்விதமாய்ப் பல தௌகித்திரர்களாலும் தௌகித்திரிகளாலும் சுற்றிலும் சூழப்பெற்றவனாகிப் பின்னும் மிகுந்த வொளி பொருந்திய அசுவதி முதல் ரேவதி வரையிலான இருபத்தேழு பெண்களைச் சிருஷ்டித்து அப்பெண்களெல்லோர்களையும் சந்தோஷத்தை அளிக்கலுற்ற சந்திரனுக்கு விவாகம் செய்து கொடுத்தான். பிறகு அச்சந்திரன் அவ்வளவு பெண்களில் கிருத்திகை உரோகணி யென்பவர்கள் மீது மட்டில் மிக நேசத்தைப்பாராட்டி வந்தான். அதனால் மற்றப்பெண்கள் அதிகத் துக்கங்கொண்டு அத்தக்கனிடம் அறிவித்ததாவது:—"ஓ தந்தாய்! சந்திரன் கிருத்திகை உரோகணிகளிடத்தில் ரமிப்பது போலெங்களிடத்தில் ரமிப்பதில்லை" யென அது கேட்டுத்தக்கனும் கோபாவேசம் கொண்டவனாகிக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது சிரேஷ்டனான அச்சந்திரனை க்ஷீணிக்கக் கடவாயென்று சபிக்க, அப்படியே சந்திரனும் பதினைந்து நாட்களின் அளவில் மிகவும் குறைந்துவிடலாகிப் பதினாறிலொரு பாகத்தை மட்டில் மிச்சமாய்க் கொண்டு இந்திரனிடத்திற் சரணமாக அடைந்தான்.

அப்போது இந்திரனும் அச்சந்திரனை நோக்கி வசன முரைத்ததாவது:—"ஓ! சந்திரா! நீ முந்தி விக்கினேசுவரனிடத்துச் சாபம்கொண்ட பொழுது பிரம்மா விஷ்ணுக்கள் முதலிய தேவர்களால் அவ்விநாயகக் கடவுளை அருள்புரிவிக்கப் பெற்றவனாகி அச்சாபத்தினின்று விடுபட்டிருக்கின்றாயல்லவோ! ஆகிலும் இப்போதுகூட வருஷந்தோறும் விநாயக சதுர்த்தியாகிய ஓர் தினத்திலுந்தனைப்பார்ப்பது சரியல்லவென்று உந்தன் முகத்தையொருவரும் பார்ப்பதில்லையன்றோ? இப்பேர்க்கொத்த தோஷமொன்றிருப்பதோடு கூட இதுவும் நேர்ந்து விட்டதல்லவோ! ஆகையால் இப்போது ஜகங்களுக்குப் பிரபுவான பிரம்மனிடத்து நீ இதனை அறிவித்து அவரால் அத்தக்கன் சாபத்தினின்று விடுவித்துக்கொள்ளலாவாயென்று கேளீர் முனிவர்களே! மகாபுத்திசாலியான அவ்விந்திரன் சந்திரனை அனுப்பலானான். அவனும் அப்படியே ஆகட்டுமென்று புறப்பட்டுத் துரிதமாய்ப் பிரம்மனிடஞ்சென்று தண்டம்பண்ணி அச்சந்திரன் தக்ஷனுடைய சாபத்தைவிலக்கும்படி வேண்டிக்கொண்டான். அப்போது அவ்வசனத்தைக் கேட்டுப் பிரம்மனுரைத்ததாவது:—"ஓ! இந்திரா! மிகவும் கொடிய மனதைக்கொண்ட அத்தக்கன் நமது வார்த்தைகளைக் கேட்பதில்லை; அவன் நம்மிடத்திற் கூட கோபத்தைப் பாராட்டுகின்றான். ஆகையால் கேளாய் புத்திசாலியான சந்திரா! நீ மகேசுவரனான ஸ்ரீ சதாசிவனிடம் சென்று இதனை அறிவித்துக்கொள். அவரோ

முந்திக் காலகூட விஷத்தையுண்டு தேவர்களைக் காப்பாற்றியிருக்கின்றார் மேலும் மகா கொடியவனாகிய இயமனைக்கொன்று மார்க்கண்டேயனை இரக்ஷித்திருக்கிறார்'' என, சந்திரனும் இவ்வாறு பிரம்மன் வசனத்தைக் கேட்டுக் கைலைகிரி சென்று நந்திகேசுவரன் மூலமாய் ஸ்ரீ மகா தேவன் சன்னிதியடைந்து மிகுந்த பக்தியோடு வந்தனித்துப் பற்பல துதிகளால் தோத்திரம் பண்ணியதன்பேரில் ஜகதீசன் பிரசன்னராகும்போது சங்கதிகளைத் தெரிவிக்க, பிறகு பார்வதி பதியான பகவானும் மனமிரங்கியவராகிப் பதினாறிலொரு பாகத்தை மட்டில் மிச்சமாய்க்கொள்ளலான அச்சந்திரனுக் கபயமளித்து ஓர்கண மாத்திரம் அவனைத் தம்முடிதனில் அலங்காரமாய்ப் பூண்டு 'ஓ சந்திரா ஸகல லோகங்களுக்கும் ஈசுவரனாகிய நமது திருவாக்கினையின்படி நீ சந்தோஷத்தோடு சீக்கிரமாய் முன்போல் வளர்ந்துவிடக் கடவாயென்று ஸ்ரீ சம்பு வானவர் வரம்கொடுக்கையில் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் "ஓ! சர்வேசுவரா! தேவரீர் மகிமை யுலகுதனிலறியப்படாமற் போகும்; ஆகையால் ஓ! சந்திரசேகரா! ஓ! கருணைக்கடலே! தேவரீர் லோகரக்ஷணார்த்தமாய் சந்திரனுக்கு மாதம்தோறும் வளருதல் குறைதல் ஆகிய விரண்டையும் அருளல் வேண்டும். பிறகு அவ்வடையாளத்தை யுலகினர் அறிந்து, தேவரீருக்கு அடியார்களாகி, வேண்டிய பயனைக் கைக்கொள்ளலாகும்'' என, அடியார்களுக்கு நேசனும், ஸகல பிரபஞ்ச சுவரூபியும், பிரபஞ்சத்தை யிரக்ஷிப்பதில் முயன்றவருமான ஸ்ரீ மகேசுவரன் அவர்களது வசனத்தைக் கேட்டருளி அவ்வாறே யருள்செய்து அச்சந்திரனை அனுப்ப, சந்திரனும் அவரது தயவுதனைக் கைக்கொண்டவனாகி அத்தேவாதிதேவனை வந்தனித்துக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மிகுந்த சந்தோஷங்கொண்டவனாகித் தனது இருப்பிட மடைந்தனன்.

## 4. அத்தியாயம்.

பிறகு தக்கனும் அச்சங்கதிகளை யெல்லாம் கேட்டு மகா கோபாவேசங் கொண்டவனாகி "ஓ! நம்மாற் சபிக்கப்பட்ட விச்சந்திரனைக்கூட மகா தேவன் எவ்வாறு விடுவிக்கலானார்'' என்று ஸ்ரீ சர்வேசுரனை மிகவும் கொடுமையாய் இகழலாகையில் அதனைத் தவசிகளிற் சிறந்தவரான புலகமாமுனிவர் கேட்டு, "ஓ துராத்துமாவான தக்ஷப்பிரஜாபதியே! நீ சர்வேசுவரனை நிந்திப்பதால் ஸகல ஐசுவரியங்களும் நாசமாகி விடும்; மேலும் ஸகல தேவர்களாலும் இகழப்படலாவாய்; அடா! அந்த மகாத்துமாவினால் உந்தன் சாபத்துக்கும் ஓர்வழி விடப்பட்டிருக்கின்றது. இன்னும் சில காலத்தில் அம்மகாதேவன் உந்தன் பெண்ணையும் கலியாணம் செய்து கொள்ளப்போகின்றார்'' என, இவ்வாறு அவரது வசனத்தைக்கேட்ட பிறகு கோபத்தை விட்டு சந்தோஷமாய் வாழ்ந்து வந்தான். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இப்படி அவன் சந்தோஷமாய் வாழ்ந்துகொண்டிருக்கும் அளவில் அவனிடத்து ஸ்ரீ கௌரியம்மை பெண்ணாக அவதரித்த விநோத விருத்தாந்தத்தை உங்களுக்கெடுத்துக் கூறுகின்றேன்.

பூர்வத்தில் ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்கள் கைலைகிரிதனில் பிரம்ம விஷ்ணுக்களாலும் இன்னும் மற்றத் தேவர்களாலும் ஜாஜ்வலியமாய்

விற்றிருக்கும் அளவில் அப்போது அப்பவானியம்மை யெழுந்து ஸ்ரீ பரமேசுவரனைத் தண்டம் பண்ணி "ஓ! தேவாதி தேவரான பகவானே! சர்வஞ்ஞா! ஜகதீசா! பிரபஞ்சச் சுவரூபியே! பிரபஞ்சங்களைக் காப்பதில் முயன்றிருப்பவரே! ஸ்தாவர ஜங்கம ரூபியான இப்பிரபஞ்சமானது தேவரீரிடமிருந்து உண்டாகலான வகையை எந்தனுக்கு எடுத்துரைத்தல் வேண்டும்" என்று தேவியால் வினவப்பட அப்பொழுது உலகங்களுக்கெல்லாம் சுகத்தை அளிக்கப்பெற்ற ஸ்ரீ சங்கரன் உண்மையாய் வந்தவழியோடு ஜகங்களின் சிருஷ்டியைப் பற்றியும் அவற்றின் செல்லுதலைப்பற்றியும் எடுத்துரைத்தானவுடன் தேவியானவள் ஸ்ரீ தேவேசனைப் பார்த்து மறுபடியும் குதூஹலத்தோடு கூறியதாவது:—"ஓ! ஸத்தியஞானனந்த பிரபுவான பரமசிவா! தேவரீருடைய அற்புதமான சரீரமும் உருவமும் யானே! ஓ அஷ்டைசுவரியங்களையும் நிரம்பப்பெற்ற பரமேசா! தேவரீருக்கு எந்தனைத் தவிர வேறு சரீரம் உருவம் இல்லையன்றோ! அடியாள் வசத்திலே ஸகல ஜகங்களும் இருந்துகொண்டு அவைகள் சுபாவத்தின்படி ஆடிவருகின்றது" என, தேவியால் கர்வத்தோடு சொல்லப்பட்ட இவ்வாறு வசனத்தைக்கேட்டு ஸ்ரீ மகேசுவரன் "ஓ! கலியாணி! நமது மகிமையை நீ அறியவில்லை அல்லவா? நம்முன்னமிருந்துகொண்டே கொஞ்சமேனும் லஜ்ஜையின்றி 'உந்தனையே மேன்மையாய் சொல்லிக் கொண்டாயல்லவோ! நாமோவென்றால் உன்னிடத்திலும் மற்றெல்லாரிடத்திலும் எப்போதும் பரிபூரணரும், பரஞ்சோதியும் பரமாத்தும ரூபமாய் விளங்கியிருந்துகொண்டு சூத்திரதாரன் பதுமையை ஆட்டிவைக்கிறதுபோல் சிருஷ்டி பண்ணி ஆட்டிவைக்கலாகின்றோம். அடி, கொஞ்சமேனும் நிந்தைக்கிடமற்ற மாதரசே? நமது ஆக்ஞையின்றிச் சகல ஜகங்களும் அசைவதேயில்லை; அதனை இதோ பார்! நம் முன்னரே காண்பிக்கின்றோ"மென்று திருவாக்கருளிவிட்டு ஸச்சிநாந்தமங்களமூர்த்தியும், ஸர்வப் பிரபஞ்ச சுவரூபியுமான ஸ்ரீ சர்வேசுவரனனவர் கேளீர் பிராம்மணோத்தமர்களே! அப்பார்வதி தேவியின் முன்னிலே ஸகல ஜகங்களையும் நடத்திவைக்கலுற்ற தமது சக்தியைத் தமக்குள்ளே யடக்கிக் கொண்டு ஜோதிரூபமாய் வீற்றிருந்தனர். அப்போது சகல ஜகங்களும் கேவலமுருவமும் அசைவற்றுப் போயின. இரவில்லை பகலில்லை. சூரியனில்லை சந்திரனில்லை. எங்கும் குருட்டிருளால் நிறையப்பட்டுக் கேவலம் பயங்கரமும் உணர்வற்றதுமாகிவிட்டன. கேளீர்! பிராம்மணோத்தமர்களே கிரி ராஜபுத்திரியானவள் இவ்வற்புதத்தைக் கண்டவுடன் மிகவும் பயங்கொண்டவளாகிப் பராபர குருவாகிய ஸ்ரீ மகேசுவரனை வந்தனித்துக் கேளீர்! தரணித்தேவர்களே! இரண்டு கைகளையும் அஞ்சலிக்கொண்டவளாகி மற்றெங்கும் புததிபைச் செலுத்தாமல் ஒப்பற்ற வாக்குகளால் துதி செய்தனள்.

## 5. அத்தியாயம்.

பிற்பாடு ஸ்ரீ பரதேவதையானவள் மகாதேவனைப் பார்த்துப் பிரார்த்தித்துக் கொண்டதாவது:—"ஓ! தேவாதி தேவா! மகாதேவா! அடி

யார்க்கு நேசனே! சங்கரா! ஜயாவிஜயீபவா! ஓ! சகலஜகங்களேயும் காத்தருள்வோரே! தேவரீர் மகிமையை அடியாளறியக் கூடவில்லே! ஓ! தேவதேவா! எந்தன் பிழையைப் பொறுத்து எந்தனே இப்போது இரக்ஷித்து அருளவேண்டும்! ஓ! மகேசுவரா! இவ்வெல்லாவற்றையும் முன்போல் உயிர் பிழைப்பித்தல் வேண்டும். ஓ! மகேசுவரா! மகாதேவா! தேவரீருக்கு எது தான் அஸாத்தியம்'' என்று இவ்வாருய்க் கௌரியம்மனுல் பிரார்த்தித்துக் கொள்ளப்பட்ட ஸ்ரீ பகவான் சந்தோஷ சித்தமுடையவராகி முந்திப்பதிஞேரு கோடி ருத்திரர்களேயும் தூக்கத்தினின்றெழுப்பியதுபோல் எழுப்பிவிட்டனர். கேளீர்! வேதியர்களே! பிறகு அவ்வுருத்திரர்களெல்லாம் பரபரப்போடும் சிவபிரானே மனதினில் தியானித்துக்கொண்டு இவையெல்லாம் ஸ்ரீசிவபிரான் திருவிளையாடலென்றே நினேத்து அவர்கள் ஸகல பிராணிகளேயும் எழுப்பிவிட மனங்கொண்டவர்களாகி மிகவும் காடாந்தகாரமா யிருந்த விச்சகமதிற்குப் பெருமை பொருந்திய க்ஷேத்திரமான திருவிடைமருதூர் சேர்ந்து, மிகுந்த சந்தோஷம்கொண்ட மனதைக் கொண்டவர்களாகிச் சிவராத்திரி என்ற பாவனேயோடு நான்கு சாமங்களிலும் சிவபூஜை செய்தார்கள்.

பிற்பாடு மகேசுவரனும் அவர்கள் முன்னர் பிரத்தியக்ஷ மாகையில் அவரைக் கண்டவுடன் அவர்கள் கைகளேக்கட்டிக்கொண்டு கேளீர்! முனிவர்களே! தரைமீது தண்டம்போல் ஸாஷ்டாங்கமாய் நமஸ்காரம்பண்ணித் துதி செய்ததாவது:—விசுவஸ்வரூபனே போற்றி, பரமாத்துமனேபோற்றி, சுயாதீனனே போற்றி, மகாப்பிரளய காலத்தில் உலகங்கள் யாவையும் ஒரே கபளமாய்ப் பக்ஷிப்போனே போற்றி, சூலபாணியேபோற்றி, அண்டியவர்களே வீரர்களாக்க வுற்றவனே போற்றி, மகா வீரனேபோற்றி; ஓ! தேவேசா! தேவரீர் திருவருளால் ஸ்தாவர ஜங்கம ரூபமான விச்சகம் முன்போல் அறிவுகொண்டு எழுந்திருக்க வேண்டு''மென, ஸ்ரீ மகாதேவனும் அவர்களது வசனத்தைக் கேட்டு அப்படியே ஆகக்கடவது என்று அவர்களுக்குத் திருவாக்கருளிவிட்டுக் களிப்புற்ற திருவுளத்தோடு துரிதமாய் அந்தர்த்தானமாயினர். பிறகு உடனே கேளீர்! முனிவர்களே! விஷ்ணுபிரம்மர்கள் முதலிய சகல தேவர்களும் சூரிய சந்திரர்கள் முதலியவெல்லா ஜீவராசிகளோடும் சிவாக்கினேயின்படி சுய அறிவு கொண்டு துரிதமாய் எழுந்து விட்டார்கள். அடர்ந்திருந்த விருள் நீங்கியவுடன் ஜகமுழுதும் ஒளி பரவலாயிற்று. அதன் பிறகு எல்லா தேவர்களும் தேவாதி தேவனுகிய ஸ்ரீ சூலபாணியின் மகிமையை யறிந்துகொண்டு பரிசுத்தமான சிவபூஜையைச் செய்தார்கள்.

பின்பு ஸ்ரீதேவேசன் அந்தர்த்தானமாகும்போது அவ்வுருத்திரர்களேத் திருக்கண்ணுற்று, ஓ! ருத்திரர்களே! உங்களுக்கு வேண்டியதைத் துரிதமாய் அருளுகின்றேமென்று கிருபையுடன் கூறப்பட்ட ஸ்ரீ சிவபிரானது திருவசனத்தைக் கேட்டு, "ஓ! தேவதேவேசா! இரவுதனிற் சாமந்தோறும் இம்மாதிரியாய்ப் பகவானுகிய ஸ்ரீ மகேசுவரனேப் பூஜை செய்யவுற்ற மானிடோத்தமர்களுக்குத் தேவரீரது திருவருளால் ஓ! கருணேக் கடலே! மகா சிவராத்திரி புண்ணிய காலத்திற் பூஜைசெய்த பயனுண்டாக

வேண்டும்'' என, ஸ்ரீ ஸர்வேசுவரனும் அப்படியே ஆகக்கடவதென்று மறைந் தருளியவுடன் அவ்வுருத்திரர்கள் தங்கள் இருப்பிடஞ்சென்று விட்டார்கள். பிற்பாடு விஷ்ணு முதலிய தேவர்கள் மலைகளில் மேன்மைகொண்ட கைலை கிரிக்குச் சென்று அங்கு பினாகமென்ற தனுசைக்கொண்ட ஸ்ரீ ஸர்வேசுவர னைத் தரிசித்து மிகுந்த பக்தியோடு வந்தனித்து அப்போது வசனமுரைத்த தாவது :—''ஓ! பிராணிகளைப் படைக்கலுற்ற பகவானே! இவ்வளவு கால மாய் நாங்களெல்லோர்களும் அந்தகாரத்தினற் சூழப்பெற்றவர்களாகி கருமா னுஷ்டானங்கள் அற்றிருந்தோமே! இதற்காகச் சகல பாவங்களையும் தொலைப்பிக்கலுற்ற ஓர் சிறந்த பிராயச்சித்தத்தைச் சொல்லி யருள வேண்டு''மென, ஸ்ரீ பரமேசுவரனும் அவர்களது வசனத்தைக்கேட்டு மந்த காசமுற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகி ''ஓ! சகலர்களான தேவர் களே! நமதாக்கினையால் உங்களுக்கு யாதொரு பாவமுமில்லை. இவையெல் லாம் இக்கௌரி தேவியாலன்றோ கர்வத்தினற் செய்யப்பட்டது. ஓ! தேவர் களே! நீங்கள் இனி இன்றுமுதல் நித்திய கருமங்களைநடத்தி வாருங்கள்'' என்று ஸ்ரீ சங்கரன் திருவாக் குரைத்து அவர்களை யனுப்பினர்.

பிறகு தேவர்களும் அதேவிதமாய்ப் புறப்பட்டுச் சந்தோஷமாய்த் தங்க ளிருப்பிடஞ்சென்று அவரவர்கள் நித்தியக் கடன்களைச் செய்துகொண்டு அப் போது சிவாக்கினை தவறாமல் நடந்து வந்தார்கள். பிற்பாடு கௌரியம்மை பரபரப்போடு எழுந்து அஞ்சலிகொண்டவளாகி ஸ்ரீ மகாதேவனை நமஸ்காரம் பண்ணிவிநயத்தோடு திருமுகம் வணங்கலுற்றவளாகி ''ஓ! பகவானே! தேவ தேவேசா! சர்வஞ்ஞா! ஜகப்பிரபோ! சகல பிரபஞ்சங்களுக்கும் கருணைக் கடலான பரமசிவா! எந்தனுக்குத்தான் அப்பாவம் என்பது எவ்வாறு தகும்' என்பதைச் சொல்லி யருளவேண்டும்'' என, ஸ்ரீ மகா தேவன் வினோத மான சரித்திரங்களைக் கொண்ட தேவியால் அவ்வாறு கேட்கப்பட்டவுடன் புன்னகைப் புடைய திருமுகத்தினற் பிரகாசிக்கலுற்ற கம்பீரமான வாக்கி னல் வசனமுரைத்ததாவது:—

''கேளாய்! பெண்ணே! நீ நம்முன்னர் இருந்து கொண்டு உந்தனை உயர்த்திப் புகழ்ந்து கொண்டாய். இப்போது அத்தோஷத்தினலல்லவோ இவ்வுலகம் இருளினல் சூழ்ந்து கொள்ளப்படலாயிற்று; ஓ! கலியாணி! அப்பாவத்திற்காக நீயே பிராயச்சித்தம் பண்ணிக் கொள்ளவேண்டும். ஏனென்றல் நீ சகலப் பிரபஞ்சங்களுக்கும் தயவுடைய தாயாரல்லவோ!'' என, இவ்வாறு ஸ்ரீ மகேசுவரனுடைய திருவசனத்தை கேட்டு பிறகு பார்வதியம்மையும் அப்படியே பாக்கியமென்று ஸ்ரீ சர்வேசுவரனைத் தவத் துக்குரிய விடத்தைப்பற்றி வினவலாகையில் ''கேளாய்! பெண்ணரசே! இயமனுக்குச் சகோதரியான இயமுனையென்று உலகினிற் பிரசித்திகொண்ட மங்களகரமான ஓர் புண்ணியநதியின் மீதுள்ள வெண்மையான விதழ்களை யுடைய தாமரை வனத்தில் நீயோர் சங்கினுருவத்தை யெடுத்துத் தவம் செய்துகொண்டிரு; அப்போது தக்ஷப்பிரஜாபதி அதனருகினில் வந்து சிறந்த வுருவம்கொண்ட நேர்த்தியான அச்சங்கைக் கண்டு அதனை யெடுக்கலாவான்,

அப்போது நீயோர் கன்னி யுருவமாகி விடு, பிறகு அத்தக்கனும் அப்போது சகல அவயவங்களும் சுந்தரமாய் அமையப்பெற்ற உந்தனை எடுத்துக்கொண்டு மெத்தக் களிப்புற்ற மனதுடன் உந்தனை ஓர் பெண்ணாக வளர்த்து வருவான். பிறகு பதினைந்து வயது முடிந்தவுடன் நம்மிருவர்களுக்கும் கலியாணம் நடக்கலாகு''மென்று ஸ்ரீ பரமசிவன் பவானியம்மைக்குத் திருவாக்கு அருளி யனுப்பினர்.

பூஜிக்கப் படவுற்ற அவ்வம்மையும் அப்படியே பாக்கியமென்று புறப் பட்டுத் துரிதமாய் யமுனைக்கு வந்து அற்புதமானவோர் சங்கவுருவத் தைக் கொண்டவளாகி யங்குள்ள நேர்த்தியான ஓர் தாமரை யிதழ்தனி லிருந்து மனமதில் ஸ்ரீ பரமேசுவரனைத் தியானம் பண்ணிக்கொண்டே யுறுதியான பக்தியோடு மிகுந்த கொடிய தவத்தைச் செய்துகொண்டிருந்த னள். இப்படி யிருக்குமளவில் சூரியன் மகராசியிலிருக்கும்போது மகா நக்ஷத் திர தினத்தில் அத்தக்கன் தன் மனையாளோடுகூட விரதத்தைக் காப்பவனுகி, தனது எல்லாப்பெண்களுடனும், தேவர்களுடனும், இருடிகளுடனும் அங்கு வந்து நியமத்தோடு ஸ்நானம் செய்கையில் முன்னிலையிலோர் மரைமலர் மீது அச்சங்கத்தைக் கண்டான். அவ்வற்புதமான சங்கத்தைக் கண்டவுடன் அதனையவன் சீக்கிரமாய் ஆதரவுடன் எடுக்க, அவ்வாறெடுத்த மாத்திரத்தில் தக்ஷனுல் அது அற்புதமான சங்கமாய் காணப்படவில்லை. ஆனுல் அகண்ட விழி களைக் கொண்டதும், சகல அவயவங்களும் சுந்தரமாய் அமையப்பெற்றது மான ஓர் பெண்குழந்தையாகக் காணப்பட்டது. உடனே இளங்குழந்தையான பெண்ணை ஸ்ரீ கௌரியம்மையென்றே கொண்டு ஆனந்தமடையவுற்ற கண் களைக் கொண்டவனுகி அக்குழவியை யெடுத்து ஸ்நானம் பண்ணி நின்ற மனை யாளுடைய கைகளிற் சீக்கிரமாய்க் கொடுத்தனன். பிறகு வேதவல்லி யென்ற அவனது மனையாளும் மிகுந்த சந்தோஷத்தோடு கூடியவளாகிச் சீக்கிரமாய்க் குழந்தைதனைக் கண்களிலொத்திக் கொண்டு அமுதமயமான முலைப்பாலைக் குடிப்பித்தனள். பிற்பாடு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வேதவல்லி யானவள் சுற்றிலும் எல்லாத் தோழிகளாலும் சூழப்பெற்றவளாகி தனது பெண்களோடு கூடத் துரிதமாய்த் தன் வீடுசென்றனள்.

## 6. அத்தியாயம்.

பின்பு தக்ஷனும் அக்குழந்தைக்கு நாமகரணம் முதலிய சடங்குகளை முடித்துத் தேவர்களாலும் முனிவர்களாலும் சூழப்பெற்றவனுகித் துரிதமாய் வெகு சந்தோஷத்துடன் வீடு சேர்ந்தனன். கௌரியம்மையும் தாய் தந் தையர்களுக்கு வெகு சந்தோஷத்தை யுண்டு பண்ணிக்கொண்டு நாளளவிலே வளர்ந்து வந்தாள். இப்படி ஐந்து வயது சென்றவுடன் ஸ்ரீ பரமேசுவரனைத் திருமணம் செய்ய விருப்பிய வப்பெண்ணுக்குத் தவம் செய்வதில் மனதுண் டாயிற்று. பிறகு மகாமங்களகரமான அப்பெண்ணனவள் புத்தி யைத் தீர்மானித்துக் ;கொண்டவளாகித் தனக்கனுகூலர்களும் மெத்த நேச முடையவர்களுமான பெற்றோர்களைத் தான் தவஞ்செய்வதற்குரிய தவச்சாலை வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, அப்படியே அப்பெற்றோர்களும் மிக

வுத்தமமானதோர் தவச்சாலையைக் கட்டுவித்து, மேலும் அனேக விருத்த ஸ்திரீ களையும், தோழிகளையும் ஊழியத்திற்காக நியமித்து வெகு சந்தோஷத்தோடு அவ்வம்மையையும் அங்கிருக்கச் செய்தனர். பிறகு அக்கௌரியம்மையும் தவசிகளிற் சிறந்த அனேக முனிவரிடத்து அனுமதி பெற்றவளாகி அங்கு நிலையாயிருந்து கொண்டு மிகுந்த கொடிய தவத்தைச் செய்யலானாள். அப்போது வேதவல்லியென்ற தக்கன் மனையாளானவள் "மகா பரிசுத்தமான தவவிருப்பம் இக்குழந்தைக்கு எவ்வாறுண்டாயிற்று" என்று வினவினாள்.

நேர்த்தியான புன்னகைப்புடைய அம்மனையாளை நோக்கித் தக்கன் கூறியதாவது:—"ஓ! மாதரசே! இவள் பகவதியும், ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரனுக்கு நாயகியுமான கௌரியம்மை. தவத்தின் மகிமையால் நமக்குப் பெண்ணாய் வாய்த்திருக்கின்றாள்; கேளாய்! பழிப்பற்றமானே! அதனால் நான் இப்போது மிகவும் பாக்கியசாலியாகின்றேன். நீயும் மெத்தப் பாக்கியசாலியாகின்றாய்'' என இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டு அத்தக்கன் மனைவியானவள் "ஓ! கோ! யாம் கிருதார்த்தையாகி விட்டோம்' என்று நிச்சயித்துக் கொண்டவளாகி யுள்ளம்பூரித்திருந்தாள்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது கௌரியம்மையானவள் ஸ்ரீ சிவபிரானிடத்தே மனதை நாட்டிக்கொண்டு தனக்குப் பன்னிரண்டு வயதாகுமளவும் தியானம் செய்வதிலும், தோத்திரம் பண்ணுவதிலும் முயன்றவளாகித் தவம் செய்து கொண்டிருப்பதை அப்போது பரமாத்துமாவாகிய ஸ்ரீ சாம்பசிவன் அறிந்து கொண்டு, ஓர் பிராம்மண உருவம் கொண்டவராகிக் கௌரியம்மையது தவச்சாலையின் வாசற்படிக்கு விஜயமாகி அவ்வம்மைக்கு அறிவித்தனர். உடனே கௌரிதேவியும் எழுந்து "மகா சிவபக்தரான ஓரந்தணர் வந்திருக்கிறார்' என்றறிந்து அச்சாலையினின்று வெளிச்சென்று அத்தக்கன் குமாரியானவள் பிராம்மணோத்தமரைக் கண்டு ஆதரவுடன் வந்தனித்து அவரைச்சாலைக்குள் அழைத்து வந்து அம்மகாத்துமருக்கு மிகவும் பெருமை பொருந்திய வோர் ஆதனமளித்து அர்க்கிய பாத்தியம்முதலிய உபசாரங்களால் மிகுந்த பக்தியோடு அவரைப் பூஜைசெய்ததன்பேரில் ஓ! சுவாமி! தேவரீருக்கு என்ன வேண்டுமென்று நேர்த்தியாய் புன்னகைப்போடு அவரை வினவ, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இவ்வாறுரைக்கலான அக்கௌரியம்மையை நோக்கி அவர் திருவாக்கருளியதாவது:—

"ஓ! கலியாணீ நீ இப்போது சந்தோஷமாய் நிற்கலாகையால் எந்தன் கைதனைத் திரிதமாய்ப் பற்றுவதற்கு எந்தனுக்கு மெத்தக் காதலுண்டாயிருக்கின்றது. அதை நீ நிறைவேற்றி வைத்தால் யான் கிருதார்த்தனாகி விடுவேன்'' என, இவ்வாறு அவரதுவசனத்தைக் கேட்டவுடன் அப்போது கௌரியம்மை மிகவும் மனம் நொந்தவளாகிக் கைகளாற் காதுகளைப் பொத்திக் கொண்டு மகா கோபத்துடன் வசனமுரைத்ததாவது:—"அடா! மூடா! பரமாத்துமாவாகிய ஸ்ரீ ஸதாசிவனுக்குத் தருமபத்தினியாகுதலை விரும்பிய எந்தனைக் கொஞ்சமேனும் பயமில்லாமல் இங்கு இவ்விதமாய் இவ்வாறுரைக்கலானாய்? நான், பராபரக்கடவுளாகிய ஸ்ரீ மகா தேவனைத் தவிர மற்றெந்தத்

தேவனையும் விரும்பவில்லை'' என்றனள். இவ்வாறு அவ்வளது வசனத்தைக் கேட்ட பிராம்மணோத்தமன் வெகுகோபங்கொண்டவராகி "அடி,பெண்ணே! உந்தனுக்கு அத்தேவர் எளிதனிற் கிடைப்பாரில்லை'' என "ஓ பிராம்மணா! மிகுந்த கொடிய தவத்தைச் செய்திடினும் அவர் பிரஸன்னராகாவிட்டால் நானெந்தன் உயிர்தனைக் கூட இழந்து விடுவேன். ஆகையால் நீ சீக்கிரமாய் வந்த வழி பார்த்துச் சென்று விடு'' என்று ஸ்ரீ தேவியானவளுரைத்துவிட்டுத் தானே துரிதமாய்த் திரும்பிச்செல்கையில் அப்போது ஸ்ரீபகவானும் மிக நேர்த்தியும் அற்புதமுமான தமது நிஜ உருவத்தைத் துரிதமாய் எடுத்துக் கொண்டு அதனை அவளுக்குக் காக்ஷியளித்தனர்.

அப்போது ஸ்ரீ சிவதேவியும் அப்பரமேசுவரனைக் கண்டவுடன் மிகுந்த பக்தியோடு துரிதமாய் வந்தனித்து மிகுந்த சந்தோஷமுடையவளும் பயங்கொண்டவளுமாகி அஞ்சலிகொண்டு "ஓ! தேவாதி தேவா! கருணைக்கடலே! மகா பிரபுவே! யான் இங்கு செய்த பிழையை மன்னித்து எந்தனைக் காப்பாற்றவேண்டும்'' என, "ஓ! தக்கன் பெண்ணான அழகிய மாதரசே! நீ பயப்படாதே; இக்கொடிய பெருந் தவத்தினுல் யாம் மிகவும் சந்தோஷமடைந்தனம்.'' என்றுரைக்கலான அப்பரமேசுவரனை அம்பிகை மறுபடியும் நமஸ்கரித்து விழிகளில் ஆநந்தக்கண்ணீர் சொரியப் பெற்றவளாகி யவர் சன்னிதியில் நின்றாள். பிற்பாடு அம்பிகையின் ஓர் பணிவிடைக்காரியானவள் துரிதமாய் ஓடி தக்ஷனிடத்தில் அப்போது அவ்வேதியர் வரலானதை அறிவிக்க, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! தக்கனும் அப்பிராம்மணரை ஸ்ரீ பரமேசுவரன் என்றே கொள்ளலாகிப் பிறகு அப்பரமேசுவரனுடைய திருக்கலியாணத்தைப்பற்றி மனமதில் நிச்சயித்துக் கொண்டு திரண்ட சாமான் முதலியவைகளை மிகுதியாய்ச் சேகரித்துத் தேவர்கள், இருடிகள், ஸித்தர்கள் சாத்தியர் முதலிய கணங்கள் இவர்களை யெல்லாம் அழைப்பித்தான். மேலும் அவன், கலியாணத்திற்கு வேண்டிய நேர்த்தியான பலவித கட்டிடங்களையும் அமைப்பித்து அங்கங்கு மிக நேர்த்தியான வாழை மரங்களையும் அநேகம் மாவிலைத் தோரணங்களையும் கயிறுகளாற் கட்டுவித்தான்.

பிற்பாடு அவன் தேவியோடு துரிதமாய்ப் புறப்பட்டுத் தவச்சாலைக்குச் சென்று பிராம்மண வுருவத்தோடு இருந்த அப்பரமேசுவரனைக் கண்டு தெளிந்த புத்தியுடையவனுகி வந்தனித்துத் தன் பெண்ணோடு கூடிய அவ்வந்தணரைக் கலியாணத்திற்காகப் பற்பல மலர்களால் இறைக்கப் பெற்றதும் பற்பல துவஜங்களால் சிங்காரிக்கப்பட்டதும், பற்பல மண்டபங்களோடுகூடியதும் பற்பல திட்டாணிகளால் நிறைந்ததுமான தன்து அரண்மனைக் கழைத்துவந்து, அங்குள்ள மிக நேர்த்தியும் ஸகல விரத்தினங்களாலும் சோபிக்கப்பெற்றதுமான சிங்காதனத்தின்மீது ஸ்ரீ சதாசிவனை வீற்றிருக்கச் செய்து கேளீர்! முனிவர்களே! மேலும் அம்மகா புத்திசாலியானவன்,பெண்ணை அலங்காரம்செய்விப்பதற்காக அந்தப்புரத்திற்கு அனுப்பினான். பிற்பாடு ஸகல ஜகங்களுக்கும் தாயாரும் தக்கனுக்குப் பெண்ணுமாகிய தேவியானவள் எண்ணெய் தேய்த்து தவம்செய்த காலத்தில் உச்சி மீதிருந்த

சடைகளைப் பிரித்துவிடப்பெற்றவளாகி ஸ்நானம்பண்ணிச் சிறந்த ஆடையாப ரணங்களைத் தரித்துக்கொண்டு துரிதமாய் ஸ்ரீ ஸர்வேசுவரன் அருகினில் வந்தாள்.

## 7. அத்தியாயம்.

பிற்பாடு விஷ்ணு முதலிய தேவர்கள் ஸ்ரீ பரமேசுவரனை நமஸ்காரம் பண்ணிக் கைகளைக் கட்டிக்கொண்டு தோத்திரம் செய்து மலர்மாரி சொரிந்தார்கள். இலக்குமி ஸரஸ்வதி முதலியவர்களும் மங்களகரமான ஸ்ரீ தாக்ஷாயணி தேவியை மிகுந்தநேசத்தோடு வந்தனித்து புஷ்பஹாரங்களை யிறைத்துக் கொண்டிருந்தார்கள். சிறந்த வேதியர்களெல்லாம் சுற்றிலு மிருந்துகொண்டு சிரேஷ்டமான துதிகளைச் செய்தார்கள். ஊழிகாலமேகங்களின் தொனிகள் போன்ற வாத்திய முழக்கங்களுண்டாயிற்று. அப்போது சிறந்த கண்டநாதத்தையுடைய கின்னரச் சிரேஷ்டர்கள் துதியாய்ப் பாடினார்கள். பிரம்மன் முதலிய தேவரெல்லாம் அப்போது மகா தேவனைத் துதிசெய்தார்கள். நர்த்தனத்தில் தேர்ச்சிபெற்ற இரம்பை திலோத்தமை முதலியவர்கள் நாட்டியம்செய்தார்கள். அப்போது தக்கனும் நல்ல சுப காலத்தில் தேவாதி தேவனும் சூலபாணியுமான அப்பிரபுவினுடைய பொன்னடிகளை அவன் பெண்டீரால் விடப்பட்ட ஜலத்தினால் அபிஷேகம் பண்ணி, அம்மகேசுவரனைப் பற்பல மலர்களால் முறைப்படி பூஜைசெய்து மகா பரிசுத்தமாய்த் தாரைவார்த்துப் பாணிக்கிரகணம் செய்விக்க, கேளீர் சிறந்த வந்தனார்களே! ஸ்ரீ பரமேசுவரனும் தேவியுடைய கமலம்போன்ற கைதனைப் பற்றலாயினர்.

சகல ஜகங்களையும் படைப்பவரான பிரம்மன் மகா வைபவத்தோடு அவிசினால் அக்கினியைத் திருப்தி செய்வித்தார். ஸ்ரீ நாராயணன் முதலிய தேவர்களும் மகா மங்களகரமான வேதங்களைப் படித்தார்கள். இப்படியிருக்கையில் ஸ்ரீ பரமேசுவரன் திடீரென்று அந்தர்த்தானமாகிவிட்டனர். அதன் பிறகு ஸ்ரீ கௌரியம்மை மகா துக்கங்கொண்டவளாகித்தனது ஆத்துமாவை மனதுக்குள்ளிகழ்ந்துகொண்டே இலக்குமி முதலிய தேவஸ்திரீகளால் சூழப்பெற்றவளாகிக் கண்ணீர் சொரியலுற்ற விழிகளுடன் தன் தாய் அந்தப் புரஞ்சென்று மிகுந்த துக்கத்துடன் பலமுறை அழுதாள். அப்போது வேதவல்லி, இலக்குமி, ஸரஸ்வதி இவர்கள் துக்கப்பட்டுக் கொண்டிருந்த அக் கௌரியம்மையிடம் வந்து "ஆ! அம்மா! குழந்தாய்! நம்மாற் செய்யப்பட்டிருக்கக் கூடிய அபசாரத்தினால்தான் ஸ்ரீ தேவன் அந்தர்த்தானமாகி இருக்கவேண்டும். ஆகையால் நீ இப்போதே துரிதமாய்த் துக்கமதை விட்டு மறுபடியும் ஸ்ரீ பரமேசுவரனை யருள்புரிவிக்கும்படி கொடிய தவத்தினாற் பஜனை செய்யலாவாய்" என்று அவளது துக்கத்தைச் சமாதானப்படுத்த, பிறகு பரமேசுவரியும் அவர்கள் வசனத்தைக் கேட்டதின்பேரில் மனதினால் வெகுப் பிரயாசையோடு துக்கத்தை விலக்கிக்கொண்டு தவச்சாலை சென்று அங்கு முன்போல் கொடிய தவத்தைச் செய்தாள்.

மேலும் ஸ்ரீ பரமேசுவரன் அந்தர்த்தானமானவுடன் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களும், தவத்தைத் தனமாய்க் கொண்ட முனிவர்களும்

மகா துக்கங் கொண்டவர்களாகி, ஓ! கோ! அத்தக்கன் மகா பாதகன் ஆன தால் தான் ஸ்ரீ பரமேசுவரன் இங்கு பிரஸன்னராகியும் நமக்கு அனுக்கிரகம் அருளாமல் திடீரென்று மறைந்துவிட்டனரோ நம்மிடத்தில் தான் ஏதாயினும் தோஷ மிகுந்ததனுல் தான் மறைந்தனரோ என்று பற்பல விதமாய்த் தங்கள் தங்கள் மனதினில் ஆலோசித்துக்கொண்டு எல்லோர்களும் ஒன்றும் பேசா மல் தலைதனைக்குனிந்து கொண்டிருந்தார்கள்.

அப்போது தக்ஷப்பிரஜாபதியானவன் தேவர்களுடைய மிகுந்த துக்கத் தையும், வியாகுலமுற்ற தன்பெண்ணையும், தேவஸ்திரீகளின், விசனத்தையும் கண்டு மகா மனவருத்த முற்றவனுகிக் கலியாண மண்டபத்திலிருந்த சகல தே வர்களையும் பார்த்து வசனமுரைத்ததாவது:—"ஓ! தேவர்களே! நம்மீது ஏதா கிலும் குற்றம்கண்டீர்களா? சொல்லுங்கள்; சங்கரனுனவன் பாதிக்கலியாணம் நடக்கையில் அதனை இவ்விதமாய்க் கெடுத்துவிட்டு ஓடிப்போயினன் அன்ரூே! இவனை எவர் வேண்டினுர்? பினகமென்ற வில்லைக்கொண்டவனும், பெற்ரூேர் களை யறியப்பெருதவனும், என்றும், சுடுகாட்டினிற் குடியிருப்போனும்,மகா அசுத்தமானவனுமான அச்சிவன் நம் பெண்மீது காதல்கொண்டவனுகித்தானு கவே பிராம்மணவேடம்பூண்டு அவளிடம்வந்து வஞ்சகமாய் அவளைவேண்டி னுன். அதனைக் கேட்டு யானே அக்கொடியோனை அழைத்து வந்து கேளீர்! தேவர்களே! தேவர்களான உங்கள் முன்னிலையிலே நமது பெண்ணை விதிப் படி யவனுக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுத்தோமல்லவா? அப்படி யிருந்தும் கேடு கெட்டவர்களில் தலைவனுன இக்கூத்தாடியானவன் பாதிக் கலியாணத்தில் நடுச்சபையிலிருந்து இப்பேர்க்கொத்த இழிவான அபகீர்த் தியை யுண்டு பண்ணியிருக்கிருன். இவ்வுலகினில் ஒவ்வொருவருக்குமுள்ள வியற்கையான குணமானது அவரவரை விடுவதில்லை. ஆகையால் தான் இவன் பிராம்மண வேடந்தரித்துக் கொண்டு இப்பேர்க்கொத்த தொழிலைச் செய்தான்'' என்று அப்போது அத்தக்கனெல்லோர் முன்னிலையிலும் சொல்லி விட்டுத் தேவரெல்லோர்களையும் அவரிடத்திற்கு அனுப்பலானுன். கேளீர்! பிராம்மணுேத்தமர்களே! அன்று முதலாய் அத்தக்கனுக்கு அவனது பாத கத்தின் வலிமையால் உலகுக்கெல்லாம் சுகத்தை யளிக்கலுற்ற ஸ்ரீ சங்கரன் மீது கோபம் விருத்தியாயிற்று.

## 8. அத்தியாயம்.

இவ்விதமாய் வெகுகாலம் சென்றபிறகு திருமேனி பொலியலுற்றவளாக நியமத்தோடு மிகுந்த தவத்தைச் செய்யலுற்ற தக்கன் பெண்ணுன அச்சிவா தேவிக்கு அப்போது அனுக்கிரகம் செய்வதற்காக சகல ஜீவாத்துமாக்களுக் குள்ளும் விளங்கி அருளாநின்ற ஸர்வேசுவரனுனவர் வெகு குதூகலத் தோடு ஓர் தவசி யுருவங்கொண்டு சடைபைக்கொண்டவரும், திருநீறு உருத் திராக்ஷங்களை அலங்காரமாய்ப் பூண்டவரும், அனேகப் பிரம்ம கபாலங் களை (பிரம்மாவின் மண்டையோடு) யுச்சிதனிற் சூட்டியவரும், சூலத்தையும், மண்டையோட்டையும் கைதனிற் தரித்தவரும், ஒலிக்கலுற்ற தண்டை சதங்

கைகளின் நாதத்தினுல் ஒலிப்பிக்கலுற்ற திசை முகங்களைப் பெற்றவரும், காவிவஸ்திர முடுத்தவருமாகி அங்கு வந்தருளினர்.

அப்போது அத்தாக்ஷாபணி தேவியும் சிரேஷ்டரான அத்தவசியைக் கண்டவுடன் எழுந்து அஞ்சலிகொண்டவளாகி அர்க்கிய பாத்தியம் முதலிய வற்ருல் உபசாரம்செய்து அவருக்கோர் ஆசனமுமளித்துத் தான் அவர் முன் னில் வணக்கமாய் நின்றனள். கேளீர்! முனிவர்களே! அப்போதே கரு ணைக்கடலும், அண்டியவர்களுக்குக் கற்பக விருக்ஷமுமான ஸ்ரீ மகாதேவன் களிப்புற்ற மனதைக் கொண்டவராகி வெள்ளி மலையின் சிகரத்துக்கு நிகரும் ஒலிக்கலுற்ற கிண்கிணி மாலைகளால் விளங்கலுற்ற பருத்த கழுத்தைக் கொண்டதுமான சிறந்த திருவெருதின் மீதேறிக்கொண்டு அங்கு ஆவிர்ப் பவித்தனர். அப்போது மேககர்ஜனையை வெல்லலுற்ற மங்களகரமான தேவ துந்துபிகள் முழங்கலாயின. சிறந்த வாசனையோடு கூட நேர்த்தி யான மலர்மாரியும் அங்கு பொழியலுற்றது. கேளீர்! வேதியர்களே! அப்போது ஸ்ரீ பரமாத்துமாவானவர், சித்தர் சாத்தியர் முதலியவர்க ளோடு கூடிய பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களாலும் சுற்றிலும் சூழப்பெற்றவராயினர். அப்போது அவள் அப்பரமேசுவரனை வெகு சந்தோ ஷத்தோடு தரிசித்து மிகுந்த பக்தியோடு கூடிய அந்தக்கரணத்தோடு பிரத க்ஷிணம் தோத்திரம் முதலியவைகளைச் செய்தவளாகி ஓ! கருணைக்குக் காரண ரான தேவதேவேசா! தேவரீர் எந்தன் பிழையை மன்னித்தருளவேண்டும்'' என்று ஸ்ரீ கௌரிதேவியானவள் அடிக்கடி பிரார்த்தித்து வந்தனம் செய்தாள்.

பிறகு ஸ்ரீ பரமேசுவரன் கைகளால் அத்தேவிதனைத் தூக்கி நேர்த் தியான விருடபத்தின்மீது தமது இடது பாரிசத்தில் வைத்துக்கொண்டு ஸகல தேவகணங்களாலும் சூழப்பெற்றவராகி நிகரற்ற கைலைகிரி சென்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அங்கு விளங்கிய சிங்காதனத்தின் மீது வீற்றிருந்தனர். அதன் பிறகு தேவியுடைய பரிவார ஜனங்கள் தக்கன் அண்டைக்குச் சென்று கேளீர்! முனிவர்களே மிகுந்த பயத் தோடு ஸகல சங்கதிகளையு மாதியோடந்தமாய்ச் சொன்னுர்கள். அது கேட் டுத் தக்கனும் அருகினில் நிற்கலான தேவர்களைப் பார்த்து "ஓ! தேவர் களே, முர்த்திதானுகவே பாதிக்கலியாணத்தில் ஓடி விட்டான். இப்போது திரு டர்களுக்கெல்லாம் தலைவனை அப்பேர்க்கொத்த சிவன் இப்போது இங்கு வந்து நமது பெண்ணைத் திருட்டுத்தனமாய் எடுத்து ஓடியும் விட்டானல்லவா? அவன் நமதாக்கினையை அசட்டை செய்ததுமன்றி நமக்கோர் அபகீர்த்தியை யும்உண்டுபண்ணி விட்டான். பெற்ரோர்கள் அனுமதியின்றி எவன் தான் இப்பேர்க்கொத்த காரியத்தைச் செய்வான்? ஏனென்ருல் கேளீர்! தேவர் களே! அப்பிச்சைக்காரனுனவன் அதற்குமுந்தி எங்காகிலும் ஓர் கலியாணத் தைச்செய்ததுமில்லை கேட்டதுமில்லை; பார்த்ததுமில்லை யன்ரே! அதனைக் கேட்டாவது செய்தாவது இருந்தால் எந்தப்புத்திசாலி தான் இவ்வாறு செய் யலாவான்?'' என்று இவ்வாறு வசனங்களை அப்போது அத்தக்கன் அவர்கள் முன்னிலையில் உரைத்துக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிறகு அத்தே

வர்களை எல்லாம் அவரவரிடங்களுக்கு அனுப்பிவிட்டு, அத்துராத்துமன் பரமாத்துமாவாகிய ஸ்ரீ சதாசிவன்மீது மிகுந்த கோபத்தைப் பாராட்டிக்கொண்டிருந்தான்.

ஓ! கோ! அவன் இவ்விதமாக க்ஷணம்தோறும் சிவநிந்தை செய்துகொண்டிருந்தது மிகவும் கஷ்டம்; அப்போது பிரம்மன் விஷ்ணு முதலிய தேவரெல்லாம் அத்தக்கனைப் பார்த்து ஓ! கோ! தேவாதி தேவனும் சூலபாணியுமான ஸ்ரீ மகா தேவனை நிந்தை செய்வதனல் தேவர்களான நம்முடன் கூட நாசமடையப் போகிறுன். இவனைவிட்டு எங்காயினும் தொலைந்திருக்கவும் நம்மால் முடியவில்லை. ஆகையால் நாமெல்லோர்களும் அப்பாதகனுக்கு இங்கு புத்திமதிசொல்லி, ஐயோ! அவன் இகழ்வதை நிறுத்துவித்து நிச்சயமாய் அவனுக்கு நன்மையையே செய்யலாவோம்'' என்று கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வெல்லோர்களும் நிச்சயித்துக்கொண்டு வசனமுரைத்ததாவது:—ஓ! தக்ஷப்பிரஜாபதியே! ஜகங்களுக்குப் பிரபுவாகிய நீர் ஸகல கேள்விகளிலும் திறமைகொண்டவராயிற்றே. நீர் ஸ்ரீ மகாதேவனுக்கு உமது பெண்ணைக் கொடுத்தீரல்லவோ! அதனல் அத்தேவன் உமது மாப்பிள்ளை யென்று ஸகல லோகங்களிலும் பிரசித்தி யடைந்திருக்கின்றுர். ஆகையால் அவர் யாவராஞலும் அவரை இகழ்தல் வேண்டாம். சம்பந்தம் செய்தான பிறகு குலம்கோத்திரம் முதலியவைகளைப் பரிசோதிப்பது தகுதியல்ல; ஓ! ஜகங்களுக்குப் பிரபுவானவரே! ஆகையால் வெகு சாமர்த்தியக்காரரான நீர் துரிதமதிற் கைலைக்குச் சென்று உமது பெண்ணையும் மாப்பிள்ளையையும் பார்த்துச் சம்புவுடன் முன்போற் சமாதானம் செய்துகொண்டு பிறகு திரும்பிவாரும்''என, தக்கனும் அவர்களது இவ்வாறு வசனத்தைக் கேட்டுத் தான் கொண்டிருந்த கோபம் தணியப்பெற்றவனுகிக் கேளீர் தரணி தேவர்களே அப்படியே நல்லதென்று துரிதமாய்க் கைலைக்குப் புறப்பட்டு அவ்விடம் சேர்ந்து பரமாத்துமாவாகிய ஸ்ரீ சங்கரனது திருமாளிகையின் வாசற்படிக்குச் சென்றவுடன் அங்குள்ள வாசற் காப்போர்களால் தடைசெய்யப்பட்டான்.

"தக்கனே! ஸ்ரீ தேவனது ஆக்கினையின் பேரில்தான் நீங்கள் உள்ளே நுழையத்தக்கது. ஆகையால் இங்கு நில்லும் அல்லது வேறெங்காயினும் போய்விடும்'' என, தக்ஷப்பிரஜாபதியும் இவ்வாறு அக்காவலாளிகளின் வசனங்களைக் கேட்டு'' ஓ! நமது பெண்ணையும் மாப்பிள்ளையான சம்புவையும் பார்க்கவரலான எம்மையேன் தடை செய்கின்றீர்கள்''என்று அவனுரைக்கலான வார்த்தையைக் கேட்டு அக்கணநிபர்கள் மறுமொழியுரைத்ததாவது:—ஓ! கெட்ட எண்ணங்கொண்ட மூடனுன தக்ஷா! எங்கள் வசனத்தைக் கேள். அடா நீ கொண்டிருக்கிற ஐசுவரியமெல்லாம் ஜகதீசனன ஸ்ரீ சங்கரனிடமிருந்து அடையப்பட்டதல்லவா? அடா! பாதகா! ஸ்தாவர ஜங்கமங்கள் உள்பட விச்சகமதைச் சத்துருவற்று ஆண்டு வருவதாலுள்ள மதத்தினலல்லவா நீ ஸ்ரீ பிரபுவை நிந்திக்கலானுய். அடா உனக்குக் கொஞ்சமேனும் புத்தியில்லை. அவ்வறிவு அசுரர்களுக்குக் கூட விருக்கின்றது.

ஆகையாலுன் முகத்தைப் பார்ப்பது கூட இவ்வெங்களுக்குத் தகுதியல்ல. இப்படியிருக்கையில் இங்கு எந்தனேடு பேசுவதில் மிகுதியான தோஷம் நேரிடுமென்பதிற் சந்தேகமென்ன? அடா பரமாத்துமாவான ஸ்ரீ சங்கரனைச் சேவிக்க வேண்டுமென்ற நிச்சயமான புத்தியிருந்தால் நீ அப்பரமேசுவரனுடைய சமயத்தை மிகுந்த பக்தியோடு எதிர்பார்த்தறிந்து பிறகு அவர் ஆக்கினையின் பேரில் அந்தப்புரத்திற்குச் செல்வது தகுதியாகும். அடா! வீண் புத்தி கொண்டவனே! இல்லையாகில் வந்த வழிப்பார்த்துத் தொலைந்துவிடு: அல்லது இங்குதானே நில்'' என்ற அவர்களது வசனத்தைக் கேட்டவுடன் தக்கன் அப்போது மனம் நொந்தவனுகித் திரும்பவும் காலக்கணுதிபர்களுக்கு முன்னிலையில் மிகுந்த கோபத்தோடு வசனமுரைத்ததாவது:—

''ஓ! வாசற்காப்போர்களே! உங்கள் எஜமானனுன சங்கரனை யான் வணங்குவதில்லை; பிரம்மன் விஷ்ணுமுதலிய தேவரெல்லாம் எப்போதும் நமது வார்த்தையைக் கேட்டு உண்மையில் நமது ஆக்கினைக்கு அடங்கியவர்களாகி மிகவும் பயந்து கொண்டு ஊழியம் செய்து வருகின்றார்கள். நாமே ஸகல தேவர்களுக்கும் நடத்துவோரும், விலக்குவோரும், சமுகரிப்போரும், வசிப்போருமான ஜகப்பிரபு. காரியா காரியம் அறியாத நமது பெண் மாப்பிள்ளைகளது சொல்லைக்கேட்டே நீங்கள் எம்மைத் தடைசெய்கின்றீர்கள். ஆகையால் நாம் இப்போதே ஸகல தேவர்களாலும் கொஞ்சம் கொஞ்சம் அவ்வுருத்திரனுக்குச் செய்து வரப்பட்டுவருகிற வந்தனம் துதி தியானம் முதலியவைகளைக்கூட இனி நடத்திவராமலிருக்கும்படி அவர்களை ஆக்கினைசெய்கின்றோ'மென்ற வசனங்களை அத்தக்கன் அவர்கள் முன்னிலையிலும் உரைத்துவிட்டுத் திரும்பிப் பற்பல அலங்காரங்களாற் சிறக்கலுற்ற தனது பட்டணம் வந்து சேர்ந்தான்.

## 9. அத்தியாயம்.

பிற்பாடு தக்ஷன் தன் பட்டணத்துக்கு வந்திருக்கலுற்ற பிரம்மன் முதலியதேவர்களாற் பூஜிக்கப்பட்டவனுகி அவர்கள் முன்னிலையில் நின்றுகொண்டு அவர்களுக்குச் சங்கதிகளை யுரைத்ததாவது:—ஓ! பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களே! நாம் உங்கள் வார்த்தையைக்கேட்டு ருத்திரனையும் நமது பெண்ணையும் பார்ப்பதற்காகக் கைலைக்குச் சென்றதில் அங்குள்ள கொடியர்களான அவ்வுருத்திரனுடைய வாசற் காப்போர்களாற் கொஞ்சம் அவமரியாதை செய்யப்பட்டதாவது:—

''அடா தக்ஷா! ஸ்ரீ சங்கரனுடைய அனுமதி இன்றி நீ உள்ளே போகக்கூடாது. நாங்கள் உன் முகத்தைப்பார்க்கவும் தகாது; ஆகையால் எங்காவது தொலைந்துபோ அல்லது இங்குதானே நில்'' என்ற அனேகம் இகழ்ச்சியான வார்த்தைகளை நம்மிடத்துரைக்கப்படலாயிற்று. நாம் சுயாபிமானத்தைவிட்டு அப்பெண் மாப்பிள்ளைகளைப் பார்க்கச் சென்றதால் நம்மீது குற்றமே யொழிய அவர்களிடத்து யாதொரு குற்றமுமில்லை. இதனை வளர்த்துவதிற் பயன் யாது? ஓ! எல்லாத் தேவர்களும் சாவதானமாய்க் கேளுங்கள்; இனிமேல்

நீங்கள் யாவரும் அக்கொடூர சித்தமுடைய ருத்திரனுக்கு வந்தனம் துதிகள் செய்யக்கூடாது; அவனை நினைக்கவும் கூடாது. அப்படிச் செய்வீர்களாகில் உங்களுக்கு மிகுந்த அபராதம் நேரிடும். உங்களுடைய பதவிகளைப் பிடுங்கி மற்றவர்களுக்குக் கொடுத்துவிடுவோம் என்று அவர்களுக்குச் சங்கதிகளைச் சொல்லி அனுப்பிவிட்டுக் கேளீர் முனிவர்களே! தான் ஸ்ரீ பரமேசுவரனை இகழ்ந்துகொண்டே பலகாலம் தள்ளிவந்தான்.

கேளீர்! தரணித்தேவர்களே! இப்படி வெகு காலம் சென்ற பிறகு பிரபஞ்சங்களைச் சிருஷ்டிக்கலுற்றப் பிரம்மனுக்கு வேள்விசெய்ய மனதுண்டாயிற்று. அதற்கு அவர் திரவியங்கள் வேண்டியதையெல்லாம் சீக்கிமாய்ச் சேகரித்துக்கொண்டு ஓ! முக்கண்ணரும், பிரபஞ்சங்களுக்கு எல்லாம் பெருமை பொருந்தியவரும், பரஞ்சோதிச் சொரூபரும், கேவலம், பரப்பிரம்ம மூர்த்தியுமான வேள்விக்கு வேந்தனாகிய ஸ்ரீமகா தேவனை அழைத்து வந்து நாம்மிகுந்த பக்தியோடு அவிர்ப்பாகங்களாற் பூஜிக்கலாவோம்; இத்தக்ஷணம் அவ்வீசுவரனைப் பாராது புத்திபிரமையினால் பராமுகமாயிருந்த போதிலும் யாம் அம்மகா தேவனைச் சந்தேகமின்றியே பூஜைசெய்வோம்; அதற்காகக் கெட்ட எண்ணம் கொண்ட அத்தக்கன் எது வேண்டுமோ அதனை எனக்குச் செய்யட்டும்- அது விஷயத்தில் யாம் சந்தேகமின்றி உயிரைக் கூட விடலாவோம். உயிர் மீது அபிமானம் உள்ளோர்க்கல்லவோ எங்காயினும் பயமுண்டு. தோலையுடையாக யுடுத்தவரும் பினாகமென்ற வில்லைக் கொண்டவருமான ஸ்ரீ மகா தேவர் எப்படியும் காப்பாற்றுவார்'' என்று இவ்விதமாய்ப் புத்தியைத் தீர்மானித்துக் கொண்டவராகி யுலகுக்கே மூதாதையான அப்பிரம்ம தேவரானவர் மிகுந்த சந்தோஷத்தோடு சிரேஷ்டமான கைலைகிரிக்குச் சென்று அங்கு விளங்கிய வாசற்காப்போர்களுக்கு அதிபரான பருத்த சரீரத்தை உடைய நந்திகேசுவரனைக் கண்டு வந்தனித்து, அவர் முகமாய் ஸ்ரீ பரமேசுவரனுக்கு அறிவித்ததன்பேரில் அவரது ஆக்ஞையைக் கொண்டவராகி கேளீர்! தரணிதேவர்களே! அம்மகா தேவருடைய திருமாளிகைக்குட்சென்று களிப்புற்றமனதுடன் அவரைத்தரிசித்து அடிக்கடி வந்தனம் பண்ணி மிகுதியாய் வேண்டிக் கொண்டார்:—

ஓ! தேவாதி தேவா! மகா தேவா! சரணமடைந்தோரிடத்து நேசமுற்றவரே! ஓ! கருணைக்கடலே! வேள்விக்கு வேந்தனே! ஓ! மகேசுவரா! அடியேனைக் காத்தருளி யான் செய்யப்போகா நின்ற வேள்விதனில் தேவரீர் பிரசன்னராகி ஓ! தேவேசா! ஓ! ஈசுவரா! முதன்மையான ஆஹுதியைத்தேவரீர் அங்கீகரித்தல் வேண்டும்; ஓ! சகல ஜகங்களுக்கும் பராபரகுருவான பரமசிவா! அதனால் யான் சத்தியமாகவே கிருதார்த்தனாகின்றேன்'' என இவ்வாறு பிரம்மன் வசனத்தைக் கேட்டுப் பகவான் திருவாக்கருளியதாவது:—

“ஓ! பிரம்மதேவனே! உமது யாகத்துக்கு நமது நந்திகேசுவரனை அனுப்புகின்றோம்'' என்று சர்வப் பிரபஞ்ச சுவரூபியான ஸ்ரீ சம்புவானவர் புன்னகைப்புற்ற முகமலரைக்கொண்டவராகி அப்பிரம்மனை மகா சந்தோஷத்தோடு அனுப்ப, பிரம்மனும் அப்படியே பாக்கியமென்று ஜகதீசனைத்தண்டம்பண்ணி

விட்டுத் துரிதமாய் வெளியில்வந்து பின்னும் மிக மனவூக்கம்கொண்டவராகித் தக்கனிடம்சென்று அவனுக்கும் தாம் யாகம் செய்யப்போவதை அறிவித்து அவனிடம் அனுமதிபெற்றவராகி மகா மேருகிரிக்குச் சென்று அங்குள்ள மங்களகரமான மனோவதியென்ற சிகரத்துக்கு வந்து அங்கு மகா பரிசுத்தரா யிருந்துகொண்டு யாகம்பண்ணத் தொடக்கம் செய்தனர்.

அப்போது விஷ்ணு முதலிய தேவர்களும் மகா பராக்கிரமசாலிகளான பிரம்ம புத்திரர்களும் சேர்ந்து சிரேஷ்டமான கைலைகிரியண்டைக்குச் சீக்கிரமாய் வரலானவுடன் ஜகங்களுக்குப் பிரபுவான பிரம்மனும் புறப்பட்டு அவர்களுக்கு எதிர்கொண்டு சென்று அவர்களுக்கு உபசார வசனங்களைச் சொல்லி யாசனமுமளித்தனர். அப்போது அதுபோலவே பிரம்மனும் அங்குவரலுற்ற தக்ஷப் பிரஜாதிபதிக்கு முன்னடியாய் வெளியில்வந்து மிகுந்த உபசாரங்களைச் செய்து அவனுக்கோர் சிறந்த ஆதனமும் அளித்துவிட்டுத் தாமும் அவனது உத்தரவின்பேரில் உட்கார்ந்தனர். அப்போது நந்திகேசுவரனும் ஸ்ரீ பகவானுடைய திருவுத்திரவின்பேரில் அங்கு சீக்கிரமாய் வரலாகையில் பிரம்மனுடனே எழுந்து அம்மகாத்துமனுக்கு எதிர் கொண்டு சென்று அவரைப் பல உபசாரங்களோடு பூஜித்து மிகுந்த சந்தோஷத்தோடு வந்தனித்து அங்கு மத்திதனில் விளங்கிய மகா மேன்மை கொண்டதும் மகா சிரேஷ்டமானதுமான ஓர் மகா சிங்காதனத்தின்மீது அவரை வீற்றிருக்கச்செய்துவிட்டுப்பின்னும் அவருடன் தொடர்ந்து வந்த நூறுகோடி பூதகணங்களுக்கும் சிரேஷ்டமான ஆதனங்களை யளித்துத்தாமும் கேளீர்! முனிவர்களே! மிகுந்த பிரயத்தனத்தோடு யாகம் செய்ய வாரம்பித்தனர்.

அப்போது தக்கனே வென்றால் கணநிபர்களோடுகூட விளங்கியிரா நின்ற அந்நதி கேசுவரனைக் கண்டு ஆ! ஆ! விஷ்ணு முதலிய சகல தேவர்களும் இவனுக்குச் சுற்றிலுமிருக்கின்றார்கள். இலக்குமி சரஸ்வதி முதலிய தேவபத்தினிகளும் அப்படியே யிருக்கின்றார்கள். இப்படி யிருக்கையில் இந்த அவலக்ஷணம் கொண்டவனெல்லாவற்றிற்கும் மிகுந்தச் சிரேஷ்டமான ஆதனத்தின் மீது இருப்பது மெத்த ஆச்சரியம். கொடியனும் மிகுந்த கர்வம் கொண்டவனும், மகா துஷ்டனுமாகிய இவன் யாதோ ஓர் அற்பனுடைய வாசற்காப்போன். மிகுந்த கொடிய மனதையுடைய உருத்திரனது கைலைதனில் இவன் தினம்தோறும் இருப்பவன். இவனை யாரிங்கழைத்தார்? என்று சொல்லிக் கொண்டு அந்தரங்கத்தில் மிகுந்த கோபாவேசம் கொண்டவனாகிப் பிரம்மனை நோக்கி வசனமுரைத்ததாவது:—

ஓ! பிரம்மாவே! நீர் எல்லாமறிந்தவராயினும் உருத்திரனது வாசற்காப்போனான இத்துராத்துமனை நிச்சயமாய் நீரே அழைத்திருக்கிறீர். மேலும் பிரபஞ்சங்களைச் சிருஷ்டிக்கலுற்ற நீர் இப்போர்கோத்தவனுக்கு மிகவும்பெருமை பொருந்திய வோராதனம் அளித்திருக்கிறீர். ஸத்தியமாய் நாமும்மைத் தகப்பனென்றதால் தான் எளிதில் விடலானோம். மற்றொருவனாகில் அவனது சிரசுதனைத் துரிதமதில் தரித்து விடுவோம். ஆகையால் இவ்வேள்விதனில் உருத்திரனுக்கு அவிர்ப்பாகம் கொடுப்பதுதகாது. நீர் இவ்வியாகமதில் விஷ்ணு

முதலிய எல்லாத்தேவர்களையும் திருப்தி செய்யலாவீர். வேதத்தில் எங்கெங் கெல்லாம்அவ்வுருத்திரனுடைய மகிமையானது புகழப்படுகின்றதோ அப்பாக மெல்லாம் பிரமாணமில்லாததுபற்றி விலக்கப்பட்டது. ஆகையால் அவற்றைநம தாக்கினையின்படி விட்டுவிடும். அவன் கொரேமான 'சுபாவத்தையுடையவன். ஆகையால் தான் மிகவும் கொடிய மனதுடையவனும், தாமசகுணமுள்ளவனும் என்றும் எலும்புகளை பூண்டவனுமாயிருக்கின்றான். அப்பேர்க்கொத்தவனு டைய வாசற்படியிலிருப்பவனான இவனும் அப்படியே கொடிய மனதைக் கொண்டவனென்றான்.

இவ்வாறு முதலிய வசனங்களை அத்தக்கன் பிதற்றலாகையில், கேளீர்! சிறந்த வந்தணர்களே! அதனையெல்லாம் ஸ்ரீ நந்திகேசுவரன் கேட்டவுடன் காதுகள்தனில் இருகைகளாலும் பொத்திக்கொண்டு 'சிவசிவா' வென்றுரைத் துக் கோபத்தினால் நடுநடுங்கலுற்ற திருமனதைக் கொண்டவராகி மகாதேவ னாகிய ஸ்ரீ சிவபிரானைத் தியானம் பண்ணிவிட்டு தக்கனைப்பார்த்து 'ஓ! அடா! அடா மகாபாதகனான தக்ஷ! மிருத்தியுவால் நெருங்கப்பெற்ற உந்தனால் ஸ்ரீ சிவபரமாத்துமாவைப்பற்றி நிந்தை செய்யப்பட்டதல்லவா? ஓ! கோ! இது கஷ்டம்! அடா! ஸ்ரீ ஸர்வேசுவரனை ஓர் தடவை யிகழ்வோர்களைக் கூட நுனிநாவை யறுத்து முகத்தையும் குறுக்காய்த் திருப்பி வைக்கவேண்டு மென்று சொல்லப்படுகிற தன்றோ? ஓ! ஸ்ரீ பகவானுடைய திருவுளம் எப்படி யிருக்குமோ! ஸர்வேசுவரரான ஸ்ரீ பரமசிவனை நிந்திக்கலுற்ற மகா பாதக னாகிய வுந்தனை யாம் இப்போது மன்னித்தனம். அடா! மகா பாதகா! ஆகையால்தான் நீ இந்த நிமிஷத்திலுயிரோடிருக்கின்றாய். அடா! மூடா! இனி யேதாகிலும் கொஞ்சம் பிதற்றுவாயாகில் இதோ இவ்வியாகசாலை யின் கண்ணே யுந்தன் தலையானது நமது நகங்களாகிய ஆயுதங்களாற் சீக்கிரம் கிள்ளப்பட்டதென்றே நீ அறி. அடா! இயாகங்களுக் கதிபரான ஸ்ரீ மகா தேவனுக்கு யாகமத்தியில் ஆகுதியேயில்லை யென்று ஸ்ரீ பிரம்மனைத் தடை செய்யலாகின்றாய்; யாவர் மிகுந்தப் பிரமத்தினால் இயாகமதில் முந்திய ஆகுதியை ஸ்ரீ பரமேசுவரனுக்குக் கொடாமல் யாகத்தை நடத்துகின்றார் களோ அவர்களுடையதலைகள் நமதாக்கினையின்படி வெடிக்கக்கடவன. அடா பித்துக்கொண்ட தக்க! உந்தனது ஸகல ஐசுவரியங்களும் சிவாக்கினையின்படி தொலைந்து போகக்கடவன. மேலும் அப்பரமேசுவரனை இகழலுற்ற உந்த னது தலையும் பூமிதனில் விழலாகிப் பிறகு அவ்வாறறுபட்ட தலையானது மிக வும், இகழ்ச்சியுள்ள ஆட்டின் தலையாக மாறக்கடவது. தவிரவும் துராத்தும னாகிய உந்தனருகினில் எந்தத் துராத்துமர்கள் நிற்கின்றார்களோ அவர்களது தலைகளெல்லாம் உந்தன் யாககாலத்தில் வெட்டுப்படலாகி மேலும் அத் துஷ்டர்களெல்லாம் சூரபத்துமனால் எப்போதும் துன்பமளிக்கப்படக் கடவார் கள்.'' என்று இவ்வாறாக சாபம் கொடுத்துவிட்டு ஸ்ரீ சங்கரனுக்கு அன்புள்ள வந்நந்தி தேவர் உடனே எழுந்து ஸகல பூதகணங்களோடு சிரேஷ்டமான கைலைகிரிக்கு வந்து சந்திரகலையைச் சிரசினிற்கொண்ட பார்வதியோடு கூடிய சர்வேசுவரனைத் தரிசித்துத்தண்டம்பண்ணி அவர் சன்னதியிற் சகல சங்கதி களையும் ஆதியோடந்தமாகத் தெரியப்படுத்திச் சர்வ வல்லமையுள்ள அம்மகா

தேவனை மறுபடியும் வந்தனித்துக் கேளீர்! தாணித் தேவர்களே! பிறகு அவர் ஆக்கினையின்பேரில் தமது வாசற்படி அடைந்தனர்.

## 10. அத்தியாயம்.

கேளீர்! சிறந்த வந்தணர்களே! பிற்பாடு விஷ்ணு முதலிய தேவர்கள் நந்திகேசுவரன் சினத்தோடு வெளிச் சென்றவுடன், நந்திகேசுவரன் தக்கன் இவ்விருவரிடத்தும் மிகப் பயங்கொண்டவர்களாகி எல்லோர்களும் துக்கமாகிய பாசத்தினுல் குனியலுற்ற முகத்தைக் கொண்டவர்களாகி யொளி இழந்தவர்களாய் நின்ருர்கள். பிரம்மனும் தக்கனிடத்துப் பயம் கொண்டவராகி இவ்வியாகத்தை முடிப்பதைப் பார்க்கிலும் கலகமில்லாமற் சும்மா விருப்பது நலமென்று மனதினுல் நிச்சயித்துக் கொண்டு அவ்வியாகத்தைப் பாதியில் நிறுத்தித் தனிமையிலிருந்துவிட்டார். பிறகு தக்கனும் எழுந்து கோபத்தோடு தனது நகரம் சென்றுவிட்டான்.

அப்போது தேவர்களும் நந்திகேசுவரனுடைய சாபத்தை நினைத்து நினைத்து மிகப் பயந்தவர்களாகி அப்படி அப்படியே தங்கள் தங்களிடங்களுக்குச் சென்றுவிட்டார்கள். கேளீர் தாணித் தேவர்களே! ஒ கோ! கோ! அது முதற்கொண்டு வெகுகாலம் வரையில் இவ்விருவரிடத்தும் மிகுந்த பயத்தினுல் உலகங்களில் யாதோரிடத்தும் யாகமே நடக்கவில்லை. கேளீர் வேதியர்களே! பிறகு அப்போது தக்கன்தானே ஓர் யாகம் செய்ய மனம் கொண்டவனுகிச் சகல தேவர்களையும் நோக்கி வசன முரைத்ததாவது:—ஓ! தேவர்களே! நீங்கள் எல்லோர்களும் நந்திகேசுவரனுடைய சாபவசத்தினுல் மிகவும் பயமடைந்தவர்களாகி யாகம் செய்வதற்கு பராமுகமாயிருக்கின்றீர்கள். ஆகையால் யாம் முந்தி ஓர் பெரும் திரவியச் செலவு கொண்ட யாகத்தைச் செய்து முடிக்கலாகின்றேம். கேளீர்! தேவர்களே! பிறகு நீங்கள் நிர்ப்பயர்களாகி அவ்வுருத்திரனை விலக்கிவிட்டுத் தங்கள் தங்கள் வலிமையை அறிந்தவர்களாகி மகா மகா யாகங்களைச் செய்யலாவீர்கள் என்றுரைத்துவிட்டு அப்போது விசவகருமனை நோக்கி அவன் வசனம் கூறியதாவது:—

ஓ! விசுவகருமனே! நீ சீக்கிரமாய் நமக்கோர் விசாலமான யாகசாலையை அமைக்க வேண்டுமென்ருன். அவனது வசனத்தைக் கேட்டு அத்தேவ தச்சனுனவன் ஓர் நொடி நேரத்திற்குள் கங்கைக் கரையிலுள்ள 'கனகல்'மென்ற ஓர் க்ஷேத்திரமும் பரிசுத்தமுமான விடத்தில் ஆயிரம் யோஜனை யளவுகொண்ட பிராகாரங்களால் நேர்த்தியானதும் கோபுரங்கள் அட்டாள மண்டபங்கள், கொடுங்கைகள், உப்பரிகைகள் முதலியவைகளாற் சிறக்கலுற்றதும், வாபிகள், கிணறுகள், தடாகங்கள், முதலியவைகளாலும், மரத்தோட்டங்களாலும் அழகுள்ளதும் சுற்றிலும் அங்கு மிங்கும் விசாலமான அன்னசாலைகள், வியஞ்சன (காய்கறி முதலிய பக்குவ பதார்த்தங்கள்,) சாலைகள், தயிர், பால், நெய் முதலியவைகளின் சாலைகள் இவைகளாற் சூழப்பெற்றதும், கஸ்தூரி, சந்தனம், மாலைகள், தங்கம், இரத்தினங்கள் நாணயங்கள்,

வஸ்திரங்கள் இவை முதலிய சாலைகளால் மிகுதியாய் அலங்கரிக்கப்பட்டதும், சுற்றிலும் யாகத்துக்குரிய கருவிகளின் சாலைகளாற் சூழப்பெற்றதும் நூறு யோசனை விஸ்தீரணமுள்ள பல ஓமகுண்டங்கள், மேடைகள் முதலியவைகளைக் கொண்டதும், நான்கு பக்கங்களிலும் அனேகம் சித்திரசாலைகளால் அலங்கரிக்கப்பெற்றதும், தேவர்களுக்காக இங்குமங்கும் பற்பல ஆசனங்கள் முதலியவைகளாற் சிறப்பிக்கலுற்றதும், மிகுந்த சௌந்தரியம் பொருந்தியதுமான ஓர் யாகசாலையை யமைத்து அதனை அத்தக்கனுக்கு அறிவித்தனன்.

கேளீர்! முனிவர்களே! உலகமதிற் பிரசித்தி கொண்டவனான அத்தக்கனும் அச்சாலைதனை நோக்கி மிகுந்த சந்தோஷம் கொண்டவனாகிக் கேளீர்! தரணித் தேவர்களே! ஸ்ருக (ஓமஞ்செய்வதற்குரிய ஆப்பைபோன்றதான ஓர் முக்கிய பாத்திரம்) ஸ்ருவம் (மேற்கண்ட முக்கிய பாத்திரத்துக்குத் துணையான மற்றோர்பாத்திரம்) முதலிய யாகத்துக்குரிய எல்லாக்கருவிகள், வந்தவர்களுக்கு ஆடையாபரணங்கள் முதலியவைகளைக் கொடுப்பதற்காகக் கற்பக விருக்ஷம், காமதேனு, சங்கம் முதலிய நிதிகள், சிந்தாமணி ஆகிய இவைகளை எல்லாம் மண்டபங்கள் தோறும் ஏற்படுத்தலானான். கேளீர்! பிராமணோசுவரர்களே! மேலும் அத்தக்கன் அன்னம் பரிமாறுவதற்கு முப்பதினாயிரம் பெயர்களும், வியஞ்சனம் முதலியவற்றைப் பரிமாறுவதற்கு அறுபதினாயிரம் பெயர்களுமாகப் பிராம்மணப் பரிசாரகர்களைத் திட்டம் செய்தான். பிறகு அனேகம் தூதர்களை அனுப்ப, அவர்கள் பிரம்மன் விஷ்ணு முதலிய தேவர்களுக்குச் சங்கதியை அறிவித்து உடனே தக்கனண்டைக்கு வந்துவிட்டார்கள். பிற்பாடு விஷ்ணு, பிரம்மன், இந்திரன் முதலிய தேவர்கள் முனிச் சிரேஷ்டர்கள், சூரிய சந்திரர்கள், அசுரர்கள் இவ்வெல்லோர்களும் அவ்வியாகத்தைப் பார்ப்பதற்காகத் தங்கள் தங்கள் சைனியங்களோடும் பெண்டீர்களோடும் கூட வெகு சந்தோஷத்தோடு அங்கு துரிதமாய் வந்தார்கள்.

அப்போது தக்கனும் அவர்களுக்கு எதிர்கொண்டு சென்று பிரம்மன் விஷ்ணு இருவர்களையும் ஸந்தோஷிப்பித்து அவர்களுக்குத் தக்கபடியுள்ளச் சிரேஷ்டமான ஆசனங்களில் அவர்களையும், வீற்றிருக்கச் செய்து பிறகு மற்றத் தேவர்களையும், இருடிச் சிரேஷ்டர்களையும் பற்பல உபசாரங்களோடு அவரவர்களை யாதனங்களிலுட்காரச் செய்துவிட்டுப் பிறகு தானும் கேளீர்! முனிவர்களே! எல்லாத் தேவர்களுக்கும் மத்தியில் அப்போது உட்கார்ந்தான். பெயர்போன அனேகம் பிராம்மணர்களும் அப்போதங்கு வந்தார்கள். மேலும் இலக்குமி, ஸரஸ்வதி இந்திராணி இன்னும் மற்ற தேவ பத்தினிகள் இருடி பத்தினிகள் இவ்வெல்லோர்களும் வெகு கீர்த்தியுள்ளவர்களாய் அங்கு வந்து வேதவல்லியினுடைய மகா மங்களகரமான மாளிகைக்குட் சென்று அங்கு பற்பல உபசாரங்கள் செய்யப்பெற்றவர்களாகி வெகு சந்தோஷத்தோடு சுற்றிலும் இருந்தார்கள். பிறகு தக்கனே வென்றால் அங்கு வந்திருக்கலுற்ற தூது போன சேவகர்களை நேர்முகமாய்ப் பார்த்து "ஓ! தூதர்களே! தேவர்கள் பிராமணர்கள் இருடிகள் இவர்களில் இங்கு யார்

வரவில்லை யென்பதைக் கொஞ்சமேனும் இங்கு பயப்படாமல் நம் முன்பாகச் சொல்லுங்கள்'' என, தூதர்களும் அப்போது இவ்வாறவனது வசனத்தைக் கேட்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! எல்லோர்களும் நிர்ப்பயர்களாகி அவனை நோக்கி வசனமுரைத்திட்டதாவது:—

'ஓ! சுவாமீ! தவசிகளிற் சிரேஷ்டரான அகத்திய முனிவர், பெருமை பொருந்திய நாரதர், வேத வேதாந்தங்களின் கரைகடைந்தவர்களான ஸனகர் முதலிய மாமுனிவர்கள், ததீசி, அத்திரி, வஸிஷ்டர், பராசரர், பிருகு, தவசிகளில் முதன்மையான துர்வாசமுனிவர் இவ்வெல்லா மாமுனிவர்களும் ஜகங்களுக்குப் பிரபுவான தேவரீரையும், தேவரீர் யாகத்தையும் இகழ்ந்து பேசியிங்கு வராதிருந்துவிட்டார்கள் என, மகா பாவியான தக்கனும் அவர்களது வசனத்தைக் கேட்டு நகைத்துக்கொண்டு ''ஓ! இவ்வெல்லோர்களும் அவ்வுருத்திரனுக் கடியார்கள்; ஆகையால் தான் அவர்களிங்கு வரவில்லை; நல்லது! அவர்களிங்கு வரவேண்டா''மென்று அவ்வெல்லோர்களையும் திக்காரம்பண்ணி வசனமுரைக்கையில், கேளீர்! முனிவர்களே! அப்போது மகாத்துமாவும் ஸ்ரீ சர்வேசுவரனிடத்தே பற்றுதலுள்ளவருமான ததீசி மாமுனிவர், தமது சீடர்களோடும் சீடர்களின் சீடர்களோடும் அங்கு விஜயமாயினர்.

அப்போது தக்கன் அவரைக் கண்டவுடன் ''உருத்திரனுக்கு இவர் அடியாரல்லர், ஆகையால் தான் இவர் நம்மிடத்து பயங்கொண்டு இங்கு வரலுற்றனர் என்பது நிச்சயம் என்று மனதினில் நிச்சயித்துக்கொண்டு கேளீர்! தரணித்தேவர்களே! அவர்களுக்கும் சீடர்களுக்கும் ஆதனமளித்தான். அப்போது ததீசிமுனிவர் அவனை நோக்கி ''ஓ! தக்ஷப்பிரஜாபதியே! நீர் யாது நிமித்தம் நம்மை யழைக்கலானீர்' என்று பிரகாசிக்கலுற்ற கம்பீரமான வாக்கினால் அவனை வினவலாயினர்.''

## 11. அத்தியாயம்.

தவசிகளிற் சிறந்த அத்ததீசிமாமுனிவரை நோக்கித் தக்கன் மறுமொழியுரைத்ததாவது:—கேளீர்! முனிவரே! முந்தி முக்கண்ணன் நமது பெண்ணைக் கலியாணம்செய்து கொண்டதில் அக்கலியாணத்தைப் பாதியிற்கெடுத்து விட்டு நேர்மையற்ற தொழிலைக்கொண்டவனாய் ஓடிப்போய் விட்டான். பிறகு கொடிய தொழிற்காரனும், கொடிய கண்ணையுடையவனும், மிகுந்த சூதனுமான அச்சிவன் மறுபடியும் இங்குவந்து நமது பெண்ணைத் திருட்டுத்தனமாய் எடுத்துப்போய் விட்டான். அப்படியிருந்தும் நாம் இவ்விருவர்களையும் பார்ப்பதற்காக அவனுடைய கைலைகிரிக்கு யாம் துரிதமாய்ச் சென்றதில் ஓ! கோ! அவனது வாசற்காப்போர்கள் அவன் வார்த்தையைக்கேட்டு நம்மைத்தடுத்து விட்டார்கள்.

பிறருக்கு வஞ்சக மளிக்கலுற்ற அச்சூதன் இவ்விதமாய் நம்மண்டையிலிருந்த நமது பெண்ணை மாயத்தினால் மயங்கச்செய்து அவளை நம்மிடத்துப் பராமுகமாயிருக்கும்படிசெய்து கொண்டிருக்கிறான். ஆனதுபற்றிப் பிரம்மன் செய்த யாகத்தில் அவனுக்கு அவிர்ப்பாகம் கொடுக்கத் தகாதென்று யாம்

தடுத்து விட்டனம். அப்போது அவனது வாசற்காப்போனான நந்தியெழுந்து "யாவர் ஸ்ரீ சிவபிரானுக்கு யாகமதில் முந்திய ஆஹுதியைக் கொடுக்காமல் செய்கின்றார்களோ அவர்களது தலைகள் நூறு சுக்காய் வெடிக்கக் கடவன" வென்று சொல்லி மிகுந்த கோபாவேசங்கொண்டவனும் நம்மிடத்துப் பய மடைந்தவனுமாகித் துரிதமாய் ஓடி விட்டான். அப்போது மத்தளமடித்தது போன்ற அவனது வசனத்தைக் கேட்டு இத்தேவரெல்லாம் அச்சிவனை விலக்கி யாகம் செய்யப் பயங்கொண்டவர்களாகி அது முதலாய் யாகம் செய்ய வேயில்லை. பிறகு அவர்களுக்காக யாமே அந்நந்தி வசனத்தைச் சட்டை பண்ணாமல் அவ்வுருத்திரனை விலக்கிவிட்டு மகா பரிசுத்தமான இவ்வியா கத்தைச் செய்யலாகின்றோம், ஓ! கேளீர்! முனிவரே! அதற்காக யாமித் தேவர்களை யெல்லாம் இங்கழைப்பித்திருக்கிறோம். மேலும் மகாத்துமராகிய நீரும் இதனைப்பார்ப்பதற்காக இங்குவந்தபடியால் இது யாதோர் ஆக்ஷேபணையு மின்றி முடிவடைந்துவிட்டதாக நினைக்கிறோம்' என இப்பேர்க்கொத்த அவ னது வசனத்தைக் கேட்டுத் தவசிகளிற் சிறந்த ததீசிமாமுனிவர் அப்போது கோபத்தினாற் கைகொட்டி நகைத்து வசனமுரைத்ததாவது:—ஓ! தக்ஷா! உமது சகல புண்ணியங்களும் பாவமாகவே முடிந்துவிட்டது, என்று அவ ருரைத்துவிட்டு மௌனமடைந்து சும்மாவிருந்துவிட்டார்.

கேளீர்! முனிவர்களே! பிற்பாடு தக்கன் கோபத்தினாற் கலங்கலுற்ற கண்களைக் கொண்டவனாகி வசன முரைத்ததாவது:—ஓ! ததீசி முனியே! நீ அவ்வுருத்திரனிடத்துப் பக்தியுடையோனாகையால் அல்லவோ நகைத்துக் கொண்டு இங்கு நம்மையும் இகழ்ந்து நம்முன்னரே ஏதேதோ பேசலானாய்" என்று அப்போது உரைத்துக் கோபத்தினாற் குன்றிய முகத்தைக் கொண்டி ருந்தான். அது கேட்டுத் ததீசி மாமுனிவருரைக்கின்றார்:—"ஓ! தக்ஷா! சகல சாத்திரங்களையும் கற்றறிந்த நீர், மிகுந்த புத்திப்பிரமையினால் வேள்விகளுக்கு வேந்தனாகிய அம்மகாதேவரை விலக்கிவிட்டு, யாகம்செய்யக் கருதுகின்றீர். ஸ்ரீ மகேசுவரன் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களையும், மற்றப் பிராணி களையும் படைத்து அவர்களைக் காப்பாற்றுவதற்கும் தக்க ஏற்பாடு செய்து விட்டுப் பிறகு முடிவினில் உருத்திர வுருவங்கொண்டவராகி அவர்களைச் சமு காரம் செய்கின்றார். சகலருக்கும் ஜனகரான அச்சம்புவே பரமாத்துமா வென்று முறையிடப்படுகின்றார். தவிரவும், "அம்மகா தேவரே அவிசுகளைப் புசிப்பவர். அந்த அவிசினுடைய சொரூபமும் அவர்தான். அவ்வவிசுதனை ஓமம் செய்யப்பெற்ற அக்கினி தேவனுக்குத் தந்தையுமவரே! ஜகதீசனான ஸ்ரீ பரவசிவனே யாகத்துக்குக் கர்த்தாவும் அதனைக் காப்பவருமேயன்றி மற்ற யாவருமில்லை" என்று உபநிஷத்துக்களெல்லாம் முறையிடுகின்றன.

இப்போது இச்சபையில் யாவராவது வேள்விக்கு வேந்தனாயிருந்தால் அவர் நம்முன்னர் வந்து நிற்கட்டும். விஷ்ணு முதலிய தேவர்களுக்கும் அவரால் தான் ஐசுவரியமும் கொடுக்கப்பட்டிருக்கின்றது. சகலர்களையும் படைத்தவர் அம்மகா தேவர் தான்; அவரைப் படைத்தவரெவருமில்லை. பெருமை பொருந் திய ஈசுவரனும், சுகத்தையுண்டு பண்ணுவோரும், கறுத்த கழுத்தையுடையவ

ரும், முக்கண்ணுடையவருமான ஸ்ரீபரமசிவனே சகல பிராணிகளுக்குள்ளும் அந்தர்யாமியாய் விளங்கி பரப்பிரம்ம மூர்த்தியும் பராபரக் கடவுளுமாகி விளங்குகின்றார். அவர் இவ்வெல்லாத் தேவர்களிலும் மிகுந்த சிரேஷ்டரானவர். அப்பேர்க்கொத்த ஸ்ரீ ஜகதீசனே மும் மூர்த்திகளிலும், மிக்க மேன்மை கொண்ட மூர்த்தி. மேலும் வேதமதில், பகவானாகிய ஸ்ரீ மகாதேவன் பிராம்மணரென்றும் விஷ்ணு க்ஷத்திரியரென்றும் அடிக்கடி முறையிடப்படு கிறது. இப்படி யிருக்கையில் ஓ! தக்ஷ! நீர் மிகுந்த புத்திப் பிரமை யினால் வேதத்தினால் விளக்கப்பட்ட இப்பொருள்தனை யறியாமல் வேள்விக் கதிபரும், வேள்விக்குக் கர்த்தாவும், துக்கங்களைத் தொலைப்பிப் போரும், என்றும் அழிவற்றவருமான அம்மகா தேவரை விட்டு முன் இலவம்பூவுக்கு நிகரானவர்களும், அற்பப் பிரயோஜனத்தைக் கொடுக்கலுற்றவர்களுமான மற்ற இவ்வெல்லோர்களையும் வீணுக் கூட்டி வைத்துக்கொண்டு யாகம் செய்ய முயன்றவனாகித் தொடக்கம் செய்யலாகின்றீர். ஐயோ! இதெல்லாம் ஓர் வேசிமகன் தன் தகப்பனை யறியமாட்டாமல் மற்றவரைத் தகப்பனாய்க் கொள்வது போலாயிற்றே! இது மிகவும் கஷ்டம்! புண்ணியத்திற்காகப் பிரயத்தினப்பட்டவருக்கு இங்கு பாவமல்லவோ பயனாய்க் கிடைக்கலாகின்றது. நீர்வேத மார்க்கத்தை விட்டுத் துர்மார்க்கத்தில் தலைப்பட்டிருக்கின்றீர். ஆகையால் உமது இவ்விபாகத்துக்கு மிகுந்த விடையூறு சம்பவிக்கப் போகின்றது.

மேலும் உமக்கு விநாச காலம் நெருங்கி விட்டதென்று சத்தியமாய்ச் சொல்லுகின்றோம். அம்மாகா தேவருக்குப் பயந்தே வாயுதேவன் எப்போதும் காற்று வீசுகின்றான்; சூரியன் உதயமாகின்றான்; அக்னி தேவனும்உயரக் கிளம்பி எரியலாகின்றான். இந்திரன் சொர்க்கமாளுகின்றான்; ஐந்தாவதான மிருத்தியுவும் அவரிடத்துப் பயத்தினால்தான் அவர் அடியார்களைக் கண்டு வெகு தூரத்தில் விலகலாகின்றான். கேளீர்! தக்ஷா! காலனுக்குக் காலனும், நித்தியாநந்த சொரூபியுமான அம்மகா தேவரிடத்தில் இத்தேவர்களில் யாவர் தான் பயப்படவில்லை. அவரை நீர் சொல்லும் ஓ! தக்ஷா! ஆகையால் நீர் அம்மகா தேவனுக்கு முந்தியதான அவிசைக்கொடுத்தலேவேண்டுமென அம்மாமுனிவர் உரைத்த இவ்வாறு வசனங்களைக் கேட்டுக் கேளீர்! பிராம்மணோத்திரர்களே துராத்மனாகிய அத்தக்கன் பாவத்தினால் ஆவேசம் கொண்ட மனதையும் சுழலலுற்ற விழிகளையும் கொண்டவனாகி அவரை நோக்கி மறுபடியும் வசனமுரைக்கலாகின்றான்.

## 12. அத்தியாயம்.

“ஓ! இருடியே! நாம் அவ்வுருத்திரனுக்குச் சிரேஷ்டமான அவிசைக் கொடுக்கமாட்டோம். ஆனால் அதனைச் சகல பாவங்களையும் தொலைப்பிக்கலுற்றவரும், சகல ஜகங்களுக்கும் பிரபுவானவருமான ஸ்ரீ மகா விஷ்ணுவுக்குக் கொடுத்து யாகம்செய்கின்றோம். இவ்வியாகமதில் சகலப் பிரபஞ்சச் சுவரூபியான அவ்விஷ்ணுவே நம்மாற் பூஜிக்கத் தக்கவர் என, இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டு மாமுனிவர் மறுபடி வசனமளித்ததாவது:—ஓ! பிராஜ

பதியே, பூஜிக்கத்தகாதவனை நீர் பூஜித்தால் உடனே நிச்சயமாய் நாசம் சம்பவிக்குமென்று சாத்திரமறிந்தவர்கள் கூறுகின்றார்கள். ஸகலர்களுக்கும் பெரியோரும், மகா தேவனும், சந்திரகலையை யுச்சிதனிற் சூடியவருமான ஸ்ரீ சிவபிரானே வேள்விக்கு வேந்தனான மகேசுவரனென்று உலகத்திலும் வேதத்திலும் பிரசித்தி கொண்டிருக்கிறார். ஆகையால் யாகங்களில் அந்த பிரபுவுக்கல்லவோ முந்திப் பூஜைசெய்ய வேண்டுமென இவ்வாறு அவரது வசனத்தைக் கேட்டுத் தக்கன் மறுபடியும் வசனம் கூறுகின்றான்:

கேளீர்! இருடியே! பூமிதனில் பிரசித்தி கொண்ட ஈசானரென்ற திக்பாலரையும், அதேவிதமாக ஏகாதச ருத்திரர்களையும் மட்டில் தாம் யாம் சந்தேகமின்றிப் பூஜை செய்வோம். ஏனென்றால் அவ்வுருத்திரர்களைப்போலவே அச்சிவனு மொருவன் தான். ஆகையால் நாம் யாகமதில் அவர்களையே பூஜிக்கலாவோம்'' என, ததீசி யுரைக்கின்றார்:—''ஓ! பிரஜாபதியே! இவ்வுருத்திரரெல்லாம் ஸ்ரீ மகா தேவருக்குச் சரியாய் எப்படியாவார்கள்? ஓ! தக்ஷா! உலகமதில் எந்த மகாத்துமர்கள் பரமகாரணராகிய ஸ்ரீ சிவபிரானைத் தியானிக்கின்றார்களோ அவர்கள் ஸாரூப்பிய பதவியைக் கொண்டல்லவோ உருத்திரர்களென்று பிரஸித்தி கொண்டிருக்கிறார்கள். ஆகையால் அவ்வுருத்திரர்கள் ஸாரூப்பியத்தை யடைந்திருப்பதனால் மட்டில் அப்பரமேசுவரனைப்போல் யாகமதிற் பூஜிக்கத் தக்கவராகமாட்டார்கள். ஆனால் அவர்கள் பிரம்ம விஷ்ணுக்கள் முதலியவர்களுக்கும் மேற்பட்டவர்களென்பதிற் சந்தேகமேயில்லை; அச்சிவனடியார்கள் முந்தி அப்பேர்க்கொத்த பதவியை விரும்பியபடியால் அதனை அடைந்திருக்கிறார்கள். ஆயினும் அவர்கள் யாகத்தில் ஸ்ரீ பரமேசுவரனுக்கு உரியதான முதன்மையாகிய அவிசைப் பெற்றுக்கொள்வதற்காவது அதனை பூஜிப்பதற்காவது தகுதியுள்ளவர்கள் ஆகமாட்டார்கள்.

முந்தித்தேவேசன் அவர்களது தவத்தினாற் பிரசன்னராகித் தமது திருவுருவத்தைக்கொண்ட ஈசானத் தேவரைத் திக்பாலர்களுக்குள்ளோர் திசைக்கதிபராய் நியமித்தும் அவ்வுருத்திரர்களைத் தேவர்களோடு சேர்த்தும் ஆதியந்தமற்ற அவ்வீசுவரன் தாமே அவர்களை என்றும் காப்பாற்றி வருகின்றார். அவர்களோடு சேர்ந்தல்லவோ தேவர்களின் சங்கியை முப்பத்து முக்கோடியாகின்றது. அதனால் அவர்களுக்கு ஸ்ரீ மகேசுவரனுக்கு உரியதான அவ்வவிற்பாகத்தைப் பெறுவதற்கு அதிகாரமில்லை. ஆகையினால் கேளீர் தக்ஷனே! யாகத்திற்கு அதிபதியும் மகாச் சிரேஷ்டருமான அம்மகாதேவனையே பூஜிக்கலாவீர். ஏனென்றால் அந்த சர்வேசுவரனான பகவானேயெல்லா வேண்டுதலையும் கொடுக்கவுற்றவர் என, இவ்வாறு அம்முனிவரது வார்த்தைகளைக் கேட்டதன்மேல் மறுபடியும் அத்துராத்துமன் கூறுகின்றதாவது:—ஓ! முனிவரே! நீர் ஏன் மிகுந்த பிரயாசை எடுத்துக் கொள்ளுகிறீர். ஆவோராஜான மென்ற வேதமந்திரத்தினால் உருத்திரனுக்கவிர்ப்பாகம் கொடுக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் யாம் நம்முடைய யாகமதில் எந்த உருத்திரனையாகிலும் பூஜைசெய்கின்றோம். எல்லா உருத்திரர்களுக்குள்ளும் ஒருவருக் கொருவர் ஏற்ற வித்தியாசமில்லையே'' ஆகையால்

நமதிச்சையின்படி அவர்களில் யாதாவது ஒருவர் பூஜைக்குத்தக்கவரேயின்றி மற்றவரில்லை. என அவ்வாறு அவன் சொல்லியதைக் கேட்டுத் தத்துவங்களை அறிந்த அம்மாமுனிவர் உரைக்கலாகின்றார்:—

"ஓ! கேளீர்! தக்ஷப்பிரஜாபதியே: உருத்திரன் என்ற பெயரின் பொருள் ஸாரூப்பிய பதவியை அடைந்திருக்கும் பூதகணங்கள், பாதாள லோகங்களுக்கு கீழ்பாகத்திலுள்ள ஸ்ரீ காலாக்கினிருத்திரர், ஹாடகேசுவரர், கூசுமாண்டருத்திரர் இவர்களுக்குப் பொருந்தி யிருக்கின்றது. தவிரவும் அக்னிதேவன் தேவர்களுக்காக அவிர்ப்பாகங்களைப் பெற்றுக் கொண்டு செல்வதற்குள் அப்போது அத்தேவர்களாற் பின்தொடர்ந்து துரத்திப் பிடிக்கப்படலாகையில் அவன் ரோதனம் (அழுதல்) செய்கின்ற தால் "உருத்திர"னென்ற பெயரின் பொருள் அவ்வக்கினி தேவனுக்குப் பொருந்துகின்றது. மேலும் தமது நேசத்திற்கிசைந்த அடியார்களிடத்துத் தயவினால் அவர்களது துக்கத்தைத் தொலைப்பிக்கின்றபடியால் ஸாக்ஷாத் பரப் பிரம்மமும் ஸர்வேசுவரனும், மகாதேவனும்,முக்கண்ணனும், கழுத்துதனிற் கறுத்தவரும், ஸத்தியானந்த ஞானப்பாற்கடலும் மகா பரிசுத்தமுள்ளவரு மாகிய அப்பரமசிவனிடத்தே அம்மொழியானது காரணப் பெயராகவும் இடு குறிப்பெயராகவும் பூர்ணமாய்ப்பொருந்தி ஏற்பட்டிருக்கின்றது.

ஆகையினால் கேளீர் தக்ஷனே! நீர் வீண்பிரமையைவிட்டு மற்றெல்லோர்களையும் ஒழித்து இயாகங்களுக்கு அதிபரும், மகேசுவரனுமான ஸாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவரனையே பூஜை செய்தல் வேண்டும் என, அது கேட்டுத் தக்க னுரைக்கின்றான்:—ஓ! முனிவரே! மும்மூர்த்திகளில் அவ்வுருத்திரன் சமு காரத்தொழிலை நடத்தலுற்ற ஒருவனே! பிரம்ம விஷ்ணுக்களாற் சிருஷ்டி ஸ்திதி இவ்விரண்டும் நடத்தப்படுகின்றன வல்லவோ! இப்படி இருக்கையில் சமுகாரத்தொழிலை மட்டில் நடத்துவோனுக்கு எல்லாவற்றையும் நடத்தும் தன்மை எவ்வாறுண்டாகும்? நீர் நிச்சயமாய்ப் புத்திபிரமையால் தான் அவனை யெல்லாவற்றிற்கும் கர்த்தாவென்றுரைக்கலாகின்றீர்" என, கேளீர்! பிராம்ம ணோர்த்தமர்களே! இவ்வாறுரைத்த அப்பாதகனை நோக்கி அத்தவசி கூறிய தாவது:—"ஓ! தக்ஷனே! நீர் கொண்டிருக்கும் மிகுந்த புத்தி பிரமையை விட்டு நல்ல புத்தியை யூன்றிக் கேட்கலாவீர். ஸ்ரீ மகா தேவன் ஞான மூர்த்தியும், ஸத்தியாநந்த குணமுள்ளவருமென்றும் சொல்லப்படுகின்றார். அவ ருக்கு என்றும் அழிவற்றதான சேதன சக்தியைத் தவிர வேறு சரீரமில்லை. அவரே ஸர்வ ஜனகராயிருந்து பிரம்மன், விஷ்ணு முதலியவர்களைச் சிருஷ் டித்து அவர்களுக்குச் சிருஷ்டி, ஸ்திதி முதலிய தொழில்களையும் ஏற்படுத்தி யிருக்கிறார். ஸகலமும் நாசமடையும் பொழுது அவர்களாற் கூட அவர் அறி யப்படுவதில்லை. காலமாகிய இயந்திரத்தில் அகப்படலான இவ்வெல்லோர் களையும் அவரெப்போதும் ஆட்டி வைக்கலாகின்றார். காலம் முடிந்தவுடன் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய அவ்வெல்லாத் தேவர்களையும் அவர் அதம் பண்ணிப் பிறகு லீலாவினோதத்தினால் அவ்வெல்லோர்களையும் சிருஷ்டித்து அவரவர்களுக்குத் தொழிலையும் ஏற்படுத்திப்பிறகு அவர்களுக்கு அம்மகேசு

ஸ்வரன் சிக்ஷை, வியாகரணம், சந்தம், நிருக்தம், சோதிடம், கல்பம், ஆகியஅவ்வாறு அங்கங்களோடு கூடிய வேதங்களையும் கற்பித்து, விபூதி ருத்திராக்ஷங்களையும் தரிப்பித்து ஸத்யோ ஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம் ஈசானம் ஆகியவைந்து பிரம்மங்களின் சொரூபத்தைக் கொண்ட ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தையும் உபதேசித்து என்றும் அழிவற்ற அம்மகா தேவன் அவர்களை எப்போதும் இரக்ஷித்து வருவதோடு அவர்கள் மறுபடியும் புத்திப் பிரமை கொள்ளும்போது அவர்களை அவ்வீசுவரன் அடக்கியும் வருகின்றார். அப்பரமேசுவரனைத் தவிர மற்ற தேவர்களால் சமுகாரத்தொழிலை நடத்த முடியாது. ஆகையால் அதனைச் சகல ஜகங்களுக்கும் பராபர குருவான அச் சம்புவே (மும்மூர்த்திகளி லொருவரான) உருத்திர உருவம் கொண்டவராகி நடத்தலாகின்றார்.

ஆகையால் பிரபஞ்சங்களின் சிருஷ்டி, ஸ்திதி, சமுகாரம் பிறகு சூக்ஷ்ம உருவத்தோடு பிரம்மத்தினிடத்து லயித்தல் முதலியவை எல்லாம் மகாப் பிரபுவும், மகா தேவனும், சத்தியஞானாநந்த ஸ்வரூபியுமான அம்பரமேசுவரனாலே நடத்தப்பட்டு வருகின்றன. முந்திச் சில இருடிகளுக்கு அம்மாதிரியாகவே சந்தேகமுண்டாகிக் கேளீர்! பிரஜாபதியே! அவர்கள் மகா மேருகிரிக்குச் சென்று அங்குப் பிரம்மனைக் கண்டு பற்பல துதிகளால் தோத்திரம் பண்ணி விநயத்தோடு வணக்கமுற்றவர்ளாகி அவரை வினவியதாவது "ஓ! சகல குணங்களும் நிரம்பப்பெற்ற பிரம்ம தேவா! சந்தேகத்தினால் மனம் தடுமாறலுற்ற இவ்வெங்களுக்குப் பரப்பிரம்மமும் பரஞ்சோதியுமான தேவன் யாரென்பதைத் தெளிய உரைக்க வேண்டும்"என, பிரம்மம் அவர்களது வசனத்தைக் கேட்டவுடன் ஹிருதய கமலமத்தியில் விளங்கி யிரானின்றவரும், கறுத்த கழுத்தைக்கொண்டவரும் முக்கண்ணுடையவரும், சந்திரகலையை அலங்காரமாய்ப் பூண்டவரும் சாந்தமுள்ளவரும் சச்சிதாநந்தமூர்த்தியும் ஓர் பக்கத்திற் கருப்பும் மற்றோர் பக்கத்திற் சிவப்புமான நிறத்தைக்கொண்டவருமாகிய ஸ்ரீ பரமேசுவரனை அப்போது கணநேரம் தியானம் பண்ணி யானந்தக் கண்ணீர்த்திவிலைகளால் நனையப்பெற்றவரும், சந்தோஷத்தினால் வார்த்தைகள் தழதழக்கப் பெற்றவருமாகி ஓ! முனிவர்களே! அஷ்டைசுவரியங்களும் நிரம்பப்பெற்றவரும் சகல வித்தைகளுக்கும் ஈசுவரனும் சகல ஜகங்களுக்குப் பிரபுவும் பிரம்மனுக்கும் வேதங்களுக்கும் அதிபதியும் அடியார்களுக்கு சுகத்தைக் கொடுக்கலுற்றவரும் என்றும் அழிவற்றவரும், ஸதாசிவனும், பரஞ்சோதியும்,பிரணவத்திற்குடியிருப்போரும், மிகுந்த பெருமை பொருந்தியவருமான ஸ்ரீ சங்கரனே பரபிரம்மமேயின்றி மற்றவால்லவென்று கைகளை யுயரத் தூக்கிக்கொண்டு சத்தியமாய்ச் சொல்லுகின்றோம். இது சத்தியம், சத்தியம். தவிரவும் வேதங்கள், எங்கும் நிறைந்திருப்பவரும் ஸத்தியப் பொருளும் பரப்பிரம்ம மூர்த்தியும் ஓர் பக்கத்திற் கருப்பும் மற்றோர் பக்கத்திற் சிவப்புமான நிறத்தைக் கொண்ட புருடரும், மேல் நோக்கி ஜுவலிக்கலுற்ற வீரியத்தை யுடையவரும், பிரபஞ்ச சுவரூபியுமான அம்மகேசுவரனை நமஸ்காரம் பண்ணி மிகுந்த பயத்

தோடு அவரையே ஸர்வேசுவரனென்று முறையிடுகின்றன. ஆகையால் அவரையே சர்வேசுவரனென்று யாம் நூறுமுறையாய்க் கூறுகின்றோம்.

உலகங்களில் அவருக்குச் சரியாகவாவது மேற்பட்டாவது மற்றொருவருமில்லை. மேலும் சருவப் பிரபஞ்ச ஸ்வரூபியான அப்பரமாத்துமாவானவர் பெரியதுக்கெல்லாம் பெரியவரும், அணுவுக்கெல்லா மணுவுமாய் அசைவற்ற கட்டைபோல் ஆகாயத்தில் ஒய்ந்து விளங்கி நிற்கின்றார். அவராலே இச்சகம் முழுதும் நிரம்பலாகின்றது. வேதங்கள் மனதினுற்கூட அவரை யெட்ட முடியாமற் களைத்துத் திரும்பலாகின்றன. அப்பரப்பிரம மத்தினுடைய ஆநந்தத்தை யறிந்தவர்க் கோரிடத்தும் பயமில்லை. இப்போது கூடப் பிரம்மனாகிய வெந்தனுலும் விஷ்ணுவாலும் அம்மகேசுவரன் காண முடியக் கூடவில்லை. அவ்வீசுவரன் சகல பசுக் (பிராணி)களுக்கும் பதியா கின்றார். பிரம்மாவாகிய யாம் முதலிய எல்லோரும் பசுக்களே. அவரே கருணாமூர்த்தியும், ஒப்பற்றவரும், அடியார்களுக்கு அபயமளிப்பவரும், சகல ஐசுவரியங்களோடும் கூடியவரும் ஆகாயத்தில் விளங்கியிருப்பவருமான சர்வேசுவரன். ஓ! இருடிச்சிரேஷ்டர்களே! வளர்த்திச்சொல்வதில் யாதுபயன். பரபிரம்ம மென்பது அவர்தான்" என, இவ்வாறு அப்பிரம்மனது வசனங்களைக் கேட்டவுடன் அம்முனிச் சிரேஷ்டரெல்லாம் பிரமை தெளிந்தவர்களாகி ஸ்ரீ மகாதேவனையே நித்திய பரப்பிரம்மமாய் அறிந்து கொண்டதன் மேல் அப்பிரம்மனைப் பற்பல துதிகளால் தோத்திரம் பண்ணி வந்தனித்துத் திருநீற்று முப்பட்டைகளையும் உருத்திராக்ஷ மாலைகளையும் ஆபரணங்களாய்ப் பூண்டவர்களும் சிரேஷ்டமான ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தையே ஜபம் செய்வதில் மிகுந்த மனக்கவலை கொண்டவர்களுமாகிக் கேளீர் தக்ஷப்பிரஜாபதியே அச்சிவனுடைய அடியாரெல்லாம் மோக்ஷ ஸாம்பிராஜியத்தை அடைந்துவிட்டார்கள். ஆகையால் சகல குணங்களும் நிரம்பப்பெற்ற ஜகதீசனான அப்பரம சிவனே பரமாத்மா. அம்மகா தேவரைத் தவிர வேறொருவருமில்லை. ஸர்வாந்தர்யாமியாய்க் கேட்பவரும் பார்ப்பவரும் அப்பராபரக் கடவுளே. உபநிடத வாக்கியங்களுக்கெல்லாம் அம்மகேசுவரனிடத்தே முக்கியமான பற்றுதல். மேலும் அப்பகவானே பதி என்றும் மற்றவரெல்லாம் பசுக்களென்றும் முந்திப் பிரம்ம தேவரால் வேதவாக்கியங்களின் முக்கிய ஆதாரங்களைக்கொண்டு நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.

தவிரவும் நீரும் முந்தி சிருஷ்டி கர்த்தரானப் பிரம்மதேவன் வசனத்தைக்கேட்டு அத்தேவேசனிடத்தே இப்பேர்க்கொத்த பக்தியைக் கொண்டு அசாத்தியமான தவத்தைச் செய்து ஓ! பிரஜாபதியே! இப்பேர்க்கொத்தச் சிரேஷ்டமான ஐசுவரியத்தையும் பெற்றிருக்கிறீர். பிரம்மன் சிருஷ்டிகர்த்தா யிருப்பதும், விஷ்ணு அசுரர்களை சமுகரிப்பதும், இந்திரன் சொர்க்கத்தை யாள்வதும் சிவபூஜையின் மகிமையால் தானல்லவோ; நிச்சயமா யுமக்கு மரணகாலம் நெருங்கிவிட்டபடியால் தான் நீர் மாயையினல் புத்திப் பிரமைகொண்டிருக்கிறீர். அவருடைய மாயையைக் கடப்பதற்கு விஷ்ணு பிரம்மர்களாலும் முடியாதே! பிரகிருதியென்பதே மாயையெனப்

படும். அம்மாயையையுடையவர் அம்மகேசுவரனே. அக்கொடிய மாயையோ மகாத்துமர்களான சிவனடியார்களை வாதிப்பதில்லை. ஓகோ ஆகையால் தான் நீர் கொஞ்சமேனும் அவரை நினைக்கவில்லை. பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய இத்தேவரெல்லாம் மிகுந்தமோகவசத்தினால் அவிர்ப்பாகத்தைக் கொண்டவர்களாகியும் சண்டைக்குவந்திருக்கிறார்கள். நீர் மேன்மையான நன்மையை விரும்புவீராகில் இப்போது ஸ்ரீ மகாதேவனை யவிசினால் பூஜை செய்யும். அம்மகாதேவனே சகலப் பிரபஞ்சச்சுவரூபியான பரப்பிரம்மமேயின்றி மற்றொருவருமில்லை. கேளீர்! தக்ஷா! நாமுமக்கு நிச்சயமாய் நன்மையை விரும்பியே இங்ஙனமுரைத்தனம்'' என்று இவ்வாறெல்லாம் மாமுனிவர் உரைத்துவிட்டு மௌனம் கொண்டு சும்மா விருந்தனர். இன்னுமவன் இப்போதுகூடத் தலைமயிர்களை முப்பிரிநூலாக வணிந்திருக்கின்றான். அவன் எப்போதும் சூலத்தினுடைய நுனியில் மகா பயங்கரமான பிணத்தைக் கோர்த்துக் கொண்டிருக்கிறான். சுடுகாட்டுச் சாம்பற்களையுடம்புதனிற் பூசிக்கொண்டு எப்போதும் மதத்தினால்மிகுந்த அட்டகாசம் பண்ணிக்கொண்டு கூத்தாடுகிறான். மேலுமவன் ஸகலப் பிராணிகளையும் சமுகரிப்பவன்; கொடியவன்; பற்பல வுருவங்களைக் கொண்டவன், அவன் காமவிகாரத்தினால் கண்தெரியாதவனாகி ஓர்பெண்ணைத் (கங்கை) தலைமீதும் மற்றொருவளை (அம்பிகையை) பாரிசத்திலும் எப்போதும் தூக்கி வைத்திருக்கிறானென்று உலகினில் பிரசித்தியடைந்திருக்கின்றது. தவிரவும்அவன் பெண்டீர் பிள்ளைகளோடு ஓர் குடும்பியாயிருந்தும், தரித்திரனாயிருக்கின்றான். அவன் தமோகுணமுடையவன்; கொடியன்; எல்லோர்களுக்கும் அபகாரம்செய்பவன். இப்படியிருக்கையில் ஓ! மாமுனிவரே! இப்பேர்க்கொத்த அவ்வுருத்திரனெவ்வாறு பரம்பிரம்மமாவான்? என இவ்வாறுரைக்கலான அத்தக்கனை யம்முனிவர் மிகுந்த கோபத்தோடு பார்த்து; "ஓ! இப்பேர்க்கொத்தபாவியான தக்கனோடுவார்த்தைபேசுவதும் அவன்முகத்தைப் பார்ப்பதும்கூடத் தகுதியல்ல; இப்பாவி மிகுந்த புத்திப் பிரமையாலே சபைதனில் அவ்வாறுரைத்தனன். இங்கு அவனுக்குப் பதிலுரைக்காமற் போய் விடுவதும் தகுதியல்லவென்று மனதில் நிச்சயித்துக்கொண்டு அத்தவச்சிரேஷ்டர் அவனை நோக்கி யுரைத்ததாவது:—

ஓ! கோ! கோ! தக்ஷா! நீ மிகுந்த மதிமயக்கத்தினால் ஸ்ரீ சிவபரமாத்துமாவினுடைய இத்திவ்விய சரித்திரங்களை யெல்லாம் ஓர் இகழ்ச்சிபோற் பிதற்றுகின்றாய். நீ அம்மகேசுவரனுடைய இச்சரித்திரங்களை யெல்லாம் நீ எவ்வாறறியலாவாய்? சகல ஸ்வரூபியான அம்மகேசுவரன் சகலப் பிராணிகளுக்குள்ளும் அந்தர்யாமியாயிருப்பவர். அவருடைய அற்புதமான உருவத்தைக் காண்பதற்கு யாவராலும் முடியாது. என்றாலும் சித்ஸ்வரூபியான ஸ்ரீ சம்புவானவர் சகல லோகங்களுக்கும் உபகார நிமித்தமாய் லக்ஷ்மி விலாசம் பொருந்திய கைலைகிரிதனில் மிகுந்த சுந்தரத் திருமேனியோடு விளங்கிக் கொண்டு அங்கிருந்தபடியே ஸகல தேவர்களையும் அனுக்கிரகித்து வருகின்றார்.

அவர் நிருவாணியாயிருப்பது முதலான சரித்திரங்களெல்லாம் ஒவ்வோர் காரணார்த்தமாயே யன்றிவேறில்லை. அடா! துர்நடத்தைக்கார

தக்கா! நீ ஞானமாகிய கண்ணைக் கொண்டவனாகி அதனைக் கேட்கலாவாய்: பூர்வத்தில் தாருகா வனத்திலுள்ள மிகுந்த மகிமை பொருந்திய சில முனிவர்கள் கொடியமனதை யடைந்து ஸ்ரீ மகாதேவரிடத்தில் பக்தியில்லாதவர்களாகிக் கேவலம் ஜபம் தவம் முதலிய கருமங்களையே முக்கியமாய்ப் பாராட்டிக்கொண்டு தவத்தைத் தவிர யாதொரு தெய்வமுமில்லையென்றும், இயாகம் தவிர மற்ற யாதொரு தெய்வமும் பலன் கொடுப்பதில்லையென்றும், எல்லோர்களுக்கும் சத்தியமாய் அவர்களின் கருமங்களே பலனைக் கொடுக்கலுற்றதென்றும், கருமத்தினாலொழிய பலன் கொடுக்கலுற்ற மற்ற தெய்வமே இல்லையென்றும், பிராணிகளுக்குப் போக மோக்ஷங்கள் கிடைப்பதும் அக்கருமத்தினால்தானென்றும் அவ்வாறெல்லாம் வீண் விதண்டவாதம் பண்ணிக்கொண்டே அவர்கள் வெகுகாலம் தவம் செய்து வந்தார்கள். பிறகு விஷ்ணுப் பிரம்மர்கள் முதலிய தேவோத்தமர்கள் அவர்கள் இவ்வாறு பாவிகளாயிருப்பதை யறிந்ததன்மேல் ஓ! கோ! பாவத்தினால் சித்தம் கெட்டுப் போனவர்களுக்கு ஸ்ரீ சிவபிரானிடத்துப் பக்தி நேரிடாது ஆகையால் தகுந்த முயற்சியாலின்றி இவர்களுக்கு ஸ்ரீ சங்கரனிடத்துப் பக்தியுண்டாகப் போவதில்லையென்று கருதி, கேளாய்! தக்ஷா! அவர்கள் சபித்து விடுவார்களேயென்ற பயத்தினால் அவர்களைச் சிக்ஷிப்பதற்கும் திறமையற்றவர்களாகி அப்போது அத்தேவர்கள் இவற்றை யெல்லாம் ஸ்ரீ மகாதேவரிடம் அறிவிக்க, அப்போது அவர் இவைகளைச் செவிகொண்டதன்மேல் அவர்களை அனுப்பிவிட்டு வெகுகாலம் சென்றபிறகு உலகுக்கெல்லாம் சுகமளிக்கலுற்ற ஸ்ரீ சங்கரன் அவ்விருடிகளை யெல்லாம் மயக்குவதற்காக ஸ்ரீ மகாவிஷ்ணுவைத் திருவுளமதில் நினைக்க அவரது திருவாக்கின்படியே நாராயணன் ஸ்ரீ சிவபிரான் சன்னதிக்குத் துரிதமாய் வந்தனர்.

பிறகு அம்மகேசுவரன் தமது சிங்காதனத்திலிருந்தபடியே அவரது கைகளைப் பற்றிக்கொண்டு அதினின்று இறங்கி யருளி, மகாபரிசுத்தமான அக்கைலையைவிட்டுத் துரிதமாய்ப் புறப்பட்டு ஓ! விஷ்ணுவே! நமது திருவாக்கினுக்கு அமையலுற்ற நீர் மோகினி யுருவமெடுத்துக் கொண்டு வீண் அனுஷ்டானங்களைச் செய்து வரலுற்ற அம்முனிவர்களை மோகிக்கச் செய்யலாவீர்களென்று திருவாக்கருளிவிட்டு, அப்போது தாமோர் நிர்வாணியாகி, யிச்சா சக்தி, ஞானசக்தி, கிரியா சக்தி, ஆகிய மூன்று சக்திகளின் உருவமாகிய ஓர் அற்புதமான மூச்சூலத்தையும் பரா சக்தியின் உருவமாகிய ஓர் கப்பரையையும் திரோதன சக்தியின் உருவமாகிய விசித்திரங்களான பாதுகைகளையும் அமைத்துக்கொண்டு துரிதமாய் அவ்வீசுவரன் தாருகாவனத்திற்கேகினர். அப்போது அம்மோகினியும் அம்மகேசுவரனைக் கண்டு மோகம் கொண்டு அப்பரமாத்துமாவோடு புணர்வதற்கு வேண்டிக் கொள்ளுகையில் அப்போது மேல் நோக்கும் வீரியத்தைக்கொண்டு அச்சம்புவானவர், நேர்த்தியான ஹாரங்களையும், பிறர் மனசுகளைத் திருடலுற்ற பல்வரிசைகளாற் சிறந்த மந்தஹாசத்தையும், புதிய பவழத்திற்கு நிகராய்ப் பிரகாசம் பொருந்திய தளிர்போன்ற உதடுகளை

யுடையவளும், சந்திரகலைபோல் வளைந்த புருவங்களைச் சிணுக்கலுற்றவளும் கருநெய்தல் மலர்போன்ற கண்களைக் கொண்டவளும், நன்கு வட்டமாய்ப் பருத்த கொங்கைகளின் பாரத்தினுற் கொஞ்சம் வணக்கமுற்றவளும் மெல்லிய இடையுடையவளும் நீலோத்பல மலருக்கு நிகரான சோபையைக் கொண்ட உரோம வரிசையால் விளங்கலுற்றவளும், சிங்கார வசனங்களையே முக்கிய வார்த்தையாய்க் கொண்டவளுமான அம்மோகினியைக் கண்டு ஸ்ரீ பகவான் புன்னகையுற்ற திருமுகத்தைக் கொண்டவராகி ஓ! சகல லோகங்களையும் மோகிக்கச் செய்யலுற்ற மாதரசே! மற்றோர் காலத்தில் உந்தனோடு சரசம் தொடக்கலாகின்றோம். நீ இப்போது தாருகாரணியம் சென்று அங்கு நம்மீது பராமுகமாயிருக்கலுற்ற தவசிகளை மோகிக்கச் செய்துவிட்டு இங்கு சீக்கிரம் வரலாவாய்'' என்று கட்டளையிட்டு அவளை அனுப்பினர்.

பிறகு பழுதற்ற அழகுகொண்ட மேனியுடைய அம்மோகினியும் ஸ்ரீபரமேசுவரனுடைய அத்திருவசனங்களை நல்லதென்றுகொண்டு அவ்விதமேசெய்தனள். அத்தவசிகளெல்லோரும் சிங்காரமான ஒய்யார நடையோடு நான்கு பக்கங்களிலும் இங்குமங்கும் பார்த்துக்கொண்டு செல்லலுற்றவளும், புன்னகைப்புறற்ற சுந்தரவதனத்தையுடையவளும், மான் பேடுபோல் சுழற்றலுற்ற விழிகளைக்கொண்டு வனமதில் உலாத்தலுற்றவளும், மன்மதனது சம்பாவிதை விதைப்பதற்குற்ற சிறந்த கழனியை யொத்த வடிவத்தைக் கொண்டவளும், ஒய்யாரத்தினுல் அடிக்கடி பின்தட்டுமீது வைக்கப்படலான தளிர்போன்ற உள்ளங்கையைக்கொண்டவளும், பாதசரங்களின் மதுரவொலியினுல் மன்மதனுக்கு அறிவிக்கலுற்றவளுமான அம்மோகினியைக்கண்ட மாத்திரத்தில் கேளீர்! பிரஜாபதியே! காமன் கணைகளாற் பீடிக்கப்பட்டவர்களாகித் தங்கள் நியமங்களை யொழித்தும் இடுப்பு ஆடைகள் அவிழலாகிக் காமவிகாரத்தினுல் அவளைச் சுற்றிக்கொண்டு இந்திரியங்களை ஒழுகவிட்டுக் கொண்டும் அவளை யுற்றுற்று நோக்கிப் பலவிதமாய் அம்மாதரசை வர்ணித்தும் அவரவர்களின் இச்சைபோனபடி மோகவசனத்தினுற் சரச சல்லாபம் கொண்டிருந்தார்கள்.

அப்போது ஸ்ரீ மகா தேவனும் மிகுந்த யௌவனமுடையவரும், கோடி மன்மதர்களுக்கு நிகரான சுந்தரத் திருமேனியுடையவருமான ஓர் பிச்சைக்காரன் உருவத்தைக் கொண்டவராகி அதே வீதிதனில் வந்து சிலவிடத்தில் வேதவாக்கியங்களைச் சொல்லிக்கொண்டே பிச்சை வாங்கியும், சிலவிடத்தில் வீணையை மீட்டி நல்ல ஸ்வரத்தோடு பாடிக்கொண்டும் சிலவிடத்தில் சிவ ஆகமங்களை ஓதிக்கொண்டும் சில விடத்தில் சிவநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டும் திருவிளையாட்டாய்ப் பிச்சைவாங்கி வந்தனர்.

## 14. அத்தியாயம்.

இப்பிரகாரமாக ஸ்ரீ ஜகதீசன் உல்லாசமாய்ப் பிச்சை வாங்கி வருகையில் இருடி பத்தினிகளெல்லாம் கரண்டி நிரம்ப அன்னத்தை எடுத்துக் கொண்டு வந்து யௌவன பருவமுடைய சுந்தர உருவத்தைக்கொண்ட அம்

மகாதேவனைக் கண்டவுடன் காமவெறி கொண்டு ஆபரணங்கள் கழன்று இடுப் பாடையின் முடிச்சு அவிழலுற்றவர்களும், அல்குனில் ஊற்றங்கொள்ளப் பெற்றவர்களும் தேகத்தின் உறுப்புகள் மிகுந்த மயிர்க் கூச்சல் கொள்ளப் பெற்றவர்களும், கூந்தல்முடி யவிழக் கொண்டவர்களும், சரச உல்லாச வார்த்தைகளைப் பேசலுற்றவர்களுமாகிப் பிச்சை போடும் வியாஜத்தோடு அப்பிச்சைக்காரரிடம் வந்தவுடன் அப்போது அவர்கள் கர்ப்பம் தரிக்கப் பெற்றவர்களாகி ஓர் கணத்துக்குள் சிவாக்கினையால் பிள்ளைகளையும் பெற்றார்கள். உடனே அப்பிள்ளைகளும் எழுந்து ஸ்ரீ பரமேசுவரனை விநயத்தோடு வந்தனிக்க, அப்போது அப்பிச்சைக்காரரும் தமது பிள்ளைகளைச் சந்தோஷத்தோடு திருக்கண்ணுற்றுத் திருவாக்கருளியதாவது:—"ஓ! புத்திரர்களே! நீங்களெல்லோர்களும் நமதாக்கினையின்படி இங்கு நம்மைத் தியானம் செய்து மிகுந்த தவத்தைச்செய்பலாவீர்கள்' என்று அந்த ஞானமூர்த்தியான ஜகதீசன் அவர்களை அனுப்பிவிட்டு அவ்விருடி பத்தினிகளால் பின் தொடரப் பெற்றவராகி அங்கு சுற்றிலும் உலாவினர்.

மேலும் அப்போது சகல அவயவங்களும் சுந்தரமாய் அமையப்பெற்ற அம்மோகினியும் சுற்றிலும் அவ்விருடிகளால் சூழப்பெற்றவர்களாகி அங்கு அப் பரமேசுவரன் அண்டைக்குவந்தனள். முனிவர்கள் அப்போது அங்கு தங்கள் பெண்டீர்கள் காமவெறி கொண்டிருப்பதைப்பார்த்து "ஓ! இப்பிச்சைக்காரன் சிவனே; இவன் இங்குவந்து, மந்திரவாதியானவன் மந்திரத்தினாலும்மருந்தினாலும்செய்வதுபோல் நமதுமங்கையர்களை மாயத்தினால் மயக்கிவிட்டான். நம்மை மயக்கலான சிறந்த மங்கையாகிய இம்மோகினி விஷ்ணுவே! அவனே இவ்வாறு செய்திருப்பது நிச்சயம்" என்று இவ்விதமாய் ஞானதிருஷ்டியால் அறிந்து கொண்டு அம்முனிவர்கள் கோபாவேசம் கொண்டவர்களாகி "ஓ கோ! நமது தவத்திற்கு நேரிட்ட குறைவினால் ஏதேனும் பாவமுண்டானால் அதனைத் தக்க பிராயச்சித்தத்தினால் தீர்த்துக்கொள்ளலாம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் ஸ்திரீகளின் கற்பழிதலைத் தீர்த்துக்கொள்ள இடமே இல்லையே! ஐயோ சகல லோகங்களிலும் பிரசித்திப்படும்படியான அபகீர்த்திக் கிடமாயிற்றே! என்று அவர்கள் மனதுக்குள் ஆலோசித்துக்கொண்டு தங்கள் மனைவிகளைப் பலவிதங்களாலும் கூப்பிட்டு, ஓ! ஸ்திரீகளா! நீங்கள் நமது வீடுகளுக்குப் போங்கள்" என்று அவர்கள் பலதடவை யுரைத்ததன்மேல் கேளாய்! தக்ஷா! அப்போது அம்மனத்தோடிருந்த அச்சிறந்த மங்கையர்கள் எல்லோரும் ஸ்ரீ பரமேசுவரனைப் பின்தொடர்ந்து ஓடாமல் அவர் ஆக்கினையின்படியே ஓர் க்ஷணநேரத்திற்குள் தங்கள் தங்கள் வீடு சென்றுவிட்டார்கள். ஓ! இது ஆச்சரியம்! ஓ! கேளாய்! தக்ஷா! பிறகு விஷ்ணுவானவர் தம் சுய உருவத்தைக் கொண்டவராகி ஸ்ரீ மகாதேவனை வந்தனித்துச் சிறந்த துதிகளால் தோத்திரம்பண்ணி மிகுந்த பயபக்தியோடு அஞ்சலி கொண்டு நிற்கலாயினர். அப்போது பிரம்மன் முதலிய தேவர்களும் அங்கு வந்து ஸ்ரீ மகேசுவரனை வந்தனித்து மிகுந்த பக்தியோடு தோத்திரம் செய்தார்கள்.

பிறகு நிஜவுருவத்தைக் கொள்ளலான பரம கலியாண சீலரும், கறுத்த கழுத்தையுடையவரும், பராபரக் கடவுளுக்கு ஒப்பற்றவருமான சிவ பரமாத்மாவை அப்போது முனிவர்கள் கண்டு மிகுந்த கோபம் கொண்டவர்களாகி ஒ! இவன் நமக்கு மிகுந்த அபகீர்த்தியை உண்டாக்கியபடியால் இக்கொடிய தொழிற்காரனை யாம் தவத்தின்மகிமையால் கொன்று போடவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு அவ்வெல்லோர்களும் ஆபிசாப்பிரயோகம் (ஏவல் வைத்தல்) செய்தார்கள். அப்போது அங்கிருந்தோர் கொரமான புலி, கண்டன கோடாலி, மான், ஸர்ப்பம், பயங்கரமான பல பூதங்கள், பல்லிளிக்கலுற்ற வோர் முண்டத் தலை, மகா பயங்கரமான அபஸ்மாரம் இவைகளெல்லாம் மிகுந்த சத்தத்தோடு கூடிய அட்டகாசங்களுடனும் கொடூர வசனங்களுடனும் உண்டாகலாகையிற் சகல லோகங்களிலுமுள்ள எல்லா ஜனங்களும் பயந்து நடுக்கம் கொண்டார்கள். அப்போது பிரம்மன் முதலிய தேவர்கள் எல்லோர்களும் மிகவும் நடு நடுங்கியவர்களாகி ஸ்ரீ சிவபரமாத்துமாவினுடைய பின் பாகத்திற் பதுங்கலானார்கள்.

பிறகு ஸ்ரீ பரமேசுவரன் அவைகளது கர்வத்தோடு கூடிய மிகவும் பயங்கரமான வோசைகளைக் கேட்டுத் தம் திருவுளத்திற் அவைகள் வருகின்றதை அறிந்து நிற்கலாகையில் அதற்குள் கொடிய முகத்தையுடைய அப்புலியானது சிவபிரானை யதட்டிக்கொண்டு அவரைக் கொல்லக் கருதியதாகிக் கோபத்தோடு ஓர் கைதனை உயர ஓங்கிக்கொண்டு அவராருகினில் வந்தது. அப்போது பகவானும் தமது கையினால் அதின் கடினமான வாலைப்பற்றி அடித்து அதனைக் கொன்று தோலை யுரித்து வஸ்திரம்போல் உடுத்தலாயினர். அதன் பிறகு வரலான கண்டனகோடாலியை அப்பரமேசுவரன் ஓர் ஆயுதமாய் வைத்துக்கொண்டு மிகுந்த சத்தத்தோடு அதிகோரமாய் வரலுற்ற மானையும் கையினாற் பிடித்து ஒ! மானே! நீ எப்போதும் சத்தம் செய்துகொண்டு நமது செவியண்டையிலிருக்கலாவாய்'' என்று அதனையும் வைத்துக்கொண்டார். கேளீர்! பிரஜாபதியே! பிறகு சுயாதீனமுள்ளவரும், ஸகலப் பிரபஞ்சச் சுவரூபியுமான அம்மகேசுவரன் மகா பயங்கரமாய்ச் சீறிக்கொண்டு வரலுற்ற பாம்பை, தாம் சகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவராயினும் ஓர் ஆபரணமாய்ப் பூண்டுக்கொண்டார். பிறகு மகா கோரங்களாய் அட்டகாசம் செய்துகொண்டு வரலான எல்லாப் பூதகணங்களையும் சர்வ வல்லமை கொண்ட அப்பகவான் தமக்குச் சைனியங்களாக வைத்துக்கொண்டு பிற்பாடு அங்கு வந்து பல்லிளிக்கலுற்ற தலை முண்டத்தையும் உச்சிமீது கொண்டருளினர். தவிரவும் அங்குவந்த கொடியதான அபஸ்மாரத்தைக் கூட பொன்னடியின் கீழாய் வைத்து மிதித்துக்கொண்டு விட்டனர்.

இவ்விதமாய் அவை எல்லாம் வீணாகி விட்டபோது அம் முனிவர்கள் மிகுந்த கோபங்கொண்டு அப்பேர்க்கொத்த ஸ்ரீ பரமேசுவரனை கொல்ல வேண்டுமென்று அக்கினியை யேவி விடலாகையில் பிரளய காலாக்கினிக்கு நிகராய் ஜ்வலித்துகொண்டு வந்த அவ்வக்கினியையும் கைமீதேந்திக்கொண்டார். பிற்பாடு அவ்விருடிகள் சிவபிரானைக் கொல்வதற்காக மகா

கோரங்களாகிய மந்திரங்களைத் தங்களது தவத்தின் வலிமையினால் ஓர் பெரிய உடுக்காய் அமைத்தவுடன் மகா பயங்கரமாய்ச் சத்தம்செய்து கொண்டு வந்த அவ்வுடுக்கையும் ஸ்ரீ பகவான் கைமீது தரித்துக் கொள்ளலாயினர். இவைகளும் வீணாகியவுடன் அம்முனிவர்கள் மகா கோபாவேசம் கொண்டவர்களாகிக்கேளிர்! தக்ஷப்பிரஜாபதியே! அவ்வெல்லோர்களும் மகாதேவனைச் சபிக்க, அப்போது அவர்களது சாபங்களும் எரியலுற்ற பெருந்தீமுகத்தில் மிகுதியான பஞ்சுப் பொதிகள் படுவதுபோல் அவரிடத்து நிஷ்பலமாகி விட்டன.

பிற்பாடு அவ்விருடிகள் எல்லோரும் இவைகளை எல்லாம் கண்டு, மிகுந்த பயங்கொண்டவர்களாகி, ஓ! கோ! நமது தவங்களும், சகல மந்திர தந்திரங்களும் இம்மகா புருடனிடத்துப் பயனடையவில்லையே, இவன் மானிடரை அதிக்கிரமித்தவனென்று சிந்தைகொண்டு அவர்கள் எல்லாம் வெட்கத்தினால் தலைகுனியலானார்கள். அப்போது ஸ்ரீ மகா தேவனும் மந்தகாஸமுற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகி ஓ! இத்தவசிகள் இன்னும் நமது மகிமை இவ்விதமென்றறியவில்லை' என்று திருவுளத்திற்கொண்டு அப்போது மகாதாண்டவமாடலாகையில் அவர்கள் நடனத்தை தரிசித்த மாத்திரத்தில் எல்லோர்களும் பயத்தினால் நடுக்கமுற்றவர்களாகிப் பிரமித்துத் திகைத்துத் தலைகள் கவிழ்ந்து கீழே விழுந்தார்கள்.

அப்போது கருணைக்கடலான ஸ்ரீ பரமேசுவரன் அவ்வெல்லோர்களிடத்தும் கருணையளிக்க, உடனே அவர்கள் நல்லறிவு கொண்டெழுந்து அவரை வந்தனித்து, "ஓ! ஜயாவிஜயீபவா! தேவாதி தேவனும் கருணைக்கடலுமான மகாதேவா! ஓ! இயமனுக்கு யமனான பரமசிவா! எங்களது பிழைகளை மன்னித்து எங்களைக் காத்தருளல் வேண்டுமென்று தோத்திரம்பண்ணி கைக்கட்டி நிற்கலான அம்முனீசுவரர்களை அப்போது திருக்கண்ணுற்று அக்கருணாமூர்த்தியானவர் திருவாய் மலர்ந்தருளியதாவது:—ஓ! முனிவர்களே! நீங்கள் இது பரியந்தம் ஜகதீசுவரனாகிய வெம்மை யறியாமல் புத்திப் பிரமை கொண்டு கெட்டவழியை நாடியிருந்து விட்டீர்களல்லவா? இனிமேல் நமதாக்ஞையின்படி நீங்கள் வேதமார்க்கத்திலிருந்து திருநீறு ருத்திராக்ஷங்களைத் தரித்துக் கொண்டு மற்றெங்கும் மனதை நாட்டாமல் எப்போதும் நம்மையே பூஜை செய்து வரல் வேண்டுமென்று அம்முனீசுவரர்களை இவ்விதமாய் அனுப்பி விட்டுப் பிறகு அத்தயாநிதியானவர் பற்பல விசித்திரங்களோடு கூடிய கைலைகிரிக்குத் துரிதமாய்ச் சென்று அங்கு விஷ்ணு முதலிய தேவர்களையும் அனுப்பிவிட்டுத் தாம் ஸ்ரீ கௌரிதேவியோடுகூடக் கேளீ விலாஸமாய் இருந்தனர்.

## 15. அத்தியாயம்.

ஓ! தக்ஷா! முனிவர்களை இரக்ஷிக்கக் கருணைகொண்ட நிகரற்ற பரமசிவனுடைய, அம்மணத்தோடிருப்பது முதல் நர்த்தனம் செய்தது வரையிலான திவ்ய சரித்திரங்களை யாம் இப்போது கூறினம்; இன்னும் மற்றுமுள்ள சரித்திரங்களையும் யாம் உனக்குச் சொல்லப் போவதைச் சாக்கிரதையாய்க் கேட்டு அறிந்தால் உந்தன் பாவமெல்லாம் தொலையலாகும்.

கேளாய்! பிரஜாபதியே பூர்வத்தில் மிகக் கொடியனும், துஷ்டனுமான கஜாசுரனென்றவன் தவத்தினால் பிரம்மனைக் களிப்பித்து வரன் கேட்டதன் பேரில் சகல வீரர்களையும் சமுகரிக்கலுற்ற ஸ்ரீ சிவபிரானைத் தவிர மற்றெல்லா தேவர்களாலும் கொல்லப் படாமையும், மிகுதியான ஆயுசு, வலிமை, சௌரியம், பராக்கிரமம் இவை முதலிய இன்னும் மற்ற வரன்களும் அப்பிரம்மனால் அவனுக்கு அருளப்பட்டன. பிறகு இவ்வாறு வரன் பெறலான அவ்வசுரன் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களைப் போர் முனையிற் சயித்தும், இன்னும் மற்ற தேவர்களையும் அனேகம் முனிவர்களையும் கர்வத்தோடு கொன்றும், சகல லோகங்களையும் வாதிக்கலானான், இவ்விதமாய்ச் சகல ஜகங்களையும் நாள் தோறும் பீடித்துவந்தான். பிறகொரு நாள் அவன் வலாசுரனைக் கொன்றவனான தேவராஜனைப் போர்தனில் வென்று அப்பிரபுவுக்கு வாகனமான ஐராவதமென்ற யானையைத் துரத்தி அதன் வால்தனைக் கையினாற் பிடித்துக் கறகறவென்று சுற்றிலும் சுழற்ற, அதனால் மூர்ச்சை யடையலான அக்கஜத்தை அத்துராத்துமன் வெகு தூரத்தில் எறிந்துவிட்டான். மேலும் மற்ற திக் பாலர்களையும் பலவிதமாய் இம்சித்து விரட்டிவிட்டான். தவிரவும் அக்கொடியன் யக்ஷர்களையும் பூலோகத்தில் வசிக்கலுற்ற மற்றவர்களையும், பின்னுமுள்ள சில மாமுனிவர்களையும் கொல்வதற்காக விரட்ட லாகையில் அத்தவசிகளெல்லோரும் பயங்கொண்டவர்களாகிக் காசிநகருக்கோடி அங்குள்ள விருத்தகளுடன் கூடிக்கொண்டு பிறகு மணிகர்ணிகா கட்டமடைந்து ஸ்ரீ விசுவநாத ஸ்வாமியினுடைய மிகச் சிரேஷ்டமும் அற்புதமுமான திருக்கோவிலுக்குப்போய் அங்கு ஈசுவர கைங்கரியமதில் முயன்றவர்களான ஜனங்களுடன் அவ்விசுவநாதரை வந்தனித்துவிட்டு அங்கு மிகவும் பயப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்போது அந்தக் கயாசுரன் வெகு வேகமாய் அங்கு வந்து வாசற்படியிலிருந்து மகாபயங்கரமாய் ஓர் அட்டகாசம் செய்தான். அது கேட்டு அத்தவசிச் சிரேஷ்டர்களெல்லாம் நடு நடுங்கியவர்களாகி எல்லோர்களும் ஸ்வாமியைக் கட்டிக்கொண்டு நினைவுதப்பி மூர்ச்சை யடைந்துவிட்டார்கள். கேளாய்! தக்ஷப் பிரஜாபதியே! பிறகு அதே க்ஷணத்தில் அப்பாவி வாசற்படி கடந்து அவ்வெல்லோர்களையும் கொல்வதற்காக ஸ்வாமியண்டைக்கு வந்தவுடன், எல்லோர்களுடைய துரிதங்களையும் நாசம் செய்யலுற்ற அப்பகவான், தாமே அனேக கோடி சூரியப்பிரகாசம் பொருந்திய திருமேனியைக் கொண்டு ஆவிர்ப்பவித்து, அம்மகேசுவரன் உறத்தத்தொனியோடு அக்கொடியனை யதட்ட, ஸ்ரீ ஜகதீசனுடைய அத்தொனியானது எல்லோர்களாலும் வெகுகாலம்கேட்கப்பட்டது.

அப்பாவியோ, அம்மகேசுவரன், அடியார்களுக்கு விரோதிகளான சகல வீரர்களையும் சமுகரிக்கலுற்ற சாசுவதரென்று அறிந்தவனாயினும் மிகுந்த மதிப்பிரமத்தினால் அப்பரமேசுவரனோடு யுத்தம்செய்கையில், மகா வலிமையும் மகாஸாரமும், மகாதனுசும் கொண்டவரான அம்மகேசுவரன் அத்துராத்துமனுடைய தலை மீது தம் பொன்னடியாலுதைக்க உடனே அவ்வசுரக் கேடன் அங்கு பூமியில் விழுந்து சரீரம் முழுதும் ரத்தம் தாரை தாரையாய்ப்

பெருகப்பெற்றவனுகி மிகுந்த சத்தத்தோடு கதறினன். அப்போது தேவ னுடனே அவனது முறட்டுத் தோலை யுரித்து எடுத்துக் கொண்டனர். ஓ! கோ! அவன் கதறிய சத்தத்தைக் கேட்டுக் கௌரிதேவிகூடப் பயமடைந்தார் கள். அப்போது ஸ்ரீ பரமேசுவரனுடைய கோடி சூரியப்பிரகாசம் பொருந் திய அற்புதத் திருமேனியைப் பார்க்கக் கேளீர்! தக்ஷப் பிரஜாபதியே! ஸகல தேவர்களுடைய கண்களும் மழுங்கிப் போயின. பிறகு தேவன் துராத்து மனை அக்கஜாசுரனுடைய தோலினல் போர்த்திக்கொண்டவுடன் அப் போது எல்லாத் தேவர்களுடைய கண்களும் பார்க்கத் திறமைகொண்டு எல் லோர்களும் பயமற்றவர்களாகி யானைத் தோலினுற் போர்த்திக் கொள்ளலான அம்மகேசுவரனைக் கண்ணுற்று மிகுந்த பக்தியோடு வந்தனித்தார்கள்.

பிறகு தவசிகளும் மூர்ச்சைதெளிந்து எழுந்து, ஸ்ரீபரமேசுவரனையும் அவ் வசுரனுடைய எலும்புகளை மட்டிலுமே பார்க்கலாகி அடியார்களது துக்கங் களைத் தொலைத்துச் சுகமளிக்கலுற்ற அத்தேவாதி தேவனலே அவ்வசுரன் கொல்லப்பட்டிருக்க வேண்டுமென்று நிச்சயங்கொண்டு அவ்வெல்லோர்களும் பயமற்றவர்களாகிப் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய சகல தேவர்களோடும் கூட வெகுசந்தோஷமாய்ப்பரமேசுவரனைத் துதிசெய்து ஓ! ஜயாவிஜயீபவா சம்போ மகா தேவா, வணங்கியவர்களின் துக்கங்களைத் தொலைக்கலுற்றவரே, ஸகல ஜகங்களுக்கும் நாதனே! ஸச்சிதாநந்தமூர்த்தியே! தேவரீர் இக்கஜாசுரன் தோலை பத்திரமாகப் போர்த்திக்கொள்ளலானதை எந்த வித்துவான்கள் வர் ணிக்கின்றூர்களோ அவர்கள் எப்போர்க்கொத்தவரிடத்தும் பயமடையாதிருப் பதோடு அவர்கள் எங்கும் பூஜிக்கப்படுவோர்களும் சகல ஜனங்களாலும் வந்தனிக்கப்படுவோர்களுமாகுதல் வேண்டுமென அப்படியே ஆகட்டுமென்று மகேசுவரன் உத்தமமான அவ்வரனை அளித்துவிட்டு அந்தர்த்தானமாயினர். அப்போது பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய எல்லோர்களும் மிகுந்த ஆனந்த மடைந்தார்கள்.

ஓ! கேளாய்! தக்ஷப் பிரஜாபதியே! எல்லாப் பிரபஞ்சங்களுக்கும் மேற் கொண்டவரான அப்பரமசிவன் ஸகல தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வாதையளிப்போனை மகா கொடியனுகிய அக்கஜாசுரனை அதம்பண்ணி எல் லோர்களையும் காப்பாற்றிச் சகலர்களுக்கும் அதன் ஞாபகமிருக்கும்படி அவ் வசுரனுடைய முறட்டுத் தோலையும் அவர் தரித்துக் கொள்ளலானது ஓர் தக்க பூஷணமேயன்றி தூஷணமல்ல.

## 16. அத்தியாயம்.

அடா! தக்ஷா! ஸ்ரீ மகாதேவன் பன்றியின் சிங்கப்பல்லைத் தரித்திருக்கிறு ரென்று முந்தி நீ கூறினையே! அக்கதையை யாமுந்தனுக்குரைக்கின்றோம்; நீ அதனைக் கவனமாய்க் கேட்கலாவாய்:—கொடிய கிருத்தியங்களைச் செய்ய லுற்ற ஹிரணியாக்ஷனென்ற ஓர் அசுரன் இப்பூமிதனைச் சுருட்டி எடுத் துக்கொண்டு பாதாளத்திற்குச் சென்றுவிட்டான். அப்போது ஸ்ரீ மகா விஷ்ணுவானவர் அவ்வசுரக்கேடனைக் கொல்லக் கருதியவராகி ஓர்

பன்றி யுருவத்தைக் கொண்டு ஸ்ரீ பிரம்மதேவன் மூக்கினின்று வெளிப்பட்டு மிகுந்த கோபத்தோடு அங்கு சென்று நடுப்பாதாளத்திற்கு ஓடலான அவ் விரணியாக்ஷனைக் கொன்று போட்டுப் பிறகு அசுரர்களுக்கு இயமனான அந் நாராயணன் அப்பூமிதனை முன்போல் நிலை நிறுத்தி வைத்தார். பிற்பாடு விஷ்ணுவும் அப்பாதகனுடைய இரத்தத்தைப் பானம் செய்ததனால் வெறி கொண்டவராகிச் சகல லோகங்களையும் அவ்வசுரனிலும் அதிகமாய் வாதிக் கத் தலைப்பட்டனர். அதன்மேல் தேவரெல்லாம் சகலர்களும் சரணமடையப் பெற்றவரான ஸ்ரீ மகா தேவனிடம் சரணமடைந்து "ஓ! சகலர்களுடைய துக்கங்களையும் தொலைப்பிக்கலுற்றப் பிரபுவே! பன்றி யுருவமடைந்திருக் கின்ற விஷ்ணு இரவும் பகலுமாய் வாதிக்கப்படலுற்ற இத்தேவர்களை இப் போதுக் காப்பாற்றிடல் வேண்டும்" என்றனர்.

இவ்வாறு அவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் ஸ்ரீசந்திரசேகரன் கருணை கூர்ந்து அக்கொடிய பன்றியைக் கொன்று அதன் பல்லையும் பிடுங்கிக் கொண்டுச் சரணமடைந்தோரின் விபத்துகளை நாசம் செய்யலுற்ற அச்சக தீசன் எல்லாத் தேவர்களையும் காப்பாற்றியருளினர். பிறகு அப்பொழுது விஷ்ணுவும் பிரமை தெளிந்தவராகித் தேவாதி தேவரான அப்பரமசிவனை வந் தனித்துத் துதிசெய்ததாவது:—ஓ! அடியார்களுக்கு அபயமளிக்கலுற்ற மகேவசுரா! போற்றி போற்றி; உலகங்களுக்குத் தீங்களிப்போர்களை கால ரூபியாய் சமுகரிக்கலுற்றவரே! போற்றி; சுகமளிப்பவரே போற்றி; மங்கள மூர்த்தியே போற்றி, ஓ! சருவரக்ஷகரான மகாதேவா! தேவரீர் இரக்ஷித்தது ஞாபகத்திலிருக்கும்படியாயும் அடியேன் இதனைப் பார்ப்பதினால் எந்தனுக்கு இனிய அஞ்ஞானமுண்டாகாமல் இருக்கும்படியாயும் தேவரீர் இப்பால் அத னைத் தரித்துக்கொள்ள வேண்டும்'என்று, விஷ்ணுவால் பிரார்த்தித்துக்கொள் ளப்பட்டதன்மேல் கருணைக்கடலும் சருவஞ்ஞருமான ஸ்ரீபரமேசுவரன் அப் படியே நல்லதென்று அதனைத் தரித்தருளினர்.

பூர்வத்தில் விஷ்ணுவானவர் ஓர் ஆமை யுருவமெடுத்து நேர்த்தியான குகை களையுடைய மந்தரமலையைச் சுமந்து கொண்டு அமுதமெடுக்கக் கருதியவ ராகித் தேவர்களால் பாற்கடலைக் கடைவித்தனர். அப்போது அக்கடலினின்று மகா பெருமை பொருந்திய அமுதமுண்டானவுடன் நிச்சயமாய் நாங்கள் பாற் கடலைக் கடைந்ததால்தான் அமுத முண்டாயிற்று என்று தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் ஒருவரொடொருவர் மிகுந்த கலகம்நேரிட்டது. அப்பொழுது அவ்வாமையும் வெறி யெடுத்ததாகி மகா பலவானாகிய எந்தனால் அல்லவோ கடல்கடையப்பட்டதென்று அக்கடல்தனைக் கலக்கத் தலைப்பட்டது. பிறகு, இவ்வாறு அக்கடல் கலக்கப்படலாகும்போது உலகங்களுக்கு மிகுந்தவாதை யுண்டாகி அதனைச்சகிக்க முடியாமல் தேவரெல்லாம் பிரம்மனை முன்னிட் டுக் கொண்டு ஒப்பற்ற கைலைகிரி சென்று அதனை ஸ்ரீ மகா தேவரிடம் தெரிவித்துக்கொள்ள, அப்போது அத்தேவன் மகா வலிமைகொண்டதான அவ்வாமையையும் கொன்று, மகா கோரமாகிய அவ்வாமையின் முது கெலும் பையும் பிடுங்கி விடலாகையில், கேளாய்! பிரஜாபதியே! அப்போது தேவர்

களாற் பிரார்த்தித்துக் கொள்ளப்பட்டதன்பேரில் ஸ்ரீ மகாதேவன் அவ்வெலும் பையும் தரித்துக் கொள்ளலானர்.

ஓ! தக்ஷா! முந்தி ஸ்ரீ பரமசிவன் சகல லோகங்களையும் காப்பாற்று வதற்காகவே ஹாலாஹல விஷத்தை யுண்டிருக்கின்றார். முந்திச் சகல தேவாசுரர்களுக்குள்ளும் பயங்கரமான கொடிய யுத்த முண்டாகும் போது எந்த வுபாயத்தினல் நமக்கு மரணமுண்டாகா மலிருக்குமென்று அவர்கள் பிரம்மனேடு ஆலோசித்துக் கொண்டு விஷ்ணுவிடம் சென்றார் கள். பிறகு விஷ்ணுவும் அவர்களது வசனத்தைக் கேட்டு மனதினில் தக்க வுபாயத்தை யாலோசித்து அமுதபானம் பண்ணினல் சாவுண்டாகாதென்று அத்தேவர்களுக்கு உரைத்து விட்டு பிறகு அங்காராயணன் மந்தரமலையை மத்தாகவும், ஸர்ப்பராஜாவான வாசுகியைக் கடைகயிருகவும் செய்து பாற் கடலை யத்தேவர்களோடுகூடக் கடையும்போது மிகுந்த கூக்குரல் சத்த முண்டானதேதோவென்றால்:—கடைகயிருன சர்ப்பத்தின் உள்மூச்சு வெளி மூச்சுக் காற்றுகளால் அக்கடல் கலக்கப்படலாகையில் அச்சர்ப்பத்தின் வாயி னின்று மகா கோரமாகிய விஷம் அக்கடல்தனில் விழுந்தது. பிறகு அது ஓர் கணநேரத்திற்குள் அநேககோடி வடவாக்கினிகளின் வேகத்தையும் இருளுரு வத்தையும் கொண்டதாகி அக்கடல்முழுமையும் பரவலாயிற்று. பிறகுடனே தேவர்கள் கடைகயிருன வாசுகியை விட்டுப்போட்டுத் துரிதமாய் ஓட்டம் பிடித்தார்கள். விஷ்ணுவும் அவ்விஷத்தினல் மிகவும் தகிக்கப்பட்டவராகிப் பிந்தி யோடினர். இவ்வாருக அப்போது விஷ்ணு வல்லமையிற் குறைந் தும், பிரம்மன் அதே விதமாகியும், வாயுதேவன் தைரியமிழந்தும், அக்கினி யாசை விட்டும், குபேரன் யத்தினமற்றும், மற்றத் தேவர்களும் இவ்விதமே சக்தியற்றும்போனர்கள். அவ்வெல்லோர்களும் விஷாக்கினியால் மிகவும் பொசுக்கப்படலாகிக் காப்பவரற்று 'ஹாஹா' வென்று கதறிக்கொண்டோடு கையிற் சகல பிரபஞ்சங்களுக்கும் சரணியரான ஸ்ரீ சர்வேசுவரனையே சரண மென்று கருதிச் சகல துக்கங்களையும் தீர்க்கவுற்ற கைலைகிரிக்கு மிகுந்த கூக்குரல் சத்தத்தோடு துரிதமாயோடினர்கள். ஓ! தக்ஷா! அப்போது விஷ்ணுவானவர் தேகம் முழுமையும் பொசுக்கப் பட்டுக் கன்னம் கறேலென் ருகிவிட்டார்.

பிறகு தேவர்கள் அங்கு திருமாளிகையின் வாசற்படியில் கணாதி பரான ஸ்ரீ நந்திபிரானைக் கண்டு வந்தனித்து எல்லோர்களும் வெகு துக்கம் கொண்டவர்களாகி அவருக்குச் சங்கதிகளைச் சொன்னர்கள். அதுகேட்டு நந்தி பகவான் மிகவிரக்கம்கொண்டவராகி அவ்வெல்லாத்தேவர்களையும் அங்கு நிறுத்தி விட்டுப் பிறகு பிரம்மன் விஷ்ணு இந்திரன் முதலிய திக்பாலர்க ளோடு துரிதமாய் அந்தப்புரத்துக்குச் செல்லுகையில் அங்கு ஐந்தாவது பிராகாரத்தில் திக்பாலர்களை நிறுத்திப்பிறகு ஆருவது பிராகாரத்தில் பிரம்ம விஷ்ணுக்கள் இருவரையும் இருப்பித்து விட்டுத் தாம் மட்டிலுள்ளே சென்று பகவானிடத்தில் தேவர்களது வரவை யறிவித்துப் பிறகு பிரபு உத் தரவின்பேரில் பிரம்மனையும் விஷ்ணுவையும் ஸ்ரீ பரமேசுவரனுடைய அந்தப்

புறத்திற்குச் சந்தோஷமாய்ப் போகவிட்டனர். பிறகு அப்பிரம்ம விஷ்ணுக்கள் இருவரும்போய் ஸ்ரீபரமேசுவரனை வந்தனித்துமிகுந்த பக்தியோடு வேதாந்தத்தால் இசைக்கப்பட்ட துதிகளால் துதித்தார்கள். அப்போது மகேசுவரனும் மகா மகிழ்ச்சி கொண்டவராகிப் பிரம்ம விஷ்ணுக்களை நோக்கி ஓ! கோ! விஷ்ணுவே! சுத்தமான படிகத்துக்கு நிகராகிய சரீரத்தையுடைய நீர் இப்போது எந்த காரணத்தினல் காட்டுத் தீயினுலெரியுண்ட கட்டைபோல் கறுத்துப்போய்விட்டீர். மேலும் வெண்டாமரைமலரை யொத்த உமது கண்களில் இரத்தம் குழம்பலாயின. ஓ! விஷ்ணுவே! உமது சரீரம் மிகவும் வியாதியுண்டதாய்க்காண்கின்றது.மேலும் உருகலுற்ற தங்கத்தையொத்த இப்பிரம்மமேனியும் விகாரநிறமுள்ளதா யிருக்கின்றது என, இவ்வாருகிய ஸ்ரீ மகேசுவரன் வசனத்தைக் கேட்டு அவரை நோக்கி விஷ்ணு உரைத்ததாவது :—

ஓ! மகாதேவா! தேவர்களெல்லாம் தேவரீருக்கறிவித்துக் கொள்ளாமல் அமுதமதில் விருப்பமுற்றவர்களாகிப் பாற்கடலைக் கடையலாகையில் அப்போது பிரளயகாலாக்கினிக்கு நிகராகிய மகா கோரமான விஷமுண்டாயிற்று. ஓ! முக்கண்ணுடையோரே! அத்தேவரெல்லாம் அவ்விஷத்தின் ஜுவாலையினல் சகல உறுப்புகளும் பொசுங்கப்பெற்றவர்களாகி வேறு காப்பவரில்லாமல் ஸதாசிவனுகிய தேவரீரைச் சரணமடைந்திருக்கிறார்கள். அவர்களில் முந்தியவனுயிருந்த யான் அத்தேவர்களுக்குப் பிந்தியோடி வந்தபடியால் ஓ! சுவாமி எந்தன் தேகம் அதிகமாய்ப் போசுங்கலாயிற்று. ஓ! தேவாதி தேவா! மகா கோரமாகிய இவ்விஷத்தினல் பிரபஞ்சங்கள் மிகுதியாய் வாதிக்கப்படுகின்றன. ஓ! சம்புவே! இப்போது யானும் மிகுதியாய் வாதையுண்டு க்ஷணத்துக்கு க்ஷணம் அதிகமாய்க் கறுத்துப் போகின்றேன். ஓ! சகல விசுவங்களுக்கும் மேன்மை கொண்டப் பிரபுவே! வேறு கதியற்ற இத்தேவர்களை இரக்ஷித் தருளவேண்டும். இரக்ஷித்தருளவேண்டும். ஓ! கருணைக்கடலே! தாமதம் செய்யக்கூடாது. ஓ! சருவஞ்ஞான பரமசிவா! சகல பிராணிகளின் அந்தராத்துமாவாயும், சகல பிரபஞ்சவியாபியாயும், சாசுவதராயும், விளங்கலுற்ற பரப்பிரம்மமாகிய தேவரீர் ஸகல லோகங்களையும் இரக்ஷிப்பதற்காகவே ஸகல கலியாண குணங்களாலும் அலங்கரிக்கப்பெற்ற இப்பேர்க்கொத்த திருமேனியைக் கொண்டருளி விளங்கலாகின்றீர்" என்று ஸ்ரீ மாதவர் உரைத்துவிட்டுத் துரிதமாய் அடிக்கடி நமஸ்காரம் பண்ணினர்."

## 17. அத்தியாயம்.

அப்போது வெளியிலிருந்த தேவர்கள் எல்லோர்களும் ஏககாலத்தில் ஓ! சரணமடைந்தவரிடத்து நேசமுடைய மகாதேவா! விஷமென்ற நிபத்தோடிருக்கும் மகாக்கினியால் தகிக்கப்படலுற்றவர்களும், வேறு கதியற்றுத் தேவரீரையே சரணமடைந்தவர்களுமான இத்தேவர்களெல்லோர்களையும் காப்பாற்ற வேண்டும். காப்பாற்றவேண்டும். ஓ! மகாதேவா! வளர்த்துவதில் யாதுபயன்? இரக்ஷித்தருள்வீர் ரக்ஷித்தருள்வீர்" என்று கூக்குரலிட்டார்கள்.

பிறகு கருணைக்கடலும் பரிசுத்தப்படுத்துவோருமான அச்சங்கரன் அப்பேர்க்கொத்த அவர்களது கூச்சலைக்கேட்டு இதென்ன'வென்று பிரம்மனை

வினவ, ஆவர், ஓ! பார்வதிநாதா! அதிகோரமாகிய விஷாக்கினியால் தகிக்கப் படலான தேவர்கள், அசுரர்கள், தவசிகள், முதலிய எங்களைக் காப்பாற்றவேண்டும், ஓ! விசுவங்களை காப்பாற்றலுற்ற பரமசிவா! தேவாசுரரெல்லோர்களும் தவசிகளோடுகூட மகா கொடூரமான விஷத்தைச் சகிக்க முற்றும் திறமையற்றவர்களாகி மிகவும் கிலேசமடைந்து தேவரீரையே சரணமாய்நாடி வெளியில் வந்து கதறுகின்றார்கள். ஓ! பரமேசுவரா! ஆகையால் தேவரீர் அவர்களைச் சீக்கிரமாய்ப் பாதுகாத்தருள வேண்டுமென இவ்வாறு பிரமன் வசனத்தைக்கேட்டவுடன் ஸ்ரீ பகவான் நந்தி தேவரைத் திருக்கண்ணுற்றுத் தயவுடன் புருவத்தை அசைக்கலாகையில் நந்திகேசுவரன் அச்சாடையறிந்து மறுபடியும்சென்று, தேவர்கள், அசுரர்கள், இருடிகள் இவர்களையெல்லாம் ஸ்ரீ ஜகதீசன் முன்னிலைக்கு அழைத்து வந்தார். அப்போது அவ்வெல்லோர்களும், சந்திரகலையை யுச்சிதனிற் பூண்டவரான ஸ்ரீ மகா தேவரைத்தரிசித்து அனேகம் துதிகளால் துதித்துத் தண்டம்போற் பூமியில் வந்தனம் பண்ணினார்கள்.

அப்போது நெஞ்சிரக்கமுடைய கௌரியம்மையானவள் தேவர்களையும், மற்றவர்களையும் பார்த்து இரக்கமுற்று இவர்களைக் காப்பாற்றவேண்டுமென்று சம்புவை நோக்கிகிருபைசெய்தனள். அப்போது ஸ்ரீஸர்வேசுவரன் அருகினில் நின்ற மிகுந்த சௌந்தரியம் பொருந்தியவனான சுந்தரன்என்றவனை நோக்கி, ஓ! கணநாதா! நீ போய் அவ்விஷத்தை எடுத்துக்கொண்டு சீக்கிரம் திரும்பி வரவேண்டுமென்று பகவான் அக்கணாதிபதியை யனுப்ப, அவன் சிவாக்கினையின் படிச்சென்று இவ்விஷமதைக் கைதனிலெடுக்க, அப்போது அது அவனுடைய மிருதுவானகையாகிய மரைமலர்தனில் வண்டு உட்கார்ந்ததுபோல் விளங்கலாயிற்று. பிறகு சுந்தரன் ஸ்ரீபரமேசுவரனுடைய திருவாக்கினையின்பேரில் அவ்விஷத்தை அவர் கைமீதுகொடுக்க, கேளாய்! தக்ஷப்பிரஜாபதியே! அப்போது ஓர் நொடி நேரத்திற்குள் அவ்விஷம் அவரது கைதனில் ஓர் கஸ்தூரிப் பொட்டுப் போலாயிற்று. பிற்பாடு ஸ்ரீ மகேசுவரன் அத்தேவர்கள் நடுநடுங்கி நிறப்பதை நோக்கி "ஓ! தேவர்களே! யாம் இதனை நக்கிவிடலாமா! அல்லது தூரத்தில் எறிந்துவிடலாமா வென்பதை நீங்கள் நமதாக்கினையின்படி இங்கு பயமின்றி கூறுங்களென்று மகா பிரளயகாலத்தில் சகலப் பிரபஞ்சங்களையும் ஒரே கபளமாய் உண்ணலுற்றவரும், அந்தகனைச் செயித்தவருமான ஸ்ரீ மகா தேவன் திருவாக்கருள, பிரம்மா விஷ்ணு முதலியவர்கள் அவரது திருவசனத்தைக் கேட்டு "ஓ! பகவானே அது தூரத்தில் எறியப்பட்டால் பிறகு ஓர் நொடிக்கெல்லாம் வந்து விடுமென்று இப்போது எங்களுக்கு மிகுந்த பீதி வாதிக்கின்றது. ஏனென்றால் ஒரு நொடி நேரத்திற்குள் நாங்களெல்லோர்களும் இக்கொடிய விஷத்தால் பொசுக்கப் படலானோம். ஓ! அந்தகனைக் கண்டித்த மகாதேவா! இதனைத் தேவரீருடைய இலக்ஷ்மிவிலாசம் பொருந்திய கைமீது காணும்போதே நாங்கள் பயப்படுகின்றோம். ஆகையால் சருவஞ்ஞரும் கருணைக்கடலும் எல்லா உலகங்களையும் காப்பதிலே முயன்றவரும் இயமனைக் கண்டித்தவரும், அடியார்களை எதிர்க்கலுற்ற வீரர்களை நாசம் செய்வோரும், காலனுக்குக் காலனும் மகேசுவரனுமாகிய தேவரீர், கிரமப்படி பார்த்துக் கொண்டு இத்தேவர்களை

இரக்ஷிக்க வேண்டும்''என்று வேண்டிக்கொண்டு, உருத்திரனே போற்றி சகலப் பிராணிகளுக்கும் நன்மையைக் கோருபவனே போற்றி, காலனுக்குக் காலனே போற்றி சகலர்களையும் இரக்ஷிப்பவனே போற்றி, சூலபாணியே போற்றி, என்று அவர்கள் தோத்திரம் பண்ணி அப்பரமேசுவரனைத் தண்டம் போல் நமஸ்காரம் செய்கையில் அப்போது பகவான் மந்தஹாசத்தையுடைய முகாரவிந்தத்தைக் கொண்டவளான ஸ்ரீ கௌரியம்மையை நோக்கிக் கொண்டே கருணைக்கடலும் நித்தியாநந்த பரிபூரணக் கடவுளுமான அம் மகா தேவர் விஷமதை யுண்டுவிட்டனர்.

உடனே மகா கோரமும், மிகவும் கறுப்பு நிறமுள்ளதுமான அக் காளகூட விஷமானது தேவனுடைய தொண்டைக்குள் துரிதமாய் வந்த போது சகல தேவர்களும் கைகளை யஞ்சலி செய்துகொண்டு ஓ! தேவாதி தேவா! கருணைக்கடலே! அடியார்க்கு நேசனே! பிரபஞ்சங்களைக் காப்பவனே! அநந்தங்களான மகிமைகளுக்குக் காரணமானவரே! சுயாதீன முள்ளவரே! நித்தியாநந்த மூர்த்தியே! வேதமறிந்தவர்கள் மகாப் பிரளய காலத்தில் சகல ஜகங்களையும் ஒரே கபளமாய் விழுங்குலுற்றவரும், சூலபாணியுமான தேவரீருக்குப் பிரம்ம க்ஷத்திரியர்கள் முதலியோர்களால் வழங்கிவரப்பெற்ற சக்ல ஜகங்களும் அன்னமென்றும் மிருத்தியுவான வன் நார்த்தங்கா யூறுகாயென்றும் சொல்லுகின்றார்களே! ஓ! சுயாதீன முள்ள சக்தியுடையவரே! சுத்தமான படிகத்திற்கு நிகராகிய தேவரீரது நெஞ்சுதனிலே யதனை நிறுத்திவிடுவது ஓரற்புதமான சிறந்த வலங்கார மாயிருக்கும். மேலும் ஓ! பகவானே! இந்த ஹாலாஹல விஷம் எப்போது தேவரீரது திருக்கழுத்தை யலங்கரிக்கலாகுமோ! அப்போது தான் தேவஸ்திரீகளுடைய கழுத்துகளை அவர்களுடைய மாங்கலிய சூத்திரம் அலங்கரிக்கலாகும். தவிரவும் இவ்விஷத்தினால் தகிக்கப்படலான தேவர்களாகிய எங்களுக்குத் தேவரீரால் அவ்விஷத்தையுண்டு பண்ணப்பட்டுக் காப்பாற்றப்பட்ட தானது எப்போதும் மறவாமலிருக்கும்'' என்று கேளாய்! பிரஜாபதியே! அப்போது அத்தேவர்களிவ்வாறு முதலிய வசனங்களால் வேண்டிக்கொள்ள, ஸ்ரீபகவானும் 'அப்படியே நல்லது என்று அதைத் தமது தொண்டைக்குள்ளே லீலா விநோதமாய் நிலைநிறுத்திக் கொண்டனர்.

சுயாதீனமுள்ள சக்தியையுடைய அப்பேர்க்கொத்த பரமசிவனுடைய மகிமையானது யாவரால்தான் வர்ணிக்கத்தகும்? அதன் பிறகு தேவ ரெல்லாம் மிகச் சந்தோஷங்கொண்டவர்களாகி ஸ்ரீ பரமேசுவரனைத் துதி செய்ததாவது:—தேவாதி தேவனே போற்றி, கறுத்த கழுத்தையுடைய சம்புவே போற்றி, விஷ்ணுப் பிரம்மர்கள் முதலிய ஸகல பசுக்களுக்கும் பதியே! நின்னடி போற்றி, தேவர்களுக்குயிர்தனை யளித்தவரே போற்றி, உயிர்களுக் கீசனான வுருத்திரனே போற்றி, யானைத்தோலை யாடையாய்ப் போர்த்தி யவரே போற்றி, போற்றி; ஓ! தயாநிதியே! உலகினர்கள் இப்போது முதலாய் ஸ்ரீமகேசுவரனாகிய தேவரீரை நீலகண்டர் என்று எப்போதும் அறியத்தக்க'தென, பகவானாகிய ஸர்வேசுவரன் இத்துதியினால் மிகமகிழ்ச்சிகொண்ட

வராகி ஒ! தேவர்களே! நமதாக்கினையின்படி நீங்கள் போய்ப் பாற்கடலைக் கடைந்து அவ்வாறு கடைவதாலுண்டாகும் அமுதத்தை மனக்கவலை யற்றே உண்ணலாவீர்கள். ஓர் கண நேரத்திற்குள் சந்தேகமின்றி யமுதமுண்டாகப்போகின்றது' என்று அப்பகவான் தேவர்களை நோக்கித் தயவுடன் திருவாக்கருளினர். பிற்பாடு தேவர்கள் சிவாக்கினையால் தூண்டி விடப்பட்டதின் பேரில் மிகுந்த சந்தோஷங் கொண்டவர்களாகி ஸ்ரீ பார்வதி நாதனை வந்தனித்துவிட்டுச் சென்று பாற்கடலைக் கடைந்து மேன்மைகொண்ட அமுதத்தையெடுத்தெல்லோர்களும் சாவடையாமலிருக்கும்படி யதனை யுண்டார்கள்.

## 18. அத்தியாயம்.

ஓ! தக்ஷா! ஸ்ரீ பரமேசுவரன் காளகூட விஷத்தையுண்டு சகல தேவர்களையும் இரக்ஷிக்கலான சரித்திரத்தை யாமிப்போது இங்குனக்குக் கூறினம். மேலும் ஒ.! பித்துக்கொண்ட தக்கா! அவர் ஊரூராய்ப் பிச்சை வாங்கலான திவ்ய சரித்திரத்தை நீ வீண் மயக்கத்தை விட்டுக் கவனமாய்க் கேளடா!

பூர்வ காலத்தில் விஷ்ணுப் பிரம்மர் இருவர்களும் மேருகிரியின் பாரிசத்திலிருந்து கொண்டிருக்குமளவில் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மனதிற் சந்தேகமுண்டாகி யவர்களிடம் வந்து வந்தனித்துச் சந்தோஷத்துடன் அவர்களை வினவியதாவது:-ஓ! விஷ்ணு பிரம்மர்களே! ஸகல தேவர்களுக்கும், சிரேஷ்டரும், வியாபகரும், பிரபுவுமாகியவரும், ஸகலபிராணிகளுக்குள்ளும் அந்தர்யாமியாயிருப்பவரும், பரஞ்சோதியும், பரமாத்துமாவும், பராபரரும் சகலபிராணிகளுக்கும், சிருஷ்டி ஸ்திதி சமுகாரகர்த்தருமாகிய தேவர் யாவ''ரென! இவ்வாறு அவர்களது வசனத்தைக்கேட்டு அப்போதுப் பிரம்மன்கூறியதாவது: ஓ! தேவமுனீசுவரர்களே! யாம் தான் ஜகங்களுக்குக் கர்த்தா; நம்மால் தான் சகலமும் நடந்து வருகின்றது; சகல ஜகங்களும் நமதாக்கினையின்படி முடிவினில் நம்மிடத்தில் தான் லயமடைகின்றது''.என்றுரைக்கலான அப்பிரம்மனைப் பார்த்து விஷ்ணு உரைக்கின்றூர்:—ஓ! பிரம்மாவே! யாம் முந்தியுந்தனைச் சிருஷ்டித்துப் பிறகுஇதோ காணப்படுகின்ற ஜகமதைச் சிருஷ்டித்து விடுகின்றோம். நம்மைத் தவிர மற்றொருவரும் ஜகங்களுக்குக் கர்த்தரல்லர். ஏனென்றால் நம்மிடமிருந்தல்லவோ எல்லா முண்டாகின்றன. சகல ஜகங்களும் விஷ்ணு சுவரூபமேயானதால் ஜகங்களுக்கு மூலம் யாம்தான்''என, இவ்வாறாக அவ்விரு தேவர்களும் மிகுந்த மோக வசத்தில் அகப்பட்டவர்களாகி யொருவரோடொருவர் நாம் பரம்பிரம்மமே யன்றி நீயல்லவென்று அப்போது அவ்விருவர்களும் அடிக்கடி வெகுகாலம் வாதாடிக் கொண்டார்கள்.

கேளாய்! தக்ஷப் பிரஜாபதியே! அப்போது அங்கிருந்த எல்லோர்களும் பயமடைந்து அவரவர் இருப்பிடங்களுக்குச் சென்று விட்டார்கள். பிறகு வெகு காலம் சென்றதன்மேல் பிரணவத்தை மூலமாக உடையதும் மிகுந்த மகிமை பொருந்தியதும், தத்துவப்பொருள்களை நன்கு போதிப்பதுமான வேதமானது அங்குதோன்றி யுரைத்ததாவது:—'' ஓ! விஷ்ணுவே! ஓ! பிரம்

மாவே! நீங்கள் இருவரும் ஏன் வீண்கலகம் செய்து கொள்ளுகின்றீர்கள்? ஸ்ரீபரமேசுவரனே ஜகங்களுக்குக் கர்த்தாவும், பரமாத்துமாவும், மகேசுவரனும் ஸகலப் பிரபஞ்சங்களுக்கும் மேன்மை கொண்டவரும், சகலப் பிரபஞ்ச ஸ்வரூபியுமாவர். அவ்வுருத்திரனே மகாபெருமைபொருந்திய இருடிச்சிரேஷ்டர். நடுவானத்தில் விளங்கலுற்ற அச்சம்புவே அணிமா முதலிய சகல ஐசுவரியங்களும் நிறையப்பெற்றவர். அவ்வீசுவரனே அணுவுக்கெல்லாம் பரமாணுவாகியவர் பெரிதுக்கெல்லாம் பெரியவர்; ஸ்ரீ பார்வதியோடு கூடிய அப்பிரபுவே சகல விஷயங்களுக்கும் கர்த்தா; சொர்க்கம், பூமி, இந்திரன், விஷ்ணு ஆகிய எல்லாவற்றையும் அவரே யுண்டுபண்ணுபவர் என, இவ்வாறு வேதம் கூறிய வசனத்தை மிகுந்த மோக வசத்தில் அகப்படலான அவ்விருவர்களும் கேட்டு அதனைச் சட்டை செய்யாமல் மறுபடியும் முன்போலவே கலகம் செய்து கொண்டிருந்தார்கள்.

பிறகு இப்படி இருக்கையில் பரமாத்துமாவாகிய ஸ்ரீபரமேசுவரன் "ஓ! இவ்விருவர்களும் வீண் அகங்காரத்தினால் அல்லவோ நிச்சயமாய்த் துன்பமடையப் போகின்றார்கள். நாம் இவ்விருவர்களுடைய கர்வத்தையும் இங்கு அடக்கிவிட வேண்டுமென்று ஸ்ரீ மகேசுவரன் கோடி சூரியப் பிரகாசம் பொருந்திய ஓர் ஜோதி யுருவத்தைக் கொண்டருளி அப்போது அங்கு ஆவிர்ப்பவித்தனர். பிறகு பார்ப்போர் கண்களை எல்லாம் பறிக்கலுற்ற பரஞ்சோதி ரூபியான அப்பரமசிவனைப் பார்த்து இதென்னவென்று பயந்து அவ்விருவர்களும் மிகுந்த விசாரமடைந்தார்கள். அப்போது ஸ்ரீ பரமேசுவரன் பிரம்ம விஷ்ணுக்களான அவ்விருவர்களுக்கும் தேவியோடுகூடத் தமது அற்புதமான திவ்விய உருவத்தைச் சீக்கிரமாய் காக்ஷியருளியவுடன் ஸ்ரீ விஷ்ணுவானவர் பார்வதீ நாதரும் என்றும் அழிவற்றவருமான அம்மகா தேவரைக் கண்டவுடன் சடிதியில் எழுந்து, அடிக்கடி நமஸ்கரித்து அத்தேவரைப் பற்பல துதிகளால் தோத்திரம் பண்ணிவிட்டுத் தாம் திருப்பாற்கடல் அடைந்து விட்டனர்.

## 19. அத்தியாயம்.

விஷ்ணுவானவர் ஸ்ரீ ஜகதீசனை நமஸ்காரம் பண்ணிவிட்டு மிகுந்த பீதியோடு திருபாற்கடலுக்குச் சென்றவுடன் பிரம்மன் மிகுந்த மதிமயக்கங் கொண்டதினால் அம்கேசுவரனை நமஸ்காரம் பண்ணாமலே புத்திகெட்டவராகி (தமதைந்து முகங்களில்) மேற்புற முகத்தினால் அத்தேவேசனை இகழுலாயினர். அப்போது ஸ்ரீ தேவேசரும் கோபாவேசம் கொண்டவராகி பைரவமூர்த்தியைத் திருவுளத்தின்கண் நினைக்க அப்போது ஸ்ரீ பைரவமூர்த்தியும், மேனி எங்கும் திருநீற்றைப் பூசியவரும் ஸர்ப்பத்தை யரைஞாணகப் பூண்டவரும், ஒலிக்கலுற்ற பாதச் சதங்கைகள் ஜல் ஜல்லென்று சப்திக்கப்பெற்றவரும், மண்டையோட்டு மாலைகளைப் பூண்டவரும் சிரேஷ்டமான சூலம், பாசம், உடுக்கு இவைகளைத் தரித்தவரும் வட்டமும், பயங்கரமும், பிரகாசிக்கலுற்றதுமான கண்களைக் கொண்டவரும், அதிகோரமான ஓர் மண்டையோட்டுக் கப்பரையைக் கைதனில் பற்றியவரும் விகாரமாகிய

செம்பட்டைச் சடைகளால் அதிபயங்கரமுள்ளவரும் திருமேனி எங்கும் மிருதியாய்ப் பிரகாசிக்கப்பெற்றவரும் சிறந்த மந்தகாசத்தினுல மெத்த நேர்த்தியானவரும் அகில பிரமாண்டங்களையும் ஓர் நொடிக்குள் ஒரேகபள மாய்ப் பக்ஷித்துவிடத் திறமை கொண்டவருமாகி ஸ்ரீ சிவாக்கினையின்படி துரிதமாய் அங்கு தோன்றலாயினர்.

உடனே வந்தனித்து நின்று "ஓ! சுவாமி! ஜகதீசா! எந்தனுற் செய்யப்பட வேண்டிய காரியமின்னதென்று தேவரீர் தாஸனுகிய அடியேன்மீது கருணை கூர்ந்து கட்டளையிட்டருள வேண்டுமென்று விண்ணப்பம் செய்து கொள்ள, அப்பைரவரை நோக்கி ஸ்ரீமகேசுவரன் திருவாக்கருளியதாவது:— ஓ! பைரவா! நமது மாயையினுல் புத்திப் பிரமைகொள்ளலான இப்பிரம்மனுடைய நம்மை இகழலான மேல் தலையை நீ கண்டித்தும், மேலும் மிகுந்த கர்வம் கொள்ளலான விஷ்ணு முதலிய தேவர்கள், இருடிகள் இவர்களுடைய இரத்தங்களை எல்லாம் பிச்சை என்ற வியாஜத்தால் வாங்கிக்கொண்டும் அவர்கள் இறந்துவிட்டபோதிலும் பிறகு அவர்களைத்துரிதமாய்ப் பிழைப்பு மூட்டிவிட்டு அதன்மேல் நமதாக்கினையின்படி இப்பிரமாண்டத்திற்கு மேற் புறத்திலுள்ள உந்தன் இருப்பிடத்திற்குச் சென்று அங்கிருந்தபடியே தேவர்களையும் இருடிகளையும் சோம்பலின்றிக் காப்பாற்றிக் கொண்டிருக்கலாவாய், என்று அவரை அனுப்பிவிட்டு ஸ்ரீ சாம்பவமூர்த்தி யந்தர்த்தான மடைந்தனர்.

அப்போது இச்சங்கதிகளை விஷ்ணு வறியலாகி மிகுந்த மனவிசாரம் கொண்டு ஏங்கியிருந்தனர். பிறகோவென்றல் பைரவரும் கோபத்தினுல் மிகுந்த அட்டகாசம் பண்ணிக்கொண்டு மகா பயங்கரராகி அப்பிரமனுடைய ஐந்தாவது தலைதனைத் தமது நுனி நகத்தினுற் கிள்ளிப் போட்டவுடன் அவர் இரத்தவெள்ளம் பெருகப்பெற்றவராகி பூமிதனில் விழுந்து அவ் வெள்ளத்திலே ஓர் நொடி நேரத்திற்குள் மூர்ச்சை யடைந்தனர். கேளீர்! பிரஜாபதியே! பிறகு நெற்றிதனிற் கண்ணுடைய அப்பைரவர் பிரம்மன் இரத்தங்களை வற்றச்செய்து மறுபடி தமது கிருபாதிருஷ்டியால் அவரைப் பிழைப்பு மூட்டிவிட்டார். அதன்மேல் பிரம்மன் துரிதமாய் மூர்ச்சை தெளிந்தெழுந்து அவர் மகிமையை அறிந்து பயத்தினுல் நடுக்கமுற்றவராகி அவரை வந்தனித்துத் துதிசெய்து, ஓ! தேவாதி தேவரானப் பிரபுவே! தேவரீர் மகா மூடனுன அடியேன் பிழைகளை மன்னித்துத் தேவரீரது திருவாக்கினையால் எந்தனுக்கு இனி அஞ்ஞானமுண்டாகாமல் இருக்கும்படியாய் ஓ! கருணைக்கடலே! அடியேனுடைய முண்டத் தலையை ஓர் பாத்திரமாகச்செய்து கைமீது வைத்துக்கொண்டு அம்மண்டை யோட்டுப் பாத்திரத்தைப் பிச்சைக் கப்பரையாக்கி ஓ! சுவாமி அக்கப்பரையைக் கொண்டே இரத்த பிக்ஷை எடுக்க வேண்டும்" என்று அவரை வேண்டிக்கொண்டு அடிக்கடி நமஸ்காரம் பண்ணினுர்.

பிறகு பைரவரும் அப்படியே நல்லதென்று அதனை எடுத்துக் கொண்டு மேருகிரியைவிட்டுப் புறப்பட்டுத் தமதிச்சையின்படி ஓர் கண நேரததிற்

குள் அனேக பூதகணங்கள் மகா பலசாலிகளான ஹாலாஹலன், காலவேகன் அக்கினிமுகன் சோமகன் முதலிய இன்னும் மற்ற அனேக பூதசேனைத் தலைவர்கள் ஆகிய இவர்களை எல்லாம் சிருஷ்டித்துக் கொண்டு ஸ்ரீ காலபைரவமூர்த்தியானவர் அனேகம் பூதசேனைகளுடனும் சேனாதிபர்களுடனும்கூடியவராகி இரத்த பிக்ஷை எடுக்கும் வியாஜமாய்ப் பூலோகமெங்கும் திரிந்து எல்லாம் பெரிய அரணியங்களிலும், மலைகளிலும் பாதாளம், நாகலோகம், தேவலோகம் இவைகளிலும் அங்கங்குள்ள கர்வம் கொண்டவர்களான தேவர்கள் இருடிகளுடைய இரத்தங்களை எல்லாம் அப்பைரவர் தமது கப்பரையில் வாங்கிக்கொண்டு அதனால் மரணமடையலாகும் சிற்சிலர்களையும் லீலா விநோதமாய்ப் பிழைப்பு மூட்டிவிட்டுக் கொண்டே யெல்லாவிடங்களிலும் பிக்ஷை வாங்கிக்கொண்டு பிறகு விஷ்ணுலோகத்திற்கு ஏகினர்.

அப்போது அவரது பூதசேனைகளெல்லாம் மிகுந்த கோலாஹல சத்தத்தோடு விஷ்வக்ஸேனருடைய கணங்களாற் காக்கப்படும் ஸ்ரீ விஷ்ணுவின் திருமாளிகை வாசற்படிக்குத் துரிதமாய் வந்தவுடன் அப்போது மகா கொடூரமுடைய கணாதிபரான விஷவக்ஸேனர் அவர்களைத்தாக்கினர். உடனே ஸ்ரீ பைரவமூர்த்தி அவரது கன்னங்களில் அறைந்து துரிதமாய் அவரைத்தமது சூலத்தின் நுனியிற் கோர்த்துக்கொண்டு ஸ்ரீ விஷ்ணுவண்டைக்குவந்தார். அப்போது ஆதிசேடன் உடல் மீது சயனித்திருந்த ஸ்ரீ மகா விஷ்ணுவும் மிகுந்த பீதியினால் பரபரப்போடெழுந்து ஸ்ரீ தேவி பூமிதேவிகளுடன் அவரை நமஸ்காரம் பண்ணித் துதிசெய்துவிட்டு மகா பயங்கராராகிய அப்பைரவரை நோக்கி வசனமுரைத்ததாவது:—ஓ! அடியார்களுக்கு அபயமளிக்கவுற்ற ஜகத்குருவான தேவாதி தேவா! தேவரீர் இங்கு யாது காரியமாய் விஜயமானது? தேவரீரை தரிசித்ததனால் அடியேன் கிருதார்த்தனாகிவிட்டேன். ஓ! கருணாமூர்த்தியே! தேவரீரையே முக்கிய ஆதாரமாய் நாடிய அடியேனைக் காப்பாற்றிடல் வேண்டும். என்றுரைக்கலான அவ்விஷ்ணுவைநோக்கி, ஸ்ரீகாலபைரவர் திருவாக்கருளியதாவது:—ஓ! விஷ்ணுவே! யாம் பிக்ஷைவாங்கும் நியமத்தினால் உமது தலை இரத்தத்தை விரும்பி வந்திருக்கின்றனம். ஆகையால் நீர் அதனைச் சீக்கிரமாய் இப்போது தந்துவிட வேண்டும்'' என இவ்வாறு அவரது வசனத்தைக் கேட்டு ஸ்ரீ மாதவரும் ஓ! இதனால் யான் கிருதார்த்தனாகிவிட்டேனென்று கூறியவராகித் தமது நகத்தினால் நெற்றிதனைப் பிளந்து இரத்தத்தைப் பெருகவிட, அவ்விரத்தங்களை யெல்லாம் ஸ்ரீ பைரவர் தமது கப்பரையில் ஏந்தினர். இவ்விதமாகவே அவ்விரத்தங்கள் விஷ்ணு வருஷத்தில் ஆயிர வருஷகாலமளவும் பெருந்தாரையாய்க் கொட்டிப் பிறகு விஷ்ணு விரத்தமே யற்று மூர்ச்சைகொண்டு கீழே விழுந்தும் அக்கப்பரையிற் பாதி கூட நிரம்பவில்லை. இவ்விதமாய் அம்மகா விஷ்ணுவானவர் மிகுந்த மூர்ச்சையினால் கீழே விழலானதை ஸ்ரீ தேவி இலக்ஷுமி தேவிகள் கண்டு மிகுந்த துக்கம் கொண்டவர்களாகித் துரிதமாய் வந்து மகாத்துமாவாகிய ஸ்ரீ பைரவமூர்த்தியுடைய இருபாதங்களையும் கைகளால் பிடித்துக்கொண்டு ஓ! கருணா சமுத்திரமாகிய பைரவேசுவரா! இவ்விஷ்ணுவை இரக்ஷித்துத் தேவரீர் அடியார்களுக்குச் சீக்கிரமாய்த் தாலி பிச்சையருள வேண்டுமென்று இவ்விரு

தேவிமார்களும் அம்மகேசுவரனைத் தோத்திரம் செய்கையில் பிறகு கருணா மிருதக்கடவுளும், பகவானுமாகிய ஸ்ரீபைரவர் பிரஸன்னசித்தராகித் தயவினால் அவ்விஷ்ணுவை நோக்கிப் பிழைப்பு மூட்டியவுடன் ஸ்ரீ மகாவிஷ்ணு அறிவடைந்தெழுந்து அப்பிரபுவை மிகுதியாய் துதிசெய்தார். பிறகு ஸ்ரீ காலபைரவர் இவ்வாறு துதி செய்யலான விஷ்ணுவைத் தயவோடு திருக்கண்ணுற்று பிறகு மிகுந்தவாத்திய முழக்கங்களோடும், பூதகணங்களின் ஆரவாரச்சத்தங்களோடும் தமது லோகததுக்குப் புறப்பட்டுச் செல்லுகையில் அவ்வாறு செல்லலாகும் அப்பைரவரை விஷ்ணுவானவர் வெகு தூரமளவும் பின் தொடர்ந்து வந்து, பிறகு அப்போது அவரை நமஸ்கரித்துத் துதிசெய்து சூலமதிற் கோர்க்கப்படலான தமது கணத் தலைவராகிய விஷ்வக் ஸேனரையும் மீட்டுக் கொண்டு திருமால் தமது மாளிகைக்கருளினர். அப்போது ஸ்ரீ பைரவரும் மிகுந்த வட்டகாசத்தோடு கூடிய பூத கணங்களுடன் தமது திருமாளிகை சேர்ந்தனர்.

இப்பைரவமூர்த்தியானவர் கல்பத்தின் முடிவினில் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய சகல தேவர்களையும் ஸகல ஜகங்களையும் ஸ்ரீ சிவாக்கினியின்பேரில் மகா கோலஹலசத்தமுடையவராகிச் சமுகரித்துத் தமதிச்சையின்படி அவர்களுடைய முண்டத் தலைகளை யெல்லாம் மாலைகளாக்கித் திருமேனியை யலங்கரித்துக்கொண்டு அப்பிணங்களை யெல்லாம் தமது நெற்றிக் கண்ணெருப்பினால் கொளுத்திவிட்டுச் சுடுகாடுதனிலேயுள்ள அச்சாம்பற்களைத் திருமேனி தனிற் பூசிக்கொண்டு, தமது சுதந்திரத்தினாற் சகல வேதங்களையும் நாய்களாய் அமைத்து அவைகள் மீதேறிக்கொண்டு பயங்கரமான சத்தத்தோடு கூடியவரும் அப்போர்க்கொத்த தமது கணங்களாற் சூழப்பட்டவருமாகியும், திருவுளமதில் ஸ்ரீ பராபரமூர்த்தியைத் தியானித்துச் சுமக்கமுடியாத, மிகுந்த பேரானந்தம் கொண்டவராகியும் இவ்வாறு நிகரற்ற திருவுருவத்தைக் கொண்டவராகி அங்கங்கலைந்து திரியலாகின்றார். ஓ! தக்ஷப்பிரஜாபதியே! ஸ்ரீமகேசுவரன் ஊருராய் பிச்சை யெடுக்கலான இக்கதையை யுந்தனுக்குரைக்கலானோம்; மேலும் ஸ்ரீ பரமேசுவரனுடைய மற்றோர் சரித்திரத்தை இப்போது உனக்குக் கூறுகினறோம்; கேட்பாயாக.

## 20. அத்தியாயம்.

கேளாய்! தக்ஷா! கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம், ஆகிய இந்நான்கு யுகங்களில் ஆயிரம் கொண்டது பிரம்மனுக்கோர்பகலெனப்படும். அவ்வளவுகாலம் கொண்டதே ஓர் இரவாகும்; இவ்விதமான இரவுபகல்களைக் கொண்ட நாட்களில் முன்னூற்றறுபது கொண்டது அவருக்கோர் வருடமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. இவ்விதமான நூறு வருடங்கள் முடிந்தவுடன் அப்பிரம்மனுக்கு நாசம் நேரிடுகின்றது. அது தான் விஷ்ணுவுக்கோர் பகல்; அவரது இரவும் அவ்வளவே. இப்படி இரவும் பகலுமாகிய முன்னூற்றறுபது நாட்கள் கொண்டது அவருக்கு ஓர் வருடமெனப்படும். இவ்விதமாக நூறு வருடங்கள் முடிந்தபோது விஷ்ணு நாசமடைகின்றார். இவ்வாறு அனேகம் விஷ்ணுக்கள் சமுகரிக்கப்பட்டதன்மேல் மகாப்பிர

ளயம் நேரிடுகின்றது. அப்போது அதுகண்டு தருமமானது மிகுந்தபயங்கொண்டதாகி ஓர் இருடப உருவமெடுத்துக்கொண்டு ஸ்ரீ மகேசுவரனைத் துதிசெய்ததாவது:—"ஓ! ஜய ஜயா! சம்போ! மகாதேவா! சரணமடையலான அடியேனைக் காப்பாற்றிடல் வேண்டும்; இதோ மகாப்பிரளய காலமானது சீக்கிரமாய் நேரப்போகிறபடியால் ஓ! அஷ்டைசுவரியங்களும் நிரம்பப்பெற்ற பரமசிவா! அடியேனை விலக்கியே இச்சகல ஜகங்களையும் சமுகரிக்க வேண்டுமென்று பல துதிகளால் துதித்து ஸ்ரீ சங்கரனை வேண்டிக்கொண்டது.

அதன் பிறகு ஸ்ரீ பகவான் பிரஸன்னராகி அதற்கு வரனை யளித்து அதனைத் தமக்கு வாகனமாகச்செய்துகொண்டு அதற்குத் தக்க வலிமையையும் கொடுத்தருளி என்றும் அழிவில்லாதிருக்கும் தன்மையையுமருளி, மேலும் நான்கு கால்களையுடைய அவ்விருடபத்தைக் கிருதயுகம் முதலிய நான்கு யுகங்களில் யுகத்துக்கு யுகம் முறையே ஒவ்வொரு கால் குறைந்ததாகிச் சஞ்சரித்து வரும்படிக்கும் அருள்செய்து ஓ! மகா பரிசுத்தமுடைய தருமமே! யாம் மிகுந்த சந்தோஷத்தோடு உந்தன் சரீரத்தின்பேரில் வசிக்கலாகின்றோம், நீ எங்கும் நமது சன்னதியிலேயிருந்துவரலாவாய். ஓ! தருமமே! உலகினில் மானிடர்கள் நம்மைப் பூஜைசெய்யாமல் எப்பேர்க்கொத்த மிகுந்த மகா புண்ணியங்களைச் செய்திடினும் அவையெல்லாம் பாவங்களின் பயனையே அவர்களுக்கு அளிக்கலாகும். நம்மை பூஜிக்கலுற்ற அடியார்கள் என்ன பாவங்களைச்செய்திடினும் அவையெல்லாம் பாவங்களின் பயனையே கொடுக்கலாகின்றது. கேளாய்! மகா வலிமைகொண்ட தருமமே! யாம் எந்த அடியாரிடத்திலாவது சந்தோஷமடைந்தவருக்கு அனுக்கிரகமளிக்க விரும்பும்போது நீ நமதாக்கினையைச் சிரமேற்கொண்டு இருடப உருவத்தோடு இங்கு வந்துவிடலாவாய் என்றது முதலிய திருவசனங்களை யுரைத்து அதனைத் தமக்கு வாகனமாக்கிக்கொண்டு அதனை அனுப்பிவிட்டார். அது கேட்டறிந்து ஸகல ஜகத் ஸ்வரூபியான ஸ்ரீ விஷ்ணுவும் ஸ்ரீபரமேசுவரன் திரிபுரர்களைச் சமுகாரம் செய்யும் காலத்தில் இருடப உருவமெடுத்துக்கொண்டு திரிபுராந்தகனாகிய அம்மகாதேவனைச் சுமந்தனர். அடா! தக்ஷா ஆகையினால் தான் ஸ்ரீ மகாதேவர் இருபவாகனரென்று சொல்லப்படுகின்றார்.

## 21. அத்தியாயம்.

ஓ! தக்ஷா! ஸ்ரீ மகாதேவருடைய, நிகரற்றதும், மகா பரிசுத்தமுள்ளதுமான மற்றோர் திவ்ய சரித்திரத்தை யுந்தனுக்குக் கூறுகின்றோம். நீ யதனை மிகவும் ஜாக்கிரதையுடன் கேட்கவேண்டும். மகா பலிஷ்டர்களாக, உருத்திரரான காலாக்கினி ருத்திரபகவானும், பைரவமூர்த்தியும் ஸ்ரீ பரமேசுவரனுடைய திருவாக்கினையின்படி சகலப் பிரபஞ்சங்களையும் சமுகரிக்கின்றார்கள். இது அவாந்தர சமுகாரமெனப்படும்.

கேளாய்! பிரஜாபதியே! சகல வஸ்துக்களையும் ஒரே கபலமாய் விழுங்கலாகின்ற ஸ்ரீமகாதேவன் சகல அண்டங்களையும், சகல ஜகங்களையும், சகல ஜீவராசிகளையும், சிலவற்றைப் பார்வையாலும், சிலவற்றைப் புன்னகைப்பினாலும், சிற்சிலரைக் கோபம், அட்டகாஸம், நர்த்தனம், நெற்றிக்கண் அக்கினி,

ஹூம்காரம், கை, காலுதை, இவைகளாலும் அனேக உருத்திர கணங்களோடும் கூடியவராகித் திருவிளையாடலாய்ச்செய்தருளும், சமுகாரமானது, சகலர்களுக்கும் நாசமளிக்கலுற்ற மகாப் பிரளயமெனப்படும். அப்போது சமுகாரம் செய்யும் ஸ்ரீமகாதேவன், அந்தந்த அண்டங்களிலுள்ளவர்களான எண்ணிறந்த விஷ்ணுக்கள், பிரம்மர்கள், இந்திரன்முதலிய மற்றத் தேவர்கள் இவர்களிற் சிலரை எரித்துச் சாம்பற்களைத் தூள்நீருய்ப்பூசும் ; விதிப்படிக்குத் தம் திருமேனியிற் பூசியும் அப்பிரபுவானவர் மற்றவர்களது முண்டத்தலைகளைத் தமதிச்சையின்படி மாலைகளாக அணிந்தும், அவர்களுடைய எலும்புகளை ஆபரணங்களாகப் பூண்டும், மற்றவர்களுடைய தலை மயிர்களை முப்பிரி நூற்களாகத் தரிக்கவுமாகின்றார்.

தவிரவும் சகலப் பிராணிகளையும் சமுகரிக்கலுற்றவரும், என்றும் அழிவற்ற ஞானமூர்த்தியுமாகிய ஸாக்ஷாத் ஸ்ரீபரமேசுவரன் அப்பிரளய காலத்தில் மடியலாகும் சிவபக்தி யினர்களுடனே பிசாசப்பிறப்படைய தாம் ஒருவராகவே அப்பிசாசங்களாற் சூழப்பெற்றவராகி மற்ற விஷ்ணுக்களையும், பிரம்மர்களையும் சூலமதிற் கோர்த்துக்கொண்டு மிகுந்த மனமகிழ்ச்சியோடு அக்காடாந்தகாரமதில் அட்டகாசத்துடன் ஆனந்தக் கூத்தாடுகின்றார். பிறகு அவர் லீலா விநோதமாய்ப்பிசாசங்களையும் சமுகரித்து விட்டு எரிந்து கொண்டிருக்கும் அப்பெருஞ் சுடுகாட்டு மத்திதனில் ஓரிடத்து ஏகாங்கியாய் நர்த்தனம் செய்யலாகின்றார். பிறகு அவர் அம்மகாப்பிரளயம் கழிந்தவுடன் ஸ்ரீபராதேவதையானவள் பார்த்துக் கொண்டிருக்குமளவில் அவள் முன்னிலையிலே பரமாநந்த வசத்தினால் பெருங்கூத்தாடிவிட்டுப் பிறகு சிருஷ்டி செய்வதற்குரிய இச்சா சக்தியோடு கூடியவராகி முந்திய கற்பத்திலிருந்தது போலவே பஞ்ச மகா பூதங்கள், சகலங்களான பிரம்மாண்டங்கள், அததன் லோகங்கள் அவ்வெல்லா அண்டங்களுக்கும்வேண்டிய அனேகம் அனேகம் விஷ்ணுப் பிரம்மர்கள், சகல ஜீவராசிகள், அசுரர்கள், அரக்கர்கள் இவற்றையெல்லாம் சிருஷ்டித்து அவரவருக்குத் தக்க அதிகாரங்களையும் ஏற்படுத்தியவரவருக்குத் தக்க வித்தைகளையும் கற்பிக்கின்றார்' ஆகையால்தான் அம்மகேசுவரன் மகாக்கிரஸர் (பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய சகல சிருஷ்டிப்புகளையும் ஒரே கபளமாய் விழுங்கலுற்றவர்) என்றுப் பிரசித்தி யடைந்திருக்கின்றார். அடா தக்ஷா ? அவருடைய ஆபரணங்களின் மகிமையைப்பற்றி உந்தனுக்குரைக்கின்றோம் அதனைக் கேளடா.

பூர்வத்தில் விஷ்ணு முதலிய தேவர்கள் தேவாதி தேவரான ஸ்ரீ பரமேசுவரனை வந்தனித்துத் தவத்தினால் ஆராதித்துப் பிரார்த்தித்துக் கொண்டதாவது ஒ! ஹரா! சம்போ! மகாதேவா! விசுவநாதா! தேவேசா! ஒ! பிரபஞ்சங்களை இரட்சிக்கின்ற பரமசிவா! மகாப் பிரளயகாலம் நெருங்கிவருகின்றது' ஒ! ஜகதீசா! எங்களுக்கோ அநேக ஜன்மங்களாகி விட்டன. ஒ! பிரபுவே! சமுசாரத்தில் மிகவும் கிலேச மடைந்திருக்கின்ற எங்களுக்கு இனி மறுபிறப்படையத் திறமையில்லாதபடியால் தேவரீருடைய பாதாரவிந்தத்தைத் தியானித்து அதனால் இச்சமுசாரத்தினின்று மோக்ஷமுண்டாகவேண்டும். ஒ!

கருணைக்கடலே! இப்பெரும் சமுசாரத்தினின்று எங்களைச்சமுகரித்த பிறகு எங்களிற் சிலர்களுடைய எலும்புகளை ஆபரணமாய்ப் பூண்டும், மற்றவர்களின் சாம்பற்களை யெடுத்துத் தூளாய்ப் பூசியும் அருளுவீராயின் யாங்கள் எளிதினில் மோக்ஷம்பெறலாவோம்! ஏனென்றால் ஓ! தயாநிதியே! தேவரீரால் தரித்தருளப்படுகின்ற உலகின்கண் மிகுந்த பரிசுத்தம் பொருந்திய கங்காநதியினில், பார்மீதுள்ள யாவர்களுடைய எலும்புகள் போடப்படுகின்றனவோ ஓ!மகாதேவா! அவர்களுக்குக்கூட மோக்ஷம் கிடைக்கலாகின்றது. ஓ! தயாசமுத்திரமே! ஆகையால் சமுசாரத்திற்குள் அகப்படலான வெங்களைக் காப்பாற்றல்வேண்டும்'' என்று இவ்வாறு அவர்களால் வேண்டிக்கொள்ளப்பட்டதன்பேரில் ஸ்ரீபகவான் அவ்வாறே அருள்செய்யலானார். ஆகையினால் தேவர்களை இரக்ஷிப்பதற்காகவே காலனுக்குக் காலனும் சோதிரூபியும், பரமாத்துமாவும், மகேசுவரனும், மூப்புச்சாவற்றவரும், சருவஞானனந்த ஸ்வரூபியும், மகாப்ரபுவுமான ஸ்ரீ சிவபிரான் அவர்களது சாம்பல் முதலியவைகளைத் தரித்தருளலாயினர்.

## 22. அத்தியாயம்.

ஓ! தக்ஷப்பிரஜாபதியே! ஸ்ரீ தேவாதிதேவன் சமுகாரம் செய்வது முதலிய சிறந்த சரித்திரங்களையாம் இங்கு உந்தனுக்கு உரைத்தனம்,மேலும் மற்றோர் புண்ணிய சரித்திரத்தைக் கூறுகின்றோம்! அதனை கேட்பாயாக. பூர்வத்தில் தேவேந்திரன் ஸ்ரீபரமேசுவரனைச் சேவிப்பதற்காக சற்று கர்வமுற்ற வனாகி கைலைகிரிக்கு வந்தான். அப்போது ஸ்ரீபரமேசுவரன் ஓர் பிரமதகணத்தின் உருவத்தைக்கொண்டவராகி வாசற்படியில் நின்றார். அப்போது இந்திரன் வாசற்படிதனில் நிற்கலான அப்பிரபுவை நோக்கி "அடா! இப்போது ஸ்ரீமகேசுவரனுடைய சமயம்என்ன''வென்று டம்பமாய்க்கேட்க, அதற்குஅவர் பதிலுரைக்காமல் கோபத்தோடு உற்றுநோக்கினர். பிறகு அவரைப்பார்த்ததில் இந்திரனுக்கு அதிக கோபமுண்டாகித் தன் வஜ்ஜிராயுதத்தைப் பிரயோகிக்க, அவ்வாயுதமானது அவரது மார்பினில் விழுந்தவுடன் நெருப்புப் பொறிகளைக் கக்கிக்கொண்டு தூள்தூளாகிவிழுந்தன. அதன்மேல் ஸ்ரீ மகேசுவரன் துரிதமாய்தமது உருத்திர உருவத்தை எடுத்துக்கொண்டவுடன் இந்திரன் அவரை ஸ்ரீபரமேசுவரன்தான் என்றறிந்து பயத்தினால் நடுக்கமுற்றவனாகி வந்தனித்து ஓ! சகலப் பிராணிகளிடத்தும் கருணையளிக்கமுயன்ற பரமசிவா! அடியேன் பிழைகளை மன்னித்து அருளவேண்டுமென்று பல துதிகளால் தோத்திரம் பண்ணி அவரை அருள்புரியும்படி செய்து கொண்டான்.

பிறகு ஸ்ரீபகவான் பிரசன்னராகி அவ்விந்திரனை நோக்கி! "ஓ! இந்திரா நீ இப்போது பயப்படல் வேண்டாம். யாம் இங்கு உந்தனுக்குப் பிரசன்னராயினேம் என்று அறியலாய்' என்று அத்தேவேந்திரனுக்கு அனுக்கிரகம் அளித்து அவன் பட்டணத்திற்கு அனுப்பிவிட்டுப் பிறகு அச்சிவபிரான் மிகுந்த கருணையால் தமது கோபாக்கினியைச் சமுத்திரத்தில் எறிந்து விட்டு உடனே தமது மாளிகைக்குட் செல்லலானர். பிற்பாடு ஸ்ரீபரமேசுவரனுடைய அக்கோபாக்கினியோ வென்றால் ஓர் குழந்தையாகி அழ, அச்சத்தமானதுதேவர்கள்

முனிவர்கள் முதலிய மற்றெல்லோர்களாலும் கேட்கப்பட்டது. அப்போது அக்குரலைக் கேட்டவுடன் வருணன் அங்கு வந்து அந்தக்குழந்தையை எடுத்துபோய் வளர்த்துவந்தான்.

இவ்விதமாக அக்குழந்தையானது வருணன் வீட்டில் நாளுக்கு நாள் வளர்ந்து வருகையில் ஓர் நாள் அவ்வருணன் வீட்டிற்குப்பிரம்மன் வந்தார். அப்போது வருணன் அக்குழந்தையை பிரம்மன் கைமீது கொடுக்க, அப்பிரபுவும் அக்குழந்தையைத் தன்மடிதனில் வைத்துக் கொள்ளலாகையில் மிகுந்த வலிமைகொண்ட அக்குழந்தை அழுதுகொண்டு அப்பிரம்மனது தாடி மயிர்களைக் கையினால் பிடித்திழுக்கலாயிற்று. அப்போது பிரம்மன் ஓ! இவன் பிரம்ம விஷ்ணுக்கள் முதலியவர்களைக் கூடப் போர்தனிற் சந்தேகமின்றி முறியடித்து விடுவான். எப்பேர்க்கொத்த பெரியோர்களுடைய சாபத்தினின் றும் இவனுக்கு ஒரிடத்தும் பயமிராது. இவன் மூவுலகங்களிலும் ஜலந்தர னென்று பிரசித்தி பெறலாவான். தைரியம், பராக்கிரமம் முதலிய குணங் களுடையவனும், மகா பலவானும், மகாதுஷ்டனும் கொடூரமுள்ளவனுமான இச்சிறுவன் தேவநகரைச் சயித்து அசுரர்களுக்கு அளிக்கலாவானென்று சொல்லிவிட்டுப் பிரம்மன் நேர்த்தியான தமது மாளிகைக்கு ஏகினர். பிறகு ஜலந்திரன் பின்னும் சிலகாலம் அவ்வருணனிடமிருந்து விட்டுப் பின்பு கொடியர்களான சில அசுரர்களைக் கூட்டிக்கொண்டு பூலோகத்துக்கு வந்து சகல திக்குபாலகர்களையும் ஜயித்துத்தேவர் மாளிகைகளையெல்லாம் அசுரர்களுக்கு ஈந்து மயனென்ற அசுரச்சிற்பியால் அமைக்கப்பெற்ற ஜலந்தரம் என்ற நகரத் திலிருந்து கொண்டு சகல சத்துருக்களையும் ஜயித்து மகா பராக்கிரமசாலியாக இருந்து வந்தான்.

பிறகு அவன் சிலகாலம் சென்றதன்மேல் காலநேமியென்ற அசுரன் பெண்ணாகிய பிருந்தை என்பவளை மணம்புரிந்துகொண்டு மிகுந்தசந்தோஷத் தோடு இருந்துகொண்டிருக்கையில் வெகுகாலம் சென்றதன்மேல் அவன்தேவ ரெல்லாம் மேருகிரியிற் பதுங்கியிருப்பதைத் தெரிந்துகொண்டு அங்குசென்று அவ்வெல்லோர்களையும் போரினில் வென்று, பிறகு அவர்களுக்கு உதவியாய் வரலான விஷ்ணுவையும், இருபதினாயிரம் வருடம் அளவும் யுத்தம்பண்ணிக் களைப்படைந்து தன்னைத் துதிசெய்தானவுடன் சத்துருக்களை வதைசெய்ய லுற்ற அவ்வசுரன் விட்டுவிட்டான். பிறகு இந்திரன் முதலிய தேவர்களெல் லோரும் பயத்தினால் நடுக்கமுற்றவர்களாகிக் கைலைகிரிக்கு ஓடி விட்டார் கள். அசுரனேவென்றால் தன் நகரம் சென்று அங்கு வெகுகால மிருந்து விட்டு பிறகு அக்கொடிய மகாசூரன் தடைசெய்யலான தன் மனையாளாகிய பிருந்தையின் வார்த்தையைச் சட்டை செய்யாமல் தேவர்கள் பயந்தோடி யிருக்கின்ற மிக உத்தமமான கைலைகிரிக்கு மிகுந்த பரபரப்புடன் தன் சேனைகளோடு சென்றான்.

அப்போது தேவர்கள் அவன் வரவை யறிந்ததன்மேல் மிகுந்த பயங் கொண்டவர்களாகி வாசற்படியிலிருக்கும் ஸ்ரீநந்தி பகவானைத் தண்டம்பண்ணி அவரது அனுமதியின் பேரில் தேவாதி தேவனாகிய ஸ்ரீமகா தேவரது மகா

பரிசுத்தமான திருமாளிகைக்குட் சென்று அங்கு மகாதேவரைத் தரிசித்துத் தண்டம்போல் வந்தனம்பண்ணி மிகுந்த பக்தியுடன் பல துதிகளால் தோத்திரம் பண்ணிய தன்பேரில் விவரம் என்னவென்று வினவியருளிய அச்சங்கரன் முன்பாகச் சங்கதிகளை யெல்லாம் தெரிவித்துக் கொண்டார்கள். அப்போது ஸ்ரீபரமேசுவரன் அத்தேவர்களுக்கு அபயமளித்து விட்டுத் தாம் பிராமண உருவம்கொண்டு ஓர் முனிவர்போல் தண்ட கமண்டலங்களைக் கைதனில் வைத்துக்கொண்டும், ஓர் குடைதனைப் பிடித்துக்கொண்டும் அவ்வசுரனை எதிர் நோக்கிப் புறப்பட்டனர். அப்போது அவர் பிறர் அறியாமல் உருவத்தை மறைத்துக்கொள்ளலான தேவர்களால் பின்தொடரப் பெற்றவராகி அச்சலந்தராசுரன் அண்டைக்கு வந்து அவனை நோக்கி "அடா? நீ யாவன்? எங்கிருந்து வந்தாய்? எங்கு போகலாகின்றாய்? என்று அம்மகேசுவரன் அவனை இவ்வாறெல்லாம் வினவலாகையில் அவ்வசுரன் "ஓ! தவசியே! என் பெயர் ஜலந்தரன்; யான் சகல தேவர்களையும் யுத்தரங்கத்திற் சயித்து விட்டு இப்போது சங்கரனை வெல்வதற்காகக் கைலைகிரிக்குப் போகின்றேன் என, பின்பு பகவான் நகைத்து அவ்வசுரனை நோக்கித் திருவாக்கருளியதாவது:—

ஓ! அசுரா! பினகமென்ற வில்லைக்கொண்டவரும், அடியார்களைப் பகைக்கலுற்ற வீரர்களைத் தொலைப்பிப்பவருமான அச்சம்புவோடு யுத்தம் பண்ண மனதினுல் நினைப்பவன்கூடச் சந்தேகமின்றி அவமானம் பெறுவான். இங்ஙனமாயின் அப்பிரபுவைச் சயிக்க எவ்வாறு தகும்? ஓ! ஜலந்தரா! யான் அவர் அருகினில் இருப்பவன் தான்; நீ இனி பிழைத்திருக்க வேண்டுவாயாகில் வந்த வழியோடு திரும்பிச்சென்றுவிடு" என, இவ்வாறு அவ்வந்தணர் வசனத்தைக் கேட்டதன்மேல் ஜலந்தரன் "ஓ! பிராம்மணு! ஒருவராலும் எதிர்க்கமுடியாத எனது வலிமையை நீ யறியவில்லை; அதனை இதோ! ஓர் நொடி நேரத்திற்குள் காட்டுகின்றேன்" என, கேளீர்! சௌனகாதி முனிவர்களே! கோபங்கொள்ளலான பாவியாகிய அச்சலந்தரனது இவ்வாறு படபடத்த வார்த்தையைக் கேட்டுப்பிராம்மண உருவம்கொண்டவரான அப்பகவான் "ஓ! அசுரா! உன்னுடைய அப்பேர்க்கொத்த வலிமையைப் பார்க்க எந்தனுக்குக் குதூஹலமிருக்கின்றது; ஆகையால் நீ இதோ! இந்தச் சக்கிரத்தை இருகைகளாலும்தூக்கி என் முன்னிலையில் உந்தன்தலைமீதுவைத்துக்கொள்ளலாவாய்" என்று திருவாக்கருளி தமது கால்பெருவிரலினுல் அங்கு பூமிதனிலெழுத, பூமியிலெழுதப்படலான அச்சக்கிரத்தை அசுரன் பார்த்து அவ்வேதியரை நோக்கி வசனமளித்ததாவது:—ஓ! பிராம்மணு! யான் பிரம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களையெல்லாம் போரில் துரத்தியடித்திருக்கின்றேன். மேலும் முந்தி ஓர் கணமாத்திரத்தில் வடவாக்கினியைக் கையினுல் அணைத்திருக்கின்றேன். சமுத்திரங்களையெல்லாம் வற்றவடித்திருக்கின்றேன். பருவதங்களையெல்லாம் எடுத்து பந்து விளையாடியிருக்கின்றேன். இப்படியிருக்கையில் ஓ! பிராம்மணு இச்சக்கிரமதைத் தூக்க வெந்தனுக்கு என்ன மெத்தப் பிரயாசை? யென்றுரைத்து அதனைக் கைகளால் தூக்கி மார்பினில் தாங்கவைத்

துக்கொண்டு மறுபடியும் வெகு பிரயாசையோடு அதனைத் தூக்கி தலைமீது வைத்துக்கொள்ள உடனே,ஓர்நொடிக்குள் அச்சக்கிரமானது அவனை இருதுண்டங்களாக்கிவிட்டு வேகமாய்ப் பூமியில் விழலாயிற்று. அப்போது மகாவேகமுடைய பெரியதான வோரிரத்தவெள்ள முண்டாயிற்று. உடனே யச்சலந்திரன் மலைபோல் இருதுண்டங்களாய் இப்பூமியில் விழுந்து, தரைதனிற் புறண்டு, சடிதியில் மடிந்தான்.

## 23. அத்தியாயம்.

"அம்மகா கொடியன் இறந்தவுடன் திரிபுரர்களுக்கு அந்தகரான ஸ்ரீ பரமேசுவரன் அவனது தனங்களை யெல்லாம் கண்ணுற்று நெற்றிக்கண் நெருப்பினாலெரித்து விட்டனர். அத்துராத்துமன் சேனைகள் தங்கள் சாம்பற்களை மாத்திரம் மிச்சமாக வைத்துப்போகலானார்கள். பிற்பாடு அப்பிரபுவானவர் தமதிச்சையின்படி நிகரற்ற நிஜவுருவத்தைக் கொள்ளலானவுடன் அப்போது பிரம்ம விஷ்ணு இந்திரர்கள் முதலிய தேவர்களெல்லாம் அம்மகேசுவரனைத் தரிசித்து அனேகம் துதிகளால் பலவிதமாய்த் தோத்திரம் பண்ணித் தண்டம்போல் நமஸ்கரித்தார்கள். அப்போது அகண்டாநந்த மூர்த்தியாகிய அப்பகவானும் அவர்களைக் கிருபையுடன் திருக்கண்ணுற்று அருளி அவரவர் விடுதிகளுக்கு அனுப்பிவிட்டுத் தாம் உடனே அந்தப்புரம் சென்றனர்.

கொடிய ஜலந்தரன் இறந்து சிலகாலம் சென்றதன்மேல் ஸ்ரீ மகா விஷ்ணுவானவர் காமவசப்பட்டவராகி ஜலந்தரன் மனையாளான பிருந்தையை நினைத்துக்கொண்டு அக்காமாதுரரானவர் அவனது மாளிகைத் தோட்ட மடைந்து ஓர்இருடி யுருவம் கொண்டவராகித் தவஞ்செய்யும் வியாஜமாய் அங்கிருந்தனர். அப்போது பிருந்தையும் கணவன் வரலாறுகளை யறியாமல் அவனதுபிரிதலினால் மேனிமெலியப் பெற்றவளாகி பொழுது போக்குவதற்காகத் தன் வீட்டுத் தோட்டத்துக்கு வந்தாள்.

அப்போது அங்கு மகா பலசாலிகளான இரண்டு விஷ்ணு கணாதிபர் விஷ்ணுவால் தூண்டி விடப்பட்டவர்களாகி சிங்கவுருவமெடுத்து அவளைத் துரத்த அப்போதவள் அக்கொடிய சிங்கங்களைக் கண்டவுடன் அவ்விருடியண்டைக்கு வந்தாள். பிறகு அம்முனிவரும், சிங்கங்களால் துரத்தப்பட்டு பயந்து நடுங்கிய அப்பிருந்தையைப் பார்த்து "ஓ! மாதரசே! நீ பயப்படாதே. நம்மை இரக்ஷிப்பவராக வறிந்துகொள்" என்றுரைத்துவிட்டு விஷ்ணு அச்சிங்கங்களைச் சடிதியில் விரட்டி விட்டனர். அப்போதேயவரை யவள், முக்காலங்களையு மறியவுற்ற வோர் இருடியென வறிந்து "ஓ! சுவாமி! என் கணவன் ஸ்ரீ சங்கரனோடு யுத்தம் செய்வதற்காக கைலைகிரிக்குப் போயினர். அவர் உயிருடன் இருக்கின்றாரோ, அல்லது நாசமடைந்துவிட்டாரோ தெரிகிலேன். ஓ! தவத்தையே தனமாய்க் கொண்ட முனிவரே! தேவரீர் ஸர்வஞராகியதால் அவ்வறலாறுகளை எந்தனுக்குத் தெளிய உரைத்திடல் வேண்டும்" என்றவள் உரைக்கலாகையில் ஸ்ரீ விஷ்ணு தமது தூதர்களான கணாதிபர்களை நோக்கி அப்பிணத்தை யெடுதது வரும்படி யனுப்ப அப்போது சிங்கவுருவம் கொண்டிருந்த அவ்விரு கணாதிபர்களும் குரங்குகளின் உருவத்தைக் கொண்டவர்

ளாகிப் பூமியி லிரு துண்டங்களாய் இறந்து கிடந்த கொடிய ஜலந்தரனை யெடுத்துக்கொண்டு பிருந்தையின் முன்னிலையில் கொண்டு வந்து வைத்தார் கள்.

பிறகு அப்பிருந்தையும் இரு துண்டங்களாய் இறந்து கிடக்கலான தன் கணவனை நோக்கியவுடன் கேளாய்! தக்ஷப்பிரஜாபதியே! தன் புருடன் பேரில் விழுந்து மிகுந்த துக்கத்தோடு புலம்பலாயினள். அது கண்டு ஸ்ரீ விஷ்ணுவானவர் மிகவும் துக்கப்படலான அப்பிருந்தையை மறுபடி சமாதானப் படுத்தி "ஓ! பெண்ணே! உன் புருடனிறந்தபோதிலும் திரும்பவும் பிழைத்து விடுவான்"என வுரைத்துவிட்டுத் தாம் மறைந்து கொண்டு அச்சலந்தரன் தேகத்திற்குட்புகுந்தனர். உடனே அவ்விஷ்ணுவானவர் ஜலந்தரன் என்ற பெயரைக் கொண்டவராகிச் சடுதியிலெழுந்தவுடன் அவரையவள் கணவனென்றே எண்ணித் துக்கத்தை விட்டு அவரை மிகுந்த மோகத்தோடு நன்கு ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு மிகுந்த பரம சுகமடைந்தாள். பிறகு அவள் அங்கு அத்தவசியையும் அக்குரங்குகளையும் காணவில்லை. பிற்பாடு விஷ்ணுவானவர் அச்சலந்தரன் சரீரத்திற் புகுந்தவராகி வெகுகாலம் வரையில் கொஞ்சமேனும் சோம்பலின்றி இச்சைகொண்ட மட்டில் அவளுடன்ரமித்து வந்தார்.

இப்படி வெகுகாலம் சென்றதன் மேல் ஒருக்கால் விஷ்ணுவானவர் தமது கபடச் செய்கையை மறக்கலாகித் தம் சுவாபத்தின்படி யோக நித்திரை செய்யலாயினர். அப்பொழுதே அப்பிருந்தை யவர் ஸாக்ஷாத் விஷ்ணுவென்றே யறிந்து, ஓ! விஷ்ணுவே! நீர்மாயையினுற் பிறர் கூட்டுக்குட்புகுந்துகொண்டு மிகவும் காமாதுரராகிக் கொஞ்சமேனும் இலச்சையற்றுப் பிறர் மனையாளான கற்புடைய எந்தனேடு சுகமனுபவித்து வந்தீரல்லவா! ஆகையினுல் ஓ! விஷ்ணுவே! உமது பெண்டிரைச் சத்துருவானவன் வஞ்சகத்தாலெடுத்துப் போகக்கடவது. மேலும் ஓ! மாதவா! உமக்கு குரங்குகளோடு சிநேக மிருந்தபடியால் உமக்குக் குரங்குகளோடுகூட சஞ்சாரமுண்டாகக் கடவது" என்று விஷ்ணுவை இவ்வாறுகச் சபித்துவிட்டுப் பிருந்தையானவள் மிகுந்த கோபத்தோடு அக்கினிப் பிரவேசம் செய்துவிட்டனள். அதன்மேல் விஷ்ணுவானவர் அவளைக் காண்பதிலே கவலைகொண்டவராகி அச்சாம்பற்களை வாரித் தேகமெங்கும் பூசிக்கொண்டு அச்சுடுகாட்டின் கண்ணே, மிகவும் காமவெறி கொண்டவராகித் தமது லோக யாத்திரையைக் கொஞ்சமேனும் சிந்தியாமல் பைத்தியக்காரன்போ லிருந்துவந்தனர்.

அப்போது பிரம்மன் முதலிய தேவரெல்லோர்களும் ஸ்ரீ விஷ்ணுவின் சங்கதிகளை யறிந்ததன்பேரில் பிரபஞ்சங்களை நடத்துவோரான ஸ்ரீ மகாதேவரிடத்து விண்ணப்பம் செய்துகொண்டு அத்தேவரெல்லோர்களும் கைலையில் வசிப்போரும் ஸச்சிதானந்த மூர்த்தியுமான ஸ்ரீ சர்வேசுவரனை வேண்டிக் கொண்டதாவது:—ஓ! பரமேசுவரா! அருள்புரியவேண்டும்! ஓ! ஸச்சிதானந்த மூர்த்தியே! அருள்புரியல்வேண்டும். ஓ! சம்போ! பிருந்தையிடத்து மோகங் கொண்டு மெத்த காமாதுரராயிருகின்ற விஷ்ணுவைக் காப்பாற்றிடல்வேண்டு"

மென்று அத்தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டதின்பேரில் தயாநிதியாகிய ஸ்ரீ பரமசிவன் "அப்படியே நல்லதென்று பாரிசத்தின் கண்ணிருந்த கௌரியம்மையைத் திருக்கண்ணருள, ஓ! கோ! அவ்வம்மையும் தம்மிடக்கைச் சுண்டுவிரலின் கண் ஏதோ ஒரு வித்தையுண்டு பண்ணி அவ்வற்புதமான வித்தைப் பிரம்மனுடைய கைமீது கொடுத்தருளி ஓ! பிரம்மாவே! இவ்வித்தைத் துரிதமாய்க் கொண்டுபோய் அப்பிருந்தையின் சுடுகாட்டினில்விதைத்து அதனை நாள்தோறும் அமுதத்தை ஊற்றிப் பயிர்செய்வீராகில் இதனின்று விஷ்ணுவுக்கு நேசமுடைய நேர்த்தியான துளசி என்பவள் உண்டவாள்; அவளைப் பார்த்தவுடன் விஷ்ணுவும் அவளிடத்து எப்போதும் மனப்பிரீதி கொண்டவராவார். ஓ! பிரம்மாவே! பிறகு அத்துளசியை விஷ்ணுவுக்குப் பாணிக்கிரகணம் செய்விக்கலாவீர். பின்பவர் அவளோடு நாள்தோறும் தமதிச்சையின்படியே சோம்பலின்றிச் சுகமனுபவித்துக் கொண்டு கேளீர்! பிரம்மாவே! நிச்சயமாய் மோகம்தெளியப் பெறலாவார். மேலும் விஷ்ணுவானவர், நிகரற்ற அத்துளசி மாலையைச் சிரசினிற் சூட்டிக்கொள்ளலாவார். அவர் இவ்விதமாக அத்துளசியை மாலையாகவும், பெண்டீராகவும் செய்துகொண்டு பிறகு அவர் சந்தேகமின்றியே அவரதுசொந்தத் தொழிலைச்செய்து வரலாவாரென்று திருவாக்குறைத்து அப்பரமேசுவரியானவள் பிரம்மனை அனுப்பி அருளினர்.

பிற்பாடு பிரம்மன் முதலியவர்கள் ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களை நமஸ்கரித்து விட்டு மனசந்துஷ்டிக் கொண்டவர்களாகித் துரிதமாய்த் தங்கள் தங்கள் ஸ்தானங்களுக்குச் சென்றார்கள். பிறகு பிரம்மனேவென்றால் சடிதியில் அச்சுடுகாடு சென்று ஸ்ரீ தேவியினுடைய திருவாக்கினையைச் சிரசினால் வகித்துக்கொண்டு அற்புதமாகிய அவ்வித்ததனை அங்கு விதைக்க, அப்போது அதனின்று நேர்த்தியான துளசியுண்டாயிற்று. அப்போது அதனைக் கண்டவுடன் விஷ்ணுவுக்கு துக்கம் சடுதியில் நீங்கிவிட்டது. பிற்பாடு அவர் அத்துளசியை மணம்புரிந்துகொண்டு மிகுந்த களிப்புற்றவராகித் தமதிச்சையின்படி நாள்தோறும் அவளோடு கிரீடித்து வந்து மேலும் மெத்த நேர்த்தியான அத்துளசி மாலையையும் உச்சிதனில் சூட்டிவந்தனர். பிற்பாடு ஸ்ரீ விஷ்ணு பைத்தியம் தெளியப் பெற்றவராகித் தமது ஸ்தானமாகிய வைகுண்டம் சேர்ந்து அங்கிருந்துகொண்டு தமது கிருத்தியங்களைச்செய்து வந்து பிறகு சிலகாலம் சென்றதன்மேல் அவர் மகா தேவரை மரைமலரை யொத்த தமது திருக்கண்ணைப்பிடுங்கி அர்ச்சித்ததனால் சந்தோஷிப்பித்து முந்தி அப்பரமேசுவரனால், ஜலந்தராசுரனைச் சங்கரிப்பதற்காக அமைக்கப்படலான கோடி சூரியப்பிரகாசம் பொருந்தியதும், மிக்வும் அற்புதமுமான சக்கிரத்தை அவரிடத்தினின்று அடைந்து மிகுந்த சந்தோஷமடைந்தனர். ஓ! தக்ஷ! இவ்வாறாக ஸ்ரீ பிரபுவினுடைய பற்பலவிதமான விருத்தாந்தங்களையும் உந்தனுக்குரைத்திட்டனம்,"

"ஓ! தக்ஷா! முந்தி நீ ஸ்ரீமகேசுவரன் பாரிசத்திலும் சிரசிலும் இருபெண்டீர்களை வைத்திருக்கின்றாரென இகழ்ச்சியாய்ப் பேசினையல்லவா! அதற்கு விடை கூறுகின்றேம். கேளடா முந்திக் கைலைக் கொடிமுடிதனில் பார்வதி

தேவியானவள் ஸ்ரீபரமேசுவரனுடைய இருகண்களைச் சரச உல்லாசக்கேளி கையால் இருகைகளாலும் பொத்தலானாள். அப்போது இவ்வுலகங்களெல்லாம் மிகுந்த அந்தகாரத்தினால் மூடப்பட்டது. பிற்பாடு சகலபிரபஞ்சங்களையும் பிரகாசிப்பிக்கலுற்ற ஜகதீசனானவர் தமது நெற்றிக்கண்ணை விழிக்கலாகி அந்தகாரத்தினால் மறைக்கப்பட்ட ஜகங்களைப் பிரகாசிப்பித்தனர். அப்போது கௌரியம்மை யதனைக்கண்டு மிகவும் பயந்தவளாகி ஸ்ரீமகாதேவருடைய கண்களை மூடலான தனது இருகைகளை யெடுத்துவிடும்போது அவளது செந்தாமரை மலரையொத்த அவ்விருகைகளிலிருந்தும் மிகுந்த வியர்வைப்பெருக்குண்டாயிற்று.

பிறகு தேவிபால் விடப்பட்ட அவ்வியர்வை நீரானது வெவ்வேறாய்ப் பத்தாப் பிரவாசங்களாகி ஓர் கணநேரத்திற்குட் சகலஜகங்களிலும் வியாபித்தது. அப்போது விஷ்ணுமுதலிய தேவரெல்லோர்களும் பயத்தினால் மிகவும் நடுக்கமுற்றவர்களாகி ஓ! கோ! இதென்ன! அகாலத்தில் பிரளயம் நேரிடுவதென்று மிகுந்த சிந்தை கொண்டவர்களாகி ஸ்ரீமகாதேவனைத் தரிசித்து அதிக சந்தோஷத்தோடு பூஜித்து, ஓ! கருணைக்கடலான சம்போ! மகாதேவா! காலமில்லாதகாலத்தில் ஜலப்பிரளயத்தினால் முழுகப்படலான ஸ்தாவர ஜங்கமரூபமாகிய இச்சகமதை இரக்ஷித்தருளவேண்டுமென்று எல்லாத்தேவர்களாலும் பிரார்த்திக்கப்பட்டவுடன் உலகங்களை யிரக்ஷிப்பதிலே முயற்சியுடையோரான ஸ்ரீ ஸர்வேசுவரன் அவர்கள்மீது கருணைவைத்து மிகுந்த ஜலப்பிரவாகத்தை யெடுத்துத் தமது செஞ்சடையின் ஓர் மயிர்க்காலில் ஓர் சிறியநீர்த்திவலைபோல வைத்தருளினர். அப்போது விஷ்ணு, பிரம்மன் இந்திரன் முதலிய தேவர்கள் அவ்வற்புதத்தைக் கண்டவுடன் ஸ்ரீபகவானைத் தண்டம்போல் வந்தனித்துப் பலவிதத்துதிகளால் தோத்திரம்பண்ணி "ஓ! பகவானாகிய பரமசிவா! அம்மையின் திருக்கையினின்று உண்டான மகாபரிசுத்தமாகிய இந்நதியானது தேவரீர் திருச்சடை தடத்தில் தரிக்கப்பட்டபடியால் அதனைப்பார்த்தனாலும், தொட்டதனாலும் குடித்ததனாலும் அதனில் நீராடியதாலும் என்றும் சகலப் பிராணிகளுக்கும் பாவவிமோசனம் செய்விக்கலுற்றது. ஆகையால் ஓ! தேவ தேவேசா! அந்நதியின் ஜலத்தில் எங்களுக்குக் கொஞ்சம் தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்துப் பிரம்மன், விஷ்ணு, இந்திரன், இவர்கள், வெகு சந்தோஷத்தோடு ஸ்ரீ சம்புவினிடமிருந்து அச்சலத்தை வெவ்வேறாய் வாங்கிக்கொண்டு தங்கள் தங்கள் லோகத்தில் வைத்துக்கொண்டார்கள். விஷ்ணு வாங்கிக்கொண்டுபோன ஜலமானது உலகினில் சிரேஷ்டமான விஷ்ணு நதியென்று பிரவித்திகொண்டது. அதுபோலவே பிரம்மனும் தாம் வாங்கிப்போன ஜலத்தை எப்போதும் தம் குண்டிகையில் வைத்திருந்தார். இந்திரன் வாங்கிப்போய்ச் சுவர்க்க லோகத்திற் கொண்டு வைக்கலான நதிதான் ஆகாய கங்கையென்று சொல்லப்படுவது. பிறகு வெகுகாலம் சென்றதன்மேல் பகீரதனானவன் பிரம்ம லோகத்தில் பிரம்மனால் கொண்டு வைக்கப்பட்ட நதியை மிகுந்தப் பிரயாசையோடு பூமிக்குக் கொண்டு வந்தபோது மிகுந்த அலைகளால் பயங்கரமான கர்வங்கொண்ட அந்நதியை ஸ்ரீ பரமேசுவ

ரன் தம்செஞ்சடையிலேந்தி வற்றசெய்து பிறகு அவனால் பிரார்த்திக்கப்பட்ட தன்மேல் ஸ்ரீ சம்புவால் விடப்பட்ட மாத்திரத்தில் அக்கங்கையானது புறப் பட்டு மகா வேகமுடையதும், பெரிய அலைகளால் நிரம்பப் பெற்றதுமாகி பூமியையடைந்து அபாரமாகிய சமுசாரக்கடலினின்று ஸாகரர்களைக் கரை யேற்றலாயிற்று. ஆகையினால் கேளாய்! தக்ஷப்பிரஜாபதியே! ஸ்ரீ சங்கரனது உச்சியலங்கார மாலையான அக்கங்கையால் இப்போது நீராடியவர்கள் பாவங் களைத் தொலைத்து மோக்ஷ சாம்பிராஜியத்தை யடைகின்றார்கள். அடா! தக்ஷா! ஸ்ரீ கங்காதரன் பெண்டிரைத் தூக்கிக் கொண்டிருக்கின்றன ரென்று உந்தனாலுரைக்கப்பட்டது இவ்வாறு தான். மேலும் இப்போது மற்றோர் சரித்திரம் சொல்லுகின்றோம்; அதனைக் கேட்பாயாக.

பூர்வத்தில் பிரம்மனானவர் சனகர் முதலிய நால்வர்களைச் சிருஷ்டித்தார். அவர்கள் சிருஷ்டித் தொழிலில் மிகவும் பராமுகமாகி மிகுந்த தவ நிலையை நாடியவர்களும் ஞானிகளுமாயிருந்தார்கள். அது கண்டு பிரம்மன் விஷ்ணு வோடு கூட ஸ்ரீ பரமேசுவரனுக்கு அதனைத் தெரிவித்துக் கொள்வதற்காக கைலாசத்துக்கு வந்தார். அப்போது ஸனகர் முதலிய இருடிகளும் அங்கு வந் தார்கள். பிறகு விஷ்ணு பிரம்மர்கள் ஸ்ரீ பரமேசுவரனை நோக்கி "சுவாமி! ஜகங்களைச் சிருஷ்டி செய்வதற்குச் சக்தியில்லை யென்று விண்ணப்பம் செய்து கொண்டவுடன் ஸ்ரீ சங்கரன் கோபத்தோடு அவ்விருவர்களையும் தமது நெற்றிக் கண்ணினாலெரித்துவிட்டுத் தமது இடது பாகத்தில் கௌரியம் மையைச் சிருஷ்டித்து வைத்துக்கொண்டு பிறகு அவ்விஷ்ணு பிரம்மர்களையும் லீலாவினோதமாய்ச் சிருஷ்டித்தருளி 'ஓ! பிம்மாவே! நாமெப்போதும் அப் பராசக்தியோடு கூடியவராகித் திருவிளையாடல் அருளிக்கொண்டிருக்கின்ற காரணத்தினால் உமக்கு இப்போது முதல் மறுபடியும் இச்சிருஷ்டித்தொழி லில் மிகுந்த சக்தியுண்டாகும். ஆகையால் நீர் விஷ்ணுவுடன் கூடப் போய் முன்போல் எல்லாவற்றையும் சரிவர சிருஷ்டித்துவாலாவீர்" என்று திருவாக் கருளி ஸ்ரீ பரமேசுவரன் அவ்விருவர்களையும் அனுப்பலாயினர். பிற்பாடு அவ் விருவர்களும் ஸ்ரீபரமேசுவரனையும் ஞானரூபமாகிய ஸ்ரீ கௌரியம்மையையும் நமஸ்காரம் பண்ணிவிட்டு அவரது திருவாக்கினையின்படி மிகுந்த மனமகிழ்ச்சி யோடு தம் தம் தானங்களுக்குச் சென்றார்கள். அதன் பிறகு பிரம்மதேவன் சோம்பலின்றிச் சகல ஜகங்களையும் பலவாறாகச் சிருஷ்டித்து வந்தார். கேளாய்! தக்ஷா! ஆகையால் ஸ்ரீ ஜகதீசன் ஜகங்களை சிருஷ்டி செய்யும் நிமித்தமாகவே கௌரியம்மையோடு கூடி இருக்கின்றார். அவ்வம்மையே ஸத் திய ஞானானந்த ஸ்வரூபியாகிய அப்பிரபுவினொளியே. சந்திரனையும் நிலவை யும் போல அவ்விருவர்களுக்கும் பேதமேயில்லை.

## 25. அத்தியாயம்.

ஓ! தக்ஷா! ஸ்ரீ பரமேசுவரன் இரண்டு பிள்ளைகளைப் பெற்று இருக்கின்றா ரென்று உரைத்தாயல்லவா? அச்சரித்திரத்தை இப்போது வர்ணித்துச் சொல்லுகின்றோம். நீ யதனைக் கவனமாய்க் கேட்பாயாக. பூர்வத்தில் அசுரேந் திரனென்ற அசுரனானவன் இந்திரனால் உயுத்தத்தில் தாக்கிவிடப்பட்டவனா

கிச் சைனியங்களை யிழந்து ஒண்டியாகி மிகுந்த துக்கத்தோடு சுக்கிரனிடம் சென்றான். உடனே அச்சுக்கிரனும் அவன் வந்த காரியத்தை ஞானதிருஷ்டியால் ஆலோசித்து "ஓ! அசுரேந்திரா! யாமிருக்கும்போது நீ ஒன்றுக்கும் துக்கப்படவேண்டாம்; வஸிஷ்ட மாமுனிவரின் குலத்தில் சனித்தவரான மாகதரென்ற ஓர் மகா யோகீசுவரரானவர் தவத்தினிலே மனதை யுறுதியாய் நாட்டிக்கொண்டு மகாகோரமாய்த் தவம் செய்துகொண்டு இருக்கின்றார். அவருடன் எப்போது ஓர் அசுர ஸ்திரீ புணருகின்றாளோ அப்போது அங்கு கஜமுகனென்றவோர் கொடிய மகா சுரனுண்டாகி ஸ்ரீ சர்வேசுவரனிடமிருந்து வரப்பிரசாதம் பெற்று மகாபல பராக்கிரமசாலியாகிச் சத்துருக்களையெல்லாம் அதம் பண்ணித் தானே நிச்சயமாய் இராஜிய பாரம் நடத்தி வருவான்' என்றுரைத்துச் சுக்கிரன் அவ்வசுரேந்திரனை யனுப்பினான்.

பிறகு புத்திசாலியாகிய அவ்வசுரேந்திரன் துரிதமாய்த் தன்வீடு சேர்ந்து விபூதியென்ற ஓர் அசுரமங்கையரை நோக்கிச் சந்தோஷமாய் வசனமுரைத்ததாவது:—ஓ! மிகுந்த சுந்தரமேனியுடைய விபூதி! தவசிகளிற் சிறந்த மாகத முனிவர் மேருகிரியின் தென்பாரிசத்தில் கொடிய தவத்தைச் செய்து கொண்டிருக்கிறார். நீ சிரேஷ்டமான அத்தவசியிடம் சேர்ந்து ஓர் புத்திரனைப் பெற்றுக்கொள்வாயாகில் உந்தன் கர்ப்பமாகிய முத்துச்சிப்பியினின்று உண்டாகிய அப்புத்திர ரத்தினத்தால் எந்தன்குடி சத்துருக்களே யற்று வியாகுலமில்லாமல் விளங்கலாகும். அப்போது நாமெல்லோர்களும் எதிரி யற்றுச் சுகமாயிருக்கலாவோம்" என்று உரைத்து அவளை யனுப்பினான்.

பிறகு அவளும் அப்படியே நல்லதென்று புறப்பட்டு மாகத முனிவர் ஸ்ரீ பரமாத்துமாவினிடத்து ஏகாக்கிரசித்தராய் மிகுந்த தவம்செய்து கொண்டிருக்குமிடத்துக்குச்சென்று அவரது பரிசுத்தமாகிய தவநிஷ்டையைக்கண்டு மிக ஆச்சரியம்கொண்டவளாகி மனதினில் நினைத்துக்கொண்டதாவது:-ஓ! கோ! திடசித்தமுடைய மகாத்துமாவாகிய விம்மாகத முனிவர் மனத்தைக் கலைப்பதற்கு என்ன மிகுந்த முயற்சி செய்தபோதிலும் நம்மால்முடியாது. யாம் அசுரேந்திரனிடத்திற்குத் திரும்பிச் சென்றுவிட்டால் அவர் மிகவும் வியாகுலப்படுவார். ஆகையால் இங்கிருந்து தவம்செய்து கொண்டு அவரை வசப்படுத்தலாம்' என்றாலோசித்துக்கொண்டு அவருக்கு முன்னிலையிலே கொடியதவத்தைச் செய்யலானாள். பிறகு வெகுகாலம் சென்றதன்மேல் அம்முனிச்சிரேஷ்டர் ஓர் யானையும் யானைப்பேடும் சுகமனுபவித்துக்கொண்டிருந்ததைக் கண்டு எழுந்து மோகிக்கலாயினர். அப்போது அவ்வசுர ஸ்திரீயானவள் அம்முனிவரிடம் சென்று அவரை வந்தனித்து 'ஓ! முனிவரே உம்முடன் எந்தனுக்கு எப்போது புணர்ச்சிநேரிடப் போகின்றதென்று யான் வெகுகாலமாய் உம்மண்டையிலே தவம்செய்துகொண்டிருக்கிறேன். ஆகையால் ஸ்வாமி! மிகவும் ஆசைகொண்டவளான எந்தனை தேவரீர் அங்கீகரித்தல் வேண்டுமென இவ்வாறு அவளது வசனத்தை முனிவர் கேட்டு, மிகுந்த சந்தோஷம் கொண்டவராகி அப்படியே நல்லதென்று அவ்வசுரியையோர் பெண்யானை உருவம் கொள்ளச் செய்து

தாமும் ஓர் யானையாகி அவனுடன் புணர்ந்தனர். அப்போது அவளிடத்தில் மகாகோரமான கஜமுகாசுரன் உண்டாயினன். மேலும் அப்போது அவனுடைய மயிர்க்கால்களிலிருந்து அனேகம் அசுரர்களும் உண்டானார்கள். பிறகு வலிமை கொண்ட கோரமுடைய அக்கஜமுகன் அவ்வசுரர்களோடுகூடக் கத்திக் கேடயங்களை எடுத்துக்கொண்டு மிகுந்த கோலாகல சத்தம் செய்தவனாகி மலைகளைப்பிடுங்கி மலைகளின் பேரிலும், மரங்களைப் பிடுங்கி மரங்களின் பேரிலும் எறிந்துகொண்டு வனத்துக்கு வனம் திரிந்துகொண்டிருந்தான். அப்பெற்றோர் இருவரும் அப்பேர்க்கொத்த பிள்ளையைச் சகிக்கமுடியாமல் பயத்தினால் நடுக்க முற்றவர்களும், மிகவாச்சரியம் அடைந்தவர்களுமாகி அவ்வனத்தைவிட்டு வெகு தூரம்ஓடி ஓர் குகைதனில் இருந்துகொண்டு முனிவர் அவ்வசுரியைநோக்கிஇச் சங்கதியின் விவரமென்ன' என்றுவினவ அவ்வசுரியும் அச்சங்கதிகளை முனிவருக்கு விவரமாய் உரைத்தனள்.

அப்போது அவளது வசனத்தைக் கேட்டவுடன் மாகதமுனிவர் மிகுந்த துக்காவேசம் கொண்டவராகி ஓ! கோ! உம்மால் உலகங்களுக்கும் தேவர்களுக்கும் தீங்கு தேடப்பட்டதன்றோ? என்று சொல்லிக்கொண்டு அம்முனிவர் மறுபடியும் தவவனத்துக்குச் சென்றனர். அவளும் அம்முனிவரை வந்தனித்துவிட்டுப் பிடித்த காரியத்தைக் கைக்கொண்டவளாகிச் சந்தோஷத்துடன் துரிதமாய்ச் சென்று அச்சங்கதிகள் முழுமையும் அசுரேந்திரனுக்கு அறிவித்தனள். உடனே அவ்வசுரேந்திரனும் துரிதமாய்க் கஜமுகாசுரனோடு சேர்ந்துகொண்டு வெளிக்கிளம்பிச் சகலலோகங்களையும் தேவேந்திரன் முதலிய தேவர்களையும் மிகவும் துன்பப்படுத்தலானான். அப்போது அசுரகுருவாகிய சுக்கிரனும் சடிதியில் அங்குவந்து ஓ! கஜமுகாசுரனே! அஷ்டைசுவரிய சம்பன்னமூர்த்தியாகிய ஸ்ரீபரமேசுவரனை நீ தவத்தினால் ஆராதித்துத் தேவனிடமிருந்து வரனையடைந்து பிறகு பயமில்லாமல்இச்சையின்படி திரியலாம். இல்லையாகில் உந்தனுக்கு நிச்சயமாய் எங்காயினும் பயம் நேரிடலாகுமென்று அக்கஜமுகாசுரனுக்கு உரைத்துவிட்டுச் சுக்கிரன் செல்லலானான்.

பிறகு கஜமுகன் சுக்கிரன் வசனத்தைக் கேட்டவுடன் நேர்த்தியான மேருவின்பாரிசத்தின் மீது ஆயிரம் வருடமளவும் புற்களையும் அவ்வளவுகாலம் சருகுகளையும் புஜித்தும் அவ்வளவுகாலம் நீரைக்குடித்தும் அதே விதமாய்க் காற்றைப் புசித்துக்கொண்டும் சகிக்க முடியாத பஞ்சாக்கினி மத்தியிலிருந்து மூலாதாரத்தின் அக்கினியை ஸுஷும்னையென்னும் நாடிவழியாகப் பற்றவிட்டுச்சிரசின் மத்தியிலிருக்கும் அமுதத்தைப் பானம் பண்ணியும் ஒரே காலால் நின்றுகொண்டு மிகுந்த கொடிய தவத்தைச்செய்தான். அவன் இவ்விதமாகப் பதினாயிரம் வருடமளவும் சிரேஷ்டமான தவத்தைச் செய்து வருகையில் அவ்வசுரச் சிரேஷ்டனுடைய இவ்வாறு தவத்தைக் கண்டு இந்திரன் முதலிய தேவரெல்லோர்களும் தங்கள் தங்கள் மனதினில் மிகுந்த பீதியைக் கொண்டவர்களாகி ஓட்டம் பிடிக்கலானார்கள். அப்போது கருணாமூர்த்தியாகிய ஸ்ரீபரமசிவனுடைய திருவுளத்தில் தயவுண்டாகி அவரது திருவாக்கிணையின்படி அவனது தேகமானது வஜ்ஜிரம்போல கெட்டிப்படலாயிற்று. அப்போது அசுரர்கள் அவன்மீது மலர்மாறி சொரிந்தார்கள்

அதற்குள் ஸ்ரீமகேசுவரன் இடபத்தின் மீதேறிக்கொண்டு அவன் முன்னர் பிரத்தியக்ஷமாக அதுகண்டு அசுரன்மிகுந்த அன்போடுமகாதேவரை நமஸ்காரம் பண்ணிஅப்போது அவருக்குத் திருப்திகரமான வசனங்களால் அவரைத்துதி செய்தான். அப்போது ஸ்ரீபகவானும் அவனை நோக்கி ஓ! மங்களகரம் பொருந்திய அசுரச்சிரேஷ்டா! உந்தன் மனதிலுள்ள வரனைச் சீக்கிரமாய்க் கேட்டுக் கொள். பிரசன்னமாகி யாம் உனக்கிப்போதே யருளுகின்றோமென அத் தேவ காதகன் ஸ்ரீ தேவாதிதேவனுடைய இப்பேர்க்கொத்த திருவசனத்தைக்கேட்டவுடன் "ஓ! பகவானே! தேவரீர் எந்தனுக்குப்பிரசன்னராகி வரன் அளிப்பது உண்மையானால் இந்திரன் முதலிய தேவரெல்லாம் என் முன்னிலையில் யுத்தத்திலிருந்து சிங்கத்தின்முன் அகப்பட்ட நரிக்கூட்டங்கள்போல் தோல்வியடைய வேண்டும்.

ஓ! மகேசுவரா! அடியேனுக்குப் பற்பலவிதங்களான அனேகம் ஆயுதங்களை அருளவேண்டும் தவிரவும் எந்தனுக்குச் சத்துருக்களுடைய அடியாயுதங்கள் அறுப்பாயுதங்கள், மற்றுமுள்ள எறியாயுதங்கள் இப்பேர்க் கொத்த பற்பலவாயுதங்களாலும் மரணம் நேரிடாமலிருக்க வேண்டும் மேலும் தேவர்கள், மானிடர்கள், அசுரர்கள், அரக்கர்கள், இன்னும் மற்ற வலிமைகொண்ட மிருகங்கள், பக்ஷிகள், சர்ப்பங்கள் இவர்களுடைய ஜயிக்க முடியாத யுத்தத்தில் எல்லாம் அடியேனுக்குப் பயமுண்டாகாமல் இருக்க வேண்டும். ஓ! பரமேசுவரா! சகல ஜகங்களும் அடியேன் ஆக்கினைக்குள் ளடங்கியே யிருக்க வேண்டும். ஓ! தேவாதி தேவா! ஒருக்கால் தேவரீரது திருமாயையினால் அடியேனுக்கு எங்காகிலும் மரணம்நேரிட்ட போதிலும் ஓ! பிரபுவே! மறுபிறப்புண்டாகாமல் இருக்கவேண்டும்" என, இவை எல்லாவற்றையும்கேட்க ஸ்ரீபரமேசுவரன் அப்படியே நல்லதென்று திருவாக்கருளி விட்டு அவனது முன்னிலையிலே துரிதத்தில் அந்தர்த்தான மடைந்தனர்.

## 26. அத்தியாயம்.

மகா பாவியான அக்கஜமுகாசுரன் இவ்வெல்லாவற்றையும் ஸ்ரீ மகேசுவரனிடமிருந்து அடைந்தவுடன் கொடியர்களான பல அசுரர்களோடுகூட மிகுந்த களிப்போடு விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்களை யெல்லாம் ஜயித்து அவர் அவர்களுடைய பதவிகளை அசுரர்களுக்குக் கொடுத்துவிட்டுத் துரிதமாய்ப் பூலோகம் சென்று அங்கு வெகு சந்தோஷமாய் இருந்துகொண்டு மிக நேர்த்தியானதும், பத்து யோசனை விஸ்தீரணமுடைய விசாலமான பல வீதிகளைக் கொண்டதுமாகிய மதங்கபுரமென்ற நகரத்தில் அசுரர்கள், அரக்கர்கள், சகோதரர்கள், இவர்களுக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் பல பல மாளிகைகளைக் கொடுத்துத் தானும் வெகு குதூஹலத்தோடு அந்நகரின் மத்தியிலுள்ள நேர்த்தியான அரண்மனைக்குச் சென்றான். பிறகு சிலகாலம் சென்றதன்மேல் அம்மகா அசுரன் சுரேந்திரன் பெண்ணாகிய விசித்திரகாமிகை யென்ற மிகுந்த சௌந்தரியம்பொருந்திய நேர்த்தியான மங்கையை மணம் புரிந்து கொண்டதோடு தேவர்கள், அசுரர்கள், அரக்கர்கள், வித்தியாதரர்கள், இவர்களுடைய சிறந்தவர்களான அனேகம் பெண்களையும் கலியாணஞ்

செய்து கொண்டும், இந்திரன் முதலிய தேவர்களையும், கல்பகவிருக்ஷம், காம தேனு, நிதிகள், சிந்தாமணி, இவைகளையும் தனது ஊழியத்திற்கு ஏற்படுத்திக் கொண்டும், சுக்கிரனுடனும் மற்றுமுள்ள அனேக அசுரர்கள் மந்திரிகளுடனும்கூட மிகுந்த பரிவாரத்தோடு சகல ஜகங்களையும் அரசாண்டு வந்தான். இப்படி யிருக்கையில் ஒருநாள் இந்திராதி தேவர்கள் வந்து தண்டம்போல்வந்தனம் பண்ணிவிட்டு அவன்முன்னர் கைகட்டிநின்றார்கள். அப்போது அத்தேவர்களை நோக்கி அசுரன் வசனமுரைத்ததாவது:—ஓ! தேவர்களே! இன்றை முதல் நீங்கள் எல்லோர்களும் கொஞ்சமேனும் சோம்பலின்றி (அஷ்டாங்கம், பஞ்சாங்கம், திரயாங்கம்) ஆகிய மூன்று விதங்களாலும் நமஸ்காரம் பண்ணிக் கைகளால் நெற்றிதனில் குட்டிக்கொண்டு இருகைகளாலும் மாறுதலாய்க் காதுகளைப் பிடித்துக்கொண்டு தோப்புக் கரணம் போட்டுவிட்டு பிறகு நமது உத்தரவின்பேரில் போக வேண்டுமென்று உரைத்துக் கஜமுகாசுரன் அத்தேவர்களை அனுப்பினன்.

பிறகு அப்படியே அவன் ஆக்கினையின்படி எல்லாத் தேவர்களும் மிகுந்த துக்கத்தோடு வெகு காலம் வரையில் சோம்பலேயின்றி அவனைச் சேவித்து வந்தார்கள். பிறகு ஒருநாள் தேவர்களெல்லாம் விஷ்ணு பிரம்மர்களோடுகூடப் பருவதசிரேஷ்டமாகிய கைலைகிரிக்குச்சென்று ஸ்ரீ நந்திகேசுவரனது திருவாக்கினையின்பேரில் அங்கு சமுசாரமாகிய வியாதிக்கு மருந்தை யொத்தவரான ஸ்ரீ மகாதேவனைத் தரிசித்து மிகுந்த பக்தியோடு தண்டம்போல் நமஸ்காரம்பண்ணிப் பற்பல துதிகளால் தோத்திரம்பண்ணினார்கள். அதன்மேல் ஸ்ரீபரமேசுவரன், பிரஸன்னராகி விஷ்ணுவை நோக்கி வந்த வரலாற்றை வினவுகையில் விஷ்ணுவும் சகல சங்கதிகளையும் விண்ணப்பம் செய்து விட்டு ஸ்ரீஜகதீசனைப் பிரார்த்தித்துக் கொண்டதாவது:—ஓ! சம்போ! சருவஞ்சா! அடியார்களின் பயத்தைத் தொலைப்பவரே! மகாதேவா! சர்வதேவேசுவரா! சரணமடைந்தோரிடத்து நேசமுடையோரே! கஜமுகாசுரனால் இராப்பகலாய் வாதிக்கப்படலுற்ற இத்தேவர்களை, ஓர் சிரேஷ்டரான புத்திரரை யுண்டுபண்ணிக் காப்பாற்றிடல் வேண்டும்'' என, இவ்வாறு அவனது வசனத்தைக்கேட்டு அப்படியே நல்லதென்று வந்தனிப்போர்களின் துக்கத்தை தீர்த்தருளலுற்ற ஸ்ரீபரமேசுவரன் அத்தேவர்களை யனுப்பலானார்.

பிற்பாடு அத்தேவர்கள் அவரை நமஸ்காரம்பண்ணிவிட்டு வெகு சந்தோஷமாய்த் தங்கள் ஸ்தானம்சென்றார்கள். இவ்வாறாகத் தேவர்கள் எல்லாம் தங்கள் தங்கள் ஸ்தானமடைந்தவுடன் ஸ்ரீபரமேசுவரன் பார்வதியோடு கூடச் செஞ்சந்தனம், பாரிஜாதை முதலிய விருக்ஷங்களால் அடராலுற்ற விசித்திரமான கேளி விலாஸத்தோட்டத்திற்கு எழுந்தருளினர்.

## 27. அத்தியாயம்.

பிற்பாடு அக்கேளி விலாஸ வனத்தில் ஸ்ரீ மகா தேவர் அங்குள்ள விநோதங்களைப் பார்த்துக்கொண்டே சித்திர மண்டபத்துக்கருளினர். பின்பு பார்

வதீ நேசரான ஸ்ரீ பரமேசுவரன் தேவியோடுகூட இரத்தின சிங்காதனத்தில் வீற்றிருந்து சித்திரச் சுவர் மீதுள்ள சித்திரங்களை மிகுந்த சந்தோஷத்தோடு பார்த்து வருகையில் அங்குள்ள ஓர் பிரணவத்தைத் திருக்கண்ணுற்றபோது அப்பிரணவத்தினின்று ஓர் ஆண்யானையும் பெண் யானையும் உண்டாகி வெகு சந்தோஷத்தோடு ஒன்றோடொன்று கிரீடித்தன. அதனை அவர்கள் கண்டதில் கௌரியம்மை மிக ஆச்சரியம் கொண்டவளாகி, ஸ்ரீ மகாதேவரை இதென்ன வென்று வினவ, ஓ! கலியாணி! இது லோக உபகாரார்த்தமான உந்தனது கிருபையென்றே அறி'' யென்று ஸ்ரீ மகேசுவரன் திருவாக்கருளியதன்மேல் அவ்விருவர்களும் அவ்வியானைகளை நேசத்தோடு கண்ணுற்றார்கள். அப்போது அவ்விரு யானைகளும் புணரலாகையில் அங்கு கோடி சூரியப் பிரகாசம் பொருந்திய யானை முகத்தோரான ஸ்ரீ விநாயகமூர்த்தி ஆவிர்ப்பவித்தனர். அப்போது மகாபல பராக்கிரமசாலியான விநாயகர் உடனே ஸ்ரீ பார்வதீ, பரமேசுவரர்களை மகாவிநயத்துடன் தண்டம்போல் நமஸ்கரிக்க, அவ்விருவர்களும் அவரை அணைந்துகொண்டு உச்சிமுகர்ந்து அக்கணராஜனை மடிதனில் வைத்துக்கொண்டார்கள்.

பிற்பாடு ஸ்ரீ மகேசுவரன் கிருபையுடன் புத்திரனான கணேசரை நோக்கித் திருவசனமளித்ததாவது.—ஓ! குழந்தாய்! எம்மைக் காட்டிலும் வேறில்லாத நமதுபுத்திரனான உந்தனை வந்தனிக்கலுற்ற புருடர்களுக்கு யாதோர் இடையூறுமின்றி அவர்களது கோரிக்கை சீக்கிரம் பயனடையக் கடவது. நமதாக்கினையின்படி நீயே நமது கணங்களுக்கெல்லாம் முதன்மையான தலைவன். அவரவரெத்தனிக்கும் காரியத்தின் தொடக்கத்தில் உந்தனைப் பூஜிப்பவர்கள் அக்காரியங்களை நிறைவேறப் பெறுவார்கள். ஓ! புத்திரா! நீ அசுரர்களில் சிரேஷ்டனும், தேவர்களுக்குத் தீங்களிப்போனுமான கொடியனாகிய கஜமுகாசுரனை யதம்பண்ணி விஷ்ணு முதலிய தேவர்களைச் சோம்பலின்றி இரக்ஷிக்கலாவாய்' என்று திருவாக்கருளி ஸ்ரீபரமேசுவரன் அக்கணேசுவரனைக் கைலையின் கோபுரவாசலில் ஸ்தாபித்துவிட்டுத் தாம் மனமகிழ்ச்சிகொண்டவராகி கௌரியம்மையோடு துரிதமாய் அந்தப்புரம் சென்றனர். பிற்பாடு நந்திகேசுவரன் முதலிய கணங்களும் விஷ்ணு முதலிய தேவர்களும் அக்கணேசரை வந்தனித்துப் பற்பல துதிகளால் துதித்துவிட்டுப் பிறகு அவர் ஆக்கினையின்படி தங்கள் தங்கள் தொழில்களை முன்போல் நடத்திவந்தார்கள்.

அப்போது ஸ்ரீ சிவபிரான் சிவாதேவியை நோக்கிக் குதூகலத்தினால் வசனமுரைத்ததாவது:—ஓ! கலியாணீ! நீ நம்மோடு கூடச் சொக்கட்டான் விளையாடவருவாய்; அதனில் நீ தோல்வியடைந்தால் உந்தன் ஆபரணங்களை நமக்குத் தந்துவிடல்வேண்டும். நாம் தோல்வி யடைந்தால் நம்முடைய ஆபரணங்களை உந்தனுக்குத் தந்துவிடுகிறோமென்று பந்தயம் பேசிக்கொள்ளும் சமயத்தில் அங்கு விஷ்ணுவரலானார். அவர் அங்குவந்து பார்வதீபரமேசுவரர்களை வந்தனித்துவிட்டுப் பயபக்தியோடு அங்கு நிற்குமளவில் அப்போது பரமேசுவரியானவள் அவரைப் பொதுசாக்ஷியாக ஏற்படுத்திக்கொண்டனள். அப்போது சுந்தரன் முதலிய பரிவார ஜனங்கள் சொக்கட்டானாடுவதற்கு வேண்

டிய சாமான்கள் கொண்டுவந்தார்கள். விஷ்ணுவும் ஸ்ரீ சிவாக்கினையின்பேரில் அந்தந்த விடத்தில் காய்களை வைத்துக்கொண்டு அவர்கள் பாய்ச்சல்காய் ஆடுவதைப் பார்த்துவந்தார். அப்போது நிகரற்ற செய்கையுடைய அவ்வம்மையால் ஸ்வாமி தோல்வி யடைவிக்கப்பட்டார். அப்படி இருந்தும் ஸ்ரீ பகவான் ஓ! மாதரசே! யாமுந்தனை ஜயித்துவிட்டோம்; ஆகையால் ஓ! கலியாணி! நீ சீக்கிரமாய் உந்தன் பூஷணங்களை நமக்குத் தரலாவாய்' என்று ஸ்ரீ பரமேசுவரன் அப்பரதேவதையைப் பார்த்துச் சாதுரியமாய் உரைத்தனர். அதற்கம்மை நகைத்துக்கொண்டு "ஓ! தேவேசா! தோல்வி பெறலான நீர் இலச்சையற்று யாதுரைத்திட்டீர்? நல்லதிருக்கட்டும்; ஓ! பரமசிவா! பொய் வார்த்தையை விட்டுவிட்டுச் சாக்ஷிக்காரரான இவ்விஷ்ணுவைக் கேட்டுக்கொண்டு இப்போது உம்முடைய பூஷணங்களை எந்தனுக்குத் தாருமென அப்போது விஷ்ணுவானவர் ஸ்ரீ மகேசுவரனால் கண் ஜாடை மூலமாய் ஏவப்பட்டவராகித் தலையைக் குனிந்துகொண்டு பொய்ச் சாக்ஷி சொன்னதாவது:—ஓ! மகாதேவி! சருவஞ்ஞரான ஸ்ரீ பரமேசுவரராலல்லவோ இப்போது ஜயிக்கப்பட்டது என, இவ்வாறு விஷ்ணு வசனத்தைக் கேட்டவுடன் கௌரியம்மன் கோபாவேசம் கொண்டவளாகி "ஓ! விஷ்ணுவே! நீர் மத்தியஸ்தராய்ப் பார்த்துக்கொண்டிருந்தும் பொய்யுரைத்தபடியால் நீர் சீக்கிரமாய் ஓர் குருட்டு மலைப்பாம்பின் உருவத்தைக் கொள்ளக் கடவீர்'' என்று இவ்விதமாய்ச் சிவதேவியானவள் தலை குனிந்து பொய்ச் சாக்ஷி சொல்லலான அவ்விஷ்ணுவைச் சபித்தனள்.

கேளாய்! தக்ஷப் பிரஜாபதியே! பிற்பாடு விஷ்ணுவானவர் ஸ்ரீ பார்வதீதேவி சாபத்தினால் மிகப் பயந்தவராகி ஸ்ரீ மகேசுவரனை வந்தனித்துச் சாப விமோசனத்தைப் பிரார்த்திக்க அப்போது பகவான் ''ஓ! மாதவா! நீர் வடதீவிற்குப் போய்க் கொடிய தவத்தைச் செய்துகொண்டிரும். சில நாளளவில் விநாயகன் கஜமுகாசுரனை அதம் பண்ணிவிட்டு அங்கு வரலாவான். அப்போது அவனைக் கண்டவுடன் சாபத்தினின்று விடுபடலாவீர்'' என்று திருவாக்கருளி விஷ்ணுவை அனுப்பினர். பிற்பாடு பொட்டை மலைப்பாம்பாகிய விஷ்ணுவும் சிவாக்கினையைக் கைக்கொண்டு வடத்தீவம் சென்று அங்குள்ள ஏழு யோசனை விஸ்தீரணமுள்ள மகா பயங்கரமான ஓர் ஆலமரப் பொந்துக்குள் நுழைந்துகொண்டு பார்வதீ தேவியின் சாபமகிமையால் மிகவும் இகழ்ச்சியுள்ள தேகத்தையடைந்தவரான விஷ்ணுவானவர் அப்போது நிகரற்றவரான ஸ்ரீ சிவபிரானையும் விநாயகமூர்த்தியையும் ஏகாக்கிரசித்தமுடையவராகி ஹிருதய கமலத்தில் தியானம் பண்ணிக்கொண்டிருந்தனர்.

## 28. அத்தியாயம்.

பிற்பாடு இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் கஜமுகன் கொடுமையினால் மலைகளிற் சிறந்த கைலைகிரியடைந்து அங்கு விளங்கிய பராபரக் கடவுளான ஸ்ரீ மகா கணபதியைப் பற்பல விதங்களான நைவேத்தியங்களாலும், புஷ்பங்களாலும் பூஜைசெய்து உபநிஷத்துக்களால் இசைக்கப்பட்ட சிறந்த துதிகளால் மிகுதியாய்த் தோத்திரம் செய்தார்கள். பிறகு ஸ்ரீ பரமேசுவர புத்திரரான

ஸ்ரீ விக்கினேசுவர பகவான் "ஓ! மகா பராக்கிரமசாலிகளான தேவர்களே! உங்களுக்கு வேண்டியதைச் செய்கின்றோம்" என அதன்மேல் தேவர்கள் நிர்ப்பயர்களாகி வசனமுரைத்ததாவது:—

"ஓ! அடியார்களது வேண்டுதலை யருளலுற்ற மகா வலிமைகொண்ட கணநாதா! கணங்களுக்கெல்லாம் பதியும், சகலர்களாலும் சரணம் பெறத்தக்கவருமான தேவரீரைச் சரணமடைந்தோம். ஓ! கணேசா! கஜமுகாசுரனை அதம்பண்ணி அத்துராத்துமனால் இராப்பகலாய் வாதிக் கப்படுகின்ற இத்தேவர்களை யெல்லாம் இரக்ஷித்தருள வேண்டும்" என, இவ்வாறு அவர்களது வசனத்தைக் கேட்டு அப்படியே நல்லது' என்று ஸ்ரீ மகா கணபதியானவர் சிங்காதனத்தை விட்டு இறங்கித் துரிதமாய் அசலன் என்ற ஓர் மகா பூதத்தின் மிக உன்னதமும் ஒப்பற்றதுமான கழுத்தினில் ஏறிக்கொண்டு மிகுந்த கோலாகல சத்தத்தோடுகூடிய பூதசேனை களாற் சூழப்பெற்றவரும், குடைகள், சாமரங்கள் துவஜங்கள், விசிரிகள், கட லோசையை அதிகரித்த வாத்திய கோஷங்கள் இவைகளாலும், மலர் மாரிக ளைச்சொரியலுற்ற தேவர்களாலும் சூழப்பெற்றவருமாகி ஸ்ரீ விக்கினேசுவரர் மகா வேகத்தோடு மதங்க நகருக்கருகினில் வந்தனர். உடனே கஜமுகாசுரன் அவரது வரவைக்கேட்டு இரதத்திலேறிக்கொண்டு சதுரங்க சைனியங்கள் சாமரங்கள், விசிறிகள், குடைகள், துவஜங்கள், அநேக வாத்தியங்கள் இவை களோடும் ஆயிரம் வாகினி சங்கியைகொண்ட சேனைகளோடும் கூடியவனாகித் துரிதமாய் மிகுந்த ஆடம்பரத்துடன் பட்டணத்தைவிட்டு வெளிப்பட்டு வந் தான்.

அப்போது அவ்விரு திறத்தார்களின் சேனைகளுக்கும் கோரமான யுத் தமுண்டாயிற்று. அப்போது அதேக்ஷணத்தில் அசுரன்சேனை தோல்வியடைந் தது- அதுகண்டு கஜமுகன் மிகுந்த கோபாவேசமுற்ற முகத்தைக் கொண்ட வனாகி வில்லை வளைத்து ஆயிரம் சஸ்திரங்களை வருஷித்தான். மேலும் ஆயிரம் கூரம்புகளால் பூதர்களைத் துறத்தி விட்டுப் பின்னும் வெகு கோபத்தோடு ஸ்ரீவிநாயகரிடமாக இரதத்தை விரைவாய்விறட்டிக்கொண்டு அவ்வசுரக்கேடன் அவரை நோக்கி வசனமுரைத்ததாவது:—"அடா! நீ நமது சௌரியத்தையும், ஸ்ரீ பரமேசுவரனிடமிருந்து நாம் அடைந்திருக்கின்ற வரனையும் அறியவில்லை. நீ பிழைத்திருக்க விருப்பம் கொண்டால் வந்தவழியோடு சும்மா போய்விடு. நீ கேவலம் சிறியோனாகையால் நம்மோடு இங்கு யுத்தம் செய்யத் திறமையுள் ளவன் அல்லன். முந்தி பலசத்துருக்கள் நம்மோடு யுத்தத்திற்கு வந்துதோல்வி யடைந்து விட்டார்கள். நமக்கு ஸ்ரீ சம்புவின் வரத்தினால் சகல ஆயுதங்க ளாலும் இங்கு நாசமுண்டாகமாட்டாது. நீ தேவர்களுக்கு உதவிசெய்வதற் காக வீணாக்கிரகத்தோடு இங்கு வந்திருக்கின்றாய். உனக்கு யுத்தம் செய்ய மனதிருந்தால் இப்போது நம்முடன்கூடச் சண்டைக்கு வா. முந்தி உந்தனைச் சயித்துவிட்டுப் பிறகு அத்தேவர்களையும் சமுகரித்து விடுகின் றோம்" என்றான்.

இவ்வாறு அவனது வசனத்தைக்கேட்டு ஸ்ரீ கணேசுவரன் "அடா! அசுரா! யாம் ஸ்ரீ சிவாக்கினேயின்பேரில் உந்தனை அதம்பண்ணித் தேவர்களைக் காப்பாற்றுவதற்காக இங்கு வந்திருக்கின்றோம். நீ இந்திராதிகளுக்கு முன் போல் அவரவர் பதவிகளை விட்டுவிடு. இல்லாவிடில் உந்தனைச் சந்தேகமின்றி வதம்செய்து விடுவோம். ஆகையால் நீ தவறுதலையொழித்து இப்போது பூமியை ஆண்டிருக்கலாவாய்" என இவ்வாறு ஸ்ரீவிக்கினேசுவரனது திருவசனத்தைக்கேட்டவுடன் அவ்வசுர மன்னன் அவர்மீது மிகுந்த சத்தத்தோடுகூடிய பல சரங்களைச் சொரிந்தான். அப்போது ஸ்ரீ கணநாதர் அதேக்ஷணத்தில் ஓர் இரும்புலக்கையால் அவைகளைத் தூள்தூளாக்கி விட்டுத் துராத்துமனுடைய மகாகோரமாகிய தனுசையும் செதல்செதலாக்கி விட்டனர். அப்போது அவன் மற்றோர் தனுசை எடுத்துக்கொண்டு அவர் அருகினில் வர, மகா பலவானாகிய ஸ்ரீ விக்கினேசுவர் அதனையும் அதே யுலக்கையால் முறித்துவிட்டார். பிற்பாடு அவ்வசுரன் ஓர் தண்டத்தை எடுத்துக்கொண்டு அட்டகாசம் பண்ணிக்கொண்டு வெகுவேகத்தோடு மகாபயங்கரமாய் அவர் அருகினில் வருகையில் அப்போது அவர், அத்தண்டத்தையும் பொடிப்பொடியாக்கிவிட்டுத் துராத்துமனுடைய நடு மார்பினில் உலக்கையால் ஓரடி அடிக்க, அப்போது அசுரன் அடிபட்டு மிகவும் கிலேசமடைந்தான். தவிரவும் இதற்கிடையில் ஸ்ரீகணநாதர் கண்டன கோடாலியால் ஓர் நொடி நேரத்திற்குள் அவனது சைனியங்களையெல்லாம் ஒரே காலத்தில் மடித்து விட்டனர். ஓ! இது கஷ்டம், பிறகு கஜமுகாசுரன் கோபாக்கினியால் ஜுவலிக்கப்பெற்றவனாகி மகாத்துமாவாகிய அப்பிரபுவின் மேல் மிகுதியான தேவாத்திரங்களை வருஷிக்க, ஓ! தக்ஷப் பிரஜாபதியே! அவ்வத்திரங்களெல்லாம் அவரை மிகுந்த பயபக்தியோடு வணங்கி நின்றன. அப்போது அசுரன், மேகங்கள் மகா கர்வத்தோடு பெருமாரி சொரிவதுபோல அவர்மீது அனேக பாணங்களை வருஷித்தான். பிறகு பலவானாகிய ஸ்ரீ கணேசரானவர் அத்திரசத்திரங்களால் கொல்லப்படத்தகாதவன் என்பதை யறிந்து தமது ஓர் கொம்பின் நுனியைமுறித்து அவன்மீது எறிய, அதுமகா வேகத்தோடு வந்து அவனது கடினமாகிய மார்பைப் பிளந்துவிட்டு ஓர்நொடிநேரத்திற்குள் தண்ணீர்க்கடலுக்குச் சென்று ஸ்நாநம்பண்ணி அவரது திருக்கையை யடைந்தது.

அப்போது அவ்வசுரன் தன் உண்மையான தேகத்தை விட்டு விட்டு நிகரற்றதும், மகாவுன்னதமுமான ஓர் மூஞ்சூரின் தேகத்தை யெடுத்துக்கொண்டான். அதோ வென்றால்:—வட்டமுள்ள சிவந்த பெரிய பயங்கரமாகிய இருகண்களைக் கொண்டதும் பருத்து நீண்ட மிககெட்டியான முகத்தோடும் வாலோடும் கூடியதும், சுற்றிலும் பறபறவென்று சலிக்கலுற்ற நான்கு கால்களால் மலைகளையும், மரங்களையும் தூள்தூளாக்கலுற்றதும், அதிகோரமுள்ளதும், சகல அண்டங்களையும் விழுங்கிவிடத் திறமை கொண்டதும், மிகுந்த சத்தமுடையதும், மகா கோரமுள்ளதும் மூவுலகுகளையும் நடுங்கச் செய்பவுற்றதுமான இப்பேர்க்கொத்த மூஞ்சூரானது மகா வேகத்தோடு ஸ்ரீ விநாயகர் அருகினிற் செல்லலானவுடன் அவர் அதன்பேரில் ஏறிக்கொண்டு அதனைத் தமது வாகனமாக்கிக் கொண்டனர். ஓ! கோ! அம்

மூஞ்சூரும் திவ்ய ஞானத்தைக் கொண்டதாகி ஸ்ரீ விக்கினேசுவரனைச் சுமந்தது. பிற்பாடு பிரமன் முதலிய தேவர்கள் மிகுந்த சந்தோஷம் கொண்டவர்களாகி அப்போது மலர்மாரிசொரிந்து சுற்றிலும் நர்த்தனம்செய்து கொண்டு கட்டியக்காரர்கள்போல் அவரது குணநிசயங்களை எடுத்துப் பாடினார்கள். பின்பு தயாநிதியாகிய ஸ்ரீ விக்கினேசுவரர் அவர்கள் மீது கிருபை செய்தனர். துராத்துமனாகிய கஜமுகனால் கொல்லப்படலான பூதர்களெல்லாம் ஸ்ரீ விக்கினேசுவரர் கிருபாவசத்தினால் எழுந்து விட்டார்கள். எப்போதும் நல்லோர்களின் இரக்ஷகரான அக்கண ராஜனுக்கு எதுதான் அசாத்தியம்? அதன்மேல் பூதர்களெல்லாம் மிகுந்த கோலாகலம் செய்தார்கள். அப்போது அசுரேந்திரனென்பவன் பூதர்களிடத்தும் இந்திரனிடத்தும் மிகவும் பயந்தவனாகி ஓர் பறவை உருவமெடுத்துக்கொண்டு மேருகிரியின் குகைக்கு ஓடிவிட்டான். அப்போது சுக்கிரனும் பயத்தினால் பக்ஷி யுருவம்கொண்டு தன்னிருப்பிடத்திற்கு ஓடிவிட்டான்.

துராத்துமனான கொடிய அசுரன் மிகுந்த இரத்தங்களைப் பெருகவிட்டுக்கொண்டு இறந்துவிட அதில் மகாரத்தவனம் என்ற பட்டணமுண்டாக்கி அங்கு விக்கினேசுவரன் விதிப்படி ஓர் சிவப்பிரதிஷ்டை பண்ணி அச்சிவலிங்கத்திற்குத் தமது திருநாமத்தால் விளங்கலுற்ற ஸ்ரீ கணபதீசுவரரென்று பெயரிட்டுப் பூசை செய்தார். அதன்பேரில் ஸ்ரீ விநாயகர் மூஞ்சூருமீதேறிக்கொண்டு பூதர்களும், தேவர்களும் குடைகளையும், சாமரங்களையும் பிடித்துச் சேவிக்கப்பெற்றவராகி வெகு சந்தோஷத்தோடு புறப்பட்டு எழுந்தருளுகையில் அங்கு நடுவழியில் நேரலான நேர்த்தியாகிய வடதீவத்திற்கருளியவுடன் அங்கு குருட்டு மலைப்பாம்பின் உருவத்தோடு கிடக்கலான விஷ்ணுவானவர் மகாத்துமாவாகிய ஸ்ரீ விக்கினேசுவரன் எழுந்தருளியதை யறிந்து வெளிக்கிளம்பி அங்கு அவரை தரிசித்து வந்தனம்பண்ணி தமது விகார உருவம் நீங்கப்பெற்று திவ்ய முன் உருவத்தைப் பெற்றவராகி மிகுந்த சந்தோஷத்தோடு அவரைத் துதி செய்தார்:—ஓ! அடியார்களுக்கு அபயமளிக்கலுற்ற கணேசா போற்றி போற்றி! தேவரீருக்கு மேலான விஜயமான் இல்லாமையைப் பெற்றவரே போற்றி! மகா மகிமை பொருந்தியவரே போற்றி! சகல லோகங்களுக்கும் முக்கியமான நாதரே போற்றி! ஓ! தேவர்களைக் காக்கின்ற கணேசா! தேவரீரைத் தரிசித்த மாத்திரத்தினால் ஸ்ரீகௌரி யம்மையின் சாபத்தால் அடையப்பட்ட எந்தன் அதிகோரமான இத்தேகத்தைத் தொலைக்கப்பெற்றேனல்லவா! என்றுரைத்து ஸ்ரீ விஷ்ணுவானவர் மிகுந்த பக்ஷிய போஜ்யங்கள் முதலிய பூஜாத்திரவியங்களைச் சேகரித்துக்கொண்டு மகா பக்தியோடு அவரைப் பூஜைசெய்தார்.

அதன் மேல் ஸ்ரீவிக்கினேசுவரன் பிரசன்னரானவுடன் விஷ்ணு வசனமுரைத்ததாவது:—ஓ! ஸர்வேசுவரா! ஸகல அபீஷ்டங்களையும் அருளலுற்ற தேவரீரை எந்த மானிடச் சிரேஷ்டர்கள் இத்தனூர் மாதத்தின் ஷஷ்டி திதியில் பூஜிக்கின்றார்களோ ஓ! விசுவேசா! தேவரீர் அடியேனை இரக்ஷித்தது ஞாபகத்திலிருப்பதற்காக அவர்களுடைய வேண்டுதலைக் கொடுத்தருள வேண்டும்'' என, இவ்வாறு அவரது வசனத்தைக் கேட்டு

அப்படியே நல்லதென்று ஸ்ரீ கணநாதன் தமது கணங்களோடு கூட மலைகளிற் சிறந்த கைலைகிரிக்குத் துரிதமாய்ச் சென்று அங்கு தம் பெற்றோர்களாகிய பார்வதி பரமேசுவரர்களை வந்தனம் பண்ணி அவர்கள் ஆக்கினையின் பேரில் தமது வாசற்படி மேடையில் இருந்தருளினர். பிற்பாடு விஷ்ணு முதலிய தேவர்கள் இங்கு ஸ்ரீ விநாயகரைத் தண்டம்பண்ணித் துதித்து அஞ்சலி செய்து கொண்டு வேறு வரன் கேட்டுக்கொண்டதாவது:— ஓ! விக்கினேசுவரா! துராத்துமாவாகிய கஜமுகாசுரனுக்கு முன்னிலையில் தேவர்களான எங்களாற் செய்யப்பட்டு வந்த குட்டிக்கொள்ளுதல், தோப்புக்கரணம் முதலியவைகளை இன்று முதல் மகாத்துமாவான தேவரீர் முன்னிலையில் யாங்கள் செய்துவரும்படி அருள்செய்ய வேண்டும். ஏனென்றால் அதனால் நாங்கள் இரக்ஷிக்கப்பட்டது மறக்காமலிருக்க வேண்டும். மேலும் எந்த மானிடர்கள் தேவரீர் முன்னிலையில் இதே மாதிரியான செய்கைகளைச் செய்து வருகின்றார்களோ ஓ! பரமேசுவரர் புத்திரரான தேவாதி தேவா! அவர்களுக்கு என்றும் சகல அபீஷ்டங்களையும் கொடுத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டு அவ்வரனைக் கைக்கொண்டதின் பேரில் அவ்வெல்லோர்களும் அவரைக் குட்டிக்கொள்ளுதல் முதலியவைகளுடன் நமஸ்கரித்துவிட்டு அவரது ஆக்கினையின்பேரில் வெகு சந்தோஷத்தோடு தங்கள் தங்கள் ஸ்தானங்களுக்குச் சென்றார்கள். ஓ! தக்ஷப்பிரஜாபதியே! அளவற்ற மகிமைகொண்ட ஸ்ரீவிக்கினேசுவரருடைய இச்சரித்திரத்தை ஆதியோடந்தமாய் உந்தனுக்கு யாம் இங்கு வர்ணித்துரைத்தனம். இதனால் ஸ்ரீ ஜெகதீசனுக்கென்ன இகழ்ச்சி யிருக்கின்றது?

## 29.வது அத்தியாயம்.

அடா! தக்ஷா! ஸ்ரீ பரமேசுவரன் தாமசகுணமுடையவரென்று நீ உரைத்திட்டாயல்லவா! யாம் இப்போது அந்தச் சரித்திரத்தையும் உந்தனுக்கு உரைக்கின்றோம். அதனைக் கவனமாய்க் கேட்பாயாக. அடா! ஸ்ரீமகாதேவன் முக்குணங்களுக்கும் அதிகரித்தவரும், கலியாண குணங்களால் அலங்கரிக்கப்பெற்றவரும், அளவற்ற மகிமைகளுக்கும் ஆதாரரும், பரஞ்சோதியுமான பராபரக்கடவுள். முந்தி, ஸத்துவம், இராஜசம், தாமசம், ஆகிய முக்குணங்களையும், சிருஷ்டித்துப் பிரமனை இரஜோ குணத்தோடு சேர்த்து அவர்க்கு உலகங்களைச் சிருஷ்டிக்கலுற்ற புத்தியையும் கொடுத்தருளி இருக்கின்றனர். ஆனால் மற்றெந்தத் தேவச்சிரேஷ்டர்களாலும் சமுகாரத்தொழிலை நடத்த முடியாதாகையால் இப்போது பிரபுவாகிய ஸ்ரீ சம்புவானவர் உள்ளத்தில் கேவலம் சத்துவகுண மூர்த்தியாயினும் அவரே தமோகுணத்தோடு கூடிய உருத்திரமூர்த்தியாய் இருந்துகொண்டு ஒவ்வொரு கல்பத்திலும் சகலங்களையும் சமுகரித்து வருகின்றார். இங்ஙனமின்றி அவர் தாமசகுணமுள்ளவராகவே யிருந்தால் ஸனகர் முதலிய இருடிகளுக்கும் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களுக்கும் அச்சிவபிரான் எவ்வாறு சுத்த நிர்மலமாகிய திருமேனியைக் கொண்டவராவார்? தவிரவும் வேதமானது அப்பரமேசுவரனைச்

சத்திய ஞானனந்த பரப்பிரம்மமென்று முறையிடுகின்றதே. இது முதலிய வையெல்லாம் அவர் தாமசகுணமுள்ளவராயின் அவருக்கு உண்டாகமாட்டா.

அன்றியும் நிர்க்குணரும், நிர்விகாரரும், அளவற்ற மகிமைகளுக்காதாரரும், கொஞ்சமேனும் குறைவில்லா விபவங்களைக் கொண்டவரும், மாயையால் அணுகப்படாத திருமேனியைக் கொண்டவரும், இலக்ஷிய யிலக்ஷண மற்றவருமான மகா தேவரை அவர் மிகவும் பரிசுத்தமுள்ளவர்பற்றியே வேதமானது 'சிவன்' என்று கூறுகின்றது. பிரம்மா விஷ்ணு முதலிய தேவரெல்லாம் முக்குணங்களோடும் கூடியவராவார்கள். விஷ்ணு நித்திரையும், சோம்பலுமுடையவரும், கறுத்த நிறமுள்ளவருமாய் இருப்பதால் தமோ குணமுடையவர். அவருக்கு ஆங்காரம் முதலிய குணங்களிருக்கின்றபடியால் இரஜோகுணமுள்ளவரென்றும் சொல்லப்படுகின்றார். மேலும் அவர், சிவஞானமுள்ளவரும், சிவார்ச்சனம், சிவத்தியானங்களைச் செய்பவருமாயிருப்பதால் சத்துவகுணமுமுடையவராவார். நான்முகனைப் பிரம்மனும் இவ்வாறே முக்குணங்களையுமுடையவர். அவர் தூக்கம், அக்கியானம் முதலியவைகளைக் கொண்டவராகையால் தமோகுணமுடையவரென்றும், தங்கநிறமுள்ள மேனியையும் ஆங்காரத்தையும் கொண்டவராகையால் இரஜோகுணமுடையவரென்றும், சிவஞானம் முதலியவை கொண்டவராகையால் சத்துவ குணமுடையவரென்றும் சொல்லப்படுகின்றார்.

கேளாய்! பிரஜாபதியே! இவ்வாறாகவே சகல உலகங்களும் முக்குணங்களாலும் நிரம்பப்பட்டவைதான். ஆனல் ஸ்ரீ சிவபிரானேவெனில் குணங்களே யற்றவரும், சாந்தமுடையவரும், கேவலம், ஞானஉருவத்தைக் கொண்டவருமே; என்றாலும் ஸ்ரீ மகேசுவரன் சகல ஸ்தாவர ஜங்கமங்களுக்குள்ளும் அந்தராத்துமாவா யிருந்துகொண்டு சமுகாரமாகிய ஓர் பேதமான தொழிலைச் செய்தருளுகின்றபடியால் பெயருக்கு மட்டில் தமோகுணமுடையவர்போல் விளங்குகின்றாரேயன்றி வேறில்லை. ஓ! தக்ஷா! ஸ்ரீ பரமேசுவரன் அம்மணமாயிருப்பதுமுதல் அவர் தமோகுணமுள்ளவர் என்பதுவரையிலான சரித்திரங்களை யெல்லாம் யாம் இங்கு உந்தனுக்கு உரைத்திட்டனம். அதாவது: தாருகாரணியவாசிகளான நாற்பத்தெண்ணாயிரம் இருடீசுவரர்களையும் இன்னும் அப்போதைக்கப்போது அவரவர்களையும் இரக்ஷிப்பதற்காக உள்ள அப்பரமேசுவரனுடைய அந்தந்த திவ்யசரித்திரங்களையெல்லாம் உந்தனுக்குஎடுத்துரைத்தனம். ஆகையால் நீயும் இவ்வியாகமதில் வேள்விக்குவேந்தனாகிய அப்பரமசிவனைப் பூஜை செய்யலாவாய். அடா! தக்கா! சத்தியமாய் அந்தப் பகவானே உந்தனையும் இரக்ஷிக்கின்றாரடா'' என்று முனிச்சிரேஷ்டரான ததீசி மாமுனிவர் உரைத்தவுடன் மறுபடியும் அத்தக்கன் "அடா! தவசியே! அவன் எப்பேர்க்கொத்தவனாயினும் அவனுக்கு யாம் அவிசுகொடுக்கப் போவதில்லை. நீ இனி இங்கொன்றும் சொல்லவேண்டாம். உந்தன் பேச்சுக்காரத் தன்மையை விட்டு நீவந்த வழியோடு சென்று விடு''என்றான்.

இவ்வாறாய் அத்தக்கன் உரைத்ததன்பேரில் மாமுனிவர் கோபாவேசம் கொள்ளலாயினும் அக்கோபத்தை முயற்சியின்பேரில் தமக்

குள்ளே அடக்கிக் கொண்டு வசனமுரைத்திட்டதாவது:—ஆ! ஆ! எந்தப் பிராம்மணக் கேடர்கள் யாகமதில் ஸ்ரீ மகா தேவரைப் பூஜியாமலிருக்கின்றார்களோ அவர்களுக்கு அவ்வியாகத்தின் பயன் கிடையாமற் போவதுமின்றி அவர்கள் விபரீதமான பயனையும் கைக்கொள்ளலாவார்கள். ஆகையால் அடா! தக்கா! உந்தன் யாகத்திற்கு நிச்சயமாய்த் தடை சம்பவித்து உடனே அவிசுகளைப் புசிக்க ஆசைகொண்டு வந்திருக்கலுற்ற இத்தேவர்களோடு கூட உந்தனுக்கும் சிரச் சேதமும் நேரிடப் போகின்றது. இதற்குச் சந்தேகமே இல்லையென்று உரைத்துவிட்டுப் பின்னும் அங்கு யாகசாலையில் வந்திருக்கலுற்ற அந்தணர்களை நோக்கி அம்மாமுனிவர் வசனமுரைத்ததாவது:—ஓ! சகலர்களான கேடு கெட்ட அந்தணர்களே! நீங்களெல்லோர்களும், சாத்திரங்களில் கெட்ட அர்த்தத்திலே மனப்பற்றுதலுள்ளவர்களும், என்றும் சிவத்துரோக 'புத்தியைக் கொண்டவர்களும் சிவார்ச்சனத்தில் பராமுகமுள்ளவர்களும், முக்கியமான வேதமார்க்கங்களில் பராமுகமுள்ளவர்களும், சிவனடியார்களை இகழ்வோர்களும், மிகுந்த துக்கம் கொண்டவர்களுமாகி எல்லா நரகங்களிலும் விழப்பெறக் கடவீர்கள்'' என்று அம்மாமுனிவர் அவர்களைச் சபித்துவிட்டுக் கேளீர் சௌனகாதி முனிவர்களே! ஹிருதய கமலத்தில் ஸ்ரீ பரமேசுவரனைத் தியானம் பண்ணிக்கொண்டே சீடர்களோடு கூடத் தமது ஆசிரமத்திற்கு ஏகினர்.

## 30-வது அத்தியாயம்.

ததீசி மாமுனிவர் சென்றவுடன் துராத்துமனாகிய அத்தக்கனது பலம், வீரியம், தைரியம், கீர்த்தி, ஐசுவரியம், முதலியவை யெல்லாம்போய்விட்டன. பிற்பாடு தக்ஷனுடைய கொடிமரம் இரண்டு துண்டாகிப் பூமியில் விழுந்தது. மேலும் அவன்பெண்டிருடைய தாலிச்சரடு அவளது கழுத்தினின்று அறுந்து விழுந்தது. அப்போது மகா உன்னதமான யூபத்தம்ப (இயாகத்திற்குரிய பசுக்களைக் கட்டுவதற்கான ஓர் கம்ப)த்தின்மீது காக்கைகளும் கழுகுகளும் உட்கார்ந்தன. ஆயினும் துர்புத்திகொண்ட அத்தக்கன் இவ்வாறு முதலிய அபசகுனங்களை நேரிற் கண்டும் அவன் சற்றேனும் பயமற்றவனாகி முந்தி விஷ்ணுவையும் பிறகு பிரம்மனையும் பூஜித்துவிட்டுத் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும், பற்பல உபசாரங்களைச் செய்தும், அதேவிதமாய்த் தன் பெண்களையும், மாப்பிள்ளைகளையும் பல ஆபரணங்களாலும், வஸ்திரங்களாலும், வெகுமானித்தும் அங்கு வந்திருக்கலுற்ற பிராம்மணர் எல்லோர்களையும் காமதேனுவால் கொடுக்கப்பட்ட உண்டிகளாற் புஜிப்பித்துக் கற்பக விருக்ஷத்தினின்று அடையப்பட்ட, வஸ்திரங்களாலும், இரத்தினங்களாலும் சந்தோஷிப்பித்தனன்.

அப்பிராமணர்கள் இவ்வெல்லாவற்றையும் போர்போராய்க் குவித்துக் கொண்டார்கள். சிலர் அவைகளை எல்லாம் எடுத்தோரிடத்திற் கொண்டு வைத்துவிட்டுத் திரும்பவும் துரிதமாய் வந்தார்கள். விசாலமாகிய அவ்வியாக சாலைதனில் தேர்கள், குதிரைகள், யானைகள் இவைகளுடைய சத்தங்கள் சமுத்திரம் போலுண்டாயின. மேலும் அங்கு அனேக அனேக விமானங்கள்

மிகவும் அடர்த்தியாய் நிரம்பியிருந்தன. இரம்பை முதலிய அப்ஸர ஸ்திரீகள் அங்கு மிக நேர்த்தியாய் நர்த்தனம்பண்ணினார்கள். தவிரவும் மதுரமான கண்டநாதத்தையுடைய சில வித்தியாதரர்கள் செவிக்கினிமையாய் அங்கு பாடினார்கள். தேவரெல்லாம் அவரவர் ஸ்திரீகளோடு கூட வந்து வெகு சந்தோஷமாயிருந்தார்கள். பிறகு தக்கனும் பிராம்மணர்களுக்கு வேண்டிய மட்டில் தானங்கள் கொடுத்துவிட்டுப் பிறகு துரிதமாய் அக்கினியை மூட்டி அவிசைப்புஜிக்கலுற்ற தேவர்களை யுத்தேசித்து அவரவருக்கு விரிசைக் கிரம மந்திரம் சொல்லி ஆகுதிகளைச் செய்தான்.

அப்போது ஸ்ரீநாரத முனிவர் அதனை அறிந்து மலைகளிற் சிறந்த கைலைகிரிக்குச் சென்று அங்கு பார்வதியோடு கூடிய ஸ்ரீமகா தேவனைப் பக்தியுடன் வந்தனித்து கைகளை அஞ்சலிபண்ணிக் கொண்டு அவருக்கு விருத்தாந்தங்களை உரைத்ததாவது.—ஓ! பரமேசுவரா! தக்ஷப்பிரஜாபதியானவன் பிரம்மனுக்குப் புத்திரனாயிருந்தும் வேள்விக்கு வேந்தராகிய தேவரீருக்கு ஆவிர்ப்பாகம் கொடாமலே துர்புத்தி கொண்டவனாகி யாகங்களுக்கு ஈசுவரனான தேவரீர்மீது பாராமுகம் கொண்டவனாய் இப்போது மற்றத் தேவர்களை யெல்லாம் வேண்டிய மட்டில் பூஜிக்கின்றான்'' என, அப்போது அவரது வசனத்தைக் கேட்டு ஸ்ரீ கௌரீ தேவியானவள் புன்னகைப்புற்ற மனதைக் கொண்டவளாகி அத்தக்கனுடைய யாகத்தைப் பார்க்க மனதினில் நிச்சயித்துக் கொண்டு ஸ்ரீ மகேசுவரனை வந்தனித்து வசன முரைத்திட்டதாவது:—ஓ! தேவ தேவா! அடியேன் அவ்வியாகத்தைப் பார்த்துவிட்டுத் திரும்பி இங்கு சீக்கிரமாய் வந்து விடுகின்றேன். ஓ! சர்வேசுவரா! அங்கு போவதற்காக இப்போது எந்தனுக்கு உத்திரவு அருளவேண்டும்'' என்றனள்.

இவ்வாறு தம் மனையாளது வசனங்களைக் கேட்டுப் புன்னகைப்புற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகி ஸ்ரீ பரமசிவன் ''ஓ! கலியாணி! நீ அங்கு எப்படி போகத்தகும்? அத்தக்கன் உந்தனை யழைபாமலே பதிமயக்கத்தால் நம்மை விட்டு மற்றெல்லாத் தேவர்களையும் பூஜிக்கலாகின்றான் அல்லவோ? ஆகையால் கேளாய்! மாதரசே! நீ இப்போது அங்கு செல்வது தகாதல்லவா?'' என்றனர். இவ்வாறு வசனத்தைக் கேட்டதன்மேல் தக்ஷன் பெண்ணாகிய ஸ்ரீ சிவாதேவி தந்தையிடத்து நேசத்தினால் லோக யாத்திரை செய்ய விருப்பமுற்றவளாகி மறுபடியும் வசனமுரைத்ததாவது:—ஓ! பரமேசுவரா! ஒன்றுமறியாத அத்தக்கன் அபராதத்தை இப்போது மன்னித்தருள வேண்டும், ஓ! தேவேசா! தேவரீர் உத்தரவின்படி அடியேன் அவன் யாகத்தைப் பார்த்து விட்டுச் சீக்கிரமாய் இங்கு வந்து விடுகின்றேன். என்று ஸ்ரீ உமாதேவியானவள் அப்போது வெகு விருப்பத்தோடு இவ்விதமுரைத்து மெத்த வணக்கத்துடன் ஸ்ரீ மகாதேவரைத் தண்டம்போல் வந்தனிக்க அவரும் அப்படியே நல்லதென்று அவளை அனுப்பலாயினர்.

உடனே அவரது கணங்கள் அவர் ஆக்கினையின்படி ஓர் பெரிதான விமானத்தைக் கொண்டுவந்தார்கள். பிறகு அநேக கோடி சூரியப்பிரகாசம்பொருந்தியதும் பற்பல இரத்தினங்களால் இழைக்கப்பெற்றதும் சகல அலங்காரங்க

ளோடு கூடியதுமான அவ்விமானத்தில் கௌரீ அம்மை ஏறிக்கொண்டு சுமாலினி, மாலினி, என்றவர்களால் சிறந்த குடைகள் பிடிக்கப்பெற்றவளும், மங்களை, சுமனசு என்றவர்களாற் சாமரங்கள்வீசப்பெற்றவளும், நந்திகேசுவரன் மனையாளான சுந்தர மேனியையுடைய ஸுகேசியம்மையால் பற்பல இரத்தினங்கள் இழைக்கப்பெற்ற பாதுகைகள் தரிக்கப்பெற்றவளும், மிகச் சௌந்தரியம் பொருந்தியவளும் அநிந்திதை, கமலினி யென்பவர்களால் மலர்மாரி சொரியப்பெற்றவளும், விசிறிகள் வெற்றிலைப் பெட்டிகள், கண்ணாடிகள், கோடி, கோடிகளான மாலை, சந்தனம், வஸ்திரம், ஆபரணம், இவைகளின் பெட்டிகள் இவைகளைக் கைமீது தரிக்கலுற்ற தேவ ஸ்திரீகளாற் சூழப்பெற்றவளும், நர்த்தனஞ்செய்ய நின்ற மெத்த அழகிய தேகமுடைய அப்ஸர ஸ்திரீகளாலும் அநேக விமானங்களில் ஏறிய அனேக தோழிப் பெண்களாலும், சிலர் கிளிகளையும், சிலர், குயில்களையும், சிலர் அன்னங்களையும், சிலர் நாகணவாய்ப் பறவைகளையும் கைகளிற் கொண்ட பல சுந்தர ஸ்திரீகளாலும், இவ்வாறு முதலிய இன்னும் மற்ற தேவ ஸ்திரீகளாலும் சூழப்பெற்றவளுமாகி மிகுந்த வாத்திய கோஷங்களுடன் புறப்பட்டனள்.

அப்போது பன்னிரண்டு கோடி பூதர்களுடன் இருஷப துவஜத்தை முன்னிட்டுக்கொண்டு சிலர் குடைகளையும், சிலர் ஆயுதங்களையும் கைப்பற்றியவர்களாகி அவ்வெல்லோர்களும் மிகுந்த கோலாஹல சத்தத்தோடு புறப்பட்டார்கள். சோமநந்தன் என்ற ஓர் கணத்தலைவன் அம்மையை அடிக்கடி தண்டம் பண்ணிக்கொண்டே சென்றான். இவ்விதமான மிகுந்த சம்பிரவங்களோடு ஸ்ரீ பரமேசுவரி அவ்வியாகசாலைசேர்ந்து தம் விமானத்திலிருந்து இறங்கி தக்கன் அருகினில் வந்தாள். அப்போது துராத்துமனாகிய அத்தக்கன் இப்பேர்க்கொத்த தன் பெண்ணை மதியாமல் ஓ! பெண்ணே! உன் கணவன் மங்களம் பொருந்தியவனும், அறியப்படா குல கோத்திரத்திற்பிறந்தவனும், என்றும் அனுசாரத்திலே, பற்றுதலுடையவனும் ஆனதால் அவனை யாம் அழைக்கவில்லை. ஆகையால் அவன் பெண்டீராகிய உன்னையும் சிரேஷ்டமான இவ்வியாகத்திற்கு யாம் அழைக்கவில்லை யன்றோ? அங்ஙனமாயினும் நீ வீணாசைகொண்டு இங்கு வந்தாயல்லவா? ஆகையால் நீ உந்தன் புருடன் வீடாகிய மயானத்துக்குச் சீக்கிரமாய் போய் விடென்று துர்நடத்தைக்காரனான தக்கன் சொன்னான்.

அப்போது கௌரியம்மை கூறியதாவது:—ஓ! தந்தாய் எனது எல்லா சகோதரிகளுக்கும் அவர்களது புருஷர்கள் எல்லோர்களுக்கும் நீர் மரியாதை செய்திருக்கின்றீரல்லவா? மேலும் சுற்றத்தார் எல்லோர்களுக்கும் நீர் அவரவருக்குத் தக்கபடி மரியாதை செய்திருக்கின்றீர். ஓ! கோ! இப்படி யிருக்கையில் நீர் இவ்வியாகமதில் எந்தனையும் எந்தன் கணவரையும் மட்டில் தான் மதிக்கவில்லை. ஆ! ஹா! இப்படி யிருக்கையில் யான் வலிய வந்தும்கூட நீர் வெகு கோபாவேசம் கொண்டவராகி இங்கு வந்துள்ள எந்தனைத் திரும்பி ஓடு என்று சொல்லலாகின்றீர். யான்

யர்து பிழைதான் செய்யலானேனே அதை நீர் சொல்லும். இது உமது வாழ்வுக்கிடமாகாது'' என, இவ்வாறு கௌரியம்மை கூறிய வசனத்தைக் கேட்டுத் தக்கன் பின்னுமுரைத்ததாவது.—அடி ! பெண்ணே! உன் கணவன் சுடுகாட்டினிற் கூத்தாடுவதிலேயே முயன்றவனும் தமோகுணமுடையவ னுமன்றோ? ஆகையால் அவன் பெண்டீராகிய நீயும் எங்களது யாகத்தைப் பார்க்கத் தக்கவள் அல்லள். அதோ இருக்கின்ற நமது எல்லாப் பெண்களும் அவர்களது கணவர்களாகிய நமது மாப்பிள்ளைகளும் நம்மால் அழைக்கப்பட்டு வந்திருக்கின்றார்கள். ஸத்தியமாய் நீ நமது பெண்ணுமல்லள்; உன் கணவனும் நமது மாப்பிள்ளை யல்லான்; நமதிச்சையின்படி வேண்டியதெல்லாம் அவர் களுக்குக் கொடுக்கலாவோம். இவர்களெல்லாம் நம்மையே அண்டியிருக்கின் றார்கள். நீயோ அப்படியல்லள்; ஆகையால் நமது யாகத்தில் உன்கணவனுக்குச் சிறந்த அவிர்ப்பாகத்தைக் கொடுப்போமில்லை. அவனுக்குக்கூட அவிர்ப் பாகம் கொடுக்கும்படி வேதவாக்கியங்களால் சொல்லப்பட்டபோதிலும் நமது வலிமையால் அவைகளைச் சட்டை செய்யாமலே இப்போது காரியத்தை முடிக்க முயன்றிருக்கின்றோம். ஆகையால் நீ அடிக்கடி வீண்வார்த்தை பேசா மல் இச்சையை விட்டு நம்முன்னிலிருந்து சும்மாபோய் விடு'' என்றனன்.

இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டவுடன் கௌரி தேவியானவள் மிகவும் கோபம் கொண்டவளாகி நின்றாள். அப்போது அங்குள்ள எல் லோர்களும் தேவியைப் பார்த்து மிகவும் பயங் கொள்ளலானார்கள். தேவியுடைய ஸகியாகிய விமலை என்பவள் அவ்வம்மையைத் தண்டனிட்டு ''ஓ! தேவீ! நீர் இவ்வுலகங்களுக்கெல்லாம் தாயாகியதால் கோப த்தை விலக்கி யருளவேண்டும். ஏனென்றால் உமது கோபத்தினாற் சகல ஜகங் களும் நிச்சயமாய் நாசமடைந்து விடும்; ஆகையால் ஓ! கலியாணி! தாங்க முடியாத இக்கோபத்தைத் தணித்தருளலா வீரென்று உரைத்துவிட்டு அவள் மறுபடியும் பூமிதனில் தண்டம்போல் தண்டனிட்டனள்.

அப்போது தக்கன் மகளான கௌரியம்மையும் கோபத்தைவிட்டுத் துராத்துமனாகிய அத்தக்கனை நோக்கி மறுபடியும் திருவசனமுரைத்ததா வது:—''அடா! துர்ப்புத்திகொண்ட தக்கா! நீ இப்போது ஸ்ரீ தேவாதி தேவ னைப்பற்றி நிந்தைசெய்ததனால் இங்கு எந்தன் மனம் மெத்த நொந்து பதற லாகுதடா; நீ எந்தனை இகழ்ந்து பேசியதால் எந்தனுக்கு இவ்வாறு வருத்த மில்லை. ஆனால் கலக்கமற்றவரும், நிராதாரரும், நிர்க்குணரும், தீங்கற்றவரும், சருவஞ்ஞரும், சகல வித்தைகளுக்கும் மூலகர்த்தாவும், நாசமற்றவரும், தத்து வங்களுக்கு எட்டாதவரும், சாந்தமுள்ளவரும், சுகத்தைச் செய்வோரும், வணங்கியோரின் துக்கங்களைத் தொலைப்பிப்போருமான ஸ்ரீ பரமேசுவரனை நீ மதிமயக்கத்தினால் தமோகுணமுடையவரென்று உரைத்திட்டாயல்லவா! ஓ! கோ! கோ! உனக்கேதடா இப்பேர்க்கொத்த பாவம் நேரிட்டது; அவர் சகல ஜகங்களுக்கும் சமுகார கர்த்தாவானதால் மட்டில் தான் தமோகுண முடையவர்போலாகின்றார். அவர்க்கு அவிர்ப்பாகம் கொடுக்கப்படவேண்டும். அவர் பூஜிக்கத்தக்கவரேயன்றி மற்றவரல்லர். கேளாய்! தக்கா! எப்பேர்க்

கொத்த மகா பாவியும், சிவா, என்ற இரண்டெழுத்துக்களடங்கிய சிரேஷ்டமான திருநாமத்தை ஒருதடவை உரைத்திட்ட மாத்திரத்தில் அவன் மோக்ஷ சாம்பிராஜியத்தை யடைகின்றனடா! மேலும் சமுசாரத்தினின்று கரையேற்றலுற்ற அச்சருவேசுரனை யாதாமொருவன் இகழ்கின்றனே அப்பாதகனுக்கு உடனே மிகுந்த அபாயமுண்டாகும். ஸ்ரீசர்வேசுரனுடைய மகிமையானது இப்பிரகாரமாயெல்லாம் வேதமதில் மிகுதியாய்க் கேட்கப்படுகின்றது. ஆகையால், ஓ! தக்ஷா! ஸ்ரீ பரமேசுவரனை நிந்திப்பதிலே முயன்றவனுகிய மகா பாதகனுன நீயும் சிவாக்கினையின்படி சந்தேகமின்றி துரிதமாய் இங்கு நாசமடையப் போகின்றய்'' என்று அம்மகா தேவியானவள் திருவாக்குரைத்துவிட்டு நேர்த்தியான திவ்ய விமானத்தில் ஏறிக்கொண்டு திரும்பி மலைகளிற் சிறந்த கைலைகிரிக்குச் சென்று அங்கு ஸ்ரீமகா தேவனைக்கண்டு மிகுந்த சந்தோஷத்தோடு வந்தனித்துச் சங்கதிகளை எல்லாம் சொல்லிவிட்டு அத்தக்கனை வதைசெய்யும்படி பிரார்த்தித்துக் கொண்டாள்.

அப்போது ஸ்ரீ பரமேசுவரன் அம்மையுடைய திருவசனத்தைச் செவிகொள்ளாதவர்போல் இருக்கையில் மறுபடியும் ஸ்ரீ சங்கரியானவள் மகா தேவரைத் தண்டம்போல் பூமியில் வந்தனித்து "ஓ! சம்போ! சருவஞ்ஞா! விசுவேசா! பிரபஞ்சங்களைக் காப்பதிலே முயற்சி கொண்டவரே! ஓ! கருணமுதக் கடலே! ஆசையும் பகையும் ஒழிந்த தேவரீர் அத்தக்கனுடைய வேள்விதனைக் கலைத்து அவனையும் சீக்கிரமாய்ச் சமுகரித்து விடல்வேண்டும். ஏனென்றல் அப்பாவியானவன் மிகவும் துர்நடத்தையுள்ளவனும், சிவநிந்தையிலே முயன்றவனுமாகியதால் அப்போதுதான் ஸகல லோகங்களுக்கும் க்ஷேமமுண்டாவதோடு அடியேனுடைய கோரிக்கையும் நிறைவேறலாகும்'' என்றுள்.

## 31-வது அத்தியாயம்.

ஸ்ரீ கௌரி தேவியினுடைய இவ்வாறு துதியைக்கேட்டதன்மேல் ஸகல அண்டபிண்ட சராசரங்களையும் ஒரே கபளமாய்ப் புசிக்கலுற்ற ஸ்ரீ மகாதேவர், வீரருக்கெல்லாம் வீரரும், அடியார்களுக்குப் பத்திர(க்ஷேம)த்தை அருளுவோரும், மிகவும் பெரியதான திருமேனியைக் கொண்டவரும், ஸகல லோகங்களுக்கும், முக்கிய நாயகருமான ஸ்ரீ வீரபத்திரரைத் திருமனதால் நினைத்தருள, அப்போது அவர் ஜயஜயா! விஜயீபவா! என்றுறக்க உரைத்துக்கொண்டு ஸ்ரீ மகேசுவரனது பயங்கரமான நெற்றிக் கண்ணுகிய அக்கினி குண்டத்தினின்று மகா மேருகிரியினது கொடுமுடிக்கு நிகரான ஆயிரம் சிரசுகளைக் கொண்டவரும், மிகவும் பருத்து நீண்ட மெத்த அழகிய இரண்டாயிரம் கைகளாலும், கத்தி, கேடயம், கதை, சக்கிரம், வஜ்ஜிராயுதம், சூலம், தநுசு, சரங்கள், முஸலம், பிராஸம், நாராசம், முதலிய ஆயுதத்திரள்களைக் கைக்கொண்டவரும், விஷ்ணு முதலிய தேவக்கூட்டங்களின் முண்டத்தலை மாலைகளின் வரிசைகளால் விளங்கப்பெற்ற திருமேனியைக் கொண்டவரும், கைதனில் விளங்கிய பெரிய மணியின் விஜய சப்தத்தினுல் மகா பயங்கரமுள்ளவரும், சிவந்த காந்தியால் பிரகாசிக்கலுற்ற சடைமுடியால் அலங்கரிக்கப்

பெற்றவரும், மிகவும், சிவந்த பெரிய வுருவத்தைக் கொண்டவரும், கோர மான சிங்கப்பற்களையும், மெத்த அகண்ட, தாடைகளையு முடையவரும், பற்பல இரத்தின வரிசைகளால் இழைக்கப்பெற்ற ஒலிக்கலுற்ற தண்டை களால் விளங்கிய பாதங்களைக் கொண்டவரும், குபீல் குபீலென்று நெருப்புத் தணற்களைக் கக்கலுற்ற மகாவுக்கிரங்களான மூவாயிரம் கண்களைக்கொண்ட வரும், கொம்பு வாத்தியத்தை வைத்துக்கொண்டு லீலா விநோதத்தினுல் மிகப்பயங்கரமாய்ச் சப்திக்கலுற்றவரும், மிகுந்த அட்டகாசத்தோடு பெருஞ் சப்தம் செய்துகொண்டு தொன்னைபோன்ற மூக்குகளினின்று தீதனைக் கக்க லுற்றவரும், வராகாவதாரத்தின் சிங்கப் பல்லையும், கூர்மாவதாரத்தின் மகா பெரியதான முதுகெலும்பையும் தரிக்கலுற்றவரும், விஷ்ணு பிரம்மர்கள் முதலிய தேவர்களின் எலும்பு மாலைகளால் விளங்காநின்றவரும், கைதனில் கத்தியைப்பற்றிச் சுழற்றிக்கொண்டு இங்குமங்கும் கேடயத்தை யுதராநின்ற வரும், ஓர் கையினுல் சகல அண்டங்களையும் தூக்கத்திறமை கொண்டவரும் மிகுந்த கோலாகல சத்தம்செய்துகொண்டு துரிதமாய் அங்குமிங்கும் ஓடாநின் றவரும் பாம்பு உடல்போன்ற புயங்கள்மீது சர்ப்பங்களை ஆபரணமாய்ப்பூண்ட வரும், பற்பல இரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஆபரணங்களால் அலங் கரிக்கப்பெற்றவரும், திருமேனிமுழுதும் திருநீற்றினுல் பூசப்பெற்றவரும், உருத்திராக்ஷங்களை ஆபரணமாய்ப் பூண்டவரும், செஞ்சந்தனமிட்ட நெற்றி மார்புகளைக்கொண்டவருமாய் அங்கு ஆவிர்ப்பவித்தனர். அப்போது ஸ்ரீதாக்ஷா யணியம்மையினுடைய கோபத்தினின்று மகாபயங்கரமுள்ள பத்திரகாளியான வள் அதேவிதமான பயங்கரவுருவத்தோடு மிகுந்த கோலாகல சத்தம் செய்து கொண்டு வெளிப்பட்டாள்.

பிறகு அவ்வீரபத்திரரும், பத்திரகாளியும் ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர் களைப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்துவிட்டு அவர்கள் முன்னிலையில் நின் ருர்கள். அப்போது வீரபத்திர பகவானை நோக்கி மகா பயபக்தியோடு வசனமுரைத்திட்டதாவது:—ஓ! ஜய விஜயீபவா! சம்போ! மகாதேவா! அடியார்களைப் பகைத்த வீரர்களை நாசம் செய்வோரே! பிநாகபாணியே! தேவரீர் தாசனுகிய அடியேனை எந்த வேலையினுலும் கட்டளையிட்டருள வேண்டும்; தேவரீர் திருச்சன்னதி முன்பாக விஷ்ணுவைக் கட்டிக்கொண்டு வரல் வேண்டுமா? அல்லது பிரம்மாவை அப்படியே கொண்டுவரல் வேண் டுமா? அல்லது தேவரீர் ஆக்கினையின்படி ஸகல ஜகங்கள், அல்லது இந்திரன் முதலிய தேவர்கள், கின்னரர்கள், அல்லது இன்னும் அவ்வவ்வுலகங்களி லுள்ள மதம் பிடித்த மற்றவர்கள் இவர்களைக் கொண்டுவரல் வேண்டுமா? உத்தரவினுல் மலைகளையானுலும் நக்கி விழுங்கி விடுகின்றேன். அல்லது அவைகளைக் கையினுல் நொறுக்கி விடுகின்றேன். ஓ! ஜகதீசா! தேவரீரது திருவுளத்தில் நினைக்கப்பட்ட யான் என்ன செய்யல் வேண்டுமென்றுரைத்து ஸ்ரீ பிரபு முன்னிலையில் வினயத்தோடு அஞ்சலி கொண்டு நின்றனர்.

பிறகு பகவான் மகா பலசாலியான வீரபத்திரரை நோக்கி “ஓ நமது ஆக்கினையை நிறைவேற்றலுற்ற மகா வலிமைபொருந்திய மங்களகரனுகிய

வீரா! தக்கனென்பவன் இப்போது நம்மை விலக்கிவிட்டுச் சகல தேவர்களையும் வேண்டிய மட்டில் பூஜிக்கலாகின்ருன். ஆகையால் நீ அங்குசென்று நமக்கு உரித்ததாகிய சிரேஷ்டமான ஹவிர்ப்பாகத்தைக் கேட்டு அதனையவன் கொடுப்பான் ஆனல் வாங்கிக்கொண்டு சீக்கிரமாய் நம்மிடத்திற்குவா. அவன் அதனைக் கொடாவிட்டால் அப்போது கெட்ட எண்ணங்கொண்ட அத்தக்கனைச் சகல தேவர்களும்கூட யாகமத்தியில் சிரசாக்கினைசெய்து கொன்றுவிட்டு நீ அங்கேயிரு ; அப்போது யாமுமங்கு சீக்கிரமாய் வருவோமென்று திருவாக்கருளி, அம்மகேசுவரன் வீரபத்திரரை அனுப்ப, உடனே மகாபலசாலியான அவரும் பகவானை வந்தனித்து விட்டுத் தாங்கமுடியாத மிகுந்த ஆனந்தத்தோடு கோலாகல சப்தம் செய்துகொண்டு புறப்படுகையில் உள் மூச்சு வெளி மூச்சுகளினின்று அனேகம் ஒப்பற்ற வீரர்களைச் சிருஷ்டித்தார்.

மேலும் அதே மாதிரியாய் எல்லா மயிர்க்கால்களிலிருந்தும் தமது தொன்னைபோன்ற மூக்கு, காதுகள், வியர்வைத் திவலைகள், கண்கள், சடைகள், இரண்டு புயங்கள், மார்பு, கை, கழுத்து, முழந்தாள், கணுக்கால், பாதங்கள், நாபி, இடுப்பு, முதலிய, இன்னும் மற்ற உறுப்புகளினின்றும் தமக்குச் சமானமான வேறு அனேகம் கணங்களையும், திரண்ட பூதர்களையும் ஓர் கணமாத்திரத்தில் லீலாவிநோதமாய்ச் சிருஷ்டித்தார். அப்போது அக்காளியம்மையும் சிவாக்கினையின்பேரில் புறப்பட்டுக் கறுப்பு, சிவப்பு, வெண்மை, மஞ்சள், சித்திரவர்ணம் முதலிய பற்பல நிறங்களோடுங் கூடிய புலி, சிங்கம், சரபம், யானை, குதிரை, இருடபம், கரடி, யாளி, கவயம் முதலிய மிருகங்களின் முகங்களைக்கொண்ட தமக்குச் சமானமான அனேகர்களைச் சிருஷ்டித்தாள். பிறகு அவ்வெல்லோர்களும் பற்பல ஆயுதங்களைக் கைப்பற்றியவர்களும், பற்பல நிறமுடையவர்களும், பற்பல முகங்களைக் கொண்டவர்களும், பற்பலவித பூஷணங்களால் அலங்கரிக்கப்பெற்ற மேனியைக் கொண்டவர்களும் அதிபயங்கரமான நெருப்புக் கண்களையுடையவர்களும், மிகுந்த வலிமைகொண்டவர்களும், மகாவேகமுடையவர்களும், அனேகம் பிரம்ம விஷ்ணுக்களுடைய எலும்புகளை மாலையாய்ப் பூண்டவர்களும் அனேக கோடி. பிரம்மாண்டங்களையும், பிண்டமாய்ப் பிடிக்கத் திறமை கொண்டவர்களும், சகல பிரம்மாண்டங்களையும் வடவாக்கினியையும் உண்டு ஜெயித்துக் கொள்ளத்தக்க ஜாடராக்கினியுடையவர்களுமான இப்பேர்க்கொத்த பயங்கரர்களான பூத வீரர்களும், காளிகள், மோகினிகள், சாகினிகள், டாகினிகள், யோகினிகள், பைரவிகள், காளராத்திரிகள், முதலிய பெண் கணங்களும், இவர்களெல்லாம், மிகுந்த கோலகல சத்தம் செய்து கொண்டு அவ்விருவரையும் பின்தொடர்ந்து சென்ருர்கள். மேலும் பானுகம்பன், முதலிய கணங்களெல்லாம், வாத்தியங்களை முழக்கினுர்கள். தவிரவும், குடைகள், சாமரங்கள், துவஜங்கள், இவைகளைப் பிடிப்பவர்களும் பற்பல உபசாரங்களைச் செய்ப ஏற்பட்டவர்களும், குடைபிடிக்கலான, பினுகி, தண்டி முதலியவர்களும் புறப்பட்டு துரிதமாய்ச் சென்ருர்கள்.

இவ்வெல்லோர்களும் சென்று ஓர் கணநேரத்திற்குள் அத்தக்கனுடைய யாகசாலையை முற்றுகை போட்டார்கள். அப்போது பதினுன்கு லோகங்

களும் அவற்றிலுமுள்ள சகல ஜனங்களும் நடுநடுங்கினர்கள். அப்போது ஸ்ரீ வீரபத்திரர் வீரர்களேயும், மற்றவர்களேயும், நோக்கி! ஓ! கணங்களே! நீங்கள் எல்லோர்களும் இப்பெரிய யாகசாலேயைச் சூழ்ந்து நில்லுங்கள். இல்லாவிடில் வீணுசை கொண்டு இவ்வியாகசாலேயில் வந்திருக்கலுற்ற மகாசூரர்களான சகல தேவர்களும் மற்றவர்களும் வெளிப்பட்டு ஓடிப்போவார்கள். ஆகையால் நீங்கள் இப்போது இங்கு வெகு ஜாக்கிரதையா யிருக்கவேண்டுமென்ருர்.

## 32-வது அத்தியாயம்.

வீரபத்திரர் இவ்வாறுரைத்த பிறகு பத்திரகாளியோடுகூடச் சகல தேவக்கூட்டங்களாலும் நிரம்பப்படானின்ற யாகசாலேக்குட் சென்றனர். வீரபத்திரர், மிக நேர்த்தியான அவ்வியாகசாலேயிற் பிரவேசித்த பொழுது கணங்களெல்லாம் அப்பாதகனுடைய யாகசாலேயைச் சூழ்ந்துகொண்டு அதனேக் காப்பவர்களான எல்லா சைனியங்களேயும் அதம் பண்ணிவிட்டு மிகுந்த கோலாகலம் செய்துகொண்டு ஸ்ரீ வீரபத்திரர் ஆக்கினேயின்படி வெகு சாவதானமாயிருந்தார்கள்.

அப்போது விஷ்ணு பிரம்மர்கள் முதலிய தேவரெல்லாம் பத்திரகாளியோடு கூட வந்திருக்கலுற்ற வீரபத்திரரைக் கண்டவுடன் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டதாவது:—ஓ! கோ! புருவ நெரியால் அக்கிரமான நேத்திரங்களேக் கொண்ட நிகரற்ற திருமேனியுடைய இவ்விருவரும் யாவர்கள்? ஆகா! இவர்கள் ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களுடைய கோபத்தினின்று உண்டானவர்களே என்பது நிச்சயம். ஏனென்ருல் மற்றவர்களுக்கு இப்பேர்க்கொத்த மகா பயங்கரமான கோபம் எவ்வாறுண்டாகுமென்று சில தேவர் தலேகுனியப் பெற்றவர்களாகிச் சொல்லிக்கொண்டார்கள். சிலர் ஓ! கோ! இங்குள்ள எல்லாத் தேவர்களுக்கும் விநாசகாலம் நெருங்கி விட்டதென ஒருவருக்கொருவர் வியக்தமாய்ச் சொல்லிக் கொண்டார்கள். சிலர் ஸ்ரீ சிவபிரானேயும், சிவனடியார்களேயும் நிந்திப்போரான மகா பாவிகளுக்கெல்லாம் தெய்வீகமான தண்டனே சம்பவித்து விடுமென்ற வேதவாக்கியம் நிச்சயமே! அது இப்போது பிரத்தியக்ஷமாய் இத்தக்கனிடத்தில் பார்க்கப்படலாயிற்று என்று பேசிக்கொண்டார்கள். சிலர் ஓ! கோ! சிவ நிந்தை செய்வோர்களின் கூட்டத்திலிருப்பவர்களும் விநாசமடைவார்களென்ற வேதவாக்கியமானது நிச்சயமாய் நமக்குள்ளே பலித்துவிட்டது. ஐயோ! இந்த பாதகனுக்கு யாகம்செய்ய வேண்டுமென்ற புத்தி என் தானுண்டாயிற்ருே? ஓ! கோ! இப்புத்தி உண்டான தாலல்லவோ எல்லாத் தேவர்களுக்கும் ஏககாலத்தில் நாசம் நேரிடலாயிற்று. ஆ! ஆ! இப்பாதகன் தேவர்களாகிய நம்மெல்லோர்களேயும் சுயப்பிரயோஜனத்தையே நாடியவர்க ளென்றும் முற்றும் வலிமையற்றவர்களென்றும் துரும்புக்குச் சரியாய் நினேத்துக்கொண்டு தன் நோக்கத்தின்படி ஸ்ரீ மகா தேவரை விலக்கி யாகம் செய்யத் தலேப்படலானுன். ஆகையால் தான் ஸ்ரீ பரமேசுவரர் ஆக்கினேயின்படி எல்லோர்களுக்கும் விநாசம் நேரிடலாயிற்று என்று மிகுந்த பயத்தோடு சொல்லிக்கொண்டார்கள். சிலர் ஓ கோ!

ஸர்வ லோகமாதாவாகிய ஸ்ரீ தாக்ஷாயணியம்மையை அவமதித்ததின்பேரில் அவள் வெளிச்சென்றவுடன் அதன் பயன் அதி சீக்கிரத்தில் கைக்கு வந்து விட்டதென்றும் பற்பல விதமாய்த் தேவர்கள் சொல்லிக்கொண்டிருக்கையில் ஸ்ரீ விரபத்திரர் பத்திரகாளியோடு கூட மகா கோபத்தோடு தக்கனருகினில் வந்து கோலாகல சத்தம்பண்ணி அற்புதமாகிய கொம்பு வாத்தியத்தை ஒலிப் பித்துச் சகல தேவச் சிரேஷ்டர்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் தக்கன் எதிரில் கலகலவென்று நகைத்துக்கொண்டு நின்றார்.

அப்போது அக்கொம்புச் சத்தத்தைக் கேட்டவுடன் சில தேவர்கள் ஓட்டம் பிடித்தார்கள். உடனே மேருகிரியும் பூமியும் வெடிக்கலாயின. சகல லோகங்களிலுமுள்ள எல்லாப் பிராணிகளும் மூர்ச்சை யடைந்தார்கள். அங்குள்ள தேவர் எல்லோர்களும் பயந்து மூர்ச்சை கொண்டு பூமியில் விழுந்தார்கள். இயாகசாலைக்கு வெளியில் ஓடலான சில தேவர்கள் அங்குள்ள வீரர்களால் துரத்தப்பட்டவர்களாகித் துயரமடைந்து பிறகு யாக சாலைக்குத் திரும்பினார்கள். அப்போது, இவ்வாறு அத்தேவர்கள் பயமடைந்தபோது பாதகனான அத்தக்கன் அதிக சோகம்கொண்டு மூர்ச்சை யடைந்தான். பிறகு அவன் மூர்ச்சை தெளிந்தபொழுது மகா பயம் கொண்டவனாகி வீரபத்திரரை நோக்கி அப்போது வசனமுரைத்ததாவது:—ஓ! மகா பலவானே! நீர் யார்? எங்கு வந்தீர்? எந்த தேசத்திலிருந்து வந்தீர்? என்று தக்கன் கேட்டவுடன் வீரன் கம்பீர வசனத்தோடு உரைத்ததாவது:—அடா! தக்ஷா! தேவாதி தேவனும் சூலபாணியுமான ஸ்ரீ மகா தேவரது மைந்தராகிய யாம் உந்தனது யாகத்தில், அவருக்காக உள்ள அவிர்ப்பாகத்தை வாங்கிப் போவதற்காக வந்திருக்கின்றனமென்று நீ மனதிற்கொள். ஆகையால் நீ இங்கு யாகமதில் ஸ்ரீபரமேசுவரனுடைய அவிர்ப்பாகத்தைச் சீக்கிரமாய்க்கொடு, என்று வீரபத்திரரால் திருவாக்கருளப்பட்டவுடன் தக்கன் மறுபடி யுரைத்ததாவது:—ஓ! வீரரே! இவ்வியாகமதில் அச்சங்கரனுக்கு அவிர்ப்பாகம் கொடுக்கப்படமாட்டாது. தமோகுணமுடைய அச்சங்கரனை யாம் விலக்கிவிட்டு மற்றத் தேவர்களை மட்டிலே அவிசினால் திருப்தி செய்விப்போம் என்று அத்தக்கனுரைக்கும்போது கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போது வேதமானது பயத்தினால் நடுக்கம் கொண்டதாகிப் பிரணவத்தோடுகூட வந்து வசனமுரைத்ததாவது:—

ஓ! தக்ஷா! நீயிப்போது வேள்விக்கு வேந்தரான ஸ்ரீ மகாதேவரை யவிசினால் திருப்தி செய்விக்க வேண்டியதே. ஏனென்றால் அவரது கட்டளையின் படியே ஸகல ஜகங்களும் ஓர் வரையரைக்குட்பட்டிருக்கின்றது. கேளாய் தக்ஷப் பிரஜாபதியே! முந்தியதான அவிர்ப்பாகத்திற்கு அவரே தகுதியுள்ளவரென்று யாம் அப்போது உந்தனுக்குப் பல முறையாய்ச் சத்தியம் சொல்லுகின்றோமென்று வேதத்தினாலுரைக்கப்பட்ட வசனத்தைக் கேட்டும் ஓ! கோ! கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அத்தக்கன் ஸ்ரீ மகா தேவனுக்குச் சிரேஷ்டமான அவிசைக்கொடுக்க விருப்பப்படவில்லை. பிறகு அப்போது அவ்வேதமானது பிரணவத்தோடு கூட பார்வதியோடு கூடிய ஸ்ரீ பரமேசு

வரனைத் தோத்திரம்பண்ணி வீரபத்திரையும் வந்தனித்துவிட்டு அவரது ஆக்ஞையின்படி துரிதமாய்த் தமதிருப்பிடம் சென்றது.

வேதம் இவ்வாறுரைத்துவிட்டுச் சென்றவுடன் வீரபத்திரர் மறுபடியும் கோபம் கொண்டு துர்நடத்தைக்காரரான அத்தக்கனை நோக்கி சிவாக்ஞையை மனதினில் நினைத்துக்கொண்டு அடா! தக்கா! யாகமதில் எங்களுக்குரிய அவிர்ப்பாகத்தைக் கொடுத்துவிடென்று மகா வலிமையோடு உரைக்க, தக்கனும் "ஓ! வீரனே! கொடிய தொழிற்காரனான அவ்வுருத்திரனுக்கு நம்மால் அவிர்ப்பாகம் கொடுக்கப்படமாட்டாது. அவன் எப்போதும் பூதப்பிரேத பிசாசங்களோடலைந்து திரிகின்றான். ஆகையால் அவன் நமது யாகத்தில் அவிசைபுஜிப்பது தகுதியல்ல." என்று அக்கெட்ட நடத்தையுள்ள தக்கன் செவிகளுக்கு நாராசம் போல் வசனமுரைத்தனன். அப்போது அவ்வசனத்தைக் கேட்டவுடன் மகாபராக்கிரமசாலியான வீரபத்திரர் "ஓ! சகலர்களான தேவர்களே! இவன் வார்த்தை உங்களுக்குச் சம்மதம் தானா?" வென்று அங்குள்ள பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களை நோக்கிக் கேட்கலாகையில் தேவர்கள் வீரபத்திரருடைய அவ்வார்த்தையைக் கேளாதவர்கள் போல் எல்லோர்களும் தலைதனைக் குனிந்துகொண்டு உள்ளமதில் பிரமம் கொண்டிருந்தார்கள்.

## 33-வது அத்தியாயம்.

அப்போது அவற்றை யெல்லாம் கண்டு மகா பலவானாகிய வீரபத்திரர் பிரம்மாண்டத்தை வெடிக்கச் செய்பவர்போல் கோலாகல சப்தம் செய்துகொண்டு விஷ்ணுவினுடைய நடுமார்பினில் தண்டத்தினால் ஓரடியடிக்க, அப்போது அவர் மார்பினிலிருக்கும் இலக்குமி தேவியும், கௌஸ்துபமென்ற இரத்தினமும் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மிகவும் நொறுங்கிப் பூமியில் விழநேர்ந்தது. விஷ்ணுவும் சௌரியமிழந்தவராகி விழுந்து மூர்ச்சையடைந்தனர்.

பின்பு பிரபுவானவர் பிரம்மன் தலைமீது முட்டியால் குட்ட அதனால் அவர் மூர்ச்சைகொண்டு விழுவதற்குள்ளாக வீரபத்திரர் அப்பிரம்மனை விட்டுச் சிதறி விழலான காயத்திரி, ஸாவித்திரி, ஸரஸ்வதி இவர்களின் மூக்குகளைக் கத்தியால் அறுத்து விட்டார். அதன்மேல் தேவர்கள் மிகவும் பயங்கொண்டவர்களாகி நான்கு பக்கங்களிலும் வெளியில் ஓடுகையில் வெளியிலிருந்த பூதர்களாலும், வீரர்களாலும் திரும்பவும் உள்ளே துரத்தி விடப்பட்டார்கள். பிறகு வீரபத்திரர் ஒட்டம் பிடிக்கலான சந்திரனைக் காலினாலுதைத்துத் துகைத்து இயமனுடைய மகா கடினமான தலையையும் வெட்டி விட்டார். மேலும் அற்புதமான விக்கிரமத்தைக்கொண்ட அவ்வீரன் சூரியனுடைய தாடையில் ஓர் அறைவிட்டவுடன் அவன் பற்களெல்லாம் உடைந்து பூமியில் விழுந்தன. பின்னும் அவர் துராத்துமனாகிய பகனுடைய இருகண்களையும் பிடுங்கிவிட்டுக் குயில்உருவமெடுத்து வெளியில் ஓடலான இந்திரனையும்வெட்டி அவிசை யுண்போனான அக்கினிதேவன் கைகளையும் நாவையும் அறுத்து அவ்வக்கினியின் பெண்டீருடைய அற்புதமான மூக்கையும் கத்தியாற் கண்டித்து விட்டனர்.

மேலும் சத்துருக்களைக் கண்டிப்போரான அவ்வீரர் நிருருதியைத் தண்டத்தால் அடித்துக்கொன்றுவிட்டு இருப்புலக்கையினால் வருணனை யதம் பண்ணிக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! ஓடிப்போகலான வாயுதேவனை யும் கண்டனக் கோடாலியால் கொலை செய்துவிட்டுக் குபேரனைச் சூலத்தின் நுனியில் கோர்த்துக் கொண்டு கூத்தாடினார். அப்போது ஏகாதச ருத்திரர் களும் ஈசான தேவனும் பயங்கொண்டவர்களாகி வந்தனிப்போரின் துக்கங் களைத் தொலைப்போரான அவ்வீரபத்திரனை வந்தனிக்க, அவரும் அவர்களை ஒருவாறு அதட்டி விட்டுவிட்டனர். மேலும் அப்போது அசுரேந்திரனை ஓரம் பிறைற்கொன்று மானுருவமெடுத்தோடும் இயாகமதை அவ்வியாகசாலையின் மத்தியிலே தடுத்துக்கொண்டு அதன் முன்னிலையிற் சென்று மகா கோபத் தோடு ஓரத்திரத்தினாற் சேதித்துவிட்டார்.

அப்போது தக்கனும் இவற்றை யெல்லாம் கண்ணோக்கி மனமதில் ஓ! கோ! இவ்வீரன் நாம் பார்த்திருக்கும்போதே இயாகத்தையும், தேவர்களை யும் கொன்று போட்டான். முந்தியே அப்பரமேசுவரனுடைய மகிமை பிரம் மனுலுரைக்கப்பட்டதன்றோ! அப்படியே நாமும் அச்சிவபிரானை அறிந்து மகா கொடிய தவத்தைச் செய்து அம்மகேசுவரன் கிருபையினால் மிகுந்த ஐசு வரியத்தை அடைந்திருந்தும், புத்தியில்லாத நாம், வீண் சத்துரு புத்தியினால் அவரை நிந்திக்கலானோம். மேலும் முந்தி நமது தந்தையான பிரம்மனால் இயாகம் செய்யப்படலாகும்போது நாம் அப்பரமேசுவரனுக்கு அவிர்ப்பாகம் கொடுக்கக் கூடாதென்று தடுத்துவிட்டோமல்லவா! தவிரவும் நாமுமவரை விலக்கிவிட்டுத் தேவர்களோடு கூட யாகம் செய்யத் தொடங்கலாகையில் நமது க்ஷேமத்தைக் கருதிய ததீசி முனிவரால் உரைக்கப்பட்ட வசனத்தை யும் மீறிவிட்டோம். தவிரவும் நமது பெண்ணாகிய தாக்ஷாயணி வார்த்தை யையும் நாம் கேளாமற் கடந்துவிட்டோம். மேலும் அவ்வீரன் முந்தி அவிர்ப் பாகத்தைக் கேட்டதற்கு நாம் பராமுகமா யிருந்துவிட்டோம். வேதமே பிரணவத்தோடு கூட வந்துரைத்த வார்த்தையையும் நாம் ஆதரிக்கவில்லை. ஆகையால் விஷ்ணு முதலிய தேவருக்கெல்லாம் நாம் மிகுந்த அனர்த்தத் தையே உண்டுபண்ணி விட்டோமென்று மகா வாங்காரம் கொண்டிருக்கிற வீரபத்திரரையும் அதேவிதமாயுள்ள பத்திரகாளியையும் கண்டும், எங்கும் பூதகணங்கள் சூழ்ந்து நிற்பதை அறிந்தும் வெளியில் ஓட முடியாமல் அப் போது மிகவும் திகிலடைந்திருந்தும், வெளிக்குப் பயப்படாதவன்போல் மௌனமா யிருந்தான்.

உடனே வீரபத்திரர் கத்தியை யெடுத்து அதிவேகமா யெழும்பிக் குதித்துத் துராத்துமனாகிய அத்தக்கன் தலையைக் கண்டித்து அவன் சிவ நிந்தை செய்ததற்குத் தக்க பிரயோஜனத்தைச் செய்துவிட்டார். பிறகு அவ் வாறு அறுக்கப்பட்ட தலையை அக்கினியில் போட, அப்போது, கேளீர் முனிவர்களே! அதன் சாம்பல் தான் மிஞ்சலாயிற்று. பிற்பாடு தக்கன் இறந்துவிட்டதை அவன் பெண்டீரான வேதவல்லியும் அவன், பெண் கள், பந்துக்கள், மற்றுமுள்ளவர்களும் கண்டு சுற்றிலும் சூழ்ந்து கொண்

டார்கள். அப்போது பகை வீரர்களைக் கொல்வோரான வீரபத்திரர் அவ் வேதவல்லியினுடைய இருகாதுகளையும் அறுத்துவிட்டனர். மகாவலிமை பொருந்திய பத்திரகாளியானவள் மற்றவர்களுடையவும், தேவர்கள், முனிவர்கள், மானிடர்கள், இவர்களது மகா சௌந்தரியமுள்ள பெண்டீர்களுடையவுமான தலைகளைக் கண்டித்து அவைகளைப் பந்தாடினாள். இவ்விருவரும் இவ்வாறாக அவ்வெல்லோர்களையும் கொன்றவுடன் மற்றுள்ள அனேக வீரர்களும் காளிகளும் அப்போது அவ்வீரபத்திரகாளியினுடைய கட்டளையின் பேரில் யாகசாலையின் வெளிப்பக்கத்திலுள்ள எளிதில் வெல்லமுடியாத பெருஞ் சேனைகளை அதம்பண்ணி, நிகரற்ற மதில்களையும் உடைத்துத் தள்ளிவிட்டு யாகசாலைக்குட்சென்று மிக அட்டகாஸம் செய்து அங்கு பாக்கியுள்ள தேவர்கள் பிராமண கேடர்கள் இருடிகள் இவர்களைக் கூர்மை பொருந்திய அம்புகளாலும் கத்திகள், உலக்கைகள் எறிவல்லயங்கள் இவைகளாலும் மற்றுமுள்ள ஆயுதங்களாலும், காலுதைகளாலும் கைகளாலும் பலவிதமாய் அடித்துக் கொலை செய்தார்கள்.

அப்போது பூதர்களெல்லாம் சில துராத்துமர்களுடைய தலைகளை வெட்டியும் சிலர்களின் கழுத்து கைகளை யறுத்தும், வெகு கோபத்தோடு எலும்புகளை நொறுக்கியும், தேகங்களைக் கசக்கியும், சிலர்களது நாவுகளை யறுத்தும், கண்களைப் பிடுங்கியும், சரீரங்களைக் கிழித்தும் எறிந்தார்கள். தவிரவும் அவர்கள் சிலர் தேகங்களை ஆயுதங்களாற் பிளந்து இரத்தங்களைக் குடித்தார்கள். மேலும் சில துராத்துமர்களின் தேகங்களை ஆஜியஸ்தாலி (முறைப்படி நெய் வைக்கப்படுகிற பாத்திரம்)களிற் போட்டு நெருப்பினில் சமைத்து மிக நேர்த்தியாய்ப் புசித்தார்கள். பின்னும் அப்பூதர்கள் சிலர்களது நரம்புகளை மாலைகளாய்க் கட்டிப் பூண்டுகொண்டு சங்கத்துவானம் செய்து சிவநாம சங்கீர்த்தனம் பண்ணினார்கள். ஓடத்தலைப்பட்ட மற்றத் தேவர்களைக் கால்களால் துகைத்தார்கள். பின்னும் அவரவர்கள் அங்குள்ள, தேன், பால், நெய், தயிர், முதலிய, அவிசுகளை அப்போது குடித்து இயாகத்திற்காக வந்திருந்த ஆடுகளையும் பிசைந்து தின்றார்கள். பின்னுமவர்கள் மிகுந்த கோபத்தின் வலிமையால் குண்டங்களிலுள்ள எல்லா அக்கினிகளையும், மூத்திரங்களைப் பெய்ந்தணைத்துவிட்டுச் சிலபூதர்கள் அவ்வியாக சாலையின் ஓரிடத்தைக் கொளுத்தி விட்டார்கள். அங்குள்ள எல்லாக் குடங்களையும் உடைத்துப் பசுக்களையெல்லாம் கங்கா நதியிலாழ்த்தி விட்டார்கள். மிகுந்த அட்டகாசம் பண்ணிக்கொண்டு அங்கு இயாகத்தில் அமைக்கப்பட்டிருந்த மேடைகளை இடித்துத் தேவர்களின் விமானங்கள், இரதங்கள், குதிரைகள் முதலிய வாகனங்கள், ஆயுதங்கள், ஆபரணங்கள் இவைகளையெல்லாம் மிகுந்த கோபத்தினால் அக்கினியில் வாரி எறிந்தார்கள்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மேலும் இதே பிரகாரமாய் அவர்கள் அந்தப் பாதகனுடைய பெண்கள், மாப்பிள்ளைகள் முதலிய பந்துக்களையெல்லாம் நாவினாலுரைக்க முடியாதபடி இமிசித்தார்கள். அப்போது அங்கெல்லாம், காக்கைகளும், பருந்துகளும், நிரம்பியிருந்தன. இப்படிப் பல

வாறுய் எல்லாத் துராத்துமர்களும் கொல்லப்பட்டானவுடன் அப்போது விஷ்ணுவானவர் மூர்ச்சை தெளிந்து எழுந்து கோபாவேசம் கொண்டவ ராய்ச் சாவடைந்த தன் சைனியங்களையும் இயாகத்திற்கு நேரிட்ட இடை யூறையும் கண்டு கேளீர்! முனிவர்களே! இவையெல்லாம் சிவ நிந்தையின் பயனென் றுணராமல் அவ்வீரபத்திரரோடு யுத்தம் செய்வதற்கான தமக்கு வினைசகரமுள்ள புத்தியானது அவருக்குண்டாயிற்று. பிறகு அவர் கருடன் இறந்து விட்டதை யறியாமல் அதனை வரும்படி நினைத்ததில் அதுவாராதது கண்டு அவர் கோபமும், சோகமும் மேற்கொண்டவராகிப் பிறகு தம் மாயை யால் மகாவலிமைகொண்ட மற்றோர் கருடனை யுண்டுபண்ணி அதன்பேரில் ஏறிக்கொண்டு அப்போது பாஞ்ச ஜன்னியமென்ற சங்கத்தை யூதிப்பூதர்கள் மீதும், காளிகள் மீதும் மிகுந்த கூர் அம்புகளைச் சொரியலாகையில் அப் பூதர்களும், காளிகளும் விஷ்ணுவை எதிர்த்துக்கொண்டார்கள். பிறகு மகா பராக்கிரமசாலியான வீரபத்திரர் உயுத்தம் செய்பலான அவ்விஷ்ணுவைப் பார்த்து மிகுந்த கோபத்தோடு நகைத்துக் கொண்டு அவருடன் உயுத்தம் செய்ய திருவுளம் கொண்டபோது ஸ்ரீ சிவாக்கினையின்படி அங்கோர் இரதம் தோன்றலாயிற்று.

அதுவேதெனின்றால்:—ஆயிரம் வேதங்களாகிய குதிரைகளால் பூட்டப் பெற்றதும், வினோதமான துவஜத்தோடு கூடியதும், அநேகம் ஆயுதங்க ளால் நிறைந்ததும், மிக நேர்த்தியான மாலைகளால் அலங்கரிக்கப்பெற்றதுமாய் விளங்கலாயிற்று. அப்போது அச்சமயத்தில் பிரம்மன் மூர்ச்சை தெளிந்து எழுந்திருக்கலாகி யுத்தத்தில் முனைந்திருக்கும் விஷ்ணுவையும் இயாகம் நாசமாய்ப் போனதையும் தேவரெல்லாம் மரணம் அடைந்திருப்பதையும் கண்டு வெகு பயத்தினால் நடுங்கலாயினர்.

## 34-வது அத்தியாயம்.

பிறகு பிரம்மன் ஓ! நம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்கு இப்போது நல்ல சமயம் வாய்த்திருக்கின்றதென்று நிச்சயித்துக்கொண்டு தாம் அவ்விர தத்திற்குச் சாரதியாகி சடிதியிலேறி அச்சிறந்த இரதத்தை வீரபத்திரருகி னிற் கொண்டு வந்து தாம் அதை விட்டிறங்கி வீரபத்திரரை வந்தனித்து "ஓ! மகா பலவானே! தேவரீருக்காகச் சிவாக்கினையினால் சிரேஷ்டமான இவ் விரதம் வந்திருக்கின்றது. என்னால் சாரத்தியம் செய்யப்படலாகும் இந்த இரதத்தைத் தேவரீர் வீற்றிருந்து அலங்கரித்தருள வேண்டும். ஆகையால் ஓ! எந்தன் பிரபுவே! தேவரீர் எந்தனை மன்னித்துப் பத்திரகாளியம்மையோடு கூட இங்கு வந்தருளலாவீர்" என்றுரைத்துவிட்டுத் தண்டம்போல் பூமியில் வந்தனம் பண்ணினர்.

அதன்மேல் மகா பலவானகிய ஸ்ரீ வீரபத்திரரும் அப்பிரம்மன் மீதுள்ள கோபத்தைவிட்டுச் சகல ஆயுதங்களாலும் நிரம்பப்பெற்ற அவ்விரதத்தின் மீது பத்திரகாளி சகிதராய் ஏறிக்கொண்டுப் பிரம்மனால் ஸாரத்தியம் செய்யப் பெற்றவராகி விஷ்ணுவை எதிர்த்துப் புறப்பட்டனர். கேளீர்! வேதியர் களே! அப்போது விஷ்ணு வீரபத்திரரை நோக்கி வசனமுரைத்ததாவது:—

"ஓ! வீரபத்திரரே! சிவநிந்தை செய்யலான இத்தக்கனுக்கு நீர்செய்த தண்டனை யோக்கியம் தான்; ஆனால் இங்கு கிட்டத்திலிருந்த தேவர்களெல்லாம் கொல்லப்படத் தக்கவர்களல்ல"வென, இவ்வாறு விஷ்ணுவால் உரைக்கப்பட்ட வசனத்தை மகாபலிஷ்டரான வீரன் கேட்டு, " கேளீர்! விஷ்ணுவே, ஸ்ரீ மகேசுவரனை நிந்தை செய்வோர்களான மகா பாதகர்களின் கூட்டத்திலிருப்பவர்களும் பாவிகளென்று நினைக்கப்படலாவார்கள். ஆகையால் வேதமானது அவ்வெல்லோர்களுக்குமே தண்டனை விதித்திருக்கின்றது. ஆகையால் தான் நாம் அப்படிச் செய்தனம்: ஓ! மாதவா! நாமும்மையும் விடப்போவதில்லை" என்றுரைக்கப்பட்டவுடன் விஷ்ணு கடுஞ்சினங்கொண்டு மிகுந்த நாணோசையிட்டுப் பூதர்கள் மீது கோடைகால மேகம்போல் ஒரே காலத்தில் கூர்மை பொருந்திய சரங்களைச் சொரிந்தனர். அதுகண்டு வீரபத்திரரும் கெட்டியான ஓர் வில்லைக்கைப்பற்றி நாணேறிட்டுச் சடுதியாய் அவ்விஷ்ணுவின் மீது அத்திரங்களைச் சொரிந்தார்.

பிறகு விஷ்ணுவும் மகாகோபம் கொண்டு அதி தீக்ஷணியம் பொருந்திய ஆயிரம் பாணங்களைச் சகல சத்துருக்களையும் நாசஞ்செய்யலுற்ற அவ்வீரபத்திரர் மீது பிரயோகித்தார். மகா பராக்கிரமம்பொருந்திய வீரபத்திரரும் அப்பாணங்களை யெல்லாம் சேதித்துவிட்டுப் பிறகு மகா தீக்ஷண்யமான ஓர் அம்புதனை விஷ்ணுவின் நெற்றிமீது எய்ய, உடனே விஷ்ணுவானவர் பெருக்கலுற்ற இரத்தப் பிரவாகத்தினால் நனையப்பெற்றவராகிப் பூமிதனில் விழுந்து அறிவு தப்பி மூர்ச்சைகொண்டு சற்றுக் கிடந்துவிட்டு உடனே பரபரப்பாய் எழுந்து வெகு கோபத்தோடு வீரபத்திரர்மீது மகா கொடூரமான பலபாணங்களை வருஷித்தார். உடனே வீரனும் கலகலவென்று நகைத்துக்கொண்டு அப்பாணங்களையெல்லாம் கண்டித்தெறிந்து பின்னும் சகல சத்துருக்களையும் மடிக்கலுற்ற வாக்கினே யாத்திரத்தை அவ்விஷ்ணுவின்மீது சந்தானிக்க, அவ்வத்திரத்தினால் அவர் மிகவும் பீடிக்கப்பட்டவராகி மூர்ச்சை தெளிந்தெழுந்தவுடன் வீரபத்திரர் ஓ! விஷ்ணுவே! இன்னும் நம்முடன் சண்டைக்கு வாருமென, அவ்வாறு அவரது வசனத்தைக்கேட்டு விஷ்ணுவானவர் கோபத்தினால் வியாகுலம் கொள்ளப்பெற்ற வுள்ளத்தைக் கொண்டவராகி அவ்வீரன் மீது அநேக தேவாத்திரங்களை நூற்றுக்கணக்குகளாயும் ஆயிரக்கணக்குகளாயும் வருஷிக்கலாகையில் அப்போது வீரன் அவைகளையெல்லாம் திறமைபெற்ற தேவாத்திரங்களாலே க்ண்டித்துவிட்டார். பிற்பாடு விஷ்ணு சத்துருக்களைக் கண்டிக்கலுற்ற பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிக்க, பராக்கிரமசாலியான வீரன் அதனையும் ஓர் பிரம்மாஸ்திரத்தாலே சேதித்துவிட்டார். மறுபடியும் மாதவன் வெகு கோபத்தோடு மகா கொடூரமுள்ள பல பாணங்களை வருஷிக்க கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! வீரபத்திரன் கேவலம் லீலாமாத்திரத்தினால் ஒரேசரத்தைவிட்டு அவைகளைப் பொடிப்பொடியாக்கி அவரது சார்ங்கமென்ற சிறந்த வில்லையும் துண்டித்துவிட்டுப்பின்னும் அப்பலவான் இரண்டம்புகளால் அவரது கருடனை யடிக்க, அதனால் அக்கருடன் மரணமடைந்து விட்டதைக் கண்டு விஷ்ணு வெகு கோபம் கொண்டவராகி உடனே தமது அனேக உருவங்களையும் சீக்கிரமாய் எடுத்துக்கொள்ள, அப்போது வீரன் மகா மாயாவி

யான விஷ்ணுவின் அவ்வுருவங்களை யெல்லாம் ஓர் கண மாத்திரத்தில் மகா பயங்கரமாகிய, தமது நெற்றிக்கண் நெருப்பினுல் எரித்துவிடலாகையில் அப்போது ஒண்டியாய் மிஞ்சலான விஷ்ணுவானவர் வீரபத்திரர் மீது ஜுவலிக்க லுற்ற தமது சக்கிரத்தைப் பிரயோகிக்க, சகல சத்துருக்களையும் கண்டிக்க லுற்ற மிகுந்த காந்தியுடைய அச்சக்கிரம் மகா வேகமாய் உயரக்கிளம்பி வெகு விரைவாய் அவரருகினில் வந்தவுடன் அதனை அளவற்ற பராக்கிரமத் தைக்கொண்ட அவ்வீரன் உல்லாசமாகவே கைதனிற் பற்றிவிட்டனர். பிற்பாடு திருமாலும் காலதண்டத்திற் கொப்பான தனது தண்டத்தை யெடுத் துச் சுழற்றி மகா மகிமை பொருந்திய அவ்வீரன் மீது மகாப் பிரயத்தினத் தோடெறிய, அதனை வீரன் தமது தண்டித்தினுல் அடித்துத் தூள்தூளாக்கி விட்டனர். பிற்பாடு விஷ்ணு வெகு கோபாவேசம் கொண்ட முகத்தைக் கொண்டவராகிக் கலகலவென்று கூச்சலிட்டுக் கொண்டு ஓர் பெரிய கத்தி தனை யெடுத்து அதிவேகவாய்க் கறகறவென்று சுழற்றிக்கொண்டு வெகு லாக வமாய்க் காலடிவைத்துச் சடுதியில் அங்குமிங்கும் ஓடிக்கொண்டே மதயானை சிங்கத்தினிடத்து எதிர்த்து வருவதுபோல் வீரபத்திரர் அருகினில் வந்தார். கேளீர்! சௌனகாதி முனிவர்களே! அப்போது சத்துருக்களைத் தொம்சிப் போரான அவ்வீரபத்திரர் அவ்வாறு மகாவேகமாய்வரலான அவ்விஷ்ணுவை ஓர் உம்கார மாத்திரத்தினுல் தம்பிக்கச்செய்ய, விஷ்ணுவும் உடனே சித்திரப் பதுமைபோல் அசைவற்றவராகித் தம்பித்து நின்ருர்.

கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! அப்போது வீரபத்திரர் "ஓ! இவ ரைப்பிசைந்து விடலாமா? அல்லது, அடித்துப் போடலாமா? அல்லது வேறெ ன்னதான் செய்யலாம்? ஒன்றும் தோன்றவில்லையே" என்று ஆலோசனை செய்கையில் அப்போது சிவாக்கினையின்படி "ஓ! சகலப் பிரபஞ்சங்களையும் சமூகரிக்கலுற்ற வீரனே! கோபத்தை விட்டுவிடு" என்ருேர் அசரீரி வாக்குண் டாயிற்று. பிறகு அப்பராக்கிரமசாலியானவர் அதனைக்கேட்டவுடன் இது சிவாக்கினை'யென்றே நிச்சயித்துக்கொண்டு கோபத்தைத் தமக்குள்ளடக் கிக்கொண்டனர். பின்பு பிரம்மன் அவ்விரதத்தை விட்டுச் சடுதியிலிறங்கி மெத்த வணக்கத்துடன் அஞ்சலிகொண்டவராகி வீரபத்திரரை நமஸ்காரம் பண்ணி "ஓ! கருணைக்கடலான தேவேசா! எந்தன் பிழைகளை மன்னித் தருளவேண்டும்" என்று அப்போது அவ்வீரனைத் துதிசெய்து அவரை மன மிரங்கச் செய்து கொண்டனர்.

இதே சமயத்தில் விஷ்ணுவும் அத்தேவேசனைத் தண்டம்போல் வந்தனி த்து பக்தியுடன் பல துதிகளால் தோத்திரம்பண்ணித் தமது பிழைகளை நீக் கிக் கொள்ளும்படி பிரார்த்தித்துக் கொண்டதாவது:—ஓ! சிவாக்கினையை நிறைவேற்றலுற்ற மகா வலிமை பொருந்திய வீரபத்திரா! சிவ நிந்தை செய் வதில் முயன்ற அத்தக்க பாதகனேடு சேர்ந்ததினுல் மூடபுத்தியுடைய யாங் கள் எங்களுக்குத் தக்கபடியுள்ள பயனையடைந்துவிட்டோம். ஓ! பிரபுவே! ஸகல ஸ்தாவர ஜங்கமங்கள், பூதங்கள், புவனங்கள், அகிலப்பிரம்மாண்டங்கள் இவைகளெல்லாம் தேவரீரது பார்வை, புன்னகைப்பு, அட்டகாசம், உள்மூச்சு

அல்லது வெளி மூச்சு இவற்றினுற் க்ஷேமமடையவும், சாம்பலாகவும் ஆகின்றது. ஓ! தேவரக்ஷகா! ஆகையினல் கேவலம் பஞ்சுதனுக்கொப்பாகியதேவர்களான எங்களிடத்துத் தேவரீர் உல்லாசார்த்தமாய்த் திருவிளையாடல்மட்டில் அருளினீர் என்பதில் ஆக்ஷேபனையில்லை. ஸகல பிரபஞ்சங்களையும் சமுகரிக்கவுற்ற தேவரீரெங்கே! கொசுக்களை ஒத்த இத்தேவர்களெங்கே! ஓ! புன்னகைப்பையே ஆயுதமாய்க்கொண்ட பிரபுவே! தேவரீருக்குப் படைகளாலும் ஆயுதங்களாலும் ஆவதென்ன? ஓ! வலிமைபொருந்திய வீரனே! வளர்த்துச் சொல்வதில்யாது பயன்? தேவரீர் அத்தீனர்களான இத்தேவர்களைக்காத்தருள வேண்டும். யானேஜெகதீசனுகிய ஸ்ரீபரமேசுவரனுடைய பிரகிருதி என்ற சக்தியாகின்றேன். தவிரவும் அப்பகவானிடமிருந்து சிரேஷ்டமான சாக்கிரத்தையும் அடைந்திருக்கின்றேன். மேலும் யான் விஷ்ணுத்தன்மையை யடைந்திருப்பதே சிவபூஜையின் மகிமையால் தான். ஓ! மகா பல பராக்கிரமம் பொருந்திய வீரபத்திரா! இப்போது எந்தன் பிழையை மன்னித்தருளவேண்டும்'' என்று உரைத்துவிட்டு அவ்வீரபத்திரரை அடிக்கடி வந்தனிக்க அப்போது வீரபத்திரர் பிரசன்னராகி அத்திருமாலுக்கு அருள்புரிந்தனர்.

இதற்கிடையில் ஸ்ரீமகாதேவர் கலியாண குணம் பொருந்திய ஸ்ரீபார்வதி தேவி ஸகிதராய் இருடபத்தின்மீது ஏறிக்கொண்டு நந்திகேசுவரன் முதலிய பிரமத கணங்களோடுகூட அங்கு ஆவிர்ப்பவித்தனர்.

## 35-வது அத்தியாயம்.

பிறகு வீரபத்திரன் ஜகத்குருவாகிய ஸ்ரீமகா தேவரைக் கண்டு வந்தனித்துப் பல துதிகளால் மிகுந்த பக்தியுடன் தோத்திரம்செய்து விட்டு அம் மகேசுவரன் சன்னதியில் அஞ்சலிகொண்டு நிற்கலாயினர். அப்போது பிரம்ம விஷ்ணுக்களும் மகா பயங்கொண்டவர்களாகிப் பிரமத கணங்களோடு கூடிய ஸ்ரீபார்வதி பரமேசுவரர்களை வந்தனித்து நின்றூர்கள்.

கேளீர்! பிராம்மணேத்தமர்களே! அப்போது தக்ஷன் பெண்ணுகிய கௌரியம்மையானவள் மரணமடைந்த தேவர்களையும் அஞ்சலிகொண்டு நிற்கலான அவ்விஷ்ணுப் பிரம்மர்களையும், இயாகம் தொம்சம் செய்யப்பட்டிருப்பதையும், தக்கன் பிணமாய்க்கிடப்பதையும் திருக்கண்ணுற்றதன்பேரிற் கருணைபுரிந்தவளாகிக் கருணைமூர்த்தியாகிய ஸ்ரீமகாதேவரை நோக்கித் திருவசன முரைத்ததாவது:—''ஓ! சுவாமி இவ்வெல்லோர்களும் கேவலம் அஞ்ஞானத்தினுல் அடியார்களுக்குச் சுகத்தை யருளுகின்ற மகாதேவரான தேவரீரை யறியாமல் மிகுந்த கர்வங்கொண்டதினுல் இப்போர்க்கொத்த கசையை யனுபவிக்கலானூர்கள். ஓ! பிரபுவே! இவையெல்லாம் எந்தன் நிமித்தத்தினுலே ஆகையால் எல்லோர்களையும் பிழைப்பு மூட்டியருள வேண்டும்'' என்று உரைத்துவிட்டு அம் மகாதேவி ஸ்ரீ மகேசுவரனைத் தண்டம் பண்ணினுள். பிறகு கருணுமூர்த்தியாகிய அப்பகவான் அவளது வசனத்தைக் கேட்டுத் திருவுளத்தில் வைத்துக்கொண்டு முன்னிலையில் அஞ்சலிகொண்டு நிற்கலான வீரபத்திரரை நோக்கி ''ஓ! வீரபத்திரா! நமதாக்கினையின்படி இவர்களைச்சீக்கிரம்

பிழைப்புமூட்டி வைக்கலாவாய்" என்று அத்தயாநிதி திருவாக்கருளியவுடன் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! வீரபத்திரர் சிவாக்கினையைச் சிரமேற்கொண்டு அத்தேவர்களை எல்லாம் கருணைக்கண்களாற் பார்த்துப் பிழைக்கச் செய்தனர். உடனே மடிந்துகிடந்த தேவர்களெல்லாம் தூக்கத்தினின்று எழுந்திருப்பவர்கள்போல் எழுந்துவிட்டார்கள். தக்கன் கூட்டத்திற் சேர்ந்திருந்ததெல்லாம் அவர்களுக்குக் கனவுகண்டதுபோலிருந்தது.

பிற்பாடு அவர்கள் அம்பிகைக்கு மித்திரரும், அழிவற்றவரும், அஷ்ட ஐசுவரிய ஸம்பன்ன மூர்த்தியுமான ஸ்ரீ சதாசிவனைத் தண்டம்போல் வந்தனித்து மிகுந்த பய பக்தியுடன் பல துதிகளால் தோத்திரம் பண்ணி, கேளீர் முனிவர்களே! அவர்கள் ஸ்ரீ மகாதேவரை நோக்கி வசன முரைத்ததாவது:—ஓ! கருணைக் கடலும் பிறர் நன்மையையே முக்கிய பிரயோஜனமாய்க் கொண்டவருமான ஸ்ரீ மகாதேவா! ஓ! பரமசிவா! இத்தேவர்களாகிய நாங்களெல்லாம் மகா பாவியான தக்கன் சேர்க்கையாலுண்டானதும், வெகுகாலமளவும் அதன் பயனை அனுபவிக்கத் தக்கதுமான மகா பாவத்தினின்று எல்லோரும் சீக்கிரமாய் ஏககாலத்தில் விடுபடலானோம். ஓ! சரணமடைந்தோரின் துக்கத்தை நாசம் செய்விக்க வந்த பரமேசா! மகா மூடபுத்தியுடைய இத்தேவர்களுக்கு உலகங்களில் தேவரீரைத் தவிர யாவர்தான் கதியிருக்கிறார்கள்? தேவரீரே சரணம்! முந்தி மகா பரிசுத்தம் பொருந்திய கங்கையைச் சிரசினில் தாங்கலானீர். தேவர்களை எல்லாம் காப்பாற்றுவதற்காகத் தளிர்போன்ற கைதனில் அக்கினியை ஏந்தினதுமின்றி ஆலகால விஷத்தையும் உண்டிருக்கிறீரன்றோ? மேலும் இது முதலிய பல அபாயங்களிலிருந்தெல்லாம் தேவரீர் எங்களைக் காப்பாற்றியிருக்கின்றீர். ஓ! பரமேசுவரா! ஆகையால் மகாபயம் கொண்டிருக்கின்ற எங்களுக்குத் தேவரீரே இரக்ஷகர். மகாதேவா போற்றி! அடியார்களின் வேண்டுதலை வருஷிப்போரே போற்றி! சடையரே போற்றி! நிம் பொன்னடி போற்றி! சகலர்களையும் இரக்ஷிக்க முயன்றவரே போற்றி! போற்றி!" என்று அத்தேவர்கள் அப்போது இவ்வாறு உரைத்துவிட்டு அடியார்களுக்கு நேசரான அம்மகாப் பிரபுவை நமஸ்கரித்தார்கள்.

அப்போது அவர் மந்தகாசமுற்ற முகாரவிந்தத்தைக் கொண்டவராகி விஷ்ணு பிரம்மர்கள் முதலிய அவ்வெல்லாத் தேவர்களையும் கிருபா திருஷ்டியால் நோக்கியருளிக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! உலகரக்ஷார்த்தமாக அவர்களை அவரவர்கள் பதவிகளுக்கு அனுப்பலாயினர். அவ்வாறு கட்டளையிடப்பட்டவுடன் தேவர்கள் முக்கண்ணராகிய ஸ்ரீ மகாதேவரை மிகுந்த பக்தி விசுவாசத்துடன் தண்டம்போல் வந்தனித்தார்கள். பிறகு பிரம்மாவானவர் பிரணதார்த்திஹரரான ஸ்ரீ மகாதேவரை நமஸ்கரித்து ஓ! சரணமடைந்தோரைக் காக்கலுற்ற மகாதேவா! சுயாதீனமுடைய சக்தியுடையோரே! சருவஞ்ஞா! சகல பிராணிகளுக்கும் சுகத்தை அருளமுயன்றவரே! இத்தக்கனையும் உயிர் பிழைப்பித்தல் வேண்டுமென்று இப்பிரகாரமாக அடியார்களுக்கு வசப்பட்டவரும், கருணைக் கடலுமான ஸ்ரீமகாதேவரைப் பிரார்த்

தித்துக்கொள்ள அவ்வாறு வசனத்தைக் கேட்டவுன் பிநாகபாணியான பரம சிவன் சமீபத்திலிருந்த வீரபத்திரரைத் திருக்கண்ணருளும்போது அவர் அச்சாடையறிந்து கொண்டு சிவாக்கினையின்படி பானுகோபன் என்ற கணத் தலைவனை அத்தக்கனுடலைக் கொண்டுவரும்படி அனுப்ப, கேளீர்! முனிவர் களே! அப்போது அப்பலவான் அதனைக் கொண்டுவந்தவுடன் சிவாக்கினையை நிறைவேற்றலுற்ற அவ்வீரன் தக்க பாதகனுடைய முண்டத்தில் ஓர் ஆட்டுத் தலையைச் சேர்த்து உயிருண்டு பண்ணினார்.

பிறகு தக்கன் தூங்கியெழுந்திருப்பதுபோல் எழுந்திருந்து மிகுந்த பயங்கொண்டவனாகி அவ்வீரபத்திரரை நமஸ்கரித்துவிட்டுத் தனது பாவத்தை நினைந்து மிகுந்த பீதியுடன் அவர் முன்னிலையில் அஞ்சலிகொண்டு நின்றான். பிறகு அவன் உடனே ஸ்ரீ பார்வதீ பரமேசுவரர்களைத் திருவுருதின் பேரில் கண்டு மகா பயங்கொண்டவனாகி அஞ்சலிகொண்டு நமஸ்கரிக்க, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! கருணைக்கடலான அப்பகவான் நடுங்க லுற்ற வுடலைக்கொண்ட அத்தக்கனை நோக்கி, ஓ! தக்ஷா! நீ பயப்படவேண் டாம்; யாம் உந்தனுக்குப் பிரஸன்னராகி விட்டனம் என்று மனதிற்கொள் என, செவிதனுக்கு இன்பம் அளிக்கலுற்ற இவ்வாறு அவரது திருவசனத் தைக் கேட்டு, கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! மிகுந்த பக்தியுடன் அஞ்சலி கொண்டு மறுபடியும் அவரை நமஸ்காரம்பண்ணி ஓ! மகாப்பிரபுவான மகா தேவா! தேவரீரைத் தரிசித்த மாத்திரத்தினால் அடியேன் கிருதார்த்தனாகி விட்டேன். ஓ! தேவ தேவேசா! தேவரீரை விலக்கி இத்தேவர்களைச் சேர்த்துக்கொண்டதற்காக தேவரீராக்கினையால் அதிசீக்கிரத்தில் தக்கபயனை யனுபவித்தேன். ஓ! கருணைக்கடலான மகாதேவா! எந்தன் பிழையை மன்னித்தருளல் வேண்டும். ஓ! தேவேசா! தேவரீர் பொன்னடி மீது வந் தனம் செய்கின்றேன்; பின்னும் பின்னும் வந்தனம் செய்கின்றேன். ஓ! சம்போ! ஸ்தாவர ஜங்கம ஸ்வரூபியான இச்சகங்களெல்லாம் தேவரீராதீனத் திலுள்ளதே. தேவரீரால் அருளப்பட்ட திருவாக்கினையை மீறுவதற்கு யாவர் தான் வல்லவர்? ஓ! சுவாமி! தேவரீர் ஆக்கினை மீறியதால் யான் இப் பயனை! யடையலானேன் என்று அத்தக்கன் அஞ்சலிகொண்டு உரைத்து நிற்கையில் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அப்போது ஸ்ரீ கௌரியம்மை யானவள் நேச ரஸம் பொருந்திய திருமுகத்தைக் கொண்டவளாகி வீரபத் திரரை நோக்கி மிகுந்த சந்தோஷத்தோடு அவரது முதுகினில் தம் திருக்கை யினால் தடவிக்கொடுத்து மெத்த மனக்களிப்புடன் அவருக்குப் பின்னும் பின் னும் அனேக வரன்களைக் கொடுத்தருளினள்.

அப்போது ஸ்ரீபரமேசுவரன் விஷ்ணு முதலிய தேவர்களை நோக்கித்திரு வாக்கருளியதாவது:—ஓ! தேவர்களே, உங்களால் செய்யப்பட்ட பாவத்துக் குத்தக்கபயனை யாம் கொடுத்தனம் என, இவ்வாறு அவரது திருவசனத்தைக் கேட்டு அப்போது அத்தேவரெல்லாம் ஸ்வாமி, அம்மன், மகா பலவானாகிய வீரபத்திரர் இவர்களை நமஸ்காரம் பண்ணிவிட்டு எல்லோர்களும் அஞ்சலி கொண்டவர்களாகி ஜயா விஜயீபவா! என்று கூறிக்கொண்டு அப்பெரியதான

யாகசாலையின் மற்றோரிடத்தில் நின்றார்கள். பிற்பாடு ஸ்ரீ பரமேசுவரன் பார்வதீ அம்மையோடுகூடப் புறப்பட்டு பத்திரகாளியோடு கூடிய வீரபத்திரராலும் ஸகல பிரமதகணங்களாலும் சூழப்பெற்றவரும் பற்பலவித வாத்தியகோஷங்களாற் சகல திசைகளும் நிரம்பப்பெற்றவருமாகி மலைகளிற் சிறந்த கைலைகிரியடைந்தனர். அங்கு ஸர்வப் பிரபஞ்சஸ்வரூபியும், சர்வலோக பூஜிதருமான ஸ்ரீ பகவான் தேவியோடு கூடச் சிங்காதனத்தில் வீற்றிருந்து பத்திரகாளியோடு கூடிய வீரபத்திரரை அவரது சைனியங்களோடு கூட அவர் இருப்பிடத்திற் அனுப்பியருளினர்.

பிறகு பலவான்களிற் சிறந்த வீரபத்திரரும் ஸ்ரீ பரமேசுவரன் கட்டளையைச் சிரசினால் வகித்துக்கொண்டு பார்வதி பரமேசுவரர்களைப் பத்திரகாளியோடு கூட நமஸ்கரித்துவிட்டு இரதமதில் ஏறிக்கொண்டு சகல வீரர்களாலும் சூழப்பெற்றவரும் பானுகம்பனென்ற கணத்தலைவனால் ஸாரத்தியம் செய்யப்பெற்றவருமாகி புறப்பட்டுக் கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மிகுந்த மனச்சந்துஷ்டியுடன் தம் நகரம் சேர்ந்தனர்.

## 36-வது அத்தியாயம்.

பிற்பாடு பிரம்மன் மிகவும் துக்காக்கிராந்தனாகிய தமது மைந்தனை நோக்கி உரைத்ததோவென்றால்:—அடா! தக்ஷா! நீ மிகுந்த மதிமயக்கத்தினால் என்ன காரியம் செய்யலானாய்? தேவர்கள், மகாத்துமர்களாகிய முனிவர்கள், பிராம்மணர்கள் இவர்களுக்கெல்லாம் நாசத்தைக் கொண்டு வந்துவிட்டாயல்லவோ? தவிரவும் நீ அடைந்திருந்த புகழும், சம்பத்தும் மற்றுமுள்ள உன்தன்னைச் சார்ந்தவர்களும் நாசமாய்ப் போயினர்கள். நீ ஸ்ரீ ஸாம்பமூர்த்தியை இகழ்ந்ததனால் இப்பயனை அடையலானாய். அடா! மைந்தா! உந்தனுக்கு மட்டில் ஸ்ரீ பரமேசுவரனிடத்து மிகுந்த மதிமயக்கம் உண்டாயிற்றென்பதில்லை. ஜகதீசனுடைய மாயையால் முந்தி எந்தனுக்குக் கூட புத்தி மிகவும் கெட்டுப்போகலாயிற்று. அப்போது அப்பகவானே வந்து எந்தனைக் காப்பாற்றினர். ஆகையால் நீ சகல க்ஷேமங்களையும் செய்தருளவுற்ற அத்தேவேசனைப் பூஜைசெய்யலாவாயென, தக்ஷன் ஓ! தந்தாய்! தயாநிதியாகிய அப்பரமேசுவரனிடத்து உமக்கு எப்போது புத்திக்கேடு உண்டாயிற்று? மோகம் கொள்ளலான உம்மை அவர் இவ்வாறு வந்து காப்பாற்றினர்? ஓ! பிரபுவே! இக்கதையை எந்தனுக்கு உள்ளபடி எடுத்துரைக்க வேண்டுமென்றனன்.

தக்கனுடைய இவ்வாறு வசனத்தைக்கேட்டு அப்போது பிரம்மனுரைத்ததாவது:—அடா! புத்திரா! உந்தனுக்கு இதனை முந்தியே உரைத்திருக்கின்றனம்; ஆகிலும் பின்னும் ஓர்வாறு சொல்லுகின்றோம்; நீ ஜாக்கிரதையாய்க் என்று அவர் சொல்லிவிட்டு அஞ்சலிகொண்டவராகி சமுசாரமாகிய நோய்க்கு ஒளஷதமான ஸாக்ஷாத் ஸ்ரீ மகா தேவரை ஹிருதய கமலத்திடத்தில் தியானம் பண்ணிக்கொண்டு உரைத்ததாவது:—ஓ! கேளாய்! எந்தன் புத்திரனே! ஆயிரம் சதுர்யுகங்கள்கொண்டது எமக்கு ஒருபகல், எமது இரவும் அவ்வளவே,

அவ்விரவு முழுமையும் நமக்குத் தூக்கம் தான். அப்போது சூரிய சந்திரர் முதலிய கிரகங்களும் நக்ஷத்திரமண்டலங்களும் ஒன்றுமில்லை. இச்சகமெல்லாம் ஸத்திய லோகமளவும் ஜலத்தால் மூடப்பட்டிருக்கும். ஆனால் முப்பத்திரண்டு தருமங்களையும்ஆசரிப்பவளும் அடியார்களுக்குவேண்டிய பொருட்களை அருளலுற்றவளும் உலகினில் காமாக்ஷி என்று பிரசித்திகொண்டவளுமான ஸ்ரீபரமேசுவரியால் விளங்கப்படா நின்ற ஸ்ரீ காஞ்சிபுரம் மட்டில், ஓர் குடமானது கடலினிற் கவிழ்க்கப்பட்டிருக்கும்போது ஜலம் அதன் உட்புறத்திற்கொள்ளாமல் வெளியில்தானே இருப்பதுபோல் ஜலம் கொள்ளப்படாமலிருக்கும். அப்போது மலைகளுக்கு ஈசனான கைலைகிரியானது மகாஉன்னதமாய் வளரலாகி அதனிலிருக்கும் ஓர் ஆல விருக்ஷத்தினின்று அச்சலப் பிரவாகத்தின்கண் விழலான ஓர் ஆல் இலைமீது விஷ்ணு ஒருவர் மட்டில் ஓர் இளங்குழந்தை உருவத்தோடு பள்ளிகொண்டவராகி மகா பயங்கரமான அச்சலாசயத்தில் அவ் விரவு முழுதும் உலாத்திக்கொண்டிருப்பார்.

பிறகு அப்போது ஸகல பிரபஞ்சங்களையும் நாசமாக்கிய அவ் விரவு முடிந்தவுடன் அவ்விஷ்ணுவானவர் பன்றி உருவம் எடுத்துக்கொண்டு நடு ஜலத்தில் முழுகிப் போகலான பூமிதனை உயரக்கிளப்பிவிட்டு அதி சீக்கிரத்தில் முன்போல் நிலைநிறுத்தி வைக்கலானார். கேளாய் மைந்தா! அப்போது யானும் முன்போலவே சகல பிரஜைகளையும் உண்டாக்கி விட்டேன். ஓ! புத்திரா! அப்போது நம் கஷ்டகாலத்தினால் சிவாக்கினையின்படி எனக்கு மிகுந்த புத்திப் பிரமமுண்டாயிற்று. பிறகு யானே "ஜகங்களுக்குக் கர்த்தாவேயின்றி மற்றொருவரும் இல்லை. ஜகமெல்லாம் நான் தூங்கினால் தூங்குகின்றது, விழித்தால் விழிக்கலாகின்றது. தேவர்கள், அசுரர்கள், யக்ஷர்கள் இவர்களும் ஸகல ஸ்தாவர ஜங்கமங்களும் நமது வசத்திலே உள்ளவர்கள். இச்சகமதில் நமக்குக் கர்த்தா வேறு ஒருவருமில்லை; யாமே யோகீசுவரர்களால் தியானம் செய்யத்தக்கதுற்ற நித்தியமான பரப்பிரம்மம்" என்று இவ்விதமாய் எல்லாம் யான் மதம்பிடித்தவனாகி நமது இருப்பிடமாகிய சத்தியலோகத்தினின்று வெளிக்கிளம்பி மேரு, மந்தரம், கைலாஸம், சக்கிரவாளம், முதலிய பருவதங்கள், தீவுகள், சமுத்திரங்கள், பற்பல லோகங்கள் இவைகளிலெல்லாம் வெகு கர்வத்தோடு திரிந்துகொண்டு அங்கங்குள்ள விநோதங்களை எல்லாம் பார்த்துக்கொண்டு, பிறகு யாம் விஷ்ணு யோக நித்திரை செய்து கொண்டிருந்த திருப்பாற்கடலுக்குப் போய் அங்கு ஓ! இப்பூமியானது நம்மாலே உயரக்கிளப்பி முன்போல் ஸ்தாபிக்கப்பட்டபடியால் நாமே ஜகங்களுக் கதிபரென்று மனதில் நினைத்துக்கொண்டே ஆதிசேடன்மீது பள்ளிகொண்டு மிகுந்த மதம்கொண்டிருந்த விஷ்ணுவைக்கண்டு கேளாய்! புத்திரா! அவரது நடுமார்பினைத்தட்டி அவரை எழுப்ப, உடனே அவ்விஷ்ணு பரபரப்பாய் எழுந்து வெகு கோபத்தோடு பேசினார்.

அப்போது யாம் மெத்த அகங்காரத்தோடு அவரை நோக்கி, 'நீ யார் சொல்' என்றனம். அப்போது அவர் எமது வசனத்தைக்கேட்டு " அடா! நாம் உந்தனுக்குத் தகப்பனென்றும், ஸகல பிரபஞ்சங்களுக்கும் கர்த்தாவென்

றும் மனதினிற் கொள்'' என்று இவ்விதமாக வெகு கோபத்தோடு உரைத்தார். அதற்கு ''யாம் அடா! இப்போதுகூட என்ன தூக்கமோ சொல்? சகல லோகங்களுக்கும் சிருஷ்டி கர்த்தாவான நம்மைக்கூட நேர்விரோதமாய் உந்தன் புத்திரன் என்கிறாய்; அடா உந்தன் புத்திப்பிரமத்தைவிட்டு நம்மையே பரப்பிரம்மமென்றறிந்து சீக்கிரமாய்ச் சுகத்தை யடைந்துகொள்', என்றுரைக்கலான நம்மைப் பார்த்து அவர் கோபத்தோடு உரைத்ததாவது:—

ஓ! நமது புத்திரனாகிய பிரம்மாவே! நீ முந்தி நமது நாபிகமலத்தினின்று உண்டானவன். ஓ! கோ! அதனை மறந்துவிட்டு இப்போது விரோதமாய்ப் பேசுகின்றாயே! நமது மைந்தனாகிய உந்தனுக்கு நாமின்றி பிறப்பேது? ஈசுவரத்தன்மை தானேது?'' என இவ்வாறு விஷ்ணு உரைத்த வார்த்தையைக் கேட்டு நாம் பின்னும் உரைத்ததாவது:—ஓ! விஷ்ணுவே! அரணி (யாகாதிகளுக்கு நெருப்பு கடைந்தெடுக்கப்படுகிற வன்னிமரக்கட்டை)யினின்று அக்கினியுண்டாவதினால் அதற்கு இது பிள்ளையாக மாட்டாது. அதே விதமாய் நாம் நமது இச்சையாய் உன்னிடமிருந்து ஆவிர்ப்பவித்தனம். அங்ஙனமாயின் அதே மாதிரியாய் நீயும் (நரசிங்காவதாரத்தில்) கம்பத்தினின்று உண்டாயிருக்கின்றாய். ஆகையால் உந்தனை யாம் இப்போது கம்பத்தின் மகன் என்றே தடையின்றிச் சொல்லுகின்றோம். ஓ! கோ! துர்புத்தி கொண்ட விஷ்ணுவே! முந்தி நீ பிருகு மாமுனிவரால் சபிக்கப்பட்டதனால் உந்தனுக்குப் பத்து ஜன்மங்கள் நம்மால் அடிக்கடி சிருஷ்டிக்கப்பட்டு சிருஷ்டிக்கப்பட்டு சிருஷ்டிப்பவரான நமது கை இப்போதுகூட மிகவும் சிவந்திருக்கின்றது. என இவ்வாறுரைத்த நம்மை நோக்கி விஷ்ணு மறுபடியும் உரைத்ததாவது:— அடா பிரம்மனே! நம்மைக்கூட நீ சிருஷ்டிப்பவனாகில் முந்திச் சிவனால் அறுக்கப்படலான உனது ஐந்தாவது தலையை நம்முன்பாக இப்போது சிருஷ்டித்துக்கொள் பார்ப்போம். ஆகையினால் நாமே ஜகங்களுக்கதிபர். அதிலும் விசேஷமாய் உந்தனுக்கு அதிபர். இப்படி இருக்கையில் நீ மிகுந்த புத்திப் பிரமத்தினால் நம் முன்னிலையிலே ஏதேதோ உரைத்தாயல்லவா! என்று இவ்விதமாய் விஷ்ணு உரைக்கையில் நாமும் அப்போது அதே விதமாய் உரைத்தனம். மிகுந்த புத்திக்கேட்டினால் நாம் முன்னே நாம் முன்னே என்று பேசிக்கொண்ட எங்களிருவருக்கும் அப்போது மிகுந்த வாக்குக் கலகம் உண்டாயிற்று.

பிறகு சண்டையிட்டுக் கொள்வதில் ஜயம் பெறுவோரே பெரியவரென்று சபதம் பண்ணிக்கொண்டு யாங்களிருவரும் மதங்கொண்டவர்களாகி ஒருவரோடொருவர் வெற்றியை விரும்பிக்கொண்டு பற்பல ஆயுதங்களால் அதி சீக்கிரத்தில் மகா பயங்கரமான யுத்தம் தொடுத்துக் கொண்டோம். பிற்பாடு விஷ்ணு வெகுகோபம் கொண்டவராகி ஜயம்பெறவேண்டி நம்மீது மகாபயங்கரமான நாராயணாஸ்திரத்தைப் பிரயோகித்தார். பின்பு நாம் அதனை அதே அஸ்திரத்தினால் வெற்றிகொண்டு மறுபடியும் கோபம்கொண்டு அவர் மீது பிரம்மாஸ்திரத்தைத் தொடுக்க, விஷ்ணுவும் அதே அஸ்திரத்தினால் அதனைக் கண்டித்து விட்டார். இம்மாதிரியாய் ஒருவரோடொருவர் அஸ்திரத்துக்

குப் பதிலத்திரம்போட மெத்த திறமை பெற்றவர்களாகி அடிக்கடி முறித்து முறித்தெறிந்து பிரம்ம விஷ்ணுக்களாகிய யாங்களிருவரும் மதம் பிடித்த யானைகள்போல் மகாகோரர்களும், மகா வேகமுடையவர்களும், மகா வலிமை கொண்டவர்களுமாகிப் போர்புரிந்தனம்.

பிற்பாடு ஒருவரோடொருவர் மகா கோபம் கொண்டவர்களாகி மற்ற வரை நாசம் பண்ணித் தாம் வெற்றி பெறக்கருதி எல்லாவற்றையும் விழுங்கி விடலுற்ற மகா கோரமான சிவாத்திரத்தைப் பிரயோகம் பண்ணினோம். எங்களிருவர்களாலும் ஏவி விடப்பட்ட மகாகோரமான அவ்வத்திரம் வெளிப் பட்டபோது அதனால் சமுத்திரமெல்லாம் வற்றிப்போயின. மலைகளெல் லாம் பொடிப்பொடியாயின. அப்போது பூமியானது வெடித்து ஆதிசேடன் தலைமீது நடுங்கிக் கூத்தாடிற்று. தேவர்கள், முனிவர்கள், மானிடர்கள் எல் லோரும் பயந்து ஓட்டமெடுத்தார்கள். அநேகம் பெயர்கள் கிலேசப்பட்டு இறந்தார்கள். சிலர், கால், கைகள் முறியப்பெற்றார்கள். மற்றவர்கள் மலை களுக்கு ஈசனான கைலைகிரிக்குச் சீக்கிரமாய் ஓடி ஒண்டினார்கள். ஓ! புத்திரா! இவ்விதமாக அவ்விரு சிவாத்திரங்களும் சகல வுலகங்களையும் தகிக்கும்போது நமது புத்திரரான நாரதமாமுனிவர் அங்கு வந்து பிரம்ம விஷ்ணுக்களாகிய எங்களிருவரையும் கண்டு வசனமுரைத்ததாவது "ஓ! பிரம்ம விஷ்ணுக் களே! உங்களுக்கு உயிர் கொடுத்தவர் ஸகல பிரபஞ்சங்களுக்கும் கர்த்தா வாகிய ஸ்ரீ பரமேசுவரனென்றே யறியாமல் மூடர்களாய் மகா மோகம் மேலிட்டு என் வீணாய்ச் சண்டையிட்டுக் கொள்ளுகிறீர்கள்? இப்போது உங் களுக்குச் சண்டை வேண்டாம். ஸ்ரீபரமேசுவரன் இப்போது அதிசீக்கிரத்தில் உங்கள் வலிமையைப் பரிசோதிப்பதற்காகச் சோதிலிங்க ரூபியாய் இங்கு ஆவிர்ப்பவிக்கப் போகின்றார்" என்றுரைத்து விட்டுத் தவத்தையே தனமாய்க் கொண்ட அம்மாமுனிவர் சென்று விட்டார்.

அத்தேவரிஷி சென்ற பிறகு யுத்தத்தில் கெட்ட மதங்கொண்ட எங்களி ருவருக்கும் ஆயிரம் ஆண்டளவும் பயங்கரமான யுத்தம் நடந்தது. பிறகு அதன்முடிவில் ஜகத்குருவாகிய ஸ்ரீ பகவான் லோகங்கள் தொந்தரவுபடுவதைக் கேட்டு மாசிமாத கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி தினத்தின் (மகாசிவராத்திரி) பாதி ராத்திரியில் ஒப்பற்ற ஒளியைக் கொண்டவராகிச் சோதிலிங்கரூபியாய் ஆங் காவிர்ப்பவித்தனர். கேளாய்! புத்திரா! அப்போது இச்சைவாத்திரமானது அச்சோதிதனில் லயித்துவிடலாயிற்று. நாங்களிருவரும் நிமிர்ந்து பார்த்துக் கொண்டே அவ்வற்புதத்தைக் கண்டோம். அப்போது நடுவானத்தில் ஓர் வாக்குத் தொனித்ததாவது:—அடா அடா! மகா மோகத்தைப் பாராட்டிய பலவீனர்களான பிரம்ம விஷ்ணுக்களா! ஸ்ரீ மகா தேவரது சிரேஷ்டமான வலிமையைத் தவிர உங்கள் வலிமை என்ன வலிமை? உங்களுக்கு வலிமையே இல்லை என்று யானிப்போது ஸத்தியமாய்ச் சொல்லுகின்றேன். ஆனால் சோதிரூபியான இந்த லிங்கத்தின் உச்சியையும் அடியையும் உங்களில் யார் காண்கின்றீர்களோ அவரே பலவான்களுக்கு எல்லாம் சிறந்தவர்" என இவ்வாறு வசனத்தை யாங்கள் இருவரும் கேட்டவுடன் கேளாய்! புத்திரா!

அப்போது யாங்கள் இருவரும் கோபத்தை விட்டு விட்டு மறுபடியும் எங்களுக்குள் மிகுந்த கர்வம் கொண்டவர்களானோம்.

## 37-வது அத்தியாயம்.

பிற்பாடு யாங்களிருவரும் அவ்வாக்குதனை ஆலோசித்து மிகுந்த குதூகலம் கொண்டவர்களாகி எதிரினில் விளங்கலான ஒளி பொருந்திய அச்சோதிதனைக் கண்டுகூட மகா சர்வம் கொண்டவர்களாகி அதனை ஓர் அக்கினி என்று கருதிச் சட்டை செய்யாமல் தன் மேற்பாகத்தையும் கீழ்ப்பாகத்தையும் மெளிதினிற் காண இச்சை கொண்டு ஒருவருக்கொருவர் பிரதிக்கினை செய்து கொண்டு ஆயிரம் யோஜனை உயரமுள்ளவைகளும், மிகுந்த வேகத்தையும் வலிமையையும் கொண்டவைகளுமான அன்னபக்ஷி உருவத்தையும், பன்றி யுருவத்தையும் கொண்டவர்களாகி யான் மேற்புறத்தையும் விஷ்ணு கீழ்ப்புறத்தையும் காண்பதற்காகச் சென்றோம். பிற்பாடு விஷ்ணு வெகுதூரம் சென்று மனம் ஒடிந்தவரும், மேனி மிகவும் நொறுங்கப் பெற்றவருமாகி அப்போது மிகுந்த துக்கங் கொள்ளலாயினர். மேலுமவர் திரும்பி வருவதற்கும் ஓரடிகூடத் தூக்கிவைக்கவும்சக்தியற்றோராயினர். தவிரவும் அப்போதவர் கேளாய்! புத்திரனே! அப்பன்றி உருவத்தை விலக்கிக் கொள்வதற்குக் கூடத் திறமையற்றவராகி அப்போது ஸாக்ஷாத் ஸ்ரீ பரமசிவனையே மேன்மை பொருந்திய ரக்ஷகரென்று நினைத்தார். அதன்மேல் அவருக்குச் சிவாக்கினையினால் கொஞ்சம் வலிமையுண்டாகி அப்பரஞ்சோதியின் கீழ்ப்பாகத்தைக் காணாமலே மாதவன் சடிதியில் திரும்பிப் பூதலத்துக்கு வந்து கேளாய்! புத்திரனாகிய தக்ஷா! நமஸ்காரம்பண்ணிவிட்டு மேனி நடுங்கப்பெற்றவராகி அச்சோதியின் முன்னிலையிலே நின்று கொண்டிருந்தார். அப்போது யானோவென்றால் அன்னபட்சி உருவமெடுத்துக்கொண்டு ஆயிரம் வருடமளவும் உயரவுயரப் பறந்து இரக்கைகள் நோய் கொள்ளப்பெற்றவராகி உயரச்செல்லத் திறமை யற்றுப் போய்ச் சோதிலிங்கத்தின் முடியைக் காணாமலே அங்கும் இங்கும் தத்தளித்துக் கொண்டு ஓர் கண நேரம் அங்கு தானே யிருந்துவிட்டேன்.

ஓ! தக்ஷா! அப்போது சில சித்தர்களும், யோகீசுவரர்களும் உருத்திராக்ஷங்களை ஆபரணங்களாய்ப் பூண்டு கொண்டு அச்சோதிப் பொருளின் இடது பக்கத்தினின்று புறப்படலாகி "ஓ! இப்போது மிகுந்த அஞ்ஞானத்தினால் மூடப்பட்ட இவ்வன்னப்பட்சியானது இனி ஓரடியாவது உயரப்பறக்கில் செத்துப்போய்விடும். விஷ்ணுகூட பராபரமான இச்சிவ ஜோதியை அறியாமலே இச்சோதிப் பொருளின் அடிப் பாகத்தைக் காணாமல் கிலேசப்பட்டுத் திரும்பிச்சென்று மிகவும் களைத்துப்போய் நமஸ்காரம் பண்ணிவிட்டு மிகவும் பயங்கொண்டவராகி இருக்கின்றார். ஓ! மகா பேதமைகொண்ட இப்பறவைக்கு ஸ்ரீ ஸர்வேசுவரன் அருளினால் உயிர் இருக்கின்றதேயின்றி இல்லாவிடில் இதுசந்தேகமேயின்றி செத்துப்போய் விடும்'' என்றவர்கள் ஒருவரோடொருவர் என் முன்னிலையிற் பேசிக்கொண்டே சென்றார்கள்.

கேளாய்! மைந்தனே! பிறகு அவர்கள் வசனங்களைக் கேட்டதன் பேரில் எனக்கும் அறிவுண்டாகி மதிமயக்கம் தெளிந்து விட்டபடியால் யான்

சீக்கிரமாய்த் திரும்பிப் பூதலத்துக்கு வந்து மிகுந்த பயத்தோடு ஸ்ரீ மகா தேவனைப் பல துதிகளால் அனேகவிதமாய்த் தோத்திரம் பண்ணிவிட்டு அங்கு மிகுந்த பயத்தோடு அஞ்சலிகொண்டிருக்கும் விஷ்ணுவைக் கண்டேன். பிறகு அப்போது எங்களிருவருக்கும் சிவாக்ஞையினால் இங்கு இச்சோதி தனில் சிவ பூஜைசெய்யப் புத்தியுண்டாகி ஓ! விஷ்ணுவே! வீண் மோகவசத் தினால் யாம் இங்கு புத்தி கெட்டுப்போனோமென்று அப்போது நாங்கள் ஒரு வருக்கொருவர் பேசிக்கொண்டு பூஜை செய்யத் தீர்மானித்தவர்களாகி ஸ்ரீ மகா தேவரை மிகுந்த பக்தியோடு பூஜை செய்தனம். ஓ! தக்ஷா! பிற்பாடு ஸ்ரீ பக வான் கௌரிதேவியோடு கூட மாயா சம்பந்தமற்ற திவ்ய சரீரத்தைக்கொண்ட வரும் இலக்ஷ்மி விலாசம் பொருந்தியவரும், சந்திரகலையை உச்சி அலங்கார மாய்ப் பூண்டவரும், சுத்தமான படிகத்துக்கு நிகரானவரும், முக்கண்ணு டையவரும் கறுத்த கழுத்தை யுடையவரும், அபயஹஸ்தம் கொண்டவரும், மகா சௌந்தரியம் பொருந்தியவரும், பரசுவாயுதம், மான் இவைகளால் விளங்குலுற்ற திருக்கையையுடையவருமாய் இச்சோதியினின்று ஆவிர்ப்பவித் தார். பிறகு உலகங்களுக்கெல்லாம் சுகத்தை அளிக்கலுற்ற அஷ்டைசுவரியம் பொருந்திய அம்மகா தேவரை யாங்கள் தரிசித்து மிகுந்த பக்தியோடு நமஸ் காரம்பண்ணி அனேகம் துதிகளால் பலவாறாய்த் துதித்து "ஓ! சங்கரா! எங்க ளுடைய இப்பேர்க்கொத்த அபராதத்தை தேவரீர் மன்னித்தருள வேண்டும். தேவரீரே சகல புவனங்களுக்கும் பராபர குருவும், சகல லோகங்களுக்கும் நன்மையைச் செய்தலிலே முயன்றவரும் ஆகின்றீர்" என்று சூலபாணியான அம்மகா தேவரை யாங்கள் வேண்டிக்கொண்டு அப்போது கேளாய்! தக்ஷா! சந்திர சேகரரும், திவ்ய மங்கள மூர்த்தியுமான அப்பகவான் முன்போல் எங் களுக்கு அவரவர் பதவியை அருளி அப்போது ஸர்வஸ்வரூபியான பரமேசு வரன் எங்களிருவரையும் சுயேச்சையாய் அனுப்பிவிட்டுப் பிறகு அவர் அப் பெருஞ் சோதிக்குள் அந்தர்த்தான மடைந்துவிட்டனர்.

உடனே இப்பேர்க்கொத்த அச்சோதியானது மகா மகிமை பொருந்திய தும் இலக்ஷ்மீகரம் உள்ளதுமான அனலகிரி (திருவண்ணாமலை) என்ற திரு மலையாயிற்று. பின்பு யாங்கள் ஜோதிலிங்கரூபியான அப்பேர்க்கொத்த அவ்வனலகிரியை நமஸ்கரித்துவிட்டு ஸ்ரீ பரமசிவனுடைய கருணையின் வலி மையால் நாங்கள் மிகுந்த புத்திப்பிரமம் தெளியப்பெற்றவர்களாகி எங்களது இருப்பிடம் சென்று முன்போல் சுகமாயிருந்தோம். கேளாய்! புத்திரனாகிய தக்ஷா! வெகு பேர்கள் மாசி மாதக் கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசி தினத்தில் சோதிலிங்கரூபியான அற்புதமாகிய அவ்வனலகிரிக்குச் சென்ற மாத்திரத்தில் சகல பாவங்களும் தொலையப்பெற்றவர்களாகிப் பூஜைசெய்து ஸ்ரீ மகேசு வரன் திருவருளால் வேண்டிய பயனைக் கைக்கொண்டிருக்கிறார்கள். மேலும் அப்பேர்க்கொத்த சோதிலிங்க ரூபியான ஸ்ரீ மகேசுவரன்மீது பரிபக்குவ மான சித்தத்தை உடையவர்களாகி மனதை உறுதியாய் நாட்டியவர்கள் ஸ்ரீ தேவேசனுடைய கிருபையினால் வேதாகமங்களாலுண்டாகிய சிவஞ்ஞானத்தை அடைகின்றார்கள்.

"ஓ! மைந்தா! உனக்கு இப்போது சிவஞ்ஞானம் உண்டாயிருக்கின்ற படியால் உந்தனுக்கும் அப்பரமேசுவரனுடைய கிருபை பூர்ணமாயிருக்கின்றது. ஆகையால் நீ சகல பாவங்களும் தொலையப் பெற்றவனாகின்றாய். அத் தேவேசனைச் சரணமடைந்து தடையின்றிச் சுகமடையலாவாய்.'' என்று உரைத்து விட்டுப் பிரம்மாவானவர் திரிபுராரியான ஸ்ரீ ஸர்வேசுவரனைப் பூஜை செய்துவிட்டு ஸகல தேவர்களாலும் சூழப்பெற்றவராகித் தமதிருப் பீடம் சென்றார். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பிற்பாடு தக்கனும் பிரம்மனால் ஏவப்பட்டவனாகிச் சல பாவங்களையும் நாசம் செய்யவுற்ற காசி நகருக்குத் துரிதமாய்ச் சென்று அங்கு தன் பெயரால் விளங்கலுற்ற ஸ்ரீ தக்ஷேசுவரர் என்ற சிவலிங்கத்தை ஆகமமுறைப்படி பிரதிஷ்டை பண்ணி அப்புத்திசாலியானவன் மிகுந்த பக்தியோடு ஆயிரம்வருடமளவும் பூஜைசெய்தான். பிறகு ஸ்ரீ மகேசுவரன் பிரஸன்னரானவுடன் அத்தக்கன் மிகுந்த பக்தியோடு நமஸ்கரித்துப் பரமேசுவரன் முன்னிலையில் நின்று துதி செய்கையில் ஸ்ரீபகவான் "ஓ! தக்ஷா! உந்தன் பூஜையின் மகிமையால் யாம் பிரஸன்னராயினம் என்றறி. ஆகையால் உந்தனுக்கு என்னவேண்டும் சொல்; யாம் அதனைஉனக்குக் கொடுக்கின்றோம்'' என, இவ்வாறு அம்மகேசுவரனது திரு வசனத்தைக் கேட்டுத் தக்கன் அவரை நோக்கி யுரைத்ததாவது.

"ஓ! கருணைக் கடலான தேவேசா! எந்தனுக்குக் கால அளவில் அழிந்து போகலுற்ற விஷ்ணு, பிரம்மா, இந்திரன், அக்கினி, இவர்களுடைய பதவிகளிலாவது அல்லது இன்னும் மற்றவர்களின் பதவியிலாவது விருப்பமில்லை. ஆனால் ஓ! தேவேசா! மலைகளிற் சிறந்த தேவரீரது கைலைகிரியிலுள்ள திருமாளிகை வாசலின்கண் எப்போதும் கணங்களின் தலைவனாயிருக்கும் தன்மை எந்தனுக்குண்டாகும்படி அருள்புரிய வேண்டுமென்று ஸ்ரீ மகாதேவரை வரன் கேட்டு விட்டு அஞ்சலிகொண்டு அவர் முன்னிலையில் நிற்கையில் ஸ்ரீ மகாதேவன் அப்படியே நல்லதென்று அருளி அங்குதானே அந்தர்த்தான மடைந்தனர்.

பிற்பாடு தக்கனும் வரன் அடைந்த பிறகு பருவதோத்தமமான ஸ்ரீகைலாசத்துக்குச் சென்று கேளீர்! முனிச்சிரேஷ்டர்களே! அங்கு கணத்தலைவப்பதவியை அடைந்து மெத்தச் சுத்த சித்தத்தைக் கொண்டவனாகி அங்கு மகா சந்தோஷத்தோடிருந்தான்.

## 38-வது அத்தியாயம்.

கேளீர்! சௌனகாதி முனிவர்களே! முந்தித் தக்கன் வேள்வியில் எந்தத் தேவர்கள் இருந்தார்களோ அவர்களெல்லாம் கருமசேஷத்தினால் சூரபத்துமனால் மிகவும் வாதிக்கப்படலானார்களென, முனிவர்கள் "ஓ! சூதமுனிவரே! ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் அதிபனான மகாமகிமை பொருந்திய சூரபத்தும மகா சுரனுக்குச் சுக்கிரனால் அண்டத்தின் பரிமாணம் உரைக்கப் படலாயிற்றென்று முந்தி உம்மால் கூறப்பட்டதல்லவா! ஓ! மகா இருஷியே! அதனை இப்போது எங்களுக்கு விரிவாய் எடுத்துரைக்க வேண்டுமென, இவ்

வாறு அவரது வசனத்தைக்கேட்டுத் தவசிகளிற் சிறந்த சூதமுனிவர் வேதங்களிற் கரைகண்டவர்களான அவ்வெல்லாப் பிராம்மணச் சிரேஷ்டர்களையும் பார்த்துக்கூறியதாவது.

ஓ! பிராம்மணர்களே! பாவமற்ற நீங்கள் எல்லோர்களும் கவனமாய்க் கேளீர்கள். பிரபஞ்ச தத்துவத்தில் இவ்வண்டமானது பிரம்மாவினல் சிருஷ்டிக்கப்பட்டது. அது நூறுகோடி யோஜனை உயரமுள்ளதும், மூடப்பட்ட இரண்டு சம்புடங்களின் உருவத்தைக் கொண்டதும் மத்தியில் இட வெளியுள்ளதும் மெத்த ஆச்சரியத்துக்கு இருப்பிடமுமாய்க் கேவலம் ஜலத்திலே நிலை கொண்டிருக்கின்றது. ஓ! பிராம்மணர்களே! அதன் சுவற்றின் கனதியானது கோடி யோஜனை கொண்டது. அதன் கீழ்ப்பாகச் சுவற்றின் கனதியும் கோடி யோஜனை கொண்டது தான். இதற்கு மேலாகத்தான் மகானுகிய ஸ்ரீ காலாக்கினி ருத்திரர் இருக்கின்றார். இக்கீழ்ப்பாகச் சுவற்றிற்குமேல் கோடி யோஜனை உயரமுள்ள திவ்வியமான திருமாளிகை மீது ஆயிரம் யோஜனை உயரமும் இரண்டாயிரம் யோஜனை விஸ்தீரணமும் உள்ளதும், அனேக இரத்தினங்களாற் சோபிக்கலுற்றதுமான ஓர் திவ்விய ஸிம்மாஸனத்தில் அக்காலாக்கினி ருத்திர பகவான் தமக்குச் சமானமாகிய பத்து ருத்திரர்களாலும், இவர்களின் பரிவாரங்களாகிய மற்ற பத்துக்கோடி உருத்திரர்களாலும் சுற்றிலும் சேவிக்கப் பெற்றவராகிக் கத்தி, கேடயம், வில்லம்பு முதலியவைகளை எப்போதும் தரித்துக் கொண்டு எந்நாளும் விளங்கியிருக்கின்றார். இம்மகா ருத்திரருடைய பயங்கரமான ஜுவாலையானது பத்து கோடி யோஜனை உயரமுள்ளது. அச்சுவாலைக்கு மேற்செல்லும் புகையின் உயரம் ஐந்து கோடி யோஜனை. மேலும் அப்பிரபுவினுடைய திருமேனியோ பதினாயிரம் யோஜனை உயரம். அத்தேவன் ஆதி கூர்மத்தினல் துதி செய்யப் பெற்றவரும், அநந்தங்களான மகிமைகளுக்கு ஆதாரரும், பரமானந்தப் பரிதரும், ஸர்வ காரண மூர்த்தியுமாகிய ஸ்ரீ பரமசிவனைத் தியானம் செய்யலுற்றவருமாகி இங்கு விளங்கி யிருக்கின்றார்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே, மேற்கூறிய புகையின் கோடியானது பிரம்மாண்ட கீழ்ச்சுவற்றிலிருந்து பதினேழு கோடி யோசனை உயரத்திலுள்ளது. இப்புகைக்கு மேலாகத்தான் பாவிகள் யமகிங்கரர்களால் மிகுதியாய் வாதிக்கப்படலுற்ற நரகங்களிருக்கின்றன. அவை இருபத்தொன்பது கோடியே பனிரண்டு லக்ஷம் யோசனையுள்ளதா யிருக்கும்படி ஸ்ரீபரமேசுவரனுல் கட்டளை யிடப்பட்டிருக்கின்றது. இவைகளின் மேற்புறத்தில் அனேக கோடி கணாதிபர்களாலும் அதே விதமாயுள்ள பரிவாரங்களாலும் சேவிக்கப்பெற்றவரான மகேசுவரனுகிய ஸ்ரீ கூசுமாண்ட ருத்திரர் மகாசந்தோஷத்தோடு விளங்குகின்றார். கேளீர்! முனிவர்களே! இவருடைய லோகமானது கோடி யோசனைக்கு ஓர் இலக்ஷம் குறைந்ததாகும். இதற்குமேல் ஒன்பது இலக்ஷம்யோசனையளவும் வெரும் ஆகாயம் என்றறியத்தகும். இதற்கு மேலாக அறுபத்து மூன்று இலக்ஷம் யோசனை வரைக்கும் ஏழு பாதாளங்களுள்ளன. கேளீர்! வேதம் அறிந்தோரிற் சிறந்தவர்களே! இவைகளுக்கு மேலாக எட்டு லக்ஷம்

யோசனைப் பிரமாணமுள்ள கனிஷ்டமென்ற பெயருடைய எட்டாவது பாதாள மிருக்கின்றது. இங்கு அசுரர்கள், நாகர்கள், இராக்ஷதர்கள், இவர்கள் வசிக்கின்றார்கள். கேளீர்! முனிவர்களே! இதற்கும் உயரத்தில் ஒன்பது லக்ஷம் யோசனை வரைக்கும் ஸ்ரீ ஹாடகேசுவர தேவருடைய வாசஸ்தான மாகிய பெரிதான லோகமிருக்கின்றது. அத்தேவர் அனேகம் ருத்திரர்க ளோடுகூட பணிவிடை செய்ய முயன்ற மற்ற அனேக ருத்திரர்களாற் சுற்றிலும் சேவிக்கப்பெற்றவராகி அங்கு வசிக்கலாகின்றார்.

இவரே பாதாளங்களுக்கெல்லாம் அதிபர். மேற்சொல்லியவர்களுக்கெல்லாம் மகா பிரபு. இந்த லோகத்திற்கும் மேற்பட்டுக் கோடியே இருபது லக்ஷம் யோசனையளவும் வெறும் ஆகாயமே! அதற்கு மேலாக எட்டுத் திக் கஜங்கள், மகா நாகங்கள், இவைகளாலும் ஆதிசேடனாலும், சுமக்கப்படா நின்றதும் எண்பது லக்ஷம் யோசனை பிரமாணமுள்ளதும் சமுத்திரங்கள், தீவங்கள், மலைகள் இவைகளோடு கூடியதுமான பூமியானது சிவாக்கினையில் இருக்கின்றது. கேளீர்! வேதியர்களே! இவ்விதமாக அண்டத்தின் கீழ்ச் சுவர் முதல் பூமிவரைக்கும் முப்பதுகோடி யோசனையுள்ளதென்று நிச்சயிக்கப்படுகின்றது. கேளீர்! முனிவர்களே! இப்பூமிக்கும் மேலாகக் குஹியர்கள், வாயுக்கள், மேகங்கள், கிம்புருடர்கள், கருடர்கள், சித்தர்கள், தேவர்கள், வித்தியாதரர்கள் இயக்ஷர்கள், ஆகாயகங்கை ஆகிய பத்து கணங்களும் முறையே மேலுக்குமேலாக இருக்கலாகின்றன. இவைகளுக்கெல்லாம் மேற்பாகத்தில் பூமியிலிருந்து இலக்ஷம் யோஜனை தூரத்தில் சூரியன், தனது ஒளியினாலுலகங்களைப் பிரகாசிப்பித்துக்கொண்டு சுற்றிவருகிறான். இந்தவிடத்தில் தான் முப்பத்து முக்கோடி தேவர்களும், வாசம்செய்கின்றார்கள். இதற்குமேலிலக்ஷம் யோஜனை தூரத்தில் சந்திரன் சஞ்சரிக்கிறான். சந்திரனுக்கு மிலக்ஷம் யோஜனை தூரத்தில் நக்ஷத்திரங்களிருக்கின்றன. ஓ! வேதியர்களே! இவைகளுக்கு மேலாகப் புதன், சுக்கிரன், செவ்வாய், வியாழன், சனி, இவர்கள் ஒருவருக்கு மேலொருவராய் முறையே இரண்டு லக்ஷம் யோசனை தூரங்களில் சஞ்சரிக்கின்றார்கள். இவைகளுக்கு மேல் இலக்ஷம் யோசனை தூரத்தில் ஸப்தருஷிக ளிருக்கின்றார்கள்.

ஓ! முனிவர்களே! இதற்குமிலக்ஷம் யோஜனைதூரத்தில் துருவநக்ஷத்திர மிருக்கின்றது. பூமிக்குமேற்பட்டுத் துருவ நக்ஷத்திரமிருக்கின்றது. பூமிக்கு மேற்பட்டுத் துருவநக்ஷத்திரம் வரைக்குமுள்ளது புவர்லோக மெனப்படும். இதில் தான் ஸப்தமருத்துகள் வசிக்கிறார்கள். இதற்கெண்பத்தைந்து லக்ஷம் யோஜனை தூரத்திற்கு மேல் ஸுவர்லோகம் இருக்கின்றது. இங்குதான் தேவேந்திரன் ஸகல தேவர்களுடனும் விளங்கலாகின்றான், இதற்கிரண்டு கோடி யோஜனை தூரத்தில் மகர்லோகமிருக்கின்றது. கேளீர்! முனிவர்களே! இங்கு மார்க்கண்டன் முதலிய ருஷிகள் வசிக்கலாகின்றார்கள். இதற்கு எட்டு கோடி யோஜனை தூரத்திற்கு மேல் ஜனலோகம் இருக்கின்றது என்றறியத்தகும். இங்கு சிவாக்கினையின்படி பிதுருக்கள் வசிக்கின்றார்கள். இதற்கு மேல் பனிரண்டு கோடி யோஜனை தூரத்திலிருப்பது போக லோகமெனத்

தரும். அங்குதான் பிரம்ம நிஷ்டர்களான ஸனகர் முதலிய மகருஷிக ளிருக்கின்றனர். கேளீர்! பிராம்மணோத்தமர்களே! இதற்கு மேலாகப் பதினாறுகோடி யோஜனையளவினில் ஸத்தியலோகம் எனப்படும். இதில் சிருஷ்டி கர்த்தர் எப்போதும் சிருஷ்டி செய்து கொண்டிருக்கிறார். இதற்கு மூன்றுகோடி யோஜனைக்கு மேலாகத்தான் பிரம்மலோகமெனத் தகும். இவ் விடத்தில் தான் நான்முகத்தேவரான பிரம்மன் என்றும் ஸந்தோஷமாய் வசிக்கலாகின்றார். இதற்கு மூன்று கோடி யோஜனை தூரமளவில் விஷ்ணு லோக மிருக்கின்றது. அங்கு ஸ்ரீ விஷ்ணுவானவர் எப்போதும் இலக்குமி தேவியோடு இரமித்துக்கொண்டு விளங்கலாகின்றார்.

ஓ! கேளீர்! சௌனகாதி முனிவர்களே! இவ்வெல்லாவற்றிற்கும் மேலாக நான்கு கோடி யோஜனை தூரத்தில் சிவலோக மிருக்கின்றது. இந்த விடத்தில் ஸர்வேசுவரனும், பரமாத்துமாவும் பராபரருமான ஸ்ரீ பரமேசு வரன் ஸ்ரீ கௌரிதேவியோடும் பிரமத கணதிபர்களோடும் கூடச் சயஞ் சோதியாய்ப் பிரகாசித்துக்கொண்டு விளங்கலாகின்றார். இதற்கு மேலண்டச் சுவர் வரைக்குமுள்ள அளவு கோடி யோஜனை. கேளீர்! பிராம்மணோத்த மர்களே! இவ்வாறாகப் பூமிக்கு மேலண்டைச் சுவர்வரைக்கும் உள்ள விஸ்தீரணம் ஐம்பது கோடி யோசனையாகின்றது.

## 39-வது அத்தியாயம்.

ஓ! பிராமணச் சிரேஷ்டர்களே! இப்போது தீவங்கள், சமுத்திரங்கள் மலைகள் இன்னும் மற்றவைகள் இவைகளை யெல்லாம் பற்றியுரைக்கின்றேன். நீங்களெல்லோர்களும் சோம்பலின்றிக் கேளுங்கள்.

பூமிக்கு மத்தியில் இலக்ஷம் யோசனைப் பரப்பளவுகொண்ட இப்பாகம் ஜம்பூத்தீவமெனப்படும். இதற்கு மத்தியில் மிகவும் பெரிதும் நேர்த்தியுமா யுள்ள மகா மேருகிரியானது பூமிக்குள் பதினாறாயிரம் யோசனை ஆழ்ந்தியும் உயரத்தில் முன்னூற்றிருபதினாயிரம் யோசனை உயர்ந்து மிருக்கின்றது. மேலும் அக்கிரி ராஜனனது கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பதினாறா யிரம் யோஜனை விஸ்தீரணமுள்ளதும், மூப்பத்தீராயிரம் யோஜனை உயரத்தி லுள்ள மூன்று தாழ்வரைகளைக் கொண்டதுமாய் விளங்குகின்றது. இவற் றுள் மேற்பாகத்திலுள்ள தாழ்வரையில் அனேகம் கொடுமுடிகள் உள்ளன. அவைகளில் மிகவும் நேர்த்தியான நடுக்கொடுமுடிதனில் மிகவும் சிரேஷ்ட மானதும் அனேக கோபுரங்களாலும் அட்டாலங்களாலும் சோபிக்கப் பெற்றதும் சங்கத்துவஜத்தையுடையதுமான மனோவதியென்று பெயர்போன பிரம்மனுடைய நகரம் இருக்கின்றது.

கேளீர்! முனிவர்களே! இவ்வாறாகவே இதின் கிழக்கிலுள்ள கொடு முடியில் அனேகம் விசித்திரங்களால் நிறைந்ததான வைகுண்டம் என்ற விஷ்ணுவினுடைய நேர்த்தியான பட்டணம் இருக்கின்றது. மேலும் வட கிழக்கிலுள்ள கொடு முடி மீது அனேகம் கோபுரங்கள், அட்டாளங்கள்

கொடுங்கைகள், பிரகாரங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பெற்ற அஜோவதி, என்று பெயர்போன, பரமாத்துமாவாகிய ஸ்ரீ மரமேசுவரனுடைய நேர்த்தியான பட்டண மிருக்கின்றது. கேளீர்! முனிவர்களே! இவைகளைச் சுற்றிலும் பட்டணங்களிருக்கின்றன. இம்மகா மேருவின் கீழ்த்திசையில் மந்தரகிரி யிருக்கின்றது. இதில் ஆயிரம் யோஜனை உயரமுள்ள ஓர் கதம்ப விருக்ஷம் விளங்குகின்றது. மேலும் மேருகிரியின் கீழ்த்திசையில் அருணமென்ற ஓர் பெரியதடாகமும் சைத்திராதமென்ற ஓர் உத்தியானவனமுமிருக்கின்றன. அம்மந்தரகிரிக்கும் கிழ்த்திசையில், மால்லியவான், என்ற ஓர் சிறந்த மலையானது மேருவிலிருந்து வட சமுத்திரத்திற்குள் பிரவேசித்ததாகி விளங்குகின்றது.

ஓ! தரணித் தேவர்களே! மேருவின் தென்பாரிசத்தில் மிகவும் பெரியதும் தங்க நிறமுள்ளதுமான கந்தமாதனகிரி, என்றோர் மலை விளங்குகின்றது. இதனில் இரண்டாயிரம் யோஜனை அளவுள்ள ஓர் ஜம்பு (நாவல்) விருக்ஷமிருக்கின்றது. ஆகையால் தான் இதற்கு, ஜம்பூத்தீவு, என்று பெயருண்டாயிற்று. ஓ! முனிவர்களே! தவிரவும் மேருவின் தென்பாரிசத்தில், மானஸம் என்றோர் தடாக முண்டு, அதில் மகாவனமென்று பெயர்போன ஓர் சிங்காரவனமிருக்கின்றது. இதற்குத்தெற்கினில் சிவப்புநிறமுடைய நிஷதம்என்றோர் பெரிய மலையும் அதற்குத் தென்பாரிசத்தில் தங்க நிறத்தையுடைய ஏமகூடம் என்ற மலையும் அதன் தெற்கினில் இமயமலையும் உள்ளன. ஓ! பிராம்மணோத்தமர்களே! நிஷதகிரி ஏமகூடகிரி இமயகிரி, ஆகிய இம்மூன்று மலைகளும் கீழ்ச் சமுத்திரத்திலும் பிரவேசித்திருக்கின்றன. மேருவுக்கு மேல்பாரிசமாய் விபுலமென்ற மலையிருக்கிறது. அதனில் ஆயிரம் யோஜனை அளவுகொண்ட மகா உன்னதமான ஓர் அரசமரம் இருக்கிறது. கேளீர்! முனிவர்களே! அம்மேருவின் மேல் பாரிசத்திலே, அஸிதோதம் (கறுத்த நீரையுடையது) என்ற ஓர் பெரிய தடாகம் உள்ளது. மேலும் அங்கு மகதவப்பிரம் என்ற ஓர் சிறந்த உத்தியானவனம் இருக்கிறது. இம்மலைக்கு மேற்காக உருக்கிவிட்ட தங்கத்திற்கு நிகரான மற்றோர் பெரிய கந்தமாதனமலை விளங்குகின்றது. இம்மலை தெற்கு சமுத்திரத்திற்குள் நன்றாய்ப் பிரவேசித்திருக்கின்றது.

ஓ! பிராம்மணோத்தமர்களே! மேருவின் வடக்கில் அலர்ந்த மாதுளை மலருக்கு நிகரான, சுபா சுபம், என்ற மற்றோர் மலை விளங்குகின்றது. இதனில் ஆயிரம் யோஜனை உயரமுடைய ஓர், ஆலமரமிருக்கிறது. தவிரவும் மேருவின் வடக்கிலும் மற்றோர் சிறந்த பெரிய தடாகமுள்ளது. இன்னும் இங்கு, கிருத்திமை என்று பெயருடைய மற்றோர் சிங்காரத்தோட்டமும் விளங்குகின்றது. மேற்கூறிய சுபாசுபமலைக்கு வடக்கில் நீலகிரி, அதற்குவடக்கில் சிரேஷ்டமான சுவேதகிரி (வெள்ளை மலை) அதற்கு வடக்கில் சந்திரனொளி போன்றதான சிருங்ககிரி, ஆகிய இம்மூன்று மலைகளும் மேலைச்சமுத்திரத்திற்குள் நன்றாய் வியாபித்திருக்கின்றன. மகா மேருகிரியானது இவ்வாறெல்லாம் சுற்றிலும் மிகுந்த மலைகளாற் சூழப்பட்டு விளங்குகின்றது. மேருவுக்கு மத்தியில் தென்வடலாய் மிகவும் சிறியதான ஓர் வெடிப்பிருக்கின்றது

மந்தரகிரி முதலான நான்கு மலைகளும் மேருவினிற் பாதியளவுகொண்டதென்றும், மால்லியவான் மலை, பதினுயிரம் யோஜனைக் கனதியுள்ளதென்றும் அறியத்தகும். மேருவுக்குத் தெற்கிலுள்ள நிஷதகிரி முதலிய மூன்று மலைகளும் இரண்டிரண்டாயிரம் யோஜனைப் பருமன்கொண்டதென்றும், மேற்கிலுள்ள கந்தமாதனகிரி பதினுயிரம் யோஜனைப் பருமனுள்ளதென்றும் அறியப்படுகிறது.

கேளீர்! முனிவர்களே! வடக்கிலுள்ள நீலகிரி முதலிய ஒவ்வொன்றும் இரண்டாயிரம் யோஜனைப் பருமனுள்ளதாகும். சிருங்ககிரிக்கும், கடலுக்கும் மத்தியிலுள்ள பாகமானது குருவருஷ மெனவும், சிருங்ககிரிக்கும், சுவேதகிரிக்கும் மத்தியிலுள்ள பாகம், இரணிய வருஷமெனவும், சுவேதகிரிக்கும் நீலகிரிக்கும் இடையிலுள்ளது இரம்மியக வருஷமெனவும், மால்லியவான் கிரிக்கும் கடலுக்கும் இடையிலுள்ளது பத்திராசுவ வருஷமெனவும், இமயகிரிக்கும் கடலுக்கும் இடையிலுள்ளது பாரத வருஷமெனவும், இமயகிரிக்கும், ஏமகூடகிரிக்கும் இடையிலுள்ளது, கிம்புருட வருஷமெனவும், ஏமகூடகிரிக்கும் நிஷதகிரிக்கும் இடையிலுள்ளது, ஹரிவருஷமெனவும், கேளீர்! பிராம்மணோத்தமர்களே, மேற்கிலுள்ள கந்தமாதனகிரிக்கும், கடலுக்கும் இடையிலுள்ளது கேதுமாலக வருஷமெனவும், மேருகிரியைச் சுற்றிலுமுள்ள பாகமானது, இளாவிருத வருஷமெனவும்படும்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! குருவருஷத்தில் வசிப்பவர்கள் கறுத்த நிறமுடையவர்களும், பிணியற்றவர்களும் எல்லோரும் கற்பக விருக்ஷத்தின் கனி முதலியவைகளையே புசித்துச் சீவிப்பவர்களுமாய்க் கூடப்பிறந்தவரெல்லோர்களும் மணம்புரிந்துகொண்டு குடும்பிகளாயிருப்பார்கள் மேலும் அவர்கள் பதின்மூவாயிரவருடமளவும் ஜீவித்திருப்பார்கள். தவிரவும் இங்கு மிகுந்த மகிமை பொருந்திய படிகத்தின் நிறத்தைக் கொண்டவர்களான சில சித்தர்கள் அவ்வளவு வருடகாலமே ஜீவித்துக்கொண்டு மிகவும் சுகமாய் வசித்து வருகிறுர்கள். இரணிய வருஷத்தில் வசிப்பவர்களோ எல்லோர்களும் ஆலங்கனிகளையே ஆகாரமாய்ப் புசித்துக்கொண்டு செங்கழுநீர் மலரையொத்த நிறத்தோடு மெத்தவொளி பொருந்தியவர்களாகிப் பன்னீராயிர வருடமளவும் ஜீவித்திருக்கின்றுர்கள். இரம்மிய வருஷத்திலுள்ள ஜனங்களெல்லாம் சந்திரகாந்தக் கல்லையொத்த நிறத்தைக்கொண்டவர்களாகிப் பதினேராயிர வருட காலமளவும் ஜீவித்திருக்கின்றுர்கள். பத்திராசுவ வருஷத்திலுள்ள ஜனங்களெல்லாம், பதின்மூவாயிர வருடமளவும் ஜீவித்திருப்பவர்களும், சிவப்பு நிறமுடையவர்களும் தடிபோன்ற மெத்த அழகிய மேனியைக் கொண்டவர்களுமாய் இருப்பார்கள்.

இந்த பாரத வருடத்திலுள்ள ஜனங்களோ வென்றுல் பற்பல தொழில்களை உடையவரும், பற்பல ஆகாரங்களைப் புஜிப்பவர்களும், யுகத்துக்குத் தக்கபடியுள்ள அறிவைக்கொண்டவர்களும், அப்படியே யுகத்துக்குத்தக்க ஆசை கொண்டவர்களுமாயிருப்பார்கள். கிம்புருட வருடத்திலுள்ள

வர்களெல்லாம் மதுரமான கனிவர்க்கங்களைப் புசிப்பவர்களும் உருக்கிய தங்கத்திற்கு நிகரானவர்களும் பதினாயிர வருடமளவும் ஜீவித்திருப்பவர்களுமாவார்கள். ஹரி வருஷத்திலுள்ளவரெல்லாம் கனிவர்க்கங்களைப் புசிப்பவர்களும், சந்திரகாந்தத்திற்கு நிகரான ஒளியுடையவர்களும், பதினாயிர வருடமளவும் ஜீவித்திருப்பவர்களுமாவார்கள். கேதுமாலக வருஷத்திலுள்ளவர்களோ செங்கழுநீர் மலரை ஒத்த வொளியைக் கொண்டவர்களும் பதினாயிர வருடமளவும் ஜீவித்திருப்பவர்களும் தாழங் கனிகளைப் புசிப்பவருமாயிருப்பார்கள், கேளீர், முனிவர்களே, இளாவிருத வருஷத்திலுள்ளவர்கள் சுத்தமான படிகத்துக்கு நிகரானவரும் கருப்பஞ்சாற்றையே ஆகாரமாய்க் குடிப்பவர்களும் துக்கமற்றவர்களுமாய்ப் பன்னீராயிர வருடமளவும் ஜீவித்திருப்பார்கள்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! மற்ற எட்டு வருஷங்களிலுள்ளவெல்லோர்களும் மூப்பும் பிணியும் அற்றிருப்பார்கள். ஆனால்! ஓ! தரணித்தேவர்களே! இப்பாரத வருஷத்திலுள்ள ஜனங்கள் மூப்பு, பிணிகளையுடையவராவார்கள்.

இந்தப் பாரத வருஷத்தில் நல்வினை தீவினைகளைச் செய்வோர்கள் முறையே மற்றெட்டு வருஷங்களையும் நரகங்களையு மடைவார்கள். ஆகையால் இது கரும பூமியெனவும், மற்றதெல்லாம்போக பூமியெனவும்படும். இமயகிரிக்கும் ஏமகூடகிரிக்கும் மத்தியில் கைலைகிரியானது பற்பல ரத்தினங்களால் விநோதமாயிருக்கலுற்ற அநேகம் வெள்ளிக்கொடிமுடிகளுடன் விளங்கலாகின்றது. இதனில் ஸ்ரீ மகாதேவர், தேவர்களாலும், முனிவர்களாலும், துதிசெய்யப்பெற்றவரும், பரமாநந்த பரிதருமாய் ஸ்ரீ பார்வதி தேவியோடு கூட விளங்கலாகின்றார். அக்கிரி ராஜனே வென்றால் விஷ்ணு முதலிய ஸகலப் பிராணிகளுடையவுமானப் பிரளய காலத்தில், ஸ்ரீ சிவாக்கினியால் சுடுதியில் வளரலாகிப் பிரம்மாண்டத்தைப் பிளந்து கொண்டிருக்கின்றது என்றனர்.

முனிவர்கள் "ஓ! சூத முனிவரே! இச்சம்பூத்தீவத்துக்கு யாவர் அதிபரென்பதை எங்களுக்கு எடுத்துரைத்தல் வேண்டும்" என்றார்கள்.

## 40-வது அத்தியாயம்.

சூதமுனிவர் இவ்வாறு அவர்களது வசனத்தைக்கேட்டபிறகு அத்தவச்சிரேஷ்டர்களை நோக்கிச் சொல்லுகின்றார் :—கேளீர்! சௌனகாதி முனிவர்களே! பிரம்மாவின் புத்திரனான சுவாயம்புவ மனு என்பவர் ஸகல, லக்ஷணங்களோடும், கூடியவனும், மகாசிரேஷ்டனுமான பிரிய விருதன் என்ற ஓர் புத்திரனையடைந்தார். பிறகு அப்புத்திரனும் ஏழு தீவுகளடங்கிய பூமியை ஆண்டு வருகையில் அவனுக்கு ஏழுலகுகளிலும் பெயர் போனவர்களான ஏழு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் ஆக்கினீந்திரனென்ற பிள்ளைக்கு இச்சம்பூத்தீவையும், மற்றப் பிள்ளைகளுக்கு மற்றத் தீவங்களையுமாகப் பங்கிட்டுக் கொடுத்தான். பிறகு அவ் ஆக்கினீந்திரனுக்கும் எங்கும் பெயர் போனவர்களான ஒன்பது பிள்ளைகளுண்டானார்கள். பிறகு இச்சம்பூத்தீவமானது அவர்களுக்கு

ஒன்பது பங்காய்ப் பிரித்துக் கொடுக்கப்பட்டது. அவ்வொன்பது பங்குகளும் முறையே அவரவர்களின் பெயரைக்கொண்ட வருஷங்களாக வழங்குகின்றன.

அப்பிள்ளைகளோ வென்றால்:—குரு, ஹிரணியகன், இரம்மியன், பத்திராசுரன், பரதன், கிம்புருஷன், நிகரற்றவனான ஹரி, கேதுமாலன், இளன் ஆகிய ஒன்பது பெயர்கள். இப்பாகமானது பரதனுடையதாகையால் பாரத வருஷமெனப்படும். இப்பரதனுக்கு எட்டுப் பிள்ளைகளும் ஓர் பெண்ணும் பிறந்தார்கள். பிறகு சத்துருக்களைக் கொல்லலுற்ற மகா புத்திசாலியான அப்பரதனும் தனது பாரத வருஷத்தை ஒன்பது பங்குகளாய்ப் பிரித்துக் கிரமப்படிக்குத் தன் மக்கள்களுக்குக் கொடுத்தான். இவற்றுள்ள பிள்ளைகளுக்குக் கொடுக்கப்பட்ட தேசமெல்லாம் மிலேச்சர்களாற் குடியேறப்பெற்ற பூமியே. ஆனாலவன் குமாரிக்குக் கொடுப்பட்ட ஆயிரம் யோஜனை விஸ்தீரணமுள்ள வித்தேசத்திற்குக் குமாரி கண்டமென்று பெயர்; இதனில் நற்கருமங்களைச் செய்யலுற்ற பெரியோர்கள் வசிக்கின்றார்கள். மேலும் இதனில் மகா பரிசுத்தம் பொருந்திய கங்கை, கௌதமீ, யமுனை, ஸரஸ்வதீ, கௌசிகீ, காவேரி, நர்மதை, கம்பை, பம்பை, துங்கபத்திரை, சூதை, பாலாறு, பாஞ்சாலி, கோமதீ, சூரி, சிகீ, பாபவிநாசினி, பாவங்களைத் தொலைக்கலுற்ற சங்கவாஹி, பாரத்துவாஜி, சிதை, சார்வரீ, சந்திரபாகை, ஸரயூ, வேணு, பிங்களை, சுவர்ணமுகரீ, தாம்ரபர்ணீ, குண்டலை, பெண்ணை, வைகை, மங்களகரம் பொருந்திய கந்தநதீ, இவை முதலிய புண்ணிய நதிகளெல்லாம் ஓடுகின்றன.

தவிரவும் கேளீர்! தரணித் தேவர்களே! இதனில் மகேந்திரம், மலயம், மானுஷம், பாரியாத்திரம், சக்தி, விந்தியம், ஸஹியகம், ஆகிய ஏழு பெயர்போன மலைகளுள்ளன. மேலும் இங்கு, காசி, காஞ்சி முதலிய புண்ணிய ஸ்தலங்களும் ஆயிரத்தெட்டு சிவத்தலங்களும் உள்ளன. ஓ! முனிவர்களே! அநேக அக்கிரகாரங்களும், வைதிக (வேதமுறையில் நடக்கலுற்ற) பிராம்மணர்கள் வசிக்கும் வீடுகளும் இங்கிருக்கின்றன. அவர்கள் வேதத்திற் கூறியபடியுள்ள ஔபாசனம் அக்கினி ஹோத்திரம் முதலிய நித்திய நைமித்திக கருமங்களை அனுஷ்டித்து வருகிறார்கள். மேற்கண்ட ஒன்பது வருஷங்களுமாகிய இச்சம்பூத்தீவமானது இலக்ஷயோஜனை விஸ்தீரணமுள்ளதெனப்படும். இலக்ஷயோஜனை அளவுள்ள உப்புக் கடலானது இதனைச் சூழ்ந்திருக்கின்றது. ஓ! முனிவர்களே! இவ்வுப்புக் கடலைச் சுற்றிலும் இரண்டு லக்ஷம் யோஜனை கொண்டது. பற்பல ஆச்சரியங்களோடு கூடியதுமான சாவகத்தீவமிருக்கின்றது. பிரிய விருதராஜனுக்குப் புத்திரனான கோமேதகன் என்றவன் இதற்கரசன். அவன் ஏழு பிள்ளைகளைப்பெற்று அவர்களுக்குச் சாவகத்தீவத்தை ஏழு பங்காய்ப் பகிர்ந்து கொடுத்தான். இதனில், ஸோமம், சுமனசு, சந்திரம், துந்துபி, மகாகிரி, பிரவிராஜனம், நாரதீயம், கோமேதம், ஆகிய ஏழுமலைகளுள்ளன. மேலும் அங்கு, சிவை, விபாபை, அமிருதை, சுகிருதை, மனுதத்தை, சித்திகிரமை

ஆகிய வேண்டிய பயன்களை எல்லாம் அளிக்கவுற்றவையும், மகாபரிசுத்த முள்ளவையுமான ஏழு நதிகள் ஓடுகின்றன.

இத்திவை இரண்டு லக்ஷம் யோசனை விஸ்தீரணமுள்ள க்ஷீராப்தி (பாற் கடல்) யானது சூழ்ந்திருக்கின்றது. ஓ! பிராம்மணோத்தமர்களே! அக்கடலைச் சூழ்ந்திருக்கும் பூமியானது குசத்தீவமெனப்படும். அது நான்கு லக்ஷம் யோசனை விஸ்தீரணமுள்ளது. இத்தீவத்தில் பிரியவிருதராஜன் புத்திரனான வபுஷ்மான் (நல்ல மேனியைக் கொண்டவன்) என்றவன் அரசாண்டு வந்தான். பிறகு சகல சாஸ்திரப் பொருட்களையும் கற்றறிந்த அவ்வரசன் ஏழு பிள்ளைகளைப்பெற்று அவர்களுக்கு இத்தீவத்தைக்கிரமப்படி ஏழு பாகங்களாகப் பகிர்ந்து கொடுத்தான். அங்கு ஜோனை, ரூபியை, மதி, தூம்ரை, நேத்திரை, பாவவிமோசனை விருத்தி ஆகிய மகா பரிசுத்தமும், சிரேஷ்டமும் பொருந்திய ஏழாறுகளும். உன்னதம், குமுதம், குமாரம், மேகம், சங்ககம், மஹிமை, துரோணகம் ஆகிய ஏழுமலைகளுமுள்ளன. கேளீர்! தரணித்தேவர்களே! இத்தீவமதை நான்கு லக்ஷம் யோசனை விஸ்தீரணமுடைய ததி சமுத்திரம் சூழ்ந்திருக்கின்றது. இதைச் சுற்றிலுமுள்ளது கிரௌஞ்சத்திவமெனப்படும். அத்தீவத்திற்குப் பிரிய விருதன் மைந்தனான ஜியோதிஷ்மான் என்பவன் அரசன்; பிறகு அவனுக்கு ஏழு பிள்ளைகள் பிறந்தார்கள். பின்பு அவன் நதிகளோடும், மலைகளோடும் கூடிய அத்தீவத்தை அவர்களுக்கு ஏழு பங்காகப் பாகித்துக்கொடுத்தான்.

அத்தீவத்திலோ, குசேசயம், ஹரி, புஷ்பாவர்த்தம், வித்ருமம், ஹிமாதகிரி, துதிமான், மந்தரம், ஆகிய ஏழு மலைகளும், சிவை, விதூத பாபை ஹிமை, பூர்ணை, புனீதகை, சிலபாபை, தம்பை, ஆகிய ஏழு சிறந்த நதிகளுமுள்ளன. ஓ! முனிவர்களே! எட்டு லக்ஷம் யோசனை விஸ்தீரணமுள்ள இத்தீவத்தை அவ்வளவு விஸ்தீரணமே கொண்ட கிருதாப்தி (நெய்க்கடல்) சூழ்ந்திருக்கின்றது. இக்கடலைச்சுற்றிலும் பதினாறு லக்ஷம் யோசனை கொண்ட சால்மலீத தீவமிருக்கின்றது. அதற்கு அரசனாகிய பிரியவிருதன் சுதனான த்யூதியென்பவன் ஏழு மக்களை யடையலாகி அவர்களுக்கு அத்திவத்தை கிரமப்படி ஏழு பங்குகளாகப் பிரித்துக்கொடுத்தான். இதிலோ வென்றால் திமிரம், சுரபி, வாமனம், விருத்தகம், ஸம்மியத்தடம், துந்துபி, புண்டரீகம், ஆகிய இவ்வேழு மலைகளும், குமுதை, கபரீ, தாத்திரி, யாமை, பௌண்டரீகை, மனோபமை, ஸந்தியை, ஆகிய பரிசுத்தமான ஏழுநதிகளுமிருக்கின்றன. இத்தீவத்தைப் பதினாறு லக்ஷம் யோஜனைக் கொண்ட இக்ஷுவப்தி (கருப்பஞ்சாற்று கடல்) சூழ்ந்திருக்கின்றது.

ஓ! முனிவர்களே! இக்கடலுக்குச் சுற்றிலுமுள்ள கோமேதகத் தீவமானது முப்பத்திரண்டு லக்ஷம் யோஜனை கொண்டது. இதனைப் பிரியவிரதன் மைந்தனான ஹவ்வியனென்பவன் நீதிமுறை வழுவாமல் அரசாண்டு வந்தான். பிறகு அவனும் ஏழு பிள்ளைகளைப்பெற்று அவர்களுக்கு அத்தீவத்தை ஏழு பாகங்களாகப் பகிர்ந்து கொடுத்தான். இதனிலும் ஏழு மலைகளுள்ளன.

## 41-வது அத்தியாயம்.

அக்கோமேதகத் தீவில், ஸிம்மகம், கிரௌஞ்சம், சலகம், அஸ்தகிரி, உதயகிரி, ஆம்பிகேயம், மகா கிரியான ரம்மியகம் ஆகிய ஏழுமலைகளும், அயாதி, தேனுகை, புண்ணியை, கபர்த்தி, சுகுமாரகை, குமாரப் பிரளயை, இக்ஷுரஸை ஆகிய ஏழு சிறந்த நதிகளுமுள்ளன. இத்தீவத்திற்குச் சுற்றிலும் முப்பத்திரண்டு லக்ஷம் யோசனை கொண்ட மத்துவப்தி (கள்கடல்) யிருக்கின்றது. ஓ! பிராம்மணோத்தமர்களே! இதற்குச் சுற்றிலுமுள்ளது புஷ்கரத்தீவம். இது அறுபத்து நான்கு லக்ஷம் யோசனை விஸ்தீரணமுள்ளது. பிரியவிருதன் புத்திரனான சியவன னென்பவன் அதற்கரசன். இவனுக்கோவென்றால், மகா பலசாலிகளான இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். பிரம்மஞானியான அவ்வரசன் அத்தீவத்தை இரண்டு பாகமாய்ப்பிரித்து அவர்களுக்கீந்தனன்.

இத் தீவத்திலோ, விருஷபம், மகேந்திரம், வருணம், நீலம், வேதம், வராகம், இந்திரம், மாகேந்திரம், ஆகிய ஏழு சிறந்த மலைகளும், குடிலை, சிவை, உமை, தாணீ, சுமனை, சிம்மிகை, குமாரி ஆகிய, மகா பரிசுத்தமுள்ள வேழு நதிகளுமுள்ளன. மேலும் இததீவத்தில் ஐம்பது லக்ஷம் யோஜனை யளவுகொண்ட மற்றோர் மலையுண்டு. இத்தீவத்தில்தான் பெயர் போனவர்களான இந்திரன் முதலிய திக்பாலகர்கள் வசிக்கின்றார்கள், இத்தீவமானது அறுபத்தினான்கு லக்ஷம் யோசனைகொண்ட சுத்தநீர்க்கடலால் சூழப்பட்டிருக்கின்றது. இவ்வேழு தீவங்களிலும் ஏழு வேறு மலைகள் சமுத்திரங்களுக்குச் சுற்றிலும் பிரகாரம் (மதிள்)போல் வளைந்து கொண்டு விளங்கலாகின்றன. மகா மேருவின் நடுமையத்திலிருந்து மேற்கூறிய ஏழு தீவங்களும் ஏழு கடல்களுமாக இரண்டு கோடியே ஐம்பத்து மூன்று லக்ஷத்து ஐம்பதினாயிரம் யோசனை அளவு கொண்டதென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

ஓ! முனிவர்களே! இவைகளுக்கு அப்பால் பத்து கோடியோசனை விஸ்தீரணமுள்ள தங்கமயமான பூமியிருக்கின்றது. அதைச் சுற்றிலும் சக்கிரவாளகிரி யிருக்கின்றது. மிகவும் பிரசித்திக் கொண்ட அம்மலையானது பதினாயிரம் யோசனைக் கனதியுள்ளது. அதற்கும் அப்பால் நூற்றிருபது லக்ஷம் யோசனையுள்ள மகா சமுத்திரமானது ஒட்டியானம் பூட்டியதுபோல் விளங்கி யிருக்கின்றது. அதன் பிறகு முப்பத்தைந்து கோடியே பத்தொன்பதிலக்ஷத்து நாற்பதினாயிரம் யோசனை கொண்ட வெறும் இருள் உலகே. முற் கூறிய அண்டச்சுவற்றின் கனதி கோடி யோஜனை என்பது தெரிந்த விஷயமே. கேளீர்! முனிவர்களே! மகாமேருவின் நடுமத்தியிலிருந்து அதன் தென் புறமாய் அண்டச் சுவறு வரையிலுள்ள விஸ்தீரணம் ஐம்பது கோடியோஜனையாகின்றது. அக்கிரியின் மற்றப்பாகங்களிலும்அதேஅளவுள்ளதென்றறியத்தக்கது. மேலும் மேருவுக்கு வடபாரிசமாய் அண்ட சுவற்றிற்கு அருகினில் லக்ஷிமீவிலாஸம் பொருந்திய மற்றோர் மகா கைலாஸ பருவதம் விளங்குகின்றது.

அங்கு ஸ்ரீ பரமேசுவரன் சகல ஜனங்களாலும் அடியார்களாலும் துதி செய்யப்பெற்ற பாதார விந்தத்தைக் கொண்டவரும் என்றும், சந்தோஷ முற்ற திருமனதைக் கொண்டவருமாகிய ஸ்ரீ மகாதேவியோடு கூட விளங்க லாகின்ருர். தவிரவும் இவ்வண்டத்தின் வெளிப்புறத்தில் இதனைக் காப் பவர்களான உருத்திரர்களிருக்கின்ருர்கள். கேளீர்! தாணித்தேவர்களே! இவ்வண்டத்திற்கு உரைக்கப்பட்ட இலக்ஷணங்களையும், அளவுகளையும் கொண் டதாகவே, அநேக அண்டங்களுள்ளன.

தக்ஷ காண்டம் முற்றிற்று.



உ

சிவமயம்

# உபதேச காண்டம்.

## 1-வது அத்தியாயம்.

வெள்ளை வத்திரந்தரித்தவரும் எல்லா உலகங்களிலும் வியாபித்திருப்பவரும் சந்திரனைப்போன்ற நிறத்தினரும் நான்கு புயங்களையுடையவருமான விநாயகக் கடவுளை யான் தொடங்குங் காரியத்தில் யாதொரு இடையூறுமின்றி இனிது முடித்தல் பொருட்டு தியானஞ்செய்கின்றேன். சகல உலகத்தினரும் துதிக்காநின்றவரும் நிர்மலமான ஞானத்தை யருளலுற்றவரும் பார்வதீ புத்திரனுமான ஸ்ரீ விநாயகக் கடவுளை இவ்வுபதேச காண்டம் முடிவு பெறுவதற்காக வந்தனஞ் செய்கின்றேன்.

சௌனகாதி முனிவர்கள் சூதரை நோக்கி, ''ஓ! சூத முனிவரே! மேருவின் வடபாரிசமாய் அண்டப் புத்திற்குச் சமீபத்தில் மகா கைலாச பருவதமிருக்கிறதென்று உம்மாலுரைக்கப்பட்டதல்லவா? அதனுருவம் பிரமாணம், உயரம் இவைகளை யெல்லாம் விவரமாய் எடுத்துரைத்தல் வேண்டும்'' எனக் கேட்டனர். ''ஓ! சகலர்களான பிரர்மணர்களே! இரகசியத்திற்கு எல்லாம் பரம இரகசியமான அவ்விவரங்களை எடுத்துக் கூறுகின்றேன். நீங்கள் ஜாக்கிரதையாய்க் கேளுங்கள்! மகா கைலாஸ பருவதமானது மேருவின் வடபாகத்தில் இருக்கின்றது. அது கணங்களோடும், அடியார்களோடும் கூடிய சந்திர சேகரரான ஸ்ரீ சாம்பவமூர்த்திக்கு வாஸஸ்தானம். ஓ! பிராம்மணோத்தமர்களே! அது இருபதுகோடி நீளமும் அதன் இருமடங்கு உயரமுமுள்ளதென்று அறியத்தக்கது. அதன் மத்தியில் மகா சிரேஷ்டமும் நவரத்தின மயமுமான ஓர் சிகரமிருக்கின்றது. அங்குள்ள ஸ்ரீ மகேசுவரனுடைய திருமாளிகையானது பற்பல இரத்தினங்களால் விநோதமுள்ளதாகி பிராகாரங்கள், கோபுரங்கள், கொடுங்கைகள் இவைகளோடும் விளங்குகின்றன. அங்குள்ள சிறந்த ஓரிரத்தின ஸிம்மாஸனத்தில் சம்புவாகிய ஸ்ரீ சதாசிவப் பெருமான் விளங்கலாகின்றார். அலர்ந்த செந்தாமரை மலர்போன்ற உல்லாசமான இருபத்தைந்து திருமுகங்களால் விளங்கியவரும், பற்பல ஆயுதங்களைத் தரிக்கலுற்றவரும், பிரகாசியாநின்ற ஒன்பது திருக்கைகளால் அலங்கரிக்கப் பெற்றவரும், அலர்ந்த செந்தாமரை மலர் நுனியால் அபகரிக்கலுற்ற இருதிருவடிகளால் விளங்கியவரும், விசித்திரங்களான இரத்தினங்களால் இழைக்கப் பெற்ற பல ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றவரும் அனேககோடிசூரியப் பிரகாசம் பொருந்தியவரும் பரமானந்த மங்களமூர்த்தியும் மாயையால் அணுகப்படாத திருமேனியைக்கொண்டவரும் இலக்ஷுமி விலாஸம்பொருந்தியவரும் வாக்கு, மனதிற்கு எட்டாதவருமான ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியானவர், அந்த

மகா கைலாஸ பருவதத்தில் ஐந்து சக்திகள், அநேக உருத்திரர்கள், ஸித்தர்கள், ஸகல இருடீசுவரர்கள் இவர்களாற் சுற்றிலும் சேவிக்கப்பெற்றவரும் சகல ஐசுவரியங்களோடுங்கூடியவரும், சருவவியாபியும், ஆதியந்தமற்றவரும் தங்கள் தங்கள் ஊழியங்களில் முயன்று நின்ற பரிவார கணங்களாற் சேவிக்கப்பெற்றவருமாய் விளங்கலாகின்றார்.

கேளீர்! முனிவர்களே! ஓ! கோ! அவ்விரத்தின சிகரத்தைச் சுற்றிலும் சூரியகாந்தக் கல்மயமான மெத்த நேர்த்தியாகிய வேறு பதினொரு சிகரங்களிருக்கின்றன. அச்சிகரங்களில் ஸ்ரீ பரமேசுவரனுடைய பதினொரு மூர்த்திகளும் முறையே வசிக்கின்றார்கள். ஓ! தரணி தேவர்களே! இச்சிகரங்களைச் சுற்றிலும் சந்திரகாந்தக் கல்மயமான நூற்றொரு சிகரங்களிருக்கின்றன. இவைகளிலெட்டு வித்தியேசுர மூர்த்திகள், ஸ்ரீ மகேசுரனுடைய மற்றெட்டு மூர்த்திகள், ஒன்பது சக்திகள் சம்புவின் அமிசங்களான அதிக நேர்த்தியாகிய இருபத்தைந்து மூர்த்திகள், ஐம்பத்தொரு மாதுருகைகள் இவர்கள் வசிக்கின்றார்கள். ஓ! முனிவர்களே! இவைகளைச் சுற்றி அக்கினி காந்தக்கல்மயமான ஆயிரத்தெட்டு சிகரங்களிருக்கின்றன. அவைகளில் ஸ்ரீ மகேசுவரனுடைய நூற்றெட்டு தாண்டவேச மூர்த்திகள் ஈசுவர ஸ்வரூபங்களைக் கொண்ட ஏழு கோடி மந்திரங்கள், இவைகளெல்லாம் ஸ்ரீமகா தேவரை ஹிருதய கமலத்தில் தியானம் பண்ணிக்கொண்டு வசிக்கின்றார்கள், ஓ! வேதியர்களே! இவைகளைச் சுற்றிலும் ஆயிரத்தொரு பெரிய சிகரங்கள் படிக காந்தியைக்கொண்டவைகளாகி ஸ்ரீ சிவாக்கினியால் விளங்கலாகின்றன,

இவைகளிலே விக்கினேசுரர், சுப்பிரமணியன் மகா சாஸ்தா, பைரவர் ஆகிய ஸ்ரீ தேவாதி தேவருடைய குமாரர்களும், நந்தி, பிருங்கி, மகாகாளர் முதலிய கணாதிபர்களும் தருமத்தாலுருவம் கொள்ளப்பெற்ற விருஷபராஜன், சகல வேண்டுதல்களையும் கொடுக்கலுற்ற காமதேனு, துர்க்கை முதலியமற்ற சக்திகள், சண்டேசுவரர் முதலிய பக்தர்கள், என்றும் சிவநாம ஸங்கீர்த்தனம் செய்யலுற்ற ஐந்தஸ்திர தேவ மூர்த்திகளும் மிக்க சந்தோஷமாய் வசிக்கின்றார்கள். கேளீர்! முனிவர்களே! இச்சிகரங்களைச் சுற்றிலும் எப்போதும் இரத்தின காந்திகளைக் கொண்ட நேர்த்தியாகிய இலக்ஷத்தொரு சிகரங்களுள்ளன. இவற்றுள் மேற்றிசையிலுள்ளவைகளில் அனேகம் விஷ்ணுக்கள் தங்கள் பதவிகளின் ஆசையில் பதிவு பெற்றவர்களாகி மோக்ஷமடைய வேண்டியதற்காகச் சோதி லிங்கஸ்வரூபியாகிய பரதத்துவமான ஸ்ரீ பரமேசுவரனைப் பூஜித்துக்கொண்டிருக்கிறார்கள். வடபாகச் சிகரங்களில் அனேகம்பிரம்மர்கள் இதேபிரகாரமாய்ப்பதவியின் ஆசையில்ஒழிவுகொண்டு மோக்ஷம் பெறுவதற்காக ஸ்ரீ மகேசுவரனைத் தொழுகின்றார். கீழ்ப்பாகச் சிகரங்களில் இந்திரன் முதலிய லோக பாலகர்கள் இடபாரூடரான ஸ்ரீ மகா தேவரைத் தியானம்பண்ணிக்கொண்டு வசித்துக்கொண்டிருக்கிறார்கள். பிறகு தென் பாரிசச் சிகரங்களிலே கொடிய தவங்களைச் செய்யலுற்ற இருடீசுரர்கள் தத்துவ ஞானம் பெற விருப்பமுற்றவர்களாகித் தென் திசையை நோக்கி வீற்றிருப்பவரும் என்றும் அழிவற்றவருமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை ஏகாக்கிரமனசுடன் தியானஞ்செய்கின்றார்கள்.

ஓ! முனிவர்களே! இச்சிகரங்களைச் சுற்றிலும் பொன்னொளிகொண்ட பத்து இலக்ஷத்தொரு சிகரங்கள் விளங்கலாகின்றன. ஓ! பிராம்மணோத்திரர்களே! இச்சிகரங்களில் இலக்ஷம் பூதசேனாதிபர்கள், உருத்திரர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், கருடர்கள், கந்தர்வர்கள் காமதேனு, சிந்தாமணி, கற்பக விருக்ஷம், சங்க நிதி, பதுமநிதி, மிக்க சுந்தரம்பெற்ற உருத்திர தாசிகள் இவர்களெல்லாம் இருப்பதோடு இன்னும் பற்பல ஆச்சரியங்களும் இருக்கின்றன. ஓ! வேதியர்களே! மேலும் இங்கும் ஸாரூப்பியமென்ற மோக்ஷ பதவியை அடைந்திருப்பவர்கள் எல்லோரும் இருக்கலாகின்றார்கள். இவைகளைச் சுற்றிலும் வேறு வெள்ளி மயமான சில சிகரங்களுண்டு. அவைகளின் சங்கியை கோடியே ஒன்று. தவிரவும் இச்சிகரங்களில் ஸாக்ஷாத் ஸ்ரீ சிவபரமாத்துமாவினாலே சிருஷ்டிக்கப்படலான பிரணவச் சுவரூபிகளாகிய இரண்டாயிரம் வெள்ளை யானைகள், அதேவிதமாக வேறு ஸ்வரூபிகளாகிய, குதிரைகள், விமானங்கள், இரதங்கள் இவைகளெல்லாம் சிவாக்கினையினால் வசிக்கலாகின்றன. கேளீர்! சௌனகாதி முனிவர்களே! மேலும் அச்சிகரங்களிலொன்று இரண்டு மூன்றுகளான கால்களை யுடையவர்களும், அநேகம் கால்களையுடையவர்களும், காலற்றவர்களும், சிலரொன்று மூன்று முதலிய முகங்களைக் கொண்டவர்களும், முகமேயற்றவர்களும் சிலரொன்று, இரண்டு மூன்றுகளான கைகளையுடையவர்களும், சிலர் ஒன்று, இரண்டு, மூன்று முதலிய கண்களைக் கொண்டவர்களும், அனேகம் கண்களைக் கொண்டவர்களும், கண்ணே யற்றவர்களும், சிலர் மானிட முகங்களைக் கொண்டவர்களும், சிலர் பக்ஷிகள், யானை குதிரை, சிங்கம், புலி, நரி, குரங்கு, காடி சிவிங்கி இவைகளின் முகங்களைக் கொண்டவர்களுமான பற்பல உருவங்களைக்கொண்ட பூதகணங்களெல்லாம் ஸ்ரீ பரமேசுவரனால் கட்டளையிடப்பட்டவர்களாகி அவரது ஆக்கினையின்படி வாசஞ்செய்கின்கிறார்கள். தவிரவும், அனேகமாயிரம் சிறந்த சிங்காரத்தோட்டங்கள், அனேக திவ்ய தீர்த்தங்கள், பற்பல அரணியங்கள், மற்றும் பற்பல ஆச்சரியங்கள் இவைகளும் சிற்சில முனிவர்களும் தேவர்களும் வசித்து வருகின்றார்கள். சிவ பூசையின் மகிமையால் ஸாலோகமென்ற மோக்ஷ பதவியை யடைந்திருக்கின்றவர்களெல்லாம் மிக்க போகங்களை அனுபவித்துக்கொண்டு மிக்க சந்தோஷத்துடன் அங்கு வாசஞ் செய்கின்றார்கள்.

ஓ! பிராம்மணோத்தமர்களே! ஸ்ரீ மகா கைலாசத்திலுள்ள இவ்வெல்லாச் சிகரங்களும் சேர்ந்து கோடியே பதினோரிலக்ஷத்து பதினோராயிரத்து நூற்றுப்பதினெட்டு சங்கியை கொண்டதென்று நிச்சயிக்கப்படுகின்றது. ஸ்ரீ சர்வேசுவரனுடைய மகா கைலாச பர்வதமானது இவ்வாறு விளங்கலாகின்றது.

## 2-வது அத்தியாயம்.

கேளீர்! பிராமணோத்தமர்களே! அம்மகா கைலாசத்தினடிவாரத்தில் கோடி யோசனை பரப்புள்ள பொன்மயமான பூமியானது அதனைச் சுற்றிலுமிருக்கின்றது. இங்கு அனேகமாயிரம் உருத்திரர்களும் தபோதனர்களான முனிவர்களும், அனேகம் பூதர்களும் வேண்டிய போகங்களை யனுபவித்துக் கொண்டு மகாசிவபக்தர்களாய் ஸ்ரீபரமேசுவரனையே தியானிப்பதில் முயன்றிருக்

கின்றார்கள், தவிரவும் அப்பொன் நிலத்தைச் சுற்றிலும் ஓர் பொன்மதில் விளங்குகின்றது. அது கோடி யோசனை விஸ்தீரணமும், இருகோடி யோசனை உயரமுமுள்ளது. அதற்கு எட்டுவாசற்படிகளுண்டு. அவைகளின் பேரில் பற்பலவித இரத்தின மயங்களான கோடி உப்பரிகைகளைக் கொண்ட எட்டுச் சிறந்த கோபுரங்கள் விளங்குகின்றன. ஓ! வேதியர்களே! அதன் கீழ்த்திசையில் விளங்கும் கோபுரவாசலில் ஸ்ரீ விக்கினேசுவரர் தமது கணங்களோடுகூடவீற்றிருக்கின்றார். அக்னி திக்கிலுள்ள கோபுர வாசலில் மகா பராக்கிரமசாலியான வீரபத்திரர் தமது கணங்களோடுகூட இருக்கின்றார். தென்றிசைக் கோபுரவாசலில் கணாதிபரான ஸ்ரீ நந்திகேசுவரன் கைதனிற் பிரம்பைப் பிடித்துக்கொண்டு தமதுகணங்களுடன் இருக்கின்றார். தென்மேற்குக்கோபுர வாசலில் ஸ்ரீபரமசிவாக்கினையை நிறைவேற்றலுற்ற கோரபராக்கிரமசாலியான பைரவமூர்த்தியானவர் தமது கணங்களோடிருக்கின்றார். மேல் கோபுர வாசலில் ஸ்ரீ பரமேசுவரர் புத்திரரான சுப்பிரமண்ணியப் பெருமான் ஸ்ரீ ஜகதம்பிகையைத் திருவுளமதில் நினைத்துக்கொண்டு தமது சைனியங்களுடன் விளங்கியிருக்கின்றார்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! வட மேற்குக் கோபுர வாசலில் மகா பல பராக்கிரமங்களைக்கொண்ட துர்க்கையம்மனானவள் சிவபிரானை மனதினில் தியானஞ்செய்து கொண்டு தமது கணங்களோடிருக்கின்றாள். வட கோபுரவாசலில் மகா மகிமைபொருந்திய மகா காளர் ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களை மனதினில் தியானஞ்செய்து கொண்டு தமது கணங்களுடன் இருக்கின்றார். கேளீர்! வேதியர்களே! வட கிழக்குக் கோபுர வாசலிலோ ஸ்ரீமகாதேவர் மைந்தரான மகா சாஸ்தாவானவர் மகேசுவரர் ஆக்கினையைச் சிரசினால் வகித்துக்கொண்டு எப்போதும் காத்து வருகின்றார். மகா மகிமை பொருந்திய இவ்வெல்லோர்களும் இவ்வாறு இருந்துகொண்டு சகல ஜகங்களையும் இரக்ஷித்து வருகின்றார்கள். ஸ்ரீ மகா கைலாசபருவதமானது பற்பலவித இரத்தின மயங்களான அனேகம் சிறந்த சிகரங்களோடும் விளங்குவதுடன் இவ்வாருகிய ஓர் சிறந்த மதிலாலும் சூழப்பட்டிருக்கின்றது. பாவிகளான அரக்கர்களும் அசுரர்களும் இன்னும் மற்றவர்களும் அதனைப் பார்க்க முடியாது. கேளீர்! முனிவர்களே! இம்மகா கைலாசமானது (மகாபிரளயததிற்கு உட்பட்ட) அவாந்தரப் பிரளய காலங்களில் அண்டத்துக்குமேல் வளர்ந்து விடலாகின்றது. ஸகலருக்கும் அனுக்கிரக மளிக்கலுற்ற ஸ்ரீ மகா தேவன் இம்மகா கைலாசத்தில இருந்துகொண்டு ஸகல பிராணிகளுக்கும் அனுக்கிரகம் அருளுகின்றார். ஆனால் ஜம்பூத் தீபத்திலுள்ள கைலையின்கண் ஸ்ரீ பரமேசுவரன் அதனிலிருந்து கொண்டு தமது இச்சையின்படி எப்போதும் நிக்கிரகம் அனுக்கிரகம் இவ்விரண்டையும் செய்தருளுகின்றார். கேளீர்! தரணி தேவர்களே! இவ்விரு கைலாசங்களும் கேவலம் ஞான ஸ்வரூபமானவை. இவ்விரு கைலாசங்களையும் நினைப்பவர்களின் பாவங்கள் நினைத்த மாத்திரத்தில் நீங்கலாகின்றன. ஓ! முனிவர்களே! இவ்விரண்டும் சிவாக்கினையால் தாங்கப்பட்டிருக் கின்றனவேயன்றி பூமியிலில்லை.

புராணப் பொருட்களைத் தெளியவறிந்த பெரியோர்கள் இவ்விரண்டும் சோதி ரூபமானவை யென்றறிகின்றார்கள். தவிரவும் கேளீர்! தாணி தேவர்களே! ஸகலப் பிரபஞ்சங்களுக்கும் சுகத்தை யளிக்கலுற்ற ஸ்ரீ மகா ஸதா சிவமூர்த்தியானவர் அநந்தர்களான உருத்திரர்கள், விஷ்ணு முதலிய தேவர்கள், பிரமதகணங்கள் தவநிலையிலிருக்கலுற்ற மகத்துக்களான அடியார்கள் இவர்களெல்லாம் நாள்தோறும் பூசிக்கப்பெற்றவரும் ஸகல ஐசுவரியங்களோடும் கூடியவருமாகி அம்மகா கைலாஸ பருவதத்தில் விளங்கியிருக்கின்றனர். ஆனால் ஜம்பத்தீவத்திலுள்ள கைலாஸத்திலோ ஸ்ரீகண்டன் (கழுத்தினில் விஷத்தையுடையவர்) என்ற மகா தேவர் தமதிச்சையின்படி ஸகல ஜீவராசிகளுக்கும் நிக்கிரகம், அனுக்கிரகம் இவ்விரண்டையும் அளித்துக்கொண்டு அங்குவிளங்கியிருக்கின்றார். மேலும் வாக்கு மனதுக்கு மெட்டாத மகேசுவரரான ஸ்ரீ மகாதேவர் சர்வலோக ரக்ஷகராயும் அவ்விரு மலைகளிலும் விளங்கியிருப்பதால் அவரது ஆக்கினையால் தான் வாயு வீசுகின்றான். சூரியன் பயத்துடன் உதயமாகின்றான்; அக்கினி உயரக்கிளம்பி யெரிகின்றார். இந்திரன் சொர்க்கத்தை யாளுகின்றான்; பிருதுவி முதலிய ஐம்பூதங்களும் ஓர் நிபந்தனையிலிருக்கின்றன.

கேளீர்! தாணி தேவர்களே இவ்வத்தியாயத்தைப் படிக்கின்றவரும், ஊக்கத்துடன் கேட்கின்றவரும் சிவனடியார்களுக்கு உரைக்கின்றவர்களும் ஆகிய இவர்களை ஸ்ரீஜகதீசன் அருள்புரிகின்றார். அம்மானிடன் ஆயுள், ஆரோக்கியம் ஐசுவரியம் இவைகளை யடைகின்றான். மெத்த உத்தமமான இவ்வத்தியாயத்தைத் திறமையும் பக்தியுமுடைய தக்க சீடருக்குக் காட்டத்தக்கதேயன்றி கண்டபேர் கேட்ட பேர்களுக்கு இதனைக் கொடுக்கத் தகாது, காட்டவும் தகாது. ஓ! முனிவர்களே! நானிதை வளர்த்தி யுரைப்பதிற் பயனென்ன? இது இரகசியங்களுக்கெல்லாம் பரமரகசியமே! உபமன்னியு முனிவர் வியாக்ரபாத மாமுனிவரிடமிருந்து இதனைக் கேட்டதனால் கைலாஸ மடையலானார். மேலும் கண்ணபிரான் அதனை உபமன்யு மாமுனிவரிடமிருந்து கேட்டதனால் கைலாச மடையலானார். தவிரவும் கேளீர்! பிராமணோத்தமர்களே! குந்தியின் சுதனான மகா புத்திசாலியாகிய அர்ஜுனன் இதனைக் கண்ணபிரானிடமிருந்து கேட்டதினால் போர் முகத்தில் சத்துருக்களை அதம்பண்ணிவிட்டுப் பிறகு கைலாஸத்தை யடைந்தான்.

## 3-வது அத்தியாயம்.

முனிவர்கள் சூதமா முனிவரைப் பார்த்து ஓ! அறிவிற் சிறந்த சூத முனிவரே! அதி துட்டனாகிய சூரபதுமன் இரு தம்பியர்களோடு முன் உண்டாயிருந்தானல்லவா? மிக்க வலியுள்ள அவனது தம்பிகளாகிய சிங்கமுகன் தாரகன் இவ்விருவர்களும் எங்கு சென்றார்களெனத் தெரிகிலேம். அச்சூரன் ஓர் மயிலுருவத்தையும் கோழி உருவத்தையும் எடுத்துக்கொண்டு வெளிப்பட்டதாக உம்மாலுரைக்கப்பட்டது! அதென்ன காரணத்தினாலென்பதை எடுத்துரைத்தல் வேண்டும்" என சூதர் ஓ! முனிவர்களே! வெகு ஜாக்கிரதையாய்க் கேளீர்கள். முந்தியோர் கற்பத்தில் ஸ்ரீ சுப்பிரமணிய

ஸ்வாமியானவர் மிக்க நேர்த்தியான பூஷணங்களையுடைய மயிலின் மீதேறிப் புறப்பட்டு உல்லாஸமாய் ஜகங்களில் உலாவுமளவில் மலையரசனுகிய நிகரற்ற கைலைக்குச் சென்று வாகன ராஜனுன தனது மயிலை விட்டிறங்கி அம்மயிலின் அடிவாரத்தில் தம் மயிலையும், துவஜாரூபமாயிருந்த கோழியையும் நிறுத்தி விட்டுத் தம் பெற்றோரிடஞ்சென்றார். அப்போது அவ்விரண்டும் அம்மலையின் ஸ்திதியைப் பார்த்துக்கொண்டேயிருந்தன. பின்னர். பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களெல்லாம் ஸ்ரீ பரமேசுவரனைச் சேவிப்பதற்காக அங்கு வந்தவர்கள், வாகனங்களை அங்கு நிறுத்திவிட்டு எல்லோர்களும் பரமேசுவரரிடம் சென்றார்கள்.

கேளீர்! பிராம்மனுேத்தமர்களே! அப்போதவர்களுடைய வாகனங்களெல்லாம் அங்குள்ள சிறந்த மயிலையும் கோழியையும் வந்தனிக்காமல் உள்ள மதிற் கர்வம்கொண்டவைகளாகி நிற்கலாயின. ஓ! முனிவர்களே! அப்போது அங்கிருந்த நான்கு பூதங்கள் அவைகளின் கர்வத்தையறிந்து அதனை மகா பராக்கிரமமுடைய அம்மயிலுக்கும் கோழிக்கும் அறிவித்ததோடு அப்பூதங்கள் ஒன்று சேர்ந்து மகா கோபங்கொண்டவைகளாகி ஓ! கோ! அவ்வாகனங்களை எல்லாம் சகல லோகங்களிலும் துரத்திக்கொண்டு விஷ்ணு, பிரம்மன், இந்திரன் இவர்களுடைய லோகங்களை எல்லாம் இடித்து அதம் பண்ணி மிக்க கர்வத்துடன் எல்லா வாகனங்களையும், பின்னும் அங்கங்குள்ள தேவர்களையும் வழியில் நேர்ந்த மற்றவர்களையும் கொன்றன. கேளீர்! தரணி தேவர்களே! அப்போது எங்கும் அதிக பயங்கரமான ஆரவாரமுண்டாயிற்று. இவ்வாருக அந்நான்கு பூதங்களும் அந்தந்த லோகங்களை யெல்லாம் ஓர் நொடிப்பொழுதில் கொளுத்தி நாசம்பண்ணிவிட்டு பின் துரிதமாய் ஒன்று கூடி முன்போல் அங்கு வந்திருந்தன.

பின்னர் கந்தபிரான் ஸ்ரீ சம்புவால் விடை கொடுக்கப்பட்டவராகித் திரும்பி வெளியில் வந்து அளவற்ற கோடி பூதங்களும் மயில் கோழிகளோடு உல்லாசமாயிருந்து கொண்டிருக்கும் அவ்விடத்திற்கு விஜயமாயினர். பின்பு விஷ்ணு முதலிய தேவர்களும் ஸ்ரீ பரமேசுவரரை வந்தனித்துவிட்டுத் துரிதமாய் விடைகொண்டவர்களாகி அவரவர் வாகனத்தின் மீதேறிக்கொள்ள விருப்பங்கொண்டு திரும்பி வருகையில் அங்கு தங்களது வாகனங்ளில்லாததைக் கண்டு ஆச்சரியப் படும்போது அங்குள்ள அவ்வவர்களின் வாகனங்கள் மாண்டு கிடப்பதையும் அவ்வவர்கள் லோகமெல்லாம் நசித்துக் கிடைப்பதையும் அறிந்து மிக்க துக்கமடைந்தார்கள். பிறகு அவர்களெல்லாம் உடனே விரைவிற் சென்று சண்முகப் பெருமான் சமுகமுற்று வந்தனை வழி பாடுகளியற்றி தங்கள் குறையை எடுத்துக் கூறினர்கள். இதைக்கேட்ட பெருங்கருணைத்தடங்கடலாகிய முருகப் பெருமான் ஓ! தேவர்களே! இக்கொடுந்தொழில் புரிந்தவர் யாவர்? அதனை நீங்கள் திர யோசித்துக் கூறுங்கள்" என்று வினவின அத்திருமொழியைக் கேட்ட விஷ்ணு முதலிய தேவர்கள், ஓ! தேவரக்ஷகராகிய பிரபுவே! சூரன் பதுமன், சிங்கமுகன், தாரகனுகிய இந்நான்கு பூதங்களும் தேவரீரது மயில்

கோழிகளோடுகூட இந்நான்கு பேரும் மிக்க கோபமுடையவராகி எங்கள் வாகனங்களை யெல்லாம் அழித்துப் பிறகு முன்போல் தேவரீர் வாகனமாகிய மயில், கோழிகளின் அருகிலுள்ள பூதங்களோடு சேர்ந்திருக்கின்றன. ஓ! கருணைக் கடலாகிய தேவ சேனு, தேவரீர் எங்களை ரக்ஷித்து அருளல் வேண்டும். என, இத்தகைய வசனத்தைக்கேட்டதன்மேல் ஸ்ரீ சண்முகப்பெருமான் அப்பூதங்களைத் தம்மருகில்வாவழைத்து 'ஓ! பூதங்களே! நீங்களிக்கெடுதி செய்தபடியால் இப்போது எமதாக்கினையின்படி அசுரகுலத்திற் பிறப்படையக் கடவீர்கள்'' என்று அந்நான்கு பூதங்களையும் சபிக்கப்பின்னர் அப்பூதங்கள் மிக்க பயங்கொண்டவைகளாகி என்றும் அழிவற்றவரான அக்கந்தப்பெருமானை வந்தனித்து "ஓ! தேவ தேவா! எங்களுக்கு இச்சாபம் நீங்குவதற்குக் கருணைக் கடலே! தக்க திருவாக்கினை அருளி இரட்சித்தல் வேண்டும். ஓ! பிரபுவே! எங்களுக்கு அசுர ஜன்மம் வந்துவிட்டால் யாங்கள் தேவரீரை நினைப்பதற்கு இடமிராதே'' என்று அப்பூதங்கள் உரைத்து அழிவற்றவரும் அநாதியாயுள்ளவரும் அன்பர்க்கு இடையறு நேசருமான சிவசண்முகத்தை தண்டஞ் சமர்ப்பித்து விரும்பிக் கேட்டுக் கொண்டன.

பின்னர் தேவ தேவன் மனதிரங்கி தனது அபார கருணையினல் அப்பூதங்களைத் திருஷ்டித்து ஓ! பூதங்களே! நல்லது! இப்போது உங்களுக்கு நமதாக்கினையின்படி அசுரப் பிறப்புண்டாகும். பின்னர் நாம் கருணை வசத்தினல் அந்த ஜன்மத்தில் உங்களை வதைசெய்து பிறகு உங்களுக்குப் பழைய உருவத்தைக் சந்தேகமின்றி அருள்செய்கின்றோம்'' என்று அத்தேவ தேவனல் உரைக்கப்பட்ட மாத்திரத்தில் அப்போது சூரன், பதுமன் என்ற இரு பூதங்களும் முருகப் பெருமானை நமஸ்காரஞ் செய்து "ஓ! கருணைக்கடலான தேவ தேவா! மிகுந்த சந்தோஷத்தோடு எங்கள் இருவரையும் காப்பாற்ற வேண்டும். ஓ! பிரபுவே! யாங்களிருவரும் மயில் கோழி யுருவங்களோடு மிகுந்த கொடிய தவத்தைச் செய்தோமே! ஓ! பகவானே யாங்களெப்போது தான் தேவரீர் கருணைக்கு இருப்பிடமாவோமோ! இப்படி இருக்கையில் பிரஸன்னரான தேவரீரால் எங்களுக்கு மகா பயங்கரமான அசுர ஜன்மம் அருளப்படலாயிற்றே! ஓ! சகல லோகாதிபரே! அதனின்று எங்களுக்கு எப்போது விடுதலை யுண்டாகும்'' என, இவ்வாறு கூறிய சூரன் பதுமன், இவர்களுடைய வசனத்தைக் கேட்டருளி என்றும் அழிவற்ற ஸ்ரீ குகப்பெருமான் புன்னகைப்புற்ற திருமுகத்தை யுடையவராகிக் "கேளீர்! சூரபத்துமர்களே! நீங்கள் இருவரும் மகா கொடியோனும், தேவர்களுக்கு இயமனுமான சூரபதுமனென்று உலகிற் பெரிய ஒரு அசுரர்களாவீர்கள். பின்னர் அச்சன்மத்தில் அசுரத் தன்மையிருந்து விடுபட்டவுடன் உங்களுக்கு நமதாக்கினையால் மயில் கோழி இவைகளுடைய உருவம் கிடைக்கலாகும்'' எனத் திருவாக்களித்தருளி அப்பூதங்களை யனுப்பிவிட்டுப் பிறகு அத்தேவ தேவன் பயத்தினல் தமது பாரிசத்திற் பதுங்கியிருக்கலான எல்லாத் தேவர்களையும் திருக்கண்ணுற்று 'ஓ! தேவர்களே! இவைகளால் கொல்லப்பட்டனவாகிய சேனைகளும் வாகனங்

களும் இப்போது நமதாக்கினையின்படி முன்போலாகிவிடக் கடவன' என்று அவர்களுக்கு அருள் புரிந்து அவ்வவர்கள் இருப்பிடத்திற்குச் செல்லும்படி உத்திரவளித்துத் தாமும் மிக்க நேர்த்தியும் பற்பல பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்ட மயிலின் மீதேறிக்கொண்டு கேளீர்! தரணி தேவர்களே! அத்தேவ தேவன் ஓர் கண நேரத்துக்குள் தமது நகரமடைந்தனர்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பின்னர் அந்நான்கு பூதங்களும் காசிப முனிவருக்கு மூன்று பிள்ளைகளாகப் பிறக்கலானார்கள். பின்னர் தாரகனும் சிங்கமுகனும் ஸ்ரீ வடிவேலனாற் கொல்லப்பட்டவுடன் முன்போல் பூதர்களின் உருவம்கொண்டவராகிக் கைலாசமடைந்தார்கள். கேளீர்! வேதியர்களே! சூரபதுமனோ அத்தேவரால் அதம்செய்யப்பட்ட மாத்திரத்தில் விரைவிற் சிரேஷ்டமான மயில் கோழி, இவைகளின் உருவத்தை யெடுத்துக்கொண்டு எல்லாம் வல்ல முருகனுக்கு ஆனந்தக்களிப்பை யுண்டாக்கினான். ஓ! சௌனகாதி முனிவர்களே! சூரன் முதலியவர்களின் ஜனனவிடம் இன்னதென்று உங்களுக்குத் தெளிய எடுத்துரைத்தாயிற்று. இன்னும் உங்களுக்கு மற்றப்படி என்ன கேட்க வேண்டியதோ அதனைச் சொல்லுகின்றேன்.

## 4-வது அத்தியாயம்.

முனிவர்கள் சூதரை நோக்கி "ஓ! தவத்தையே தனமாய்க்கொண்ட சூத முனிவரே! அஜமுகி யென்று பெயர் போன சூரபதுமனது தங்கையும், மாயை யென்ற அவனது தாயும் பின்னரெங்கு சென்றார்கள்! அவ்விருவருடைய விருத்தாந்தத்தையும் எங்களுக் கெடுத்துரைத்தல் வேண்டு"மென, சூதர் கேளீர்! முனிவர்களே! தாயாகிய மாயை யென்பவள் உயுத்த காலத்தில் சூரியனிடம் வந்து அவனுக்குச் சில உபாயங்களைச் சொல்லிவிட்டுப் பயங்கொண்டவளாகி மந்தரமலைக்குச் சென்றவுடன் அஜமுகியிடஞ்சென்று "ஓ! பெண்ணரசே! சூரியன் முதலியவர்கள் இறந்துபோனவுடன் நீ மலைகளிற் சிறந்த ஸ்ரீ பருவதத்திற்குச் சீக்கிரமாய் வந்து விடென்று தனது பெண்ணாகிய அஜமுகிக்குரைத்துச் சென்றுவிட்டாள்.

பின்னர் சிலகாலஞ் சென்றதன்மேல் சூரபதுமன் முதலிய அசுரர்களெல்லாம் இறக்கலாகி அசுரேந்திரனும் இரணியனும் ஓடிப்போனவுடன் அப்போது அஜமுகி ஸ்ரீ பருவதத்திற்கு வந்து தன் தாயாகிய மாயையைக் கண்டு கட்டிக்கொண்டு பலவாறாய்ப் புலம்புகையில் மாயை தன்பெண்ணை நோக்கி நீ துக்கப்படாதே! உனது சகோதரனான சூரபத்துமன் ஸ்ரீ சுப்பிரமணியருக்கு வாகனமாயும் துவஜமாயும் இருப்பதற்காகவே நிகரற்ற மயிலுருவத்தையும் கோழியுருவத்தையும் கொண்டவனாகி பிரம விஷ்ணுக்களால் வந்தனை வழிபாடுகள் இயற்றும்படியான பதவி யடைந்திருக்கின்றான். மேலும் சிங்கமுகனும் தாரகனும் பூதவுருவத்தோடு மிகுந்த ஐசுவரிய முடையவர்களாகிக் கைலாஸகிரியில் சந்தோஷமாய் விளங்களாகின்றார்கள்" என, இவ்வாறு மாயையால் உரைக்கப்பட்டபோது புத்திரியாகிய அஜமுகி "ஓ! அம்மா! இவர்கள் மகா பாதர்களாயிற்றே! இவர்களுக்கு இப்பேர்க்கொத்த நல்லகதி எவ்வாறு கிடைக்கலாயிற்று." என்பதை வினவிய எந்தனுக்கு இப்போது உள்ள

படி அன்போடு உரைத்தருளல் வேண்டும்''என, மாயை கேளாய்! மகளே! முந்தி ஓர் கற்பத்தில் சாகத்தீவத்தில் மிகுந்த தருமாத்துமனும், ஸத்திய வாக்குடையவனும், பொருமையற்றவனுமான பிரபாகரனென்று ஓர் இராஜ சிரேஷ்டனிருந்தான். அவ்வரசன் மிகுந்த சௌந்தரியம் பொருந்திய ஓர் பெண்ணைக் கலியாணஞ் செய்துகொண்டு அவளிடமாய் ஓர் இரட்டைப் பிள்ளைகளைப் பெற்றான். மேலுமவனுக்கு வெவ்வேறாய் மற்றிரண்டு பிள்ளைகள் பிறக்க ஆக நான்கு புத்திரர்கள் உண்டானார்கள்.

பின்னர் அவ்வரசன் அப்பிள்ளைகளுக்கு முறையே தன் தந்தை தாய்களின் தந்தைக்குச் சகோதரர்களான மிக்க பிரசித்தி பெற்ற பெயர்களை இட்டான். முன் பிறந்த இரட்டைப் பிள்ளைகள் சூரனென்றும் பதுமனென்றும் பெயரிடப்பட்டார்கள். பின்னர் மற்றைய இரு பிள்ளைகளும் சிங்கனென்றும் தாரகனென்றும் அழைக்கப்பெற்றார்கள். பின்னர் அப்பிரபாகர ராஜன் இராஜ்ஜியத்தில் பிள்ளைகளை யேற்படுத்திவிட்டுத் தான் தவஞ்செய்வதற்காகத் தன் மனையாளோடு கூடவோர் சிறந்த தவ வனத்திற்குச் சென்று விட்டான். அதன் பின்னர் சூரன் முதலிய பிள்ளைகள் அரசாக்ஷியைச் சிறிதுஞ் சோம்பலின்றி நீதியாய்ச் செலுத்தி வந்தார்கள். அப்போது ஸ்ரீ அகத்திய மாமுனிவர் சூரன்பதுமன் இவ்விருவரிடத்தும் வந்து சகல பாணங்களையும் தொலைக்கலுற்ற ஸ்ரீ கந்தபிரானது மகிமையை யெடுத்துரைத்தனர். இதுபோன்ற சிங்கன் தாரகன் இவர்களிடத்திற்குத் தவங்களுக்கு நிலையாகிய திரிணபிந்து முனிவர், யோகிகளில் தலைவரான விருஷபயோகி முனிவர் ஆகிய ஸகல லோகங்களுக்கும் உபகாரஞ் செய்வோர்களும், தத்துவங்களை யறிந்தவர்களுமான இவ்விருவர்களும்வந்து முறையே மகா பரிசுத்தம் பொருந்தியவர்களான துர்க்கையம்மன், மகா சாஸ்தா இவர்களுடைய மகிமைகளை யெல்லாம் விருப்பத்திற் கிசைந்தபடி நன்றாயெடுத்துரைத்தனர்கள்,

அப்போது கேளாய்! குழந்தாய்! இந்த இராஜ குமாரர்களெல்லாம் அவ்விரு ஈசுவரர்களுடைய பெருமை பொருந்திய திருவசனத்தைக் கேட்டவுடன் ஏதோ முதிர்ந்த புண்ணிய வசனத்தினால் மெத்தப் பக்தியுடையோராகி விட்டார்கள். சூரன் பதுமன் இவ்விருவருக்கும் ஸ்ரீ சண்முகரிடத்தும் சிங்கன் தாரகன் இவர்களுக்குத் துர்க்கை யம்மன், மகா சாஸ்தா இவர்களிடத்தும் மிகுந்த பக்தியுண்டாகி விட்டது. சூரன் மயிலுருவம் கொண்டு அச்சுப்பிரமணியரைச் சுமப்பதற்கும், மிக்க பலவானான பதுமன் கோழி யுருவங் கொண்டு துவஜமாயிருந்து அப்பிரபுவைச் சந்தோஷிப்பதற்கும் இச்சை கொண்டார்கள். சிங்கன் தாரகன் என்பவர்களும் அதே பிரகாரமாய்ச் சிங்கம், யானைகளின் உருவங்களைக் கொண்டவர்களாகித் துர்க்கை யம்மன் மகா சாஸ்தா இவர்களுக்கு வாகனங்களாய் இருக்க இச்சை கொண்டார்கள்.

இவ்வரசர்கள் இவ்விதமாய் அவரவருக்கு வாகனமாகும் தன்மையை வேண்டிக் கொண்டு அத்தகைய பதவிகளை யடைவதற்காக எப்போதும் பக்தியுடையவர்களாகித் தங்கள் பிள்ளைகளிடத்து இராஜ்ஜியத்தை ஒப்புவித்துத் தவம்புரிவதற்குச் சென்று நாற்பதினாயிர வருஷமாயும் அதி

கோரமான தவத்தைச் செய்தார்கள். அச்சமயத்தில் எல்லாத் தேவர்களும் கைலைகிரிக்குச்சென்று தங்கள் தங்கள் வாகனங்களை அம்மலையின் அடிவாரத்தில் நிறுத்திவிட்டு ஸ்ரீ பரமேசுவரனைச் சேவிப்பதற்காகச் சந்தோஷமாயவரருகிற் சென்றார்கள். அப்போது பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய எல்லாத் தேவர்களின் வாகனங்களும் ஸ்ரீ கந்தப் பெருமானது மயில் கோழி துர்க்கையின் வாகனமான சிங்கம் மகா சாஸ்தாவின் வாகனமான யானை இவைகள் அருகில் வந்து, கேளாய்! குழந்தாய்! கருடன் முதலிய அவ்வாகனங்களெல்லாம் அவைகளை நோக்கி "ஓ! மயில் முதலியவைகளே! பிரயாகாராஜன் புத்திரர்கள் உங்கள் பதவிகளை யடைவதற்காகப் பஞ்சாக்கினி மத்தியிலிருந்துக் கொண்டு அதிகோரமான மிகுந்த தவத்தைச் செய்கின்றார்கள்" என இவ்வாறவைகளின் வசனத்தைக் கேட்டவுடன் மயில் முதலியவைகள் அதிகோபங் கொண்டவையாய் 'ஓ! நமது பதவி இவர்களுக்கு எவ்வாறு கிடைக்கத்தகும்? என்று அத்தவத்தலத்திற்குச் சென்று அங்கு மிகுந்த சுவாலைகளோடு எரிந்துகொண்டிருந்த அக்கினிகளை யணைத்து 'நீங்களெதற்காக இவ்வரிய தவத்தைச் செய்கின்றீர்கள்' என்று அவ்வரசர்களை வினவ, உடனே அந்நான்கு பெயரும் மெய் நடுக்கங்கொண்டவர்களாகித் தங்களுடைய வேண்டுதல்களை மயில் முதலியவைகளுக்குச் சொன்னார்கள்.

"அப்போதவைகள் ஓ! ராஜர்களே! நீங்கள் மயில் முதலிய வெங்களது பதவிகளை இச்சித்தபடியால் இப்போது விரைவில் எங்கள்முகங்களைக்கொண்ட பூதங்களாகக்கடவீர்கள்" என்று இவ்வாறாகச் சபித்துவிட்டு அம்மயில் முதலியவைகள் துரிதமாய்த் தங்களிருப்பிடஞ் சென்றன. அப்போதவ்வேந்தர்களும் மிக்க துக்கத்தோடு அப்பூதமுகத்தை யடைந்தவர்களாகி அவைகளைப் பின் தொடர்ந்தே அவர்களிடத்திற்குச் சென்று அம்மயில் முதலியவைகளைத் துதிக்க இரக்கங்கொண்டவர்களாய் இருக்க அம்மயில் முதலியவைகள் அப்பூதங்களைப் பார்த்து "ஓ! பூதர்களே! நீங்களிப்போது இங்கு வசித்துக் கொண்டிருங்கள். சில காலஞ்சென்றதன்பின் உங்கள் கோரிக்கைகள் உண்மையாய்க் கைகூடும்." என, கேளாய்! பெண்ணே! இவ்வாறு அவைகளின் வசனதைக் கேட்டு அம்பூதங்கள் அண்டாவரணப் பூதங்களோடு சேர்ந்து சந்தோஷமாய் வசித்து வந்தன. ஓ! பெண்ணே! பின்னர் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் ஸ்ரீ பரமேசுவரனை நமஸ்கரித்து வெகு சந்தோஷமாய்த் திரும்பி வந்து தத்தமது வாகனங்களிலேறிக்கொண்டு அவரவர்களிடங்களுக்குச் சென்றுவிட்டார்கள்.

## 5-வது அத்தியாயம்.

இவ்விதமாக மகா பலசாலிகளான இந்நான்கு பூதங்களும் அனேககோடி யண்டாவரணப் பூதங்களோடு சேர்ந்து கொண்டிருக்குமளவில் அப்போது தேவர்களெல்லாம் போர்முகத்தில் அசுரர்களால் விரட்டிவிடப்பட்டவர்களாகிச் சகல பூதங்களும் வசிக்கலுற்ற கைலையங்கிரிக்கு வந்து அங்கு மிகுதியா யழுதுகொண்டு அப்பூதங்களையே அடைக்கலமாய் வேண்டிக் கொண்டார்கள். பின்னர் அவ்வாறழுதுற்றவர்களான தேவர்களின் வசனத்

தைக் கேட்டவுடன் அந்நான்கு பூதங்களும் பூ உலகத்திற்கு வந்து அங்கு துணையாய் வந்த சில பூதங்களுடன் அனேக மசுரர்களைக் கட்டைகள், கட்டிகள் முதலிய ஆயுதங்களால் அடித்துக்கொன்றார்கள். ஓ! குழந்தாய் அசுரர்கள் தோல்வியடைந்த பின் இப்பூதங்கள் பூலோகத்திலுள்ள பூதங்களைத் தத்தமது விடுதிகளுக்கு அனுப்பிவிட்டுச் சீக்கிரத்தில் அண்டவாரணப் பூதங்களிடஞ் சென்று அங்கு சுகமாய் வசித்திருந்தன. பின்னர் அத்தேவர்களெல்லாம் மிகவும் சந்தோஷம் கொண்டவர்களாகித் தங்களிருப்பிடஞ் சென்றார்கள். அப்போது அசுரர்களுக்குத் தலைவனான அசுரேந்திரனென்பவன் ஓரிடத்தில் மறைந்திருந்து பூதகணங்களுக்குத் தலைவனான அண்டவாரணனை வந்தனித்துப் பூதங்களாலளிக்கப்பட்ட தீங்குகளை அறிவித்தான்.

அது கேட்டு அக்கணாதிபன் கோபங்கொண்டு அப்பூதங்களை நோக்கி "ஓ! பூதங்களே! நீங்கள் நமது உத்தரவின்றிச் சரணமடையலான தேவர்களுக்கு உதவி செய்வதற்காகப் போரினில் அனேகம் அசுரர்களைக் கொன்றுவிட்டபடியால் நீங்கள் நமது வாக்கின் வலிமையால் அதிகொரேமான அசுரத்தன்மையை அடைந்து நாள் தோறும் தேவர்களுக்குக் கெடுதிசெய்யக் கடவீர் என, இவ்வாறு அப்பூதத் தலைவன் வெகு கோபத்தோடு சபித்துவிட்டு அவ்வசுரேந்திரனை வெகு சந்தோஷத்தோடு அவன் பட்டனத்திற்கு அனுப்பினான். பின்னர் இது முதலாய்த் தேவர்களிடத்துப் பகை பாராட்டலான அந்நான்கு பூதங்களும் இரக்கமற்றவைகளாகி நான்கு பக்கங்களிலும் அவர்களுக்கு வலிமையுடன் கொடிய துன்பங்களைச் செய்துவந்தார்கள். பின்னர் கேளாய்! குழந்தாய்! ஒரு சமயத்தில் அப்பூதங்கள் ஸ்ரீ கந்தபிரானுடைய மயில் கோழிகளோடு சேர்ந்து முந்திய பகைமைகொண்டு மிக்க கோபாவேசம் கொண்டவைகளாகித் தேவர்களையும் அவர்கள் வாகனங்களையும் தங்களிச்சையின்படி அடித்துக்கொன்றன. இது உணர்ந்து தேவரை ரக்ஷிக்கின்ற ஸ்ரீ சண்முகரும் வெகு கோபம் கொண்டவராகி அதிவிரைவிற் பயங்கரமான அசுர ஜன்மமுண்டாகக் கடவதென்று அப்பூதங்களைச் சபிக்கலானார். பிறகு உடனே அந்நான்கு பூதங்களும் அசுரத் தன்மையை யடைந்தன. ஓ! பெண்ணே! கொடிய சூரன், பதுமன் இவ்விரண்டு பூதங்களும் மகா கொடிய உருவத்தோடு சூரபதுமனென்ற வோர் மகாசுரனாகிவிட்டன.

அத்தகைய எனது புத்திரனாகிய சூரபதுமன் ஸ்ரீ முருகேசனால் அடிபட்டு அக்கந்த பரமாத்மாவினுடைய மயில்,கோழி யுருவங்களோடு இப்போது பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களால் வந்தனிக்கப்படுவோனாகி விளங்குகின்றான். ஸ்ரீ தேவாதிதேவனுடைய முந்திய மயிலும் கோழியுருவமேனென்றால் இவைகள் முந்திய ஜன்மத்திற் செய்த தவத்திற்குக் கெடுதி செய்ததும், பூதங்களின் வார்த்தையைக் கேட்டுத் தேவர்களுடைய வாகனங்களாகிய கருடன் முதலிய வாகனங்களைக் கொல்ல உடந்தையாயிருந்த குற்றத்தை அவ்விரண்டும் மனதில் ஆலோசித்துக் காஞ்சிபுரம் சென்று அங்கு மயில் கோழியுருவங்களுடன் ஸ்ரீ குகப்பிரானையே அந்தக்கரணத்தில் தியானஞ்செய்து வெகு காலம் வாசஞ்செய்து அடி! பெண்ணே! பிறகு முடிவினில் ஸ்ரீ முருகேசனைக்

கினையின்படி யவரது சாயுச்சிய பதவியடைந்துவிட்டன. மேலும் சிங்கமுகன் தாரகன் என்று பெயர்பெற்ற இரு சகோதரர்களும் ஸ்ரீ குகப்பெருமானுல் அடிபட்டவராகி அவ்விருவரும் உத்தமமான கைலையங்கிரியடைந்து அங்கு பூதர்களின் உருவத்தோடு ஸ்ரீ நந்திகேசுவரரால் சந்தோஷிப்பிக்கப்பட்டவர் களாகி விளங்குகின்றுர்கள்.

தவிரவும் இவ்விருவரும் இக்கற்பகத்தின் முடிவினில் துர்க்கை அம் மனுக்கும் மகா சாஸ்தாவுக்கும் முறையே சிங்க வாகனமும் யானை வாகனமு மாகப் போகின்றுர்கள். ஆனுல் இக்கற்பமதில் அவர்களுக்கு வாகனங் களான முந்திய சிங்கமும் யானையும் ஒரே காலத்தில் ஸ்ரீ விருஷப ராஜனுடைய ஸாரூப்பிய பதவியை யடைந்துவிடலாகு"மென, அப்போது அஜமாமுகி "ஓ! அம்மா! துர்க்கை யம்மனுக்கும் மகா சாஸ்தாவுக்கும் சிறந்த வாகனங்களான சிங்கம், யானை இவ்விரண்டிற்கும் ஸ்ரீ விருஷபராஜ னுடைய ஸாரூப்பிய பதவி எவ்வாறு கிடைக்கலாயிற்றென்பதை இப்போ தெந் தனுக்குத் தெளிய வுரைக்க வேண்டு"மென, மாயை கேளாய்! மகளே! பூர் வத்தில் ஸ்ரீ மகாதேவர் துர்க்கை சாஸ்தா அவ்விருவர்களையும் முறையே! ஸ்ரீ கௌரியம்மையிடமாயும் விஷ்ணுயிடமாயும் சிருட்டித்தார்.

பின்னர் வாகனங்களுக்கெல்லாம் ஈசுவரரான மிக்கச் சௌரியம் பொருந் திய விருடபராஜனை நோக்கி "ஓ விருஷபராஜனே! நீ இப்போது இவ்விருவர் களுக்கும் சீக்கிரமாய் தக்க வாகனங்களைக் கொண்டுவர வேண்டு"மென ஸ்ரீ பகவான் தருமத்தினுல் உருவம் கொள்ளப்பெற்ற அவ்விருஷப ராஜனைக் கட் டளையிட்டவுடன் அதுகேட்டு இலக்ஷ்மி விலாசம் பொருந்திய அவ்விருஷப ராஜன் மனதிலாலோசித்துக் கைலைதனில் இருக்கும் மிருகங்களில் மகா பராக் கிரமம் பொருந்திய ஓர் சிங்கத்தையும் யானையையும் அழைத்து ஓ! சிங்க யானைகளே! நீங்கள் இத்துர்க்கை யம்மனுக்கும் சாஸ்தாவுக்கும் சிரேஷ்ட மான வாகனங்களாயிருக்குந் தன்மையை யடையுங்கள்" என, இவ்வாறு அவ் விருஷபத்தின் வசனத்தைக் கேட்டு சிரேஷ்டமான அச்சிங்கமும், யானையும் "ஓ! சுவாமி! யாங்கள் இருவரும் தேவரீருடைய ஸாரூப்பியத்தை யடைவ தற்கு இங்கு இச்சை கொண்டிருக்கையில் இப்போது எங்களுக்கு இத்தகைய தொழிலை ஏற்படுத்தலாயிற்றே!" என இவ்வாறுரைக்கலான அவைகளை நோக்கி விருஷபேசுவரன் பின்னர் "நீங்கள் நமதாக்கினையின்படி தம்மைத்தியானித்துக் கொண்டே இவர்களுக்கு வாகனங்களாயிருந்து பின்னர் வெகுகாலஞ் சென்ற தன் பின் நமது சாரூப்பியத்தை அடையக் கடவீர்கள்" என்று வாகனேசு வரரான அவ்விருஷப ராஜன் ஏற்பாடு செய்தனர்.

பின்னர் அச்சிங்கமும்,யானையும் அவ்வாறே வாகனங்களாகி என்று மழி வற்ற விருஷப ராஜனையே வெகுகாலம் தியானித்து வந்ததன் பின் அத்துர்க் கையையும் சாஸ்தாவையும் விட்டு விருஷபராஜனுடைய ஸாமீப்பியத்தை யடைந்து பின்னர் அச்சாரூபியத்தைக் கொண்டு மிக்கச் சந்தோஷத்துடன் இருக்கின்றன. கேளாய்! மகளே! அப்போது துர்க்கையும், சாஸ்தாவும் வாகன மிழந்தவர்களாகிக் கணதிபராகிய ஸ்ரீநந்திகேசுவரரிடஞ்சென்று சிறந்த

வாகனங்களை அவர்கள் வேண்டினபோது அவர் மனதினில் ஆலோசித்துக் கேளாய்! பெண்ணரசே! சிவாக்கினையின்படி மகா பல பராக்கிரமர்களான சிங்கமுகன், தாரகன் என்ற இவ்விரு பூதங்களையும் அத்துர்க்கை யம்மனுக்கும் மகா சாஸ்தாவுக்கும் வாகனங்களாய் ஏற்படுத்தி விட்டனர். ஓ! பெண்ணே! முன் வாகனங்களாயிருந்த சிங்கம் யானை இரண்டிற்கும் விருஷப ராஜனது ஸாரூப்பியம் கிடைக்கலான விவரத்தை யான் இப்போது உந்தனுக்கு உரைத்திட்டேனென்றார்.

## 6-வது அத்தியாயம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பின்னர் அவ்வஜமுகி மிக்கக் களிப் புற்றவளாகி மாயையை நோக்கித் தனது வரலாற்றைப்பற்றி பயத்தோடு வினவுகையில் மாயை, கேளாய்! பெண்ணே! கோமேதகமென்ற ஓர் பெரிய நிலத்தில் விசிஷ்டனென்ற ஓர் சிறந்த பிராமணன் இருந்தான். அவனுக்குச் சுமதையென்று மிக்க தர்ம புத்தியுடைய ஓர் மனையாள் இருந்தாள். அவ்விசிஷ்டன் அவளிடமாய் மிகுந்த சௌந்தரியம் பொருந்திய குழந்தையாகிய உந்தனைப்பெற்றாள். நீ அப்போது பூதலத்தில் சித்திரரேகையென்று பெயர்கொண்டிருந்தாய். மேலும் பூசக்கிரமென்ற பட்டணத்தில் ஹரிஜன்மன் என்றோர் அந்தணன் இருந்தான். அவனுக்குப் புண்டரீகன் என்று மகாபுத்தி சாலியான ஓர் சிறந்த பிள்ளை யுண்டானான். அப்புண்டரீகன் மிகவும் நேர்த்தியான சிறுவயதுடைய யுந்தனை முறைப்படி மணம்புரிந்து தனது நேர்த்தியான பட்டணத்தில் விஷ்ணு பக்தி செய்து கொண்டிருந்தான்.

பின்னர் நாளளவில் அவ்வந்தணனுக்கு விஷ்ணு பிரத்தியக்ஷமாகும்போது அவரிடமிருந்து, நாளொன்றுக்கு நூறு மோகராக்களைக் கொடுக்கலுற்றதும், மிக்க நேர்த்தியான ஒளியைக் கொண்டதுமான ஓர் சிறந்த இரத்தினத்தைப் பெற்றுக்கொள்ள, அதன் மகிமையால் அவன் சாத்திரமறிந்தவர்களான பல சீடர்களால் சூழப்பெற்றவனும், வேதங்களிற் கரை கண்டவனும், நாள்தோறும் வேதமோதுவோனும், கோபமற்றவனும், என்றும் தருமத்தையே பாராட்டியவனும், அன்னதானஞ் சுவர்ண தானங்களை யென்றும் பிரீதியாய்ச் செய்வோனுமாய் இருந்து வந்தான். அப்பிராமணனுக்குப் பெண்டீராகிய நீ மிக்க ரூப யௌவனங்களால் கர்வங்கொண்டவளும், காமவசப்பட்டவளுமாகி மிகுந்த பாவத்தொழிற்களைச் செய்யத் தலைப்பட்டு நீ அங்கங்கே பார்க்கப் பட்ட பல புருடர்களிடத்துக் காதல்கொண்டு பின்னர் நாளடைவிற் லச்சை கெட்டவளாகி உன் புருடனுக்குச் சீடர்களான சிறந்த பிராம்மணர்கள், மற்றும் வரலான பந்துக்கள், அதிதிகள், தவசிகள், தானம்வாங்க வந்தவர்கள், தற்செயலாய்த் தங்குவதற்கு வந்தவர்கள் இவர்களையெல்லாம் உன் வசப்படி மோகிக்கச்செய்து பலவந்தமாய் கலவிபுரியவானாய். நீ கேவலம் காமகோரங் கொண்டவளாகி விலக்கின்றி கண்டவர் கேட்டவர்களை யெல்லாம் கைவைக்கத் தலைப்பட்டு விட்டாய்; ஆனால் உந்தன் கணவனான அச்சிறந்த வந்தணனோ உன்மீதுள்ள மிகுந்த நேசவசத்தினால் ரூபலாவண்ணியங்களுக்கு நிதியாகிய உந்தனைக் கைவிடவேயில்லை. அடி! மகளே! அவன் உனது அற்பச் செயலறிந்தும் ஒன்றுந் தெரியாதவன்போல் சும்மாவிருந்து விட்டான்.

இப்படி இருக்கையில் தவசிகளிற் சிரேஷ்டரான தூர்வாஸ முனிவர் தமது சீடர்களோடு அங்கு வந்தார். அப்போதுள்ள உன் கணவன் அவ்வாறு லான முனிவரைத் தன் சீடர்களோடு எதிர்கொண்டு சென்று மிக்கக் வெகு மானத்துடன் நேர்த்தியான தன் வீட்டிற்கு அழைத்து வந்து அங்கோர் மண்டபத்தில் அவருக்குச் சாகை ஏற்படுத்திவிட்டுப் பின்னர் அந்தப் புரத்திற்குள் வந்து "ஓ! பெண்ணே! நீயே வெகு நேர்த்தியான அன்னத்தைச் சீக்கிரம் எடுத்துக் கொண்டுபோய் அம்மாமுனிவரிடஞ் சென்று அன்னம் படைத்துத் துரிதமாய் நம்மிடம் வருவாய் என்றுரைத்து உன்னையே அனுப்பலானான்.

பிறகு நீயும் அப்படியே நல்லதென்று வெகு நேர்த்தியான அன்னத்தைச் சீக்கிரமெடுத்துக் கொண்டு அம்மா முனிவரிடஞ் சென்று 'ஓ! ஸ்வாமி! உண்பதற்கு உணவுகொண்டு வந்திருக்கிறேன்' என்று அறிவித்ததற்கு அவர் முந்தியே பிக்ஷைசெய்து விட்டபடியால் அதனை அங்கீகரிக்கவில்லை. அப்போது நீ அத்தவசிரேஷ்டரைக் கண்டு மோகங்கொண்டவளாகித் திரும்பிப் போய் ஓர் மூலையில் இருந்துகொண்டு பின்னர் அம்மாமுனிவர் தூங்கிவிடக் கண்டு அதன்மேல் அவரருகிற்சென்று அவரைச்சேர்த்து அணைத்துக்கொள்ள அவர் கண் விழித்ததும் ஓட்டம்பிடித்தாய். அப்போது அங்கு கடைத்தெரு வீதியில் மிக்க வுன்னதமும், பல விழுதுகளைக் கொண்டதுமான ஓர் ஆலமரமிருந்தது. அதனடியில் அனேக மாடுகள் படுத்திருந்தன. ஓ! குழந்தாய்! நீ அப்போது மிக்க பயந்தவளாய் அவ்வாடுகளின் நடுவில் பதுங்கிக்கொள்ளலானாய்.

பின்னர் அம்மாமுனிவர் எழுந்தவுடன் தமது சீடனான தருமகுப்தனை யழைத்து அவனிடத்து அந்த சங்கதிகளைச் சொல்ல, 'ஓ! சீடா! விரைவிற் அப்பாதகியைப் பிடித்துக்கொண்டு நம்மிடத்திற்கு வாவென்று ஆக்கினையிட்டனுப்பி தவங்களுக்கெல்லாம் நிதியான அத்துருவாச முனிவன் யனுப்ப, அத்தர்மகுப்தன் அப்படியே புறப்பட்டு அவ்வீட்டிற்கு வெளியே சென்று பார்த்ததில் அவளைக்காணுமல் திரும்பி அம்முனிவரிடம்வந்து 'ஓ! சுவாமி! அவள் எந்தனுக்கு அகப்படவில்லை' என்றான். கேளாய்!மகளே! பின்னர் அம்மாமுனிவரே ஞானதிருஷ்டியால் அறிந்துகொண்டு "ஓ! தருமகுப்தா! நீ சீக்கிரமாகச் சென்று அவ்விடத்துள்ள கடைத்தெருவினில் ஆலமரத்தடியிலுள்ள ஆட்டு மந்தைக்கு மத்தியில் பதுங்கிக் கொண்டிருக்கும் அப்பாதகியை நோக்கி நமதாக்கினையின்படி 'அடி! துர்நடத்தைக்காரி! நீ இங்கு ஒளிந்துக்கொண்டிருக்கிறுபா? நீ சீக்கிரமாய் ஆகாயத்தில் அளாவிய இம்மரத்து நுனியில் போயிருக்கக் கடவாய்" என்று சபித்துவிட்டுச் சீக்கிரத்தில் இங்கு வந்துவிடென்று அவனை அனுப்பினர்.

பின்னர் அவனும் அப்படியே புறப்பட்டு ஆட்டு மந்தையின் மத்தியிலிருந்த உன்னைப் பார்த்து அப்போது உன்னை அவ்வாலமரத்தின் நுனியிலிருக்கும்படி சபித்துவிட்டான் பின்னர் அன்றிரவு கடந்தவுடன் அம்முனிவர் காலையில் சகல அனுஷ்டானங்களையும் முடித்துக் கொண்டு அங்கு வந்து மரத்தின் நுனியிலிருந்த உந்தனைக்கண்டார். மேலும் அப்போது ஜனங்களெல்

லாம் "ஓ! கோ! புண்டரீகனுடைய பெண்டீர் இதோ ஆலமரத்தின்பேரில் இருக்கின்றாள். இதன் அற்புதம் என்ன என்று ஒருவரோடொருவர் சந்தோஷத்தோடு சொல்லிக்கொண்டே ஆச்சரியத்தினால் மனக்களிப்புற்றவர்களாகி அவளைப் பார்த்தார்கள்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! பின்னர் புண்டரீகனும் தன் சீடர்களோடு அம்மாமுனிவரிடஞ் சென்று வந்தனை வழிபாடியற்றி அதிவினயத்தினால் வணக்கமுற்றவனாகி 'ஓ! தவசிரேஷ்டரான சுவாமி! தேவரீருக்குக் கொடுப்பதற்காக எந்தன் மனையாளான இவளை யானனுப்பினேனே! அவள் மீண்டுந் திரும்பாமல் எல்லோரும் அதிசயிப்பதற்கு ஏதுவாய் இந்த ஆலமரத்து நுனியில் இருக்கின்றாளே! ஓ! இருடீசுவரா! இது எக்கொடுமையின் பயன் என்று தெரிவித்தருளல் வேண்டுமென இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டவுடன் மாமுனிவர் அவனுக்கு இத்தகைய விருத்தாந்தங்களை யுரைத்துவிட்டு இப்போது அப்பாதகி நம்மாலங்கு தம்பனஞ் செய்யப்பட்டிருக்கிறாள் என்று கூறினர். பின்னர் புண்டரீகன் வெகு கோபத்தோடு "ஓ! முனிவரே! ஸ்திரீகள் என்ன மகா பாவிகளான போதிலும் அவர்களிடத்து நீர் இப்போது இத்தகைய செய்கை நடத்தி யிருப்பது தகுதியா? மேலும் பிறர் பாவத்தைப் பகிரங்கப்படுத்துவதில் அப்பாவம் அப்படிச் செய்வோனையே அடையுமல்லவா?

## 7-வது அத்தியாயம்.

அப்புண்டரீகன் வசனத்தைக் கேட்ட மாமுனிவர் கோபத்தோடு என்னடா வீண் அபிமானம்? 'அடா புத்தி கெட்டவனே! இவள் ஓர் மனையாளென்று உந்தனுக்கு ஏற்பட்டதே. இக்கொடிய நடைக்காரியால் அனேகம் பிராம்மணர்கள் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இத்துராத்துமியானவள் வெகு பெயர்களுடைய விரதங்களைக் கெடுத்திருக்கிறாள். இவ்வற்ப புத்தியுடையவளால் அனேகம் பிராம்மணர்கள் பாவிகளாகிவிட்டார்கள். அடா! இப்பாதகி உந்தன் மனையாட்டி யென்பது உண்மையாயின் நீ அவளை மரத்தினின்றும் இறங்கச் செய்து மிக்கச் சீமானாய் அழைத்துக் கொண்டு போகலாம்." என இவ்வாறு அவரது வசனத்தைக்கேட்டவுடன் அவ்வந்தணன் உந்தனைக்கூப்பிட்டதினால் ஓ மகளே! நீ கொஞ்ச மட்டில் தான் இறங்கி வரலானாய். அப்போது அவ் விருடிச் சிரேஷ்டர் அங்குள்ள பிராம்மணர்களைப் பார்த்து "ஓ! பிராம்மணர்களே! இவளோடு சேர்ந்த மற்றைய எல்லாப்புருடர்களும் இவளைக்கூப்பிட்டு இம்மரத்தினின்று சீக்கிரம் இறங்கச் செய்யுங்கள்" என்று திருவாக்களித்தனர். அப்போது மிக்கக் காமாதுரனான அப்புண்டரீகன் என்ற பார்ப்பானும், அவள் மீதுள்ள மோக வசத்தினால் அங்குள்ள பார்ப்பாரெல்லோர்களையும் அவளைக் கூப்பிடும்படி அனுமதி கொடுத்தான். அதன் மேல் அங்கு கூடி யிருந்தவர்களான அவனது சீடர்களும் மற்றப்படி உள்ளப்பிராம்மணரெல்லோர்களும் தலையை நிமிர்த்திக்கொண்டு அப்பாதகியைக் கூப்பிட்டார்கள். அவ்வாறு அவர்கள் அழைத்த மாத்திரத்தில் அவள்பாதி மரத்தில் வந்து தங்கலானாள்.

பின்னர் அப்புண்டரீகன் கொடூரமான கோபாக்கினியால் சூழப்பெற்றவனாகி "ஓ! தவசியே! இப்பிராமணர்க ளெல்லோரும் அழைத்தும் ஏன் இவள் இன்னும் பாதி மரத்தினில் தங்கி இருக்கின்றாள்? அதன் காரணத்தை இப்போது எனக்குக் கூறல்வேண்டு"மென, இவ்வாறுரைத்த அப்பிராமணனை நோக்கி மாமுனிவர் பின்னும் "அடா உன் மனைவிக்குக் கணவர்களான பிராமணர்கள் இவர்களைத் தவிர இன்னும் அனேகம் பெயர்கள் இருக்கின்றார்கள். அங்கு வசிக்கலுற்ற அத்தகைய துர்நடத்தைக்காரர்கள் எல்லாம் இங்கு வந்திருக்கவில்லை" என்றுரைத்து நடுமரத்திலுள்ள அப்பாதகியை நோக்கி "அடி! பாதகி! நீ இன்னும் மற்று யாவரோடு விபசாரஞ் செய்தனையோ அன்னவர்கள் நாமத்தை யாவரும் அறிய உரைத்து விட்டு இம் மரத்தினின்றிறங்கி வீட்டிற்கு ஓடிப்போ"வென, பின்னர் அவ்விபசாரியும் அவரது வார்த்தையைக் கேட்டு அப்படியே நல்லதென்று கொஞ்சமேனும் பயமற்றவளாகி அத்தகைய பிராமணர்களுடைய பெயர்களைச் சொல்லி விட்டு அம்மரத்தின் அடிக்கவைகளில் வந்து தங்கலாயினள்.

அதன்பின் அக்கொடிய நடைக்காரி அம்மாமுனிவரை நோக்கி "ஓ ஸ்வாமீ! என்னோடு சம்பந்தப்பட்டவர்களில் எனது ஞாபகத்தில் இல்லாதவர்கள் அனேகருண்டு. மற்றின்னும் அனேக பிரம்மசாரிகள், கலியாணஞ் செய்தவர்கள், சன்யாசிகள், தவசிகள் இவர்களெல்லாம் தங்கள் விரதம் பங்கமாயிற்றேயென்று உயிரை இழந்து விட்டார்கள். மேலும் அனேகஞ் சிறந்த பிராம்மணர்கள் நான் பலவந்தமாய்ப் புணர்ந்த மாத்திரத்தில் இறந்து விட்டார்கள்" என்றாள். இதைக் கேட்டவுடன் அத்தவசிரேஷ்டர் பின்னும் மகா கோபாவேசங் கொண்டவராகி "ஆ! பிராம்மணனாகிய இப்புண்டரீகன் தன் மனைவி கெட்ட நடத்தையுள்ளவளாயும் கொடிய விபசாரியாயும் இருப்பதை யறிந்தும் நல்ல நடையுள்ள மற்றொருவளை மனையாளாகக் கொள்ளாமலும் அக் கொடுந்தொழில்களை கொஞ்சமேனும் பாராட்டாமலும் உந்தனைக்கைவிடாமலு மிருக்கின்றபடியால் அடி! துஷ்டீ! உந்தனாற்செய்யப்பட்ட எல்லாக் கொடிய பாவங்களும் அவனுக்கே பயன் கொடுக்கலாகு மென்பதில் ஆக்ஷேபனையே இல்லை" என்று கேளாய்! மகளே! அம்மாமுனிவர் பூர்வ ஜன்மத்தில் உந்தனை நோக்கித் திருவாக்குரைத்தனர்.

பின்னர் அத்தகைய வசனத்தைப் புண்டரீகன் தன் சிடக்குழாங்களுடன் கேட்டு "ஓ! தவசியே! நீர் சைவராகையால் எங்களை வைணவர்களென்று நினைத்து மிக்கத் துவேஷத்தினால் எங்கள்மீது ஏதோ சிறு பாவங்களைக் கருதி இவைகளைச் செய்திருக்கின்றீர்" என, இப்படி உரைத்த அவ் வந்தணனைப் பார்த்து முனிவர் மிக்கக் கோபாவேசங் கொண்டவராகி அடா! மூடா! கேவலம் மேனியின் நிமித்தமாகவே மிக்க பாவத்தில் முயன்றவளான இம்மாது மீது நீ மெத்த ஆசை கொண்டிருக்கின்றபடியால் நீ துராத்துமாக்களான இச்சிடர்களோடு விரைவிற் யோனிக்குறியை யடைவதோடு மகா பாவிகளான இவர்களுடன் வேதமுறை மார்க்கங்களை இகழ்ந்து கொடிய சாத்திரங்களிலே மனப்பற்றுடையவனாகி ஸ்ரீ சதாசிவ

பரமாத்துமா மீது பராமுகமா யிருக்கக் கடவாய்." மேலும் "ஓ! துராத்து மாக்களான பிராமணக் கேடர்களே! நீங்கள் குருவின் மனைவியோடு புணர்ந்த தினுல் உங்கள் பெண்டீர்களெல்லாம் கெட்ட நடையுள்ளவர்களும் விபசாரிக ளுமாகக் கடவர்கள்." என்று அவர்களைச் சபித்துவிட்டு அவ்விருடிச் சிரேஷ் டர், ஆலமரத்தின்மீது இருந்த உந்தனைப்பார்த்து "ஆ! அடி! துர்மார்க்கி! நீ நம்மைப் பலவந்தமாய்த் தொட்டபடியால் நமது திருவாக்கின் கௌரவப் படி விரைவில் ஓர் அசுரப் பெண்ணுகக்கடவாய். தவிர நீ ஆட்டு மந்தைக்குள் ஒளித்திருந்தபடியால் ஆட்டு முகத்தைப் பெறக்கடவாய். அடி பாதகி! நீ இப்போது இம்மரத்தை விட்டிறங்கி உனதிச்சையின்படி சென்றுவிடு" என்று அம்முனிவர் சபித்த மாத்திரத்தில் நீ மிக்க பயந்தவளாகி அவ்வால மரத்தி னின்றிறங்கி ஓர் கணத்துக்குள் அம்முனிவரை விநயத்தோடு வந்த னித்துத் தனதழகிய மேனி நடுங்கப்பெற்றவளாகி "ஓ! தவசிரேட்டரான சுவாமி! தேவரீர் மிக்கக் கோபத்துடன் எந்தன் பர்த்தாவையும் அவரது சிட ரையும் எந்தனையுஞ் சபித்துக் கொடூரமான இத்தகைய காரியங்களை நடத்த லான போதிலும், இருடிசுரரான தேவரீர்மீது அடியேனுக்குச் சிறிதளவுஞ் சினமென்பது ஜனிக்காமல் ஒப்பற்ற மிக்க நேச மேலிட்டிருக்கின்றது. ஆகையால் ஓ! சரணமடைந்தோரிடத்து நேசமுடைய மாமுனிவரே! இத் தகைய எந்தனை எவ்விதத்துங் காப்பாற்றிடல் வேண்டும்" என்று உரைத்து விட்டுக் கேளாய்! மகளே! மிக்க பயத்தோடு பலமுறை வந்தனித்தாய்.

பின்னர் அம்முனிவர் மிக்க சந்தோஷங் கொண்டவராகி அவளை அன் போடு நோக்கி "ஓ! பெண்ணே! உந்தனுற் செய்யப்பட்ட கெட்ட நடையாகிய சேறுகளெல்லாம் அவனை பகிரங்கப்படுத்தும் விஷயத்தினுல் கழுவப்படலாயி னவேயன்றி நம்மால் மற்றொன்றும் செய்யப்படவில்லை. ஆயினும் நீ உனது கரும சேஷத்தினுல் இகழ்வான அசுர ஜன்மத்தில் ஜனிக்கலாகி மிக்க காம மோகங்கொண்டு விபசாரியாய் கண்ட புருடர்களை மயக்கி வேண்டியபடி புணர்ந்து பின்னர் சில நாளளவிற் மோகங்கொண்டவளாகி நம்மை யடைந்து ஒப்பற்ற சம்போகஞ்செய்து இருபிள்ளைகளைப் பெற்று பின்னர் மகா சாஸ் தாவினுடைய கணுதிபரான மகா காளரால் தொடப்பட்ட மாத்திரத்தில் சகல பாவங்களும் முற்றுந் தொலையப்பெற்றவளாகி பிறகு மலைகளிற் சிறந்த ஸ்ரீபரு வதத்திற்குச் சென்று சிறந்த வைராக்கியத்தைப் பெற்று இல்லற வாசையை யொழித்து பின்னர் நாளளவில் மிக்க மங்களகரம் பொருந்திய கைலையங்கிரி யடைந்து அங்கு ஸ்ரீ கௌரிதேவியைப் பூசித்து மிக்க உத்தமமான மோக்ஷ சாம்ராஜ்யத்தை யடைவாய்." என்று கேளாய் எனது அருமை மகளே! சிவனடியார்களிற் சிறந்த அந்த துர்வாச முனிவர் இவ்விதமாய் உந்தனை உரைக்க அப்படியே நீயும் அசுர குலத்தில் எந்தனுக்கு மகளாய்ப் பிறந்து மிக்க காம மோகங்கொண்டவளாகி வேண்டியபடி இத்தகைய போக சுகங் களை அனுபவித்து விட்டு மலைகளிற் சிறந்த மிக்க உத்தமமான ஸ்ரீ பருவதத் திற்கு வந்து விட்டாய்.

ஓ பெண்ணே! இத்தகைய உந்தன் வரலாற்றை யானிப்போது உனக்கு எடுத்துரைத்து விட்டேன். இனி நீ கைலாஸமடைந்து அங்கு கௌரிதேவி

யைப் பூஜைபுரிவதால் மோக்ஷ சாம்பிராச்சியத்தை யடைந்து விடுவாயென்ப திற் சந்தேகமில்லை யென்றாள்.

## 8-வது அத்தியாயம்.

பின்னர் அஜமுகி "ஓ! அம்மா! உந்தனால் தெளிய உரைக்கப்பட்ட எந்தன் விருத்தாந்தத்தை யான் கேட்டாயிற்று. இப்போது உந்தன் விருத்தாந்தத்தைக் கேட்கப் பிரியமிருக்கின்றபடியால் அதனை எடுத்துரைத்தல் வேண்டும்" என, மகளாகிய அஜமுகியால் இவ்வாறுரைக்கப்பட்ட வார்த்தையைக் கேட்டு மாயை பின்னுங் கூறுகின்றாள். கேளாய்! குழந்தாய்! யான் முன்பு காசிபமுனிவருக்குத் திதி யென்ற பெயருடைய ஓர் மனைவியாய் இருந்தேன். அப்போது எந்தனுக்கு அநேக அசுரப் பிள்ளைகள் பிறந்தார்கள். அவ்வெல்லோர்களையும் தேவர்கள் உயுத்தத்தில் கொன்றுவிட்டார்கள்.

பின்னர் யான் புத்திர சோகமுடையவளாய் என் அங்கம்மெலிந்து ஸ்ரீ பருவதத்திற்குவந்து யான் மிக்கச்சிரேஷ்டர்களான புத்திரர்களைப்பெற்று கோபத்தோடு இத்தேவர்களை அழித்து விடுகின்றேன்" என்று மனதில் உறுதி கொண்டு இம்மலையிலிருந்து பூமியில் விழுந்து உயிரை யிழந்து பின்னர் அசுரகுலத்திற் தோன்றி ஓ! பெண்ணே மறுபடியும் அக்காசிப முனிவரைக் கொண்டு சூரபதுமன் முதலிய அசுரர்களைப்பெற்று அப்பிள்ளைகளால் தேவர்களெல்லோரும் துன்புறுவதைக்கண்டு வேண்டிய பயன்களைக் கைக்கொண்டதோடு முன் ஜென்மத்தில் மிக்க அழகியாயிருந்த உன்னை யான் கண்டு காதல்படி ஓ! பெண்ணே! உந்தனையும் மகளாய்ப் பெற்றுவிட்டேன். இனி யான் கொண்ட பிள்ளைகளைப் பெறவேண்டி அம்முனிவரிடஞ்செல்வதில்லை. ஆனால் சிரேஷ்டமான இந்த ஸ்ரீசைலத்தில் சிவபெருமானுக்கு ஊழியஞ்செய்து முடிவினில் மிக்க சந்தோஷங்கொண்டவளாகி உன்னதமான ஸ்ரீ கைலாசமடைந்து ஸ்ரீ பார்வதி தேவிக்கு ஊழியஞ்செய்து மோக்ஷ சாம்பிராஜ்ஜியத்தை அடைவதற்குச் சிறிதுஞ் சந்தேகமில்லை.

கேளாய் பெண்ணே! யான் எப்போது இந்த ஸ்ரீ பருவதத்தினின்றும் விழுந்து இறந்தேனோ அப்போது உன் தந்தையான காசிப முனிவர் மிக்கத் துக்கமடைந்தவராய் புலஸ்திய பிரஜாபதியின் பெண்ணான மற்றோர் திதி யென்பவளைக் கலியாணஞ்செய்து பின்னர் மோகந்தெளிந்தவராகி இருக்கின்றார். கேளாய்! மகளே! பின் சுக்கிராசாரியருடைய திருவருளால் எனக்கு முக்காலங்களின் நல்லறிவு மிருக்கின்றது. இப்போது உனக்கு என் விருத்தாந்தங்களை ஆதியோடந்தமாய் உரைத்துவிட்டேன்" என்றாள். பின்னர் அவ்வஜமுகியானவள் தாயின் வசனங்களைக் கிரமப்படி கேட்டதன்மேல் மிக்கச் சந்தோஷத்துடன் தன் தாயை வந்தனத்துடன் வழிபாடியற்றி சிரேஷ்டமான அந்த சைலத்தில் தன் தாயோடுகூட ஸ்ரீசிவபெருமானுக்கு ஊழியஞ்செய்து முடிவினில் மலைகளுக்கெல்லாம் உத்தமமான ஸ்ரீ கைலாசகிரி யடைந்து அங்கு ஸ்ரீபார்வதி தேவிக்கு ஊழியஞ்செய்து பின் தன் தாயோடு மறுபிறப்பிற் சிறந்த மோக்ஷ ஸாம்பிராச்சிய பதவியையடைந்துவிட்டாள்.

## 9-வது அத்தியாயம்.

சௌனகாதி முனிவர்கள் சூதரை நோக்கி "ஓ! புராணப் பொருட்களை யெடுத்துரைப்பதில் திறமை கொண்ட சூத முனிவரே! நீர் முந்தி ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமியால் அகத்திய மாமுனிவருக்கு உபதேச மளிக்கப்பட்டதென்று கூறினீரல்லவா? அப்பார்வதீ புத்திரன் மிகுந்த தயையுடன் அவருக்கு என்ன உபதேசஞ்செய்தார் என்பதை யாங்கள் கேட்க விரும்புகின்றமையால் அதனை எடுத்துரைக்க வேண்டு"மென, சூதர் 'ஓ! புண்ணிய சீலர்களே! மகா புண்ணியமான விபூதிமகிமை, சகல பாவங்களையும் நாசஞ்செய்கின்ற உருத்திராக்கத்தின் மகிமை, சிவ நாமத்தை யுச்சரித்தல், சிவ விரதம், சிவ புண்ணியம் இவைகளின் மகிமை, சிவத்துரோகத்தின் பாதகம், ஸகல வேதங்களாலும் முறையிடப்படுகிற சிவபிரானுடைய ஆயிர திருநாமங்கள், சிவ பூஜை, சிவ யோகம், சிவ ஞானம் இவைகளின் மகிமை இவைகளெல்லாம் ஸ்ரீ முருகேசனால் அகத்திய மாமுனிவருக்கு உபதேசிக்கப்பட்டது.

அதனை அக்கந்தன் கிருபையின் வலிமையால் யான் உங்களுக்கு உள்ளபடி யெடுத்துரைக்கின்றேன். திருநீறானது கல்பம், அபகல்பம், உபகல்பம் என மூவகைப்படும். இத்திருநீற்றினை பஸ்மமென்றுங் கூறுவர். பஜனம் (தரித்தல்) செய்வதால் சகல பாவங்களையும் தொலைக்கலுற்றதும், ஸ்மரணம் செல்வதால் ஸகல சுகங்களையும் அளிக்கலுற்றது மாகையால் அதற்கு பஸ்மமென்றும் பெயர். அதுபோக மோக்ஷ மிரண்டனையும் பயனுய்க் கொடுக்கும் முறைப்படி மந்திரத்தோடுண்டாக்கப்பட்ட அத்திருநீற்றைத் தரிக்கலுற்ற மானிடருக்குச் சகல பீடைகளுந் தொலைவதோடு வேண்டிய பொருள்களெல்லாம் கைகூடலாகும்.

ஸ்ரீ பார்வதி நாதருடைய மகிமையை யறிவதற்கு எவ்வளவு சிரமமோ அவ்வளவு திருநீற்றின் மகிமையையும் அறிவது சிரமமென்று வேதவேதாந்தங்களின் கரைகண்ட பெரியோர்களாற் சொல்லப்படுகின்றது. ஓ! பிராம்மணோத்தமர்களே! சத்தியம், ஞானம், தயை, சிரத்தை, அக்கினி, வாயு, ஜலம், பூமி, வானம் முதலியவைகளெல்லாம் பஸ்மங்களே. ஸ்ரீ சிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ள இத்திருநீறானது பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்கள், இருடிகள், தவசிகள், பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் மற்றுமுள்ள சங்கர சாதியர்கள், ஸ்திரீகள் இவர்களெல்லாருந் தரிக்கத்தக்கதாகும். இதனை மந்திரத்தோடு தரிப்பதனல் அட்ட ஐசுவரியங்கள், அட்ட சித்திகள், பரம காரணரான ஸ்ரீ சம்புவினிடத்துப் பக்தி இவைகள் கைகூடும். இது சகல வசியங்களையும் சௌபாக்கியங்களையும் அளிக்கலுற்றதும் மகா மேன்மை பொருந்தியது மாகின்றது. திருநீற்றைக் கண்ட மாத்திரத்தால் சகல பூதப் பிரேத பிசாசங்களும், இராக்ஷதர்களும் மற்றுமுள்ள கூட்டர்களும் பயந்து தூர விலகி ஓடலாகும். இன்னும் அபஸ்மாரம் குட்டம் முதலிய வியாதிகளெல்லாம் ஓர்கண நேரத்திற்குள் நசித்து விடுகின்றன. திருநீறானது பெரியோர்களால் உத்தூளனமாகவும், திரிபுண்டரமாகவும் தரிக்கத் தக்கது. உத்தூளனமும், திரிபுண்டரமும்

மனதினுற் கூட அசட்டை செய்யத் தகாதது. இவ்விரண்டும் வேதங்களால் விதிக்கப்படுகின்றமையால் அதனை விலக்குவோர் பதிதராவார்கள். உத்தூள னத்திலும், திரிபுண்டரத்திலும் அவைகளின் மகிமையைப்பற்றி பிரஸ்தாபிக் கப்பட்டு யாவருக்குச் சிரத்தையுண்டாக வில்லையோ அவர்கள் மகா பாவிக ளாவார்கள்.

கேளீர்! தரணி தேவர்களே! திருநீற்றில் ஜலத்தைவிட்டுக் குழைத் துச் சிரசு, நெற்றி, கழுத்து, மார்பு, வயிறு, இருபாரிசங்கள், இருபுயங் கள், கைகளின் மத்தி, இருமணிக்கட்டுகள், பிடரி, ஆகிய பதினைந்து இடங்களிலும் திரிபுண்டரம் யாவரால் தரிக்கப்பட்ட போதிலும் அவரெத்த கைய பாவிகளான போதிலும் அவரே சிவன்; அவரே விஷ்ணு; அவரே பிரம்மா; அவர்களெல்லோர்களாலும் வந்தனிக்கத் தக்க எல்லாச் சாதிகளுக் கும் எல்லா ஆசிரமங்களுக்கும் உத்தூளனமும் திரிபுண்டரமும் எடுத்தவை யென்று ஜாபாலோபநிடத்தை நன்கறித்த பெரியோர்களால் மிக்க வாதா வுடன் சொல்லப்படுகின்றது. மேலும் இவ்விரண்டும் ஞானத்திற்கு முக்கிய ஆதாரமுள்ளவையென்பதே 'சுவேதாசுவதர' மென்ற உபநிடதத்தை யறிந்த மாமுனிவர்களின் ஆதரவுள்ள கொள்கை. தவிர அதர்வசிகோபநிடத்தை நன் கறிந்த மாமுனிவர்கள் அவ்விரண்டும் அஞ்ஞானங்களை முற்றும்தொலைக்கவுற் றவை யென்று தெளிவிக்கின்றார்கள்.

என்றாலும் கேவலம் ஞானத்தினால் தான் அஞ்ஞானத்திற்கு நாசமுண் டாகும். ஏனென்றால் அவ்வஞ்ஞானமானது நல்ல ஞானத்தினால் விலக்கத் தக் கதே யன்றி மற்றொன்றுமில்லை. யாவரால் சிவ விரதமெடுத்து நன்கனுஷ் டித்து வரப்படுகின்றதோ அவருக்குத் தான் அடர்ந்த அஞ்ஞானங்களைத் தொலைக்கவுற்ற நல்ல ஞானமுண்டாகும். ஆகையால் மோக்ஷத்தை அபே க்ஷிப்பவர்கள் உத்தூளனத் திரிபுண்டரங்களை நன்றாயாசரித்து வரல்வேண்டும்.

முன்பு ஓர் பிரளயம் நேர்ந்தபோது விஷ்ணுவானவர் சமுத்திர ஜலமத்தி யிலுள்ள ஆலிலை மீது பள்ளிகொண்டிருந்தார். அப்போது பகவானாகிய ஸ்ரீ சதாசிவன் அங்கு வந்து விஜயமாயினர். சமுத்திரமானது மிக்க ஆரவாரத் தோடு கொந்தளித்தபோது அவருக்குப் பெருவிரல் மட்டு மிருந்தது. அத்த கைய மகா புருடரான ஸ்ரீ மகேசுவரனைக் கண்டவுடன் விஷ்ணு சித்தப் பிரமை கொண்ட வுளத்தையுடையவராகி 'நீர்யார்?' என்று கேட்க, கேளீர்! முனிவர்களே! அப்போது அம்மகா புருடன் அவருக்குக் கொஞ்சம் திருநீறு கொடுத்தனர்.

அப்போது அவ்விஷ்ணு அதனை வாங்கி நெற்றியிலிட்டுக் கொண்டு சிறிது பூசை புரிந்தபோது அவருக்கு நல்ல ஞானம் உண்டாகித் தம் மைத் தாம் நிதானித்துக்கொண்டு மகா தேவரும், சந்திரகலையை யுச்சி யலங்காரமாய்ப் பூண்டவரும், யௌவனப்பருவமுடையபுருடச் சிரேஷ்டரும், முக்கண்ணரும், கரிய காலகண்டத்தையுடையவரும், அஷ்டைசுவரிய சம் பன்னருமான அப்பரமேசுவரனைக் கண்டு தரிதமா யெழுந்து அம்மாதவன் பக்தியுடன் வந்தனித்து அப்பிரபு இங்கு விஜயஞ்செய்த காரணத்தை வினவ

ஸ்ரீ ஜகதீசன் "கேளீர்! விஷ்ணுவே! சகல லோகங்களையும் சிருட்டிப்போரான பிரம்மாவை யுண்டு பண்ணுவதற்காக யாம் இங்கு வந்தோம்; ஆகையால் நீர் நமதாக்ஞையின்படி இப்போது துரிதமாய் நமது மனைவியாக வேண்டும்" என்று திருவாக்கருளிச் சகல பிரபஞ்ச சுவரூபியும், சகலப் பிரபஞ்சங்களையும் இரக்ஷிக்க முயன்றவருமான அச்சருவேசுவரன் அப்போதவரைப் பெண்டிராகக் கொண்டு புணர்ச்சி செய்கையில் அப்போது அப்பரமனது தங்கத்தை யொத்த வீரியமானது விழ, கேளீர்! தரணி தேவர்களே! அவ்விஷ்ணுவின் நாபிக்கமலத்தினின்று ஐந்து முகங்களைக்கொண்ட பிரம்மனுண்டானர். உடனே பிரபுவாகிய அப்பிரம்மனும் ஸ்ரீ பரமசிவாக்ஞையின்படி சகல வுயிர்களையும் சிருட்டிக்கலானர். பின்னர் ஓர் சமயத்தில் அப்பிரமனுக்கு ஆங்காரம் ஜனிக்கலாகி ஸ்ரீ பைரவமூர்த்தியால் ஓர் சிரம் அறுபடலால் அன்று முதல் அவர் நான் முகன் எனப் பெயரடைந்தார்.

ஓ! தரணி தேவர்களே! திருநீறு தரித்தமாத்திரத்தினல் விஷ்ணுவுக்குத் திரண்ட அஞ்ஞானம் நாசமாகி, நான்முகனும் பிள்ளையாய்ப் பிறந்தனரல்லவா? ஓ! முனிவர்களே! பூர்வத்தில் மிக்க பலம் பொருந்திய வீரபத்திரஸ்வாமியானவர், கொடிய நடைக்காரர்களான ஸர்ப்பாசுரன், பஞ்சமேட்டிராசுரன், பாவியான வக்கினியசுரன் இவர்களால் கொல்லப்படலான ஸகல தேவர்களையும் திருநீறு இட்டு உயிர்ப்பிக்கச் செய்தனர். தவிரவும் வாமதேவரென்ற மாமுனிவருடைய திருநீறணிந்த திருமேனிதனில் பட்ட மாத்திரத்தில் அனேக ஜன்மங்களாய் சம்பாதித்த மகா பாதகங்களை யெல்லாம் கவசம் போன்றணிந்தவனன ஓர் துலுக்க ராஜன் தானடைந்திருந்தப் பிரம்ம ராட்சஸ ஜன்மத்தை இழந்து மோக்ஷ சாம்பிராஜ்ஜிய மடையலானன்.

கேளீர்! சௌனகாதி முனிவர்களே! தமிழ் நாட்டில் மிக்ககொடிய எண்ணங் கொண்டவனும் பரஸ்திரீகளோடு புணருவோனும், மகா பாவியும் கண்டவிடங்களில் உண்போனும் மிக்கத் துராத்துமாவுமாய் இருந்த ஓர் அந்தணன் அவனது வினையினல் ஓர் கிராமத்திலிறந்து போனன். அப்போது ஜனங்கள் அவனைக் கால்தனிற் கயிற்றைக் கட்டி ஊருக்கு வெளியில் இழுத்து எறிந்தார்கள். அப்போது இயம தூதர்களும் அப்பாதகனைத் துரிதமாய் நரகத்திற் கொண்டுபோய் அடைத்தார்கள். இப்படி இருக்கையில் கேளீர்! அந்தணர்களே! சாம்பல் பற்றலுற்ற கால்களைக் கொண்டதான ஓர் நாய் அப்பிராம்மணப் பிணத்தைத் தின்பதற்காக வந்து அவனது நெற்றி, இருபுயம் மார்பு இந்த இடங்களிலெல்லாம் மிதித்துத் திரிந்த மாத்திரத்தில் அம்மறையவன் நற்கதி யடைந்துவிட்டானன்றே.

## 10-வது அத்தியாயம்.

ஓ! அந்தணர்களே! திருநீற்றின் மகிமையைப்பற்றி மற்றோர் கதை சொல்லுகிறேன், நீங்களெல்லோரும் மிக்க ஊக்கத்துடன் கேட்பீர்களாக. அங்க தேசத்திற் கதிபனன புஜபலனென்ற ஓர் அரசன் கொடை கொடுப்பதில் மிக்க வல்லவனும், நல்லோர்களுக்கு மித்திரனும் குடிகளைக் காப்பாற்றுவதில்

முயன்றவனுமாயிருந்தான். மகா நுண்ணறிவுடைய அவ்வரசன் மாதப் பிறப்பான ஓர் புண்ய தினத்தில் அந்தணர்களுக்கு மிகுந்த தானங்களைக் கொடுத்தான்.

அப்போது பற்பல தேசங்களிலுள்ள அந்தணர்களெல்லாம் அத்தானத்தைப் பெற்றுக்கொள்ள அங்கு வந்தார்கள்.

விதர்ப்ப தேசத்திலிருந்து சுசீலன் என்ற ஓர் அந்தணர் அவ்வரசன் தானஞ்செய்வதைக் கேட்டு வந்தார். அப்போது அங்குள்ள எல்லா வேதியர்களும் அப்பிராமணரைக் கண்டு வந்தனித்து அரசனிடஞ்சென்று "ஓ! அரசனே! சுசீலனென்ற இவ்வேதியர் நல்லொழுக்கமுடையோரும் வேதமோதுவதில் முயன்றவரும் சகல சாத்திரங்களின் பொருட்பிரயோஜனத்தை அறிந்தவரும், எப்போதும் ஸ்ரீ பரமேசுவரனிடத்தில் மனதை நாட்டியவருமாகையால் இவருக்கே முந்திய தானத்தைக் கொடுத்தல் வேண்டும். ஏனெனில் இவருக்குச் சுவல்ப தனத்தைக் கொடுத்த போதிலும் அழிவற்ற பயனைக் கொடுக்கும்" என்று மற்றெல்லாப் பிராமணர்களும் அவ்வரசனை நோக்கிக் கூறுகையில் அப்போது பெருமைதங்கிய அப்புஜபலராஜனும் அவர்களது வசனத்தைக் கேட்டு அப்படியே நல்லதென்று அவ்வேதியச் சிரேஷ்டரைக் கூப்பிட்டு தானங்கொடுக்க முயன்றவளவில் அச்சுசீலன் "ஓ! அரசே! நீர் திரிபுண்டரத் தூளனங்களாகத் திருநீறணிதல் வேண்டும். இல்லாவிடின் நீரெத்தகைய மகத்தான தானங்களியற்றினும் அதற்குப் பயன் கிடையா. கேளீர்! பூபதியே! சிறப்புற்ற இவ்விபூதியை அணியாமல் ஏதாகிலும் கருமங்களைச் செய்தால் அவை நிஷ்பலமே என்பதிற் சந்தேகமில்லை" என, இவ்வாறு அவ்வந்தணனது வசனத்தைக் கேட்ட அரசன் நிறைந்த அகம்பாவத்தினல் கேளீர்! முனிவர்களே! அம்மறையவரை நோக்கி கர்வத்தோடு "ஓ! வேதியனே! நான் எந்தக் காரணத்தைக் கொண்டு திருநீறணியல் வேண்டும்? தானஞ்செய்கையில் திருநீறிடாததினல் நமக்கென்ன சக்தி இல்லாமற்போயிற்று? திருநீறணிந்துகொண்டு தான் தானஞ்செய்ய வேண்டுமென்பது என்ன விதி?" என்றுரைக்கலான அவ்வரசனை நோக்கி மறையவர் பின்னும் "கேளீர்! ராஜனே! பஸ்மத்திலாவது அதனைத் தரிப்பதிலாவது எவருக்கு உண்மை புத்தி உண்டாகவில்லையோ அத்தகைய பாதகனுக்குச் சம்பத்து விருத்தியாகாததுமன்றி ஓர் கணத்துள் உள்ளதும் நசித்துப்போய் மிகுந்த தரித்திரம் உண்டாகி சகல வியாதிகளும் மென்மேல் அதிகரித்து அவயவங்களுங் குறைந்து தொழுநோயராயாவரென்பதிற் சிறிதுஞ் சந்தேகமில்லை.

மேலும் அப்பாதகனும் பிறந்த பிள்ளை முதலியவர்கள் இறக்கலாகிக் கொடிய நரகஞ் சம்பவிக்கும். ஓ! ராஜசேகரா! ஒவ்வொரு கருமத்தின் தொடக்கத்தில் அரிய இவ்விபூதியைத் தரித்துக்கொள்ளல் வேண்டும். ஓ! ராஜனே! அவ்வாறு கொடுக்குந் திரவியம் ஏற்போர்க்கும் விருத்தியாகுமேயன்றி மற்றதாகாது" என, கேளீர்! தரணி தேவர்களே! இவ்வாறு அம்மறையவரது வசனத்தைக்கேட்ட அவ்வரசன் பரிகாஸத்தோடு சிரித்துக்கொண்டு "ஓ! ஐயரே!

நல்ல புண்ணியவானுகிய எமக்கு எவ்வாறு தரித்திரம் உண்டாகும். பிள்ளை முதலியவர்கள் எப்படி நசிப்பார்கள்? அங்கங்கள் எப்படி ஈனமாகும்? வியாதிக ளெல்லாம் எங்களைக்கண்டால் தூரவிலகி ஓடிப்போகும்; நீர் வீணுய் ஏதோ பிதற்றுகின்றீர். ஒருக்கால் அவ்வியாதிகள் நேர்ந்துவிடின் ஓ! அந்தணனே! அப்போது உம்மிடத்து வந்து திருநீறு வாங்கிக்கொள்ளுகிறேன். ஓ! வேதி யரே! நல்லது நீரிப்போது சீக்கிரமாய் நமது கையிலிருந்து தானத்தை வாங் கிக்கொள்ளும்'' என இவ்வாறு அவனது வசனத்தைக்கேட்ட வேதியர் நகைத் தெழுந்து "ஓ அரசனே! நமக்கிப்போது உமது தானம்வேண்டாம்" என்று கேளீர்! முனிவர்களே! அவ்வேதியர் தனது தேயத்திற்குப் புறப்பட்டனர்.

அப்போது அரசன் மனைபாட்டிப் பொய்த்தும்மல் தும்மினுள். ஓ! இது மிகவும் கஷ்டம்! பின்னர் இப்படிச் சிலகாலஞ்சென்றதன்பின் அவ்வரசன் மிக்க நோயுடையோனுகிக் கிடந்தான். ஓ! கோ! மேலும் அப்போது மிகுந்த அம்மையின் கொடுமையால் சைனியங்கள் மடிந்துவிட்டன. ஆகை யால் துராத்துமனுன அவ்வரசன் சத்துருவினுல் நகரத்தைவிட்டுத் துரத்தி விடப்பட்டவனுகி அப்போது பயங்கொண்டு பெண்டீரோடு பயங்கரமான காட்டிற்கு ஓடிச் சென்றுன். அங்கு கொடியோனுன ஓர் வேடன் அரசன் மனைவியைப் பிடித்துக்கொண்டு போய்விட்டான். அப்போது அப்பாவியான வன் பெண்டீரிழந்தவனுகி மனம்துன்புற்று மிக்கப் பசி தாகங்களோடு அங்கு திரிந்து கொண்டிருக்கையில் பிச்சை இரந்தும், அப்பாதகனுக்கு ஒன்றும் கிடைக்காதபடியால் அப்போதைக்கப்போது அவன் திருட்டினுல் வயிறு வளர்த்து வந்தான். இவ்விதமாய் அவன் சில காலம் போக்கிய பின் கேளீர்! முனிவர்களே! ஒருக்கால் அவன் திருடும்போது அப்பாதகனை அந்நகரத் தலை யாரிகள் கண்டு அவனைக் கயிற்றினுல் கட்டி அப்பட்டணத்திற்கு வெளியிற் கொண்டுபோய்க் கைகால்களை வெட்டிவிட்டார்கள்.

அப்போது அவன் மிக்கப் பசிதாகங்களால் வருத்தமடைந்து பின்னர் ஏதோ பூர்வீக நல்வினை வசத்தால் கேளீர்! அந்தணர்களே! விதர்ப்ப தேசத்தரசனுடைய குண்டினமென்ற நகரம்போய்ச் சேர்ந்து மிக்க ஈனனும் பரபரப்புள்ளவனுமாய்ப் பிச்சை எடுத்து ஜீவித்து வந்தான். கேளீர்! முனிவர் களே! அச்சமயத்தில் அத்துராத்துமனுடைய மனையாள் அவனைப் பிடித்துச் சென்ற வேடன் ஓர் புலியினுல் அடிக்கப்பட்டு உயிர் துறக்க அம்மாபாபியும் திருடியதால் மூக்கறுக்கப்பட்டவளாகி மிகுந்த பசியால் துன்புற்று ஏதோ நல் வினையின் வசத்தினுல் அதேபட்டணத்திற்கு வந்து சேர்ந்தாள்.

பின்னர் அப்புருடன் பெண்டீர் இருவர்களும் ஒருவரை யொருவர் அறி யாமல் ஒருவரோடொருவர் ஆங்காரப்பட்டவர்களும், உள்ளத்திலும் வெளி யிலும் மிக்க வியாதியால் பீடிக்கப்பட்டவர்களும் புழுவைத்து புன்னீர் வடிய லுற்ற இரணங்களைக் கொண்டவர்களுமாய்ப் பிச்சையிடுங்கள் பிச்சை யிடுங் கள் என்று உறக்கக் கூவிக்கொண்டு அங்கு திரிகையில் கேளீர்! வேதியர் களே! ஒருசமயத்தில் சுசீலன் என்ற அப்பிராமணன் வீட்டு வாசலில் வந்தார் கள். அப்போது சுசீலரும் அவ்வாறு கூவுவோரைக் கண்டு மிகவும் மன

திரக்கங்கொண்டவராகி "ஓ! கோ! நீங்கள் இருவரும் யாவர்? என்ன பாவத்திற்காக இத்தகைய பயனை அனுபவிக்கின்றீர்கள்? என்று அவ்வேதியர் அப்பாதகர்களை நோக்கி வினவுகையில் அவ்வரசன் "ஓ! சுவாமி! நான் புஜபலனென்று பெயர்போன அங்க தேசத்தரசன். எதோ ஓர் கொடிய பாவத்தினுல் இத்தகைய நிலைமையை அடைந்தேன்" என, இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டு அவ்வேதியர் மிக்க ஆச்சரியங்கொண்டவராகி மூக்கின்கண் விரலை வைத்துக்கொண்டு அவனை நன்ருய் உற்றுப் பார்த்து "அடா முன் எந்தனைப் பார்த்திருக்கின்ற நினைவு உனக்கு இருக்கின்றதா?" என்று கேளீர் வேதியச் சிரேட்டர்களே! அச்சுசீலர் கேட்கையில், அரசன் "ஓ! ஸ்வாமி! முன்பு உம்மைப் பார்த்ததாக எனக்குக் கொஞ்சமேனும் நினைவு வரவில்லை; ஏனென்ருல் எனக்கு க்ஷணத்துக்கு க்ஷணம் புத்திப்பிரமை விருத்தியாகின்றது என்ருன்.

அவ்வேதியனும் அடா! முந்தி நீ மிருதிபாய்த் தானஞ்செய்யும்போது நான் திருநீறணிந்து கொள்ள வேண்டுமென்றதற்கு நீ திரவியம் யௌவனம் இவைகளின் கர்வத்தினுல் அதனை மறுத்துவிட்டபடியால் நான் உந்தனுல் கேட்டுக் கொள்ளப்பட்டும் நீ ஒத்துக்கொள்ளாததினுல் தானம் வேண்டாமென்று திரும்பி வந்து விட்டேனல்லவா? ஆகையால் திருநீற்றை அவமதித்ததால் இத்தகைய கதி உந்தனுக்கு நேரிட்டது என்பது நிச்சயம்" என, இவ்வாறு அச்சுசீலர் வசனத்தைக் கேட்டவுடன் அச்சங்கதிகளைக் கனவு கண்டதுபோல் நினைத்துக்கொண்டு அவ்வரசன் தண்டம்போல் பூமியில் வந்தனஞ்செய்து கைகளைக் கட்டிக்கொண்டு "ஓ! வேதியத் தலைவரே! ஆம், ஆம், நீர் வந்திருந்தும் உம்மால் தானம் அங்கீகரிக்கப்படவில்லை. ஆதலால் அத்தோஷத்தால் தான் இத்தகைய கதி எந்தனுக்கு நேரலானது நிச்சயம். ஆகையால் ஓ! சுவாமி! இப்போதெந்தனுக்குத் திருநீறுகொடுத்து எந்தனை இவவாபத்தினின்றுங் காப்பாற்றி ரக்ஷித்தல் வேண்டும்" என்று அவ்வேதியனை அரசன் வணங்கி நின்ருன். பின்னர் மிக்கப் புண்ணிய சொருபரான சுசிலரும் மிக்கப்பரிசுத்தம் பொருந்திய திருநீற்றை யெடுத்து "இதனைத் தரித்த மாத்திரத்தில் சகல பாவங்களினின்றும் விடுபடுதற்குச் சந்தேகமில்லை. மேலும் எல்லா ஐசுவரியங்களையுமடைந்து பெண்டீரோடு சேர்ந்து சகல வியாதிகளுந் தொலைந்து சத்துருக்களையும் வெற்றி பெறலாம். என்று சொல்லிக் கொடுத்தார்.

## 11-வது அத்தியாயம்.

அவ்வேதியத் தலைவர் இவ்விதம் உரைத்துத் திருநீற்றை அரசனுக்குக் கொடுக்க, அவன் மகா பரிசுத்தமான அத்திருநீற்றை வாங்கித்தன் தேகமதிற் பூசிக்கொண்டவுடன் அதே க்ஷணத்தில் அவனது வெட்டுண்ட கைகால்களும் உண்டாகிச் சகல பிணிகளும் நசிபட்டு முன்போலவே ஆகிவிட்டான். பின்னர் அவ்வரசன் தன் உருவத்தைப்பார்த்து மிக்க ஆச்சரியங் கொண்டவனுகித் தண்டஞ் சமர்ப்பித்து அவர் முன்னிலையில் மிக்கப் பக்தி கொண்டவனுகி அஞ்சலி கொண்டு நின்ருன்.

பின்னர் மூக்கறுபட்ட அவனது மனைவி அவனைப்பார்த்து மிக்க ஆச்சரியங்கொண்டவளாகிக் கேளீர்! முனிவர்களே! அவனைத்தன் கணவனான அரசனென்றே அறிந்து, ஓ! அரசே! பிணிகளால் பீடிக்கப்பட்ட சரீரத்தையுடைய இந்த நான் உமது மனைவியே! ஆகையால் அம்மாமுனிவரிடமிருந்து மகா பரிசுத்தம்பொருந்திய கொஞ்சந் திருநீற்றைவாங்கி எந்தனுக்குக் கொடுக்கவேண்டும். அதனைத்தரிப்பதினால் யானும் இப்போது எந்தன் துக்கங்களைத்தொலையப் பெறுவேன் என்பதிற் சந்தேகமில்லை'' என, இவ்வாறு அவளது வசனத்தைக் கேட்ட அரசன் அவளுக்கு உத்தரமாய், "ஓ பெண்ணே! எந்தத் தோஷத்தினால் உந்தனுக்கு மூக்கு அறுபடலாயிற்று என்பதை நீ எந்தனுக்கு உரைத்தல் வேண்டும்'' என, ஓ! ராஜேந்திரா! இப்பிராமணர் தானம் வேண்டாமென்று வெளிச்செல்லும்போது யான் திரவியம் யௌவனம் இவைகளின் கர்வத்தினால் துஷ்டத் தன்மையாய்த் தும்மிவிட்டு 'ஓ! ஐயா இதோ சகுனத்தடையாகின்றது; ஆகையால் இத்தானத்தைப் பெற்றுக்கொண்டு போம்!' என்று, பரிகாசமாய் வசனமுரைத்தேன். ஆகையால் இத்தோஷத்தினால் தான் என் மூக்கறுபடலாயிற்று என்று நான் சத்தியமாய்ச் சொல்லுகின்றேன்'' என்றாள்.

அது கேட்டு அரசனும் அது சரியென்றே நிச்சயித்துக்கொண்டு அவ்வேதியரைத் தண்டஞ் சமர்ப்பித்து ஓ! வேதியேந்திரா! எனது மனைவியாகிய ஸ்திரீயும் சத்தியமாய் அதே தோஷத்தினால் மூக்கறுக்கப்பட்டவளாயிருக்கின்றாள். ஆகையால் ஓ! கருணைக்கடலே! இவளைச் சீக்கிரமாய் இரட்சித்து அருளல் வேண்டும்'' என்று உரைக்கலான அவ்வரசனை அவ்வேதியர் பயப்பட வேண்டாம் என்று கூறி கேளீர்! பிராம்மணோத்தமர்களே! கொஞ்சந் திருநீற்றினை யெடுத்து இதனை யுந்தன் மனைவிக்குக் கொடுவென்று கொடுக்க இராஜேந்திரன் மிக்க பரிசுத்தம் பொருந்திய அவ்விபூதியைச் சிரமேற்கொண்டு தன் மனைவியிடங் கொடுத்தான். பின்னர் அவளும் அதனைப் பக்தியாய் வாங்கித் தேக முழுதும் பூசிக்கொள்ள, உடனே அம்மூக்கானது திருநீற்றின் பெருமையால் முன்போல வளர்ந்துவிடலாகி வியாதிகளெல்லாம் நீங்கி அவள் அதிசீக்கிரத்தில் முந்திய வடிவத்தைக் கொள்வதானாள்.

பின்னர் அப்புருடன் பெண்டீர் இருவர்களும் மனக்களிப்புற்றவர்களாகி அஞ்சலி கொண்டு தண்டம்போல் வந்தனித்து அவரைத் துதித்துக்கொண்டு நின்றார்கள். கேளீர்! முனிவர்களே! இந்தச்சமயத்தில் அவ்விதர்ப்ப தேசாதிபதியான விசித்திரரதன் என்ற அரசன் இதைக்கேட்டு மேலான மனக்களிப்புற்றவனாகித் துரிதமாய் அங்கு வந்து அப்பிராமணரைத் தண்டம்போல் பூமியில் வந்தனித்து "ஓ! சுவாமி! தேவரீரால் இரக்ஷிக்கப்பட்ட இவ்வரசன் எந்தனுக்கு அம்மான் மகன்; அவர் எங்குதான் போய்விட்டாரோ வென்று யான் மிக்க விசனமுற்றிருந்தேன். தேவரீரது கருணை விசேடத்தினால் அவரை இப்போது பார்க்கலாயிற்று.'' என்று சொல்லிவிட்டு அவ்வரசன் புஜபலனைத் தழுவி அவனுக்கு மிக்க நேர்த்தியான ஆடை ஆபர

65

ணங்களைக் கொடுத்துவிட்டு அவன் மனைவிக்கும் நல்ல வஸ்திரங்களைக் கொடுத்து அனேக உபசார வசனங்களைச் சொல்லித் தனது அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு போய் அவ்விருவர்களுக்கும் மிக்க அறுசுவை யுண்டி அளித்துப் பின்னர் ஒருவரோடொருவர் உபசாரமாய்ப் பலவாறு பேசிக் கொண்ட பிறகு அவ்வரசன் புஜபலனுக்கு அனேகம் குதிரைகள், சேவகர்கள், படைகள் இவைகளைக் கொடுத்து அவனை அவனது பட்டணத்திற்கு அனுப்பினன்.

அப்போது அவன் ஏகாக்கிரசித்தனுய் ஸ்ரீ சிவபிரானை மனதிற் தியானஞ் செய்து கொண்டு மிக்க சைனியங்களோடு புறப்பட்டு சுசீலர் வீட்டுக்குவந்து மனைவியோடு மிக்க பக்தியுடன் அவரை வணங்கி "ஓ சுவாமி! நாங்கள் இங்கு தேவரீரால்லல்லவோ சுகமாய் இரக்ஷிக்கப்படலானோம். இப்போதுதான் தேவரீருடைய கருணை வசத்தினல் சுயதேசத்திற்கும் புறப்படலாகின்றேன். ஆகையால் நான் எனது சத்துருவை அழித்து ஜெயம்பெறும்படி உன்னதமான விபூதியைக் கொடுத்தருளல் வேண்டு"மென உரைத்து அதிவிநயத்தோடு வணக்கமாய் நிற்கின்ற அவ்வரசனை நோக்கி அவ்வேதோத்தமன் "ஓ! இராஜனே' மிக்க மகிமை பெற்ற இவ்விபூதியினல் உமக்குச் சத்துரு பயமுண்டாகமாட்டா"தென்று சொல்லி திருநீற்றை நன்ருய் மந்தரித்து அவ்வரசனுக்குக் கொடுக்க, மகா பரிசுத்தம் பொருந்திய அத்திருநீற்றினைத் தன்கரத்திற் பெற்று நெற்றி மீதிட்டுக்கொண்டு அஞ்சலியுடன் அவ்வேதியரை வந்தனித்து உத்திரவு பெற்று மிக்க சைனியங்களோடு கூடியவனுய்ச் சந்தோஷத்துடன் புறப்பட்டான்.

அப்போது இப்புஜபலனுடைய சத்துருக்களை அதஞ்செய்து அவனது தேசத்தையும் தன் கைவசப் படுத்திக்கொண்டு நாள் தோறும் குடிகளை மிகுதியாய் ஹிம்சித்து வரலான மிக்கத் துராத்துமனும் பாவியுமாகிய ஓர் இராக்ஷதன் அவன் புறப்பட்டு வருவதைக் கேட்டு அவனைக் கொன்றுவிட விருப்பமுற்றவனுகி மகா கோபத்தோடு புறப்பட்டு வந்ததன்மேல் திருநீறிடப்பட்ட அவ்வரசனது முகத்தைப் பார்த்தவுடன் அவன் மகா கோரமாகிய தனது இராக்ஷத தேகத்தைவிட்டுச் சிறந்த தேவசரீரத்தை யடைந்துவிடலானன். கேளீர்! வேதோத்தமர்களே! அப்போது புஜபலனும் அத்தேவனைப் பார்த்து மிக்க ஆச்சரியங்கொண்டவனுகி அவனது வரலாற்றைக் கேட்க விருப்பமுற்று 'நீர் யாவரென வினவ, அதற்கு அத்தேவன் ஓ! இராஜ சிரேஷ்டனே! எனது விருத்தாந்தங்களை ஆதியோடந்தமாய்ப் பிறகு உரைக்கின்றேன்' என்று சொல்லிவிட்டு அவனை அவனது நேர்த்தியான பட்டணத்துள்ள மிக்கச் சிறந்ததும் பற்பல இரத்தினங்களின் விசித்திரமுள்ளதுமான அரண்மனைக்கு அழைத்துவந்து அவனை மிகச் சிரேஷ்டமான சிங்காதனத்தில் உட்காரவைத்து நல்ல லக்கினம் பார்த்து நேர்த்தியும் மங்களகரமுங்கொண்ட வாத்தியங்களோடு சுற்றிலும் நகரத்திலுள்ள ஜனங்களால் சூழப்பெற்றவனுகி மிக்கச் சந்தோஷத்துடன் அவனுக்குத் திருநீற்றினல் பட்டங் கட்டிவைத்து ஓ! இராஜனே! எந்தன் விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் நீர் ஜாக்கிரதையாய்க் கேட்பீராக' ஓ! இராஜனே! பூர்வத்தில் நான் மேற்றிசைக்கு அதிப

ஞன வருணன். சமுத்திரமத்தியிலுள்ள பாதகர்களான அசுரர்களாலும் அரக்கர்களாலும் மிகவும் பீடிக்கப்பட்டபடியால் மிக்கப் பயங்கொண்டவனுகித் தேவேந்திரனிடஞ் சென்றேன்.

அப்போது அவரால் சங்கதி என்னவென்று கேட்கப்பட்டபோது "ஓ! தேவேந்திரா! சமுத்திரத்திலுள்ள பாதகர்களான இராக்ஷதர்களும் அசுரர்களும் ஜகமதை வாதிக்கின்றூர்கள். மேலும் எந்தன் இருப்பிடம் அவர்களால் சூழப்பட்டிருக்கின்றபடியால் அங்கு யான் போக முடியவில்லை." என்று உரைத்துவிட்டுக் கேளீர்! இராஜனே! அவ்விந்திரன் அண்டையில் அதற்காகக் காத்திருந்தேன். அச்சமயத்தில் அங்கு தவங்களுக்கு நிலையாகிய அகத்திய முனிவர் வந்தார். அப்போது தேவராஜன் அவரைக் கண்டவுடன் நமஸ்கரித்து அர்க்கிய பாத்திய முதலிய உபசாரங்களால் அவரைப் பூஜித்து நேர்த்தியான ஆசனத்தில் உட்காரச்செய்து தானும் அவரது ஆக்கினையின்படி அங்கு உட்கார்ந்தனன். அந்த வேளையில் நாரத முனிவரும் அங்கு வந்தார். பின்பவரும் இந்திரனுல் பூஜிக்கப்பட்டு அங்கு வீற்றிருந்து 'ஓ! அகத்திய முனிவரே! ஓ! தேவ ராஜனே! நான் பூவுலகில் சில அற்புதங்களைப் பார்த்து விட்டுச் சீக்கிரமாய் உங்களிடத்திற்கு வந்திருக்கின்றேன். அதனை நீங்கள் கேட்க வேண்டும்.

காஸ்மீர தேசத்ததிபனுன, அயலரசர்களை வெற்றிபெற்ற, வஜ்ரதேகி யென்று பிரசித்திகொண்ட ஓரரசன் ஸுதர்மனென்ற தனது புரோகிதன் கல்வி கற்காதிருப்பதைக் கண்டு "ஓ! ஐயா! அந்தணர்களுக்கு அலங்காரமான வித்தையை ஏன் கற்கவில்லை. கல்வியற்ற உமது முகமானது சுடுகாடு போலிருக்கின்றது" என, இவ்வாறு அரசன் வசனத்தைக் கேட்டுப் புரோகிதன் "ஓ! இராஜனே! ஏதோ தோஷத்தினுல் யான் என்ன படித்த போதிலும் எனக்கு வித்தையே வருவதில்லை" என்றுன். ஆகையால் நான் ஜெகப் பிரபுவான மகாவிஷ்ணுவை வேத மந்திரங்களால் ஆராதித்தேன். அதன் பின் விஷ்ணு பிரசன்னராகி அவனுக்கு வித்தையைச் சந்தோஷமாய் அருள் செய்துவிட்டு விரைவிற் அந்தர்த்தியானமானுர்.

பின்னர் அச்சுதர்மன் கல்வியடைந்தவுடன் மிக்கக் களிப்புடையவனுய் அப்போதே எல்லா புலவர்கட்கும் இருப்பிடமான அரசனருகிற் சென்று தான் வரனடைந்ததை அவ்வரசனுக்கு மிக்க ஆதரவுடன் அறிவித்தான். அதன்மேல் அவ்வஜ்ர தேகிராஜன் மிகுந்த சந்தோஷமடைந்துப் பிராமணர்களைக் கூட்டிக்கொண்டு மிக்க மங்களகரமான ஓர் இயாகஞ் செய்கையில் அவன் மிகுந்த சந்தோஷத்தோடு புலவர்களுக்கு அநேக தானங்கள் செய்தான். அப்போது சுதர்மனும் தன் கர்வத்தினுல் பண்டிதர்களை யெல்லாம் கண்டனம் செய்யலானுன். இவன் முன் உத்திரஞ் சொல்லுவதற்குற்ற வல்லவன் ஒருவருமில்லை. ஆகையால் அவன் பண்டிதர்களை யெல்லாம் கொடிய வார்த்தையால் அவமானஞ்செய்பலாகையில் அப்போது சர்வலோகங்களுக்கும் பாட்டனுரான நான்முகத் தேவனுர் கிழப்பார்ப்பான் உருவங்கொண்டு அங்கு தோன்றி எழுந்துநின்று ஆ! ஆ! கல்வியானது வினயத்தோடுகூடியது பூவுல

கினும் புகழப்படலாகும். அதி வினயத்தோடு சேராவிடிற் சகல ஜனங்களும் இகழவேயாகும். ஆகையால் பண்டிதராகிய நீரும் இப்பண்டிதர்களை மான பங்கஞ் செய்யலாகாதன்றோ! ஏனெனில் பிறப்பு முதற்கொண்டு புலவரா யிருக்கவுற்ற புருடன் பாரிலொருவரும் இல்லை'' என, இவ்வாறு அவரது வசனத்தைக் கேட்டுச் சுதர்மன் வெகு கோபத்தோடு "அடா! கிழவா! நீ உந்தன் பண்டிதத் தன்மையை இங்கொன்றும் காட்டவேண்டாம் சும்மா விரு; மேலும் இச்சபையிலுள்ள எல்லோர்களும் கல்வி சிறிதும் இல்லாதவர் களாதலால் அவர்கள் வெறும் மூடர்களே! ஆகையால் நீயும் ஓர் மூடபுத்தி யுடையவனென்பதில் சந்தேகமே இல்லை. வீண் ஆங்காரங்கொண்ட வெரும் கிழவனாகிய உந்தனுக்கு என்ன தெரியும்?'' என இவ்வாறு இகழ்ச்சியான வச னங்களைக் கேட்டவுடன் அவர் அந்தணர் வேடத்தைக் களைந்து அங்கு நான்கு திருமுகங்களோடு விளங்கி மிக்கக் கோபாவேசங் கொண்டவராகி அடா! மூடா! தன்னைத்தானே பெரும் பண்டிதனாகப் பாராட்டவுற்ற உந்த னுக்கு யாம் புத்தி உரைத்தும் நீ வீண் கொழுப்பினால் கொஞ்சமேனும் வித்தையின் இலேசமும் அறியவில்லை. மேலும் அடக்கத்தை விட்டு புத்தி யின்மையால் நம்மையும் நிந்திக்கலாகின்றாய். மகா பாவியான உந்தன் நாவா னது அசைவற்றுப்போகக் கடவது'' என்று இவ்வாறு அவனைச் சபித்துவிட்டு பிரம்மன் அவ்விடத்திலே அந்தர்த்தான மடைந்துவிட்டனர்.

## 12-வது அத்தியாயம்.

"அப்போது அப்பாவியின் நாவானது தம்பித்து அசையவே யில்லை. அவன் அச்சபா மண்டபத்தின்கண்ணே கேவலம் ஓர் ஊமையன்போலிருந்து விட்டான். பிறகு அரசன் அவ்வற்புதத்தைப் பார்த்து இதென்ன வென்று ஆலோசித்துக் கேளீர்! அகத்திய தேவேந்திரர்களே! அப்போது அவன் மிக்கக் கவலையடைந்தான். பின்னர் அரசன் சுதர்மன் தம்பியாகிய இச்சுதனை நோக்கி "ஓ! விசுத்தா! நீர் மெத்தப் புத்திசாலியல்லவோ இனிச்செய்யத் தகுவதென்ன?'' என்று இவ்வாறு அவ்வரசன் வசனத்தைக் கேட்டு அவ்வந் தணன் "நான் இப்போது கமலக்கண்ணரான விஷ்ணுவை ஆதரவுடன் ஆரா தித்து ஒரிடத்தும் பழுதுபெறாத முன்போலுள்ள வாக்கை எனது அண்ண னுக்கு அடைவிக்கின்றேன்.'' என்று கூறித் தம்பியானவன் தன் மனதை எங்குஞ் செலுத்தாமல் விஷ்ணுவைப் பூஜித்தான்.

அப்போது அவனுக்கும் திருமால் மிக்கப் பிரியத்தோடு தோன்றுகை யில் அவன் ஓ! அடியார்களுக்கு அபயமளிக்கவுற்ற பகவானான விஷ்ணுவே! தேவரீர் அடியேனுடைய எனது அண்ணனைப் பிரமன் சாபத்தினின்று விரைவில் விலக்கி அருளல் வேண்டும்.'' என, அது கேட்டு ஜகத் ஸ்வரூபியாகிய விஷ்ணு "இவன் முந்தி நமது வரப்பிரசாதத்தினால் வித்தையை அடைந்து நல்லோர்க ளான புலவர்களை, கொடிய வார்த்தையினால் இகழ்ந்தது சரியா? விநயத்தோடு கூடிய வித்தைக்கே எங்கும் மரியாதையுண்டாகும். அவன் புலவர்களை அவ மதித்தபடியால் அப்பிரம்மன் மிக்கக் கோபத்தோடு சபித்துவிட்டார். ஆகை யால் இவனை இச்சாபத்தினின்றும் விலக்குவதற்கு நம்மால்முடியாது'' என்று,

இவ்வாறு விஷ்ணுவின் வார்த்தையைக்கேட்ட அவன் பின்னும் "ஓ! ஸ்வாமி! உலக குருவாகிய தேவரீருக்கு நாங்கள் தாஸர்களல்லவோ! ஆகையால் தேவரீர் இப்பிழைதனை மன்னித்துச் சீக்கிரமாய் இவனைச்சாபத்தினின்றும் விலக்கி அருளல் வேண்டும்'' என, இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டுச் சகல ஜகத் ஸ்வரூபியான ஸ்ரீ விஷ்ணுவானவர் மறுபடியும் இவனுக்குக் கல்வியைக் கொடுத்தால் இவன் புலவர்களை இன்னும் இகழ்வான்'' என்று மனதினில் ஆலோசித்து அப்போது ''அடா முடியாத காரியத்திற்கு இங்கு ஏன் வீணாய்ப் பிரயத்தனப்படுகின்றாய், இப்போது பிரம்மன் சாபத்தினின்றும் விடுவிப்பதற்கு எனக்கு வல்லமையில்லை'' என, இவ்வாறு திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீகோவிந்தனைப்பார்த்து அவன் மிக்கக் கோபமுடையவனாய் ''ஓ! புருடோத்தமனும் பூர்வத்தில் தவசியாகிய விசுவாமித்ரரும் தம் தவத்தின் பெருமையினால் தன்னை அடுத்த திருசங்கு இராஜனைச் சொர்க்கத்திற்கு அனுப்பி யிருக்கின்றார். இப்படி இருக்கையில் அண்டினவனிடத்தில் இவ்வளவு தயைகூடத் தேவரீருக்கு இல்லாமல் போயிற்றே!'' என இவ்வாறு அவனது கொடிய வசனத்தைக் கேட்ட ஸ்ரீ விஷ்ணு கோபாவேசங் கொண்டவராகி '' அடா! நீ மயக்க புத்தியினால் எம்மை இகழ்ந்தமையால் நீ ஓர் மாதகாலத்திற்குள் உனது சரீரம் குறைவு பெறக்கடவாய் என்று அவனைச் சபித்துவிட்டு அந்தர்த்தான மடைந்தார்.

பின்னர் விசுத்தன் விஷ்ணுவால் சபிக்கப்பெற்றதை அரசன் அறிந்து ''ஓ! கோ! இதென்ன என்று உள்ளத்தில் மிக்க விசாரமடைந்தான். அப்போது விசுத்தனும் கால் கைகளிற் குறைவுகண்டு பின்னர் நாளடைவில் தலைதனிற் குறைவு படுங்காலத்தில் அவ்வரசன் ஓர் மகோற்சவ காலத்தில் ஸ்ரீ கேதாரேசுவர சுவாமியைச் சேவிப்பதற்காக மிகுந்த சைனியங்களோடு அச்சுதர்மனையும், விசுத்தனையும் அழைத்துக் கொண்டு மிகுந்த பக்தியுடன் சென்று அம்மகேசுவரனைத் தரிசித்து நமஸ்காரஞ்செய்து மிக்க அன்புடன் பலவிதமான அனேகத் துதிகளால் தோத்திரஞ்செய்து அவ்விரு பார்ப்பார்களுடன் கோபுர வாசலில் வந்திருந்தான்.

அப்போது சில இருடீசுவரர்களும் கேதாரேசுவரனாகிய அப்பரமேசுவரனை வந்தனித்துவிட்டு மிகுந்த சந்தோஷத்தோடு திரும்பி அக்கோபுர வாசலிற்கு வந்தபோது அவ்வரசன் அவர்களை நமஸ்காரஞ் செய்வித்து அவ்விரு பாவிகளையும் அவர்களுக்குக் காட்டி ஓ! முனிவர்களே! இவர்களைச் சாபத்தினின்றும் விடுவிக்க வேண்டும்'' என, அவர்கள் இவ்விருவரும் பிரம்ம, விஷ்ணுக்களுடைய சாபத்தை அடைந்தவர்களென்று அறிந்து அச்சாபத்தை விடுவிப்பதற்கு வல்லமை அற்றவராகி அரசனை வாழ்த்திவிட்டு விரைவில் தங்களிருப்பிடஞ் சென்றார்கள்.

பின்னர் அரசன் ஆ! ஆ! இவர்களை இச்சாபத்தினின்றும் விடுவிப்பவர்கள் யாராயினும் இவ்வுலகில் இருப்பார்களா'' என்று, அங்கிருந்து கொண்டு மனத்துயரங் கொண்டவனாகி விசாரமுற்றிருக்கையில் அப்போது அங்கு ஸ்ரீ ததீசி மாமுனிவர் தமது சீடர்களோடு ஸ்ரீ கேதாரேசுவரரைத் தரிசித்துத்

திரும்பலானர். அப்போது அவ்வரசன் அவரைக் காணலானன். பின்னர் அவரது பாதாரவிந்தத்திற்படிந்து தோத்திரஞ்செய்து அன்புடையானய் "அவரை ஒ! மகாவிருடியே! அவர்கள் தோஷத்தினல் பிரம்ம விஷ்ணுக்களிடமிருந்து சாபம் அடைந்திருக்கிற எமது புரோகிதர்களாகிய இவ்விரு பிராமணர்களேயும் இரக்ஷிக்க வேண்டும்'' என, இவ்வாறு அவரது வசனத்தைக் கேட்டு முனிவர் மிக்கச் சந்தோஷங்கொண்டவராகி மகா பரிசுத்தமும், பாவத்திரள்களைத் துரத்தி அடிக்கலுற்றதுமான கொஞ்சந் திருநீறு எடுத்துக் கொடுக்க, இராஜேந்திரனும் அதனை வாங்கி அவர்களிடம் கொடுக்க அவ்விரு அந்தணரும் பூசிக்கலானர்கள்.

அப்போது விசுத்தன் தேகம் முன்போல் வளர்ந்தும், சுதர்மன் நாவும் சரிப்பட்டுபோயின. அத்தகைய இந்த அற்புதத்தைப்பார்த்து எல்லோர்களும் "ஆ! ஆ! திருநீற்றைப்பூசிய மாத்திரத்தில் இவ்விருவர்களும் பிரம்ம விஷ்ணுக்களுடைய சாபத்தினின்று விடுபட்டனர்களே! ஆகையால் இத்திருநீற்றின் மகிமையை யாவரால் தான் கணக்கிடக்கூடும்.'' என்று மிக்க ஆச்சரியங் கொண்டார்கள். அப்போது அவ்வஜ்ஜிரதேகி இராஜனும் ஆச்சரியங் கொண்டவனகி தவசிகளிற் சிறந்தவரான அத்ததீசி முனிவரைப் பூமியில் வந்தனித்தான். அவ்விரு பிராமணச் சகோதரர்களும் அம்மாமுனிவரைத் தண்டஞ் சமர்ப்பித்து 'ஒ! சுவாமி! நாங்களிருவரும் தேவரீரால் பஸ்மத்தின் மகிமையைக் கொண்டு காப்பாற்றப்படலானேம், பஸ்மத்தின் மகிமையை தேவரீரல்லது ஸ்ரீ பரமேசுவரனல் தானறிய முடியும்.''

என்றுரைத்துத் தண்டம்போல் பூமிதனில் வந்தனிக்கலான அவ்விருவர்களையும் ஆசிர்வாதஞ்செய்து அம்முனிவர் சந்தோடமாய்த் தமதாசிரமங்களுக்கு ஏகினர்! அகத்திய தேவேந்திரர்களே! அது முதலாக அவ்விரு வேதியர்களும் பஸ்மத்தினல் உத்தூளனம் செய்யப்பெற்ற மேனிதனைக் கொண்டவர்களாகி மிகுந்த மேன்மையைக் கொண்டிருந்தார்கள்'' என இவ்வாறு ஸ்ரீ நாரதமுனிவருடைய வசனத்தைக்கேட்ட அகத்தியமுனிவர், இந்திரன் இவ்விருவர்களும் மிக்க ஆச்சரிய முற்றமனதைக் கொண்டவர்களாகி அதி அற்புதமான பஸ்மத்தின் மகிமையைப்பற்றி ஒருவரோடொருவர் பிரஸ்தாபித்து மிக்க மனமகிழ்ச்சியோடு இருக்குமளவில் கேளீர்! புஜபலாஜனே! அப்போது தான் மனத்துன்பத்துடன் எதை எதையோ நினைத்துக்கொண்டு "ஒ! தேவராஜனே! இக்கதையின் பிரஸ்தாபம் இருக்கட்டும், இராக்ஷதர்கள் அசுரரோடு கூட சமுத்திரத்தின் மத்தியிலிருந்துகொண்டு துன்பப்படுத்துகின்றர்களே! ஆகையால் நீர் அவர்களைக் கொல்லுவதற்காக இப்போது பிரயத்தினஞ் செயல்வேண்டும்''என்று யான் உரைக்கையில் அப்போது அகத்திய மாமுனிவர் மிக்கக் கோபாவேசங்கொண்ட மனத்தராகி "ஆ! அடா! மூடா! எங்களது வார்த்தையை அடக்கி நீ என்னவுரைத்திட்டாயடா? பாவங்களைத் தொலைக்கலுற்ற திருநீற்றின் மகிமையைப்பற்றி வர்ணித்துக் கொண்டிருக்குமளவில் இக்கதையின் பிராஸ்தாபம் இருக்கட்டும் என்று அசட்டையாய்ச் சொன்னயல்லவா! ஆகையினல் அடா! துராத்துமாவே நீ இத்தோஷத்தினல் சிக்கிரம் இராக்ஷதனக் கடவாய் என்று சபித்து அவ்வகத்திய மாமுனிவர்

இந்திரனைக்கூப்பிட்டு "ஓ! இந்திரா! பாவங்களை அதட்டித் தூரத்தலுற்ற பஸ்மத்தின் மகாத்மியத்தைக் கேட்டபடியால் நீ அசுரர்களை வெகு சுலபமாய்க் கொன்று வெல்வதில் யாதொரு பிரயாசையுமில்லை" என்று உரைத்துவிட்டுக் கடற்கரைக்குச் சென்று மந்திரிக்கப்பட்ட திருநீற்றை எடுத்து கைதனிற் குழைத்து நெற்றியிலணிந்து அம்மாமுனிவர் தமது திருக்கரத்தை நீட்டிச் சமுத்திரத்தை அழைக்க அப்போது அச்சமுத்திரமானது பனித் திவிலைக்கு நிகராய் அவரது கைமீது வந்துசேர்ந்தவுடன் அவர் ஸ்ரீ மகாதேவனைத் தியானஞ்செய்து அதனைக்குடித்துவிட்டு ஓ! இந்திரா! இப்போது பாவிகளும் துஷ்டர்களுமான இராக்ஷதர்களையும் அசுரர்களையும் கொன்றுவிடு" என்று திருவாக்கருளி அவ்விந்திரனுக்குக் கொஞ்சம் திருநீறு கொடுத்தருளினர்.

பின்னர் இந்திரனும் அதனை வாங்கிச் சரீர முழுதும் பூசிக்கொண்டு கேளீர்! புஜபலராஜனே! சகல இராக்ஷதர்களையும் அசுரர்களையும் கொன்று போட்டான். பின்னர் அம்மாமுனிவர் சமுத்திரத்தை விட்டுவிட்டுத் தமதாசிரமம் போகப் பிரயாணப்படுகையில் கேளீர்! இராஜனே! அப்போது இந்திரன் என்னை விரைவிற்கொண்டு அம்மாமுனிவரிடஞ்சென்று அவரைச் சமாதானஞ் செய்து 'ஓ! தவசிரேஷ்டரே! ஓ! சுவாமி! இவன் மூடனாகையால் ஒன்றையும் அறியமாட்டான். ஆகையால் தேவரீர் தயவுடன் இவனைக் காப்பாற்றிடல் வேண்டும்" என்று சொல்லிவிட்டு அவரை வந்தனிக்கப் பின்னர் அவ்வகத்தியரும் பிரசன்னராகி எந்தனை நோக்கி "ஓ! வருண! புஜபலனென்றோரசுரன் உண்டாகப்போகின்றான். நீ அவனது நெற்றிதனில் திருநீற்றைக் கண்ட மாத்திரத்தில் இவ்விராக்ஷத தேகம் உடனே நீங்கலாகி முன்போல் உந்தன்சொந்தத் தேகத்தைப் பெற்று மேற்றிசை சேர்ந்து அரசனாவாய்; இது நிச்சயம் என்று அருளிவிட்டுத் தவசியானவர் விரைவில் தமது ஆசிரமம் சேர்ந்தார்.

பின்னர் யானும் அதன்படியே மிக்க இகழ்ச்சியும் கோரமுமான இராக்ஷத சரீரத்தை யடையலாகி உமது பட்டணத்தில் வசித்து வந்து, பின்னர் உமது நெற்றியின் மிதிருந்த திருநீற்றைக் கண்டதன்மேல் எனது சொந்தச் சரீரத்தைப்பெற்றேன் என்று கூறிப் பின்னர் அவ்வருணன் அப்போது விரைவிற் தன்படைகளை அழைக்க அப்போது மிக்க வலிமிகுந்த தன் படைகளெல்லாம் அங்கு வந்து பிறகு அவனும் மிக்க மனமகிழ்ச்சி கொண்டவனாகி அவைகளுடன் மேற்றிசைச் சென்று கேளீர்! வேதியர்களே! அவன் இவ்வாறு திருநீற்றைக் கண்ட மாத்திரத்தில் தன் பதவியை அடையலானான். அப்போது அப்புஜபல ராஜன் இவனது சரித்திரத்தைக் கேட்டு மிக்க வாச்சரியங்கொண்டவனாகித் திருநீற்றின் மீது அதிக மனப்பற்றுகொண்டு எப்போதும் தேகமெல்லாம் திருநீற்றைப் பூசிக்கொள்வதிலும், திருநீற்றையே படுக்கையாய்ப் போட்டுக் கொள்வதிலும் முயன்றவனாகிப் பெண்டீர் பிள்ளை இஷ்ட பந்துக்களோடு கூட வேண்டிய சுகங்களை அனுபவித்து வந்து கேளீர்! வேதோத்தமர்களே! பிறகு தேகத்தின் முடிவில் மிகுந்த சந்தோஷத்தோடு கைலாஸ பதவியை அடைந்தான்,

இயாதாமொருவன் இப்பஸ்ம மாகாத்திமத்தை ஜாக்கிரதையுடன் கேட்கின்றானோ, கேட்பிக்கின்றாரோ, அல்லது படிக்கின்றாரோ அவன் மேன்மையுள்ள பதவியை அடையலாவான். மேலும் பிள்ளையை வேண்டுவோன் பிள்ளைகளையும், தனத்தை வேண்டுவோன் மிக்க தனத்தையும் கல்வியை வேண்டுவோன் சிறந்த கல்வியையும் மோக்ஷத்தை வேண்டுவோன் மோக்ஷத்தையும் அடையலாகும். தவிரவும் கேளீர்! வேதோத்தமர்களே! இதனை நியமமாய்க் கேட்ட மாத்திரத்தில் திரவியந் திருடுதல், மத்தியபானம், பிரம்மஹத்தி முதலிய பாதகங்களிருந்தும் விடுபடலாகின்றான் என்பதிற் சந்தேகமேயில்லை. ஓ! சௌனகாதி முனிவர்களே! வளர்த்தி உரைப்பதில் பயன் யாது? இதனை மிக்க அந்தக்கரண பத்தியுடன் கேளுங்கள். இது பிரம்மஹத்தி முதலிய பாதகங்களுக்கெல்லாம் பிராயச் சித்தமானதென்றும், சகல உப நிடதங்களுடையதுமான முக்கிய சாரமென்றும், சாக்ஷாத் ஸ்ரீ சர்வேசுவரஸ்வரூபமென்றும் மதிக்கப்படுகிறபடியால் வேதவேதாங்கங்களில் மிக்கத் தேர்ச்சி பொருந்திய நீங்களெல்லோர்களும் இப்போது கிருதார்த்தராகி விட்டீர்கள்.

## 13-வது அத்தியாயம்.

கேளீர்! பிராம்மணோத்தமர்களே! படிப்பவர் கேட்போருடைய சகல பாவத்திரள்களையும் தொலைக்கவுற்றதும், மிக்க புண்ணியமுமான உருத்திராக்க மகிமையை இப்போது எடுத்து உரைக்கின்றேன். பக்தியேயற்றவனாயினும், மூடனாயினும், மகா மூடனாயினும், யாதாமொரு உருத்திராக்கத்தைத் தரிக்கின்றானோ அவன் சகல பாவங்களினின்றும் விடுபடுகின்றான். தத்துவங்களை விளக்கவுற்ற பெரியோர்கள் இதனை மகா விரதமென்றும் சொல்லுகின்றார்கள். மகா புண்ணியமான உருத்திராக்கம் தரித்தலாலாகும் புண்ணியம் எதோடுதான் ஒப்பிடமுடியும். யாதாமொருவர் அதே விரதமாய் ஆயிரம் உருத்திராக்கங்களைத் தரிக்கின்றார்களோ அவர்களைத் தேவர்களெல்லாந் தொழுகின்றார்கள். அவர் ஸ்ரீருத்திர மூர்த்திக்கு ஒப்பானவர்களே! ஆயிரமில்லாவிட்டாலும் புயங்களிற் பதினாறு பதினாறு, சிகையிலொன்று, கைகளிற் பன்னிரண்டு, பன்னிரண்டு கண்டத்தில் முப்பத்திரண்டு, காதுகளில் அவ்வாறு இவ்விதமாய் யாதாமொருவர் உருத்திராக்கங்களைத் தரிக்கின்றார்களோ அவர் ருத்திரரைப்போலவே பூஜிக்கப்படுகின்றார்கள்.

மேலும் யாதாமொருவர் உருத்திராக்கங்களை முத்து, பவழம், படிகம், வெள்ளி வைடூரியம், தங்கம் இவைகளோடு சேர்த்துத் தரிக்கின்றாரோ அவர் உருத்திரரே என்பதிற் சந்தேகமில்லை. அல்லது உருத்திர முத்திரையாகிய வெறும் உருத்திராக்கங்களை மட்டும் தரிப்பவரிடத்து, சூரியனிடத் திருள் போல பாவங்கள் அணுகுவதேயில்லை. மேலும் மானிடர்களுக்கு உருத்திராக்க மாலையால் செய்யப்படுகின்ற ஜபமானது அளவற்ற பயனைக் கொடுக்கலாகும். ஆனால் அம்மாலையன்றிச் செய்யப்படுகின்ற ஜெபமோ அச்சபத்திற்குத் தக்கபடியுள்ள பயனை மட்டிலே கொடுக்கலாகும்.

அனேக புண்ணியங்களை அளிக்கலுற்ற உருத்திராக்கங்களில் ஒன்றை யாயினும் எவன் தரிக்கவில்லையோ அவனது ஜன்மமானது திரிபுண்டரம் இடாதவனுடைய ஜன்மம் போலவே பிரயோஜனமற்றதாகும். யாதாமொரு புத்திசாலியான மானிடர் உருத்திராக்கத்தைச் சிரசினில் வைத்துக்கொண்டு ஸ்நானஞ் செய்கின்றாரோ அவருக்குக் கங்கா ஸ்நான பலன் கிடைக்குமென்பதிற் சந்தேகமில்லை. மேலும் உருத்திர முத்திரையாகிய உருத்திராக்கங்களில் ஒன்றையாயினும் தரிப்பவரிடத்து அனேக ஜன்மங்களில் செய்யப்பட்ட பாவங்கள்கூட அணுகாமல் நீங்கிவிடும். உருத்திராக்கத்தில் ஜலத்தை விட்டு அபிடேகஞ் செய்கின்றவர்கள் சிவலிங்கத்திற்கு அபிடேகித்து அதனால் ஆகிய பயனெதுவோ அதை அடைகின்றனர் என்பதிற் சந்தேகமே இல்லை. சகல உலகங்களாலும் பூஜிக்கப்பட்ட ஒன்று, ஐந்து, பதினொன்று, பதினான்கு இந்த முகங்களைக் கொண்ட உருத்திராக்கங்களைப் பக்தியுடன் பூஜை செய்கின்ற மானிடர் மிக்க தரித்திரராயினும் மிகுந்த சம்பத்தை அடைவார்கள். ஓ! வேதியோத்தமர்களே! சில புண்ணிய கதைகளைச் சொல்லுகின்றேன் அதை மிக்க அன்புடனும் ஊக்கத்துடனும் கேட்பீர்களாக.

பூர்வத்தில் நந்திக்கிராமத்தில் சகல அவயவங்களும் சுந்தரமாய் அமையப்பெற்ற மகாநந்தை என்றோர் தாசியிருந்தாள். அவள் பூரண சந்திரனுக்கு நிகரான குடை, சுவர்ணபாரணங்களால் விளங்கப்பெற்ற வாகனங்கள், சிறந்த பிடிகளையுடைய சாமரங்கள், தங்கமயமான பாதுகைகள், விசித்திரங்களான வஸ்திரங்கள், சந்திரன் ஒளியை யொத்த படுக்கைகள், அனேகம் அனேகம் பசுக்கள், எருமைகள், சேவகர்கள், கந்தம், குங்குமம், கஸ்தூரி முதலிய வாசனைத் திரவியங்கள், மிகுந்த விலைமதிப்புள்ள ஆபரணங்கள், கோடி சங்கியைக்கதிகப்பட்ட தனங்கள், இவைகளைக் கொண்டிருந்தாள். மேலும் அவள் என்றும் சிவ பூசையிலே பயின்றவளும், சத்தியம், தருமம், இவைகளையே பாராட்டியவளும், எப்போதும் ஸ்ரீ சிவபிரானுடைய சரித்திரங்களிலே மிக்க அன்பு பூண்டவளும், சிவநாம மந்திரத்தை ஜபிப்பதிலே மிக்க விருப்பமுற்றவளுமாய் இருந்தாள். தவிரவும் அவள் சிவனடியார்களானப் பிராமணர்களைக்கண்டபோதெல்லாம் சந்தோஷத்தோடு தண்டஞ் செய்வாள்.

அத்தாசியானவள் ஓர் குரங்குக்கும், கோழிக்கும் உருத்திராக்கங்களை ஆபரணமாய்ப் பூட்டி நாட்டிய மண்டபத்தில் வினோதார்த்தமாய் எப்போதும் அவைகளைக் கைத்தாளங்களாலும் கீதங்களாலும் தானே நாட்டிய மாடும்படி செய்து பிறகு சகிகளாற்சூழப்பட்டவளாகி மிகச்சிரிப்பாள். அக்குரங்கானது காஸ்மீரதேசத் தரசனான பத்திரசேன இராஜனுக்குச் சுதர்மனென்ற பிள்ளையாகவும் கோழியானது அவ்வரசன் மந்திரிக்குத் தாரகன் என்கிற பிள்ளையாகவும் பிறந்தன. பின்னர் அவ்விரு பிள்ளைகளும் மிக்க நேசமுள்ளவர்களும், ரூபலாவண்யம் பொருந்தியவர்களும், கல்வி கற்பதில் முயன்றவர்களும், சிறு குழந்தைகளுமாகிச் சேர்ந்து விளையாடி வருவார்கள். அவ்விருவர்களும் எல்லா அவயவங்களிலும் உருத்திராக்கங்களால் அலங்கரித்துக் கொண்டு தங்கமயமும் இரத்தின மயமுமான ஆர கேயூர மகுட குண்டலங்கள் முத

ஷிய ஆபரணங்களை ஒழித்து உருத்திராக்கங்களையே தரித்துக்கொண்டார்கள். அவர்கள் உருத்திராக்கங்களை எப்போதும் சிறந்த கங்கணங்களாகவும், கழுத்தாபரணங்களாகவும், குண்டலங்களாகவும் தரித்துக் கொண்டார்கள். அவர்கள் இவ்விதமாய்ப் பெருமை பொருந்திய வமிசத்திற் ஜனித்து வேண்டிய சுகங்களை அனுபவித்து முந்திய ஜன்மத்தின் வழக்கத்தினுல் உருத்திராக்கத்தின் மீது பக்தி, சிரத்தை உடையவர்களாய் இருந்து வெகு காலஞ் சென்றதன்பின் மிக்க மங்களகரம் பொருந்திய சிவபதத்தை அடையலானுர்கள்.

## 14-வது அத்தியாயம்.

பூர்வத்தில் எப்போதும் துன்மார்க்கத்திலே முயன்றவனும், நாள் தோறும் வேசிகளிடத்தில் புணர்வதிலே காதல் கொண்டவனுமான புஷ்கர தேசத்திற் கதிபனுன சௌமியனென்று ஓர் ராஜனிருந்தான். நல்ல ரூப யௌவனங்களோடு கூடிய அவனது மனைவியான வசுமதி என்பவள், அரசன் வேசிமார்க்கத்தில் இருந்து கொண்டு, தன்னுேடு கலவாதிருப்பதைக் கண்டு மிக்க வியாகூல மனதைக் கொண்டவளாகி ஒய்வற்ற கவலைக்கிருப்பிடமாகி, தங்கள் புரோகிதன் மனைவியாகிய சத்திய விரதை என்றவளிடத்துத் தன் துக்கத்திற்குக் காரணமான அரசன் கெட்ட நடைகளை அறிவித்து, அவனுக்கு எந்த வுபாயத்தினுல் தன்மீது காதல் உண்டாகும் என, வினவ, அவள் "ஓ! அம்மணி! உத்திராக்கம் தரித்தலானது சகல வசியங்களையும் அளிக்கவுற்றதும் மிக்க மேன்மை பொருந்தியதும், மானிடர்களுடைய எல்லாப் பாவங்களையும் வியாதிகளையும் தீர்க்கவுற்றதுமாகின்றது. அதனைத் தரிக்கும் மானிடரைப் பூதப் பிரேத பிசாசங்கள் முதலியவைகளெல்லாம் இம்சிப்பதில்லை. அதனை யாவர் எவ்விதமாய்த் தரித்தபோதிலும் அவரைச் சர்ப்பங்கள் தீண்டா" வென்றுரைத்து அவளுக்கு மகா பரிசுத்தமான ஓர் உருத்திராக்கத்தைக் கொடுத்தனள்.

அரசன் மனைவி அதனை மிக்க அன்போடு வாங்கிக்கொண்டு கழுத்தினிற் கட்டிக்கொண்டாள். பின்னர் அவ்வரசன் அன்று முதல் அவள்மீது மிக்கக் காதலுடையவனுய் அன்றிரவினிலே அவளது அரண்மனைக்குச்சென்று மிக்க மோகத்துடன் அவளோடு கலந்தான். மேலும் அவன் இதே மாதிரியாக இரவும் பகலுமாய் அவளோடு புணர்ந்து கொண்டு வருகையில் அப்போது விசாரிப்போரில்லாமல் அவனது சைனியங்களெல்லாம் மிகவும் காமாதுரனுன அவ்வரசனைவிட்டு அங்கு மிங்குமா யோடிப்போயின.

இப்படி இருக்கையில் ஓர் பகை அரசன் சதுரங்க சைனியங்களோடு கூடி மிக்கக் கோலாகலச் சப்தஞ் செய்துகொண்டு வந்து அவன் நகரத்தை முற்றுகை போட்டான். அதுகேட்டு இவ்வரசன் மிஞ்சி இருந்த சில சைனியங்களோடு அட்டகாசஞ்செய்து கொண்டு அவனை எதிர்த்துக் கொள்ள, உடனே அவன் சைனியங்களெல்லாம் அங்கு மிங்குமாய்ப் பரந்து ஓட்டம்பிடித்தன. பின்னர் அவ்வரசன் ஒண்டியாய் அதிவேகத்தோடு நகரத்திற்குத் திரும்பி ஓடிவந்து தனது அரண்மனைக்குச் சென்று தன் மனை

விக்கு யெல்லாவற்றையும் அறிவித்துத் தனதரசாக்ஷியின் மீது ஆசை அற்ற வனுகி மிக்க வியாகூலமுற்ற மனத்துடனிருந்தான். அப்போது அவன் மனைவி யானவள் மிக்க துக்கமுற்ற அவ்வரசனை நோக்கி "ஓ! சுவாமி! உருத்தி ராக்கா பரணத்தைத் தரித்துக்கொண்டால் உடனே தங்களுக்கு ஜெயமுண் டாகும். இது விஷயத்திற் சந்தேகமே இல்லை. ஆகையால் தேவரீர் அவ்வுருத் திராக்கத்தைத் தரித்துக்கொள்ளல் வேண்டும். அதன் மகிமைகளைப்பற்றிப் புராணங்கள் மூலமாய்க் கேட்டறிவதற்குத் தேவரீருடைய புரோகிதர் மிக்க வல்லமை உடையவராயிருக்கின்றார்'' என இவ்வாறவனது வசனத்தைக் கேட்டு அரசன் தன் புரோகிதனை வரவழைத்து சகல துக்கங்களையும் போக்க வுற்ற ஸ்ரீ உருத்திராக்கத்தின் மகிமையைக் கேட்டவுடன் அத்தாணி வேந் தன் ஆயிரம் உருத்திராக்கங்களைத் தரித்துக்கொண்டான்.

அவன் மனைவியாகிய வசுமதியும் மகாபரிசுத்தம் பொருந்திய ஆயிர உருத் திராக்கங்களைத் தரித்துக் கொண்டாள். பின்னர் அவ்வரசன் தனக்குச் சேனையே இல்லாது தன்மனைவியைச் சாரதியாக வைத்துக்கொண்டு யுத்த சமு கஞ்சென்று அச்சத்துருக்களை அதஞ்செய்து தன் தேசங்களை வசப்படுத்திக் கொண்டு தன் நகரமடைந்து அங்கு மனைவியோடு தன் அரண்மனைக்கு வந்து மிக்க சந்தோஷத்துடன் அவ்வுருத்திராக்கத்தின் மகிமையை மிக்கக் கொண் டாடித்தன் தேசத்து ஜனங்களை எல்லாம் உருத்திராக்கம் அணிந்துகொள்ளும் படிசெய்தான். அவனுக்குச் சகல இலக்ஷணங்களும் பொருந்தப்பெற்ற மிகவழ கினர்களான விரண்டு பிள்ளைகளிருந்தார்கள். அவர்களில் ஒருவன் அதிரத னென்றும் மற்றவன் அவிரதனென்றும் பெயர் பெற்றவர்கள். மேலும் அவ னுக்கு எல்லா இலக்ஷணங்களும் பொருந்தப்பெற்ற இரு பெண்களுமுண்டு. அவர்களில் மூத்தவள் சருவகலாஞ்ஞை எனவும் மற்றவள் சித்திராங்கனை எனவும் படுவார்கள்.

அவ்வரசன் இவ்விருவருக்கும் உருத்திராக்கத்தைக் கட்டிவிட்டான். இப்படி இருக்கையில் கேரளதேச வாசியும், பிரம்மநாதனுக்குப் புத்திரனும் நல்ல யௌவனப் பருவமுடையவனுமான கமலாக்ஷனென்ற ஓர் இராஜகுமாரன் அம்மூத்தகுமாரியான சர்வ கலாஞ்ஞை என்பவளை முறைப்படி மணம்புரிந்து கொண்டு அவ்விரவினிலே புருடன் பெண்டீர்களான அவ்விருவரும் சேர்ந் திருக்கையில் அப்போது அக்கமலாக்ஷன் அப்பெண்ணுடைய ஆபரணங்களை எல்லாம் வாங்கிப் பெட்டியில் வைத்துத் தனதாபரணங்களை அவள் கையிற் கொடுத்து மிக்கக் காமாதுரனாகியவளைக் கலவிக்கழைக்கையில் அப்பெண்ணான வள் "ஓ! சுவாமி! மகாபரிசுத்தமும் சிறந்த பூஷணமுமான உருத்திராக்கத்தை நீர் தரிக்கப்பெறாதபடியால் நீரென்னோடு புணர்வதற்கு எப்போதுந் தகுதி யல்லர் அன்றோ'' என, இவ்வாறு தன் மனைவியின் வசனத்தைக் கேட்டுக் கம லாக்ஷன் "ஓ! சிறந்த வசனத்தையுடைய மாதே! பற்பல இரத்தினங்களாற் சிறந்ததான பல ஆபரணங்களை யான் தரித்திருக்கையில் அவ்வுருத்திராக் கத்திற்கு மாத்திரமென்ன அதிகப்பெருமை யிருக்கின்றது?'' என அதுகேட்டு மனைவி "ஓ! ஐயா! நீர் மிக்க மனப் பிராந்தியால் சிறந்த ஆபரணமான அவ்

வுருத்திராக்கத்தைத் தரிக்காதபடியால் நீர் மகா பாதகங்களாகிய சர்ப்பத்தி னுல் தீண்டப்பட்டிருக்கின்றீர் என்பதிற் சந்தேகமில்லை. ஆகையால் உம் மோடு சகவாசஞ்செய்வது தகுதியன்று. இந்த விஷயத்தைப்பற்றிச் சந்தேக மில்லை. புராணங்களே மிக்க வாதாரமா யிருக்கின்றன. உமக்கு நம்பிக்கை யுள்ள சகல சாத்திரங்களையும் கற்றறிந்த எந்த மானிடரையாவது என் முன் னிலையிற் கேட்கவேண்டும்.'' என்ருள்.

இவ்வாறு மனைவியின் வசனத்தைக்கேட்ட அவ்வரசன் பின்னும் "ஓ! பெண்ணே! யாம் சம்மதிக்கப்பட்ட பண்டிதர் இவ்விஷயத்தைச் சொல்வாரா கில் அப்போது யாம் புருடராய் இருந்த போதிலும் உந்தனுக்கு மனைவி யாய் விடுகின்ருேம்; நீயும் எந்தனுக்குக் கணவராகி விடு என்பதைச் சத்திய மாய்ச் சொல்லுகின்ருேம்'' என்று அவ்வரசன் முன்னிலையிலிருந்த அப்பெண் டீரைப் பார்த்து விளையாட்டாய்ச் சொன்னுன். அவளும் அவ்வசனத்தைக் கேட்டு அந்தப்படியே சம்மதித்தாள். பின்னர் அவ்விரவு கடந்ததன்மேல் அப் புருடன் பெண்டீர் இருவருமெழுந்து சகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவர்களாகி கலியாண மண்டபத்திற்கு வந்தார்கள். அப்போது அவர்கள் கலியாணத்தைப் பார்ப்பதற்காக அனேகஞ் சிறந்த அந்தணர்களும் அரசர்க ளும் அங்கு வந்திருந்தார்கள்.

அப்போது மிக்கப் புத்திசாலியான அப்பெண்ணுனவள் அங்கு வந் திருந்த பேர்களை யெல்லாங் கண்டு தன் புருடனை நோக்கி "ஓ! இராஜேந்திரா! உருத்திராக்கத்தின் மகிமையையும் அதைத் தரிப்பவர்களுடைய மேன்மையை யும் விசாரிப்பதற்கு இப்பிராமணர்களில் உமக்கு யார்சம்மதி''? என, இவ்வாற வளது வசனத்தைக் கேட்டு அரசன் புன்னகைப்புடன் "ஓ! பெண்ணே! இக்கலி யாணமண்டபத்தில் இதோ விருக்கின்ற சித்திரச் சுவரின் கண் சித்திரரூபியாய் ஆதிசேடன் மீது பள்ளிகொண்டிருக்கலுற்ற ஸ்ரீ மகா விஷ்ணுவானவர் துரிதமா யெழுந்து அஞ்சலிகொண்டு சொல்லிடில் நீ சொல்வதும் சரியே'' என, பின் னர் சருவகலாஞ்ஞையும் இவ்வாறு கணவனது வசனத்தைக்கேட்டு அப்படியே நல்லதென்று சொல்லிவிட்டு அஞ்சலிகொண்டவளாகிச் சித்திரரூபியான திரு மாலை நோக்கி "ஓ! விஷ்ணுவே! பாவங்களைத் தொலைக்கலுற்ற உருத்திராக் கங்களுக்கு மகிமை இருப்பதானுல் அதுவும், உருத்திராக்கந்தரிப்பவர்களும் பாவஞ்செய்திடினும் அவை பாவங்களின் பயனையே கொடுக்கலாகுமென் பதும் ஆகிய இப்பொருட்களெல்லாம் சத்தியமும், வேதாந்தங்களுக்குரித்த தும், எல்லாவற்றிற்கும் விரோத மற்றதும், எங்கும் புகழப்பட்டதுமே யென் பதுஉமக்குச் சம்மதியானுல் இப்போது நீர் சீக்கிரத்தில் இவ்வாதிசேடனைவிட் டெழுந்து ஓ! சுவாமி! சுகமாய் நின்றுகொண்டு சிவாக்கினைபின்படி அதனை உண்மையாய்ச் சொல்லல் வேண்டும்'' என்று அவளால் உரைக்கப்பட்ட மாத் திரத்தில் சித்திரரூபியாயிருந்த ஸ்ரீ விஷ்ணுவானவர் மிக்கப் பயபக்தியோடு "ஓ! பெண்ணே! நீ உரைத்தது சகல உபநிடதங்களுக்கும் சம்மதியுள்ள தென்பது சத்தியம். அதன் மகாத்துமத்தை!சாக்ஷாத் பரமேசுவரனே அறிந்த வராவார்; ஓ! மங்களகரம்பொருந்திய மாதே! எத்தகைய ஜாதியினிற் பிறந்த

மானிடராலாயினும் மகா பரிசுத்தமும் சிறந்த வாபரணமுமாகிய ஸ்ரீ உருத்தி ராக்கத்தைத் தரிக்கப்படில் அவரே தனவான்; அவரே சகலர்களாலும் பூஜிக்க லுற்றவர்; சத்தியமா யவருக்கு யானுமஞ்சுகின்றேன். ஓ! கற்புடைய மங்கையரே! வளர்த்துவதிற் பயன் யாது? அது சகலர்களாலும் தரிக்கப் படத் தக்கதென்பது நிச்சயமே'' என்று திருவாக்கருளி அவ்விஷ்ணுவான வர் முன்போல் பள்ளிகொண்டுவிட்டார்.

பின்னர் அங்கிருந்த ஜனங்களெல்லாம் அவ்வாச்சரியத்தைக் கண்டு அதன் மேல் அவள் மீது மிகுந்த விசுவாசமடைந்தனர். கமலாக்ஷனென்ற அவ் வரசனும் மிக்க வாச்சரியங்கொண்டவனாகித் தானுரைத்த வார்த்தையை மன தில் நினைத்து மிகவும் கவலைகொண்டான். அப்போது அவளது வேலைக்காரி கள் அவனைச் சூழ்ந்துகொண்டு ஓ! இராஜனே! நீருரைத்த வார்த்தையை மன தில் நினைத்துக் கொண்டு இப்போதே சீக்கிரத்தில் புருட இலக்ஷணங்களை விலக்கிவிட்டுப் பெண்களுக்குரிய ஆடை ஆபரணங்களைத் தரித்துக் கொள்ளல் வேண்டும்'' என, இவ்வாறு பரிகாச வார்த்தையைக் கேட்டவுடன் அவ்வர சன் வெட்கத்தினால் தலை குனியப்பெற்றவனாகி அவ்வேலைக்காரிகளை நோக்கி 'ஓ! பெண்காள்! இவள் புருடனாகிவிட்ட அப்போது யான் இவளுக்குப் பிரிய நாயகி ஆகிவிடுகின்றேன்' என்றனன்: இவ்வார்த்தையைக் கேட்ட அப்போது அப்பெண் உடனே ஆணாகிவிட்டனள். உடனே கமலாக்ஷனும் சிவாக்கினை யால் பெண்ணாகிவிட்டான்.

அது முதலாய் இப்பெண் கமலாக்ஷியென்றும் அப்புருடன் சருவகலா வல்லபனென்றும் உலகினில் பிரசித்தியடைந்தனர். பின்பு அக்கமலாக்ஷியான வள் தன் கணவனை நோக்கி ''ஓ! பர்த்தாவே! சகல பாவத்திரள்களையும் நாசஞ் செய்பவனுற்றதும், சகல உபநிடதங்களாலும் நிலைநிறுத்தப்பட்டதுமான சாக்ஷாத் ஸ்ரீ பரமேசுவர ஸ்வரூபமும், மிக்கச் சிரேட்டமுமான ஓர் உருத்தி ராக்கத்தை அடியாளுக்குத் தந்தருளல் வேண்டும். ஓ! நேசனே! மகா பரி சுத்தமான இதன் மகிமையை யாவராலும் அறிவதற்கு அசாத்தியமானதே என, அப்படியே அவன் கொடுத்தவுடன் அதனை அவள் மிகுந்த பக்தியோடு வாங்கி மிக்கச் சந்தோஷத்துடன் தனது உடம்பினில் தரித்துக்கொண்டான். பின்னர் அப்புருடன் பெண்டீர்களான அவ்விருவர்களும் நன்றாய்ச் சகல சுகங் களையும் அநுபவித்துக்கொண்டு வந்தார்கள்.

இப்படி இருக்கையில் கமலாக்ஷனுக்குத் தந்தையாகிய கேரள தேசாதிப னான பிரம்மநாதன் என்ற அரசன் சௌமியவானென்ற அரசனை நோக்கி ''ஓ! இராஜேந்திரா! என் புத்திரனான கமலாக்ஷனே பெண் தன்மையை அடைந்து விட்டான். உமது குமாரியும் உன்னதமானப் புருடத் தன்மையை அடைந்து விட்டாள். கேளீர்! இராஜனே! இவ்விருவர்களுடைய விருத்தாந்தமும் மிக்க வாச்சரியமாகக் காண்கின்றது; என்றாலும் எந்தனுக்கு மிக்க விவேகியான விபுதனென்று மற்றோர் பிள்ளை இருக்கின்றான். அவனுக்குச் சகல இலக்ஷ ணங்களும் பொருந்தப்பெற்ற சித்திராங்கனை என்ற உமது மற்றோர் கன்னி கையை முறைப்படிக்கலியாணஞ்செய்து கொடுக்க வேண்டும்''என், இவ்வாறு

அவனது வசனத்தைக் கேட்டுச் சௌமியவானென்ற அரசனுமப்படியே நல்லதென்று மிக்க மேன்மை பொருந்திய தன் பெண்ணை விபுதனுக்குக் கொடுக்க, அவ்விபுதனும் உருத்திராக்கங்களை ஆபரணமாய்த் தரித்தவனாகி அவளை மணம்புரிந்துகொண்டு பிறகு கலியாணக் கோலத்தோடு அவளைத் தன்தேசத்திற் கழைத்துக் கொண்டுபோய் அங்கிருந்த கண்ட போகங்களையு மனுபவித்து வந்தான்.

மேலும் ஸௌமியவான், பிரம்மநாதனிருவர்களும் உருத்திராக்கங்களை ஆபரணங்களாகப் பூண்டவர்களாகிப் புராணங்களிற் பிரசித்தி கொண்டதான உருத்திராக்க மகிமையைப் பிரஸ்தாபித்துக் கொண்டே அகண்ட சுகங்களை அனுபவித்துக்கொண்டு மங்களகரம் பொருந்திய பார்க்கத் தகாத காக்ஷிகளையும் பார்த்து வந்து முடிவினில் கேளீர் வேதோத்தமர்களே! புத்திர பௌத்திர களத்திரங்களோடு மிகுந்த சந்தோஷத்துடன் நிகரற்றதும் இலக்ஷ்மி விலாசம் பொருந்தியதுமான கைலாச பதவியை அடைந்தார்கள்.

## 15-வது அத்தியாயம்.

கேளீர்! சௌனகாதி முனிவர்களே! உருத்திராக்க மகிமையைப்பற்றிய மற்றோர் சரித்திரத்தை எடுத்துரைக்கின்றேன். இந்து தேசத்தில் பூசக்கிரமென்று மகா மங்களகரம் பொருந்திய ஓர் பட்டணமிருக்கின்றது. அதில் மகா மகிமை பொருந்தியவரும், உத்திராக்க மாலையைச் சிறக்க ஆபரணமாய்ப் பூண்டவரும், ஸ்ரீ 'உருத்திரமூர்த்தியினிடத்தே மனப்பற்றுள்ள வருமான சுப்ரதீபர் என்றோர் அந்தணச் சிரேஷ்டர் இருந்தார். அவரது புத்திர பௌத்திரர்களும், மற்றுமவரைச் சேர்ந்தவர்களும் இவ்வுருத்திராக்க மாலையைப் பூஷணங்களாகக் கொண்டவர்களா யிருந்தார்கள். இவ்வாறு சுப்ரதீபர் வசித்து வருகையில் உருத்திராக்கந் தரிப்பவர்களுக்கே நல்ல உத்தமமான அன்னத்தைக் கொடுப்போமே அன்றி மகா பாவங்களாற் கலக்கமுற்ற மனதைக்கொண்ட மற்றவர்க்கெல்லாம் கொடுப்பதே இல்லை'' என்று ஓர் உறுதி பண்ணிக்கொண்டார். இவ்வுறுதியைக் கேள்விப்பட்டு யோகமார்க்கத்தையே முக்கியமாய் நாடியவனும், சகல சாத்திரப் பொருட்களிலும் மிக்கத் தேர்ச்சிபெற்றவனுமான யோகாங்கன் என்ற ஓர் சிறந்த சன்னியாசியானவன் பட்டணத்திலுள்ள மற்றெல்லா ஜனங்களினும் மிகுதியாய் வெகுமதி செய்யப் பெற்றவனாகி சீக்கிரமாய் அப்பட்டணத்திற்கு வந்தான்.

இவனோ சிறந்த பூஷணமான உருத்திராக்கத்தைத் தரிப்பதே இல்லை. ஆகையால் மகா விவேகியான சுப்ரதீபர் அந்த யோகீசுவரனை ஆதரிக்கவுமில்லை; அவனுக்குப் பிக்ஷை சொல்லவுமில்லை. இப்படி வெகு நாள் சென்றதன் பின் அந்த யோகீசுவரன் மிக்கக் கோபங்கொண்டவனாகி வீடுதோறும் பிக்ஷை வாங்கும் வியாஜத்தோடு அவர் வீட்டு வாசற்படிக்கு வந்தான். அவ்வீட்டிலிருப்பவர்களெல்லாம் அவன் வந்திருப்பதை அறிந்தும் தெரியாதவர்போல அவனை ஆதரியாமல் சும்மா உள்ளே இருந்துவிட்டார்கள். பிறகு சுப்ரதீபர் தாமே வீட்டிற்கு வெளியே வந்து 'அடா! நீயேன் இங்கு வந்தாய்? உனக்கு நம் வீட்டில் பிக்ஷையில்லை; ஓடிப்போ; மற்ற வீடுகளிலெல்லாம் உனது

இச்சையின்படி பிக்ஷை வாங்கு; அடா! பிராம்மணா! நம் வீட்டில் உருத்தி ராக்கந் தரிப்பவருக்கு அன்னமிடுவதே அன்றி மற்றவர்க்கு இல்லை. உந் தனால் சகல பாவங்களையும் கொல்லவுற்ற உருத்திராக்கந் தரிக்கப்பட்டில்லை. நம் முன் நில்லாதே போவென்றான். அதற்கவ்வேதியர் உனக்குப் பிக்ஷை போடுவதே இல்லை என்றார்.

அறிவிற் சிறந்த அச்சுப்ரதீபரது வசனங்களைக் கேட்டு அவன் மிக்கக் கோபத்துடன் சில கொடூர வசனங்கள் உரைக்க, அவ்வசனத்தைக் கேட்ட அப்போது சுப்ரதீபருடைய பிள்ளைகள் வெகு கோபங் கொண்டவர்களாகிக் கெட்டமனதைக் கொண்ட அச்சன்னியாசியோடு ஒன்றும் பேசாமலே கேளீர்! வேதோத்தமர்களே! அவனுடைய தடியாலே அவனைத் தூரத்தில் தள்ளிப்போட்டார்கள். பிறகு அச்சன்னியாசி மிக்கக் கோபங்கொண்டவனா கிப் பரப்பரப்போடு அப்பட்டணத்தரசனான சாலங்கராஜனிடஞ்சென்று அவ னிடம் சகலமும் அறிவித்தான்.

பின்னர் இராஜேந்திரனான அச்சாலங்கன் அதனை ஆதியோடந்தமாய்க் கேட்டு அப்போது தன் தூதுவர்களைக்கொண்டு சுப்ரதீபரை அழைப்பித்து 'ஓ! ஐயா! உம்வீட்டிற்குப் பிக்ஷைக்காக வந்த இச்சன்னியாசியை பிக்ஷை கொடாமல் அடித்து தள்ளிவிட்டது நியாயமா? ஆ! ஆ! மேலும் உமது பிள்ளைகள் அவரைக் கொடுமையாய்த் தூஷித்திருக்கிறார்கள்'' என, இவ்வாறு அவ்வரசனது வசனத்தைக் கேட்டுச் சுப்ரதீபர் 'ஓ! இராஜேந்திரா! உருத்தி ராக்கதாரணை இன்றி சன்னியாசி ஆசிரமமே இல்லை. ஏனென்றால் எல்லாம் ஆசிரமங்களுக்கும் உருத்திராக்கதாரணமே முக்கிய அங்கமாகின்றது. மேலும் உருத்திராக்கதாரணத்தாலன்றி வெரும் ஞானத்தால் மோக்ஷமில்லை யென்று நான்கு வேதங்களும் மிக்க ஆதரவுடன் முறையிடுகின்றன. அன்றி யும் ஓ! அரசனே! எந்தனுக்கு ஓர் உறுதி உண்டு; அதனைச் சொல்லுகின் றேன். கேளீர்!

பாவமற்றவர்களான உருத்திராக்கம் பூண்டவருக்கே யான் அன்னம் போடுவேன். ஏனென்றால் ஓ! இராஜேந்திரா! அம்மானிடர் எத்தகையவ ராய் இருப்பினும் அவர் வந்தனிக்கத்தக்கவரே! ஸ்ரீமகா தேவரைப்போலவே மிகுந்த தருமாத்மாவும் எல்லோராலும் பூஜிக்கத் தக்கவருமாவர். ஆனால் மற்றவர்க்கு மேன்மையுள்ள அன்னத்தைக் கொடுப்பதே இல்லை. அவன் ஆசி ரமங்களில் என்ன சிறந்தவனாயினும் அப்பாவி பூஜிக்கத்தக்கவன் அல்ல'' என, இவ்வாறு அச்சுப்ரதீபர் வசனத்தைக் கேட்டுச் சன்னியாசி மிக்கக் கோபத் துடன் அவ்வரசன் முன்பாகப் பின்னும் "ஓ! பிராம்மணா! நமக்கு உருத்தி ராக்கந் தரிப்பதனால் ஆகவேண்டியதென்ன? நீ அவ்வுருத்திராக்கத்தைத் தரிப் பதனால் என்ன சாதிக்கின்றாய்? நாமோ வென்றால் நமது யோகத்தின் மகிமை யால் இப்போதே மிக்க வுத்தமமான தேவ வுலகத்துக்குத் துரிதமாய்ச்சென்று கற்பக விருக்ஷத்தின் மலர்களைக் கொண்டு வருவோம். உருத்திராக்கங் கட்டி யதால் உந்தனுக்கு இத்தகைய திறமை உண்டானால் அப்போது நீயுரைத்த தெல்லாம் சத்தியமே'' என்றார்.

இவ்வாறு அந்த யோகியினுடைய வசனத்தைக்கேட்டு தரணி தேவர், "கேளாய்! சன்னியாசியே! நீ உனது யோகாப்பியாசத்தினால் தேவலோகம் போய் வெரும் கற்பகத்தின் மலரைக் கொண்டு விரைவில் வருவையாகில் அப்போது நம் வீட்டில் வளர்ந்துவரும் பூனையும் தன் கழுத்தில் கட்டிய உருத்திராக்கத்தின் மகிமையால் அத்தேவ நாட்டிலுள்ள அக்கற்பக விருக்ஷத்தையே சத்தியமாய்க் கொண்டுவரலாகும்" என, இவ்வாறு அவரது வசனத்தைக்கேட்டுச் சன்னியாசி அப்போது மிக்கக் கோபாவேசங் கொண்டவனாகி ஓ! பிராம்மணா! இப்போது நீ சொல்லுகின்றபடி நடத்தி விட்டால் அது முதலாய் நீ யெந்தனால் வந்தனிக்கும்படி யாகின்றாய் என்பதிற் சந்தேகமில்லை. மேலும் அப்போது சகல கருமங்களிலும் உருத்திராக்கம் தரித்தலே மிக்க உத்தமமாகும்" என்றுரைத்து அவன் சகல ஜனங்களும் பார்த்துக் கொண்டிருக்கையில் யோக மார்க்கத்திலிருந்து கொண்டு முறைப்படி சுவாசத்தை அடக்கி தேஜஸ் உடையோனாகி ஆகாயத்திற் கிளம்பித் தேவநகர் சென்று விரைவிற் கற்பக விருக்ஷத்தின் மலரைக் கொண்டுவந்து இராஜன் எழுந்தருளி யிருக்கும் சமீபமடைந்து அத்தேவ விருக்ஷத்தின் மலரை அவ்வரசன் கைதனிற்கொடுத்தான். அப்போது அங்கிருந்த எல்லோர்களும் அவ்வற்புதத்தைக் கண்டு மிக்க ஆச்சரியங் கொண்டவரானார்கள். மேலும் அரசன் முதலிய சபையினர்களெல்லாம் அவனைத் துதித்து நின்றார்கள்.

இவ்வாறாக அந்த யோகீசுவரன் கற்பக மலர் கொண்டு வந்ததைப் பார்த்து அதன்மேல் மகா விவேகியான சுப்ரதீபன் என்ற பிராமணன் தன் வீட்டிலிருக்கும் உருத்திராக்கம் கழுத்தினிற் கட்டிய பூனைக் குட்டியைக் கொண்டு வரும்படி தன் புத்திரனை வீட்டிற்கனுப்ப, அவன் வீட்டிற்குப் போய் விரைவில் அதனை அவை நடுவிற்கொண்டு வந்தான். உடனே சுப்ரதீபர் அப்பூனைக்குட்டியைத் தம் கைதனில் எடுத்துக்கொண்டு 'ஓ! இராஜேந்திரா! உருத்திராக்கத்தின் மகிமையால் இப்பூனைக்குட்டியானது தேவ லோகத்திற்குப் போய்த் தேவ விருக்ஷத்தையே இதோ கொண்டுவரப் போகின்றது' என்று உரைத்துவிட்டு அதனை ஆகாயமார்க்கத்தி லெறிய அப்போது அங்கு மகா மங்களகரம்பொருந்திய ஓர் சிறந்த விமானம் வரலாகி, அங்கிருந்த எல்லா ஜனங்களும் பார்த்துக் கொண்டிருக்கையில் அப்பூனைக்குட்டி அவ்விமானத்தில் ஏறிக்கொண்டு விரைவிற் சுவர்க்கலோகமடைந்தது.

ஓ! பிராம்மணோத்தமர்களே! அப்போது மகா பலவானான தேவ ராஜனும் அது வருவதை அறிந்து விரைவிற் சிறந்த தனது யானையின் மீது ஏறிக்கொண்டு தன் சேனைகளோடு அதனை எதிர்கொண்டு சென்று அதன் அருகிற் சென்றவுடன் சீக்கிரமாய் யானையை விட்டிறங்கி பக்தியினால் வணக்கமுற்றவனாகி அப்பூனைக்குட்டியை யானையின் கழுத்தில் வைத்துக்கொண்டு அதன்மேல் மிக்க விவேகியான அவ்விந்திரன் அது வந்த காரியத்தை மனதினாலறிந்து கொண்டு அதனை எடுத்து முத்தமிட்டுத் தன் தலைமேல் வைத்துக்கொண்டு இருகண்களிலும் ஒத்தி அவ்விவேகியாகிய தேவேந்திரன் தனது ஆபரணங்களால் அதனை அலங்கரித்து மிகுதியாய்ப் பூசையும்

புரிந்து பின்னர் கற்பக விருக்ஷத்தை நோக்கி "ஓ! கற்பகமே! நீ மகாத்துமாவான சுப்ரதீபர் சொல்வதைக் கேட்டுக்கொண்டு அவரருகில் இருக்கவேண்டும்' என்றுரைத்து நிகரற்ற அவ்விருக்ஷத்தையும் அனுப்பி அதனோடு கூட வேதசித்தனென்ற தேவனையு மனுப்பிவிட்டு அப்பூனைக்குட்டியை முன்போல் விமானத்தின்பேரில் ஏற்றுவித்து வந்தனித்து மிக்கச் சந்தோஷகாமாய் அனுப்பினான்.

பிறகு அப்பூனைக்குட்டியும் இவ்விதமாக இந்திரனால் அனுப்பப்பட்டதன்மேல் அவ்விமானத்தில் ஏறிக்கொண்டு விரைவிற் வானமார்க்கமாய்ச் சென்று வேதசித்தன் கற்பக விருக்ஷம் இவைகளாற் சிறக்கப்பெற்றதாகி ஓர் கண நேரத்திற்குள் அச்சபையின் இடையிற் றோன்றி சுப்பரதீபர் அருகிற் சென்று தன் விமானத்தை விட்டிறங்கி அவரை மூன்றுமுறை வலம்வந்து வந்தனை வழிபாடுகளியற்றி அச்சபையின்கண் அவர் முன்னிலையில் அடைந்தது. பிறகு கேளீர்! பிராமணோத்தமர்களே! வேதசித்தனென்ற தேவனும் சுப்ரதீபரை பக்தியுடன் தோத்திரஞ்செய்து இந்திரனால் சொல்லப்பட்ட வசனங்களாகிய, "ஓ! சுவாமி! கேவலம் தேவரீருடைய தயவினாலே ஸ்ரீ சிவபிரானுக்கு நேசரான தேவரீரை எப்போதும் மனதினில் நினைத்துக்கொண்டே யான் சுவர்க்கலோகத்தை பகைஞ்ஞரின்றி ஆண்டு வருகின்றேன்" என்பதைச் சொல்லிவிட்டு அவரால் மரியாதை செய்யப்பெற்றவனாகி அத்தேவன் சுப்ரதீபருடைய அனுமதியின்பேரில் விமானத்தில் ஏறிக்கொண்டு விரைவிற் சொர்க்கலோகமடைந்தான். கேளீர்! வேதியர்களே! அப்போது கற்பக விருக்ஷம் மிகுந்த பக்தியோடு அவ்வந்தணரை மூன்றுமுறை வலம் வந்து நமஸ்கரித்து அவர் முன்னிலையில் நின்றது.

## 16-வது அத்தியாயம்.

இவைகளெல்லாவற்றையும் அரசன் கண்டு மிக்கச் சந்தோஷங்கொண்ட மனத்தனாகி விரைவில் எழுந்து அவ்வந்தணரை வந்தனித்து மிக்க வணக்கத்தோடும் பயத்தோடும் கூடியவனாய் அப்பூனையைப் பார்த்து "ஓ! பூனையே! நீ எவ்விதமாய்ச் சுவர்க்கத்திற்குப் போனாய்? அங்கு இந்திரனால் உனக்கு என்ன செய்யப்பட்டது? மேலும் அவனால் என்னவார்த்தை உரைக்கப்பட்டது? இவற்றை நீ உண்மையாய் உரைத்திடல் வேண்டும்" என, இவ்வாறு அரசன் வசனத்தைக் கேட்டவுடன் சுப்ரதீபர் ஸ்ரீ சிவபிரானை மனதில் நினைத்துக்கொண்டு "ஓ! பூனைக்குட்டியே! நீ சுவர்க்க லோகம் போனதையும், இந்திரனைப் பார்த்ததையும், நீ அவனால் பூஜிக்கப்பட்டதையும் ஆகிய எல்லா விவரங்களையும் சிவாக்கினையால் நீ உண்மையில் எடுத்துரைக்கக் கடவாய்" என்ற வசனத்தில் அதற்குப் பேசும் வல்லமையை அருள் செய்தனர்.

உருத்திராக்கங்களை ஆபரணமாய்ப்பூண்டவரான அப்பிராம்மணோத்தமர் இவ்வாறுரைத்தவுடன் அப்பூனைக்குட்டி எழுந்து அஞ்சலிகொண்டு "ஓ! இராஜேந்திரா யான் மிக்கச் சுந்தரமான தேஜசுவாய்ந்த தேவ விமானத்தில் ஏறிக்கொண்டு சுவர்க்கலோகஞ் சென்றவுடன், தேவராஜன் எந்தனைப் பார்க்க விருப்புள்ளவனாய் எதிர்கொண்டு வந்து எந்தனைக் கண்டபோது விரைவில் தன

துப் பட்டத்து யானையை விட்டிறங்கி எந்தனை பக்தியோடு கைகளால் தழுவி முத்தமிட்டு யானையின் கழுத்தினில் தூக்கி வைத்துக்கொண்டு தனதாபரணங்களால் எந்தனை அலங்கரித்துமேன்மையாய்ப் பூஜித்து பின்னர் எனது கருத்துகளைத்தெரிந்து அம்மகா புத்திசாலியானவன் மிகுந்த பக்தியோடு கற்பக விருக்ஷத்தையும் ஓர்தேவனையும் எந்தனோடு சேர்த்தனுப்பினான். அப்போது அவன் மனைவியான இந்திராணி அத்தேவ ராஜனை நோக்கி "ஓ! தேவேந்திரா! இப்பூனை எவ்வாறு பூஜிக்கத்தகுதியாகும்? ஆகையால் ஓ! சுவாமி! இதுயாரென்பதையும் எத்தேசத்திருந்து வந்திருப்பது என்பதையும் எந்தனுக்கு எடுத்துரைக்க வேண்டு"மென; இவ்வாறு அவளது வசனத்தைக் கேட்டதன்மேல் அவளை நோக்கி இந்திரன் "ஓ! கேளாய்! இந்திராணி இப்பூனையானது ஸ்ரீ உருத்திருக்குப் பூஷணமும் மிக்க மேன்மை தங்கியதும் புண்ணியமுமான உருத்திராக்கத்தைக் கட்டிக்கொண்டிருக்கின்றது.

ஓ! எனதன்பிற்குரிய மானே! பிராணிகளில் யாதாமொருவர் மகா பரிசுத்தம் பொருந்திய உருத்திராக்கத்தைத் தரிக்கின்றாரோ அவரே மகா பாக்கியவானும் சகல தேவர்களாலும் மானிடர்களாலும் பூஜிக்கத்தக்கவராகின்றார். அடி பெண்ணே! நீ உருத்திராக்கத்தின் மகிமையை அறியமாட்டாயா? அதனைப்பற்றி யாம் இங்கோர் புண்ணிய கதை யுரைக்கின்றோம்; நீ மிகுந்த அன்புடன் கேள். கேளாய் இந்திராணி! நேற்று தினம் நேர்த்தியான குகைகளைக் கொண்ட மந்தர பர்வதத்தின்கண் ஸ்ரீ பரமேசுவரனிடத்திற்கு யமதருமன் தன் தூதுவர்களோடு வந்து மிகுந்த பக்தியோடு அவரை வந்தனித்துப் பிறகு அவன் அங்கு வந்த வரலாற்றைப்பற்றி அத்தேவரால் வினவி, அருளப்பட்டதன் பிறகு அவன் "ஓ! ஐயா விஜயீபவா! சம்போ! மகா தேவா! அடியாரிடத்து அன்புள்ளவரே! பிரபஞ்சங்களைக் காப்பவரே! ஓ! மகேசுவரா! அடியேனுக்குத் தேவரீரால் தான் முன்பு இந்தப் பதவி கொடுக்கப்பட்டது. தேவரீரது அடியார்களுக்கெல்லாம் யான் பரிசுத்தமான பூஜைசெய்து வருகின்றேன்,

ஓ! சமுசாரமாகிய சமுத்திரத்திற்குத் தெப்பமாகிய பகவானே! தேவரீரிடத்துப் பராமுகமாயிருக்கிற ஜனங்களெல்லாம் துககக்கடலான நரகத்தில் வாதிக்கப்பட்டு வருந்துகின்றார்கள். தேவரீரால் அருளப்பட்டிருக்கின்ற வரையறையை எங்கு தான் மீறி நடக்கத்தகும்? ஓ! பிரபுவே! தேவரீரால் தருமமென்றும் அதருமமென்றும் இரண்டு மார்க்கங்கள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. ஓ! சங்கரா! தேவாதி தேவரான தேவரீரால் தருமத்திற்குச் சுகமும், அதர்மத்திற்குத் துக்கமும் பயன்களாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. மேலும் அதற்கு ஏதுவாகச்சொர்க்கமும் நரகமும் தேவரீராலே உண்டாக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் எனது தூதர்களால் நரகத்தில் மிகுதியாக இமிசிக்கப்படலான ஓர் மகா பாபியை, ஓ! பிரபுவே! தேவரீரது கணங்கள் வந்து பற்பல விரத்தினங்களால் விசித்திரமான ஓர் விமானத்தில் ஏற்றிக்கொண்டு எனது தூதர்களையும் அடித்துப் போட்டு அவனைக் கைலாசத்திற்குக் கொண்டுபோய் விட்டார்கள்.

ஓ! இது கஷ்டம் என்று யமன் பயத்தினால் வியாகூலமுற்ற மனதைக் கொண்டவனாகி உரைத்தவுடன் பைரவமூர்த்தியானவர் ஸ்ரீ பரமேசுவரன் முன்னிலையில் அவ்வியமனை நோக்கிக் கம்பீரவாக்குடன் 'அடா! மகா விவேகியாகிய யமா! என்ன இவனுக்கு இந்த ஜன்மத்தில் மங்களகரமான புண்ணியம் இல்லாமல் போயிற்று? அதனை நீ இப்போது ஸ்ரீ மகேசுவர சன்னிதானத்தில் உண்மையாய்ச் சொல்'' என, இவ்வாறு அப்பைரவரது வசனத்தைக் கேட்டவுடன் தருமராஜன் தன்னருகினில் நின்ற சித்திரகுப்தனைக் கண் ஜாடை காட்டி, பிறகு சித்திர குப்தனும் ஸ்ரீ பைரவ தேவரை வந்தனித்து கைகளை அஞ்சலி செய்து கொண்டு அவரை நோக்கி அவர் முன்னிலையில் அதிவிநயத்தினால் வணக்கமுற்றவனாகி ''ஓ! தேவ தேவேசனும் கருணைக் கடலுமான பைரவமூர்த்தியே! அடியேன் மீது அருள் புரிய வேண்டும். கலிங்கமென்ற தேசத்திலுள்ள வியாக்ர புரமென்ற ஓர் பெரிய பட்டணத்தில் மகா கொடியனாகிய ஜாமித்திரனென்ற இம்மகா பாவி இருந்துவந்தான். கள்ளப் புருடனுக்குப் பிறந்தவனான இப்பாதகனுடைய தாயானவள் ஓர் பெரிய அவிசாரி; கேளீர்! தேவரக்ஷகரே! இப்பாதகியானவள் கள்ளப் புருடனால் மருந்திடப்பட்டு மாண்டாள். பிறகு கொடிய விவேகமுடைய இப்பாதகன் அக்கள்ளப் புருடனால் போஷித்து வளர்க்கப்பட்டு வந்தான்.

பிறகு நாளளவில் இவனுக்கு மிகுந்த பேதமை புத்தி உண்டு பண்ணி வைக்கிற யௌவனப் பருவம் வந்தபோது, அத்துராத்துமன் காமன் கணையால் பீடிக்கப்பட்டவனாகிச் சம வயது கொண்டவர்களான தன்னைப்போன்ற பல தோழர்களுடன் நாள் தோறும் தாசிகளிடம் புணர்ந்து வந்தான். பிறகு ஓர் நாளில் அவனுக்குப் பணமில்லாமல் போனபோது ஓ! கோ! மகா பாதகனான இத்துராத்துமன் மோசடியாய்த் தன் தகப்பனைக் கொன்று போட்டான். மேலும் அவன் எப்போதும் பானஞ்செய்வோனும் இறைச்சிகளைத் தின்போனும் மிக்க வஞ்சகனுமானவன். இப்படி இருக்கையில் அவன் ஒரு நாள் திருடியதைக் கிராமத் தலையாரிகள் கண்டு அவனைப் பிடித்து அடித்து நாள்தோறும் இம்சித்து வந்து, பின்னர் கொன்று சுடுகாட்டினில் எறிந்துவிட்டார்கள்.

ஓ! சுவாமி! அப்பாதகனுக்கு இச்சென்மத்தில் யாதொரு புண்ணியமும் காணப்படவில்லை. ஓ! ஜகதீசா! அவன் இறந்து நான்கு தினங்களாகிவிட்டன. அவன் எனது தூதர்களால் மிகவும் வாதிக்கப்பட்டுக் கொண்டிருக்கையில் ஓ! மகேசுவரா! தேவரீரது தூதர்கள் அத்தூதர்களை யெல்லாம் மிகுதியாய் அடித்துப் போட்டு அத்துராத்துமனை விடுவித்துக் கைலாசத்திற்குக் கொண்டுபோய் விட்டார்கள். இத்துராத்துமனுக்குக் கொஞ்சமேனும் புண்ணிய மிருப்பதாய் எனக்குத் தெரியவில்லை'' என்று விண்ணப்பஞ் செய்து கொண்டு அச்சித்திர குப்தன் அவர் முன்னிலையில் அஞ்சலிகொண்டு நின்றான்.

அப்போது பைரவரும் அவனைப் பார்த்து மந்தகாசம் பண்ணிக்கொண்டு யமனை நோக்கி ''கேளாய்! யமா! சகல அவயவங்களும் சுந்தரமாயமை

யப்பெற்ற சக்கிரவாக ராஜன் பெண்ணானவள் நடுவினிற் உருத்திராக்கம் கோர்க்கப்பெற்ற நேர்த்தியான இரத்தின மாலையை மல்லிகைக் கொடியின் பேரில் வைத்துவிட்டுத் தனதரண்மனையில் ஸ்நானஞ் செய்து கொண்டிருக்கையில் ஓர் காக்கையானது அதனைத் தூக்கிக்கொண்டு உயரப்பறந்து ஆகாய மார்க்கமாய்ச் செல்லும்போது நேர்த்தியான அம்மாலை அறுகலாகி அப்போது அதன் மத்தியிலிருந்த மகா பரிசுத்தம் பொருந்திய உருத்திராக்கமானது ஏதோ ஓர் புண்ணிய வசத்தினால் வெட்டுண்டு கிடக்கலான இவனது தலை மீது விழுந்து அதன் இரத்தத்தில் பற்றலாகி இன்னமும் அதில் ஒட்டிக்கொண்டிருக்கிறது. அடா! அடா! இயமா அந்தப் புண்ணியத்தினால் தான் இவன் கைலாஸ பதவி யடைந்திருக்கின்றான். ஓ! கோ! உருத்திராக்கத்தின் மகிமையானது எந்தனால் உரைக்கப்பட முடியாது.

அடியார்களின் துக்கங்களைத் தொலைக்கலுற்ற உருத்திர பகவான் தான் அறிவாரோ இல்லையோ வென, இவற்றை யெல்லாம் கேட்டதன்மேல் அங்கிருந்த நந்திகேசுவரன் "ஓ! இயமா! யாதா மொரு பிராணியின் தேகத்தில் ஸ்ரீ பரமேசுவரனுக்குப் பிரீதியும் மிக்க உத்தமமுமான உருத்திராக்க மிருக்கின்றதோ அவன் கைலாச மடைவதில் என்ன ஆச்சரிய மடா? ஓ! கேளடா! இயமா! இறந்தவர்களுடைய என்பு, மயிர் முதலியவைகள் வெகுகாலம் சென்றதன் மேலாவது கங்கையில் விழுந்திடில் அவர்கள் உடனே கைலாசத்தை அடைந்தவர்களே! ஆகையால் இவனுக்குக் கைலாசப் பிராப்தி யுண்டானதில் யாதோராச்சரியமும் இல்லை அன்றோ" என, இவ்வாறு நந்திகேசுவரனுடைய வசனத்தைக் கேட்டதன்மேல் சித்திர குப்தன் இயமன் இவ்விருவர்களும் பயத்தினால் நடுக்கமுற்றவர்களாகித் தேவாதி தேவரான ஸ்ரீ முக்கண்ணரை வந்தனித்து அவரது திருவாக்கினையின்பேரில் சகல பாவங்களையும் அபகரிக்கலுற்ற ஸ்ரீ உருத்திராக்கத்தின் மகிமையை மனதில் நினைத்துக்கொண்டே தங்கள் தானத்திற்குப் புறப்பட்டார்கள்.

இவ்வாறு புறப்படுகையில் ஸ்ரீ மகேசுவரன் அவ்வியமனைக் கூப்பிட்டு "ஓ! இயமா! இப்போது முதல் நீ நமது அன்பினர்களான உருத்திராக்கதாரிகளைக் கண்டால் பயத்தோடு தூரத்தில் நின்றபடியே அவர்களை மனப்பூர்த்தியாக நமஸ்காரஞ்செய்து அவரருகில் நில்லாது ஓடிப்போக வேண்டும். மேலும் நீ இச்சிக்ஷையைத் தவறுதலின்றி உந்தன் தூதர்களுக்குக் கற்பித்து வைக்க வேண்டும். நமது உயிரினும் அதிகர்களான பஸ்ம உருத்திராக்கதாரிகளான எம தடியார்களிடத்து உந்தன் அதிகாரம் செல்லத் தகாததே! இதை இங்கு உனக்குச் சத்தியமாய்ச் சொன்னோம்" என, இவ்வாறு ஸ்ரீ சம்புவின் திருவசனத்தைக் கேட்டவுடன் அவரைத் தண்டஞ்செய்து தன் ஸ்தானத்திற்குச் சென்றுவிட்டான். ஓ! கேளாய்! இந்திராணி! நேற்றுதினம் ஸ்ரீ பரமேசுவரன் சன்னிதானத்தில் நாமிவ்வெல்லாவற்றையும் பார்த்ததின்மேல் எமக்கு உருத்திராக்கந் தரிப்பவரிடத்து மிகுந்த பக்தி விசுவாச முண்டாகிவிட்டது. கேளாய்! எம்பிரிய நாயகி! ஆகையால் தான் யாம் மிகுதியாக இப்பூனைக்குப் பூசை புரிந்தனம்; என, இவ்வாறு தேவேந்

திரனது வசனங்களைக் கேட்டு இந்திராணியும் மிக்க வாச்சரியங் கொண்டவ ளாகி கேளீர்! அரசனே! அவள் கைகளால் எந்தனைத் தழுவி யெடுத்து உச்சிமோந்து மிகுந்த பக்திபோடு கண்களில் ஒத்திக்கொண்டு அதன்மேல் எந்தனை அனுப்பலானுள் என்று பூனைக்குட்டியால் சுவர்க்கத்தில் நடந்த சங்கதிகள் உண்மையாய் அங்கு உரைக்கப்படலானதைக் கேட்டு, கேளீர்! பிராம்மணோத்தமர்களே! அவ்வரசன் மனதில் மிக வாச்சரியங்கொண் டவனுகி அச்சுப்ரதீபரிடத்தில் மிக்க பக்தியைப் பாராட்டலானுன்.

## 17-வது அத்தியாயம்.

பின்னர் அவ்வரசன் ஆத்துமஞ்ஞானம் கொண்டவனுகிச் சுப்ரதீப ரென்ற அப்பிராமணச் சிரேஷ்டரை வந்தனித்துவிட்டுப் பக்தியுடன் தரித்துக் கொள்வதற்காகத் தனக்கும் ஒருத்திராக்கந் தந்தருள வேண்டு மெனக் கேட்டு "ஓ! பிராமணோத்தமா! சரணமடைந்தவனை குற்றஞ்செய்த வெந் தனை மன்னித்தருளல் வேண்டும்; தேவரைத் தரிசனஞ் செய்த மாத்திரத் தில் யான் கிருதார்த்தனுகிவிட்டேன்; என்று அவ்வரச மன்னன் சொல்லுகை யில் அச்சன்னியாசியானவன் விரைவில் எழுந்து அப்பிராமணச் சிரேஷ்டரை மிக்க பக்தி விசுவாசத்துடன் வந்தனித்து, ஓ! பாவலேசமற்றவரும் எப்போதும் தயவினுல் நனையப்பெற்றவரும், திருமனதைக்கொண்டவருமாகிய ஸ்வாமி தேவ ரீர் கேவலம் உருத்திராக்கத்தினுல் உருத்திரரே யாகின்றீர். ஆகையால் நான் செய்த பிழையை மன்னித்தருளல் வேண்டும். ஏனென்றுல் "பிராணிகள் குற்றம் செய்திடினும் அவர்களிடத்து மகாத்துமாக்கள் கோபிப்பதில்லை" என்று துதித்துப் பிறகு அவ்விருவர்களும் அஞ்சலிகொண்டு நிற்கையில் சுப்ரதீபர் அவர்களைத் தமதருகினில் உட்காரச் செய்து ஓர் கதை சொல்லத் தொடங்கினுர்.

கேளீர்! யோகீசுவரரே! மகரமென்ற தேசத்தில் மகபுர மென்றோர் பட்டணமிருக்கின்றது. அங்கு சுகுப்தனென்று மகா விவேகியான ஒரு பிராமணன் இருந்தான். அவனுக்கு நல்ல விவேகத்தையுடைய ஐந்து பிள்ளைகள் இருந்தார்கள். அவர்களில் கடைப் பிள்ளையாகிய மகா புண் ணியவானுன சாந்திகனென்பவன் மண் விளையாட்டு ஆடிக்கொண்டிருக்கையில் ஓர் உருத்திராக்கத்தைக் கண்டெடுத்து, கேளீர்! சன்னியாசியே! அதனை எப்போதும் கழுத்தினிற் கட்டிக்கொண்டிருந்தான். கூர்மையான புத்தி யுடைய அச்சிறுவன் ஓர் பைத்தியக்காரன் போல் அவனது பெற்றோர் சகோ தரர்களுடைய வார்த்தைகளைக் கேட்பதில்லை. அவன் மிக்க ஏழையாயினும் பிச்சை ஏலாமல் தன் இச்சையின்படி இருந்தான். ஓ! சன்யாசியே! அந்த நான்கு சகோதரர்களும் பெற்றோர்களோடு கூடப் பிச்சை எடுத்து வந்து தன் தன் வயிற்றை வளர்த்து வந்தார்கள். அச்சிறுவனே அவர் ஏதாயினும் கோஞ் சம் கஞ்சி ஊற்றினுல் அதனை மட்டில் குடித்துக்கொண்டு வீட்டைவிட்டு எங் கும் போகாமலே யிருந்தான். அவன் இவ்வாருக உருத்திராக்கத்தை ஆபரண மாகக் கட்டிக்கொண்டு சிலகாலமிருந்து வந்தான். சகோதரர்களும் அவ் வாறே சொன்னசொற்கேளாத அச்சிறுவனைப் பகைத்து வந்தார்கள். இப்படி

இருக்கையில் அப்போது தவசியாகிய ஓர் கேரள தேசத்தரசன் பத்திரகாளி அம்மைக்கு வருடந்தோறும் ஓர் நரபலி கொடுத்துவந்தான்.

அப்பலிக்காக அத்தேசத்தில் வெகு பாடுபட்டும் அங்கு கிரயத்திற்கு வாங்க ஓர் மனிதனும் கிடைக்கவில்லை. பின்னர் அவ்வரசன் பழுதற்ற ஓர் நல்ல மனிதனை விலக்கு வாங்குவதற்காகத் திரண்ட திரவியத்தைக் கொடுத்து சில தூதுவர்களை மகர தேசத்திற்கு அனுப்பினான். பின் அத்தூதர்களும் அங்குள்ள பிராமணர்கள் வீடுகளெல்லாம் விசாரித்துக் கொண்டு வருகையில் இச்சிறுவன் வீட்டிற்கு வந்து சங்கதிகளைச் சொன்னார்கள். அதனைக் கேட்டு அவன் பெற்றோரும் சகோதரர்களும் அத்திரவியத்தை வாங்கிக் கொண்டு சாந்தமான மனதுடைய சாந்திகனை அவர்களுக்குக் கொடுத்து விட்டார்கள்.

பின்னர், அவனும் அவர்களுடைய அனுமதியின் பேரில் அத்தூதர்களுடன் சென்று கேரள தேசத்தரசன் பட்டணத்தில் புரோகிதன் வீட்டில் மிகுந்த சந்தோஷமுற்ற மனதைக் கொண்டவனா யிருந்து வந்தான். பின்னர், பலிகொடுக்கும் தினத்தில் அச்சாந்திகன் புரோகிதன் சொற்படி ஸ்நானஞ்செய்து ஆடை யாபரணங் தரித்துத் தேகமுழுதும் சந்தனம் பூசிக்கொண்டு மிகுந்த மனச் சந்துஷ்டியுடன் புரோகிதனோடு அரசன் மனைக்குச் சென்றான். அப்போது அசரன் அவனைக் கண்டவுடன் பலி கொடுப்பதற்காக உள்ளமதில் நிச்சயித்துக் கொண்டவனாகி அச்சிறுவனோடும், புரோகிதனோடும் விரைவிற் காளி கோயிலுக்குப் போய் அவ்வம்மையைச் சிறந்த தூப தீபங்கள் புஷ்பங்கள் பற்பல வித பக்ஷிய போஜ்யங்கள், மாமிசங்கள், இரத்தங்கள் இவைகளால் மிகுதியாய்ப் பூஜித்து விட்டு அப்பத்திரகாளியின் சன்னதியில் அச்சாந்திகனை நிற்க வைத்துத் தானும் நின்று கொண்டிருந்தான்.

பிறகு அக்காளியம்மையும் உருத்திராக்க ஆபரணத்தைத் தரிக்கலுற்ற அச்சாந்திகனைக் கண்டு பயந்தவளாகி மனதினால் அவனை வந்தனித்து விரைவில் எழுந்து மிகுந்த கோபத்தினால் அங்கிருந்த வேதியனைக் கொன்று அத்துராத்துமனுடைய உதிரத்தைக் குடித்து அதன்மேல் அவள் அச்சாந்திகனைப் பார்த்து "ஓ! வேதியர்களிற் சிறந்த மிக்க புண்ணியவந்தனான உத்தமனே! நீ உனது கண்டத்தில் மகா பரிசுத்தம் பொருந்திய உருத்திராக்கத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறபடியால் இச்சகமதில் உந்தனுக்கு நிகரொருவருமில்லை. ஓ! மிக்க சத்வகுணனும், பெரும் புண்ணியமும் அசைவற்ற சித்த நிலை கொண்டவனும், உறுதியான விரதத்தைக் கொண்டவனுமான சிறுவனே! இத்தகைய நீ, ஸாக்ஷாத் உருத்திரனும், தேவ சிரேஷ்டர்களால் பூஜிக்கலுற்றவனுமே யென்பதிற் சந்தேகமேயில்லை. ஓ! புண்ணியாத்துமனே! உனக்கு வேண்டிய வரத்தைக்கேள்; அதனை உந்தனுக்குக் கொடுக்சின்றோம்" என, இவ்வாறு பத்திரகாளியின் வசனத்தைக் கேட்டதன்மேல் சாந்திகன் அவளை நோக்கி அப்போது, ஓ! ஜகதீசுவரீ! என்மீது உமக்கு அன்பிருந்து எந்தனுக்கு நீர் வரங்கொடுப்பீரானால் உமக்கு

வருடந்தோறும் இந்த நரபலி கொள்ளுதல் வேண்டாம். மேலும் நீர் இவ்வரசனுக்கு மிக்கச் சந்தோஷமுற்ற திருவுள்ளத்துடன் வேண்டிய வரங்களை அளித்தருளல் வேண்டும்" என, இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டதன்மேல் அவனுக்கு அப்படியே வேண்டிய வரம் அளித்துவிட்டுப் பின்னும் அவ்வீசுவரி அவ்வரசனை நோக்கி, ஓ! அரசனே சிரேஷ்டமான உருத்திராக்ஷ பூஷணத்தைக்கொண்ட இச்சிறுவனை நீ என்றும் பூஜித்து வரல் வேண்டும். மேலும் நீ அவனது வார்த்தையை ஸ்ரீ உருத்திரனது வார்த்தையைப்போல் கேட்டு நடப்பது தகுதியாகும். தவிரவும் நீ உனது பெண்ணை அவனுக்குப் பாணிக்கிரகண முறைப்படி கலியாணஞ்செய்து கொடு. இப்படி நீ செய்வையாகில் உந்தனுக்குச் சகலமும் உண்டாகப்பெறும். ஓ; ராஜனே! உன் புரோகிதன் இவனைப் பலிக்காகக் கொண்டுவந்த தோஷத்தினுல் உண்மையில் உன் முன்பாகவே அவன் கொல்லப்பட்டான்.

மேலும் அவன் பிள்ளைகளும் பழிப்பற்ற பெண்டிரும் மரணமடைந்து விட்டார்கள். ஓ! தரணி வேந்தனே! மேலும் அவனது வீடும் தீப்பற்றலாயிற்று. இவனைப் பகைத்த மகா பாவிகளான இவனது பெற்றோர்களும் சகோதரர்களும் திரவியங்களெல்லாம் திருடர்களால் கொள்ளையிடப் பெற்றவர்களும், குஷ்டம் முதலிய வியாதிகளால் பீடிக்கப்பெற்றவர்களும், நாள்தோறும் பசிதாகத்தினுல் துன்பப்பட்டு ஆகாரம் இருப்பிட மற்றவர்களுமாகி, துக்கக்கடலில் ஆழ்ந்து தேசத்திற்குத் தேசம் அலைந்து கொண்டிருக்கிறார்கள். உருத்திராக்கம் கட்டிக்கொண்டிருக்கிற ஸ்ரீ மகேசுவரனை யொத்த இம்மறையவனை யாவர் பூஜிக்கின்றார்களோ அவர்கள் பாவங்கள் தொலையப் பெற்றவர்களாகிப் பார்மீது தேவன்போல் ஆனந்தம் அடைகின்றார்கள்" என, இவ்வாறு காளியம்மையின் வசனத்தைக்கேட்டு அரசன் மிகவும் பக்தி விசுவாசம் கொண்டவனாகி அவனுக்கு நேர்த்தியான தன் பெண்ணை முறைப்படி கலியாணஞ்செய்து கொடுத்து பற்பல இரத்தினங்களால் அலங்கரிக்கப்பெற்ற ஓர் அரண்மனையும் கட்டி வைத்து நாள்தோறும் அவனை ஸ்ரீமகேசுவரனைப்போல் தரிசித்துப் பூசைபுரிந்து வந்தான்.

பின்னர், அச்சாந்திகனும் ஓர் உருத்திராக்கங் கட்டியதற்குப்பலன் இதுவானுல் பல உருத்திராக்கங்கள் கட்டியதனுல் இன்னும் எவ்வளவு பலனைத் தருமோ வென, அறிந்து கழுத்து கைகள், புயங்கள், மணிக்கட்டுகள், தலை இவ்விடங்களிலெல்லாம் ஆயிரம் சங்கியைக் கதிகமாக உருத்திராக்கங்களைத் தரித்துக்கொண்டு தன் அரண்மனையில் மனையாளோடுகூடச் சந்தோஷமாய்ச் சுகித்திருந்தான். இவ்வாறு அவனது விருத்தாந்தங்களை யெல்லாம் இவன் பெற்றோர், சகோதரர்கள் கேள்வியுற்று அதன்மேல் அவர்கள் அவனைத் தங்கள் பிள்ளையென்றே நிச்சயித்துக் கொண்டு பிராமணுசாரங்களை இழந்தவர்களும், இரணத்தினுல் ஊன் நீர் வடியலுற்ற தேகத்தைக் கொண்டவர்களுமாய் விரைவிற் அத்தேசத்திற்கு வந்தார்கள். பிறகு சாந்திகன் அவர்களைக் கண்டதன்மேல் அவர்களைச் சந்தோஷத்துடன் நேர்த்தியான தனது அரண்மனைக்கு அழைத்துவந்து அவர்களுக்கு எண்ணெயிட்டு ஸ்நானஞ் செய்வித்

துச் சிறந்த வஸ்திரங்களையும் கொடுத்துக் கேளீர்! தவசியே! அவ்வெல்லோர்களுக்கும் உருத்திராக்கங்களால் அலங்காரஞ் செய்வித்தான்.

பிறகு அவர்களும் உருத்திராக்கத்தின் மகிமையால் குஷ்டம் முதலிய வியாதிகள் நீங்கப்பெற்றவர்களுமாகி நாள்தோறும் திவ்ய வஸ்திரங்களை யுடுப்பவர்களும், திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப் பெற்றவர்களுமாகி இச்சாந்திகனோடு மிகுந்த போகங்களை அனுபவித்து வந்து முடிவினில் மிகுந்த ஆனந்தங் கொண்டவர்களுமாகி ஒப்பற்ற கைலாச பதவியடைந்தார்கள். கேளீர்! மஹா விவேகியான தவசியே! இச்சாந்திகன் இதன் உண்மையை உணராது இஃது ஓர் மணியென்று தரித்தும் அதனால் அவன் அடைந்த பேற்றை யுணர்ந்தீர்களல்லவா? இப்படி யிருக்கையில் உருத்திராக்கத்தை ஸ்ரீபரமேசுவரனுடைய மிக்கச் சிறந்த ஆபரணமென்றும், சுவர்க்க மோக்ஷ பதவியைக் கொடுப்பதென்றும் நன்கறிந்தவனாகி யாவர் தமது சரீரங்களில் எப்போதுந் தரிக்கின்றார்களோ அதனால் தங்கள் பாவங்களை நீக்கப்பெற்ற மகானுபாவர்களுடைய பயனை ஸ்ரீ பரமேசுவரன், பார்வதி, விக்கினேசுவரர் இவர்களைத் தவிர எந்தப் புத்திசாலிகள் தான் அறியத்தகும்? என்று யான் சத்திமாய்ச் சொல்லுகின்றேன் என்றார்.

## 18-வது அத்தியாயம்.

பின்னர் அந்த யோகீசுவரரும் சுப்ரதீபருடைய வசனத்தைக் கேட்டு மிக்க ஆச்சரியமுற்றவராகி அப்போது ஸ்ரீ உருத்திரருக்குப் பூஷணமான உருத்திராக்கத்தைத் தரித்துக்கொண்டு பாவத்திரள்களை எரித்துவிடப் பெற்றவராகித் தமது கரும யோகத்தைவிட்டுத் தொலைத்து சிவபெருமான் அருளினாலே சீக்கிரத்தில் சிவயோகித்தன்மையை அடைந்து சிவஞானம் பெற்றதனால் மறுபிறப்பிற்கு அசாத்தியமான மோக்ஷ சாம்பிராஜ்ஜிய மடைந்தார். அப்போது முதல் அவ்வரசனும் உருத்திராக்க ஆபரணங்களால் விளங்கலுற்றவனாகி வெகு காலமளவும் எதிரில்லாதவனாய் சகல இராஜ்ஜியங்களையும் ஆண்டு சகல போகங்களையும், அனுபவித்து மானிடருக்கு உரிய சகல ஆனந்தங்களையும் கொண்டவனாகிக் கேளீர்! வேதோத்தமர்களே! பிறகு அரசாக்ஷியைப் பிள்ளைகளிடத்து ஒப்புவித்து சிவலோகமடைந்தான்,

பிறகு அச்சுப்ரதீபரும் உருத்திராக்கத்தின் மகிமையைப் புகழ்ந்துரைத்துவிட்டு மிக்கச் சந்தோஷத்துடன் தமது அகத்திற்குச்சென்று புத்திர பௌத்திரர்களுடன், சீடர்கள், சீடர்களின் சீடர்கள், பந்துவர்க்கங்கள் மனைவி இவர்களுடன் பல வருடங்களாகவும் பலவித போகங்களை அனுபவித்துப் பின்னர் தேவ ஸ்திரீகளால் அலங்கரிக்கப்பெற்ற தேவ விமானத்திலேறிக்கொண்டு தேவ துந்துபி முழக்கத்துடன் மேன்மை பொருந்திய மலர் மாரிகளுடன் முந்திச் செல்லலுற்ற தேவருடிகளாற் சூழப்பெற்றவராகி முன் இந்திரனால், அனுப்பப்பட்ட கற்பக விருக்ஷத்தையும், ஆபரணத்தையும் உஜ்ஜயினி பட்டணத்தில் விளங்கும் ஸ்ரீ மகா காளேசுவர ஸ்வாமிக்குக் காணிக்கையாகக் கொடுத்து அப்பூஜையுடன் சந்தோஷ

மாய்ச் சிவலோக பதவியடைந்து, பின்னர், ஸ்ரீ பரமேசுவரனுடைய சாயுஜ்ஜிய பதவியை அடைந்தாரென, சௌனகாதி முனிவர்கள் "ஓ! சூத முனிவரே! முந்தித் திருநீற்றின் மகிமையும், பிறகு நான்கு வேதங்களும் சம்மதிக்கின்ற உருத்திராக்கத்தின் மகிமையும் உம்மாலே எடுத்துரைக்கப் பட்டதன்றோ? ஓ! தவச்சிரேஷ்டரே! திருநீற்றைத்தரித்த வளவிலே சகல அபீஷ்டங்களும் வேண்டிய மட்டும் உண்டாகி விடும்போது உருத்திராக் கத்தை எதற்காகத் தரித்தல் வேண்டும்? ஓ! புராணப் பொருட்களை நன் குணர்ந்த சூதமுனிவரே! இத்தகைய எங்களது சந்தேகத்தைத் தெளிவிக்க வேண்டும். ஏனெனில், இச்சந்தேகத்தைத் தீர்க்கத்தக்க பண்டிதர் உம்மைத் தவிர வேறொருவருமில்லை. ஓ! தவசியே! உம்மைப்போன்ற பெரியோர்கள் சாதுக்களான கேட்போர்களுக்குச் சொல்லத்தகாதது ஒன்றுமில்லை.

இவ்வாறு அவர்களது வசனத்தைக்கேட்டுச்சிறந்த புராணிகரான சூதர், மந்தகாசமுற்ற முகமலரைக் கொண்டவராகிக் கெம்பீரமான வாக்குடன் ஓ! முனிவர்களே! பாவலேசமற்றவரான நீங்களெல்லோரும் கேளீர்! வெறும் திருநீற்றைத் தரித்துக்கொள்ளல்மாத்திரமானால், அது ஜலம், வியர்வைத் திவலை, மழை, ஸ்நானம் செய்தல், ஜனக்கூட்டத்தின் நெருக்கம் இவை முத லியவைகளால், எல்லாம் அழிக்கப்பட்டுப்போனால் பிராணிகளுக்குப் பயமுண் டாகலாகும். பூதப்பிரேதப் பிசாசப்பிரம்மரக்ஷசுகள், பாம்பு, திருடர்கள், மர்ம ஸ்தலங்களைப் பிளக்கலுற்ற புலிகள், சிங்கங்கள், சத்துருக்கள் முதலிய எல்லாம் கேளீர்! தரணி தேவர்களே! விபூதி ருத்திராக்கங்கள் அற்றிருப் பவர்களை எப்போதும் பாதிக்கலாகும்.

ஆகையால் தமக்கு நன்மையைக் கோருவோர் விபூதி யிட்டுக்கொள்வ தோடு உருத்திராக்கத்தையும் கழுத்து, காதுகள், கைகள், முதலிய விடங்களில் எப்போதும் தரித்துக் கொள்ளல்வேண்டும். ஓ! வேதியர் களே! இது விபூதியைப்போல் ஜல முதலியவைகளால் அபாயமடைவதற்கு இடமிராது. திருநீறு உருத்திராக்கங்களைத் தரித்திருப்போரை பூதப்பிரேத பிசாசங்களும் இராக்ஷதர்களும் வாதிப்பதில்லை. சர்ப்பங்களுந் தீண்டா. இவ் வுருத்திராக்கத்தைக் கயிற்றிலாவது, பொன், வெள்ளி, செம்பு, இவைகளி லாவது கோர்த்துக் கழுத்து முதலிய விடங்களில் தரித்துக்கொள்ளல் வேண் டும். இல்லாவிடின் கேளீர்! மறையோர்களே! எல்லா விதத்திலும் விபூதி இட்டுக்கொள்வதோடு பூணூற் சரட்டிலாவது ஒரு ருத்திராக்கத்தைத் தரித் துக் கொள்ளல்வேண்டும். ஆகையால் சகல முயற்சியாலும் விபூதி ருத்திராக் கங்களைப் பூஷணமாகக் கொள்வோர் சத்துருக்களிடத்தில் பயமடையாமல் நிர்ப்பயமாகவே இருப்பார்கள். ஓ! தரணித் தேவர்களே! இது விஷயத்தைப் பற்றி முன் நடந்த ஓர் சிறிய கதையைச் சொல்லுகின்றேன்.

சவிதா வென்ற தேசத்திலுள்ள இலக்ஷ்மி விலாசம் பொருந்திய கீர்த்தி யான சூரியபுரமென்ற பட்டணத்தில் இந்துசேன னென்ற பெருமை பொருந்

திய அரசன் இருந்தான். மகா பல சாலியான இவ்வரசன் தன் மாற்றானான காசளபுரமென்ற பட்டணத்தில் வாழும் இந்திய தேசத்திற்கு அதிபனான விம்மனென்ற அரசனைத் தன் சைனியங்களோடு கூடி யுத்தத்திற் சயித்துக் காட்டிற்குத் துரத்தி விட்டான். பிறகு அவ்வரசனும் சிலகாலம் அக்காட்டினில் வசித்துக்கொண்டே சகல சத்துருக்களையும் தும்சம் செய்விக்கலுற்ற ஸ்ரீ விஷ்ணுவைத் தவத்தினால் ஆராதித்துச் சத்துருக்களைச் சமுகரிக்கலுற்றதும், மகா மகிமை பொருந்தியதுமான சக்கிரத்தைப் பெற்றான். ஆனால் அப்போது பிரத்தியக்ஷமான திருமால் அச்சக்கரத்தை அருளும்போது ஓ! இராஜனே! நிகரற்ற இச்சக்கராயுதமானது உனக்கு ஐந்து தடவை மட்டில்தான் சத்துருக்களைக் கொல்லத் தக்கதாகும். அதன் பிறகு அது நம்மிடத்துவந்து சேரத் தக்கதாகுமெனத் திருவாய் மலர்ந்தருளி அற்புதமான அச்சக்கரத்தைக் கொடுத்து விட்டு உடனே அந்தர்த்தான மடைந்தனர்.

பிறகு பலவானான அவ்வரசன் அதனைப் பெற்றுக்கொண்டு ஓர் நொடி நேரத்திற்குள் அரணியத்தைவிட்டுப் புறப்பட்டுத் துரிதமதில் அச்சிந்து சேனனையும் அவனது சைனியங்களையும் வளைந்து கொண்டு யுத்தம் செய்கையில் மகா பயங்கரமான அச்சக்கிரத்தைப் பிரயோகிக்க, அச்சக்கிரமானது அவ்வரசனை மாத்திரம்விட்டு விட்டு மற்றெல்லாச் சேனைகளையும் அதஞ்செய்து திரும்பி மகாபயங்கரமாய் அவனது கையை அடைந்தது. பிறகு இந்து சேனன் ஒண்டியாய் மகா பயங்கரமான அரணியத்திற்குச் சென்று கேளீர்! தரணித் தேவர்களே! அங்கு அலைந்து கொண்டிருக்கையில் ஸ்ரீ வஸிஷ்டர், சிரேஷ்டரான கௌதமர், கௌசிகர், நாரதர் முதலிய மாமுனிவர்களை யெல்லாம் கண்டு வந்தனித்து "ஓ! ஓ! நல்ல ஞானத்தினால் நிரம்பப்பெற்ற கொடிய தவங்களைச் செய்யும் மாமுனிவர்களே! மகா புத்திசாலியான நீங்கள் அடியேனைச் சகல தேசங்களுக்கும் அதிபனான வேந்தனென்று அறியவேண்டும்.

நான் எனக்கு நிகரான சத்துருவோடு யுத்தத்தில் தோல்வியடைந்து ஏதோ மிகுந்த புண்ணியவசத்தினால் இப்போது உங்களைச்சரணமடைந்தேன். ஆகையால் எந்தனுக்கு எந்த உபாயத்தினால் வேண்டிய வெற்றிகள் கிடைக்குமோ அத்தகைய உபாயத்தை சகல நற்குணங்களால் நிரம்பப்பெற்ற நீங்கள்சொல்லியருளல்வேண்டும்." என, இவ்வாறு அவனது வசனத்தைக்கேட்டு அவ்வெல்லா இருடிசுரர்களும் அவன்வெற்றிபெறக்கூடிய மிக்க உத்தமமான உபாயத்தை ஆலோசித்து "கேளாய்! இராஜனே! நீ உனது சேனைகளோடு ஜயத்தைக் கொடுக்கலுற்ற விபூதியையும் உருத்திராக்கத்தையும் தரித்துக்கொண்டு யுத்தஞ் செய்தால் வெற்றி யுண்டாவதில் ஆக்ஷேபணையில்லை. ஆனதினால் தான் விபூதி உருத்திராக்கங்களைத் தரியாதிருந்த உனது எல்லாச் சேனைகளும் சத்துருவால் கொல்லப்படலாகி நீ ஒருவன் மட்டும் மிஞ்சினாய்" என, இவ்வாறு அவர்களது திருவசனங்களைக் கேட்டு அதன்மேல் அரசன் சந்தேகத்தினால் குழப்பமுற்ற உள்ளத்தைக் கொண்டவனாகி விநயத்தினால் வணக்கமுற்று அவ்விருடிகளை நோக்கி "ஓ! தவங்களையே தனமாய்க்கொண்ட மாமுனிவர்களே! இப்போது சத்துருவினால் விடப்பட்ட சக்கிரமானது என்ன காரணத்

தால் விபூதி உருத்திராக்கந் தரிக்கப்பெருத எந்தனை மட்டில் விலக்கிச் சகல சைனியங்களையும் கொன்றது? ஏனெனில் விபூதி உருத்திராக்கங்களைத்தரியாத சைனியங்களெல்லாம் மடியலாயின வென்று உங்களால் திருவாக்கருளப்பட்ட படியால் எந்தனை மெத்தச் சந்தேகம் வாதிக்கின்றது''என, இவ்வாறு அவனது வசனத்தை மனதிலெண்ணி, ஓர் மாமுனிவர் ''ஓ! இராஜனே உந்தனுல் ஜயத்தைக் கொடுக்கலுற்ற விபூதியும் உருத்திராக்கமும் தரிக்கப்பட்டேயிருந்தன. அந்தக் காரணத்தினுல் தான் அச்சக்கிரம் உந்தனை விட்டுப்போயிற்று என்பது நிச்சயம்'' என பின்னர் அவ்வரசன் ''ஓ! தவ சிரேஷ்டர்களே! யானும் விபூதி உருத்திராக்கங்களைத் தரியாமல் தான் உயுத்தம் செய்தேன். கஸ்தூரி சந்தனங்களைப் பூசிக்கொண்டும், முத்துமாலையை அணிந்துகொண்டும் மேலும், நீலம், இரத்தினம், முத்துமாலை முதலியவைகளால் அலங்காரஞ் செய்து கொண்டும் யான் யுத்தத்திற்குச் சென்றேன். இவ்வளவு மாத்திரந்தான் எனக்குத் தெரியும்; அப்படியிருந்தும் அச்சக்கிரம் எந்தனைவிட்டு மற்றெல்லா சைனியங்களையும் கொன்று சென்றது'' என்றான்.

இவ்வாறு அவ்வரசனது வசனத்தைக் கேட்டு அம்முனிவர்கள் உள்ள மதிற் சந்தேகங் கொண்டவர்களாகி ''ஓ! இராஜனே, நீ இப்போது இங்கு முத்துமாலையையும் இரத்தின மாலையையும் பரிசோதித்தல் வேண்டும்'' என்றும் சொல்லி அவர்கள் அவனது முத்து மாலைகளை விரைவிற் சோதித்து அதில் ஓர் உருத்திராக்க மிருப்பதைக்கண்டு பிடித்து அவனுக்குக் காட்டினுர்கள். பிறகு அரசன் அதைக் கண்டவுடன் மிக்க ஆச்சரியமுடையோனுய் பயத்தினுல் நடுக்கங்கொண்டு நின்றுன்.

அப்போது முனிவர்கள் ஓ! அரசனே! இது யாவரால் கொடுக்கப்பட்டது? எப்போதுமுதல் இதனைத்தரிக்கின்றுய்? இதனை ஆலோசித்து இப்போது எங்கள் முன்பாகச் சொல்'' என, அப்போது அரசன் ஓ! இருடீசுவரர்களே! யான் யுத்தத்திற்குப் புறப்பட்டு வரும்போது ஓர் வணிகன் வந்து இதனைக் காணிக்கையாகக் கொடுக்க யானும் யுத்தத்திற்குப் போகின்ற வேகத்தோடு தரித்துக்கொண்டு போர்க்களத்திற் பிரவேசித்தேன். அப்போது யுத்த அவசரத்தினுல் இம்முத்துமாலையானது பரிசோதிக்கப்படவில்லை'' என, இவ்வாறு அவனது வசனத்தைக்கேட்டு அவ்விருடிகளெல்லோரும் மிக்க ஆச்சரியங் கொண்டவர்களாகி ''ஓ! இராஜனே! இதன் மகிமையால் தான் போர்க்களத்தில் உனது சைனியங்கள் மாத்திரம் மடிந்து நீ உயிர் பெற்றுய் என்பதிற் சிறிதுஞ் சந்தேகமேயில்லை. நீ இதற்கு மேலும் மிக்க உத்தமமான விபூதி ருத்திராக்கங்களைத் தரித்துக்கொண்டு விபூதி உருத்திராக்கந் தரிக்கப்பெற்ற சைனியங்களோடு சூழப்பெற்றோனுகி யுத்தத்திற்குப் புறப்பட்டால் நிச்சயமாகவே வெற்றி கிடைக்கும். விபூதி உருத்திராக்கங்களைத் தவிர வெற்றி பெறுவதற்கு வேறுபாயமில்லை''யென, இவ்வாறு அவர்களது திரு வசனத்தைக்கேட்டு அவனும் அப்படியே நிச்சயித்துக்கொண்டு விபூதி ருத்திராக்கங்களைத் தரித்துக்கொண்டு யுத்தத்திற்குப் போக நிச்சயங் கொண்டவனுகிச் சிறந்த வில்லை எடுத்துக்கொண்டு தானே ஒண்டியாகப் புறப்பட்டான்.

அப்போது அவனுக்குச் சில படைகளும் ஆயுதங்களோடுவந்து சேர்ந்து கொண்டன. பின்னர் அரசன் அவர்களுக்கும் விபூதி உருத்திராக்கங் களைக் கொடுத்து மிக்கச் சன்னத்தப்பட்டவனுகித் தனது சைனியங்க ளோடு சிம்மனுடைய நகரத்தை முற்றுகை போட்டான். உடனே சிம் மனும் தன் தளங்களோடுகூடத் துரிதமாய்ப் புறப்பட்டு அட்டகாசம் பண்ணியவனுகிச் சகல சத்துருக்களையும் கண்டிக்கலுற்ற அத்தகைய அஸ்திரத்தைப் பிரயோகித்தான். உடனே அச்சக்கிரமும் மிகுந்த சப் தத்தோடு எதிரியின் தளங்களிற் சென்று அவைகள் விபூதி ருத்திராக்கதாரி களும், ருத்திர தேஜஸ்ஸைக் கொண்டவர்களுமாய் இருப்பதைக் கண்ட வுடன் மிக்க பயந்து அவைகளைப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து விட் டுக் கேளீர்! தரணித் தேவர்களே! திரும்பி அவன் கையிற் சேர்ந்துவிட்டது. பின்னர் அச்சிம்மன் அதைக்கண்டு மிகவும் பயந்தவனுகித் தோல்வி கொண்டு வனத்திற் தப் போய் அங்கு நாளளவிலே அவனது விருத்தாந்தங்களைக் கேள் விப்பட்டு அதன்மேல் விவேகியான அச்சிம்மன் கேளீர்! மறையவர்களே! வருணனைக் குறித்துத் தவஞ் செய்தான்.

பிறகு வருணன் பிரத்தியக்ஷமாகும்போது அவன் "ஓ! பிரபுவாகிய வரு ணதேவனே! நீ எனக்குப் பிரசன்னமானது உண்மையானல் யான் மழையை வேண்டும்போதெல்லாம் உடனே சீக்கிரமாய் சொரியல் வேண்டும்" என, வருணன் அப்படியே நல்லதென்று சொல்லி விட்டுத் தனதிருப்பிடஞ் சென் ருன். பின்னர் இவ்வாறு வரம்பெற்ற சிம்மன் மறுநாள் இந்துசேன இராஜ னிடஞ் சென்று அட்டகாசஞ்செய்து அவனைச் சண்டைக்கு அழைக்க, உடனே அவ்விந்து சேனனும் யுத்தத்திற்குச் சிறிதும் அஞ்சானுகி அச்சிம்ம ராஜனை எதிர்த்துக் கொண்டான். அப்போது சிம்மன் வருணனை நினைக்க, அப்போது வெயில் எரிக்கலுற்ற அப்பகல் நேரத்திலே வருணன் விரைவில் ஜல உருவமாகவே அங்குவந்து விட்டான்.

அப்போது அவ்விருதாச் சேனைகளும் மழையினல் மிகவும் நனையப்பெற் ருர்கள். சிந்துசேனன் சேனைகளில் வெரும் விபூதியை மாத்திரம் தரித்தவர் களான வீரர்களெல்லாம் அப்பெரும்மாரியால் தங்கள் விபூதி அழியப்பெற் ருர்கள். அச்சமயம் நிகரற்ற விக்கிரமத்தைக்கொண்ட ஸிம்மன் அதிபயங் கரமான சக்கிரத்தை யெடுத்து சிந்துசேனன் சேனைகளின்மீது பிரயோகிக்க, உடனே அச்சக்கிரமானது அவனுடைய பெரிய சேனைகள்மீது பிரவேசித்து உருத்திராக்கந் தரியாதவர்களாகி விபூதி அழியப் பெற்றிருந்த சேனைகளை மட் டில் துரிதத்தில் அதம்பண்ணியும், உருத்திராக்கம் பூண்டிருந்தவர்களான சேனைகளையும் அவ்வரசனையும் விட்டு விட்டும் மகா பராக்கிரமசாலியான அச் சிம்மன் கையை துரிதத்தில் அடைந்து விட்டது. அப்போது சிந்துசேன னுக்குச் சொற்பச் சேனை மட்டில் மிஞ்சலானபடியால் உருத்திராக்கபூஷணங் களைக் கொண்டவர்களான சில வீரர்களோடுகூட அவன் மகா துக்கமுற்றவ னுகி விரைவில் காட்டிற்கு ஓடிப்போய் அங்கு முன்பு கண்டவர்களான வசிட் டர் முதலிய மாமுனிவர்களைக் கண்டு வந்தனித்து "ஓ! பெரியோர்களே!

யான் உங்கள் பேச்சைக் கேட்டு விபூதி உருத்திராக்கங்களை யானும் தரித்து எனது சைனியங்களையும் தரிக்கச் செய்து கொண்டு யுத்த களத்திற்குச் சென்றேன்.

கேளீர்! தவச்சிரேஷ்டர்களே! அப்போது அவன் எனது சைனியங்கள் மீது சக்கிரத்தைப் பிரயோகிக்க உடனே அது எனது சைனியங்களிற் பிரவேசித்து எந்தனையும் மூன்று நான்கு வீரர்களையும் விலக்கி மற்றெல்லோர்களையும் அதஞ்செய்து கொன்று விட்டது.'' என்று அவ்வரசன் அம்மா முனிவர்களை நோக்கி மிகுந்த பயத்தோடு உரைத்தான். இவ்வாறு அவ்வரசன் உரைத்த வார்த்தையைக் கேட்டு அவர்கள் அதே க்ஷணத்தில் தங்கள் திருவுளத்தில் ஆலோசித்து ''ஓ! இராஜனே! யாவன் இவ்விபூதி ருத்திராக்கங்களை எப்போதும் மெய்தனில் தரிக்கின்றானோ அவன் ஒருக்காலும் சத்துருக்களின் ஆயுதங்களால் மரணமடைய மாட்டான்'' என்றார்கள்.

## 19-வது அத்தியாயம்.

இவ்வாறவர்களது வசனத்தைக் கேட்டு அரசன் பின்னும் அவர்களை நோக்கி ''ஓ! பெரியோர்களே! சில வீரர் மட்டில் விபூதி உருதிராக்கம் இரண்டனையும், மற்றவரெல்லாம் விபூதி மட்டிலும் தரித்துக்கொண்டு யுத்தத்திற்கு வந்தார்கள். பிறகு மிகுந்த மழை பெய்பலாக இருதிறச் சேனைகளும் நனையலானார்கள். அதன் பிறகு அச்சிம்மன் சத்துருக்களைக் கண்டிக்கவுற்ற அச்சக்கிரத்தைப் பிரயோகிக்க, அக்கொடிய சக்கிரத்தினால் எனது சைனியமெல்லாம் மடிந்து போயிற்று'' என இவ்வாறு அவ்வரசனது வசனத்தைக் கேட்டுக் கேளீர்! தரணித் தேவர்களே! அம்முனிவர்கள் அது விஷயத்தில் காரணத்தை மனதினால் ஆலோசித்து அவ்வரசனை நோக்கி ''கேளாய்! இராஜேந்திரா! மழையினால் மகா பரிசுத்தம் பொருந்திய திருநீறு அழிந்துபோகப் பெற்றவர்களில் உருத்திராக்கம் தரியாதிருந்தவர்கள் மாத்திரம் யுத்தத்தில் மடிந்திருக்கின்றார்கள். பிழைத்திருப்போரெல்லாம் உன்னோடுகூட விபூதி உருத்திராக்க மிரண்டனையும் தரிக்கலானவர்கள் தான். முன் விபூதி உருத்திராக்கங்களைத் தரித்தவரான அத்திரிபுராசுரர்களுக்குக் கேளாய்! பூபதியே! மகா மகிமை பொருந்தியவர்களான தேவர்களிடத்துப் பயம் ஜனிக்கவில்லை.

அப்போது பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களெல்லோரும் அபிசாரப் பிரயோகஞ் செய்ததினால் மகா பயங்கரமான பல பூதங்களை உண்டுபண்ணி விரைவிற் அவர்கள் மீது ஏவி அவை யெல்லாம் விபூதி உருத்திராக்கந் தரித்தவர்களான அவர்களைக் கண்ட மாத்திரத்தில் கேளாய்! அரசனே! மிக்கப் பயந்தவைகளாகித் துரிதமாய்த் திரும்பிப் போய்விட்டன. அதன்மேல் பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் அவர்களை விபூதி உருத்திராக்கங்களில் அசட்டை கொள்ளும்படி செய்வித்து, பிறகு அவர்களை சிவபிரானைக் கொண்டே கொல்வித்தார்கள். ஆகையால் கேளாய்! இராஜேந்திரா! நீயும் விபூதி உருத்திராக்கங்களைப் பூஷணங்களாய்க் கொண்ட உனது படைகளோடு யுத்தத்திற் பயமற்றவனாயிருந்து கொண்டு சத்துருக்களைத் துறத்தி

விடலாவாய். விபூதியோடு சிறந்த பூஷணமான உருத்திராக்கமுந் தரிக்கத் தக்கது. ஏனென்றால் வெறும் விபூதியானது நிச்சயமாய் மழை முதலியவைகளால் அழிந்து போய்விடும். ஓ! இராஜேந்திரா! உருத்திராக்கமோ மழை முதலியவற்றால் அழிவதில்லை. வெறும் விபூதியை மட்டில் தரித்தவர்களான உனது வீரர்களெல்லாம் அவர்களது விபூதி கனத்த மழையினால் அழிந்து போனபடியால் இறக்கப்பட்டார்களென்று உண்மையாய்ச் சொல்லுகின்றோம்'' என, இவ்வாறு அவர்களது வார்த்தையைக்கேட்டு அவ்வரசன் அவ்வாறே மன நிச்சயங்கொண்டவனாகி அம்முனிவரைத் துதித்துத் தான் விபூதி உருத்திராக்கங்களைத் தரித்துக்கொண்டு சைனியங்களுக்கும் விபூதி உருத்திராக்கந் தரிக்கச் செய்து அவ்வெல்லாப் படைகளுடன் நிகரற்ற பராக்கிரமங்கொண்டவனாகி யுத்தத்திற்குப் புறப்பட்டு கேளீர்! முனிவர்களே! சிங்கத்தைச் சரபமழைத்தது போல் அச்சிம்மராஜனைத் துரிதமாயழைத்தான்.

பிறகு மகிமை பொருந்தியவனும் சக்கிராயுதத்தைக் கொண்டவனுமான சிம்மன் யுத்தத்திற்குச் சென்றான். உடனே அவ்விருவருக்கும் மிக்க பயங்கரமான யுத்தம் நேரிட்டது. அப்போது சிம்மன் கலகலவென்று சப்தம் இட்டுக்கொண்டு சக்கிராயுதத்தைப் பிரயோகிக்க அச்சக்கிரம் அவ்வெல்லோர்களும் விபூதி உருத்திராக்கங்களைத் தரித்துக் கொண்டிருப்பதைக் கண்டவுடன் அச்சேனைகளை மூன்று முறை வலம் வந்து வந்தனித்து புறமுதுகிட்டுச் சென்றது. பிறகு சிம்மன் மிகுந்த கோபத்தோடு தன் தாபத்தைத் தீர்க்கலுற்ற வருணனை நினைக்க அப்போது உடனே கேளீர்! வேதோத்தமனே; அவ்விருதிறச் சேனைகளின் பேரிலும் கனத்த மழை பொழியலாகி சிந்து சேனனைத் தொடர்ந்து வந்த சேனைகளின் திருநீறெல்லாம் அழிந்து போயிற்று. அது கண்டு சிம்மன் மறுபடியும் சக்கிரத்தைப் பிரயோகிக்க உடனே அச்சக்கிரமும் அவ்வெல்லோர்களும் திருநீறழியப் பெற்றவர்களான போதிலும் சிறந்த உருத்திராக்கப் பூஷணங்களைக் கொண்டிருப்பது கண்டு மிகுந்த பயத்தோடு அப்படைகளை வந்தனித்துச் சென்றுவிட்டது.

கேளீர்! வேதோத்தமர்களே! அப்போது சிம்மன் அதைக்கண்டவுடன் மிகுந்த பயத்தால் தன் சைனியங்களோடு துரிதமாய்க் காட்டிற்கு ஓட்டம் பிடித்தான். உடனே தீரனான சிந்து சேனனும் மிகுந்த அட்டகாசஞ்செய்து அவனது நகரத்தைப் பிடித்துத் தன் தேசத்தோடு சேர்த்துக்கொண்டு அம்மகா விவேகசாலியானவன் தன் தேசத்திலுள்ள குடிகளெல்லாம் விபூதி உருத்திராக்கந் தரிக்கும்படிச் செய்து தானும் அவ்விபூதி உருத்திராக்கங்களைத் தரித்து அதன் மகிமையையே எப்போதும் ஆராய்ந்து வசித்து வந்தான். இப்படி அவ்வரசன் வெகுகாலம் தன் தேசத்துக் குடிகள், பந்துக்கள், இஷ்டர்களின் பந்துக்கள் இவ்வெல்லோருடன் ஏராளமான போகங்களை அனுபவித்துக்கொண்டிருந்து பின்னர் அவ்விமானத்தில் ஏறிக்கொண்டு நிகரற்ற கைலாசமடைந்து கேளீர்! வேதோத்தமர்களே! பின்னர் மோக்ஷத்தையும் அடைந்தான். பிறகு சிம்மராஜன் வைராக்கியத்தினால் இராகத் துவேஷங்களை யொழித்து விபூதி உருத்திராக்கங்களைத் தரித்து இல்

வாழ்க்கையின் ஆசாபாசங்களை முற்றுந் துறந்து சிலகாலம் பூமியிலிருந்து தேகத்தின் முடிவில் அடைவதற்குறிய மோக்ஷ சாம்பிராச்சியத்தை அடைந்தான்.

கேளீர்! வேதியர்களே! ஆகையால் விபூதியோடு உருத்திராக்கத்தையும் அவசியம் தரித்தல் வேண்டும். அது ஸ்ரீ ருத்திரனுக்குக் கண்ணுயிருப்பதால் உருத்திராக்கம் என்று சொல்லப்படுகின்றது. ஸ்ரீ சம்புவானவர் உருத்திராக்கம் தரிப்பவரிடத்து பூரணமான கடாக்ஷங்களை யருளுகின்றார். உருத்திராக்கந்தரிப்பவர் எல்லோரும் ஸ்ரீ ருத்திரமூர்த்தி யென்றே சொல்லப்படுவார்கள். எந்த மானிடர்கள் இவ்வுருத்திராக்க மகாத்தியத்தைக் கேட்கின்றார்களோ, படிக்கின்றார்களோ, அல்லது பிறர்களைக்கேட்பிக்கின்றார்களோ, அவர்கள் சாக்ஷாத் ருத்திரமூர்த்திகளே! மேலும் அவர்கள் மிகுந்த ஆயுசு ஆரோக்கியம், ஐசுவரியம் இவைகளையும் புத்திர பௌத்திரர்களையும் அடைந்து இங்கு இருந்துவிட்டு முடிவினில் சாயுச்சிய பதவியை அடைகின்றார்கள் என்பதிற் சந்தேகமே இல்லை.

## 20-வது அத்தியாயம்.

சூதர் கேளீர்! வேதியர்களே! விபூதி உருத்திராக்கத்தின் மகிமையைச் சொன்னேனல்லவா! இப்போது பஞ்சாக்ஷர மகா மந்திரத்தின் மகிமையைச் சாக்கிரதையாய்க் கேட்பீர்களாக! மேலும் எந்த மானிடர் பஞ்ச மகாபாதகங்களை நாசஞ் செய்பவுற்றதும் ஸ்ரீ பரப்பிரம்மத்தை உணர்த்துகின்றதுமான ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை நல்ல குருவினிடமிருந்து உபதேசம் பெற்று சுத்தமாயிருந்து கொண்டு நாள்தோறும் ஓயாமல் ஜெபிக்கின்றாரோ அவரே மகா பாக்கியவான், உலகங்களுக்கெல்லாம் மகா பரிசுத்தம் பொருந்திபவருமாகின்றார். தம்மைத் தரிசித்த மாத்திரத்தில் பிறர் பாவங்களைத் தீர்க்கவுற்ற அத்தகையவருக்கு பாவலேசமும் இல்லை. அத்தகைய மகானுபாவருக்கும் பரப்பிரம்மத்திற்கும் பேதமில்லை. இம்மகா மந்திரத்தை சபித்ததினுல் வெகுபேர் பாவங்களினின்றும் விடுபட்டு மோக்ஷ மடைந்திருக்கின்றார்கள்.

கேளீர்! தரணித்தேவர்களே! இதைப்பற்றி உங்களுக்கு ஓர்கதைசொல்லுகின்றேன். காசிநகருக்கு அதிபனான வஜ்ஜிரவாகுவென்ற ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு கல்வியிற் சிறந்தவளும் கற்புடையவளும் மகாபுண்ணியசாலியுமான கலாவதி யென்று ஓர் பெண்ணிருந்தாள். இப்படி யிருக்கையில் ஒருநாளளவில் ஸ்ரீ துருவாச முனிவர் காசிராஜன் அரண்மனைக்குவந்தார். அப்போது அவர் அப்பெண் மகா புண்ணியவதியென்று கண்டு அவளிடத்து கருணையாலவளுக்கு ஸ்ரீ மகா பஞ்சாக்ஷரத்தை உபதேசம் செய்தார். அது முதலாய் அவள் சிவபிரானிடத்து மிகுந்த பக்தியோடு எப்போதும் அப்பஞ்சாக்ஷரத்தை ஜெபம்செய்வதில் முயன்று வந்தாள். பின்னர் வச்சிரவாகு இராஜன் மிக்க புண்ணியம்பெற்ற அப்பெண்ணைப் பாண்டிய தேசத்திற்கு அதிபதியான தாசரதன் என்ற அரசனுக்குக்கொடுக்க அவன் அவளை முறைப்படி கலியாணஞ்செய்து தன் தேசத்திற்கு அழைத்துக்கொண்டு போனுன். அன்றிரவினில் தனதரண்மனையில் அவன் காமன்சரத்தினுல் வாதையுண்டாகி ஆலிங்

கனத்தில் விருப்பங்கொண்டவனுகி ஸ்ரீபஞ்ஜாக்ஷர சபத்தில் முயன்றவளும் பராபரப் பொருளிடத்து நிச்சய புத்திகொண்டவளுமான அப்பெண்ணைப் பார்த்து லீலையாய்ப் பேசினுன்.

அப்போது அவள் கேளீர்! வேதோத்தமர்களே! அவனதுஇங்கிதவார்த் தையை அறிந்துகொண்டு அவனை நோக்கி ஓ! நாதனே! உமக்குச்சகல பாவங் களையும் நாசஞ்செய்பவுற்ற பஞ்ஜாக்ஷர ஜெபமில்லை. மேலும் மது மாமி சங்களைப் புசிக்கலுற்ற உமக்குத் தகாத பதார்த்தங்கள் தள்ளுபடியில்லை. வெரும் போகத்தையே விரும்பலுற்ற உமக்கு அயல் பெண்டீரிடத்துக் காத லின்மையுமில்லை. ஆகையால் ஓ! இராஜனே! இத்தகைய அற்ப காரியங் களில் ஆசைபற்ற வென்னை நீர் இப்போது தொடுதலுங் கூடாது'' என, இவ்வாறு அவளது வசனத்தைக் கேட்டதன்மேல் அவ்வரசன் மிக்க மனத் துயருடையவனுப் " ஓ! எனது காதலீ! உனது லீலை கிடைக்குமென்று மிக்க விருப்பங்கொண்ட எனது மனமும் உடலும் உன்னுடன் கூடி சுகிக்காத நிமிஷ நேரமும் என் உயிர் உடலோடு உரையாது. ஆகலால் உந்தனுடைய ஆலிங்கனத்தை எனக்குச்சீக்கிரமாய்த்தந்து எனது உயிரைக் கொடுக்க வேண் டும்'' என்று சொல்லியும் அவள் பராமுகமாயிருப்பதை யறிந்த காமாதுரனுன வன் அவளது சரீரத்தோடு சரீரமாக ஒட்டிக் கொண்டவன்போல் அவளை பலவந்தமாய்க் கட்டிக் கொண்டான்.

அவளது தேகமானது நெருப்புப்போல் தகிக்கலாகையில் அத்தாணி வேந்தன் மிகுந்த துயரத்துடன் ஆஹா! என்று கதறிக்கொண்டு தூரத் தில் விழுந்து, பிறகு அவ்வரசன், மனைவியை நோக்கி இதென்ன வென்று வினவ, அப்போது கலாவதி ஓ! ராஜனே பாவங்களை நாசம் செய்யலுற்ற பஞ்சாக்ஷர மகா மந்திரம் உமக்கில்லாதபடியால் அதனை நல்ல குருவினிடமிருந்து உபதேசம்பெற்றே பிறகு எந்தனைத் தொடலாவீர். இல்லாவிடில் ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தில் முயன்றவளான எந்தன் தேகம் பொசுக்கிவிடு''மென இவ்வாறு அவளது வசனம்கேட்டவுடன் அரசன் உள்ள மதில் நிச்சயம் கொண்டவனுகி மறுநாள் தவங்களுக்கு இருப்பிடமும், தவ சிரேட்டருமான கர்க்க மாமுனிவரை அடைந்து ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத் தின் உபதேசத்தை அடைந்தான். ஒளியானது ஓர் தீபத்தினிடமிருந்து மற்றோர் தீபத்தை யடைவதுபோல் அம்மந்திரம் முனிவரிடமிருந்து அவ்வரச னிடஞ் சேர்ந்ததும் கேளீர்! வேதோத்தமர்களே! அவ்வரசனது பாபத்திரள் களெல்லாம் காக்கை யுருவமாய் வெளிப்பட்டு நீங்கலாகி அத்தேச ராஜனுக்கு நல்ல சித்த சுத்தி வந்துவிட்டது. பிறகு அவ்வரசன் தன் குருவின் அனுமதி யின் பேரில் தனக்குப் பிரியமான அரண்மனைக்குச் சென்று கேளீர்! முனிவர் களே! அன்றிரவு முதலாய் நாள்தோறும் தன் பெண்டீரோடு கூடி வேண்டிய வரைச் சுகித்து, பெருமை பொருந்திய பல புத்திரர்களைப் பெற்று வெகுகாலம் சுகமாய் வசித்து வந்து முடிவினில் தன் மனைவியோடு மகா பரிசுத்தமான கைலாசமடைந்து அங்கு சிலகாலம் வசித்துப் பின்னர் மோக்ஷ சாம்ராச்சியத் தை யடைந்தான்.

## 21-வது அத்தியாயம்.

சூதர் "முனிவர்களே! பாடபமென்ற தேசத்தில் மால்வியபுரமென்றோர் பெரிய பட்டணமிருந்தது. அங்கு மிக்க விவேகியான சுபுத்தனென்றோர் பிராம்மணன் இருந்தான். அவனுக்கு மற்றோர் தருமமே யெனத்தக்க தருமனென்றோர் பிள்ளையுண்டு. மேலும் அதே ஊரில் விபுலன் என்றோர் பெருமை பொருந்திய அந்தணரிருந்தார். அவருக்குப் பெற்றோர்சொற் கடவாத விரண்டு பிள்ளைகளிருந்தார்கள். அவர்களில் மற்றோர் சந்திரனே எனத் தக்க மூத்தோனுடைய பெயர் சந்திரசேனன். தருமன், சந்திரசேனன் ஆகிய ஒரே வயதுள்ள சினேகிதர்களான அவ்விரு பிராம்மண குமாரர்களும் தகுந்த காலத்தில் உபநயனஞ் செய்யப்பெற்றவர்களாகிப் பிரம்மசரிய விரதத்தை அனுஷ்டித்து வந்தார்கள்.

அவ்விருவர்களும் மகா விவேகிகளாய்க் கல்வி கற்பதிலே முயன்றவர்களாகி வித்தியானந்தர் என்ற ஓர் சன்னியாசி யிடஞ்சென்று அம்மகாத்துமருடைய சொற்படி மிகவும் பக்தி விசுவாசமுள்ளவர்களாய் அவருக்குப் பணிவிடைகள் செய்துகொண்டு நல்ல ஆசாரங்களை அனுஷ்டித்து வந்தார்கள். அச்சன்னியாசியும் அப்பக்தர்களைக்கண்டு மனதினில் மிக்க தயை கொண்டவராகி 'ஓ! சீடர்களே! பிரம்மசாரிகளான நீங்கள் இருவரும் மோக்ஷத்திற்கு முக்கிய சாதகமான சன்யாஸாசிரமத்தை எடுத்துக்கொள்ள வேண்டும்.'' என அவருரைக்கையில் மிக்க வணக்கமுற்று அவ்விருவர்களும் அவரது திருவசனத்தைக் கேட்டு அதன் மேல் தங்கள் பெற்றோரிடஞ்சென்று சங்கதிகளைத் தெளிய உரைத்தார்கள். அப்போது விபுல ரென்பவர் தனது புத்திரனது வசனத்தைக் கேட்டு அப்படியே நல்லதென்றார். பின்னர் மிக்க விவேகியான அச்சந்திரசேனனும் அவரது அனுமதி கொண்டு அச்சன்னியாசியிடஞ் சென்று அவரை வந்தனித்துத் தன் தந்தையின் அனுமதிப்படி சிறந்த நான்காவது ஆசிரமத்தைப் பெற்றவனுகி தனது ஆசாரங்களுக்குத் தக்கபடி ஒழுகுவோனும் காமக்குரோதாதிகளைத் தொலைத்தவனும், குதிரையைப் போன்று விடயங்களில் அவாவிச்செல்லும் பஞ்சேந்திரியங்களைத் தன் சுவாதீனம் அடங்கச் செய்தவனும், கிழங்கு, காய், கனி முதலியவைகளையே ஆகாரமாய்க் கொண்டவனுமாகிச்செல்வதற்கு அசாத்தியமான ஆரண்யத்திற்சென்று அங்கு தனக்கு என வேறு துணையற்றிருந்தான்.

தருமனென்பவன் தன் தந்தையிடஞ்சென்று "ஓ! தந்தாய்! சகல சாஸ்திரப் பொருட்களின் தத்துவங்களையும் அறிந்தவரான வித்தியானந்தரென்னும் தவச்சிரேஷ்டரிடம் யான் சன்யாசாசிரமம் எடுத்துக்கொள்ள வேண்டும்", என, இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்ட அவனது தந்தையாகிய சுபுத்தன் துக்கத்தினுல் கோபமுற்று அப்போது தர்மனை நோக்கி "கேளாய்! விவேகியான புத்திரனே! பெருமை பொருந்திய எந்தனது குலத்திற்கு நீ ஒரு பிள்ளை தானிருக்கின்றாய். ஆகையால் நீ சந்யாசாசிரமம் எடுத்துக் கொள்வது நியாயமில்லை. வேதியர், தேகமெல்லாம் நரையினுல் வெளுத்ததன்பேரில் மனைவியையும் பிள்ளைகளையும் விட்டு அவர்களிடத்து ஒப்புவித்துத் தாம் சன்னியா

சம் வாங்கிக்கொள்ளல் வேண்டும். இல்லாவிடின் அவன் பதிதன் ஆகின்றான் என்பதிற் சந்தேகமில்லை. ஆகையால் ஓ! புத்திரனே! நீ இப்போது சன்யாசம் எடுத்துக் கொள்வது தகுதியல்ல'' என இவ்வாறு தந்தையால் உரைக்கபட்ட வசனத்தைக் கேட்டதன் பேரில் தருமன் மிக்க துக்கமுற்றவனாகி மனதில் கவலை யடைந்திருந்தான்.

கேளிர்! வேதியர்களே! அப்போது அங்கு வருணனுக்குப் புத்திரனும், சிறந்த சன்யாசியும் மிக்க பெருமை பொருந்தியவருமான பிருகு மாமுனிவர் சகல சிடர்களோடும் அக்கிராமத்திற்கு வந்தார். அத்தவ சிரேஷ்டரைப் பார்த்து மகா விவேகியான சுபுத்தன், ஓ! சுவாமி! என் புத்திரனை இத்தருமனென்பவன் பிரம்மசரிய ஆசிரமத்தில் இருந்தபடியே சன்னியாசி ஆசிரமம் எடுத்துக்கொள்ள முயன்றதை யான் தடுக்கிறேன். தவத்தையே தனமாய்க் கொண்ட மாமுனிவரே! என் குலத்திற்கு இவனைத் தவிர வேறு புத்திரனில்லை. எனக்கு வெகு காலத்திற்குமேல் விவேகமான இவன் ஒருவன் தான் பிறந்தான், ஓ! சன்னியாசியே! தேவரீர் இவனுக்குத் தக்க விவேகத்தைப் பெறச் செய்தல்வேண்டும்' என, இவ்வாறவரது வசனத்தைக் கேட்டு அதன்மேல் கேளீர்! முனிவர்களே! தவசிகளிற் சிறந்த பிருகு முனிவர் தம் அருகினின்ற தருமனை நோக்கி ஓ! தரும! மிக்கச் சிறந்த கிரகஸ்தாசிரமத்தைத் தானடைவது சிறந்ததாகும். மற்றதெல்லாம் இவ்வாசிரமத்தைக் கொண்டே ஜீவிக்கலாகின்றபடியால் அதற்கு நிகரானது ஒன்றுமில்லை. ஆகையால் சுவர்ணாபரணங்களோடு கூடியவளும், தனது பிரவரமும் கோத்திரமுமில்லாத வம்சத்தில் பிறந்தவளுமான ஓர் கன்னியை உனக்கு உரிய வாசாரத்தின்படி நீ கலியாணஞ் செய்து கொண்டிருக்க வேண்டும். மேலும் எல்லா மேன்மையும் செய்விக்கலுற்ற தந்தை சொற்களைக் கடவாது இருத்தல் வேண்டும். "என இவ்வாறு பிருகு மாமுனிவரின் வனசத்தைக் கேட்டுத் தருமன் மறுபடியும் ஓ! சுவாமி! எனது ஒத்த வயதுடைய ஒரு சினேகிதனாகிய மகா விவேகியான சந்திரசேகரன் என்பவன் உத்தமமான நான்காவது ஆசிரமத்தை அடைந்திருக்கின்றான் ஆகையல் எல்லாவிதத்தாலும் எனக்கும் சன்னியாசி யாசிரமத்தில் ஆசை யிருக்கின்றது'என இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டவுடன் அப்போது அம்மாமுனிவர் அவனை ஒருவாறு அதட்டிவிட்டு ஓ! தருமா! நீ மிக்கச்சிறந்த கிரகஸ்தாசிரமத்தில் இருந்து கொண்டு நியமத்துடன் ஸ்ரீபஞ்சாக்ஷர மகா மந்திரத்தை உபதேசம் பெற்று ஜபம்செய்துகொண்டு நாள்தோறும் உந்தனுக்கு உரியதருமங்களைக் காப்பாற்றிவா. கேளாய்! பாவமற்ற தருமா! வெரும் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபம் செய்தால் உனக்கு சந்திரசேனனிலும் மிக்கவதிகமான பயனுண்டாகும் என்று சொல்லி அவனுக்கு ஸ்ரீ பஞ்சாக்கர மந்திரத்தை உபதேசஞ் செய்து பாணிக்கிரகண முறைப்படி அவனுக்கு விவாகத்தையும் முடித்துவைத்துப் பிறகு அத்தவசியானவர் தனதாசிரமத்திற்குப் போய்விட்டார்.

பின்னர் விவேகியாகிய தருமனும் மணம்புரிந்து கொண்டு ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தில் மிகவும் முயன்றவனாகி அம்மனைபாளுடன் கூடி வாழ்ந்து வருங்

ளில் அனேகம் பிள்ளைகளையும் பெற்று வெகுகாலம் இல்லற தருமத்தை அனுட்டிப்போனாகி மிக்கக் களிப்புடன் வாழ்ந்துவந்தான். இப்படி யிருக்கையில் ஓர்நாள் சிறந்த சன்னியாசியான சந்திரசேனன் அக்கிராமத்திற்கு வந்து தருமனைக் கண்டு வாலிப நேசத்தின் வசத்தினால் "ஓ! தருமா! சர்வதுக்க நிவர்த்தியும் பரமானந்தப்பிராப்தியுமான சன்னியாசி யாசிரமத்தை நீ எடுத்துக் கொள்ளாமல் இவ்வில்லற தருமத்தை அனுட்டிப்பதனால் நீ இதுவரை யடைந்த பிரயோஜனம் யாது? ஆ! ஆ! ஓ! விவேகியே! இப்போது இல்லறத்தில் வாசஞ்செய்கின்ற உனது ஜன்மம் வீணானதேயாம். சகல பந்தங்களும் நீங்கப் பெறுவதினால் சன்னியாசி யாசிரமத்திற்கு ஒப்பானது வேறொன்றும் இல்லை. யாமோ சிறந்த அவ்வாசிரமத்தை யடைந்து துக்கக்கடலைக் கடந்து வேண்டிய பயனைக் கைக்கொண்டுவிட்டோம். ஆகையால் இந்த வாசிரமமே மேன்மை யுற்றது. நமது தவத்தின் வன்மையால் வானுலகத்தவர்களெல்லாம் எனக்கு வசப்பட்டிருக்கிறார்கள். இந்திரன்முதலிய தேவர்களை இப்போது இங்கு வருவிக்கவும் கூடும்" என்றான்.

இவ்வாறு அவனது வசனத்தைக்கேட்டு இல்லற தருமத்தையுடையவனான அத்தருமன் அச்சந்திர சேனனை நோக்கி "ஓ! மித்திரா! இல்லற தருமத்தைக் கொண்டவனான எந்தனுக்கும் யாதொரு துக்கமுமில்லை. எனக்கும் இந்திரன் முதலிய தேவர்கள் வசப்பட்டிருக்கிறார்கள். இதில் சந்தேகமில்லை.' என, இவ்வாறு உரைத்த அத்தருமனை நோக்கி சந்திரசேனன் ஓ! தருமா! நாமிப்போது தவத்தின் வலிமையால் இந்திரனை இங்கு வருவிப்போம்" என்று சொல்லி சுவர்க்க லோகத்தில் வசிக்கின்ற இந்திரனை மனத்தினால் நினைக்க, கேளீர்! வேதியர்களே! உடனே இந்திரன் அவன் அருகில் வந்துவிட்டான். பின்னர் சந்திர சேனன் அவனைக் கண்டவுடன் விரைவில் எழுந்து அவனை வந்தனித்து பூசை புரிந்து பின்னர் அவ்விந்திரனைச் சொர்க்கத்திற்கு அனுப்பிவிட்டான். பின்னர் விவேகியான தருமனும் ஸ்ரீபஞ்சாக்கர மகா மந்திரத்தைச் செபிக்க பெருமை பொருந்திய தேவராஜன் விரைவில் அங்கு தோன்றிக் கேளீர்! வேதோத்தமர்களே! அத்தருமனைப் பிரதக்ஷணஞ் செய்தான். பிறகு அத்தருமன் அவ்விந்திரனோடு சம்பாஷித்து விடைகொடுத் தனுப்பினான்.

அது கண்டு சந்திரசேனன் மிக்க வாச்சரிய முற்று "ஓ! நேசனே! நீ சகலவுலகங்களுக்கும் பாட்டனாகிய பிரம்மனை இங்கு தருவிக்கலாம் வா" வென்று மறுபடியும் அத்தருமனை நோக்கி மிகுந்த பயமுற்றவனாகிச் சொன்னவுடன் அவனும் அப்படியே ஆகட்டும் என்று சகலர்களுக்கும் அதிபரான அப்பிரம்மனை நினைக்க, அப்படியே நினைத்த மாத்திரத்தில் உடனே பிரம்மன் அங்கு தோன்றிக் கேளீர்! முனிவர்களே! அத்தருமனைப் பிரதக்ஷிணஞ்செய்து அவனுடன் சம்பாஷித்துவிட்டுத் துரிதமாய்த் தமதிருப்பிடம் சென்றார். பின்னர் மகா விவேகியான அத்தருமன் சந்திரசேனனை நோக்கி "ஓ! சன்னியாசியே! நீரும் இப்பொழுது உமது யோகத்தின் வலிமையால் பிரம்மனை இங்கு வருவித்தல் வேண்டும்" என, இவ்வாறு அவனதுவசனத்தைக்கேட்டு கேளீர்! தவத்தையே தானமாய்க் கொண்ட முனிவர்களே! அச்சந்திர சேனன் பிரம்

மனே நினைத்தான். அவன் அவ்வாறு நினைத்தும் பிரம்மன் எப்போது வர வில்லையோ அப்போதே எல்லோர்களும் அத்தருமனை சாக்ஷாத் சிவபிரானு கவே பாவித்துப் பூசை புரிந்தார்கள்.

அது கண்டு சந்திரசேனன் பயத்தினுல் வியாகூல முற்றவனுகி அத்தரு மனை வந்தனிந்து "ஓ! புண்ணியரிற் சிறந்த நேசனே! தேவரீருக்கு இத் தகைய மகிமை எதனுல் உண்டானதென்பதை அடியேனுக்குப்பழைய பால்ய சிநேக முறைமையால் உரைத்தல்வேண்டும்" என, இவ்வாறு அவனது வசனத் தைக்கேட்டுத் தருமன் அவன் முன்னிலையில் உண்மையாய் "ஓ! தவத்தையே தனமாய்க் கொண்ட சன்யாசியே! இதெல்லாம் ஸ்ரீபஞ்சாக்கர மகா மந்திரத் தின் மகிமையே! கேளீர் பாவமற்றவரே! எல்லா விதத்திலும் சிறந்த ஸ்ரீபஞ் சாக்கர மகா மந்திரத்திற்கு நிகரான ஓர் மந்திரமு மில்லை. இதன் மகிமையை முக்கண்ணுடைய ஸ்ரீபரமேசுவரனைத் தவிர யாரறிவார்" என, இவ்வாறு அவனது வசனத்தைக்கேட்டு கேளீர்! பிராம்மணோத்தமர்களே! யோகீசுர ரான அச்சந்திரசேனன் அத்தருமனிடமிருந்து பஞ்சாக்கர மகா மந்திரத்தை உபதேசம்பெற்று அதனைத் தாமதியாது, இராப்பகலாய் ஜெபஞ்செய்து மிக்கப் புண்ணிய சொரூபியாகிய அத்தருமனேடு இப்பார்மீதில் வெகுகாலம்வரையில் இல்லறவாசையை ஒழித்தவனுய் இருந்து பின்னர் உத்தமமான சிவலோக பத வியையடைந்து அங்கு மிக்கக் களிப்புடன் அனந்த போகங்களையும் அனுப வித்து நாளளவினில் அத்தருமனேடு ஸ்ரீ சிவபிரானுடைய சாயுச்சிய பதவியை யடைந்தான்.

## 22-வது அத்தியாயம்.

ஓ! வேதியர்களே! ஸ்ரீ பஞ்சாக்கர மகா மந்திரத்தைப்பற்றி மற்ருேர் சரித்திரத்தைச் சொல்லுகின்றேன். அதனை மிக்க வன்புடன் கேளுங்கள். கௌசிகமென்ற பெரிய தேசத்தில் விக்கிரம புரமென்று ஓர் பட்டணமிருந்தது. அப்பட்டணத்தில் யாவரையும் வஞ்சித்து மோசஞ் செய்வதில் முதன்மை யான மானதனென்று ஓர் பார்ப்பானிருந்தான். அவன் மிகச் சிறந்தவரான சூரிய சருமனென்ற ஓர் பிராம்மணச் சிரேஷ்டர் மீது பகை பாராட்டியவனுகி அவரை வஞ்சனை மார்க்கத்தால் ஒழிய வேறு வகையால் வெல்ல முடியா தென்று ஆலோசித்து, அம்மானதன் அவரிடம்போய் வந்தனித்து, ஓ! சுவாமி! அடியேன் இது முதல் தங்களுக்கு ஊழியஞ் செய்வோனுகி ஓர் வேலைக்கார னுய் இருந்து வருகின்றேன். ஆகையால் தேவரீர் என்னைக் கேவலம் ஓர் சிடனுகவே அங்கீகரிக்க வேண்டும்." என, இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டு அவர் அவனை அப்படியே ஆகட்டுமென்று சொல்லி கேளீர்! தரணித் தேவர்களே! அன்று முதலாய் அவன்மீது நம்பிக்கை பாராட்டி வந்தார். சூத னுன மானதனும் தகுந்த சந்தர்ப்பத்தைப் பார்த்துக்கொண்டே வந்தான்.

பின்பொரு நாள் அப்பாதகன் ஓ! தரணித் தேவர்களே! அது காட்டை யடுத்த கிராம மாகையால் அவ்வூருக்குள் புலிவருகிறதென்று சூரிய சருமருக் குப் பயங்காட்டி "ஓ! சுவாமி! யான் இன்றிரவினில் வீட்டுக்கு வெளியே ஜாக்கிரதையாய் இருக்கின்றேன்; தேவரீர் வீட்டிற்குள்ளே தூங்காம

விருக்க வேண்டும்'' என்று சொல்லிப் பின்பு அப்பாதகன் ஓர் பசுமாட்டை வீட்டிற்கு வெளியே கொண்டு வந்து அதனுடம்பை ஓர் புலித் தோலினால் மூடிவிட்டு 'ஆ! ஓர் கொடிய புலி வந்துவிட்டது' என்றுசொல்லிக்கொண்டே வீட்டிற்குள் ஓடி அவருக்கு அறிவித்து விரைவில் ஓர் வலிய வில்லை எடுத்து அவர் கைதனிற் கொடுத்து அவரோடு வீட்டிற்குவெளியே சென்று அவருக்கு அதனைக் காட்ட சூரிய சருமனும் அதனைக் கண்டு புலியென்றே நிச்சயித்துக் கொண்டு அதன்பேரில் கூரிய ஓர் அம்பை யெய்தனர். ஆ! ஆ! கேளீர்! தரணி தேவரே! உடனே அப்பசு மாடு அவ்வம்பினால் அடிப்பட்டு இரத்தம் வடிய பூமியில் விழுந்து விரைவில் மாண்டது.

பின்னர் வஞ்சகனான அம்மான தன் அவரை அங்கு தானே நிறுத்தி விட்டு தான் ஏதோ ஓர் வேலையாய் வீட்டிற்குள் நுழைந்து அச்சூரியசருமன் மனைவி படுத்துறங்கும் மாளிகையிற்சென்று அச்சூதன் மிக்கச் சிநேகன் போல் "ஓ! அம்மா! இப்போது மிகுந்த திருடர் பயம் நேர்ந்திருக்கின்றது; ஆகையால் நீரும் இங்கு இருக்கததகாது; உம்முடைய பிள்ளையின் படுக்கை யறையிற்போய் நீர் சாக்கிரதையாய் இருக்க வேண்டும். மேலும் உமது பிள்ளையோ அவன் மனைவியோடு கூட உமது அறைக்குட் சாக்கிரதையாய் இருக்கட்டும்'' என்று சொல்லி அவளைப் பிள்ளையின் அறைக்குள்ளும், பிள்ளையை அவன் மனைவியோடு கூட சூரிய சருமன் அறைக்குள்ளும் அடைவித்தான். பின்னர் அவ்வஞ்சகன், அப்பிள்ளைக்கு "ஓ! புலவரே! யார் கூப்பிட்ட போதிலும் நீரும் உமது மனைவியும் இவ்வறைக்குள்ளே யொன்றும் பேசாமல் இருக்க வேண்டும்:'' என்று சொல்லிவிட்டு துராத்துமனாகிய அம்மகா கொடியன் சூரியசருமன் இருக்குமிடத்திற்கு வந்து "ஓ! சுவாமி! தேவரீர் வீட்டிற்குள் துராத்துமனாகிய ஓர் கள்ளப் புருடன் வந்திருக்கின்றான். அவனுடன் கூடத் தேவரீர் மனைவி கிரீடை செய்து கொண்டிருக்கின்றாள். ஓ! நேசரே இப்போது யான் அதனைப் பார்த்துத் தான் இங்கு சீக்கிரமாய் வந்தேன். ஆகையால் மகா மானியாகிய நீரதற்குத் தகுந்த தண்டனை விதித்தல் வேண்டும்'' என்று சொல்லிவிட்டு மிக்க கூர்மை பொருந்திய ஓர் கத்தியை அவர் கைதனிற் கொடுத்து அவரை உள் அழைத்துப்போனான்.

அவரும் அங்ஙனமே உண்மையென்ற நம்பிக்கையால் தம்மனைவியைக் கூப்பிட்டார். அவர் பிள்ளை தன் பெண்டீரோடு அப்போது அவர் கூப்பிட்டதைக் கேட்டும் கேளீர்! வேதியர்களே! அவனுக்கு மரணகாலம் நேரிட்டபடியால் மானதன் போதனையின்படி யொன்றும் பேசாமற் சும்மா விருந்துவிட்டான். அப்போது சூரியசருமன் வீட்டின் உச்சி மேட்டைப் பிளந்து உட்புகுந்து அவன் கள்ளப் புருடன்தானென்று நிச்சயத்துடன் கத்தியை எடுத்துக் கொண்டு கேளீர்! தரணித்தேவர்களே! தம்மகனையும், மருமகளையும் கொன்று போட்டார். பிறகு அவ்விரவு கடந்தவுடன் அவர் வெளியில் வந்தபோது காலையில் தமது பாரியானவள் பிள்ளையின் அறையிலிருந்து வருவதைக் கண்டு அவர் மிக்க வியாகூலமுற்று தமது வீட்டிற்குள் சென்று அங்கு தன் புத்திரன், மருமகள் இருவரும் கத்தி வெட்டினால் மாண்டு கிடப்பதைப் பார்த்து ஆ! ஆ! அவர்

சோகமும் மூர்ச்சையும் கொண்டவராகிப் பூமியில் விழுந்து மகா துக்கத்துடன் மகா வுத்தமமான பஞ்சாக்கர மகா மந்திரத்தை யுறக்கச் சொல்லிவிட்டு மறுபடியும் வீட்டினின்று வெளியில் வந்தவுடன் பசுமாடு தனது அம்பினால் அடிபட்டு இறந்து கிடப்பதைக் காண்கையில் துக்கத்தினால் வியாகூலமுற்றவராகி அப்போது என்றும் மகாச் சிரேட்டமான ஸ்ரீ பஞ்சாக்கர மகா மந்திரத்தை ஜெபம் பண்ணினர். பின்னர். மானதன் துரிதமாய் மற்றப் பிராம்மணரிடஞ் சென்று ஓ! பிராம்மணர்களே! நேற்றிரவில் சூரியசருமன் தன் மகனையும், மருமகளையும், ஓர் பசுவையும் மிக்கக் கோபத்தினால் கொன்று போட்டான். ஆகையால் ஓ! வித்வான்களே! மகா பாவியான துர் எண்ணங் கொண்ட இப்பிராம்மணக் கேடனை சாதியைவிட்டுத் தள்ளி இவ்வூரினின்றுந் துரத்திவிடல் வேண்டும். என, இவ்வாறு மானதனுடைய வார்த்தையைக் கேட்டதன்மேல் அவ்வூரரெல்லோரும் அதனைக் கண்டு மிகுந்த பாவத்தின் பயத்தினால் மிக்கக் கோபங்கொண்டவர்களாகி ஓ! சூரியசருமனே! மகா பாதகனான உந்தனால் என்ன காரியஞ் செய்யப்பட்டது. நீ அதிக பாவத்தைச் செய்தபடியால் இப்போது எங்கள் ஊரைவிட்டுக்காட்டிற்கு ஓடிப்போக வேண்டும். இல்லாவிடின் ஓ! கேடுகெட்ட பிராம்மணா! உந்தனுக்கு இப்போது நிச்சயமாய் தக்க ஆக்கினை நேரிடும்; என்றனர்.

இவ்வாறு அவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் சூரியசருமன் 'ஓ! வேதியர்களே! இரவினில் இச்செய்கையானது எந்தனால் அறிவோடு செய்யப்பட்டதல்ல. இது அஞ்ஞானத்திற் செய்த பாவமே யென்று சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். மேலும் யான் காலையில் இவர்கள் மரணமடைந்திருப்பதைக் கண்டு ஸ்ரீ பஞ்சாக்கர மகா மந்திரத்தைச் செபித்துவிட்டேன். ஆகையால் கேளீர்! வேதியர்களே! பாவத்தின் வாசனைகூட இப்போதெந்தனுக்கு இல்லை' என, இவ்வாறு அவரது வசனத்தைக் கேட்ட வேதியர்கள் மறுபடியும் அவரை நோக்கி யுரைத்ததாவது "ஓ! சூரிய சருமனே! உமக்குப் பாவமே இல்லாவிட்டால் அங்கு நிற்கின்ற இடபமானது சாக்ஷாத் தரும சொரூபமென்றே சொல்லப்படுகின்றபடியால் இங்கு சீக்கிரமாக ஓடி வந்து உந்தனால் போடப்படும் புல்லைத் தின்றுவிட வேண்டு'மென, இவ்வாறு அவர்களது வசனத்தைக் கேட்டு சூரிய சருமன் ஓ! வேதியர்களே! அறிவுள்ளதான இவ்விடபம் புல்லைத் தின்பதினால் பாவசோதனையாக மாட்டாது. ஆனால் ஸ்ரீ கேதாரேசுவர ஸ்வாமி அமர்ந்தருளிய மனிதரால் செய்யப்பட்டதாகிய அவ்விடபங்கள் வந்தெந்தனால் போடப்பட்ட புல்லைத் தின்பதானால் அப்போது தான் எந்தன் பாவத்திற்குத் தக்க சோதனை யாகும். இவ்வாறு அவரது வசனத்தைக் கேட்டபோது வேதியர்கள் நல்லதென்று பாவசோதனையை மிக்கப் பிரீதியுடன் பார்த்துக்கொண்டு இருந்தார்கள்.

கேளீர்! தரணித் தேவர்களே! அப்போது சூரியசருமனும் தன் தம்பிகளை அனுப்பி புற்களைத் தருவித்துக்கொண்டு அவைகளை ஸ்ரீ கேதார நாதேசுவர ஸ்வாமி சன்னதியிற் போட்டுவிட்டு அஞ்சலி கொண்டவராகி ஸ்ரீ சிவபிரானுடைய மகா மந்திரத்தை மனதினில் நினைத்துக்கொண்டே "ஸ்ரீ சம்புவி

னுடைய கோபுரத்திலும், மதிலிலும், சித்திரங்களிலும் உள்ள ஸ்ரீ சிவபிரானையே தியானஞ் செய்வதிலும், தினந்தோறும் ஸ்ரீ பராபரப் பொருள் மீதே முக்கியமாய் மனதை நாட்டியவைகளுமான சகல விருடபங்களுமாகிய அத்தகைய நீங்களெல்லாம் ஸ்ரீ பஞ்சாக்கர மகா மந்திரத்தை ஜெபம் செய்ததினுல் எந்தனுக்குக் கொலை செய்த தோடமே இல்லாதிருக்குமாயின் இப்போதே மகா பராக்ரமசாலிகளாகி இங்கு வந்து இப்புற்களைத் தின்ன வேண்டும்'' என்று சொல்லிவிட்டு மிக உத்தமமான பஞ்சாக்கர மந்திரத்தைத் துரிதமாய் ஜபம்செய்தார்.

கேளீர்! தரணித் தேவர்களே! அப்போது அவ்விடங்களிலுள்ள சகல இடபங்களும் அதனைக் கேட்டவுடன் கீழிறங்கி வந்து அப்புற்களைத் தின்று விட்டு அங்கு சாணமும் போட்டு ஓ! வேதோத்தமர்களே! அவ்வேதியர்களைக்கொண்டு அச்சூரிய சர்மனை வலஞ்சுற்றி முகர்ந்து பார்த்துத் திரும்பி ஓர் கணத்துக்குள் அவைகளின் தானங்களிற் போயிருந்துவிட்டன. அது கண்டு பிராமணர்களெல்லாம் பயத்தினுல் வியாகூலமுற்ற மனதைக்கொண்டவர்களாகி இம்மகா பாவத்தினின்றும் பரிசுத்தமாயிருக்கின்ற இம்மகாத்துமரை வந்தனித்து ஓ! மகாத்துமாவான பிராம்மணோத்தமா! தேவரீர் எங்களது அபராதத்தை மன்னித் தருளல் வேண்டும். தேவரீர் மகிமையையும், பெருமை பொருந்திய இம்மந்திரத்தின் மகிமையையும் யாரறிவார்?''. என்று அம்மகாத்துமரைத் துதிசெய்து அஞ்சலிகொண்டு நின்ருர்கள்.

அப்போது அவரது கற்புடைய பாரியானவள் மிக்க உத்தமமான ஓ! சுவாமி! ஸ்ரீ பஞ்சாக்கர ஜபத்தினுல் இப்போது இவ்விடபங்கள் புற்களைத் தின்றதல்லவா? ஆகையால் அஞ்ஞானத்தாலடிபட்ட தேவரீர் பிள்ளையையும் மருமகனையும் இப்பசுவையும் ஓ! பிரபுவே சீக்கிரமாய் உயிர்ப்பித்து எழுந்திருக்கச் செய்யவேண்டும்'' என, இவ்வாறு அவளது வசனத்தைக் கேட்டதன்மேல் அப்பிராம்மணரெல்லோரும் அங்ஙனமே அவரை வேண்டிக்கொண்டு ஓ! பிராம்மணோத்தமா! இவர்களைத் திரும்பப் பிழைப்பு மூட்டுவதில் தேவரீருக்கு என்ன பாரம்? ஓ! பாவலேசமற்ற வேதியரே! தேவரீர் மந்திரத்தின் மகிமையினுல் இவர்களைத் திரும்பவும் பிழைப்பு மூட்டல்வேண்டும்' என, இவ்வாறு அவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் மறுபடியும் அத்தரணித் தேவர் ''ஓ! ஓ! ஸ்ரீ பஞ்சாக்கர மகா மந்திரமானது பஞ்ச மகா பாதகங்களை நாசஞ் செய்யவுற்றது என்பதும் அதனை ஜபிப்போர்க்கு மறுபிறப்பில்லையென்பதும் நிச்சயமேயானுல் இப்போது நீங்கள் தூக்கத்தினின்று எழுந்திருப்பதுபோல் சீக்கிரமாய் எழுந்துவிடக்கடவீர்கள்'' என்று உரைத்துக் கைகளை அஞ்சலிகொண்டு சிரேட்டமான அம்மகா மந்திரத்தை ஜபம் பண்ணினர்.

கேளீர்! முனிவர்களே! அப்போது உடனே மகனும், மருமகளும் அப்பசுவும் எழுந்துவிடலாகையில் எல்லாப் பிராம்மணர்களும் அவ்வற்புதத்தைக் கண்டதன்மேல் அத்தரணித்தேவரை சாக்ஷாத் சிவபெருமானென்றே நிச்சயித்துக்கொண்டு முழுமனதுடன் நமஸ்காரஞ்செய்து அவரது ஆக்கினையின்பேரில் அவ்வேதியரெல்லாம் தத்தம் இடங்களுக்குச் சென்றுவிட்டார்கள்.

பின்னர் சூரிய சருமன் ஸ்ரீ பஞ்சாக்கர மகா மந்திரத்தைத் தியானஞ் செய்துகொண்டு வெகுகாலமளவும் பேரானந்தத்துடன்வேண்டியபடி போகங்களை அநுபவித்துவிட்டுப் பிறகு பெண்டீர், பிள்ளை, பந்துவர்க்கங்கள், உற்றார்கள் இவர்களோடுகூடத் தேவருஷிகணங்களால் விளங்கப்பெற்ற மகா மங்களகரமான ஓர் விமானத்தில் மிக்கவிருப்பத்துடன் ஏறிக்கொண்டு கேளீர்! முனிவர்களே! தேவ துந்துபி வாத்தியங்களுடனும், வருஷிக்கலுற்ற மலர் மாரிகளுடனும் சிவலோகமடைந்து அங்கு ருத்திர கணங்களோடு சந்தோஷமாய் வெகுகால மிருந்து விட்டுக் கேளீர்! வேதோத்தமர்களே! ஸ்ரீ சம்புவாகிய பரப்பிரம்மத்தின் சாயுச்சிய பதவியை அடையலானர்.

இவருக்கு விரோதியான வஞ்சகமளிக்கலுற்ற அப்பாதகனே மிக்கப் பயத்தினல் விரைவில் அத்தேசத்தைவிட்டு மறு தேசத்திற்கு ஓடிப்போய் அங்கு என்றும் ஆகாரம் அற்றவனும் பெண்டீரில்லாதவனுமாய் மிகுந்த தாபத்தோடு கூடியவனுகி வெகுகாலமளவும் மிக்க வியாதியினுல் அடிபட்டவனும், பூச்சி வைத்து ஊன்நீர் வடியப்பெற்ற தேகத்தைக் கொண்டவனுமாயிருந்து பிறகு மடிந்தான். அப்பாவியானவன் இப்போதும் நரகத்தில் பாதையதிகமாகப் படுகிருன். ஆகையால் எந்த மானிடர்கள் ஸ்ரீ பஞ்சாக்கர செபத்தைச் செய்யும் மானிடரைப் பழிக்கின்றார்களோ அவர்கள் மகா பாதகங்களோடு கூடியவர்களாகி நிச்சயமாய் நரகத்தை அடைவார்கள். ஆனல் எவர்கள் ஸ்ரீ பஞ்சாக்கர மகா மந்திரத்தை செபிப்போருக்கு மித்திரராகவும் இருக்கின்றார்களோ அவர்கள் மிக்கப் புண்ணிய வசத்தினுல் அதிக சந்தோஷத்துடன் மிக்க வுத்தமமான சிவலோகத்தை அடைவார்கள். ஆகையால் கேளீர்! முனிவர்களே! எல்லோர்களும் பஞ்சமகா பாதகங்களை நாசஞ்செய்கின்ற ஸ்ரீ பஞ்சாக்கர மகா மந்திரத்தை நாள்தோறும் மகா முயற்சியுடன் ஜெபஞ்செய்ய வேண்டும்.

## 23-வது அத்தியாயம்.

ஓ! தரணித்தேவர்களே! ஸ்ரீபஞ்சாக்கரத்தின் மகிமையை எடுத்துரைத்தேனல்லவா? இப்போது ஸ்ரீசிவபிரானுடைய திருநாமங்களைக் கவனமாய்க் கேளுங்கள். சிவன், பசுபதி, சம்பு, சங்கரன், சந்திரசேகரன், மிருத்தியுஞ்சயன், விருபாக்ஷன் நீலகண்டன், மகேசுவரன், பவன், பர்க்கன், மகாதேவன், ஹரன், உருத்திரன், உமாபதி, இவ்வாறு முதலிய சிறந்த திருநாமங்கள் ஸ்ரீ சதாசிவனுக்கிருக்கின்றன. இவற்றில் ஒன்றல்லது அனேகம் திருநாமங்களை எவன் எப்போதும் ஜெபிக்கின்றானே அவனே சகலைசுவரிய முடையவனும் புண்ணியாத்துமாவும், சகல தேவர்களாலும் வந்தனிக்கப் படுவோனுமாகிச் சகல போகங்களையும் அநுபவித்து அந்தரத்தில் கைலாசமடைந்து கேளீர்! தரணித் தேவர்களே! அங்கு சிலகாலமிருந்துவிட்டுப் பிறகு சிறந்த பரப்பிரம்மத்தின் சாயுச்சியத்தை அடைகின்றான் என்பதை உங்களுக்குச் சத்தியமாய்க் கூறுகின்றேன். மேலும் ஸ்ரீசிவபிரானது திருநாமங்கள் மகா பரிசுத்தமுள்ளவை என்பதை அறிந்து எவர்கள் உச்சரிக்கின்றார்களோ கேளீர்! வேதோத்தமர்களே! அவர்கள் சிவபதமடைந்து மேன்மைபொருந்திய ஸ்ரீசிவ

பிரானது சாயுச்சியபதவியைப் பெறுகின்றார்களென்பதில் ஆச்சரியமே இல்லை என்பது நிச்சயமே.

ஏனென்றால் அனேகம் பெயர்கள் ஸ்ரீசம்புவின் திருநாமங்களைக் கேவலம் அஞ்ஞானத்தினால் உச்சரித்த மாத்திரத்தில் சிவலோக மடைந்திருக்கிறார்கள். அவர்களிற் சிலரை இப்போது உங்களுக்கு எடுத்துக் கூறுகின்றேன்.

கௌதமம் என்ற தேசத்தில் கந்துகபுர மென்று ஓர் பட்டணமிருக்கின்றது. அங்கு பாவமற்றவனான வியாசனென்றோர் வேதியனிருந்தான். அவனுக்குச் சௌரிய முடையவனும், பாவத்தொழிற்களைச் செய்பவனும், மத்திய பானஞ்செய்வோனும், மகா பாபியும், இரைச்சிகளைத் தின்போனும், பணத்தினது ஆசையால் இரைச்சிகள், முதலியவைகளை வியாபாரஞ் செய்வோனும், மகா பாதகமான கெட்ட நினைப்புடையவனுமான ஓர் பிள்ளை இருந்தான். அவன் பிராமணர்கட்கு உரிய ஒழுக்கங்களை யொழித்து கெட்ட நடைகளை நாடியே வசித்துவந்தான். அக்கொடியோன் இவ்வாறு அனேக காலமளவும் இருந்து வருகையில் கேளீர்! முனிவர்களே! அவனுக்கு விரைவினில் அந்திய காலம் நேரிட்டுவிட்டது. அப்போது அவன் பிள்ளைகள் அவன் படுத்திருக்கும் அறைக்குட் புகுந்து அவனை "ஓ அப்பா! நமக்கு யாரென்ன கொடுக்க வேண்டும்? அல்லது நாம் யாருக்கு என்ன கொடுக்க வேண்டும்? மேலும் நீர் யாருக்குக் கடன் கொடுத்திருக்கின்றீர்? யாவரிடத்திருந்து கடன் வாங்கியிருக்கின்றீர்?'' என, இவ்வாறு அவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் அவன் மாமிச வியாபாரத்தின் ஆதாயஞ் செலவைச்சொல்லி பிறகு கள்ளைக் கடன் கொடுத்திருக்கும் விவரத்தைச் சொல்லுகையில் ஓர் பஞ்சமனுக்குக் குறுணி கள் கடன் கொடுத்திருப்பதாய்ச் சொன்னவுடன் பிராணன் நீங்குகையில் அப்போது கேளீர்! வேதோத்தமர்களே! மகா பயங்கரர்களான யமதூதர்கள் அவனைக் கட்டிக்கொண்டு போவதற்காகத் துரிதமாய் வந்தபோது சிவகணங்கள் வந்து தங்கள் ஆயுதங்களால் அவர்களை அடித்துத் துரத்திவிட்டார்கள். பிறகு அத்தூதர்களெல்லாம் விரைவில் கூற்றுவனிடஞ் சென்று சங்கதிகளை யுரைத்தவுடன் அவன் தன் சேனைகளாற் சூழப்பெற்றோனாகி விரைவிற் சென்று சிவகணங்கள் அருகிற் சேர்ந்தான். அப்போது சிவதூதர்கள் அவ்வாறு வரலுற்ற மகா கொரேமான அக்கூற்றுவனைக் கண்டதும் அவனது சேனைகளை அடித்துத் துரத்திவிட்டு அவனையும் அவன் கைப்பாசக் கயிற்றினால் கட்டி அவன் யமனுடைய முதன்மையான வேலைக்காரன் என்பதை அறிந்து அவனை ஸ்ரீ கைலாச பருவதத்தின் கீழாகவுள்ள ஓர் குகைக்குத் துரிதமாய்க்கொண்டு போய்விட்டார்கள். அப்போது யமனே அவர்களால் காணப்பட்டு இருந்தால் அவன் கொல்லப்பட்டே இருப்பான் என்பதிற் சந்தேகமில்லை.

கேளீர்! முனிவர்களே! ஆனால் அவர்கள் அக்காலனை ஓர்பிரதான வேலைக்காரன் என்றறிந்ததால் தான் அவனுடைய உயிரை வைத்தார்கள். அவர்கள் அவனைத் துரிதமாய் ஓர் மரத்தில் கட்டிவைத்து அவனுக்கு ஓர் காவலையும் எற்படுத்திவிட்டுப் பிறகு அம்மகா பலவான்கள் பராக்கிரம சாலியான

அவ்வேதியனைச் சிவலோகத்திற்குக் கொண்டுபோய் அங்கு ஸ்ரீ மகா தேவன் சன்னதியில் நிறுத்தி ஸ்ரீ மகேசுவரன் ஆக்கினையின்பேரில் தங்கள் இருப்பிடத்திற்குச் சென்றார்கள். பிறகு அவ்வேதியனும் ஸ்ரீ மகா தேவனைச் சேவித்ததன்மேல் சாரூப்பிய பதவியை அடைந்து அங்கிருந்தான். அப்போது யமன் மேருகிரியின் கண் அஜோவதியென்று பெயர்போன நகரத்தில் விளங்கிய ஸ்ரீ மகா தேவனைச் சேவித்து வந்ததன்மேல் தூதர்களின் முகமாய்க் காலனுடைய சங்கதிகளைக் கேட்டு மிகுந்த துக்கத்தினால் விரைவிற் கைலாசத்திற்குப் போய்ச் சங்கதிகளை ஸ்ரீ நந்திகேசுவரனிடம் அறிவித்தான். அப்போது நந்திகேசுவரர் மிகுந்த பயமடைந்திருக்கிற யமனை நோக்கி "ஓ! யமா! அப்புண்ணியன் உயிர் நீங்கும்போது மகா பரிசுத்தமான ஸ்ரீ மகேசுவரனது திருநாமத்தை உச்சரித்தபடியால் அம்மகா புண்ணியத்தினால் தான் சிவ சாரூப்பியத்தை அடைந்திருக்கின்றான் என்பதில் நீ சந்தேகிக்க வேண்டியதில்லை.

கேளாய்! இயமா! எந்த மகாத்துமர்கள் ஞானத்துடனே அல்லது அஞ்ஞானத்துடனே பிராணனை விடும்சமயத்தில் பாவங்களை அபகரிக்கலுற்ற ஸ்ரீ சிவபிரானது திருநாமங்களை உச்சரிக்கின்றார்களோ அவர்களைக் குறித்து உந்தன் ஆக்கினை அவர்களிடஞ் செல்லத்தகாது என்றே ஸ்ரீ சருவேசுவரனுடைய திருவாக்கினை அல்லவா? அடா! இயமா! அனுபோகப்படாத விஷயத்திற் பிராணிகளுக்குச் சந்தேகஞ் ஜனிப்பது சரியே! திருநாமங்களை உச்சரிப்பதின் மகிமையைப்பற்றி நீ முன்பு அனுபோக மடைந்திருக்கின்றாயல்லவா? அதனை இப்போது நீ மறந்துவிட்டாயோ? அதை மறுபடியும் நினைத்துப் பார்த்துக்கொள். முன்பு மகா பாவியான ஓர் வேடத் தலைவன் மரண மடைந்தபோது எப்போதும் தருமமார்க்கத்திலே இருக்கலுற்ற நீ சித்திர குப்தனை அழைத்து அவன் செய்த தருமா தருமங்களை விசாரித்தாயல்லவா? அதற்குச் சித்திரகுப்தன் நன்றாய் ஆலோசித்து "ஓ! தருமராஜனே! ஜீவர்களைக் கொலை செய்வோனான இப்பாதகனுக்குத் தருமத்தில் ஓர் அணுவுமில்லை. கெட்ட ஒழுக்கமுடைய இவ்வேடன் பணத்தின் பேராசையால் நாள்தோறும் காலையில் எழுந்தவுடன் காட்டிற்குச் சென்று சிலர்களைக் கொன்றும், சிலர்களைக் கட்டியும் மற்றவர்களை அடித்தும் நாள்தோறும் பொருள்களைப் பறித்துக் கொண்டு போவான்.

மேலும் அவன் பல வேடர்களால் சூழப்பட்டு மிக்கக் கோபங்கொண்டவனாய் "ஆ! அடா! அவனைக் கட்டிக்கொண்டு வந்து கச்சைகளால் மிகவும் துன்புற வடித்துக் கத்தியால் அவனை இங்கு கொன்று போடென்று கொடுமையாய் உரைப்பான். இதன்றி இப்பாதகன் மத்திய பானஞ் செய்வோனும் இரைச்சிகளைத் தின்போனுமாகி மதத்தினால் மிகவும் கர்வங்கொண்டிருந்தான். இங்கு நானதிகம் சொல்வதிற் பயனில்லை. இத்துராத்துமனுக்குப் புண்ணியமே கிடையாது. ஆகையால் தேவரீர் தூதர்களைக் கொண்டு சீக்கிரத்தில் இவனுக்குச் சிக்ஷை செய்ய வேண்டும். இதன்றி ஓ! தருமராஜனே! எப்போதும் எல்லோர்களையும் கொல்வோனான இப்பாத

கன் உயிர் வெளிப்படும்போது பிழைக்கும் வழியைக் கேட்டுக்கொண்டு தன் பிள்ளைகளுக்கு அடித்து, பறித்து, கொன்றுவிடு என்று புத்தி சொல்லிவிட்டுத் தான் மரணமடைந்தான்.'' என்று சித்திரகுப்தனுரைத்த வசனத்தைக் கேட்டதன்மேல் கேளாய்! இயமா! நீ யோசித்துக்கொண்டு ''ஓ! மகா புத்திசாலியான சித்திரகுப்தா! புண்ணிய விசேடத்தினல் ஸ்ரீ சம்புவினுடைய சாரூப்பிய பதவிக்குப் பாத்திரனுகிய இம்மானிடனைப்பற்றி நமக்கதிகாரமில்லை. என்று சொல்லி அடா! அடா! துராத்துமர்களான தூதர்களே! இப்போது இவனைவிட்டு விடுங்கள். இப்புண்ணியாத்துமன் எப்போதும் ஸ்ரீசம்புவென்ற பாவனையுடனே எந்தனுல் வந்தனிக்கத் தக்கவன். ஏனென்றுல் இவன் பிராணனை விடுங்காலத்தில் ''பிரஹர, ஆஹரா, ஸம்ஹார''வென்று சொன்னதில் ஸ்ரீ மகேசுவரனுடைய திருநாமமாகிய 'ஹர'வென்று அம்மொழி மூன்றுமுறை அவனுல் உச்சரிக்கப்பட்டவுடன் அவன் மரணமடைந்திருக்கிருன்'' என்று சொல்லி விட்டுக் கேளாய்! இயமா! நீ மிகுந்த பயங்கொண்டவனுகி அப்போது அவனை வணங்கினுய்.

ஆகையால் நீ இங்கு திருநாமங்களை நினைத்தலின் மகிமையை நினைத்துப் பார்த்துத் தவறுதலின்றி ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். பின்னர் சிவகணங்கள் வந்து அவ்வேடனைச் சிறந்த விமானத்தில் ஏற்றிக்கொண்டு ஸ்ரீ கைலையங்கிரிக்குக் கொண்டுபோய் ஸ்ரீ மகா தேவன் சந்நிதியில் அவனை நிறுத்திவிட்டார்கள். 'ஓ! இயமா! உனது தூதர்களோ முந்தியே ஓடிவிட்டார்கள்'' என, இவ்வாறு அந்நந்திகேசுவரனுடைய வசனத்தைக் கேட்டதன்மேல் அத்தருமாாஜன் ''ஓ! சுவாமி! யான் அப்போது அங்கு இருக்கவில்லை. ஈசுவரனைச் சேவிப்பதற்காகப் போயிருந்தேன். ஓ! பிரபுவே! புதிதாய் அதிகாரத்தில் நியமிக்கப்பட்டவனுன இக்காலன் பரமாத்துமாவாகிய ஸ்ரீ சங்கரனுடைய திருநாமங்களை உச்சரித்தலின் மகிமை இத்தகையதென அறியவில்லை. ஆகையால் ஓ! பகவானே! தேவரீர்! கணங்களால் வாதிக்கப்படலாகின்ற காலனை இரக்ஷித்தல் வேண்டும்'' என்றுன்.

இவ்வாறு அவ்வியமனது வசனத்தைக் கேட்டு ஸ்ரீ நந்திதேவர் அவனை நோக்கி ''கேளாய்! இயமா! இப்போது மகா காளருடைய கணங்கள் காலனைக் கட்டிக்கொண்டு போயிருக்கிருர்கள். ஆகையால் நீ அவரிடத்திற்குப் போய் அவரை வந்தனிந்து நமது உத்திரவையும் அவருக்குத் தெரியப்படுத்தி நீ காலனைச் சீக்கிரமாய் மீட்டுக்கொள். 'என்று திருவாக்கருளி இயமனை அனுப்பினுர். பிறகு அவனும் அப்படியே பாக்கியமென்று புறப்பட்டுக் கணுதிபராகிய மகா காளரிடம் சென்று மிகுந்த பயத்தோடு அவரை சாஷ்டாங்க தெண்டனிட்டுக் காலனை விடுவித்துக் கொள்வதற்காகச் சகல சங்கதிகளையும் தெரிவித்துப் பிறகு கணங்களுக்குத் தலைவரான ஸ்ரீ நந்திகேசுவரனுடைய வசனத்தையும் கூறினுன். அதுகேட்டு மகா காளர் அவ்வியமனைக் கோபித்துக்கொண்டு ''அடா! கெட்ட புத்தியுடைய இயமா! நீ இப்போது முன் நடந்த சங்கதிகளை மறந்து விட்டாயா''வென இதுவரை அவரது திருவசனங்களைக் கேட்டு இயமன் ''ஓ! பிரபுவாகிய கணநாயகரே! அடியேன

முந்திய விருத்தாந்தங்களை மறக்கவில்லை. அதனை இப்போது மனதில் நினைத்துக்கொண்டே இருக்கின்றேன்.'' என்று கேளீர்! வேதோத்தமர்களே! அவ்வியமன் மிக்க பயத்தோடு தெரிவித்துக் கொண்டான்.

## 24-வது அத்தியாயம்.

சௌனகாதி முனிவர்கள் "ஓ! தவத்தையே தனமாய்க் கொண்ட சூத முனிவரே! மகா காளரால் வினவப்பட்டதற்கு இயமன் அதனை மறக்கவில்லையென்று சொன்ன பூர்வ விருத்தாந்தம் இன்னதென்பதை எங்களுக்கு எடுத்துக் கூறல் வேண்டும்'' என, சூதர் கேளீர்! முனிவர்களே! சௌராஷ்டிரமென்ற தேசத்தில் தீவ்ரதரனென்றோர் மிக்கப்பணக்காரனான ஓர் பிராமணன் இருந்தான். அவனுக்குக் கௌசிகனென்றோர் மிகுந்த துஷ்டனான பிள்ளை இருந்தான். அவன் களவு செய்வோனும் கெட்ட நினைவுடையவனும், நாள் தோறும் மதுமாமிசாதிகளைப் புசிப்பவனும், தனக்கேற்ற ஆத்திரச் சினேகிதஞ் செய்பவனுமாயிருந்தான். அவன் மகா பாவங்களைச் செய்யலுற்ற மற்றொருவனோடு சினேகஞ் செய்து கொண்டு மிகவும் லச்சை கெட்டவனாகிப் பஞ்சமர்க்குரிய வாகாரங்களைச் சாப்பிட்டு வந்தான். இப்படி இருக்கையில் ஒரு நாள் அவன் மிக்கச் சௌந்தரியம் பொருந்திய ஓர் சண்டாள ஸ்திரீயை அனுசரித்துக்கொண்டு அவளுடன் கள்ளவழியாய்ப் புறப்பட்டுப் போகையில் அவளுடைய நாயகனான மிலேச்சன் அவனைக் கண்டு கோபாவேசங்கொண்டவனாகி அவனைத் தன் மனைவியுடன் சேர்த்துக் கட்டி அடித்துப் பிறகு மிகக் கூரிய ஓர் கத்தியினால் அப்பாதகனைக் காயப்படுத்தி எறிந்தான். அதன் பிறகு கௌசிகன் அத்துக்கத்தோடு வெகுகாலம் இருந்து பின்னர் மரணமடைந்தான்.

கேளீர்! வேதத் தலைவர்களே! அப்போது இயம தூதர்கள் வந்து அவனை இறுக்கிக் கட்டுகையிற் சிவகணங்கள் சீக்கிரமாய் வந்து அத்தூதர்களை அடித்துவிட்டுக் கௌசிகனைச் சிறந்த விமானத்தில் ஏற்றிக்கொண்டு கைலாசத்திற் ஸ்ரீ சிவபிரானுடைய திருச்சன்னதியில் இருத்திச் சென்றார்கள். பிறகு அத்தூதர்கள் மகா துக்கங்கொண்டவர்களாகி அப்போதே இயமனிடஞ்சென்று கௌசிகனுடைய விருத்தாந்தங்களையும், தாங்கள் அடிபட்டதையும் சொல்லித் தேகமெல்லாம் இரத்தம் பெருகப் பெற்றவர்களும் தழதழத்த குரலைக் கொண்டவர்களுமாகி அழுதார்கள். பிறகு இயமனும் அவர்களது வசனத்தைக் கேட்டவுடன் கைலயங்கிரியில் விளங்கும் ஸ்ரீ சிவபிரானண்டைக்குப் போவதாய் உத்தேசித்துத் துரிதமாய்ப் புறப்பட்டுச் சென்றவுடன் அக்கைலையின் அடிவாரத்திற் சிறந்த சிங்காதனத்தின் மீது வீற்றிருந்த கணத் தலைவரான ஸ்ரீ மகா காளரைக் கண்டு கேளீர்! முனிவர்களே! அவரிடத்துக் கௌசிகனுடைய சங்கதிகளையும், தன் தூதர்களுக்கு நேரிட்ட துன்பங்களையும் சொல்லிக்கொண்டான். அம்மகா காளரும் அதனைக் கேட்டவுடன் மிக்கக் கோபங்கொண்டவராகி 'அடா! இயமா! மகாத்துமாவாகிய இக்கௌசிகனுக்குப் பாவத்தினில் ஓர் அணுவும் இல்லை. ஏனென்றால் இவ்

வேதோத்தமன் வாலிப்ப் பருவத்தில் சம்பு வென்ற வோர் பிராமணப் பிள்ளையுடன் விளையாடுகையில் மகாத்துமனுகிய வச்சம்பு வானவன் இக்கௌசிகனுக்கு முக்கண்ணன் என்ற பெருமை பொருந்திய திருநாமமிட, ஸ்ரீமகேசுவரனுடைய தான அந்தத் திருநாமத்தை ஓர் ஜாமநேரமளவும் வகித்திருந்தான். மேலும் மகா விவேகியான அச்சம்புவானவன் தனது தோழர்களுக் கெல்லாம் இந்த விதமாக மகா பரிசுத்தம் பொருந்திய ஸ்ரீபரமேசுவரன் திருநாமங்களையே குறிப்பாய் வைத்திருந்தான். ஆகையால் இக் கௌசிகன் மகா புண்ணியமான முக்கண்ணனென்ற பெயரைக் கொண் டிருந்ததினுல் இவனுக்கு கைலாச பதவி கிடைத்ததென்று யாம் உண்மையாய்ச் சொல்லுகின்றோ" மென, மகா மூடனுன இயமன் ஸ்ரீமகா காளரால் உரைக்கப் பட்ட இத்தகைய திருவசனத்தைக் கேட்டும், பின்னும் அவன் ஓ! சுவாமி! "என்ருலும் இத்தகைய மாகாபாவிக்கு ஸ்ரீகைலாச பருவதத்தில் மகேசுவரனுடைய சன்னிதியில் அவன் வசிப்பது தகாதன்றோ" என்று ஸ்ரீமகா காளருடைய திருவசனத்தை மறுத்துரைத்து ஸ்ரீமகாதேவருடைய சன்னிதிக்குப் புறப்பட்டான்.

கேளீர்! தரணித் தேவர்களே! அப்போது மகா காளர் மிக்க கோபத்துடன் அவனைக் கூப்பிட்டு! அடா! மந்த புத்தியுடைய இயமா! நமது திருவாக்கிற்கு எதிர் வாக்கிட்டாய் அல்லவா?" வென்று கூறித் தமது தண்டத்தினுல் அவனது மார்பினில் ஓரடி அடிக்க, அப்போது அவன் அவ்வடி யுண்டதினுல், தேக முழுதும் இரத்த வெள்ளம் ஓடப் பெற்ருேனுகி வோர் பெரிய மலைக்கு நிகராய் மூர்ச்சை கொண்டு சாய்ந்தான். பிறகு அவ்வியமன் ஓர் கண நேரத்திற்குள் மூர்ச்சை தெளியப் பெற்ருேனுகி எழுந்திருக்கையில் அப்போது பிரம்மதேவன் ஸ்ரீமகேசுவரனைத்தரிசித்துவிட்டு அங்கு வந்து அச்சங்கதியைக் கேட்டதின்மேல் அவர் அம்மகா காளரை வந்தனித்து "ஓ! கணுதிபரே! இயமனுற் செய்யப்பட்ட இப்பிழையை மன்னித்தருளல் வேண்டும்." என்று கூறிக் கேளீர்! வேதியர்களே! பல முறை அவரை வேண்டிக்கொண்டு ஓ! இயமனே! பெருமை பொருந்திய அக்கவுசிகன் இப்போது ஸ்ரீதேவாதி தேவனுடைய சன்னிதியில் இருக்கின்ருன். ஸ்ரீமகா தேவனுடைய திருநாமங்களின் உத்தமமான மகிமையைத் தேவேசனும், நீலகண்டனும், உமாபதியுமான அப்பரமசிவனைத் தவிர யாவரறிவார்? ஆகையால் கேளாய் இயமா! நீ இது முதலாய் தவறிப்போகாதே" என்று அவனுக்குப் புத்தி கூறி அவனை விடுவித்து அப்பிரமன் தனதிருப்பிடஞ்சென்ருர். அவ்வாறு விடுபட்ட இயமன் அவரது வசனத்தைக் கேட்டதன்மேல் கேளீர்! தரணித் தேவர்களே! அப்போது அம்மகா காளரை வந்தனித்து விரைவில்தனது இருப்பிடஞ் சேர்ந்தான். ஓ! வேதோத்தமர்களே! இக்கதை தான் இயமனுல் மறக்க வில்லை யென்று சொல்லப்பட்டது.

பிறகு இயமன் இவ்வாருகச் சொல்லி அம்மகா காளரை வந்தனித்து "ஓ! சுவாமி! இக்காலன் புதிதாய் அதிகாரத்திற்கு வந்தவனுகையால் இதுவிபரம் அவன் அறிந்தவனல்ல. ஆகையால் தேவரீர் திருக்கணங்களால் அவன் கட்

டுண்டு கிடப்பதைத் தேவரீர் தயையினல் அடியேனை விடுவித்தது போல் அவனையும் விடுவித்தருளல் வேண்டும்'' என, மகா வலிமைபெற்ற மகா காளர் இவ்வந்தணனது வசனத்தைக் கேட்டதன்மேல் ஓர் பூதகணத்தை அனுப்பிக் காலனை விடுவித்தருளி பின்னர் காலனும் மகா காளருடைய கணங்களால் விடுவிக்கப்பட்டு இயமனுடன் மகா காளரிடம் சென்று அவரை வந்தனித்து அவர் உத்திரவின்மேல் இருவரும் தத்தம் தானத்திற்குத் துரிதமாய்ச் சென்றார்கள்.

அப்போது அவர்கள் நடுமார்க்கத்திற் செல்லுகையில் படைத்தலைவனான காலன் இயமனை நோக்கி "ஓ! ஐயா தருமனே! இனி எனக்கு உம்மிடத்தில் இவ்வதிகாரம் வேண்டாம்? இதோ என் தேகமுழுதும் இரணங்களாகி இரத்தம் ஒழுகிக் கொண்டிருப்பதைப் பாரும்; இப்போது நான் விடுதலையாகாவிட்டால் இந்த விநாடியில் எந்தன் வுயிர் நீங்கி இருக்கும்'' என, இவ்வாறு அக்காலனது வசனத்தைக் கேட்டு இயமன் "அடா! மூடபுத்தியுடைய காலா! நீ சிவ கணங்களைக் கண்டவுடன் ஏன் கௌசிகனை விடவில்லை? அடா! அவன் தரும மூர்த்தியாய்த்தான் இருக்கட்டும் அல்லது பாபியாய்த் தானிருக்கட்டும் சிவகணங்களைக் கண்டவுடன் ஸ்ரீசிவபெருமானுக்கு நேசமுள்ள அவனை விட்டுவிட்டு அவர்களையும் வந்தனித்து பிறகு சங்கதிகளை நம்மிடம் வந்து தெரிவித்தால் அதற்குத் தகுந்த கார்யத்தை நாம் செய்ய மாட்டோமா?. அதனல் தான் நீ இத்தகைய பயனை அனுபவித்தாய். கேளாய்! காலனே! நாம் முன்பு இவ்வதிகாரத்திற்குப் புதிதாய் வந்தபோது சிவனது திருநாமங்களின் மகிமையை அறியவில்லை.

கந்துகமென்ற பெரிய தேசத்திலுள்ள அற்புதமான கதளீபுர மென்ற பட்டணத்தில் அத்தேசத்துக்கு அதிபனான நரதகனென்றோர் பெருமை பொருந்திய அரசனிருந்தான். அவனைப்பார்த்த மாத்திரத்தில் மானிடர்களுக்கு மோகத்தை யுண்டுபண்ணலுற்ற அதிரூபலாவண்ணியம் பொருந்தியவளும், மெத்த மதம்கொண்டவளும் காமதை என்ற பெயர்கொண்டவளுமான மிகவும் கெட்ட நடையுள்ள ஓர் மனைவி யிருந்தாள். அக்கெட்ட நடைக்காரியானவள் நாள்தோறும் வியபிசாரம் செய்வதிலே மிகுதியாய் முயன்று வந்தாள். மேலும் மகா பாவியான அக்காமதையானவள் மிகவும் மானம் கெட்டவளாகி அரசனை விட்டுப்பறையர்களாயிருந்தபோதிலும் அழகுள்ளனகிய மற்ற எவனையாயினும் பார்த்து அவனைத் தானே வலியக் கூப்பிட்டுக் கொண்டு அவனோடு சம்போகிப்பாள். இப்படியிருக்கையில் அவள் துர்ப்புத்தி என்ற சூத்திரனையடைந்து அவனைப்புணர்ந்து வந்ததில் கர்ப்பம் தரிக்கலாகி பிறகு அவனையும்விட்டுப் போட்டு பாவசேஷத்தினல் வசுவேதி என்ற மற்றோர் பார்ப்பானையடைந்து அவனுடனும் கிரீடித்து வருகையில் அப்பாதகி பூர்ண கர்ப்பமுடையவளாகி ஓர் பிள்ளையைப் பெற்றாள். கேளீர் தாணித் தேவர்களே! பிறகு சிலநாள் சென்றதன் மேல் பாதகனன அவ்வசுவேதி மரணமடைந்தான். பிற்பாடு துர்ப்புத்திக் காரியானவள் தன குழந்தையை அங்கே போட்டுவிட்டு வெளிப்பட்டுப் போய் மறுபடியும் துர்ப்புத்தி என்ற முந்திய சூத்திரனிடமே போய்ச் சேர்ந்து அத்

துராத்துமனுடன் வெகுகால மளவும் கிரீடித்து வந்து அக்காமதையானவள் மகா கொடிய பாவங்களைச் செய்து வந்தாள். பின்பவள் துராத்துமனோடு கூட வனாந்திரத்திற்குப் போவதற்காகக் கப்பலேறிச் செல்லுகையில் அக்கப்பல் காற்றினால் உடைபட அப்போது அப்பாதகி அவனோடு கூட அக்கடலில் மாண்டாள்.

அப்போது யமதூதர்கள் அதே க்ஷணத்தில் அவ்விருவர்களையும் கட்டி நரகக் கடலிற்றள்ளி கொடூரமான வாளினால் வதைத்தார்கள். ஓ! காலனே! உடனே மகா பலசாலிகளான சிவகணங்கள் வந்து மகா கோரமான தங்கள் ஆயுதங்களால் அத்தூதர்களை அடித்து அவ்விருவர்களையும் மீட்டு விரைவினில் திவ்ய விமானத்தில் அவர்களை ஏற்றிக்கொண்டு சிவபத மடைந்தார்கள். அப்போது யான் சிவ கணங்களைக் கண்டு மகா கோபங் கொண்டவனாகி "ஓ! கணங்களே! இப்பாபிகளை என்திவ்ய விமானத்தில் வைத்துக்கொண்டு போகின்றீர்கள் என்று, யான் அப்போது புதிதாக அதிகாரத்திற்கு வந்தபடியால் அவர்களைக் கொடுமையாய்ப் பேசினேன். அக்கணங்கள் என் வார்த்தையைக் கேட்டு கோபாவேசங் கொண்டவர்களாகி மிகுந்த இறுமாப்போடெம்மை ஓர் வலிய பாசத்தினாற்கட்டி சக்கரவாளகிரி அடிவாரத்தின் குகைக்குள் ஓரிடத்தில் தலை கீழாகத் தள்ளிவிட்டு ஆ! கா! அடா! காலா! மிகவும் பல கீனமுள்ள ஓர் பூதத்தை அழைத்து அதனிடத்தில் அவர்கள் எந்தன் அதிகாரத்தையும் ஒப்புவித்து அச்சூதனையும், பாதகியையும் ஸ்ரீ சிவபிரானுடைய சன்னதியிற் கொண்டு சேர்த்தார்கள்.

பிறகு அவ்விருவர்களும் ஸ்ரீ கைலயங்கிரியின் கண் இருந்து வந்தார்கள். பின்னர் விஷ்ணுவும், பிரம்மனும், ஸ்ரீ சந்திரசேகரனுடைய தரிசனத்திற்குப் போவதற்காக ஒன்று சேர்ந்திருக்கும் சமயத்தில் சித்திரகுப்தன் அவர்களிடஞ் சென்று ஸ்ரீ விஷ்ணுவினிடம் சங்கதிகளை அறிவிக்க, அப்போது அவ்விஷ்ணுவும் அதனைக் கேட்டவுடன் மிகுந்த துக்கத்தோடு தாமும் அப்பிரமனுடன் ஸ்ரீ பரமேசுவரனிடத்தில் தெரியப்படுத்துவதற்காகப் புறப்பட்டு விரைவில் அச்சிவலோகஞ்சென்று அங்கு விநாயகரைக் கண்டு அவரை வந்தனித்து விரைவில் அவரிடத்து சங்கதிகளை மெதுவாக உரைத்தார்கள்.

அப்போது அவ்விநாயகரும் எமது விருத்தாந்தங்களைக் கேட்டதன்மேல் கேளீர்! வேதோத்தமர்களே! மிகுந்த கோபத்தோடு சண்டைக்குத் தலைப்பட்டனனல்லவா? ஆகையால் அவ்விவேக மற்றவனுக்கு அவர்களாற் தக்க தண்டனை செய்யப்பட்டது.'' என, இவ்வாறு அவரது வசனத்தைக் கேட்டு அவ்விருவர்களும் பயங்கொண்டவர்களாகி "ஓ! சகல விக்கினங்களுக்கும் அதிபரான பிரபுவே! தேவரீர் இவ்வபராதத்தை மன்னித்தருளல் வேண்டும். மகா மூடனும், கெட்ட எண்ணங் கொண்டவனுமான இவ்வியமன் புதிதாகையால் ஒன்றும் அறியவில்லை" என்று உரைத்து வந்தனித்தார்கள்.

கேளாய்! காலனே! பின்னர் அவ்விநாயகப் பெருமான் பிரசன்னராகி அசலனென்ற ஓர் பூதத்தை நோக்கி "ஓ அசலா! இவ்வியமன் மகா பலசாலிகளான வீரபத்திரர் கணங்களால் கொண்டு போகப்பட்டு இப்போது சக்கிர

வாளகிரிதனில் இருக்கின்றான். ஆகையால் நீ இப்போது சீக்கிரமாய் அங்கு சென்று மிகவும்கிலேசமடைந்திருக்கின்ற அவ்வியமனை இங்கு அழைத்துவா" வென்று உரைத்து மிகுந்த தயவினால் அப்பூதத்தை யனுப்பினார். இவ்வாற வரது திருவசனத்தைக் கேட்டவுடன் அப்பூதம் விரைவிற் சென்று எம்மை ஸ்ரீ கணேசர் முன்பாக அழைத்து வந்தது. பிறகு நாம் அவ்விநாயகப் பெரு மானை வந்தனித்து கைகட்டிக் கொண்டு அவரருகில் நின்றோம். அப்போது அப்பகவான் எம்மை நோக்கி மந்தகாசத்துடன் அடா! இயமா! நீ பாவபுத்தி யினால் அவ்விருவர்களையும் உபத்திரவஞ்செய்தாயே யன்றி வேறில்லை. புண் ணியர்களான இவர்கள் சுகிருதத்தை யறியவில்லை. அப்பெண்ணானவள் துர்ப் புத்தி என்ற அச்சூத்திரனிடமிருந்து கர்ப்பம் தரித்த பிறகு மகா விடனாகிய வசுவேதி யென்ற அப்பிராம்மணனையடைந்து காலமானதின்மேல் அவன் வீட் டில் அவள் பிரசவித்தாள். பிறகு அப்பார்ப்பான் இறந்தவுடன் அவள் தனது குழவியை அவ்வேதியன் வீட்டிலேயே விட்டுக் கேளாய்! அந்தகா! பிறகு அத்துர்ப்புத்தியுடனே சென்றுவிட்டாள்.

பின்பவள் மகனாகிய அக்குழந்தை அவ்வேதியன் வீட்டிலே வளர்ந்து வந்து அவ்வேதியன் வீட்டிலேயே சூத்திரன்போல் ஊழியஞ்செய்து கொண்டு வந்தான். கேளாய்! இயமா! அப்போது வசுவேதியின் கற் புடைய மனைவியானவள் அப்பிள்ளை தனது சக்களத்தி மகனும் இருசாதிப் பிள்ளையுமானதால் அவள் சத்திய வாக்குடையவளாகி அதன் பொருள் விளங் கும்படி அச்சூத்திரன் மகனுக்கு சங்கரனென்று பெயரிட்டாள். அது கொண்டு உலகினர்கள் தங்கள் பாஷைவழக்கத்தினால் அவனைச் சங்கரனென்று அழைத்தார்கள். இவ்விதமாய் இவர்களுடைய அப்பிள்ளையானவன் இப்போது சங்கரனென்ற திருநாமத்தைக் கொண்டிருக்கின்றமையால் அம்மகா புண்ணி யத்தினால் தான் இவர்களுக்குக் கைலாசப் பிராப்தி கிடைக்கலாயிற்று.

அடா! இயமா! தேவாதிதேவனாகிய ஸ்ரீ சிவபிரானுடைய, சகல பாவங் களையும் தொலைக்கலுற்றதிருநாமங்களின் மங்களகரம் பொருந்திய மகிமையை உண்மையில் யாரறிவார்.? மேலும் எவர் ஸ்ரீ மகா தேவரது திருநாமங் களின் உத்தமமான மகிமையை அறிந்து தாங்கள் பெற்ற பிள்ளைகளுக்கு ஸ்ரீ மகேசுவரனுடைய அத்திருநாமங்களை இடுகின்றார்களோ அவர்களின் பய னைக் கோடி வருஷங்களான போதிலும் தம்மாற் சொல்ல முடியா"தென அள வற்ற பராக்கிரமத்தைக் கொண்ட ஸ்ரீ விக்கினராஜனுடைய திருவசனங்களைக் கேட்டதன்மேல் கேளாய்! காலனே! தேகம் முழுதும் பயத்தினால் நடுக்கங் கொண்டவராகி அப்போது நமது இருப்பிடத்திற்கு வர நினைத்து மிகுந்த பக்தியால் பயத்தோடு வந்தனித்து ஓ! தேவேசரான ஸ்ரீ கணநாதா! எந்த னது இப்பிழையை மன்னித்தருளல் வேண்டும்" என்று அடியாரிடத்து நேச முற்றவரான அக்கருணையுடையோரைப் பக்தியுடன் வேண்டிக்கொண்டோம். பிறகு விஷ்ணுப் பிரமர்களும் அவரை வந்தனித்து வேண்டிக் கொண்டதன் மேல் அவர் நாதரற்றவர்போல் பயந்து துக்கங்கொண்டிருந்த தம்மைக் கிருபையுடன் நோக்கியருளி "ஓ! இயமா! நீ இனிமேல் புத்தியுடையவனாகி

ஜகதீசனான ஸ்ரீ மகேசுவரனுடைய திருநாமங்களின் வைபவத்தைக் கண்டறிந்து நடத்தல் வேண்டும் என்று உந்தனுக்கு எச்சரிக்கின்றோம்'' என்றனர்.

## 25-வது அத்தியாயம்.

கேளாய்! காலனே! கணாதிபரான ஸ்ரீ விநாயகன் இவ்வாறு அழகிய வாக்களித்து பூதத்தை வருவித்துக்கொண்டு முன்போல் நமக்குள்ளபதவியைத் தந்தருளி நம்மை அனுப்பினர். பிறகு நாமும் பிரம்ம விஷ்ணுக்களோடு அவரை வந்தனித்து நம்மிருப்பிடம் வந்து எப்போதும் தவறுதலின்றி நடந்து வருகின்றோம். ஆகையால் கேளாய்! காலா! நீயும் இனி தவறுதல் இன்றியே நடந்துவரல் வேண்டும். மேலும் எந்த மானிடர்கள் மகா பரிசுத்தமான சிவபிரானது திருநாமங்களை ஞானத்தினாலாவது அஞ்ஞானத்தினாலாவது உச்சரிக்கின்றார்களோ அவர்களுக்கு உண்மையில் பாவமேயில்லை. ஓ! காலனே! இதெல்லாம் நாமனுபவித்ததைக் கொண்டே சத்தியம், சத்தியம், சத்தியம் என்று உறுதியாய்ச் சொல்கின்றோம். இல்லாவிடின் நமக்கும் உமக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் ஸ்ரீ பரமேசுவரனுடைய திருவாக்கினை நேரிடலாகும். ஆகையால் நாம் பிரம்ம விஷ்ணுக்களோடு அத்தகைய பிரபுவின் சமயத்தை எதிர் பார்த்துக் கொண்டு நாள்தோறும் அவரைச் சேவை செய்துவரல் வேண்டும். ஆகையால் நமக்கு அவகாசமில்லை. நீ அதிகாரத்தை எப்போதும் மிக்க சாக்கிரதையுடன் நடத்திவரல் வேண்டும். ஆகையால் நீ நம் வார்த்தையைக் கேட்டுக்கொண்டு தவறுதல் இன்றி நடந்துவரல் வேண்டும்.

தவிரவும் எவர் சகல பாவங்களையும் நாசம்செய்யலுற்ற ஸ்ரீ மகாதேவன் திருநாமங்களைத் தரிக்கின்றார்களோ அத்தகையரின் தாய் தந்தையைக் கண்டால் நீ தூர விலகவேண்டும். ஆகையால் நீ சகல முயற்சியோடு தவறுதலின்றி இருக்க வேண்டும்.'' என இவ்வாறு அவ்வியமனுடைய வார்த்தையைக் கேட்டு காலன் பயங்கொண்டவனாகி ''ஓ! ஐயா! உமது இப்பெரிய அதிகாரத்தை நடத்திவர எந்தனால் முடியாது. ஏனென்றால் அடிக்கடி எந்தனுக்கு மிக்கப் பயமுண்டாகின்றது'' என இவ்வாறு அக்காலன் அவ்வசனத்தைக் கேட்டு, இயமன் ''கேளாய்! காலனே! எல்லோர்களும் நமது வசத்தில் அகப்பட்டவர்களே. ஆகையால் நீ யேன் பயங்கொள்ளல் வேண்டும்; எல்லாச் சீவர்களும் நம்மைக் கண்டால் பயப்படுகின்றார்களென்பது நிச்சயம்.

கேளாய்! காலனே! பூர்வத்தில் சாந்தீபினி முனிவருடைய, நல்லொழுக்க முடையவனும், மிகுந்த விவேகியுமான புத்திரனானவன் அச்சுதா, கோவிந்தா முகுந்தா வென்று ஸ்ரீ விஷ்ணுவின் திருநாமங்களைக் கீர்த்தனம் செய்துகொண்டே பாவங்களைத் தீர்க்கலுற்ற மகா பரிசுத்தமான ஓர் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்கையில் ஓர் வலிமை பொருந்திய முதலையானது நடுஜலத்திலிருந்த அப்பிள்ளையைப் பிடித்துத் தூரத்தில் இழுத்துக்கொண்டு போய் மிகுந்த பசியுடையதாகி அவனை உடனே தின்றுவிட்டது. அப்போது மரணமடைந்த அச்சிறுவனை, மகா பலசாலிகளான நமது தூதர்கள் அவன் விஷ்ணுமூர்த்திக்குப் பிரியமுள்ளவனாயினும் கொஞ்சமேனும் கவலையின்றி நமது லோகத்திற்குக் கொண்டு வந்து விட்டார்கள்.

அப்போது சாந்தீபினி முனிவரும் தம் புத்திரன் பெரிய மடுவினில் மரண மடைந்ததைக் கேட்டுச்சோகமும் மூர்ச்சையும் கொண்டவராகி மூடன்போல் புலம்பினர். பின்னர் தம் சீடர்களாகிய பகா பலசாலிகளான ஸ்ரீகிருஷ்ணனை யும் பலராமனையும் பார்த்து மகா விவேகியான அக்குருவானவர் தமக்குரிய குரு தக்ஷிணைக்காக ஓ! சீடர்களே நீங்கள், முதலையால் பிடித்துப் போகப் பட்ட நமது புத்திரனைக் கொண்டு வருவீர்களானால் அதுவே எல்லாவற்றிலும் மிக்கச் சிறந்த தக்ஷிணையாகு''மென இவ்வாறு அக்குருவின் வசனத்தைக் கேட்ட அம்மகா பலசாலிகள் இருவரும் உடனே அப்பெரிய தடாகத்தில் துரிதமாய்க் குதித்து அம்முதலையைக் கொன்றும் அக்குருபுத்திரனைக் காணா மல் துக்கத்தினால் வியாகுலமுற்ற மனதைக் கொண்டவர்களாகி இயம லோகத் திற்குப் போவதாய் நிச்சயித்துக் கொண்டு சீக்கிரமாய்ப் புறப்பட்டு நமது லோகத்திற்கு வந்து அப்போது அவ்விருவர்களும் மிகவும் வணக்கமுற்றவர் களாகி நம்மைத் துதிசெய்து அக்குரு புத்திரனை மீட்டுக்கொண்டு பிறகு அவ் விருவர்களும் தங்கள் குருவாகியசாந்தீபினி மாமுனிவர் அருகிற் சென்று அப் புத்திரனைச் சேர்த்தார்கள்.

பிறகு மகா புத்திசாலியான அவ்விருடி புத்திரன் பயத்தினால் வியாகுல முற்றவனாகி "ஓ! கோ! நாமோ எப்போதும் ஸ்ரீ விஷ்ணு திருநாமங்களைக் கீர்த்தனஞ் செய்துகொண்டிருந்தோம். அப்படி யிருந்தும் இயம தூதர்கள் வந்து நம்மை இயம லோகத்திற்குக் கொண்டு போகும்படியாயிற்றே'' என்று மனதினால் ஆலோசித்துக் கொண்டு பிறகு இயமனுக்கு இயமனும், சூல பாணியும், பயங்கரரும், பரப்பிரம்மமும், பரமாத்துமாவுமான ஸ்ரீ மகா தேவரது சிறந்த எத்திருநாமங்கள் மூவுலகுகளிலும் பிரசித்தி கொண் டிருக்கின்றனவோ அவைகளைக் கீர்த்தனம் செய்துகொண்டே மகா புண்ணி யாத்துமாவாய் வெகுகாலம் இயமனிடத்துப் பயமற்றவனாகி இருந்து முடிவி னில் சிவ தூதர்களால் சூழப்பட்டவனாகி ஸ்ரீ கைலாசமடைந்து அங்கும் வெகுகால மிருந்துவிட்டுப் பிறகு மகா துர்லபமான மோக்ஷ சாம்பிராஜ்யத்தை அடைந்தான்.

## 26-வது அத்தியாயம்.

மேலும் கேளாய்! காலனே! முந்தி நமது தூதர்கள் நல்ல விஷ்ணுபக்த னும் மகா விவேகியுமான புஷ்கரனென்ற பிராமணரிடஞ் சென்று அவனை நம் லோகத்திற்குக் கொண்டுவந்தார்கள். அப்போது அப்புலவனைப் பார்த்து விட்டு நாம் அத்தூதர்களை நோக்கி "ஓ! தூதர்களே! அதே கிராமத்தில் மகா பாவியும் கெட்ட நினைப்புடையவனுமான மற்றோர் புஷ்கரனிருக்கின்றான். ஆகையால் பாவமற்றவனை இப்பார்ப்பானைக்கொண்டுபோய் அங்கு விட்டுவிட்டு அவனையல்லவோ இங்குபிடித்து வரல்வேண்டும்'' என, இவ்வாறு நமது வார்த் தையைக் கேட்டதன்மேல் நம் தூதர்கள் சிறந்த அப்பார்ப்பானைக் கொண்டு போய் விட்டுவிட்டு பாவியாகிய மற்றோர் புஷ்கரனை இங்குகொண்டு வந்தார்கள்.

அன்று முதலாய் விவேகியான அப்புண்ணியவான், மனதில்ஆலோசித்துக் கொண்டு "ஓ! கோ! நாமெப்போதும் ஸ்ரீஹரியினுடைய எல்லாத் திருநாமங்

களையும் ஜபித்துக்கொண்டு வந்தோமல்லவா! அப்படியிருந்தும் இயமதூதர்கள் வந்து நம்மையவர்கள் பட்டணத்திற்குப்பிடித்துப் போனார்களே இதன் காரணம் என்ன? வென்று ஆலோசித்துக்கொண்டு சகல பாவங்களையும் அபகரிக்கலுற்ற, ஸ்ரீசிவ பரமாத்துமாவின் திருநாமங்களை மிகுந்த பக்தியோடு நொடிதோறும் ஜெபித்து வந்து அப்புண்ணியாத்துமன் சிவநாமத்தின் மகிமையினால் இல்லற ஆசாபாசங்களில் ஒழிவுபெற்றவனாகிக் கொஞ்சமேனும் மனக்கவலை யற்றவனாய்ச் சுயேச்சையாகப் பாரதனில் வசித்துவந்து முடிவினில் சிவலோகமடைந்து அங்கு சகல ஐசுவரியங்களோடும் கூடியவனாகி எல்லாப்போகங்களையும் அனுபவித்துப் பிறகு மோக்ஷ சாம்பிராஜ்ஜியத்தை யடைந்தான்.

கேளாய்! காலா! வளர்த்துவதினால் என்னபயன்? பூர்வத்தில் துட்டநிக்கிரக சிட்டபரிபாலனங்களைச் செய்தலிலே மிகவும் முயன்றவரும் ஸ்ரீவிஷ்ணுவின் உத்தமமான அவதாரமுமான, தசரதராஜன் புத்திரனாகிய ஸ்ரீராமனை நாமே கொண்டுவந்திருக்கின்றோமல்லவா? ஆகையால் நீ ஏன் பயப்படவேண்டும்? ஓ காலனே; முக்கண்ணரும், சுகத்தைச் செய்வோரும், மிருத்யுவைச் சயித்தவரும், உனக்கு மித்திரரும், காலத்தை யதிக்கிரமித்தவரும், நீலகண்டரும் கபாலியுமான ஸ்ரீமகாதேவரையும், சகல சாத்திரங்களையும் அறிந்தவர்களும், நல்லொழுக்கங்களில் முயன்றவர்களுமான அவரது அடியார்களையும் விக்னேசுவரர் அவரது அடியார்கள் இவர்களையும் தவிர அத்தகைய விஷ்ணு முதலிய தேவர்களிடத்தெல்லாம் நமதுள்ளத்திற்பயமுண்டா? அவ்வெல்லோர்களும் நமதாக்கினைக்கு உட்பட்டவர்கள் தானென்று நமதனுபோகத்திற் கொள்ளப்பட்டிருப்பது சத்தியம், சத்தியம், சத்தியமே! ஆகையால் கேளாய்! காலனே! நீ எப்பொழுதும் கொஞ்சமேனும் பயமற்றவனாகி முன்போல் நமது அதிகாரத்தைச்செலுத்தி வரவேண்டும். மேலும் இப்போது மற்றோர் வார்த்தை சொல்லுகின்றோம்; அதனைச் சாக்கிரதையாய்க் கேட்பாயாக.

ஸ்ரீ பார்வதிதேவி, விக்கினேசுவரர், மகாத்துமாவாகிய ஸ்ரீ கந்தபிரான், பைரவர், வீரபத்திரர், மகா சாஸ்தா, கணாதிபரான நந்திகேசுவரர், மகா காளர் முதலியவர்கள், அஸ்திராயுதர், இருடபராஜன், சிவனடியார்கள் இவர்களுடைய திவ்ய திருநாமங்களை எந்த மகாத்துமர்கள் எப்போதும் ஜெபிக்கின்றார்களோ, அல்லது இடைவிடாமல் தங்களுக்குப் பெயராய் வைத்துக் கொள்ளுகின்றார்களோ அவர்களிடம் நமது அதிகாரம் ஒன்றுஞ்செல்லாது. அந்தச் சிவனேசர்களைக்கண்டவுடன் நாம் மிக்க தூரத்தில்பயந்து ஓடி விடுகின்றோம். ஆகையால் நீயும் அப்படியே அப்புண்ணியவான்களைக் கண்ட மாத்திரத்தில் மிகுந்த பயத்துடன் அவர்களை நமஸ்கரித்துவிட்டு விரைவில் தூரத்தில் ஓடிப்போவாய். இனிமறுபடியும் இவ்விஷயத்தில் தவறிப்போகாதே. இதைப்பற்றி ஓர்பழைய சரித்திர மிருக்கின்றது. அதை நீ வெகு ஜாக்கிரதையாய்க் கேள்.

"பூர்வத்தில் மாகததேசத்தில் சூரியன் போன்ற காந்தியைக் கொண்டவனான பாரவி என்றோர் வேதியனிருந்தான். அவனோர் மகா வித்துவானாயினும் ஏதோ பாவவசத்தினால் நாள்தோறும்வேசிகளோடு போகிப்பதில் காதலுடையவனும் திருடுவோனும், மத்திய பானஞ் செய்வோனும் கெட்ட நினைப்புடைய

வனுமாயிருந்தான். அவன் பகல் முழுதும் பெரிய காட்டினில் பதுங்கி இருந்து இரவு நேரத்தில் பட்டணத்திற் பிரவேசித்து தலையாரிகள் பார்வையில் அகப் படாமலே திருடிக்கொண்டு வந்தான். இப்படி இருக்கையில் ஓர்நாள் அவ்வாறு திருடியவனைத் தலையாரிகள் கண்டு அவனைக் கொல்வதற்காக துரத்திக் கொண்டே மகா வேசத்தோடு ஓடினார்கள். பிறகு அவன் அவர்களைக் கண்டவுடன் பயங்கொண்டு தன்னுயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக மகா வேகத்தோடு பெரிய காடுதனில் நுழைந்தான். மிக்கத்திறமை கொண்ட ஓர் தலையாரி எப்போதும் திருடுவோனான அவ்வேதியனை அடி கொல் என்று சொல்லிக்கொண்டே அவனைத் தொடர்ந்தோடினான்.

அப்போது மகாபலபராக்கிரமமுடைய ஓர் புலியானது, அவ்வாறு இறைந்துகொண்டே களைப்படைந்து ஓடுகின்ற அத்தலையாரியைக் கண்டு குகைக்குள்ளிருந்து வெளி வந்து மிகக் கோபத்துடன் அத்தலையாரியை அடித்துக் கொன்றது. மிக்கத் திறலுடைய அத்தலையாரி புலியினால் கொல்லப்பட்டதன்மேல் அவ்வேதியன் பயந்தெளிந்து ஆ! கா! கேளாய் காலனே! அவன் கேரள தேசம் போய்ச் சேர்ந்து தன்னைக் கொல்ல முயன்ற தலையாரியைக் கொன்ற புலியினால் தான் இரக்ஷிக்கப்பட்டபடியால் இது முதல் வியாக்கரபாதனென்ற பெயர் தனக்கிருக்கட்டும் என்று பெயரை மாற்றிவைத்துக்கொண்டு அக்கேரள தேசத்தில் வசித்து வந்தான். அது முதலாக அவ்வூர் ஜனங்கள் அவனை அப் புதிய பெயரையே கொண்டு அழைத்து வந்தார்கள். தானும் வியாக்ர பாதனென்று சொல்லிக் கொண்டு திரிந்து வந்தான்.

ஓ! தரணித் தேவர்களே! பின்னர் அவன் காலவசத்தினால் மரணமடைந்த போது நமது தூதர்கள் அவனைக் கட்டிக்கொண்டு போவதற்கு வந்தார்கள். உடனே மிக்க வலிமைபெற்ற சிவகணங்களும் விரைவில் வந்து அக்கால தூதுவரையடித்து அவ்வேதியனை நாற்புரமுஞ் சூழ்ந்துகொண்டு சிறந்த விமானத்திலேற்றிக் கொண்டு தேவதுந்துபி முழக்கங்கள் மலர்மாரிகள் முதலிய பற்பல ஆடம்பரங்களுடன் உபசரித்துக்கொண்டு ஸ்ரீசம்புவின் திருச்சன்னதியிற் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

பின்னர் அடியார்களுக்கு அருள்சுரக்குங் கண்ணுதற் பெருமான் ஓ! நீ நமது அன்பனது திருப்பெயரை மூட புத்தியினாலாவது தரிக்கப்பெற்றமையால் சகல மேதாவிகளாலும் மெச்சப்பட்ட இக்கையிலையில் நீண்டகாலம் வசித்துப் பின்னர் நமது சிவசாயுச்சிய பதவியையடைவாய் என்று திருவாக் கருளி விட்டு ஸ்ரீசுந்தரேசப் பெருமான் தனதருகில் அவனைச் சேர்த்துக் கொண்டார்.

அச்சமயம் நாங்கள் ஸ்ரீ நந்திகேசப் பெருமானது உத்திரவு பெற்று ஸ்ரீ பகவானுடைய சன்னதிக்குச் சென்று வந்தனித்து அஞ்சலி கொண்டு அவர் முன்னிலையில் நின்றோம். பிறகு கருணை பொருந்திய அப்பிரபுவினால் வினவப்பட்டதன்மேல் நாம் சங்கதிகளைத்தெரிவிக்க அப்போது அவர் எம்மை நோக்கி ஓ! அந்தகா! நம்முடைய திருநாமத்தை எவர் தரிக்கின்றனரோ அவரிடத்து உமது அதிகாரஞ் செல்லும்படி அனுக்கிரகிக்கவில்லை. ஆகையால்

இப்போது உனது தூதர்கள் இவனைக்கட்ட ஏன் முயன்றார்கள்? இனி இதனைத் தெரிந்தும் அக்கொடிய செய்கையிற் முற்படுவீராயின் நமது ஆக்கினை நேரிடும்'' என இவ்வாறு ஸ்ரீ சம்புவின் திருவசனத்தைக் கேட்டதன்மேல் நாம் மிக்க வியாகூலமுற்றவர்களாகி அப்போது அச்சிவபெருமானை வந்தனித்து நாம் பயத்தோடு ஓ! சுகத்தை யூட்டுகின்ற கருணைக்கடலே! தூதுவர்களால் அறியாமையாற் செய்த அக்குற்றத்தினை மன்னித்து முன்போல் தேவரீர் பிரீதி வைத்து அருளல் வேண்டும் என்று வேண்டிக்கொண்டு அப்போது பயததினால் உடனே வந்தனித்தோம்.

பிறகு என்னைப்பார்த்து சங்கரன் திருமகனாகிய ஆறுமுகக் கடவுள் அப்போது ஸ்ரீ பரமேசுவரன் சன்னதியில் இருந்து கொண்டு கம்பீரமாய் ''ஓ கேளாய்! இயமா, முன் சிவபிரானுக்கு நேசனான மகாயோகியாகிய சதானந்த முனிவர் தமது விச்சையின்படி உலாவி வருகையிற் நரகத்திலுள்ளவர்களெல்லாம் இயமதூதர்களால் கொடுமையாய் வாதிக்கப் படலானதை எதிரிற் கண்டதின்மேல் அவரிரக்கமுற்றவராகி அவர்களைக் கண்ணுற்று ஹர ஹர வென்றுறக்கக் கூவினார். அப்போது அந்நரக வாசிகளுக்கு ஹர வென அத்தொனி கேட்ட மாததிரத்தில் அங்கு பற்பல இரத்தினங்களால் விசித்திரமாய் விளங்கிய பல விமானங்கள் வந்துவிட்டன. உடனே அவர்களெல்லாம் அவ்விமானத்தில் ஏறிக்கொண்டு துக்கம் நீங்கி சந்தோஷித்து ஸ்ரீமகாதேவர் எழுந்தருளிய கைலைமலையை அடைந்தார்கள். அப்போது நரகம் பாழாய்க் கிடந்ததன்மேல் நீ பரமேசுவரன் சன்னிதிக்கு வந்து அவரை வந்தனித்து விட்டு மிக்கப்பயத்தினால் நடுக்கமுற்றவனாகி நடந்த சங்கதிகளைத் தெரிவித்துக்கொண்டதால் அப்போது கருணைக்கடலான தேவேசன் நோக்கி ''ஓ! கேளாய்! இயமா! நாம், நமது தேவி, விநாயகன், அல்லது கந்தன் இவர்களுடைய சிறந்த திருநாமங்களையாவது அல்லது நமது கணங்கள் அடியார்களுடைய நாமங்களையாவது ஞானத்தினாலாவது அஞ்ஞானத்தினாலாவது யாவர் செவியால் கேட்கின்றார்களோ, அல்லது தங்கள் பெயரைத் தரிக்கின்றார்களோ அல்லது நாவினா லுச்சரிக்கின்றார்களோ அவர்கட்கு பாவமுமில்லை; மகா நரகங்களும் யாதுமில்லை என்பது நிச்சயமே. அத்தகையவர்களின் பிதுர்க்களுக்கும், சுற்றத்தார்களுக்கும் அப்பாவ நரகமில்லையென்பது நிச்சயமே! என்று ஸ்ரீ சங்கரன் திருவாய் மலர்ந்தருளினானன்றோ! இப்படி இருக்கையில் நீயேன் மூடன்போல் ஸ்ரீதேவ தேவன் எழுந்தருளிய திருச்சன்னிதிக்குவரலானாய்? அடா! துராத்துமாவே! போ, போ'' வென இவ்வாறு அக்கந்தனது திருவசனத்தைக் கேட்டதன்மேல் யாம் பயந்து அவ்வாறுமுகனைத் தோத்திரஞ்செய்து அவருக்குச் சந்தோஷம் உண்டாக்கி அவரது ஆக்கினையின்பேரில் நாம் நமது லோகத்திற்கு வந்தோம்.

ஓ! காலனே! நீஇப்போது இப்புண்ணியக்கதை கேட்டாயல்லவா! ஆகையால் நீ இனியாகிலும் ஸ்ரீ சிவபிரானது திருப்பெயரைத் தரித்தவராயினும், அவருக்கு இனிய அடியவராயினும் இருப்பவர்களை எப்போதும் இடைவிடாது தியானிப்பாயாக. தவிரவும் கேளாய்! காலனே! எவர்கள் சிவனடியார்களின்

திருநாமங்களைச் செவியுறக் கேட்கின்றார்களோ, அல்லது நாவினாலுரைக்கின்றார்களோ, அவர்களைக்கண்ட மாத்திரத்தில் நீ நமதாக்கினையின்படி விலகி ஓடிவிடு'' என இவ்வாறு அவ்வியமனுடைய வசனத்தைக் கேட்டதன்மேல் அக்காலன் அது முதல் ஸ்ரீ சிவபிரானுடையதும் அவரது அடியார்களுடையதுமான திவ்ய திருநாமங்களின் மாகாத்மியத்தைக் கொஞ்சமேனும் தவறுதலின்றியே எப்போதும் மனதினில் நினைத்துக்கொண்டு அச்சிறந்த அடியார்களைக் கண்டவுடன் வெகு தூரத்தில் ஓடிப்போகின்றான்.

ஆகையால் கேளீர்! வேதோத்தமர்களே! சிவ திருநாமங்களின் மகிமையை உண்மையில் யார்தானறிவார்? என்றாலும் எந்தனுக்கு ஏதோ தெரிந்த வரையில் எல்லாம் வல்ல இறைவன் அருளால் உங்களுக்கு சிறிது உரைத்திட்டேன். மேலும் அனேகர் ஸ்ரீசர்வேசனுடைய திருநாமங்களை ஜெபித்து மிக்க தனத்தை அடைந்திருக்கிறார்கள். சிலர் பூரணமான ஆயுளும், சிலர் புத்திர பாக்கியங்களையும், நீண்டகாலம் பிணி கொண்டிருந்த சிலர் ஆரோக்கியங்களையும் அடைந்திருக்கிறார்கள். சிலர் மூப்பற்று யௌவன பருவ மடைந்திருக்கிறார்கள். மேலும் சில மானிடர்கள் ஸ்ரீ சிவநாமத்தின் மகிமையால் பூதப்பிரேத பிசாசங்கள், விஷம், துஷ்டமிருகங்கள் இவைகளுக்குப் பயப்படுவதே இல்லை. ஓ! முனிவர்களே! சிலர் யுத்தத்திற் சத்துருக்களை வென்றிருக்கிறார்கள். சிலர் வாக்கு சித்தி அடைந்திருக்கிறார்கள்; சில புண்ணியர்கள் ஸ்ரீமகேசுவரனது திருநாமங்களை உச்சரித்ததனால், வேண்டிய, பலன்களைக் கைக்கொண்டிருக்கிறார்கள். ஆகையினால் ஓ! கேளீர்! வேதேசுவரர்களே! எவர்கள் திருநீறு உருத்திராக்கங்களையும் தரித்துக்கொண்டு ஸ்ரீ ஜகதீசன் திருநாமங்களையும் ஜபித்து வருகின்றார்களோ அத்தகைய சாக்ஷாதீசுவர ஸ்வரூபிகளான அவர்களுடைய மகிமையை எந்தனால் எடுத்துரைக்க முடியாது. எந்த மகானுபாவர்கள் ஸ்ரீசர்வேசுவரனது திருநாமங்களுடைய இம்மாகாத்துமியத்தைப் படிக்கின்றார்களோ, கேட்கின்றார்களோ' அல்லது பிறர்களைக் கேட்பிக்கின்றார்களோ, அவர்கள், ஆயுசு, ஆரோக்கியம் ஐசுவரியம், சந்தானம், கல்வி இவைகளை அடைந்தவர்களாகி, அளவற்ற போகங்களையும் இம்மையில் அனுபவித்து, மறுமையில் ஸ்ரீ சிவபிரானுடைய சாயுச்சிய பதவியையும் அடைவார்கள்.

## 27-வது அத்தியாயம்.

ஓ! சௌனகாதி முனிவர்களே! அனுஷ்டித்த மாத்திரத்தில் பிராணிகளுக்குச் சகல வேண்டுதல்களும் கைகூடப்பெற்ற ஸ்ரீ சிவபிரானுடைய விரதங்களைக் கூறுகின்றேன். நீங்கள் எல்லோர்களும் கேட்க வேண்டும். கேளீர்! பிராமண உத்தமர்களே! உத்தமமான ஸோமவார விரதம், மெத்த உத்தமமான திருவாதிரைவிரதம், உமாமகேசுவர விரதம், சிவராத்திரி விரதம் கேதார விரதம், கவிபாணவிரதம், மகா புண்யமான ஆலவிருதம், விருஷப விரதம் ஆகிய இவ்வெட்டு வரதங்களும் ஸ்ரீமகாதேவனுக்கு மிகவும் பிரியமுள்ளவை என்று பிரசித்தியுள்ளவை.

ஓ! தரணித் தேவர்களே! ஸ்ரீ உமாதேவிக்குரிய விரதங்களோவென்றால், சகல விரதங்களுக்கும் பெயர்போனதான சுக்கிரவார விரதம், அவ்வம்மைக்கு வெகு பிரியமுள்ளதான ஐப்பசி மாதம் பூர நக்ஷத்திரத்தில் அனுஷ்டிக்கத் தக்க மற்றோர் விரதம், ஐப்பசிமீ சுக்ல பக்ஷத்தில் நவமி திதியில் அனுஷ்டிக்கத்தக்க மற்றோர் புண்ணிய விரதம், ஆகிய இம்மூன்றும் உமாதேவிக்குரிய புண்ணிய விரதங்களாகும். ஸ்ரீவிக்னேசுவரருக்குரிய விரதங்கள் சுக்கிர வாரத்தில் ஆசரிக்கத்தக்க மகா பரிசுத்தமான விரதம் புரட்டாசிமீ சுக்கில பக்ஷத்திலான சதுர்த்திவிரதம் அதேவிதமாய் மார்கழிமீ சுக்கில பக்ஷத்திலான மகா பரிசுத்தம் பொருந்திய ஷஷ்டி விரதம் ஆகிய இம்மூன்றும் சகல பாவங்களையும் தீர்க்கலுற்ற ஸ்ரீ கணேசுவரருடைய விரதங்களே.

கேளீர்! பிராமண உத்தமர்களே! ஸ்ரீ ஷண்முகருக்குரிய விரதங்கள் சுக்ர வாரத்தில் அனுஷ்டிக்கும் புண்ணிய விரதம், கார்த்திகை மாதம் நக்ஷத்திரத்தில் கொண்டாடத் தக்க மகா பரிசுத்தமான விரதம், சகல போகங்களுக்கும் பிரசித்திபெற்ற கந்த ஷஷ்டி விரதம். ஓ! தேவர்களே! இம்மூன்று விரதங்களும் சகல வேண்டுதலையும் கொடுக்கப்பட்டவைகளே. ஸ்ரீ பைரவர்க்குரியவைகள், மகா பெருமை பொருந்திய ஞாயிற்றுக்கிழமை விரதம், சூரியன் துலா ராசியிலும் மேடராசியிலும் இருக்கும்போதான (ஐப்பசி, சித்திரை மாதங்களின்)பரணி நக்ஷத்திரத்தில் ஆசரிக்கத்தக்க சகல பாவங்களையும் நாசம் செய்யலுற்ற விரதங்களிரண்டு. கேளீர்! தரணித் தேவர்களே! இம்மூன்றும் மகாத்துமாவான ஸ்ரீபைரவக்குரியவைகள். மேலும் செவ்வாய்க்கிழமையில் ஆசரிக்கத்தக்க அற்புதமான விரதமானது ஸ்ரீ வீரபத்திரர்க்குரியதாகும்.

முறைப்படியே ஆயினும் இல்லாவிடினும் இவ்வெல்லா விரதங்களையும் ஆசரிக்கும் மானிடர்களெல்லாம் மகா பராக்கிரமசாலிகளாகி இங்கு வெகு காலமளவும் வேண்டிய போகங்களை அனுபவித்துவிட்டுப் பிறகு சிவலோகமடைந்து அங்கும் வெகு காலமிருந்து விட்டு முடிவினில் மோக்ஷமடைகின்றார்களென்று சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். கேளீர்! தரணித் தேவர்களே! இவைகளின் முறையையும் மகிமையையும் யான் கூறுகின்றேன். முன்பு சோமவார விரதத்தின் அனுஷ்டான விதியைக் கிரமமாய்ச் சொல்லுகின்றேன். நீங்கள் அதனை மிக்க ஊக்கத்தோடும் கவனிக்க வேண்டும்.

கேளீர்! தரணித் தேவர்களே! முதலில் கார்த்திகை மாதத்தின் சோமவாரத்தில் அருணோதய வேளையில் எழுந்து ஸ்ரீ மகா தேவனைத் தியானஞ்செய்து பரிசுத்தமான ஜலத்தில் ஸ்நானஞ்செய்து சந்தி யனுஷ்டானங்களை முறைப்படி முடித்துவிட்டுச் சகல கலியாணகுணக் காரணராயிராநின்ற ஸ்ரீ மகாதேவரைப் பூசைசெய்து பின்னர் சிவனடியார்களையும் கற்புடைய மங்கையரையும் பார்வதி பரமேசுவரர்களாகப் பாவித்துப் பூசைபுரிந்து அவர்களுக்கு அன்னமளித்துத்தான் ஒருவேளை புசித்தல்வேண்டும். ஆனால் சிவபூசை இல்லாதவனாயின் அவன்பரிசுத்தமான ஜலத்தில் ஸ்நானஞ்செய்து நித்தியகருமங்களைமுடித்துக்கொண்டு பிறகு மங்களகரமாகிய சிவாலயத்துட்சென்று அங்கு

ஸ்ரீ தேவேசனுக்கு மகா பரிசுத்தமான பஞ்சாமிருதம் முதலியவைகளால் அபிஷேகமும், பழுதற்ற வில்வ தளங்களால் அர்ச்சனையும், நேர்த்தியான பக்ஷிய போஜனங்களான நைவேத்தியமும் செய்வித்துப் பிறகு ஐம்பொறி அடக்கமுற்றவர்களான சிறந்த வேதியர்க்குப் போஜனமளித்துத் தான் அவ் விரதத்திற்குக் குறைவு நேரிடாதபடி போஜனம் செய்யவாவது உபவாசமிருக் கவாவது வேண்டும். இவ்விதமாகச் சிரேஷ்டமான ஸ்ரீ சோமவார விரதத்தை ஆகம முறையின்படி எந்த புத்திசாலி அனுஷ்டிக்கின்றானோ அவன் சகல பாபத்தினின்றும் மீண்டு, இங்கு வெகு காலமளவும் அனேக போகங்களை அனுபவித்துவிட்டு முடிவினில் கைலாச மடைகின்றான்.

பூர்வத்தில் மிகவும் கற்புடையவளான சீமந்தனி என்ற ஓர் இராஜகுமாரி யானவள் ஸ்ரீ சோமவாரவிரதத்தை அனுஷ்டானஞ் செய்கையில் இரண்டு பிர மசாரிகள் கபடமாய்ப் புருடன் பெண்டீர்களின் உருவத்தை யெடுத்துக் கொண்டு அங்குவந்தார்கள். அப்போது அவள் அவர்களைத் தம்பதியென்றே நிச்சயங் கொண்டவர்களாகிப் பூசை செய்ய அவ்வாறு பாவிக்கப்படலான அவ்விருவர்களும் புருடனும் பெண்டீருமாய் ஆகிவிட்டார்கள். அச்சீமந்தனி யானவள் ஸ்ரீ சோமவார விரதத்தின் மகிமையால் இத்தகைய ஆச்சரியத்தைச் செய்திருக்கிறாள்.

மேலும் கேளீர்! முனிவர்களே! இருடிகளில் சிறந்தவரான ஸ்ரீ வசிட்ட மாமுனிவரும் இவ்விரதத்தை இம்மாதிரி யெல்லாம் ஆசரித்து வந்தே அருந் ததி யம்மையை மனைவியாகப் பெற்றார். பூர்வத்தில் விபு என்ற ஓர் அரசன் இவ்விரதத்தை அனுஷ்டித்து வந்தே அவனுக்குப் பிள்ளைகள் இல்லாதிருந்தும் இவ்விரதத்தின் மகிமையால் சிறந்த ஓர் மைந்தனைப்பெற்றான். சோமசர்மன் என்ற ஓர் பிராமணனும் உத்தமமான இச்சோமவாரத்தை அனுஷ்டித்துத் தான் ஈசனருளினால் மிகுந்த ஐசுவரியத்தைப் பெற்றான். அனேக சத்துருக் களால் துன்பமடைந்த வச்சிரவாகு வென்ற ஓர் பெரிய அரசனும் இவ்விரத த்தை அனுஷ்டித்து வந்து தனது சத்துரு வாதை நீங்கப்பெற்றான். முன்பு சீசகனென்ற ஓர் வேதியன் யமனையும் ஜயங்கொண்டான். பெருமை பொருந் திய சிம்மனென்ற ஓர் அரசன் அஷ்டைசுவரியங்களையும் பெற்றிருக்கிறான். மகா விவேகியான வேதாங்கனென்றவன் இச்சிறந்த விரதத்தை அனுஷ்டித்து வந்தே தனது மனைவியுடன் இச்சரீரத்துடனே சிவலோகமடைந்தான்.

ஓ! தரணி தேவர்களே! தரும வீரியனென்போன் இவ்விரதத்தை அனுஷ்டித்து மோக்ஷமடைந்திருக்கிறான். கர்க்கசீனன் என்பவனும் இதை அனுஷ்டித்து மோக்ஷமடைந்திருக்கிறான். மேலும் அவன் புத்திர பௌத்திர களத்திரர்களோடு இவ்விரதத்தை அனுஷ்டித்ததனால் இங்கு நிகரற்ற போகங்களை அனுபவித்துப் பிறகு அவர்களோடு கைலாசமடைந்து அங்கு வெகுகாலமிருந்து முடிவில் மோக்ஷம் பெற்றான்.

மேலும் மகா பாவியும், திருடனும், தாசீவிடனும், சத்திய சந்தனுக் குப் புத்திரனுமான விராடனென்ற ஓர் துராத்துமன் இவ்விரதத்தின் மகி

மையால் மோக்ஷமடைந்துள்ளான். அவன் மோக்ஷமடைந்த விவரம் யாதெனில், ஓர் நாள் அவன் ஓர் தாசியோடு புணர்வதற்காக அவள் வீட்டிற்குப் போனான்.

கேளீர்! வேதோத்தமர்களே! அப்பொழுது சில தலையாரிகள் சன்னத்தர்களாகி அங்குவந்தார்கள். பிறகு அவ்விராடன் அவ்வாறு அவர்கள் வருவதை அறிந்து பயம் கொண்டவனாகித் துரிதமாய் காட்டிற் கோடிவிட்டான். அன்றையதினத்தில் மழை பொழிந்ததோடு சோமவாரமாயும் இருந்தது. அவ்விராடனுக்கு அன்றையதினம் அன்னம் கிடைக்காததினால் கேளீர்! வேதியர்களே! அவன் கிழங்கு, காய், கனிகளைத் தின்றுகொண்டு அக்காட்டினில் திரிந்துவிட்டு மறு நாள் ஓர் பெரிய சர்ப்பத்தினால் தீண்டப்பட்டு மாண்டான். பிறகு அவனைக்கட்டிக் கொண்டுபோவதற்காக இயம தூதர்கள் சீக்கிரமாய் வந்துவிட்டார்கள். அப்போது மிக்க வல்லமையுடையவர்களான சில தூதர்கள் அங்கு வந்து இயமதூதர்களை அடித்து ஓடச்செய்து அவ்விராடனை தேவ விமானத்தில் ஏற்றி சிவ லோகத்திற்குச் சென்றார்கள்.

கேளீர்! மறையோர்களே, சிவ தூதுவரால் துன்புற்ற அவ்வியம தூதர்கள் உடனே இயமனிடஞ் சென்று நடந்த சங்கதிகளை விரைவிற் கூறினார்கள். அப்போது இயமனும் தூதுவர்கள் மூலமாய்க் கேட்டு மனம் பொறாது விரைவிற்சென்று விராடனை சுமந்து செல்லும் அச்சிவ கணங்களை வழிதனிற் கண்டு மிகுந்த வணக்கத்துடன் அவர்களை வந்தனித்து ஒ! சிவ கணங்களே! பாபகாரியங்களைச் செய்வதேயன்றி புண்ணியமென்பது ஓரணுவும் கிடையாத இவனை உன்னதமான விமானத்தில் ஏற்றிக்கொண்டு போகின்றீர்கள்! ஆராயுமிடத்து இவனுக்கு புண்ணியமென்பது இல்லையென்றே தெரிகிறது. சிவலோகமானது புண்ணியருக்கன்றோ? என்ன, இவ்வாறு அவனது வசனத்தைக் கேட்டதன்மேல் சிவகணங்கள் ''கேளாய்! இயமா! இவன் சோமவார தினத்தில் மழைபொழிந்ததினால் ஸ்நானஞ் செய்யப் பெற்றோனாகி ஆகாரமின்றி கிழங்கு காய் கனிகளைத் தின்று நடுக் காட்டிற் சஞ்சரித்துக் கொண்டு வந்தான். ஏதோ மிகுந்த புண்ணிய வசனத்தினால் ஒன்றும் அறியப்படாதிருந்தும் தற்செயலாய் இவனுக்கு விரதங்களிற் சிரேட்டமான சோமவார விரதங் கிடைத்துவிட்டது. பிறகு மறுநாள் அக்காட்டினில் இவன் பாம்பு கடித்து மடிந்தான். அத்தகைய புண்ணியத்தின் மகிமையால்தான் இவன் சிவலோகத்திற்குப் போகின்றான். மேலும் இவன் அங்கு வெகுகாலமிருந்துவிட்டு நிச்சயமாய் மோக்ஷத்தையும் அடையப் போகின்றான். நாங்கள் தேவாதி தேவரான ஸ்ரீ மகா தேவன் திருவாக்கினையின்பேரில் இங்கு வந்தோம். ஆகையால் நீ வீண் வருத்தப்படாமல் உன் இருப்பிடஞ் செல்வாய்' என்றார்கள்.

இவ்வாறு அவர்களது வசனத்தைக் கேட்டதன்மேல் அவ்வியமன் பயத்தினால் நடுக்கமுற்றவனாகிச் சிவ தூதர்களையும் அப்புண்ணியவானையும் வந்தனித்துவிட்டுத் தனது இருப்பிடஞ் சேர்ந்தான். பிறகு கேளீர்! தரணித் தேவர்களே! ஸ்ரீ சிவபிரானுக்கு நேசமுள்ளவனான அவ்விராடனே சிவ

லோகத்தை யடைந்து மிகவும் ஜுவலிக்கலுற்றவனுகி ஸ்ரீ தேவாதி தேவன் திருச்சன்னதியில் அனேகம் வருடமிருந்து முடிவினில் மோக்ஷமடைந்தான். மேலும் கேளீர்! வேதோத்தமர்களே! சந்திரனும் இவ்விரதத்தை அனுட்டித்து வந்து ஸ்ரீ சங்கரனிடம் சந்திரத் தன்மையை அடைந்தான். தவிரவும் அவன் ஸ்ரீ மகா தேவர் முன்னர் பிரசன்னமானதும் அவரை மிகுந்த சந்தோஷத்தோடு வந்தனித்து " ஓ! எந்தன் பிரபுவே! இதற்குச்சோமவார விரதமென்றே பெயருண்டாக வேண்டும். மேலும் ஓ! பகவானே இச்சோமவார மகாவிரதத்தை யாவர் அனுஷ்டிக்கின்றார்களோ அத்தகைய புண்ணியவான்களுக்குத் தேவரீர் திருவருளால் வேண்டிய பொருட்களெல்லாம் கைகூடி வந்து முடிவினில் அவர்கள் மோக்ஷத்தையும் அடைய வேண்டும்' என்று கேளீர்! வேதியர்களே! சந்திரன் அப்போது இத்தகைய வரங்களைக் கேட்டுக்கொண்டான். பிறகு ஸ்ரீ பரமேசுவரனும் அச்சந்திரனுக்கு இவ்வரங்களைக் கொடுத்தருளி உடனே அந்தர்த்தானமானார்.

ஆகையால் சோமவார தினத்தில் ஸ்ரீ மகேசுவரனுக்குப் பிரியமுள்ள இம் மகா புண்ணிய விரதத்தை எவர் ஆசரிக்கின்றனரோ அவர்களுக்குப் பார்வதி தேவியின் தோழரான ஸ்ரீ பரமசிவன், தேவியோடு பிரசன்னமாகி சகல பாக்கியங்களையும் அருளுகின்றார் என்பதைச் சத்தியமாய் சொல்கின்றேன். கேளீர்! வேதோத்தமர்களே! ஸ்ரீசிவபிரானுக்கு முற்றும் பிரியமான இச்சோமவார விரத மான்மியத்தை யாவர் படிக்கின்றார்களோ, கேட்கின்றார்களோ, அல்லது கேட்பிக்கின்றார்களோ அவர்கள் இம்மைக்கண் அனேக போகங்களை அனுபவித்துவிட்டு மறுமைக்கண் சிவசாயுச்சியம் அடைவார்கள்.

## 28-வது அத்தியாயம்.

ஓ! முனிவர்களே! சகல சுபங்களுக்கும் காரணமாகிய திருவாதிரை விரதத்தை யான் சொல்லுகின்றேன். சூரியன் தனுர் ராசியிலிருக்கும்பொழுதான, உருத்திர தெய்வத்துக்குரியதாகிய தென்று உலகினில் பிரசித்தியாயிருக்கிற திருவாதிரை திருநாளில் காலையிலெழுந்து சுத்தமாயிருந்துகொண்டு சகல ஆபத்துக்களையும் நாசஞ்செய்யலுற்ற ஸ்ரீ நடராஜ மூர்த்தியை இருதயத்தில் ஏகாக்கிரசித்தனுய்த் தியானஞ்செய்து வீட்டினின்றும் வெளியே சென்று பரிசுத்தம்பொருந்திய உத்தமமான ஜலத்தில் ஸ்நானஞ்செய்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீபரமேசுவரனுடைய சிறந்த ஆலயத்திற்கு விரைவிற் சென்று அந்து பகவானுக்கு முறைப்படி அபிடேகத்தையும், பற்பல நைவேத்தியங்களையும் மகா வைபவத்துடன் செய்வித்தும் சன்னிதியில் நெய்யினுல் தீபங்கள் ஏற்றியும் மிகுந்த மனக்களிப்புடன் ஸ்ரீ தேவாதிதேவரை நமஸ்கரித்தும், பிறகு ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கும் மிகுந்த வைபவங்களுடன் அபிஷேக நைவேத்தியங்களைச் செய்வித்தும் நெய்யினுல் தீபங்களேற்றியும் ஸ்ரீ மகாதேவனை வந்தனித்து மகா பரிசுத்தனுய்த் தன் வீடுசேர்ந்து அப்புலவன் அத்தினத்தில் உபவாசமிருந்து விட்டு மறுநாள் அருணோதய காலத்தில் எழுந்து சுத்தஞ் செய்துகொண்டு ஸ்ரீ முக்கண் மூர்த்தியைத் தியானஞ்செய்து

நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு அதன்மேல் ஐம்புலனடக்கமுற்ற சிவனடியார்களுக்குப் போஜனமிட்டுப் பின்னர் ஸ்ரீ சிவாக்ஞையின்படி தான்புசிக்க வேண்டும்.

எந்த மகானுபாவர்கள் திருவாதிரை நக்ஷத்திரத்தில் இவ்வாறாய் ஸ்ரீ மகேசுவரனை யாராதித்து ஸ்ரீ சிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ள இம்மகா விரதத்தை ஆசரிக்கின்றார்களோ அவர்களுக்குப் போக மோக்ஷங்கள் கைக்குள் இருக்கின்றன என்பதிற் சந்தேகமில்லை. கேளீர்! வேதியர்களே! முஞ்சகேசர் என்ற ஓர் மாமுனிவர் இவ்விரதத்தை யனுஷ்டித்து மகாத்துமாவான ஸ்ரீநடராஜன் திருக்கூத்தைக் காக்ஷி கொண்டும் பாவங்களையும் விலக்கப் பெற்றவராகிச் சீவதசையிலே மோக்ஷமடைந்தார். மகா யோகியான ஸ்ரீ பதஞ்சலி பகவானும், கார்க்கோடகனென்ற மகா சர்ப்பமும், மகா சந்தோஷத்துடன் திருவாதிரை விரதத்தை விதிப்படி அனுஷ்டித்து தேவாதி தேவரான ஸ்ரீ நடராஜனுடைய திருக்கூத்தைக் காக்ஷி கொண்டதினால் அவ்விருவர்களும் கேளீர்! வேதோத்தமர்களே! பிறப்பிறப்பற்ற நித்தியத்தன்மை யடைந்தார்கள். மேலும் பெருமை பொருந்திய யோகியான ஸ்ரீ வியாக்ரபாத முனிவரும் இவ்விரதத்தின் மகிமையால் சிறந்த மாமுனிவரான உபமன்யு பகவானைப் புத்திரனுயடைந்தும் ஸ்ரீதேவாதிதேவருடைய திருக்கூத்தைக் காக்ஷி கொண்டும் ஜீவன் முக்தராகிவிட்டார்.

பின்னர் விபுலர் என்ற ஓர் சிறந்த பிராமணன் இவ்விரதத்தை அனுஷ்டித்ததினால் சிவபிரானுக்கு மிக்க நேசமுள்ளவராகி இச்சரீரத்துடனே சிறந்த விமானத்தில் ஏறிக்கொண்டு கைலாசத்திற்குச் சென்று அங்கு ஸ்ரீமகாதேவரைத் தரிசித்து மிகுந்த பக்தியுடன் வந்தனித்து திரும்பித் தம் வீட்டிற்கு வந்து அங்கு மனைவியோடு இருந்துகொண்டு அனேக போகங்களை அனுபவித்துவிட்டு பிறகு விமானத்தின் மீதேறிக்கொண்டு தேவரிஷி கணங்களோடு கூடச் சிவலோகமடைந்து அங்கு சகல ஐசுவரியங்களோடும் கூடியவராகி அளவற்ற போகங்களை அனுபவித்து விட்டு முடிவினில் சாயுச்சிய பதவியை அடைந்தார்.

கேளீர்! வேதோத்தமர்களே! இன்னும் மற்ற அனேகம் பேர்கள் இப்புண்ணிய விரதத்தை அனுஷ்டித்து இருவகைச் செல்வங்களையும் அநுபவித்தார்கள். கேளீர்! முனிவர்களே! இத்திருவாதிரை தினத்தில் ஸ்ரீ பரமேசுவரன் பரமானந்தத்தோடு கூடியவராகிச் சகலர்களும் சிவானந்தப்பேறு பெறற்கு ஆனந்தத் திருநடனமாடுகின்றார். ஆகையால்தான் இப்புண்ணிய விரதம் மற்றெல்லா விரதங்களினும் மேன்மை கொண்டதாகும்.

## 29-வது அத்தியாயம்.

கேளீர்! வேதோத்தமர்களே! உமாமகேசுவரவிரதத்தை யெடுத்துரைக்கின்றேன். இவ்விரதமானது கார்த்திகைமாதம் பூர்ணமையில் அனுஷ்டிக்கத்தக்கது. இத்தினத்தில் காலையில் எழுந்து சுத்திசெய்துகொண்டு பரி

சுத்தமான நீரில் ஸ்நானஞ்செய்து நித்தியகருமங்களை யெல்லாம் முடித்துக் கொண்டு பேராசை இல்லாமல் வெள்ளியாலாவது பொன்னாலாவது ஸ்ரீதேவாதி தேவருடைய பதுமையைச்செய்து அனேகம் பூஜாத்திரவியங்களோடு மிகுந்த பக்தியுடன் ஸ்ரீபார்வதியுடன் மகேசுவரனைப் பூசை புரிந்து வரும்படிக்கு தக்கபடி பற்பல நைவேத்தியங்கள் கொடுத்து வந்தனித்துப் பிறகு திருக் கோயிலுக்குச் சென்று மகாவிவேகியாய் ஸ்ரீ பகவானுக்குப் பஞ்சாமிருதம் முதலிய திரவியங்களால் அபிடேகமும் நைவேத்தியமும் செய்வித்துத் தாம் பூல மளித்துப் பற்பல உபசாரங்களையும் செய்வித்து பிறகு வந்தனித்துப் பிரார்த்தனை செய்துகொண்டு நல்லறிவுடையவனுய்த் தன் விடுதி சேர்ந்து தன் திறமைக்குத் தக்கபடி சிவ பக்தர்களான பிராமணர்களுக்குத் தானங் கள் கொடுத்துப் பிறகு அடியார்களுடன் உருசியுள்ள கனிவர்க்கங்கள் அல்லது அரிசிமா, அல்லது அப்பம் இவைகளை வீவேகத்துடன் தனது விரதங்களுக்குப் பங்கம் நேரிடாதிருக்குமளவும் சாப்பிட்டு வரவேண்டும். அதற்குமேல் நிய மமாய்ப் பதுமையைச் சிவயோகியாகிய ஓரடியாருக்குத் தானஞ்செய்துவிட வேண்டும். இம்மகா விரதத்தை இவ்விதமாக ஆகம முறைப்படி எவர்கள் ஆசரிக்கின்றார்களோ அவர்களுக்கு இகத்தில் மகா சம்பத்துக்கள் கூடி வரு வதோடு பரத்திலும் அவர்கள் மோக்ஷம் பெறுவார்கள்.

கண்களில்லாத திரிணபிந்துவென்ற ஓர் மாமுனிவர் இவ்விரதத்தை அனு ஷ்டித்ததினல் அலர்ந்த செந்தாமரை மலரையொத்த சிறந்த கண்களை யடைந் தார். மேலும் ஓர் ஸ்திரீயானவள் இவ்விரதத்தின் மகிமையினல் இறந்து போன கணவன் பிழைக்கலாகி பிறகு ஓர் பிள்ளையைப்பெற்று முடிவினில் சிவ லோக மடைந்தாள். ஸ்ரீ விஷ்ணுவும் கிருஷ்ணவதாரத்தில் ஸ்ரீ சிவபிரா னுக்கு முற்றும் பிரியமுள்ளதான இவ்விரதத்தைத் தன் மனைவியோடு மிக்கச் சந்தோஷத்துடன் ஆசரித்து வந்ததினல் அனேக பிள்ளைகளை அடைந்தார். பூர்வத்தில் பிரம்மனும் மிகுந்த சந்தோஷத்துடன் இவ்விரதத்தை யாசரித்து வந்தமையினல் காயத்திரியையும், சாவித்திரியையும், கைக்கொண்டார். இந் திரனும் இவ்விரதத்தினல் தான் ஜயந்தனைப் பிள்ளையா யடைந்தான். இதனல் தான் ஸ்ரீ வசிட்ட முனிவர் அக்கினி ஹோத்திரம் செய்வதற்காகக் காமதேனு வைக் கைக்கொண்டார். கௌதம மாமுனிவரும் இவ்வற்புத விரதத்தை அனுட்டித்ததனல் இருடிகளிற் சிறந்த சதானந்த முனிவரைப் புத்திரனக வடைந்தார்.

மேலும் கேளீர்! வேதோத்தமர்களே! ஜனகராஜனும் இவ்விர தத்தை அனுட்டித்து மகத்தாகிய லக்ஷ்மியைச் சீதை யென்னும் பெயரு டைய பெண்ணகப்பெற்றர். சித்திராங்கனென்ற இராஜனும இவ்விரததை அனுட்டித்து வந்து சுவர்க்க லோகத்திற்குப் போய் அங்கு தேவராஜனல் பூஜிக்கப்பட்டவனகிச்சகல அவயவங்களும் சுந்தரமாய் அமையப்பெற்ற ஊர் வசியோடு கிரீடைசெய்து கற்பகவிருக்ஷத்தைப் பெற்றுக்கொண்டு திரும்பவும் பூலோகத்திற்கு வந்து அங்கு புலவர்களான பல புத்திரர்களைப்பெற்று நீண்ட காலமிருந்து பிறகு நல்ல ஓர் முகூர்த்தத்தில் அனேகம வேதியர்களோடு தன்

பிள்ளைக்குப் பட்டங்கட்டி அதன்மேல் அனேகம் இரத்தினங்களின் ஒளி கள் நிறையப்பெற்ற ஓர் தங்க விமானத்திலேறிக்கொண்டு கேளீர்! முனிவர் களே! ஸ்ரீ கைலயங்கிரிக்குச் சென்று அங்கு நீண்டகாலமிருந்து பின்னர் சிவ சாயுச்சியத்தை அடைந்தார்.

பூர்வத்தில் அதர்மனென்ற ஓர் பிராம்மணன் சாத்திரப் பொருள்களை ஓர் சிறிதும் உணராதவனுயிருந்தான். இம்மந்த புத்தியுடையவனுக்கு என்ன படித்த போதிலும் சாத்திர உணர்ச்சி உண்டாவதில்லை. வெகு பேர் அவனை வெறுப்புள்ளவர்களாய் மந்தபுத்தியுடையனென நகைத்தார்கள். அப்போது அவ்வேதியன் பக்தியுள்ள மனதோடு அவ்வுமா மகேசுவர விரதத்தை முறைப் படி ஆசரித்து வருகையில் அப்போது சகல வித்தைகளையும் கைக்கொண் டவளான சரஸ்வதியானவள் ஸ்ரீ பார்வதி தேவியின் கிருபை வசத்தினல் அவனது நடு நாவினில் இருந்து கொண்டு அருள்செய்து வந்தாள். கேளீர்! முனிவர்களே! அப்போதே அவனுக்குச் சகல சாத்திரார்த்தங்களும் தெளிய விளங்கலாயின. சாத்திரங்கள் அவனுக்கு விளங்குவதுபோல் மற்றொரு வருக்கும் விளங்குவதில்லை.

அப்போது அரசன் அவனை வரவழைத்து அவனுக்கு வெகு தானங்களை கொடுத்தான். அப்போது அவனது கல்வியின் மகிமை எல்லா ஜனங்களுக்கும் தெரியவர, எல்லோரும் அவனை வந்தனிக்கலானார்கள். பிறகு அவன் அனேக வேதியர்களுக்குக் கல்விகளைக் கற்பித்தான். மேலும் அவன், சகல சாத்தி ரார்த்தங்களிலும் திறமை கொண்டவர்களும், நல்ல குண முள்ளவர்களுமான பல பிள்ளைகளை யடைந்து முடிவினில் மிகுந்த நேர்த்தியான ஓர் விமா னத்தில் ஏறிக்கொண்டு சிவ லோகத்திற்குப் போய் அங்கு ஸ்ரீ சிவாக்கினையின் மேல் ஓர் சிவகணத் தன்மையை யடைந்தான். மேலும் இந்துசேனன் என்ற ஓர் அரசன் போர்தனில் பகைவனல் புறமுதுகிட்டவனுகித் தனது நகரத்தைவிட்டு மனைவியோடு காட்டிற்கு ஓடிப்போய் அங்கு கிழங்கு, காய், கனிகளைத் தின்றுகொண்டு நீண்டகாலம் வசித்து வந்தபோது அங்கு முனிவர் களிற் சிறந்த அகத்திய மாமுனிவர் வருவதைக் கண்டு அவருக்கு வந்தனை வழிபாடுகளியற்றி தன் வரலாற்றை அம்முனிவரிடத்துக் கூறினன். அப் போது அம்மாமுனிவர் இவ்வரசனுக்கு இம்மகா விரதத்தைச் சொல்ல, பிறகு அவன் தன் மனைவியோடு இச்சிறந்த விரதத்தை யாசரித்தான். கேளீர்! முனிவர்களே! அவ்வாறவன் அனுட்டித்த விரதம் முடிந்தபோது செல்வர் கட்கு அரசனன குபேரன் ஸ்ரீ சிவாக்கினையின்பேரில் அங்கு வந்து "ஓ! இராஜனே! யான் இபபோது உம்முடைய சத்துருக்களை யெல்லாம் அதஞ் செய்து உமமையும் உமது இராஜ்ஜியததில் நிலை நிறுத்திவிட்டுத் திரும்பி யெனது இருப்பிடஞ் செல்வதாய் ஸ்ரீ சிவாக்கினையின்பேரில் இங்கு வந்தேன்." என்று உரைத்துவிட்டு அவனை யழைத்துக்கொண்டு போய் அவனது பட்ட ஸ்திரீயோடு யானையின கழுததின்மேல உட்கார வைததுக்கொண்டு சது ரஙக சேனைகளோடுமசென்று அவன் பகைவர்களை அவ்வூரைவிட்டுப் போகும் படிச செயது அவ்விந்துசேனனுக்குப் பட்டங்கட்டி அனேக தனங்களையும்

அவனுக்குக் கொடுத்து ஒருவரோடொருவர் சம்பாஷித்துக்கொண்டு அவ்விரா ஜனால் அபிமானிக்கப்பட்டவனாகி மிக்கச் சந்தோஷத்துடன் தன் பதவி சேர்ந் தான்.

கேளீர்! முனிவர்களே! அவ்வரசன் வெகுகாலமளவும் வேண்டியபடி யெல்லா போகங்களையும் அனுபவித்து பிறகு கைலாசமடைந்து வெகு சந்தோஷத்துடன் மோக்ஷம் பெற்றான். ஓ! வேதோத்தமர்களே! இன்னு அனேக மானிடர்கள் இவ்விரதத்தை அனுட்டித்து வேண்டிய விருப்பங்களை யடைந்து முடிவினில் மோக்ஷம் பெற்றிருக்கிறார்கள். மேலும் கேளீர்! முனி வர்களே! எவர்கள் இவ்விரதத்தின் மகாத்துமியத்தைக் கேட்கின்றார்களோ, அல்லது படிக்கின்றார்களோ அவர்கள் வேண்டியபடி எல்லா போகங்களையும் அனுபவித்துப் பரகதியடைவார்கள்.

## 30-வது அத்தியாயம்.

ஓ! வேதியர்களே! சகல கலியாணங்களுக்கும் காரணமாகிய சிவராத் திரி விரதத்தைச் சொல்லுகின்றேன். அது நித்திய சிவராத்திரி, மாதசிவராத் திரி முதலிய நான்கு வகைப்படும். தினந்தோறும் இரவில் நான்கு ஜாமங்களி லும் எப்போதும் ஸ்ரீ பரமசிவனைப் பூஜித்தலானது நித்திய சிவராத்திரி எனப் படும். இவற்றுள் சில மாதங்களில் சோமவாரத்தோடு அமாவாசையும் சேர்ந்திடின் அது மகா மங்களகரமான யோக சிவராத்திரி எனப்படும். மாதந் தோறுமுள்ள கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசியில் அனுட்டிக்கத்தக்க இரண்டாம் வகுப்பானது பிரத்தியக்ஷத்தில் மோக்ஷத்தைக் கொடுக்கலுற்ற மாத சிவராத்திரி எனப்படும். மாக மாதத்திய சுக்கில பக்ஷப் பிரதமை முதல் கிருஷ்ண பக்ஷத்து திரயோதசி வரைக்கும் சங்கல்பம் செய்து கொண்டு நாள்தோறும் ஒரே தடவை புசித்துக்கொண்டு ஐம்பொறியடக்க முற்றவனாய் நியமத்தோடு இருந்து மறு நாளாகிய சதுர்த்தசி தினத்தில் காலையில் எழுந்து அளவிடத் தகாத விபவங்களைக் கொண்டவரும் அனேகமாயிரம் மாலைகளால் நிறை யப் பெற்றவருமான ஸ்ரீ சிவபெருமானை மனதில் நிறுத்தி தியானஞ்செய்து பிறகு பரிசுத்தமான ஜலத்தில் ஸ்நானஞ்செய்து பிறகு இராத்திரி நான்கு ஜாமங்களில் ஸ்ரீ மகேசுவரனைப் பூஜை புரிதலானது மகாப் பிரமாதி சிவராத்திரி எனப்படும். மாக மாதத்தில் கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசி தினத் தில் காலையில் எழுந்து உள்ளக் கமலத்தடத்தில் ஸ்ரீ மகா தேவரை வந்த னித்து பரிசுத்தம் பொருந்திய ஜலத்தில் ஸ்நானஞ்செய்து வெகு சுத்தனா யிருந்து கொண்டு நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு பிறகு இரவினில் நித்திரையை நீத்து நான்கு ஜாமங்களிலும் இலிங்க நடுவில் விளங்கலுற்ற ஸ்ரீ மகேசுவரனை விதிப்படி பூஜித்தலேயாம்,

இவ்விதமாக, ஸ்ரீ சிவபிரானுக்குப்பிரியமுள்ள சிவராத்திரியானது நான்கு விதமாகக் கூறப்படுகின்றது. இவ்விரவுகளில் நித்திரையை யொழித்தவனாகிச் சுத்தாத்துமனாயிருந்து கொண்டு ஸ்ரீ சிவபிரானை பூஜைபுரிந்து மறுநாள் ஸ்நா னஞ்செய்து சகல நித்திய கருமங்களையும் முடித்துக்கொண்டு சிவனடியார்க ளுடன் அன்னம் புசித்தல்வேண்டும். கேளீர்! வேதோத்தமர்களே! மேலே

கூறப்பட்ட நான்குவகைகளிலும் ஒன்று, அல்லது இரண்டு, மூன்று, அல்லது நான்குகளையும் அவரவர் பக்குவத்திற்கு இயன்றபடி எவர் அனுட்டிக்கின்றுரோ அவர்களது பெரும்பேற்றினை எந்தனால் அளவிட்டுச் கூறுவதற்கு கற்ப கோடி கால மிருப்பினும் முடியாது. அவர்கள் தமது இஷ்டப்படி அனேக காலம் அனேகவித போகங்களை அனுபவித்து முடிவினில் ஓ! முனிவர்களே! மோக்ஷமடைகிறார்கள் என்பதில் என்ன வாச்சரியம்? முன்பு ஸ்ரீவிஷ்ணுவான வர் இம்மகா விரதத்தை விதிப்படி அனுட்டித்துத்தான் ஸ்ரீ பரமேசுவரன் அருளினால் ஸ்ரீ விஷ்ணுத்தன்மையை அடைந்திருக்கிறார். அப்படியே பிரம்ம னும் அவரருளால் தான் சர்வ வுலகங்களையும் சிருஷ்டிக்குந் தன்மையைப் பூண்டிருக்கின்றார். இந்திரனும் முன் இவ்விரதத்தை அனுஷ்டித்துத் தான் இந்திரத்தன்மையை அடைந்தான். மேலும் அனேக தேவர்கள் இவ்விரதத்தை அனுஷ்டித்து வந்ததால் கணத்தலைவத் தன்மையைக் கொண்டிருக்கிறார்கள். அனேகம் இருடிகள் முன்பு இவ்வுத்தமமான விரதத்தை அனுட்டித்து வந்ததினால் மறுபிறப்பற்ற மோக்ஷத்தை யடைந்திருக்கிறார்கள். ஓ! முனிவர்களே! குபேரன் இதன் மகிமையால்தான் தனாதிபத்தியம் அடைந்தான். வாயு வருணர்கள் எல்லாவற்றிற்கும் மேற்கொண்டதான சக்தியைப்பெற்றிருக்கிறார்கள்.

தவிரவும் கல்மாஷாபாதனென்ற அரசன் ஸ்ரீ கௌதமமுனிவரிடம் இவ் விருத்தாந்தத்தைக் கேட்டு அதனை விதிப்படி யாசரித்ததினால், தான் கொண்டிருந்த சாபத்தினின்றும் விடுபட்டுப் பிரஹ்மகததியைத் தொலைத்தவனாகி அதன் வைபவத்தினால் திரும்பவும் தன் தேசத்தைக் கைப்பற்றிப் பட்டாபிஷேகஞ்செய்துகொண்டு மிக்க போகங்களையும் அனுபவித்துவிட்டு ஸ்ரீ சிவபிரானருளால் முடிவில் மோக்ஷமடைந்தான். பின்னும் கேளீர்! வேதியர்களே! ஒரு பெரிய காட்டினில் ஒரு நாள் ஓர் வேடன் புலியின் பயத்தினால் அன்றைய தினம் சிவராத்திரி யென்றறியாமல் ஓர் வில்வமரத்தின் மீதேறிக்கொண்டு இரவு முழுதும் ஆகாரம் நித்திரையில்லாதவனாய் வில்வத் தழைகளைப் பறித்துப் பறித்து அம்மரத்தடியில் போட்டுக் கொண்டிருந்தான். அன்றையதினம் அவன் ஆகார மில்லாதிருந்தபடியால் மறுநாள் தெய்வபலத்தினால் அவன் இறந்து உடனே அச்சிவராத்திரி விரதத்தின் மகிமையால் சிவலோகமடைந்தான். மேலும் கேளீர! வேதோத்தமர்களே! முன்பு வயது சென்ற ஓர் நீச ஸ்திரீயானவள் மிகுந்த வியாதியால் பீடிக்கப்பட்டவளாகிச் சிவராத்திரி தினத்தில் அன்னங் கிடைக்காததினால் பட்டினியாயிருந்து அன்றிரவு முழுதும் விழித்திருந்து மறுநாள் காலையில் உயிர் துறக்க ஸ்ரீ சிவபிரான் அருளினால் திவ்யசரீரத்தைக் கொண்டவளாகி ஓர் சிறந்த விமானத்தில் ஏறிக்கொண்டு சிவலோக மடைந்தாள்.

இப்போது சிவராத்திரியின் வரலாற்றைச் சொல்லுகின்றேன், அதைக் கவனமாய்க் கேளுங்கள். பூர்வத்தில் பகலும் இரவுமில்லாமல், இருக்கின்ற தென்பதும் இல்லாமல், இல்லை யென்பதும் இல்லாமல் கேவலம் ஸ்ரீ சிவபிரான் மட்டில் மகாசமுகார காலத்திலுள்ள வந்தகாரத்தில் விளங்கி நிற்கு

மளவில் கேளீர்! முனிவர்களே! ஸ்ரீ பார்வதிதேவி யொருத்திமட்டில் அதற்குச் சாக்ஷியாய் அறுபத்து நான்கு கலைகளோடும் கூடியவளாகி இருதய கமலத் தடத்தில் ஸ்ரீ பரமேசுவரனைப் பூசை புரிந்து கொண்டு வந்தாள். முன் போல் உலகசிருட்டி யுண்டாக்கு மளவில் அப்போது தேவியானவள் கருணைக்கு நிதியான ஸ்ரீ மகாதேவரை வந்தனித்து "ஓ! சுவாமி, யான் இரவுதனில் தேவரீரை இருதய கமலத்தில் பூஜை செய்து கொண்டிருந்தபடியால் இவ்விரவுகளில் நான்கு ஜாமங்களிலும் பகவானும், ஜெகத்குருவுமாகிய தேவரீரை யெவர் பூஜிக்கின்றார்களோ அவர்களுக்குத் தேவரீர் அருளினால் இகத்தில் வேண்டிய பயன்களெல்லாம் கைகூடுவதுமின்றி ஓ' ஜெகதீசா! பரத்திலும் அவர்கள் மோக்ஷம் பெறவேண்டும், மேலும் அதற்குச் சிவராத்திரி விரதமென்று பெயர் பிரசித்தி பெறவேண்டும். ஓ! பிரபுவே! எந்தப் புண்ணியவான் சிவராத்திரிகளில் ஸ்ரீ சம்புவினுடைய மகாவிரதத்தை யாசரிக்கின்றானோ அவன் வேண்டிய அபீஷ்டங்களைக் கைக்கொள்வதோடு மோக்ஷத்தையும் அடைதல் வேண்டும்" என்று தேவியானவள் பிரசன்னரான பரமேசுவரனிடமிருந்து வரம்பெற்றுக் கேளீர்! வேதோத்தமர்களே! முன்பு அவளே இம்மகாவிரதத்தை யாசரித்துக் கொண்டு பரமானந்தத்தினால் நிரம்பப் பெற்றவளாகி அச்சங்கரன் அருகிலிருந்து கொண்டு விளங்கி வந்தாள்.

மேலும் ஸ்ரீபரமேசுவரனுடைய, புத்திரர்களான ஸ்ரீ விநாயகர் கந்தர் முதலியவர்களும், நந்தி, பிருங்கி, மகாகாளர், முதலிய கணநிபர்களும் மகாவிரதத்தை யாசரித்தார்கள். கேளீர்! முனிவர்களே! முன்பு பிரம்ம விஷ்ணுக்கள் இருவரும் ஒருவரோடொருவர் மதங்கொண்டவர்களாகி ஸ்ரீ சர்வேசுவரனுடைய சோதி மகாலிங்கத் திருவுருவத்தின் அற்புதமான அடிமுடிகளைக்காண முடியாததினால் சிவராத்திரி தினத்தில் ஸ்ரீமகேசுவரனை இரவினில் பூசை புரிந்தார்கள். அதன்மேல் ஸ்ரீ பகவான் அவர்கள்முன் பிரசன்னமாகையில் அவ்விருவர்களும் அஷ்டஐசுவரியங்களும் நிரம்பப்பெற்ற அம்மகாதேவரைக் கண்டு சிறந்த துதிகளால் தோத்திரஞ்செய்து மிகுந்த பக்தியோடு வணக்கமுற்றவர்களாகி நின்றார்கள். அப்போது அகண்டானந்த மங்கள மூர்த்தியான பகவான் அவ்விருவரின் பிழையை மன்னித்து அவர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தருளி அந்தர்த்தான மடைந்தார்.

ஆகையால் இவ்விரதத்தின் மகிமையை எந்தனால் சொல்லி முடியாது. ஓ வேதோத்தமர்களே! எந்தன் குருவாகிய ஸ்ரீ வேதவியாசராலும் சொல்ல முடியாது. ஆனால் மகாயோகேந்திரரான ஸ்ரீஸனத்குமாரர்தான் அதனைக்கூற முடியுமோ முடியாதோ! முன்பு இம்மகாவிரதத்தின் மகிமையை நந்திகேசுவரன் ஸ்ரீ மகேசுவரனிடமிருந்து கேட்டு பரமாநந்தமாகிய அலைகளுக்குக் கடலாகி விட்டார். ஸ்ரீமகேசுவரனது மகிமை வாக்குமனதிற்கு எப்படி எட்டவில்லையோ அப்படியே இவ்விரதத்தின் மகிமையும் எட்டாததே! ஸ்ரீசிவபிரானுக்குச் சம்மதமான இவ்வத்தியாயத்தைப் படிப்பவரும் கேட்பவரும் தெய்வ நம்பிக்கையுள்ள பிள்ளைகளைப் பெற்று அளவற்ற போகங்களை யனுபவித்துக் கேளீர்! முனிவர்களே! முடிவில் மோக்ஷமடைவார்கள்.

## 31-வது அத்தியாயம்.

ஓ! முனிவர்களே! சகல கலியாணங்களுக்கும் காரணமாகிய கேதார விரதத்தின் மகிமையை எடுத்துரைக்கின்றேன். அதனைக் கவனமாய்க் கேட்டல் வேண்டும். இவ்விரதமானது புரட்டாசிமாதத்தின் சுக்கிலபக்ஷ அஷ்டமியில் தொடங்கி அறுபத்தோரு நாள் முறைப்படி அனுட்டிக்கத்தக்கது. மேலும் மேற்கூறிய தினத்திலும் முடிவுதினத்திலும் விதிப்படி அனுட்டித்து நியமத்துடன் புசித்தல் வேண்டும். எந்த மானிடர் சகல அபீஷ்டங்களையும் தருகின்ற இவ்விரதத்தை யாசரிக்கின்ருரோ அவர் சகல போகங்களையும் அனுபவித்து முடிவில் மோக்ஷமடைகின்ருர்.

ஓ! தரணி தேவர்களே! பூர்வத்தில் இம்மகாவிரதத்தைக் கௌரிதேவி ஆசரித்ததினல் அளவற்ற ஒளிகொண்ட ஸ்ரீமகேசுவரன் திருமேனியில் பாதி பாகத்தையடைந்தாள். மேலும் விஷ்ணு இதனை அனுட்டித்து வந்ததினல் வைகுண்டாதிபத்தியத்தையும், பிரமன் அன்னத்தை வாகனமாயும் கொள்ளப் பெற்ருர்கள் ஓ! வேதியர்களே! முன் அட்டதிக்கு பாலகரும் இவ்விரதத்தை அனுட்டித்ததினல் ஸ்ரீ சிவபிரான் அருளால் சத்துருக்களாகிய அசுரர்களைக் கொன்ருர்கள். சப்தரிஷிகள் மிக்க மங்களகரமான இவ்விரதத்தை அனுட்டித்தனல் அப்போதே பிரம்மனுடைய சாபத்தினின்றும் விடுபட்டதாகக் கூறுகின்ருர்கள். முன்பு பாக்கியவதி யென்ற ஒரு கன்னிகையும் புண்ணியவதி யென்ற மற்ருெருத்தியும் இவ்விரதத்தை அனுஷ்டித்து மிகுந்த ஐசுவரியத்தை யடைந்திருக்கின்ருர்கள். மகாபரிசுத்தாத்துமாவாகிய ஓர் அந்தணர் சிவபிரானுக்கு மிகவும் பிரியமுள்ளதான இம்மகாவிரதத்தை அநுஷ்டித்து நிகரற்ற நூறு புத்திரரைப் பெற்ருர். பிறகு அம்மகானுபாவர் இவ்விரதத்தை அப்புத்திரர்களுக்கு அனுஷ்டிப்பித்து அவர்களோடு அனேகபோகங்களை யனுபவித்து பிறகு சிவலோகமடைந்து முடிவில் மோக்ஷத்தையடைந்தார். கேளீர்! வேதோத்தமர்களே! இன்னும் ஸ்ரீசிவபிரானுக்குப் பிரியமுள்ள இம்மகா விரதத்தை நியமத்துடன் ஆசரித்து மோக்ஷமடைந்தவர் அனேகம்பேரிருக்கிருர்கள். ஆகையால் எவர்கள் இவ்வுத்தமமான அத்தியாயத்தைப் படிக்கின்ருர்களோ, அல்லது கேட்கின்ருர்களோ அவர்கள் பல போகங்களை அனுபவித்து முடிவில் நிகரற்ற மோக்ஷத்தை யடைகிருர்கள்.

## 32-வது அத்தியாயம்.

ஓ! வேதமறிந்தோர்களிற் சிறந்த அந்தணர்களே! சகல கல்யாணங்களுக்கும் காரணமான கலியாணமென்ற புண்ணிய விரதத்தை யெடுத்துக் கூறுகின்றேன். அதில் மிக்கச் சுகிருதமுண்டு. ஆகையால் நீங்கள் கவனமாய்க் கேட்க வேண்டும். சூரியன் மீனராசியில் இருக்கும்பொழுதுள்ள சுக்கில பக்ஷத்தில் மங்களகரம்பொருந்திய உத்திரநக்ஷத்திரத்தின் காலையில் எழுந்து கலியாணகோலத் திருமேனி யுடையவர்களான ஸ்ரீபார்வதி பரமேசுவரர்களை நியமத்துடன் தியா

னஞ்செய்து வெளிச்சென்று பரிசுத்தமான தீர்த்தத்தில் நியமமாய் ஸ்நானஞ் செய்து நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு சிவபூசையில் முயன்றவராகி சகல சீவராசிகளுக்கும் அதிபரும், மகாதேவருமான ஸ்ரீபரமேசுவரனைப் பூசை செய்ய வேண்டும்.

சிவபூசை இல்லாதவனும் நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு தங் கத்தினால் ஸ்ரீபார்வதி பரமேசுவரர்களுடைய திருவுருவங்களாக இரண்டு பதுமைகளை யமைத்து அவைகளை விதிப்படி நல்ல தீர்த்தத்தினால் நிரப்பப்பட்ட ஓர் கும்பத்தில் வைத்து அபிஷேக விதிப்படி அம்பிகை சமேதருக்கு அபிஷேகஞ் செய்யவேண்டும். கேளீர்! முனிவர்களே! பின் னர் அவ் விவேகியானவன் விவாக முறைப்படிச் சகல உலகங்களுக்கும் மாதாவான பார்வதியம்மையோடு ஸ்ரீமகாதேவருக்கும் திருக்கலியாணஞ்செய் வித்து பற்பல நைவேத்தியங்களையும் அளித்து பிறகு வேதமறிந்தவர்களும், சிவபக்தர்களும், ஐம்பொறி அடக்கமுடையவர்களும் அவர் அவர்களின்மனைவி யர்களோடு கூடியவர்களுமான பிராம்மணர்களை அநேகம் தானங்களால் களிப் பித்து அவர்களுக்குப் பாயசங்களுடனும் பக்ஷிய போஜ்யங்களுடனும் உணவு அளித்தல் வேண்டும். பிறகு அவன் சிவாலயத்திற்குப்போய் சுவாமியையும் அம்மையையும் தரிசித்து தன்திறமைக்குத்தக்கபடி பண்டங்களையும் அளித்து மூன்று பிரதக்ஷிணஞ்செய்து அந்தரங்கத்துடன் தோத்தரித்து விரைவிற் தன் வீடுசேர்ந்து இரவுதனில் சிவனடியார்களான சிறந்தவந்தணர்களோடு கனிவர்க் கங்களையும், பாயசத்தையும் சாப்பிட்டு ஸ்ரீசிவபிரானைச் சிந்தித்துக்கொண்டே கேளீர்! முனிவர்களே! அவ்விரவினில் தர்பைகள் மீது படுக்கவேண்டும்.பின்னர் அதிகாலையிலெழுந்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீபார்வதி பர மேசுவரர்களது நேர்த்தியான அவ்விருபதுமைகளையும் நல்லொழுக்கமுடைய வரும், சிவபக்தர்களுமான இருபிராமணர்களுக்குத் தானஞ்செய்துவிட்டுக் கேளீர்! வேதியர்களே! அன்றைய தினத்தில் ஒருமுறை யன்னம்புசிக்க வேண்டும்.

எவரொருவர் சகல பாவங்களையும் நாசஞ்செய்கின்ற இம்மகா விர தத்தை இவ்விதமாய் அனுஷ்டிக்கின்றாரோ அவர் ஸ்ரீசங்கரனுக்கு மிக் கப் பிரியமுடையவராகி தம்விருப்பத்தின்படி வேண்டிய போகங்களை அனு பவித்து முடிவில் மலைகளிற் சிறந்ததும் ஸ்ரீசிவபிரானது கைலையுமான விடத்தில் சேர்ந்து நீண்டகாலமங்கிருந்து அநேகபோகங்களை அனுபவித்துப் பிறகு சிவாக்கினையின்படி மோக்ஷமடைகின்றார்கள்.

கேளீர்! முனிவர்களே! பூர்வத்தில் விஷ்ணுவானவர் இவ்விரதத்தை அனு ஷ்டித்ததினால் சிறந்து விளங்கும் ஸ்ரீஇலக்ஷ்மியையும், பிரம்மன் சரஸ்வதியை யும், இந்திரன் இந்திராணியையும் மனைவிகளாகக் கொண்டார்கள். அதனால் தான் முன்னர் சந்திரன் அஸ்வனி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும்

பெண்டிர்களாகக் கொண்டான். சூரியனும் மிகுதியாகச் சிறந்தவளான உஷா தேவியைத் தனக்கு நாயகியாகப்பெற்ருன். ஓ! வேதியர்களே! பூர்வத்தில் முனிவர்களிற் சிறந்த ஸ்ரீஅகத்திய முனிவரும் இம்மகாவிரதத்தை அனுஷ்டித்ததினுல் உலோபா முத்திரையை மனையாளாக வடைந்தார். மேலும் முந்தி விஷ்ணுவின் பெண்களான அமிருதவல்லி சௌந்தரவல்லி யென்ற இருவர்களும் இப்புண்ணிய விரதத்தை யனுஷ்டித்து வந்ததினுல் ஸ்ரீகுமரேச னருளைப்பெற்று மறுபடியும் தங்கள் இச்சையின்படி முறையே தேவசேனை, வல்லி யென்ற பெயர்களோடு வேறு பிறப்பையடைந்து தேவ சைனியங் களின் பாரத்தை நிர்வகிப்போரான அக்கந்தபிரானையே கணவராய்க்கொண்டு கேளீர்! வேதியர்களே! அவரோடு மிகுந்த நேசத்துடன் இன்புற்று வரு கிருர்கள்.

மேலும் வேதாங்க முனிவரின் குமாரியும், இலாவண்ணியக்கடலு மான ஸுகேசி யென்பவள் இவ்விரதத்தை அனுஷ்டித்ததினுல் கைலையில் வசிப்பவரும், ஸ்ரீ பரமேசுவரனது கணங்களுக்குத் தலைவரும் மிகவும் சிரேட்டருமான நந்திகேசுவரனைக் கணவரா யடைந்து தேவஸ்திரீ கணங்களால் சேவிக்கப்பெறுகின்ருள். சத்திய பூர்ணரென்ற மாமுனி வரின் இருகண்களினின்றும் உண்டான பூர்ணும்பாள், புஷ்களாம் பாள் என்ற இருபெண்களும் முன்பு இப்புண்ணிய விரதத்தை அனுஷ் டித்ததினுல் ஸ்ரீமகா சாஸ்தாவுக்கு மனைவிகளானுர்கள். இவ்விரதத்தின் மகிமையால்தான் மன்மதன் இரதி தேவியை நாயகியாக வடைந்தான். முன்பு ஜனகன் பெண்ணுன சீதையம்மையும் ஸ்ரீராமனைக்கணவனுய்க் கொண்டாள். கேளீர்! முனிவர்களே! முந்தி ஜாம்புவதியும் அதனுல்தான் ஸ்ரீகிருஷ்ணனைக் கணவராகக் கொண்டாள். தவசிகளிற் சிறந்தவரான சௌபரி முனிவர் இவ்வற்புதமான விரதத்தை அனுஷ்டித்ததினுல் நல்ல சுப இலக்ஷணங்களோடு கூடிய பல ஸ்திரீகளை யடைந்தனர். இன்னும் மற்றனேகம் பெயர்கள் சகல பாவங்களையும் தொலைக்கவுற்ற இவ்விரதத்தை தங்கள் மனைவிகளோடு அனுஷ்டித்து வருவதனுல் வேண்டிய எல்லா போகங்களையும் அனுபவித்துச் சிறந்த பலபிள்ளைகளைப்பெற்று முடிவில் கைலாசமடைந்து மறுபிறப்பில் மோக்ஷமடைகின்ருர்கள்.

ஓ! தரணித்தேவர்களே! இவ்விரதத்தைச் சுவற்பகால மனுட்டித்த மாத் திரத்தில் பெண்டிரை விரும்புபவன் சகல இலக்ஷணங்களோடும் கூடிய பெண் டிரையும் உத்தம கணவனையடைய விரும்பும் கன்னிகையானவள் மன்மதனை யொத்த பழிப்பற்ற கணவனையும் அடைவார்கள். மேலும் புருடனும் பெண் டிருமாய் இவ்விரதத்தை அனுஷ்டிப்பதின் மகிமையால் பல பிள்ளைகளைப் பெற்று வேண்டிய போகங்களையும் அடைவார்கள். ஓ! வேதியர்களே! இவ் விரதத்தின் மகிமையை ஓர் சிறிதுதா னெடுத்துரைத்தேன். இதன் மகிமையை

முற்று மெடுத்துரைக்க என்தனால் முடியாது. எவர் மிகுந்த நியமத்தோடு மகா புண்ணியமான இவ்வத்தியாயத்தைப் படிக்கின்றார்களோ, அல்லது கேட்கின்றார்களோ அவர்கள் தங்களுக்கு வேண்டிய பயன்களை இம்மையிலும் மறுமையிலும் அடைவார்களென்பதிற் சந்தேகமில்லை.

## 33-வது அத்தியாயம்.

ஒ! முனிவர்களே! வேண்டிய சகல பயன்களையும் கொடுக்கவுற்ற சூல விரதத்தைக் கூறுகின்றேன். மகர இராசியில் சூரியனிருக்கும்போதான அமாவாசை தினத்தில் விவேகமுடையவனாகி அதிகாலையில்எழுந்து சூலபாணியும், உமைக்கு மித்திரரும், சகல கலியாணங்களுக்கும் இருப்பிடமும், சந்திர சேகரருமான ஸ்ரீஜகதீசனை இருதய கமலதடத்தில் தியானஞ்செய்து வெளிப்போந்து மங்களகரம் பொருந்திய தீர்த்தத்தில் ஸ்ரீ சிவபிரானைத் தியானித்துக் கொண்டு ஸ்நானஞ் செய்து சந்தியானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு பிறகு ஸ்ரீ சம்புவின் பதுமையை ஸ்ரீ பார்வதியோடு கூடிய சகல அவயவங்களும் சுந்தரமாய் அமையப்பெற பொன்னாலாவது வெள்ளியாலாவது அமைத்துக்கொண்டு அதற்கு அபிஷேகத்திற்குரிய விதிப்படி ஸ்நானம் செய்வித்து பாயசத்தோடு பற்பலவித வன்னங்களைச் செய்து மிகுந்த பக்தியுடன் ஸ்ரீ சர்வேசனுக்கு நைவேத்தியம் செய்துவிட்டு நடுப்பகலில் உருத்திராக்க மாலையைப் பூண்டிருக்கும் சிவனடியாரான பிராமணருக்குத் தன்திறமைக்குத் தக்கபடி தானங்கள் செய்ய வேண்டும்.

பிறகு சிவாலயத்திற்குப்போய் முறைப்படி வலம்வந்து ஸ்ரீ பரமேசுவரனுக்குக் காணிக்கை கொடுத்து அவரைப் பூஜித்து சிவனடியார்களான பிராம்மணர்களோடு ஒரே முறை உணவுகொண்டு அன்றிரவினில் ஆகாரஞ் செய்யாமல் மறுநாள் அதிகாலையில் எழுந்து தினந்தோறும் வழக்கமாய்ச் செய்வது போல் நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு பிறகு ஓ! வேதியர்களே! அச்சம்புவின் பதுமையைத்தன் குருவுக்குத் தானஞ்செய்த பிறகு நியமத்தோடு அடியார்களுடன் உணவாதிகள் கொள்ளல் வேண்டும். ஓ! பிராம்மணோத்தமர்களே! இவ்விரதத்தை இவ்வகையாய் அனுஷ்டித்தல் வேண்டும். எவர் இவ்விரதத்தை அன்போடு அனுட்டிக்கின்றார்களோ அவர்கள் கூன் குருடு குட்டம் முதலிய வியாதியினின்றும் நீங்கி இம்மை இன்பமும் மறுமை இன்பமும் அடைவார்களென்று சத்தியமாய்ச் சொல்லுகிறேன்.

கேளீர்! தரணித்தேவர்களே! முன் விஷ்ணுவானவர் இவ்விரதத்தை அனுட்டித்ததினால் அசுரக்கேடனாகிய கொடிய காலநேமி யென்றவனைக் கொன்றார்.

பூர்வத்தில் ஜமதக்கினி மாமுனிவரின் புத்திரரான மகாவலிமை பொருந்திய பரசுராமர் இவ்விரதத்தின் மகிமையினால் சத்துருவாகிய கார்த்த வீரியார்ஜுனனைக் கொன்றனர். இதன் மகிமையால் முன்பு விஷ்ணுவின் தலைவலி

தணிபலாயிற்று. மேலும் பிரம்மனும் இதன் மகிமையால்தான் வயிற்று நோய் தீரப்பெற்றான். ஓ! முனிவர்களே! சுதர்மனும் இதன் மகிமையாலே மிருத்தியுவை ஜயிக்கலானான். மேலும் மேகங்கள் என்ற ஓர் அரசன் இவ் விரதத்தினால் மகாபண்டிதர்களான ஆயிரம் புத்திர பௌத்திரர்களை அடைந்து அனேக போகங்களை அனுபவித்து முடிவில் கைலாச பதவியை அடைந்தான். ஓ! முனிவர்களே! இன்னம் அனேகம் பேர் இவ்விரதத்தை அனுட்டித்து தத்தமது இஷ்டங்களை அனுபவித்து பின்னர் கைலைமலையை அடைந்திருக்கின்றார்கள்.

ஓ! வேதியர்களே! இவ்விரதத்தை யெவர் விதிப்படி அனுட்டிக்கின்றனரோ அவர்களது வறுமைகள் தூரவிலகி அஷ்டைசுவரியமும் பெற்று சுகமாய் வாழ்வார்கள். கேளீர்! தரணித்தேவர்களே! மகாவலிமை பெற்ற ஸ்ரீ வீரபத்திரர், பெருமை பொருந்திய கணாதிபனான பானுகம்பனுக்கு இவ்விரதத்தின் மகிமையை யெடுத்துக் கூறினர் என்று ஸ்ரீ வியாசமுனிவரே நேரில் எந்தனுக்குக் கூறியிருக்கின்றார். ஓ! வேதியர்களே! சகல பாவங்களுக்கும் முக்கிய நாசகரமாகிய இவ்வத்தியாயத்தை யெவர் படிக்கின்றார்களோ அவர்களுக்கு மரணபயமேயில்லை.

## 34-வது அத்தியாயம்.

ஓ! முனிவர்களே! நீங்களெல்லோர்களும் உத்தமமான விருடபவிரதத்தைக் கேட்கவேண்டும். சூரியன் இருடபராசியில் இருக்கும் போது சுக்கில பக்ஷத்தின் அஷ்டமிதிதியில் அதிகாலையிலே எழுந்து சுத்தஞ் செய்துகொண்டு, ஸ்ரீ மகாதேவரைச் சித்ரூபியாகிய அம்பிகையோடு இடபத்தின் மீது வீற்றிருப்பவராகத் தியானஞ்செய்து நல்ல தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து நியமத்துடன் சந்தியானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, அதின்மேல் தங்கத்தினாலாவது வெள்ளியினாலாவது ஸ்ரீ மகேசுவரனுடைய பதுமையைப் பார்வதிதேவியுடன் இடபத்தின்மீது வீற்றிருக்கும்படி நிகரற்றதாய் அமைத்துக்கொண்டு அதற்கு முறைப்படி சிறந்த பஞ்சாமிருதம் முதலிய திரவியங்களால் அபிஷேகஞ் செய்து விசேடமான பாயசம் முதலியவைகளுடன் சுத்த அன்னத்தை நைவேத்தியஞ் செய்து இவ்வாறாக விதிப்படி பூஜைசெய்து திறமைக்குத் தக்கபடி தனது திரவியத்தை நல்லொழுக்க முடைய சிவபக்தரான பிராமணருக்குக் கொடுத்து விட்டுப் பிறகு சிவாலயத்திற்குப் போய் ஆண்டவனை வணங்கிக் கொஞ்சம் காணிக்கை கொடுத்துப் பிறகு அன்புடன் தன் வீடுசேர்ந்து அவ்விவேகியானவன் சிவபக்தர்களான வேதோத்தமர்களோடு சுத்த அன்னம், சர்க்கரைப் பொங்கல், அப்பம், பணியாரம், கனிவர்க்கங்களுடன் விரதத்திற்குக் குறைவு நேராவண்ணம் புசித்துப் பிறகு அன்று மாலை சந்தியாவந்தனம் முதலிய நித்திய கருமங்களை முடித்த பின்பு இரவினில் ஓர் ஜாமம் வரையில் சிவபுராணங்களைக் கேட்டுப் பிறகு வெறும் தரைதனில்

சுகமாய்ப்படுத்து நித்திரை செய்ய வேண்டும். பின்னர் மறுநாட்காலையில் எழுந்து நியமமாய் நித்திய கருமங்களை முடித்துக் கொண்டு முற்கூறிய சம்புவினுடைய பதுமையை நல்ல சிவபக்தரும், வித்துவானுமான வேதியருக்குப் பக்தியுடன் தானஞ் செய்து விடவேண்டும்.

ஓ! பிராமணர்களே! எந்த மானிடோத்தமர்கள் இவ்விரதத்தை இவ்விதமாய் அனுட்டிக்கின்றார்களோ அவர்களுக்கு ஆயுசு, தனம், கல்வி, ஆரோக்கியம், அஷ்டைசுவரியங்கள் இவைகளெல்லாம் பூர்ணமா யுண்டாவதில் சந்தேகமே இல்லை. முன்பு மகாவிஷ்ணு இவ்விரதத்தை அனுட்டித்ததன் பேரில் ஸ்ரீ பரமேசுவரன் அருளினால் மிகுந்த ஐசுவரியத்தையுமடைந்து பக்ஷிராஜனான கருடனையும் வாகனமாய்க் கொண்டார். ஓ! வேதியர்களே! மேலும் இவ்விரதத்தை அனுட்டித்ததனால் இந்திரன் மிகவும் உத்தமமான ஐராவதத்தையும், அக்கினிதேவன் ஆட்டுக்கடாவையும், இயமன் பெரிய எருமைக்கடாவையும், நிருதி நேர்த்தியான மானிடர்களாற் சுமக்கப்படும் தண்டிகையையும், வருணன் சிறந்த முதலையையும், வாயுதேவன் சிறந்த மானையும், குபேரன் திவ்யமான புஷ்பக விமானத்தையும், ஈசான தேவன் தருமத்தினால் உருவங்கொண்ட எருதையும், சூரியன் சப்த அசுவத்தையும் ஒரே சக்கிரத்தையுடைய இரதத்தையும் சந்திரன் பற்பலஇரத்தினங்களால் செய்விக்கப்பட்ட விசித்திரமான விமானத்தையும் வாகனங்களாகக் கொண்டிருக்கிறார்கள்.

மகாராஷ்டிர தேசத்தரசனான விசுவசேனன் என்ற ஓர் அரசன் தவசிகளிற் சிறந்த வசிட்டமாமுனிவரிடஞ் சென்று முன் நடந்ததும் இனி நடப்பதுமான சிலவற்புதங்களை வணக்கமாய் வினவியதன்மேல் முக்காலங்களையும் அறிந்தவர்களிற் சிரேட்டரான அம்மா முனிவர் அங்ஙனமே யுரைக்க, அப்போது அவ்வரசன் மிக்கச் சந்தோஷ முற்றவனாகி அவ்விருடீசுவரரை வந்தனித்து "ஓ! சுவாமி, ஜகத் குருவாகிய தேவரீரை வந்தனிக்கின்றேன் எந்த வித்தையினால் தேவரீரால் இவ்வாறு உரைக்கப்பட்டதோ அதனை அடியேனுக்கு அருளல் வேண்டும்" என, இவ்வாறு அவ்வரசன் வசனத்தைக்கேட்டு அம்மாமுனிவர் "ஓ! அரசனே மிக்க வுத்தமமும், புண்ணியமுமான விருடபவிரதத்தை அனுட்டித்தனம்; அதன் மகிமையால் தான் முக்காலங்களிலும் உள்ள பொருட்களெல்லாம் நமக்கு விளங்குகின்றன. மேலும் இவ்விரதத்தின் மகிமையால் சகல வபீஷ்டங்களும் கைகூடும்'' என இவ்வாறு அப்பிரம்ம ரிஷியின் வார்த்தையைக் கேட்ட அவ்வரசன் மிக்க ஆச்சரியங்கொண்டவனாகித் தானும் அவ்விரதத்தை அனுஷ்டித்தான். பின்னர் அவ்வரசன் மிக அற்புதமாய் முக்காலங்களின் அறிவைக் கொண்டவனாகிச் சகல போகங்களையும் அனுபவித்து முடிவில் கைலாசமடைந்தான்.

பிரம்மனும் இவ்விரதத்தை யனுஷ்டித்து முக்காலங்களையுமுணரும் அறிவு கொண்டனர். சந்துஷ்டனென்ற ஓர் தரணிதேவன் இவ்விரதத்தை அனுஷ்டித்ததினால் மிகநேர்த்தியான அட்டமாசித்திகளையும் கைக்கொண்டு பிறகு நல்ல

கதியை அடைந்தான். முன்பு விதிருதன் என்ற ஓர் பார்வேந்தன் இவ்வற்புத மானவிரதத்தை அனுஷ்டித்ததினால் சரீரத்துடனே கீழ் ஏழ்வுலகங்களிலும் பிரம்ம விஷ்ணு, இந்திரன், முதலியவர்களின் லோகங்களிலும் எப்போதும் சஞ்சரித்துக்கொண்டே அங்கங்குள்ள சகல அற்புதங்களையும் பார்த்து வந்தான். இவ்விதமாய் அவன் வெகுகாலமளவும் இவ்விரதத்தை அனுஷ்டித்து வந்ததன்மேல் தன்பிள்ளைகளுக்கும் இதனைச் சொல்லிக்கொடுத்து பிறகு காய சித்தியடைந்து முடிவில் சிவயோகித் தன்மையை அடைந்தான். சிலர் இவ்வித மாகவே இவ்விரதத்தை யாதரித்து வந்து அம்மிகுந்த புண்ணியத்தினால் சகல வேண்டுதல்களையும் கைக்கொண்டு முடிவில் மோக்ஷத்தை யடைந்தார்கள்.

கேளீர்! வேதோத்தமர்களே! இவ்வத்தியாயத்தை எவர் படிக்கின்றார்களோ, கேட்கின்றார்களோ, அல்லது பிறரைக் கேட்பிக்கின்றார்களோ அவர்கள் அந்தத்தில் சிறந்த கைலாசமடைந்து முக்தியைப்பெறுவார்களென்றே சத்தியமாய்ச்சொல்லுகின்றேன். ஓ! முனிவர்களே! இப்போது ஸ்ரீசிவபிரானுடைய எட்டு விரதங்களையும் முறையே இவ்விதமாய் எடுத்துரைத்திட்டேன். மற்றுமுள்ளவைகளையும் எடுத்துக் கூறுகின்றேன். நீங்கள் அதனைக் கவனமாய்க் கேட்க வேண்டும்.

## 35 வது அத்தியாயம்

சகல பாவங்களையும் அபகரிக்கலுற்ற ஸ்ரீ மகா தேவியின் சுக்கிரவார விரதத்தைச் சொல்லுகின்றேன். சூரியன் மேடராசியில் இருக்கும்போதுள்ள சுக்கிலபக்ஷம் சுக்கிரவாரத்தில் காலையில் எழுந்து மகா சௌந்தரியம் பொருந்திய ஸ்ரீ கௌரியம்மையைப் பணிந்து பரிசுத்தம் பொருந்திய நீரில் ஸ்நானஞ்செய்து பரிசுத்தனாகி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு அதன்மேல் தனது ஆத்துமாவை ஜுவலிக்கலுற்ற காந்தியையுடைய ஓர்பெண்ணுருவமாய்ப் பாவனைகொண்டு பிறகு நேர்த்தியான கும்பத்தைச் சுத்த ஜலத்தினால் நிரப்பி, அதனில் ஸ்ரீ மகா தேவியை ஆவாகனித்து, சந்தனம் புஷ்பங்கள் முதலியவைகளால் பூசை புரிந்து அன்னத்தினால் உண்டாக்கப்பட்ட பாயசம் முதலியவைகளை நைவேத்தியஞ்செய்து சகல அவயவங்களிலும் விபூதி உருத்திராக்கத்தினால் அலங்கரிக்கப் பெற்று, மிக நேர்த்தியான எட்டு சுமங்கலிகள் அல்லது கன்னிகைகளைச் சந்தனம் புஷ்பங்களால் பூஜித்து ஓ! வேதியர்களே! உள்ளமதிற் கலக்கமற்றவனாகித் தன் திறமைக்குத் தக்கபடி அவர்களுக்குத் தானஞ்செய்து சிவாலயத்திற்குப் போய் அங்கு ஸ்ரீ தேவியையும் முக்கண்ணனையும் விதிப்படி பிரதக்ஷிணஞ்செய்து மிகுந்த பக்தியுடன் தன் திறமைக்குத் தக்கபடி ஏதாகிலும் கொஞ்சம் காணிக்கை யளித்து, நியமத்துடன் விரதத்தை முடித்துக்கொண்டு, மகா பரிசுத்தம் பொருந்திய பக்தர்களோடு பகலிலாவது இரவிலாவது அன்னம் புசிக்கவேண்டும். அல்லது சுத்தமான கனிவர்க்கங்களையாவது அப்பங்களையாவது விரதம் கெடுதலில்லாமல் உண்ண

வேண்டும். இவ்விதமாக எந்த மானிடர் மகிமை பொருந்திய சுக்கிரவார விரதத்தை அனுஷ்டிக்கின்றாரோ அவருக்கு ஸ்ரீ கௌரீ பிரசன்னமாகி நிச்சயமாய்ச் சகல வபீஷ்டங்களையும் கொடுக்கின்றாள்.

கேளீர்! தரணித்தேவர்களே! சுக்கிரன் இவ்விரதத்தை அனுஷ்டித்ததினால் பல சுபங்களை அடைந்து மேலும் இவ்விரதம் தன் பெயரால் விளங்கி வரவேண்டுமென்ற பெரிய வாரத்தையு மடைந்தான். பிறகு ஈசுவரியும் அவனுக்கு இவ்வாறு வரங்களை அளித்து விட்டு அந்தர்த்தான மடைந்தனள். மகா லக்ஷ்மியும் இவ்விரதத்தை அனுஷ்டித்ததினால்தான் இலக்ஷ்மித்தன்மையை அடைந்தாள். சரஸ்வதியும் இதன் மகிமையால் சகல வித்தைகளுக்கும் அதிபதித் தன்மையைப் பெற்றாள். சில வரசர்கள் இதனை யாசரித்ததினால் இராஜ்ய பரிபாலனஞ் செய்து வருகிறார்கள். இதனால் அநேக வேதியர்களும் சீக்கிரத்தில் கல்வி, சம்பத்து, பிள்ளைகள் இவைகளை அடைந்திருக்கிறார்கள். மேலும் சில வைசியர்களும், சூத்திரர்களும் ஸ்ரீ மகா தேவிக்குப் பிரியமுள்ள இவ்விரதத்தை அனுஷ்டித்து சகல வேண்டுதல்களையும் கைக்கொண்டிருக்கிறார்கள். அநேகர் இவ்விரதத்தை அனுஷ்டித்து வந்ததினால் அளவற்ற போகங்களையும் அனுபவித்து முடிவினில் சாலோக, சாமீப, சாரூப்பிய, பதவிகளை யடைந்து பிறகு மறுபிறப்பற்ற நிகரில்லாத சாயுச்சிய பதவியையும் அடைந்திருக்கின்றார்கள். ஓ! முனிவர்களே! சகல பாவங்களையும் நீக்கவுற்ற ஈசுவரியின் இரண்டாவது விரதத்தைக் கூறுகின்றேன்.

ஐப்பசிமாதம் சுக்கில பக்ஷத்திலான இயம தேவனுக்குரியதாகிய பரணி நக்ஷத்திரத்தில், ஸ்ரீ கௌரி தேவிக்கு மிகவும் பிரியமுள்ளதும், மகா சிரேஷ்டமுமான இவ்விரதத்தை அனுஷ்டித்தல் வேண்டும். இத்தினமதில் காலையில் எழுந்து நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீ மகா தேவியை சுக்கிரவார விரத முறைப்படி பூசை புரிந்து தன் திறமைக்குத் தக்கபடி அடியார்களுக்குத் தானங் கொடுத்தல் வேண்டும். பிறகு தேவாலயத்திற்குப் போய் சுவாமியையும் அம்பிகையையும் நமஸ்கரித்து திறமைக்குத் தக்கபடி சில தனத்தையும் காணிக்கை அளித்து விடுதி சேர்ந்து சர்க்கரையால் கலக்கப்பட்ட சுபகரமான முளைப்பயிறைத் தானங்கொடுத்து மறுநாள் பரிசுத்தனாகிச் சிவனடியார்களுடன் அன்னம் புசித்தல் வேண்டும்.

பூர்வத்தில் அழகு பொருந்திய இந்திராணியானவள் அவ்விரதத்தை அனுஷ்டித்ததினால் கேளீர்! தரணி தேவர்களே! தேவராஜனுக்குப் பிரிய நாயகியாயிருக்கும் தன்மையைப் பெற்றாள். உஷா தேவியும் உமா தேவிக்கு மிகவும் பிரியமுள்ளதான இவ்விரதத்தை அனுஷ்டித்ததினால் சூரியனுக்குப் பிரிய நாயகியானாள். ஓ! முனிவர்களே! இன்னும் அனேகம் பேர்கள் இவ்விரதத்தை அனுஷ்டித்து நல்லகதி அடைந்திருக்கிறார்கள். இப்போது சகல

வேண்டுதல்களையும் அளிக்கவுற்ற நவமிதிதியில் அனுஷ்டிக்கத்தக்க விரதத்தை எடுத்துக் கூறுகின்றேன்.

பிரதமை திதி முதற்கொண்டு ஓர் கும்பத்தில் ஸ்ரீ மகேசுவரியை ஸ்தாபித்துவைத்து (மேற்கூறிய) சுக்கிரவார விரதமுறைப்படி அவ்வம்மனை நாள் தோறும் பூசைபுரிந்து பிறகு நவமிதினத்தில் காலையில் எழுந்து ஐம்பொறி வடக்கமுடையவனும், மகா பரிசுத்தமுள்ளவனுமாய் நல்ல தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து முறைப்படி சந்தியானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அடியார்களுக்கு வேண்டிய பயன்களை அளிக்கவுற்ற அம்மகா தேவியைப் பூஜை புரிந்து சகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவர்களும், பரிசுத்தம் பொருந்தியவர்களுமான மங்கையர்களைப் பூஜித்து அதன்மேல் அவர்களில் ஒன்பது பேர்களுக்கு நல்ல மெல்லிய வஸ்திரங்களைக் கொடுத்துவிட்டு அவர்களுக்குப் பாயசம், அன்னம், அப்பம் முதலியவைகளாற் உண்டி அளித்து, பின்னர் அவ்விவேகியானவன் அடியார்களோடு புசித்தல்வேண்டும். பின்னர் தசமியாகிய மறுநாளில் அதிகாலையில் எழுந்து நியமத்தோடு நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு பிறகு சிவாலயம் போய் தரிசித்துச் சிவனடியார்களோடு போஜனஞ் செய்ய வேண்டும்.

பூர்வத்தில் விஷ்ணு இவ்விரதத்தை அனுஷ்டித்ததினால் தமது பல பகைவர்களையும் ஜெயித்திருக்கின்றார். அப்படியே மற்றையவர்களும் விஜய சக்தி, வீரசக்தி, வித்தியாசக்தி, பாக்யசக்தி முதலிய பல சக்திகளைப்பெற்று சிறந்த போகங்களை அனுபவித்துப்பிறகு சிவலோகமடைந்து சிவ சாயுச்சியத்தைக் கொண்டிருக்கின்றார்கள். ஆகையால் எந்த மானிடோத்தமர்கள் இப்புண்ணிய விரதத்தை அனுஷ்டிக்கின்றார்களோ அவர்கள் சகல சக்திகளையும் கைக்கொண்டு பரகதியை அடைகின்றார்கள். எவர்கள் அற்புதமான இவ்விரத மகாத்துமியத்தைப்பற்றிய இவ்வத்தியாயத்தைப் படிக்கின்றார்களோ அல்லது கேட்கின்றார்களோ அவர்களெல்லாம் நற்கதியையே அடைவார்கள்.

## 36-வது அத்தியாயம்.

மகாபரிசுத்தமான விக்கினேசுவர விரதத்தை யெடுத்துக் கூறுகின்றேன். சூரியன் இடபராசியில் இருக்கும்போது சுக்கில பக்ஷத்தில் ஓர் வெள்ளிக்கிழமை தினத்தில் காலையில் எழுந்து ஐம்பொறியடக்க முற்றவனும், மகா பரிசுத்தமுள்ளவனுமாகி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு தங்கம், வெள்ளி, அல்லது செம்பினால் அமைக்கப்பட்ட ஓர் விக்கினேசுவர மூர்த்தியை புதிப்பித்து ஆவாகனஞ் செய்து மகாபரிசுத்தம் பொருந்திய பற்பல புட்பங்களாலும், நேர்த்தியான பத்திரங்களாலும் பூசை புரிந்து அத்தேவாதி தேவருக்கு நேர்த்தியான குழக்கட்டை முதலியவைகளை நைவேத்தியஞ் செய்து பிறகு சிவாலயத்திற்குச் சென்று ஸ்ரீ சிவபிரானையும், விக்கினேசுவரரையும், பிரதக்ஷிணஞ் செய்து சந்தோஷத்தோடு திறமைக்குத் தக்கபடி சில தனத்தைக் காணிக்கை கொடுத்து முறைப்படி நமஸ்காரஞ் செய்து தன் வீடு

சேர்ந்து பிராம்மணர்களுக்குத் தன் நிலைமைக்குத் தகுந்த சில தானங்களைக் கொடுத்து கனிவர்க்கங்களோடு சுத்தவன்னத்தைப் புசித்தல் வேண்டும். பிறகு மறுநாள் காலையில் ஸ்நானஞ் செய்து முறைப்படி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு அவ்விக்கிரகத்தை மகா விவேகியான ஓர் சிவனடியாருக்குத் தானஞ்செய்து பிறகு அவ்விரதம் அனுஷ்டிப்போன் சிவபக்தர்களோடு புசித்தல் வேண்டும்.

பூர்வத்தில் அத்திரி மாமுனிவர் இப்புண்ணிய விரதத்தை யனுஷ்டித்ததினால் சிரேஷ்டர்களான சூரிய சந்திரர்களிருவரையும் பிள்ளைகளா யடைந்தார். கேளீர்! வேதோத்தமர்களே! இதன் மகிமையால் சங்க நிதி பதுமநிதிகளையும் அடைந்தார். மேலும் சில தேவர்கள், மானிடர்கள், இருடிகள் இவர்களெல்லாம் முன்பு இவ்வுத்தமமான விரதத்தை அனுஷ்டித்ததினால் அளவற்ற பராக்கிரமங்களையுடைய ஸ்ரீ விக்கினேசுவரருக்குப் பிரிய முள்ளவர்களாகிச் சிவலோக மடைந்து மோக்ஷம் பெற்றிருக்கிறார்கள்.

மேலும் எவர் விநாயக சதுர்த்தி தினத்திலும் விக்கினேசுவரருக்கு மிகவும் பிரியமுள்ளதும் சகல பாவங்களையும் தொலைக்கவுற்றதுமான சிறந்த விரதத்தை முறைப்படி ஆசரிக்கின்றாரோ அவர் விநாயகன் அருளினால் சகல போகங்களையும் அனுபவித்துப் பிறகு விக்கினேசுவர லோகத்தை அடைவதிற் சந்தேகமில்லை. பூர்வத்தில் ஸ்ரீ விஷ்ணுவானவர் அற்புதமான விச்சதுர்த்தி விரதத்தை அனுஷ்டித்ததினால் ஸ்ரீ விநாயகக் கடவுளுக்குப் பிரியமுள்ளவராகி ஸ்ரீ கௌரி தேவியின் சாபத்தினின்று விடுபட்டவராகித் தான் கொண்டிருந்த பாம்புத்தன்மையை நீத்து மரைமலருக்கு நிகரான கண்களை யடைந்து கேளீர்! வேதோத்தமர்களே! விரைவில் மறுபடியும் விஷ்ணுத் தன்மையை அடைந்தார். மூன்பு பிரமன் முதலியதேவர்கள் இவ்விரதத்தின் மகிமையால் ஸ்ரீவிக்கினேசுவரரை மிக்க பக்தியுடன் தரிசித்து நமஸ்காரஞ் செய்ய கேளீர்! முனிவர்களே! ஸ்ரீவிநாயக மூர்த்தியானவர் மெதுவாய் நர்த்தனஞ்செய்தார். அவ்விநோதத்தைக்கண்டு சந்திரன் நகைத்துத்தானும் அப்படியே நர்த்தனஞ்செய்கையில் ஸ்ரீகணேசப்பெருமான் தன்னைப்பரிகாசஞ் செய்த அச்சந்திரனைப்பார்த்து உடனே சபித்தனர். ஆகையால்தான் அவ்விநாயக சதுர்த்தி தினத்தில் சந்திரனை யொருவரும் பார்க்கக்கூடாது. எந்த மனிதன் பார்க்கின்றானோ அவன் மிகுந்த பாவியாகிவிடுவது நிச்சயமே!

கேளீர்! தரணித்தேவர்களே! பூர்வத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் அவ்விநாயகசதுர்த்திதினத்தில் சந்திரனைப்பார்த்ததினால் சகலஜனங்களாலும் இகழப்பட்ட ஓர் பெரும் சாபத்தை யடைந்தார். ஆகையால் யாமொருவர் மகா புண்ணியமும், சகலபாவங்களையும் நாசஞ்செய்யவுற்றதுமான இவ்விரதத்தை அனுஷ்டிக்கின்றாரோ அவர் ஸ்ரீ விக்கினேசுவரருக்கு மிகவும் பிரிய முள்ளவராகிச் சகல போகங்களையும் அனுபவித்து முடிவில் சிவசாயுச்சியத்தை யடைகின்றார் என்று சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். மேலும் அனேசர்கள் சஷ்டி திதியில் ஆசரிக்கத்தக்க ஸ்ரீவிநாயகனது அற்புதமான மற்றோர்

விரதத்தை முறைப்படி அனுஷ்டித்து கணேசனருளினால் நல்லகதியை யடைந்திருக்கிறார்கள். பூர்வத்தில் வித்தியுன்மாலியென்ற ஓர் அரசன் ஸ்ரீகணராஜனுடைய சஷ்டிவிரதத்தை அனுஷ்டித்ததினால் பிணிகள் தீரப்பெற்றவனாகி வஜ்ஜிரத்தை யொத்த தேகத்தை யடைந்து திலோத்தமை யென்ற மாதைக் கொண்டு அவளுடன் கூடி சிறந்த பல பிள்ளைகளைப்பெற்று வேண்டிய போகங்களையனுபவித்து சரீரத்துடன் சிறப்புற்ற கைலையை யடைந்து கேளீர்! முனிவர்களே! விக்கினேசுவரருக்கு மிகவும் பிரியமுள்ளவனாகி பிறகு மோக்ஷசாம்ப்ராஜ்ஜியத்தை யடைந்தான்.

மேலும் இவ்வாறாக இவ்விரதத்தை அனுட்டித்து இன்னும் அநேகர் மோக்ஷமடைந்திருக்கின்றார்கள். ஓ! வேதோத்தமர்களே! ஸ்ரீ விக்கினேசுவரருடைய விரதங்கள் இத்தன்மையது என உரைத்தேன். எவர்கள் இவ்வத்தியாயத்தை அன்போடு படிக்கின்றார்களோ அல்லது கேட்கின்றார்களோ அவர்கள் நிகரற்ற போகங்களை யனுபவித்து பிறகு மோக்ஷத்தையு மடைவார்களென்பதிற் சந்தேகமில்லை.

## 37-வது அத்தியாயம்.

கேளீர்! வேதோத்தமர்களே! ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்வாமியினுடைய விரதத்தைச் சொல்லுகின்றேன். சூரியன் துலாராசியில் இருக்கும்போது முதல் வெள்ளிக்கிழமை தினத்தில் காலையிலெழுந்து சுத்தஸ்நானஞ்செய்து முருகக்கடவுளை இருதய கமலத்தடத்தில் தியானஞ்செய்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு அதன்மேல் சகலபாவங்களையும் நீக்கவுற்ற அத்தகைய சிறந்த விரதத்தை முறைப்படி முடித்தல்வேண்டும். மேலும் மற்றவைகளான கார்த்திகை, கந்தசஷ்டி ஆகிய மூன்று சிறந்த விரதங்களையும் ஆகம முறையின்படி யெந்தமானிடர்கள் அனுட்டிக்கின்றார்களோ அவர்கள் சகல போகங்களையும் அனுபவித்து ஸ்ரீ முருகேசனது திருவாக்கின்படி முடிவில் மோக்ஷமடைகின்றார்கள்.

ஓ! தரணித்தேவர்களே! பிரம்ம விஷ்ணுக்கள் முதலிய தேவர்கள் இவ்விரதங்களை ஆசரித்ததினால் முந்திப் போர்முகத்தில் கேவலமான மிகக்கொடிய அசுரர்களை யெல்லாம் கொன்றுவிட்டார்கள். மேலும் திக்குபாலகர்கள் திசைகளுக்கு அதிபரானார்கள். பூர்வத்தில் முசுகுந்த சக்கிரவர்த்தி இவ்விரதங்களை அனுஷ்டித்ததினால் யுத்தத்திற் சகல சத்துருக்களையும் ஜயித்து சிவகணங்களுக்கு அதிபதித்தன்மை யடைந்தான். முன்பு தவசிகளிற் சிறந்தவர்களான நாரதர் முதலியவர்கள் மறுபிறப்பிற்கு அசாத்தியமான நிகரற்ற நித்தியத்தன்மையை அடைந்தார்கள். ஓ! முனிவர்களே! பூர்வத்தில் சிலர் பிள்ளையில்லாதவர்களாயிருந்து அனேகம் பிள்ளைகளைப் பெற்றிருக்கின்றார்கள். மேலும் மற்ற சிலர் ஐசுவரியத்தையும், ஞானபோகத்தையும் அடைந்து மோக்ஷம் பெற்றிருக்கிறார்கள். இம்மூன்றுகளிலொன்றையாயினும் ஸ்ரீகுகபிரானுக்கு திருப்தியாகும்படி யெவர் அனுட்டிக்கின்றார்களோ அவர்கள்

வேண்டியபயன்களை யெல்லாம் பெற்று மிக்கஉத்தமமான சிவலோகத்தை யடைந்து ஸ்ரீகந்தனருளினால் முடிவில் மோக்ஷம் பெறுகின்றார்கள். இப்படி இருக்கையில் இம்மூன்றுவிரதங்களையும் ஸ்ரீமுருகேசனுக்குத் திருப்தியாகும் படி யெந்தமானிடர் ஆசரிக்கின்றார்களோ அவர்கள் ஸ்ரீ குகனுக்கு நிகரான மகிமையை யடைகின்றார்கள். ஸ்ரீ கந்தபிரானுக்குப் பிரியமுள்ளதான இவ்வத்தியாயத்தைப் படிக்கின்றவரும் கேட்கின்றவரும்சகல போகங்களையும் அனுபவித்து மோக்ஷத்தையும் பெறுவார்களென்பதிற் சந்தேகமேயில்லை.

## 38-வது அத்தியாயம்.

மகாத்துமாவாகிய ஸ்ரீபைரவமூர்த்தியின் மூன்றுவிரதங்களையும் சொல்லுகின்றேன்.

சூரியன் மகரராசியில் இருக்கும்போது முந்தியதான ஞாயிற்றுக்கிழமைகளிலும், சித்திரை, ஐப்பசி, மாதங்களின் இருபரணி நக்ஷத்திரங்களிலும் அதிகாலையிலெழுந்து ஸ்ரீபைரவ மூர்த்தியை மனதினால் தியானித்து நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு தங்கம், வெள்ளி அல்லது செம்பினால் ஸ்ரீபைரவ விக்கிரகத்தை அமைத்து அதனைப்பற்பல புஷ்பங்களாற் பூஜை செய்து அன்னத்தினாற் செய்யப்பட்ட பாயசம் முதலியவைகளைக்கொண்டு நைவேத்தியஞ்செய்து நமஸ்காரங்களை முடித்துக்கொண்டு திறமைக்குத்தக்கபடி சிவனடியார்களுக்குத் தானஞ்செய்யவேண்டும். பிறகு சிவாலயத்திற்குப்போய் அங்கு பார்வதி தேவியையும், தேவராஜரான பைரவமூர்த்தியையும் விதிப்படி பிரதக்ஷிணஞ் செய்து பிறகு அன்புடன் ஏதாகிலும் தனக்கியன்ற காணிக்கை கொடுக்கவேண்டும். பின்பு தன் வீடுசேர்ந்து பகற்காலத்தில் சிவனடியார்களோடு கனிவர்க்கம் அல்லது அப்பமாவது, அன்னத்தையாவது ஒரே முறை புசித்து மறுநாள் அப்பைரவமூர்த்தி விக்கிரகத்தை பக்தியுடன் சிவனடியார்க்குத் தானஞ்செய்யல் வேண்டும்.

ஓ! வேதோத்தமர்களே! ஸ்ரீபைரவமூர்த்தியினுடைய இம்மூன்றுவிரதங்களையும் எந்தமானிடன் அனுஷ்டிக்கின்றானோ அவன் தனதிச்சையின்படி வேண்டிய போகங்களை அனுபவித்துப்பிறகு ஸ்ரீ பைரவமூர்த்தியின் கிருபையால் சிவலோகமடைந்து முடிவில்மோக்ஷமடைவான். பூர்வத்தில் மிகுந்த காந்தியுடைய சூரியன் இவ்விரதத்தை அனுஷ்டித்ததில் கோடி சூரியப் பிரகாசம் பெற்ற பைரவகவசம் பெற்றார். ஆகையால் கேளீர்! தரணிதேவர்களே! எந்தமானிடர் இம்மூன்று விரதங்களையும் அனுட்டிக்கின்றாரோ அவர் அகண்டபோகங்களையும்அனுபவித்துவிட்டு முடிவில் மோக்ஷமடைகின்றார்.

மகாவிவேகியாகிய ஸ்ரீ வீரபத்திருடையதான மற்றோர் விரதத்தை யெடுத்துக் கூறுகின்றேன். பிராம்மணர் ஞாயிற்றுக் கிழமையில் காலையிலெழுந்து சுத்திசெய்துகொண்டு சகல நித்திய கருமங்களையும் முறைப்படி முடித்துக் கொண்டு தங்கத்தினாலாவது, வெள்ளியாலாவது செம்பினாலாவது

மகாவலிமை பெற்ற வீரபத்திரரை அமைத்துக்கொண்டு அப்பதுமையை அபிஷேகம் முதலியவைகளால் விதிப்படி பூசைபுரிந்து பற்பலவித பக்ஷியங்களோடு நைவேத்தியஞ்செய்து தன் சக்திக்குத் தக்கபடி சிவபக்தராகிய புலவருக்குத் தானங்கொடுத்து பிறகு தேவாலயத்திற்குப் போய் ஸ்ரீ பரமேசுவரனையும் வீரபத்திர மூர்த்தியையும் முறைப்படி பிரதக்ஷிணஞ் செய்து ஏதாகிலும் காணிக்கையும் அளித்துவிட்டுப் பின்பு தன்வீடு சேர்ந்து கேளீர்! தரணி தேவர்களே! சிவனடியார்களோடு உணவாதிகள் கொள்ளல்வேண்டும். பிறகு மறுநாள் அவ்விக்கிரகத்தை ஓர் சிவபக்தருக்குத் தானஞ் செய்யவேண்டும்.

எந்தமானிடன் இவ்விதமாக வீரபத்திரருடைய மகாபரிசுத்தமான விரதத்தை அனுட்டிக்கின்றனோ அப்புண்ணியனுக்கு வீரியம், தேஜசு சம்பத்து இவைகளுண்டாகும். இவ்விரதத்தை அனுட்டித்ததினால் பிரம்மன் ஸ்ரீபரமேசுவரனுக்குச் சாரதியாகும் தன்மையை யடைந்தார். ஓ! தரணிதேவர்களே! தேவேந்திரன் இந்திராணியையும் கற்பகவிருக்ஷத்தையும் அடைந்தான். முன்பு வெகுப் பிராம்மணர்கள் சிவஞான மடைந்திருக்கிறார்கள். அனேக மரசர்கள் மிகுந்த ஐசுவரியத்தையும், சிறந்த வெற்றியையும், பெற்றிருக்கிறார்கள். மேலும் அனேக வைசியர்களும் சூத்திரர்களும் இம்மகாவிரதத்தை அனுட்டித்ததினால் சிரேஷ்டர்களான பல பிள்ளைகளைப் பெற்று வேண்டிய போகங்களையும் அனுபவித்து விட்டு மோக்ஷம் பெற்றிருக்கிறார்கள். ஆகையால் எந்த மனிதோத்தமர்கள் இவ்விரதத்தை யாசரிக்கின்றார்களோ அவர்கள் ஸ்ரீ வீரபத்திரர் அருளால்சிறந்த புத்திரர்களையும் அடைந்து முடிவில் சிவலோகமடைவார்கள் என்று சத்தியமாய்ச் சொல்லுகின்றேன். இவ்வித்தியாயத்தைப் படிக்கின்றவர்களும், கேட்கின்றவர்களும் இம்மை இன்பத்தையும் மறுமை மோக்ஷத்தையும் அடைவார்கள் என்பது சத்தியம், சத்தியம், சத்தியம்.

## 39-வது அத்தியாயம்.

ஓ! முனிவர்களே! சகல விரதங்களையும் இவ்வகையாக வுரைத்தாயிற்று. இப்போது சிவபுண்ணியங்களை ஜாக்கிரதையாய்க் கேளுங்கள். கேளீர்! தரணிதேவர்களே! ஸ்ரீ பரமேசுவரன் இச்சையின்படி சாலோகம், முதலிய பதவிகளை யடைவதற்காக ஸ்ரீ சிவபிரானுடைய லிங்கம், விக்கிரகங்கள், உமையம்மன், சண்முகன், விநாயகர், பக்தர்கள், கணம் முதலியவர்கள் இவர்களுக்கு அனேகம் அனேகம் பிராகாரங்கள், அட்டாளங்கள், கொடுங்கைகள் நேர்த்தியான ஆலயங்கள் இவைகளைப் பேராசைகொள்ளாமல் கட்டிவைத்துக் கூடுமானால் செம்பு, பொன், கல், முதலியவைகளால் அவர்களின் உருவங்களையும் பக்தியுடன் அமைத்து முறைப்படி பிரதிஷ்டை செய்து பலவிதமாலைகளால் அலங்கரித்து வஸ்திரங்கள், சந்தனம் நைவேத்தியம் முதலியவைகளையும் அவர்களுக்கு அளித்துவிட்டுப் பெருஞ்சுவாலையுடைய பல தீபங்களேற்றி மற்ற உபசாரங்களையும் செய்ய வேண்டும். மேலும் பசுமாடுகள் வாங்கிவிட்டுத் தாசிகளைத் திட்டஞ்செய்து வைத்து தனது சக்திக்குத் தக்கபடி நிலங்களும், தோட்டங்களும் விடவேண்டும்.

மேலும் சுவாமிக்காக வாவிகள், கிணறுகள், தடாகங்கள் விருக்ஷங்கள் இவைகளை உற்பத்திசெய்து வாகனம் தேர்முதலியவைகளையும்செய்து ஸ்ரீ பரமேசுவரனுக்கு மிகுந்த முழக்கத்துடன் உற்சவங்கள்செய்துவைக்கவேண்டும். மேலும் ஜீர்ணமாய்ப்போன ஆலயங்களைப்புதுப்பித்து தினந்தோறும் பூஜித்து வரல்வேண்டும். கேளீர்! தரணிதேவர்களே! மேன்மையடைவதற்காக ஸ்ரீபரமாத்மாவுக்கு இவ்வாறாகிய கைங்கரியங்களை யென்றும் சகல முயற்சியுடன் செய்து வரவேண்டும். மேலும் சிவபிரானைப் பூஜைசெய்யும் குருக்களுக்கு வீடுகட்டிவைத்து தன் திறமைக்குத் தக்கபடி வீட்டிற்கு வேண்டிய தான்ய முதலிய சாமான்களையும் கொடுத்துவர வேண்டும். தன் குருவைச் சந்தித்த விடத்தில் பிரதக்ஷிண நமஸ்காரம்செய்யவேண்டும். மேலும் இவ்விதமாய்த்தன் குருவுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை யென்றும் முயற்சித்து செய்து வரல்வேண்டும்.

ஓ! தரணி தேவர்களே! மேலும் மிகவும் பக்தியுடையவனாகிச் சிவனடியார்களுக்கு வீடுகளைக் கட்டிக்கொடுத்து வீட்டிற்கு வேண்டிய சாமான்களையும், வஸ்திரங்களையும் இவர்களுக்குக் கொடுத்தல் வேண்டும். இதேவிதமாய்ச் சிவபுராணங்கள், விபூதி உருத்திராக்கங்கள், மகா புண்ணியமான சிவலிங்கங்கள், ஆபரணங்கள், அன்னம் இவைகளை அடியார்களுக்கு மிக்க பக்தியுடன் கொடுக்க வேண்டும். மேலும் அடியார்களை எதிரிற் சந்தித்தால் உடனே எழுந்து அவர்களைத் தரிசித்துப் பக்தியுடன் வந்தனித்து அவர்களோடு சம்பாஷித்து இவ்வாறு அடியார்களுடைய காரியங்களைச் சிரமேற் கொண்டொழுகி வரல் வேண்டும். குருக்கள்மார்களாகிய அடியார்களிடத்தும் சிறந்த பக்தியைப் பாராட்டி வருவதோடு அவர்களுடைய காரியங்களுக்கும் மனதினால் விரோதமாய் நினைக்கவும் கூடாது. சிவ பக்தர்களுக்கும் சிவ புண்ணியங்களிற் சிறந்தவருக்கும், சிவரூபியான குருவுக்கும் வாக்கு, மனது, காயம் இம்மூன்றினாலும் எப்போதும் நன்மையையே செய்து வரல் வேண்டும். இவைகள் தான் சிவனடியார்களது முக்கிய குணங்களென சிறந்த முனிவர்களால் மதிக்கப்படுகின்றது.

எந்த மானிடோத்தமர்கள் இச்சிவபுண்ணியங்களைச் செய்கின்றார்களோ அவர்கள் மிக்கப் புண்ணியாத்துமர்களாகி பார்மீது அனேகம் போகங்களையும் அனுபவித்து மிகுந்த புத்திர பௌத்திரர்களால் நிரம்பப் பெற்றவர்களாகி அளவற்ற சுகங்களையும் அனுபவித்து அவர்கள் தங்கவிமானத்தோடு சிவலோக மடைந்து அங்கு ஸ்ரீ சிவபிரானுக்கு நேசமுள்ளவர்களாகி அநேகமாயிரம் கற்பகோடிகால மிருந்து இன்பமனுபவித்து முடிவினில் முத்தியை அடைவார்களென்பதிற் சந்தேகமே இல்லை. என இவ்வாறு சூதருடைய வசனத்தைக் கேட்டதன்மேல் முனிசிரேட்டர்கள் மிகுந்த சந்தோஷமுற்றவர்களாகி சிவனடியார்களின் இலக்ஷணத்தையும் குருவின் இலக்ஷணத்தையும் சந்தோஷத்துடன் வினவ அவர்க

ளது வசனத்தைக்கேட்ட சூத புராணிகர், ஸ்ரீ பரமேசுவரனது பக்தர்களின் இலக்ஷணத்தை எடுத்து ஓ வேதியர்களே! தேவர்கள், அசுரர்கள், அரக்கர்கள், யக்ஷர்கள் கந்தர்வர்கள், நரகர்கள், முனிவர்கள், மானிடர்கள், பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் இவர்களிலும் சங்கர சாதியார் முதலிய எல்லோர்களிலும் மகாத்துமர்களான சிற்சில சிவ பக்தர்கள் இருக்கின்றார்கள். ஓ! முனிவர்களே! இவர்களுக்கெல்லாம் வர்ணாச்சிரமங்களின் கட்டுப்பாடில்லை. அவ்வெல்லாச் சிவபக்தரும் கேவலம் மகேசுவரரைச் சேர்ந்தவர்களென்றே நினைக்கின்றார்கள். அவர்களெல்லாரும் சகல வேதங்களாலும் சம்மதிக்கப்பட்டவர்களான அதிவர்ணாசிரமிகளென்று கூறப்படுகின்றார்கள்.

ஓ! வேதியர்களே! அம்மகாத்துமர்களுக்கு வெளிக்குறிகள் பத்தும், உள் குறிகள் மூன்றும், வெளிக்கும் உள்ளுக்கும் பொதுவானவை பத்தும் உள்ளனவென்று கூறப்படுகின்றன: விபூதி உருத்திராக்கங்களைத் தரித்தல்; குருவைச்சேவித்தல்; ஸ்ரீ சிவபிரானைத் துதித்தல், ஸ்ரீ ஜகதீசனுடைய திருநாமங்களை உச்சரித்தல்; அம்மகா தேவரை பூசித்தல்; மகா புண்ணியமான சிவாலயத்தைத் தரிசித்தல், சிவபுராணங்களைக் கேட்குதல்; அடியார்களை வந்தனித்தல்; சிவனடியார்களின் வீட்டில் போஜனம் செய்தல்; சிவ பக்தரான குருவுக்குக் கொடை கொடுத்தல்; ஆகிய இப்பத்தும் வெளிக் குறிகளெனப்படும். மனதினால் ஜபித்தல், ஸ்ரீ மகேசுவரரை மனதினால் பூஜித்தல், பிரம்மத்தைப் பிரத்தியக்ஷமாய்ப் பாவித்தல் ஆகிய இம்மூன்றும் உள் குறிகள். எப்போது எவர்களுக்கு இவ்வுள் வெளிக்குறிகள் இருக்கின்றனவோ அவர்களுக்கு மற்றப்பத்துக் குறிகளும் உண்டாகிவிடும்.

அவைகளோவெனின் தழுதழுக்கலுற்ற கண்டத் தொனியின் மாறுதல், நாவின்புறட்டல், உதடுகள் துடித்தல், மெய் நடுக்கல், மயிர்க்ள் சிலிர்த்தல், வியர்வை, இடறி நடத்தல், கண்ணீர் சொரிதல், அழுதல், பரவசமடைதல் ஆகிய இப்பத்தும் பக்தர்களுக்கு உரியன வென்றும் ஸ்ரீ சிவபிரானால் சொல்லப்பட்டதே. எந்த மகானுபாவருக்கு இம்மூன்றுவித சின்னங்களும் இருக்கின்றனவோ அவர்கள் சகல லோகங்களுக்கும் முக்கிய பரிசுத்தர்களான சிவபக்தர்களென்று நினைக்கப்படுகின்றார்கள். என்றாலும் விபூதி உருத்திராக்கங்களைத் தரித்திருக்கும் சிலசிவபக்தர்களிடத்திற் மேற்கூறியசின்னங்கள் இருப்பது அறியப்படாதிருக்கினும் சிவநேசர்களானவர்கள், அத்தகைய சிவபக்தர்களைக் கண்டமாத்திரத்தில் பக்தியுடன் வணங்கி ஸ்ரீசிவபிரான், குரு, பக்தர்கள் இவர்களை வந்தனித்து மிகுந்த சந்தோஷத்துடன் சகல வேண்டுதல்களையும் கைக்கொண்டு மிகுந்த போகங்களை அனுபவித்து முடிவில் பல இரத்தினங்களாலியற்றிய விநோதமான விமானத்திலேறிக் கொண்டு பிரம்ம விஷ்ணுமுதலிய இருடீசுவரர்களாலும் தேவதுந்துபி முழக்கக்கொண்டு கேளிக்கையாய் திவ்விய சரீரத்தையடைந்து சிவலோகஞ்சென்று

அங்கு சாருப்பிய பதவியையடைந்து ஸ்ரீபரமேசுவரன் திருச்சன்னதியில் இருந்து முடிவினில் சிவசாயுச்சியத்தை யடைவார்கள்.

ஆகையால் பரமாத்துமாவாகிய ஸ்ரீ சங்கரனுடைய மகிமை எவ்விதமோ அதேவிதமாய்ச் சிவ புண்ணியங்களுக்குள்ள மகிமைகளும் இருக்கின்றன. ஆகையால் அவைகளை எந்தனல் எடுத்துரைக்க வசாத்தியமே. பூர்வத்தில் அம்மையானவள் ஸ்ரீ மகேசுவரரிடமிருந்து மிகவும் உத்தமமான சிவபுண்ணியத்தை மிகச் சந்தோஷத்துடன் இவ்விதமே கேட்டு மிகவாச்சரியங்கொண்டவளாகி விரைவில் எழுந்து ஸ்ரீமகேசுவரனை மூன்று பிரதக்ஷிணம் செய்து வந்தனித்து சர்வேசுவரனை நோக்கி ஓ! சுவாமி! இத்தகைய சிவ புண்ணியத்தினால் ஜீவர்கள் தேவரீரை அறிவாராகி சிவசாயுச்சியத்தை யடையவேண்டும்; என, ஸ்ரீ கருணாமூர்த்தி கேளாய்! பெண்ணே! ஜீவர்கள் எமது உத்தமமான புண்ணியத்தை அறியத்தகுவது எளிதல்ல. ஆனால் சர்வசங்கபரித்தியாகஞ் செய்த சாதுக்களால்தான் அறிய முடியும். மற்றவர்களுக்கு முடியாது என்று பூர்வத்தில் ஸ்ரீதேவாதி தேவரால் பார்வதியம்மைக்குத் திருவாக்குரைக்கப்பட்டது. கேளீர்! வேதோத்தமர்களே! இதற்குமேல் உங்களுக்கு வெகு நேர்த்தியான புண்ணியக்கதைகளை எடுத்துக்கூறுகின்றேன்.

ஸ்ரீமஹா ஸ்காந்த புராண வசனம் முற்றிற்று.



வேலுமயிலும் துணை.





Printed at Sri Radha Krishna Press.